உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராண முதற்காண்டத்தின்

# அட்டவணை.

தொண்டர்சீர் பரவுவார் துணையடி வாழ்க.



விநாயகக்கடவுள். சிவபெருமான். சுப்பிரமணியக்கடவுள்

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# திருத்தொண்டர் புராணவரலாறு

என்னும்

# ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் புராணம்.

## பாயிரம்.

### விநாயகர் துதி.

வானுலகு மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத வைந்துகர மூன்றுவிழி நால்வா
யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் கிற்பாம்.

(இதன்பொருள்.) விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் சிவானந்தப் பெருவாழ்வடையவும், வேதசிவாகமங்கள் நிலைபெற்றோங்கவும், உயிர்க்குறுதியைத் தருகின்ற செவ்விய திருநெறித்தமிழ்வேதம் உலகத்தில் விளங்கவும், பரஞானம் அபரஞானமென்னும் இருவகை மதங்களோடுகூடிய ஐந்து திருக்கரங்களையும், மூன்று கண்களையும், நால்வாயினையுமுடைய யானைமுகம் பொருந்திய விநாயகக்கடவுளைத் துதித்துக் கைகூப்பி வணங்குகின்றோம்.—என்றவாறு.

நால்வாய்—நான்றவாய்; தொங்குகின்றவாய் என்னும் பொருளது. இது வினைத்தொகை; இவர் விக்கினகருத்தாவாகலின் முதலினும், தந்தை புத்திரர் என்னும் முறைமைபற்றிப் பின்னும் வணங்கப்பெற்றனர்.

### சபாநாதர் துதி.

சீராருஞ் சதுமறையுந் தில்லைவா ழந்தணருட
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
வேராரு மணிமன்று ளெடுத்ததிரு வடிபோற்றி.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய நான்குவேதங்களும், தில்லைமூவாயிரவர்களும், தில்லைப்பதியில் வந்து தவஞ்செய்த வியாக்கிரபாதமுனிவரும், பதஞ்சலி

முனிவரும் வணங்கித் துதிக்கவும், நீர் நிறைந்த கடலான து பக்கங்களிற் சூழ்ந்த உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் கடைத்தேறவும், திருவருள்விலாசம் பொருந்திய அழகிய திருச்சிற்றம்பலத்தின்கண் தூக்கியருளிய (ஸ்ரீநடராஜப்பெருமானுடைய) திருவடியைப் போற்றிசெய்வாம்.—எ-று.

வையம் என்பது-இடவாகுபெயராய் உயிர்கண்மேனின்றது. எடுத்த திருவடி = குஞ்சிதபாதம். (உ)

### சிவகாமசுந்தரி துதி.

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
வரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

(இ-ள்.) உலக முழுதும் பரவியெழுந்த சமணமுதலான புறச்சமயங்களாகிய அந்தகாரம் நீங்கவும், எவ்வகைமதங்கட்கும் முதன்மையாகப்பொருந்திய சைவசமயத்திற்குரிய திருவெண்ணீற்றினொளியான து எங்கும் விளங்கவும், உயிர்களது பிறவித்துன்பமொழியவும் சீகாழியிலவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவமுதுசெய்யும்படிக்குத்திருமுலைப்பாலைச்சுரந்து கொடுத்தருளிய சிவகாமசுந்தரியம்மையினது அழகிய திருவடிகளை வணங்குவாம்.—எ-று. (ஙட)

### கற்பகவிநாயகர் துதி.

மலரயனுந் திருமாலுங் காணாமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயி
னிலவியகற் பகக்கன்றி னிரைமலர்த்தா ளிணைபோற்றி.

(இ-ள்.) தாமரைமலரின்கண்வாழும் பிரமனும், இலட்சுமிநாயகனுகிய விஷ்ணுவும் திருமுடியையும் திருவடியையுந் தேடிக்காணாமையினுல் அறிவுமயங்கவும்,வியாக்கிரபாதமுனிவரும் பதஞ்சலிமுனிவரும் தரிசித்து வணங்கவும்,முறுக்காகிய சடைமுடியையுடைய ஸ்ரீநடராஜப்பெருமான் விளங்குகின்ற திருநடனஞ்செய்யும் திருத்தில்லையின் மேற்குத்திருக்கோபுரவாயிலில் வீற்றிருந்தருளும் கற்பகவிநாயகருடைய வரிசையாகிய இரண்டு செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்குவாம்.—எ-று. (ச)

### சுப்பிரமணியசுவாமிகள் துதி.

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத
மாறுமுகந் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் திருவடித்தா மரையிணைக ளவைபோற்றி.

(இ-ள்.) பகைவர்கள் முதுகுகாட்டியோடுதல் பொருந்தவும், பருந்துகள் விருந்துண்ணவும், கழுகுகள் அநேக இடங்களினின்றும் வந்து கொலைசெய்யப்பட்ட யுத்தகளத்திற்சேரவும், மாறுபட்ட முகங்களையுடைய அசுரர்கள் இறக்

கும்படி கூரியவேலினையெடுத்தருளிய ஸ்ரீசுப்பிரமணியக்கடவுளது இரண்டு திரு வடித்தாமரைகளை நமஸ்கரிப்பாம்.—எ-று.

பாறுதல் = ஓடுதல். அவை - பகுதிப்பொருள்விகுதி. (௫)

**சைவ சமயாசாரியர் துதி.**

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
யாழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
யூழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

(இ-ள்.) கூன்பாண்டியனது சுரநோயைத் தணித்தருளிய திருஞானசம் பந்தமூர்த்திசுவாமிகளுடைய திருவடிகளைப்போற்றிசெய்வாம்; சமுத்திரத்தில் (சமணர்கள்கட்டியிட்ட) கருங்கல்லாகிய தெப்பத்தின்மீது வந்த திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருவடிகளைப்போற்றிசெய்வாம்; திருநாவலூரில் திருவவதாரஞ் செய்தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருவடிகளைப்போற்றிசெய்வாம்; ஊழிகாலத்திலும் அழியாமல் விளங்குகின்ற திருவாதவூரில் அவதரித்தருளிய ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகளுடைய திருவடிகளைப்போற்றிசெய்வாம்.—எ-று. (௬)

**திருத்தொண்டர்கள் - ஸ்ரீ சேக்கிழார்சுவாமிகள் துதி.**

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
யொல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய பழமையாகிய திருத்தொண்டத்தொகை யிற்கூறிய தில்லைவாழந்தணர் முதலாகிய அடியார்களுடைய திருவடிகளை வணங் குவாம்; ஆதியில் அந்த அடியார்கள் புராணத்தை உலகத்தார் அறிந்துகொள்ளும் படி விரிவாகக் கூறியருளிய பலவகைச் செல்வங்களும் நிறைந்த குன்றத்தூரில் அவதரித்தருளிய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுடைய திருவடிகளைத் துதிசெய்வாம்.

**நூற்பெயர்.**

தாய்மலர்ந்த முகத்தினளாய்த் தழுவிமுலை தரவந்த
நோய்மலர்ந்த பிறவிதொறு நுழையாம லுலகுய்யத்
தீமலர்ந்த சடைக்கூத்தர் திருவருளாற் சேக்கிழார்
வாய்மலர்ந்த புராணத்தின் வரலாறு விரித்துரைப்பாம்.

(இ-ள்.) தாயானவள் மகிழ்ச்சியான் மலர்ந்த முகத்தையுடையவளாய்த் தன் மார்போடணைத்துக்கொண்டு பாலைக்கொடுத்தற் கேதுவாகவந்த துன்பமிகு ந்த பிறவிகள்தோறுஞ்செல்லாமல், உலகத்தார் கடைத்தேறும்பொருட்டு, நெருப் பைப்போல விளங்குகின்ற சடைமுடியையுடைய ஸ்ரீநடராஜப்பெருமானது திரு வருளினால் ஸ்ரீசேக்கிழார் சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டர் புராணத்தின்வரலாற்றை விரித்துக்கூறுவாம்.—எ-று. (௮)

### அவையடக்கம்.

ஊர்க்கடலை யிவனெனவந் துதித்தநா னோங்குதமிழ்
நூற்கடலைக் கரைகண்டு நுவலநினைக் குமதுதிருப்
பாற்கடலைச் சிற்றெறும்பு பருகநினைப் பதுபோலு
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்கநினைக் குமதொக்கும்.

(இ-ள்.) இவன் இவ்வுலகத்திற்குச் சாம்பற்புழுதியென்று சொல்லும்படி பிறந்த நான் மிகுந்த சிறப்பினையுடைய திருத்தொண்டர்புராண மென்னும் சமுத்திரத்தின் அளவைக்கண்டு சொல்லத் தொடங்குவது (எவ்வாறெனில்) பெரிய திருப்பாற்கடலை ஒரு சிற்றெறும்பானது உண்ண நினைப்பதையும், நீர் நிறைந்த சமுத்திரஞ்சூழ்ந்த இந்தப்பூமியை (ஒரு தராசி லிட்டு) நிறுப்பதற்கு நினைப்பதையும் ஒப்பாகும்.—எ-று.

போலும் - அசைநிலை. (கூ)

தேவுடனே கூடியசொற் செழுந்தமிழோர் தெரிந்துரைத்த
பாவுடனே கூடியவென் பருப்பொருளும் விழுப்பொருளாங்
கோவுடனே கூடிவருங் குருட்டாவு மூர்புகுதும்
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமால்.

(இ-ள்.) பசுக்களுடனே கூடிக்கொண்டுவருகின்ற குருட்டுப்பசுவும் ஊரில் சென்றுசேரும்; மலரோடு சேர்ந்த நாரும் சிவபெருமானது திருமுடிக்கு மாலையாகும்; (அதுபோல) தெய்வத்தன்மை பொருந்திய சொற்களமைந்த செழுமையாகிய தமிழையுடைய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் நன்றாக ஆராய்ந்து அருளிச்செய்த திருத்தொண்டர் புராணத்தோடு சம்பந்தப்பட்ட என்னுடைய அற்பமாகிய பொருளும் மேன்மையாகிய பொருளாகும்.—எ-று.

பாவுடனே கூடியவென் பருப்பொருள் என்றது, இந்நூல் பெரியபுராணத்திற்கு இன்றியமையாத சிறப்புப்பாயிரமாதலைக் குறித்தென்க. (கo)

பாயிரம் முற்றிற்று.

---

ஸ்ரீ
[illegible]
24th June 1894

உ



ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் பவனிவந்தது.

## நூல்.

பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும்
　　பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலை தோறுங்
காலாறு கோலியிசை பாட நீடு
　　களிமயினின் றாடுமியற் றொண்டை நாட்டு
ளாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்ட
　　நன்றிபுனை குன்றைவள நாட்டு மிக்க
சேலாறு கின்றவயற் குன்றத் தூரிற்
　　சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றே.

(இ-ள்.) பாலாறானது நீர்வளப்பத்தைப் பெருக்கிக்கொடுக்க, அதனால் செழிப்படைகின்ற கமுகம்பாளைகள் விரிந்து வாசனை பரிமளிக்காநின்ற மலர்ச்சோலைகள்தோறும் வண்டுகள் சூழ்ந்து இசையைப்பாட, மிகுந்த களிப்பினையுடைய மயில்கள் நின்றாடுகின்ற அழகிய தொண்டைநாட்டிலே, இருபத்துநான்கு கோட்டத்துள் ஒன்றாகிய புலியூர்க்கோட்டத்தில் நன்மைபொருந்திய (எழுபத்தொன்பது நாடுகளுள் ஒன்றாகிய) குன்றைவளநாட்டின்கண் எண்ணிறந்த சேற்கெண்டைகள் இளைப்பாறுகின்ற வயலினையுடைய குன்றத்தூரிலே சேக்கிழார் திருமரபானது சிறப்புற்று விளங்கியுள்ளது.—எ-று.

சேவூர்க்கிழார் என்பது, சேக்கிழார் என மருவியது. (கக)

நாடெங்குஞ் சோழன்முனந் தெரிந்தே யேற்று
　　நற்குடிநாற் பத்தெண்ணா யிரத்து வந்த
கூடல்கிழான் புரிசைகிழான் குலவு சீர்வெண்
　　குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்து ழான்முன்
றேடுபுக ழாரிவருஞ் சிறந்து வாழச்
　　சேக்கிழார் குடியிலிந்தத் தேச முய்யப்
பாடல்புரி யருண்மொழித்தே வரும்பி னந்தம்
　　பாலாறு வாயரும்வந் துதித்து வாழ்ந்தார்.

(இ-ள்.) முற்காலத்தில் கரிகாற்சோழன் தேசமுழுதும் ஆராய்ந்தெடுத்துக்குடியேற்றிய நல்லகுடிகளாகிய நாற்பத்தெண்ணாயிரங் குடிகளுள் வந்த கூடல்கிழானென்றும், புரிசைகிழானென்றும், விளங்குகின்ற சிறப்பினையுடைய வெண்குளப்பாக்கிழானென்றும், மேன்மை பொருந்திய குளத்துழானென்றும் தொன்றுதொட்டுச்சம்பாதித்த புகழையுடையவர்களாகிய இவர்களும் சிறப்புற்று வாழ, சேக்கிழார்குடியில் இவ்வுலகத்தார் கடைத்தேறும்படி பெரியபுராணத்தை ஓதியருளிய நமது அருண்மொழித்தேவரும், பின்பு அவர் தம்பியாகிய பாலறாவாயரும் திருவவதாரஞ்செய்து வாழ்ந்திருந்தனர்.—எ-று. (கஉ)

இமயமலை யரையன்மக டழுவக் கச்சி
　　யேகம்பர் திருமேனி குழைந்த தொன்று
சமயமவை யாறினுக்குந் தலைவிக் கீசர்
　　தந்தபடி யெட்டுமிழக்கீ ராழி நெல்லு

முமைதிருச்கு டகக்கையாற் கொடுக்க வாங்கி
யுழவுதொழி லாற்பெருக்கி யுலக மெல்லாந்
தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும் வேளாண்
டலைவர்பெரும் புகழுலகிற் றழைத்த தன்றே.

(இ-ள்.) பர்வதராஜன் புத்திரியாகிய பார்வதிதேவியார் தழுவுதலால் ஸ்ரீகாஞ்சிபுரத்தில் வீற்றிருந்தருளும் திருவேகம்பநாதர் திருமேனிகுழைந்த அக்காலத்தில், அறுவகைச்சமயங்களுக்கும் தலைவியாகிய பார்வதிதேவியாருக்குச் சிவபெருமான்கொடுத்தருளிய படியாகிய எட்டுமுக்குக்கொண்ட ஈராழிநெல்லினையும் அந்த அம்மையார் வளையலணிந்த தமது திருக்கையினால் கொடுத்தருள, அதனைப் பெற்றுக்கொண்டு, உழவுதொழிலால் விருத்திசெய்து உலகத்தையெல்லாம் தமது ஏர்வளத்தின் மிகுதியினால் வளர்க்கின்ற வேளாளர்களுடைய மிகுந்த புகழானது இவ்வுலகத்தில் செழித்து விளங்கியது.—எ-று. (கரு)

விளைகழனி பூலோக முழுது மேரி
விரிதிரைநீர்க் கடல்வருணன் கம்பு கட்டி
கிளர்கலப்பை தருசுமையாள் சுவேத ராமன்
கிடாமறலி வசத்தீசன் வசத்தா னென்றிங்
களவறிந்தாண் டாண்டுதொறும் விதைதப் பாம
லளக்குமவள் கச்சியறம் வளர்த்த மாதா
வொளிபெருகு கொழுமிகுதி யெறும்பீ ருன
வுயிரனைத்துந் தேவருமுண் டுவப்ப தன்றே.

(இ-ள்.) இப்பூலோகமுழுதும் விளைகின்ற கழனியாகவும், விரிந்த அலைகளையுடைய நீர் நிறைந்த சமுத்திரம் ஏரியாகவும், வருணன் மடைமாறுகின்றவனாகவும், கற்பகவிருக்ஷம் விளங்குகின்ற கலப்பையாகவும், பலராமன் கலப்பைசுமக்கும் ஆளாகவும், எருமைக்கடா எமனிடத்தும், இடபம் சிவனிடத்துமாக என்று இங்குப்பிரமாணமறிந்து வருஷந்தோறும் விதைகள் தப்பாமல் அளக்காநின்ற அம்மையார் ஸ்ரீகாஞ்சிநகரத்தில் முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்த உமாதேவியாராம்; இவ்வாறு புகழ்பெருகுகின்ற கொழுவின் மிகுதியினால் எறும்பீறுகிய சகலஜீவராசிகளும், தேவர்களும் உண்டு மகிழ்ச்சியடைவது.—எ-று.

கம்புகட்டி = வயலுக்குநீரைப் பாய்ச்சுகிறவன். (கசு)

மாறுகொடு பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக்
குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை
யாறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப
ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற்
பிறிந்தளவிட் டிவளவெனப் போச லாமோ.

(இ-ள்.) வஞ்சனையைக்கொண்டு பழையனூர் நீலியானவள் செய்த மாறுபாட்டினால் ஒரு செட்டியானவன் தனது உயிரையிழக்க, தாங்கள் அவனுக்குச் சொல்லிய உண்மைதவறாமல் துணிவுகொண்டு செந்நிறம்பொருந்திய தீக்குழியில் எழுபதுபேரும் முழுகித் திருவாலங்காட்டில் எழுந்தருளிய கங்கை நதியையணிந்த சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது அண்டமுகட்டையளாவும்படி நிமிர்ந்து திருநடனஞ்செய்கின்ற திருவடியின் கீழ்ச்சேர்ந்து உண்மையாகிய சிவசாயுச்சியத்தைப்பெற்ற வேளாளர்களுடைய பெருமையானது எம்மால் பிரித்து அளவுபடுத்தி இவ்வளவினதென்று சொல்லமுடியுமோ ?—எ-று.

இந்நீலியின் சரிதத்தைத் திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம் ௩-வது திருவிருத்தவுரை விசேடத்திற்காண்க. (கரு)

காராள ரணிவயலி லுழுது தங்கள்
கையார நட்டமுடி திருந்தி லிந்தப்
பாராளுந் திறலரசர் கவித்த வெற்றிப்
பசும்பொன்மணி முடிதிருந்துங் கலப்பை பூண்ட
வேராலெண் டிசைவளர்க்கும் புகழ்வே ளாள
ரேரடிக்குஞ் சிறுகோலாற் றரணி யாளச்
சீராரு முடியரச ரிருந்து செங்கோல்
செலுத்துவர்வே ளாளர்புகழ் செப்ப லாமோ.

(இ-ள்.) வேளாளர்கள் செழுமையாகிய வயல்களில் உழுது தங்கள் கைகளால் நிரம்பநட்ட நாற்றுமுடிகள் செவ்வையாக விளையுமானால், இந்த வுலகத்தை அரசாட்சிசெய்கின்ற வலிமைபொருந்திய அரசர்கள் தரித்த வெற்றியினையுடைய மாற்றுயர்ந்த பொன்னாலாகிய நவமணிகளிழைத்த முடியானது செவ்வையாக இருக்கும் ; கலப்பை பூண்ட ஏரினால் எட்டுத்திக்குகளிலும் புகழைவளர்க்கின்ற வேளாளர்கள் உழவுக்குண்டைகளை அடித்து ஓட்டுகின்ற சிறிய தாற்றுக்கோலினால் இவ்வுலகத்தையாள, சிறப்புப்பொருந்திய மணிமுடியையுடைய அரசர்கள் வீற்றிருந்து செங்கோல் செலுத்துவார்கள் ; (ஆகையால்) அவ்வேளாளர்களுடைய புகழை இவ்வளவென்று அளவிட்டுச்சொல்ல முடியுமோ ?—எ-று.

வாயிலார் சத்தியார் விறல்சேர் மிண்டர்
வாக்கரையர் சாக்கியர்கோட் புலிகஞ் சாறர்
ஏயர்கோன் கலிக்காமர் முனைவித் தாக்கு
மிளையான்றன் குடிமாறர் மூர்க்கர் செங்கைத்
தாயனார் செருத்துணையார் செருவில் வெம்போர்
சாதித்த முனையடுவா ராக நம்பி
பாயிரஞ்சே ரறுபதுபேர் தனிப்பேர் தம்மிற்
பதின்மூவர் வேளாளர் பகருங் காலே.

(இ-ள்.) வாயிலார்நாயனார், சத்திநாயனார், விறன்மிண்டநாயனார், திருநாவுக்கரசுசுவாமிகள், சாக்கியநாயனார், கோட்புலிநாயனார், மானக்கஞ்சாறநாயனார்,

ஏயர்கோன்கலிக்காமநாயனார், முனைத்தவித்தினை அரிசியாக்கி அமுது சமைத்த இளையான்குடிமாறநாயனார், மூர்க்கநாயனார், அழகிய கையையுடைய அரிவாட்டாயநாயனார், செருத்துணைநாயனார், யுத்தகளத்தில் கொடியபோர்செய்து வெற்றிகொண்டமுனையடுவார்நாயனார் என்னும் இந் நாயன்மார்களாகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகையிலுள்ள அறுபது தனியடியார்களுக்குள்ளே சொல்லுமிடத்துப் பதின்மூன்றுபேர் வேளாளர்களாம்.

அத்தகைய புகழ்வேளாண் மரபிற் சேக்கி
　　ழார்குடியில் வந்தவருண் மொழித்தே வர்க்குத்
தத்துபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந்
　　தலைமையளித் தவர்தமக்குத் தனது பேரு
முத்தமச்சோ ழப்பல்ல வன்று னென்று
　　முயர்பட்டங் கொடுத்திடவாங் கவர்நீர் நாட்டு
நித்தனுறை திருநாகே சுரத்தி லன்பு
　　நிறைதலினுன் மறவாத நிலைமை மிக்கார்.

(இ-ள்.) அத்தன்மையாகிய கீர்த்தியையுடைய வேளாளர்மரபில் சேக்கிழார்குடியில் திருவவதாரஞ்செய்த அருண்மொழித்தேவர்க்குத் தாவிச்செல்லுங் குதிரைக் கூட்டத்தையுடைய அநபாயசோழமகாராஜாவும் தமது செங்கோல் செலுத்தும்படியான மந்திரியாகும் முதன்மையைக்கொடுத்து, பின்னும் அவருக்கு தம்முடைய பெயரையும் உத்தமச்சோழப்பல்லவனென்று உயர்ந்த பட்டமாகக் கொடுக்கப் பெற்றுக்கொண்டு, அவர் நீர்வளம்பொருந்திய சோழநாட்டில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருநாகேசுரமென்னுந் தலத்தில் அன்பானது மிகுதியாக நிறைதலினால் மறவாத நிலைமையை யுடையவராயிருந்தார்.—எ-று.

தம்பதிகுன் றத்தூரின் மடவ ளாகந்
　　தானாக்கித் திருக்கோயி லுமைத் தங்கண்
செம்பியர்கோன் திருநாகே சுரம்போ லீதுந்
　　திருநாகே சுரமெனவே திருப்பேர் சாற்றி
யம்புவியி லங்காங்க வைப வங்கட்
　　கானபரி கலந்திருநாள் பூசைகற்பித்
திம்பர்புகழ் வளவனர சுரிமைச் செங்கோ
　　லிமசேது பரியந்த மியற்று நாளில்.

(இ-ள்.) தமது ஜனனக்ஷேத்திரமாகிய குன்றத்தூரில் மடவளாகத்தை ஏற்படுத்தி ஒரு திருக்கோயிலைப் பிரதிஷ்டைசெய்து, அவ்விடத்தில் அநபாய சோழமகாராஜாவினுடைய திருநாகேசுரம்போல இதுவும் திருநாகேசுர மென்று திருப்பெயரிட்டு, அழகிய அத் திருநாகேசுரத்தில் அங்காங்க 'வைபவங்களுக்குரிய உபகரணங்களையும், திருவிழாவையும், நித்திய நைமித்திய பூசைகளையும் ஏற்படுத்தி இவ்வுலகத்தார் புகழ்கின்ற அநபாயசோழச்சக்கரவர்த்தியினது அரசுரிமைக்குரிய செங்கோலை இமசேதுபரியந்தம் நடத்திவரும் நாள்களில்.—எ-று.

மடவளாகம் = திருமதிலின் புறத்திலுள்ள வீதி. அங்காங்கவைபவங்கள் என்றது சிவாலயத்திற்கு இன்றியமையாத அங்கங்களாகச் செய்யவேண்டிய உபகரணங்களை. (கக)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

கலகமிடு மமண்முருட்டுக் கையர் பொய்யே
கட்டிநடத் தியசிந்தா மணியை மெய்யென்
றுலகிலுளோர் சிலர்கற்று நெற்குத் துண்ணு
துமிகுத்திக் கைவருந்திக் கறவை நிற்க
மலடுகறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ் சோலை
வழியிருக்கக் குழியில்விழுந் தளறு பாய்ந்து
விலைதருமென் கரும்பிருக்க விரும்பை மென்று
விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்து நொந்தார்.

(இ-ள்.) கலகத்தை செய்கின்ற முருடர்களாகிய சமணவஞ்சகர் பொய்யினையே ஒருகாவியமாகக் கற்பித்து வழங்கச்செய்த சிந்தாமணி என்னும் நூலை உண்மையானதென்று நினைத்து,இவ்வுலகத்திலுள்ளவர்கள் சிலர்கற்றுக்கொண்டு, நெல்லைக்குத்தி (அரிசியை) உண்ணுமல், உமியைக்குத்திக் கைவருந்தியும், கறவைப்பசுவிருக்க (அதனைக் கறந்து பாலைப் பெறுமல்) மலட்டுப்பசுவைக் கறந்து அதனுல் மனந்தளர்ந்தும்,குளிர்ச்சிபொருந்திய மலர்ச்சோலைவழியிருக்க (அவ்வழியில் நடவாமல்) பள்ளத்தில் விழுந்து சேற்றைப் பூசிக்கொண்டும், விலைமதிக்கத்தக்க மிருதுவாகிய கரும்பிருக்க (அதனைத்தின்னுமல்) இரும்பைத்தின்றும், விளக்கிருக்க (அதனையடையாமல்) மின்மினிப்பூச்சியைத் தீயென்று கருதிக்குளிர்காய்ந்தும் (வீண்படுதல்போல) மனம் வருந்தினுர்கள்.—எ-று.

உமிக்குத்தல் முதலிய தொழில்களைச் செய்தவர்கள் அத் தொழில்களால் தாம் அடையவேண்டிய பயனைப்பெறுமல் வருந்தினமைபோல, சிந்தாமணியைக் கற்றவர்களும் புண்ணியப்பயனையடையாது மனம் வருந்தினரென்பதாம். (உ0)

வளவனுங்குண் டமண்புரட்டுத் திருட்டுச் சிந்தா
மணிக்கதையை மெய்யென்று வரிசை கூர
வுளமகிழ்ந்து பலபடப்பா ராட்டிக் கேட்க
வுபயகுல மணிவிளக்காஞ் சேக்கி ழார்கண்
டிளவரசன் றனைநோக்கிச் சமணர் பொய்ந்நூ
லிதுமறுமைக் காகாதிம் மைக்கு மற்றே
வளமருவு கின்றசிவ கதையிம் மைக்கு
மறுமைக்கு முறுதியென வளவன் கேட்டு.

(இ-ள்.) அநபாயசோழராஜாவும், வஞ்சகராகிய சமணர்களுடைய பொய்யாகிய சிந்தாமணிக்கதையை உண்மையென்று சிறப்புமிகும்படி மனமகிழ்ந்து பலவகையாகப் பாராட்டிக் கேட்டுக்கொண்டிருக்க, தாய்மரபு - தந்தைமரபு என்னும் இரண்டு மரபிற்கும் மாணிக்கதீபம்போல் விளங்குகின்ற ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளறிந்து இளமைபொருந்திய அநபாயசோழராஜாவைப்பார்த்து,இது சமணர்களுடைய பொய்யாகிய சரித்திரமாகும்; மேலும் இம்மைமறுமைக்கு முதவாது; மகிமைதங்கிய சிவசரித்திரமானது இம்மைக்கும் மறுமைக்கும் உறுதிப்பயனைக்கொடுப்பதாமென்றுசொல்ல அதனைச்சோழமகாராஜா கேட்டு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உக)

அவகதையாய்ப் பயனற்ற கதையீ தாகி
லம்மையுமிம் மையுமுறுதி பயக்கத் தக்க
சிவகதையே தனுகற்ற திறமைப் பேரார்
சீவகசிந் தாமணிபோ லிடையில் வந்த
நவகதையோ புராதனமோ முன்னூ லுண்டோ
நானிலத்துச் சொன்னவரார் கேட்ட பேரார்
தவகதையோ தவம்பண்ணிப் பேறு பெற்ற
தனிக்கதையோ வடைவுபடச் சாற்று மென்றான்.

(இ-ள்.) இது அவலமானதாய்ப் பிரயோசனமற்ற வீண்கதையாயின், இம்மைமறுமைகளில் உயிர்க்குறுதியைக் கொடுக்கத்தக்க சிவசரித்திரமென்பது யாது? அதனைக்கற்றுணர்ந்த திறமையுடையவர்கள் யாவர்? அது இந்தச்சீவகசிந்தாமணியைப்போல மத்தியில் வந்த புதியகதையோ? அல்லது, பழமையாயுள்ளதோ? அதற்கு முதனூலுண்டோ? அந்தக்கதையை இந்த வுலகத்தில் சொன்னவர்கள் யாவர்? கேட்டவர்கள் யாவர்? தவத்தையுணர்த்துங்கதையோ? அல்லது, அத்தவத்தைச்செய்து பேறுபெற்றவர்களுடைய ஒப்பற்றசரித்திரமோ? அதனைக்கிரமமாகச்சொல்லுமென்று கேட்டார்.—எ-று. (உஉ)

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக் கேட்கச்
சேக்கிழார் குரிசிலுரை செய்வார் ஞாலத்
தம்பலவர் திருத்தொண்டர் பெருமை யாரு
மடிகண்முத லடியெடுத்துக் கொடுக்க நாவ
னம்பிபதி னொருதிருப்பாட் டாகச் செய்த
நலமலிதொண் டத்தொகைக்கு நாரை யூரிற்
றும்பிமுகன் பொருளுரைக்க நம்பி யாண்டார்
சுருதிமொழிக் கலித்துறையந் தாதி செய்தார்.

(இ-ள்.) அநபாய சோழராஜர் மனமகிழ்ந்து வினவிக்கேட்க, அதற்கு ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் சொல்லுகின்றார், இவ்வுலகத்தின்கண் சிவபெருமானடியார்களது பெருமையைச்சொல்வதற்குத் திருவாரூரில் வீற்றிருந்தருளும் தியாகராசப்பெருமான்முதலடியெடுத்துக்கொடுத்தருளத் திருநாவலூர் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பதினொருதிருப்பாடலாக அருளிச்செய்த மங்களகரம் பொருந்திய திருத்தொண்டத்தொகைக்குத் திருநாரையூரில் வீற்றிருந்தருளும் பொல்லாப்பிள்ளையார் பொருளருளிச்செய்ய, அதனையுணர்ந்து நம்பியாண்டார்நம்பி வேதவாக்கியமாகிய கலித்துறைத் திருவந்தாதியைச் செய்தருளினர்.—எ-று. (உ௩)

ஆயுமறை மொழிநம்பி யாண்டார் நம்பி
யருள்செய்த கலித்துறையந் தாதி தன்னைச்
சேயதிரு முறைகண்ட ராச ராச
தேவர்சிவா லயதேவர் முதலா யுள்ள

ஏயகருங் கடல்புடைசூ ழுலக மெல்லா
மெடுத்தினிது பாராட்டிற் றென்ன வந்தத்
தூயகதை யடைவுபடச் சொல்வீ ரென்று
சோழனுரை செயக்கேட்டுக் குன்றை வேந்தர்.

(இ-ள்.) வேதப்பொருளையுணர்ந்த நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த கலித்துறைத் திருவந்தாதியைச் செவ்விய திருமுறைகண்ட சோழராகிய அபயகுலசேகரமகாராஜாவும், சிவாலய தேவர்முதலாகவுள்ளவர்களும், கரிய கடல்சூழ்ந்த உலகத்தார் யாவரும் போற்றி, அன்புடன் பாராட்டிக்கொண்டு வந்தார்களென்று சொல்ல, அந்தத்தெய்வத்தன்மை பொருந்திய சரித்திரத்தை முறைமையாகச் சொல்லவேண்டுமென்று அநபாயசோழமகாராஜாகேட்க,ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் அதனைக்கேட்டு—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உச)

தில்லைவா ழந்தணரே முதற்பண் பாடு
திருநீல கண்டத்துப் பாண ரீறாச்
சொல்லியதொண் டத்தொகைநூல் வகையந் தாதித்
தொடர்ச்சியினை விரித்துரைக்க வளவன் கேட்டு
மெல்லியலாள் பங்கர்திரு வருளை நோக்கி
வியந்தடிமைத் தொண்டுசெய்து பேறு பெற்ற
செல்கதியை நினைந்துருகி வளவர் கோமான்
சேவையர்கா வலரைமுக நோக்கிச் சொல்வான்.

(இ-ள்.) தில்லைவாழந்தணர்முதல் யாழில் பண்களையமைத்துப்பாடுகின்ற திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர் ஈறாகச்சொல்லிய திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்திற்கு வகைநூலாகிய நம்பியாண்டார்நம்பி திருவந்தாதித் தொடர்ச்சியை விரிவாக எடுத்துச் சொல்ல, அதனை அநபாயசோழராஜா கேட்டு, பார்வதிதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமானது திருவருளைச் சிந்தித்து அதிசயித்து, அடிமைத்தொண்டுசெய்து சிவப்பேற்றினையடைந்த முன்னைய கதியை நினைந்து மனமுருகி, அநபாயசோழமகாராஜா ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுடையதிருமுகத்தைப் பார்த்துச் சொல்கின்றார்.—எ-று. (உரு)

அவரவர்க ளுடவர்க ளிருந்த வூர்வந்
தவதரித்த திருமரபு திருப்பேர் செய்த
சிவசமயத் திருத்தொண்டு முற்பிற் பாடு
சிவனடிக்கீ ழுயர்பரம முத்தி பெற்றோர்
எவருமறி யச்சீவன் முத்த ராயிங்
கிருப்பவர்க ளினிமேலும் பிறப்போர் மண்மேல்
அவர்களைச்சேர்ந் தருள்பெற்றோர் பதைத்துப் பெற்றோ
ரவர்கள்பகை யாய்நரகி லடைந்த பேர்கள்.

(இ-ள்.) அந்தந்த அடியார்கள் அவதாரஞ்செய்த நாடுகளும், அவர்கள் வாசஞ்செய்த ஊர்களும், அவர்கள் வந்துதோன்றிய திருமரபுகளும், திருநாமங்களும், சைவசமயத்தில் செய்துகொண்டிருந்த திருத்தொண்டுகளும், (திருத்தொண்டத்தொகை அருளிச்செய்வதற்கு) முற்காலத்திலும் பிற்காலத்திலும் சிவபெருமானுடைய திருவடியின்கீழே உயர்ந்த பரமுத்தியைப் பெற்றவர்களும், யாவருமறியும்படி ஜீவன்முத்தர்களாய் இங்கிருப்பவர்களும், உலகத்தில் இனி அவதரிப்பவர்களும், அந்த அடியார்களைச் சேர்ந்து திருவருளைப் பெற்றவர்களும், அவர்களைப் பகைத்து முத்திபெற்றவர்களும், அவ்வடியார்களுக்குப் பகைவராயிருந்து நரகமடைந்தவர்களும்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (உசு)

இல்லறத்தி லிருந்துநனி முத்தி பெற்றோ
ரில்லறத்திற் சிற்றின்ப வியல்பை நீக்கி
நல்லறமாந் துறவறத்தி னின்று பெற்றோர்
நற்பிரம சாரிகளா யருள்பெற் றுய்ந்தோர்
செல்கதிசற் குருவருளாற் சென்று சேர்ந்தோர்
சிவபூசை செய்துபர முத்தி பெற்றோர்
புல்லறிவு தவிர்ந்துதிரு வேட மேமெய்ப்
பொருளெனக்கொண் டரனடிக்கீழ்ப் பொருந்தப் புக்கோர்.

(இ-ள்.) இல்லறமார்க்கத்திலிருந்து மிகுந்த முத்தியைப் பெற்றவர்களும், அவ்வில்லறத்திற்குரிய சிற்றின்பவாழ்க்கையை யொழித்து, நல்ல அறமாகிய துறவறமார்க்கத்திலிருந்து முத்திபெற்றவர்களும், நல்ல பிரமசாரிகளாகவே யிருந்து திருவருள் பெற்றுக் கரையேறினவர்களும், ஞானசாரியருடைய திருவருளினால் அடையத்தக்க சிவகதியைச் சென்று சேர்ந்தவர்களும், சிவபெருமானைப் பூசனை செய்து பரமுத்தியைப் பெற்றவர்களும், அஞ்ஞானம் நீங்கிச் சிவனடியார்களது திருவேடமே உண்மைப்பொருளென்று சிந்தித்துச் சிவபெருமானது திருவடியின் கீழ்ப் பொருந்தப்பெற்றவர்களும்—எ-று. (உஎ)

இப்படியே யடைவுபடப் பிரித்துக் கேட்டால்
யாவருக்கு மேதரிக்கச் செவிநா நீட்ட
வொப்பரிய பொருடெரிந்து விளங்கித் தோன்ற
வுவமையுடைத் தாயகதை கற்க நிற்கத்
தப்பில்பெருங் காவியமா விரித்துச் செய்து
தருவீரென் றவர்க்குவிடை கொடுத்து வேண்டுஞ்
செப்பரிய திரவியமுங் கொடுக்க வாங்கிச்
சேக்கிழார் குரிசில்திருத் தில்லை சேர்ந்தார்.

(இ-ள்.) ஆகிய இவர்கள் மான்மியத்தை இவ்வாறு கிரமமாகத் தனித்தனி கேட்கப்புகுந்தால் எல்லோருக்கும் மனதில்தரிக்கவும், காதுகொடுத்துக் கேட்கவும், நாவினால் பிறருக்குச்சொல்லவும், ஒப்பற்ற பொருளானது தெரிந்து விளங்

கித்தோன்றவும், தனக்குத்தானே ஒப்பாகிய இச்சரித்திரத்தை யாவரும் வாசித்துணரவும், என்றைக்கும் நிலைபெற்று நிற்கவும், குற்றமற்ற பெரிய காவியரூபமாக விரித்துச்செய்து கொடுத்தருளுவீரென்று அவருக்கு உத்தரவுகொடுத்து, அதற்கு வேண்டிய அளவற்ற திரவியங்களையும் கொடுக்கப்பெற்றுக்கொண்டு ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் திருத்தில்லையில்வந்து சேர்ந்தார்.—எ-று. (உஅ)

வேறு.

தில்லை யெல்லையில் வந்து வந்தெதிர் தெண்ட னுகவி ழுந்தெழுந்
தல்லி சேர்கம லத்த டத்தினின் மூழ்கி யம்பல வாணர்முன்
ஒல்லை சென்றுப ணிந்து கைத்தல முச்சி வைத்துள முருகிநைந்
தெல்லை காணரி தாய பேரொளி யின்ப வாரியின் மூழ்கியே.

(இ-ள்.) ஸ்ரீசிதம்பரத்தின் திருவெல்லையைச்சேர்ந்து மகிழ்ச்சியடைந்து எதிரில் அஷ்டாங்கபஞ்சாங்கமாக வணங்கியெழுந்து,அகவிதழ்கள்பொருந்திய தாமரைமலர்களையுடைய சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து ஸ்ரீநடராசப் பெருமானுடைய சந்நிதியின் முன்னே விரைவாகச்சென்று வணங்கித் தமது இரண்டுகைகளையும் சிரசின்மேல் குவித்துவைத்துக்கொண்டு மனமுருகிக்கசிந்து அளவுகாணுதற்கரிய அகண்டதேஜோமயமாகிய சிவாநந்தப்பெருங்கடலில் முழுகி.-எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உகூ)

அடைய லார்புர நீறெ ழுத்திரு நகைசெய் தன்ரெருரு மூவரைப்
படியின் மேலடி மைக்கொ ளும்பத பங்க யங்கள்ப ணிந்துநின்
றடிக ளேயுன தடியர் சீரடி யேனு ரைத்திட வடியெடுத்
திடர்கெ டத்தரு வாயெ னத்திரு வருளை யெண்ணி யிறைஞ்சினர்.

(இ-ள்.) தன்னையடையாத அசுரர்களுடைய முப்புரங்கள் நீறுரும்படிப் புன்னகைசெய்து அக்காலத்தில், ஒப்பற்ற அம்மூன்றசுரர்களையும் உலகத்தில் அடிமைகொண்டருளும் சிவபெருமானுடைய திருவடித்தாமரைகளைத் தொழுது நின்று, எமது ஆண்டவரோ! உமது அடியார்களுடைய சிறந்த மாண்மியத்தை அடியேன் சொல்வதற்கு என்வருத்தம் நீங்கும்பொருட்டு முதலடியெடுத்துக் கொடுத்தருள வேண்டுமென்று சிவபெருமானுடைய திருவருளைச் சிந்தித்து வணங்கினர்.—எ-று. (௩0)

அலைபு னற்பகி ரதிந திச்சடை யாட வாடர வாடநின்
றிலகு மன்றினி லாடு வார்திரு வருளி னுலக நீரிவாக்
குலகெ லாமென வடியெ டுத்துரை செய்த பேரொலி யோசைமிக்
கிலகு சீரடி யார்செ விப்புலத் தெங்கு மாகிநி றைந்ததால்.

(இ-ள்.) அலைகின்ற நீரையுடைய கங்காநதிபொருந்திய சடை யாடவும், படம்விரித்தாடுகின்ற பாம்பணிகளாடவும் நின்று விளங்குகின்ற கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானுடைய திருவருளினால் அசரீரிவாக்காக "உலகெலாம்" என முதலடி யெடுத்துக்கொடுத்தருளிய பேரோசையானது, அதிகரித்து விளங்குகின்ற சிறப்பினையுடைய (அங்கங்கிருக்கும்) அடியார்களது செவிப்புலமெங்கும் நிறைந்தது.—எ-று. (௩க)

தில்லை மாநகர் வாழ வாழ்தவ சிந்தை யந்தண ராறைஞ்ஞூ
றல்ல தும்பல மடப தித்தவ ராச ரிக்கையி லுள்ளபேர்
எல்லை யில்லவ ரியாவ ருங்களி கொளவி ளங்கச ரீரிவாக்
கொல்லை வந்தெழ வனைவ ருங்கர முச்சி வைத்துள முருகினார்.

(இ-ள்.) தில்லைமாநகரமானது வாழும்படி நிலைபெற்றுள்ள தவச்சிந்தையையுடைய வேதியர்கள் மூவாயிரவர்களும்,இவர்களல்லாமலும் மடாதிபதிகளும், தவாச்சிரமத்தி லுள்ளவர்களுமாகிய அளவற்றபேர்களுங் களிப்படையும்படி, விளங்குகின்ற அசரீரிவாக்கானது விரைவுடன் உண்டானபோது, யாவரும் தங்கள் தங்கள்கைகளைச்சிரசின்மேல் குவித்துவைத்து மனமுருகினார்கள்.—எ-று. (௬௨)

உள்ள லார்புர நீறெ ழக்கணை யொன்று தொட்டுயர் மன்றில்வாழ்
வள்ள லார்திரு மாலை யுந்திரு நீறு மெய்ப்பரி வட்டமும்
எள்ள லாரல வென்று சேவையர் காவ லர்க்கிவை யினிதளித்
தள்ள லார்வய னீடு தில்லையி லனைவ ருங்களி கொண்டபின்.

(இ-ள்.) பகைவர்களுடைய முப்புரங்கள் நீறுரும்படி ஒருகணையையேவி, சிறப்புப்பொருந்தியகனகசபையில் எழுந்தருளியிருக்கும்ஸ்ரீநடராசப்பெருமானுக்குத் தரித்த திருமாலையும், விபூதியும், உண்மையான பரிவட்டமுமாகிய இவைகளைத்தரிப்பதற்குத் தக்கவரென்று ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுக்கு அன்போடு கொடுத்து, சேறுபொருந்திய வயல்வளமிகுந்த ஸ்ரீசிதம்பரத்தில் யாவருங்களிப்பினை யடைந்தபின்பு.—எ-று.

இது முதல் மூன்றுபாடலுங்குளகம். (௬௩)

சேவை காவலர் தொண்டர் சீருரை செய்வ தற்குயர் செய்யுண்முன்
மூவ ரோதிய திருநெ றித்தமி ழாத லால்வரன் முறைமையால்
யாவ ரும்புகழ் திருநெ றித்தலை வரைவ ணங்கியி ணங்கிமெய்த்
தாவ ருஞ்சிவ சாத னங்க டரித்து நீறு பரித்தரோ.

(இ-ள்.) ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் அடியார்களுடைய சிறந்த மான்மியத்தை எடுத்துக்கூறுவதற்கு உயர்ந்த முதனூல், முற்காலத்தில் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் முதலிய மூவர்களும் அருளிச்செய்த திருநெறித்தமிழ் வேதமாதலால், வரலாற்று முறையையே அனைவரும் துதிக்கின்ற அம்மூவரையும் வணங்கிச் சிவநேசசம்பந்தமுற்றவராய் உண்மை பொருந்திய கெடாத சிவசாதனங்களைத் தரித்துத் திருவெண்ணீறணிந்து.—எ-று. (௬௪)

வந்து சூழநி ரைத்த வையிரு நூறு கான்மணி மண்டபத்
தெந்தை யார்திரு வருளை யுன்னி யிருந்து சேவையர் காவலர்
செந்த மிழ்த்தொடை யால்வி ளங்கிய திருவி ருத்ததி ருத்தனார்
தந்த சொன்முத லாவெ டுத்தனர் தானு வானபு ராணநூல்.

(இ-ள்.) ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் சுற்றிலும் நிரைத்துள்ள அழகிய ஆயிரக்கால் மண்டபத்தில்வந்து, எமது சிவபெருமானுடைய திருவருளைச் சிந்தித்து வீற்றிருந்து செவ்விய தமிழ்த்தொடையால் விளங்குகின்ற திருவிருத்தத்தை

ஸ்ரீநடராசப்பெருமான் எடுத்துக்கொடுத்தருளிய உலகெலாம் என்னும் சொல்லை முதலாகக்கொண்டு சிவசம்பந்தமாகிய புராணஞ் செய்யத் தொடங்கினார்.—எ-று.

வேறு.

திருமறையோர் புராணமவை பதின்மூன்று சிவவே
தியரானை வழிபட்ட புராணமோ ரிரண்டு
குறைகழன்மா மாத்திரரொன் றறுவர்முடி மன்னர்
குறுநிலமன் னவரைவர் வணிகர்குலத் தைவ
ரிருமைநெறி வேளாளர் பதின்மூவ ரிடைய
ரிருவர்சா லியர்குயவர் தயிலவினை யாளர்
பரதவர்சான் றார்வண்ணார் சிலைமறவர் நீசர்
பாணரிவ ரோரொருவ ரம்பகருங் காலே.

(இ-ள்.) சொல்லுமிடத்து (அடியார்கள் அறுபத்தொன்பதின்மர்களில்,) வைதிகப்பிராமணர்களாகிய அடியார்கள் புராணம் பதின்மூன்று; சிவபெருமானுக்குத் தொண்டுசெய்து முத்திபெற்ற ஆதிசைவப்பிராமணர்கள் புராணம் இரண்டு; சப்திக்கின்ற வீரகண்டையணிந்த மாமாத்திரரென்னும் பிராமணகுலத்து அடியவர் புராணம் ஒன்று; கிரீடமணிந்த அரசகுலத்தினராகிய அடியார்கள் புராணம் ஆறு; குறுநிலமன்னவராகிய அடியார்கள் புராணம் ஐந்து; வைசியகுலத்தினராகிய அடியார்கள் புராணம் ஐந்து; இம்மை மறுமைப்பயன்களையடைதற்குரிய நல்லொழுக்கத்தையுடைய வேளாளமரபினராகிய அடியார்கள் புராணம் பதின்மூன்று; இடையர்குலத்தினராகிய அடியார்கள் புராணம் இரண்டு; சாலியர், குயவர், செக்கார், பரதவர், சான்றார், வண்ணார் வில்லையுடைய வேடர், நீசர் பாணர் என்னும் இம்மரபினராகிய அடியார்கள் புராணம் தனித்தனி ஒவ்வொன்றும்.—எ-று.

அறுதிபெறத் திருமரபு குறித்துரையாப் புராண
மவைகளொரு பதின்மூன்று திருக்கூட்டந் தன்னின்
மறுவிலவர் பதியறிந்த கதையிரண்டு வந்த
மரபறிந்த கதையிரண்டு பேரறிந்த கதையொன்
றுறுமரபு தெரியாப் புராணமவை யோரே
ழூரறியாக் கதையேழு பேரறியாக் கதையெட்
டிறுதியிலக் கங்கண்ட திருக்கூட்ட மொன்றெண்
ணித்தனையென் றறியாத திருக்கூட்ட மெட்டே.

(இ-ள்.) சிறந்த மரபினை நிச்சயித்துத்தெரிந்து சொல்லப்படாத அடியார்கள் புராணம் பதின்மூன்று; தொகை அடியார்களில் குற்றமற்ற அவர்களது க்ஷேத்திரந்தெரிந்த புராணம் இரண்டு; அவர்கள் மரபுதெரிந்த புராணம் இரண்டு; அவர்கள் திருப்பேர் தெரிந்த புராணம் ஒன்று; அவதரித்த மரபுதெரியப்படாத அடியார்கள் புராணம் ஏழு; வாழ்ந்திருந்த ஊர்தெரியாத அடியார்கள் புராணம் ஏழு; அவர்கள் திருப்பேர்தெரியாதபுராணம் எட்டு; முடிவுத்தொகைகண்ட திருக்கூட்டத்து அடியார்கள் புராணம் ஒன்று; இவ்வளவென்று கணக்கறியப்படாத திருக்கூட்டத்து அடியார்கள் புராணம் எட்டு.—எ-று. (கூஎ)

தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார்
சிறப்புலியார் கணநாதர் பூசலைசண் டேசர்
கல்விநிறை சோமாசி மாறர்நமி நந்தி
கவுணியனா ரப்பூதி நீலநக்க ராகச்
செல்வமறை யோர்காதை பதின்மூன்று சிவவே
தியர்காதை யிரண்டுபுகழ்த் துணையார்முப் போதும்
வல்லபடி சிவனையருச் சிப்பார்கண் மாமாத்
திரர்மரபிற் சிறுத்தொண்ட ரொருவர்முடி முன்னர்.

(இ-ள்.) தில்லைவாழந்தணர்கள், குங்கிலியக்கலயநாயனார்; முருகநாயனார், உருத்திரபசுபதிநாயனார், சிறப்புலிநாயனார், கணநாதநாயனார், பூசல்நாயனார், சண்டேசநாயனார், சிவஞானநிறைந்தசோமாசிமாறநாயனார், நமிநந்தியடிகணாயனார், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள், அப்பூதியடிகணாயனார், திருநீலநக்கநாயனார் என்னும் திருவருட்செல்வத்தையுடைய பிராமணகுலத்து அடியார்கள் புராணம் பதின்மூன்றாம்; புகழ்த்துணைநாயனார், தகுந்தபடியே முக்காலத்திலும் சிவபெருமானை அருச்சனை செய்யும் முப்பொழுதுந்திருமேனிதீண்டுவோராகிய ஆதிசைவப்பிராமணர்கள் புராணம் இரண்டாம்; மாமாத்திரப்பிராமணர் மரபில் அவதரித்தருளிய சிறுத்தொண்டநாயனார் புராணம் ஒன்றாம்.—எ-று. (நஅ)

அறுவரொவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழ
ரருண்மானி யிடங்கழியார் நெடுமாறர் சேரர்
குறுநிலமன் னவரைவர் நரசிங்க முனையர்
கூற்றுவனார் கழற்சிங்கர் மெய்ப்பொருளை யடிகள்
முறைமைவணி கரிலைவர் காரைக்கா லம்மை
மூர்த்திகலிக் கம்பரமர் நீதியியற் பகையார்
திறமைவிரி வேளாளர் பதின்மூவர் மூர்க்கர்
செருத்துணையார் வாயிலார் கோட்புலியார் சத்தி.

(இ-ள்.) கிரீடந்தரித்த அரசர்கள் யாவரெனின், கோச்செங்கட்சோழநாயனார், புகழ்ச்சோழநாயனார், அருள் நிறைந்த மங்கையர்க்கரசியார், இடங்கழிநாயனார், நின்ற சீர்நெடுமாறநாயனார், சேரமான்பெருமாணாயனார் ஆகிய இவர்கள் புராணம் ஆறாம்; நரசிங்கமுனையரையநாயனார், கூற்றுவநாயனார், கழற்சிங்கநாயனார், மெய்ப்பொருணாயனார், ஐயடிகள் காடவர்கோனாயனார் ஆகிய குறுநிலமன்னவர் புராணம் ஐந்தாம், காரைக்காலம்மையார், மூர்த்திநாயனார், கலிக்கம்பநாயனார், அமர்நீதிநாயனார், இயற்பகைநாயனார் ஆகிய நல்லொழுக்கமுடைய வைசியர் புராணம் ஐந்தாம், வல்லமை பொருந்திய வேளாளர்கள்புராணம் பதின்மூன்று (அவை) மூர்க்கநாயனார், செருத்துணைநாயனார், வாயிலார்நாயனார், கோட்புலிநாயனார், சத்திநாயனார்.—எ-று.

மேல் திருவிருத்தத்தி னிறுதியிலுள்ள முடிமன்னர் என்றது இத்திருவிருத்தத்தின் முதலிற் கூட்டிப்பொருளுரைக்கப்பட்டது. (நகூ)

தாயனா ரிளையான்றன் குடிமாற ரரசு
சாக்கியர்கஞ் சாறர்விறன் மிண்டர்முனை யடுவா
ரேயர்கோன் கலிக்காமர் கோபாலர் மரபி
லிருவர்திரு மூலனா ரானாயர் குயவர்
சேயபுகழ்த் திருநீல கண்டனார் பாணர்
திருமரபிற் றிருநீல கண்டத்துப் பாணர்
மேயதிற லதிபத்தர் பரதவர்கண் ணப்பர்
வேடர்மர பினிற்சான்றா ரேனாதி நாதர்.

(இ-ள்.) அரிவாட்டாயநாயனார், இளையான்குடிமாறநாயனார், திருநாவுக்கரசுசுவாமிகள், சாக்கியநாயனார், மானக்கஞ்சாறநாயனார், விறன்மிண்டநாயனார், மூனையடுவார்நாயனார், ஏயர்கோன்கலிக்காமநாயனார் ஆகிய வேளாளர்கள் புராணம் பதின்மூன்றாம்; திருமூலநாயனார், ஆனாயநாயனார் என ஆயர்குலத்தினர்புராணம் இரண்டாம்; குலாலகுலத்தவராகிய செவ்விய புகழையுடைய திருநீலகண்டநாயனார், பாணர் குலத்தவராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார், பரதவர்குலத்தவராகிய மிகுந்த வல்லமைபொருந்திய அதிபத்தநாயனார், வேடர்குலத்தவராகிய கண்ணப்பநாயனார்,சான்றார்குலத்தவராகிய ஏனாதிநாதநாயனார்.—எ-று. (சO)

நேசனார் சாலியரிற் றிருநாளைப் போவார்
நீசர்மர பினிலெங்க டிருக்குறிப்புத் தொண்டர்
தூசொலிக்கு மேகாலி மரபுதில தயிலத்
தொழின்மரபிற் கலியனார் மரபுகுறித் துரையாக்
காசில்கதை பதின்மூன்று குலச்சிறையார் தண்டி
கணம்புல்ல ரெறிபத்தர் காரியார் குறும்பர்
தேசுடைய பத்தர்பர மனைப்பாடு வார்கள்
சித்தத்தைச் சிவன்பால்வைத் தாராரூர்ப் பிறந்தார்.

(இ-ள்.) சாலியகுலத்தவராகிய நேசநாயனார், பஞ்சமகுலத்தவராகிய திருநாளைப்போவார்நாயனார், வஸ்திரம்வெளுக்கின்ற ஏகாலியர்குலத்தவராகிய எமது திருக்குறிப்புத்தொண்டநாயனார், எண்ணெய் விற்குந் தொழிலையுடைய செக்கார்குலத்தவராகிய கலியநாயனார் (என்று இவர்கள் புராணம் தனித்தனி ஒவ்வொன்றாம்.) அவரவர்கள் மரபினைக் குறித்துச்சொல்லாத குற்றமற்ற (அடியார்கள்)புராணம் பதின்மூன்று; அவை குலச்சிறைநாயனார்,தண்டியடிகணாயனார், கணம்புல்லநாயனார், எறிபத்தநாயனார், காரிநாயனார், பெருமிழலைக்குறும்பநாயனார், சிவஞானப்பொலிவினையுடைய பத்தராய்ப்பணிவார்கள் பரமனையேபாடுவார்கள், சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர்கள், திருவாரூர்ப்பிறந்தவர்கள்.—எ-று. (சக)

செப்பரிய பொய்யடிமை யில்லாதார் மெய்யிற்
றிருநீறு பூசுமுனி வர்களுலகு தன்னி
லப்பாலு மடிச்சார்ந்தா ரிவர்கடமிற் சிலபே
ராய்ந்ததமிழ்ப் பேர்சிலபேர் மலையாளர் சிலபேர்

தப்பாத தெலுங்கர்சிலர் மற்றுளதே சத்தோர்
தவஞ்செய்து பரகதியை யடைந்தவர்கள் சிலபே
ரிப்போது மிருந்தரனை வழிபடுவோர் சிலபே
ரினிமேலுந் திருமேனி கொடுவருவோர் சிலரே.

(இ-ள்.) சொல்லுதற்கரிய பொய்யடிமையில்லாத புலவர்கள், முழுநீறு பூசிய முனிவர்கள், இவ்வுலகத்தில் அப்பாலுமடிச்சார்ந்தார்கள் ஆகிய இவர்கள் புராணங்களாம்; இவர்களுள் சிலபேர் சிறந்த தமிழ்நாட்டோர்; சிலர் மலையாள தேசத்தோர்; சிலர் தவறுதலில்லாத தெலுங்குதேசத்தோர்; சிலர்மற்றைத் தேசங்களிலுள்ளவர்களாம்; தவத்தைச்செய்து பரகதியையடைவர்கள் சிலபேர்; இக்காலத்திலுமிருந்து சிவபெருமானுக்குத் தொண்டுசெய்பவர்கள் சிலபேர்; இனிமேலும் அவதாரஞ்செய்து வருபவர்கள் சிலபேர்களாம்.—எ-று.

தொகையடியார்களுள் முத்திபெற்றாரொழிய, இப்போது மிருந்தரனை வழிபடுவோரும் இனிமேலுந்திருமேனிகொடுவருவோருமாவார்:— தில்லைவாழந்தணர், பத்தராய்ப்பணிவார், பரமனையேபாடுவோர், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப்பிறந்தார், முப்பொழுதுந் திருமேனிதீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலுமடிச்சார்ந்தார் என்னு மிவர்களேயாம். (சஉ)

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரையர்
திருமூலர் நெடுமாறர் மங்கையருக் கரசி
கரைசேருங் குலச்சிறையார் யாழ்ப்பாணர் குறும்பர்
கணநாத ரப்பூதி சோமாசி மாற
ருரைசேரு மிவர்கள்பதி னொருவர்குரு வருளா
லுயர்முத்தி யடைந்தவர்க ளெறிபத்தர் கலயர்
முருகனார் கண்ணப்ப ரானயர் தாயர்
மூர்த்தியார் சண்டேசர் திருநாளைப் போவார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள், திருநாவுக்கரசுசுவாமிகள், திருமூலநாயனார், நின்றசீர்நெடுமாறநாயனார், மங்கையர்க்கரசியார், முத்திக்கரையையடைந்த குலச்சிறைநாயனார், திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார், பெருமிழலைக்குறும்பநாயனார், கணநாதநாயனார், அப்பூதியடிகளுநாயனார், சோமாசிமாற நாயனார்ஆகிய புகழையுடைய இவர்கள் பதினொருவரும் குருவருளினால் உயர்ந்த பரமுத்தியை யடைந்தவர்களாம்; எறிபத்தநாயனார், குங்கிலியக்கலயநாயனார், முருகநாயனார், கண்ணப்பநாயனார், ஆனாயநாயனார், அரிவாட்டாயநாயனார், மூர்த்திநாயனார், சண்டேசநாயனார், திருநாளைப்போவார் நாயனார்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (சங)

சேரனார் சாக்கியனார் கூற்றுவனார் தண்டி
சிறப்புலியார் பசுபதியார் கலிக்காமர் கலியர்
காரியா ரதிபத்தர் நீலநக்கர் பூசல்
கணம்புல்லர் கோட்புலியார் நமிநந்தி யடிகள்

சீருடைய கழற்சிங்கர் வாயிலார் தூய
செருத்துணையார் புகழ்த்துணையார் காடவரை யடிகள்
சூரிநெடு வேற்செங்கட் சோழனு ராக
முப்பதுபேர் சிவலிங்கத் தான்முத்தி யடைந்தோர்.

(இ ள்.) சேரமான்பெருமானாயனார், சாக்கியநாயனார், கூற்றுவநாயனார், தண்டியடிகணாயனார், சிறப்புலிநாயனார், உருத்திரபசுபதிநாயனார், ஏயர்கோன் கலிக்காமநாயனார், கலியநாயனார், காரிநாயனார், அதிபத்தநாயனார், திருநீலநக்கநாயனார், பூசல்நாயனார், கணம்புல்லநாயனார், கோட்புலிநாயனார், நமிநந்தியடிகணாயனார், சிறப்புப்பொருந்திய கழற்சிங்கநாயனார், வாயிலார்நாயனார், பரிசுத்தம்பொருந்தியசெருத்துணைநாயனார், புகழ்த்துணைநாயனார், ஐயடிகள்காடவர்கோனாயனார், பலம்பொருந்திய நீண்டவேலைத்தாங்கிய கோச்செங்கட்சோழநாயனார் ஆக இம் முப்பதுபேர்களும் சிவலிங்கத்தால் முத்தியடைந்தவர்களாம்.—எ-று. (சச)

திருநீல கண்டனு ரியற்பகையார் மூர்க்கர்
சிறுத்தொண்டர் திருக்குறிப்புத் தொண்டர்விறன் மிண்ட
ரருள்சேரு மிடங்கழியார் முனையடுவார் சத்தி
யமர்நீதி மெய்ப்பொருளா ரேனாதி நாதர்
கனைசேரும் புகழ்ச்சோழர் கஞ்சாறர் மாறர்
காரைக்கா லம்மைநர சிங்கர் கலிக்கம்பர்
வருநேச ராகவொரு பத்தொன்ப தடியார்
மணிவேடத் தாரைவழி பட்டரனை யடைந்தோர்.

(இ-ள்.) திருநீலகண்டநாயனார், இயற்பகைநாயனார், மூர்க்கநாயனார், சிறுத்தொண்டநாயனார், திருக்குறிப்புத்தொண்டநாயனார், விறன்மிண்டநாயனார், திருவருளைப்பெற்ற இடங்கழிநாயனார், முனையடுவார்நாயனார், சத்திநாயனார், அமர்நீதிநாயனார், மெய்ப்பொருணாயனார், ஏனாதிநாதநாயனார், முத்திக்கரையைச்சேர்ந்த புகழ்ச்சோழநாயனார், மானக்கஞ்சாறநாயனார், நின்றசீர்நெடுமாறநாயனார், காரைக்காலம்மையார், நரசிங்கநாயனார், கலிக்கம்பநாயனார், சிவஞானம் பொருந்திய நேசநாயனார் ஆக இப்பத்தொன்பது அடியார்களும், விபூதிருத்திராக்ஷமணிந்த சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்து முத்தியடைந்தவர்களாம்.—எ-று. (சரு)

கவுணியர்நா வுக்கரசர் பேயாரிம் மூவர்
கற்குமிய லிசைவல்லோ ரிசைத்தமிழ்நூல் வல்லோர்
பவமணுகாத் திருநாளைப் போவாரா னயர்
பாணர்பர மனைப்பாடு வாராக நால்வர்
புவனிபுக ழையடிக டிருமூலர் காரி
பொய்யடிமை யில்லாத தமிழ்ப்புலவர் சேரர்
கவமுடைய விவரைவ ரியல்வல்லோர் நின்ற
நாயன்மார் தவம்புரிந்து நற்கதியை யடைந்தோர்.

(இ-ள்.) திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், காரைக்காலம்மையார் என்னும் இம்மூவர்களும், கற்கும்படியான இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் வல்லவர்களாம், பிறவித்துன்பமடையாத திருநாளைப்போவார் நாயனார், ஆனாயநாயனார், திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார், பரமனையேபாடுவார் ஆகிய இந்நால்வர்களும் இசைத்தமிழில் வல்லவர்களாம்; உலகத்தார் புகழ்கின்ற ஐயடிகள் காடவர்கோனாயனார், திருமூலநாயனார், காரிநாயனார், பொய்யடிமையில்லாத புலவர்கள், சேரமான்பெருமாணாயனார் என்னும் சிறப்புப்பொருந்திய இவர்கள் ஐவரும் இயற்றமிழில் வல்லவர்களாம்; இவர்களல்லாத மற்றநாயன்மார்கள் திருத்தொண்டுசெய்து நல்ல பரமுத்தியைப்பெற்றவர்களாம்.—எ-று. (சகூ)

பாக டிருநீல கண்ட

ரியற்பகையா ருள்ளிட்டார் மூர்த்தியா ரப்பர்
நல்லதுற வறம்பிரம சாரிகள்சண் டேசர்
நானிலத்தி லரனடியார் தங்களுடன் சேர்ந்து
செல்கதிபெற் றவர்ஞான சம்பந்த ருடனே
திருமணத்தி லொருமணமாய்ச் சேர்ந்தவர்க ளனேகர்
பல்வளஞ்சே ராரூர ருடன்சேரர் கையிற்
பரியுகைக்க வுடன்சென்ற பரிசனமெண் ணிறைந்தோர்.

(இ-ள்.) திருநீலகண்டநாயனார், இயற்பகைநாயனார் முதலாகவுள்ளவர்கள் இல்லறத்திலிருந்து முத்திபெற்றவர்களாம்; மூர்த்திநாயனாரும், திருநாவுக்கரசு சுவாமிகளும் நல்லதுறவறத்திலிருந்து முத்திபெற்றவர்களாம்; சண்டேசநாயனார் பிரமசரியத்திலிருந்து முத்திபெற்றவராம்; இவ்வுலகத்தில் சிவபெருமானடியார்களோடுகூடி அன்புசெய்து அடையத்தக்க பரமுத்தியைப்பெற்றவர்கள் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய திருமணத்தில் அவருடன் ஒப்பற்ற பெருமணமாய் முத்திபெற்றவர்கள் அனேகம்பேர்களாம்; பலவளப்பங்களும் நிரம்பிய நம்பியாரூரரென்னும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுடன் சேரமான்பெருமாணாயனார் குதிரையேறிக்கொண்டு திருக்கயிலைக்குச்செல்ல, அப்போது அவருடன் சென்று முத்திபெற்ற பரிசனங்கள் அளவற்றவர்களாகும்.—எ-று.

தனியடியார்களில், துறவறத்தினராகிய மூர்த்திநாயனார், திருநாவுக்கரசு சுவாமிகள் என்னுமிருவரும், பிரமசரியத்தினராகிய சண்டேசநாயனார் ஒருவரும் ஆகிய இம்மூவர்நீங்க, ஏனையோர் இல்லறத்தினரேயென்பார் 'இயற்பகையா ருள்ளிட்டார்' என்று கூறினார். (சஎ)

சிவனடியா ருடன்பகையாய் முத்தியடைந் தவர்கள்
சேய்ஞலூர்ச் சண்டேசர் பிதாவெச்ச தத்தன்
கவர்புகழ்சேர் கோட்புலியா ருரைத்ததிரு விரையாக்
கலிபிழைத்த கிளைபகைத்து நரகினைச்சென் றடைந்தோர்
தவரான மூர்த்தியா ரிறைவனுக்குச் சாத்துஞ்
சந்தனக்காப் பினைவிலக்கி யமண்சமயச் சார்வாய்ப்
புவிபுரந்த கருநடமன் னவன்முதல நேகர்
புராணகதை யினைப்பிரித்துப் புகலவெளி தலவே.

(இ-ள்.) திருச்சேய்ஞலூரில் அவதரித்த சண்டேசநாயனார்பிதாவாகிய எச்சதத்தனென்பவனும், பரந்த புகழையுடைய கோட்புலிநாயனார்கூறிய திருவாணையைக்கடந்த சுற்றத்தாரும் சிவபெருமா னடியார்களைப்பகைத்து முத்திபெற்றவர்களாம்; தவசிரேஷ்டராகிய மூர்த்திநாயனார் சிவபெருமானுக்குச் சாத்துகின்ற சந்தனக்குறடு கிடையாதபடி விலக்கிச் சமணசமயச்சார்பினனும் உலகத்தையரசாண்ட கருநடதேசத்தரசன்முதலிய அனேகர் சிவனடியார்களைப் பகைத்து நரகத்தை யடைந்தவர்களாம்; இவ்வாறு அடியார்களுடைய புராணசரித்திரத்தைத் தனித்தனியே பிரித்துச் சொல்லுதல் அரிதாகும்.—எ-று.

கருநடமன்னவன்முத லனேகர் என்றதனால், மெய்ப்பொருணயனார்க்குத் தீங்கிழைத்த முத்தநாதன் முதலானவர்களையுங் கொள்க. (சஅ)

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்த நாளி
லடித்தொண்டு செய்தொண்டர் சிலரவர்க்கு முன்னே
பேரூர்மெய்த் தொண்டுசெய்த பேர்சிலபே ரவர்க்குப்
பிறகுதிருத் தொண்டுசெயும் பேர்சிலபே ராகச்
சீரூருந் திருத்தொண்டர் புராணத்திற் சேர்த்துச்
சேவையர்கோன் சேர்வைசெயுந் தொண்டரள விறந்தோர்
காரூரு மணிகண்டர்க் கவரவர்கள் செய்த
கைத்தொண்டி னிலைகளைகண் டுரைக்கவெளி தலவே.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்தை யருளிச்செய்த அக்காலத்தில் திருவடித்தொண்டுசெய்துகொண்டிருந்த அடியார்கள் சிலர்; அச்சுந்தரமூர்த்திசுவாமிகள் காலத்திற்குமுன்னே பெருமை பொருந்திய உண்மையாகிய திருத்தொண்டுசெய்தவர்கள் சிலர்; அவர்க்குப் பிற்காலத்தில் திருத்தொண்டுசெய்கின்றவர்கள் சிலர்; இவ்வாறாகச் சிறப்புப்பொருந்திய திருத்தொண்டர்புராணத்தில் ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் சேர்த்துச் சேர்வைசெய்த சிவனடியார்கள் அநேகம்பேர்களாம்; சிறந்த காளகண்டராகிய சிவபெருமானுக்கு அந்தந்த அடியார்கள்செய்த கைத்தொண்டினது நிலைமையை அளவுபடுத்திச்சொல்ல எளிதல்ல.—எ-று. (சகூ)

ஒருலகோ வொருதிசையோ வொருபதியோ தம்மி
லொருமரபோ வொருபெயரோ வொருகாலந் தானோ
பேருலகி லொருமைநெறி தருங்கதையோ பன்மைப்
பெருங்கதையோ பேரொன்றோ வல்லவே யிதனை
யேருலகெ லாமுணர்ந்தோ தற்கரிய வன்னென்
றிறைவன்முத லடியெடுத்துக் கொடுத்தருளக் கொண்டு
பாருலகி னுமகணின் றெடுத்துக்கை நீட்டப்
பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார்.

(இ-ள்.) (அத்திருத்தொண்டர்களுக்குரியவை) ஒரு தேசமோ, ஒரு திசையோ, ஒருபதியோ, தங்களுள் ஒருமரபோ, ஒருவரோ, ஒருகாலமோ, பெரிய

வுலகத்தில் ஒருவமிசமான சரித்திரத்தைச் சொல்லுங்கதையோ,பலவமிசச்சரித்திரத்தைக் கூறும் பெருங்கதையோ, ஒரு பெயரோ,இவைகளல்ல; ஆனால்,இதனை மேன்மையாகிய "உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" என்று சிவபெருமான் முதலடியெடுத்துக் கொடுத்தருள, அதையே முதலாகவைத்துக்கொண்டு, இப்பெரிய வுலகத்தில் சரஸ்வதியானவள் சொற்களையெடுத்துக்கொடுக்க, சிவனடியார்களது சிறப்பைத் துதிசெய்ய வல்லராகிய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் புராணமாகப் பாடி முடித்தருளினார்.—எ-று. (ரு0)

கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது முந்நீர்க்
கடற்கரையி னெய்மணலை யெண்ணியள விடலாம்
பெருங்கடன்மேல் வருந்திரையை யொன்றிரண்டென் றெண்ணிப்
பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்துவிட லாகுந்
தருங்கடலின் மீனையள விடலாகும் வானத்
தாரகையை யளவிடலாஞ் சங்கரன்ற னடிமது
சிரங்கொடிருத் தொண்டர்புரா ணத்தையள விடநஞ்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கு மரிதே.

(இ-ள்.) கருநிறம்பொருந்திய கடலைக்கையினால் நீந்திக்கரையேறுதல் எளிதாம், மூன்றீரையுடைய சமுத்திரக்கரையிலுள்ள நுண்ணியமணலையும் எண்ணி இவ்வளவென்று அளவிட்டுச் சொல்லலாம், பெரிய கடலின்மேல் மாறிமாறிவருகின்ற அலையை ஒன்று இரண்டு என்று எண்ணிப்பிரித்து எழுதி, மொத்தத்தொகையைக் கூட்டிச் சொல்லலாம் ; வளப்பங்களைக் கொடுக்கும் கடல் மீனையும் இவ்வளவினதென்று அளவிடலாம் ; ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களையும் அளவிடலாகும் ; சிவபெருமானுடைய திருவடிகளைத் தமது சிரசின்மேல் தரித்த திருத்தொண்டர்கள் புராணத்தை அளவுபடுத்திச் சொல்வதற்கு நம்முடைய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுக்கு எளிதேயல்லாமல் தேவர்களுக்கும் அருமையானதாகும்.—எ-று.

முந்நீர் என்றது, சிருஷ்டி - திதி - சங்கார மென்னும் முத்தொழில்களைச் செய்யும் நீரென வறிக. அன்றி, ஆற்றுநீர் - ஊற்றுநீர் - மழைநீர் என்னும் மூவகை நீரை யுடையது எனினுமாம். (ருக)

அறுபதுபேர் தனித்திருப்பேர் திருக்கூட்ட மொன்ப
தர்கவறு பத்தொன்ப தரனடியார் கதையை
மறுவிறிரு நாவலூர்ச் சிவமறையோர் குலத்து
வருசடைய னார்மனைவி யிசைஞானி வயிற்றி
லுறுதிபெற வவதரித்த வாரூரர் முன்ன
ளுரைசெய்த திருத்தொண்டத் தொகைப்பதிகத் தடைவே
நறைமலிபூம் பொழில்புடைசூழ் திருநாரை யூரி
னம்பியாண் டார்திருவந் தாதிகடைப் பிடித்து.

(இ-ள்.) தனியடியார்கள் அறுபதின்மரும், திருக்கூட்டத்து அடியார்கள் ஒன்பதின்மரும் ஆக அறுபத்தொன்பதின்மரொன்னும் சிவனடியார்களது சரித்திரத்தைக் குற்றமற்ற திருநாவலூரில் ஆதிசைவப்பிராமணர்குலத்தில் அவதரித்த

சடையநாயனர் மனைவியாகிய இசைஞானியார் திருவயிற்றினிடமாக உலகத்திலு ள்ளவர்கள் தம்முயிர்க்கு உறுதிபெறும்படி புத்திரராகவெழுந்தருளிய ஸ்ரீசுந்தர மூர்த்திசுவாமிகள் முற்காலத்தில் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகைத் திருப் பதிகத்தின் முறைமைப்படியே, அருகில்வாசனைபொருந்திய மலர்ச்சோலையுடைய சோ லைசூழ்ந்த திருநாரையூரில் அவதரித்தருளிய நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த திருவந்தாதியை ஆதரவாகவைத்துக்கொண்டு.—எ-று.

இதுமுதல் மூன்றுபாட்டுங் குளகம். (ருஉ)

காண்டமிரண் டாவகுத்துக் கதைப்பரப்பைத் தொகுத்துக்
கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட்
டீண்டுரைத்த புராணத்திற் றிருவிருத்த நாலா
யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக வமைத்துச்
சேண்டகைய திருத்தொண்டர் புராணமெனப் புராணத்
திருமுறைக்குத் திருநாமஞ் சீர்மைபெற வமைத்திட்
டாண்டகைமை பெறவெழுதி மைக்காப்புச் சாத்தி
யழகுபெறக் கவளிகையு மமைத்ததில்வைத் ததன்பின்.

(இ-ள்.) (தாம் செய்யத்தொடங்கிய புராணத்தை) இரண்டு காண்டங்க ளாகவகுத்து, சரித்திரத்தின்விரிவைத் தொகுப்பாகச்செய்து, நினைத்தற்கரிய சரு க்கங்கள் பதின்மூன்றாகவைத்து இவ்வாறியற்றிய புராணத்தை நாலாயிரத் திரு நூற்றைம்பத்துமூன்று திருவிருத்தங்களால் நிறைத்து, இப்புராணத் திருமுறைக் குப் பெருஞ்சிறப்பினையுடைய திருத்தொண்டர்புராணமென்று மேன்மைபொரு ந்தத் திருப்பெயரிட்டு, (ஏட்டில்) நன்றாகவிளங்கும்படி எழுதி மைக்காப்பிட்டு, அழகாகப்புத்தகக்கவளிகை ஒன்றுசெய்து அதனுள்வைத்தபின்பு.—எ-று.

கவளிகையாவது, புராணத்திருமுறையைப் பாதுகாத்தற்பொருட்டுப் பட் டு முதலியவற்றால் தைத்துச் சூழக் கட்டியிருக்கும் ஒரு பை போல்வது. (ருங)

வேறு.

சேவை காவலர்பு ராண காதைதொகை செயநி னைந்தெமைய கன்றபின்
யாவர் தாமருகி ருந்த பேர்கள்கதை சென்ற தெவ்வளவி ருந்ததெங்
காவ தென்னிவைக ளறிய வேண்டுமெத றிந்து வாருமென வளவர்கோ
னேவி னனுரிய தூதர் தூதரறி யாம லொற்றரையு மேவினன்.

(இ-ள்.) ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் புராணக்கதையைப்பிரித்துத் தொகை செய்யநினைத்து எம்மைவிட்டுநீங்கினபின்பு, அவருக்குதவியாய் அருகிலிருந்தவர் கள் யாவர்? இதுவரையிலும் புராணம் எவ்வளவாயிற்று? இப்போது யாருடைய புராணம் நடக்கின்றது? இன்னும் ஆகவேண்டியது எவ்வளவிருக்கின்றது; இவை களை நான் தெரிந்துகொள்ளவேண்டும்; ஆதலால், அதனைத் தெரிந்துகொண்டு வாருங்களென்று அநபாயசோழமகாராஜா தமக்குரிமையான தூதர்களை யனுப்பி னர்; அத்தூதுவர்களறியாமல் ஒற்றர்களையும் அனுப்பினர்.—எ-று. (ருச)

வென்றி வேல்வளவ னளவ றிந்துவர விட்ட காளையர்பு ராணநூ
லொன்று பாதிகதை சென்ற தென்றுசில ரோடி னர்சிலரு வந்துசென்
றின்று நாளைமுடி யும்பு ராணமினி யென்று ரைத்திடவி றைஞ்சினன்
சென்று நற்கதைமு டிந்த தென்றுசிலர் செம்பி யற்குறுதி செப்பினர்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வேலாயுதத்தையுடைய அநபாய சோழமகாராஜாவானவர் புராணம் எவ்வளவாயிற்றென்று அளவறிந்துவரும்படி ஏவியதூதுவருள் சிலர் அப்புராணத்திலடங்கிய சரித்திரம் பாதியாயிற்றென்று விரைந்துவந்து சொல்லினர்; சிலர் மிகுந்த மகிழ்வோடுசென்று புராணம் இனி இன்றைக்குள் நாளைக்குள் முடிவுபெறுமென்று சொல்லக்கேட்டு, அத் திசையைநோக்கி வணங்கினர்; அதன்பின்பு சிலர்சென்று நல்ல அப்புராணசரித்திரம்செய்து நிறைவேறியதென்று சோழமகாராஜாவுக்கு உறுதியாகச் சொன்னார்கள்.—எ-று.

வந்து சொன்னவர்க ளனைவ ருக்குநவ மணிக ளுந்துகிலு மம்பொனுஞ்
சிந்தி யள்ளியுமு வந்து வீசியுயர் செம்பொ னம்பலம ருங்கில்வா
ழந்தி வண்ணர்நட மும்ப ணிந்துமுத லடியெ டுத்தவர்கொ டுத்திடப்
புந்தி செய்துமகிழ் சேவை காவலர்பு ராண முந்தொழுவ னென்னு.

(இ-ள்.) இவ்வாறுவந்து சொல்லிய தூதுவர்களுக்கெல்லாம் நவரத்தினங்களையும், நல்லவஸ்திரங்களையும், அழகிய பொன்னையும் மிகுந்தசந்தோஷத்துடன் வாரிவாரிக்கொடுத்து, மாற்றுயர்ந்த செம்பொன்மயமாகிய திருச்சிற்றம்பலத்தில் வீற்றிருந்தருளும் செவ்வானநிறம்போன்ற திருமேனியையுடைய ஸ்ரீநடராசப்பெருமானது திருநடனத்தையும்வணங்கி, அவ்வெம்பெருமான் முதலடியெடுத்துக்கொடுத்தருள அதை முதலாகவைத்துக்கொண்டு பாடிப் பெருமகிழ்ச்சியுற்ற ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் செய்தருளிய புராணத்தையும் நான் தொழுவேனென்று எத்தனித்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௬)

வீதி வீதிதொ றுந்தொ றும்பயண மென்று வென்றிமணி முரசறைந்
தோதி வேதியர்க ளெண்ணி யிட்டவுயர் நாளு மோரையுமு கூர்த்தமும்
போத நாடிவரை புரைக டக்களிறு புரவி தேர்கருவி யாடரச்
சாது ரங்கமுட னேசெ லப்பிளிறு தந்தி மேல்கொடுந டந்தனன்.

(இ-ள்.) ஸ்ரீசிதம்பரத்திற்குப் பயணம் புறப்படவேண்டுமென்று அந்தந்த வீதிகள் தோறும் வெற்றிபொருந்திய அழகிய பேரிகையடித்துத் தெரிவித்து, சிறந்த கணிதசாஸ்திரிகள் தெரிந்து கணித்துச்சொல்லிய சுபதினமும் இலக்கினமும் முகூர்த்தமும் வர நன்றாகத்தெரிந்து, மலையையொத்த மதயானை - குதிரை - தேர் - காலாள் என்னும் சதுரங்கசேனைகளும் தம்முடன் சூழவரும்படி சோழமகாராஜா முழங்குகின்ற பட்டத்து யானையின் மேலேறிச் சென்றனர்.—எ-று.

தேர்மு ழக்கொலிம ழைக்க டக்கரட சிந்து ரக்களிறு பிளிறுசீ
ரார்மு ழக்கொலிப ரிச்செ ருக்கொலிப தாதி வந்தெதிர டர்ந்தெழும்
போர்மு ழக்கொலிச ழக்கி லாதுயர்ப டைக்க லன்புணரு மோசையேழ்
கார்மு ழக்கொலியி னெட்டி ரட்டிநிறை கடன்மு ழக்கெனமு ழக்கெழ.

(இ-ள்.) இரதம் ஒலிக்கின்ற ஒலியும், மேகத்தைப்போல மதம்பொழிகின்ற சிந்தூரமெழுதிய யானைகள் கூச்சலிடுகின்ற பெரிய ஓசையும், குதிரைகள் கனைக்கின்ற ஒலியும், பதாதிகள் ஒருவருக்கொருவர்எதிரில்வந்து நெருங்கிக்கொச்சிக்கின்ற பேரொலியும், குற்றமின்றி உயர்ந்த ஆயுதங்கள் ஒன்றோடொன்று தாக்குதலா

லுண்டாகின்ற ஓசையும், சப்தமேகங்களும் முழங்கு முழக்கத்தைப் பார்க்கிலும் பதினறுபங்கு அதிகமாக நிறைந்த சமுத்திர முழக்கம்போல முழங்க.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலும் குளகம். (டுஅ)

வளவர் கோன்வரவ றிந்து தில்லைமறை யோரும் வண்மைமட பதிகளும்
பிளவு கொண்டமதி நுதன்ம டந்தையரு மற்று முள்ளபெரி யோர்களுங்
களவி லாதமொழி கொடுபு ராணகதை செய்த கங்கைகுல திலகருந்
தளவ மாலையப யனையெ திர்ந்தினிய சார வாசிபல சாற்றினர்.

(இ-ள்.) அநபாயசோழமகாராஜாவினது வருகையை அவ்வோசையினல் தெரிந்து, தில்லைவாழந்தணர்களும், வளம்பொருந்திய மடாதிபதிகளும், அர்த்தசந்திரன்போன்ற நெற்றியையுடைய மாதர்களும், மற்றுமுள்ள பெரியோர்களும், வெளிப்பட்ட அசரீரிவாக்கை முதலாகக்கொண்டு திருத்தொண்டர் புராணமாகிய கதையைத்தொகுத்துச்செய்த கங்கைகுலதிலகராகிய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளும், முல்லைமலர்மாலையைத்தரித்த அநபாய சோழச்சக்கிரவர்த்தியை எதிர்கொண்டு, இனிய பயனைத்தராநின்ற பல ஆசிமொழிகளைச் சொன்னர்கள்.—எ-று. (டுகூ)

முண்ட மானதிரு முடியு மிட்டதிரு முண்ட முங்கவச முந்துணைக்
குண்ட லங்களுமி ரண்டு காதினும்வ டிந்த லைந்தகுழை யுந்திருக்
கண்ட மாலைகர மாலை யுஞ்சிரசு மாலை யுங்கவின்வி ளங்கவே
தொண்டர் சீர்பரவு வான ணைந்தசுப சரிதை சோழனெதிர் கண்டனன்.

(இ-ள்.) முண்டிதமாகிய திருமுடியும், திரிபுண்டரமாகத்தரித்த விபூதியும், உருத்திராக்ஷங்களும், இணையாகிய குண்டலமும், இரண்டுகாதுகளிலும் தொங்கியசைந்து கொண்டிராநின்ற கண்டிகையும், கழுத்திலணியும் உருத்திராக்ஷகண்டிகையும், ஜெபமாலையும், சிரசில்தரிக்கும் மாலையும், விளங்கும்படி ஸ்ரீசேக்கிழார் சுவாமிகள் வந்தருளிய மங்களகரமான செயலை அநபாயசோழமகாராஜாவானவர் கண்ணினல் தமக்கு எதிராகக்கண்டார்.—எ-று. (சு0)

கண்ட போதுளம கிழ்ந்து தன்னையறி யாது கைகடலை மீதுறக்
கொண்ட வேடமர னடியர் வேடமிது குறைவி லாததவ வேடமென்
றண்டவாணர்திருவருளையுன்னியவரடிமைகொண்டபெருமையையினைந்
தெண்ட யங்கரசரோறு சேவையர் குலாதி பாதுகையி றைஞ்சினன்.

(இ-ள்.) எதிராகக்கண்டவுடனே மனமகிழ்ந்து தம்மையறியாமல் இரண்டு கைகளும் சிரசின்மேல் அஞ்சலியாகப் பொருந்த, இவர் கொண்டிருக்கும் இத்திருவேடமானது சிவனடியார்வேடமே; இதுவே குறைவில்லாத தவவேடமென்று, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானுடைய திருவருளை நினைந்து, அவர் அடிமையாகக்கொண்ட பெருமையையுஞ் சிந்தித்து, யாவராலும் எண்ணப்பட்ட அரசர்களாகிய யானைகளுக்கு ஆண்சிங்கம்போன்ற அநபாய சோழமகாராஜாவானவர் ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுடைய திருவடிப்பாதுகையில் வணங்கினர்.—எ-று.

தாம் சக்கிரவர்த்தியென்பதும் அவர் மந்திரியென்பதும் சிறிதும்நினையாது திருவேடப் பொலிவைக்கண்டபோதே வீழ்ந்து வணங்கினமையின் 'தன்னையறியாது கைகடலைமீதுற இறைஞ்சினன்' என்றுகூறினர். பாதுகை=பாதரக்ஷை.

இறைஞ்சி யம்பலவர் பாத தாமரையி றைஞ்ச வெண்ணிவரன் முறைமையா, லறஞ்சி றந்தமுனி சேவை காவலரு மாறைஞ் ஞூறுமறையோர்களுந், துறஞ்சி றந்தமட பதிக ளுந்தொடர வந்து மன்னனரி பிரமர் பான், மறைஞ்சு நின்றபொருள் வெளிப்ப டக்கனக மன்றி னின்றபடி கண்டனன்.

(இ-ள்.) வணங்கிக்கொண்டு ஸ்ரீநடராசப்பெருமானுடைய திருவடித்தாமரைகளை வணங்க நினைந்து வரன்முறைமையாக, சிவதருமத்தில் சிறந்த முனிவரராகிய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளும், தில்லைவாழந்தணர் மூவாயிரவர்களும், துறவறத்திற்சிறந்த மடாதிபதிகளும் தம்மைச் சூழ்ந்து பின்றொடர்ந்துவர அநபாயசோழராஜாவானவர்வந்து, (ஒருவரோடொருவர் அகங்கரித்து அடியையும் முடியையும் தேடிய) திருமால் பிரமன் என்னு மிவர்களிடத்தில் மறைந்து நின்ற பரம்பொருளாகிய சிவபெருமான் வெளியாகக் கனகசபையில் திருநடனஞ்செய்து நின்றருளும் திருக்கோலத்தைத் தெரிசித்தனர்.—எ-று.

துறவறம் என்பது, துறம் எனத்தொகுத்தலாயிற்று. (சாஉ)

கண்ட கண்ணருவி தாரை கொள்ளவிரு கைக ளஞ்சலிகொ ளக்கசிந்
தெண்ட ரும்புளக ரோம கூபமெழ வின்ப வாரிகரை புரளவாய்
விண்ட தூமொழிகள் குழற வன்பினொடு விம்மி விம்மியருண் மேலிடத்
தெண்ட னுகமுன்வி ழுந்தெ ழுந்துநனி செம்பி யன்பரவ வெம்பிரான்.

(இ-ள்.) தெரிசித்த கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் அருவிபோல இடைவிடாது பொழியவும், இரண்டு கைகளும் (சிரசின்மேல்) அஞ்சலிகொள்ளவும், மனமுருகி, எண்ணத்தக்க புளகாங்கிதமாக மயிர்சிலிர்க்கவும், ஆனந்தவெள்ளமானது பெருகிக் கரைபுரளவும், வாக்கினின்றும் வெளிப்பட்ட தூய்மையான மொழிகள் குழறவும், அன்புடனே அதிக விம்மிதமடைந்து திருவருள் மேலீடாய்ச் சந்நிதிமுன்னே அஷ்டாங்க பஞ்சாங்கமாக நமஸ்கரித்து எழுந்து நின்று அநபாயசோழமகாராஜா மிகுதியாகத்துதிக்க, எமது நடராசப்பெருமான்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலும் குளகம். (சாநு)

சேக்கி ழானமது தொண்டர் சீர்பரவ நாம கிழ்ந்துலக மென்றுநம்
வாக்கி னலடி யெடுத்து ரைத்திடவ ரைந்து நூல்செய்துமு டித்தனன்
காக்கும் வேல்வளவ நீயி தைக்கடிது கேளெ னக்கனக வெளியிலே
யூக்க மானதிரு வாக்கெ ழுந்ததுதி ருச்சி லம்பொலியு முடனெழ.

(இ-ள்.) உலகுயிர்களை நீதியோடு பாதுகாக்கின்ற வேற்படையையுடைய சோழராசனே! இந்தச் சேக்கிழான் நமது அடியார்கள் சிறப்பைத் துதிசெய்ய, நாம் மகிழ்வுற்று நமது வாக்கினல் "உலகெலாம்" என்று முதலடியெடுத்துக்கொடுக்க, அதை ஆதரவாகக்கொண்டு புராணஞ்செய்து நிறைவேற்றினன்; இதை நீ விரைவில் கேட்கக்கடவையென்று கனகசபையின்கண் யாவர்க்கும் மகிழ்ச்சிவிளைவிக்கத்தக்க ஒரு அசரீரிவாக்கு உண்டாயிற்று; அவ்வோசையுடன் திருநடனச்சிலம்பினோசையுங்கூட வுண்டாக.—எ-று.

திருச்சிலம்பொலியு முடனெழ ஊக்கமான திருவாக்கெழுந்தது, எனக் கூட்டுக. (சுச)

மன்று ளாடிதிரு வாய்ம லர்ந்தமொழி யுஞ்சி லம்பொலியு மன்றிலே
நின்ற மானிடர்செ விப்பு லன்புக நிறைந்த தன்றியு நிலத்தின்மே
லொன்றி நின்றுயர்ச ராச ரங்களடை யக்க சிந்துருகி யோலிடக்
குன்றி லங்குதிர டோண ரேந்திரபதி குதுகு லித்துள மகிழ்ந்தனன்.

(இ-ள்.) கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப் பெருமான் திருவாய்மலர்ந்தருளிய அசரீரிவாக்கும், திருநடனச்சிலம்பின்ஓசையும் அக்கனகசபையின்கண் நின்றுகொண்டிருந்த அடியார்களுடைய காதுகளில் கேட்க நிறைந்ததல்லாமலும், இவ்வுலகத்தில் நிலைபெற்றுயர்ந்த சராசரங்களெல்லாம் மனங் கசிந் துருகி ஆரவாரிக்க, மலையைப்போல விளங்குகின்ற திரண்ட தோள்களையுடைய அநபாயசோழமகாராஜாவும் தேகம்சிலிர்த்து மனமகிழ்ச்சியடைந் தனர்.—எ-று. (சுரு)

தொண்டர் தொண்டுசெய்பு ராண காதைமதி சூடு நாதர்திரு வருளினால்
விண்ட நீதிபுனை சேக்கி ழார்முனிவி ரித்து ரைத்தகதை கேட்பதற்
கண்ட வாணரடி யாரெ லாங்கடுக வருக வென்றுதிசை திசைதொறு
மெண்ட யங்கரச னேடெ டுத்தெழுதி யாளு மோலைகளு மேவினான்.

(இ-ள்.) சந்திரசடாதரராகிய ஸ்ரீநடராசப்பெருமானது திருவருளினால், பூர்வத்தில் மநுச்சக்கிரவர்த்தி கூறிய நீதியைத் தெரிந்த ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் விரிவாகச்சொல்லிய அடியார்கள் திருத்தொண்டுசெய்தசரித்திரமாகிய திருத்தொண்டர்புராணத்தைக்கேட்பதற்குச் சிவனடியார்கள்யாவரும் விரைவாக வரக்கடவர்களென்று, எத்திக்குகளிலும் விளங்குகின்றகீர்த்தியையுடையசோழமகாராஜாவானவர் திக்குகள்தோறும் திருமுகமெழுதித் தூதுவர்களையும் அத்திருமுகத்தையும் அனுப்பினார்.—எ-று. (சுசு)

## வேறு.

கவச மணிந்த சனங்களு மிங்கித முங்கம்பித்
தவச முறுஞ்சிவ சிந்தையு மன்பக லாமேன்மைத்
தவசரி தத்தொழி லுஞ்சிவ சாதன முஞ்சாரச்
சிவசம யத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள்.

(இ-ள்.) விபூதி ருத்திராக்ஷமாகிய கவசத்தையணிந்த சிவனடியார்களும் ஒருவரோடொருவர் இனிமைபாராட்டுங் குணமும், தேகம் நடுக்குற்றுப் பரவசமடையும்படியான சிவசிந்தனையினையும் அன்புநீங்காத மேன்மையினையுமுடைய சிவனடிமைத்தொண்டும், சடைமுடிமுதலிய சிவசாதனங்களும் பொருந்தச் சைவசமயிகள் யாவரும்வந்துகூடினார்கள்.—எ-று. (சுஎ)

வேதியர் வேத முழக்கொலி வேதத் தைத்தமிழா
லோதிய மூவர் திருப்பதி கத்தொலி யோவாமற்
பூதி யணிந்தர கரவென வன்பர் புகழ்ந்தோதுங்
காதியல் பேரொலி காரொலி போலொலி கைத்தேற.

(இ-ள்.) வேதியர்கள் வேதபாராயணஞ்செய்யும் ஓசையும், அந்த வேதத்தைத் தமிழ்ப்பாஷையில் அருளிச்செய்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் முதலிய மூவர்களது தேவாரத்திருப்பதிகங்களி னோசையும், நீங்காமல் திருவெண்ணீறணிந்த அடியார்கள் அரகர வென்று புகழ்ந்து துதிக்கின்ற செவிக் கினிதாகிய மிகுந்த ஓசையும் மேகத்தினொலிபோலொலித்து, அதையும் அடக்கி மேலிட்டோங்க.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (சுஅ)

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்றா
ணேசிப் பவர்சிலர் பிறவா வரமரு ணிமலாவென்
றியாசிப் பவர்சிலர் திருமுறை யெழுதிக் களிகூற
வாசிப் பவர்சில ராக விருந்து மகிழ்ந்தார்கள்.

(இ-ள்.) (அவ்வடியார்களுள்)சிலர் சிவபூசைசெய்கின்றவர்களும்,சிலர் அவ்வாறு பூசைசெய்து ஸ்ரீநடராசப்பெருமானுடைய திருவடிகளை அன்போடு தியானிக்கின்றவர்களும், சிலர் மலரகிதராகிய எம்பெருமானே! அடியேம் இனிப்பிறவாதிருக்க வரம் அருளவேண்டுமென்று யாசிக்கின்றவர்களும், சிலர் திருத்தொண்டர்புராணத்திருமுறையை எழுதி விருப்பமிகும்படி வாசிக்கின்றவர்களுமாக இருந்து மகிழ்ச்சியடைந்தார்கள்.—எ-று. (சுசு)

தெள்ளு திரைக்கடன் மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை யன்புசெ யன்பர் மடங்க டொறும்பாலர்
மெள்ள விருந்து மிழற்று புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடி யுரைப்பன கேட்பன மெய்ப்பூவை.

(இ-ள்.) தெள்ளிய அலைகளையுடைய சமுத்திரத்தில் ஊழிகாலந்தோறும் மிதந்த திருத்தோணிபுரத்தின்கண் திருவவதாரஞ்செய்தருளியதிருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்கு அன்புசெய்கின்ற அடியார்களுடையதிருமடங்கள் தோறும் சிறுவர்கள் அமைவாக இருந்து வாசித்துப் பொருளுரைக்குந் திருத்தொண்டர் புராணத்திருவிருத்தத்தைக் கிளிப்பிள்ளைகளும் கற்றுக்கொண்டு பாடிப்பொருள் சொல்வன; அதை நாகணவாய்ப்பறவைகள் கேட்பனவாம்.—எ-று.

திருத்தோணிபுரம் - இது சீகாழியின் துவாதசநாமங்களினொன்று. கிள்ளைகளும் என்பதில் இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. (எ0)

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்டரு சீர்நாடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பெருத்தார்கள்.

(இ-ள்.) அதனைக்கண்டு களிப்பையடைந்த நன்மைபொருந்தியஉள்ளத்தோடும்சேர்ந்திருக்கின்ற மந்திரிகளும் சேனாதிபதிகளும் சூழவிரைவில்வந்து கூடி, வலிய காவலையுடைய சிறப்புப்பொருந்திய இவ்வுலகமானது பெருஞ்செல்வத்தைப்பெற்றதென்று ஒப்பற்ற பேரானந்தமடைந்தார்கள்.—எ-று. (எக)

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாமின்
றாடினர் வானி லரம்பைய ரஞ்சலி யெஞ்சாமற்
சூடினர் மண்ணின் மடந்தைய ரெந்தை துணைப்பாதந்
தேடினர் மாலய னன்பர் நடந்தரி சித்தார்கள்.

(இ-ள்.) தும்புருநாரதர் கானம்பாடினார்கள்; ஆகாயத்தில் அரம்பையர்கள் மிகுந்த இசையைப் பாடிக்கொண்டு ஆடினார்கள்; இவ்வுலகத்தில் வாழ்கின்ற மாதர்கள் குறைபாடின்றித் தங்கள் கைகளைச்சிரசின்மேல் குவித்துத் தொழுதார்கள்; திருமாலும் பிரமனும் எமது தந்தையாகிய ஸ்ரீநடராசப்பெருமானது இரண்டு திருவடிகளையும் முன் காணாது தேடினார்கள் இப்பொழுது அடியார்கள் ஆனந்தத்தாண்டவத்தைத் தரிசனஞ்செய்தார்கள்.—எ-று.

மாலயனிருவரும் தற்போலத்தால் அகங்கரித்துத் தேடினமையின் அவர்களுக்கு அரியராயினரென்பார் 'தேடினர் மாலயன்' என்றும், அடியார்கள் தற்போதமொழிந்து சிவபோதத்தால் தரிசிக்கவிரும்பினமையின் அவ்வாறே தரிசிக்கப்பெற்றனரென்பார் 'அன்பர்நடந்தரிசித்தார்கள்' என்றுங் கூறினார், இதனை "அரியயனுக் கரியானை யடியவருக் கெளியானை" என்னுந் திருநாவுக்கரசுசுவாமிகள்புராணத்தா னுணர்க. (உஎ)

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வங்கிய காள மிடக்கை கடக்கை மணிக்காளம்
பொங்கிய பம்பை வலம்புரி கண்டை முதற்பொற்பார்
மங்கல தூரிய மெங்கு முழங்கி வனப்பெய்த.

(இ-ள்.) சங்குகள் - பேரிகைகள் - சப்திக்கின்ற இசையினையுடைய வீணைகள் - ஒப்பற்ற கைத்தாளங்கள் - வேய்ங்குழல்கள் - எக்காளங்கள் - உடுக்கைகள் - தக்கைகள் - அழகிய திருச்சின்னங்கள் - ஒலிக்காநின்ற பம்பைகள் - வலம்புரிச்சங்கங்கள் - கைம்மணிகள் இவைமுதலாகிய அழகுநிறைந்த மங்கலவாத்தியங்கள் எவ்விடங்களிலும் சப்தித்துச் சிறப்படையவும்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (எங)

வேதியர் வேள்வி நெடும்புகை யாலய மெங்கெங்குங்
காதிய குங்குலி யப்புகை நீடு கருப்பாலைச்
சோதி நெடும்புகை தோரண வீதி தொறுந்தோறு
மாதர் புகைக்கு மகிற்புகை யெங்கும் வனப்பெய்த.

(இ-ள்.) பிராமணர்கள் செய்யும் யாகத்திலுண்டாகின்ற மிகுந்த புகையும், தேவாலயங்கள் தோறும் அடியார்கள் பொடிசெய்து இடுகின்ற குங்கிலியப்புகையும், மிகுந்த கரும்பாலைகளில் (சாற்றைக்காய்ச்சுகின்ற) ஒளிமிகுந்தபுகையும், பலவகைத் தோரணங்கள் கட்டியிருக்கின்ற திருவீதிகள்தோறும் மாதர்கள் (தங்கள் கூந்தலுக்கு) ஊட்டுகின்ற அகிற்கட்டையின் புகையும் எவ்விடங்களிலும் பரிமளிக்கவும்.—எ-று. (எச)

ஆடக நாடக சாலைகண் முத்தணி யத்தாணி
மேடை யரங்கு களங்க மிலாத வெளிக்கூட

மாடம திட்கன மாளிகை சூளிகை யெங்கெங்குந்
தோடவிழ் மாலைகள் பொன்னரி மாலைகள் சூழ்வித்தார்.

(இ-ள்.) பொன்னாலாகிய நாடகசாலைகளிலும், முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட பெரியமண்டபங்களிலும், மேடைகளிலும், சபைகளிலும், குற்றமில்லாத நிலாமுற்றங்களிலும், வீடுகளிலும், மதில்களையுடைய பெரிய மாளிகைகளிலும், அவற்றின் சிகரங்களிலும் இவைமுதலாகிய எவ்வெவ்விடங்களிலும் இதழ்களுடன் மலர்ந்த மலர்மாலைகளையும், பொன்னரிமாலைகளையும் சூழக்கட்டி அலங்கரித்தார்கள்—எ-று. (எரு)

பழுதக லத்திரு வலகு விருப்பொடு பணிமாறிக்
குழைவு பெறத்திகழ் கோமய நீர்குளி ரச்செய்து
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சார்வித்
தழகு பெறத்திரு வீதி புதுக்கிய தன்பின்பு.

(இ-ள்.) குற்றம்நீங்க விருப்பத்துடனே திருவலகிட்டுக் குழம்பாகவிளங்குகின்ற கோமயங்கரைத்த நீரைத்தெளித்துக்குளிரச்செய்து, தழைகள் நெருங்கிய மலர்த்தோரணங்களும், கொடிகளும், மேல்விதானங்களும் அமைத்து, அழகு பொருந்தத் திருவீதிகளை அலங்காரஞ்செய்து அதன்பின்பு.—எ-று.

இதுமுதல் நான்குபாடலுங் குளகம். (எசு)

### வேறு.

திருநெ றித்தமிழ் வல்ல பேர்கள் சிவாக மங்கள் படித்தபேர்
கருநெ றிப்பகை ஞான நூல்பல கற்ற பேர்மறை கற்றபேர்
குருநெ றிக்குரி யோரி லக்கண லக்கி யங்கள்கு றித்தபேர்
பெருநெ றிப்பல காவி யங்கதை பேச வல்லவ ரனைவரும்.

(இ-ள்.) திருநெறித்தமிழ் வேதமாகிய தேவாரத்திருமுறைகளில் வல்லவர்களும், சிவாகமங்களை ஓதியுணர்ந்தவர்களும், ஜனனவழிக்குப் பகையாகிய பல ஞானசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவர்களும், வேதங்களை ஓதியுணர்ந்த பண்டிதர்களும், ஆசாரிய மார்க்கத்தில் நிற்பவர்களும், இலக்கண இலக்கியங்களைக் கற்றபுலவர்களும், பெரிய நன்னெறியையுடைய பலகாப்பியங்களையும் புராணங்களையும் எடுத்துப்பிரசங்கிக்க வல்லபுராணிகர்களும் ஆகிய இவர்களனைவரும்.—எ-று. ()

### வேறு.

வள்ளலார் திருநடனஞ்செய் மன்றின் முன்றின்
மறையவர்கோ மயசலத்தான் மெழுகித் தாபித்
தெள்ளரும்வெண் சுதையொழுக்கி யறுகாற் பீட
மிட்டதன்மேற் பசும்பட்டு விரித்து மீதே
வெள்ளைமடித் திட்டுமதுமலருந் தூவி
விரை நறுந்தூ பங்கொடுத்தா தனங்கற் பித்துத்
தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த
திருமுறையை யதன்மேல்வைத் திறைஞ்சிப் போற்றி.

(இ-ள்.) ஸ்ரீநடராசப்பெருமான் ஆனந்தத் தாண்டவஞ்செய்தருளுகின்ற சிற்சபைக்குமுன்னே தில்லைவாழந்தணர்கள் கோமயங்கலந்த நீரால் மெழுகி, அழகான கோலமிட்டு, அறுகாற்பீடமமைத்து, அப்பீடத்தின்மேல் பசும் பட்டை விரித்து, அதன்மீது வெண்பட்டை மடித்து வைத்து, தேன் நிறைந்த புஷ்பங்களையும் பரப்பி இவ்வாறாக ஆசன மேற்படுத்தித் தெள்ளியதமிழிற்சிறந்த ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டர்புராணத்திருமுறையை அதன்மேல் வைத்து வாசனை பொருந்திய நல்ல தூபதீபங்கொடுத்து வணங்கித் துதித்து.—எ-று. (எஅ)

வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே
வாசித்துப் பொருளருளிச் செய்வீ ரென்று
சோழர்பெரு மான்முதலா மடிய ரெல்லாஞ்
சொலக்கேட்டுக் குன்றைமுனி மன்று ளாடுந்
தாழ்சடையா னடியெடுத்துத் தரத்தாஞ் செய்த
சைவகதை யினைவிளங்க விரித்துச் சொல்லச்
சூழவிருந் தம்பலவ ரடியா ரெல்லாஞ்
சுருதிமொழி யிதுவெனக்கை தொழுது கேட்டார்.

(இ-ள்.) திருத்தொண்டர் புராணமாகிய இந்த மகாகாவியத்தைத் தேவரீரே வாசித்து அதன் பொருளை அருளிச்செய்வீராக வென்று, அநபாய சோழமகாராஜா முதலாகிய அடியவர்களெல்லாம் பிரார்த்திக்க, அதை ஸ்ரீசேக்கிழார் சுவாமிகள் அங்கீகரித்துத் திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் தாழ்ந்த சடையையுடைய ஸ்ரீநடராசப்பெருமான் முதலடி யெடுத்துக்கொடுக்கத் தாம் செய்தருளிய திருத்தொண்டர்புராணத்தை யாவருக்குந் தெரியும்படி விரிவாகப் பொருளருளிச்செய்ய,சிவனடியார்கள் யாவரும் சூழ்ந்திருந்து இதுவே வேதவாக்கியமென்று தமது கைகளை அஞ்சலியாகக் குவித்துச் சிரவணஞ்செய்தார்கள்.—எ-று.

வாழி=அசைநிலை. (எகூ)

தாளுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியுந்
தன்மையர னுக்கிசைந்த பேர்வழியி னாளும்
ஆளுடைய பிள்ளையா ரவதரித்த நாளு
மவராழுது திருஞான மமுதுசெய்த நாளுஞ்
சூளுடையா திரைநாளாஞ் சித்திரையா திரைநா
டொடங்கியெதி ராமாண்டு சித்திரையா திரையி
னாளுடைய கதைமுடிப்ப மெனக்குன்றை வேந்தர்
நடத்தவனை வருமிருந்து கேட்டனர்நா டோறும்.

(இ-ள்.) திருவடிகளிற் பொருந்திய சிலம்பானது சப்திக்கத் திருநடனஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானது திருநாமத்துக்குரிய திருநக்ஷத்திரமும், எம்மை யடிமையாகவுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ்செய்த

திருநக்ஷத்திரமும், அவர் (திருத்தோணிச் சிகரத்தைப்பார்த்து அம்மே! அப்பா!! வென்று கூறி) அழுது ஞானப்பால் உண்டருளிய திருநக்ஷத்திரமும், பெருமை பொருந்திய திருவாதிரைநக்ஷத்திரமாம்; ஆதலால், நிகழும் சித்திரைமாதம் திருவாதிரை நக்ஷத்திரந்தொடங்கி,மறுவருஷம் சித்திரைமாதம்திருவாதிரைநக்ஷத்திரத்தில் இப்புராணத்தைப் பூர்த்திசெய்வோமென்று ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் நிலைபெற்ற புராணத்தை அரங்கேற்றல் செய்ய, அடியவர்கள் யாவரும் மிகுந்த அன்புடனிருந்துநாள்தோறுங் கேட்டுக்கொண்டுவந்தனர்.—எ-று. (அ0)

சிறப்புடைய மூவர்முத லிகடிருவாய் மலர்ந்த
திருநெறிய தமிழ்மூலர் திருமந்திர மாலை
யறப்பயனுங் காரைக்காற் பேயிரட்டை மாலை
யந்தாதி மூத்தபதி கங்கழறிற் றறிவார்
மறப்பரிய பொன்வண்ணத் தந்தாதி திருமும்
மணிக்கோவை தெய்வவுலா வையடிகள் வெண்பா
வுறுப்பாகத் திருவிருத்த முடலாகப் பொருட்கோ
ளுயிராக நாலடியா னடந்தநூல கெல்லாம்.

(இ-ள்.) புகழை யுடைய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் முதலிய மூன்று சமயாசாரியர்கள் திருவாய்மலர்ந்தருளிய திருநெறித் தமிழ்வேதமாகிய திருமுறைகளும், திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரமாலையும், தருமப் பயனாகிய காரைக்காலம்மையார் அருளிச்செய்த திருவிரட்டைமணிமாலை, அற்புதத்திருவந்தாதி, இரண்டு மூத்ததிருப்பதிகங்களும், சேரமான்பெருமாணயனார் அருளிச்செய்த சிந்திக்கத்தக்க பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, ஆதியுலா இவைகளும், ஐயடிகள்காடவர்கோனயனார் திருவாய்மலர்ந்தருளிய க்ஷேத்திரக்கோவைத் திருவெண்பாக்களுமாகிய இவைகள் அவயவங்களாகவும், புராணத்திருவிருத்தங்கள் சரீரமாகவும், அவற்றின் பொருள்கோள் உயிராகவும், நான்கு அடிகளால் உலகெலாமென்னும்முதலடியை யுடைய இத்திருத்தொண்டர்புராணம்நடந்தது.—எ-று. (அக)

அன்றுமுத லுநாடோறு நாடோறு மண்ண
லடியரள விறந்தபெயர் வந்தவர்க ளெல்லாஞ்
சென்றுறையத் திருமடங்க டிருமடங்க டோறுந்
திருவிளக்கங் கவர்சாத்த வுள்ளுடைமேற் போர்வை
துன்றியசெந் நெலினடிசில் கன்னனறுங் கனிக
ளேவறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பாறே
னன்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுத மடைக்காய்
நரபதியே வினமைச்சர் நாடோறு நடத்த.

(இ-ள்.) அன்றுமுதலாக நாள்தோறும் நாள்தோறும் திருத்தொண்டர் புராணத்தைக் கேட்கும்படி வந்த சிவனடியார்களெல்லாம் சென்று வசிப்பதற்

குத் திருமடங்களும், அம்மடங்கள்தோறும் திருவிளக்குகளும், அவர்கள் தரித்துக்கொள்ள உள்ளுடைகளும், போர்த்துக்கொள்ள மேற்போர்வைகளும், பொருந்தியசம்பாநெல்லரிசிச்சாதங்களும், கற்கண்டும், இனிய பழவர்க்கங்களும், பரிசுத்தமாகிய அறுசுவையோடு கூடிய பதார்த்தங்களும், நெய் - கட்டித்தயிர் - திரட்டுப்பால் - தேன் - நல்ல பணியாரவர்க்கங்களும், தண்ணீரமுதும், தாம்பூல முதலியவைகளுமாகிய இவைகளையெல்லாம் அநபாயசோழமகாராஜாவினுடைய உத்தரவினால் மந்திரிகள் தினந்தோறும் நடத்திக்கொண்டுவர.—எ-று.

இதுமுதல் ஆறுபாடலுங் குளகம்.

நலமலியுந் திருத்தில்லை மன்றினினின் றருடு
நடராசற் கன்றுமுதன் மகபூசை நடத்தி
யலகில்புகழ்த் தில்லைவா ழந்தணர்க்கும் வெவ்வே
றமுதுபடி கறியமுது முதலான வெல்லா
நலமலிசெங் கோல்வளவன் றப்பாமே நாளு
நடத்திவர வானடியார் நிறைந்துபதஞ் சலியும்
புலிமுனியுந் தவஞ்செய்த பெரும்பற்றப் புலியூர்
பூலோக சிவலோக மெனப்பொலிந்து தோன்ற.

(இ-ள்.) மேன்மை பொருந்திய செங்கோலையுடைய அநபாயசோழமகாராஜாவானவர் நன்மைமிகுந்த திருத்தில்லையிற் பொருந்திய சிற்சபையில் நின்று ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானுக்கு அன்று முதலாக மகாபூசைகளை நடத்தி, அளவில்லாத புகழையுடைய தில்லைவாழந்தணர்களுக்கும் வெவ்வேறாக அமுதுபடி கறியமுதுமுதலிய பொருள்களையெல்லாம் தவறாமல் நாள்தோறும் நடத்திக்கொண்டுவர, சிவனடியார்கள் நிறைந்து, பதஞ்சலிமுனிவரும் வியாக்கிரபாதமுனிவரும் தவஞ்செய்த பெரும்பற்றப்புலியூ ரென்னும் ஸ்ரீசிதம்பரமானது பூலோக சிவலோகமென்று சொல்லும்படி பிரகாசிக்க.—எ-று.

மருவுதிரு முறைசேர்ப்பா ரெழுதுவா ரிருந்து
வாசிப்பார் பொருளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து
சிரமசைத்துக் கொண்டாடிக் குதுகுலிப்பார் சிரிப்பார்
தேனிப்பார் குன்றைமுனிச் சேக்கிழார் செய்த
வரியதவத் தினைநினைப்பா ரம்பலவர் முன்னா
ளடியெடுத்துக் கொடுக்கவிவர் பாடினரென் றுரைப்பார்
பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப்
பிடிக்குமோ வினிச்சிந்தா மணிப்புரட்டென் றுரைப்பார்.

(இ-ள்.) பொருந்திய திருமுறையெழுதப் புத்தகம் சேர்ப்பவர்களும், எழுதுபவர்களும், பரிசுத்தஸ்தானத்திலிருந்து அத்திருமுறையை வாசிப்பவர்களும், அதற்குப் பொருள்சொல்பவர்களும், அப்பொருளைக்களிப்படைந்து கேட்டுக்கொண்டிருப்பவர்களும்; சிரக்கம்பனஞ்செய்து கொண்டாடி மகிழ்ச்சி யடைபவர்

களும், ஆனந்தத்தினால் கைகொள்பவர்களும், தேனுண்டாற்போல நாவைச்சுவைத்து இனிப்புக்கொள்பவர்களும், குன்றத்தூரில் அவதரித்த தவமுனிவராகிய ஸ்ரீ சேக்கிழார்சுவாமிகள் செய்த அருமையாகிய தவத்தைக்குறித்துப் பெரிதாக நினைப்பவர்களும், ஸ்ரீநடராசப்பெருமான் முன்னாள் முதலடியெடுத்துக் கொடுக்க இவர் பாடி முடித்தனரென்று புகழ்பவர்களும், இந்தப் பெரிய புராணத்தைக் கேட்ட அநபாயசோழமகாராஜாவினுடைய செவிக்கு இனி சிந்தாமணியாகிய பொய்க்கதை ஏற்குமோவென்று சொல்பவர்களும்.—எ-று. (அச)

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராண
மிருந்தன்பர் பாராட்ட நடந்தெதிரா மாண்டு
சித்திரையா திரைநாளின் முடியவது கண்டு
திருத்தொண்ட ரரவெனும்பே ரொலியெழுந்து பொங்கக்
கத்துதிரைக் கடலொலியை விழுங்கிமுழங் கோரேழ்
கடலொலியைக் கீழ்ப்படுத்திப் பிரமாண்ட வெளியைப்
பொத்தியிமை யவர்செவியை நிறைத்துயரப் பொங்கிப்
பொன்னுலகுக் கப்பாலும் புகப்பொலிந்த தன்றே.

(இ-ள்.) இத்தன்மையாகிய சிறப்புடனே திருத்தொண்டர்புராணத்தை அன்பர்களிருந்து பாராட்டுதல்செய்ய, அது நடந்து, மறுவருஷம் சித்திரைமாதம் திருவாதிரை நக்ஷத்திரத்தில் நிறைவேற, அதனையறிந்து திருதொண்டர்கள் துதிக்கும் அரகரவென்னும் பேரோசையானது அதிகரித்தெழுந்து, சப்திக்கின்ற அலைகளையுடைய பெரும்புறக்கடலின் ஓசையையடக்கி ஒலிக்காநின்ற சப்தசமுத்திரங்களின் ஓசையையுமடக்கிப் பிரமாண்டவெளியை மூடித் தேவர்களது செவியை நிறைத்து மேலெழுந்தோங்கித் தேவலோகத்திற்கு அப்பாலுஞ்சென்றாருவிப் பொலிந்தது.—எ-று. (அரு)

திருத்தொண்டர் புராணமெழு தியமுறையை மறையோர்
சிவமூல மந்திரத்தா லருச்சனைசெய் திறைஞ்சி
யிருக்குமுதன் மறைநான்கி னின்றுமுத லாக
விதுவுமொரு தமிழ்வேத மைந்தாவ தென்று
கருத்திருத்தி யமுதடைக்காய் நறுந்தூப தீபங்
கவரிகுடை கண்ணாடி யாலத்தி நீறு
பரித்தளவு செயக்கண்டு வளவர்பிரான் முறையைப்
பசும்பட்டி னாற்சூழ்ந்து பொற்கலத்தி லிருத்தி.

(இ-ள்.) திருத்தொண்டர்புராணமெழுதிய திருமுறையைத் தில்லைவாழ்ந்தணர்கள் மூலபஞ்சாக்ஷரத்தால் அருச்சனைசெய்து வணங்கி, இன்றுமுதலாக இருக்கு முதலாகிய நான்குவேதங்களுடன் இதுவும் ஐந்தாவது தமிழ்வேதமென்று கருத்திற்கொண்டு, திருவமுது - தாம்பூலம் - நல்லதூபதீபங்கள் - சாமரை - குடை - கண்ணாடி - ஆலத்தி - திருவெண்ணீறு இவைகளையெல்லாம் எடுத்துக்

கொண்டு உபசாரஞ்செய்ய, அதனைத்தரிசித்துப் பின் அநபாயசோழமகாராஜா வானவர் புராணத்திருமுறையைப் பசும்பட்டினால் சூழ்வித்துப் பொற்றட்டில் வைத்து.

செறிமதயா னைச்சிரத்திற் பொற்கலத்தோ டெடுத்துத்
திருமுறையை யிருத்தியபின் சேவையர்கா வலரை
முறைமைபெற வேற்றியர சனுங்கூட வேறி
முறைமையினு லிணைக்கவரி துணைக்கரத்தால் வீச
மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி
மழைபொழியத் திருவீதி வலமாக வரும்போ
திறைவர்திரு வருளினைநி னைந் தடலரசர் கோமா
னிதுவன்றோ நான்செய்த தவப்பயனென் றிசைத்தான்.

(இ-ள்.) மதம்பொருந்திய பட்டத்துயானையின் பிடரியில் பொற்றட்டுடன் எடுத்துப்புராணத்திருமுறையைவைத்தபின்பு முறையாகஸ்ரீசேக்கிழார்சுவாமிகளை அந்த யானையின்மேல் எழுந்தருளச் செய்து தாமும் கூட அதில் ஏறி,முறைமைப்படி தமது இரண்டுகைகளாலும் இரண்டு சாமரைகளைவீச, இருபுறத்திலும்வேதங்கள் முழங்கவும், தேவர்கள் கற்பகமலர்களைப் பெரிய மழைபோலப் பொழியவும், திருவீதியை வலமாக வரும்போது, ஸ்ரீநடராசப்பெருமானுடைய திருவருளை நினைந்து, வலிபொருந்திய அரசர்பெருமானாகிய அநபாயசோழமகாராஜா அடியேன் செய்த தவப்பயன் இதுவல்லவோ வென்று ஆனந்தித்துச் சொல்லினர்.—எ-று.()

வாரணத்தி லிவரைவரக் கண்டதிரு வீதி
மறுகுதொறுந் தூய்மைசெய்து வாழைகளு நாட்டி
பூரணகும் பமுமமைத்துப் பொரியுமிகத் தூவிப்
பொன்னரிமா லையுநறும்பூ மாலைகளுந் தூக்கித்
தோரணங்க ணிரைத்துவிரை நறுந்தூப மேந்திச்
சுடர்விளக்கு மேற்றியணி மணிவிளக்கு மேந்தி
யாரணங்கள் விரித்தோதி மாமறையோ ரெதிர்கொண்
டறுகெடுப்ப வாழ்த்தெடுத்தா ரம்பையர்க ளெல்லாம்.

(இ-ள்.) ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் சோழமகாராஜாவோடு பட்டத்துயானையின்மேல் பவனிவரக்கண்ட திருவீதிகள்தோறும் (திருவலகிட்டுச்)சுத்தஞ்செய்து, வாழைமரங்களை நாட்டி, பூரண கும்பங்களை வைத்து, பொரிகளை அதிகமாகத்தூவி, பொன்னரிமாலைகளையும்,மணம் பொருந்திய புஷ்பமாலைகளையுந்தொங்கவிட்டு, தோரணங்களை வரிசையாகக்கட்டி,வாசனைவீசுகின்ற நல்லதூபமெடுத்து,விளங்குகின்ற தீபங்களேற்றி, அழகிய மாணிக்கதீபங்களும் வைத்து, வேதங்களை விரிவாக ஓதி மகத்தாகிய பிராமணர்கள் எதிர்கொண்டுவந்து அறுகினால் ஆலாத்திசெய்ய அரமாதர்கள் மங்களம் பாடினார்கள்.—எ-று. (அஅ)

வேறு.

காவல னரிவர் தவரிவர் காவலர் கவரி யிடத்தகு மோவென்பார்
சேவையர் காவல னார்சிவ மான சிறப்பிது நல்ல சிறப்பென்பார்
தேவரு மெழுத வொணுமறை யைத்தமிழ் செய்து திருப்பதி கம்பாடு
மூவரு மொருமுத லாயுல கத்து முளைத்த முதற்பொரு ளாமென்பார்.

(இ-ள்.) இவர் அரசர், இவர்தவசி; இவ்வரசராயுள்ளவர் (இச்சேக்கிழார் முனிவருக்குச்) சாமரைபோடத்தகுமோவென்று சிலர் சொல்லுவார்கள்; ஸ்ரீசேக்கிழார் பெருமான் சிவவேடங்கொண்ட சிறப்பாகிய இது நல்ல சிறப்பாயிருக்கிறதென்று சிலர்சொல்லுவார்கள்; தேவர்களும் எழுதற்கரிய வேதத்தைத் தமிழ்செய்து திருப்பதிகங்களாகப் பாடியருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் முதலிய மூவர்களும் ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளென ஒரு மூர்த்தியாய் இவ்வுலகத்தில் அவதரித்தருளிய முதன்மையானபொருளே யென்று சிலர் சொல்லுவார்கள்.—எ-று. ()

மின்மழை பெய்தது மேக வொழுங்குகள் விண்ணவர் கற்பக விரைசேர்பூ
நன்மழை பெய்தனர் சேவையர் காவலர் நாவல ரின்புற நாவாரச்
சொன்மழைபெய்தன ரிரவலர் மிடிகெட வள்ளி முகந்தெதிர்சோளேசன்
பொன்மழை பெய்தன னுருகிய நெஞ்சொடு கண்மழை யன்பர் பொழிந்
[தார்கள்.

(இ-ள்.) மேகவரிசைகள் மின்னலுடனே மழைபெய்தன; தேவர்கள் கற்பகவிருக்ஷத்தின் வாசனைபொருந்திய புட்பமாரிபெய்தனர்; ஸ்ரீ சேக்கிழார்சுவாமிகள்பேரில் நாவலர்கள் இன்பத்துடன் தங்கள்வாக்கினல் பாடலாகியமழைபெய்தனர்; சோழமகாராஜாவானவர் யாசகரது வறுமையானகோடை நீங்கும்படி அள்ளியள்ளியெடுத்துப் பொன்மழைபெய்தனர்;அடியார்கள் உருகியமனமுடன் ஆநந்தக்கண்ணீர் மழைபெய்தனர்.—எ-று. (௬௦)

மதுரவி ராமா யணகதை யுரைசெய்த வான்மிக பகவனு மொப்பல்ல
விதிவழி பாரத முரைசெய்து கரைசெய்த வேதவி யாதனு மொப்பல்ல
சிதைவற வாயிர நாவுட னறிவுள சேடவி சேடனு மொப்பல்ல [ன்பார்.
பொதிய மலைக்குறு முனிவனு மொப்பல புகழ்புனை குன்றை முனிக்கெ

(இ-ள்) கீர்த்தியாகிய மாலையைத்தரித்த ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுக்கு மதுரம்பொருந்திய இராமாயண காவியத்தைச்செய்த வான்மீகமுனிவரும் ஒப்பல்லர்; முறைமைப்படியே பாரதத்தைக் காவியமாகச்செய்து முடித்த வேதவியாசமுனிவரும் ஒப்பல்லர்; பழுதற்ற ஆயிரம் நாவோடு பேரறிவினையுமுடைய சிறந்த ஆதிசேடனும் ஒப்பல்லன்; பொதியமலையில் வீற்றிருந்தருளும் அகஸ்தியமுனிவரும் ஒப்பல்லர் என்று சொல்லுவார்கள்.—எ-று.

அற்றவென்பது அற எனத்தொகுத்தல் விகாரம் பெற்றது. (௬௧)

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட வெண்ணீ றெழுதிய கண்ணோநுங்
கையுந் திகழ்மணி கண்டமு மொளிதரு கவளிகை யும்புத் தகவேடு
நையுந் திருவுள மழியுந் தொறுமர கரவெனு நாமமு நாமெல்லா
முய்யும் படியருள் கருணையு மழகிதெ னத்தொழு தனருல கவரெல்லாம்.

(இ-ள்.) ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுடைய திருமேனியிலுள்ள சிவசின்னங்களும், யாவர்க்குந்தெரியும்படி திருவெண்ணீறுதரித்திருக்கும் காட்சியும், அஞ்சலி யஸ்தமும், விளங்குகின்ற உருத்திராக்ஷமணிக்தகண்டமும், ஒளிவீசுகின்ற புத்தகக்கவளிகையும், புத்தக ஏடும், கனிந்த திருவுள்ளமானது அன்பால் உருகுந்தோறும் அரகரவென்னும் சிவநாமமும், நாமெல்லாம் பிறவித்துன்பத்தினின்றும் பிழைக்கும்படி அருள்புரியுங் கிருபாநோக்கமும், அழகுள்ளனவென்று சொல்லி உலகத்திலுள்ளவர்களெல்லாம் தொழுதார்கள்.—எ-று. (௬௨)

பூவை மறந்தனள் வெண்டா மரைமயில் புகல்தரு சங்கப் புலவோர்சொற்
பாவை மறந்தனள் தேசசு பாடித பயனே மறந்தனள் பதுமத்தோ
னாவைமறந்தனள் பொதியமலைத்தலை நண்ணிய புண்ணியமுனிவனெனுங்
கோவை மறந்தனள் சேவையர் காவல னார்திரு நாவிற் குடிகொண்டாள்.

(இ-ள்.) சரஸ்வதிதேவியானவள் தனக்கிருப்பிடமாகிய வெண்டாமரைமலரை மறந்தனள்; புகழும்படியான சங்கப்புலவர்களுடைய செஞ்சொற்களமைந்த காவியங்களை மறந்தனள்; தேசத்திலுள்ளோரிடத்து நிகழும் இனியசொற்றிரளின்பயனை மறந்தனள்; பிரமதேவனுடைய நாவைமறந்தனள்; பொதியமலையில் வீற்றிருந்தருளும் புண்ணியத்தையுடைய தமிழாசிரியராகிய அகஸ்தியமுனிவரை மறந்தனள்; ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுடைய திருநாவினிடத்து வந்து குடிகொண்டிருந்தனள்.—எ-று. (௬௩)

இப்படி யிப்படி தன்னில் விதிப்படி யிப்பரு மும்பரு மேனோரு
மப்படி சூழ வரத்திரு வீதிவ ஞெ்செய் தணைந்தம் பலமுன்றிற்
றப்புற யானையி னின்று மிழிந்தர சனுமுறை செறிசே வையர்கோவு
முப்புரி நூன்மறை யோரொ டணைந்தெழு தியமுறை யைத்திரு முன்
[வைத்தார்.

(இ-ள்.) இவ்வாறு இவ்வுலகத்தின்கண் முறைமையாக மனிதர்களும், தேவர்களும், மற்றையர்களும் அத்தன்மையாகச் சொல்லித்துதித்துச் சூழ்ந்துவரத் திருவீதியை வலஞ்செய்து, சிற்சபையின் திருவாசலின்கண் வந்து, அநபாயசோழமகாராஜாவும் புகழையுடைய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளும் நன்மையாக யானையினின்றும் இறங்கி, முப்புரிநூலையணிந்த தில்லைவாழந்தணர்களோடு உள்ளேசென்று, எழுதிய திருத்தொண்டர்புராணத் திருமுறையை ஸ்ரீநடராசப் பெருமானுடைய சந்நிதியின்முன்னேவைத்தனர்.—எ-று. (௬௪)

வேறு.

அண்ட வாணரெதிர் தெண்ட னுகவனை வரும்வி ழுந்துபி னெழுந்துசேர்
கொண்ட சேவைகுல திலக ருக்கனைவ ருங்கு ரித்தெதிர்கொ டுத்தபேர்
தொண்டர் சீர்பரவு வாரெ னப்பெயர் சுமத்தி ஞானமுடி சூட்டிமுன்
மண்ட பத்தினி லிருத்தி மற்றவரை வளவர் பூபதி வணங்கினுன்.

(இ-ள்.) அவ்வாறுவைத்தபின்பு ஸ்ரீநடராசப்பெருமானது சந்நிதியில் யாவ ரும் அஷ்டாங்கபஞ்சாங்கமாக வணங்கி எழுந்து,சிறப்புப்பொருந்திய ஸ்ரீசேக்கிழார் சுவாமிகளுக்கு யாவருங் கூடிக்கொடுத்த பேராகத் தொண்டர்சீர்பரவுவாரெனத் திருப்பெயர்கொடுத்து, ஞானமாகிய மகுடாபிஷேகஞ்சூட்டி, முன்னே அவரை மண்டபத்தில் எழுந்[illegible]க்கச்செய்து அநபாயசோழமகாராஜா சேவித்துக் கொண்டனர்.—எ-று. (௬௫)

மூவ ரோதுதிரு முறைக ளேழுதிரு வாத வூரர்முறை யொன்றிசைப்
பாவ லோர்தமுறை யொன்று மூலர்முறை யொன்று பாசுரம தாதியாக்
கோவைசெய்தமுறையொன்றுசேவையர்குலாதிநீதிமுறையொன்றுடன்
பாவை பாகர்திரு வருள்சி றந்தமுறை பன்னிரண்டென வகுத்தபின்.

(இ ள்.) திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் முதலிய மூவர்கள் அருளிச் செய்த திருமுறைகள் ஏழு. ஸ்ரீமந் மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திரு முறை ஒன்று. திருவிசைப்பா என்னுந்திருமுறை ஒன்று. திருமூலநாயனுர் அரு ளிச்செய்த திருமந்திரமாலையென்னுந் திருமுறைஒன்று.(சோமசுந்தரப்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய) திருமுகப்பாசுரமுதலாகச் சேர்க்கப்பட்டுள்ள பிரபந்தத் திருமுறை ஒன்று. ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டர்புரா ணத்திருமுறை யொன்றுடன் உமாதேவிபாகராகிய சிவபெருமானது திருவருள் நிறைந்திருக்கும் திருமுறைகள் பன்னிரண்டாக வகுத்தபின்பு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை- ௩, திருநாவுக்கரசுசுவாமி கள் திருமுறை - ௩, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுறை - க; ஆக எ - ம், ஸ்ரீமந்மாணிக்கவாசகசுவாமிகள் திருவாசகம் திருச்சிற்றம்பலக்கோவையார் சேர் ந்த திருமுறை-க - ம், திருமாளிகைத்தேவர் - சேந்தனுர் - கருவூர்த்தேவர் - நம்பி காடவர்கோன் - கண்டராதித்தர் - வேணாட்டடிகள் - திருவாலியமுதனுர் - புரு டோத்தமநம்பி-சேதிராயர் என்னும் ஒன்பதின்மரும் அருளிச்செய்த திருவிசைப் பா திருப்பல்லாண்டு திருப்பதிகங்கள் இருபத்தொன்பதும் சேர்ந்த திருமுறை க - ம்,திருமூலநாயனுர் ஆண்டுக்கொருதிருமந்திரமாக அருளிச்செய்த மூவாயிரம் திரு மந்திரத்திருமுறை-க-ம், திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோனுயனுர், சேரமான்பெருமாணுயனுர்,நக்கீரதேவர்,கல்லாடதேவர்,கபி லதேவர், பரணதேவர், இளம்பெருமானடிகள்,அதிராவடிகள், பட்டணத்துப்பிள் ளையார், நம்பியாண்டார்நம்பி என்னும் இப்பன்னிருவரும் அருளிச்செய்த நாற்ப துபிரபந்தங்கள் சேர்ந்த திருமுறை க - ம் ஆகிய திருமுறைகள் பதினொன்றுடன் திருத்தொண்டர் புராணமென்னும் பெரியபுராணம் ஒன்றும் சேர்த்துப்பன்னிர ண்டு திருமுறையாக வகுத்தனரெனவறிக. (௬௬)

தோடு செய்ததிரு நெறிய செந்தமிழ்ழொ டொக்கு மென்றுரை தொடர்ந்து
பேடு செய்துநட ராசர் சந்நிதியி லேற்றி னர்களிது பாவிசூழ் [செப்
நாடு செய்ததவ நீடு குன்றைவள நகரி செய்ததவ நிகரிலாப்
பீடு செய்தபகி ரதிகு லத்திலகர் சேக்கி ழார்செய்த பெருந்தவம்.

(இ-ள்.) "தோடுடைய செவியன்" என்று திருஞானசம்பந்தப் பிள்ளையார் முதற்றிருப்பாசுரமெடுத்தோதியருளிய செவ்வியதிருநெறித்தமிழ்வேதமாகிய தேவாரத்தோடு இதுவும் ஒப்பாகுமென்று, உலகெலாம் என்பது தொடங்கிச் செப்பேட்டிலெழுதி ஸ்ரீநடராசப்பெருமானுடைய சந்நிதியில் வைத்தார்கள்; இவ்வாறு செய்தது பாலாறுசூழ்ந்த தொண்டைநாடு செய்ததவம், மிகுந்த வளப்பம் பொருந்திய குன்றத்தூர் என்னும் நகரம் செய்ததவம், ஒப்பற்ற புகழையுடைய கங்கைகுலதிலகராகிய ஸ்ரீசேக்கிழார் மரபினர்செய்த பெரிய தவமாம்.—எ-று. ()

ஆய வேலையக பாய னிங்கிலைமை யாத லாலநுசர் பாலறு
வாய ரெங்குளரெ னப்ப ணிந்திரும ருங்கு நின்றவர்வி ளம்புவார்
தூய குன்றைநகர் மீது தம்பெயர்து லங்க வோர்குளம மைத்தபி
னேய நாகையரா ஞர்தி ருப்பணியி யற்றி யவ்விடையி ருந்தனர்.

(இ-ள்) அப்பொழுது அநபாயசோழமகாராஜாவானவர்(ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளுடையதன்மை) இவ்வாறுயினமையால் இவர்தம்பியாராகிய பாலறுவாயர் எங்கிருக்கின்றன ரென்றுகேட்க, இருபக்கத்திலுமிருந்தவர்கள் அவரை வணங்கிச் சொல்லுவார்கள், மேன்மைபொருந்திய குன்றத்தூரில் தம்முடைய பெயர்விளங்கும்படி (பாலறுவாயன்கேணி) என்று ஒரு தடாகம் அமைத்தபின்பு,பொருந்திய திருநாகேச்சுரரது ஆலயத்திருப்பணி செய்துகொண்டு அவ்விடத்திலிருக்கின்றனர்—எ - று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௯௮)

என்று சொல்லவவர் தமைய ழைத்தரச னிவரு மைச்சரிவர் பட்டமு
மன்றன் மாலைபுனை தொண்டை மானெனவ குத்த பின்றமது மண்டல
மன்றுவற்பம்வர வந்தடைந்தவரை யாற்றல் செய்துதொண்டை மண்டல
நின்று காத்தபெரு மானெ னத்தமது பெயரை யெங்கணு நிறுத்தினர்.

(இ-ள்.) என்று சொல்ல, அநபாயசோழமகாராஜா அவரை வரவழைத்து (இதுமுதல்) இவரே மந்திரியாகும்; இவருக்குப் பட்டப்பெயரும் மணம்பொருந்திய மலர்மாலையையணிந்த தொண்டைமானென்று சொல்லி அமைச்சுரிமையைக் கொடுத்த பின்பு, தமது தொண்டைநாட்டில் அக்காலத்துப் பஞ்சமுண்டாக அங்கிருந்துவந்து சேர்ந்தவர்களையெல்லாம் ஆதரவு செய்து (அதனால்) தொண்டைமண்டலங்காத்த பெருமான்என்று தமது பெயரை உலகமுழுதும் நிலைநிறுத்தினர்.

தொண்டர் சீர்பரவு சேக்கி ழார்குரிசி றாய தில்லைநகர் தன்னிலே
பண்டு மூவர்பதி கத்து வந்தவறு பத்து மூவர்கதை தனையுணர்ந்
தண்ட வாணரடி யார்க டம்முட னருந்த வந்தனி லிருந்துபி
னிண்டை வைத்தசடை யம்ப லத்தவரெ டுத்த பாதநிழ லெய்தினர்.

(இ-ள்.) திருத்தொண்டர்கள் சிறப்பைத் துதிசெய்த ஸ்ரீசேக்கிழார் சுவாமிகள் பரிசுத்தம்பொருந்திய தில்லைமாநகரத்திலே வீற்றிருந்து பழமையா

கிய மூவர்களது திருப்பதிகத்திற் சொல்லிய அறுபத்துமூவர்களது திவ்ய சரித்திரத்தைத் தியானஞ்செய்துகொண்டு சிவபெருமானடியார்களுடன் அருமையாகிய தவத்திலிருந்து, பின்பு இண்டைமாலையைத் தரித்த சடைமுடியையுடைய ஸ்ரீநடராசப்பெருமானது குஞ்சிதபாதநிழலையடைந்தார்.—எ-று. (க00)

வாழி தில்லைமணி மன்று ளென்றுநட மாடு மங்கணர் மலர்ப்பதம்
வாழி காழிநகர் வாழ வந்ததிரு நெறிய ராதிபதி வள்ளல்தாள்
வாழி யன்பர்திரு நீறு மிட்டதிரி முண்ட முந்துவய கவசமும்
வாழி குன்றைமுனி சேவை யாதிபதி வாய்ம லர்ந்தருள்பு ராணமே.

(இ-ள்.) திருத்தில்லையின்கண் அழகியதிருச்சிற்றம்பலத்தில் எக்காலத்தும் ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற ஸ்ரீநடராஜப்பெருமானுடைய தாமரை மலர்போன்ற திருவடிகள்வாழ்க ; சீகாழிப்பதியானது சிவாநந்தப் பெருவாழ்வடையும்படி திருவவதாரஞ்செய்தருளிய திருநெறித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் முதலிய சமயாசாரியமூர்த்திகளது திருவடிகள் வாழ்க, சிவனடியார்களுக்குரிய விபூதியும் திரிபுண்டரமும், காவி ருத்திராக்ஷமும்வாழ்க,குன்றத்தூரில் அவதரித்தருளிய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டர் புராணத்திருமுறை வாழ்க.—எ-று. (க0க)

மேதகி லங்குமுகில் குன்றை யாதிபதி தொண்டர் சீர்பரவு சேக்கிழார்
வாச லன்றுமுத லின்று காறுமினி மேலும் வாழையடி வாழையாய்
வீசு தென்றன்மணி மண்ட பத்தரசு வீற்றி ருக்குமுடி மன்னருக்
கீச னன்பர்கள் புராண முஞ்சொலிய மைச்சு மாகிநல மெய்துமால்.

(இ-ள்.) அழகு விளங்குகின்ற (கவிமாரிபொழியும்) மேகமும், குன்றைநகர்த்தலைவருமாகிய அடியார்களது சிறப்பினைத்துதி செய்தருளிய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் மரபானது அந்நாள்தொடங்கி இந்நாள்வரையிலும் இனிமேலும் வாழையடிவாழையாயோங்கத் தென்றற்காற்று வீசுகின்ற இரத்தினமண்டபத்தில் அரசுவீற்றிருக்கின்ற கிரீடமணிந்த சோழராஜர்களுக்குச் சிவனடியார்கள் புராணத்தையுஞ் சொல்லிக்கொண்டு மந்திரிகளுமாகி நன்மைபெற்றிருக்கும்.—எ-று. (க0உ)

அண்ட வாணர்தொழு தில்லை யம்பலவ ரடியெ டுத்துலகெ லாமெனத்
தொண்டர் சீர்பரவு சேக்கி ழான்வரிசை துன்று குன்றைநக ராதியன்
றண்ட காதிபதி திருநெ றித்தலைமை தங்கு செங்கைமுகில் பைங்கழற்
புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை போக்கு வார்பிறவி நீக்குவார்.

(இ-ள்.) தேவர்கள்யாவரும் தொழுகின்ற தில்லைத் திருச்சிற்றம்பலவராகிய ஸ்ரீநடராசப்பெருமான் உலகெலாம் என்று முதலடியெடுத்துக் கொடுத்தவாற்றால் அடியார்களதுசிறப்பினைத்துதிசெய்த ஸ்ரீசேக்கிழார்என்பவரும்சிறப்புப்பொருந்திய குன்றைநகருக்கதிபரும், தண்டகநாட்டுத்தலைவரும் ஆகிய திருநெறித்தலைமை நிலைபெற்றவள்ளன்மை மிக்கமேகத்தையொத்த அருண்மொழித்தேவரது அழகிய திருவடித்தாமரைகளுக்குத் தெண்டனிட்டு இருவினைகளையும் போக்குகின்றவர்களே பிறவித்துன்பத்தையும் நீக்கிக்கொள்பவராவார்—எ-று. (க0ங)

## சிறப்புப்பாயிரம்.

### வேறு.

திருக்கிளருங் கயிலைமலைக் காவல் பூண்ட
செல்வமலி திருநந்தி மரபில் வந்து
கருக்குழியி லெமைவீழா தெடுத்தாட் கொள்ளுங்
கருணைமிகு மெய்கண்ட தேவர் தூய
மருக்கிளர்தாள் பரவுமரு ணந்தி தேவர்
மகிழுமறை ஞானதே வருக்கன் பாகி
யிருக்குமுமா பதிதேவர் சேக்கி ழார்த
மிசைப்புரா ணம்மொழிந்தா ரென்ப மாதோ.

(இ-ள்.) அழகுவிளங்குகின்ற திருக்கயிலாசத்தைக் காவல்செய்யும் அதிகாரச்செல்வநிறைந்த திருநந்திதேவர் மரபில் அவதாரஞ்செய்து பிறவிக்குழியில் வீழாவண்ணம் அடியோங்களை யெடுத்து ஆட்கொள்ளுங் கிருபைமிகுந்த மெய்கண்டசிவாசாரியரது பரிசுத்தம்பொருந்திய மணங்கமழும் திருவடித்தாமரைகளைத் துதிக்கும் அருணந்திசிவாசாரியர் மகிழ்வடைகின்ற மறைஞானசம்பந்த சிவாசாரியரிடத்து அன்புடையராய் வீற்றிருக்கும் உமாபதிசிவாசாரியர் கீர்த்தியையுடைய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகளது புராணத்தைத் (தமிழ்ப்பாக்களால்) செய்தருளினார்.

மரபு என்றது உபதேசபரம்பரையை; அம்மரபாவது, ஸ்ரீ கைலாசகிரியிலே, அருள்வடிவாகிய கல்லாலமரநிழலிலே தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீகண்டபரமசிவனது பேரருள்பெற்றவர் திருநந்திதேவர், அவர்மாணாக்கர் சனற்குமாரமகாமுனிவர், அவர்மாணாக்கர் பரஞ்சோதி மகாமுனிவர், அவர் சிவபெருமானுடைய திருவருளினால் தமிழ்நாட்டிற்கு எழுந்தருளியபோது அவர்பால் சிவஞானோபதேசம்பெற்றவர் சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமமுடைய திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டசிவாசாரியர், அவர் மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மருள் சிரேஷ்டராய்த் திருத்துறையூரில் வீற்றிருந்த சகலாகமபண்டிதர் என்னும் அருணந்திசிவாசாரியர், அவர் மாணாக்கர் ஸ்ரீசிதம்பரத்திலெழுந்தருளியிருந்த மறைஞானசம்பந்த சிவாசாரியர், அவர் மாணாக்கர் தில்லைவாழந்தணர்களிலொருவராய் அத்தில்லையைச்சார்ந்த கொற்றவன்குடியில் எழுந்தருளியிருந்த உமாபதி சிவாசாரியர், அவர் ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் புராணத்தை அருளிச்செய்ததுடன் திருமுறைகண்டபுராணம் - திருத்தொண்டர்புராணசாரம் திருப்பதிக்கோவை - திருப்பதிகக்கோவைமுதலிய பிரபந்தங்களையும், சிவப்பிரகாசமுதலியஎட்டுச்சைவசித்தாந்தசாத்திரங்களையும்அருளிச்செய்தனர் எனவறிக.

திருத்தொண்டர்புராண வரலாறு

என்னும்

ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் புராணம்

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

ஆ திருவிருத்தம் -க0௪.

ஸ்ரீசேக்கிழார் பெருமான் றிருவடிவாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமுறைகண்ட புராணம்.

## விநாயகர் துதி.

கருமுறை விண்டடி யவருய்யு மாறருள் கவுணியர் குலதீபந்
தருமிறை நாவுக் கரசரா ரூரர் தாஞ்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச் சிந்துர முகனற்றாள்
ஒருமுறை யிருமுறை மும்முறை வாழ்த்தி யுவந்தன் பொடுபணிவாம்.

(இ-ள்.) ஒன்றன்பின் ஒன்றாக வருகின்ற பிறவித்தொடக்கு நீங்கி அடியவர்கள் ஈடேறும் நெறியை யருளாநின்ற கவுணியகுலத்தில் தீபம்போல அவதரித்தருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும், திருநாவுக்கரசுசுவாமிகளும், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் சேமித்துவைத்த அந்தத் திருமுறைகளைக் கண்ட புராணத்தைச் சொல்வதற்கு, யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளது நல்ல திருவடிகளை ஒருகாலும் இருகாலும் முக்காலுந் துதித்துமகிழ்ந்து மெய்யன்போடு வணங்குவாம்.—எ-று. (க)

### வேறு.

உலக மகிழ் தருசைய மீது தோன்றி
யோவாது வருபொன்னி சூழ்சோ ணாட்டின்
றிலகமென விளங்குமணி மாட வாரூர்த்
தியாகேசர் பதம்பணிந்து செங்கோ லோச்சி
யலகில்புகழ் பெறுராச ராச மன்ன
னபயகுல சேகரன்பா லெய்து மன்பர்
இலகுமொரு மூவரருள் பதிக மொன்றொன்
றேயினிதி னுரைசெய்ய வன்பாற் கேட்டு.

(இ-ள்.) உலகத்தார் மகிழ்ச்சியடைகின்ற சையமலையில் உதித்து, இடைவிடாது நீர் பெருகிவருகின்ற காவிரிநதி சூழ்ந்த சோழவளநாட்டிற்குத் திலகம் போலவிளங்காநின்ற பலமணிகளழுத்திய மாளிகைகளையுடைய திருவாரூரின்கண் தியாகராசப்பெருமானுடைய திருவடிகளைப்பணிந்து (உலகமுழுதும்) செங்கோல் செலுத்தி அளவில்லாத புகழைப்பெற்ற ராஜராஜ மன்னவனென்னும் அபயகுலசேகரசோழமகாராஜாவினிடத்தில் வருகின்ற சிவனடியார்கள் தெய்வீகம் விளங்கிய ஒப்பற்ற மூவர்களும் அருளிய திருப்பதிகங்களில் ஒவ்வொன்றையே இனிதாக ஓதுதலும் அவற்றை மெய்யன்போடு கேள்வியுற்று.—எ-று.

இதுமுதல் நான்குபாடலுங் குளகம். (உ)



(గు. జె. వేంగళప్పరాయరాజు వారికింది)

கையிரண்டு முச்சிமே லேறக் கண்ணீர்
  கரைந்தோட மெய்ம்முழுதும் புளகம் போர்ப்ப
வையன்மலர்ப் பதமுளத்தே கொண்டு போற்றி
  யரியமுறை தேடவெங்கு மிலாமை யாலே
நையுமனத் தினனாகி யிருங்குங் காலை
  நாரையூ ரினிலாதி சைவ மறையோன்பால்
வையமெலா மீடேறச் சைவம் வாழ
  மாமணிபோ லொருசிறுவன் வந்து தோன்றி.

(இ-ள்.) தமது இரண்டு கைகளும் உச்சிமேலேறவும், ஆனந்தக்கண்ணீர் அதிகரித்துப்பெருகவும், தேகமுழுதும் புளகாங்கிதங்கொள்ளவும், சிவபெருமானுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளை உள்ளத்தில் சிந்தித்துத்துதித்துப் பெறுதற்கருமையாகிய திருமுறைகளை உலகமுழுதும் தேடிப்பார்க்க எங்கும் அகப்படாமையால், வருந்திய மனமுடையவராயிருக்குங்காலத்தில் திருநாரையூர் என்னுந் திருப்பதியின்கண் ஒரு ஆதிசைவப்பிராமணரிடத்தில் உலகத்தாரெல்லாங் கடைத்தேறவும், சைவசமயந்தழைத்தோங்கவும் சிறந்த மாணிக்கம்போல ஒருசற்புத்திரர் அவதரித்து.—எ-று. (௩)

வளமொடுப நயனவிதிச் சடங்கும் பூண்டு
  மறைமுதலாங் கலைபயின்று வருநா ளீன்ற
கிளர்மறையோ னோரூர்க்குச் செல்ல மைந்தன்
  கேடில்பிதா வுரைத்தமொழிப் படியே யந்தி
யிளமதிச்செஞ் சடைப்பொல்லாப் பிள்ளை யாரை
  யேத்தியா ராதிப்பா னினிதி னேகி
யுளமகிழ்ந் பொடுதிருமஞ் சனமுன் னாகு
  முரியவெலாஞ் செய்துநிவே தனமுன் வைத்து.

(இ-ள்.) சிறப்போடு உபநயனவிதிச்சடங்குகளும் செய்யப்பெற்றுக்கொண்டு வேதமுதலாகிய கலைகளை ஓதிவரும் நாள்களில், தம்மைப்பெற்ற தந்தையாகிய வேதியர் (அலுவல்காரணமாக) ஓரூர்க்குப்போனபடியால், புத்திரர் குற்றமில்லாத தந்தையார் சொன்ன சொற்படியே, மாலைக்காலத்தில் தோன்றுகின்ற இளம்பிறையைத்தரித்த சிவந்த சடைமுடியையுடைய திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரைத்துதித்து ஆராதிக்கும்பொருட்டு இனிமையாகச்சென்று உள்ளத்தில் மிகுந்த அன்புடன் திருமஞ்சனமுதலிய அனைத்தையுஞ்செய்து நிவேதனத்தை அவ்விநாயகக்கடவுளது திருமுன்னே வைத்து.—எ-று. (௪)

எம்பெருமா னமுதுசெய வேண்டு மென்ன
  விறைஞ்சிடவு மமுதுசெயா திருப்பக் கண்டு
வெம்பியுள மேதேனுந் தவறிங் குண்டோ
  வேழமுக னேயடியே னிவேதித் திட்ட
பம்பமுத முண்ணாத தென்னை யென்னப்
  பரிந்துதலை தனைமோதப் புகுங்கா லெம்மா
னம்பிபொறு வெனத்தடுத்தவ் வமுத மெல்லா
  நன்கருந்த வுவந்துநம்பி நவில்வ தானன்,

(இ-ள்.) எமது ஆண்டவரே! தேவரீர் இதனைத்திருவமுது செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்துப்பணியவும், விநாயகக்கடவுள் (அவரது வேண்டுகோட்படி) திருவமுது செய்யாமலிருப்பதைக்கண்டு மனம்வருந்தி இவ்விடத்தில் யாதாயினும் தவறுண்டாயிற்ரூ ? யானை முகக்கடவுளே ! அடியேன் நிவேதனமாக வைத்த மிகுந்த அமுதத்தைத் தேவரீர் உண்ணுதிருப்பது யாது காரணமென்றிரந்து வருந்தித் தமது தலையை மோதிக்கொள்ளத் தொடங்கியபோது எமது பெருமானுகிய பொல்லாப்பிள்ளையார், நம்பியே ! பொறு,என்றுதடுத்து அவ்வமுதையெல்லாம் களிப்புடனே திருவமுது செய்யவும், நம்பியாண்டார்நம்பி மகிழ்ந்து சொல்லத்தொடங்கினர்.—எ-று. (௫)

எந்தையே யினியடியேன் பள்ளிக் கேகி
 லெங்கடே சிகனடிப்பா ணுத லாலே
சந்தமறை முதற்கலைக ணீயே யோதித்
 தால்வேண்டு மெனவேழ முகத்தோன் ருனு
மந்தமற வோதுவிக்க வோதி நம்பி
 மகிழ்ந்தனனன் றதுபோல மற்றை நாளும்
விந்தையொடு நிகழநம்பி யாண்டார் நம்பி
 மேவியிருந் திடுஞ்செய்தி வேந்தன் கேளா.

(இ-ள்.) எமது தந்தையே! இனிமேல் அடியேன் பள்ளிக்குச்சென்ருல் எங்கள் உபாத்தியாயர் அடிப்பார், ஆகையால் சந்தத்தோடுங்கூடிய வேதமுதலிய கலைகளைத் தேவரீரே கற்பித்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அவ்வாறே பொல்லாப்பிள்ளையாரும் அஞ்ஞான நீங்கும்படி வேதமுதலிய கலைகளை ஓதுவித்தருள, அவைகளை நம்பியாண்டார்நம்பி கற்று, அன்று மகிழ்ச்சியடைந்தனர்: அதுபோலவே மற்றைநாட்களிலும் அதிசயமாக நடந்துவர, நம்பியாண்டார் நம்பி (இவ்வாறு விநாயகக்கடவுளிடத்து) வேதமுதலிய கலைகளைப் பயின்று வருஞ்செய்தியை அபயகுலசேகரசோழமகாராஜா கேள்வியுற்று.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬)

செல்வமிகு திருநாரை யூரின் மேவுஞ்
 சிவனளித்த மதகரிக்குச் சிந்தை கூர்ந்து
நல்லபுக ழுடையநம்பி யாண்டார் நம்பி
 நண்பினெடு நிவேதிப்பான் மதுர மிக்க
வெல்லையில்வா ழைக்கனிதே னவலோ டப்ப
 மெள்ளுண்டை யிவ்வுலகோ ரெடுக்க வென்றே
மல்லன்மிகு சேனையுட னிராச ராச
 மன்னவனு மந்நகரில் வந்து சேர்ந்தான்.

(இ-ள்.) பலவகைச்செல்வங்கள் நிறைந்த திருநாரையூரில் வீற்றிருந்தருளும் சிவகுமாரராகிய யானைமுகக்கடவுளுக்கு மனமகிழ்ந்து சிறந்தபுகழையுடைய நம்பியாண்டார்நம்பி மெய்யன்போடு நிவேதனஞ் செய்விக்கும்பொருட்டு,மதுரம் பொருந்திய அளவற்றவாழைக்கனிகளும், கட்டித்தேனும்,அவலும்,அப்பங்களும், எள்ளுண்டைமுதலியவைகளும் இந்நகரத்திலுள்ளோர் கொண்டுவரக்கடவரென்று கட்டளையிட்டு, வளப்பமிகுந்த சேனைகளோடும் ராஜராஜ அபயகுலசேகர சோழமகாராஜாவும் அத்திருநாரையூரில் வந்துசேர்ந்தனர்.—எ-று. (௭)

தோடுடைய செவியன்முதற் கல்லூ ரென்னுந்
தொடைமுடிவாப் பரசமயத் தொகைகண் மாளப்
பாடினர் பதிகங்கள் பாவி லொன்றும்
பதினாறு யிரமுளதாப் பகரு மன்றே.

(இ-ள்.) அறிஞர்கள்வாழ்கின்ற சீகாழிப்பதியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் தேவர்கள் துதிக்கின்ற திருத்தோணியப்பர் வாமபாகத்தில் வீற்றிருந்தருளும் உமாதேவியாருடைய திருமுலைப்பாலைத் திருவருளினாலுண்டு அத்திருத்தோணியப்பனை வீரம்பொருந்திய ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளத்தரிசித்து "தோடுடையசெவியன்" என்னுந்திருப்பதிகமுதல் "கல்லூர்" என்னுந்திருப்பதிகமிறுதியாகப் புறச்சமயக் கூட்டங்கள் பிற்பட்டொழியும்படிப் பாடியருளினார்; அத்திருப்பதிகங்கள் பாக்களிற் சிறப்பாகிய பதினாறுயிரமுள்ளனவாகச் சொல்லப்படும்.—எ-று.

திருநாவுக் கரையரெனுஞ் செம்மை யாளர்
தீயமணர் சிறைநீங்க வதிகை மேவுங்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை
கொடுங்கூற்றா யினவென்ன வெடுத்துக் கோதி
லொருமானைத் தரிக்குமொரு வரையுங் காறு
மொருநாற்பத் தொன்பதினா யிரம தாகப்
பெருநாமப் புகலூரிற் பதிகங் கூறிப்
பிஞ்ஞகனா ரடியிணைகள் பெற்று ளாரே.

(இ-ள்.) திருநாவுக்கரையரென்னுஞ்சிறந்த குணத்தினையுடைய அப்பர் சுவாமிகள் கொடிய சமணர்களது சிறையினின்று நீங்கத் திருவதிகையில் வீற்றிருந்தருளும் ஸ்ரீவீரட்டானேசுவரரைத்துதித்துக் கொடிய சூலைநோய் நீங்கும்படி "கூற்றாயின" என்று தொடங்கிய திருப்பதிகமுதல், குற்றமற்ற ஒப்பற்ற மானைத்தரித்த "ஒருவரையும்" என்னுந் திருப்பதிக மிறுதியாக நாற்பத்தொன்பதினாயிரந் திருப்பதிகங்களாக மிகுந்த புகழையுடையதிருப்புகலூரில் திருப்பதிகம் பாடியருளிச் சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளைச் சேர்ந்தனர்.—எ-று.

பின்புசில நாளின்க ணாரூர் நம்பி
பிறங்குதிரு வெண்ணெய்நல் லூர்ப் பித்தா வென்னு
மின்பமுதற் றிருப்பதிக மூழி தோறு
மீறாய்முப் பத்தெண்ணா யிரம தாக
முன்புகன் றவர்நொடித்தான் மலையிற் சேர்ந்தார்
முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர் தன்னி
லன்றவர்கை யிலச்சினையால் வைத்தார் மன்ன
வாராய்ந்து தருகவென வருளிச் செய்தார்.

(இ-ள்.) அதற்குச் சிலநாளின்பின்பு, நம்பியாரூரரென்னும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சிறந்த திருவெண்ணெய்நல்லூரில் வீற்றிருந்தருளும் "பித்தா" என்னும் முதன்மொழியையுடைய பேரின்பத்தைத்தருகின்ற திருப்பதிகமுதல் "ஊழிதோறும்" என்னுந் திருப்பதிகமிறுதியாக முப்பத்தெண்ணாயிரந் திருப்பதிகங்களாக முற்காலத்தில் அருளிச்செய்து, அவர் ஸ்ரீகைலாசகிரியை யடைந்தனர்;

மிகவுமொரு விண்ணப்ப மடியேற் குண்டு
வேதியனே கேளென்று விளம்பு வான்மெய்ப்
புகழதுசேர் மூவர்தமிழ் தொண்டர் செய்தி
பூதலத்தில் விளங்கவெனப் போற்றி நின்றான்.

(இ-ள்.) பொல்லாப்பிள்ளையாரது புள்ளிகள்பரந்த முகத்திலுள்ள துதிக்கையானது வெளிப்படவும், அங்குப்படைத்த பண்டங்களெல்லாம் போனவிடந் தெரியாமலாயினபின்பு, சோழமகாராஜாவானவர் மனமுருக உடல் பூரித்து ஆனந்தக்கண்ணீரொழுக, அன்புடன் நம்பியாண்டார்நம்பி திருவடிகளை வணங்கி, அடியேனுக்கு இன்னும் ஒரு விண்ணப்பமிருக்கின்றது, வேதியரே! அதனைக்கேட்டருளுமென்று சொல்கின்றனர்; அஃது மெய்மையாகிய புகழையுடைய மூவர்கள் அருளிச்செய்த தேவாரத்திருமுறையும், திருத்தொண்டர் வரலாறும் இவ்வுலகத்தில் விளங்க வேண்டுமென்பதே யென்று சொல்லித்துதித்து நின்றனர்.—எ-று.

அந்தவுரை கேட்டலுமங் கரசன் றன்னை
நம்பிமகிழ்ந் தருள்புரிவா னருள்சேர் மூவர்
செந்தமிழ்க ளிருந்தவிட மன்ப ருள்ளோர்
செய்திக்கவ் விநாயகன்றாள் சிந்தித் தெந்தா
யந்தவகை யேதென்று கேட்டா லெந்தை
மகிழ்ந்தருளு மந்நெறியை வழாது னக்குத்
தந்திடுவன் மன்னபொறு வென்று சொல்லித்
தந்திமுகன் சந்நிதியிற் றாழ்ந்து சென்றான்.

(இ-ள்.) அந்த விண்ணப்பத்தைக்கேட்டவுடனே நம்பியாண்டார் நம்பி அபயகுலசேகரசோழராஜாவை மகிழ்ந்து சொல்லுவார், திருவருளைப்பெற்ற மூவர்களும் அருளிச்செய்த செவ்விய தமிழ்வேதத்தின் பொருட்டும், திருத்தொண்டர்கள் வரலாற்றின் பொருட்டும், அப்பொல்லாப்பிள்ளையாருடைய திருவடிகளைத் தியானித்து, எமது தந்தையே! அந்த விவரம்யாதென்று பிரார்த்தித்து வேண்டினால், அதற்கு எமது ஆண்டவர் மகிழ்ந்து தெரிவித்தருளுவர்; அந்த விவரத்தை உமக்குத் தவறாமல் தெரிவிப்பேன்; மகாராஜாவே! மனம் பொறுத்திரு மென்று கூறி விநாயகக்கடவுளது சந்நிதியில்வந்து வணங்கி உள்ளேபுகுந்தனர்.—எ-று.

சென்றுபணிந் திபமுகத்தோன் பாதப் போதைச்
சென்னியில்வைத் தவனருளிற் றிளைத்துச் சிந்தை
யொன்றுமற வுருகிவிழி தாரை கொள்ள
வுண்மையினல் வந்தித்தங் குவாவோன் றன்னை
யின்றமிழ்சேர் மூவர்தமி ழிருந்த வெல்லை
யெல்லையில்சீர்த் திருத்தொண்ட ரியல்பு மூர்த்தி
நன்றுமருள் செய்தருள வேண்டு மென்ன
நாகமுக னம்பிக்கு நவில லுற்றான்.

(இ-ள்.) அவ்வாறு உள்ளேபுகுந்து பொல்லாப்பிள்ளையாருடைய திருவடித் தாமரைகளைத்தமது சிரசில்வைத்து வணங்கி அவரது திருவருளிற்றிளைத்துச் சித்த விகற்பம் சிறிதுமின்றியுருகி ஆனந்தக்கண்ணீர் தாரையாகப்பெருக, மெய்யன்போடுவந்தனைசெய்து விநாயகக்கடவுளைப் பார்த்து, இனிய மதுரம்பொருந்திய

மூவர்கள் அருளிச்செய்த திருநெறித் தமிழ்வேதமிருக்கும் இடமும், அளவற்ற மகிமையையுடைய திருத்தொண்டர்கள் வரலாறும் (தெரியும்படி) ஆண்டவரே! தேவரீர் மிகவும் அருள்புரியவேண்டுமென்று பிரார்த்திக்க, அவ்விநாயகக்கடவுளும் நம்பியாண்டார்நம்பிக்குக் கூறியருளத்தொடங்கி.—எ-று.

உற்றுன் என்பது முற்றெச்சம். இதுமுதல் இரண்டுபாடலும் குளகம். (௧உ)

வார்ந்தருட்க ணீர்சொரிய நம்பி கேட்ப
வண்டமிழ்க ளிருந்தவிட மன்று ளாடுங்
கூர்ந்தவிருட் கண்டர்புறக் கடையின் பாங்கர்க்
கோலமலர்க் கைகளடை யாள மாகச்
சார்ந்தனவென் றருள்செய்து தொண்டர் பேறுஞ்
சாற்றுதலாற் சகதலத்தோ ரருளைச் சார
வார்ந்ததமி ழிருந்தவிட மன்பர் செய்தி
யத்தனையு நம்பிமனத் தருளிற் கொண்டார்.

(இ-ள்.) கண்களில் ஆனந்த பாஷ்பஞ்சொரியும்படி நம்பியாண்டார் நம்பி பிரார்த்தித்தபோது, அத்திருமுறைகளிருக்குமிடம் காளகண்டராகிய ஸ்ரீநடராசப் பெருமானது சிற்சபையின் புறத்தே அம்மூவரது அழகிய தாமரைமலர்போன்ற திருக்கரங்களடையாளமாகச் சேமித்திருக்கின்றனவென்று கூறியருளித் திருத்தொண்டர்கள் வரலாற்றையும் சொல்லியருளியபடியால் உலகத்திலுள்ளவர்கள் திருவருள் பெற்றுய்யும்பொருட்டு, அருள்மயமாகிய திருநெறித்தமிழ் வேதத்தைச் சேமித்த இடமும், திருத்தொண்டர் வரலாறனைத்தும் நம்பியாண்டார் நம்பி தமது திருவுள்ளத்தில் திருவருட்சார்பினால் மனனஞ்செய்து கொண்டனர். (௧௩)

கொண்டுகுல சேகரனுங் கோன்பால் வந்து
குஞ்சரத்தோ னருள்செய்த கொள்கை யெல்லா
மண்டுபெருங் காதலுடன் சொல்லி யந்த
வண்டமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார்
கண்டபெரு மந்திரமே மூவர் பாடல்
கைகாணு மந்திரங்கண் ணுதலோன் கூற
லெண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற் காக
விம்மொழியின் பெருமையையா னியம்பக் கேணீ.

(இ-ள்.) அவ்வாறு சிந்தித்துக்கொண்டு சோழமகாராஜாவினிடத்து வந்து பொல்லாப்பிள்ளையா ரருளிச்செய்த வரலாறனைத்தையும் மிகுந்த பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்து அந்த வளவியதிருநெறித்தமிழின் மகிமையை வகுத்துச்சொல்லுகின்றார்; மூவர்கள் அருளிச்செய்த திருமுறைகள் கைகண்ட மகாமந்திரங்களாம்; சிவபெருமான் அருளிச்செய்த வேதங்கள் கைகாணுமந்திரங்களாம்; எட்டுத்திக்கிலுள்ளவர்களும் சிவபெருமானது திருவருளைப்பெறும்பொருட்டு இத்திருமுறையின் மகிமையை யாம் சொல்வோம் நீர்கேட்பீராக.—எ-று. (௧௪)

சேடர்மலி காழிநகர் வேந்தர் தாமுந்
தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார் பங்கிற்
பீடுடைய வுமைமுலைப்பா லருளா லுண்டு
பிஞ்ஞகனைச் சினவிடைமேற் பெருகக் கண்டு

தோடுடைய செவியன்முதற் கல்லூ ரென்னுந்
தொடைமுடிவாப் பரசமயத் தொகைகண் மாளப்
பாடினர் பதிகங்கள் பாவி லொன்றும்
பதினாறு யிரமுளதாப் பகரு மன்றே.

(இ-ள்.) அறிஞர்கள்வாழ்கின்ற சீகாழிப்பதியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் தேவர்கள் துதிக்கின்ற திருத்தோணியப்பர் வாமபாகத்தில் வீற்றிருந்தருளும் உமாதேவியாருடைய திருமுலைப்பாலைத் திருவருளினாலுண்டு அத்திருத்தோணியப்பனை வீரம்பொருந்திய ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளத்தரிசித்து "தோடுடையசெவியன்" என்னுந்திருப்பதிகமுதல் "கல்லூர்" என்னுந்திருப்பதிகமிறுதியாகப் புறச்சமயக் கூட்டங்கள். பிற்பட்டொழியும்படிப் பாடியருளினர்;அத்திருப்பதிகங்கள் பாக்களிற் சிறப்பாகிய பதினாறுயிரமுள்ளனவாகச் சொல்லப்படும்.—எ-று.

திருநாவுக் கரையரெனுஞ் செம்மை யாளர்
தீயமணர் சிறைநீங்க வதிகை மேவுங்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை
கொடுங்கூற்று யினவென்ன வெடுத்துக் கோதி
லொருமானைத் தரிக்குமொரு வரையுங் காறு
மொருநாற்பத் தொன்பதினா யிரம தாகப்
பெருநாமப் புகலூரிற் பதிகங் கூறிப்
பிஞ்ஞகனா ரடியிணைகள் பெற்று ளாரே.

(இ-ள்.) திருநாவுக்கரையரென்னுஞ்சிறந்த குணத்தினையுடைய அப்பர் சுவாமிகள் கொடிய சமணர்களது சிறையினின்று நீங்கத் திருவதிகையில் வீற்றிருந்தருளும் ஸ்ரீவீரட்டானேசுவரரைத்துதித்துக் கொடிய சூலைநோய் நீங்கும்படி "கூற்றாயின" என்று தொடங்கிய திருப்பதிகமுதல், குற்றமற்ற ஒப்பற்ற மானைத்தரித்த "ஒருவரையும்" என்னுந் திருப்பதிக மிறுதியாக நாற்பத்தொன்பதினாயிரந் திருப்பதிகங்களாக மிகுந்த புகழையுடையதிருப்புகலூரில் திருப்பதிகம் பாடியருளிச் சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளைச் சேர்ந்தனர்.—எ-று.

பின்புசில நாளின்க ணாரூர் நம்பி
பிறங்குதிரு வெண்ணெய்நல் லூர்ப் பித்தா வென்னு
மின்பமுதற் றிருப்பதிக மூழி தோறு
மீறாய்முப் பத்தெண்ணா யிரம தாக
முன்புபுகன் றவர்நொடித்தான் மலையிற் சேர்ந்தார்
முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர் தன்னி
லன்றவர்கை யிலச்சினையால் வைத்தார் மன்ன
வாராய்ந்து தருகவென வருளிச் செய்தார்.

(இ-ள்.) அதற்குச் சிலநாளின்பின்பு,நம்பியாரூரரென்னும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சிறந்த திருவெண்ணெய்நல்லூரில் வீற்றிருந்தருளும் "பித்தா" என்னும் முதன்மொழியையுடைய பேரின்பத்தைத்தருகின்ற திருப்பதிகமுதல் "ஊழிதோறும்" என்னுந் திருப்பதிகமிறுதியாக முப்பத்தெண்ணாயிரந் திருப்பதிகங்களாக முற்காலத்தில் அருளிச்செய்து, அவர் ஸ்ரீகைலாசகிரியை யடைந்தனர்;

அத் திருமுறைகள் அனைத்தும் திருத்தில்லையென்னும் பழைமையாகிய நகரத்தில் அக்காலத்திலே அம்மூவர்களும் தமது திருக்கரங்கள் அடையாளமாகச் சேமித்து வைத்தனர்; ஆதலால், சோழர்பெருமானே! அவற்றை நீரே ஆராய்ந்து தரவேண்டுமென்று சொல்லியருளினர்.—எ-று. (௧எ)

அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடு
மதுபோலன் றிதுவென்று முளதா முண்மைப்
பரபதமுந் தற்பரமும் பரனே யன்றிப்
பலரில்லை யென்றெழுதும் பனுவல் பாரி
னெரியினிடை வேவாதாற் றெதிரே யோடு
மென்புக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ் சாற்றுங்
கரியைவளை விக்குங்கன் மிதக்கப் பண்ணுங்
கராமதலை கரையிலுறக் காற்றுங் காணே.

(இ-ள்.) பூர்வத்தில் அருமையாகிய எசுர்வேதத்தைச் சிச்சிலிப்பறவை விழுங்கினதால் அதைக்காணுமல் தேடினதுபோலன்று; இத்தேவாரத்திருமுறை எக்காலத்தும் நிலைபெற்றதாகும்; உண்மையாகிய சிவலோகமுதலிய பரபதங்களும், அப்பதங்கட்குரிய முதற்பொருளும் சிவபெருமானேயன்றிப் பலகடவுளரில்லையென்றெழுதிய பனுவலாகும்; இவ்வுலகத்தில் அதுநெருப்பில்வேகாது; ஆற்றுவெள்ளத்தில் எதிரேறிச்செல்லும்; (தசைகழிந்த) எலும்பிற்கும் உயிரைக் கொடுக்கும்; இடப்பட்டவிஷத்தை முறிக்கும்; யானையைவணங்கப்பண்ணும்; கடலிலிட்டப்பட்ட கருங்கற்பாறையை மிதக்கப்பண்ணும்; முதலையானது தான் உண்ட பிள்ளையை மடுக்கரையில் கக்கும்படிசெய்யும்; (அரசர்கோவே!) அதன் மான்மியத்தை நீர் அறிவீராக.—எ-று.

அருமறையைச் சிச்சிலிபண்டருந்தத் தேடியதாவது, வைசம்பாயனமுனிவரர் தமது மாணுக்கராகிய காத்தியாயனமுனிவர்மேற் கோபங்கொண்டு நீ எம்பால் ஓதியுணர்ந்த வேதத்தை இப்பொழுதே யுமிழ்ந்துவிடு என்ன, அதற்கு அவர் நான் முறைமைப்படி யோதியுள்ளே னாதலால், தேவரீர் அங்ஙனங்கூறுதலடாதென்று மறுக்கவும், அவர் உடன்படாமையின் உமிழ்ந்துவிட, அது தீச்சுடராய்ச் சொலிக்கக்கண்ட வியாசமுனிவர் அதன்வெம்மையைத் தணித்து அங்குள்ள சில முனிவரைச் சிச்சிலியுருவெடுத்துண்ணும்படிச் செய்தனர் அம்முனிவர்கள் அவ்வாறே தித்திரியுருவெடுத் துண்டு பின் தம் வாயினல் கூறினமையால், எசுர்வேதத்திற்குத் தைத்திரிய மென்னும் பெயருண்டாயிற்று. சிச்சிலி - தித்திரி யென்பன ஒருபொருள். (௧அ)

என்றென்று நம்பிக்குப் பரிவா லுண்மை
யின்றமிழின் பெருமைதனை யியம்பக் கேட்டுக்
குன்றொன்று பேருருவங் கொண்டாற் போலுங்
குஞ்சரத்தோ னருளினையுட் கொண்டு மன்னன்
மன்றினிடஞ் சென்றுமறை யோர்க டொண்டர்
வார்சடையோர் காவலுடை மரபோர்க் கெல்லா
நன்றெங்கள் கணபதிதன் சொல்லி தென்று
நன்மையுடன் மன்னவனுர் நவிலுங் காலை.

(இ-ள்.) என்றிவ்வாறு நம்பியாண்டார் நம்பிக்குத் தயவுடனே மெய்ம்மையாகிய இனிய திருநெறித்தமிழ்வேதத்தின் பெருமையைப் (பொல்லாப்பிள்ளையார் உபதேசித்தருளியவாறு நம்பியாண்டார்நம்பி) தமக்குச்சொல்லி யருளக்கேட்டு, அபயகுலசேகர சோழமகாராஜாவானவர் ஒருமலையானது பெரியவுருவங் கொண்டாற்போலுமுள்ள விநாயகக்கடவுளது திருவருளை மனதிற்சிந்தித்துக்கொண்டு,-ஸ்ரீசிதம்பரத்தையடைந்து தில்லைமூவாயிரவர்கள், நாற்பத்தெண்ணாயிர மகேசுரர்கள், நீண்ட சடைமுடியையுடைய எழுநூறு திருமடத்து முதலிகள், ஏழாயிரத்துத் தொளாயிரவராகிய அகம்படிமைத் தொண்டு செய்பவர்கள்முதலிய இவர்களுக்கெல்லாம், நன்றாக நமது பொல்லாப்பிள்ளையார் சொல்லியருளிய தன்மை இதுவாகுமென்று மனமகிழ்ச்சியுடன் தெரிவித்தபோது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

அத்தகையோர் தமிழ்வைத்த மூவர் வந்தா
லறைதிறக்கு மெனவுரைக்க வரசன் றானு
மெய்த்தகுசி ரம்பலவர்க் குற்ற செல்வ
விழாவெடுத்து விளம்புதமிழ் மூவர் தம்மை
யுய்த்தணிவீ தியினிலுலா வருவித் தும்பர்
நாயகன்றன் கோயில்வல மாக்கி யுள்ளே
சித்தமெலா முருக்குதமி ழிருக்கை சேரச்
சேர்த்தியவர் சேர்ந்ததெனச் செப்பி நின்றான்.

(இ-ள்.) அத்தன்மையைக்கேள்வியுற்ற தில்லைவாழந்தணர் முதலானவர்கள், திருநெறித்தமிழ்வேதத்தைச் சேமித்துவைத்த மூன்று சமயாசாரியர்களும் வந்தால் அச்சேமித்துவைத்த அறைதிறக்குமென்று சொல்லவும், அதைக்கேட்ட அபயகுலசேகரசோழமகாராஜாவும் மெய்ம்மையாகியசிறப்பினையுடையஸ்ரீநடராசப்பெருமானுக்கு மிகுந்த விபவம்பொருந்திய திருவிழாநடத்தி,திருநெறித்தமிழ் வேதத்தை யருளிச்செய்த அம்மூவர்களையும் எழுந்தருளச்செய்து திருவீதியில் உலாவருவித்துத் தேவர்கள்நாயகராகிய் ஸ்ரீநடராசப்பெருமானது திருக்கோயிலை வலமாக எழுந்தருளுவித்து,அன்பர்களுடைய மனத்தையெல்லாம் உருக்காநின்ற திருமுறையைச்சேமித்துவைத்த இடத்திற்கொணர்ந்துசேர்த்து, அம்மூவர்களும் வந்து சேர்ந்தனரென்று சொல்லி நின்றனர்.—எ-று.

அவர் சேர்ந்தது என்றது திணைவழுவமைதி.

ஐயர்நட மாடுமம் பலத்தின் மேல்பா
லருள்பெற்ற மூவர்தம தருள்சேர் செய்ய
கையதுவே யிலச்சினையா யிருந்த காப்பைக்
கண்டவர்க ளதிசயிப்பக் கடைவாய் நீக்கிப்
பொய்யுடையோ ரறிவுதனைப் புலன்கண் மூடும்
பொற்பதுபோற் போதமிகும் பாட றன்னை
நொய்யசிறு வன்மீக மூடக் கண்டு
நொடிப்பளவி னிற்சிந்தை நொந்த வேந்தன்.

(இ-ள்.) எமது ஆண்டவராகியசிவபெருமான் திருநடனஞ்செய்யும் கனகசபையின் மேற்புறத்தில், திருவருளைப்பெற்ற சமயாசாரியர்கள் மூவரும் தமது

கருணைசேர்ந்த அழகிய திருக்கரமே அடையாளமாகப் பொறித்திருந்த சேமத்தை
ப்பார்த்தவர்கள் அதிசயிக்கும்படி கதவைத்திறந்து, அஞ்ஞானிகளுடைய அறி
வை ஐம்புலன்கள் மறைத்திருக்குந் தன்மைபோல், சிவஞானமிகுந்திருக்கின்ற
தேவாரத்திருமுறையை அற்பமாகிய சிறிய செல்லுப்புற்றானது மூடியிருக்கப்பா
ர்த்து அக்கணத்திலே மனம்வருந்திய சோழமகாராஜாவானவர்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

பார்த்ததனைப் புறத்துய்ப்ப வுரைத்து மேலே
படிந்திருந்த மண்மலையைச் சேரத் தள்ளிச்
சீர்த்ததில தயிலமலி கும்பங் கொண்டு
செல்லுகனை யச்சொரிந்து திருவே டெல்லா
மார்த்தவரு ளதனாலே யெடுத்து நோக்க
வலகிலா வேடுபழு தாகக் கண்டு
தீர்த்தமுடிக் கணிபரனே பரனே யென்னச்
சிந்தைதளர்ந் திருகணீர் சோர நின்றான்.

(இ-ள்.) அவ்வாறு பார்த்து அத்திருமுறையைப்புறத்தேயெடுத்து வைக்
கும்படி கட்டளையிட்டு, அதன்மேல் மூடியிருந்த புற்றுமண்குவையை முழுதும்
நீக்கிச் சிறந்த எண்ணெய்க்குடங்களால் செல்லுகனையும்படி யூற்றிப் பின் திருமு
றையெழுதிய திருவேடுகளையெல்லாம் மிக்க திருவருளால் எடுத்துப்பார்த்தலும்,
அவற்றுள் அளவற்ற ஏடுகள் பழுதாயிருக்கக்கண்டு, கங்கையைச் சடைமுடியி
லணிந்த பரமனே! பரமனே!! என்று கூறி மனந்தளர்ந்து இரண்டுகண்களினும்
நீர்பெருகும்படி வருந்திநின்றனர்.—எ-று. (உ.ஈ)

ஏந்துபுகழ் வளவனிவ்வா றன்பி னாலே
யிடர்க்கடலின் கரைகாணா தினையுங் காலைச்
சார்ந்தமலை மகள்கொழுந னருளால் வேதச்
சைவநெறித் தலைவரொனு மூவர் பாடல்
வேய்ந்தனபோன் மண்மூடச் செய்தே யீண்டு
வேண்டுவன வைத்தோமென் றுலகி லுள்ள
மாந்தரொடு மன்னவனுங் கேட்கு மாற்றால்
வானகத்தி லோரோசை யெழுந்த தன்றே.

(இ-ள்.) நிறைந்த புகழையுடைய அபயகுலசேகர சோழமகாராஜாவா
னவர் மெய்யன்பினால் இவ்வாறு துன்பமாகிய சமுத்திரத்தின்கரையைக்காணாமல்
வருந்தும்பொழுது, பார்வதிபாகராகிய ஸ்ரீநடராசப்பெருமானது திருவருளினால்
வேதசாரமான சைவசித்தாந்தத்தலைவர்களென்னும் மூவர்களது திருப்பாடல்க
ளைக் கவசமிட்டதுபோல மண்மூடும்படிசெய்து, இக்காலத்திற்கு வேண்டுவனவற்
றைமாத்திரம் தெரியும்படிவைத்தோமென்று உலகத்திலுள்ள மனிதர்களும்,
மகாராஜாவும் கேட்கும்படி ஆகாயத்தில் ஒரு அசரீரிவாக்கு எழுந்தது.—எ-று. ()

அந்தமொழி கேட்டலுமே மன்னன் றானு
மாடினான் பாடினா னலக்கண் யாவுஞ்
சிந்தினா னமுதமுண்டான் போல நெஞ்சந்
தேறினா னம்பிதிரு வடியிற் றாழ்ந்தான்

பந்தமறு சிவனடியார் கொள்க வென்றுப்
பண்டாரந் திறந்துவிட்டான் பரிவு கூர்ந்தான்
இந்தவகைப் பெருங்களிகொண் மன்னன் மூறு
மெழின்முறையை முன்போல வகுக்க வெண்ணி.

(இ-ள்.) அந்த அசரீரிவாக்கைக் கேட்டமாத்திரத்தில் அபயகுலசேகர சோழமகாராஜா ஆனந்தக்கூத்தாடினர்; பாடினர்; தமது உள்ளத்திற்பொருந்திய கவலையனைத்து மொழிந்தனர்; தேவாமிர்தமுண்டாற்போல மனக்குறை நீங்கினவராகி நம்பியாண்டார்நம்பியினுடைய திருவடிகளில் வணங்கிப் பாசபந்தங்களொழிந்த சிவனடியார்கள்கொள்ளக்கடவர்களென்று அன்புமிகுந்து பொக்கிஷசாலையைத்திறந்துவிட்டார்; இவ்வாறு பேரானந்தக்களிப்பையடைந்தசோழமகாராஜாவும் தெய்வத்தன்மைபொருந்திய தேவாரத் திருமுறையை முன்னுளிலிருந்ததுபோல வகுக்கும்படி நினைந்து.—எ-று.

இதுமுத விரண்பொடலுங் குளகம். (உ௪)

மன்னுதமிழ் விரகரெங்கள் காழி வேந்தர்
வகுத்தருளா லமைத்ததிரு முறையோர் மூன்றும்
அன்னவகை வாகீசர் முறையோர் மூன்று
மாரூர ருரைத்ததிரு முறைய தொன்றும்
துன்னவகை யேழாகத் தொகுத்துச் செய்தான்
றூயமந் வெழுகோடி யென்ப துன்னித்
தன்னிகரி றிருவருளான் மன்னன் றானுந்
தாரணியோர் வீடுபெறுந் தன்மை சூழ்ந்தே.

(இ-ள்.) நிலைபெற்ற திருநெறித்தமிழ்விரகராகிய எமது திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருவருளினுல் வகுத்து அருளிச்செய்த திருமுறைகள் மூன்றும், அவ்வாறே திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த திருமுறைகள் மூன்றும், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருமுறை ஒன்றும் என்று தனக்குத் தானேயொப்பாகிய திருவருளை முன்னிட்டுச் சோழமகாராஜாவும் உலகத்திலுள்ளோர் முத்திப்பேறடைகின்ற தன்மையை ஆலோசித்துத் தூய்மையாகிய மந்திரங்கள் ஏழுகோடியாயிருக்கும் வகையை அனுசரித்து,அவற்றின் வகையை ஏழாகத் தொகுத்தனர்.—எ-று. (உரு)

வேறு.

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்
றெண்பத்தி னன்கின் விலங்குதிரு முறைமூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினுல்
வண்பெற்ற முறையொன்று நூற்றினுல் வன்றொண்டர்.

(இ-ள்.) நன்மைமிகுந்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருப்பதிகங்கள் முந்நூற்றெண்பத்தினன்கினுல் விளங்குந்திருமுறைகள் மூன்றும், சிவநேசம் பொருந்திய திருநாவுக்கரசுசுவாமிகள் திருப்பதிகங்கள் முந்நூற்றேழினுல் திருமுறைகள் மூன்றும், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பதிகங்கள் நூற்றினுல் வளமிகுந்த திருமுறையொன்றுமாம்.—எ-று. (உசு)

ஆகவளர் திருமுறையே ழுருட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலேமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமா முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள்.

(இ-ள்.) இவ்வாருகச்சிறந்த திருமுறைகள் ஏழும், திருவருள் மயமாகிய திருவாசகம் (திருச்சிற்றம்பலக்கோவையார்சேர்ந்த) திருமுறை ஒன்றும்; மோகப் பற்றையொழிக்கின்ற திருவிசைப்பா (திருப்பல்லாண்டு சேர்ந்த) திருமுறை ஒன்றும், சிவபோகமிகுந்த திருமந்திரத் திருமுறை ஒன்றும் எனப் புகழ்பரவும்படி (உயிர்களுக்கு) மலபரிபாகத்தை உண்டாக்குகின்ற திருமுறைகள் பத்தாக ஏற்படுத்தினர்.—எ-று. (உஎ)

வைத்ததற்பி னம்பிகழன் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதரு மிறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலா
வுய்த்தபதி கங்களையு மொருமுறையாச் செய்கவெனப்
பத்திதருந் திருமுறைகள் பதினென்ருப் பண்ணினர்.

(இ-ள்.) அவ்வாறு ஏற்படுத்தின பின்பு நம்பியாண்டார் நம்பியினுடைய திருவடிகளைச் சோழமகாராஜாவானவர் மகிழ்ந்து வணங்கி,இஷ்டசித்தியைத்தந்தருளும் சிவபெருமான் செய்தருளிய திருமுகப்பாசுரமுதலாக எண்ணப்பட்ட திருப்பதிகங்களையும் ஒரு திருமுறையாகச் செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அத் திவ்வியப்பிரபந்தத்திருமுறையும் சேர்த்துப் பத்தியைத் தருகின்ற திருமுறைகள் பதினென்ருகச்செய்தனர்.—எ-று. (உஅ)

மந்திரங்க ளெழுகோடி யாதலினுன் மன்னுமவ
ரிந்தவகை திருமுறைக ளேழாக வெடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினென்று மாதலினு
லந்தமுறை நான்கினெடு முறைபதினென் ருக்கினர்.

(இ-ள்.) மகாமந்திரங்கள் ஏழுகோடியாதலால் நிலைபெற்ற நம்பியாண்டார் நம்பி இந்த வகைக்கேற்பத் திருமுறைகள் ஏழாக அமைத்துவைத்து, சேர்க்கையான மந்திரங்கள் பதினென்று மாதலால் அந்த முறைமைக்கேற்ப அவ்வேழுடன் திருவாசகத்திருமுறை முதலிய நான்கையுஞ்சேர்த்துத் திருமுறைகள் பதினென்ருக அமைத்தனர்.—எ-று. (உகூ)

ஆக்கியபின் திருத்தொண்டத் தொகையடைவை யருளாலே
நோக்கியபின் நாயன்மார் நுடங்கடைவுந் தொழிற்பேறும்
பாக்கியத்தா லிபமுகத்தோ னருள்செய்த பகுதியினுல்
வாக்கியல்சே ரந்தாதி நம்பியடை வேவகுத்தார்.

(இ-ள்.) அவ்வாறு திருமுறைகளை வகுத்தமைத்தபின்பு, (ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிக ளருளிச்செய்த) திருத்தொண்டத்தொகையின் வரிசையைத் திருவருளினுல் ஆராய்ந்தபின்பு, அதிற்கூறப்பட்டுள்ள திருத்தொண்டர்களது அருமையான வரலாற்றையும், திருத்தொண்டுகளையும், அவர்கள் அடைந்த பேறுகளையும் சுபகரமாகப் பொல்லாப்பிள்ளையார் உபதேசித்தருளிய முறைமைப்படி நம்பியாண்டார்நம்பி தமதுவாக்கினுல் இலக்கணமமைந்த திருவந்தாதியை முறையேவகைநூலாகச் செய்தருளினர்.—எ-று. (௩0)

சீரருள்சே ரறுபத்து மூவர்தனி திருக்கூட்டஞ்
சாருமவ ரொன்பானுந் தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகையடைவு புவியினிடைப் பெருமையினாற்
சேருலவு திருவெருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார்.

(இ-ள்.) சிறந்த திருவருளைப்பெற்ற தனியடியார்கள் அறுபத்துமூவரும், திருக்கூட்டமாகச்சேர்ந்த அடியார்கள் ஒன்பதின்மருமாகிய இவர்களது மான்மியங்களை இனிய தமிழ்த்திருவந்தாதியால் அருளிச்செய்து, (மூவர் திருமுறைகளுக்கும்) மிக்க இசைவகைகளைப் (பெறவேண்டி) இவ்வுலகத்தில் பெருமையினால் சிறப்புற்றிருக்கின்ற திருவெருக்கத்தம்புலியூருக்குப்போய்ச்சேர்ந்தனர்.—எ-று.

திருவெருக்கத்தம்புலியூர் என்பது - நடுநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள் இருபத்திரண்டனுள் ஒன்று. (௩௧)

சென்னியரு ணம்பியிவ ரங்கணைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்தரனே
யின்னிசைதந் தருளென்ன விரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோ னருள்செய்த கடனுரைப்பாம்.

(இ-ள்.) அபயகுலசேகர சோழமகாராஜா - நம்பியாண்டார்நம்பி என்னுமிவர்கள்முதலானவர்கள் அத்திருவெருக்கத்தம்புலியூரையடைந்து சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலை வலமாகவந்து வணங்கி,எம்பெருமானே ! (திருமுறைகளுக்கு) இனிய இசையைத் தந்தருளவேண்டுமென்று மனவிரக்கத்துடனே குறையிரந்துவேண்டுதலும், அதற்கு உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமான் அருளிச்செய்த முறைமையைச் சொல்லுவாம்.—எ-று. (௩௨)

நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லியொருத் திக்கிசைகள் வாய்ப்பவளித் தோமென்று
சொல்லவவ ளையழைத்துச் சுருதிவழிப் பண்டழுவு
நல்லிசையின் வழிகேட்டு நம்பியிறை யுண்மகிழ்ந்தார்.

(இ-ள்.) நல்ல இசையினையுடைய திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாரது சிறந்த மரபின்வழியேபிறந்த ஒருபெண்ணுக்குத் (திருமுறைகளுக்குரிய) இசைத்திறங்கள்வாய்க்கும்படி தந்தருளினோம் என்று (அசரீரியாக) அனுக்கிரகஞ்செய்ய, அப்பெண்ணைவருவித்துச் சுருதிமுறைப்படி பண்கள்பொருந்துகின்ற இனிய இசைப்பகுதிகளைக்கேட்டு, நம்பியாண்டார்நம்பியும் சோழமகாராஜாவும் மனமகிழ்ச்சி யடைந்தனர்.—எ-று. (௩௩)

ஆங்கவளை யம்பலத்து ளாடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாட
லோங்கருளான் முறைபணித்தற் கொக்குமென வோரோசை
நீங்கரிய வானின்க ணிகழவர சன்கேட்டான்.

(இ-ள்.) அந்தப்பெண்ணைத் திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானுடைய சந்நிதியில் சிறப்புடன் அழைத்துக்கொண்டுவந்து பொருந்திய திருப்பாடல்களுக்கு முறையே பண்ணடைவுவகுத்தற்குத் தகுதியாமென்று மிக்க திருவருளினால் ஒரு அசரீரிவாக்கானது நீக்கமில்

லாத் ஆகாயத்தி லுண்டாக, அதனை அபயகுலசேகரசோழமகாராஜாவானவர் கேட்டனர்.—எ-று.

மன்னனுக்கு நம்பிக்கு மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் குங்கேட்க
வின்னருண்முன் வியந்துரைத்த விவண்முதலா விசைத்தவிசை
தென்னிலமேன் மிகத்தோன்றத் திருவருளாற் றோன்றியதால்.

(இ-ள்.) அவ்வாறு அபயகுலசேகரசோழமகாராஜாவுக்கும், நம்பியாண்டார் நம்பிக்கும்,தில்லைவாழந்தணர் மூவாயிரவர்களுக்கும், சொல்லுதற்கரிய திருத்தொண்டர் முதலிய பலவிடத்திலிருந்துவந்தயாவர்களுக்கும், அவ்வசரீரிவாக்கானது கேட்டவளவில், (அவ்வாறே அப்பெண்ணை யழைத்துக்கொண்டு ஸ்ரீசிதம்பரத்தையடைந்து கனகசபைக்குமுன் சென்று கேட்க,) இனிய திருவருளினால் சோழமகாராஜா முதலானவர்களுக்கு முன்னே அதிசயிக்கச்சொல்லிய இப்பாட்டினியே அவ்விசைக்கு முதல்வியாகப்பாடிய இசைத்திறமானது தென்தேசத்தில் மிகவும் சிறக்கும்படி சிவபெருமானுடைய திருவருளால் சித்தித்ததாம்.—எ-று.

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையா
மின்னிசைபாற் றருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதா
முன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார்.

(இ-ள்.) (திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்அருளிச்செய்த திருப்பதிகங்களுள்) சொல்லப்பட்ட நட்டபாடையென்னும் பண்ணுக்குத்தொகுத்தது எட்டுக் கட்டளையும்; இனிய இசையோடு பொருந்திய தக்கராகப் பண்ணுக்கு ஏழு கட்டளையும்; சொல்லுகின்ற பழந்தக்கராகப்பண்ணுக்கு மூன்று கட்டளையும்; நினைத்தற்கரியதக்கேசிப்பண்ணுக்கு இரண்டு கட்டளையுமாக வருவித்தனர்.—எ-று.

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழகுறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சிப் பாலிரண்டு
தேவுவந்த விந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் றன்மைதனக் கிரண்டமைத்தார்.

(இ-ள்.) நன்மை பொருந்திய குறிஞ்சிப்பண்ணுக்கு ஐந்து கட்டளையும், வியாழக்குறிஞ்சிப்பண்ணுக்குஆறுகட்டளையும்,பரவிய புகழையுடைய மேகராகக்குறிஞ்சிப்பண்ணுக்கு இரண்டு கட்டளையும், தெய்வத்தன்மைபொருந்திய இந்தளமென்னும் பண்ணுக்கு நான்கு கட்டளையும், குற்றமற்ற சிறப்பினையுடைய இனிய காமரமென்னும்பண்ணுக்கு இரண்டு கட்டளையுமாக அமைத்தனர்.—எ-று. (௩எ)

காந்தார மாகியபி யந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்
கேய்ந்தவகை யிரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கியிசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார்.

(இ-ள்.) பியந்தைக்காந்தாரமென்னும் பண்ணுக்குப் பொருந்திய கட்டளைவகை மூன்றும், வலிய நட்டராகப் பண்ணுக்குப் பொருந்திய கட்டளைவகை இரண்டும், செவ்வழிப்பண்ணுக்குக்கட்டளை ஒன்றும், இசையையுடைய காந்தார பஞ்சமமென்னும் பண்ணுக்குக் கட்டளை மூன்றுமாக ஏற்படுத்தினர்.—எ-று. ()

கொல்லிக்கு நாலாக்கிக் கௌசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கிமிகு தூங்கிசைசேர் பஞ்சமத்திற்
கொல்லையினி லொன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லுமிசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார்.

(இ-ள்.) கொல்லிப்பண்ணுக்கு நான்கு கட்டளையும், கௌசிகப்பண்ணுக்குச் சொல்லுமிடத்தில் இரண்டு கட்டளையும், மிகுந்த தூங்கல் இசைபொருந்திய பஞ்சமப்பண்ணுக்கு ஒருகட்டளையும், சாதாரிப்பண்ணுக்கு ஒன்பது கட்டளையும், இசையமைந்த புறநீர்மைப் பண்ணுக்கு ஒருகட்டளையுமாக நியமித்தனர்.—எ-று.

அந்தாளிக் கொன்றாக்கி வாகீச ரருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்று மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிரண்
டுந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார்.

(இ-ள்.) அந்தாளியென்னும் பண்ணுக்கு ஒருகட்டளையுமாக அமைத்து, திருநாவுக்கரசுசுவாமிகளருளிச்செய்த திருமுறையுள் முதன்மையாகிய பல திருப்பதிகங்களுக்கு ஓவ்வொருகட்டளையாக நியமித்து, நிலைபெற்ற திருநேரிசைக் கொல்லிக்கு நிச்சயிக்குமிடத்து இரண்டு கட்டளையும், இனிதாகவொலிக்கின்ற திருக்குறுந்தொகைக்கு ஒருகட்டளையுமாக விரித்துச்சொல்லினர்.—எ-று. (௬௦)

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட வையரரு ளெய்யமுறைக்
கீண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக வெடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார்.

(இ-ள்.) திருத்தாண்டகமென்னும் திருப்பதிகத்திற்கு ஒருகட்டளையாகத் தாபித்து, திருவெண்ணெய்நல்லூரில் அருளாளராகிய சிவபெருமான் தடுத்தாட்கொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த தூய்மையாகிய திருமுறையுள் மிக்க இசைபொருந்திய இந்தளப் பண்ணுக்கு இரண்டுகட்டளையாக எடுத்துக்கூறி, நீண்ட தக்கராகப்பண்ணுக்கு இரண்டுகட்டளையாக விளக்கினர்.

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுந்தபழம் பஞ்சுரத்துக்
கேறும்வகை யிரண்டாக்கி யின்னிசைசேர் தக்கேசிப்
பேறிசையா றாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம்.

(இ-ள்.) சொல்லுதற்கரிய நட்டராகப்பண்ணுக்கு இரண்டு கட்டளையாகவும், கொல்லிப்பண்ணுக்கு வெவ்வேறுவகையால் மூன்றுகட்டளையாகவும், இசைமிக்க பழம்பஞ்சுரப்பண்ணுக்கு ஏற்றவகை இரண்டுகட்டளையாகவும் அமைத்து, இனிய இசைமுற்றிய தக்கேசிப்பண்ணுக்குச் சிறந்தஆறுகட்டளையாகவும், அதில்நின்றும் காந்தாரப்பண்ணானது பிரிக்கப்பட்டுஅதற்குக்கட்டளைவகை இரண்டாம்.

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டா
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கிற்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
யொன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார்.

(இ-ள்.) காந்தாரபஞ்சமப்பண்ணுக்கு ஒருகட்டளையும், நன்மையமைந்த சிறந்த நட்டபாடையென்னும் பண்ணுக்கு ஆராய்ந்துசொல்லுமிடத்தில் இரண்டு கட்டளையும், இசைகுன்றுதலில்லாத புறநீர்மைப்பண்ணுக்கு இரண்டுகட்டளையும், சொல்லாநின்ற காமரமென்னும் பண்ணுக்குப்பொருந்திய ஒருகட்டளையுமாக ஏற்படுத்தினர்.—எ-று.

உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கிக் கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கித் தூயவிசைப் பஞ்சமத்துக்
கற்றவிசை யொன்றாக்கி யானருளால் விரித்தமைத்தார்.

(இ-ள்.) இசையமைந்த குறிஞ்சிப்பண்ணுக்கு இரண்டுகட்டளையும், நினைத்தற்கரிய செந்துருத்திப்பண்ணுக்கு ஒருகட்டளையும், கௌசிகப்பண்ணுக்குப் பொருந்திய இரண்டுகட்டளையும், தூய்மையான இசையையுடைய பஞ்சமப்பண்ணுக்கு ஒருகட்டளையுமாகச் சிவபெருமானுடைய திருவருளினால் (திருமுறைகளுக்குரிய) பண்ணடைவுகளை விரிவாக அமைத்தனர்.—எ-று.

இந்தவகைச் சிவன்செவிப்பா லெக்கண்ணுந் தழைத்தோங்க
வந்தமிலா வறுபத்து மூவரரு ளம்புவிமே
னந்தியிட மும்மலமு நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தா னருட்சென்னி.

(இ-ள்.) இவ்வாறாகச் சிவபெருமானது திருச்செவிக்கேற்கும்படி எத்திசையிலும் தழைத்தோங்கவும், அழிவில்லாத அறுபத்துமூன்று நாயன்மார்களது திருவருள் அழகிய உலகத்தில் பரவிவிளங்கவும், நல்ல இவ்வுலகத்திலுள்ளவர்கள் மும்மலங்களும் நீங்கப்பெற்றுப் பரிசுத்தர்களாகவும், ஜீவகாருண்யத்தையுடைய அபயகுலசேகர சோழமகாராஜாவானவர் தமது திருவுள்ளமானது அருள்வடிவாகிய சிவாகாரமாக நின்று யாவரையுங் கடைத்தேற்றுவித்தனர்.—எ-று.

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனு
மேராரு மிறைவனையு மெழிலாரு நம்பியையு
மாராத வன்பினுட னடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதன்மிகுந் திருத்தொண்டர் பதந்துதிப்பாம்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய தேவாரத்திருமுறைகளையெடுத்து உலகத்தில் விளங்கப்பண்ணிய அன்பினுறுதியையுடைய அரசர்பெருமானாகிய அழகிய அபயகுலசேகர சோழமகாராஜாவையும், சிவஞானப்பொலிவினையுடைய நம்பியாண்டார்நம்பியையும் நீங்காத பேரன்புடனே திருவடிகளில் வணங்கி, அவ்வாறே திருவருள்பொருந்தும்படிச் சோர்வில்லாத சிவநேசமிகுந்த திருத்தொண்டர்களது திருவடிகளைத் துதிசெய்வாம்.—எ-று.

திருமுறைகண்டபுராணம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

ஆக திருவிருத்தம் ௬௬.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர் புராண சாரம்.

மல்குபுகழ் வன்றொண்ட ரருளா லீந்த
வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை
நல்கும்வகை புல்கும்வகை நம்பி யாண்டார்
நம்பிதிரு வந்தாதி நவின்ற வாற்றாற்
பல்குநெறித் தொண்டர்சீர் பரவ வல்ல
பான்மையா ரெமையாளும் பரிவால் வைத்த
செல்வமிகுந் திருத்தொண்டர் புராண மேவுந்
திருந்துபய னடியேனுஞ் செப்ப லுற்றேன்.

(இ-ள்.) மிகுந்த புகழையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமானது திருவருளினால் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்தின் மெய்ப்பொருள் உலகத்தில் நிலைபெற்று விளங்கும்பொருட்டு, நம்பியாண்டார் நம்பியென்னும் சிவவேதியர் (பொல்லாப்பிள்ளையாரனுக்கிரகத்தினால்) திருவந்தாதியாக அருளிச்செய்த முறைமைப்படி, பரவிய பத்திநெறியையுடைய திருத்தொண்டர்களது புகழைத் துதிக்க வல்லவராகிய ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் எம்மையடிமைகொள்ளுங்கருணையால் விரிவாகப்பாடியருளிய திருவருட்செல்வநிறைந்த திருத்தொண்டர்புராணத்தின்கணுள்ள திருத்தமாகிய சாரத்தை அடியேனும் சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

## ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் புராணம்.

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ்
சைவனார் சடையனார் தனய னாராய்
மண்புகழ வருட்டுறையா னோலை காட்டி
மணம்விலக்க வன்றொண்டா யதிகை சேர்ந்து
நண்பினுட னருள்புரிய வாரூர் மேவி
நலங்கிளரும் பரவைதோ ணயந்து வைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந்
திருத்தொண்டத் தொகையருளாற் செப்பி னாரே.

(இ-ள்.) (ஆலாலசுந்தரர்) குளிர்ச்சிபொருந்திய ஸ்ரீகயிலாசத்தினின்றும் நீங்கி, திருநாவலூரில் வாழ்ந்திருந்த ஆதிசைவப்பிராமணராகிய சடையப்பசிவாசாரியருக்குப் புத்திரராயவதரித்து, உலகத்தார்புகழும்படி (திருவெண்ணெய்நல்லூர்த்) திருவருட்டுறையென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் முறிச்சீட்டைச் சபையாருக்குமுன்னே காட்டி, இவன் எமக்கு அடிமையென்று திரு

மணத்தைத்தவிர்த்த காரணத்தினல், வன்றொண்டரென்னுந் திருநாமத்தைப்பெற்று, பின் திருவதிகையையடைந்து, சிவபெருமான் கருணையோடு திருவடிசூட்டியருள, திருவாரூரையடைந்து, அங்கு மங்களகரம்பொருந்திய பரவைநாச்சியாரைத் திருமணம்புரிந்து சுகித்து வாழ்ந்து, அன்பினுறுதியையுடைய விறன்மிண்டநாயனரது உறுதியான மெய்யன்பைக்கண்டு அடியார்களைத்துதிக்குந் திருத்தொண்டத்தொகையென்னுந் திருப்பதிகத்தைச் சிவபெருமானுடைய திருவருளினல் அருளிச்செய்தனர்.—எ. று. (க)

செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னச் செய்து
தப்பின்முது குன்றர்தரும் பொருளாற் றிட்டுத்
தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாத
னைப்பிறலித் தூதுவந்தா ரூடு கீறி
யுறுமுதலை சிறுமதலை யுமிழநல்கி
மெய்ப்பெரிய களிறேறி யருளாற் சேர
வேந்தருடன் வடகயிலை மேவி னரே.

(இ ள்.) புகழ்பரவிய குண்டையூரிலுள்ள நெற்குவையைத் திருவாரூரில் பரவைநாச்சியார் திருமனைக்கு அழைப்பித்து, திருப்புகலூரில் சிவாலயத்திருப்பணிக்கு வைத்திருந்த செங்கல்லை மாற்றுயர்ந்த பொன்னகச்செய்து, குற்றமற்ற புகழையுடைய விருத்தாசலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் கொடுத்தபொருளை மணிமுத்தாநதியிலிட்டுத் திருவாரூரில் கமலாலயமென்னும் தடாகத்திலெடுத்து, பின் திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரைத் திருமணம்புணர்ந்து, பின்பு (சங்கிலியாரைத் தாம் திருமணம்புணர்ந்தகாரணமாகப் பரவைநாச்சியார்கொண்ட பிணக்குநீங்கும்படி) சிவபெருமானை ஒப்பற்ற ஒருதூதராக அனுப்பி மகிழ்ந்து, பின்பு திருவையாற்றுக் காவிரிநதிவெள்ளம் விலகும்படி நடுவேசென்று, திருப்புக்கொளியூர் அவிநாசியென்னுந்திருப்பதியில் தடாகத்திற்றேன்றிய முதலையானது முன்பு தான் விழுங்கிய பிராமணச்சிறுவனைக் கக்கும்படிசெய்து, திருவஞ்சைக்களமென்னுந்தலத்தில் சேரமான்பெருமாணயனரோடு உண்மையாகிய பெரிய வெள்ளையானையின்மீ தெழுந்தருளிச் சிவபெருமானுடைய திருவருளினல் உத்தர கயிலாசத்தையடைந்தனர்.—எ-று. (உ)

**தில்லைவாழந்தணர் புராணம்.**

நல்லவா னவர்போற்றுந் தில்லை மன்று
ளாடகஞ்செய் பெருமானுக் கணியார் நற்பொற்
றெல்லைவான் பணியெடுத்தற் குரியார் வீடுந்
துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன் பாடத்
தில்லைவா ழந்தணரென் றெடுத்து நாதன்
செப்புமரு ளுடையார்முத் தீயார் பத்திக்
கெல்லைகாண் பரியாரொப் புலகிற் றமே
யேய்ந்துளா ரெமையாள வாய்ந்து ளாரே.

(இ-ள்.) (தில்லைவாழந்தணர்கள்) சிறந்ததேவர்களும் துதிக்கும் தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் ஆநந்தத்தாண்டவஞ்செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானு

க்கு அணுக்கத்தொண்டராயுள்ளவர்கள் ; மிகச்சிறந்த பழைமையாகிய உயர்ந்த கவரி - குடை - ஆலவட்டமுதலிய பொருள்களைப் பணிமாறுதற்குரியவர்கள் ; மோக்ஷத்தையும்விரும்பாத பத்திநெறியையுடையவர்கள்; (ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள்) முன்பு திருத்தொண்டத்தொகைத்திருப்பதிகம் பாடுதற்கு ஸ்ரீதியாகராசப்பெருமான் "தில்லைவாழந்தணர்" என்னும் முதலடியெடுத்துக் கொடுத்தருளுந்திருவருளைப்பெற்றவர்கள்; ஆவகனீயம் - காருகபத்தியம் - தக்கணாக்கினி என்னும் மூன்றக்கினியையும் வளர்க்கின்றவர்கள் ; தாங்கள்செய்யும் பத்திக்கு யாவராலும் அளவுகாணுதற்கரியவர்கள் ; உலகத்தில் ஒருவரும் தமக்கு நிகரின்றித் தமக்குத்தாமே யொப்பாயுள்ளவர்கள் ; எம்மை யடிமைகொள்ளும்படி திருவுருக்கொண்டவர்களாகும்.—எ-று. (௩)

### திருநீலகண்டநாயனார்புராணம்.

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்த ராகித்
 தீண்டிலெமைத் திருநீல கண்ட மென்று
சொல்லுமனை யாடனையே யன்றி மற்றுந்
 துடியிடையா ரிடையின்பந் துறந்து மூத்தங்
கெல்லையிலோ டிறைவைத்து மாற்றி நாங்க
 ளெடுத்திலமென் றியம்புமென விழிந்து பொய்கை
மெல்லியலா ளுடன்மூழ்கி யிளமை யெய்தி
 விளங்குபுலீச் சரத்தரனை மேவி னாரே.

(இ-ள்.) தில்லைமாநகரத்தில்வாழும் குயவர்குலத்திலவதரித்த திருநீலகண்டநாயனார் காமங்கொண்டவராய்ப்(பரத்தைபாற்சென்ற துணர்ந்தூடி)நீரெம்மைத் தீண்டினால் சிவபெருமான் திருநீலகண்டத்தின் திருவாணையுளதென்றுகூறிய தம் மனையாளின்பத்தையேயன்றிப் பிறமாதர்களிடத்துள்ள இன்பத்தையும்ஒழித்து, அந்தநியமத்தையே அனுசரித்து மூப்புப்பருவமடைந்து,அவ்வாறு ஒழுகும்நாளில், சிவபெருமான் சிவயோகிவடிவங் கொண்டுவந்து அளவில்லாத பெருமைபொருந்திய ஒரு திருவோட்டை அவரிடத்துக்கொடுத்து, பின் (அதைப் பத்திரப்படுத்திவைத்த இடத்தினின்றும்) மறைத்து, (சிலநாள்கழித்துவந்து கேட்டு, அது காணாமையால்) நாங்கள் அபகரிக்கவில்லை யென்று சத்தியஞ்செய்யுங்களென்று கேட்க, திருப்புலீச்சரத்துக் கெதிரிலுள்ள * வியாக்கிரபாத தீர்த்தத்தில் இறங்கித் தமது மனைவியாரோடு மூழ்கி இளமைப்பருவமடைந்து விளங்குகின்ற திருப்புலீச்சரத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருவடியையடைந்தனர்.—எ-று.

### இயற்பகைநாயனார் புராணம்.

எழிலாருங் காவிரிப்பூம் பட்டி னத்து
 ளியல்வணிக ரியற்பகையா ரிருவர் தேட
வழலாய பிரான்றூர்த்த மறையோ னாகி
 யாயிழையைத் தரவேண்டி யணைய வையன்
கழலாரப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக்
 காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால் வந்த
பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்து மீளப்
 பிஞ்ஞகனை ரழைத்தருளப் பெற்று ளாரே.

* இது இளமைநாயனார்குளம் எனவும் பெயர்பெறும்.

(இ-ள்.) அழகுபொருந்திய காவிரிப்பூம்பட்டணத்தில் வாழ்ந்திருந்த சிறந்த வணிகர்குலத்தினராகிய இயற்பகைநாயனார், திருமால் பிரமன் என்னும் இருவரும் தேடும்படிக்கு அக்கினிமலையாக நின்ற சிவபெருமான் காமங்கொண்ட ஒரு பிராமணத்திருவுருவங்கொண்டு, அவர் மனைவியாரைக்கேட்கும்படி விரும்பிவர அப்பிராமணராகிய சிவபெருமானது திருவடிகளில் பொருந்த வணங்கி, இல்லறத்திற்குரிய கற்பிற்சிறந்த தமது மனைவியைக்கொடுத்து, அதுகாரணமாகப்போர்ச்செய்யும் எண்ணத்தோடு திரண்டுவந்த குற்றம்பொருந்திய உறவினரையெல்லாம் வாளால் வெட்டிப் பின்பு விடைபெற்றுக்கொண்டு வீட்டிற்குத் திரும்பிவரும் பொழுது, சிவபெருமான் அழைத்து ரிஷபாரூடராய்க் காட்சிகொடுத்தருளச் சிவலோகத்தைப் பெற்றனர்.—எ-று. (ரு)

### இளையான்குடிமாறநாயனார் புராணம்.

மன்னியவே ளாண்டொன்மை யிளசை மாறர்
வறுமையா லுணவுமிக மறந்து வைகி
யுன்னருநள் ளிருண்மழையி லுண்டி வேண்டி
யும்பர்பிரா னணையவய லுழுது வித்துஞ்
செந்நென்முளை யமுதுமனை யலக்கா லாக்கிச்
சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து
பன்னலரு முணவருந்தற் கெழுந்த சோதிப்
பரலோக முழுதாண்ட பான்மை யாரே.

(இ-ள்.) நிலைபெற்ற பழைமையாகிய வேளாளர்குலத்தில் அவதரித்த இளையான்குடிமாறநாயனார் வறுமையினால் உணவில்லாமல் மிகவும் பசித்திருந்து, நினைத்தற்கரிய மிக்க இருளோடுகூடிய மழைக்காலத்தில் தேவர்கள்நாயகராகிய சிவபெருமான் அடியார்வேடங்கொண்டு உணவுவேண்டி யெழுந்தருளவும், அன்று வயலில் உழுது விதைத்த சம்பாநெல்லின் முளைகளை வீட்டு வரிச்சலைப்பிடுங்கித் திருவமுதாகச்சமைத்து, புன்செய்ப்பயிரின் கீரையாலாகிய கறியமுதைத் திருத்தமாகச்செய்து, சொல்லுதற்கரிய திருவமுதுசெய்யும்படிக்குத் துயினீங்கியெழுந்த ஒளிப்பிழம்பாகிய சிவபெருமானது சிவலோகமுழுதும் ஆளும் தன்மையுடையவராயினர்.—எ-று. (சா)

### மெய்ப்பொருணாயனார் புராணம்.

சேதியர்கற் கோவலூர் மலாட மன்னர்
திருவேட மெய்ப்பொருளாத் தெளிந்த சிந்தை
நீதியினு ருடன்பொருது தோற்ற மாற்று
னெடுஞ்சினமுங் கொடும்பகையு நிகழா வண்ண
மாதவர்போ லொருமுறைகொண் டணுகி வாளால்
வன்மைபுரிந் திடமருண்டு வந்த தத்தன்
காதலுற நமர்தத்தா வென்று நோக்கிக்
கடிதகல்வித் திறைவனடி கைக்கொண் டாரே.

(இ-ள்.) சேதிநாட்டுக்கதிபரும், சிறந்த திருக்கோவலூரில் வாழ்ந்திருந்த மலையாளதேசத்தரசரும் அடியார் திருவேடத்தையே உண்மைப்பொருளாகத்தெளிந்த திருவுள்ளத்தையுடையவருமாகிய மெய்ப்பொருணாயனார், தம்மோடு எதிர்த்

துப் போர்செய்து தோல்வியடைந்த பகைவனாகிய முத்தநாதனெனவன் தானடைந்த மிக்க கோபத்தையும், கொடியபடையையும் வெளிப்படாமல் மறைத்து,பெரிய தவத்தினரைப்போல வேடங்கொண்டு ஒரு புத்தகக்கவளிகையைக் கையிலெடுத்துவந்து,அரசனுள் மறைத்துவைத்திருந்த குற்றுடைவாளினால்தீங்குசெய்ய, அதைக்கண்டு மனமயங்கி விரைந்துவந்த தத்தனென்பவன் அவனைக்கொல்லும் ~~படி~~ப்பார்த்து, தத்தா! இவர் நம்பெரியவர் என்றுகூறிக் கொல்லாமல்தடுத்து, விரைந்து அவ்வூருக்குப் புறத்தில் கொண்டுபோய்விடும்படி செய்து, சிவபெருமானுடைய திருவடியை யடைந்தனர்.—எ-று.

## விறன்மிண்டநாயனார் புராணம்.

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் டொன்மை
விறன்மிண்டர் திருவாரூர் மேவு நாளில்
வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும்
வன்றொண்டன் புறகவனை வலிய வாண்ட
துளங்குசடை முடியோனும் புறகென் றன்பாற்
சொல்லுதலு மவர்தொண்டத் தொகைமுன் பாட
வுளங்குளிர வுளதென்று ரதனு லண்ண
லுவகைதர வுயர்கணத்து ளோங்கி னாரே.

(இ-ள்.) புகழால்விளங்குகின்ற திருச்செங்குன்றூரில் அவதரித்த பழையவேளாளர்குலத்தினராகிய விறன்மிண்டநாயனார் திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் நாளில், திருவருட்செல்வம் விளங்கிய திருத்தொண்டர்களது திருவடிகளை வணங்காமல் திருக்கோயிலுக்குப் போகின்ற நம்பியாரூரன் அடியார்களுக்குப் புறம்பு; அந்நம்பியாரூரனை வலிந்து தடுத்தாட்கொண்ட விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானும் அடியார்களுக்குப் புறம்பு என்று (அடியார்மேல் வைத்த) அன்போடுசொல்லவும், அந்நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்தை அவர்திருமுன்னேவணங்கிப் பாடியருள, அதனைக்கேட்டு, இவர் புறம்பில்லையென்று கூறி யருளினார்; அக்காரணத்தினால், சிவபெருமான் மகிழ்கூர்ந்தருள உயர்ந்த சிவகணத் தலைவராய் விளங்கினர்.—எ-று. (அ)

## அமர்நீதிநாயனார் புராணம்.

பழையாறை வணிகரமர் நீதி யார்பாற்
பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலு நல்லூர்க்
குழைகாதர் வந்தொருகோ வணத்தை வைத்துக்
கொடுத்ததனை யெடுத்தொளித்துக் குளித்து வந்து
தொழிலாரு மதுவேண்டி வெகுண்டு நீரித்
துலையிலிடுங் கோவணநேர் தூக்கு மென்ன
வெழிலாரும் பொன்மனைவி யிளஞ்சே யேற்றி
யேறினர்வா னுலகுதொழ வேறி னாரே.

(இ-ள்.) திருப்பழையாறையென்னுமூரில் வணிகர்குலத்திலவதரித்த அமர்நீதிநாயனாரிடத்துத் திருநல்லூரில் வீற்றிருந்தருளும் சங்கக்குழையணிந்த திருச்செவியையுடைய சிவபெருமான் வணங்குதற்குரிய சிறிய பிரமசாரிவடிவங்கொண்டெழுந்தருளித் தாம் தரிக்கும்படிவைத்திருந்த இரண்டுகோவணத்துள் ஒன்

றை அவரிடத்திற்கொடுத்து, பின்பு தாம் கொடுத்த அக்கோவணத்தை எடுத்து மறைத்து நீராடிவந்து, நெய்தற்றொழிலமைந்த அக்கோவணத்தைக்கேட்டு, அதைக்கொடாமையால் கோபங்கொண்டு, நீர் இத்தராசில் நான் இடும்கோவணத்திற்கு ஒத்த நிறையுள்ளகோவணத்தை நிறுத்துக் கொடுமென்று கேட்க, (அவ்வாறே கோவணமுதலிய பொருள்கள் நிறையில்லாமையால்) அழகுபொருந்திய திரவியங்களையும், மனைவியையும், இளமையாகிய புத்திரனையும் அத்துலையில் [illegible] தாமும் ஏறினர். (பின் அத்துலையே விமானமாக) விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் தொழும்படி சிவலோகமடைந்தனர்.—எ-று. (௯)

## எறிபத்தநாயனார் புராணம்.

திருமருவு கருவூரா னிலையார் சாத்துஞ்
சிவகாமி யார்மலரைச் சிந்த யானை
யரநெறியோ ரெறிபத்தர் பாக ரோடு
மறவெறிய வென்னுயிரு மகற்றீ ரென்று
புரவலனார் கொடுத்தபடை யன்பால் வாங்கிப்
புரிந்தரிவான் புகவெழுந்த புனித வாக்காற்
கரியினுடன் விழுந்தாரு மெழுந்தார் தாமுங்
கணநாத ரதுகாவல் கைக்கொண் டாரே.

(இ-ள்.) அழகுபொருந்திய திருக்கருவூர்த் திருவானிலையென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்குத்தொடுத்துச் சாத்துகின்ற சிவகாமியாண்டாரது திருப்பூங்கூடையிலுள்ள மலர்களை (மகாநவமியின் முன்னாளாகிய அட்டமியில் காவிரியிலே நீராடிவந்த புகழ்ச்சோழநாயனாரது) பட்டவர்த்தனயானைபறித்துச்சிந்த, (அதைக்குறித்துச் சிவகாமியாண்டாரடைந்த வருத்தத்தை நோக்கி) சிவபெருமானடியவராகிய எறிபத்தநாயனார் அந்தயானையைப் பாகரோடும் அறும்படிவெட்ட, (அதனையறிந்து அப்பிழைக்கு) என்னுடைய உயிரையும் போக்குவீராகவென்று புகழ்ச்சோழநாயனார் கொடுத்த உடைவாளை அன்போடு வாங்கித் தமது கழுத்தினையே அரிந்துகொள்ளத்தொடங்க, (உமது அடிமைத்திறத்தை உலகில் வெளிப்படுத்தும்பொருட்டு இவ்வாறு நிகழ்ந்ததென்று) ஆகாயத்தில் தூய்மையாகிய அசரீரிவாக்கெழுந்தவுடன், இறந்தயானையும் பாகர்களும் உயிர்பெற்றெழுந்தனர்; எறிபத்தநாயனாரும் (திருக்கயிலாசத்தில்) சிவகணநாதராகிய காவற்றொழிலைப்பெற்றனர்.—எ-று. (௧௦)

## ஏனாதிநாதநாயனார் புராணம்.

ஈழக் குலச்சான்றா ரெயினா னூர்வா
ழேனாதி நாதனா ரிறைவ னீற்றைத்
தாழத் தொழுமரபார் படைக ளாற்றுந்
தன்மைபெறா வதிசூரன் சமரிற் றோற்று
வாழத் திருநீறு சாத்தக் கண்டு
மருண்டார் தெருண்டார்கை வாள்வி டார்நேர்
வீழக் களிப்பார்போ னின்றே யாக்கை
விடுவித்துச் சிவனருளே மேவி னாரே.

(இ-ள்.) ஈழக்குலத்திலவதரித்த சான்றோராகிய எயினனூரில் வாழ்ந்திருந்த ஏனாதிநாதநாயனார் சிவபெருமானது திருவெண்ணீற்றையணிந்த அடியார்களைத் தமது தேகம் பூமியில்பொருந்தும்படி வணங்கும் இயல்பினையுடையவர்; அவர் தம் மோடு சமமாக வாட்படைபயிற்றுந் தன்மையைப்பெறாத அதிசூரனென்பவன் அவ்வாட்போரில் தோல்வியடைந்து, தானுயிர்பெற்று வாழும்படிதிருநீறுதரித்து வஞ்சமாகப் போர்செய்யவர, அவனைப்பார்த்து, இவர் சிவனடியராய் விட்டன ரென்றுமயங்கி,நாம் இவர்க்குத் தீங்குசெய்யாமல் இவரால்கொல்லப்படுவதே தகுதி யானதென்று தெளிந்து, கையில்தாங்கிய வாளைவிடாதவராய் அவனுக்கெதிரில் வீழ்ந்திறக்கக் களிப்படைபவர்போல நின்று, அவனால் தேகத்தை யொழித்துச் சிவபெருமானது திருவருளையடைந்தனர்.—எ-று. (கக)

**கண்ணப்பநாயனார் புராணம்.**

வேடரதி பதியுடுப்பூர் வேந்த னாகன்
விளங்கியசேய் திண்ணனார் கன்னி வேட்டைக்
காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங்
காய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தி யார்க்குத்
தேட்டருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச்
சீறுசிவ கோசரியுந் தெளியவிழிப் புண்ணீ
ரோடவொரு கண்ணப்பி யொருகண் ணப்ப
வொழிகவெனு மருள்கொடரு குறநின் றோரே.

(இ-ள்.) வேடர்கள் தலைவனும் உடுப்பூர்க்கரசனுமாகிய நாகனென்பவன் பெற்ற விளக்கமுற்ற புத்திரராகிய திண்ணனாரென்பவர் முதல்வேட்டையாடப் புகுந்தகாட்டில், தமது வாயில்கொண்டுவந்த திருமஞ்சனசலத்தையும், குடுமியில் சூடிய மலர்களையும், அம்பிற்கோத்து நெருப்பிற்காய்ச்சிய மென்று சுவைபார்த்த மாமிசத்தையும் திருக்காளத்தியப்பருக்கு மிகுந்த பேரன்போடு ஆறுநாள்வரையி லுங் கொடுக்க, அதைக்கண்டு, (இவ்வநுசிதமானகாரியத்தைச் செய்தவர்கள் யா ரென்று) கோபித்த சிவகோசரியாரென்னும் சிவவேதியரும் உலகத்தாரும் தெளி யும்படி, சிவபெருமான் தமது திருக்கண்களினின்றும் உதிரம் பெருகச்செய்ய, அதுநிற்கும்பொருட்டுத் தமதுவலக்கண்ணையிடந்து அப்பி, பின்பு இடக்கண்ணை யும் இடந்து அப்பத்தொடங்க, சிவபெருமான் “கண்ணப்பநிற்க” என்று திருவ ருளாலுரைத்தருளிய திருவாக்கைப்பெற்றுக்கொண்டு, அவ்வெம்பெருமானுக் கரு கில் எந்நாளும் நீங்காதிருக்கப் பெற்றனர்.—எ-று. (கஉ)

**குங்குலியக்கலயநாயனார் புராணம்.**

சீலமலி திருக்கடவூர்க் கலய னாராந்
திகழ்மறையோர் பணிவறுமை சிதையா முன்னே
தாலியைநெற் கொளவென்று வாங்கிக்கொண்டு
சங்கையில்குங் குலியத்தாற் சார்ந்தசெல்வர்
ஞாலநிகழ் திருப்பனந்தா ளுதர் நேரே
நரபதியுந் தொழக்கச்சா னயந்து போதப்
பாலமுத முண்டாரு மரசு மெய்திப்
பரிந்தமுது செயவருள்சேர் பான்மை யாரே.

(இ-ள்.) நல்லொழுக்கமமைந்த திருக்கடவூரில் அவதரித்த குங்கிலியக்கலய நாயனாரென்னும் புகழ்விளங்கும் வேதியர் தாம்செய்துகொண்டிருந்த குங்கிலியத்தூபத் திருப்பணியானது வறுமையால் கெடுவதற்குமுன்னே, தமது பத்தினியாரது திருமங்கிலியத்தை நெற்கொள்ளும்படி வாங்கிக்கொண்டு (அதைக்கொடுத்து மாறிய) குற்றமற்ற குங்கிலியத்தால் தூபமிட்டு அடைந்தசெல்வத்தையுடையவர்; அவர், உலகத்தில் விளங்குகின்ற திருப்பனந்தாளென்னும் ஸ்தலத்தில் சாய்ந்ததிருக்கோலத்தோடு வீற்றிருந்தருளிய சிவபெருமானைத் திருமுடி நேரே யிருக்கும்படி சோழராஜனும் பிறரும்வணங்கப் பூங்கச்சால் தமதுகழுத்தில் மாட்டியிழுத்து நேராகநிமிர்த்து, பின் சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் திருநாவுக்கரசுசுவாமிகளும் தமதுதிருமனைக்கெழுந்தருளி அன்புகூர்ந்து திருவமுதுசெய்த காரணத்தால் அவரருளேயன்றிச் சிவபெருமான் திருவருளையுமடைந்த தன்மையராயினர்.—எ-று. (௧௪)

மானக்கஞ்சாறநாயனார் புராணம்

கஞ்சநகர் மானக்கஞ் சாற னார்சீர்க்
காதன்மகள் வதுவைமணங் காண நாதன்
வஞ்சமலி மாவிரதத் தலைவ னாகி
வந்துபுகுந் தவளளக மகிழ்ந்து நோக்கிப்
பஞ்சவடிக் காமென்ன வரிந்து நீட்டும்
பத்தரெதிர் மறைந்திறைவன் பணித்த வாக்கா
லெஞ்சலில்வண் குழல்பெற்ற பேதை மாதை
யேயர்பிராற் குதவியரு ளெய்தி னாரே.

(இ-ள்.) கஞ்சாறுஎன்னும் நகரத்தில் வாழ்ந்திருந்த மானக்கஞ்சாற நாயனாரது சிறப்பினை யுடைய ஆசைப்புதல்வியின் திருமணத்தைக் காணும்படி சிவபெருமான் வஞ்சகநிறைந்த ஓர் மாவிரதவேடங்கொண்டுவந்து அவர்மனையிற் புகுந்து, அப்புதல்வியின்கூந்தலைக் களிப்புற்றுப் பார்த்தருளி, இப்பெண்ணின் தலைமயிர் பஞ்சவடிக்காகுமென்று கூறியருள, அப்பொழுதே வாளினால் அக்கூந்தலையரிந்துகொடுத்த அம்மானக்கஞ்சாறநாயனாருக் கெதிரில், அந்த மாவிரதவேடங்கொண்டுவந்த சிவபெருமான் மறைந்து அசரீரியாகக்கூறியருளிய திருவாக்கினால், குறைவற்ற வளவிய கூந்தலை முன்போலப்பெற்ற பேதைப்பருவமுடைய தம்புதல்வியை ஏயர்கோன் கலிக்காமநாயனாருக்குத் திருமணஞ்செய்து முடித்துச் சிவபெருமான் திருவருளையடைந்தனர்.—எ-று.

பஞ்சவடியாவது - மயிரினாலே அகலமாகச்செய்யப்பட்டு மார்பில் பூணூலாகத் தரிக்கப்படும் வடம். பஞ்சம்=விரிவு; வடி=வடம். (௧௫)

அரிவாட்டாயநாயனார் புராணம்.

தாவில்கண மங்கலத்துள் வேளாண் டொன்மைத்
தாயனார் நாயனார் தமக்கே செந்நெற்
றூவரிசி யெனவிளைவ தவையே யாகத்
துறந்துணவு வடுவரிசி துளங்கு கீரை

யாவினினோங் குடன்கொணர வோர்கமரிற் சிந்த
வழிந்தறிவாள் கொண்டூட்டி யரியா முன்னே
மாவடுவி ளெலியுமரன் கரமுந் தோன்றி
வாள்விலக்கி யமரர்தொழ வைத்த தன்றே.

(இ-ள்.) நிலைபெற்ற கணமங்கலமென்னும் ஊரில், பழையவேளாளர்குலத்தினராகிய அரிவாட்டாயநாயனர், வயலில்விளையும் சம்பாநெல்லின் தூய்மையான அரிசிகளெல்லாம் சிவபெருமானுக்கேயென்று கூறியருள, தமது வயல்களில்விளையும் நெல்லெல்லாம் அச்சம்பாவேயாக, அதனால் அந்தச் சம்பாநெல்லரிசிச் சோற்றைத் தாமுண்ணாமல், மாவடுவும், செங்நெல்லரிசியும், தளிர்த்த கீரையும் ஆகிய இவைகளைப் பஞ்சகவ்வியத்துடன் கொண்டுவர, பசிவருத்தத்தினால் கால் தளர்ந்து நிலப்பிளப்பில் சிந்த, அதனால்வருந்தித் தமது கையில்தாங்கிய அரிவாளினால் ஊட்டியையரிவதற்கு முன்னே அக்கமரில் விடேல் என்னும் மாவடுவின் ஓசையும், சிவபெருமானது திருக்கரமும் வெளிப்பட்டு, அந்த அரிவாளைவிலக்கித் தேவர்கள்வணங்கும்படித் திருவருள்புரிந்தது.—எ-று. (௧௬)

## ஆனாயநாயனர் புராணம்.

மங்கலமா மழநாட்டு மங்கலமா நகருண்
மருவுபுக ழானாயர் வளரா மேய்ப்பார்
கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்கு சார்ந்து
குழலிசையி னைந்தெழுத்துங் குழைய வைத்துத்
தங்குசரா சரங்களெல்லா முருகா நிற்பத்
தம்பிரா னணைந்துசெவி தாழ்த்தி வாழ்ந்து
பொங்கியவான் கருணைபுரிந் தென்று மூதப்
போதுகவென் றருளவுடன் போயி னாரே.

(இ-ள்.) மங்கலகரம் பொருந்திய மழநாட்டிலுள்ள திருமங்கலமென்னும் நகரத்தில் அவதரித்த புகழையுடைய ஆனாயநாயனர் வளர்கின்ற அவ்வூர்ப்பசுக்களை மேய்க்கின்றவர், அவர் வாசனை வீசுகின்ற மலர்களையுடைய சிறந்த கொன்றை விருக்ஷத்தினருகில் சென்று, வேய்ங்குழலி னிசையிலே திருவைந்தெழுத்தையும் அமையும்படிவைத்து வாசிக்க, நிலைபெற்ற சராசரங்களாகிய எல்லாவுயிர்களும் அதைக்கேட்டு மனமுருக, அப்பொழுது சிவபெருமானெழுந்தருளித் திருச்செவி கொடுத்துத் திருவுள்ளமகிழ்ந்து, சிறந்த பெருங்கருணைபுரிந்து, எந்நாளும் நமது சிவலோகத்திலிருந்து இவ்வேய்ங்குழலூதும்படி எம்முடன் வரக்கடவையென்று அருள் செய்ய, அவ்வெம்பெருமானுடன் திருக்கயிலையை யடைந்தனர்.—எ-று.

## மூர்த்திநாயனர் புராணம்.

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தி யாராம்
வணிகர்திரு வாலவாய் மன்னர் சாத்தத்
தழங்குதிர முழங்கைதரத் தேய்த்த வூறுந்
தவிர்ந்தமணர் வஞ்சனையுந் தவிர மன்ன

விழுந்தவுயி ரினனுக ஞால நல்க
வெழில்வேணி முடியாக விலங்கு வேட
முழங்குபுக பூணியாக விளைநீ ருக
மும்மையுல காண்டருளின் முன்னி ஞரே.

(இ-ள்.) நிறைந்த புகழையுடைய மதுராபுரியில் வணிகர்குலத்தில் அவத ரித்த மூர்த்திநாயனுரென்பவர் திருவாலவாயென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தரு ளும் சோமசுந்தரக்கடவுளுக்குச் சாத்தும்பொருட்டு (சந்தனம் இழைத்துக் கொ டுக்கும் திருத்தொண்டு நடைபெறும் வண்ணம் அவ்வூரையாண்ட கருநடமன் னவன் சந்தனக்கட்டை ஒருவருங் கொடாமல் தடுத்த காரணத்தினுல் சந்தன க்கட்டை கிடையாதிருக்க வருந்தி, இன்று சந்தனக்கட்டைக்கு முட்டுப்பாடாயி னும் தேய்க்குங்கைக்கு முட்டில்லையென்று) தமது முழங்கையில் உதிரஞ் சிந்தும் படி தேய்த்ததனுலுண்டாகிய காயமும் நீங்கி,சமணர்களுடைய வஞ்சனையும்நீங்க, பின் அக்கருநட மன்னவன் இறக்க, உலகத்தையரசாட்சிசெய்யும்படி அழகிய சடைமுடியே மகுடமாகவும், விளங்குகின்ற உருத்திராக்ஷமுதலிய திருவேடமே புகழ்சிறந்த ஆபரணமாகவும்,திருவெண்ணீறே பூசுங் கந்தவர்க்கமாகவுங்கொண்டு, இம்மூன்றினுலும் உலகத்தை யரசாட்சிசெய்து சிவபெருமான் திருவருளை யடை ந்தனர்.—எ-று. (கஅ)

## முருகநாயனுர் புராணம்.

மன்னுதிருப் புகலூர்வாழ் முருக ஞரா
மறையவர்கோ வர்த்தமா னீச்ச ரத்தார்
சென்னியினுக் கழகமரு மலர்கள் கொய்து
திருமாலை புகழ்மாலை திகழச் சாத்திக்
கன்னிமதிற் கழுமலநா டுடைய நாதன்
காதன்மிகு மணங்காணுங் களிப்பி ஞலே
யின்னல்கெட வுடன்சேவித் தருளான் மீளா
திலங்குபெரு மணத்தரனை யெய்தி ஞரே.

(இ-ள்.) நிலைபெற்ற திருப்புகலூரில் வாழ்ந்திருந்த முருகநாயனுரென்னும் பிராமணசிரேஷ்டர் வர்த்தமானீச்சரமென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவ பெருமானது திருமுடிக்கு அழகுபொருந்திய மலர்களைப்பறித்துப்பூமாலைகளையும், பாமாலைகளையும் விளங்கும்படி தரித்து, நிலைபெற்ற மதில் சூழ்ந்த சீகாழித்தலைவ ராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளது ஆசை மிகுந்த திருமணத்தைத் தரி சிக்கும் மகிழ்ச்சியில் சென்று, தமது பிறவித்துன்பம் நீங்கும்படி அடியார்களுட ன் தரிசித்துச் சிவபெருமானுடைய திருவருளினுல் மீண்டு பிறவாமல் விளங்கு கின்ற திருப்பெருமணமென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருவடிகளை யடைந்தனர்.—எ-று. (கக)

## உருத்திரபசுபதிநாயனுர் புராணம்.

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர் வாழும்
பசுபதியா ரெனுமறையோர் பணிந்து செந்தே
னங்கமல மடுவினிடை யல்லு மெல்லு
மகலாதே யாகளமா யமர்ந்து நின்று

திங்கள்வளர் சடைமுடியா னடிகள் போற்றித்
திருவெழுத்து முருத்திரமுந் திகழ வோதி
மங்கையிட முடையபிரா னருளான் மேலை
வானவர்க டொழுமுலகின் மன்னி னாரே.

(இ-ள்.) குற்றமற்ற வளவிய புகழ் விளங்குகின்ற திருத்தலையூரென்னுந் தலத்தில் வாழ்ந்திருந்த உருத்திர பசுபதிநாயனாரென்னுந் திருநாமத்தினையுடைய மறையவர், திருக்கரங்களைக்குவித்துக்கொண்டு, சிவந்த தேன்பொருந்திய அழகிய தாமரைமலர்களையுடைய தடாகத்தின்கண் இரவும் பகலும் நீங்காமல் அன்போடு கழுத்தளவு நீரில் நின்றுகொண்டு, இளம்பிறை வளர்கின்ற சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிகளைத் துதித்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையும், திருவுருத்திரமந்திரத்தையும் விளங்கச்சபித்து, உமாதேவியை இடப்பாகத்திலுடைய சிவபெருமானது திருவருளினால் விண்ணுலகத்திலுள்ள தேவர்களும் வணங்கத்தக்க சிவலோகத்தை யடைந்தனர்.—எ-று. (௨0)

## திருநாளைப்போவார்நாயனார் புராணம்.

நன்மைதிகழ் மேற்கானாட் டாத னூர்வாழ்
நந்தனார் புறத்தொண்டர் நாளைப் போகப்
பொன்மலிதென் புலியூர்க்கென் றுரைப்பார் புன்கூர்ப்
பொய்கையமைத் தடலேறு பிரிய நோக்கி
வன்மதில்சூழ் தில்லையிறை யருளால் வாய்ந்த
வண்டழலி னிடைமூழ்கி மறையோர் போற்ற
மின்மலிசெஞ் சடைமுனியா யெழுந்து நாதன்
விளங்குநடந் தொழமன்றுண் மேவி னாரே.

(இ-ள்) நன்மைவிளங்குகின்ற மேற்கானாட்டிலுள்ள ஆதனூரில் வாழ்ந்த நந்தனார் என்னுந் திருநாமத்தினையுடைய புறத்தொண்டர்,இலக்ஷுமிகரம்பொருந்திய அழகிய ஸ்ரீசிதம்பரத்திற்கு நாளைக்குப்போய்த் தரிசிப்போமென்று சொல்கின்றவர் ; திருப்புன்கூரில் ஒரு தடாகமமைத்து, அத்திருப்பதியிலுள்ள விடைத்தேவர் விலகிநிற்கச் சிவலோகநாதனை நேரே தரிசித்து, வலிய மதில்சூழ்ந்த ஸ்ரீ சிதம்பரத்தின்கண் ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானது திருவருளினால் அமைக்கப்பட்ட செழித்த அக்கினியில் மூழ்கி தில்லைவாழந்தணர்கள் துதிக்க, மின்னல்போல விளங்குகின்ற சிவந்த சடைமுடியையுடைய பிராமணமுனிவராக எழுந்து, சிவபெருமானது விளங்குகின்ற திருநடனத்தைத் தரிசிக்கும்படி திருச்சிற்றம்பலத்துள் சென்று மறைந்தனர்.—எ-று. ()

## திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணம்.

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரே காலிக்
குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்து ளார்பால்
வந்திறைவர் நமக்கின்று தாரீ ராகின்
வருந்துமுடலெனவாங்கி மாசு நீத்த

கந்தைபுல ராதொழிய மழையு மாலைக்
கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கன்மேற்
சிந்தமுடி புடைப்பளவிற் றிருவே கம்பர்
திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தி னாரே.

(இ-ள்.) கொத்தாக அலர்ந்த மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த ஸ்ரீகாஞ்சிநகரத்தில் வாழ்ந்திருந்த ஏகாலியர் குலத்தலைவராகிய சிவனடியார்களின் திருவுள்ளக்குறிப்பையறிந்து தொண்டு செய்யும் திருக்குறிப்புத் தொண்ட நாயனாரிடத்துச் சிவபெருமான் ஒரு அடியார் வேடங்கொண்டெழுந்தருளி வந்து (நாம் தரித்திருக்கும் இக்கந்தையின் அழுக்கைப்போக்கி) இன்றுநீர்கொடாதொழிவீராயின், எமது உடம்பு குளிரால் வருந்துமென்று சொல்லிக்கொடுக்க, அதனை வாங்கித் தோய்த்து அழுக்கு நீக்கிய அக்கந்தையானது உலராதிருக்க மழையும் மாலைப்பொழுதும் வரப்பார்த்து மனங்கலங்கி, தாம் வஸ்திரம் தோய்க்கும் கல்லின்மேல் தலைசிதறும்படி மோதத்தொடங்கின வளவில், ஏகாம்பரநாதர் தமது திருக்கரத்தால் அவர்கையைப்பிடித்து சிறந்த சிவபதத்தில் சேர்த்தருளினார்.—எ-று. (உஉ)

## சண்டேசுரநாயனார் புராணம்.

வேதமலி சேய்ஞலூ ரெச்ச தத்தன்
விளங்கியசேய் மறைபயிலும் விசார சன்மர்
கோதனமேய்ப் பவன்கொடுமை பொறாது தாமே
கொண்டுமிளை மண்ணியின்றென் கரையி னீழற்
றாதகியின் மணலிலிங்கத் தான்பா லாட்டத்
தாதைபொறா தவையிடறுந் தாள்கண் மாளக்
காதிமலர்த் தாமமுயர் நாம முண்ட
கலமகனும் பதமருளாற் கைக்கொண் டாரே.

(இ-ள்.) வேதங்களை அத்தியயனஞ் செய்யும் ஓசைமிகுந்த திருச்சேய்ஞலூரில் வாழ்ந்த எச்சதத்தனென்னும் பிராமணனுடைய சிறந்த புத்திரராகிய வேதங்களை ஓதும் விசாரசருமரானவர் பசுமந்தைமேய்க்கும் இடையன்அப்பசுக்களைச் செய்யும் கொடுமையைப் பார்த்து மனம்பொறாமல் வருந்தித் தாமே மேய்ப்பதாக ஏற்றுக்கொண்டு, அப்பசுக்களை மண்ணியாற்றின் தென்கரையில் திருவாத்தி மரத்தின் நிழலின்கண் மணலாலமைத்த சிவலிங்கப்பெருமான்மேல் அப்பசுக்களின் பாலைக்கறந்து அபிஷேகஞ்செய்ய அதைக்கண்ட தந்தையாகிய எச்சதத்தன்மனம் பொறாமல் அந்தப்பாற்குடங்களை இடறிய கால்கள்அறும்படி வெட்டிச் சிவபெருமான் திருமுடியில்தரித்த கொன்றைமலர் மாலையையும், உயர்ந்த சண்டேசனென்னுந் திருநாமத்தையும்,பரிகலத்தையும்,மகனென்னும்முறைமையையும் அவ்வெம்பெருமானது திருவருளினால் பெற்றனர்.—எ-று. (உங)

## திருநாவுக்கரசுசுவாமிகள் புராணம்.

போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப்
பொருவில்கொறுக் கையரதிபர் புகழ னார்பான்
மாற்றருமன் பினிற்றிலக வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாருந்

தோற்றியமண் சமயமுறு துயர நீங்கத்
துணைவரரு டரவந்த சூலை நோயாற்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத் திரத்திற்
பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார்.

(இ-ள்.) யாவராலும் புகழப்பட்ட திருவாமூரில் பழைய வேளாளர் மரபில் அவதரித்த ஒப்பற்ற கொறுக்கையர் குடித்தலைவராகிய புகழனாரிடத்து, நீங்காத பேரன்பினையுடைய திலகவதியாரென்னும் புத்திரியார்வந்து அவதரித்த பின்பு மருணீக்கியாருந் திருவவதாரஞ்செய்து, சமணசமயச்சார்புற்றிருந்த துன்பம் நீங்கும்படி உயிர்த்துணைவராகிய சிவபெருமான் திருவருள்காரணமாகத் தம்மையடைந்த சூலைநோயினால் நீக்குதற்கரிய மிகுந்த துன்பத்தையடைந்து, பாடலி புத்திரமென்னு மூரிலுள்ள சமண்பள்ளியையொழித்துச்சிவபெருமான் வீற்றிருந் தருளும் திருவதிகை வீரட்டானத்தில் வந்தனர்.—எ-று.

வந்துதமக் கையரருளா னீறு சாத்தி
வண்டமிழா னோய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி
யந்தமிலப் பூதிமக னரவு மாற்றி
யருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலை கண்டு
பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தி னாரே.

(இ-ள்.) திருவதிகைவீரட்டானத்தையடைந்து தமது தமக்கையாராகிய திலகவதியாரது திருவருளினால் திருவெண்ணீறு தரித்து, ("கூற்றாயினவாறு" என்னுமுதலையுடைய) வளவிய திருப்பதிகம்பாடிச் சூலைநோய் நீங்கித் திருநாவுக்கரசுசுவாமிகள் என்னுந்திருநாமம்பெற்று, சமணர்களாலிடப்பட்ட வெந்தசுண்ணாம்பு நீற்றறை, விஷம், இடறச்செய்தயானை, கல்லிற்கட்டிப்போடப்பட்ட கடல் என்னும் இவைகளாலுண்டாகிய துன்பத்தினின்று நீங்கி, திருத்தூங்கானை மாடமென்னும் ஸ்தலத்தில் சிறந்த சூலமுத்திரையும் கொடியாகிய இடபமுத்திரையும் திருமேனியில் விளங்கத் தரித்து, திங்களூரில் கெடாத அன்பினையுடைய அப்பூதி நாயனாரது புத்திரனைக்கடித்த பாம்பின் விஷத்தை நீக்கி, சிவபெருமான் திருவருளினால் திருவீழிமிழலையில் படிக்காசுபெற்று, திருமறைக்காட்டில் வேதங்கள் பூசித்து மூடிய திருக்கதவைத்திறந்து திருவையாற்றில் ஸ்ரீகயிலாசதிருக்கோலத்தை மனமகிழ்ந்து தரிசித்து, திருப்புகலூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது திருவடிகளை யடைந்தனர்.—எ-று. (உரு)

குலச்சிறைநாயனார் புராணம்.

கோதில்புகழ் தருமணமேற் குடியார் கோவண்
குலச்சிறையார் தென்னர்குல வமைச்சர் குன்றா
மாதவர்க ளடிபரவு மரபார் பாண்டி
மாதேவி யாரருள்வான் பயிர்க்கு வேலி

காதன்மிகு கவுணியர்கோன் வாதிற் றோற்ற
கையரை வையைக்கரைசேர் கழுவி லேற்று
நீதியினு ராலவாய் நிமலர்ச் சேர்ந்த
நின்மலனு ரென்மலங்க ணீக்கி னாரே.

(இ-ள்.) குற்றமற்ற புகழையுடைய மணமேற்குடியென்னும் நகரத்தார்க்குத் தலைவராயுள்ளவர்; வளவிய குலச்சிறைநாயனுரென்னுந் திருநாமமுடையவர்; பாண்டியவமிசத்திற்கு மந்திரியாயுள்ளவர்; குறையாத பெருந்தவத்தினையுடைய அடியார்களது திருவடிகளை வணங்கும் முறைமையினையுடையவர்; பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியார் அனுசரித்தொழுகும் அருணெறியாகிய சிறந்த சைவப்பயிருக்கு வேலிபோன் றுள்ளவர்; சிவநேசமிகுந்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளோடு வாதுசெய்து தோல்வியடைந்த வஞ்சகர்களாகிய சமணரை வையையாற்றங்கரையில் நாட்டிய கழுவில் ஏற்றும் நீதியையுடையவர்; திருவாலவாய் என்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சோமசுந்தரப்பெருமானுடைய திருவடிகளையடைந்த பரிசுத்தராயுள்ளவர்; அவர் என்னுடைய ஆணவாதி மும்மலங்களையும் நீக்கினவராவார்.—எ-று. (உசு)

### பெருமிழலைக்குறும்பநாயனுர் புராணம்.

கொண்டல்பனி வளர்சோலை மிழலை நாட்டுக்
கோதில்புகழ்ப் பெருமிழலைக் குறும்ப னுர்சீ
ரண்டர்பிரா னடியவருக் கடியா ராகு
மாதரவா லணுக்கவன் றொண்டர்க் காளாய்
மண்டொழுமெண் டருசித்தி வாய்ந்து ளார்தாம்
வன்றொண்டர் வடகயிலை மருவு நாண்மு
னெண்டிகழு மறைமூல நெறியூ டேகி
யிலங்கொளிசேர் வடகயிலை யெய்தி னாரே.

(இ-ள்.) மேகங்கள் தவழ்கின்ற குளிர்ச்சி பொருந்திய சோலைகள்சூழ்ந்த மிழலை நாட்டின்கண் வாழ்ந்திருந்த குற்றமற்ற புகழையுடைய பெருமிழலைக் குறும்பநாயனுர் சிறந்த தேவர்கள் நாயகராகிய சிவபெருமானடியார்களுக்குத்தாம் அடியாராகவேண்டுமென்னும் ஆசையினுல் திருவணுக்கராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு அடிமை பூண்டு, அதனுல் உலகத்தார் தொழும் அட்டமாசித்திகளையும் அடைந்தவர்; அவர் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் உத்தரகயிலாசத்திற்கு எழுந்தருளும் தினத்திற்கு முன்னுளில் புகழ்விளங்கும் பிரணவ உச்சாரணத்தின் வழியே பிரமரந்திரமார்க்கமாய்ச்சென்று மிகுந்த ஒளிபொருந்திய அத்திருக்கயிலாசத்தை யடைந்தனர்.—எ-று. (உஎ)

### காரைக்காலம்மையார் புராணம்.

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன் மிக்க
தனதத்தன் றரும்புதல்வியார் மாவின்
செங்கனிக டிருவருளா லழைப்பக் கண்டு
திகழ்கணவ னதிசயித்துத் தேச நீங்க

வங்கவுட விழுந்துமுடி நடையா லேறி
யம்மையே யெனாநாத னப்பா வென்று
பொங்குவட கயிலைபணிந் தாலங் காட்டிற்
புனிதனட மநவரதம் போற்றி னாரே.

(இ-ள்.) நிலைபெற்ற புகழையுடைய காரைக்கால் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த வைசியகுலத்தினனாகிய சிறந்த தனதத்தனென்பவன் பெற்ற புனிதவதியாரென்னும் அம்மையார் செவ்விய மாங்கனிகளைச் சிவபெருமான்றிருவருளினால் அழைத்துக்கொடுக்கப்பார்த்துக் கீர்த்தியால் விளங்குகின்ற தமது கணவன் அதிசயமடைந்து,தானிருந்த ஊரைவிட்டு வேற்றூருக்குப்போய்விட, (தாம் அவ்வூருக்குச்சென்று அவனைக்கண்டபொழுது அவன் வீழ்ந்துவணங்கவும் அவனுக்கு மனைவியென்னு முரிமை பூண்ட) பெண்வடிவையொழித்துப் பேய்வடிவமடைந்து, திருக்கயிலாசத்திற்குத் தலையால் நடந்துசென்று, அங்குச்சிவபெருமான் "அம்மையே" என்று அழைக்க, அதற்கு "அப்பா" என்று கூறி, உயர்ந்த திருக்கயிலாசத்தை வணங்கி, (அவ்விடத்தினின்று நீங்கித்) திருவாலங்காட்டில் சிவபெருமான் செய்தருளும் ஊர்த்ததாண்டவத்தை எப்பொழுதும் வணங்கிக் கொண்டிருந்தார்.

## அப்பூதியடிகணாயனார் புராணம்.

அந்தமினற் றிங்களூர் வருமப் பூதி
யருமறையோர் திருநாவுக் கரசி னாமம்
பந்தரிடை யெழுதக்கண் டரசு மெய்தப்
பணிந்துபரி கலநேடிப் படப்பை சேர்ந்த
மைந்தனுயி ருயர்கதலி யிலைமேற் றுஞ்சும்
வாளரவு கவரவுடன் மறைத்தல் கேட்டுச்
சிந்தைமகிழ்ந் துயர்பதிக மருந்தாற் றீர்த்துத்
திருவமுது செயவருளைச் சேர்ந்து ளாரே.

(இ-ள்.) அழிவில்லாத புகழையுடைய நல்ல திங்களூரில் அவதரித்த அப்பூதியடிகணாயனாரென்னும் அரிய பிராமணோத்தமர் திருநாவுக்கரசுசுவாமிகளது திருநாமத்தைத் தாம்வைத்த தண்ணீர்ப்பந்தலில் எழுதியிருக்கப்பார்த்து, திருநாவுக்கரசுசுவாமிகளும் தமது திருமனைக்கு எழுந்தருள, அவரை வணங்கி, அவர்க்குத்திருவமுது படைக்கும் பொருட்டு வாழைக்குருத்தைத் தேடிக்கொண்டு வரத் தோட்டத்திற்சென்ற தமது புத்திரனுயிரை உயர்ந்த வாழைக்குருத்தின்மேல் உறங்கும் ஒளிபொருந்திய பாம்புகடித்துக்கவர்ந்துகொள்ள, அப்புதல்வனது மரித்த உடலைமறைத்து வைத்ததைக்கேட்டுத் திருவுள்ளமகிழ்ந்து உயர்ந்த திருப்பதிகமென்னும் மருந்தினால் அப்பாம்பின் விஷத்தைப்போக்கி அத்திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்யும்படிக்குத் திருவருளடைந்தனர்.—எ-று. (உ௬)

## திருநீலநக்கநாயனார் புராணம்.

நீதிதரு மறையோர்வாழ் சாத்த மங்கை
நீலநக்க ரைவந்தி நிமலர் மேனி
யூதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளை நீத்தார்க்
குமியாத விடாத னுறுநோய் காட்டக்

காதன்மிகு மனைவியையு மகிழ்ந்து மேவிக்
காழியர்கோ னமுதுசெயக் களித்து வாழ்ந்து
வேதிகையிற் பாணனார்க் கிடமு நல்கி
விளங்குபெரு மணத்தரனை மேவி னாரே.

(இ-ள்.) நீதிபொருந்திய வேதியர்கள் வாழ்கின்ற சாத்தமங்கை யென்னும் ஊரில் அவதரித்த திருநீலநக்கநாயனார், ஐவந்தியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது திருமேனியின்மேல் விழுந்த சிலம்பிப்பூச்சியை வாயால் ஊதித் துமிந்துவிலக்கிய தமது மனைவியாரை நீக்கிய அவரது (சொப்பனத்தில் சிவபெருமான் எழுந்தருளி) ஊதித் துமியாததிருமேனியில் தமக்கு உண்டாகிய விடநோயைக் காட்டியருள,தாம் விலக்கிய அன்புமிக்க மனைவியாரையும் மகிழ்ந்து அங்கீகரித்து, பின் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தமது திருமனைக்கெழுந்தருளித் திருவமுதுசெய்ய, அதனால் களிப்படைந்து வாழ்ந்து, அன்றிரவு திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்க்குத் தாம் யாகஞ்செய்யும் வேதிகையில் துயில்கொள்ள இடங்கொடுத்து, விளங்குகின்ற நல்லூர்ப்பெருமணத்தில் (திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமணத்தில்) சிவபெருமானை யடைந்தனர்.—எ-று. (௬௦)

## நமிநந்தியடிகணாயனார் புராணம்.

நண்ணுபுகழ் மறையோர்வா ழேமப் பேறூர்
நமிநந்தி யடிகடிரு விளக்கு நல்க
எண்ணெயம ணர்கள்விலக்க நீரா லாரூ
ரிலங்குமர னெறியாருக் கேற்று நாளிற்
கண்ணமணர் கெடக்கண்பெற் றடிகள் வாழக்
காவலனு னிமிந்தங்கள் கட்டு வித்தே
யணணலருள் கண்டாரூ ரமர்ந்து தொண்டர்க்
காணியெனு மரசினரு ளடைந்து ளாரே.

(இ-ள்.) நிலைபெற்ற புகழையுடைய வேதியர்கள் வாழ்கின்ற ஏமப்பேறூரில் அவதரித்த நமிநந்தியடிகணாயனார் திருவிளக்கிடுவதற்குச் சமணர்கள் எண்ணெயைக்கொடாது விலக்க, நீரைமுகந்து திருவாரூரில் விளங்குகின்ற அரனெறியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்குத் திருவிளக்கேற்றி வரும்நாளில், சமணர்கள்கண்ணழிந்துகெட,(கண்ணில்லாது திருக்குளந்தொட்ட) தண்டியடிகணாயனார் கண்பெற்று வாழ்வடைய, சோழராஜனால் படித்தரங்கள் நியமிப்பித்து, சிவபெருமான் (திருமணலிக்கெழுந்தருளும்) திருவிழாச்சிறப்பைத் தரிசித்துத் திருவாரூரில் வாழ்ந்திருந்து, தொண்டர்களுக்கு ஆணிப்பொன்னென்ற திருநாவுக்கரசுசுவாமிகள் தமது திருப்பதிகத்தில் சிறப்பித்துப்பாடப்பெற்ற மேன்மையையடைந்தனர்.—எ-று. (௬௧)

## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் புராணம்.

காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோ னமுதுமையாள் கருதி யூட்டு
மேழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
யிலங்கியசித் திலச்சிவிகை யிசைய வேறி

வாழுமுய லகனகற்றிப் பந்த ரேய்ந்து
வளர்கிழிபெற் றரவின்விட மருகற் றீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே.

(இ-ள்.) சீகாழிப்பதியில் சிவபாதவிருதயரென்னும் வேதியர் தமக்குப் புத்திரராகத்தந்தருளிய கவுணியர்குலத் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருத்தோணிச்சிகரத்தைப்பார்த்து அழுது, உமாதேவியார் திருவுள்ளங்கொண்டு ஊட்டிய சப்தசுரங்களோடு கூடிய திருப்பதிகம் பாடியருளுதற்கேதுவாகிய சிவஞானப்பாலமுதத்தையுண்டருளி, (திருக்கோலக்காவில்) பொற்றாளம் பெற்று, (திருவரத்துறையில்) விளங்குகின்ற முத்துச்சிவிகைவர அதன்மீ தெழுந்தருளி, (திருப்பாச்சிலாச்சிராமத்தில்) கொல்லிமழவன்புதல்வியை யடைந்திருந்த முயலகனென்னும் நோயைநீக்கி, (திருப்பட்டீச்சரத்தில்) முத்துப்பந்தர்பெற்று, (திருவாவடுதுறையில்) உலவாக்கிழிபெற்று, திருமருகலில் (ஒரு வணிகனைக்கடித்த) பாம்பின்விஷத்தைத்தவிர்த்து, திருவீழிமிழலையில் படிக்காசுபெற்று, திருமறைக்காட்டில் திருக்கதவமடைப்பித்து; மதுரையில் கூன்பாண்டியனுடையஉடம்பில் உண்டானசுரநோயை நீக்கியருளினார்.—எ-று. (கஉ)

ஆறொரியிட் டெடுத்தவே டவைமுன் னேற்றி
யாற்றிவிடு மேடெதிர்போ யணைய வேற்றி
யோரமண ரொழியாமே கழுவி லேற்றி
யோதுதிருப் பதிகத்தா லோட மேற்றிக்
காருதவு மிடிபுத்தன் றலையி லேற்றிக்
காயாத பனையின்முது கனிக ளேற்றி
யீரமிலா வங்கமுயி ரெய்த வேற்றி
யிலங்குபெரு மணத்தரனை யெய்தி னாரே.

(இ-ள்.) மேலும், அங்கு சுவாலிக்கின்ற நெருப்பிலிட்டு எடுத்த திருப்பதிகம் எழுதிய திருவேட்டைப்பாண்டியனுடைய சபையின் முன்னேகாட்டி, வையையாற்றிலிட்ட திருப்பதிகத்திருவேடு நீருக்கெதிரோ செல்லும்படி செலுத்தி, அதனால் வாதுசெய்து தோற்றஎண்ணாயிரம் சமணர்களில் ஒருவரும் தவறாமல், கழுமரத்திலேற்றி, அருளிச்செய்த திருப்பதிகத்தினால் (திருக்கொள்ளம்பூதூரில்) ஓடத்தைக்கரையேறச்செய்து, (திருத்தெளிச்சேரியில்) புத்தநந்தியின் தலையில் மேகத்தினின்றுந்தோன்றிய இடிவிழச்செய்து, (திருவோத்தூரில்) காய்க்காத ஆண்பனையினிடத்து முதிர்ந்த கனிகளுண்டாகச்செய்து, திருமயிலையில் பசையில்லாத வெந்தஎலும்பு உயிர்பெற்றுப்பெண்ணாகும்படிசெய்து, விளங்குகின்ற திருப்பெருமணமென்னும் ஆலயத்தில் (திருமணத்தில் சோதிரூபமாய்வெளிப்பட்ட) சிவபெமானைச் சேர்ந்தருளினார்.—எ-று. (கங)

### ஏயர்கோன்கலிக்காமநாயனார் புராணம்.

ஏதமில்வே ளாளர்பெரு மங்க லத்து
ளேயர்கோன் கலிக்காம ரிறையை நேரே
தூதுகொளு மவனணுகி லென்னா மென்னுந்
துணிவினர்பா லிறைவனருஞ் சூலை யேவி

வேதனைவன் றெண்டனவரி னீங்கு மென்ன
வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேய நாவற்
போதகமு முடலிகழ வெழுந்து தாழ்ந்து
போற்றியது விலக்கியருள் பொருந்தி னாரே.

(இ-ள்.) பெருமங்கலமென்னுமூரில் குற்றமற்ற வேளாளர்குலத்தில் அவதரித்த ஏயர்கோன் கலிக்காமநாயனார், சிவபெருமானைக் கண்முன்னே தூது அனுப்பிய நம்பியாரூரர் தம்மிடத்துவந்தால் எவ்வாறுகுமோ வென்னுந் துணிவுடையவராயிருக்க, அவரிடத்துச் சிவபெருமான் அரிய சூலைநோயைக் கொடுத்து, இந்நோய் நம்பியாரூரன் உன் மனைக்குவந்தால் நீங்குமென்றருளிச்செய்ய, அவர் வரவுகேட்டுக் கோபித்துக் குற்றுடைவாளால் உயிரைநீக்கி, அங்கு வந்துபார்த்த ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் அவ்வாளினால்தாம் உயிர்துறக்கக் கருத, (சிவபெருமான் திருவருளால்) உயிர்பெற்றெழுந்து ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை வணங்கித் துதித்து, அவர் கையிலெடுத்தவாளை விலக்கித் திருவருளை யடைந்தனர்.—எ-று.

## திருமூலநாயனார் புராணம்.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும்
பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்து போத
வயலாகப் பண்டையுட லருளான் மேவி
யாவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக்
குயிலாரு மரசடியி லிருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகி னாரே.

(இ-ள்.) திருக்கயிலாயத்தில் வீற்றிருந்தருளும் (திருநந்திதேவரது திருவருள்பெற்ற) ஒரு சிவயோகியார் (அகத்திய முனிவரைக்காணும்பொருட்டு) பொதிய மலையைநோக்கிச்செல்பவர், காவிரிநதி சூழ்ந்த சாத்தனூரில்வாழ்ந்த மூலனென்னும் இடையனானவன் தனக்கு முன்னில்லாது சடுதியில் வந்த நோயாலிறக்க, அவனிறப்பைக்கண்டு துன்பப்பட்ட பசுக்களைப்பார்த்து (அப்பசுக்களின் துன்பத்தைத் தணிக்கும்பொருட்டுத் தமதுதிருமேனிக்குக்காவல்செய்து) அவனுடலிற்பிரவேசித்துச்செல்ல, தாம் முன்புவைத்த உடலானது மறைவாக, திருவருளினால் தாம்பிரவேசித்த அவ்வுடம் போடிருந்து, திருவாவடுதுறையில் குயில்கள் வாழும் அரசமரத்தடியிலிருந்து வருஷத்துக்கொருதிருப்பாசுரமாக (மூவாயிரம் வருஷம் மூவாயிரம் திருமந்திரமாலையை) அருளிச்செய்து, முன்போலக் குற்றமற்ற திருக்கயிலாசத்தை யடைந்தனர்.—எ-று. (௩௫)

## தண்டியடிகணாயனார் புராணம்.

திருவாரூர் வருந்தண்டி யடிகள் காட்சி
சேராதார் குளந்தொட்டற் கமணர் சீறிக்
குருடாநீ முன்செவிடும் கூடிற் றென்று
குறித்தறியைப் பறித்தெறியக் கொதித்துத் தங்க

ணருளாலே விழித்தெவரு மந்த ராக
வமணர்கலக் கம்பலகண் டவர்கள் பாழிப்
பருவான கற்பறித்தா விக்கரையுங் கட்டிப்
பரனருளா லமருலகம் பற்றினாரே.

(இ-ள்.) திருவாரூரின்கண் அவதரித்த தண்டியடிகளுயனூர் பிறவிக்குருடாயுள்ளவர்; தாம் ஓர் தடாகத்தைப்புதிதாய் எடுத்தலுக்காகப் பொறுமல் சமணர்கள் சீறி, நீ முன்குருடனும்; (இப்பொழுது யாம் சொல்வதைக்கேளாமையால்) செவிடு மூண்டாயிற்றென்று குறியாக நடப்பட்டதறியைப்பிடுங்கி யெறிய, அதனால் கோபித்து, தமது கண்ணைச்சிவபெருமான் திருவருளாலே திறக்கப்பெற்று, அச்சமணர்களெல்லாம் குருடர்களாக அவர்களடைந்த பல துன்பங்களையுந் தமது கண்ணாற்கண்டு (அவர்களை அவ்விடத்தினின்றும் நீக்கி) அவர்கள் பள்ளியிலுள்ள பருத்த கற்களைப்பறித்தெடுத்து, தாம் எடுத்த தடாகப்படிக் கரையையுங் கட்டிச் சிவபெருமானுடைய திருவருளினால் நிலைபெற்ற சிவலோகத்தை யடைந்தனர்.—எ-று. (௯சு)

## மூர்க்கநாயனார் புராணம்.

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட் டூர்வாழ்
தொல்லுழவர் நற்சூதர் சூது வென்று
கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுதளிக்குங்
கொள்கையினார் திருக்குடந்தை குறுகி யுள்ளார்
விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள
வெகுண்டிடலான் மூர்க்கரென விளம்புநாம
மெண்டிசையு மிகவுடையா ரண்டர் போற்று
மேழுலகு முடனாளு மியல்பினாரே.

(இ-ள்.) வளம்பொருந்திய தொண்டைநாட்டில் சிறந்த திருவேற்காடு என்னுமூரில்வாழ்ந்த பழைமையாகிய வேளாளர்குலத்தில் அவதரித்தவர்; நல்ல சூதாடுந் தொழிலையுடையவர்; அச்சூதாட்டத்தில் கெலித்து அதனா லடைந்த பொருள்களைக்கொண்டு சிவனடியார்களுக்குத் திருவமுதூட்டுங் கொள்கையையுடையவர்; (இங்கு ஒருவரும்அவரோடுசூதாடுவோரில்லாமையால்) திருக்குடந்தையையடைந்து சூதாட்டத்தில் மறுத்துக்கூறுகின்றவீணர்கள்இறக்கும்படி கோபிக்குங் காரணத்தினால் மூர்க்கநாயனாரென்று கூறுந் திருநாமம் எட்டுத்திக்கிலும் மிகுதியாக விளங்கப்பெற்றவர்; அவர் தேவர்கள் துதிக்கின்ற ஏழுலகத்தையும் அரசாளும் முறைமையையுடையவர்.—எ-று.

திருக்குடந்தை என்பது கும்பகோணம். (௯எ)

## சோமாசிமாறநாயனார் புராணம்.

அம்பர்நக ரந்தணர்சோ மாசி மாற
ரன்பர்களாம் யாவர்க்கு மன்பினமு தளிப்பா
ரும்பர்புகழ் வகையாகம் பலவுஞ் செய்யு
முண்மையினா ரைந்தெழுத்து மோவா நாவார்

நம்பர்திகழ் திருவாரூர் நயந்து போற்று
நாவலர்கோ னடிபரவு நன்மை யாலே
யிம்பர்தொழ வும்பர்பணிந் தேத்த மேலை
யேழுலகு முடனாளு மியல்பி னாரே.

(இ-ள்.) திருவம்பர் என்னும் நகரத்தில் வாழ்ந்த பிராமணர் குலத்தினராகிய சோமாசிமாறநாயனார் அடியார்களாகிய யாவர்களுக்கும்அன்போடு திருவமுது செய்விக்கின்றவர் ; தேவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி பலவகையாகிய யாகங்களையும் செய்கின்ற மெய்ம்மையையுடையவர் ; ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை இடைவிடாது செபித்துக்கொண்டிருக்கும் நாவினையுடையவர் ; சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவாரூரை விரும்பித் துதிக்கும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை யடைந்து அவரது திருவடிகளில் பத்திபண்ணின நன்மையினால் இவ்வுலகத்தார் வணங்கவும், தேவர்கள் வணங்கித் துதிக்கவும்,மேலேழுலகத்தையும் அரசாளும் இயல்பினை யுடையவராயினர்.—எ-று. (நஅ)

சாக்கியநாயனார் புராணம்.

சங்கமங்கை வரும்வேளாண் டலைவர் காஞ்சிச்
சாக்கியரோ டியைந்தவர்தந் தவறுஞ் சைவத்
துங்கமலி பொருளுமுணர்ந் தந்த வேடந்
துறவாதே சிவலிங்கந் தொழுவோர் கண்டோ
ரங்கன்மலர் திருமேனி யழுந்தச் சாத்தி
யமருநாண் மறந்தொருநா ளருந்தா தோடிச்
செங்கலெறிந் திடுமளவின் மகிழ்ந்த நாதன்
றிருவருளா லமருலகஞ் சேர்ந்து ளாரே.

(இ-ள்.) சங்கமங்கையென்னும் ஊரில் அவதரித்த வேளாளர் குலத்தலைவராயுள்ளவர்; ஸ்ரீகாஞ்சிபுரத்திலுள்ள பவுத்தர்களோடுசேர்ந்து அப்புத்தமதத்தின் ஆபாசத்தையும் சைவசமயத்திலுள்ள உயர்ந்த உண்மைப்பொருளையும் ஆராய்ந்தறிந்து, அந்தப் பவுத்தவேடத்தை நீங்காமலே சிவலிங்கப்பெருமானைத் தோழ வேண்டுமென்னுங்கருத்துள்ளவராய் ஒரு சிவலிங்கத்தைக் கண்டு தினந்தோறும் அழகிய செங்கல்லாகியமலரைத்திருமேனியிலழுந்தும்படிசாத்திஅன்புடையராய் வாழும்நாளில்,ஒருநாள் அக்கல்லெறிதலைமறந்து,பின் உணவுகொள்ளாமல் ஓடிச்சென்று செங்கல்லை யெடுத்தெறியுமளவில், அதற்குத் திருவுளமகிழ்ந்த சிவபெருமான் திருவருளினால் நிலைபெற்ற சிவலோகத்தை யடைந்தனர்.—எ-று. (நக)

சிறப்புலிநாயனார் புராணம்.

திருவாக்கூ ரருமறையோ ருலக மேத்துஞ்
சிறப்புலியார் மறப்புலியா ருரிமேற் செங்க
ணரவார்த்தார் வருமேற்றூர்க் கன்ப ரானார்க்
கமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்த மார்பர்
பெருவாக்கன் மறைபரவி யாகம் போற்றும்
பெற்றியினா லைந்தெழுத்தும் பிறழா தோதிக்
கருவாக்கா விறைவன்றா ளிணைகள் சேர்ந்த
கருத்தினா லெனையாவுந் திருத்தி னாரே.

(இ-ள்.) உலகத்தாரால்புகழப்பட்ட திருவாக்கூரில்வாழும் அரியபிராமண குலத்தினராகிய சிறப்புலிநாயனுர் கொடிய புலித்தோலின்மேல் சிவந்த கண்களை யுடைய சர்ப்பத்தைக் கச்சாகப்புனைந்து ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளும் சிவபெருமானது அடியார்களுக்குத் திருவமுது செய்விக்கின்றவர் ; பிரகாசம்பொ ருந்திய திருவெண்ணீறணிந்த மார்பினையுடையவர் ; தமது சிறந்த திருவாக்கினுல் வேதங்களை ஓதி, யாகங்களைச்செய்யுந் தன்மையையுடையவர் ; திருவைந்தெழுத் தினையும் தவருமல் செபித்து, தம்மை யடைந்தவர்களைப் பிறவித்துன்பத்திற் செலுத்தாத சிவபெருமானுடைய திருவடிகளைப்பற்றிய மெய்க்கருத்தினையுடைய வர் ; அவர் அடியேனை எல்லாத்துன்பங்களினின்றும் நீக்கினவராவர்.—எ-று.

### சிறுத்தொண்டநாயனுர் புராணம்.

பல்குமருத் துவரதிபர் செங்காட்டங் குடிவாழ்
படைத்தலைவ ரமுதளிக்கும் பரஞ்சோதி யார்மெய்ச்
செல்வமிகு சிறுத்தொண்டர் காழி நாடன்
திருவருள்சேர்ந் தவர்வளருஞ் சீராளன் றன்னை
நல்குதிரு வெண்காட்டு நங்கைசமைத் திடப்பின்
நன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட் டுதவப்
புல்கவரும் வயிரவர்தா மகிழ்ந்து மகவருளப்
போற்றியவர் சிவனருளே பொருந்தி ஞரே.

(இ-ள்.) புகழ்பரவிய மாமாத்திரப் பிராமணர்குலத்தில் அவதரித்த முதல் வராயுள்ளவர் ; திருச்செங்காட்டங் குடியென்னும் ஸ்தலத்தில் வாழ்ந்த சேனாதி பர் ; சிவனடியார்களுக்கு அன்போடு திருவமுதுபடைக்கும் பரஞ்சோதியா ரென்னும் உண்மையான செல்வத்தையுடைய சிறுத்தொண்டநாயனுர், சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவருளைப்பெற்றவர்; அவர்,வளர் கின்ற தம்புத்திரனுகிய சீராளதேவனைப் பெற்ற தாயாகிய திருவெண்காட்டு நங் கையென்னும் தம்மனைவியார் கறியாகச்சமைக்கப் பின்பு நல்லறிவினையுடைய தாதியாகிய சந்தனநங்கையார் தலைக்கறி சமைத்துக்கொடுக்க, அதனை அமுதுசெ ய்யும்படிக்கு எழுந்தருளிய வயிரவமதச்சிவயோகி வேடங்கொண்டுவந்த சிவபெரு மான் திருவுள்ளமகிழ்ந்து அப்புதல்வன் உயிர்பெற்றுவரும்படிக்குத் திருவருள் செய்ய, (அவ்வாறு உயிர்பெற் றெழுந்த புதல்வனைக்கண்டு) சிவபெருமானை வண ங்கி அச்சிறுத்தொண்டநாயனுர் (மனைவி - புதல்வன்-தாதியென்னுமிவர்களோடு) சிவபெருமான் திருவருளையடைந்தனர்.—எ-று. (சக)

### சேரமான்பெருமாணுயனுர் புராணம்.

காவலர் மகோதையார் கொடுங்கோ ளூர்க்கோ
கழறியவை யறிந்தகோ சிலம்போசைக் கருத்தார்
நாவலர்கோ னண்பரடிச் சேர னென்றே
நவின்றுவரும் வண்ணுனை நயந்த கோநற்
பாவலர்கோ பாணபத் திரனுல் வாய்ந்த
பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோ வெற்பின்
மேவியகோ வானைக்குக் குதிரை வைத்த
வீரர்கோ வெனையாளுஞ் சேரர் கோவே.

(இ-ள்.) மகோதையாரென்னும் பெயரையுடைய மலையாளத்தி லுள்ள கொடுங்கோளூரிலே வாழ்ந்த அரசர்பெருமானும், சராசரங்களாகிய எல்லாவுயிர்களுங்கூறிய சொற்களினுண்மைப் பொருளையறிந்த முதல்வரும், சிவபெருமான் நடித்தருளுந் திருச்சிலம்போசையில் செலுத்திய கருத்தினையுடையவரும், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு நண்பராயுள்ளவரும், அடியேன் சேரனென்றுகூறி எதிரில் வந்த வண்ணானை வணங்கிய தலைவரும், சிறந்த கவிவாணர்களுக்கு முதல்வரும், பாணபத்திரரால் கொடுக்கப்பட்ட சிவபெருமானது திருமுகப்பாசுரத்தைப்பெற்று வணங்கிய முதல்வரும், திருக்கயிலாசத்திற்குச்சென்ற சிறந்த வெள்ளையானைக்கு முன்னே தமது குதிரையைச்செலுத்திய வீரரும் (யாரெனின்) என்னை யடிமையாகக் கொண்டருளுஞ் சேரமான்பெருமாணயனார் ஆகும்.—எ-று. (சஉ)

## கணநாதநாயனார் புராணம்.

கந்தமலி வயற்காழி மறையோ ரேத்துங்
கணநாதர் திருத்தோணிக் கடவு ளார்க்கு
நந்தவனம் பலவமைத்து மலருங் கொய்து
நற்றாமஞ் சொற்றாம நயந்து சாத்தி
வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள் பூட்டி
வாதுசெய்த வாரணத்தை மகிழ்ந்து வாழ்த்திப்
புந்திமகிழ்ந் தரனருளாற் கயிலை மேவிப்
பொருவில்கணத் தவர்காவல் பொருந்தி னாரே.

(இ-ள்.) வாசனை கமழும் வயல்கள்சூழ்ந்த சீகாழியிலுள்ள வேதியர்கள் துதிக்கும் கணநாதநாயனார் திருத்தோணியப்பருக்குப் பல திருநந்தனவனங்கள் வைத்து அவற்றிலுள்ள மலர்களைக்கொய்து நல்ல பூமாலைகளையும், பாமாலைகளையும் விரும்பிச்சாத்தி, தம்மையடைந்த அடியார்களைத் தொண்டுபடுத்தி அவரவர்களுக்கேற்ற திருப்பணிகளைநியமித்து, சமணர்களோடு வாதுசெய்துவென்ற திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளை மனமகிழ்ந்துதுதித்து, திருவுள்ளமகிழ்ந்து சிவபெருமான் திருவருளினால் திருக்கயிலாயத்தையடைந்து, ஒப்பற்ற சிவகணங்களுக்கு முதல்வராயிருக்குந் தன்மையைப்பெற்றனர்.—எ-று. (சங)

## கூற்றுவநாயனார் புராணம்.

குன்றாத புகழாளர் களந்தை வேந்தர்
கூற்றுவனார் மாற்றலர்மண் கொண்டு சூடப்
பொன்றாழ் முடிவேண்டப் புலியூர் வாழும்
பூசுரர்கள் கொடாதகலப் புனித னீந்த
மன்றாடுந் திருவடியே முடியாச் சூடி
மாநிலங்காத் திறைவனுறை மாடக் கோயிற்
சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள் செய்து
திருவருளா லமருலகஞ் சேர்ந்த னாரே.

(இ-ள்.) நிறைந்த கீர்த்தியையுடையவரும், களந்தை என்னும் நகரத்தை யாண்ட குறுநிலமன்னருமாகிய கூற்றுவநாயனார் தம்பகையரசர்களுடைய பூமியைக்கவர்ந்துகொண்டு அரசாட்சி செய்யும்பொருட்டுப் பொன்னாற்செய்த மகுட

த்தைச் சூடும்படி கேட்க, தில்லைவாழந்தணர்கள் கொடாது அவ்வூரினின்றும் நீங்கிச் சேரதேசத்திற்குப்போய்விட, அதனால் சிவபெருமான் சூட்டிய கனகசபையில் திருநடனஞ் செய்தருளும் திருவடியையே முடியாகக்கொண்டு, பெரிய உலகத்தை ஆளுகைசெய்து,சிவபெருமான் வீற்றிருந்தருளும் மாடங்களையுடைய பல திருக்கோயில்கடோறுஞ்சென்று பேரன்போடு வணங்கித் திருப்பணிகளைச் செய்து திருவருளினால் நிலைபெற்ற சிவலோகத்தை யடைந்தனர்.—எ-று. (சச)

## பொய்யடிமையில்லாதபுலவர் புராணம்.

பொய்யறியாக் கபிலரொடு பரண ராதிப்
புலவோர்பொற் பார்கலைகள் பொருந்த வோதிச்
செய்யுளிடை வளராசு மதுர நல்ல
சித்திரவித் தாரமெனத் தெரிக்குஞ் செம்மை
மெய்யுடைய தொடைகளெல்லா மன்று ளாடன்
மேவியகோ விருதாளில் விரவச் சாத்திக்
கையுடையஞ் சலியினரா யருளான் மேலைக்
கருதரிய வமருலகங் கைக்கொண் டாரே.

(இ-ள்.) கபிலர் - பரணர் முதலாகிய பொய்யடிமையில்லாத புலவர்கள் அழகுபொருந்திய பல நூல்களையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்து, செய்யுளியலிற் கூறப்படும் ஆசு-மதுரம்- நல்ல சித்திரம் - வித்தாரமென்று சொல்லப்பட்ட செவ்விய மெய்ம்மை பொருந்திய நால்வகைக் கவிப்பிரபந்தங்களையெல்லாம் கனகசபையில் திருநடனஞ் செய்தருளும் சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளில் பொருந்தச்சூட்டி, அஞ்சலியஸ்தர்களாய்ச் சிவபெருமான் திருவருளினால் மேலுள்ள நினைத்தற்கரிய நிலைபெற்ற சிவலோகத்தை யடைந்தனர்.—எ-று. (சரு)

## புகழ்ச்சோழநாயனர் புராணம்.

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார் சோழர்
போதகம்போ லென்னுயிரும் போக்கு மென்றே
யழலவிர்வாள் கொடுத்தபிரா னதிகை மான்மே
லடர்ந்தபெரும் படையேவ வவர்கொண் டேய்ந்த
தழல்விழிகொ டலைகாண்பார் கண்ட தோர்புன்
சடைத்தலையை முடித்தலையாற் றாழ்ந்து வாங்கிக்
கழல்பரவி யதுசிரத்தி னேந்தி வாய்ந்த
கனன்மூழ்கி யிறைவனடி கைக்கொண் டாரே.

(இ-ள்.) சோலைகள் சூழ்ந்த திருக்கருவூரின்கண் வாழ்ந்த புகழ்ச்சோழநாயனர் (எறிபத்தநாயனரைப்பார்த்து) பட்டத்துயானையின் உயிரைநீக்கியதுபோல, அடியேனுயிரையும் நீக்கிவிடுமென்று அக்கினிபோலச் சொலிக்கின்ற உடைவாளை அவர் கையிற்கொடுத்த அரசர் பெருமானுயுள்ளவர்;அதிகமான் என்னும் சிற்றரசனிடத்து நெருங்கிய பெரிய நால்வகைச் சேனைகளையும் போருக்கனுப்ப, அவர்கள் வெட்டிக்கொண்டுவந்த தழல்போற்சிவந்த கண்ணையுடைய தலைகளைக் காண்கின்றவர் அதன் நடுவேகண்ட ஒரு புல்லிய சடைத்தலையைத்தமது கிரீடமணிந்த சிரசினால்வணங்கி யெடுத்துச் சிவபெருமான் திருவடிகளைத் துதித்து, அச்சடைத்தலை

யைத்தமது சிரசில் தாங்கிக்கொண்டு அங்குவளர்த்த அக்கினியில் மூழ்கிச் சிவ பெருமான் திருவடியை யடைந்தனர்.—எ-று. (சகூ)

### நரசிங்கமுனையரையநாயனார் புராணம்.

நாடுபுகழ் முனைப்பாடி நாட்டு மேய
நரசிங்க முனையர்புவி நயந்து மன்னு
ளாடுமவ ராதிரைநா ளடியார்க் கம்பொ
னமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்து தூர்த்த
வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொ னீந்து
விடுத்தழகா ராலயங்கள் விளங்கச் செய்து
தோடலர்தா ருடையபிரா னருளை யாளத்
தோன்றினா ரெனையருளி னூன்றி னாரே.

(இ-ள்.) உலகத்தார் புகழ்கின்ற திருமுனைப்பாடி நாட்டில் வாழ்ந்த நரசிங்க முனையரையநாயனார் பூமியை விரும்பிக் காவல்செய்து, கனகசபையில் திருநடனஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானுக்குரிய திருவாதிரைநாளில், சிவனடியார்களுக்கு அழகிய நூறுபொன்னையும், திருவமுதையும் அளிக்கின்றவர்; ஒளி பொருந்திய திருவெண்ணீற்றையணிந்து தூர்த்தவேடமுடையவராய்வந்த ஒருவருக்கு இருநூறுபொன் கொடுத்தனுப்பி, அழகிய சிவாலயங்கள் விளங்கும்படிவேண்டியதிருப்பணிகளைச்செய்து,இதழ்களலர்ந்த கொன்றைமலர் மாலையைத்தரித்த சிவபெருமானுடைய திருவருளை யடையும்படிக்கு அவதரித்தவர்; அடியேனைத் திருவருளிற் சேர்ப்பித்தவர்.—எ-று. (சஎ)

### அதிபத்தநாயனார் புராணம்.

அலையாருங் கடனாகை நகருள் வாழு
மதிபத்தர் பரதவர்க ளதிபர் வேலை
வலைவாரி வருமீனிற் றலைமீ னீசன்
வார்கழற்கே யென்றுவிடு மரபார் பன்னாட்
டலையான தொருமீனே சார நாளுந்
தந்தொழிலால் விடுத்துமிடி சாரச் செம்பொ
னிலையாரு மணிநயந்த மீனொன் றெய்த
நீத்தருளா லிறைவனடி நேர்ந்து ளாரே.

(இ-ள்.) அலைகளையுடைய கடற்கரையிலுள்ள நாகபட்டணத்தில்வாழ்ந்த அதிபத்தநாயனாரென்னும் பரதவர் குலத்தலைவர், தாம் கடலில் வலைவீசி, அதில் அகப்படும் மீன்களுள் தலைமையான ஒருமீனைச் சிவபெருமான் திருவடிகளுக்கென்று நாள்தோறும்விடுகின்ற இயல்பினையுடையவர்; அடுத்தடுத்து அநேகநாட்களிலே முதன்மையான ஒவ்வொருமீனே அகப்பட, நாள்தோறும் தமது நியமப்படியே அதனைக்கடலில் விடுத்து அதனால் வறுமையடைந்திருக்குநாளில் ஒருநாள் சிவந்தபொன்னும் மணியும் சேர்ந்த ஒருமீன் அகப்பட, அதனையும் அவ்வாறே விடுத்துத் திருவருளினால் சிவபெருமான் திருவடிகளை யடைந்தனர்—எ-று. ()

## கலிக்கம்பநாயனுர் புராணம்.

கடவுளருட் கண்ணார்கள் பயிலுந் தொல்லைக்
கடந்தைநகர் வணிகர்கலிக் கம்ப ரன்பர்க்
கடிமையுற வமுதளிப்பா ரடியா னீங்கி
யருளுருவா யன்பருட னணைய வேத்தி
யிடையிலவ ரடியிணையும் விளக்கா நிற்ப
விகழ்மனைவி கரகமலி யிரண்டு கையும்
படியில்விழ வெறிந்தவள்செய் பணியுந் தாமே
பரிந்துபுரிந் தரனருளே பற்றினாரே.

(இ-ள்.) சிவபெருமானது திருவருளையே கண்ணாகவுடைய அடியார்கள் வாழும் பழைமையாகிய திருப்பெண்ணாகடத்திலே வைசியர்குலத்தி லவதரித்த கலிக்கம்பநாயனார்: சிவனடியார்களுக்குத் தமது அடிமைத்தொண்டு பொருந்தும்படி திருவமுதுபடைக்கின்றவர், முன்பு தமக்கு ஏவலாளனாயிருந்த ஒருவன் தம்மிடத்தினின்றும் நீங்கி அடியார்வேடங்கொண்டு சிவனடியார்களுடன்வர, அவரை வணங்கி இடையில் அவர் பாதங்களையும் நீரால் விளக்கத்தொடங்க, இவன் நம் ஏவலாளனென்று இகழ்ந்து சிந்தித்து நீர்விடாதொழிந்த கரகந்தாங்கிய தம் மனைவியாரது இரண்டுகைகளையும் பூமியில்விழும்படி வெட்டித்துணித்து, அவள் செய்யுந் திருப்பணியையும் தாமே விரும்பிச்செய்து, சிவபெருமான் திருவருளையடைந்தனர்.—எ-று. (சகூ)

## கலியநாயனுர் புராணம்.

தடமதில்சூ ழொற்றியூர் நகருள் வாழுஞ்
சக்கரப்பா டியர்குலமெய்த் தவமா யுள்ளார்
படர்புகழார் கலியனார் நலியுங் கூற்றைப்
பாய்ந்தவர்க்கு விளக்கெறிக்கும் பரிவான் மற்றோ
ருடலிலராய்ச் செக்குழல்வார்க் கதுவு நேரா
துயர்மனைவி யைக்கொள்வா ருளரு மின்றி
மிடறுதிர மகனிறைய வரிய நாதன்
வியன்கைகொடு பிடிப்பவருண் மேவி னாரே.

(இ-ள்.) பெரிய மதில்சூழ்ந்த திருவொற்றியூரென்னும் நகரத்தில்வாழ்ந்த செக்கார்குலத்தினர்செய்த மெய்ம்மையாகிய தவப்பயனாக அவதரித்தவர்; பரவிய புகழையுடைய கலியநாயனாரென்னுந் திருநாமமுடையவர்; அவர், உயிர்களை வருத்துகின்ற இயமனை (மார்க்கண்டேயர்பொருட்டு) உதைத்தருளிய சிவபெருமானுக்குத் திருவிளக்கேற்றும் மெய்யன்பினால், வேறொருபொருளில்லாமல் கூலிக்குச் செக்காட்டுகின்றவர்க்கு அக்கூலித்தொழிலுங் கிடையாமல், கற்பினுயர்ந்த தம் மனையாளைவிற்கத் தொடங்க, அம்மனைவியை விலைக்கு வாங்குவாரொருவருமில்லாமையால், தமது கழுத்திலுள்ள உதிரமானது அகல்நிறையும்படி அரியத்தொடங்கும்பொழுது, சிவபெருமான் தமது பெரியதிருக்கரத்தால் பிடித்தருள, திருவருளை யடைந்தனர்.—எ-று. (ரு0)

## சத்திநாயனார் புராணம்.

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சி யூர்வாழ்
வேளாளர் சத்தியார் விமலர் பாதத்
துரியவர்க ளடிபரவு மொருமை யார்நா
வோவாமே யைந்தெழுத்து மோதுக் கீரா
ரிருளின்மிட றுடையபிரா னடியார் தம்மை
யிகழ்வார்நாத் தண்டாயத் திடுக்கி வாங்கி
யரியுமது திருத்தொழிலா வுடையார் மன்று
ளாடியசே வடிநீழ லடைந்து ளாரே.

(இ-ள்.) பரந்த நீர்வளம்பொருந்திய சோழநாட்டிலுள்ள வரிஞ்சியூரின் கண்வாழ்ந்த வேளாளர்குலத்தினராகிய சத்திநாயனார்,சிவபெருமான் திருவடிகளுக்குஅடிமைபூண்டொழுகும் அடியார்களதுதிருவடிகளைத் துதிக்கின்றஅன்பி னுறுதியையுடையவர்; நாவினால் இடைவிடாமல் திருவைந்தெழுத்தையும் செபித்துக்கொண்டிருக்கும் பெருங்குணத்தையுடையவர்; இருள்போலுங் கரியகண்டத்தையுடைய சிவபெருமானடியார்களை இகழ்ந்து பேசுகின்றவர்களுடைய நாவைப் பற்றுக்குறட்டினால் பிடித்து இழுத்துச் சுரிகையினால் அரிதலையே தமக்குரிய திருப்பணியாகவுடையவர்; அவர் கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளும் சிவபெருமான் திருவடிநிழலை யடைந்தனர்.—எ-று. (௬௧)

## ஐயடிகள்காடவர்கோனாயனார் புராணம்.

வையநிகழ் பல்லவர்தங் குலத்து வந்த
மாமணிமா நிலமுழுது மகிழ்ந்து காக்கு
மையடிகள் காடவர்கோ னருளா னூல்க
ளறிந்தரசு புரிந்திடுத லமையு மென்றே
பொய்யனைய வுடல்வாழ்வு கழியு மாறு
பொருந்தியிடும் புகழ்வெண்பா புலியூர் மேவுஞ்
செய்யதிரு வடிமுதலாப் பதிக டோறுஞ்
செப்பினா ரென்வினைக டப்பி னாரே.

(இ-ள்.) உலகத்தில் புகழால்விளங்குகின்ற பல்லவர்குலத்தில் அவதரித்த சிறந்த மாணிக்கம்போன்றவர்; பெரிய உலகமுழுதும் மகிழ்வோடு காவல்செய்யும் ஐயடிகள்காடவர்கோனாயனார்,திருவருளினால் பல ஞானநூல்களை ஓதி யுணர்ந்து, நாம் இதுவரையிலும்அரசாட்சிசெய்தமை போதுமென்று பொய்போலத்தோன்றி யழியும் உடம்பின்வாழ்க்கை நீங்கும்பொருட்டுப் புகழ்பொருந்திய திருவெண்பாக்களைச் சிதம்பரத்தின்கண் திருநடனஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானது சிவந்த திருவடிகளைத் தரிசித்து அத்தலமுதலாகச் சிவஸ்தலங்கடோறுஞ்சென்று பாடியருளினார்; அவர் என்னுடையதீவினைகளையும் நீக்கியருளினார்.—எ-று. (௬௨)

## கணம்புல்லநாயனார் புராணம்.

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால் வாழு
மிருக்குவே ளூரதிப ரெழிலார் சென்னிக்
கலைநிலவா ரடிபரவுங் கணம்புல்லர் தில்லைக்
கருதுபுலீச் சரத்தரற்குக் காதற் றீப

நிலைதரத்தா மிடமிடியா லொருநாட் புல்லா
லீடுவிளக் கிடவதுவு நேரா தாகத்
தலைமயிரி னெரிகொளுவு மளவி னுதன்
றுவாத வாழ்வருளுந் தன்மை யாரே.

(இ-ள்.) விளங்குகின்ற வடவெள்ளாற்றுக்குத் தென்கரையிலுள்ள இருக்கு வேளூரில் அவதரித்த முதல்வராயுள்ளவர், அழகிய இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் திருவடியைத்துதிக்கும் கணம்புல்லநாயனார் திருத்தில்லையின்கணுள்ள திருப்புலீச்சரமென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்கு விருப்பத்தைத்தருகின்ற திருவிளக்குத் திருப்பணியை நிலையாகச் செய்துகொண்டுவர, வறுமையினால் ஒருதினம் கணம்புல்லினால் விளக்கேற்ற, அப்புல்லும் நியமித்த காலத்திற்கு விளக்கெரிக்க அமையாதிருக்க, தலைமயிரினால் அப்புல்லின்தீயைக்கொளுத்தும்பொழுது சிவபெருமான் அழியாத சிவானந்தப்பெருவாழ்வைத் தந்தருளப்பெற்ற தன்மையையுடையவர்.—எ-று. (௫௩)

காரிநாயனார் புராணம்.

திருக்கடவூர் வருமுரவோர் காரி யாராந்
திகழ்தொண்டர் வண்டமிழ்நூ றிருந்த வோதி
விருப்பொடுதம் பெயராற்பா விளம்பி மும்மை
வேந்தரையு முறைமுறையே மேவி யங்க
ணுரைத்தவுரை நயமாக்கி யவர்பா லேய்ந்த
வொண்பொருளா லாலயங்க ளோங்கச் செய்து
தரைக்குளருந் தவர்க்கேவ றகமுன் போற்றுந்
தன்மையா லருள்சேர்ந்த நன்மை யாரே.

(இ-ள்.) திருக்கடவூரின்கண் அவதரித்த பேரறிவினையுடையவராகிய காரிநாயனாரென்னும் புகழ்விளங்கிய திருத்தொண்டர் வளவிய தமிழ்நூல்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்து, விருப்பத்துடன் தம்பெயரினால் ஒருகோவைபாடி, சேர சோழபாண்டியர்களென்னும் தமிழ்நாட்டு மூவேந்தரையும் கிரமமாக அடைந்து, அவ்விடத்துத் தாம்பாடிய கோவையை நயமாகப்பிரசங்கித்து அவர்கள்கொடுத்த திரவியங்களைக்கொண்டு சிவாலயத்திருப்பணிகளை மிகுதியாகச்செய்து, இவ்வுலகத்தில் அரியதவத்தினையுடைய சிவனடியார்களுக்குத் திருத்தொண்டுகளைப் பொருந்தச்செய்யும் முறைமையினால் சிவபெருமான் திருவருளைச்சேர்ந்த நன்மையையுடையவர்.—எ-று. (௫௪)

நின்றசீர்நெடுமாறநாயனார் புராணம்.

கன்னன்மலி நெல்வேலிக் கவினூர் மாறர்
கவுரியர்கோ னமணருறு கலக்க மெல்லாம்
பொன்னெயில்சூழ் சிரபுரக்கோ னணைய மாற்றிப்
புனிதமிகு நீறணிந்து போற்றி செய்து
மன்னுபுகழ் மங்கையருக் கரசி யாரா
மலர்மாது மணிமார்ப மகிழ்ந்து மாற்றார்
வெந்நிடுதல் கண்டரசு புரிந்து காழி
வேந்தருள் சேர்ந்தபெரு விறலி னாரே.

(இ-ள்.) கருப்பஞ்சோலைகள் சூழ்ந்த திருநெல்வேலி நகரத்தின்கண்வாழ்ந்த அழகிய நின்றசீர்நெடுமாறநாயனாரென்னும் பாண்டியர்குலத்தலைவர், சமணர்களால்வந்த துன்பங்களையெல்லாம் பொன்மயமாகிய மதில்சூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளிவந்ததனால் நீக்கிப் பரிசுத்தமாகிய விபூதியையணிந்து துதித்து,நிலைபெற்ற புகழையுடைய மங்கையர்க்கரசியாரென்னும் திருமகள்போன்ற அம்மையாரைத் திருமணம்புணர்ந்து, பகையரசர்கள் புறங்கொடுக்கும்படி அரசாட்சிசெய்து அந்தத்திருஞானசம்பந்தப் பிள்ளையாருடைய திருவருளையடைந்த மிக்க வெற்றியையுடையவர்.—எ-று. (௫௫)

## வாயிலார்நாயனர் புராணம்.

ஞாயிலார் மதிற்றொண்டை நாட்டு மேன்மை
நண்ணுமயி லாபுரியின் வேளாண் டொன்மை
வாயிலார் மலைவில்லா னடியே போற்றி
மறவாமை தலைநின்ற மனமே செம்பொற்
கோயிலா வுயர்ஞானம் விளக்கா நீராக்
குலவியவா னந்தமன்பே யமுதாக் கொண்டு
தாயிலா னிருசரண நிகழ வேத்துந்
தன்மையா ரருள்சேர்ந்த நன்மை யாரே.

(இ-ள்.) உறுப்பமைந்த மதில்களையுடைய தொண்டைநாட்டின்கண் மேன்மைபொருந்திய திருமயிலாப்பூரில் பழைமையாகிய வேளாளர்குலத்தில் அவதரித்த வாயிலார்நாயனர் மேருமலையாகிய வில்லையேந்திய சிவபெருமானது திருவடிகளைத் துதித்து,மறவாமை நிலைபெற்ற திருவுள்ளமே செம்பொன்மயமாகிய திருக்கோயிலாகவும்,உயர்ந்த சிவஞானமே திருவிளக்காகவும்,விளங்கிய சிவானந்தமே திருமஞ்சனமாகவும், பேரன்பே திருவமுதாகவும் அமைத்துக்கொண்டு, தனக்கோர் தாய்தந்தையில்லாத சிவபெருமானது இரண்டுதிருவடிகளையும்பொருந்தத் துதிக்கும் தன்மையையுடையவர்; திருவருளையடைந்த நன்மையை யுடையவர்.

## முனையடுவார்நாயனர் புராணம்.

பொன்னிவளந் தருநாட்டுப் புகழு நீடூர்ப்
பொருவிறிரு மலிவேளாண் டொன்மை மிக்கார்
முன்னியவர் முனையடுவா ரிகலார் போரின்
முரணழிவார் தமக்காக மொழிந்த கூலி
மன்னுநிதி கொண்டுசயங் கொடுத்து வந்த
வளர்பொருளா லிறைவனடி வழுவா வன்பர்க்
கன்னமவர் நசையின்மிக மிசைய நல்கு
மன்பர்துன்ப மவையாவு மகன்று ளாரே.

(இ-ள்.) காவிரிநதியானது பலவளப்பங்களைத்தருகின்ற சோழநாட்டிலே புகழையுடைய திருநீடூரில் அவதரித்த ஒப்பற்ற செல்வமிக்க பழையவேளாளர்குலத்திற் சிறந்தவர்; தன்னோடெதிர்த்த பகைவர்களைப் போர்செய்து செயித்தலின் முனையடுவார்நாயனாரென்னுந் திருநாமமுடையவர்;பகையினையுடையபோரில் வலியிழந்து தோற்றவர்கள் தமக்குக்கொடுப்பதாகச் சொல்லிய கூலிப்பொருளைக்கொண்டு அவர்களுக்கு வெற்றியைக்கொடுத்து, அதனால்கிடைத்த மிக்கபொ

ருள்களினால் சிவபெருமான் திருவடியில் நீங்காது பத்திசெய்கின்ற அடியார்களுக்குத் திருவமுதை அவரவர்கள் இஷ்டப்படி அமுதுசெய்யக்கொடுக்கும் அன்பினையுடையவர்; எல்லாத்துன்பங்களினின்றும் நீங்கினவர்.—எ-று. (ருஎ)

### கழற்சிங்கநாயனார் புராணம்.

காடவர்தங் குலமுவந்த கழலார் சிங்கர்
காதன்மிகு தேவியுடன் காவ லாரூ
ராடவல பெருமானைப் பணிவா ரங்கோ
ரகன்றமலர் தனைமோந்த வரிவை மூக்கைச்
சேடுடைய செருத்துணையா ரரியக்கேட்டுத்
திறலரசர் மலரெடுத்த செங்கை யென்றே
சூடகமுன் கைதடிந்து ஞாலங் காத்த
தூய்மையா ரருள்சேர்ந்த வாய்மை யாரே.

(இ-ள்.) பல்லவரென்னுங் காடவர்குலமானது மகிழ்ந்து செய்ததவத்தினால் அவதரித்த கழற்சிங்கநாயனார் அன்புமிகுந்த தம்மனைவியாரோடு திருவாரூரையாளும் ஸ்ரீதியாகராசப்பெருமானை வணங்கும்பொழுது, அவ்வாலயத்துத் திருமாலைகட்டும் மண்டபத்தின்சமீபத்தில் விழுந்துகிடந்த ஒரு புதுப்பூவையெடுத்து மோந்த அம்மனைவியினது மூக்கை உயர்வுபொருந்திய செருத்துணைநாயனார் அரிய, அதனைக்கேள்வியுற்று, வலிய கழற்சிங்கநாயனார் அப்பூவையெடுத்த கை இதுவாகுமென்று வளையலணிந்த அம்மனைவியினது முன்கையை வெட்டி இவ்வுலகத்தை நீதியோடு காவல்செய்த பரிசுத்தமுடையவர்; சிவபெருமான் திருவருளையடைந்த மெய்யன்பராயுள்ளவர்.—எ-று. (ருஅ)

### இடங்கழிநாயனார் புராணம்.

கோநாட்டுக் கொடும்பாளூ ரிருக்கும் வேளிர்
குலத்தலைவ ரிடங்கழியார் கொங்கிற் செம்பொ
னேற்றூர் மன்றின்முக டம்பொன் மேய்ந்த
வாதித்தன் மரபோர்நெற் கவர்ந்தோ ரன்பர்
போநாப்ப ணிருளின்கட் காவ லாளர்
புரவலர்முன் கொணரவவர் புகலக் கேட்டு
மானேற்று ரடியாரே கொள்க வென்று
வழங்கியர சாண்டருளின் மன்னி னாரே.

(இ-ள்.) கோநாட்டின்கணுள்ள கொடும்பாளூரில்வாழ்ந்த குறுநிலத் தரசர்களுள் முதல்வராகிய இடங்கழிநாயனார், கொங்கின்கணுள்ள மாற்றுயர்ந்த பொன்னினால் இடபவாகனத்தையுடைய ஸ்ரீநடராசப்பெருமானது சிற்சபையின் முகட்டைப் பொன்மயமாக வேய்ந்த சோழவமிசத்தையுடையவர்; ஒரு அடியவர் நெல்லைக் களவுசெய்துகொண்டுபோகின்ற அர்த்தராத்திரியில் காவலாளர்கள் அவரைப்பிடித்துத் தம் முன் கொண்டுவர, அவர் (அடியார்கள் திருவமுதுசெய்தற் கில்லாமையால் இவ்வாறு செய்தேனென்று) சொல்லக்கேட்டு, மானேந்திய சிவபெருமா னடியார்களே (எனது நெற்குவைகளையும் நிதிக்குவைகளையும்) கொள்ளக்கடவர்களென்று கொடுத்து, உலகத்தை அரசாட்சிசெய்து, திருவருளிற்சேர்ந்தனர்.—எ-று. (ருகூ)

### செருத்துணைநாயனார் புராணம்.

இரைத்தணையார் புனற்பொன்னி மருக னன்னாட்
டெழிலாருந் தஞ்சைநக ருழவ ரேத்துஞ்
செருத்துணையார் திருவாரூர் சேர்ந்து வாழ்வார்
செல்வமிகும் பல்லவர்கோன் றேவி வீழ்ந்த
மருத்துணையார் மலரெடுத்து மோப்பக் கண்டு
வளமலிபூங் கத்தியா லவண்மூக் கீர்ந்த
கருத்துணையார் விறற்றிருத்தொண் டினையே செய்து
கருதலரு மமருலகங் கைக்கொண் டாரே.

(இ-ள்.) அலைகள் இரைத்துக் கரையில்மோதுகின்ற நீரையுடைய காவிரி நதிசூழ்ந்த நல்லமருகல்நாட்டில் அழகுபொருந்திய தஞ்சைமாநகரத்தில்வாழ்ந்த வேளாளர் மரபினராய் யாவரும் புகழ்கின்ற செருத்துணைநாயனார் திருவாரூரை யடைந்து திருத்தொண்டுசெய்து வாழ்கின்றவர் செல்வமிகுந்த பல்லவராஜனாகிய கழற்சிங்கநாயனாருடைய மனைவியார் தவறிக் கீழேவிழுந்துகிடந்த வாசனைபொருந்திய மலரையெடுத்து மோந்ததைப்பார்த்து,கூர்மைமிகுந்த அழகிய சூரியினால் அவ்வரசபத்தினியினது மூக்கையரிந்த என்பிறவித்துயரை நீக்குந்துணைவராயுள்ளவர், வலிய திருத்தொண்டினையேசெய்து நினைத்தற்கரிய நிலைபெற்ற சிவலோகத்தை யடைந்தனர்.—எ-று. (சுo)

### புகழ்த்துணைநாயனார் புராணம்.

புண்ணியர்கள் புகழழகார் திருப்புத் தூர்வாழ்
புகழ்த்துணையா ரகத்தடிமைப் புனிதர் சின்னாண்
மண்ணிகழ மழைபொழியா வற்கா லத்தால்
வருந்துடல நடுங்கிடவு மணிநீ ரேந்தி
யண்ணன்முடி பொழிகலச முடிமேல் வீழ
வயர்ந்தொருநாட் புலம்பவர னருளா லீந்த
நண்ணலரு மொருகாசுப் படியால் வாழ்ந்து
நலமலிசீ ரமருலக நண்ணி னாரே.

(இ-ள்.) புண்ணியர்களால் புகழப்பட்ட அழகிய திருப்புத்தூரில்வாழ்ந்த புகழ்த்துணைநாயனார் அகத்தடிமைத்தொண்டுசெய்யும் பரிசுத்தராயுள்ளவர்; சில காலம் உலகம்செழித்தோங்க மழைபெய்யாத பஞ்சகாலத்தால்வருந்துகின்ற உடம்பானது நடுக்கமடையவும் அழகிய திருமஞ்சனத்தையெடுத்துச் சிவபெருமானது திருமுடியில் அபிஷேகிக்கின்ற கலசமானது அவ்வெம்பெருமான் திருமுடியின்மேல் தவறிவிழ, அதனால்வருந்தி ஒருநாள் துன்பமடைய,சிவபெருமான் திருவருளினால் கொடுத்தருளிய கிடைத்தற்கரிய ஒருபடிக்காசினால் வாழ்வடைந்து நன்மைபொருந்திய சிறந்த சிவலோகத்தையடைந்தனர்.—எ-று. (சுக)

### கோட்புலிநாயனார் புராணம்.

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவே ளாளர்
கோட்புலியார் குவித்துயர்த்த செந்நெற் கூடு
நிலவணிவார்க் கமைத்தானை நிறுத்தி யொன்னார்
நேர்மலைவார் திருவாணை நினையா தேநெற்

சிலமிடியா லழித்தபடி யறிந்து வாளாற்
சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதற வீசி
யிலகுமொரு குழவியையு மெறிந்து நாத
னெண்ணரிய கருணைநிழ லெய்தி னாரே.

(இ-ள்.) பரவிய புகழையுடைய திருநாட்டியத்தான்குடியென்னும் ஊரில் வாழ்ந்த வேளாளர்குலத்தினராகிய கோட்புலிநாயனார் குவித்துயர்த்துக் கட்டிய சம்பாநெற்கூட்டைச் சந்திரசேகரராகிய சிவபெருமானுக்கென்று நியமித்து, ஆணையிட்டு, பகைவரோடெதிர்த்துப் போர்செய்யச்சென்ற அவரது ஆணையைச் சிறிதும் நினையாமல் அக்கூட்டிலுள்ளநெற்கள் சிலவற்றைத் தங்களுக்குநேரிட்ட வறுமையினால் அழித்ததன்மையை யறிந்து,தம்மனையில்சேர்ந்து அந்நெற்களையழித்துண்ட மிகுந்த உறவினரது உடம்பைக் கையிலுள்ளவாளினால் சிதறும்படி வெட்டி, விளங்குகின்ற தமது ஒரு குழந்தையையும் வாளால் எறிந்து சிவபெருமானது நினைத்தற்கரிய திருவருணிழலடைந்தனர்.—எ-று. (சுஉ)

## பத்தராய்ப்பணிவார் புராணம்.

தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்த லழகார்
துளங்கியவர்ச் சனைபுரித ன்றுகுதிகிய மங்கள்
கொண்டபணி திருவடிக்கே கொடுத்த லீசன்
குணமருவு மருங்கதையைக் குலவிக் கேட்டு
மண்டிவிழி துளும்பன்மயிர் சிலும்ப லுன்னன்
மருவுதிருப் பணிகாட்டி வருப வாங்கி
யுண்டிகொளா தொழிதலென விவையோ ரெட்டு
முடையரவர் பத்தரென வுரைத்து ளாரே.

(இ-ள்.) சிவனடியார் திருவடிகளைவணங்குதலும், சிவபூசைத்தொழிலைத் தரிசித்து மகிழ்வடைதலும், அழகமைந்து விளங்குகின்ற சிவார்ச்சனைசெய்தலும், தொகுதியாகிய பலவகை நியமங்களும் தாம்மேற்கொண்ட திருப்பணியையும் சிவபெருமான் திருவடிகளுக்கே அர்ப்பணஞ்செய்தலும், சிவபெருமானது நன்மையமைந்த அருமையாகிய திவ்வியசரிதங்களை விரும்பிக்கேட்டுக்கண்களில் நெருங்கும்படி ஆனந்த பாஷ்பஞ்சொரிதலும், மயிர்க்கூச்செறிதலும், தியானித்தலும், பொருந்திய திருப்பணிகளைச்செய்து அதனால்வரும் பொருள்களைப்பெற்று அதைக் கொண்டு சீவியாதிருத்தலும் என்று சொல்லப்பட்ட இவ்வெண்வகைப் பத்தியினையுமுடையவர்களே பத்தராய்ப்பணிவாரென்று சொல்லப்பட்டவர்கள். ()

## பரமனையேபாடுவார் புராணம்.

அருந்தமிழால் வடகலையா லருளா லொன்று
லறிவுநெறி மருவுமருங் கவிகள் யாவுந்
திருந்தியவா னவர்பணிய மன்று ளாடுந்
தேவர்பிரான் கழலிணையே சேர வோதி
விருந்திடுநா வுடையபயன் மேவி னோர்தா
மேலானோ மெனமகிழ்ந்து விழிநீர் சோரப்
பரிந்தருளாற் பரமனையே பாட வல்ல
பான்மையா ரெமையாளு மேன்மையாரே.

(இ-ள்.) அரிய செந்தமிழ்ப்பாஷையிலாயினும், சமஸ்கிருதபாஷையிலாயினும் வேறேயாதொருபாஷையிலாயினும், அருளோடுகூடிய மெய்யுணர்ச்சியாயிலாகவரும் அரிய ஆசுமுதலிய நால்வகைக்கவிகளையும் சிறந்த தேவர்கள் வணங்கும்படி கனகசபையில் ஆனந்தநிருத்தஞ் செய்தருளும் தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் திருவடிகளுக்கே பொருந்தும்படிப் பாடி, கேட்போர் செவிகளுக்கு விருந்தாகச்செய்யும் நாவைப்பெற்ற பயனையுடையவர்கள், தாம் யாவர்க்கும் மேலானேமென்று மகிழ்ச்சியடைந்து ஆனந்தக்கண்ணீர்சொரிய விரும்பித்திருவருளினால் பரமனையேபாடுவோரென்று சொல்லப்படுவோர்கள்; அவர்களே எம்மையடிமைகொள்ளும் மேன்மையையுடையவர்கள்.—எ—று. (கூ௬)

## சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார் புராணம்.

பாரணவும் புலனந்தக் கரண மொன்றும்
படராமே நடுநாடி பயிலு நாதங்
காரணபங் கயன்முதலா மைவர் வாழ்வுங்
கழியுநெறி வழிபடவுங் கருதி மேலைப்
பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப்
புணர்ந்தணைந்த சிவாநுபவ போக மேவுஞ்
சீரணவு மவரன்றே யெம்மை யாளுஞ்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே.

(இ-ள்.) உலகவிவகாரங்களிற் செல்கின்றபுலன்களில் அந்தக்கரணங்கள் ஒன்றேனும் சென்றுபற்றாமல், (பிராணாயாமத்தின்பின் பிரத்தியாகாரம் செய்தபின்) சுழுமுனையில் அந்தர்க்கதமாகச் சஞ்சரிக்கின்ற (சிவமந்திரமென்னும்) பிரதானநாதமானது சிருஷ்டிகாரணனாகிய பிரமன்முதல் பஞ்சகர்த்தாக்களுடைய ஸ்தானங்களையும் கடந்து செல்லும்முடிவில் தியானமுஞ்செய்து, நிராதாரபூரணத்திலிருக்கின்ற வியாபகமானமெய்ம்மையாகிய சிவஜோதியின் பொலிவை நோக்கிச்சித்து, அதனோடுகூடி அதனாலுண்டான சிவானந்தவாழ்வை யனுபவிக்குஞ் சிறப்புப்பொருந்திய சிவயோகிகளன்றோ? எம்மை யடிமைகொண்டருளும் சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார் என்று சொல்லப்படுவோர்.—எ-று. (

## திருவாரூர்ப்பிறந்தார் புராணம்.

பொங்கியமா தவமுடையார் வருண நான்கிற்
பொருந்தினர்க ளல்லாத புகழி னுள்ளார்
சங்கையிலா வருந்தவமுன் புரிந்தா ரிங்குச்
சார்விலா ரிறைவனருள் சார்த லாலே
கங்கைவாழ் சடைமுடியா னருளை நீங்காக்
கணநாத ரெனவாழுங் கருத்தர் கன்னிச்
செங்கண்வரால் வளர்வாவி திகழு மாரூர்ச்
சிறந்துளா ரெமையாளப் பிறந்து ளாரே.

(இ-ள்.) மிகுந்த மாதவத்தையுடையவர்களாயும், பிரமக்ஷத்திரியவைசிய சூத்திரரென்னும் நான்கு குலத்தினராயும், இவர்களல்லாத அநுலோமர்முதலா கிய புகழினையுடையவர்களாயும், குறைவில்லாத அரியதவத்தை முன்செய்தவர் களாயும், சிவபெருமான் திருவருளையடைதலினால் இவ்வுலகத்தில் பற்றில்லாத வர்களாயும், கங்கைநதிபொருந்திய சடைமுடியையுடைய சிவபெருமானது திரு வருளை நீங்காத சிவகணநாதர்கள்போல இவ்வுலகத்தில் வாழுங்கருத்தினையுடைய வர்களாயும் உள்ளவர்கள் யாரெனில், இளமையான சிவந்த கண்களையுடைய வரால்மீன்கள் வளருந் தடாகங்கள் விளங்குகின்ற திருவாரூரின்கண் சிறந்து ள்ளவர்கள் எம்மையடிமைகொள்ளும்படி அவதரித்தவர்களாம்.—எ—று. (சுடு)

## முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார் புராணம்.

செப்பலருந் தவமுடைய செம்மை யாளர்
சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி
யொப்பிறிரு நீறணிந்து நியதி யாற்றி
யோவாமே யைந்தெழுத்து முறைத்து மேன்மைத்
தப்பில்சிவா கமவிதியா லின்பா லன்பாந்
தன்மையா னன்மையாந் தகையா ரென்று
முப்பொழுதுந் திருமேனி தீண்ட வல்ல
முறைமையார் பிறவிதெறுந் திறமை யாரே.

(இ-ள்.) சொல்லுதற்கரிய தவத்தினையுடைய நல்லொழுக்கமுள்ளவர்கள் விடியற்காலத்தில் மலர்களையுடைய தடாகத்தில் விளங்கும்படி மூழ்கி, ஒப்பற்ற திருவெண்ணீறுதரித்து நித்திய கன்மங்களைமுடித்து, தவறுமல் திருவைந்தெழுத் தையும் ஜெபித்து, குற்றமற்ற மேன்மைபொருந்திய சைவாகமவிதியினால் சிவா னந்தவிளைவினாலும், அன்பின்குணத்தாலும் நன்மையான தன்மையையுடையவர் கள், எப்பொழுதும் முப்பொழுதுந் திருமேனிதீண்டுவார் என்னுந்திருநாமமுடை யவர்கள்; அவர்கள் பிறவியையொழித்த வல்லமையையுடையவர்கள்.—எ-று. ()

## முழுநீறுபூசியமுனிவர் புராணம்.

கற்பமநு கற்பமுப கற்ப மென்றிக்
கடனணைந்த திருநீறுங் கனற்க ணீறும்
பொற்புடைய வாறுசா ணங்கி யாறு
பொல்லாத பூமியெதிர் புனைத லாகா
வற்புதமாந் திரிபுண்ட மதியின் பாதி
யகிலாங்கந் தீபமிகு மழகார் வட்ட
முற்பொலிய வுடலணியு முறையா ரன்றே
முழுநீறு பூசவல்ல முனிவர் தாமே.

(இ-ள்.) கற்பமென்றும், அநுகற்பமென்றும், உபகற்பமென்றும் இம்மூன் றுவகையாகிய திருவெண்ணீறும், காட்டக்கினியால் விளைந்த அகற்பமென்னுந்

திருவெண்ணீறும், மேன்மைபொருந்திய சிவபெருமான் சந்நிதியிலும், ஆசாரியர் சந்நிதியிலும், அக்கினியின்முன்னும், நடக்கும் வழியிலும், அசுத்தமாகிய நிலத்திலும் தரித்தல் விதியன்றாம் ; அற்புதமாகிய திரிபுண்டரமும், பிறையும், சதுரமும், முக்கோணமும், வட்டமுமாகத் தமது திருமேனியில் முன்னே விளங்கும்படி அணியுமியல்புடையவர்களே முழுநீறுபூசிய முனிவர்களென்று சொல்லப்படுவோர்.

கற்பம் - அநுகற்பம் - உபகற்பமென்னும் மூவகைவிபூதியும் அந்தணர்முதலிய நான்குவருணத்தார்க்கும் அனுலோமர்க்குமுரியன. அகற்பம் எல்லார்க்கும் பொதுவாயுள்ளது. இவ்விபூதியின்வகை, தரிக்கும்முறை, பலாபலன் முதலியவற்றை "சைவசமயநெறி" முதலிய நூல்களில் நன்குவிளங்கக் கூறியிருத்தல் காண்க. (கூஎ)

## அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்.

தாராரு மூவேந்தர் பயிலுந் தொல்லைத்
　　தமிழ்நாட்டப் புறத்திறைவன் சரணஞ் சார்ந்த
சீராருந் தொண்டர்களு மண்ட ரேத்துந்
　　திருத்தொண்டத் தொகையருளாற் செப்புங் காலத்
தேராருந் தொடையிலுறு திப்பா லப்பா
　　லெந்தைபிரா னடியடைந்த வியல்பி னோரு
மாராத காதலுடை யவர்க ளன்றோ
　　வப்பாலு மடிச்சார்ந்த வடியார் தாமே.

(இ-ள்.) பனை-ஆத்தி-வேம்பு என்னும் மாலையைத்தரித்த சேரசோழபாண்டியரென்னும் மூன்றரசர்களும் வாழ்கின்ற பழைமையாகிய நாட்டிற்கு அப்புறத்திலே சிவபெருமானுடைய திருவடியையடைந்த சிறந்த அடியார்களும், தேவர்களும் துதிக்கின்ற திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்தைச் சிவபெருமானுடைய திருவருளினால் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்தபொழுது, அழகிய அத் திருத்தொண்டத்தொகையில் கூறிய தனியடியார்களுள் அடங்காமல் அதற்கு முன்னும் பின்னும் எமது சிவபெருமானுடைய திருவடியையடைந்த தன்மையையுடையவர்களும் நீங்காதபேரன்பையுடையவர்களுமே அப்பாலுமடிச்சார்ந்த அடியார்களாவார்.—எ-று. (கூஅ)

## பூசலார்நாயனார் புராணம்.

பொருவருந்தண் டகநாட்டு நின்ற வூர்வாழ்
　　பூசுரர்கோப் பூசலார் புந்தி யாலே
யிருநிதியந் தேடியா லயமு மாக்கி
　　யெழுந்தருளப் பண்ணுவதா வெண்ணுங் காலை
யரனதனைக் காடவர்கோற் கருள மன்ன
　　னங்கதனை யணைந்தவ்வா றறிந்து தாழ
விரவுமனக் கோயிலுற விருத்தி யங்கண்
　　வேண்டுவகொண் டிறைஞ்சியருண் மேவி னாரே.

(இ-ள்.) ஒப்பற்ற தொண்டைநாட்டிலே திருநின்றவூரில் வாழ்ந்திருந்த பிராமணகுலசிரேஷ்டராகிய பூசலார்நாயனார் தமது மனதினாலே மிகுந்த திரவியத்தைச்சம்பாதித்து அப்பொருள்களால் ஆலயத்தையுமமைத்து, அவ்விருதயாலயத்துள் சிவலிங்கப்பெருமானைப் பிரதிஷ்டைசெய்ய நன்னாள் நியமித்திருக்குங்காலத்து, சிவபெருமான் பூசலார்நாயனார் பிரதிஷ்டைசெய்யக் குறித்திருக்கும் தினத்தை, காஞ்சிபுரத்தில் ஓர்சிவாலயமமைத்து, அத்தினத்தில் பிரதிஷ்டைசெய்யக் கருதியிருந்த காடவராஜன் சொப்பனத்திலே தோன்றியருளிச்செய்ய, அவ்வரசன் அத்திருநின்றவூரையடைந்து அந்நாயனார் மனக்கோயிலமைத்த நிலைமையையறிந்து வணங்க, மனசாலமைத்த ஆலயத்துள் சிவபெருமானைப் பிரதிஷ்டைசெய்து,அங்குவேண்டிய பூசோபகரணங்களை மானசிகமாக அமைத்துப்பூசித்து வணங்கித் திருவருளடைந்தனர்.—எ-று. (சுகூ)

## மங்கையர்க்கரசியார் புராணம்

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக் கொழுந்து
மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவி யார்மண்
சங்கைகெட வமண்சமயஞ் சாட வல்ல
சைவசிகா மணிஞானத் தமிழிற் கோத்த
பொங்குதிரு வருளுடைய போத வல்லி
பொருவினெடு மாறனார் புயமேல் வாழுஞ்
செங்கலச முலையாட னருளா லின்பஞ்
சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்த வாறே.

(இ-ள்.) ஒப்பற்ற மங்கையர்க்கரசியாரும், சோழர்குலத்துதித்தகொழுந்துபோல்பவரும், அரசர்கள் சூழ்ந்து வணங்கப்பெற்ற நின்றசீர்நெடுமாறநாயனார்க்குச் சிறந்த பத்தினியாரும், உலகத்தார் மயங்கியலையாமல் சமணசமயத்தை யழிக்கவல்ல சைவசிகாமணியாகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தாம்அருளிச்செய்த ஞானமயமாகிய செந்தமிழ்த் திருப்பதிகத்திற் சேர்த்து அருளிச்செய்யப்பெற்ற மிக்க திருவருளையுடைய ஞானவல்லியும், ஒப்பற்ற அந் நின்றசீர்நெடுமாறநாயனாரைக் கூடிவாழ்கின்றவருமாகிய அப்பாண்டிமாதேவியாரது திருவருளினால் பேரின்பத்தையடைந்த அடியாரைத்துதித்து அடியேன் பெருவாழ்வடைந்தேன்,—எ-று. (எ0)

## நேசநாயனார் புராணம்.

சாலியர்கோக் காம்பிலித் தலைவர் மேன்மை
தாவாத புகழ்நேசர் தஞ்சொ லென்றுங்
கோலியவைந் தெழுத்தோதிச் சிந்தை யுன்னிக்
கொண்டபொரு ளன்பர்கொளக் கொடுத்து வாழ்வார்
சீலமிகுந் திருத்தொண்டர்க் குடையுங் கீளுந்
திருந்தியவெண் கோவணமுஞ் சேர வீந்து
பாலனைய வொளிநீற்றான் பாத மேத்திப்
பரலோக முழுதாண்ட பான்மை யாரே.

(இ-ள்.) சாலியர் குலத்தலைவரும், காம்பீலிதேசத்து முதல்வருமாகிய கெடாதமேன்மைதங்கிய கீர்த்தியையுடைய நேசநாயனர் தமது திருவாக்கினால் எப்பொழுதும் மகிமை பொருந்திய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதி மனத்தால் சிவபெருமானைச்சிந்தித்து, தாம் சம்பாதித்தபொருளைச் சிவனடியார்கள் கொள்ளும்படி கொடுத்து வாழ்கின்றவர் ; அன்றியும், நல்லொழுக்கமிகுந்த அச் சிவனடியார்களுக்கு வஸ்திரமும், கீளும், நல்லவெண்மையாகிய கோவணமும் பொருந்தக்கொடுத்துப், பால்போலும் ஒளிவிளங்கும் திருவெண்ணீறணிந்த சிவபெருமான் திருவடிகளைத் துதித்துச் சிவலோகமுழுதும் ஆளப்பெற்ற தன்மையையுடையவர்.—எ-று. (எக)

## கோச்செங்கட்சோழநாயனர் புராணம்.

வெண்ணாவ லிறைக்கொளிநூற் பந்தர் செய்த
வியன்சிலம்பி யதுவழித்த வெள்ளா னைக்கை
யுண்ணுடிக் கடித்தவுட லொழியச் சோழ
னுயர்குலத்துச் சுபதேவன் கமலத் தோங்கும்
பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச் செங்கட்
பெருமானய்த் தென்னவனாய்ப் பெருங்கோயில் பலவுங்
கண்ணூர்வித் துயர்தில்லை மறையவர்க்கு மூறையுள்
கனகமய மாக்கியருள் கைக்கொண் டாரே.

(இ-ள்.) (திருவானைக்காவிலே) ஒரு வெண்ணாவல் மரத்தின்கீழே வீற்றிருந்தருளிய சிவலிங்கப்பெருமானுக்குத்தன்வாய் நூலினாலே பந்தலிட்ட பெருமை பொருந்திய சிலந்திப்பூச்சியானது, அப்பந்தலைக்கெடுத்த வெள்ளானையின் துதிக்கையினுள்ளே நுழைந்து கடித்து, அந்த யானையால் இறக்க, உயர்ந்த சோழவமிசத்தில் சுபதேவனென்னும் அரசன் மனைவியாகிய கமலவதியின் திருவயிற்றில் தங்கிப் புதல்வனாகப்பிறந்து, கோச்செங்கட் சோழரென்னுந் திருநாமம் பெற்று, பாண்டிநாட்டரசராயு மிருந்து, பூர்வசன்மவுணர்ச்சியால் பெருமை பொருந்திய சிவாலயங்கள் பலவற்றையும் பார்வைக்கு அழகாகக் கட்டுவித்து, உயர்ந்த தில்லைவாழந்தணர்களுக்கும் திருமாளிகைகளைப் பொன்மயமாகக் கட்டுவித்துச் சிவபெருமான் திருவருளை யடைந்தனர்.—எ-று. (எஉ)

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர் புராணம்.

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும் பேரியாழ்
பேணுதிரு நீலகண்டப் பெரும்பாண னர்சீர்
நிறந்தருசெம் பொற்பலகை யால வாயி
னிமலன்பாற் பெற்றரூர் நேர்ந்து சிவன்வாயி
றிறந்தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித்
திருஞான சம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி
யறந்திகழுந் திருப்பதிகம் யாழி லேற்றி
யாசிறிருப் பெருமணஞ்சேர்ந் தருள்பெற் றாரே.

(இ-ள்.) புகழால் விளங்கும் திருவெருக்கத்தம் புலியூரில் வாழ்ந்த பேரியாழ் வாசிக்கும் திருநீலகண்டப் பெரும்பாணநாயனார்; அவர் மதுராபுரியில் வீற்றிருந்தருளும் சொக்கலிங்கப் பெருமானிடத்தில் சிறந்த பிரகாசம் பொருந்திய செம்பொன்னலாகிய பலகையைப் பெற்றுக்கொண்டு,பின் திருவாரூரையடைந்து வன்மீகநாதர் வடதிசையிலே திறந்தருளிய வேற்றுவாயில் வழியாகச்சென்று வணங்கி, (பின் சீகாழியையடைந்து) திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுடைய திருவடிகளைத் துதித்து,உண்மை விளங்குகின்ற அவர் திருப்பதிகங்களை யாழில் அமைத்து வாசித்து, குற்றமற்ற திருப்பெருமணத்தில் சென்று திருவருள் பெற்றனர். எ-று.

## சடையநாயனார் புராணம்.

சங்கையிலா வரன்மறையோர் நாவ லூர்வாழ்
தவரதிபர் தம்பிரான் றோழ ராய
வெங்கள்பிரான் றவநெறிக்கோ ரிலக்கு வாய்த்த
விசைஞானி யார்தனய ரெண்ணார் சிங்க
மங்கையர்க டொழும்பரவை மணவாள நம்பி
வந்துதிக்க மாதவங்கள் வருந்திச் செய்தார்
வெங்கணரா விளங்குமிளம் பிறைசேர் சென்னி
விடையினா ரருள்சேர்ந்த சடைய னாரே.

(இ-ள்.) குற்றமற்ற ஆதிசைவவேதியரும், திருநாவலூரில் வாழ்ந்த தவத்தலைவரும், தம்பிரான்றோழரென்னும் திருநாமத்தினையுடைய எமது முதல்வரும், தவமார்க்கத்திற்கு ஓரிலக்காகப் பொருந்திய இசைஞானியார் புதல்வரும், தம்மை மதியாத புறச்சமயிகளாகிய யானைகளுக்குச் சிங்கம்போல்பவரும், மாதர்களால் தொழத்தக்க பரவை நாச்சியாருக்கு மணவாளரும் ஆகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தமக்குப் புத்திரராகத் திருவவதாரஞ்செய்ய மகத்தாகிய தவத்தை முன்னே வருந்திச்செய்தவர் யாரெனின், வெவ்விய கண்களையுடைய பாம்புகள் விளங்குகின்ற இளம்பிறை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருவருளையடைந்த சடைய நாயனாராகும்.—எ-று. (எச)

## இசைஞானியார் புராணம்.

நாவற்றி ருப்பதிக்கோர் செல்வச் சைவ
நாயகமாஞ் சடையனார் நயந்த வின்பப்
பூவைக் குலமடந்தை பொற்பார் கொம்பு
புனிதமிகு நீறணிந்து போற்றி செய்தே
யாவிற் றிகழ்தலைவன் வலிய வாண்ட
வாரூ ரவதரிக்க வருந்தவங்கள் புரிந்தார்
யாவர்க்கு மெட்டாத விசைந்த வின்ப
விசைஞானி யெனஞான மெளிதா மன்றே.

(இ-ள்.) திருநாவலூரென்னுந் திருப்பதிக்கு ஒப்பற்ற பெருஞ்செல்வமாயுள்ள சைவசிகாமணியாகிய சடையநாயனார் விரும்பிய இன்பந்தரத்தக்க பூவை

போன்ற குலமனைவியாரும்,அழகுபொருந்திய பூங்கொம்பு போல்பவரும்,பரிசுத்த மிகுந்த திருவெண்ணீறணிந்து சிவபெருமானைத் துதித்து, இடபவாகனத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் ஆவணங்காட்டி வலியத் தடுத்தாட்கொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தமக்குப் புத்திரராகத் திருவவதாரஞ்செய்ய அருமையாகிய தவத்தைச் செய்தவருமாகிய யாவர்க்கும் அடையக்கூடாத பேரின்பத்தையடைந்த இசைஞானியார் என்று வாயினால் சொல்ல, சிவஞானமானது தானே எளிதாக வந்து வாய்க்கும்.—எ-று. (எ௩)

---

**நூல்வந்தவழி, பாடற்றொகை, ஆக்கியோன்பெயர் முதலியன.**

அத்தரடி யவர்கூட்டத் தில்லை வாழு
மந்தணர்பொய் யடிமையிலாப் புலவ ராசில்
பத்தர்முத லெழுவரோ டொன்பதின்ம ரேழோன்
பதின்மர்தனிப் பேரொன்ஞன் பதின்ம ராய
வித்தொகையிற் றெண்டர்சீ ருரைத்தான் வைத்த
வீரிரண்டா யிரத்திருநூற் றைம்பத்து மூன்று
முத்தமநல் விருத்தத்திற் பயனுஞ் செய்யு
ளுலகெழுபத் தைந்தெனவின் றுரைக்கு மன்றே.

செல்வமிகு திருத்தொண்டத் தொகையி லுள்ளார்
சிறந்ததனிப் பெயராக வறுபதின்மேன் மூவர்
மல்லன்மிகு கூட்டப்பே ரருள்சேர் தார்கண்
மாதவத்தோர் மும்மூன்று வகைபெற் றார்க
ளில்லறத்துந் துறவறத்து மிருந்து வாழ்ந்தே
யியல்பாகச் சிவபதநான் கிசைந்தார் தம்மை
யல்லலறுத் தெனையாண்ட சைவசிகா மணியா
ரருட்புலியூ ருமாபதியா ரருள்செய் தாரே.

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டர் புராணசாரம்.

முற்றுப்பெற்றது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர்
# திருநாமக்கோவை.

மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடவைங்
கையன் றிருவடியே காப்பு.

தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனா
ரில்லை யளித்த வியற்பகையார் - தொல்லை
யிளையான் குடிமாறர் மெய்ப்பொருளா ரென்று
மிளையா விறன்மிண்ட ரின்ப - மளவுமமர்
நீதி யெறிபத்தர் நீண்டபுக ழேனாதி
நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர் - மேதகுசீர்
மானக்கஞ் சாறரரி வாட்டாய ரானாயர்
ஞானத் திருமூர்த்தி நாயனார் - மேன்மை
முருகர் பசுபதியார் முன்னாளைப் போவார்
துரிசி றிருக்குறிப்புத் தொண்டர் - மருவுமறைத்
தண்டீசர் வாகீசர் தக்க குலச்சிறையார்
கொண்ட மிழலைக் குறும்பனார் - தொண்டுசெயு
நீள்காரைக் காலம்மை யப்பூதி நீலநக்கர்
மூளு நமிநந்தி முத்தமிழை - யாளுந்
திருஞான சம்பந்தர் செய்யகலிக் காம
ரருண்மூலர் தண்டி யடிகள் - வருமூர்க்கர்
சோமாசி மாறனார் சாக்கியனார் சூழாக்கூர்
நாமார் சிறப்புலியார் நற்றாண்டி - னேமச்
சிறுத்தொண்டர் சேரமான் செய்யகண நாதர்
விறற்களந்தைக் கூற்றுவனார் விஞ்சைத் - திறத்துமிகும்
பொய்யடிமை யில்லாப் புலவர் புகழ்ச்சோழர்
மொய்கொ ணரசிங்க முனையரைய - ரையாதி
பத்தர்கலிக் கம்பர் கலியர் பகர்சத்தி
கைத்தபுல னையடிகள் காடவர்கோன் - மெய்த்தகண
புல்லனார் காரிநெடு மாறர்புகழ் வாயிலார்
நல்ல முனையடுவார் நாயனார் - மல்குகழற்
சிங்க ரிடங்கழியார் தஞ்சைச் செருத்துணையார்

கொங்கார் புகழ்த்துணையார் கோட்புலியா-ரங்கணர்க்குப்
பத்தராய்த் தாழ்வார் பரமனையே பாடுவார்
சித்தஞ் சிவன்பாலே சேர்த்துள்ளார் - நித்தமு
முத்திநெறி காட்டு மூதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை யாரூர்ப் பிறந்தார்க - ளத்தனையே
முப்பொழுதுந் தீண்டுவார் முழுநீறு பூசுவா
ரப்பாலு மீச னடிச்சார்ந்தார் - மெய்ப்பூசன்
மானியார் நேசனூர் வாழ்செங்கட் சோழனூர்
பான்மையார் நீலகண்டப் பாணனூர் - மேன்மைச்
சடையரிசை ஞானியிவர் தம்மையெல்லாஞ் சேர்த்துத்
தொடையாகப் பாடியவன் றொண்ட - ரடியிணைகள்
சிந்தனைசெய் திந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு மயிர்சிலிர்த்து - நைந்துருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங் கற்பனையு - மையலுந்தீர்ந்
தத்துவிதா நந்த வகண்டபரி பூரணத்தி
னித்தியமா வாழ்வார் நிசம்.

திருச்சிற்றம்பலம்.

திருநாமக்கோவை முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அறுபத்துமூன்றுநாயன்மார்

# திருநக்ஷத்திரம்.

## நேரிசைவெண்பா.

ஒன்றகல வெட்டெட்டா மோதுமடி யாரன்பாற்
றுன்றுமதி நாளினிது சொல்லவே—வென்றிதரும்
பொன்னிதிவி னாயகனார் பூமுடிமே லாடுதிருச்
சந்நிதிவி நாயகனார் தாள்.

## நிலமண்டில - ஆசிரியப்பா.

தில்லைவாழந்தணர்திருவருளாலவர்-மல்குசீர்ப்பதத்தைமகிழ்வொடுவணங்கிக்
கடிதிருநீலகண்டர்தைவிசாகம்-வடிவியற்பகையார்மார்கழியுத்திரம்
வருமிளையான்குடிமாறராவணிமகங்-கருதுமெய்ப்பொருளார்கார்த்திகையுத்திரம்
விறன்மிண்டகண்டர்மேடமாதிரைநா-ளறனமர்நீதியாணிப்பூரம்
மாணெறிபத்தர்மாசியிலத்தங்-காணுமேனாதியார்கன்னியுத்திராட
மலர்கண்ணப்பர்மகரமான்றலையிற்-குலவுகுங்கிலியர்கோளரிமூலந்
தருமானக்கஞ்சாறர்விற்சுவாதி-யரிவாட்டாயர்தையாதிரைநாளி
லானாயர்கார்த்திகையத்தநாளிற்-கானமூர்த்தியார்கடகத்தாரன்
முருகரிடபமூலமதனி-லுருத்திரபசுபதியுயர்கன்னிமுன்னாள்
பொருந்திருநாளைப்போவார்கன்னியிற்பார்-திருக்குறிப்படியார்சித்திரைச்சுவாதி
சண்டீசராமவர்தையுத்திரத்திற்-றண்டமிழப்பர்தகரிற்சதயங்
குலச்சிறைநாயனார்கோளரியனுட-மலகில்குறும்பராடியிற்சித்திரை
யருள்காணாக்காலம்மைமீன்விளக்கா-மருகிலப்பூதிதையதிற்சதயத்திற்
கமைநீலநக்கர்காளைமூலத்தி-னமிநந்தியடிகளுள்விடைப்பூச
ஞானசம்பந்தர்நாள்விடைமூல-மானகலிக்காமரானிரேவதியி
லருட்டிருமூலனைப்பசிமுன்னாள்-வருதண்டியடிகள்வளர்மீன்சதயஞ்
சேமமாமூர்க்கர்தேண்மதிமூலஞ்-சோமாசிமாறர்தொழுவிடையரவிற்
சாக்கியநாயனார்தனுப்பூராடங்-தேக்கியசிறப்புலிதேட்பூராடஞ்
சேர்சிறுத்தொண்டர்சித்திரைப்பரணி-சேரமான்கடகஞ்சேர்ந்தசோதியினிற்
கணநாதர்மீனங்கலந்தவாதிரையிற்-குணமாங்கூற்றுவர்குளிர்மதியாதிரை
பொய்யடிமையில்லாப்புலவர்தாள்போற்றி-மெய்ப்புகழ்ச்சோழர்மிளிர்குளிரார
னரசிங்கமுனையார்நற்கன்னிசதயங்-திரவதிபத்தர்சிங்கவாயிலியங்
கலிக்கம்பர்மகரக்கடைநாளதனிற்-கலியராடியினிற்கலந்தவிந்திரனு
டுயசிற்சத்தியார்துலாப்பூசத்தி-லையர்காடவர்கோனைப்பசிமூலங்

கணம்புல்லநாயனார்கார்த்திகையங்கி-கணஞ்சேர்காரியார்கடம்பூராடம்
தூய்நெடுமாறர்துலாமதிப்பரணியில்-வாயிலார்நாயனார்மார்கழியிரேவதி
வெம்முனையடுவார்மீனப்பூசஞ்-செம்மையாநன்கழற்சிங்கர்சேப்பரணி
மருவிடங்கழியார்மதிதுலாவாரல்-செருத்துணைநாயனார்சிங்கப்பூசஞ்
சேட்புகழ்த்துணையார்சிங்கவாயிலியங்-கோட்புலிநாயனார்குளிர்மதிகேட்டை
பத்தராய்த்தாழ்வார்பரமனைப்பாடுவார்-சித்தத்தைச்சிவன்பாலேசேர்த்துளா
ரப்புறுசெய்த்திருவாரூர்ப்பிறந்தார்-முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்
முப்புவிதொழுமுழுநீறுபூசுவா-ரப்பாலுமடிச்சார்ந்தாரைவணங்கிப்
பூசலாரைப்பசிபுகுமனுடத்தின்-மாசிலாமாணியார்மைம்மதியுரோகணி
மிகுசிவநேசர்மீனரோகணியிற்-றொகுபுகழ்ச்செங்கட்சோழர்குடக்குன்
றடுநீலகண்டயாழ்ப்பாணர்சேமூலஞ்-சடையனார்மார்கழிசார்ந்தவாதிரையி
லிசைஞானிமேடத்திசைந்தசித்திரையில்-வசையிலாவிம்மதிமருவுமிந்நாளிற்
பரகதியடைந்தபத்தரைப்பாடிக்-கருதுவன்றொண்டர்கடகச்சுவாதி
குருபூசைநாளிற்குறைவிலாதிவர்க்கு-வருபூசைதந்தோர்மாநிலத்தோங்கித்
தவப்பயனெய்திச்சதுமறைக்கிரியிற்-சிவகதியடைதறிண்ணமுண்மையதே.

திருச்சிற்றம்பலம்.

அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டிற் றெய்வீக—மிப்புவியிற்
சுந்தரர்க்கு மூவா று தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

சித்திரைச் சதயமப்பர் சிறந்தவை காசிமூல
மத்தரைப் பணிசம்பந்த ராணிமா மகத்திலந்த
முத்தமிழ் வாதவூரர் முதியநல் லாடிதன்னிற்
சுத்தமாஞ் சோதிநாளிற் சுந்தரர் கயிலைசேர்ந்தார்.

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன்றொண்ட
ராடியிற் சோதி திருவாத வூரர்நல் லானிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடனி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிக்கோவை.



எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கோயிறிரு வேட்களநெல் வாயில்கழிப் பாலை
குலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முல்லை
வாயில்கலிக் காழூர்சாய்க் காடுதிருப் பல்ல
வனீச்சரம்வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி
தாயிலான் குருகாவூர் காழிகோ லக்கா
தருக்கிளர் * புள் ளிருக்குவே ளூர்கண்ணூர் கோயின்
ஞாயிவியற் கடைமுடியே நின்றியூர் புன்கூர்
நாடியநீ டூரன்னி யூர்வேள்விக் குடியே. (க)

கருதெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக் கொறுக்கை
கருப்பறிய லூர்கதியே காட்டுகுரக் குக்கா
மருவும்வாழ் கொளிபுத்தூர் மண்ணிபடிக் கரையே
வளருமோ மாம்புலியூர் கானாட்டு முள்ளூர்
திருநாரை யூர்கடம்பூர் பந்தணநல் லூர்பொன்
திகழ்கஞ்ச னூர்கோடி காமங்கலக் குடியே
திருப்பனந்தா ளாப்பாடி சேய்ஞலூர் திருந்து
தேவன்குடி திருவியலூர் திருக்கொட்டை யூரே. (உ)

இன்னம்பர் திருப்புறம்ப யம்விசய மங்கை
யியல்வைகா வூர்நல்வட குரங்காடு துறையே
பின்னமறு பழனமை யாறுநெய்த் தானம்
பெரும்புலியூர் மழபாடி திருப்பழுவூர் கானூ
ரன்னவன்பி லாலந்துறை மாந்துறைபாற் றுறையே
யானைக்கா பைஞ்ஞீலி பாச்சிலாச் சிராம
மன்னுமீங் கோய்மலையி னேடாறுபான் மூன்றே
வடகரையிற் பதிதென்பால் † வாட்போக்கி யாமே. (ங)

---

* புள்ளிருக்கு வேளூர்-என்பது வைத்தீச்சுரன்கோவில். † வாட்போக்கி என்பது-இரத்தினகிரி

கடம்பந்துறை திருப்பாய்த்துறை கற்குடி * மூக்கீச்சரங்
கருதுதிருச் சிராப்பள்ளி திருவெறும்பி யூரோ
நெடுங்கள மேலைக்காட்டுப் பள்ளியாலம் பொழில்சீர்
நிகழ்திருப்பூந் துருத்திகண்டி யூர்சோற்றுத் துறைமா
லடும்வேதி குடிதென்குடித் திட்டைபுள்ள மங்கை
யணியார்சக் கரப்பள்ளி யருங்கருகா வூரோ
படர்பாலைத் துறைநல்லூர் திருவாவூ ரதனிற்
பசுபதீச் சரஞ்சத்தி முற்றம்பட் டீச்சரமே. (ச)

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே † குடமூக்
கதனிற்கீழ்க் கோட்டங்கா ரோணநா கேச்சரங்
கூறுமிடை மருதுகுரங் காடுதுறை நீலக்
குடிவைகன் மாடக்கோயி னல்லங்கோ ழம்பஞ்
சாறமரா வடுதுறைதண் டுருத்திதிரு வழுந்தூர்
சகம்புகழ்மா யூரம்விள நகர்பறிய லூரோ
வீறுசெம்பொன பள்ளிநனி பள்ளிவலம் புரமே
வியன்றலைச்சங் காடாக்கூர் விளங்குகட வூரே. (ரு)

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே
தெளிச்சேரி தருமபுர நள்ளாறு கோட்டா
றுமைக்குமம்பர்ப் பெருந்திருக் கோயின்மா காள
முயர்மீயச் சூரிளங்கோ யிற்றிலதைப் பதிபூ
மருக்கமழ்பாம் புரநற்சிறு குடிவீழி மிழலை
வன்னியூர் கருவிலிமன் பேணுபெருந் துறையென்
கருத்துடைக்கு நறையூர்ச்சித் தீச்சரத்தோ ட்ரிசிற்
கைப்புத்தூர் சிவபுரமுங் கலையநல்லூர் காணே. (சு)

கருக்குடிவாஞ் சியந்திருநன் னிலத்துப்பெருங் கோயில்
கவின்கொண்டீச் சரம்பனையூர் விற்குடிதென் புகலூ
ரிருக்கும்வர்த்த மானேச்சர மிராமனதீச் சரமே
யியல்பயற்றூர் செங்காட்டங் குடிமருக லிருளே
முருக்குதிருச் சாத்தமங்கை நாகைக்கா ரோணை
முன்றிருச்சிக் கற்றிருக்கீழ் வேளூர்தே வூரே
யரிக்கரியான் பள்ளியின்முக் கூடறிரு வாரூ
ரரநெறிமூ லட்டானம் பரவையுண்மண் டளியே. (எ)

* மூக்கீச்சரம்-என்பது உறையூர். † குடமூக்கு-என்பது கும்பகோணம்.

மேலாகும் விளமர்கா வீரம்பெரு வேளூர்
மிளிர்தலையா லங்காடு குடவாயில் சேறை
நாலூர் மயானங்கடு வாய்க்கரைப் புத்தூர்
நவிலுமிரும் பூளைதிரு வரதைப்பெரும் பாழி
மாலூரு மவளிவணல் லூர்பரிதி நியமம்
வாழ்வெண்ணி பூவனூர் பாதாளேச் சரநேர்ச்
சேலூருந் திருக்களர்சிற் றேமமூசாத் தானந்
திருவிடும்பா வனத்தோடு சேர்ந்தகடிக் குளமே. (அ)

தண்டலைநீ ணெறிகோட்டூர் வெண்டுறையோ டழகே
தருகொள்ளம் பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு
கண்டருதெங் கூர்நெல்லிக்கா நாட்டியத்தான் குடியே
காறாயல் கன்றாப்பூர் வலிவலங்கச் சினத்தோ
டண்டர்பிரான் கோளிலிதென் றிருவாய்மூர் *மறைக்கா
டகத்தியான் பள்ளிகோடிக் குழகருந்தென் கரையி
லெண்டருநூற் றிருபத்தே ழிப்பாலீ ழத்தி
லிசைகோண மாமலைகே தீச்சரமென் றிரண்டே. (கூ)

†ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ
டருங்கொடுங்குன் றந்திருப்புத் தூர்புனவா யிலின்றே
டேலுமிரா மேச்சரமா டானை‡கா னப்பே
ரெழிற்றிருப்பூ வணஞ்சுழிய லின்புறுகுற் றாலம்
பவலலோ சனன்றிருநெல் வேலியொடு பாண்டி
பதினன்கு மலைநாட்டி லஞ்சைக்கள மொன்றே
சீலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி
¶திருநணா $கொடிமாடச் செங்குன்றூர் தானே. (க0)

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின்
மேவுமே ழரத்துறைவண் டூங்கானை மாட
மெஞ்சலில்கூ டலையாற்றூ ரெருக்கத்தம் புலியூ
ரிணையகலூந் திணைகர்சோ புரமதிகை புகழே
விஞ்சுதிரு நாவலூர் ‖முதுகுன்றந் திருநெல்
வெண்ணெய்திருக் கோவலூ ரறையணிநல் லூரே
மஞ்சுதிக ழிடையாறு வெண்ணெய்நல்லூர் துறையூர்
வடுகூர்வீ டேயருளுந் திருமாணி குழியே. (கக)

---

மறைக்காடு- என்பது வேதாரணியம். † ஆலவாய் - என்பது மதுரை. ‡ கானப்பேர் - என்பது காளையார்கோவில். ¶ திருநணா-என்பது பவானிகூடல். $ கொடிமாடச்செங்குன்றூர் - என்பது திருச்செங்கோடு. ‖ முதுகுன்றம்-என்பது விருத்தாசலம்.

தண்ணார்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச்
சரம்புறவார் பனங்காட்டூர் திருவாமாத் தூரோ
டெண்ணாரண் ணாமலையு மடுகாட்டி லிருபத்
திரண்டாகு மிப்பாலே கம்பமேற் றளியின்
கண்ணோங்கு மதிலோண காந்தன்ற ளியனே
கதங்காவ தங்கச்சி நெறிக்காரைக் காடே
யுண்ணாடு குரங்கணின்முட் டந்திருமா கறலோத்
தூர்வன்பார்த் தான்பனங்காட் டூர்வல்லமாற் பேறே. (௧௨)

* ஊறலிலம் பையங்கோட்டூர் † விற்கோல மாலங்கா
டயர்பாசூர் வெண்பாக்கங் கள்ளில்கா ளத்தி
மாறிதிரு வொற்றியூர் ‡ வலிதாயம் பாலி
வடமுல்லை வாயில்வேற் காடுதிரு மயிலை
யீறிறிரு வான்மியூர் கச்சூரா லக்கோயி
லிடைச்சுரங் கழுக்குன்ற மச்சிறுபாக் கம்மே
மாறிதிரு வக்கரையே யரசிலிதொல் லிரும்பை
மாகாளந் தொண்டைநன்னாட் டெண்ணின்முப்பா னிரண்டே. ()

கோகரணந் துளுவதே யத்திலொன்றே யிப்பாற்
குலவு¶ பருப் பதமலைப் பருப்பதமம் பிகைதன்
பாகருறை யநேகதங்கா வதந்திருக்கே தாரம்
பகர்§ கொடித்தான் மலைவடக்கிற் பதியைந்தே யிவற்றோ
டாகவிரு நூற்றெழுபா னென்கென்பர் மூவ
ரருட்பதிக மிருக்குமூ ரதிகமாம் வைப்பு
தாகமுட னினைப்போர்க்குந் துதிப்போர்க்கும் வினைகள்
சாராவாம் பிறப்பகலுஞ் சத்தியமுத் தியுமே. (௧௪)

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிக்கோவை முற்றிற்று.

---

* ஊறல் - என்பது தக்கோலம். † விற்கோலம் என்பது கூவம்.
‡ வலிதாயம் - என்பது பாடி. ¶ பருப்பதம் - என்பது ஸ்ரீசைலம் மல்லி
கார்ச்சுனம் என்பது [illegible] § கொடித்தான்மலை - என்பது ஸ்ரீ கைலாசமலை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிகக்கோவை.



**கணபதிதுதி.**

ஒன்றாதி யோரொழுபத் தொன்றீறாய் மூவர்தமிழ்
சென்றார் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடக்குஞ் சரமுகநேர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சரமுகனே காப்பு.

**எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.**

பன்னுசிவ தலமொருநூற் றைம்பதிற்று மூன்று
பதிகமொன்றா நாற்பத்தொன் பதுபதிக மிரண்டா
முன்னுமிரு பதிற்றெட்டு நகர்பதிக மூன்றா
மொருபதினோர் தலம்பதிக மொருநான்கென் றுணர்க
மன்னுமிரு நான்குதல மோரைந்தே பதிக
மற்றுமைந்து தலங்களுக்கு வருபதிக மாறும்
பின்னுமைந்து வளநகர்க்குப் பெறும்பதிக மேழாம்
பேசுமொரு நான்குதலம் பெறும்பதிக மெட்டே. (க)

பரவுமொரு நான்குதலம் பதினொன்றாம் பதிகம்
பன்னுமிரு தலம்பதிகம் பன்னிரண்டாப் பகரு
முரைசெயிரு தலம்பதிகம் பதினெட்டா மிப்பா
லொருமூன்று தலங்களுக்கிங் குறுபதிக முறைக்கி
னிரவிவரு மறுநான்கு முப்பதிற்று நான்கு
நீடெழுபத் தொன்றுமென நிரனிரையா மாகக்
கருதுசிவ தலமிருநூற் றெழுபதிற்று நான்கு
கடைகாப்போ ரெழுநூற்று நாற்பதிற்றென் பானே. (உ)

திருப்பழுவூர் சேய்ஞலூர் திருமுல்லை வாச
றிருவைகா கொடிமாடச் செங்குன்றூர் வியலூர்
கருக்குடிதெங் கூர்பனந்தாள் கலிக்காமூர் தலைச்சங்
காடுமேயேங் கிரப்பள்ளி கச்சினங்கன் றாப்பூர்
குரக்குக்கா பெரும்புலியூர் திருக்காட்டுப்பள்ளி
குடந்தைக்கீழ்க் கோட்டமொடு குடைந்தைக்கா ரோண
மெருக்கத்தம் புலியூர்வெண் டுறைகண்ணார் கோயி
லிலம்பையங்கோட் டூர்சிக்க லிராமனதீச் சரமே. (ங)

பள்ளியின்முக் கூடறிரு விரும்பூளை யாவூர்
பசுபதீச் சரம்பாலைத் துறைபரிதி நியமங்
கள்ளில்குரங் கணின்முட்டந் திருமுருகன் பூண்டி
கஞ்சனூர் கச்சிநெறிக் காரைக்கா டோத்தூர்
புள்ளமங்கை நாட்டியத்தான் குடிகலைய நல்லூர்
புக்கொளியூ ரவிநாசி பூவனூர் துறையூர்
கொள்ளிக்கா டிடைச்சுரமச் சிறுபாக்கம் விளமர்
கொட்டையூர் கொடுங்குன்றங் கூடலையாற் றூரே. (சு)

நெல்வேலி திருவழுந்தூர் தருமபுரம் பயற்றூர்
நெடுங்களம்வக் கரைபிரும்பை மாகாளம் வடுகூர்
நெல்வெண்ணெய் வடகரைமாந் துறைதிருவிற் கோல
நீடூர்சக் கரப்பள்ளி யகத்தியான் பள்ளி
நெல்வாயில் பேணுபெருந் துறைநாலூர் மயான
நெல்லிக்கா விற்குடிவீ ரட்டமதி முற்றம்
வல்லமறை யணிநல்லூர் தலையாலங் காடு
வாட்போக்கி திருநாவ லூர்மயிலாப் பூரே. (௬)

திருவாரூர்ப் பரவையுண்மண் டளிசாத்த மங்கை
சிற்றேமந் தெளிச்சேரி திருவுசாத் தானங்
காவீரந் திருவாலம் பொழில்வெண்ணெய் நல்லூர்
கச்சியனே கதங்காவ தங்கோடிக் குழக
ராசிலிதென் குடித்திட்டை வடமுல்லை வாயி
லம்பர்பெருந் திருத்கோயில் வெண்பாக்கஞ் சுழியல்
பெருமணமிந் திரநீலப் பருப்பதம்வேற் காடு
பேரெயில்பாற் றுறைமூக்கீச் சரமுண்டீச் சரமே. (௭)

பறியலூர் வீரட்டங் காறாட்டு முள்ளூர்
பாதாளேச் சரமெதிர்கொள் பாடிவலி தாயஞ்
சிறுகுடிகச் சூராலக் கோயில்கொள்ளம் பூதூர்
திருப்புறவார் பனங்காட்டூர் விளநகர்தண் டலைநீ
ணெறியரதைப் பெரும்பாழி யூறல்கரு வூரா
னிலைப்பிடும்பா வனங்கடுவாய்க் கரைப்புத்தூர் கடம்பந்
துறைதிருவே டகந்திருவஞ் சைக்களமா டானை
சோபுரங்கற் குடிவடகு ரங்காடு துறையே. (௮)

திருமாணி குழிவேட்டக் குடிதிருவாப் பாடி
திருந்துதே வன்குடிமா கறல்சத்தி முற்றந்
திருவாப்ப னூர்மீயச் சூரவ்வூர் தன்னிற்
றிகழ்ந்ததிரு விளங்கோயில் வெஞ்சமாக் கூடல்

பெருநீலக் குடிமண்ணிப் படிக்கரைநன் னிலத்துப்
பெருங்கோயி றிருநணா திருப்பட்டீச் சரமே
திருவீங்கோய் மலைவன்பார்த் தான்பனங்காட் டூரோ
திருப்புகலூர் வர்த்தமா னேச்சரம்பாம் புரமே. (அ)

கடைமுடியே யோணகாந் தன்றளிகோட் டூர்வை
கன்மாடக் கோயிலிடை யாறுபழை யாறை
வடதளிநற் றினைநகரங் கோணமா மலைசீர்
வன்னியூர் கருவிலிய னேகதங்கா வதநல்
லிடமேவு கடிக்குளநற் றிருக்களரொன் றிவைகட்
கிரும்பதிக மொவ்வொன்றென் றிசைத்திடுக விப்பாற்
குடவாயில் புனவாயி றூங்கானை மாடங்
கோழம்ப மவளிவணல் லூர்கோலக் காவே. (௯)

குருகாவூர் திருவேள்விக் குடிவிசய மங்கை
குற்றாலங் குடமூக்கு கோட்டாறு பனையூர்
கருகாவூர் குரங்காடு துறையோமாம் புலியூர்
கண்டியூர் வேதிகுடி கானூர்கோ கரணந்
திருவாரூ ரரநெறிபந் தணைநல்லூர் நல்லந்
திருக்கண்டீச் சரந்தேவூர் திருச்சிராப் பள்ளி
பெருவேளூர் கீழ்வேளூ ரெறும்பியூர் கானப்
பேர்திருமங் கலக்குடியாக் கூர்கோவ லூரே. (௧0)

திருப்பரங்குன் றந்திருப்பா திரிப்புலியூர் கொறுக்கை
திருப்புத்தூர் மணஞ்சேரி பாச்சிலாச் சிராமந்
கருப்பறிய லூர்கேதீச் சரந்திருக்கே தாரங்
கச்சிமேற் றளிமேலைத் திருக்காட்டுப் பள்ளி
யருத்தியுறு பட்டினத்துப் பல்லவனீச் சரம்பே
ரன்பிலா லந்துறைய ராய்த்துறைவேட் களமிங்
குறைத்தசீ ரன்னியூ ரிவ்விரண்டாம் பதிக
முள்ளதலங் கடவூர்ம யானம்வாஞ் சியமே. (௧௧)

துருத்திதிரு நனிபள்ளி திருமருக றிருப்பூந்
துருத்திபுறம் பயங்கடவூர் புள்ளிருக்கு வேளூ
ராத்துறைவாழ் கொளிபுத்தூர் வான்மியூர் பாசூ
ரம்பர்மா காளமயி லாடுதுறை வாய்மூர்
திருக்கழுக்குன் றம்பாண்டிக் கொடுமுடி ராமேச்சரஞ்
செங்காட்டங் குடிவெண்ணி திருச்செம்பொன் பள்ளி
பருப்பதம்புன் கூரரிசிற் கரைப்புத்தூர் சேறை
பைஞ்ஞீலி கற்குடிமா மலைபதிக மூன்றே. (௧௨)

வலம்புரமா லங்காடு சிவபுரங்கா ளத்தி
வலிவலஞ் சாய்க்காடு திருக்கோடிகா நகரம்
நலந்திகழும் பூவணங்கோ ளிலிமின்றி யூரு
நறையூர்ச்சித் தீச்சரமு நான்காகும் பதிகம்
வலஞ்சுழிநல் லூர்பழன மாமாத்தூ ரண்ணு
மலைகடம்பூ ரின்னம்பர் நாரையூ ரைந்தா
நிலந்திகழ்நா கேச்சரமாற் பேறுமழ பாடி
நெய்த்தானம் வெண்காடு நீள்பதிக மாறே. (கஅ)

கயிலாய மானைக்கா நள்ளாறு நாகைக்
காரோணந் திருச்சோற்றுத் துறையேழு புகலூர்
வயலாருங் கழிப்பாலை யொற்றியூர் திருவா
வடுதுறையெட் டாந்தில்லை மறைக்காடு மதுரை
யியலாரு முதுகுன்றம் பதினொன்று கச்சி
யேகம்ப மிடைமருதீ ராறையா றதிகை
யயவீரொன் பான்வீழி யாரூர்சீ காழி
யறுநான்கு முப்பானு னெழுபத்தொன் றுமே. (க௯)

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிகக்கோவை முற்றிற்று.

---

இது
[illegible]ம்-வி.வே.தி.
நாராயணசாமிபிள்ளையவர்கள்
புத்தகம்
24-6-1897.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# நம்பியாண்டார் நம்பி

அருளிச்செய்த

# திருத்தொண்டர் திருவந்தாதி.

---

### துதிகவி.

பொன்னி வடகரை சேர்நாரை யூரிற் புழைக்கைமுக
மன்ன னறுபத்து மூவர் பதிதே மரபுசெயல்
பன்னவத் தொண்டத் தொகைவகை பல்குமந் தாதிதனைச்
சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத் துணைதுணையே.

### தில்லைவாழந்தணர்.

ப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியிற் செழுமறையோ
ரொப்பப் புவனங்கண் மூன்றினு மும்பரி னூரொரித்த
அப்பர்க் கமுதத் திருநடர்க் கந்திப் பிறையணிந்த
துப்பர்க் குரிமைத் தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே. (க)

### திருநீலகண்டநாயனர்.

சொல்லச் சிவன்றிரு வாணைதன் றூமொழி தோணசையா
லொல்லைத் துறந்துரு மூத்தற்பின் னுமை கோனருளால்
வில்லைப் புரைநுதலாளொடு மின்புறப் பெற் றின்பமிக்கான்
றில்லைத் திருநீல கண்டக் குயவனாஞ் செய்தவனே. (உ)

### இயற்பகைநாயனர்.

செய்தவர் வேண்டிய தியாதுங் கொடுப்பச் சிவனவனாய்க்
கைதவம் பேசிநின் காதலி யைத்தரு கென்றலுமே
மைதிகழ் கண்ணியை யீந்தவன வாய்ந்த பெரும்புகழ்வந்
தெய்திய காவிரிப் பூம்பட்டி னத்து ளியற்பகையே. (௩)

### இளையான்குடிமாறநாயனர்.

இயலா விடைச்சென்ற மாதவர்க் கின்னமு தாவிதைத்த
வயலார் முளைவித்து வாரி மனையலக் கால்வறுத்துச்
செயலார் பயிர்விழுத் தீங்கறி யாக்கு மவன்செழுநீர்க்
கயலா ரிளையான் குடியுடை மாறனெங் கற்பகமே. (௪)

மெய்ப்பொருணயனர்.

கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தாற்
செற்றவன் றன்னை யவனைச் செறப்புக லுந்திருவாய்
மற்றவன் றத்தா நமரோ வெனச்சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொரு ளாமென்று பேசுவரே. (ரு)

விறன்மிண்டநாயனர்.

பேசும் பெருமையவ் வாரூ ரனையும் பிரானவனு
மீசன் றனையும் புறகுதட் டென்றவ னீசனுக்கே
நேச னெனக்கும் பிரான்மனைக் கேபுக நீடுதென்றல்
வீசும் பொழிற்றிருச் செங்குன்ற மேய விறன்மிண்டனே. (சு)

அமர்நீதி நாயனர்.

மிண்டும் பொழிற்பழை யாறை யமர்நீதி வெண்பொடியின்
முண்டந் தரித்தபி ராற்குநல் லூரின்முன் கோவணநேர்
கொண்டிங் கருளென்று தன்பெருஞ் செல்வமுந் தன்னையுந்தன்
றுண்ட மதிநுத லாளையு மீந்த தொழிலினனே. (எ)

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

தொழுதும் வணங்கியு மாலயன் றேடருஞ் சோதிசென்றாங்
கெழுதுந் தமிழ்ப்பழ வாவணங் காட்டி யெனக்குன்குடி
முழுது மடிமைவந் தாட்செ யெனப்பெற் றவன்முரசே
றெழுகு மலரினற் றொரெம்பி ரானம்பி யாரூரனே. (அ)

எறிபத்தநாயனர்.

ஊர்மதின் மூன்றட்ட வுத்தமர்க் கென்றோர் ருயர்தவத்தோன்
றார்மலர் கொய்யா வருபவன் றண்டின் மலர்பறித்த
ஊர்மலை மேற்கொளும் பாக ருடற்றுணி யாக்குமவ
னேர்மலி மாமதில் சூழ்கரு வூரி லெறிபத்தனே. (கூ)

ஏனதிநாத நாயனர்.

பத்தனை யேனதி நாதனைப் பார்நீ டெயினிதன்னு
ளத்தனைத் தன்னோ டமர்மலைந் தானெற்றி நீறுகண்டு
கைத்தனி வாள்வீ டொழிந்தவன் கண்டிப்ப நின்றருளு
மித்தனை யீழக் குலதீப னென்பரிந் நீணிலத்தே. (கo)

கண்ணப்ப நாயனர்.

நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே
லலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினன்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னுமென்று கூறுவரோ. (கக)

### குங்கிலியக்கலய நாயனர்.

ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி யெழிற்பனந்தாட்
சாய்ந்த சிவனிலைத் தானென்பர் காதலி தாலிகொடுத்
தாய்ந்தநற் குங்கிலி யங்கொண் டனற்புகை காலனைமுன்
காய்ந்த வரற்கிட்ட தென்கட வூரிற் கலயனையே. (கஉ)

### மானக்கஞ்சாறநாயனர்.

கலச முலைக்கன்னி காதற் புதல்வி கமழ்குழலை
நலசெய் தவத்தவன் பஞ்ச வடிக்கிவை நல்கெனலும்
அலகு மெனக்கரு தாதவள் கூந்த லரிந்தளித்தான்
மலைசெய் மதிற்கஞ்சை மானக்கஞ் சாறனெ னும்வள்ளலே. (கங)

### அரிவாட்டாயநாயனர்.

வள்ளற் பிராற்கமு தேந்தி வருவோ னுகலுமிங்கே
வெள்ளச் சடையா யமுதுசெய் யாவிடி லென்றலையைத்
தள்ளத் தகுமென்று வாட்பூட் டியதடங் கையினன்கா
ணள்ளற் பழனக் கணமங் கலத்தரி வாட்டாயனே. (கச)

### ஆனயநாயனர்.

தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேற்றனித் திங்கள்வைத்த
தூயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவும்
வேயவன் மேன்மழ நாட்டு விரிபுனன் மங்கலக்கோன்
ஆயவ னனய னென்னை யுவந்தாண் டருளினனே. (கரு)

### சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

அருட்டுறை யத்தர்க் கடிமைப்பட் டேனினி யல்லனென்னும்
பொருட்டுறை யாவதென் னேயென்ன வல்லவன் பூங்குவளை
யிருட்டுறை நீர்வய னுவற் பதிக்கும் பிரானடைந்தோர்
மருட்டுறை நீக்கிநல் வான்வழி காட்டிட வல்லவனே. (கசு)

### மூர்த்திநாயனர்.

அவந்திரி குண்டம ணவதின் மாள்வனென் றன்றாலவாய்ச்
சிவன்திரு மேனிக்குச் செஞ்சந் தனமாச் செழுமுழங்கை
யுவந்தொளிர் பாறையிற் றேய்த்துல காண்டவொண் மூர்த்திதன்னூர்
நிவந்தபொன் மாட மதுரா புரியென்னு நீள்பதியே. (கஎ)

### முருகநாயனர்.

பதிகந் திகழ்தரு பஞ்சாக் கரம்பயி னுவினன்சீர்
மதியஞ் சடையார்க் கலர்தொட் டணிபவன் யான்மகிழ்ந்து
துதியங் கழற்சண் பையர் காதற்குத் தோழன்வன் றொண்ட ரம்பொன்
னதிகம் பெறும்புக லூர்முரு கன்னெனு மந்தணனே. (கஅ)

உருத்திரபசுபதிநாயனார்.

அந்தாழ் புனறன்னி லல்லும் பகலுநின் றுதரத்தா
லுந்தாத வன்பொ டுருத்திரஞ் சொல்விக் கருத்தமைந்த
பைந்தா ருருத்திர பசுபதி தன்னூர் பதிவயற்கே
நந்தார் திருத்தலை யூரொன் றுரைப்பரிந் நானிலத்தே. (கக)

திருநாளைப்போவார்நாயனார்.

நாவார் புகழ்த்தில்லை யம்பலத் தானருள் பெற்றுநாளைப்
போவா னவனும் புறத்திருத் தொண்டன்றன் புன்புலைபோய்
மூவா யிரவர்கை கூப்ப முனியாய வன்பதிதான்
மாவார் பொழிறிக ழாதனூ ரென்பரிம் மண்டலத்தே. (உ0)

திருக்குறிப்புத்தொண்டநாயனார்.

மண்டும் புனற்சடை யான்றமர் தூசெற்றி வாட்டும்வகை
விண்டு மழைமுகில் வீடா தொழியின்யான் வீவனென்று
மிண்டும் படர்பாறை முட்டு மெழிலார் திருக்குறிப்புத்
தொண்டன் குலங்கச்சி யேகாலியர்தங்க டொல்குலமே. (உக)

சண்டேசுரநாயனார்.

குலமே றியசேய்ஞ லூரிற் குரிசில் குரைகடல்சூழ்
தலமே றியவிறற் றண்டிகண் டீர்தந்தை தாளிரண்டும்
வலமே றியமழு வாலெறிந் தீசன் மணிமுடிமே
னலமே றியபால் சொரிந்தலர் சூட்டிய நன்னிதியே. (உஉ)

சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

நிதியார் துருத்திதென் வேள்விக் குடியாய் நினைமறந்த
மதியேற் கறிகுறி வைத்துப் புகர்பின்னை மாற்றிடென்று
துதியா வருள்சொன்ன வாறறி வாரிடைப் பெற்றவன்கா
ணதியார் புனல்வய லூவலர் கோனென்னு நற்றவனே. (உந)

திருநாவுக்கரசுசுவாமிகள்.

நற்றவ னல்லூர்ச் சிவன்றிருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்கு
ளுற்றவ னுற்ற விடமடை யாரிட வொள்ளமுதாத்
துற்றவ னாமூரி னாவுக் கரசெனுந் தூமணியே. (உச)

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியாற்
றிணியன நீள்கத வந்திறப் பித்தன தெண்கடலிற்
பிணியன வன்கன் மிதப்பித்த சைவப் பெருநெறிக்கே
யணியன நாவுக் கரையர் பிரான்ற னருந்தமிழே. (உரு)

### குலச்சிறைநாயனுர்.

அருந்தமி ழாகரன் வாதி லமணைக் கழுநுதிமே
லிருந்தமிழ் நாட்டிடை யேற்றுவித் தோனெழிற் சங்கம்வைத்த
பெருந்தமிழ் மீனவன் றன்னதி காரி பிரசமலகு
குருந்தவிழ் சாரன் மணமேற் குடிமன் குலச்சிறையே. (உசு)

### பெருமிழலைக்குறும்பநாயனுர்

சிறைநன் புனற்றிரு நாவலூ ராளி செழுங்கயிலைக்
கிறைநன் கழுலை யெய்து மிவனருள் போற்றவின்றே
பிறைநன் முடிய னடியடை வேனென் றுடல்பிரிந்தா
னறைநன் மலர்த்தார் மிழலைக் குறும்ப னெனுநம்பியே. (உஎ)

### காரைக்காலம்மையார்.

நம்பன் றிருமலை நான்மிதி யேனென்று தாளிரண்டு
மும்பர் மிசைத்தலை யானடந் தேற வுமைநகலுஞ்
செம்பொன் னுருவனென் னம்மை யெனப்பெற் றவள்செழுந்தேன்
கொம்பி னுகுகாரைக் காலினின் மேய குலதனமே. (உஅ)

### அப்பூதியடிகணுயனுர்.

தனமா வதுதிரு நாவுக் கரசின் சரணமென்ன
மனமார் புனற்பந்தர் வாழ்த்திவைத் தாங்கவன் வண்டமிழ்க்கே
யினமாத் தனது பெயரிடப் பெற்றவ னெங்கள் பிரா
னனமார் வயற்றிங்க ளூரினில் வேதிய னப்பூதியே. (உகூ)

### திருநீலநக்கநாயனுர்.

பூதிப் புயத்தர் புயத்திற் சிலந்தி புகலுமஞ்சி
யூதித் துமிந்த மனைவியை நீப்பவுப் பாலவெல்லாம்
பேதித் தெழுந்தன காணென்று பிஞ்ஞகன் காட்டமேவ
னீதித் திகழ்சாத்த நீலநக் கன்னெனும் வேதியனே. (௩0)

### நமிநந்தியடிகணுயனுர்.

வேத மறிக்கரத் தாரூ ரரற்கு விளக்குநெய்யைத்
தீது செறியமண் கையரட் டாவிடத் தெண்புனலா
லேத முறுக வருகவொன் றன்று விளக்கெரித்தா
னோத னெழிலேமப் பேறூ ரதிப னமிநந்தியே. (௩க)

### சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

நந்திக்கு நம்பெரு மாற்குநல் லாரூரி னயகற்குப்
பந்திப் பரியன செந்தமிழ் பாடப் படர்புனலிற்
சிந்திப் பரியன சேவடி பெற்றவன் சேவடியே
வந்திப் பவன்பெயர் வன்றொண்ட னென்பரிவ் வையகத்தே. (௩உ)

### திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

வைய மகிழயாம் வாழ வமணர் வலிதொலைய
வையன் பிரம புரத்தரற் கம்மென் குதலைச்செவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்
றைய லருள்பெற் றனனென்பர் ஞானசம் பந்தனையே. (௬௬)

பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகனல்ல
சந்தா ரகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தி லிட்டடி யேன்கொடுத்த
வந்தாதி கொண்ட பிரானருட் காழியர் கொற்றவனே. (௬௪)

### ஏயர்கோன்கலிக்காமநாயனார்.

கொற்றத் திறலெந்தை தந்தைதன் றந்தையெங் கூட்டமெல்லாந்
தெற்றச் சடையாய் நினதடி யேந்திகழ் வன்றொண்டனே
மற்றிப் பிணிதவிர்ப் பானென் றுடைவா ளுருவியங்கோய்
செற்றுத் தவிர்கலிக் காமன் குடியேயர் சீர்க்குடியே. (௬௫)

### திருமூலநாயனார்.

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பை புக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
யடிமன்ன வைத்த பிரான்மூல னாகின்ற வங்கணனே. (௬௬)

### தண்டியடிகணாயனார்.

கண்ணார் மணியொன்று மின்றிக் கயிறு பிடித்தாற்குத்
தண்ணார் புனற்றடந் தொட்டலுந் தன்னை நகுமமணர்
கண்ணுங் கிழப்ப வமணர் கலக்கங்கண் டம்மலர்க்கண்
விண்ணா யகனிடைப் பெற்றவ னாரூர் விறற்றண்டியே. (௬௭)

### மூர்க்கநாயனார்.

தண்டலை சூழ்திரு வேற்காட்டூர் மன்னன் றருகவற்றூற்
கொண்டவல் லாயம்வன் சூதரை வென்றுமுன் கொண்டபொருண்
முண்டநன் னீற்ற னடியவர்க் கீபவன் மூர்க்க னென்பர்
நண்டலை நீரொண் குடந்தையின் மேவுநற் சூதனையே. (௬௮)

### சோமாசிமாறநாயனார்.

சூதப் பொழிலம்ப ரந்தணன் சோமாசி மாறனென்பான்
வேதப் பொருளஞ் செழுத்தும் விளம்பியல் லான்மொழியா
னீதிப் பரன்மன்னு நித்த நியமன் பரவையென்னு
மாதுக்குக் காந்தன்வன் றொண்டன் றனக்கு மகிழ்துணையே. (௬௯)

சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

துணையு மளவுமில் லாதவன் றன்னரு ளேதுணையாக்
கணையுங் கதிர்நெடு வேலுங் கறுத்த கயலிணையும்
பிணையு நிகர்த்தகட் சங்கிலி பேரமைத் தோளிரண்டு
மணையு மவன்றிரு வாரூரா ளுகின்ற வற்புதனே. (௪0)

சாக்கிய நாயனார்.

தகடன வாடையன் சாக்கியன் மாக்கற் றடவரையின்
மகடனங் தாக்கக் குழைந்ததிண் டோளர்வண் கம்பர்செம்பொன்
றிகழ்தரு மேனியிற் செங்க லெறிந்து சிவபுரத்துப்
புகழ்தரப் புக்கவ னூர்சங்க மங்கை புவனியிலே. (௪க)

சிறப்புலிநாயனார்.

புவனியிற் பூதியுஞ் சாதன மும்பொலி வார்ந்துவந்த
தவநிய மர்க்குச் சிறப்புச்செய் தத்துவ காரணனு
மவனியிற் கீர்த்தித்தென் னுக்கூரதிப னருமறையோன்
சிவனிய மந்தலை நின்றதொல் சீர்நஞ் சிறப்புலியே. (௪உ)

சிறுத்தொண்டநாயனார்.

புலியி னதளுடைப் புண்ணியற் கின்னமு தாத்தனதோ
ரொலியின் சதங்கைக் குதலைப் புதல்வ னுடறுணித்துக்
கலியின் வலிகெடுத் தோங்கும் புகழ்ச்சிறுத் தொண்டன்கண்டீர்
மலியும் பொழிலொண்செங் காட்டங் குடியவர் மன்னவனே. (௪௩)

சேரமான்பெருமாணாயனார்.

மன்னர் பிரானெதிர் வண்ணா னுடலுவ ருறியநீற்
றன்ன பிரான்றமர் போல வருதலுந் தான்வணங்க
வென்ன பிரானடி வண்ணா னெனவடிச் சேரனென்னுந்
தென்னர் பிரான்கழ றிற்றறி வானெனுஞ் சேரலனே. (௪௪)

சேரற்குத் தென்னா வலர்பெரு மாற்குச் சிவனளித்த
பாரக் கடகரி முன்புதன் பந்தி யிவுளிவைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ள மன்றுசெய் தாயின்று தொன்றுபட்டே. (௪௫)

கணநாதநாயனார்.

தொண்டரை யாக்கி யவரவர்க் கேற்ற தொழில்கள்செய்வித்
தண்டர்தங் கோனக் கணத்துக்கு நாயகம் பெற்றவன்காண்
கொண்டல்கொண் டேறிய மின்னுக்குக் கோல மடல்கடொறுங்
ண்டல்வெண் சோறளிக் குங்கடற் காழிக் கணநாதனே. (௪௬)

கூற்றுவநாயனார்.

நாதன் றிருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல் லாமொரு கோலின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள ளாகிய கூற்றுவனே. (சஎ)

சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

கூற்றுக் கெவனோ புகறிரு வாரூரன் பொன்முடிமே
லேற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிதேருமக்
கோற்றொத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே. (சஅ)

பொய்யடிமையில்லாதபுலவர்.

தரணியிற் பொய்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர்நக் கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோ
ரருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே. (சகூ)

புகழ்ச்சோழநாயனார்.

புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன்னியபுகழ்க் கோகனநாதன் குலமுதலோ
னலமன் னியபுகழ்ச் சோழனை தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியவெறி பத்தனுக் கீந்ததொர் வண்புகழே. (ருo)

நரசிங்கமுனையரையநாயனார்.

புகழும் படியெம் பரமே தவர்க்குநற் பொன்னிடுவோ
னிகழும் படியோர் தவன்மட வார்புனை கோலமெங்கு
திகழும் படிகண் டவற்கன் றிரட்டிபொன் னிட்டவனி
திகழு முடிநர சிங்க முனையர சன்றிறமே. (ருக)

அதிபத்தநாயனார்.

திறமமர் மீன்படுக் கும்பொழு தாங்கொரு மீன்சிவற்கென்
றுறவமர் மாகடற் கேவிடு வோனொரு நாட்கனக
நிறமமர் மீன்பட நின்மலற் கென்றுவிட் டோன்கமலம்
புறமமர் நாகை யதிபத்த னாகிய பொய்யிலியே. (ருஉ)

கலிக்கம்பநாயனார்.

பொய்யைக் கடிந்துநம் புண்ணியர்க் காட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத் தானவன் றாள்கழுவ
வையத் தவர்முன்பு வெள்கிநீர் வாரா விடமனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணா கடத்துக் கலிக்கம்பனே. (ருங)

### கலியநாயனர்.

கம்பக் கரிக்குஞ் சிலந்திக்கு நல்கிய கண்ணுதலோ
னும்பர்க்கு நாதற் கொளிவிளக் கேற்றற் குடலிலனுய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக் குழன்றுங்கொள் கூலியினு
னம்பற் கெரித்த கலியொற்றி மாநகர்ச் சக்கிரியே. (ருச)

### சத்திநாயனர்.

கிரிவில் லவர்தம் மடியாரைத் தன்முன்பு கீழ்மைசொன்ன
திருவில் லவரையந் நாவரி வோன்றிருந் தாரைவெல்லும்
வரிவில் லவன்வயற் செங்கழு நீரின் மருவுதென்ற
றெருவில் விரைகம ழுந்தென் வரிஞ்சைத் திகழ்சத்தியே. (ருரு)

### ஐயடிகள் காடவர்கோனயனர்.

சத்திக் தடக்கைக் குமரனற் றாதைதன் றானமெல்லா
முத்திப் பதமொரோர் வெண்பா மொழிந்து முடியரசா
மத்திற்கு மும்மைநன் றுலரற் காவைய மேற்றலென்னும்
பத்திக் கடலை யடிகளா கின்றநம் பல்லவனே. (ருசு)

### சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

பல்லவை செங்கதி ரோனைப் பறித்தவன் பாதம்புகழ்
சொல்லவன் றென்புக லூரரன் பாற்றுய்ய செம்பொன்கொள்ள
வல்லவ னூட்டியத் தான்குடி மாணிக்க வண்ணனுக்கு
நல்லவன் றன்பதி நாவலூ ராகின்ற நன்னகரே. (ருஎ)

### கணம்புல்ல நாயனர்.

நன்னக ராய விருக்குவே ளூர்தனி னல்குரவாய்ப்
பொன்னக ராயநற் றில்லை புகுந்து புலீச்சரத்து
மன்னவ ராய வரற்குநற் புல்லால் விளக்கெரித்தான்
மின்னவி றேமொளெந்தை தந்தை பிரானெங் கணம்புல்லனே. (ருஅ)

### காரிநாயனர்.

புல்லன வாகா வகையுல கத்துப் புணர்ந்தனவுஞ்
சொல்லின வுந்நய மாக்கிச் சுடர்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்குங் கயிலைபுக் கானென்பராற்
செல்வின மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே. (ருக)

### நின்றசீர்நெடுமாறநாயனர்.

கார்த்தண் முகிற்கைக் கடற்கா ழியர்பெரு மாற்கெதிரா
யார்த்த வமண ரழிந்தது கண்டுமற் றாங்கவரைக்
கூர்த்த கழுவி னுதிவைத்த பஞ்சவ னென்றுரைக்கும்
வார்த்தை யதுபண்டு நெல்வேலி யில்வென்ற மாறனுக்கே. (சுO)

### வாயிலார்நாயனார்.

மாறு வருளரன் றன்னை மனவா லயத்திருத்தி
யாறு வறிவா மொளிவிளக் கேற்றி யகமலராம்
வீறு மலரளித் தன்பெனு மெய்யமிர் தங்கொடுத்தான்
வீறார் மயிலையுள் வாயிலா னென்று விளம்புவரே. (௬௧)

### முனையடுவார்நாயனார்.

என்று விளம்புவர் நீடு ரதிபன் முனையடுவோ
னென்று மமரு ளழிந்தவர்க் காக்கூலி யேற்றெறிந்து
வென்ற பெருஞ்செல்வ மெல்லாங் கனகன் மேருவென்னுங்
குன்றம் வளைத்த சிலையான் றமர்க்குக் கொடுத்தனனே. (௬௨)

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்துதி.

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவியவி நாசியை வேடர்சுற்றம்
படுத்தான் றிருமுரு கன்பூண் டியினிற் பராபரத்தேன்
மடுத்தா னவனென்பர் வன்றொண்ட னாகின்ற மாதவனே. (௬௩)

### கழற்சிங்கநாயனார்.

மாதவத் தோர்தங்கள் வைப்பினுக் காரூர் மணிக்குவைத்த
போதினைத் தான்மோந்த தேவிதன் மூக்கை யரியப் பொற்கை
காதிவைத் தன்றோ வரிவதென் றங்கவள் கைதடிந்தா
னீதமொய்த் தார்வண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே. (௬௪)

### இடங்கழிநாயனார்.

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனக மணிந்தவா தித்தன் குலமுதலோன்
றிங்கட் சடையர் தமரதென் செல்வ மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவ னிருக்குவே ளூர்மன் னிடங்கழியே. (௬௫)

### செருத்துணைநாயனார்.

கழிநீர் கடனஞ் சயின்றார்க் கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்றன் றேவிமுன் மோத்தலுமே
யெழினீள் குமிழ்மலர் மூக்கரிந் தானென் றியம்புவராற்
செழுநீர் மருகனன் னாட்டமர் தஞ்சைச் செருத்துணையே. (௬௬)

### புகழ்த்துணைநாயனார்.

செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத்தா
யுருவலி கெட்டுண வின்றி யுமைகோனை மஞ்சனஞ்செய்
தருவதோர் போதுகை சோர்ந்து கலசம் விழத்தரியாப்
பெருவரை வில்லி யருளி னிதியது பெற்றனனே. (௬௭)

### கோட்புலிநாயனார்.

பெற்ற முயர்த்தோன் விரையாக் கலிபிழைத் தோர்தமது
சுற்ற மறுக்குந் தொழிற்றிரு நாட்டியத் தான்குடிக்கோன்

குற்ற மறுக்குநங் கோட்புலி நாவற் குரிசிலருள்
பெற்ற வருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே. (௬௮)

சுந்தரமூர்த்தி சுவாமிகள்துதி.

தகுமகட் பேசினேன் வியவே நூல்போன சங்கிலிபாற்
புகுமணக் காதலி னாலொற்றி யூருறை புண்ணியன்றன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுலக
நகும்வழக் கேனன்மை யாப்புணர்ந் தானவ லூரரசே. (௬௯)

பத்தராய்ப்பணிவார்கள்.

அரசினை யாரூ ரமரர் பிரானை யடிபணிந்திட்
டுரைசெய்த வாய்தடு மாறி யுரோம புளகம்வந்து
கரசர ணாதி யவயவங் கம்பித்துக் கண்ணருவி
சொரிதரு மங்கத்தி னோர்பத்த ரென்று தொகுத்தவரே. (௭0)

பரமனையேபாடுவார்.

தொகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே
மிகுத்த வியலிசை யவ்வகை யாலவ்விண் டோயுநெற்றி
வகுத்த மதிற்றில்லை யம்பலத் தான்மலர்ப் பாதங்கண்மே
லுகுத்த மனத்தொடும் பாடவல் லோரென்ப ருத்தமரே. (௭க)

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

உத்தமத் தானத் தறம்பொரு ளின்ப மொழியெறிந்து
வித்தகத் தானத் தொருவழிக் கொண்டு விளங்கச் சென்னா
மத்தம்வைத் தான்றிருப் பாத கமல மலரடிக்கீழ்ச்
சித்தம்வைத் தாரென்பர் வீடுபே றெய்திய செல்வர்களே. (௭௨)

திருவாரூர்ப்பிறந்தார்.

செல்வந் திகழ்திரு வாரூர் மதில்வட்டத் துட்பிறந்தார்
செல்வன் றிருக்கணத் துள்ளவ ரேயத னாற்றிகழச்
செல்வம் பெருகுதென் னாரூர்ப் பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித் தாய செழுநெறியே. (௭௩)

முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.

நெறிவார் சடையனைத் தீண்டிமுப் போதுநீ டாகமத்தி
னறிவால் வணங்கியர்ச் சிப்பவர் நம்மையு மாண்டமரர்க்
கிறையாய்முக் கண்ணுமெண் டோளுந் தரித்தீறில் செல்வத்தொடு
முறைவார் சிவபெரு மாற்குறை வாய வுலகினிலே. (௭௪)

முழுநீறுபூசியமுனிவர்.

உலகங் கலங்கினு மூழி திரியினு முள்ளொருகால்
விலகுத லில்லா விதியது பெற்றநல் வித்தகர்கா
ணலகில் பெருங்குணத் தாரூ ரமர்ந்த வரனடிக்கீ
ழிலகுவெண் ணீறுதம் மேனிக் கணியு மிறைவர்களே. (௭௫)

அப்பாலுமடிச்சார்ந்தார்.

வருக்க மடைத்துநன் னுவலூர் மன்னவன் வண்டமிழாற்
பெருக்கு மதுரத் தொகைபிறை சூடிதன் பெய்கழற்கே
யொருக்கு மனத்தொடப் பாலடிச் சார்ந்தவ ரொன்றுலகிற்
றெரிக்கு மவர்சிவன் பல்கணத் தோர்நஞ் செழுந்தவரே. (எசா)

சுந்தரமூர்த்தி சுவாமிகள்துதி.

செழுநீர் வயன்முது குன்றினிற் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கைய னீந்தபொன் னுங்குக்கொள் ளாதுவந்தப்
பொழினீ டருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங்கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூர னென்றுநாங் கேட்பதுவே. (எஎ)

பூசலார்நாயனார்.

பதுமநற் போதன்ன பாதத் தரற்கொரு கோயிலையான்
கதுமெனச் செய்குவ தென்றுகொ லாமென்று கண்டுயிலா
ததுமனத் தேயெல்லி தோறு நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணத் தென்றலு லாகின்ற வூர்தனிற் பூசலையே. (எஅ)

மங்கையர்க்கரசியார்.

பூச லயிற்றென்ன னுர்க்கன லாகப் பொருமையினால்
வாச மலர்க்குழற் பாண்டிமா தேவியா மானிகண்டீர்
தேசம் விளங்கத் தமிழா கரர்க்கறி வித்தவரா
னுசம் விளைத்தா ளருகந்த ருக்குத்தென் னுட்டகத்தே. (எகூ)

நேசநாயனார்.

நாட்டமிட் டன்றரி வந்திப்ப வெல்படை நல்கினர்தந்
தாட்டரிக் கப்பெற் றவனென்பர் சைவத் தவரரையிற்
கூட்டு மகப்படக் கோவண நெய்து கொடுத்து நன்மை
யீட்டுமெக் காம்பிலிச் சாலிய நேசனை யிம்மையிலே. (அ0)

கோச்செங்கட்சோழநாயனார்.

மைவைத்த கண்ட னெறியன்றி மற்றோர் நெறிகருதாத்
தெய்வக் குடிச்சோழன் முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் துருவெய்தி வந்து தரணிநீ டாலயங்கள்
செய்வித் தவன்றிருக் கோச்செங்க ணுனெனுஞ் செம்பியனே. (அக)

செம்பொ னணிந்துசிற் றம்பலத் தைச்சிவ லோகமெய்தி
நம்பன் கழற்கீ ழிருந்தோன் குலமுத லென்பர்நல்ல
வம்பு மலர்த்தில்லை யீசனைச் சூழ மறைவளர்த்தா
னிம்ப நறுந்தொங்கற் கோச்செங்க ணுனெனு நித்தனையே. (அஉ)

திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்.

தனையொப் பருமெருக் கத்தம் புலியூர்த் தரும்புகழோ
னினையொப் பருந்திரு நீலகண் டப்பெரும் பாணனைநீள்

சினையொப் பலர்பொழிற் சண்பையர் கோன்செந் தமிழொடிசை
புனையப் பரனருள் பெற்றவ னென்பரிப் பூதலத்தே. (அங)

சடையநாயனர்.

தலம்விளங் குந்திரு நாவ லூர் தன்னிற் சடையனென்னுங்
குலம்விளங் கும்புக ழோனை யுரைப்பர் குவல யத்தி
னலம்விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தின்
பலன்விளங் கும்படி யாரூ ரனைமுன் பயந்தமையே. (அச)

இசைஞானியார்.

பயந்தாள் கறுவுடைச் செங்கண்வெள் ளேப்பொள்ள னீள்பனைக்கைக்
கயந்தா னுகைத்தநற் காளையை யென்றுங் கபாலங் கைக்கொண்
டயந்தான் புகுமா ரூரூர்ப் புனித வரன்றிருத்தா
ணயந்தா டனதுள்ளத் தென்று முரைப்பது ஞானியையே. (அரு)

சுந்தரமூர்த்தி சுவாமிகள்துதி.

ஞானவவ் வாரூ ரரசரை யல்லது நாமறியோ
மானவ வாக்கை யொடும்புக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலு மறிதற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயிற் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே. (அசு)

திருத்தொண்டத்தொகையிலுள்ள கூட்டவடியார்கள் தனியடியார்கள்.

கூட்டமொன் பானெ டறுபத்து மூன்று தனிப்பெயரா
வீட்டும் பெருந்தவத் தோரொழு பத்திரண் டாம்வினையை
வாட்டுந் தவத்திருத் தொண்டத் தொகைபதி னென்றின்வகைப்
பாட்டுந் திகழ்திரு நாவ லூ ராளி பணித்தனனே. (அஎ)

திருத்தொண்டத்தொகைப்பதிகத் தேவாரங்களின் முதனினைப்பு.

பணித்தநற் றொண்டத் தொகைமுதற் றில்லை யிலைமலிந்த
வணித்திகழ் மும்மைத் திருநின்ற வம்பறு வார்கொண்டதோ
ரிணைத்திகழ் பொய்யடி மைக்கறைக் கண்டன் கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ் சொற்பத்தர் மன்னிய சீர்மறை நாவனொடே. (அஅ)

நூற்பயன்.

ஓடிடும் பஞ்சேந் திரிய மொடுக்கியென் னூழ்வினைகள்
வாடிடும் வண்ணநின் றெத்தவஞ் செய்தனன் வானினுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையிலுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே. (அகூ)

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பிஅருளிச்செய்த

திருத்தொண்டர் திருவந்தாதி

முற்றிற்று.



ஸ்ரீ நடராஜமூர்த்திகள்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தகுருப்யோநம:

# திருத்தொண்டர்புராணம்

என்னும்

# பெரியபுராணம்.

## முதற்காண்டம்




### பாயிரம்.

### நடேசர்துதி.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

இந்தச் செய்யுளில், "உலகெலாம்" என்பது ஸ்ரீநடராஜவள்ளால் அசரீரியாக அருளிச்செய்தது. ஏனைய பகுதி ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியது. சிவனார் முதலெடுத்துக்கொடுத்ததைச் சேக்கிழார் பூர்த்திசெய்தமையால், இருவர்வாக்கையும் ஓரோவாக்காகத் தெளிதலே யமைவுடைத்து. ஸ்ரீசிவபெருமான் முதற்பகுதியை அசரீரியாகத் திருவாய்மலர்ந்தருளியபடி ஏனைய பகுதியைச் சேக்கிழாரை அதிட்டித்து அச்சிவபரஞ்சுடரே கூறியருளினாரெனவறிக.

(இதன்பொருள்.)

எல்லா வுலகத்தவரும் இத்தன்மையினரென் றறிந்து சொல்லுதற்கரியவரும், சந்திர னுலாவுகின்ற கங்கைதங்கிய சடையினையுடையவரும், அளவில்லாத சோதி சொரூபமானவரும், திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்றவருமாகிய ஸ்ரீநடராஜவள்ளலாரது தாமரை மலர்போன்ற சிலம்பணிந்த ஸ்ரீபாதங்களை (யாம்) துதித்து வணங்குகின்றோம் என்றவாறு.

## விசேடம்.

"உலகெலாம்" என்றது அசித்தும், சித்துமாகிய இருவகைப் பிரபஞ்சத்தை. அசித்துப்பிரபஞ்சம் தேகேந்திரியப்பிராணாந்தக்கரணசமூகங்கள். அசித்துக்களுக்கு அறியுந்தன்மை யின்மையால், அவை உணரவும், ஓதவு மியைந்தில. அதனால், "உணர்ந்தோதற்கரியவன்" என்பது அசித்துப்பிரபஞ்சத்தினிடத்து நிலைத்தது. சித்துப்பிரபஞ்சம் மூவிதவுயிர்கள். அவ்வுயிராவன:—விஞ்ஞானகலர்-பிரளயாகலர் - சகலரென்பவர்கள். இவர்களுக்கு அறியுந்தன்மை யுண்டு. அறியுந்தன்மையுள்ள வுயிர்களுள், விஞ்ஞானகலர்க்கு ஆணவமும், பிரளயாகலர்க்கு ஆணவ கன்மங்களும், சகலர்க்கு ஆணவ கன்ம மாயைகளும் பிணிப்புகளாயினமையால், இம்மூவிதவுயிர்களும் அறிந்து ஓதுமியல்பைக்கடந்தனவாயின. ஒருமலமுடைய விஞ்ஞானகலரும், இருமலமுடைய பிரளயாகலரும், மும்மலமுடைய சகலருஞ் சேதனர்களாயிருந்தும் காலிற்றளையப்பெற்றார் நடக்கமுடியாதார்போல மலப்பிணிப்பின் முதிர்ச்சியால் அசித்தேபோலாயினமையின், அவரது இயற்கை வெளியாகியது. அதனால், "உணர்ந்தோதற்கரியவன்" என்பது சித்துப்பிரபஞ்சத்தினிடத்தும் நிலைத்தது.

அசித்தும், சித்துமாகிய இருவகைப்பிரபஞ்சத்துள், அசித்துப்பிரபஞ்சம் பிருதிவிமுதல் நாதமீறான தத்துவங்களாகப் பிரிந்து, ஒவ்வொரு தத்துவத்தினும் பல உலகங்கள் காரியப்பட்டு, எண்ணில்கோடி யண்டங்களுண்டாயின பிரமேயம் நூல்களிற் கேட்கப்படுகின்றது. இவைகளிற்றானே சூரபதுமன் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்குக் கர்த்தாவாயினான். இத்தகைய அதிசயவிலாசத்தோடு கூடிய அண்டங்களினளவை "அண்டப்பகுதியினுண்டைப்பிறக்க-மளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி-யொன்றினுக்கொன்று நின்றெழில்பகரி - னூற்றொருகோடியின் மேற்படவிரிந்தன - வின்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்-சிறியவாகப்பெரியோன்" என்னும் ஸ்ரீவாசகத்திருமுறையா லினிது தெளிக. சாளரத்தின்வழியாகத்தோன்றுஞ் சூரியகிரணபத்திகளில் அணுக்கூட்டங்களை ஒருவன் காணுங்கால், அவ்வணுக்களி னபரிமிதத்வம் வெளியாம். இவ்வுபமானவாயிலாகவே அண்டங்களினிருப்பு மறியத்தக்கது. இவ்வெண்ணில்கோடி யண்டங்களி னகண்டத்வம் அச்சிவபரஞ்சுடரின்முன்ன ரோரணுவாந்தன்மையு மெய்தாமைமையை விளக்கவே "சிறியவாகப் பெரியோன்" என்னுந் திருவாக்குச் சிறந்து விளங்கியது. இவ்வுண்மைபோதரவே "அண்டங்களெல்லா மணுவாக வணுக்களெல்லா - மண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினானும்" எனப் பிறவான்றோருங் கூறினர். இதனால், அசித்துப்பிரபஞ்சத்தினது வியாபகம் வெகுஅற்பமாய்ப் பரனது வியாபகத்தின்முன்னர் நிலையாமை வெளிப்பட்டதுணர்க. இது அசித்தாந்தன்மையாற் பரனை யுணராதென்பது மாத்திரமேயன்றித் தனது பரிமிதங் கடந்த வகண்டத்வமும் அச்சிவசந்நிதியி லோரற்பமாயினமையாலும் உணர்ந்தோதற்கிடையூறெய்தி யொதுங்கியவாறறிக. இவ்வாறு தெளிந்தவர்க்கே அசித்துப்பிரபஞ்சமெனப்போந்த "உலகெலாம்" பரனை யெட்டாதொதுங்கினமை விளங்குமென்க.

இனி, சித்துப்பிரபஞ்சமாகிய வுயிர்கள் மானிடப்பிறவியிலேதானே வீட்டின்பத்தை விழையும். அப்போது அவர்க்குக் குறைந்து மேறியுமுள்ள புண்ணிய பரிபாகங்களுக்கேற்பவே உலகாயதமுதல் சைவமீறான சமயங்களில் அபிருசியுண்டாம். "புறச்சமய நெறிநின்று மகச்சமயம்புக்கும் புகன்மிருதி வழியுழன்

நும்புகலுமாச்சிரம - வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள்புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள்படித்துஞ் - சிறப்புடையபுராணங்க ளுணர்ந்தும்வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற்சைவத் - திறத்தடைவரிதிற்சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்சேர்வர்." என்னும் பிரமாணத்தாற் படிப்படியாய்ப் புண்ணியமேற்பெற்ற பரிபாகிக ளிவர்களென்று வெளியாகியது. புறப்புறச்சமயம் ஆறு - புறச்ச[redacted]ம் ஆறு - அகப்புறச்சமயம் ஆறு - அகச்சமயம் ஆறு - ஆக இருபத்துநான்கு [redacted]யங்களையுங் கடந்தது சித்தாந்தசைவம். இனி, புறப்புறச்சமயங்கள் உலகாய[redacted]ம், நால்வகைப் பௌத்தமாகிய சௌத்திராந்திகம் - யோகாசாரம் - மா[redacted] வைபாடிகமும், ஆருகதமும் என ஆறும். புறச்சமயங்கள் தருக்கம் - [redacted]சை - மாயாவாதம் - சாங்கியம் - யோகம் - பாஞ்சராத்திரம் என ஆறு[redacted]அகப்புறச்சமயங்கள் சைவம்-பாசுபதம் - மகாவிரதம்-காளாமுகம் - வாமம்-[redacted]வம் என ஆறும். அகச்சமயங்கள் பாஷாண மோக்ஷவாதம் - சங்கிராந்தவாதம் - அவிகாரவாதம்-நிமித்தகாரணபரிணாமவாதம் - ஐக்கியவாதம் - பேதவாதம் என ஆறும். இச்சமயிக ளிருபத்துநால்வரு மொருவர்போலொருவர் கூறாமல் தத்தங் கொள்கையே மேலானதென்று வாதித்து மகிழாநிற்பர். இவர்கூற்றெல்லாம் பதியைப்போயணுகும் பண்பினவாகா. இதனையே "பூதங்களல்லபொறியல்லவேறு புலனல்ல வுள்ளமதியின் - பேதங்களல்ல வினையன்றிநின்ற பிறிதல்லவென்று பெருநூல் - வேதங்கிடந்து தடுமாறும்வஞ்சவெளியென்ப கூடன் மறுகிற் - பாதங்களோவ வளையிந்தனுதி பகர்வாரையாயு மவரோ." என்னும் பிரமாணமெழுந்து விளக்கியது. இவ்வாறு தெளிந்தவர்க்கே சித்துப்பிரபஞ்சங்களெனப்போந்த "உலகெலாம்" பரனை யெட்டாதொதுங்கினமை விளங்கும். ஈண்டுக்கூறிய "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்பதில் "உலகெலாம்" என்பது அசித்தும், சித்துமாகிய வுலகங்களைத் தெரிவித்தமையால், அசித்துலகு பாசமும், சித்துலகு பசுவுமாம், இவற்றா னுணர்ந்தோதற் கரியவனாகிய பரன் பதிப்பொருளாம். இதனால், பதார்த்தத்திரயநிருபணஞ் செய்தமையும் போதரும்.

இனி, அவ்வரிய பரன் யாவனென்று சங்கித்து ஐயுறுவார்க்கு "நிலவுலாவியநீர்மலிவேணியன்" என்று அவனை அடையாளங்களோடு (வேதாகமங்கள் விளக்கியவாறு) விதந்தருளினர். நிலவையும், நீரையும், வேணியையுங் குறிப்பித்தமையால், சந்திரசேகரன்-கங்காதரன்-சடாதரன் என்னுந் திவ்யநாமங்க ளவனை வழிபடுவார்க்கின்றியமையாத திருமந்திரங்களாதலைத் தெரிவித்ததாயிற்று. சந்திரன்-கங்கை-சடை என்னு மிம்மூன்றனுள், சந்திரன் தக்கனது சாபத்திற்கஞ்சிச் சரண்புகுந்தவன். அவனை யாதரித்தமையால், பிறராற் பெருங்கே டெய்தினோருந் திருவடிக்கண்வந்து அடையப்பெறின் உய்வுண்டாமென்பது வெளியாகியது. கங்கை பகீரதனது வேண்டுகோளால் பிரமலோகத்தினின்றும் பூலோகத்திற்கு வருகையில், அதனது வேகத்தைப் பூமிதாங்கமாட்டாமையாலும், பிரமனாதியருந் தாங்குமாற்றல் வலியாமையாலுஞ் சிவபெருமா னதனைத் தரித்தருளினர். "மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருசத்தி-சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது வென்னே - சலமுகத்தா லவன்சடையிற் பாய்ந்திலளேற் றரணியெல்லாம் - பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ." என்ப தோ

த்து. இதனால், (அந்நிய சாத்தியமாகாத விஷத்தைப் பானம்பண்ணித் தேவர்க ளை ரக்ஷித்ததுபோல) அந்நியசாத்தியமாகாத கங்கையைத்தரித்துப் பெருமான் உலகத்தை ரக்ஷித்தருளினானென்பது வெளியாகியது. இனி, (அன்பராவார்க்கு) எத்துணைப்பெரியாரும் முடித்துக்கொடுத்தற்கரிய பெரியகாரியங்களைத் தம்மைச் சரண்புகுந்தார்க்கு அப்பெருமான் முடித்துக்கொடுக்குந் தண்ணளியுடைமை யையே அக்கங்கையின் றோற்றம் விளக்கியவாறறிக. இனிச் சடைமுடியின்றோ ற்றம், அச்சடைமுடியினையுடைய தாபதராவார் சரண்புகுந்து வழிபடுந் தனி முதல்வனென்பதை வெளிப்படுத்தியது. இவற்றுள், சந்திரன் ஆண். கங்கை பெண். சடை அலி. இவற்றைத் தரித்தலால், அவனவளது வென்னு முத்திறப் பாகுபாட்டினதாகிய விப்பிரபஞ்சத்தைத் தாங்குபவனென்னுந் தலைமையையும் வெளிப்படுத்தியவாறறிக. அன்றியும், அஞ்ஞானவடிவமாகிய தக்கனது சாபம் சந்திரனைப் பற்றாவண்ணம் அவனைத் தனது சடைமுடியிற்றாங்கியதனால், அவ்வா றுதாங்கியபரன் ஞானவடிவினனென்பது அமையும். உலகத்தையெல்லாமழிக்கு மாறு ஆரவாரித்து அலைகளை வீசிக்கொண்டு பூமியிலிழிந்த கங்கையின் செயலை யடக்கி,அதனைச்சிறுதுளியாக்கித் தனது சடைமுடியிற் றரித்ததனால், அவ்வாறு தரித்த பரன் கிரியைவடிவின னென்பது அமையும். மெய்யன்பராவார்க்குத் தரிசனந் தரல்வேண்டு மென்னும் இச்சைகாரணமாகத் திருமேனிகொண்டமை யால், அத்திருமேனியில் வேறாகாத சடைமுடியினையுடைய பரன் இச்சைவடி வினனென்பது அமையும். இதனால், இச்சாஞானக்கிரியாஸ்வரூபன் பெருமா னென்பது வெளியாகியது. இனி, வேதத்தில் "உமாசகாயராய்—பரமேசுவரராய்—பிரபுவாய்—முக்கண்ணராய்—நீலகண்டராய்—பிரசாந்தராய் விளங்குபவனைத் தியா னிக்கவேண்டியது" என்று கூறப்பட்டிருக்கின்றது. "குவளைக்கண்ணி கூறன் காண்க - அவளுந்தானு முடனே காண்க - பரமானந்தப் பழங்கடலதுவே" என்று ஸ்ரீவாசகத்திருமுறை கூறுகின்றது. இந்த முக்கியப்பிரமாணங்களோ டினப்பட வே (இவை பரனது அடையாளங்களைக் கூறியபடியே) சந்திரன்-கங்கை-சடை முதலிய வடையாளங்களைப் பிரதிபாதித்தது இத்திருவாக்கென்க. இதுநிற்க.

"நிலவுலாவியநீர்மலிவேணியன்" எனப்போந்த விப்பரனைச் சிற்சடப் பிரபஞ்சங்களுணரவு மோதவுங் கூடாவென்று கூறியது யாங்ஙனமென்பார்க்கு "அலகில்சோதியன்" என்னும் விடை அடுத்துபகரித்தது. சிற்சடங்களிரண்ட னுள், சடமாகிய அசித்து அறிவில்லாதது. எஞ்சிய சித்து சிற்றறிவும், மலமறை ப்புமுடையது. இவற்றானுணர்ந் தோதற்கரியவ னெனப்போந்த பரன் பேரறி வினையுடையவன். பேரறிவினையுடைய பரனை அறிவில்லாத அசித்து அறியாது. அறிவின்மை அப்பிரகாசமும், அறிவுடைமை பிரகாசமுமாம். அப்பிரகாசமாகிய விருள் பிரகாசமாகிய வொளியை யறிதல் யாங்ஙனம்? "நீயேமொளியு நிறையிரு ளுமோரிடத்திற்-கூடலரிது" என்றார் பெரியாரும். இனிப் பேரறிவினையுடைய பரனைச் சிற்றறிவினையுடைய சித்து, அல்லது ஆன்மா அறியாது. பேரறிவு பெரி யபிரகாசமும், சிற்றறிவு சிறியபிரகாசமுமாம். பெரியபிரகாசம் சூரியப்பிரகாசம் போல்வது. சிறியபிரகாசம் கண்ணினதுபிரகாசம்போல்வது. கண்ணினது பிர காசம் கண்டம். சூரியனது பிரகாசம் அகண்டம். சூரியனை இருள் மூடாது. கண் ணினை இருள் மூடும். இருளான் மூடப்பெற்ற கண்ணினது கண்டப்பிரகாசம்

சூரியனைக்காணாது. இனி, ஆன்மாவினது பிரகாசம் கண்டம். பரமான்மாவினது பிரகாசம் அகண்டம். பரமான்மாவைப் பாசம் பந்தியாது. ஆன்மாவைப் பாசம் பந்திக்கும். பாசத்தாற்பந்திக்கப்பட்ட ஆன்மாவினது கண்டப்பிரகாசம் பரமான்மாவை யுணராது. இதனால், இருள்வடிவமாகிய அசித்துப் பிரபஞ்சமறியாது என்பதற்குச் "சோதியன்" எனவும், இருளாலாவரிக்கப்பெற்ற (கண்டமாகிய) சித்துப்பிரபஞ்ச மறியாது என்பதற்கு "அலகில்சோதியன்" எனவும் அத்திருவாக்கினைப் பிரித்துஞ் சேர்த்து முணர்ந்திடுவர் பெரியோரென்க. அன்றியும், அக்கினி சூரியன்முதலிய எல்லாவொளிகளும் சோதிகளென்று பெயர்பெறும். இவை சடமாகையால் சிவபரஞ்சுடரின் முன்ன ரிவற்றைச் சடசோதி யென்பர் பெரியோர். இவை சிவபரஞ்சுடரின் சந்நிதியி லற்பமாயொடுங்கலா லிவற்றை நோக்குவார் அச்சிவபரஞ்சுடரை "அலகில்சோதி" என்று துதிக்கப் பின்னிடார். இவ்வுண்மையும் "அலகில்சோதியன்" என்னுந் திருவாக்கிற் பெறப்பட்டவாறறிக. இதுநிற்க.

அசித்தும் சித்துமாகிய பிரபஞ்சங்களுள், அசித்துப்பிரபஞ்சம் பரனை யுணர்ந்தோதாதென்பதுநிற்க, சித்துப்பிரபஞ்சமு மவனையுணர்ந்தோதாதாயின், அவனொருவ னுளனென்பதும், அச்சித்துப்பிரபஞ்சமாகிய வுயிர்களுக்குப் பாசநீக்கம்போமென்பதும் யாங்ஙனமென்பார்க்கு "அம்பலத்தாடுவான்" என்னும் விடை அடுத்துபகரித்தது. "தானேயகண்டாகாரமயந் தன்னிலெழுந்து பொதுநடஞ்செய்-வானே" என்றருளிய தாயுமானவர் திருவாக்கும் அதன்பொருளை விரித்திடுமென்க. கண்ணொளியைமறைத்த விருளைத்துரத்திக் கதிரொளி யுபகரித்தபோது கண்ணானது தன்னைக்கண்டும்,தனக்குக் காட்டாய்நின்ற கதிரோனைக்கண்டும் பிரகாசியாநிற்கும். அதுபோல, ஆன்மவொளியைமூடிய மலத்தை யகற்றிச் சிவனரு ளுபகரித்தபோது ஆன்மாவானது தன்னையுணர்ந்தும், தன துணர்வுக்குணர்வாய்நின்ற சிவபரஞ்சுடரை யுணர்ந்தும் பிரகாசியாநிற்கும். கண்டவொளியாகிய கண்ணானது தானே யொன்றினைக்காணாது. அகண்டவொளியாகிய கதிரோன்காட்டவே காணும். அப்படியே, கண்டவறிவாகிய ஆன்மாவானது தானே யொன்றினையறியாது. அகண்டவறிவாகியபரமான்மா அறிவிக்கவேயறியும். "அறிவித்தாலன்றி யறியாவுளங்கள்" என்றார் பெரியாரும். இதனால், தானேவலிந்து தன்னை யாவருமுணருமாறு அம்பலமாகிய வெளியில்நின்று கூத்தாடினர் பெரியபெருமானென்பதனையே எடுத்துக்கொண்ட வத்திருவாக்குணர்த்தியதென்க. அம்பலத்திலாடுகின்ற அழகனைக் கண்டபோதே இன்பமுண்டாதல் சித்தமாகலின், அதுவே முத்திப்பேறும். அதுபற்றியன்றே "தில்லையைக்காண முத்தி" என்றார் பெரியாரும். இப்பெரும்பேற்றினையே "கற்போல நெஞ்சமுள்ளவெனக்குந்தானே கண்டவுட னுரைந்தங் காண்டலாகும்" என்றார் பிறவான்றோரும். இனி,இத்தில்லைப்பொதுவினடிக்கும் பரனைச் சாந்தோக்கியங்கூறுகின்றது. அது, "பிரமபுரமாகிய இச்சரீரத்திலுள்ள தகரமாகிய புண்டரீகவீட்டினுள்ளேயிருக்கும் ஆகாசம்" என்றற்றொடக்கத்துவாக்கியமாம். இங்கே ஆகாசம் என்றது பிரமத்தை. பிரமமென்பதே சிவம். புறத்து மிவ்வாறே இப்பிரமாண்டம் பிரமபுரமெனவும், இப்பிரமாண்டத்தினுள்ளேயிருக்குந் தில்லைவனம் புண்டரீகவீடு எனவும், இத்தில்லைவனத்தி னிருத்தஞ்செய்யுஞ் சிவம் ஆகாசமெனவுங் கொள்ளப்

படும். தாவரமாகிய அண்டமும்,சங்கமமாகிய பிண்டமுஞ் சமமாதலால்,பிண்டமாகிய சரீரத்தில் இடைக்கும் பிங்கலைக்கும் நடுவிலுள்ள சுழுமுனைநாடியும், பிரமண்டத்திலுள்ள விப்பரதகண்டத்தி லிலங்கைக்கு மிமயமலைக்கு மிடையிலுள்ள தில்லையுஞ் சிவன் ஆநந்தநிருத்தஞ்செய்யுந் தானமாம். இவ்வாநந்தநடனசிவனை யுபாசிக்கு முண்மை கைவல்யோபநிடதங் கூறுகின்றது. "புண்டரிக புரத்தினிறு தாந்தமோன போதாந்த நடம்புரியும் புனிதவாழ்வே" என்றார் தாயுமானாரும். இவ்வுபாசனை தகரோபாசனையென்று பெயர்பெறும். இதனை யவலம்பிக்குங்கால், கதிரோனது சந்நிதியிற் கண்ணானது தனதொளியைமூடிய விருளொழியப்பெற்று தன்னையுந் தனக்குக் காட்டாய்நின்ற வக்கதிரோனையுங் காணுமாறுபோல,பரமான்மாவாகிய ஆநந்தநடனசிவனது சந்நிதியில்,ஆன்மாவானது தனதறிவைமூடிய பாசநீங்கப்பெற்றுத் தன்னையுந் தனதறிவுக்கறிவாய்க் கலந்த வந்நடனசிவனையு மறிந்து பொலிவெய்துமென்க. "தாணுவின்றன் கழலணையத் தவிருமலந் தவிர்ந்தாற்றன்சுத்தனுயிருக்கை முத்தியரன்றாளைப்-பூணவேண்டுவ தொன்றுமில்லையெனினருக்கன் புகுதவிருள்போமடியிற் பொருந்துமலம்போமே" என்பதோத்து. ஈண்டு, "அருக்கன்புகுத விருள்போம்" என்றுவமித்தமையால் உபமேயஸ்தானத்தினின்ற பரனே வலிந்து வெளிப்பட்டு மலத்தை மோசித்து உபகரித்தல் சத்தியமாயிற்று. விரிக்கிற் பெருகும். இதுநிற்க.

உலகெலாமுணர்வரியானாகிய பரன் உயிர்கண்மாட்டிரங்கித் தன்னை யவர்களுணர்ந்தோதுமாறு தானே வலிந்து சிற்கனமூர்த்தியாய் வெளியே கூத்தாடிநின்றமையால், அப்பரஞ்சுடர்ப்பிரானை யுணர்ந்தோதும்பெற்றி எல்லாவுயிர்க்குமுண்டாயதென்க. உண்டாகவே,"மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்" என்னும் வழிபாடு அவ்வுயிர்கண்மாட்டுச் சிறந்தது. திருவடிப்பேறுதானே வீட்டின்பமாமென வேதசிவாகமங்கள் விதந்திடலா லீண்டு மத்திருவடிவாழ்த்தும், வணக்கமும் பெறப்பட்டன. "அறவாநீ யாடும்போதுன் னடியின் கீழிருக்கவென்றார்" என்று காரைக்காலம்மையார் விண்ணப்பஞ் செய்துகொண்டதனை ஆசிரியர் கூறியிருப்பதனானுமுணர்க. "புண்ணியனே யுன்னடிக்கே போதுகின்றேன்" என்னுந் தேவாரத்திருமுறையு மோத்து. இனித் திருவடியைக் கூறுங்கால், மலர் - சிலம்பு என்னும் விசேடணங்களைப் பெறப்பட்டிருக்கின்றன. இதனால், மலர்போன்ற சிலம்பணிந்த பாதம். என்று பொருள்கூறினும். இவ்வாறு கூறியது "ஊன்றுமலர்ப்பதத்தி லுற்றதிரோதமுத்தி - நான்றமலர்ப்பதத்தே நாடு" என்று மனவாசகங்கடந்தா ரருளிச்செய்த மதுரவாசக மணந்திடலாலென்க. மலர்சிலம்படி என்பது தொகுத்தல். பின்னர்ப்போந்த சிலம்பு திருவடிக்கட்பொலிவெய்தும் அணிகலமாமென்க. அவ்வணிகலமாகிய சிலம்பு ஒலிக்குமியல்பினது. வேதங்கள் சிவனது திருவடியிற்கிடந்து முழங்கலால் அவையே சிலம்பாம். இவ்வுண்மைபோதரவே ஆசிரியர் "மறைச்சிலம்பார்ப்ப மன்றுளே * * * ஆடுகின்றார்" என்று தடுத்தாட்கொண்டபுராணத்தில் விதந்தபடியாம். "எழுதரிய மறைச்சிலம்பு" எனவும், "மறையே நமது நூபுரமாம்" எனவுங் கூறினர் பிறரும். பிற்போந்த "வாழ்த்திவணங்குவாம்" என்பதில் வாழ்த்துதல் வாக்கின்றொண்டும், வணங்குதல் காயத்தின்றொண்டுமாம். மனம் - வாக்கு - காயம் என்னுந் திரிகரணவழிபாடு நூல்களிற்கேட்கப்பட்டவா றீண்டமையாம லீரண்டு கரணங்கள்போந்தமை யென்னெனின்,வாக்கின்றொண்டும்,காயத்தின்றொண்டுமவ்வாக்குக்காயங்களோடு மன

ங்கலவாதபோது நிகழாமையால்,மனத்தின்மூன்றும் பெறப்பட்டவாறறிக. மனம்வாக்குக்காயங்களென்னு மிவை அசித்துப்பிரபஞ்சமெனப்போந்த மாயாகாரியம். சித்துப்பிரபஞ்சமாகிய வுயிர்கள் பரனை யணுகியவாறு,அசித்துப்பிரபஞ்சமாகிய மாயையும் பரனை யணுகியதென்பதிதனாற் பெறப்பட்டது. மனம்வாக்குக்காயங்களால் பரனை நினைக்குந்தோறும், வாழ்த்துந்தோறும், வணங்குந்தோறும் அவைகளை முறையே நினைப்பித்தலும், வாழ்த்துவித்தலும், வணங்குவித்தலுமாகிய வுபகரிப்பை அப்பரனேசெய்வனெனவறிக. சித்தினிடத்து அறிவு நிகழ்தல்போல, அசித்தினிடத்து அசைவு நிகழாநிற்கும். அறிவுடையதை அறிவித்தல்போல,அசைவுடையதை அசைவித்தலேயமையும். அறிவிப்பது பரனதுஞானமும், அசைவிப்பது பரனது கிரியையுமாம். அறிவித்தாலறிவது உயிரினது ஞானமும், அசைவித்தாலசைவது சடத்தினது கிரியையுமாம். இந்த விசாரத்தால் சிற்சடப்பிரபஞ்ச மிரண்டினுக்கும் முதல் அரியனாய்நின்றமையும்,பின்ன ரெளியனாயினமையும் பெறப்பட்டு, அவனுலகுயிர்களை நடத்து முறைமை இனிது வெளியாகியது காண்க.

இன்னு மிச்செய்யுளில், முதலடி உகரத்தையும், மூன்றாவதுஅடி அகரத்தையும், நான்காவதுஅடி மகரத்தையும் முதலிற்கொண்டு விளங்குகின்றன. அதனால், அகரவுகரமகரங்களாலாகிய பிரணவ வடிவமாயுள்ள திச்செய்யுளெனல் போதரும். இதனீற்றில் ஓம் என்னுஞ் சமஷ்டிப்பிரணவமுங் காணப்படுகின்றது. அது "மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்" என்பதிலுள்ள "ஆம்" என்பதேயாம். வணங்குவோம் - வணங்குவாம் என்பவைகளிற் பொருட்பேதங் காணாமையால் செய்யுணடை நோக்கி "ஆம்" என்று கூறியபடியாம். இனி யிதனது ஒலிவடிவமாகிய நாதமும், வரிவடிவமாகிய விந்துவும் அகரவுகரமகரங்களோடு சேர்ந்தால், ஸ்ரீபஞ்சாக்ஷரப் பிரசங்கமுண்டாம். இது ஸ்ரீபஞ்சாக்ஷரமாயுள்ள வபேதத்தை இச்செய்யுளினிரண்டாவதடியின் முதலெழுத்தானுணரலாமென்க. பஞ்சாக்ஷரத்தின் முதலெழுத்து நகரமாகவும், அதனோடு இகரம் புணர்ந்திருப்பதென்னெனின், அதனைக் குருவினிட முபதேசிக்கப்பெற்று உச்சரிக்குங்கால், "நமசிவாய" என்பது "சிவாயநம" என்று மாறுதலால், அவ்வரும்பொருடோன்றவமைத்தவாறறிக. அன்றியும், இதில் பரனது எண்குணங்களுங் கேட்கப்படுகின்றன. அவைவருமாறு:—பரன் அசித்துஞ் சித்துமாகிய உலகுயிர்களுக்கறிவரியனாய்நின்று தானேஅவைகளுக்குத் தொழிலறிவுகளை யியக்கலால் தன்வயத்தனாதலும், தனது திருமேனியினது பரிசத்தால் சந்திரனுக்குச் சாபநிவிர்த்தியும், கங்கைக்குப் பரிசுத்தத்வமும் பிராப்தமாயினமையால் தூயவுடம்பினனாதலும்,சோதிமாத்திரமாயிராமல் அலகில் சோதியனாயிருத்தலால் இயற்கையுணர்வினனாதலும், முற்றுணர்வினனாதலும்,இயல்பாகவேபாசங்களினீங்குதலும், சாபமெய்திய சந்திரனிடத்திலும்-பகீரதனிடத்திலும் - பெத்தாத்மாக்களிடத்திலு மிரங்கினமையால் பேரருளுடைமையும், ஒருவருந் தன்னை யறியாவாறு அதிதப்பட்டும் அந்நியசாத்தியமாகாத கங்கையைத் தரித்தும் விளங்கலால் முடிவிலாற்றலுடைமையும், அம்பலத்தின்கண் ஆனந்தத்தாண்டவம் புரிதலால், வரம்பிலின்பமுடைமையும் பெற்றும்.

இனி, ஆசிரியர் எடுத்துக்கொண்ட விடயம் அடியவர் சரிதமாகையால், அவ்வடியவர் பெருமையே இச்செய்யுளிற் போந்தவாறறிக. எங்ஙனமெனின், "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்பது ஆன்மாக்களது பெத்தநிலையையும், "மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்" என்பது அவரது முத்திநிலையையும் விளக்கின. பெத்தர்கள் அஞ்ஞானிகளும்,முத்தர்கள் மெய்ஞ்ஞானிகளுமாம். இம்மெய்ஞ்ஞானிகளே சரியை-கிரியை - யோகம் - ஞானம் என்னு நால்வகைத்தொண்டிற்கு முரிய அடியார்களென்னப்படுவர். "ஞானயோகக்கிரியை சரியை நாலு நாதன்றன்பணிஞானி நாலினுக்கு முரியன்" என்ப தோத்து. இந்நூலிற் பிரதிபாதிக்கப்படுவது சரியைகிரியையோக ஞானங்களை யனுட்டித்துச் சிவப்பேறெய்திய அடியார்களது பெருமையேயாம் இவ்வடியார்களது சரித்திரங்களி னிடையிடையில் சமணர்-புத்தர்-முத்தநாதன் அதிசூரன் - கருநடமன்னன்-எச்சதத்தன் முதலிய அஞ்ஞானிகளது சரித்திரமுங் கேட்கப்படுகையால், இவ்வுண்மைபோதர முதலடியானது அஞ்ஞானிகளைப் பிரஸம்சித்ததென நிரூபித்தலு மமைவுடைத்தாம். இனி யிடைநின்ற விரண்டடிகளில், "நிலவுலாவியநீர்மலிவேணியன்" என்பது முதலடியிற்போந்த பெத்தாத்மாக்களது பாசநிவிர்த்திக்கும், "அலகில்சோதிய னம்பலத்தாடுவான்" என்பது நாலாவதடியிற்போந்த முத்தாத்மாக்களது வீடுபேற்றிற்குங் காரணமாய்நின்ற பரனது அருள்விலாசத்தை விளக்கியவெனலே சித்தம். சந்திரன் - பகீரதன் முதலியோரது துக்கநிவிர்த்தி இரண்டாவதடியிலும், நடனவதிசயத்தைப்பார்த் தானந்தபரவசராயினோரது சுகப்பேறு மூன்றாவதடியிலும் பெறப்பட்டமையால், அவை முறையே பெத்தாத்மாக்களுக்கும், முத்தாத்மாக்களுக்கு முபகாரமாயினவென்று மேற்கூறியது ஸாமஞ்சஸமாகியது. பெத்தமுத்திகளிரண்டினும் பரன் நீக்கமின்றி யுடனிருந்துபகரிப்பனென்னுஞ் சித்தாந்தமுடிவு மிதனாற்றுணியப்பட்டவாறறிக. இச்செய்யுளினுரை ஒருவகையான் முடிந்தது. (க)

ஊன டைந்த வுடம்பின் பிறவியே
தான டைந்த வுறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழிற் றில்லையுண்
மான டஞ்செய் வரதர்பொற் றடொழ.

(இ-ள்.) தேன்பொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த திருத்தில்லைப்பதியில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற நடேசமூர்த்தியினது அழகிய குஞ்சிதபாதத்தைத் தொழுதலால் மாமிசம்பொருந்திய உடம்பினாலாகிய பிறப்பானது தான் உலகத்திற்பிறந்ததனு லடையவேண்டிய உறுதிப்பயனை யடையும்.—எ-று.

ஊனடைந்த வுடம்பின் பிறவி மக்களுக்கேயன்றித் தேவர் - விலங்கு - ஊர்வன - நீர்வாழ்வன முதலியவைகட்குமுண்டு. இதனால், எந்தப்பிறவியிலுந் தில்லையைக்கண்டார் பிறவியை விண்டாரென்று சொல்லப்பெறுவர். பதஞ்சலியார்க்குப் பாம்பின்வடிவமும், வியாக்கிரபாதர்க்குப் புலியின்வடிவமும் அவர்களது பாதங்களிலுண்டாயினமையும் இவ்வுண்மையைத் தெரிவிக்கும். ஈ - எறும்பு - நாரை - சிலந்தி - பாம்பு - யானை - எலி - அணில் - குரங்கு முதலியன சிவப்

பேறெய்திய சரிதங்கள் உண்மைநூல்களிற்கேட்கப்படுகையாலும், ஈண்டு யாம் கூறியது அமையும். இப்பிறவிகளில், மானிடப்பிறவி அரிதாகையால், அதுவே முத்திக்குரியதென்று அதன் சிறப்புநோக்கிக் கூறினும் பொருந்தும். எந்தப்பிறவியிலாயினும் சிவப்பிரசாதத்தால் முத்திப்பேறுண்டாமேயன்றி வேறுவகையா னுண்டாகமாட்டாது. அப்படிக்கிடைத்திடின், கிடைக்கப்பெற்ற அவனை ஆகாயத்தைத் தோல்போற் சுருட்டினவனாக அறியவேண்டியதென்று சுருதி கூறுகின்றது. ஆகாயத்தைத் தோல்போற் சுருட்டுவாரும்,சிவனை யாச்சிரயிக்காமல் முத்திபெறுவாரும் இல்லையென்பதே முடிவாம். "மானிடன் விசும்பைத் தோல்போற் சுருட்டுதல் வல்லோனுயி - னீனமில் சிவனைக் காணு திடும்பைதீர் வீடுமெய்து-மான மார் சுருதிகூறும் வழக்கிதை" என்றார் சிவஞானமுனிவரர். சிவனை யடைந்தவர்க்கே முத்திப்பேறுண்மையால், "மாநடஞ்செய்வரதர்" என்று தெரிவித்ததாயிற்று. "காட்டவனல்போலுடல்கலந்துயிரையெல்லா-மாட்டுமொருநட்டுவனெம் மண்ணலெனவெண்ணுய்" என்னும் வாக்கியம் பெருமானது நடனம் இன்னகாரணத்தை மேற்கொண்டது என்பதைத் தெரிவித்தது. அந்தநடனம் பஞ்சகிருத்தியதாண்டவம் என்று பெயர்பெறலானும், அது உயிர்கண்மாட்டே பயன்படலானும், "இமையளவுமுபகார மல்லால்வேறொன் றியக்காநிர்க்குணக்கடல்" என்று சைவநூல் கூறுகின்றமையானும், "வேண்டுதல்வேண்டாமையிலான்" என்று பெருநாவலர் பேசிமுடித்தமையானும், தனக்கென வொன்றும் வேண்டாமல் வேண்டுவார் வேண்டுவனவற்றை அவரவர் விருப்பின்படி அருளவல்ல பரனது அருள்வண்மையையே "வரதர்" என்னும் பிரயோகம் பிரகாசப்படுத்தியதாயிற்று.(உ)

## விநாயகர்துதி.

எடுக்கு மாக்கதை யின்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்து ளிருத்துவாம்.

(இ-ள்.) எடுத்துச்சொல்லுகின்ற மகத்தாகிய திருத்தொண்டர்புராணமானது (இடையூறின்றி) இனிய தமிழ்ச்செய்யுள்நடையாக எம்மால் முடிவுபெறத்தக்க மேன்மையை எமக்கருள்செய்யும்படி, விசாலம்பொருந்திய ஐந்து திருக்கரங்களையும், தாழ்ந்த செவிகளையும், நீண்ட திருமுடியினையுமுடைய மதம்பொழிகின்ற யானைமுகத்தையுடைய (கற்பகவிநாயகக்)கடவுளை எமதுள்ளத்தில் பொருந்தத் தியானிப்போம்.—எ-று.

யானைமுகம் பிரணவத்திற்கு அறிகுறியாகையால், "கடக்களிறு" என்று துதித்தார். "பிரணவப்பொருளாம்பெருந்தகையைங்கரன்- சரணவற்புதமலர்தலைக்கணிவோமே" என்றார் பெரியாராகலி னிந்நூலினாரம்பத்திற் கணபதிவணக்கங் கூறப்பட்டமையும் போதரும். "உலகெலாம்" என்னு முதற்செய்யுளில், அகர உகர மகர ஓங்காரங்களின் ஸ்வரூபத்தை இனிது பிரகாசப்படுத்தி யிருப்பதை முன்னர்த் தெரிவித்தோமாகையால், அது கணபதிவணக்கமேயாமென்பதும், அந்தக்கணபதிக்கும் ஸ்ரீநடராஜபதிக்கும் பேதமில்லை யென்பதும் பெரியோர் மகிழ்ந்துணாக்கும் பெற்றியினவென் றின்புறுக. முதற்செய்யுளில் குப்தமாயிருந்ததனை

இச்செய்யுளில் வெளிப்படையாக விரித்தாரென்க. இதனால், நூலின் முதற்கண் விநாயகவணக்கங் கூறாததென்னையென் றையுறுவா ராசங்கையும் விட்டொழிந் தவாறு காண்க. (௩)

## திருக்கூட்டப்புகழ்ச்சி.

### வேறு.

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
றுதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்ப்
பொதிநல னுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே.

(இ-ள்.) இளம்பிறை வளர்கின்ற சடைமுடியினையுடைய ஸ்ரீநடராஜமூர்த்தியைப் பூர்வத்தில் துதித்துப் பேறுபெற்ற திருத்தொண்டர்களது பரிசுத்தம் பொருந்திய சொல்லாகிய மலர்களில்நிறைந்த பயனாகிய தேனையுண்ணுகின்ற மலரகிதர்களாகிய அடியார்களது பெரியதிருக்கூட்டமானது வேதசிவாகம விதிமுறைப்படியே உலகத்தில் பிரகாசித்து மேன்மைபெறக்கடவது.—எ-று.

நாயன்மார் தூயசொல் என்றது திருஞானசம்பந்தப்பிள்ளையார் முதலிய நாயன்மார்க ளருளிச்செய்த திருமுறைகளை. (௪)

## அவையடக்கம்.

### வேறு.

அளவி லாதபெ ருமைய ராகிய
அளவி லாவடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூடவு ரைப்பரி தாயினும்
அளவி லாசைது ரப்பவ றைகுவேன்.

(இ-ள்.) யாவராலு மளவிட்டுச் சொல்லுதற்கரிய பெருமையினையுடையராகிய எண்ணிறந்த சிவனடியார்களது புகழமைந்த சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கிய யான் அதனை அளவுபடுத்திச்சொல்லுதல் எனக்கு அரிதாயிருந்தாலும், (அதனைச் சொல்லவேண்டுமென்னும்) அளவில்லாத ஆசையானது என்னைப்பிடித்து உந்துதலால் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (௫)

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகு தண்கட லூற்றும் பெருநசை
யொருசு ணங்கனை யொக்குந் தகைமையேன்.

(இ-ள்.) வெள்ளமாகப்பெருகுகின்ற குளிர்ந்த சமுத்திரநீரை (அப்படியே யெடுத்து ஊரிலுள்ளவர்களுக்கு) ஊற்றி யுபகரிக்க வெண்ணும் பேராசையையுடைய ஒரு (சிறிய) நாயினையொத்த தகுதியையுடைய யான் அறிதற்கரிய பெருமைபொருந்திய ஒப்பற்ற திருத்தொண்டர்களின் திவ்யசரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினேன்.—எ-று.



திருஞானசம்பந்தசுவாமிகள். திருநாவுக்கரசுசுவாமிகள். ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள். ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள்.

சமுத்திரத்தை அது இருக்குமிடத்தினின்றும் பெயர்த்து ஒருபாத்திர ஜலத்தை எடுத்து ஊற்றுவதுபோல்,ஊற்றுவதற்கு எவ்வகைப்பட்டவர்களாலும் முடியாது. இங்ஙனமாக, அது ஒருநாயினால் முடியுமோ? முடியாதகாரியத்தை நாய் தனது அறியாமையால் செய்ய வெண்ணியதுபோலவன்றோ எவ்வகைப்பட்டமேலோர்களுஞ் செய்துமுடிக்க நினைப்பரிதாகிய திருத்தொண்டர்புராணத்தை நாயனைய யான் செய்துமுடிக்கத் துணிந்தேன் என்று விதந்தமையறிக. (சு)

செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினு
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால்.

(இ-ள்.) ஒருவன் சொல்லுகின்ற பொருளின் சிறப்பை நோக்கி அப்பொருளைத் தெரிவிக்கின்ற மொழிகளைச் (சிறப்பில்லாதிருந்தாலும்) யாவரும் அங்கீகரிப்பார்கள். (அதுபோல) இத்தொண்டர்களின் சரித்திரத்தை வகுத்துச் சொல்வதற்கு என்னுடையசொற்கள் அற்பமாயிருந்தாலும், (சொல்லப்பட்ட பொருளின்மேன்மைக்கருதி) உண்மைப்பொருளை யறிதற்குரிய பெரியோர்கள் அங்கீகரித்துக்கொள்வார்கள்.—எ - று. (எ)

மேய விவ்வுரை கொண்டு விரும்புமாஞ்
சேய வன்திருப் பேரம்ப லஞ்செய்ய
தூய பொன்னணி சோழனீ டூழியார்
ஆய சீரந பாய னரசவை.

(இ-ள்.) சிவந்த திருமேனியையுடைய ஸ்ரீநடராஜமூர்த்தியினது அழகிய கனகசபையைக் களங்கமற்ற செம்பொன்னினால் அலங்கரித்த திருநீற்றுச்சோழனென்னும் அபிடேகத் திருநாமமுடையவனும், நீண்ட கற்பகாலம்வரையிலும் உலகத்தில் நிலைக்கப்பெற்ற கீர்த்தியையுடையவனுமாகிய அநபாயச்சக்கரவர்த்தியினது இராஜசபையிலுள்ளவர்கள் மேன்மைபொருந்திய இப்புராணத்தை அங்கீகரிப்பார்கள்.—எ - று.

சேயவன் என்பதற்கு,பிரமவிஷ்ணுவேந்திராதி தேவர்களுக்கும் எட்டாமல் தூரமானவன் எனினும் பொருந்தும். (அ)

அருளி னீர்மைத் திருத்தொண் டறிவருந்
தெருளி னீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளி னாகுமெ னப்புகல் வாமன்றே.

(இ-ள்.) (சிவபெருமானது) திருவருட்டன்மையைப்பெற்ற அடியார்களது திருத்தொண்டினியல்பை (இத்தன்மையினவென்று) அறியத்தக்க உண்மையறிவில்லாத நீர் இப்புராணத்தைச் சொல்லக்கூடுமோவென்றால், மயக்கமற்ற வேதசிவாகமங்களை யருளிச்செய்த ஸ்ரீநடராஜமூர்த்தியே (யாவருமறிய) அசரீரியாக முதலடியெடுத்துக்கொடுத்தருளிய காரணத்தினால் ஆகுமென்று சொல்லுவோம்.—எ - று.

"வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய பொருளினும்" என்பதற்கு மயக்கமற்ற உலகெலாம் என்னும் உண்மைமொழியை ஆகாயத்தின்கண் அசரீரியாகக்கூறிய காரணத்தால் ஆகும் எனினும் பொருந்தும். (௯)

## நூற்பெயர்.

### வேறு.

இங்கித னுமங் கூறி னிவ்வுல கத்து முன்னாட்
டங்கிரு ளிரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய விருளை யேனைப் புறவிருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போ னீக்குந் திருத்தொண்டர் புராண மென்பாம்.

(இ-ள்.) இவ்விடத்து இப்புராணத்தினது திருப்பெயரைச் சொல்லப்புகுந்தால், இந்த வுலகத்தில் தொன்றுதொட்டுவருகின்ற புறவிருளும் அகவிருளுமாகிய இரண்டனுள் மனிதர்களுடைய உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் நிறைந்த அஞ்ஞானவிருளை, மற்றைப்புறத்தில் கண்ணுக்குப் புலனாகத்தோன்றும் பூதவிருளைப்போக்குகின்ற சிவந்தகிரணங்களை யுடைய சூரியனைப்போல நீக்குகின்ற திருத்தொண்டர்புராணமென்று சொல்லுவோம்.—எ-று.

புறவிருள் போக்குகின்ற செங்கதிரவன்போல் மாக்கள் சிந்தையுட் சார்ந்துநின்ற பொங்கியவிருளை நீக்குந் திருத்தொண்டர்புராணமெனக் கூட்டுக.

இச்செய்யுளில், திருத்தொண்டர்புராணமென்றிருக்கப் பெரியபுராணமென்று வழங்குவதென்னையெனின், சிவப்பிரசாதம்பெற்ற அடியார் பெருமையைக் கூறும் நூலாதலின், பெரியபுராணமெனப்பட்டது. இதனை ஆசிரியர் "மாக்கதை" என்பதனானும், "அளவிலாதபெருமையராகிய—அளவிலாவடியார்" என்பதனானு முணர்க. "தொண்டர்தம்பெருமைசொல்லவும்பெரிதே" என்றார் ஔவையாரும். (௧0)

## பாயிரம் முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# திருமலைச்சிறப்பு.

பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கு மறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை.

(இ-ள்.) தம்முடைய சொரூபத்தைப் (பத்தி செலுத்துகின்ற அன்பர்களன்றி) மற்றை யாவர்க்கும் அறிதற்கரியவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பெருமைபொருந்திய திருக்கயிலாயமலையானது பொன்னின்மேல் வெண்மையாகிய திருநீற்றைத் தரித்ததுபோலப் (புலவர்களால்) புகழ்ந்துசொல்லப்பட்ட நீண்ட இமயமலையின் பக்கத்திலுள்ளது.—எ-று. (க)

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலி
னண்ணு மூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணின் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது.

(இ-ள்.) (அத்திருக்கயிலையானது) சிவபெருமான் எழுந்தருளியிருக்கப் பெற்றதாதலால், நிலைபெற்ற (சுவர்க்க மத்திய பாதல மென்னும்) மூன்றுலகத்திலுள்ளவர்களும், நான்குவேதங்களும் அளவில்லாத பெரிய தவத்தைச்செய்தலால், வந்தடைந்த புண்ணியமனைத்தும் ஒன்றாகத் திரண்டுள்ளதுபோலுந் தோற்றமுடையது.—எ-று. (உ)

நிலவு மெண்ணிற லங்களு நீடொளி
யிலகு தண்டளி ராகவெ ழுந்ததோர்
உலக மென்னு மொளிமணி வல்லிமேன்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை.

(இ-ள்.) அந்தப் பெருமைபொருந்திய திருக்கயிலாயமலையானது (தெய்வத்தன்மைபொருந்தி) விளங்குகின்ற அளவற்ற சிவஸ்தலங்களையும் பிரகாசம் பொருந்திய குளிர்ந்த துளிராகக்கொண்டு தோன்றிய உலகமென்று சொல்லப்பட்ட அழகிய கொடியின்மேல் படர்ந்த வெள்ளிய மலர்போலப் பிரகாசிப்பது.

உலகத்தைக் கொடியாகவும், ஸ்தலங்களைத் தளிராகவும், திருக்கயிலையை வெண்மலராகவுங் கூறினமையின், அத்திருக்கயிலை எல்லாஸ்தலங்களுக்கும் மேலாய சிறப்புடையதென்று பெறப்பட்டது. (ங)

மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்
கான வீணையி னோசையுங் காரொதிர்
தான மாக்கண் முழக்கமுந் தாவில்சீர்
வான துந்துபி யார்ப்பு மருங்கெலாம்.

(இ - ள்.) மேன்மைபொருந்திய (இருக்கு - எசுர் - சாமம் - அதர்வணமென்னும்) நான்கு வேதங்களின் ஓசையும், வித்தியாதரர்கள் கானஞ்செய்கின்ற வீணையின் ஓசையும், மேகத்திற்கு மாறாக மதம்பொழிகின்ற யானைகள் முழங்கும் முழக்கமும், கெடாத சிறப்பினையுடைய தேவதுந்துபியின் முழக்கமும், (அத்திருக்கயிலாயமலையின்) பக்கங்களிலெல்லாம் உண்டாயிருக்கின்றன.—எ - று.

காரொதிர்தானம் என்பதற்கு மேகத்திற் கொப்பாகப் பொழிகின்ற மதம் எனினும் பொருந்தும். (௪)

பனிவி சும்பி லமரர் பணிந்துசூழ்
அனித கோடி யணிமுடி மாலையும்
புனித கற்பகப் பொன்னரி மாலையு
முனிவ ரஞ்சலி மாலையு முன்னெலாம்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் வணங்கிச் சூழ்ந்துநிற்கின்ற அளவற்ற அழகிய முடிகளின் வரிசையும், பரிசுத்தம்பொருந்திய கற்பகமலர்களால் தொடுக்கப்பட்ட பொன்னரிமாலைகளும், முனிவர்களின் அஞ்சலியாகிய வரிசைகளும் ஆகிய இவைகள் (அம்மலையின்) முன்பக்கமெல்லாம் பிரகாசிக்கின்றன.—எ - று.

அஞ்சலி = கை கூப்புதல். (௫)

நீடு தேவர் நிலைகளும் வேண்டிடி
னூடு மைம்பெரும் பூதமு நாட்டுவ
கோடி கோடி குறட்சிறு பூதங்கள்
பாடி யாடும் பரப்பது பாங்கெலாம்.

(இ-ள்.) உயர்ந்த தேவர்களுடைய பதவிகளையும், விருப்பமுண்டானால் நினைக்கப்பட்ட ஸ்தூல பஞ்சபூதங்களையும் வேறேயுண்டாக்கத்தக்க வல்லமையுள்ளனவாகிய அனேககோடி குறள்வடிவினதாகிய சிறுபூதங்கள் பாடுவதும், ஆடுவதுமாகிய பரப்பினையுடையது (அத்திருக்கயிலாயமலையின்) பக்க இடங்களெல்லாம்.—எ-று. (௬)

நாய கன்கழல் சேவிக்க நான்முகன்
மேய காலம லாமையின் மீண்டவன்
தூய மால்வரைச் சோதியின் மூழ்கியொன்
றுய் வன்னமுங் காணு தயர்க்குமால்.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசிக்கும்படி (உள்ளே சென்ற) பிரமனானவன் (அப்போது தரிசிப்பதற்கு) அகலமாயிருந்தபடியால், திரும்பி

வந்து பரிசுத்தம்பொருந்திய பெரிய திருக்கயிலைமலையினது வெள்ளிய பிரகாசத்தில் கலந்து வேற்றுமை தோன்றாமலிருக்கின்ற (தனது) அன்னவாகனத்தையுங் காணாமல் வருந்துவான்.—எ-று. (எ)

**வேறு.**

இது வெள்ளிபாடல்.

காதில்வெண் குழையோன் கழறொழ நெடியோன்
 காலம்பார்த் திருந்தது மறியான்
சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையிற்
 றுதிக்கையோ னூர்தியைக் கண்டு
மீதெழு பண்டைச் செஞ்சுட ரின்று
 வெண்சுட ரானதென் றதன்கீ
ழாதியே னமதா யிடக்கலுற் றானென்
 றதனைவந் தணைதருங் கலுழன்.

(இ-ள்.) திருச்செவிகளில் வெள்ளிய சங்கக்குழையையத்தரித்த சிவபெருமானது திருவடிகளைவணங்குவதற்கு விஷ்ணுவானவர் சமயம்பார்த்துக்கொண்டிருப்பதை அறியாமல், (அவரது வாகனமாகிய) கருடன் பிரகாசம்பொருந்திய வெள்ளிய திருக்கயிலைமலையின் அடிவாரத்திலுள்ள குகையில் விநாயகமூர்த்தியின் வாகனமாகிய மூஷிகத்தைப் பார்த்து பூர்வத்தில் உயர்ந்தெழுந்த சிவந்த சோதியானது இப்பொழுது வெள்ளிய சோதியாய்த் தோன்றியதென்று அச்சோதியினடியில் ஆதிவராகரூபமாய்ப் பூமியைத்தோண்டிச் செல்கின்றானென்று அம்மூஷிகத்தை வந்துசேரும்.—எ-று.

பூர்வத்தில் பிரமனும்,விஷ்ணுவும் அகங்கரித்துத் தாங்களே பிரமமென்று மலைந்துநிற்க, அதை நீக்கும்பொருட்டுச் சிவபெருமான் அக்கினிமலையா யெழுந்ததைப்பற்றி "மீதெழுபண்டைச்செஞ்சுடர்" என்றார். வெண்சுடர்-கயிலையங்கிரி.

அரம்பைய ராடன் முழவுடன் மருங்கி
 னருவிக ளெதிரெதிர் முழங்க
வரம்பெறுங் காதன் மனத்துடன் றெய்வ
 மதுமல ரிருகையு மேந்தி
நிரந்தர மிடைந்த விமானசோ பான
 நீடியர் வழியினு லேறிப்
புரந்தரன் முதலாங் கடவுளர் போற்றப்
 பொலிவதத் திருமலைப் புறம்பு.

(இ-ள்.) தேவரம்பையர்கள் நிருத்தஞ்செய்யுங்காலத்து முழங்குகின்ற மத்தளவோசையுடன் (அத்திருமலையின்) பக்கங்களிலுள்ள அருவிகளினோசை எதிரெதிராக முழங்கவும், (சிவபெருமானிடத்துத் தாங்கள் விரும்பிய) வரத்தைப்பெறவேண்டுமென்னும் ஆசைபொருந்தியமனத்தோடு தெய்வத்தன்மைபொருந்திய தேனையுடைய கற்பகமலர்களை இரண்டுகைகளிலும் ஏந்திக்கொண்டு சதாகாலமும் (சனங்கள்) நெருங்கிய கோபுரவிமானங்களின் கீழுள்ளபடிகளின் சிறந்த

வழியாக ஏறிச்சென்று இந்திரன்முதலாகிய தேவர்கள் துதிக்கும்படி அத்திருக் கயிலாயமலையானது விளங்கும்.—எ - று. (கூ)

வேதநான் முகன்மால் புரந்தரன் முதலாம்
விண்ணவ ரெண்ணிலார் மற்றுங்
காதலான் மிடைந்த முதற்பெருந் தடையாங்
கதிர்மணிக் கோபுரத் துள்ளார்
பூதவே தாளப் பெருங்கண நாதர்
போற்றிடப் பொதுவினின் றாடு
நாதனு ராதி தேவனூர் கோயி
னாயக னந்தியெம் பெருமான்.

(இ-ள்.) வேதங்களையுணர்ந்த பிரமன், விஷ்ணு, இந்திரன்முதலிய தேவர்களும், மற்றைய தேவர்களும் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால், நெருங்கியுள்ள பெரிய முதற்றடையாகப்பொருந்திய ஒளிவிளங்கும் அழகிய திருக்கோபுரவாயிலின்க ணுள்ளவர். (அவர் யாரென்றால்) பெரிய பூதவேதாளமென்னுஞ் சிவகணத்தலைவர்கள் தோத்திரஞ்செய்ய திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுகின்ற தலைவரும், முதற்பெருங்கடவுளுமாகிய சிவபெருமானது திருக்கோயிலைக் காக்குந் தலைமைபூண்ட எம்பெருமானாகிய திருநந்திதேவர்.—எ-று. (க0)

நெற்றியிற் கண்ணர் நாற்பெருந் தோளர்
நீறணி மேனிய ரனேகர்
பெற்றமேற் கொண்ட தம்பிரா னடியார்
பின்னுகன் றன்னருள் பெறுவார்
மற்றவர்க் கெல்லாந் தலைமையாம் பணியு
மலர்க்கையிற் சுரிகையும் பிரம்புங்
கற்றைவார் சடையா னருளினாற் பெற்றான்
காப்பதக் கயிலைமால் வரைதான்.

(இ-ள்.) நெற்றியிற் கண்களையும், நான்கு பெரிய திருத்தோள்களையும், திருநீறுதரித்த திருமேனியையுமுடையவர்களாகிய அளவற்ற சிவசாரூப்பியம் பெற்றவர்களும், ரிஷபவாகனத்தின்மீது எழுந்தருளிய சிவபெருமானுக்கடியவர்களும், இன்னும் அக்கடவுளின் திருவருளைப் பெறுதற்குக் காத்திருப்பவர்களுமாகிய அனைவர்க்கும் முதன்மையாயிருக்கின்ற பணிவிடையும், தாமரைமலர்போன்ற திருக்கரத்தில் உடைவாளும், பிரம்பும், கூட்டமாகிய நீண்ட சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவருளினாற்பெற்றவராகிய திருநந்திதேவரால் காக்கப்படுவது அந்தப்பெருமைபொருந்திய திருக்கயிலாயமலை.—எ-று. (கக)

கையின்மான் மழுவர் கங்கைசூழ் சடையிற்
கதிரிளம் பிறைநறுங் கண்ணி
யையர்வீற் றிருக்குந் தன்மையி னாலு
மளப்பரும் பெருமையி னாலு
மெய்யொளி தழைக்குந் தூய்மையி னாலும்
வென்றிவெண் குடையந பாயன்
செய்யகோ லபயன் றிருமனத் தோங்குந்
திருக்கயி லாயநீள் சிலம்பு.

(இ-ள்.) திருக்கரத்தில் மான்மழுவைத் தரித்தவரும், கங்காநதிபொருந்திய சடையில் ஒளிவிளங்கும் இளம்பிறையையும், நல்லவாசனைவீசுகின்ற கொன்றை மலர்மாலையையும் தரித்தவருமாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் தன்மையினாலும், அளவில்லாத பெருமையினாலும், உண்மைபொருந்திய வெண்மையாகிய ஒளிவீசுகின்ற பரிசுத்தத்தினாலும், நீண்ட அத்திருக்கயிலாயமலையானது வெற்றிக்குடையினையுடைய செங்கோல் செலுத்தும் அநபாயச்சோழமகாராஜாவினது திருவுள்ளத்தைப்போல விளங்கிக்கொண்டிருக்கும்.—எ - று.

பிறைநறுங்கண்ணி என்பதற்குப் பிறையாகிய நல்லமாலை எனினும் பொருந்தும். (கஉ)

வே று.

அன்ன தன்றிருத் தாழ்வரை யின்னிடத்
தின்ன தன்மைய னென்றறி யாச்சிவன்
றன்னை யேயுணர்ந் தார்வந் தழைக்கின்றான்
உன்ன ருஞ்சீ ருபமன் னியமுனி.

(இ-ள்.) நினைப்பதற்கரிய தவச்சிறப்பினையுடைய உபமன்னியமுனிவரானவர் அப்படிப்பட்ட பெருமைபொருந்திய திருக்கயிலாயமலையின் அடிவாரத்தில் (யாவராலும்) இப்படிப்பட்ட தன்மையினனென்று அறியக்கூடாத சிவபெருமானையே தியானித்து (அதனால்) அன்பு தழையப்பெற்றிருக்கின்றார்.—எ-று.

யாத வன்றுவ ராக்கிறை யாகிய
மாத வன்முடி மேலடி வைத்தவன்
பூத நாதன் பொருவருந் தொண்டினுக்
காதி யந்தமி லாமைய டைந்தவன்.

(இ-ள்.) யதுகுலத்திற் பிறந்தவரும், துவாரகாபுரிக்கு அரசருமாகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினது முடியின்மேல் தம்முடைய திருவடியை வைத்தவர்; சிவகணங்களுக்குத்தலைவராகிய சிவபெருமானுக்குச்செய்யவேண்டிய ஒப்பற்ற திருத்தொண்டினுக்காக முதல்வராயுள்ளவர்; ஓர்காலத்தும் அழியாத நிலைமையைப் பெற்றுள்ளவர்.—எ - று.

முன்பு ஒருகாலத்தில் கிருஷ்ணமூர்த்தியானவர் யமுனையாற்றங்கரையிலிருந்து சிவதீக்ஷையில்லாமல் வைதிகமார்க்கமாகச் சிவபூசை செய்து அவ்வாற்றிலி

ட்ட மலர்களை அவ்வாருனது அடித்துக்கொண்டு வரும்போது அம்மலர்களைத் தி ரிகாலக் கியானியாகிய உபமன்னியமுனிவ ரெடுத்துச் சிவபூசைசெய்யத்தொடங் கினர். அப்பொழுது அருகிலிருந்த முனிவர்கள் அம்முனிவரைப்பார்த்து "சுவா மீ! இம்மலர்கள் கிருஷ்ணன் சிவபூசைசெய்த நின்மாலியம்" என்று சொல்ல, அதைக்கேட்ட முனிவர்பெருமான் அவர்களைப் பார்த்து "கிருஷ்ணன் சைவாகம விதிப்படி சிவதீக்ஷை பெற்றுக்கொள்ளாமல் அருச்சனைசெய்தபடியால்,அம்மலர் களுக்கு நின்மாலியதோஷ மில்லை" என்று சொல்லி அம்மலர்களைக்கொண்டு சிவ பூசைசெய்தனர். இதனைக் கேள்விப்பட்ட கிருஷ்ணமூர்த்தியானவர் நான் இந்நா ள்வரையிலுஞ் செய்த சிவபூசையானது பயன்படாமல் வியர்த்தமாயிற்றே யெ ன்று மனம்வருந்தி உடனே அவ்வுபமன்னியமுனிவரிடத்து வந்து நமஸ்கரித்து "எம்பெருமானே! அடியேன் அவநெறியிற் செல்லாமல் தவநெறியைத் தந்தருள வேண்டும்" என்றிரந்துநிற்க, அம்முனிவரர் அவரை அங்கீகரித்து,சமயம் - விசே ஷம் - நிருவாணமென்னுந் தீக்ஷைகளைச் செய்தருள, அத்தீக்ஷாவிசேஷத்தால் தமது பத்தினியாகிய சாம்பவதியினிடமாகச் சாம்பனென்னும் புத்திரனையும் பெற்று இருமைப்பேறெய்தினர். இதுமுதலைந்துபாட்டுங் குளகம். (கச)

அத்தர் தந்த வருட்பாற் கடலுண்டு
சித்த மார்ந்து தெவிட்டி வளர்ந்தவன்
பத்த ராய முனிவர்பல் லாயிரர்
சுத்த யோகிகள் சூழ விருந்துழி.

(இ-ள்.) சிவபெருமான் கிருபையோடு தந்தருளிய திருப்பாற்கடலைத் தமது பசிப்பிணிநீங்க மனமகிழ்ந்து தெவிட்டும்படி உண்டு வளர்ந்தவர். இப்படி ப்பட்ட தன்மையையுடைய அவ்வுபமன்னியமுனிவர் தமக்கு அடியவர்களாகிய அநேகமாயிர முனிவர்களும், பரிசுத்தம்பொருந்திய சிவயோகிகளும் தம்மைச் சூழும்படியாக இருந்த சமையத்தில்.—எ - று.

வியாக்கிரபாதமுனிவரர் வசிட்டமுனிவரது தங்கையாரைத் திருமணம் புரிந்து,அவரிடமாக உபமன்னியனென்னும் புத்திரரைப் பெற,அப்புத்திரரை அவ ரது நல்லம்மானுகிய வசிட்டமுனிவரும்,அவர்பத்தினியார் அருந்ததியாருங் கொ ண்டுபோய்க் காமதேனுவின் பாலூட்டி வளர்க்க, வளர்ந்துவருங்கால், ஒருநாள் தந்தையாராகிய வியாக்கிரபாதர் அவரைத் தமது பன்னசாலைக்குக்கொண்டுவந்த போது அப்புத்திரர் பசியால் வருந்திக் காமதேனுவின் பாலைக்கருதி யழுதனர். அதனைக்கண்ட வியாக்கிரபாதமுனிவர் மாவை நீரிற் கரைத்தூட்ட,அதனை யுண் ணுமல் மிகவும் வருந்துவதைக்கண்டு இனி என்ன செய்வதென்று அப்புத்திரரை க் கொண்டுபோய்ச் சிவலிங்கப்பெருமானுடைய சந்நிதானத்திற்கிடத்தி,"எம்பெ ருமானே! தேவரீரையன்றி இப்புத்திரனைக்காப்பதற்கு வேறுவழி காண்கிலேன்." என்று வருந்திநிற்க, அப்பொழுது சிவபெருமான் கருணை கூர்ந்து திருப்பாற்க டலை வரவழைத்து உண்பிக்க உண்டு வளர்ந்தருளினர் என்க. (கரு)

அங்க ணேரொளி யாயிர ஞாயிறு
பொங்கு பேரொளி போன்றுமுன் ருேன்றிட
துங்க மாதவர் சூழ்ந்திருந் தாரெலாம்
இங்கி தென்கொ லதிசய மென்றலும்,

(இ-ள்.) அவ்விடத்தில் ஒருபிரகாசமானது ஆயிரஞ் சூரியர்களுடைய மிகுந்த பிரகாசம்போல அவர்க்கெதிரே தோற்ற, (அப்பொழுது தம்மைச்) சூழ்ந்திருந்த உயர்ந்த தவத்தினையுடைய முனிவர்களும், சிவயோகிகளுமாகிய யாவரும் உபமன்னியமுனிவரைப் பார்த்து இவ்விடத்தில் தோன்றுகின்ற பிரகாசமானது என்ன ஆச்சரியமுடையதாயிருக்கின்றதென்று கேட்கவும்.—எ - று. (கசு)

அந்தி வான்மதி சூடிய வண்ணலருள்
சிந்தி யாவுணர்ந் தம்முனி தென்றிசை
வந்த நாவலர் கோன்புகழ் வன்றொண்டன்
எந்தை யாரரு ளாலணை வானென.

(இ-ள்.) (அந்தவார்த்தையைக் கேட்ட உபமன்னியமகாமுனிவரானவர்) மாலைக்காலத்தில் ஆகாயத்திற் றோன்றுகின்ற இளஞ்சந்திரனைத் தரித்த சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவடிகளைத் தியானித்தறிந்து, தென்றிசையிலே திருவவதாரஞ்செய்தருளிய திருநாவலூரரென்னுங் கீர்த்தியையுடைய வன்றொண்டப்பெருமான் எமது பரமபிதாவாகிய சிவபெருமானது திருவருளினாலே மீண்டு இத்திருக்கயிலைக்கு எழுந்தருளுகின்றாரென்று சொல்லி.—எ-று.

கைகள் கூப்பித் தொழுதெழுந் தத்திசை
மெய்யி லாநந்த வாரி விரவிட
செய்ய நீள்சடை மாமுனி செல்வுழி
ஐய நீங்க வினவுவோ ரந்தணர்.

(இ-ள்.) அந்தத்திசையை நோக்கி இரண்டு திருக்கரங்களையுங் குவித்துப் (பூமியில் விழுந்து) வணங்கி எழுந்துநின்று, தம்முடைய திருமேனியில் ஆனந்தக்கண்ணீர் பெருகும்படி,செந்நிறம்பொருந்திய நீண்ட சடையினையுடைய உபமன்னியமகாமுனிவர் போகும்பொழுது, மற்றைய முனிவர்கள் யாவரும் தங்களுக்குண்டாகிய சந்தேகநீங்கும்படியாக (அம்முனிவரை) வினவுவார்கள்.— எ-று.

சம்பு வின்னடித் தாமரைப் போதலால்
எம்பி ரானிறைஞ் சாயிஃ தென்னெனத்
தம்பி ரானைத்தன் னுள்ளந் தழீஇயவ
னம்பி யாரூ ரனுந்தொழுந் தன்மையான்.

(இ-ள்.) எம்பெருமானாகிய முனிவரே! (நீர்) பரமேஸ்வரனுடைய திருவடித்தாமரையை யல்லாமல் வேறொரு கடவுளரையும் வணங்கமாட்டீர். அப்படியிருக்க,இப்போது இச்சோதியைக் கண்டு வணங்கிய காரணம் என்னவென்று கேட்க, (அதற்கு உபமன்னியர்) சொல்லுவார். ஆத்மநாயகராகிய சிவபெருமானைத் தம்முள்ளத்திலே பொருந்தச்செய்தவராகிய நம்பியாரூரரென்னுந் திருநாமத்தையுடையவர், நாம் அனைவரும் வணங்கத்தக்க தகுதியையுடையவர்.—எ-று. (ககூ)

என்று கூற விறைஞ்சி யியம்புவார்
வென்ற பேரொளி யார்செய் விழுத்தவம்
நன்று கேட்க விரும்பு நசையினோம்
இன்றெ மக்குரை செய்தரு ளென்றலும்.

(இ-ள்.) (ஆதலால் முனிவர்களே! நாம் வணங்கியதற்குக் காரணம் இதுவாகும்) என்று சொல்ல அதைக்கேட்ட முனிவர்கள் (அவரை) நமஸ்கரித்துச் சொல்லுவார்கள். எல்லாவொளிகளுக்கு மேற்பட்ட பேரொளியினராகிய அந்நம்பியாரூரர்செய்த பெருந்தவத்தினை நன்றாகக் கேட்கவேண்டுமென்னும் ஆசையுடையவர்களா யிருக்கின்றோம். (ஆதலால்) அதனை இப்பொழுது எங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொள்ளவும்.—எ-று.

உள்ள வண்ண முனிவ னுரைசெய்வான்
வெள்ள நீர்ச்சடை மெய்ப்பொரு ளாகிய
வள்ளல் சாத்துமதுமலர் மாலையும்
அள்ளு நீறு மெடுத்தணை வானுளன்.

(இ-ள்.) உபமன்னியமகாமுனிவர் (அம்முனிவர்களுக்கு) உள்ளபடியே சொல்லுகின்றார். வெள்ளமாகப்பொருந்திய கங்கைநீரைத் தரித்த சடைமுடியினையுடைய உண்மைப்பொருளாகிய சிவபெருமான் அணிந்துகொள்ளுகின்ற தேன்பொருந்திய மலர்மாலையினையும், (தரித்துக்கொள்வதற்குத் திருவிரல்களால்) அள்ளுகின்ற திருவெண்ணீற்றினையும் எடுத்துக்கொண்டு சமீபத்திலிருப்பவர் ஒருவரிருந்தார்.—எ-று. (உக)

அன்ன வன்பெய ராலால சுந்தரன்
முன்ன மாங்கொரு நாண்முதல் வன்றனக்
கின்ன வாமெனு நாண்மலர் கொய்திடத்
துன்னி னனந் தனவனச் சூழலில்.

(இ-ள்.) அப்படிப்பட்ட தன்மையினையுடையவரது திருநாமமோவென்றால் ஆலாலசுந்தரர் (என்று சொல்லுவர்.) அவர் முற்காலத்தில் அத்திருக்கயிலாய மலையில் ஒருநாள் சிவபெருமானுக்கு இன்ன இன்ன மலர்கள் தகுந்தனவென்று சிவாகமங்களிற் சொல்லுகின்ற புதிய மலர்களைப் பறிக்கும்படியாகத் திருநந்தன வனத்திற்குச் சமீபத்தில் வந்தார்.—எ-று.

முற்காலத்தில் திருக்கயிலாயமலையிலுள்ள உத்தியானவனத்தில் சிவபெருமான் உமாதேவியாரோடு சர்வாலங்காரசம்பன்னராய் எழுந்தருளி அங்குள்ள நிலைக்கண்ணாடியைப் பார்த்தபோது அதில் தமது திருவுருவத்தின் சாயைதோற்ற, அதைச் சிவபெருமான் கண்டு, "சுந்தரா! இங்கு வரக்கடவாய்" என்று அழைத்தனர். அப்பொழுது அச்சாயை ஒருருவமாகத்திரண்டுவந்து சுந்தரர் என்னும் பெயரோடு பெருமானுக்குத் திருத்தொண்டு செய்துகொண்டிருக்குநாள்களில், பின் பொருகாலத்தில் தேவர்களும், அசுரர்களும் அமுதம் பெறவேண்டித் திருப்பாற் கடலைக் கடைந்தபொழுது, அக்கடலினின்றும் பிரதமத்தில் * ஆலாலந்தோன்ற அதைக்கண்ட திருமால்முதலிய தேவர்களெல்லாம் அதன் வேகத்தைச் சகிக்க மாட்டாதவர்களாய் வருந்திச் சிவபெருமானைச் சரணமடைந்து "எம்பெருமானே! அடியேங்கள் யாவரும் விடவேகத்தால் வருந்துகின்றோமாதலால், அவ்வருத்தத்தினின்றும் நீக்கி எங்களைக் காத்தருளவேண்டும்." என்று பிரார்த்திக்க, அத

* ஆலாலம் = விடம்.

ற்குப் பெருமான் திருவுள்ளமிரங்கி,தமது ஏவற்றொழில் செய்கின்றவராகிய அச் சுந்தரரைப் பார்த்து, "சுந்தரா ! நீ சென்று அவ்வாலாலத்தை அடக்கிக்கொண்டு வருவாயாக" என்று கட்டளையிட்டருளினர். அக்கட்டளையைப்பெற்றுச் சென்று அவ்வாலாலத்தைக் கொண்டுவந்து கொடுத்த காரணத்தினால் அந்தச்சுந்தரருக்கு ஆலாலசுந்தரர் என்று பெயர் வழங்கியது என்று மகாஸ்காந்தத்திற் கூறப்பட்டது. (உஉ)

அங்கு முன்னரோ யாளுடை நாயகி
கொங்கு சேர்குழற் காமலர் கொய்திடத்
திங்கள் வாண்முகச் சேடிய ரெய்தினர்
பொங்கு கின்ற கவினுடைப் பூவைமார்.

(இ-ள்.) அத்திருநந்தனவனத்திற்குச் சமீபத்தில், (ஆலாலசுந்தரருக்கு) முன்னமே (நம்மை) அடிமையாகவுடைய உமாதேவியாரது இயற்கையாகவே மணம் வீசுகின்ற கூந்தலுக்குத் தகுந்த மலர்களைப் பறிக்கும்படி மிகுந்த அழகினையுடைய நாகணவாய்ப்பறவையையொத்த வார்த்தையினையும், பூரணச்சந்திரனையொத்த ஒளிபொருந்திய முகத்தினையுமுடைய தோழிப்பெண்கள் வந்திருந்தார்கள்.—எ - று.

கவினுடைப் பூவைமாராகிய திங்கள்வாண்முகச் சேடியர் என்று கூட்டுக. முன்னெமையாளுடை நாயகி என்றும், முன்னமையாளுடை நாயகி என்றும் பாடம். (உ௩)

அந்த மில்சீ ரனிந்திதை யாய்குழற்
கந்த மாலைக் கமலினி யென்பவர்
கொந்து கொண்ட திருமலர் கொய்வுழி
வந்து வானவ ரீச ரருளென.

(இ-ள்.) முடிவில்லாத அழகினையுடைய அனிந்திதை என்றும், வகிர்ந்து சிக்கெடுக்கப்பட்ட கூந்தலில் வாசனை வீசுகின்ற மலர்மாலையைத் தரித்த கமலினி என்றும் சொல்லப்பட்ட இருவரும், கொத்துக்களாயுள்ள சிறந்த மலர்களைக் கொய்துகொண்டிருக்கும்பொழுது (ஆலாலசுந்தரர்) வந்து (அப்பெண்களைப் பார்த்து) தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானுடைய திருவருள் (இவ்வாறிருந்தது) என்று நினைத்து.—எ - று. (உ௪)

மாத வஞ்செய்த தென்றிசை வாழ்ந்திட
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வாரவர் மேன்மனம் போக்கிடக்
காதன் மாதருங் காட்சியிற் கண்ணினர்.

(இ-ள்.) மகத்தாகிய தவத்தைச்செய்த தென்திசையானது (அத்தவப்பேற்றால்) சிவாநந்தப் பெருவாழ்வடையவும்,குற்றமற்ற (சிவனடியார்களைத் தெரிவிக்கின்ற) திருத்தொண்டத்தொகை என்னுந் திருப்பதிகத்தை அருளிச்செய்யவும் போகின்றவராகிய ஆலாலசுந்தரர், அப்பெண்களின்மேல் மனதைச் செலு

த்த, அவ்வாலாலசுந்தரர்மேல் ஆசைகொண்ட அப்பெண்களும் தமது கண்களினால் அவரைப் பொருந்தப் பார்த்தார்கள்.—எ-று. (௨௫)

முன்ன் மாங்கவர் மொய்ம்முகை நாண்மலர்
என்னை யாட்கொண்ட வீசனுக் கேய்வன
பன்மலர் கொய்து செல்லப் பனிமலர்
அன்ன மன்னவ ருங்கொண் டகன்றபின்.

(இ-ள்.) முதலில் அந்த ஆலாலசுந்தரர் நெருங்கிய அரும்புகளோடுகூடிய புதியமலர்களில் என்னை அடிமையாகக்கொண்ட சிவபெருமானுக்குப் பொருந்துவனவாகிய (சிறந்த) பலமலர்களைப் பறித்துக்கொண்டுபோக அன்னம்போலும் நடையினையுடைய அப்பெண்களிருவரும் குளிர்ச்சிபொருந்திய மலர்களைப் பறித்தெடுத்துக்கொண்டு போனபின்பு.—எ-று.

இதுமுதல் நான்குபாட்டுங் குளகம். (௨௬)

ஆதி மூர்த்தி யவன்றிற நோக்கியே
மாதர் மேன்மனம் வைத்தனை தென்புவி
மீது தோன்றியம் மெல்லிய லாருடன்
காத லின்பங் கலந்தணை வாயென.

(இ-ள்) (எல்லாக்கடவுளருக்கும்) முதற்கடவுளாயுள்ள சிவபெருமான் (அப்பெண்களின்மேல் தமது சிந்தையைச்செலுத்திவருகின்ற) அவ்வாலாலசுந்தரரது எண்ணத்தை யறிந்து (நீ மலர்கொய்யும்படிவந்த அனிந்திதை - கமலினி என்னும்) பெண்களின்மேல் இச்சைகொண்டனை. (ஆதலால் பரதகண்டத்தின்) தென்திசையிலே பிறந்து அந்தப்பெண்களுடன் காமஇன்பத்தைக் கூடி அனுபவித்து மீண்டு இங்குவரக்கடவாயாக வென்று கட்டளையிட்டருள.—எ-று. (௨௭)

கைக ளஞ்சலி கூப்பிக் கலங்கினன்
செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையன் மானிட மாய்மயங் கும்வழி
ஐய னேதடுத் தாண்டருள் செய்யென.

(இ-ள்.) (அப்பொழுது ஆலாலசுந்தரர் தம்முடைய இரண்டு) திருக்கரங்களையும் சிரசின்மேல் அஞ்சலியாகக் குவித்து வணங்கி மனங்கலங்கினவராய், எம்பெருமானே! தேவரீரது மேன்மைபொருந்திய சிவந்த தாமரைமலர்போலுந் திருவடிகளினின்றும் நீங்குகின்ற அற்பனாகிய அடியேன் மாயாசம்பந்தமாகிய மானிடஜனனமெடுத்து, (செய்யவேண்டியது இன்னதென்றும், நீக்கவேண்டியது இன்னதென்று மறியாமல்) மயங்கும்பொழுது என்னைத் தடுத்தாட்கொண்டருளவேண்டும் என்று வேண்டிக்கொள்ள.—எ-று. (௨௮)

அங்க ணாள னதற்கருள் செய்தபி
னங்கை மாருட னம்பிமற் றத்திசை
தங்கு தோற்றத்தி லின்புற்றுச் சாருமென்
றங்க வன்செய லெல்லா மறைந்தனன்.

(இ-ள்.) அழகிய கிருபாநோக்கத்தையுடையவராகிய சிவபெருமான் அவர் வேண்டிக்கொண்டதற்குத் திருவருள்செய்தபின்பு, அனிந்திதை - கமலினி என்னும் இரண்டு பெண்களோடும் அவ்வாலாலசுந்தரர் அத்தென்திசையில் திருவவதாரஞ்செய்த மானிடப்பிறப்பில் அவர்களோடு இன்பமனுபவித்து இங்கு எழுந்தருளிவருகின்றாரென்று அவருடைய செயல்களையெல்லாம் அருளிச்செய்தார்.—எ-று.

அந்த ணாளரு மாங்கது கேட்டவர்
பந்த மானிடப் பாற்படு தென்றிசை
இந்த வான்றிசை யெட்டினு மேற்பட
வந்த புண்ணிய மியாதென மாதவன்.

(இ-ள்.) (இவ்விதமாக உபமன்னியமுனிவர் அருளிச்செய்ததை) முனிவர்கள் கேட்டு, அவ்வாலாசுந்தரர் மாயாபந்தத்தையுடைய மானிடப்பிறப்பில் திருவவதாரஞ்செய்தருளிய தென்திசையானது இந்தப் பெருமைபொருந்திய எட்டுத்திசைகளைப்பார்க்கிலும் மேற்படும்படியாக வுண்டான புண்ணியம்யாது? என்று கேட்க, (அதற்கு) உபமன்னியமுனிவர் சொல்லுகின்றார்.—எ-று. (௰)

பொருவ ருந்தவத் தான்புலிக் காலனும்
அருமு னியெந்தை யர்ச்சித்து முள்ளது
பெருமை சேர்பெரும் பற்றப் புலியூரென்
றொருமை யாளர்வைப் பாம்பதி யோங்குமால்.

(இ-ள்.) ஒப்பற்ற (பெரிய) தவத்தினையுடைய வியாக்கிரபாதரென்னும் எமது பிதாவாகிய அரியமுனிவரால் பூசிக்கப்பட்டது. (அக்காரணத்தினால்) பெருமைபொருந்திய பெரும்பற்றப்புலியூரென்று சொல்லப்பட்ட ஜீவன்முத்தர்களுக் கிருப்பிடமாகிய ஒரு திவ்வியக்ஷேத்திரமானது அத்தென்திசையில் விளங்கிக்கொண்டிருக்கும்.—எ-று.

பெரும்பற்றப்புலியூர் என்பதற்குத் தன்னைத்தரிசித்த ஆன்மாக்களுக்குத் தன்னிடத்தே பெரும்பற்றை விளைக்கும் புலியூர் என்று பொருள்கொள்க. பெரும்பற்றப்புலியூர்=சிதம்பரம். (௰௧)

அத்தி ருப்பதி யின்னமை யாளுடை
மெய்த்த வக்கொடி காண விருப்புட
னித்த னீடிய வம்பலத் தாடுமற்
றித்தி றம்பெற லாந்திசை யெத்திசை.

(இ-ள்.) அப்படிப்பட்ட பெரும்பற்றப்புலியூரென்னுந் திருப்பதியில், நம்மை அடிமையாகவுடைய மெய்ம்மைபொருந்திய தவக்கொடியாகிய சிவகாமியம்மையார் காணும்படியாக விருப்பத்தோடும் அழிவில்லாதவராகிய சிவபெருமான் நீண்ட பொன்னம்பலத்திலே திருநடனஞ்செய்தருளுவர். ஆதலால், இப்படிப்பட்ட மேன்மையைப் பெறும்படியான திசை (அந்தத் தென்திசையேயன்றி) வேறே எந்தத்திசையாகும்.—எ-று. (௰௨)

பூத மியாவையி னுள்ளலர் போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்
காதன் மங்கை யிதய கமலமா
மாதொர் பாகனு ராரூர் மலர்ந்ததால்.

(இ-ள்.) பார்வதிதேவியை ஒப்பற்ற வாமபாகத்திலே யுடையவரும், வேதங்களுக்கு மூலகாரணருமாகிய சிவபெருமான் வெளிப்படுதற்கிடமாகியும், விருப்பத்தைத் தருகின்ற பூமிதேவியின் இதயகமலமாகியும் உள்ள திருவாரூர் என்னும் திவ்வியக்ஷேத்திரமானது, அக்கடவுள் எழுந்தருளியிருக்கின்ற எல்லாச்சீவராசிகளுள்ளும் மலர்ந்த இதயகமலம்போல அத்தென்றிசையில்விளங்குகின்றது.

எம்பி ராட்டியிவ் வேழுல கீன்றவள்
தம்பி ரானைத் தனித்தவத் தாலெய்திக்
கம்பை யாற்றில் வழிபடு காஞ்சியென்
றும்பர் போற்றும் பதியு முடையது.

(இ-ள்.) இந்த ஏழுலகங்களையும் பெற்றருளிய எமது மாதாவாகிய காமாட்சியம்மையார், தமது பிராணநாயகராகிய சிவபெருமானை ஒப்பற்ற தவப்பேற்றினால் அடைந்து, கம்பாநதியின் கரையில் பூசித்த காஞ்சீபுரமென்று தேவர்கள் வணங்குகின்ற திவ்வியக்ஷேத்திரத்தையும் (அத்தென்றிசையானது) தன்னிடத்தில் உடைத்தாயிருக்கின்றது.—எ-று. (௩௪)

நங்க ளுதனு நந்தி தவஞ்செய்து
பொங்கு நீடரு ளெய்திய பொற்பது
கங்கை வேணி மலரக் கனன்மலர்
செங்கை யாளரை யாறுந் திகழ்வது.

(இ-ள்.) நமக்கெல்லாந் தலைவராகிய திருநந்திதேவர் தவத்தைச்செய்து உயர்ந்த பேரருளைப்பெற்ற சிறப்பினையுடையது; கங்காநதியானது சடையில் விளங்க, அக்கினிமயமாகிய மழுவானது விளங்குகின்ற திருக்கரத்தினையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருவையாறென்னும் திவ்வியக்ஷேத்திரமும் (அத்தென்றிசையில்) விளங்கியுள்ளது.—எ-று. (௩௫)

தேச மெல்லாம் விளக்கிய தென்றிசை
யீசர் தோணி புரத்துட னெங்கணும்
பூச னைக்குப் பொருந்து மிடம்பல
பேசி லத்திசை யொவ்வா பிறதிசை.

(இ-ள்.) எல்லாத்தேசங்களையும் தனது மகிமையினாலே விளங்கப்பண்ணின தென்றிசையில், சிவபெருமானது திருத்தோணிபுரத்துடன் அடியவர்செய்யும் பூசையின்பொருட்டு அக்கடவுள் எழுந்தருளியிருக்கும் திவ்வியக்ஷேத்திரங்கள் எவ்விடத்திலும் பலவுள்ளன; (ஆதலால்) ஆராய்ந்து சொல்லுமிடத்து மற்றைத் திசைகள் அத்தென்றிசைக்கு ஒப்பாகமாட்டா.—எ-று.

தோணிபுரம்=சீகாழி. (௩௬)

என்று மாமுனி வன்றொண்டர் செய்கையை
அன்று சொன்ன படியா லடியவர்
துன்று சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
யின்றெ னாதர வாலிங் கியம்புகேன்.

(இ-ள்.) என்று இவ்விதமாக உபமன்னியமகாமுனிவர் சுந்தரமூர்த்திசுவாமிகளின் திவ்யசரித்திரத்தை அக்காலத்தில் (முனிவர்களுக்கு) அருளிச்செய்த காரணத்தினால், அடியவர்களது நிலைபெற்ற சரித்திரமென்னும் திருத்தொண்டத்தொகையினது விரியை இப்போது எனக்குண்டாகிய ஆசையினால் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (௧௭)

மற்றி தற்குப் பதிகம்வன் றொண்டர்தாம்
புற்றி டத்தெம் புராண னருளினாற்
சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகையெனப்
பெற்ற நற்பதி கந்தொழப் பெற்றதால்.

(இ-ள்.) (அடியேன் சொல்லத்தொடங்கிய) இத்திருத்தொண்டர்புராணத்திற்குப் பதிகமானது, சுந்தரமூர்த்திசுவாமிகள் (திருவாரூரில்)புற்றிடங்கொண்டெழுந்தருளிய புராதனராகிய சிவபெருமானுடைய திருவருளினால் அருளிச்செய்த உண்மைபொருந்திய திருத்தொண்டத்தொகை என்று திருப்பெயர் பெற்ற நல்ல திருப்பதிகமாம். அது எம்மால் வணங்கப்பெற்றதாயுள்ளது.—எ-று. ()

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்த நாதனா நம்பியாண் டார்நம்பி
புந்தி யாரப் புகன்ற வகையினால்
வந்த வாறு வழாம லியம்புவாம்.

(இ-ள்.) அந்த உண்மைபொருந்திய திருத்தொண்டத்தொகை என்னுந் திருப்பதிகத்தில்(தொகுத்துச் சொல்லப்பட்ட)அடியார்களை நமது பரமாசாரியராகிய நம்பியாண்டார்நம்பியென்னும் பெரியோர் நமது புத்திக்கு அத்திருப்பதிகத்தின் பொருள் பொருந்தும்படி (பொல்லாப்பிள்ளையாரது திருவருளால்) அருளிச்செய்த (திருவந்தாதியின்) வகையைக்கொண்டு அவ்வடியவர்களின் வரலாறனைத்தையும் வழுவாமல் விரித்துச் சொல்லுவோம்.—எ-று. (௧௯)

உலக முய்யவுஞ் சைவநின் றோங்கவும்
அலகில் சீர்நம்பி யாரூரர் பாடிய
நிலவு தொண்டர்தங் கூட்ட நிறைந்துறை
குலவு தண்புன னாட்டணி கூறுவாம்.

(இ-ள்.) உலகத்திலுள்ள மானிடர்கள் (மாயாபந்தத்தினின்று நீங்கிக்) கடைத்தேறவும், சைவசமயமானது உலகத்தில் நிலைபெற்றோங்கவும் அளவில்லாத பெருஞ்சிறப்பினையுடைய சுந்தரமூர்த்திசுவாமிகளால் துதிக்கப்பெற்ற அடியார்களின் திருக்கூட்டமானது நிறைந்து வாசஞ்செய்யாநின்ற விளங்குகின்ற குளிர்ச்சிபொருந்திய சோழநாட்டினது சிறப்பைக்குறித்துச் சொல்லுவோம். ()

திருமலைச்சிறப்பு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக செய்யுள் ௫௦.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாட்டுச்சிறப்பு.

பாட்டியற் றமிழுரை பயின்ற வெல்லையுட்
கோட்டுயர் பனிவரைக் குன்றி னுச்சியிற்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையா னவில லுற்றனன்.

(இ-ள்.) பெருமைபொருந்திய இயற்றமிழ் மொழியானது வழங்குகின்ற எல்லையின்கண்ணுள்ளதும், சிகரங்களால் உயர்ந்த இமயமலையி னுச்சியில் நீண்ட புலிக்கொடியைக் கொண்டுபோய் நாட்டிய சோழராஜாக்களுக்குரியதுமாகிய காவிரிநதிசூழ்ந்த சோழநாட்டின் வளப்பத்தை யான் இங்குச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

தமிழுரை பயின்ற எல்லையாவது: வடக்கின்கண் வேங்கடமும், தெற்கின்கண் கன்னியாகுமரியும், கிழக்கு மேற்குகளில் கடலுமாகிய எல்லைகளாமென்க.

ஆதிமா தவமுனி யகத்தி யன்றரும்
பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி
மாதர்மண் மடந்தைபொன் மார்பிற் றாழ்ந்ததோர்
ஓதநீர் நித்திலத் தாம மொக்குமால்.

(இ-ள்.) முதன்மைபொருந்திய மகத்தாகிய தவத்தினையுடைய அகத்திய முனிவரால் கொண்டுவரப்பட்ட பரிசுத்தம்பொருந்திய நீரையுடைய கமண்டலத்தினின்றும் சொரிந்த காவிரிநதியானது, அழகிய பூமிதேவியினுடைய பொன்னிறம்பொருந்திய திருமார்பில் தாழ்ந்துவிளங்குகின்ற குளிர்ந்தநீரில் தோன்றிய முத்துமாலையை யொத்திருக்கும்.—எ-று.

பூர்வத்தில், விந்தமலையானது மேருமலையோடு இகல்கொண்டு ஆகாயவழியை யடைத்து நிற்க, அதைக்கண்ட சந்திரசூரியர்க ளனைவரும் அகஸ்தியமுனிவரைப் பிரார்த்தித்தனர். அப்பொழுது அகஸ்தியமுனிவர் அவ்விந்தமலையின் கர்வத்தை யடக்கி அவர்களுக்கருள்புரியத் திருவுள்ளங்கொண்டு சிவபெருமானைத் தொழுதுநிற்க, சிவபெருமான் எழுந்தருளி அவ்வகஸ்தியருக்கு விந்தமலையை யடக்கும் ஆற்றலோடு மகாகயிலாயத்திலுள்ள காவிரிநதியையுந் தருவித்துக்கொடுத்தருள, அதைத் தமது கமண்டலத்திற்பெற்றுத் தென்றிசைநோக்கிச் சென்று விந்தமலையின் வீறடக்கிப் பின் கொங்குதேசத்தில் சையமலைச்சாரலை யடைந்து அங்கு ஓரிடத்தில் அக்கமண்டலத்தை வைத்துவிட்டுச் சிவபூசைக்குப் பத்திரபுட்ப மெடுக்கும்படிச் செல்ல, தேவேந்திரனுடைய வேண்டுகோளால் கணேசமூர்த்தியானவர் காக்கையுருவங்கொண்டு அக்கமண்டலத்தைக் கவிழ்த்தனர்.



சோழநாடு.

அப்பொழுது அக்கமண்டலத்தினின்றும் அந்நீர்த்தம் நதியுருவங்கொண்டு பெருக்கெடுத்துச் சென்றதென்க.

நீரில்தோன்றும் முத்துக்களாவன :—சங்கு - இப்பி - மீன்-தாமரைமலர் என்னு மிவைகளினின்று முண்டாகு முத்துக்களாம். முத்துக்கள் இருபதிடங்களிற் பிறக்கும் ; அவை

"தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி
நந்து சஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்னார்
கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகார்
இந்து வுடும்பு கராமுத்த மீனு மிருபதுமே." என்பதனானுணர்க. (உ)

சையமால் வரைபயி றலைமை சான்றது
செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது
வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறும்
உய்யவே சுரந்தளித் தூட்டு நீரது.

(இ-ள்.) (அக்காவிரிநதியானது)பெருமைபொருந்திய சையமலையில்தோன்றிய தலைமைபொருந்தியது. செவ்விய பூமியென்னும் மகளுக்கு நல்ல செவிலித்தாயை யொத்துள்ளது. உலகத்திலுள்ள சகல சீவராசிகளையும் நாள்தோறும் வளர்த்து, அச்சீவராசிகள் பிழைக்கும்படியாக நீரைச் சுரந்தளித்து உண்பிக்கின்ற குணத்தையுடையது.—எ-று.

பூமகள் பலவளங்களோடு வளர்தற்கு இந்நதி தாய்போன்றிருத்தலின், செவிலிபோன்றதென்றார். செவிலி=வளர்த்த தாய். (ந)

மாவினுந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ்
சால்பினாற் பல்லுயிர் தருதன் மாண்பினாற்
கோலநற் குண்டிகை தாங்குங் கொள்கையாற்
போலுநான் முகனையும் பொன்னி மாநதி.

(இ-ள்.) பெரிய நீர்ச்சுழிகளையும், மலர்களையும் தன்மேல் தாங்கிவருகின்ற பெருமையினாலும், சகல சீவராசிகளையும் வளர்க்கின்ற குணத்தினாலும், அழகிய கமண்டலமானது தன்னைத் தாங்குகின்ற தன்மையினாலும், (சிலேடைவகையால்) மகாவிஷ்ணுவினது நாபிக்கமலத்தில் தோன்றிய பெருமையினாலும், சகல சீவராசிகளையும் சிருட்டிக்கின்ற குணத்தினாலும், அழகிய கமண்டலத்தைத் தாங்குகின்ற தன்மையினாலும், காவிரிநதியானது பிரமதேவனையும் ஒத்திருக்கும். ()

திங்கள்சூ டியமுடிச் சிகரத் துச்சியிற்
பொங்குவெண் டலைநுரை பொருது போதலால்
எங்கணு யகன்முடி மிசைநின் றேய்ந்திழி
கங்கையாம் பொன்னியாங் கன்னி நீத்தமே.

(இ-ள்.) அழிவில்லாத காவிரிநதியின் பிரவாகமானது, சந்திரன் தவழுகின்ற சையமலையின் கொடுமுடியினது உச்சியில் வெள்ளிய தலைபோலும் நுரைகளை மோதிக்கொண்டுபோவதனாலும் (சிலேடைவகையால்) இளம்பிறையைத்

தரித்த சிவபெருமானது திருமுடியினது உச்சியினின்றும் பொலிவினையுடைய நருவெண்டலையில் நுரைகளை வீசிக்கொண்டுபோவதினாலும், நமது தலைவராகிய சிவபெருமானது திருமுடியினின்றும் (பகீரதசக்கரவர்த்தியின்பொருட்டு) உலகத்தில்வந்திரங்கிய கங்காநதிக்குச் சமானமாகும்.—எ-று. (ரு)

வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்
எண்ணில்பே ரறங்களும் வளர்க்கு மீகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையி னொழுக்கம் போன்றது.

(இ-ள்.) (அக்காவிரிநதியானது) அழகிய நீண்ட சையமலை உதிப்பிக்கவந்த மேன்மையினாலும், அளவில்லாத பெரிய தருமங்களை விருத்திசெய்கின்ற ஈகையினாலும், (சிலேடைவகையால்) அழகிய நீண்ட பர்வதராஜன் புத்திரியாகப்பெற வந்த மேன்மையினாலும், அளவற்ற பெரிய தருமங்களை வளர்க்கின்ற தன்மையினாலும், சிவபெருமானது இடப்பாகத்தைத் தமக்கிடமாகவுடைய உமாதேவியாரையும், அவரது திருவுள்ளத்திற்கனிந்த கிருபைத்தன்மையையும் ஒத்துள்ளது.

வேறு.

வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை யெண்ணில் சிவாலயத்
தெம்பி ரானை யிறைஞ்சலி னீர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க் கன்பரு மொக்குமால்.

(இ-ள்.) வாசனைபொருந்தியமலர்களினாலும், நீரினாலும் வழிபட்டுச் சிவந்த பொற்பொடிகள்பொருந்திய நீண்ட இருகரையிலுமுள்ள அளவற்ற சிவாலயங்களில் (எழுந்தருளியிருக்கும்) எமது பெருமானாகிய பரமசிவனை வணங்குவதனால், குளிர்ச்சிபொருந்திய காவிரிநதியானது, தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானது அடியார்களையும் ஒத்திருக்கும்.—எ-று.

சிலேடைவகையால் அடியார்கள் பட்சத்திலும் செம்பொருளே கொள்க.

வாச நீர்குடை மங்கையர் கொங்கையிற்
பூசு குங்கும மும்புனை சாந்தமும்
வீசு தெண்டிரை மீதழித் தோடுநீர்
தேசு டைத்தெளி னுந்தெளி வில்லதே.

(இ-ள்.) வாசனைபொருந்திய நீரில் ஸ்நானஞ்செய்கின்ற பெண்கள் தங்களுடைய ஸ்தனங்களில் பூசிய குங்குமக்குழம்பையும், அணிந்த சந்தனக்குழம்பையும், வீசுகின்ற தெளிந்த அலைகளினால் தன்னிடத்திற் கரைத்துக்கொண்டு ஓடுகின்ற அக்காவிரிநதியானது மிகுந்த பிரகாசமுடையதாயிருந்தாலும் கலங்கலாயிருக்கின்றது.—எ-று. (அ)

மாவி ரைத்தெழுந் தார்ப்ப வரைதரு
பூவி ரித்த புதுமதுப் பொங்கிட
வாவி யிற்பொலி நாடு வளந்தரக்
காவி ரிப்புனல் கால்பரந் தோங்குமால்.

(இ-ள்.) வண்டுகள் ஆரவாரித்தெழுந்து கானஞ்செய்யவும், மலைகளிலிரு ந்து வருகின்ற மலர்கள் மலர்தலினாலுண்டாகிய தேன்கள் அதிகரிக்கவும், தடா கங்களினால் பிரகாசிக்கின்ற சோழநாடானது பலவளங்களைக்கொடுக்கவும் காவி ரியாற்றின் நீரானது அநேகங்கால்வழிகளாகப் பிரிக்கப்பட்டு விளங்கும்.—எ-று.

ஒண்டு றைத்தலை மாமத கூடுபோய்
மண்டு நீர்வய லுட்புக வந்தெதிர்
கொண்ட மள்ளர் குரைத்தகை யோசைபோய்
அண்டர் வானத்தி னப்புறஞ் சாருமால்.

(இ-ள்.) மிகுந்த நீரானது (உயர்ந்து) விளங்குகின்ற கரையின்கணுள்ள பெரிய மதகின்வழியாகப்போய் வயல்களிற் பாய்வதினால், அக்கரையில்வந்து (அந் நீரைக் கால்வழியாகக்கொண்டுபோக) எதிர்வந்த உழவர்கள் (சந்தோஷத்தினால்) கைகொட்டுதலாலுண்டாகிய ஓசையானது தேவர்கள் வாழுகின்ற விண்ணுலகத் திற்கு அப்புறத்திலும்போய்ச்சேரும்.—எ-று. (கo)

மாதர் நாறு பறிப்பவர் மாட்சியுஞ்
சீத நீர்முடி சேர்ப்பவர் செய்கையும்
ஓதை யார்செய் யுழுந ரொழுக்கமுங்
காதல் செய்வதோர் காட்சி மலிந்தவே.

(இ-ள்.) அழகுபொருந்திய நாற்றைப் பறிக்கின்றவர்களுடைய சிறப்பும் குளிர்ச்சிபொருந்திய நீரினிடத்தில் அந்த நாற்றைமுடிகளாகக்கட்டிச் சேர்க்கின் றவர்களுடைய செயலும், முழக்கத்தினையுடைய வயல்களையுழுகின்ற மள்ளர்களி ன்வரிசையும் (பார்ப்பவர்களுக்கு) விருப்பத்தைத் தரத்தக்கதாகிய காட்சியினால் பிரகாசித்தன.—எ-று.

வயல்களுக்கு ஓசையாவது நீர் பாய்வதினாலும், சங்குமுதலியவைகள் சூலு ளைந் தலறுவதினாலும் உண்டாகும் ஓசைகள் எனக்கொள்க. (கக)

உழுத சான்மிக வூறித் தெளிந்தசே
றிழுது செய்யினு ளிந்திரத் தெய்வதந்
தொழுது நாறு நடுவார் தொகுதியே
பழுதில் காவிரி நாட்டின் பரப்பெலாம்.

(இ-ள்.) உழவர்களால் உழப்பட்ட படைச்சால்களில் மிகவும் ஊறித்தெ ளிந்த சேறானது குழம்பாயிருக்கின்ற வயல்களில் தேவேந்திரனாகிய தெய்வத் தை வணங்கி நாற்றைநடுகின்ற கடைசியர்களின் கூட்டமே, குற்றமற்ற காவிரி நதிசூழ்ந்த சோழநாட்டினது பரந்த இடங்களிலெல்லாம் மிகுதியாயிருக்கும்.

தேவேந்திரன் மருதநிலக்கடவுளாதலின், "இந்திரத்தெய்வம்தொழுது" என்றார். இதனை

"காடாகு முல்லை கழியாகு நெய்தல்கல் லாங்குறிஞ்சி
நாடா மருத நடலைவெம் பாலையிந் நாட்டுத்தெய்வங்
கோடார் கரன்வரு ணன்குக னிந்திரன் கூறுதுர்க்கை
மாடாயர் மீன்புல்லர் குன்றவர் கானவர் மள்ளருமே." என்பதனானுணர்க.

வேறு.

மண்டுபுனல் பரந்தவயல் வளர்முதலின் சுருள்விரியக்
கண்டுழவர் பதங்காட்டக் களைகளையுங் கடைசியர்கள்
தண்டரளஞ் சொரிபணில மிடறியிடை தளர்ந்தசைவார்
வண்டலையுங் குழலலைய மடநடையின் வரம்பணைவார்.

(இ-ள்.) மிகுந்த நீர்பரந்த வயல்களில் வளர்கின்ற நெற்பயிர்களின் சுருள்கள் விரிந்து தழைக்கின்ற பருவத்தைக்கண்டு பள்ளர்கள் களைகடியும் பருவம் இதுதானென்று காட்டும்பொழுது, அப்பயிர்களிலுள்ள களைகளைப் பறிக்கின்ற பள்ளஸ்திரீகள் குளிர்ந்தமுத்துகளைச் சிந்துகின்ற சங்குகள்காலில் இடறி (அதனால்) இடைதளர்ந்து வருந்தினவர்களாய்ப் (பின்அவர்கள்) வண்டுகள் (தேனுண்ணும் விருப்பத்தினால்) மொய்க்கின்ற கூந்தல் அவிழ்ந்தலையும்படி மிருதுவான நடையினாலே வரம்பினிடத்திற்போய்ச் சேருவார்கள்.—எ–று. (௧௩)

செங்குவளை பறித்தணிவார் கருங்குழன்மேற் சிறைவண்டை
யங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும் வரவழைப்பார்
திங்கணுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவ றளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார்.

(இ-ள்.) (பள்ளஸ்திரீகளில் சிலர்) கருமைநிறம்பொருந்திய கூந்தலில் செங்குவளை மலர்களைப்பறித்துத் தரித்துக்கொள்ளுவார்கள். (சிலர் அக்கூந்தலின்மேல் விழுகின்ற) சிறகினையுடைய வண்டுகளைத் (தமது) அழகியகையாகிய தாமரைமலர்களைக்கொண்டு ஓட்டி அயலிலுள்ள வண்டுகளையும் வரும்படி அழைப்பார்கள். (சிலர்) மூன்றாம்பிறையையொத்த தமது நெற்றியில் வெயர்வையுண்டாகவும், புன்னகையாகிய முல்லையரும்புகள் மலரவும், ஒளிவிளங்குகின்ற தாமரைமலரிலுள்ள புதியதேனைக்குடித்து (அதனால்) மயங்குவார்கள்.—எ-று. (௧௪)

கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்
அரும்பல்ல முலையென்ன வமுதல்ல மொழியென்ன
வரும்பல்லா யிரங்கடைசி மடந்தையர்கள் வயலெல்லாம்.

(இ-ள்.) பகற்காலமுழுவதும் (வேளாண்மையின் வளப்பத்தைப் பார்க்கவரும் அன்னியர்களுக்கு, இவைகள்) கரும்பு அல்ல நெற்பயிர்கள் என்று சொல்லவும், (இவைகள்) கமுகமரமல்ல கரும்பென்று சொல்லவும், (இவைகள்)வண்டுகளல்ல (அவ்வண்டுகள்) அகவிதழைக் குடைதலாலுண்டாகிய நீலோற்பலமலரின் கரியதுகளென்று சொல்லவும், (இவைகள்) அரும்புகளல்ல முலை யென்று சொல்லவும் (இவைகள்) அமுதமல்ல வார்த்தையென்று சொல்லவும் வருகின்ற அநேகமாயிரம் பள்ளஸ்திரீகள் வயல்களிலெல்லாம் நிறைந்திருக்கின்றார்கள்.

"சுரும்பல்லி குடைநீலத்துகளல்ல" என்பதை சுரும்பல்ல அல்லிகுடைநீலத்துகள் என்று கூட்டுக. களைகளைதலால் நெல்லென்பதும், பிடுங்கி ஆலையில் சேர்த்தலால் கரும்பென்பதும், பிடுங்கிக் கரையிலெறிதலால் துகளுதிர்தலின் அல்லிகுடை நீலத்துகளென்பதும், களைகளைகின்றவர்தமக்கு உறுப்பாய் நிற்ற

லால் முலையென்பதும், தமது வாயிலிருந்து பிறத்தலால் மொழியென்பதும், காண்பவர்களுக்குத் தோன்ற அப்பெண்கள் வருதலின் இவ்வாறு கூறினர். (கரு)

கயல்வாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி யுலைப்பெய்தங்
கயலாமை யடுப்பேற்றி யரக்காம்ப னெருப்பூதும்
வயன்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்பெல்லாம்.

(இ-ள்.) கெண்டைமீன்கள் பாய்ந்து விளையாடுகின்ற குளிர்ந்த நீரையுடைய தடாகத்தில் தோன்றிய ஊன்கழிந்த சங்குகளை பெரிய கருமைபொருந்திய பானையாக வைத்து, அகன்ற வாயையுடைய வெண்மையாகிய சங்குகளீன்ற முத்துக்களாகிய அரிசியை (அந்தப்பானையில் வார்க்கும்) பூந்தேனாகிய உலையிற்போட்டு, அயலிலிருக்கின்ற ஆமையோடாகிய அடுப்பின்மேலேற்றிச், செவ்வாம்பல் மலராகிய நெருப்பை (அவ்வடுப்பில்வைத்து) ஊதுகின்ற பள்ளஸ்திரீகளின் சிறுபெண்களினுடைய விளையாட்டானது வயலின் வரம்பிடங்களெல்லாம் இருக்கும். எ-று. (கசு)

காடெல்லாங் கழைக்கரும்பு காவெல்லாங் குழைக்கரும்பு
மாடெல்லாங் கருங்குவளை வயலெல்லா நெருங்குவளை
கோடெல்லா மடவன்னங் குளமெல்லாங் கடலன்ன
நாடெல்லா நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம்.

(இ-ள்.) (அம்மருதநிலத்திலுள்ள) காடுகளெல்லாம் கழையாகிய கரும்புகளும், சோலைகளெல்லாம் குழையோடு கூடிய அரும்புகளும், வயலின் பக்கங்களெல்லாம் நீலோற்பல மலர்களும், வயலிடங்களெல்லாம் நெருங்கிய சங்குகளும், தடாகக் கரைகளெல்லாம் இளமைபொருந்திய அன்னங்களுமுள்ளன. தடாகங்களெல்லாம் சமுத்திரத்தைப்போல விசாலித்து ஆழமாகவுள்ளன. (ஆதலால்) எல்லா நலங்களினும், மற்ற நாடுகளெல்லாம் நீர்வளம்பொருந்திய சோழநாட்டுக்கு ஒப்பாகா.—எ-று.

கழைக்கரும்பு இருபெயரொட்டு. குழைக்கரும்பு-உருபுமயக்கம். அன்றி, கூந்தலுக்குமுடிக்கத்தகுந்த அரும்பு என்பதுமொன்று. (கஎ)

வேறு.

ஆலை பாய்பவ ரார்ப்புறு மோலமும்
சோலை வாய்வண் டிரைத்தெழு சும்மையும்
ஞால மோங்கிய நான்மறை யோதையும்
வேலை யோசையின் மிக்கு விரவுமால்.

(இ-ள்.) ஆலைகளில் கரும்புகளைப் பாய்ச்சுகின்றவர்கள் ஆரவாரஞ்செய்யுமோசையும்; சோலைகளில் (தேனுண்ணுதற்கு வந்து) பொருந்திய வண்டுகள் இரைத்தெழுகின்ற ஓசையும், உலகத்தில் உயர்ந்த நான்கு வேதங்களினுடைய அத்தியயன வோசையும் (ஆகிய இவ்வோசைகள்) சமுத்திர வோசையைப் பார்க்கிலும் அதிகப்பட்டு முழங்கும்.—எ-று. (கஅ)

அன்ன மாடு மகன்றுறைப் பொய்கையிற்
றுன்னு மேதி படியத் துதைந்தெழு
கன்னி வாளை கமுகின்மேற் பாய்வன
மன்னும் வான்மிசை வானவிற் போலுமால்.

(இ-ள்.) அன்னப்பட்சிகள் கூடி விளையாடுகின்ற விசாலமாகிய கரையினையுடைய தடாகங்களில், அங்குள்ள எருமைக்கடாக்கள் விழுந்து முழுகுதலால், (அத்தடாகங்களிலிருந்து) நெருங்கி மேலெழும்புகின்ற இளமைபொருந்திய வாளைமீன்கள் கமுகமரத்தின்மேல் பாயுந் தோற்றமானது (எவ்வாறிருக்குமென்றால்) ஆகாயத்தில் பொருந்திய இந்திரவில்லை யொத்திருக்கும்.—எ - று.

பாய்வன வென்பது அஃறிணைப்பன்மைவினைமுற்றுத்தொழிற்பெயர். பாய்வனவாகிய வாளை எனக்கூறினும் பொருந்தும். (கசூ)

காவி னிற்பயி லுங்களி வண்டினம்
வாவி யிற்படிந் துண்ணு மலர்மது
மேவி யத்தட மீதெழப் பாய்கயல்
தாவி யப்பொழி லின்கனி சாடுமால்.

(இ-ள்.) சோலைகளிற் சஞ்சரிக்கின்ற மதுமயக்கத்தினையுடைய வண்டின் கூட்டங்கள் தடாகங்களிலுள்ள மலர்களில் விழுந்து அம்மலர்களிலுள்ள தேனை யுண்ணும். அத்தடாகங்களில் பொருந்தி மேலெழுந்து பாய்கின்ற கெண்டைமீன்களானவை (அவ்வண்டுகள் தன்னுடைய வாசஸ்தலத்தையடைந்து மதுவை யுண்டனவென்னும் கோபத்தினால் அவைகள் வாசஞ்செய்கின்ற) அச்சோலைகளிலுள்ள பழங்களையெல்லாந் தாவிச்சிதறும்.—எ-று. (உ0)

வேறு.

சாலிநீள் வயலி னோங்கித் தன்னிக ரின்றி மிக்கு
வாலிதாம் வெண்மை யுண்மைக் கருவினும் வளத்த வாகிச்
சூன்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்
ஆலின சிந்தை போல வலர்ந்தன கதிர்க ளெல்லாம்.

(இ-ள்.) நெற்பயிர்கள் நீண்ட வயலினிடத்தில் ஓங்கிவளர்ந்து, (யாதொன்றுந்) தனக்குச் சமானமில்லாமல் உயர்ந்து, பரிசுத்தம் பொருந்திய வெண்ணிறத்தைத் தன்னுள்ளேயுள்ள கருவினாலாகின்ற வளப்பத்தை யுடையனவாகி, அக்கரு முதிர்தலாகிய பசலைநிறத்தையடைந்து, பின்பு கதிர்ச்சுருளை விரித்து, சிவபெருமானிடத்தில் அன்புசெலுத்துகின்ற அடியார்களின் விசாலமாகிய திருவுள்ளம்போலக் கதிர்களை மலர்ந்தன.—எ-று. (உக)

பத்தியின் பால ராகிப் பரமனுக் காளா மன்பர்
தத்தமிற் கூடி னார்க டலையினால் வணங்கு மாபோன்
மொய்த்தநீள் பத்தி யின்பான் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம்.

(இ-ள்.) பத்தியின்வழிப்பட்டவர்களாகிச் சிவபெருமானுக்கு அடிமைபூண்டொழுகுகின்ற அன்பர் தங்களுக்குத் தாங்களே கூடினவர்களாகி ஒருவர்க்

கொருவர் தலையைத் தாழ்த்தி வணங்குவதுபோல, நெருங்கி நீண்ட வரிசையினையுடையனவாகிப் பால் முதிர்ந்த கதிராகிய தலைகளைத் தாழ்த்தி, மேற்சொல்லிய அடியார்களின் சிவானுபவத் தன்மையைப்போல நெற்பயிர்களெல்லாம் விளைந்தன.—எ-று. (உஉ)

அரிதரு செந்நெற் சூட்டி னடுக்கிய வடுக்கல் சேர்ப்பார்
பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்றுசெய்வார்
சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு யர்ப்பார்
விரிமலர்க் கற்றை வேரி பொழிந்திழி வெற்பு வைப்பார்.

(இ-ள்.) (மள்ளர்களில் சிலர்) அரிவாளினால் அரியப்பட்ட செந்நெல்லரிகளால் ஒன்றின்மேலொன்றாக அடுக்கப்பட்ட சுமைகளை மலைபோலக் குவிப்பார்கள். (சிலர்) ஆசையோடு பிடித்த பலவகைப்பட்ட மீன்களையும் படர்ந்த பெரிய மலைபோலக் குவிப்பார்கள். (சிலர்) சுரிந்த சங்குகளீன்ற முத்துக்களை ஒளிபொருந்திய பெரியமலைகளைப்போல உயர்த்துவார்கள். (சிலர்) வாசனை வீசுகின்ற மலர்க்கூட்டங்களைத் தேனாகிய அருவிபொழிந்தோடுகின்ற மலைபோலக் குவிப்பார்கள்.—எ-று.

சுரி=சுழற்சி. அது சங்கினது உட்புறத்தில் மூன்றுவரையாகச் சுழிந்திருப்பது. (உ௩)

சாலியின் கற்றை துற்ற தடவரை முகடு சாய்த்துக்
காலிரும் பகடு போக்குங் கரும்பெரும் பாண்டி லீட்டம்
ஆலிய முகிலின் கூட்ட மருவரைச் சிமயச் சாரல்
மேல்வலங் கொண்டு சூழுங் காட்சியின் மிக்கவன்றே.

(இ-ள்.) நெல்லரியின் கற்றைகள்பொருந்திய (நெற்போராகிய) பெரிய மலையினது உச்சியைச் சரித்து (அப்போரை மிதிக்கும்படி) வலியகால்களையுடைய பெரிய எருமைக்கடாக்களோடுசேர்த்து நடத்துகின்ற கருமைபொருந்திய எருதுகளின் கூட்டங்கள், அசைகின்ற மேகக்கூட்டமானது அளவிடுதற்கரிய மலையினது உச்சியின்மேல் வலமாகச் சூழ்ந்துவருகின்ற காட்சியிலும் மிகுதியாயிருந்தது.

"ஆலியமுகில்" என்பதற்கு ஆலங்கட்டிகளையுடைய மேகம் எனினும் பொருந்தும். (உச)

வைதெரிந் தகற்றி யாற்றி மழைபெயன் மானத் தூற்றிச்
செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்பு மென்னக்
கைவினை மள்ளர் வானங் கரக்கவாக் கியநெற் குன்றான்
மொய்வரை யுலகம் போலு முளரிநீர் மருத வைப்பு.

(இ-ள்.) கைத்தொழிலில் வல்லவர்களாகிய உழவர்கள் (நெற்போர் மிதித்தவுடனே) வைக்கோல்களை ஆராய்ந்து நீக்கி, (அந்நெல்லிலுள்ள பதர்கள் நீங்கும்படி) மழைத்துளிகள் துளிப்பதுபோலத் தூற்றுதல்செய்து, சிவந்த பொன்மலையும் அதற்கு வேறாகிய நவரத்தினங்களாலாகிய மலைகளும்போல விண்ணுலகம் மறையும்படி உயர்த்திய நெல்மலைகளினால் தாமரை மலர்களையுடைய நீர்வ

ளம்பொருந்திய மருதநிலமானது நெருங்கிய மலைகளையுடைய குறிஞ்சி நிலத்தை யொத்திருக்கும்.—எ-று.

"செய்யபொற்குன்றும்வேறுநவமணிச்சிலம்பும்" என்றது செந்நெல்லி னது குவியலையும், வெண்ணெல் கருநெல்முதலிய பல நெற்களின் குவியலை யுங் கூறியபடியாம். (உரு)

அரசுகொள் கடன்க ளாற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிக ளோங்கி
வரைபுரை மாட நீடி மலர்ந்துள பதிக ளெங்கும்.

(இ-ள்.) (அப்படித்தொகுத்த நெற்களுள்) அரசன் பெறவேண்டிய ஆறி லொருபாகத்தை அவனுக்குச் செலுத்தி, மிகுந்த ஐந்துபங்கையும் தாங்களெடுத் துக்கொண்டு தருமங்களை விரும்பிச்செய்து, வணங்கத்தக்க தெய்வங்களைப் பூசி த்து, பெரியோர்களையும் - விருந்தினரையும், அன்போடு வந்துசேர்ந்த உறவின ரையும் பாதுகாத்து (அதனால் புகழ்பெற்று) விளங்குகின்ற குடிகள் அதிகரித்து, அவர்கள் வாசஞ்செய்வதற்கமைந்த மலைபோன்ற மாளிகைகள் உயர்ந்து விளங்கி யுள்ளன அச்சோழநாடெங்கும்.—எ-று. (உசு)

கரும்படு களம ராலைக் கமழ்நறும் புகையோ மாதர்
சுரும்பெழ வகிலா விட்ட தூபமோ யூப வேள்விப்
பெரும்பெயர்ச் சாலை தோறும் பிறங்கிய புகையோ வானின்
வருங்கரு முகிலோ சூழ்வ மாடமுங் காவு மெங்கும்.

(இ-ள்.) கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகின்ற மள்ளர்களினது ஆலையிருக்கு மிடத்திலிருந்து தோன்றிய மணம்பொருந்திய நல்லபுகையோ! பெண்கள் வண் டெழும்படி அகிற்கட்டைகளால் தங்கள் கூந்தலுக்கு ஊட்டிய புகையோ! யூப ஸ்தம்பங்களை நிறுத்திச் செய்கின்ற பெரிய யாகசாலைகளிலிருந்து வெளிப்பட்டு விளங்குகின்ற புகையோ! ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற கறுத்தமேகமோ! மாளி கைகளிலுஞ் சோலைகளிலுஞ் சூழ்ந்துகொண்டிருக்கின்றன. (ஈது இன்னதென்று வேறுபாடறியக் கூடவில்லை.)—எ-று. (உஎ)

நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்த மெங்குங்
கோளிசா லந்த மாலங் குளிர்மலர்க் குரவ மெங்குந்
தாளிரும் போந்து சந்து தண்மலர் நாகமெங்கு
நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்க மெங்கும்.

(இ-ள்.) (அச்சோழநாட்டின்) எவ்விடங்களிலுந் தென்னமரங்களும், செ ருந்திமரங்களும், நல்லமலர்கள் பொருந்திய நாரத்த மரங்களும், பூவாதுகாய்க்கு மரங்களும், பச்சிலை மரங்களும், குளிர்ந்த மலர்களையுடைய குராமரங்களும், அடி பருத்து உயர்ந்த பனைமரங்களும், சந்தனமரங்களும், குளிர்ச்சிபொருந்திய மலர் களையுடைய குங்குமமரங்களும், நீண்ட இலைகளமைந்த வஞ்சிமரங்களும், காஞ் சிமரங்களும், நிறைந்தமலர்கள் பொருந்திய கோங்கமரங்களும் இருக்கின்றன.

சூதபா டலங்க ளெங்குஞ் சூழ்வழை ஞாழ லெங்குஞ்
சாதிமா லதிக ளெங்குந் தண்டளிர் நறவ மெங்கும்
மாதவி சரள மெங்கும் வகுளசண் பகங்க ளெங்கும்
போதவிழ் கைதை யெங்கும் பூகபுன் னாக மெங்கும்.

(இ-ள்.) எவ்விடங்களிலும் மாமரங்களும், பாதிரிமரங்களும், சூழ்ந்திருக்கின்ற சுரபுன்னை மரங்களும், ஞாழல்களும், சிறுசண்பகங்களும், மல்லிகைகளும், குளிர்ச்சிபொருந்திய துளிர்களையுடைய அனிச்சமரங்களும், குருக்கத்திக்கொடிகளும், சரளமரங்களும், மகிழமரங்களும், சண்பகமரங்களும், புஷ்பங்கள் விரிந்த தாழைமரங்களும், கமுகமரங்களும், புன்னைமரங்களும் இருக்கின்றன.—எ-று. ()

மங்கல வினைக ளெங்கு மணஞ்செய்கம் பலைக ளெங்கும்
பங்கய வதன மெங்கும் பண்களின் மழலை யெங்கும்
பொங்கொளிக் கலன்க ளெங்கும் புதுமலர்ப் பந்த ரெங்குஞ்
செங்கயற் பழன மெங்குந் திருமக ளுறையு ளெங்கும்.

(இ-ள்.) எவ்விடங்களிலும் மங்கலத்தொழில்களும், கலியாணஞ் செய்வதனாலுண்டாகின்ற வாத்தியங்களி னோசைகளும், (பெண்களினுடைய) தாமரைமலர்போன்ற முகங்களும், அப்பெண்களினுடைய பண்ணோடு இசைந்த மழலைச்சொற்களும், ஒளிவீசுகின்ற ஆபரணங்களும், புதியமலர்களால் அலங்கரிக்கப்பட்ட பந்தல்களும், சிவந்த கெண்டைமீன்கள்பொருந்திய வயல்களும், இலக்குமி வாசஞ்செய்யத் தக்க இடங்களும் இருக்கின்றன.—எ-று.

மங்கலவினைகளாவன :—யாகத்தின் ஆரம்பத்திலும், விவாக ஆரம்பத்திலும் செய்யும் சடங்குகளாம். அவை முளைப்பாலிகைவைத்தல் முதலியன. (௬௦)

மேகமுங் களிறு மெங்கும் வேதமுங் கிடையு மெங்கும்
யாகமுஞ் சடங்கு மெங்கு மின்பமு மகிழ்வு மெங்கும்
யோகமுந் தவமு மெங்கு மூசலு மறுகு மெங்கும்
போகமும் பொலிவு மெங்கும் புண்ணிய முனிவ ரெங்கும்.

(இ-ள்.) எவ்விடங்களிலும் மேகக்கூட்டங்களும், யானைகளும், வேதவொலியும், அவ்வேதத்தை அத்தியயனம்பண்ணுகின்றவர்களின் கூட்டங்களும், வேள்விகளும், அவ்வேள்விக் கங்கங்களாயுள்ள சடங்குகளும், இன்பமும், அவ்வின்பத்தா லுண்டாகிய சந்தோஷமும், அஷ்டாங்கமுதலிய யோகஞ்செய்தலும், விரதமுதலிய தவஞ்செய்தலும், ஊஞ்சலாடுதலும், அவைகளையுடைய வீதிகளும், பலவகையாகிய இன்பங்களை யனுபவித்தலும், அதனாலுண்டாகிய பொலிவும் இருக்கின்றன. புண்ணியசொரூபராகிய முனிவர்களுமிருக்கின்றார்கள்.—எ-று.

பண்டரு விபஞ்சி யெங்கும் பாதசெம் பஞ்சி யெங்கும்
வண்டறை குழல்க ளெங்கும் வளரிசைக் குழல்க ளெங்குந்
தொண்டர்த மிருக்கை யெங்குஞ் சொல்லுவ திருக்கை யெங்குந்
தண்டலை பலவு மெங்குந் தாதகி பலவு மெங்கும்.

(இ-ள்.) எவ்விடங்களினும் (பலவகையாகிய) பண்களைப் பாடுதற்குரிய வீணைகளும், (பெண்களினது) கால்களில் ஊட்டிய செம்பஞ்சுக்குழம்பின் குறிகளும், வண்டுகள்முழங்குகின்ற அப்பெண்களினது கூந்தல்களும், இசைகள்பொருந்திய புள்ளாங்குழல்களும், சிவனடியார்களின் திருமடங்களும், வேதங்களை அத்தியயனம் பண்ணுவதும், பலசோலைகளும், ஆத்திமரமும், பலாமரமும் இருக்கின்றன.—எ-று. (௬௨)

மாடுபோ தகங்க ளெங்கும் வண்டுபோ தகங்க ளெங்கும்
பாடுமம் மனைக ளெங்கும் பயிலுமம் மனைக ளெங்கு
நீடுகே தனங்க ளெங்கு நிதிநிகே தனங்க ளெங்குந்
தோடுசூழ் மாலையெங்குந் துணைவர்சூழ் மாலை யெங்கும்.

(இ-ள்.) எவ்விடத்திலும் பக்கங்களில் யானைக்கன்றுகளும், வண்டுகள் பொருந்திய மலரிடங்களும், பாடகர்பாடுகின்ற அழகிய வீடுகளும், சிறுபெண்கள் விளையாடுகின்ற அம்மனைக்காய்களும், (மேல்வீடுகளில் கட்டப்பட்டு) உயர்ந்திருக்கின்ற கொடியாடைகளும், பொக்கிஷசாலைகளும், இதழ்களோடு பொருந்திய மலர் மாலைகளும், புருஷர்கள் சூழ்ந்துவருகின்ற வரிசைகளும் இருக்கின்றன. ()

வீதிகள் விழவி னார்ப்பும் விரும்பினர் விருந்தி னார்ப்புஞ்
சாதிக ளெறியிற் றப்பா தயரு மனையிற் றப்பா
நீதிய புள்ளு மாவு நிலத்திருப் புள்ளு மாவு
மோதிய வெழுத்தா மஞ்சு முறுபிணி வரத்தா மஞ்சும்.

(இ-ள்.) திருவீதிகளிலெல்லாம் திருவிழாவினு லுண்டாகிய ஆரவாரமும், தம்மை விரும்பிவந்த அதிதிகளுக்கு விருந்திடுவதினு லுண்டாகிய ஆரவாரமும், இருக்கின்றன. அந்தணர் முதலிய நான்கு சாதியார்களும் தங்கள் தங்களுக்கு விதித்திருக்கின்ற ஒழுக்கத்தினின்றுந் தவறாதிருப்பார்கள். சிறுவர்களும், அவ்வவ் வீடுகளில் தப்பாதிருப்பார்கள், பறவைகளும், மிருகங்களும் ஒன்றற்கொன்று விரோதமில்லாமல் உறவாயிருக்கும். இலட்சுமியும் அச்சோழநாட்டில் வாசஞ்செய்வதற்கு விரும்புவாள். அந்நாட்டிலுள்ளவர்களால் ஓதப்படுவன ஸ்ரீபஞ்சாக்ஷரங்களேயாம். (அதனால்) பொருந்திய பிணிகள் அவர்களை நெருங்குவதற்குப் பயப்படும்.—எ-று.

"நிலத்திருப்புள்ளுமாவும்" என்பதற்கு காமதேனுவும் அந்நாட்டில் வாசஞ்செய்ய விரும்பும் என்று பொருள்கூறுவாரு முண்டு. (௬௪)

நற்றமிழ் வரைப்பி னோங்கு நாம்புகழ் திருநா டென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்குங்
கொற்றவ னநபா யன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ.

(இ-ள்.) செந்தமிழ் மொழி வழங்கும் நாட்டில் விளங்குகின்ற நம்மால் புகழ்ந்து சொல்லப்பட்ட அழகிய சோழநாடானது, எப்பொழுதும் அழகு பொருந்திய விசாலமாகிய புயத்தினது வல்லமையால் உலகத்தை வேற்றரசர்களுக்குப்

பொதுவாயிருக்குந் தன்மையினின்று நீக்கி இனிமையோடு பாதுகாத்துவருகின்ற அநபாயச் சோழமகாராஜனது அழகிய வெண்கொற்றக்குடையினது நிழலினாலே குளிர்ந்து சவுக்கியத்தை யடைகிறதென்று சொன்னால், அச்சோழநாட்டின் பெருமையை நம்மால் அளவுபடுத்திச் சொல்லக்கூடுமோ? (கூடாது.)—எ-று. (கரு)

திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

ஆ செய்யுள் அரு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர்ச்சிறப்பு.

சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது
மன்னு மாமல ராள்வழி பட்டது
வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னி யார்திரு வாரூர்த் திருநகர்.

(இ-ள்.) வன்னிப்பத்திரமும், கங்காநதியும், இளம்பிறையும் தரித்த சிவந்த சடைபொருந்திய திருமுடியினையுடைய சிவபெருமான் (எழுந்தருளியிருக்கின்ற) திருவாரூர் என்னும் சிறந்த நகரமானது, முன் சொல்லப்பட்ட சோழநாட்டில் சோழவம்சத்தரசர்கள் அரசுசெய்தற்குப் பழமையால் சிறந்ததாயும், தாமரைமலரில் வசிக்கின்ற இலட்சுமியானவள் பூசிக்கப்பெற்றதாயும் உள்ளது.

இலட்சுமியானவள் பூசித்ததற்குக் காரணம்:—ஒருகாலத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் தனது பகைவர்களை வெல்லும்பொருட்டுக் கையில் ஒருவில்லைத் தாங்கிக்கொண்டு அதை வலதுகாற்பெருவிரலாலும், மோவாய்க்கட்டையாலும் பற்றிக்கொண்டு நிற்கையில், அதிற்பூட்டியிருந்த நாரியைத் தனது பகைவர்கள் செல்லுருவங்கொண்டு வந்து தறித்துவிட்டமையால், உடனே நிமிர்ந்த அவ்வில்லினது வேகத்தினால் தனது தலை அறுபட்டுத்திருக்கண்ணமங்கையென்னும் பதியில் விழுந்தது. அதைக்கண்ட இலட்சுமிதேவியானவள் இறந்த தனது நாயகனை உயிர்ப்பிக்கவேண்டித் திருவாரூரையடைந்து, சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து, அத்தவப்பேற்றால் தனது எண்ணம் நிறைவேறப் பெற்று வாழ்ந்திருந்தனள் என்பது. இதனை "நாகமிசைநடித்தவருக் குயிர்வேண்டித் திருத்தவஞ்செய் நளினக்கோயில் - சேருமனத் தவராகு மருவாரூர் தனையெரித்தார் திருவாரூரே" என்பதனுணர்க. கமலை என்னும் இலட்சுமி பூசித்த ஆலயமாதலால் அதற்குக் கமலாலயம் என்பது ஒரு திருநாமம்.

வேத வோசையும் வீணையி னோசையுஞ்
சோதி வானவர் தோத்திர வோசையு
மாத ராடன் மணிமுழ வோசையுங்
கீத வோசையு மாய்க்கிளர் வுற்றதே.

(இ-ள்.) அந்நகரத்தில், வேதத்தினது அத்தியயனவோசையும், வீணைவாசிப்பதாலுண்டாகின்ற வோசையும், ஒளிபொருந்திய தேவர்கள் ஸ்தோத்திரஞ்செய்தலாலுண்டாகின்ற வோசையும், ருத்திரகணிகையர்கள் செய்கின்ற நடனத்திற்கிசைந்த அழகிய மத்தளவோசையும், சங்கீதங்களின் ஓசையும் ஏகோபித்து முழங்கியது.—எ-று. (உ)

பல்லி யங்கள் பரந்த வொலியுடன்
செல்வ வீதிச் செழுமணித் தேரொலி
மல்லல் யானை யொலியுடன் மாவொலி
எல்லை யின்றி யெழுந்துள வெங்கணும்.

(இ-ள்.) பலவகையாகிய வாத்தியங்களிலிருந்தும் உண்டாகிய ஒலியோடு பலவகையாகிய செல்வங்களும் நிரம்பிய வீதிகளி லோடுகின்ற அழகிய மணிகள் கட்டிய தேரினது ஒலியும்,வளப்பம்பொருந்திய யானைகளின் ஒலியோடு குதிரைகளின்ஒலியும் ஓரளவில்லாமல் அந்நகரத்தின் எவ்விடங்களிலும் ஒலித்துள்ளன.

மாட மாளிகை சூளிகை மண்டபங்
கூட சாலைகள் கோபுரந் தெற்றிகள்
நீடு சாளர நீடரங் கெங்கணும்
ஆடன் மாத ரணிசிலம் பார்ப்பன.

(இ-ள்.) மேல்வீடுகளையுடைய மாளிகைகளும்-செய்குன்றுகளும் - மண்டபங்களும் - கூடங்கள் பொருந்திய வீடுகளும் - கோபுரவாசல்களும்- திண்ணைகளும் - நீண்ட பலகணிகளையுடைய பெரிய சபைகளும் ஆகிய எவ்விடங்களிலும் நாட்டியஞ்செய்கின்ற பெண்கள் (கால்களில்) தரித்திருக்கின்ற சிலம்புகள் முழங்குவன.—எ-று. (ச)

அங்கு ரைக்கென் னளவப் பதியிலார்
தங்கண் மாளிகை யின்னொன்று சம்புவின்
பங்கி னுடிருச் சேடி பரவையா
மங்கை யாரவ தாரஞ்செய் மாளிகை.

(இ-ள்.) அத்திருவாரூரினது சிறப்பினை என் புத்தியினளவைக்கொண்டு என்னசொல்லப்போகின்றேன். அந்நகரத்தில் நாயகனில்லாத ருத்திரகணிகையரது மாளிகைகளில் ஒருமாளிகையானது சிவபெருமானது இடப்பாகத்தில் எழுந்தருளியிருக்கின்ற உமாதேவியாரது சிறந்த தோழியர்களில் ஒருவராகிய கமலினியென்னும் பரவைநாச்சியார் திருவவதாரஞ்செய்ததிருமாளிகையாம்.—எ-று.

படர்ந்த பேரொளிப் பன்மணி வீதிபார்
இடந்த வேனமு மன்னமுந் தேடுவார்
தொடர்ந்து கொண்டவன் றொண்டர்க்குத் தூதுபோய்
நடந்த செந்தா மரையடி நாறுமால்.

(இ-ள்.) நான்கு பக்கங்களிலும் பரவிய பேரொளியையுடைய பல மணிகளால் அலங்கரிக்கப்பட்டமாடவீதிகளுள் ஒன்றில்,பூமியைத்தோண்டிச்சென்ற விஷ்ணுவாகிய பன்றியினாலும், ஆகாயத்திற் பறந்துசென்ற பிரமனாகிய அன்னத்தினாலும் அடியையும் முடியையும் தேடிக்காணப்பெறாதவராகிய தியாகேசரானவர் தம்மைப்பழைய அன்புகொண்டு தொடர்ந்த சுந்தரமூர்த்திசுவாமிகளுக்காகப் பரவைநாச்சியாரிடத்தில் (அவர் கொண்ட ஊடலைத் தணிக்கும்பொருட்டுத்) தூதாக நடந்தருளிய செந்தாமரைமலர்போன்ற திருவடிகளின் வைப்பானது மணக்கும்.—எ-று.

"தொடர்ந்துகொண்டவன்றொண்டர்" என்பதற்குத் தாமே வலியத்தொடர்ந்துவந்து தடுத்தாட்கொண்ட வன்றொண்டர் எனினும் பொருந்தும். (௬)

செங்கண் மாதர் தெருவிற் றெளித்தசெங்
குங்கு மத்தின் குழம்பை யவர்குழற்
பொங்கு கோதையிற் பூந்துகள் வீழ்ந்துடன்
அங்கண் மேவி யளறு புலர்த்துமால்.

(இ-ள்.) செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய பெண்கள் திருவீதிகளில் தெளித்த சிவந்த குங்குமக்குழம்பை அப்பெண்கள்தங்கள் கூந்தலில் தரித்த மணம்வீசுகின்ற மாலையிலுள்ள புஷ்பத் துகள் விழுந்து உடனே அதனோடு சேர்ந்து அக்குங்குமக்குழம்பாகிய சேற்றை உலரச்செய்யும்.—எ-று. (௭)

உள்ள மாருரு காதவ ரூர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாந்
தெள்ளு மோசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்.

(இ-ள்.) ரிஷபத்தை வாகனமாகக்கொண் டூர்ந்த சிவபெருமான் எழுந்தருளியிருக்கப்பெற்ற திருவாரூரின் பக்கங்களிலெல்லாம் இனிய பண்களமைந்த தேவாரத் திருப்பதிகங்களை பசிய கிளிப்பிள்ளைகள்பாட, அதனை நாகணவாய்ப்பறவைகள் (காதுகொடுத்து) கேட்கின்றன; (ஆதலால்) அத்திருப்பதிகங்களை யோதிப் பத்தியினால் தமது உள்ளம்* உருகப்பெறாதவர்கள் (அந்நகரத்தில்) யாரிருக்கின்றார்கள்? (ஒருவருமில்லை.) —எ-று. (௮)

விளக்க மிக்க கலன்கள் விரவலாற்
றுளக்கில் பேரொலி யாற்றுன்னு பண்டங்கள்
வளத்தொ டும்பல வாறு மடுத்தலால்
*அளக்கர் போன்றன வாவண வீதிகள்.

(இ-ள்.) பிரகாசம்பொருந்திய அநேக ஆபரணங்கள் நிறைந்திருப்பதனாலும், நீங்காத பேரொலியினாலும், நெருங்கிய பலவகையான பண்டங்களை வளப்பத்துடன் அநேகவழிகளால் கொண்டுவரப்பெற்றிருப்பதனாலும் அந்நகரத்திலுள்ளகடைவீதிகள் சமுத்திரத்தை ஒத்திருந்தன.—எ-று.

சமுத்திரத்திற்குச் சிலேடைவகையால், கலன்கள் என்பதற்குக் கப்பல்களென்றும், பலவாறு என்பதற்கு அநேகமாகிய நதிகளென்றும் பொருளுரைத்துக்கொள்க. (௯)

ஆர ணங்களே யல்ல மறுகிடை
வார ணங்களு மாறி முழங்குமால்
சீர ணங்கிய தேவர்க ளேயலாற்
றோர ணங்களிற் றாமமுஞ் சூழுமால்.

(இ-ள்.) திருவீதிகளில் வேதபாராயண வொலியேயல்லாமல், யானைகளும் அவ்வேதபாராயண வொலியோடு மாறுபட்டொலிக்கும். சிறப்புப்பொருந்திய அழகிய தேவர்கூட்டங்கள் சூழ்வதேயல்லாமல், தோரணங்களில் கட்டப்பட்ட மாலைகளும் சூழ்ந்து விளங்கும்.—எ-று. (௧௦)

தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர்
வாழ்ந்த சிந்தை முனிவர் மறையவர்
வீழ்ந்த வின்பத் துறையில் விரவுவார்
சூழ்ந்த பல்வே றிடத்தத் தொன்னகர்.

(இ-ள்.) தாழ்ந்த சடையினையுடைய சிவபெருமானிடத்தினின்றுந் தோன்றிய ஆதிசைவர்களும், சிவசம்பந்தமான தவச்செல்வத்தையுடைய பெரியோர்களும், சிவாநந்தப்பெருவாழ்வடைந்த திருவுள்ளத்தையுடைய சைவமுனிவர்களும், ஸ்மார்த்தர்களாயிருந்து பின் சிவதீக்ஷை பெற்றுக்கொண்ட மகாசைவர்களும், சிவாநந்தத்தை யடையும்பொருட்டு பலவகையாக அமைந்துள்ள இன்பம்பொருந்திய மார்க்கங்களிற் சேர்ந்துள்ளவர்களுமாகிய இவர்கள் சூழ்ந்து வாசஞ்செய்கின்ற வெவ்வேறான பல இடங்களையுடையது அப்பழமைபொருந்திய திருவாரூரென்னுந் திருநகரம்.—எ-று.

"இன்பத்துறையில் விரவுவார்" என்பதற்கு இல்லறமார்க்கத்தைச் சேர்ந்து சிற்றின்ப மனுபவித்துள்ளவர்கள் என்று பொருள்கூறுவது மொன்று. (௧௧)

நிலம கட்கழ கார்தரு நீணுதற்
றிலக மொப்பது செம்பியர் வாழ்பதி
மலர்ம கட்குவண் டாமரை போன்மலர்த்
தலகில் சீர்த்திரு வாரூர் விளங்குமால்.

(இ-ள்.) சோழராசர்களால் அரசாட்சி செய்யப்பட்ட சோழநாடானது பூமிதேவியினது அழகுபொருந்திய நெற்றியிலிட்ட திலதத்தை யொத்துள்ளது. (அந்நாட்டில்) அளவில்லாத பெருஞ்சிறப்பினையுடைய திருவாரூரென்னுந்திருநகரமானது திருமகளுக்கு (வாசஸ்தானமாகப்பொருந்திய) வளப்பத்தையுடைய செந்தாமரைமலரைப்போல விளங்கி பிரகாசித்துக்கொண்டிருக்கும்.—எ-று. (௧௨)

அன்ன தொன்னக ருக்கர சாயினன்
றுன்னு செங்கதி ரோன்வழித் தோன்றினன்
மன்னு சீரந பாயன் வழிமுதன்
மின்னு மாமணிப் பூண்மனு வேந்தனே.

(இ-ள்.) அப்படிப்பட்ட சிறப்பினையுடைய பழமையாகிய திருநகரத்திற்கு அரசராயுள்ளவரும், நெருங்கிய சிவந்த கிரணங்களையுடைய சூரியனது வமிச

த்தில் பிறந்தவரும்,நிலைபெற்ற கீர்த்தியினையுடையஅநபாயச்சோழமகாராஜாவின் குலத்திற்கு முதல்வராயுள்ளவரும், விளங்குகின்ற சிறந்தரத்தினுபரணங்களைத்த ரித்த மனுவென்னுந் திருநாமத்தினையுடையவருமாகிய ஒரு சோழரிருந்தார்.—

தமது குலத்திற்கு முதல்வராயிருந்து தர்மசாஸ்திரத்தை யுண்டுபண்ணி, நீதிநெறி தவறாது செங்கோல்செலுத்திய மனுவைப்போல, இவரும் நீதி தவறாது அரசாட்சிசெய்தலால் அதுகாரணம்பற்றி மனுவென்னும் பெயரைத் தாமும் பெற்றனர். (கங)

மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாங்
கண்ணு மாவியு மாம்பெருங் காவலான்
விண்ணு ளார்மகிழ் வெய்திட வேள்விகள்
எண்ணி லாதன மாண வியற்றினன்.

(இ-ள்.) (அவ்வரசர்பெருமான்) பூமியில்வாழ்கின்ற நிலைபெற்ற எல்லா வுயிர்களுக்கும், கண்ணும், உயிருமாகவிருந்து அவைகளைக் காப்பதே தனக்குப் பெரிய காவற்றொழிலாக வுடையவர். விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் மனமகிழும்படியாக அளவில்லாத யாகங்களை மாட்சிமை பொருந்தும்படிச் செய்தவர்.—எ-று.

நன்மைதீமைகளைக் கண்டறிதற்குக் கண் உதவியாக நிற்க, உயிர் இது நன்று இது தீது என்று வரைந்துவிதிக்குமாறுபோலக் காவலனும் இத்தகையினது அறமெனவுணர்த்தி அதினின்றுந் தவறாது ஒழுகக்கடவீரென்று விதித்துக் காத்தலின் " கண்ணுமாவியுமாம்பெருங்காவலான்" என்று கூறினர். (கச)

கொற்ற வாழி குவலயஞ் சூழ்ந்திடச்
சுற்று மன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்ற நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்
பெற்ற நீதியுந் தன்பெய ராக்கினன்.

(இ-ள்.) தனது வெற்றிபொருந்திய ஆக்கினைசக்கரமானது (உயிர்களுக்கு யாதொரு குறைவும் வாராமல் காக்கும்பொருட்டு) உலக முழுவதும் சுற்றிவரவும், (தமதுதேசத்தைச்) சூழ்ந்திருக்கின்ற அரசர்கள் (கொண்டுவந்த) பகுதிப்பொருள்களானவை அரண்மனைவாசலில் நிறைந்திருக்கவும், (வீணாக வேற்றரசர்கள் மேல்) பகைகொள்ளாமல் ஒழித்த செவ்விய குணத்தையுடைய உண்மைபொருந்திய மனுவென்னும் அரசனால் உலகத்தாரடைந்த தருமநூலையும் தன் பெயரால் விளங்கச் செய்தவர்.—எ-று.

மனுப்பெற்றநீதியுந்தன் பெயராக்குதலாவது, சூரியன் புத்திரனாகிய வைவச்சுவத மனுவினால் உலகத்தாரடைந்த மனுநூலை, மனுநீதிச்சோழனென்னுந் தன்பெயரால் விளங்கச் செய்தல். (கரு)

பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்கு மாகி யிருந்தவர் பூசனைக்
கங்கண் வேண்டு நிமந்தமா ராய்ந்துளான்
துங்க வாகமஞ் சொன்ன முறைமையால்.

(இ-ள்.) விளங்குகின்ற பெரிய வேதவடிவமாகிய புற்றைத்தமக்கு இடமாகக் கொண்டவரும், எவ்விடங்களிலும் வியாபகவடிவமா யெழுந்தருளியிருக்கின்றவருமாகிய வன்மீகநாதருக்குச் செய்யும் நித்தியபூசைக்கு அவ்விடத்தில் வேண்டிய படித்தரங்களை உயர்ந்த காமிகமுதலிய சிவாகமங்களில் விதித்த முறைவழுவாமல் ஆராய்ந்து கொண்டிருப்பவர்.—எ-று. (கசு)

வேறு.

அறம்பொரு ளின்ப மான வறநெறி வழாமற் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற வையகங் காக்கு நாளிற்
சிறந்தநற் றவத்தாற் றேவி திருமணி வயிற்று மைந்தன்
பிறந்தன னுலகம் போற்றப் பேரரிக் குருளை யன்னான்.

(இ-ள்.) அறம், பொருள், இன்பம் என்று வகுக்கப்பட்ட தருமநூல் விதியை (உலகத்திலுள்ளவர்கள்) தவறாமல் தழுவும்படிச் செய்வித்து, (குடிகளை வரிமுதலியவைகளால் மிகவும் வருத்தப்படுத்துகின்ற) கொடுங்கோலரசரை நாசஞ்செய்து (தமக்குக்கீழ்ப்பட்டுச்) செங்கோல் செலுத்துகின்ற அரசர்கள் தம்மைத்துதிக்கும்படி பூமியை அரசாளுங்காலத்தில், (அவ்வரசர்பெருமான் செய்த) சிறப்புப்பொருந்திய நல்ல தவப்பேற்றால் (இரத்தினமாலை யென்னும்) தமது மனைவியாரது திருவயிற்றினின்றும், உலகத்தார்துதிக்கும்படியாகப் பெரியசிங்கக்குட்டிக்குச்சமானமாகிய ஒரு புத்திரன் பிறந்தான்.—எ-று. (கஎ)

தவமுயன் றரிதிற் பெற்ற தனியிளங் குமர னுநாள்
சிவமுயன் றடையுந் தெய்வக் கலைபல திருந்த வோதிக்
கவனவாம் புரவி யானை தேர்படைத் தொழில்கள் கற்றுப்
பவமுயன் றதுவும் பேறே யெனவரும் பண்பின் மிக்கான்.

(இ-ள்.) (மனுச்சக்கிரவர்த்தியானவர்) தவத்தைச்செய்து அருமையாகப் பெற்ற ஒப்பற்ற இளமைபொருந்திய இராசகுமாரன் நாள்தோறும் நற்காரியங்களிலேயே முயற்சித்து அடையத்தக்க தெய்வத்தன்மை பொருந்திய பல கலைஞானங்களைத் தெளிவாக ஓதியுணர்ந்து, வேகத்தோடு தாவிச்செல்லுகின்ற குதிரையேற்றமும், யானை யேற்றமும், தேரூர்தலும், (வில்வித்தைமுதலிய) ஆயுதப்பயிற்சிகளும் (ஆகிய இவைகளைக்) கற்றுணர்ந்து, மானிடதேகமெடுத்துப் பிறந்ததும் ஓர் பெரும்பயனேயென்று யாவருஞ்சொல்லும்படியான நற்குணங்களால் சிறந்தவ னாயினன்.—எ-று.

"சிவமுயன்று" என்பதற்குப் பரமசிவத்தைச் சிந்தித்து எனப்பொருள் கூறுவதுமுண்டு. "தெய்வக்கலைபல 'திருந்தவோதி" என்றதனால், பதினான்குவித்தைகளையும், ஆயுர்வேதம் - காந்தருவவேதம் - சிற்பம் இவைகளையும் முறையே ஓதியெனக் கொள்க. (கஅ)

அளவில்றால் கலைகண் முற்றி யரும்பெறற் றந்தை மிக்க
வுளமகிழ் காதல் கூர வோங்கிய குணத்தா னீடி
யிளவர சென்னுந் தன்மை யெய்துதற் கணிய னாகி
வளரிளம் பரிதி போன்று வாழுநா ளொருநாண் மைந்தன்.

(இ-ள்.) (மற்றுஞ்சொல்லப்பட்ட) அளவில்லாத பழய வேதவேதாங்கங்களை யோதிமுடித்து, (தனக்குப்) பெறுதற்கரிய தந்தையாகிய மனுச்சோழராது மிகுந்த மனமகிழ்தற்குக் காரணமான ஆசைஅதிகரிக்க உயர்ந்த நற்குணங்களால் சிறந்து, இளவரசென்று சொல்லத்தக்க பருவத்தை யடைதற்குச் சமீபித்தவனாகி, வளருகின்ற இளஞ்சூரியனையொத்து வாழுகின்ற நாள்களில் ஒருநாள் அவ்விராசகுமாரன்.—எ-று. (கக)

திங்கள்வெண் கவிகை மன்னன் றிருவளர் கோயி னின்று
மங்குறோய் மாட வீதி மன்னிளங் குமரர் சூழ்க்
கொங்கலர் மாலை தாழ்ந்து குங்குமங் குலவு தோளான்
பொங்கிய தானை சூழத் தேர்மிசைப் பொலிந்து போந்தான்.

(இ-ள்.) மணம்வீசுகின்ற மலர்மாலைகளை மார்பில் தொங்கும்படி யணிந்து, குங்குமச்சந்தனம் விளங்குகின்ற தோள்களையுடைய அவ்விராஜகுமாரனானவன், பூரணச்சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையினையுடைய மனுச்சோழராது அழகுவிளங்குகின்ற அரண்மனையினின்றும் (புறப்பட்டு) மேகங்கள் தவழுகின்ற மாளிகைகளையுடைய திருவீதியில் இளமைபொருந்திய இராஜகுமாரர்கள் தன்னைச் சூழ்ந்துவரவும், மிகுந்த சேனைகள் சூழ்ந்துவரவும், தேரின்மேலேறிப் பவனிவந்தான்.—எ-று. (உ0)

பரசுவந் தியர்முன் சூதர் மாகத ரொருபாற் பாங்கர்
விரைநறுங் குழலார் சிந்தும் வெள்வளை யொருபான் மிக்க
முரசொடு சங்க மார்ப்ப முழங்கொலி யொருபால் வென்றி
அரசிளங் குமரன் போது மணிமணி மாட வீதி.

(இ-ள்.) வெற்றிபொருந்திய இளவரசனாகிய இராஜகுமாரன் பவனிவருகின்ற அழகிய இரத்தினகசிதமான மாடவீதியானது, துதிக்கின்ற மங்கலப்பாடகர்கள் முன்னேசெல்லவும், சூதர்களும் மாகதர்களும் ஒருபக்கத்தில் வரவும், அருகில் வாசனை பொருந்திய நல்ல கூந்தலையுடைய பெண்கள் (மோகங்கொண்டு தேகமிளைத்தலால் கையினின்றும் நழுகிவிழச்) சிந்திய வெண்மைபொருந்திய வளையல்கள் ஒருபக்கத்தி லிருக்கவும், மிகுந்த முரசவாத்தியத்துடன் சங்குகள் ஆரவாரித்தலாலுண்டாகும் பேரோசையானது ஒருபக்கத்தில் பொருந்தவும் (ஆகிய பெருஞ்சிறப்பினை யுடையதா யிருந்தது.)—எ-று.

வந்தியர் மங்கலமான பாடல்களைப் பாடிச் செல்பவர்கள். சூதர் அரசர்களுக்குத் தொன்றுதொட்டுத் துயிலெழுப்புங் காலத்தும், பிறவிடங்களிலும் பாடுகின்றவர்கள். மாகதர். அவ்வரசர்களின் வீரத்தைப் புகழ்ந்து பாடுவோர். (உக)

தனிப்பெருந் தருமந் தானோர் தயாவின்றித் தானை மன்னன்
பனிப்பில்சிந் தையினி னுண்மைப் பான்மைசோ திப்பா லென்ன
மனித்தர்தன் வரவு காணு வண்ணமோர் வண்ண நல்லான்
புனிற்றிளங் கன்று துள்ளிப் போந்ததம் மறுகி னூடு.

(இ-ள்.) ஒப்பற்ற பெருமைபொருந்திய தருமதேவதையானது எவ்வளவுந் தயவில்லாமல், ரதகஜதுரக பதாதிகளென்னும் நால்வகைச் சேனைகளையுமு

டைய மனுச்சோழரது அசைதலில்லாத மனத்திலுள்ள உண்மைத்தன்மையைச் சோதிக்க வந்ததுபோல,ஒரு அழகிய நல்ல பசுவின் இளங்கன்றானது,மனிதர்கள் தன் வருகையை அறியாதிருக்கும்படி அத்திருவீதியில் துள்ளி ஓடியது.—எ-று.

அம்புனிற் றாவின் கன்றோ ரபாயத்தி னூடு போகிச்
செம்பொனின் றேர்க்கான் மீது விசையினாற் செல்லப் பட்டே
யும்பரி னடையக் கண்டங் குருகுதா யலமந் தோடி
வெம்பிடு மலறுஞ் சோரு மெய்ந்நடுக் குற்று வீழும்.

(இ-ள்.) பசுவினது அழகிய அவ்விளங் கன்றானது ஒரு அபாயவழியாகச் சென்று, (அவ்விராச குமாரனது) சிவந்த பொன்மயமாகிய தேரின் சக்கரம் தன்மேல் விசையினால் இழுக்கப்பட்டு இறந்துபோக, அதனிடத்தில் உருக்கமுற்றிருக்கின்ற தாய்ப்பசுவானது கண்டு அவ்விடத்தில் மனம்வருந்தி ஓடிவந்து (கன்று இறந்த சோகத்தினால்) கலங்கும், அலறும், சோர்வடையும், உடம்பு நடுங்கிக் கீழேவிழும்.—எ-று. (உ௩)

மற்றது கண்டு மைந்தன் வந்ததிங் கபாய மென்று
சொற்றடு மாறி நெஞ்சிற் றுயருழந் தறிவ ழிந்து
பெற்றமுங் கன்று மின்றெ னுணர்வெனும் பெருமை மாளச்
செற்றவென் செய்கே னென்று தேரினின் றிழிந்து வீழ்ந்தான்.

(இ-ள்.) இவ்விதமாக அப்பசுவானது படுகின்ற துன்பத்தை இராஜகுமாரன் பார்த்து இவ்விடத்தில் அபாயம் நேரிட்டதென்று, தான் சொல்லுகின்ற சொல்லானது தடுமாறி, மனதில் வருத்தமடைந்து, அறிவுசோர்ந்து, இப்பசுவும்-கன்றும் இன்றைக்கு என்னுடைய அறிவாகிய பெருமையானது கெடும்படியாகச் செய்தன. (ஆதலால்) என்ன செய்வேனென்று தேரினின்றும் நழுவிக் கீழே விழுந்தான்.—எ-று. (உ௪)

அலறுபே ராவை நோக்கி யாருயிர் பதைத்துச் சோரு
நிலமிசைக் கன்றை நோக்கி நெடிதுயிர்த் திரங்கி நிற்கு
மலர்தலை யுலகங் காக்கு மனுவெனு மென்கோ மானுக்
குலகிலிப் பழிவந் தெய்தப் பிறந்தவா வொருவ னென்பான்.

(இ-ள்.) அவ்விராஜகுமாரன் கன்று இறந்ததைக் குறித்து அலறுகின்ற பெரிய தாய்ப்பசுவைப்பார்த்துத் தன்னுடைய அருமையாகிய உயிர்பதைத்துச் சோர்வான். பூமியின்மேல் இறந்துகிடக்கும் இளங்கன்றைப் பார்த்துப் பெருமூச்சுவிட்டு அழுவான். பரந்த இடத்தையுடைய இவ்வுலகத்தைப் பாதுகாக்கின்ற மனுவென்னும் பெயரையுடைய எமது அரசனுக்கு உலகத்தில் இப்படிப்பட்ட பழமொழியுண்டாகத்தான் போலும் யானொருவன் பிள்ளையாகப் பிறந்தவண்ணமென்று சொல்லுவான்.—எ-று.

பிறந்தவா-கடைக்குறை. (உ௫)

வந்தவிப் பழியை மாற்றும் வகையினை மறைநூல் வாய்மை
அந்தணர் விதித்த வாற்றா லாற்றுவ தறமே யாகில்
எந்தையீ தறியா முன்ன மியற்றுவ னென்று மைந்தன்
சிந்தைவெந் துயரந் தீர்ப்பான் றிருமறை யவர்முன் சென்றான்.

(இ-ள்.) (இப்பொழுது என்னை யறியாது) நேரிட்ட இப்பழியை நீக்கு தற்குரிய பிராயச்சித்த விதியை வேதங்களின் உண்மையையுணர்ந்த பிராமணர்கள் சொல்லுகின்ற தருமசாஸ்திரப்படியே செய்து பரிகரிப்பது தருமமானால் எனது தந்தையாகிய மனுச்சோழர் இச்செய்தி அறியாமுன்னமே செய்து (அப்பழியைப்) பரிகரித்துக்கொள்வேனென்று அம்மனுவின் புத்திரன் தன் மனத்தினுள்ள வெவ்விய துன்பத்தை நீக்கிக்கொள்ளும்படி சிறப்புப்பொருந்திய பிராமணர்க ளிடத்திற்குப் போயினான்.—எ-று. (உ௬)

தன்னுயிர்க் கன்று வீயத் தளர்ந்தவாத் தரியா தாகி
முன்னெருப் புயிர்த்து விம்மி முகத்தினிற் கண்ணீர் வார
மன்னுயிர் காக்குஞ் செங்கோன் மனுவின்பொற் கோயில் வாயிற்
பொன்னணி மணியைச் சென்று கோட்டினாற் புடைத்த தன்றே.

(இ-ள்.) தன்னுடைய உயிரையொத்த கன்றானது இறந்துபோக, அதனால் வருந்திய தாய்ப்பசுவானது அத்துன்பத்தைச் சகிக்கமாட்டாமல் முன்னே நெருப்பொறி பறக்கப் பெருமூச்சுவிட் டழுது, முகத்தில் கண்ணீரானது ஒழுக, நிலைபெற்ற ஆன்மகோடிகளைக் காக்கின்ற செங்கோலையுடைய மனுச்சோழரது அழகிய அரண்மனைவாசலில் கட்டப்பட்டுப் பொன்னினால் அலங்கரிக்கப்பட்ட ஆராய்ச்சி மணியினிடத்திற் போய் அதைத் தன்னுடைய கொம்பினால் அடித்தது.—எ-று.

மனுச்சோழரானவர் தம்முடைய தேசத்திலிருக்குங் குடிகளுக்குப் பலவகையா லுண்டான வியாச்சியங்களைப் பற்றியும், ஒருவனையொருவர் அடித்தல் முதலாகிய தண்ட விஷயங்களைப்பற்றியும் தாமொருவரே யிருந்து நிச்சயித்தறியக்கூடாதபடியால், நியாயசபை தண்டசபை முதலியவைகளைத் தமது தேசத்திற் பலவிடங்களிலும் நியமித்து அரசுசெலுத்தி வந்தாலும், அச்சபைத்தலைவர்கள் தாக்ஷிணியத்தினாலாவது, பொருளைக்கருதியாவது, அசாக்கிரதையினாலாவது அந்த நியாயத்தைக் கெடுத்தால், உடனே தமக்குத் தெரிவிக்கும்பொருட்டு, அரண்மனைவாசலில் ஒரு பெரியமணியைக்கட்டிவைத்துக்குறையுற்றவர்கள் அதை அசைத்தால் உடனே தாம்வந்து அக்குறையைத் தீர்ப்போமென்று பிரசித்தப்படுத்தியிருந்தாராதலால், இப்பசுவானது தன் கன்றினுக்குநேரிட்ட அபாயத்தைத் தெரிவிக்கும்படி அவ்வாராய்ச்சிமணியைத் தனது கொம்பினால் அடித்தது. என்க.

பழிப்பறை முழக்கோ வார்க்கும் பாவத்தி னொலியோ வேந்தன்
வழித்திரு மைந்த னாவி கொளவரு மறலி யூர்திக்
கழுத்தணி மணியி னார்ப்போ வென்னத்தன் கடைமுன் கேளாத்
தெழித்தெழு மோசை மன்னன் செவிப்புலம் புக்க போது.

(இ-ள்.) பழிவரும்போது ஒலிக்கின்ற பறையினது ஓசையோ! (அல்லது) பாவமானது ஒருருவமெடுத்து ஆரவாரித்தலா லுண்டாகிய ஓசையோ! மனுவென்னும் அரசனுடைய சந்ததியில் அவதரித்த அழகிய புத்திரனது உயிரைக் கொண்டுபோகவந்த இயமனுடைய வாகனமாகிய எருமைக்கடாவின் கழுத்திற் கட்டப்பட்ட மணியினது ஓசையோ! என்று யாவரும் சொல்லும்படி, தனது அரண்மனைவாயிலில் இதுவரையிலுங் கேளாத பேரோசையானது மனுச்சோழருடைய காதில்கேட்டபோது.—எ-று. (உ௮)

ஆங்கது கேட்ட வேந்த னரியணை யிழிந்து போந்து
பூங்கொடி வாயி னண்ணக் காவல ரெதிரே போற்றி
ஈங்கிதோர் பசுவந் தெய்தி யிறைவநின் கொற்ற வாயிற்
றூங்கிய மணியைக் கோட்டாற் றுளக்கிய தென்று சொன்னர்.

(இ-ள்.) (எப்பொழுதுங் கேட்டறியாத) அந்த ஆராய்ச்சிமணியினது ஓசையைக்கேட்ட மனுநீதிச் சோழர் சிங்காசனத்தினின்றும் இறங்கிச் சென்று அழகிய கொடியாடைகள் கட்டியிருக்கின்ற வாசலில் வந்தபோது அங்குள்ள காவலாளர்கள் எதிரேவந்து வணங்கி, ஆண்டவரோ? இவ்விடத்தில் இப்பசுவானது வந்து உமது வெற்றிபொருந்திய வாசலில் கட்டித் தொங்குகின்ற ஆராய்ச்சிமணியைத் தனது கொம்பினால் அசைத்ததென்று சொன்னார்கள்.—எ-று.

"பூங்கொடி" என்பதற்கு பலவிதமாகிய புஷ்பங்களை யெழுதியிருக்கின்ற கொடி எனினும் பொருந்தும். (உகூ)

மன்னவ னதனைக் கேளா வருந்திய பசுவை நோக்கி
என்னிதற் குற்ற தென்பா னமைச்சரை யிகழ்ந்து நோக்க
முன்னுற நிகழ்ந்த வெல்லா மறிந்துளான் முதிர்ந்த கேள்வித்
தொன்னெறி யமைச்சன் மன்னன் றாளிணை தொழுது சொல்வான்.

(இ-ள்.) அம் மனுநீதிச்சோழரானவர் காவலாளர்கள் சொல்லிய அவ்வார்த்தையைக் கேட்டு, வருத்தப்படுகின்ற பசுவைப்பார்த்து இப்பசுவிற்கு (உங்கள் அசாக்கிரதையினால்) நேரிட்டதுன்பம் என்னவென்று கேட்கின்றவராய் மந்திரிகளை இகழ்ந்து (கோபித்துப்) பார்க்க, (அப்போது) முன்னே நடந்த செய்திகளை யெல்லாம் அறிந்துள்ளவனும் முதிர்ந்த கல்விகேள்விகளைப்பெற்று அதனால் பழய தருமநெறியில் நடக்கின்றவனுமாகிய ஒரு மந்திரியானவன் அவ்வரசனது பாதங்களை வணங்கிச் சொல்லுகின்றான்.—எ-று. (௩௦)

வளவநின் புதல்வ னாங்கோர் மணிநெடுந் தேர்மே லேறி
யளவிறோர்த் தானை சூழ வரசுலாந் தெருவிற் போங்கா
லிளையவான் கன்று தேர்க்கா லிடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறு மித்தாய் வந்து விளைத்தவித் தன்மை யென்றான்.

(இ-ள்.) சோழர்பெருமானே! உம்முடைய புத்திரனானவன் மணிகள் கட்டிய ஒரு பெரிய தேரின்மேலேறி அளவில்லாத தேர்களும், சேனைகளும் தன்னைச் சூழ்ந்துவர இராஜவீதியில் போகும்பொழுது, இளமைபொருந்திய ஒரு பசுவின் கன்றானது அத்தேர்ச்சக்கரத்தின் நடுவேபுகுந்து இறந்துவிட, (அதனால்) வருத்தப்படுகின்ற இத்தாய்ப்பசுவானது இவ்விடத்திற்கு வந்து இம்மணியை யசைத்ததென்று சொன்னான்.—எ-று. (௩௧)

அவ்வுரை கேட்ட வேந்த னாவுறு துயர மெய்தி
வெவ்விடந் தலைக்கொண் டார்போல் வேதனை யகத்து மிக்கிங்
கிவ்வினை விளைந்த வாவென் றிடருறு மிரங்கு மேங்குஞ்
செவ்விதென் செங்கோ லென்னுந் தெருமருந் தெளியுந் தேறான்.

(இ-ள்.) அந்த மந்திரியின் வார்த்தையைக்கேட்ட மனுச்சோழரானவர் (கன்றைப்பறிகொடுத்த) அப்பசுவானது எவ்வளவு துன்பமடைகிறதோ அவ்வளவு துன்பத்தைத் தாமுமடைந்து, கொடிய விஷமானது தலைக்கேறினதுபோல மனதில் துயரமானது அதிகரித்து இங்கு இப்பழியானது இவ்வண்ணம் நேரிட்டதென்று வருத்தப்படுவார்; இரங்குவார்; ஏங்குவார்; எனது செங்கோலானது (மிகவும்) நன்றாயிருக்கின்றதென்பார்; மனங்கலங்குவார்; (இதற்குப் பிராயச்சித்தஞ் செய்வோமென்று) தெளிவார்; (மறுபடியும் செய்யும்வகையின்னதென்று) தேறமாட்டார்.—எ-று. (௩௨)

மன்னுயிர் புரந்து வையம் பொதுக்கடிந் தறத்தி னீடு
மென்னெறி நன்றா லென்னு மென்செய்தாற் றீரு மென்னுந்
தன்னிளங் கன்று காணுத் தாய்முகங் கண்டு சோரும்
அந்நிலை யரச னுற்ற துயரமோ ரளவிற் றன்றால்.

(இ-ள்.) நிலைபெற்ற ஆன்மகோடிகளைப் பாதுகாத்து, பூமியைப் பகையரசர்களுக்குப் பொதுவாயிருத்தலினின்றும் நீக்கி, தருமவழியில் நீடித்திருக்கின்ற என்னுடைய அரசாட்சியானது நன்றாயிருக்கின்றதென்று சொல்லுவார்; (இப்பசுங்கன்றின்கொலை) என்ன பரிகாரஞ் செய்தால் நீங்குமென்பார்; தனது இளங்கன்றைக் காணுமல் வருந்துகின்ற தாய்ப்பசுவின் முகத்தைப் பார்த்துச் சோர்வடைவார்; அச்சமயத்தில் அவ்வரசர்பெருமானடைந்த துன்பமானது இவ்வளவென்று அளவுசொல்லக் கூடாததா யிருந்தது.—எ-று. (௩௩)

வேறு.

மந்திரிக ளதுகண்டு மன்னவனை யடிவணங்கிச்
சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றால்
கொந்தலர்த்தார் மைந்தனைமுன் கோவதைசெய் தார்க்குமறை
யந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்த லறமென்றார்.

(இ-ள்.) அப்படி விசனப்படுகின்ற மனுச்சோழரது துன்பத்தை மந்திரிகள் பார்த்து அவரது பாதத்தில்வணங்கி (எமது அரசே! நீர்) மனந்தளர்வது இப்பழிக்குப் பரிகாரமாகமாட்டாது; (ஆதலால்) கொத்தாகிய மலர் மாலையைத்தரித்த (உம்முடைய) புத்திரனை முன்னுளில் பசுக்கொலை செய்தவர்களுக்குப் பிராயச்சித்தஞ் செய்யும்படியாக வேதங்களை யுணர்ந்த பிராமணர்களால் விதிக்கப்பட்ட முறைமையின் வழியே பிராயச்சித்தஞ் செய்யும்படி கட்டளையிடுவதே தருமமென்று சொன்னார்கள்.—எ-று.

கோவதைசெய்தார்க்கு விதித்த முறையாவது,— கோவதைசெய்தவன் யவையென்னுந் தானியத்தி னரிசியைக் கஞ்சிசெய்து குடித்தல்வேண்டும். தன் குடுமியோடு முகரோமத்தையும் க்ஷௌரஞ்செய்து தான் கொன்ற பசுவின்தோலைப் போர்த்துக்கொண்டு பசுமந்தையினிடத்தில் வாசஞ்செய்தல் வேண்டும். கோமூத்திரத்தினுல் ஸ்நானஞ்செய்து, இந்திரியங்களை யடக்கி, உப்பின்றித்தினந்தோறும் சாயந்திரம் ஒருவேளை புசித்தல் வேண்டும். காலைமாலைகளில் பசுமந்தையோடு கூடப்போதலும், பசுக்களுக்கு வேண்டிய ஊழியஞ்செய்து வணங்குதலும், இரவில் சுவர்முதலியவற்றை யனுசரித்து உட்கார்ந்திருத்தலும் வேண்டும்.

பசுக்கள் எழுந்திருந்தபின் தான் எழுதலும், அவை திரிந்துகொண்டிருக்குங் காலையில் தான் கூடத்திரிதலும், அவை படுக்கும்போது தானுட்கார்தலும் வேண்டும். வியாதி - புலி - திருடர்முதலிய பயஹேதுக்களால் பீடிக்கப்பட்டதையும், சேற்றில் விழுந்ததையும் தன்னால் கூடியவரையிலுங் காப்பாற்றல் வேண்டும். சூரியன் தீட்சணமாகக் காயும்போதும், மழைபெய்யும்போதும், குளிர்காலத்திலும், காற்று வீசுங்காலத்திலும் பசுவைக் காப்பாற்றாமல் தன்னைக் காத்துக்கொள்ளல் கூடாது. தன்னுடையவாவது - அன்னியனுடையவாவது வீட்டில் - களத்தில்-பயிரில் தானிய முதலியவற்றையும், பயிரையும் மேய்கிற பசுவையும், பால் குடிக்கிற கன்றையும் விரோதமுண்டாக வொருவருக்குஞ் சொல்லுதல்கூடாது. இப்படி ஆறுமாதஞ் செய்து, பின்பு கன்றையுடைய பசுக்களைப் பிராமணர்களுக்குத் தானஞ்செய்தல் வேண்டும். என்பதாம். (௯௪)

வழக்கென்று நீர்மொழிந்தான் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை யிழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ
இழகின்றேன் மைந்தனையென் றெல்லீருஞ் சொல்லியவிச்
சழக்கின்று நானிசைந்தாற் றருமந்தான் சலியாதோ.

(இ-ள்.) (மந்திரிகளே ! கோவதை செய்தவர்களுக்கு பிராமணர்கள் மூலமாகப் பிராயச்சித்தஞ்செய்துகொள்வது) உலகவழக்கமென்று நீங்கள் சொன்னால் அப்பிராயச்சித்தமானது தன் இளங்கன்றை யிழந்து மனம்வருந்தி அலறுகின்ற பசுவடைந்திருக்கின்ற துன்பமாகிய நோய்க்கு மருந்தாகுமோ? (அதனால்) நான் புத்திரனை யிழந்துவிடுகிறேனென்று நீங்களெல்லோருஞ் சொல்லுகின்ற இக்குற்றம் பொருந்திய பரிகாரத்திற்கு நான் உடன்படுவேனானால் (என்விஷயத்தில்) தருமதேவதையானது சலிப்பை யடையாதோ.—எ-று. (௯௫)

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ.

(இ-ள்.) பெரிய பூமிக்கு அரசனாயிருக்கின்றவன் நிலைபெற்ற ஆன்மகோடிகளைக் காக்குங்காலத்தில் அவ்வுயிர்களுக்கு இடையூறாகத் தன்னாலாவது, தன்பரிசனங்களாலாவது, கெடுதியை விளைக்கின்ற பகைவர்களாலாவது, திருடர்களாலாவது, பிறவுயிர்களாலாவது உண்டாகிய ஐந்து பயத்தையும் நீக்கித் தருமத்தை வழுவாமல் பரிபாலனம்பண்ணுகின்றவனன்றோ?—எ-று.

காவலனாவான், தன்னால் பயமுண்டாகாமற் காத்தலாவது,—அரசனானவன் தன்னுடைய குடிகளிடத்தில் குடியிறையை மிகுதியாக வருத்திக்கொள்ளாமல், கொள்ளுமாறுகொண்டு நீதியோடு செங்கோல்செலுத்திப் பாதுகாத்தல். தன் பரிசனத்தால் பயமுண்டாகாமற் காத்தலாவது,—மந்திரிமுதலாயினோர் அரசன் கட்டளையைப்பெற்று அதிகாரஞ்செலுத்துகின்றோமென்னுஞ் செருக்கால் குடிகளுக்கு ஒருதீங்கும் வருவிக்காமல், தன்னைப்போலவே தன் பரிசனத்தையும் நடந்துகொள்ளும்படிச் செய்து பாதுகாத்தல். பகைத்திறத்தால் பயமுண்டாகாமற்காத்தலாவது,—வேற்றரசர்கள் தன் நாட்டிற்சென்று குடிகளைவருத்திக் கொள்ளைய

டித்துப் பல வளங்களையுங் கொண்டுபோகாமல், தன்னாட்டின் நான்கெல்லைகளி லும் சேனைகளையும், வேவுகாரரையும் ஏற்படுத்திப் பாதுகாத்தல். கள்வரால் பய முண்டாகாமற் காத்தலாவது:—கள்வர்கள் கன்னமிடுதல்,கைப்பொருள்கவர்தல், வழியடித்துப்பறித்தல் முதலியவைகளினால் குடிகளுக்குத் தீங்குசெய்யாமல்,அங் கங்குத் தக்கவுத்தியோகஸ்தர்களை வைத்துத் தண்டமுதலியவைகளால் தடுத்துப் பாதுகாத்தல். பிறவுயிர்களால் பயமுண்டாகாமற் காத்தலாவது:—புலி-கரடி முத லிய மிருகங்கள் தன் நாட்டிற்சென்று குடிகளை வருத்திச் செல்லாமல், வேட்டை யாடி அவைகளையழித்துப் பாதுகாத்தல். ஐந்துந்தீர்த்தறங்காப்பா னென்றத னால் தன் புத்திரனும் தனது பரிசனத்தோடு சேர்ந்தவனாதலால், அவனால் நேரி ட்ட குற்றத்திற்குத் தக்கபடித் தண்டிப்பதே தகுதியென்பது குறிப்பு. (கசு)

என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயவிசைந்தேன்
அன்னியனே ருயிர்கொன்று லவனைக்கொல் வேனானாற்
றொன்மனுநூற் றொடைமனுவாற் றுடைப்புண்ட தெனும்வார்த்தை
மன்னுலகிற் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்கென்றான்.

(இ-ள்.) என் புத்திரனானவன் செய்த (இப்பசுக்கொலையாகிய) பாதகத்தி ற்கு (உயிர்க்கொலை செய்யாமல்) பெரிய பிராயச்சித்தங்கள் செய்யும்படியாக வுட ன்பட்டு, பின்பு அன்னியனொருவன் ஒருயிரைக் கொன்றால் (அதற்கும் பிராயச் சித்தஞ் செய்யாமல்) அவனைக் கொலைசெய்வேனானால், பழமையாகிய மனு நூலில் விதித்த ஒழுக்கமானது இம்மனுச்சோழனால் நீக்கப்பட்டது என்னும் பழிமொ ழியானது நிலைபெற்ற வுலகத்தில் வழங்கும்படியாகச் சொன்னீர்கள் ; (இப்படிச் சொல்வது) மந்திரிகள் வழக்கமென்று சொன்னார்.—எ-று.

பசுவின் கன்றைக் கொன்றவர்களுக்குப் பிராயச்சித்தஞ் சொல்லியிருந் தாலும், இப்பசுவானது மனிதர்க்குள்ள அறிவைப்பெற்று ஆராய்ச்சிமணியை யசைத்ததனால் இதனை மனிதர்வகுப்பிற்சேர்த்து,இக்கன்றைக்கொன்றதைச் சிறு குழந்தையைக்கொன்றதாக நினைத்து, அதற்குத் தம்புத்திரனைக் கொல்ல நினை த்தாராதலால், அதுவும் மனுநூலிலுள்ளதென்பதும், அப்படிச் செய்யாமல்விட் டால்,அவ்வுயிர்க்கொலையோடு மனுநூல் விதியைத் தள்ளினான் என்னும் பழியும், பிறனொருவன் அவ்வாறு செய்யின் அவனைக் கொல்வேனாயின், பக்ஷபாதமாகத் தனக்கொன்று அன்னியர்க்கொன்று செய்கின்றானென்னும் பழியும் உண்டாமெ ன்பதுங் கருதித் தம்மந்திரிகளைப் பார்த்து இவ்வாறிகழ்ந்துரைத்தாரென்க. (கஎ)

என்றரச னிகழ்ந்துரைப்ப வெதிர்நின்ற மதியமைச்சர்
நின்றநெறி யுலகின்க ணிதுபோன்மு னிகழ்ந்ததாற்
பொன்றுவித்தன் மரபன்று மறைமொழிந்த வறம்புரித
றொன்றுதொடு நெறியன்றே தொன்னிலங்கா வலவென்றார்.

(இ-ள்.) இவ்விதமாக மனுச்சோழர் தமதுமந்திரிகளை நிந்தித்துச் சொல்ல, அவ்வரசனுக்கெதிரே நிற்கின்ற புத்திசாலிகளாகிய மந்திரிகள், நிலைபெற்ற தரும சாஸ்திரவிதிப்படி நடக்கின்ற இவ்வுலகத்தில் இதுபோலப்பசுக்கொலைகள் முன்பு நடந்திருத்தலால் அதுகாரணமாக அப்புதல்வனைக் கொல்லுதல் முறைமையல்ல; (அதேனென்றால்) வேதத்திற் சொல்லியபடியே பிராயச்சித்தஞ்செய்வது தொ

காலமாக அனுஷ்டித்துவருகின்ற விதியன்றோ? பழமையாகிய உலகத்தைக் காக்கின்ற அரசனே என்றார்கள்.—எ-று. (௩௮)

அவ்வண்ணந் தொழுதுரைத்த வமைச்சர்களை முகநோக்கி
மெய்வ்வண்ணந் தெரிந்துணர்ந்த மனுவென்னுந் திறல்வேந்தன்
இவ்வண்ணம் பழுதுரைத்தீ ரென்றெரியி னிடைத்தோய்ந்த
செவ்வண்ணக் கமலம்போன் முகம்புலர்ந்து செயிர்த்துரைப்பான்.

(இ-ள்.) நீதியினுண்மையை இப்படிப்பட்டதென்று ஆராய்ந்தறிந்த மனு என்னும் பெயரையுடைய வல்லமைபொருந்திய சோழராஜாவானவர் அப்படி வணங்கிச்சொல்லிய மந்திரிகளின் முகத்தைப் பார்த்து, (உயிர்க்கு உயிர்ப்பழி வாங்கவேண்டுமென்று என்றுச்சொல்லப்பட்ட தருமநெறியை நீங்கள்) இவ்வாறு பழுதுபடச் சொன்னீர்களென்று நெருப்பிலிட்ட சிவந்த நிறத்தையுடைய தாமரைமலரைப்போல முகம்வாடிக் கோபித்துச் சொல்லுவார்.—எ-று. (௩௯)

அவ்வுரையில் வருநெறிக ளவைநிற்க வறநெறியின்
செவ்வியவுண் மைத்திறநீர் சிந்தைசெயா துரைக்கின்றீர்
எவ்வுலகி லெப்பெற்ற மிப்பெற்றித் தாமிடரால்
வெவ்வுயிர்த்துக் கதறிமணி யெறிந்துவிழுந் ததுவிளம்பீர்.

(இ-ள்.) (மந்திரிகளே!) நீங்கள் சொல்லுகின்ற அவ்வேதவாக்கியங்களில் தோற்றுகின்ற பிராயச்சித்த விதிகள்நிற்க, தருமவழியினதுசெம்மையாகிய உண்மைத்திறத்தை நீங்கள் மனதிற் (கொஞ்சமும்) கவனியாமல் சொல்லுகின்றீர்கள்; முன் எந்தத்தேசத்திலே எந்தப்பசுவானது (கன்றையிழந்ததனாலுண்டாகிய) இப்படிப்பட்ட துன்பத்தினால் பெருமூச்சுவிட்டழுது ஆராய்ச்சிமணியை யடித்து விழுந்தது சொல்லுங்கள்.—எ-று.

எந்தத்தேசத்தில், எந்தக்காலத்தில், எந்தப்பசு, இத்தன்மையாகிய துன்பத்தினால் மணியை யசைத்தது? இல்லை; ஆதலால், மானிடஜன்ம மெடுக்கவேண்டியது தவக்குறைவால் மனிதர்க்குள்ள அறிவைப் பெற்றுப் பசுவாகப் பிறந்தது என்பதைச் சோழர் குறிப்பித்தார். (௪௦)

போற்றிசைத்துப் புரந்தரன்மா லயன்முதலோர் புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்த பெருமானார் மேவியுறை திருவாரூர்த்
தோற்றமுடை யுயிர்கொன்றா னாதலினாற் றுணிபொருடான்
ஆற்றவுமற் றவற்கொல்லு மதுவேயா மெனநினைமின்.

(இ-ள்.) தேவேந்திரன், விஷ்ணு, பிரமன் முதலாகிய தேவர்கள் போற்றிசெய்து புகழ்ந்து வணங்கத் திருகயிலாயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் (தமது பூரணமிசத்துடனே) எழுந்தருளியிருக்கின்ற திருவாரூரிலே பிறந்த உயிரைக் கொன்றான்; ஆகையால், அதற்குத் துணிந்து செய்யவேண்டிய பிராயச்சித்தமாவது மிகவும் அவனைக் கொல்லுதேயாகுமென்று நினையுங்கள்.—எ-று.

"போற்றிசைத்து * * * வீற்றிருந்தபெருமானார் மேவியுறைதிருவாரூர்" என்பதன் வரலாறு:—ஒருகாலத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் புத்திரப்பேறுவேண்டித் திருக்கயிலாயத்தையடைந்து சிவபெருமானை நோக்கித்தவஞ்செய்ய அத்

தவத்திற்கிரங்கிச் சிவபெருமான் உமாதேவியாரோ டெழுந்தருளிவந்து காட்சி கொடுத்தருளலும், விஷ்ணுவானவர் பரமசிவனைமாத்திரம் வணங்கித் தாம் விரும்பிய வரத்தைப்பெற்று மகிழ்ந்தனர். அதைக்கண்ட உமாதேவியார் அதிக கோபங்கொண்டு விஷ்ணுவைப்பார்த்து ஏ கருநிறக்கள்வனே! நீ எம்மை வணங்காது அவமதித்தனையாதலால் இப்பரமசிவனால் கொடுக்கப்பட்ட புத்திரன் இவராலேயே அழிந்துபோகக்கடவன் என்று சபித்துவிட்டுப்போக உடனே விஷ்ணுவானவர் பயமுற்றுப் பரமசிவனையும் உமாதேவியாரையும் அவரது இளைய குமாரராகிய முருகக்கடவுளையும் வேதவிதிப்படித் தாபித்து வணங்கி அநேகவருடகாலந் தவஞ்செய்திருந்தனர். பின்னர் சிவபெருமான் உமாதேவியாரோ டெழுந்தருளுதலும், விஷ்ணுவானவர் முன்பு பார்வதியாரையும் பின்பு பரமனையும் வணங்கித் துதித்து நின்றனர். அப்பொழுது உமாதேவியார் கருணை சுரந்து ஏ விஷ்ணுவே! பரமன் பாலித்த வரமும், யான் கொடுத்த சாபமும் தவறாதாதலால், அவ்வா றழிந்தபுத்திரன் மீண்டும் உயிர்பெற்றிருக்கக்கடவனென்று வரமளித்து அந்தர்த்தானமாயினர். அவ்வாறே மன்மதன் புத்திரனாகத்தோன்றிப் பரமேஸ்வரனுடைய நெற்றிக்கண்ணினாலெரிந்து மீண்டும் உயிர்பெற்றெழுந்து அநங்கனாயினன். விஷ்ணுவானவர் திருப்பாற்கடலையடைந்து தாம் பூசித்த அம்மூவரையும் தமது மார்பினிடத்தில் வைத்துக்கொண்டு அறிதுயிலமர்ந்தனர். அவர்களும் அம்மார்பினிடத்து ஆடலமர்ந்தருளினர். பின்பு தேவேந்திரன் வாற்கலன் என்னு மசுரனால் துன்பப்பட்டுத் திருப்பாற்கடலையடைந்து விஷ்ணுவினிடந் தனது குறைகளைச் சொல்லி யிரக்க, அவர் அம்மூர்த்திகளைத் தந்து ஆசீர்வதித்து அவனை அத்துன்பத்தினின்று நீக்கிப் பாதுகாத்தருளினர். இஃதிவ்வாறிருக்க, பின்பொருகாலத்தில் தேவேந்திரன் வலன் என்னுமசுரனால் வருத்தமடைந்து இந்நிலவுலகத்தில் சோழநாட்டிலே கருவூரில் அரசாட்சிசெய்துகொண்டிருந்த முசுகுந்தச்சக்கரவர்த்தியை வரவழைத்து அவரால்அவ்வலாசுரனைக்கொன்றுசுகமாகத்தேவலோகத்தையடைந்து முசுகுந்தச்சக்கரவர்த்திக்குத் தேவநாட்டின்பலவளங்களையுங்காட்டித் தனது பூஜாலயத்துட்செல்ல, அங்கு விஷ்ணுவினால் கொடுக்கப்பெற்ற அச் சோமாஸ்கந்தமூர்த்திகள் தம்மைப் பூவுலகிற்கொண்டுபோய்த் தாபிக்கும்படி முசுகுந்தச்சக்கரவர்த்திக்குக் குறிப்பித்தனர். பின்பு தேவேந்திரன் முசுகுந்தரைப்பார்த்து என்னிடத்துள்ள பொருள்களில் உமக்கு யாது வேண்டுமென்ன, அவர் தேவேந்திரனுடைய வேண்டுகோளின்படியே அம்மூர்த்திகளைக் கேட்டனர். அதற்குத் தேவேந்திரன் விஷ்ணுவின் உத்தரவின்றி முடியாதென்றுசொல்ல, பின்பு அவருத்தரம்பெற்றுவந்து கேட்டனர். பின் அதனை மறுத்தற்கஞ்சி வஞ்சிக்கவேண்டி அம்மூர்த்திகளைப்போல விசுவகர்மாவைக்கொண்டு ஆறுமூர்த்திகளைத் தனித்தனி சிருட்டித்துக்கொடுக்க அவர்களைப் பெறாமல் தடுத்துப் பின் அவ்வுண்மைமூர்த்திகளைப்பெற்று மகிழ்ந்து அவரோடு அந்த ஆறுமூர்த்திகளையும் இந்நிலவுலகத்திற் கொண்டுவந்து விஷ்ணுவினாற் பூசித்த மூர்த்தியைத் திருவாரூரிலும், மற்றைய ஆறுமூர்த்திகளையும் திருநாகைக்காரோணம்-திருநள்ளாறு - திருக்காறாயல்-திருக்கோளரியூர்-திருவான்மியூர்-திருமறைக்காடு என்னுஞ் சிறந்த தலங்களிலும் பிரதிஷ்டைசெய்துபூசித்துச் சிவப்பிரசாதம்; பெற்றனர் என்க.

திருவாரூரிற் பிறந்த எவ்வகைப்பட்ட வுயிர்களும் சிவகணங்களென்பதும், அவைகள் முத்தியடைதல் சித்தமென்பதும் சர்வப்பிரசித்தம். இங்ஙனமாக, இவ

னும் இத்திருவாரூரிற்பிறந்த வுயிரைக் கொன்றுனுதலால், அதனுலுண்டாகின்ற பாவம்மிகப்பெரிது. இனி, அப்பாவ நீங்குதற்கு அவனைக் கொல்லுவதே பிராயச்சித்தமாமென்பது தோன்ற "ஆற்றவுமற் றவற்கொல்லு மதுவேயா மெனநினைமின்" என்றூர். (சுக)

எனமொழிந்து மற்றிதனுக் கினியிதுவே செயலிவ்வான்
மனமழியுந் துயரகற்ற மாட்டாதேன் வருந்துமிது
தனதுறுபே ரிடர்யானுந் தாங்குவதே கருமமென
அநகனரும் பொருணினைந்தா னமைச்சருமஞ் சினரகன்றூர்.

(இ-ள்.) என்று இவ்விதமாக மனுச்சோழர் மந்திரிகளுக்குச் சொல்லி இனிப் பசுக்கொலைக்குப் பதிலாக இவனைக் கொல்வதே தகுந்த செயலாகும். (அதேனென்றல்) இப்பசுவானது மனம் வருந்துகின்ற துன்பத்தை நீக்கமாட்டாதவனுகிய யானும், வருத்தப்படுகின்ற இப்பசுவினது பெருந்துன்பத்தைப்போலப் புத்திரனை யிழந்து அதனுல் துன்பமடைவதே தகுதியென்று அம்மனுநீதிச்சோழர் அவ்வரிய செய்கையைச் செய்யத் துணிந்தார்; (அதைக்கேட்ட) மந்திரிகளும் அச்சப்பட்டு அவ்விடத்தினின்றும் நீங்கித் தூரத்திற் சென்றூர்கள்.—எ-று.

மன்னவன்றன் மைந்தனையங் கழைத்தொருமந் திரிதன்னை
முன்னிவனை யவ்வீதி முரண்டேர்க்கா லூர்கவென
அன்னவனு மதுசெய்யா தகன்றுதன்ற னுயிர்துறப்பத்
தன்னுடைய குலமகனைத் தான்கொண்டு மறுகணைந்தான்.

(இ-ள்.) மனுச்சோழர் தம்முடைய புத்திரனை அங்கு வரவழைத்து ஒரு மந்திரியைப் பார்த்து இப்புத்திரனை முன்னே (இப்பசுவின்கன்றிறந்த) அவ்வீதியிலேயே வலிய தேர்க்காலிலிட்டுத் தேரை நடத்தக்கடவையென்று கட்டளையிட, அந்த மந்திரியும் அப்படிச்செய்ய மனமில்லாமல், அவ்விடத்தினின்றும் நீங்கித் தன்னுடைய அருமையாகிய உயிரைவிட்டு இறக்க, (அதைக்கேட்ட மனுச்சோழரானவர்) தம்முடைய குலத்திற்குரிய புத்திரனைத் தாமே அழைத்துக்கொண்டு பசுவின் கன்றிறந்த வீதிக்குப் போயினுர்.—எ-று. (சுங)

ஒருமைந்தன் றன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
றருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் றேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோதான்.

(இ-ள்.) மனுச்சோழரானவர் தம்முடைய குலத்திற்குரிய அரசாட்சிசெய்வதற்கு ஒரு புத்திரன்தா னிருக்கின்றுனென்பதை நினையாமல், தருமத்தின் வழியே நடப்பது முறைமையென்று கருதி, தம்முடைய புதல்வனது மார்பில் தமது தேர்ச்சக்கரமானது பொருந்தும்படியாகத் தேரைநடத்தினுர்; (ஆதலால்) அருமையாகிய தேவாமுதத்தைப்போலும் (சுகத்தைக் கொடுக்கின்ற) அரசாட்சியானது அருமையானதோ? அல்லது இலேசானதோ?—எ-று. (சுச)

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர்பூ மழைபொழிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே யணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்க டொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான்.

(இ-ள்.) உயிர்களின்மேல்வைத்த தண்ணருளாகிய வெள்ளைக்குடையினை யுடைய மனுச்சோழரது செய்கையைக் கண்டு சகிக்காதவர்களாய்ப் பூமியிலுள்ளவர்கள் கண்ணீராகிய மழையைச் சொரிந்தார்கள்; தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள்; அப்பொழுது அம்மனுச்சோழரது கண்ணுக்கெதிரே அழகிய திருவீதியில் இளமைபொருந்திய ரிஷபவாகனத்தின்மேல் தேவர்கள் சூழ்ந்து வணங்கும்படி வீதிவிடங்கப்பெருமானாகிய தியாகேசர் காட்சிகொடுத்தருளினார்.

சடைமருங்கி விளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கி லுமையாளு மெம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையுமுன் கண்டரசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற் கருள்கொடுத்தான்.

(இ-ள்.) சடையினிடத்தில் விளங்குகின்ற மூன்றாம்பிறைச்சந்திரனையும், தனிமையாக ஒவ்வோர் காலத்தில் விழிக்கின்ற அக்கினிக்கண்பொருந்திய அழகிய நெற்றியினையும், இடப்பாகத்தில் பார்வதியாரையும், எவ்விடங்களிலும் பூதகணங்கள் நெருங்கியிருக்கின்ற பெருமையினையும் மனுச்சோழர் தமக்கு எதிரே கண்டு துதித்து நிற்க, ரிஷபவாகனருடராகிய அவ்வீதிவிடங்கப்பெருமானாரும், வல்லமைபொருந்திய அச்சோழருக்குத் திருவருள் புரிந்தார்.—எ-று. (சசு)

அந்நிலையே யுயிர்பிரிந்த வான்கன்று மவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்று மந்திரியு முடனெழலும்
இன்னபரி சானனென் றறிந்திலன்வேந் தனும்யார்க்கும்
முன்னவனே முன்னின்றான் முடியாத பொருளுளதோ.

(இ-ள்.) அப்படிக் காட்சிகொடுத்தபொழுதே உயிர்விட் டிறந்துகிடந்த பசுவின் கன்றும், அந்த மனுச்சோழருடைய அரசாட்சிக்குரிய ஒப்பற்ற புத்திரனும், (அப்புத்திரனுக்காகத் தன்னுயிர்விட் டிறந்த) மந்திரியும் உடனே உயிர் பெற்றெழுந்திருக்கவும், அதைக்கண்ட மனுச்சோழரும் தமக்குண்டாகிய ஆநந்தத்தினால் தாம் இத்தன்மையுடையவொன் றறியாதவராயினார். எப்படிப்பட்டவர்களுக்கும் முதல்வராகிய சிவபெருமானே முன்னிற்பாரானால், அவரால் முடியாதபொருள்களும் உண்டோ? (இல்லை.)—எ-று. (சஎ)

அடிபணிந்த திருமகனை யாகமுற வெடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயர நீங்கினா னிலவேந்தன்
மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரனீங் கியதன்றே.

(இ-ள்.) பூமியை அரசாட்சி செய்கின்ற மனுச்சோழரானவர் தம்முடைய பாதங்களில் விழுந்து வணங்கின அழகிய புத்திரனை மார்பில் பொருந்த எடுத்

துத் தழுவி மிகவும் மகிழ்ச்சியடைந்து, கொடிய துன்பத்தினின்றும் நீங்கினூர்; மடியானது சுரந்து பொழிகின்ற மதுரம்பொருந்திய பாலை உயிர்பெற்றெழுந்த இளங்கன்றும் சந்தோஷித்து உண்டு அதனால் பூமியை நனைக்க, கன்றிழந்த காரணமாக வந்த தாய்ப்பசுவும் தனது துன்பத்தினின்றும் நீங்கினது.—எ-று. ()

பொன்றயங்கு மதிலாரூர்ப் பூங்கோயி லமர்ந்தபிரான்
வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே யருள்கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்
கென்றுமெளி வரும்பெருமை யேழுலகு மெடுத்தேத்தும்.

(இ-ள்.) பொன்மயமாக விளங்குகின்ற மதில்சூழ்ந்த திருவாரூரில் பூங்கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற வீதிவிடங்கப் பெருமான் வெற்றிபொருந்திய மனுச்சோழருக்கு அவ்வீதியிலே காட்சிகொடுத்தருளி மறைந்தருளிய பெருங்கருணைத்திறத்தைக் கண்டு, தம்முடைய அடியார்களுக்கு எக்காலத்திலும் எளிதாக வந்து அனுக்கிரகஞ்செய்யும் பெருமையைக் குறித்து ஏழுலகத்தாரும் புகழ்வார்கள்.—எ-று.

*பூங்கோயிலென்பது - ஆலயத்தின் திருப்பெயர். (௪௯)

இனையவகை யறநெறியி லெண்ணிறந்தோர்க் கருள்புரிந்து
முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேற்
புனையுமுரை நம்மளவிற் புகலலாந் தகைமையதோ
அனையதனுக் ககமலரா மறவனூர் பூங்கோயில்.

(இ-ள்.) இவ்விதமாகத் தருமவழியில் அளவில்லாத அடியார்களுக்குத் திருவருள் புரிந்து வீதிவிடங்கப்பெருமான் மகிழ்ச்சியோடு எழுந்தருளியிருக்கப் பெற்றுள்ளதாகிய பழமைபொருந்திய திருவாரூரைக் குறித்துப் புகழ்ந்து சொல்லுஞ் சிறப்பானது நம்மால் சொல்லப்படுந் தகுதியையுடையதோ? அப்படிப்பட்ட திருநகரத்திற்குச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற பூங்கோயிலானது இதயகமலம்போல் இருக்கின்றது.—எ-று. (௫௦)

திருவாரூர்ச்சிறப்பு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக செய்யுள் ௯௩௫.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கூட்டச்சிறப்பு.

பூத நாயகர் புற்றிடங் கொண்டவர்
ஆதி தேவ ரமர்ந்தபூங் கோயிலிற்
சோதி மாமணி நீள்சுடர் முன்றில்சூழ்
மூதெ யிற்றிரு வாயின்முன் னுயது.

(இ-ள்.) பூதகணங்களுக்கு நாயகரும், புற்றினை யிடமாகக்கொண்டருளி யவரும், முதற்கடவுளும் ஆகிய சிவபெருமானார் எழுந்தருளியிருக்கின்ற பூங்கோயிலினிடத்தில், பிரகாசிக்கின்ற மாணிக்கங்களின் மிகுந்த கிரணங்களையுடைய திருமுற்றத்தைச் சூழ்ந்த பழய மதில்கள்பொருந்திய திருவாயிலின்முன்னே யுள்ளது ; (அது யாதென்றால்,)—எ-று. (க)

பூவார் திசைமுக னிந்திரன் பூமிசை
மாவா ழகலத்து மான்முதல் வானவர்
ஓவா தெவரு நிறைந்துறைந் துள்ளது
தேவா சிரிய னெனுந்திருக் காவணம்.

(இ-ள்.) தாமரைமலரில் இருக்கின்ற பிரமதேவனும், தேவேந்திரனும், அம்மலரில் வசிக்கும் இலட்சுமியானவள் வாழ்கின்ற மார்பினையுடைய விஷ்ணு முதலாகிய தேவர்களுமாகிய எல்லாரும் விட்டுநீங்காமல் நிறைந்துவசிக்கப்பெற்று ள்ளதாகிய தேவாசிரியனென்னும் திருப்பெயரையுடைய அழகிய மண்டபம்.

விஷ்ணுப் பிரமேந்திராதி தேவர்கள் யாவரும் சிவபெருமானது திருவருளைப் பெறுதற்பொருட்டு வந்து சேர்தற் கிடமாதல்பற்றித் தேவாசிரியமண்டபமென்றாயிற்று; அது சந்நிதானத்தின் கீழ்ப்பாலுள்ள ஆயிரக்கால்மண்டபம். நிறைந்துறைந்துள்ளதாகிய தேவாசிரியனென்னுந் திருக்காவணம் திருவாயின்முன்னுயது எனமேற்செய்யுளோடு கூட்டிமுடிக்க. (உ)

அரந்தை தீர்க்கு மடியவர் மேனிமேல்
நிரந்த நீற்றொளி யானிறை தூய்மையாற்
புரந்த வஞ்செழுத் தோசை பொலிதலாற்
பரந்த வாயிரம் பாற்கடல் போல்வது.

(இ-ள்.) (அத்தேவாசிரியமண்டபமானது)பிறவித்துன்பத்தை யொழித்த சிவனடியார்கள் திருமேனியில் தரித்த விபூதியின் பிரகாசத்தினாலும், நிறைந்த பரிசுத்தத்தினாலும், (தன்னை உச்சரித்தவர்களைக்) காப்பாற்றுதற்குரிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதுதலினாலுண்டாகின்ற ஓசையானது பொலிந்து தோன்றுதலினாலும் விசாலமாகிய ஆயிரந் திருப்பாற்கடலை யொத்துள்ளது.—எ-று. (ங)

அகில காரணர் தாள்பணி வார்கடாம்
அகில லோகமு மாடற் குரியரொன்
றகில லோகத்து ளார்க ளடைதலின்
அகில லோகமும் போல்வ ததனிடை.

(இ-ள்.) சர்வகாரணராகிய சிவபெருமானது திருவடியை வணங்குகின்ற அடியார்கள் எல்லாவுலகங்களையும் (தமக்குச் சொந்தமாக) ஆளுதற்குரியவர்கள் என்று கருதி,(அக்கடவுளை வணங்கும்பொருட்டு) எல்லாவுலகத்திலுள்ளவர்களும் அதனிடையில் சேர்ந்து வசித்திருப்பதனால் (அத்தேவாசிரியமண்டபமானது) சர்வலோகத்தையும் ஒத்திருந்தது.—எ-று. (௪)

அத்தர் வேண்டிமுன் னாண்டவ ரன்பினன்
மெய்த்த ழைத்து விதிர்ப்புறு சிந்தையார்
கைத்தி ருத்தொண்டு செய்கடப் பாட்டினர்
இத்தி றத்தவ ரன்றியு மெண்ணிலார்.

(இ-ள்.) சிவபெருமான் தாமே விரும்பி முன் அடிமைகொள்ளப்பட்டவர்களும், (அக்கடவுளது திருவருளைப் பெறவேண்டுமென்னும்) அன்பினால் தேகம்பூரித்து இளகியிருக்கின்ற திருவுள்ளத்தையுடையவர்களும்,கைகளினாற் செய்யுந் திருத்தொண்டுகளைச்செய்தலே உறுதிப்பாடாக வுடையவர்களுமாகிய இத்தகைய பத்தியுடையவர்களன்றியும் வேறுவகையால் அன்புசெலுத்துகின்ற அடியார்களும் (அம்மண்டபத்தில்) அநேகரிருக்கின்றனர்.—எ-று.

கைத்திருத்தொண்டு = சரியை: அது, சிவபெருமான் பொருட்டுத் திருநந்தனவனம் வைத்தல்,காலத்திற்குத் தக்க பத்திர புட்பமெடுத்துத் திருப்பள்ளித்தாம மமைத்தல், சந்நிதானத்திற் புல் முதலியன களைதல், திருவலகிடுதல், திருமெழுகிடுதல், திருவிளக்கேற்றல் முதலியனவாம். வேறு வகையால் அன்புசெலுத்துதலாவது கிரியை யோக ஞானங்களினால் பெருமானை வணங்குதல். (௫)

மாசி லாத மணிதிகழ் மேனிமேற்
பூசு நீறுபோ லுள்ளும் புனிதர்கள்
தேசி னாலெத் திசையும் விளக்கினார்
பேச வொண்ணாப் பெருமை பிறங்கினார்.

(இ-ள்.) களங்கமில்லாத ருத்திராக்ஷமணிகள் விளங்குகின்ற திருமேனியின்மேல் தரிக்கின்ற விபூதியைப்போலத் தமதுள்ளத்திலும் பரிசுத்தத்தையுடையவர்கள்; (தமது சிவஞானமாகிய) பிரகாசத்தினால் எந்தத் திக்குகளையும் விளங்கச்செய்தவர்கள்; இப்படிப்பட்டவர்களென்று யாவராலும்அளவிட்டுச் சொல்லப்படாத பெருமையினால் விளங்குகின்றவர்கள்.—எ-று.

சிவபெருமானது நேத்திரத்தினின் றுண்டாகிய கண்ணீரில் தோன்றினமையாலும், அதைத் தரிக்கும் ஆன்மாக்களின் பாவத்தைப் போக்குதலினாலும் மணிக்கு மாசின்மை கூறப்பட்டது; நீறு ஆன்மாக்களின் பாசத்தை நீற்றித் தேகத்திற்குப் பொலிவைத் தருவதுபோல, உள்ளத்தும் அவா, வெகுளி, மயக்கமுதலிய குணங்களையொழித்துப் புனிதத்துவமடைதலின் "பூசுநீறுபோலுள்ளும்புனிதர்கள்" என்றார். தேசினாலெத்திசையும் விளக்குதலாவது:—தம்மைப்போல யாவரையும் சிவஞானச்செல்வர்களாக்குதல். (௬)

பூத மைந்து நிலையிற் கலங்கினும்
மாதொர் பாகர் மலர்த்தாண் மறப்பிலார்
ஓது காத லுறைப்பி னெறிநின்ருர்
கோதி லாத குணப்பெருங் குன்றனர்.

(இ-ள்.) ஐந்து பூதங்களும் தத்தம் நிலையினின்று மாறினகாலத்திலும் பார்வதியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளை மறவாதவர்கள்; சதாகாலமுந் துதிசெய்துகொண்டிருக்கின்ற அன்பினது உறைப்பின் வழியே நின்றவர்கள்; குற்றமற்றகுணங்களினல் பெரியமலையை ஒத்தவர்கள்.—எ-று.

பூதமைந்தும் நிலையிற் கலங்கலாவது:—மகாப்பிரளயகாலத்து ஐம்பூதங்களும் தத்தங் காரணமாகிய தன்மாத்திரைகளிஃ ஒடுங்குதல். மறப்பிலார் என்றதனல், எப்பொருளும் நிலைகலங்குதற்குரிய அப்பிரளயகாலத்தும் தம்நிலை கலங்காதவரென்பது வெளியாகியது. (எ)

கேடு மாக்கமுங் கெட்ட திருவினர்
ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினர்.

(இ-ள்.) பொருளிழத்தலால் வருங் கெடுதியும், அப்பொருள் வளர்தலால் வரும் ஆக்கமும் ஒழிந்த அருட்செல்வத்தையுடையவர்கள்;ஓட்டையும் செம்பொன்னையும் (உயர்வுதாழ்வு கருதாமல்) சமமாகப் பார்க்கின்றவர்கள்; தம்மிடத்துத் தோன்றுகின்ற அன்பினல் சிவபெருமானை வணங்குவதேயல்லாமல் மோக்ஷத்தையும் விரும்பாத அன்பின் உறுதியினல் விளங்குகின்றவர்கள்.—எ-று.

கேடும் ஆக்கமுமாகிய விரண்டும் ஒருவரிடத்து நிலைபெறுமல் சகடக்கால் போல மாறிவருதலின் அது நிலையாமையுடையதென்பதும் அவ்விரண்டுமெல்லாத அருட்செல்வமே நிலையுள்ளதென்பதுந்தோன்ற "கேடுமாக்கமுங் கெட்டதிருவினர்" என்றும்,அவ்வாறு நிலையாமை யுணர்ந்தவர்களுக்கு ஆக்கப்பொருளும் ஆக்கமில் பொருளும் சமமாய்த் தோன்றுதலின் "ஓடுஞ்செம்பொனு மொக்கவே நோக்குவார்" என்றும், தாம் சிவபெருமானை வழிபடுவதேயன்றி வீட்டையேனும் பயனகக்கருதின் அதுவும் பயன்குறித்ததாமாதலின் "வீடும்வேண்டா" என்றுங் கூறினர். (அ)

ஆரங் கண்டிகை யாடையுங் கந்தையே
பார மீசன் பணியல தொன்றிலார்
ஈர வன்பினர் யாதுங் குறைவிலார்
வீர மென்னல் விளம்புந் தகையதோ.

(இ-ள்.) தரிக்கும் ஆரமாவது உருத்திராக்ஷகண்டிகையேயாம்; உடுக்கும் வஸ்திரமுங் கந்தையேயாகும்; தமக்குப் பெரிதாக நினைத்துச்செய்வது சிவபெருமானதுதிருப்பணியேயல்லது வேறொருதொழிலு மில்லாதவர்கள் ; சாந்தமாகியபேரன்பினையுடையவர்கள்; கிடைத்தவளாயில்சந்தோஷிப்பதேயன்றிஒன்றும்

குறைவில்லாதவர்கள்; (அப்படிப்பட்ட அடியார்களின்) பத்தியின் வலிமையானது என்றால் அளவுபடுத்திச்சொல்லுந் தகுதியையுடையதோ?—எ-று.

பதக்கம் முத்துமாலை முதலிய அணிகளைவிரும்பாது மோட்சசாதனமாகிய ருத்திராக்ஷகண்டிகையையே விரும்பி யணிவாரென்பதும், நல்ல பீதாம்பர முதலிய ஆடைகளும் பெருமையன்றென்று நீக்கி இடையில் ஓராடையாயினும் கோவணமாயினும் இல்லாதிருத்தல் கூடாதென்னும் விதியைக் கருதிக் கந்தையையே சிறந்த ஆடையாக அணிவாரென்பதுந் தோன்ற "ஆரங் கண்டிகை யாடையுங் கந்தையே" என்றார். (கூ)

வேண்டு மாறு விருப்புறும் வேடத்தர்
தாண்ட வப்பெரு மான்றனித் தொண்டர்க
ணீண்ட தொல்புக ழார்தந் நிலைமையை
ஈண்டு வாழ்த்துமே னென்னறிந் தேத்துகேன்.

(இ-ள்.) தங்கள் தங்களுக்கு வேண்டியபடியே விரும்பித் தரித்துக்கொள்ளுகின்ற பல திருவேடங்களை யுடையவர்களும், திருநடனஞ்செய்தருளுகின்ற தியாகேசரது ஒப்பற்ற திருத்தொண்டர்களும், நீடித்த பழமைபொருந்திய புகழினையுடையவர்களும் ஆகிய அடியார்களின் அன்பின்தன்மையை இப்பொழுது துதிக்கத் தொடங்கிய யான் அவரது பெருமைகளில் எதை அறிந்து எடுத்துத் துதிப்பேன்.—எ-று.

திருவேடங்களாவன:— கவசம், கண்டிகை, முண்டனம், சடை, திருநீறு தரித்தல் முதலியன. "வேண்டுமாறுவிருப்புறும்வேடத்தர் தாண்டவப் பெருமான்" என்பதற்கு அடியார்களினிமித்தம் தமக்கு வேண்டியபடியே விரும்பித் தரித்துக்கொள்ளுகின்ற பல திருவேடங்களையுடையவராகிய தியாகேசர் என்று சிவபெருமானுக்கு விசேடணமாக்குவாருமுளர். (௰)

இந்த மாதவர் கூட்டத்தை யெம்பிரான்
அந்த மில்புக ழாலால சுந்தரன்
சுந்த ரத்திருத் தொண்டத் தொகைத்தமிழ்
வந்து பாடிய வண்ண முரைசெய்வாம்.

(இ-ள்.) இத்தகைய மகத்தாகிய தவத்தினையுடைய அடியார்களின் திருக்கூட்டத்தைக் குறித்து, எமது பெருமானாகிய அளவில்லாத புகழினையுடைய ஆலாலசுந்தரரானவர் அழகிய "திருத்தொண்டத்தொகை" என்னும் தமிழ்ப்பதிகத்தைத் திருக்கயிலாயத்தினின்றும் இந்நிலவுலகத்தில் திருவவதாரஞ்செய்து பாடியருளிய வகையினைச் சொல்லத்தொடங்குகின்றோம்.—எ-று. (கக)

திருக்கூட்டச்சிறப்பு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக செய்யுள் கஅசு.



பரவைநாச்சியார். ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள். சங்கிலிநாச்சியார்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தடுத்தாட்கொண்டபுராணம்.

கங்கையு மதியும் பாம்புங் கடுக்கையு முடிமேல் வைத்த
அங்கண ரோலை காட்டி யாண்டவர் தமக்கு நாடு
மங்கையர் வதன சீத மதியிரு மருங்கு மோடிச்
செங்கயல் குழைக ளோடுந் திருமுனைப் பாடி நாடு.

(இ-ள்.) கங்காநதியையும், பிறைச்சந்திரனையும், சர்ப்பத்தையும்,கொன்றைமாலையையுந் திருமுடியில் தரித்தருளிய சிவபெருமான் முறி யோலையைக் காட்டி அடிமைகொள்ளப்பெற்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு ஜனனதேசமாவது, மாதர்களின் முகமாகிய குளிர்ந்த சந்திரனுடைய இரண்டு பக்கத்திலும் அவர் கண்களாகிய கெண்டைமீன்கள் ஓடிச்செவிகளைத் தாவுகின்ற திருமுனைப்பாடி நாடாகும்.—எ-று. (க)

பெருகிய வளத்தான் மிக்க பெருந்திரு நாடு தன்னில்
அருமறைச் சைவ மோங்க வருளினா லவத ரித்த
மருவிய தவத்தான் மிக்க வளம்பதி வாய்மை குன்றாத்
திருமறை யவர்க ணீடுந் திருநாவ லூரா மன்றே.

(இ-ள்.) நிறைந்த பல வளங்களினால் மிகுந்திருக்கின்ற பெரிய அத்திருமுனைப்பாடி நாட்டில், அருமையாகிய வேதத்தின் சாரமாகிய சைவசமயமானது (உலகத்தில்) நிலைபெற்றோங்க, சிவபெருமானது திருவருளினால் (ஆலாலசுந்தரர்) திருவவதாரஞ்செய்தற்கிடமான மேன்மைபொருந்திய தவத்தினால் சிறந்த வளப்பத்தையுடைய பதியாவது, சத்தியந் தவறாத அழகிய பிராமணர்கள் மிகுந்திருக்கின்ற திருநாவலூராகும்.—எ-று.

வேதம் எல்லா நூல்களுக்கும் முதனூலென்பதும் அதிற் கூறப்படுஞ் சைவம் எல்லாமதங்களுக்கும் சிறந்த வேதசாரமென்பதுந் தோன்ற "அருமறைச் சைவம்" என்றார். இதனை "ஒரும்வேதாந்தமென் றுச்சியிற்பழுத்த -ஆராவின்ப வருங்கனிபிழிந்து-சாரங்கொண்ட சைவசித்தாந்தம்" என்பதனாலுணர்க; "அயர்வறச்சென்னியில்வைத்து ராசாங்கத்தி லமர்ந்ததுவைதிகசைவம்" என்றார் தாயுமானவரும். (உ)

மாதொரு பாக னார்க்கு வழிவழி யடிமை செய்யும்
வேதியர் குலத்துட் டோன்றி மேம்படு சடைய னாருக்
கேதமில் கற்பின் வாழ்க்கை மனையிசை ஞானி யார்பாற்
றீதகன் றுலக முய்யத் திருவவ தாரஞ் செய்தார்.

(இ-ள்.) உமாதேவியை இடப்பாகத்திலுடைய சிவபெருமானுக்கு வமிச பரம்பரையாக அபிஷேக பூசா நைவேத்திய முதலாகிய அகத்தடிமைத்தொண்டு செய்தொழுகுகின்ற ஆதிசைவர் குலத்தில் பிறந்து மேன்மைபெற்றிருந்த சடைய நாயனாரென்பவருக்குக் குற்றமற்ற கற்பினையுடைய இல்வாழ்க்கைக்குரிய மனைவியாராகிய இசைஞானியாரிடத்தில் உலகத்தார் தீய நெறியினின்றும் நீங்கி மோக்ஷத்தையடையும்பொருட்டு (ஆலாலசுந்தரர்) ஒரு புத்திரராகத் திருவவதாரஞ் செய்தருளினார்.—எ-று. (௩)

தம்பிரா னருளி னாலே தவத்தினான் மிக்கார் பெற்று
நம்பியா ரூர னென்றே நாமமுஞ் சாற்றி மிக்க
ஐம்படைச் சதங்கை சாத்தி யணிமணிச் சுட்டி சாத்திச்
செம்பொனு ணரையின் மின்னத் தெருவிற்றே ருருட்டு நாளில்.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருவருளினாலே தவத்திற்சிறந்த பெரியோர்கள் ஒன்றாகச் சேர்ந்து அவருக்கு நம்பியாரூரனென்று நாமகரணஞ்செய்து, சிறப்பு மிகுந்த பஞ்சாயுதத்தையும் சிறுசதங்கையையும் முறையே மார்பிலும் கால்களிலும் தரித்து, அழகிய ரத்தினச்சுட்டியைச் சிரசிலணிந்து, செம்பொன்னாலாகிய அரைஞாணது இடையில் விளங்க வீதியில் சிறுதேருருட்டி விளையாடுகின்றநாள்களில் (ஒருநாள்.)—எ-று.

ஐம்படையாவது, சிறுவர்களைத் துர்த்தேவதைகளினின்றுங் காத்தற்பொருட்டுக் காவற்கடவுளாகிய விஷ்ணுமூர்த்தியின் சங்கு சக்கர கதா கட்க கோதண்டமென்னும் பஞ்சாயுதங்களின் வடிவமாகச் செய்து சிறுவர்களின் மார்பிற் கோத்தணியும் ஒருவகை ஆபரணம். (௪)

நரசிங்க முனையரென்னு நாடுவா ழரசர் கண்டு
பரவருங் காதல் கூரப் பயந்தவர் தம்பாற் சென்று
விரவிய நண்பி னாலே வேண்டினர் பெற்றுத் தங்கள்
அரசிளங் குமரர்க் கேற்ப வன்பினன் மகண்மை கொண்டார்.

(இ-ள்.) அந்நாட்டில் அரசுசெய்து வாழ்கின்ற நரசிங்கமுனையரென்னும் அரசரானவர் (அப்புத்திரனைப்) பார்த்து அவர்மேல் சொல்லுதற்கரிய ஆசையதிகரித்தலால் அவரது தந்தையாராகிய சடையநாயனாரிடத்திற்போய் முன்பு அவருக்குந் தமக்கு முண்டாயிருந்த சிநேகத்தினால் (அந்நம்பியாரூரரைத் தமக்கு அபிமானபுத்திரராகக்கொடுக்கக்) கேட்டுப் பெற்றுக்கொண்டு தங்கள் ராஜவமிசத்திற் பிறந்த சிறுகுழந்தைக் கொப்ப அன்போடு புத்திரராகக்கொண்டார். ()

பெருமைசா லரசர் காதற் பிள்ளையாய்ப் பின்னுந் தங்கள்
வருமுறை மரபின் வைகி வளர்ந்துமங் கலஞ்செய் கோலத்
தருமறை முந்நூல் சாத்தி யளவின்றுல் கலைக ளாய்ந்து
திருமலி சிறப்பி னோங்கிச் சீர்மணப் பருவஞ் சேர்ந்தார்.

(இ-ள்.) (அந்நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள்) பெருமைபொருந்திய நரசிங்கமுனையரது அபிமானபுத்திரராய் அதன்பின்னுந் தங்கள் சாதியில் வழுவாத ஒழுக்கத்தை அனுஷ்டித்து வளர்ந்து மங்கலகரமாகிய உபநயனஞ்

செய்யும் பருவத்தில் அருமையாகிய வேதவிதிப்படியே பூணூல் தரித்து, அதன் பின் அளவில்லாத வேதசாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து, நிறைந்த செல்வச் சிறப்பினால் வளர்ந்து நன்மைபொருந்திய திருமணப்பருவத்தையடைந்தார்.

தங்கள் வருமுறைமரபின் வைகலாவது:—தமது சுற்றத்தினராகிய ஆதி சைவப்பிராமணர்களிடத் தன்றி மற்றையரிடத்தில் புசித்தல் முதலியவைகளைச் செய்வதற் குடன்படாமை முதலியன. (சு)

தந்தையார் சடைய னார்தந் தனித்திரு மகற்குச் சைவ
அந்தணர் குலத்துட் டங்க ளரும்பெரு மரபுக் கேற்ப
வந்ததோர் சிறப்பிற் புத்தூர்ச் சடங்கவி மறையோன் றன்பாற்
செந்திரு வனைய கன்னி மணத்திறஞ் செப்பி விட்டார்.

(இ-ள்.) தந்தையாராகிய சடையநாயனார் தம்முடைய ஒப்பற்ற செல்வப்புத்திரருக்கு ஆதிசைவப்பிராமணகுலத்தில் தங்களுடைய அருமையாகிய சிறந்த கோத்திரத்திற்கேற்ப வந்த சிறப்பினையுடையவராய்ப் புத்தூரில் வாழ்கின்ற சடங்கவிசிவாசாரியரிடத்தில் இலட்சுமிக்கொப்பாகிய அவரது புத்திரியைத் திருக்கலியாணஞ்செய்வதற்காகக் கேட்டனுப்பினார்.—எ-று.

"அரும்பெரு மரபுக் கேற்ப வந்த" என்றதனால், சிவபெருமானுடைய திருமுகத்தினின்றுந் தோன்றிய ஐவகைக் கோத்திரத்தையுடைய ஆதிசைவராகிய தங்கொள்வகைக்கேற்ப விவாகஞ்செய்தற்குரிய கோத்திரமுடையவராகவந்தவென்று கொள்க. ஆதிசைவர்களின் ஐவகைக் கோத்திரங்களாவன:— கௌசிகர், காசிபர், பரத்துவாசர், கௌதமர், அகஸ்தியர் என்னும் ஐந்து சைவமுனிவர்களின் கோத்திரமும், அவ்வொவ்வொரு கோத்திரத்திலுந் தோன்றிய கிளைக்கோத்திரங்களுமாம். (எ)

குலமுத லறிவின் மிக்கார் கோத்திர முறையுந் தேர்ந்தார்
நலமிகு முதியோர் சொல்லச் சடங்கவி நன்மை யேற்று
மலர்தரு முகத்த னாகி மணம்புரி செயலின் வாய்மை
பலவுடன் பேசி யொத்த பண்பினா லன்பு நேர்ந்தான்.

(இ-ள்.) இவர் இன்ன குலத்தினரென்று அறியும் அறிவில் சிறந்தவர்களும், அவர்களின் கோத்திரமுறைமையையும் நன்றாகத் தெரிந்தவர்களுமாகிய நன்மைபொருந்திய (தமது சுற்றத்தாராகிய) விருத்தர்கள் சொல்ல, (அதைக்கேட்ட) சடங்கவிசிவாசாரியார் நன்மையாக அங்கீகரித்துக்கொண்டு முகமலர்ச்சியையடைந்து விவாகஞ்செய்வதைக் குறித்துப் பேசவேண்டிய பல சங்கதிகளையும் பேசிமுடித்து எல்லாவகையிலும் ஒத்திருக்கின்ற தன்மையினால் (தம்முடைய புத்திரியைச் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் திருமணஞ்செய்துகொடுக்க) அன்புடனே உடன்பட்டார்.—எ-று.

குலமுத லறிதலாவது:—ஒழுக்கம் - கல்வி-செல்வமுதலியவற்றால் சிறந்துவரு மியல்புடைமையை விசாரித்தறிதல். கோத்திரமுறை தேர்தலாவது:—மேற்சொல்லிய ஐவகைக்கோத்திரத்தினரும் ஒருவருக்கொருவர் சகோத்திரத்தினராயிருந்தால் கொள்ளல், கொடுத்தல் கூடாதாகையால் வேறு கோத்திரத்தாரென்பதும், அப்படி வேறு கோத்திரத்தாராயினும் கொள்வதற்கும் கொடுப்பதற்கும்

நெருங்கிய பந்துக்களாயிருக்கின்றாரென்பதும் விசாரித்துத் தெளிதல். மணம்புரி செயலின் வாய்மையாவது, பொருத்தம் நிமித்த முதலியன. (அ)

மற்றவ ரிசைந்த வார்த்தை கேட்டவர் வள்ள றன்னைப்
பெற்றவர் தம்பாற் சென்று சொன்னபின் பெருகு சிந்தை
யுற்றதோர் மகிழ்ச்சி யெய்தி மணவினை யுவந்து சாத்திக்
கொற்றவர் திருவுக் கேற்பக் குறித்தநா ளோலை விட்டார்.

(இ-ள்.) அச்சடங்கவிசிவாசாரியார் தமது புத்திரியைக் கலியாணஞ்செய்துகொடுக்கச் சம்மதித்துச் சொல்லிய வார்த்தையைக்கேட்டவர்கள் சுந்தரமூர்த்திசுவாமிகளைப்பெற்ற தந்தையாராகிய சடையநாயனாரிடத்திற்போய்ச் சொன்னபின்பு முன்னமே மகிழ்ச்சியடைந்திருக்கின்ற மனத்தில் பின்னும் பொருந்திய பெருமகிழ்ச்சியையடைந்து, திருமணச்செயலைத் தம்முடைய சுற்றத்தாருக்குச் சந்தோஷத்தோடு சொல்லி,நரசிங்கமுனையருடைய செல்வத்திற் கேற்ப முகூர்த்தநாளை நிச்சயித்து யாவரும் வரும்படியாகத் திருமணவோலை யனுப்பினார்.—எ-று.

மங்கலம் பொலியச் செய்த மணவினை யோலை யேந்தி
யங்கயற் கண்ணி னாரு மாடவர் பலரு மீண்டிக்
கொங்கலர்ச் சோலை மூதூர் குறுகினா ரெதிரே வந்து
பங்கய வதனி மாரு மைந்தரும் பணிந்து கொண்டார்.

(இ-ள்.) மங்கலகரமானது விளங்க எழுதிய திருமணவோலையை எடுத்துக்கொண்டு அழகிய கெண்டைமீனையொத்த கண்களையுடைய மாதர்களும் பல புருஷர்களும் நெருங்கிவந்து மணம்பொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த புத்தூரை யடைந்தார்கள்; அப்பொழுது சடங்கவி சிவாசாரியரது உறவினராகிய) தாமரைமலர்போன்ற அழகிய முகத்தினையுடையமாதர்களும் மைந்தர்களும் அவர்களை எதிர்கொண்டுபோய் வணங்கி (அத்திருமணவோலையைப்) பெற்றுக்கொண்டார்கள்.—எ-று. (கo)

மகிழ்ச்சியான் மணமீக் கூறி மங்கல வினைக ளெல்லாம்
புகழ்ச்சியாற் பொலிந்து தோன்றப் போற்றிய தொழில ராகி
யிகழ்ச்சியொன் றானு மின்றி யேந்துபூ மாலைப் பந்தர்
நிகழ்ச்சியின் மைந்த ரீண்டி நீண்முளை சாத்தி னார்கள்.

(இ-ள்.) சந்தோஷத்தோடு திருக்கலியாணமென்று யாவரும் அறியும்படிச் சொல்லி அதற்குச் செய்யவேண்டிய சுபகாரியங்களெல்லாம் புகழோடு விளங்கித்தோன்றும்படிச் செய்துமுடித்து ஒன்றிலுங் குறைவில்லாமல் பூமாலைகளைக் கட்டியிருக்கின்ற திருமணப்பந்தலில் ஆதிசைவப்பிராமணர்கள் அன்போடு நெருங்கி நீண்டுவளர்ந்த முளைப்பாலிகை சாத்தினார்கள்.—எ-று.

முளைசாத்தலாவது:—அங்குரார்ப்பணஞ்செய்தல்; அது, மங்கலங்களுக்குத் தொடக்கமாகச் சந்திரனை அதிதேவதையாக வைத்த கும்பத்திற் கருகில் பாலிற்கலந்த நவதானியங்களை மந்திரத்தோடு பாலிகைகளிற்பெய்து மண்ணிட்டு வளர்த்தல். (கக)

மணவினைக் கமைந்த செய்கை மாதினைப் பயந்தார் செய்யத்
துணர்மலர்க் கோதைத் தாமச் சுரும்பணை தோளி னாைப்
புணர்மணத் திருநாண் முன்னாட் பொருந்திய விதியி னாலே
பணைமுர சியம்ப வாழ்த்திப் பைம்பொனாண் காப்புச் சேர்த்தார்.

(இ-ள்.) இப்படி விவாகச்சடங்கிற்குச் செய்யவேண்டிய காரியங்களைப் பெண்ணைப்பெற்றவராகிய சடங்கவிசிவாசாரியரும் அவரது பந்துக்களுஞ் செய்ய, வண்டுகள் மொய்க்கின்ற கொத்தாகிய மலர்மாலையைத் தரித்த திருத்தோள்களையுடைய சுந்தரமூர்த்திசுவாமிகளைத் திருக்கலியாணதினத்திற்கு முன்னாள் வேதவிதிப்படியே பருத்த முரசமுதலாகிய வாத்தியங்கள் சப்திக்க வாழ்த்துதல்செய்து பசும்பொன்னாலாகிய கங்கணத்தைஅவர்கையிற்கட்டினார்கள்.—எ-று. (கஉ)

மாமறை விதிவ ழாமன் மணத்துறைக் கடன்க ளாற்றித்
தூமறை மூதூர்க் கங்குன் மங்கலந் துவன்றி யார்ப்பத்
தேமரு தொடையன் மார்பன் றிருமணக் கோலங் காணக்
காமுறு மனத்தான் போலக் கதிரவ னுதயஞ் செய்தான்.

(இ-ள்.) மகத்தாகிய வேதவிதிப்படியே விவாகத்திற்குச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து பரிசுத்தம்பொருந்திய வேதங்க ளொலிக்கின்ற பழமையாகிய அத்திருநாவலூரில்அன்று முன்னாளிரவில் மங்கலகரமான பலவாத்தியங்கள் ஆரவாரித்துக்கொண் டிருக்க, தேன்பொருந்திய மலர்மாலையைத்தரித்த மார்பினையுடைய சுந்தரமூர்த்திசுவாமிகளது திருமணக்கோலத்தைக் காணும்படி ஆசை கொண்டமனமுடையவன்போலச் சூரியனுதயமானான்.—எ-று. (கங)

காலைசெய் வினைகண் முற்றிக் கணிதநூற் புலவர் சொன்ன
வேலைவந் தணையு முன்னர் விதிமணக் கோலங் கொள்வா
னூலசைந் திலங்கு மார்ப னுணங்கிய கேள்வி மேலோன்
மாலையுந் தாரும் பொங்க மஞ்சனச் சாலை புக்கான்.

(இ-ள்.) அன்று காலையிற் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து முடித்துச் சோதிடசாஸ்திரிகள் ஏற்படுத்திய முகூர்த்தவேளை வருவதற்கு முன்னே பூணூலசைந்து விளங்குகின்ற மார்பினையுடையவரும், நுட்பமாகிய கேள்விகளில் சிறந்தவருமாகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் விவாகவிதிக்குரிய திருமணக்கோலங்கொள்ளும்படி ரத்தினமாலையும், மலர்மாலையும் தமதுமார்பில் விளங்கத் திருமஞ்சனச்சாலைக்கு எழுந்தருளினார்.—எ-று. (கச)

வாசநெய் யூட்டி மிக்க மலர்விரை யடுத்த தூநீர்ப்
பாசனத் தமைந்த பாங்கர் பருமணிப் பைம்பொற் றிண்கால்
ஆசனத் தணிநீ ராட்டி யரிசனஞ் சாத்தி யன்பால்
ஈசனுக் கினியார் மேனி யெழில்பெற விளக்கி னார்கள்.

(இ-ள்.) வாசனைபொருந்திய தயிலந் தேய்த்து மிகுந்த மணம் வீசுகின்ற மலர்களைப் பெய்திருக்கின்ற பரிசுத்தம்பொருந்திய நீரையுடைய பாத்திரத்தின் சமீபத்தில் வைத்த பருத்த ரத்தினங்களிழைத்த பசும்பொன்னாலாகிய வலியகா

லகளையுடைய ஆசனத்தில் உட்காரவைத்து அழகாக நீராட்டி, மஞ்சள் கலந்த கலவைப்பொடியைப் பூசி, அன்போடு சிவபெருமானுக்கு இனியவராகிய சுந்தர மூர்த்திசுவாமிகளின் திருமேனியை (அவரது சுற்றத்தார்) அழகுபொருந்த ஸ்நானஞ்செய்வித்தார்கள்.—எ-று.

"வாசநெய்யூட்டிமிக்க மலர்விரையடுத்ததூநீர்ப் பாசனம்" என்பதற்கு, வாசனைபொருந்திய நெய்ப்புகை யூட்டப்பட்டுச் சிறந்தமலர்களின் மணங்கலந்த தூய்மையான நீரையுடைய பாத்திரம் எனினும் பொருந்தும். (கரு)

அகில்விரைத் தூப மேய்ந்த வணிகொள்பட் டாடை சாத்தி
முகினுழை மதியம் போலக் கைவலான் முன்கை சூழ்ந்த
துகில்கொடு குஞ்சி யீரம் புலர்த்தித்தன் றூய செங்கை
யுகிர்நுதி முறையிற் போக்கி யொளிர்நறுஞ் சிகழி யார்த்தான்.

(இ-ள்.) வாசனைபொருந்திய அகிற்புகை யூட்டிய அழகிய பட்டாடையை இடையில் தரித்து அலங்கரித்தலில் வல்லவனாகிய ஒருவன் மேகத்தில் நுழைகின்ற சந்திரனைப்போலத் தன் முன்கையில் சுற்றிய வஸ்திரத்தினால் குடுமியின் ஈரத்தைப்புலர்த்தி அவரது பரிசுத்தம்பொருந்திய கைவிரல்நகத்தின் நுனியிலுள்ள அழுக்கை முறையே துடைத்து விளங்குகின்ற வாசனைபொருந்திய சிகையை முடித்தான்.—எ-று.

கைவலான் ஆர்த்தான் எனக் கூட்டுக. (கசு)

தூநறும் பசுங்கர்ப் பூரச் சுண்ணத்தால் வண்ணப் போதில்
ஆனதண் பனிநீர் கூட வமைத்தசந் தனச்சே றட்டி
மான்மதச் சாந்து தோய்ந்த மங்கலக் கலவை சாத்திப்
பான்முறை முந்நூன் மின்னப் பவித்திரஞ் சிறந்த கையான்.

(இ-ள்.) (அவ்வலங்கரிப்போனால்) நல்ல மணம்பொருந்திய பச்சைக்கர்ப்பூரப்பொடியோடு பல வர்ணங்களையுடைய மலர்களாலுண்டான குளிர்ந்தபனிநீரை விட்டரைத்த சந்தனக்குழம்பால் பூசப்பட்டு, கஸ்தூரிக்குழம்பு கலந்த மங்கலகரமான கலவைச்சந்தனத்தைச் சாத்தப்பட்டு, விதிப்படி தரித்த பூணூலானது மார்பில் விளங்கப் பவித்திரஞ் சிறந்துவிளங்குகின்ற கையையுடையவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று. (கஎ)

தூமலர்ப் பிணையன் மாலை துணரிணர்க் கண்ணி கோதை
தாமமென் றினைய வேறு தகுதியா லமையச் சாத்தி
மாமணி யணிந்த தூய வளரொளி யிருள்கால் சீக்கு
நாமநீள் கலன்கள் சாத்தி நன்மணக் கோலங் கொண்டார்.

(இ-ள்.) பரிசுத்தம்பொருந்திய மலர்களால் பிணைக்கப்பட்ட பிணையல் மாலையும், பூங்கொத்துக்களாலாகிய கண்ணிமாலையும், பத்திமாலையும் என்று சொல்லப்பட்ட இத்தன்மையான வேறுபாட்டையுடைய மாலைகளை அவைகளுக்குரிய இடங்களில் பொருந்த அலங்கரித்து மாணிக்கங்களிழைத்த இருளையோட்டத்தக்க பேரொளியையுடைய பெயர்பெற்ற ஆபரணங்களைப்பூண்டு நல்லதிருமணக் கோலங் கொண்டார்.—எ-று.

பிணையலாவது மலர்களின் தாளிரண்டையும் எதிரெதிரே ஒன்றின்மே லொன்றாக வைத்துக் கட்டுகின்ற சரம்; கண்ணியாவது ஒரு பெரிய நாரின்வழி யாக மலர்களை யடுக்கிச் சிறிய இழையினால் வளைவாகக் கட்டுகின்ற கொண்டை மாலை; கோதையாவது நீளமாகக் கட்டுகின்ற மாலை; தாமமாவது மலர்களை வெவ் வேறு பத்தியாகவைத்து வளைவின்றி நீளமாகக் கட்டுகின்ற பத்திமாலை. தகுதியா லமையச் சாத்துதலாவது கொண்டைமாலையைக் குடுமியிலும், தாமம்-பிணையல் இவைகளை முறையே தோளிலும் மார்பிலும் பொருந்தச் சாத்தி யலங்கரித்தல் எனவறிக. (கஅ)

மன்னவர் திருவுந் தங்கள் வைதிகத் திருவும் பொங்க
நன்னகர் விழவு கொள்ள நம்பியா ரூரர் நாதன்
றன்னடி மனத்துட் கொண்டு தகுந்திரு நீறு சாத்திப்
பொன்னணி மணியார் யோகப் புரவிமேற் கொண்டு போந்தார்.

(இ-ள்.) இராஜ சம்பந்தமான செல்வமும், தம்முடைய வைதிக சம்பந்த மான செல்வமும் விளங்க, நல்ல திருநாவலூரானது திருமணத்திற்குரிய விழா வைக்கொள்ள, சுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமானது திருவடிகளை மனதில் தி யானித்து, சிறப்புப்பொருந்திய திருநீறணிந்துகொண்டு, பொன்னாபரணங்களினா லும், ரத்தினாபரணங்களினாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளதாகிய செல்வத்தைத்த ரத்தக்க குதிரையின்மேலெழுந்தருளிச் சென்றார்.—எ-று.

மன்னவர் திருவாவன:—யானை, தேர், குதிரை, காலாள், வெண்கொற்றக் குடை, வெற்றி முரசு முதலிய சிறப்புகள். வைதிகத்திருவாவன:—அந்தணர்க் கேற்ற அணி - ஆடை - வேதபாராயணமுதலிய சிறப்புகள். யோகப்புரவியாவ து:—தெய்வமணி - கண்டாபரணம் - உரோசமானம் - சீவற்சம் முதலிய நற்சுழி களும், நல்லிலக்கணமும் பொருந்திய புரவியாம். (கக)

இயம்பல துவைப்ப வெங்கு மேத்தொலி யெடுப்ப மாதர்
நயந்துபல் லாண்டு போற்ற நான்மறை யொலியி னோங்க
வியந்துபார் விரும்ப வந்து விரவினர்க் கின்பஞ் செய்தே
யுயர்ந்தவா கனயா னங்கண் மிசைக்கொண்டா ருழைய ரானார்.

(இ-ள்.) பலவகையான வாத்தியங்கள் முழங்கவும், எவ்விடங்களிலும் பா டகர்கூறுந் தோத்திரவோசை யுண்டாகவும், மாதர்கள் விரும்பிப் பல்லாண்டு கூறவும், நான்கு வேதங்களும் இசையோடு ஒலிக்கவும், விவாகத்தை வியந்துவந் து அவ்விடத்திற் கூடினவர்களுக்கு அவர்கள் விரும்பும்படி உபசாரஞ் செய்து (அச்சுந்தரமூர்த்திசுவாமிகளது) பரிஜனங்கள் யானை குதிரை முதலிய வாகனங் களிலும், சிவிகைகளிலும் ஏறிக்கொண்டார்கள்.—எ-று. (உ0)

மங்கல கீத நாத மறையவர் குழாங்க ளோடு
தொங்கலும் விரையுஞ் சூழ்ந்த மைந்தருந் துவன்றிச் சூதும்
பங்கய முகையுஞ் சாய்த்துப் பணைத்தெழுந் தணியின் மிக்க
குங்கும முலையி னாரும் பரந்தெழு கொள்கைத் தாகி.

(இ-ள்.) மங்கலகரமாகிய சங்கீதத்தைப் பாடுகின்ற பிராமணக் கூட்டத்தோடு மலர்மாலைகளையும் வாசனைத் திரவியங்களையுந் தரித்துக்கொண்ட யவ்வன புருஷர்களும், (இடைவெளியில்லாமல்) நெருங்கிச் சூதாடு கருவியையும் தாமரையரும்பையுந் தோற்கச்செய்து, பருத்து எழுந்து அழகினால் மிகுந்த குங்குமக் குழம்பைப்பூசிய ஸ்தனங்களையுடைய மாதர்களும் அதிகரித்து வருகின்ற சிறப்பினையுடையதாகி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௧)

அருங்கடி யெழுந்த போதி னார்த்தவெள் வளைக ளாலும்
இருங்குழை மகரத் தாலு மிலங்கொளி மணிக ளாலு
நெருங்கிய பீலிச் சோலை நீனிறத் தாங்கத் தாலுங்
கருங்கடல் கிளர்ந்த தென்னக் காட்சியிற் பொலிந்த தன்றே.

(இ-ள்.) அருமையான திருமணமானது இவ்வாறெழுந்த சமையத்தில், முழங்கிய வெண்மைபொருந்திய சங்குவளையல்களினாலும், பெரிய மகரகுண்டலங்களினாலும், விளங்குகின்ற பிரகாசத்தையுடைய ரத்தினாபரணங்களினாலும், நெருங்கிய மயிற்பீலிக்கற்றைகளாகிய கருநிறத்தையுடைய சோலையினது வரிசைகளினாலும், (சிலேடைவகையால்) சூலுளைந்தலறுகின்ற சங்குகளினாலும், எதிரிலுள்ளபொருள்களை மோதுகின்ற பெரியமகரமீன்களினாலும்,விளங்குகின்ற முத்துக்களினாலும், நெருங்கித் தழைத்தசோலைபோலக் கருநிறத்தையுடைய அலைகளினாலும் (அத்திருமணவெழுச்சியானது) கருங்கடலானது பெருக்கெடுத்துப் பிரவகித்ததுபோலப் பார்வைக்குப் பொலிவுற்றிருந்தது.—எ-று.

கொள்கைத்தாகி எழுந்தபோதின்'என மேற்செய்யுளோடு சேர்த்துக் கூட்டுக. (௨௨)

நெருங்குதூ ரியங்க ளேங்க நிரைத்தசா மரைக டோளைப்
பெருங்குடை மிடைந்து செல்லப் பிறங்குபூங் கொடிக ளாட
அருங்கடி மணம்வந் தெய்த வன்றுதொட் டென்று மன்பில்
வருங்குல மறையோர் புத்தூர் மணம்வந்த புத்தூ ராமால்.

(இ-ள்.) மிகுந்த பேரிகைமுதலாகிய வாத்தியங்கள் முழங்கவும், வரிசையாகப் பிடித்து வீசுகின்ற சாமரங்களும் மணிக்குஞ்சங்கள் கட்டிய பெருங்குடைகளுமாகிய இவைகள் நெருங்கிச் செல்லவும், விளங்குகின்ற அழகிய கொடிகளாடவும், அருமையாகிய திருமணக்கோலம் அவ்வூரில் வரப்பெற்றமையால் அன்றுமுதற்கொண்டு எந்நாளும் அன்பினால் மிகுந்துவருகின்ற குலத்திற் சிறந்த ஆதிசைவப்பிராமணர்கள் வாழ்தற்கிடமாகிய புத்தூரானது மணம்வந்தபுத்தூரெனப் பெயர்பெற்றது.—எ-று.

"நிரைத்த சாமரைகளோங்க" என்று பாடமாயின், வரிசையாகப் பிடித்து வீசுகின்ற சாமரங்கள் மேல் கிளர்ந்து விளங்க என்று பொருளுரைத்துக் கொள்க. (௨௩)

நிறைகுடந் தூப தீப நெருங்குபா லிகைக ளேந்தி
நறைமல ரறுகு சுண்ண நறும்பொரி பலவும் வீசி
யுறைமலி கலவைச் சாந்தி னுறுபுன றெளித்து வீதி
மறையவர் மடவார் வள்ளன் மணமெதிர் கொள்ள வந்தார்.

(இ-ள்.) பூரண கலசங்களையும், தூபதீபங்களையும், நெருங்கிய முளைப்பாலிகைகளையுங் கையிலேந்திக் கொண்டு, வாசனைபொருந்திய மலர்களும், அறுகும், கந்தப்பொடியும், நல்ல பொரியுமாகிய பல பொருள்களையும் வீசி, தூளியாக மிகுந்த கலவைச்சந்தனத்தி னின்றுந் தெளிந்த நீரை வீதியில் தெளித்துப் பிராமண ஸ்திரீகள் சுந்தரமூர்த்திசுவாமிகளது திருமணக்கோலத்தை எதிர்கொள்ளும்படியாக வந்தார்கள்.—எ-று.

"மறையவர் மடவார்" என்பதற்கு சடங்கவிசிவாசாரியர் முதலிய பிராமணர்களும், அவரவர்களின் மனைவிமார்முதலிய ஸ்திரீவர்க்கங்களும் எனப்பொருள் கூறுவதும் ஒன்று. (உச)

கண்களெண் ணிலாத வேண்டுங் காளையைக் காண வென்பார்
பெண்களி லுயர நோற்றாள் சடங்கவி பேதை யென்பார்
மண்களி கூர வந்த மணங்கண்டு வாழ்ந்தோ மென்பார்
பண்களி னிறைந்த கீதம் பாடுவா ராடு வார்கள்.

(இ-ள்.) (எதிர்கொள்ளும்படிவந்த பெண்களுள் சிலர்) இந்த மணமகனுடைய அழகைப்பார்ப்பதற்கு அளவற்ற கண்கள் வேண்டுமென்பார்கள்; (சிலர்) சடங்கவிசிவாசாரியருடைய புத்திரியே (இம்மணமகனைத் திருக்கலியாணஞ்செய்துகொள்வதற்கு) மற்றைப் பெண்களைப்பார்க்கிலும் மிகுந்த தவஞ்செய்தவளென்பார்கள்; (சிலர்) உலகத்தார் மனமகிழும்படிவந்த திருமணக்கோலத்தைக்கண்டு பெருவாழ்வடைந்தோமென்பார்கள்; (சிலர்) இசைநிறைந்த சங்கீதங்களைப் பாடிக்கொண்டு ஆநந்தக் கூத்தாடுவார்கள்.—எ-று. (உரு)

ஆண்டகை யருளி னேக்கின் வெள்ளத்து ளலைந்தோ மென்பார்
தாண்டிய பரியு நம்பாற் றகுதியி னடைந்த தென்பார்
பூண்டயங் கிவனே காணும் புண்ணிய மூர்த்தி யென்பார்
ஈண்டிய மடவார் கூட்ட மின்னன விசைப்பச் சென்றார்.

(இ-ள்.) (சிலர்) இம்மணமகனது கிருபாநோக்கமென்னும் பெரிய வெள்ளத்தில் தடுமாறினோமென்பார்கள்; (சிலர்) வேகமாகத் தாண்டிச்செல்லுகின்ற குதிரையும் (நமது எண்ணத்திற் கேற்ப) நம்மிடத்தில் மெல்ல வருகின்றதென்று சொல்லுவார்கள்; (சிலர்) பலவகையாகிய ஆபரணங்களும் விளங்கப்பெற்ற இம்மணமகனே புண்ணியசொரூபி யென்பார்கள்; திருமணக்கோலத்தை யெதிர்கொள்ள நெருங்கியபெண்களின் கூட்டம் இவ்விதமாகச்சொல்லிக்கொள்ளும்படியாகச் சுந்தரமூர்த்திசுவாமிகள் எழுந்தருளினார்.—எ-று. (உசு)

வருமணக் கோலத் தெங்கள் வள்ளலார் தெள்ளும் வாசத்
திருமணப் பந்தர் முன்பு சென்றுவெண் சங்க மெங்கும்
பெருமழைக் குலத்தி னார்ப்பப் பரிமிசை யிழிந்து பேணும்
ஒருமணத் திறத்தி னங்கு நிகழ்ந்தது மொழிவே னுய்ந்தேன்.

(இ-ள்.) இவ்விதமாகத் திருமணக்கோலங்கொண்டுவந்த எங்கள் அருள் வள்ளலாகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் சிறந்த வாசனை வீசுகின்ற திருமணப்பந்தலுக்கு முன்னே எழுந்தருளி, எவ்விடத்திலும் வெண்மைபொருந்திய சங்கங்கள்

மேகக்கூட்டம்போல முழங்கக் குதிரையினின்றும் கீழேஇறங்கித் தாம் விரும்பிச்செய்கின்ற ஒப்பற்ற விவாகமுகூர்த்தசமையத்தில், அவ்விடத்தில் நடந்த சங்கதியைச் சொல்லத்தொடங்குவேன்; இச்சரிதையைப் பாடத்தொடங்கியதால் அருள்பெற்றுய்ந்த யான்.—எ-று.

எங்கள் என்றது நம்முடைய வென்னும் பொருள்பட நின்றது. திருநெறித்தமிழ்வேதமாகிய தேவாரப்பதிகங்களைப் பாடியருளி, உலகத்திலுள்ள பெத்தாத்மாக்கள் யாவரும் திருவருள்பெற்றுய்யச்செய்தலால், "வள்ளலார்" என்றார். உய்ந்தேனென்றதனால் சிவபெருமான் தடுத்தாட்கொண்ட அருமையைச் சொல்ல நினைத்ததே வீடுபேற்றிற் குறுதியாயிற்றெனப் பொருளாயிற்று. (உஎ)

வேறு.

ஆலுமறை சூழ்கயிலை யின்கணருள் செய்த
சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்
மேலுற வெழுந்துமிகு கீழுற வகழ்ந்து
மாலுமிரு வர்க்குமரி யாரொருவர் வந்தார்.

(இ-ள்.) வேதங்கள் சூழ்ந்து முழங்குகின்ற திருக்கயிலாசத்தில் (ஆலால சுந்தரருக்கு) அருளிச்செய்த சிறந்த திருவாக்கின்படியே (அவரது அவதாரமாகிய சுந்தரமூர்த்திசுவாமிகளை) வழித்தொண்டாய்த் திருமணஞ்செய்யாது தடுத்து அடிமைகொள்ளும்பொருட்டு, அன்னரூபமாய் மேற்கொண்டு பறந்தும், வராகரூபமாய் மிகக் கீழாகப் பூமியைத் தோண்டிச்சென்றும், (அடியையும் முடியையும் காணாமல்) மயங்கிய விஷ்ணு பிரமன் என்னு மிருவருக்கும் அரியவராகிய சிவபெருமான் அவ்விடத்தில் ஒருதிருமேனிகொண்டெழுந்தருளிவந்தார்.—எ-று.

தடுத்தடிமைகொள்ளுதலாவது உலகவிவகாரத்திற் புகுந்து இருவினை வழிச்செல்லும் உயிரை அவ்வாறு செல்லாது தடுத்துத் தனக்கு அடிமையாக்குதல். "மாலுமயனுக்குமரியார்" என்றும் பாடம். (உஅ)

கண்ணிடை கரந்தகதிர் வெண்படமெனச்சூழ்
புண்ணிய நுதற்புனித நீறுபொலி வெய்தத்
தண்மதி முதிர்ந்துகதிர் சாய்வதென மீதே
வெண்ணரை முடித்தது விழுந்திடை சழங்க.

(இ-ள்.) நெற்றிக்கண்ணைச் சூழ்ந்து மறைத்த வெண்மைபொருந்திய வஸ்திரம்போலப் புண்ணியமயமாகிய பரிசுத்தம்பொருந்திய விபூதியானது நெற்றியில் விளங்கவும், குளிர்ச்சிபொருந்திய இளம்பிறையானது முதிர்ந்து அதனுடைய கிரணங்கள் சாய்வதுபோல உச்சியில் முடித்த வெள்ளிய நரைமுடியானது இடையில் விழுந்து அசையவும்.—எ-று.

வெண்ணரைமுடித்தது என்றதனாலும்,பின்வரும் செய்யுளில் கோவணவுடை என்றதனாலும் வானப்பிரத்த மறையவராய் வேடங்கொண்டு வந்தனரெனக் கொள்க. (உகூ)

காதில்அணி கண்டிகை வடிந்தகுழை தாழச்
சோதிமணி மார்பின்மிசை நூலினொடு தோளின்
மீதுபுனை யுத்தரிய வெண்டுகி லுடங்க
ஆதப மறைக்குடை யணிக்கரம் விளங்க.

(இ-ள்.) காதில் அணிந்தருத்திராக்ஷத்தாலாகிய வளைந்தகுண்டலமானது தாழ்ந்து தொங்கவும், பிரகாசம்பொருந்திய ருத்திராக்ஷமாலையணிந்த மார்பில்தரித்தருளிய பூணூலோடு தோளின்மேல் அணிந்த உத்தரீயமாகிய வெண்மைபொருந்திய வஸ்திரமசையவும், வெயிலை மறைப்பதற்குக் கொண்டுவந்த குடையானது அழகிய கையில் விளங்கவும்.—எ-று.

“ காதிலணி கண்டிகைவடிந்த குழைதாழ ” என்பதற்கு காதிலணிந்தமகரகுண்டலமானது கழுத்திலணிந்த ருத்திராக்ஷமாலைபோலத் தாழ்ந்துதொங்கவும் எனப்பொருள் கூறுவதும் ஒன்று. “ கண்டிகைவடிந்தகுழை” என்பதற்கு கண்டிகைபோல வளைவாயிருக்கின்ற அழகிய கர்ணபூஷணமெனினும் பொருந்தும். கண்டிகை=ருத்திராக்ஷமாலை. (கூo)

பண்டிசரி கோவண வுடைப்பழமை கூரக்
கொண்டதொர் சழங்கலுடை யார்ந்தழகு கொள்ள
வெண்டுகி லுடன்குசை முடிந்துவிடு வேணுத்
தண்டொருகை கொண்டுகழ றள்ளுநடை கொள்ள.

(இ-ள்.) வயிற்றின்கீழ் சரிய வுடுத்தின கோவணமாகிய மிக்க பழமைபொருந்தத்தரித்த ஒரு நழுவுகின்ற வுடையானது இடையில் பொருந்தி அழகைச்செய்யவும், வெண்மைபொருந்திய வஸ்திரத்தோடு தருப்பையையும் முடிந்துவிட்டிருக்கின்ற மூங்கில்தடியை ஒருகையில் பிடித்துக்கொண்டு திருவடிகள் தளர்ந்து நடக்கும் நடையைக் கொள்ளவும்.—எ-று.

நீராடுங்கால் தரிப்பதற்கு மாற்றுடையும், தருப்பணத்திற்குத் தருப்பையும் அவசியமென்பது தோன்ற “ வெண்டுகி லுடன்குசை முடிந்துவிடு வேணுத்தண்டு ” என்றுகூறினர். (கூக)

மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனு மதன்படிவ மேயோ
மெய்த்தநெறி வைதிகம் விளைத்தமுத லேயோ
இத்தகைய வேடமென வையமுற வெய்தி.

(இ-ள்.) இத்தன்மையினையுடைய திருவேடமானது நெருங்கி வளருகின்ற பேரழகானது இளமையினின்றும் முதிர்ந்த ஓருருவமோ? அப்படியே ஒருங்குசேர்ந்து வளர்ந்து முதிர்ந்த மூப்பினது வடிவமோ? உண்மை பொருந்திய வைதிகவிதிகளை முற்றுப்பெறச்செய்தருளிய முதல்வரோ? என்று யாவரும் சந்தேகிக்கும்படியாக அத்திருமணப்பந்தலுக்கு எழுந்தருளி.—எ-று.

சிறந்த அழகுடையவர்களுக்கும் முதிர்ந்தவயதில் அவ்வழகு கெடுதலியற்கை. அங்ஙனமாக, இவர்க்கவ்வாறின்றி அது நீங்காது அதிகரித்திருத்தலின், “மொய்த்துவளர் பேரழகு மூத்தவடிவேயோ” என்றும், அழகு முதிர்ந்ததுபோல மூப்புப்பருவமும் முதிர்ந்து உருவெடுக்கின், இவ்வாறேயிருக்குமென்பது தோன்ற “ அத்தகைய மூப்பெனு மதன்படிவமேயோ ” என்றும், வைதிகசம்பந்தமாயுள்ள தருமங்களையெல்லாம் குறைவறச்செய்துமுடித்த புனிதராய்த் தோன்றலின், “ மெய்த்தநெறி வைதிகம் விளைத்தமுதலேயோ” என்றுங் கூறப்பட்டது. வைதிகம்விளைத்தமுதல் என்பதற்கு வேதசம்பந்தமாகிய விஷயங்களை யுண்டாக்கிய சிவபெருமான் என்று வேறுபொருளுந் தோன்றியவாறு காண்க. (கூஉ)

வந்துதிரு மாமறை மணத்தொழி ருெடங்கும்
பந்தரிடை நம்பியெதிர் பன்னுசபை முன்னின்
றிந்தமொழி கேண்மினெதிர் யாவர்களு மென்ருன்
முந்தைமறை யாயிர மொழிந்ததிரு வாயான்.

(இ-ள்.) பெருமைபொருந்திய வேதவிதிப்படியே திருமணஞ் செய்யத்தொடங்கும் கலியாணப்பந்தலில், இப்படிப்பட்ட திருவேடத்தோடும் எழுந்தருளிவந்து சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு முன்னே நெருங்கியிருக்கின்ற சபையார்களுக்கு எதிரில் நின்று, எனக்கெதிரில் நிற்கின்ற சபையார்கள் யாவரும் யான்சொல்லப்போகின்ற இந்தவார்த்தையைக் கேளுங்களென்ருர்; (அவர் யாரென்ருல்) ஆதிகாலத்தில் அநேகவேதங்களைச் செய்தருளிய திருவாயினை யுடையவராகிய சிவபெருமான்.—எ—று. (௩௩)

என்றுரைசெ யந்தணனை யெண்ணின்மறை யோரு
மன்றல்வினை மங்கல மடங்கலனை யானு
நன்றுமது நல்வரவு நங்கடவ மென்றே
நின்றதிவ ணீர்மொழிமி னீர்மொழிவ தென்ருர்.

(இ-ள்.) என்று இவ்விதமாகச் சொல்லிய பிராமணரை அச்சபையிலுள்ள அளவற்ற பிராமணர்களும், விவாகத்தின்பொருட்டுச் சுபகாரியங்களைச் செய்துகொண்டிருக்கின்ற ஆண்சிங்கம்போன்ற வலிமையையுடைய சுந்தரமூர்த்திசுவாமிகளும் (அவரைப்பார்த்து) உமது நல்வரவு நன்ருயிருக்கின்றது; (அப்படி நீர் இங்கெழுந்தருளியது) நாங்கள் பூர்வத்தில் செய்த தவமாகவே யிருந்ததென்று சொல்லி இனி இவ்விடத்தில் நீர் சொல்லவேண்டியதாக நினைத்துவந்ததைச் சொல்லுமென்று சொன்னுர்கள்.—எ-று. (௩௪)

பிஞ்ஞகனு நாவலர் பெருந்தகையை நோக்கி
என்னிடையு நின்னிடையு நின்றவிசை வால்யான்
முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயறி யென்ருன்.

(இ-ள்.) (இப்படி அச்சபையார்கள் சொன்னபோது) சிவபெருமானுகிய பிராமணரும் சுந்தரமூர்த்திசுவாமிகளைப் பார்த்து, எனக்கும் உனக்கும் இருக்கின்ற ஒருசம்பந்தத்தைப்பற்றி யான் முன்னமே கொண்டிருக்கின்ற ஒரு பெரிய வழக்கைத் தீர்த்துவிட்டுப் (பின்பு) உன்னுடைய கலியாணவேலையை நீ நடத்தக்கடவை யென்று அருளிச்செய்தார்.—எ-று.

பிஞ்ஞகன் என்பது இனவெதுகை. "என்னிடையு நின்னிடையு நின்றவிசை வால்யான்-முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே" என்றதனுல் எனக்கும் உனக்கும் உள்ள ஆண்டான் அடிமையென்னும் சம்பந்தம் தொன்றுதொட்டுள்ளனவே யன்றிப் புதிதாய்வந்ததன் றென்பதும், அதனை இங்கு நீ பலர் முன்னிலையில் முடிவுசெய்ய வேண்டுமென்பதுங் கூறியதாயிற்று. (௩௫)

தெற்றிவிழி யான்மொழிய நின்றநிக ரில்லா
னுற்றதொர் வழக்கெனிடை நீயுடைய துண்டேன்
மற்றது முடித்தலது யான்வதுவை செய்யேன்
முற்றவிது சொல்லுகென வெல்லைமுடி வில்லான்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணை யுடையவராகிய சிவபெருமான் இப்படிச் சொல்ல அங்குநிற்கின்றவராகிய ஒப்பற்ற சுந்தரமூர்த்திசுவாமிகள் (அவரைப்பார்த்து) பழமையாகப் பொருந்தியஒரு வழக்கை என்னிடத்தில் நீர் உடைத்தா யிருப்பீராயின் அந்த வழக்கினைமுடித்தால் அல்லாமல் யான் கலியாணஞ் செய்துகொள்ளேன், (ஆதலால்) இவ்வழக்கினைமுழுவதும் சொல்வீராக வென்று சொல்ல (அப்போது) அளவிடப்படாதவராகிய சிவபெருமான் (சொல்லுகின்றார்.)—எ-று. ()

ஆவதிது கேண்மின்மறை யோரொனடி யானிந்
நாவலன கரூரனிது நான்மொழிவ தென்றான்
றேவரையு மாலயன் முதற்றிருவின் மிக்கோர்
யாவரையும் வேறடிமை யாவுடைய வெம்மான்.

(இ-ள்.) மறையவர்களே! நான் சொல்லுவதாகிய இவ்விஷயத்தைக்கேளுங்கள்; இத்திருநாவலூரனாகிய நம்பியாரூரன் என்னுடைய அடிமையானவன். இதுதான் நான்சொல்லவேண்டிய சங்கதிஎன்று அருளிச்செய்தார். (அவர் யாரென்றால்) இந்திரன்முதலாகிய தேவர்களையும், விஷ்ணு - பிரமன் முதலாகிய செல்வத்தில் மிகுந்த மற்றையாவரையும் வேறுவகையில் அடிமையாகவுடைய சிவபெருமான்.—எ-று.

திருவின் மிக்கோர் யாவரையு மென்றதனால் முனிவர் சித்தர் முதலியோரையுங் கொள்க திரு=செல்வம். அது அவரவர் பதவிக்கேற்பக் குறைந்தும், உயர்ந்தும் நிற்கும். இத்தகைய பெருஞ்சிறப்பினரையெல்லாம் தான் அடிமையாகஉடைமையின், (உடையான் உடைப்பொருளையாக்கவு மழிக்கவும்வல்லனாதல் போல) சிவபெருமான் விஷ்ணுப்பிரமேந்திராதி தேவர்களை ஆக்கவு மழிக்கவுங் கூடுமாதலால்,அவர்கள் அடிமையாயினர். திருமால்முதலிய தேவர்கள் சிவபெருமான் கொடுத்தருளிய செல்வத்தைப்பெற்றும் ஒவ்வோர் காலத்தில் செருக்குற்று முரணழிந்தாராதலின்,அவர் சிறப்பில்லா வடிமையாகிய வேறடிமையாயினர். ஆகவே, அணுக்கத்தொண்டராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் சிறப்புள்ள அடிமை என்பதாயிற்று. அன்றியும்,வேறடிமை என்பதற்கு கொத்தடிமை எனினும் பொருந்தும். (கஎ)

வேறு.

என்றா னிறையோ னிதுகேட்டவ ரெம்மருங்கு
நின்றா ரிருந்தா ரிவனென்னினைந் தான்கொலென்று
சென்றார் வெகுண்டார் சிரித்தார்திரு நாவலூரர்
நன்றான் மறையோன் மொழியென்றெதிர் நோக்கிநக்கார்.

(இ-ள்.) பிராம்மணத் திருவுருவங்கொண்டு வந்த கடவுளானவர் இப்படிச் சொன்னவுடனே, எவ்விடத்திலும் சூழ்ந்து நின்றவர்களும், இருந்தவர்களுமாகிய யாவரும் இவ்வார்த்தையைக்கேட்டவர்களாய் இப்பிராமணன் என்னகாரியஞ்செய்ய நினைத்தானென்று (சிலர்) அவர் சமீபத்திற் சென்றார்கள்; (சிலர்) கோபித்தார்கள்; (சிலர்) சிரித்தார்கள்; அப்போது திருநாவலூரராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் இப்பிராமணன் சொல்லுகிறவார்த்தை நன்றாயிருக்கிறதென்று அவரை நேராகப்பார்த்துச் சிரித்தார்.—எ-று.

எவ்விடத்திலும் சூழ்ந்து நின்றவர்கள் மணஞ்செய்தலைத் தடுத்தகோபத்தினாலும், சுந்தரமூர்த்திசுவாமிகள் இம்மறையவரது அறியாமையைக் குறித்து இகழ்வினாலுஞ் சிரித்தனரென்க. (௩அ)

நக்கார் முகநோக்கி நடுங்கி நுடங்கியார்க்கு
மிக்கான் மிசையுத் தரியத்துகி ருங்கிமேற்சென்
றக்கால முன்றந்தை தன்றந்தையா ளோலையீதால்
இக்காரியத்தை நீயின்று சிரித்ததென் னேடவென்றான்.

(இ-ள்.) யாவருக்கும் தலைவராகிய சிவபெருமான் (தம்மை இகழ்ந்து) சிரித்த சுந்தரமூர்த்திசுவாமிகளது முகத்தைப்பார்த்து (திருமேனி) நடுங்கித்தள்ளாடித் தோளின்மேல் தரித்த உத்தரீயத்தை விழாமல் கையால் தாங்கிக்கொண்டு, அவர் சமீபத்திற்போய், அக்காலத்தில் உன்பாட்டன் எழுதிக்கொடுத்த அடிமையோலை யிதுவாகும்; (அப்படியிருக்க) ஏடா? இக்காரியத்தைக்குறித்து இன்று நீ இகழ்ந்து சிரித்தது என்றருளிச்செய்தார்.—எ-று.

பாட்டனென்னுஞ்சொல் தாயைப்பெற்ற தகப்பனையு முணர்த்துமாதலால், அடிமைத்தனங் கற்பித்தல் கூடாது. இஃ தவ்வாறன்று. உன்றந்தையும், உன்றந்தைதன்றந்தையும் அடிமையாதல், உன்பாட்ட னெழுதிக்கொடுத்த ஆவணத்தால் அறியலாமென்பதுதோன்ற "உன்றந்தை தன்றந்தையாளோலை" என்றும், அங்ஙனமாக நீ சிரித்தமை யாதுகாரணம்பற்றி யென்பார் "சிரித்ததென்" என்றும், சுந்தரமூர்த்திசுவாமிகள் தமக்கடிமையென்பது தோன்ற "ஏட" என்றுங் கூறினர். (௩௯)

வேறு.

மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோக்கி
நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியாற் சிரிப்பு நீங்கி
யாசிலந் தணர்கள் வேறோ ரந்தணர்க் கடிமை யாதல்
பேசவின் றுன்னைக் கேட்டோம் பித்தனோ மறையோ னென்றார்.

(இ-ள்.) குற்றமற்ற ஆதிசைவப் பிராமணகுலத்தில் திருவவதாரஞ்செய்தருளிய சுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமானாகிய விருத்தப்பிராமணரைப்பார்த்து அன்பானது முந்தியிருக்கப்பெற்ற மனவுருக்கத்தினால் தமக்குண்டாகிய சிரிப்பு நீங்கிக் களங்கமற்ற ஆதிசைவப்பிராமணர்கள் வேறொரு பிராமணர்களுக்கு அடிமையாவதைப் பேசும்படியாக இன்று உன்னிடத்தில்கேட்டோம்;(ஆதலால்) ஓ பிராமணரே! நீர் பித்தங்கொண்டவரோ? என்று சொன்னார்.—எ-று.

தாய்மரபு தந்தைமரபு ஆகிய இவ்விரு மரபிலும் ஓர்குற்றமுமின்றென்பார் "மாசிலாமரபு" என்றும், சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குச் சிவபெருமானிடத்துள்ள நேசம் ஆண்டெச்சிறிதுதித்த தென்பதுதோன்ற "நேசமுன்கிடந்த சிந்தை நெகிழ்ச்சியாற் சிரிப்புநீங்கி" என்றும், பிரமனால் சிருட்டிக்கப்படாமல் சிவபெருமானதுதிருமுகத்தினின்றுந் தோன்றினவர்களென்பது தோன்ற "ஆசிலந்தணர்கள்" என்றும், அவ்வாறு தோன்றிய ஆதிசைவப்பிராமணர்கள் தங்கள் சாதியாரிடத்திலும் அடிமையாதல் கூடாததாயிருக்க, வேறொரு பிராமணருக்கு அடிமையாவது கூடுமோவென்னுங்கருத்தால் "பேசவின் றுன்னைக்கேட்டோம்"

என்றும், அவ்வாறு கூறுவோர் பித்தங்கொண்டு திரிபவரே யன்றி வேறன்றென்பது தோன்ற "பித்தனோ மறையோன்" என்றுங் கூறினார். (௪0)

பித்தனு மாகப் பின்னும் பேயனு மாக நீயின்
றெத்தனை தீங்கு சொன்னு யாதுமற் றவற்று ளுனோன்
அத்தனைக் கென்னை யொன்று மறிந்திலை யாகி னின்று
வித்தகம் பேசவேண்டாம் பணிசெய வேண்டு மென்றார்.

(இ-ள்.) (சுந்தரமூர்த்திசுவாமிகள்சொல்லிய அவ்வார்த்தையைக்கேட்ட சிவபெருமானாகிய பிராமணர்) நான் பித்தனானாலும் ஆகுக, பேயனானாலும் ஆகுக, நீ இப்பொழுது எவ்வளவு கெட்டவார்த்தைகளைச் சொல்லினை, அவ்வார்த்தைகளால் நான் கொஞ்சமும் வருத்தப்படமாட்டேன், அப்படி வருத்தப்படாமையைக்குறித்து என்னை நீ சிறிதும் அறியவில்லை, ஆனாலும் எனக்கு எதிராகநின்று இப்படிப் பரிகாசவார்த்தைகளைப்பேசவேண்டாம், எனக்கு அடிமைத்தொழில் செய்யவேண்டுமென்று சொன்னார்.—எ-று.

பித்தன்—பித்தமதிகரித்துச் சித்தவிகாரப்பட்டவன்; பேயன் - பேயினால் பிடிக்கப்பட்டு அறிவிழந்தவன். நீ என்னை இவ்வாறிகழும் பழிமொழிக்குச் சிறிதுநாணாது என்னிடத்து நினக்குள்ளதாகிய அடிமையென்னும் சம்பந்தம்பற்றி வந்தேனென்பதை நீ சிறிது மறிந்திலையென்பது தோன்ற "அத்தனைக் கென்னை யொன்று மறிந்திலை" என்றும், எனக்கு நீ அடிமைசெய்யவேண்டுமேயன்றி வேறுவார்த்தை கூறுதல் பயனின்றென்பது தோன்ற "வித்தகம் பேசவேண்டாம் பணிசெய வேண்டும்" என்றுங் கூறினார். (௪௧)

கண்டதோர் வடிவா லுள்ளங் காதல்செய் துருகா நிற்குங்
கொண்டதோர் பித்த வார்த்தை கோபமு முடனே யாக்கு
முண்டொரா ளோலை யென்னு மதனுண்மை யறிவே னென்று
தொண்டனு ரோலை காட்டு கென்றனர் துணைவ னுரை.

(இ-ள்.) அப்பொழுது தொண்டராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் என்னால் காணப்பட்ட ஒப்பற்ற இப்பிராமணரது திருவுருவத்தால் என்மனமானது அன்புண்டாகியுருகும்; இவர் எனக்கு நீஅடிமையென்று சொல்லிய பயித்தியமாகிய வார்த்தையானது கோபத்தையும் உடனே யுண்டாக்கும். (ஆதலால்)அடிமையோலையொன்றுண்டென்று சொல்லுகின்ற அவ்வார்த்தையினது உண்மையை அறிவேனென்று கருதித் தமது உயிர்த்துணைவராகிய சிவபெருமானைப்பார்த்து நீர் கொண்டுவந்த அடிமையோலையைக் காட்டுமென்று சொன்னார்.—எ-று.

இம்மறையவரது திருவுருவப்பொலிவானது தமது அறிவை அன்பிற்செலுத்தி உருகச்செய்தலின் "கண்டதோர் வடிவாலுள்ளங் காதல்செய் துருகாநிற்கும்" என்றும், இவர் கூறும்வார்த்தை கர்ணகடூரமாய் மிகக்கொடிதாயிருத்தலின் "கொண்டதோர் பித்தவார்த்தை கோபமு முடனேயாக்கும்" என்றும், இவ்விரண்டும் ஒருங்குதோன்றலின் இவ்வைய நீங்க ஆளோலை யுண்டென்னுமதனுண்மையை யறிவேனென்னுங் கருத்தால் "ஓலைகாட்டுக" என்றுங் கூறினார். உயிர்க்கு உற்றதுணைவராதலின் "துணைவனுரை" என்றார். (௪௨)

ஓலைகாட் டென்று நம்பி யுரைக்கநீ யோலை காணற்
பாலையோ வவைமுன் காட்டப் பணிசெயற் பாலை யென்ற
வேலையி னவ ரூரார் வெகுண்டுமேல் விரைந்து சென்று
மாலயன் றேடா தானை வலிந்துபின் றொடர லுற்றார்.

(இ-ள்.) சுந்தரமூர்த்திசுவாமிகள் அடிமையோலையைக் காட்டுமென்று சொல்ல, (அதற்குச் சிவபெருமானாகிய பிராமணர் அவரைப்பார்த்து) நீ அவ்வடிமையோலையைப் பார்த்து நிச்சயிக்கவல்லவனோ? நான் இந்தச்சபையாருக்கு முன்னே அங்கீகரிக்கும்படிக் காட்டினபின்பு நீ ஊழியஞ்செய்வதற்கு மாத்திரம் உரியவன் என்று சொன்னபோது, சுந்தரமூர்த்திசுவாமிகள் கோபங்கொண்டு அவருக்கெதிரே விரைவாகப்போய்ப் பிரமவிஷ்ணுக்களால் தொடர்ந்தறியப் படாதவராகிய அச்சிவபெருமானை வலிசெய்து அவர் ஓடப் பின்றொடர்ந்துபிடிக்கத் தொடங்கினார்.—எ-று.

மால் அயன் என்னு மிருவருந்தொடர்ந்து காண்டற்கரியவராகிய சிவபெருமான் இவர்க்கெளிதாக வருதலின் "வலிந்து பின்றொடரலுற்றார்" என்றார்.

ஆவணம் பறிக்கச் சென்ற வளவினி லந்த ணாளன்
காவணத் திடையே யோடக் கடிதுபின் றொடர்ந்து நம்பி
பூவணத் தவரை யுற்றா ரவரலாற் புரங்கள் செற்ற
ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார்.

(இ-ள்.) அடிமையோலையைப் பறிக்கப்போனபொழுது, சிவபெருமானாகிய பிராமணர் பந்தலின்கீழ் ஓட, சுந்தரமூர்த்திசுவாமிகள் விரைவாகப் பின்றொடர்ந்து, அழகிய செந்நிறத்தையுடையவராகிய அக்கடவுளையடைந்தார்; திரிபுரங்களையழித்த அம்போடுசேர்ந்த மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானை அச்சுந்தரமூர்த்திசுவாமிகளேயல்லாமல் வேறுயார்தொடர்ந்து பிடிக்கவல்லவர்கள் (ஒருவருமில்லை.)—எ-று.

"பூவணத்தவர்" என்பதற்கு - திருப்பூவணம் என்னும் ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் எனினும் பொருந்தும். "புரங்கள் செற்ற ஏவணச்சிலையினார்" என்பதன்சரித்திரவரலாறு:—முன்பொருகாலத்தில் தாரகன் புத்திரர்களாகிய தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்துன்மாலி என்னும் மூன்று அசுரர்கள் பிரமனைநோக்கி அநேககாலந் தவஞ்செய்ய, அத்தவத்திற்கிரங்கிப்பிரமதேவன் அவர்களுக்குப் பிரத்தியக்ஷமாகி உங்கட்கு வேண்டியவரத்தைக் கேளுங்களென்ன, அதற்கு அவர்கள் மூன்றுலகங்களிலும் சஞ்சரிக்கத்தக்க பொன் வெள்ளி இரும்புகளாலாகிய மூன்றரண்களிலிருந்து அநேககோடிகாலம் தனித்தனியரசாக்ஷிசெய்யவும், ஆயிரம்வருடத்திற் கொருதரம் அம்மூன்றும் ஒன்றாகக்கூடவும், எங்கட்கு இறுதிகாலம் நேரிடுமாயின் சிவபெருமானையன்றி வேறொருவராலும் அழியாதிருக்கவும் வேண்டுமென்ன, பிரமதேவன் அவ்வாறே யாகக்கடவதென்று வரமளித்தகன்றனன். பின்பு அவர்கள் மயனென்பவனால் வகுத்துத்தரப்பட்ட அம்மூன்றுபுரங்களிலுமிருந்து சிவநேசந் திறம்பாதவர்களாய் அரசாண்டு தேவர்கள் முதலியோருக்கு மிகுந்த துன்பத்தை விளைத்துவருங்கால், தேவேந்திரன் முதலாகியதேவர்கள் அவர்களுக்குப்புறங்கொடுத்து வருந்தி விஷ்ணுவினிடந்தமது

குறைகளைச்சொல்லி யிரக்க, அவர் கிருபைகூர்ந்து அத்திரிபுராதிகளைக் கொன்று தேவர்களைக் காத்தற்பொருட்டு ஒருயாகஞ்செய்து அதினின்றும் பூதங்களை வருவித்து அவர்களை யழிக்கும்படி யனுப்ப அவைகள்போய் அவர்களோடு போர்செய்தழிந்தன. அதைக்கண்டவிஷ்ணுவானவர் இவ்வசுரர்கள் கொடியதுஷ்டர்களாயிருந்தும் சிவநேசமுடையவர்களாயிருத்தலால் அவர்களை வெல்வது அரிதாயிற்றென்று கருதித் தாம் ஓர் புத்தவடிவெடுத்து நாரதனைத் தமக்குத் துணையாகச் சேர்த்துக்கொண்டு அத்திரிபுராதியர் இருக்குமிடத்திற்சென்று தாமியற்றிய புத்தநூலைச் சிறந்தமகத்துவமுடையதாக அவர்கட்குப் போதிக்க, அம்மூவர்கள் தவிர மற்றையாவரும் சிவநேச நீங்கினர். பின்பு விஷ்ணுவானவர் தேவேந்திரன் முதலிய தேவர்களோடு திருக்கயிலாயத்தை யடைந்து சிவபெருமானைவணங்கித் தமது குறைகளைச்சொல்லி யிரக்கச் சிவபெருமான் யாம் போர்புரிவதற்குரிய கருவிகளமைப்பின் அவ்வாறே செய்வோமென்று கட்டளையிட்டருள, விஷ்ணு முதலாகிய தேவர்கள் யோசித்து, பூமி இரதமாகவும், சந்திரசூரியர்கள் சக்கரங்களாகவும், வேதங்கள் குதிரைகளாகவும், பிரமன் சாரதியாகவும், மேருமலை வில்லாகவும், ஆதிசேஷன் நாரியாகவும், அக்கினி - வாயு - திருமால் இம்மூவரும் பாணமாகவும், மற்றத்தேவர்களனைவரும் அவ்வக்கருவிகளாகவு மமைந்தனர். அதைக் கண்ட சிவபெருமான் அவ்வாறுயின இரதத்தின்மீ தெழுந்தருளிச் சென்றபொழுது தேவர்களனைவரும் நம்மாலன்றோ சிவபெருமான் திரிபுரதகனஞ்செய்தற் கெழுந்தருளினுரென அகங்கரித்தனர்; அதனைச் சிவபெருமானுணர்ந்து கோபத்தால் நகைத்தனர். அந்நகையினுல் அம்முப்புரங்களும் வெந்து நீருயின. தாமெழுந்தருளிவந்த இரதமுஞ்சிதைந்து கலைந்தது. அச்சமையத்தில் விஷ்ணுவானவர் ரிஷபவடிவங்கொண்டு கடவுளைத்தாங்கினர். பின்பு அம்முப்புரங்களினின்றும் இறவாது பிழைத்த சிவநேசர்களாகிய அம்மூவரும் பெருமானைச் சரணடைய அவர்களில் இருவர் தமது திருக்கோயிலின்வாயில் காக்கவும், ஒருவர் குடமுழாவென்னும் வாத்தியத்தை முழக்கவுமாகக் கட்டளையிட்டருளினர். பின்பு தேவர்களனைவருந் தமது துன்பத்தினின்று நீங்கிப் பெருமானைப்பூசித்துச் சுகமுற்றிருந்தனர் என்பதாம். (சச)

மறைகளா யின்முன் போற்றி மலர்ப்பதம் பற்றி நின்ற
இறைவனைத் தொடர்ந்து பற்றி யெழுதுமா ளோலை வாங்கி
யறைகழ லண்ண லாளா யந்தணர் செய்த லென்ன
முறையெனக் கீறி யிட்டான் முறையிட்டான் முடிவிலாதான்.

(இ-ள்.) வேதங்களானவை முன்னே துதிசெய்து தாமரைமலர்போன்ற திருவடிகளைத் தொடர்ந்து நிற்கின்ற சிவபெருமானைச் சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த சுந்தரமூர்த்திசுவாமிகள் பின்றொடர்ந்து பிடித்து எழுதியிருக்கின்ற அடிமையோலையைவாங்கி ஆதிசைவப்பிராமணர்கள் வேறொருவருக்கு அடிமையாளாய்ப்பணிசெய்தல் எந்த நூலில் சொல்லப்பட்டிருக்கின்ற முறைமையென்று சொல்லிக்கிழித்தெறிந்தார். (அப்பொழுது) முடிவில்லாதவராகிய சிவபெருமான் இது முறையோவென்று முறையிட்டார்.—எ-று.

மறைகள் சிவபெருமானையே முடிந்தபொருளாக முன்னிட்டுத் துதித்துப்பாதுகையாக வமைந்திருத்தலின் "மறைகளா யினமுன்போற்றி மலர்ப்பதம்பற்

றிநின்ற இறைவன்" என்றார். முறையிடுதலாவது தனக்குநேரிட்ட ஆபத்தைத் தீர்க்கும்பொருட்டுப் பலருமறிய ஓவென்றலறுதல். (சரு)

அருமறை முறையிட் டின்ன மறிவதற் கரியான் பற்றி
யொருமுறை முறையோ வென்ன வுழைநின்றார் விலக்கி யிந்தப்
பெருமுறை யுலகி லில்லா நெறிகொண்டு பிணங்கு கின்ற
திருமறை முனிவ ரேநீ ரெங்குளீர் செப்பு மென்றார்.

(இ-ள்.) அருமையாகிய வேதங்கள் முறையிட்டு இதுவளையிலும் இப்படிப்பட்டவரென்று அறிதற்கரியவராகிய சிவபெருமான் சுந்தரமூர்த்திசுவாமிகளைக் கையால்பிடித்துக்கொண்டு ஒருதரம் முறையோவென்று கூச்சலிட, சமீபத்திலிருப்பவர்கள் இருவரையும் விலக்கி இந்தஉலகத்திலில்லாத வழக்காகிய பெருவழக்கைக்கொண்டு அதை முடிக்கவேண்டுமென்று பிணக்குச்செய்கின்ற சிறந்தவேதங்களையறிந்த முனிவரே! நீர் எங்கேயிருக்கின்றவர் சொல்லுமென்று கேட்டார்கள்.—எ-று.

அருமறை முறையிடுதலாவது:—வேதங்கள் சிவபெருமானை இவ்வியல்பினரெனப் பன்முறை பலவாறெடுத்துக் கூறுதல்; அவ்வாறெடுத்துக் கூறியும் அவரதிலக்கணம் மனம்வாக்குக்கெட்டாது அதீதமாய் நிற்றலின் "அறிவதற்கரியான்" என்றார். இதனை "வேதங்கள்- ஐயாவெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே" என்றபதனானுணர்க. "அல்லையீதல்லை யீதெனமறைகளுமன்மைச்-சொல்லினாற்றுதித்திளைக்கு மிச்சுந்தரன்" என்றார் பிறரும். (சசு)

என்றலு நின்ற வைய ரிங்குளே னிருப்புஞ் சேய்த்த
தன்றிந்த வெண்ணெய் நல்லூ ரதுநிற்க வறத்தா றின்றி
வன்றிறல் செய்தென் கையி லாவணம் வலிய வாங்கி
நின்றிவன் கிழித்துத் தானே நிரப்பினு னடிமை யென்றான்.

(இ-ள்.) (விலக்கிய பிராமணர்கள்) இவ்வாறு கேட்கவும், அதைக்கேட்டு நிற்கின்ற சிவபெருமானாகிய வேதியர் இங்கிருக்கின்ற என்னுடைய ஊரும் தூரமானதல்ல, இந்தத் திருவெண்ணெய்நல்லூரேயாகும்; அது அப்படியிருக்க, இந்த நம்பியாரூரன் தருமவழிக்கு விரோதமாய்ப் பலவந்தஞ்செய்து என்கையிலுள்ள அடிமைச்சீட்டை வலியவாங்கி நின்று அதைக்கிழித்து, தானே எனக்கு அடிமையென்பதை ஸ்திரப்படுத்தினான் என்று சொன்னார்.—எ-று. (சஎ)

குழைமறை காதி னானைக் கோதிலா ரூரர் நோக்கிப்
பழையமன் றாடி போலு மிவனென்று பண்பின் மிக்க
விழைவுறு மனமும் பொங்க வெண்ணெய்நல் லூரா யேலுன்
பிழைநெறி வழக்கை யாங்கே பேசநீ போதா யென்றார்.

(இ-ள்.) சங்கக்குழையை மறைத்துவந்த காதினையுடைய சிவபெருமானாகிய பிராமணரைக் குற்றமற்ற சுந்தரமூர்த்திசுவாமிகள் பார்த்து இவர் பழயசபையில் வழக்காடிபோலுமென்னுங் குறிப்பால் இவர்பழயகனகசபையில் நடனஞ்செய்தருளுகின்ற சிவபெருமான்போலுமென்று அன்பினால் மிகுந்த ஆசை பொருந்திய மனமானதுபொங்க, நீர் திருவெண்ணெய்நல்லூரி லிருப்பவரேயானால்

உம்முடைய குற்றவழியாகிய வழக்கை அவ்விடத்திலேதானே பேசும்படியாக வாருமென்று சொன்னார்.—எ-று.

மன்றாடிபோலும் என்றதனால் வழக்காடியென்றும், சிவபெருமானென்றும், நியமம்பெறாமல் உணர்வு உதித்ததென்றும் போந்தமையறிக. (சஅ)

வேதிய னதனைக் கேட்டு வெண்ணெய்நல் லூரி லேநீ
போதினு நன்று மற்றைப் புனிதநான் மறையோர் முன்னர்
ஆதியின் மூல வோலை காட்டிநீ யடிமை யாதல்
சாதிப்ப னென்று முன்னே தண்டுமுன் னூன்றிச் சென்றான்.

(இ-ள்.) சிவபெருமானாகிய பிராமணர் அவ்வார்த்தையைக்கேட்டு நீ திருவெண்ணெய்நல்லூருக்கு வந்தாலும் நல்லது; அவ்வூரிலிருக்கின்ற பரிசுத்தம்பொருந்திய நான்குவேதங்களையுமுணர்ந்த பிராமணர்களுக்கு முன்பாக ஆதியில் எழுதிக்கொடுத்த மூலபத்திரத்தைக் காண்பித்து நீ எனக்கு அடிமையாவதை நிலைநிறுத்துவேனென்று சொல்லி அவர்க்குமுன்னாகத் தம்முடைய கையிலுள்ள தண்டை முன்னே யூன்றிக்கொண்டு திருவெண்ணெய்நல்லூருக் கெழுந்தருளினார்.—எ-று.

மூலவோலையென்பது இக்காலத்தில் அசல்என்று வழங்குகின்றது. (சக)

செல்லுநான் மறையோன் றன்பின் றிரிமுகக் காந்தஞ் சேர்ந்த
வல்லிரும் பணையு மாபோல் வள்ளலுங் கடிது சென்றான்
எல்லையில் சுற்றத் தாரு மிதுவென்னா மென்று செல்ல
நல்லவந் தணர்கள் வாழும் வெண்ணெய்நல் லூரை நண்ணி.

(இ-ள்.) திருவெண்ணெய் நல்லூரைநோக்கிப் போகின்ற சிவபெருமானாகிய பிராமணருக்குப் பின்னே வேறுபடுத்துகின்ற முகத்தையுடைய காந்தத்தைச்சமீபித்த வலிய இரும்பானது அக்காந்தத்தைச் சேர்ந்து ஒன்றுதல்போல அளவற்ற பந்துசனங்களும் இது எப்படியாகுமோவென்று பின்றொடர்ந்துபோக நம்பியாரூரரும் நல்ல பிராமணர்கள் வாழுகின்ற திருவெண்ணெய்நல்லூரை விரைவாகப்போய்ச்சேர்ந்தார்.—எ-று.

காந்தமுகத்தின்கண் ணிருக்குஞ் சத்தி இரும்பைத்திரித்துத் தன்வசமாக்குவதுபோல, சுந்தரமூர்த்திசுவாமிகளும் ஒருவாறு சிவபெருமான் திருவருள் வசப்பட்டவராய்ப் பின்றொடர்ந்தாரென்னுங் குறிப்புத்தோன்ற "திரிமுகக்காந்தஞ்சேர்ந்த வல்லிரும்பணையுமாபோல் வள்ளலுங் கடிது சென்றான்" என்றார். ()

வேதபா ரகரின் மிக்கார் விளங்குபே ரவைமுன் சென்று
நாதனா மறையோன் சொல்லு நாவலூ ராரூ ரன்றான்
காதலென் னடியா னென்னக் காட்டிய வோலை கீறி
மூதறி வீர்முன் போந்தா னிதுமற்றென் மூறைப்பா டென்றான்.

(இ-ள்.) வேதமுணர்ந்தவர்களில் சிறந்த பிராமணர்கள் விளங்குகின்ற பெரியசபையின் முன்பாகப்போய்ச் சிவபெருமானாகிய பிராமணர் சொல்லுவார், திருநாவலூரில் வாழ்கின்ற இந்த நம்பியாரூரன் ஆசைபொருந்திய எனது அடிமையென்று யான் அவனுக்குக்காட்டிய முறியோலையைக் கிழித்துப் பேரறிவினை

யுடையபிராமணர்களே! உங்களிடத்திற்கு வந்தான்; இதுதான் என்னுடைய முறைப்பாடென்று சொல்லியருளினார்.—எ-று. (ருக)

அந்தண ரவையின் மிக்கார் மறையவ ரடிமை யாதல்
இந்தமா நிலத்தி லில்லை யென்சொன்னா யையா வென்றார்
வந்தவா றிசைவே யன்றோ வழக்கிவன் கிழித்த வோலை
தந்தைதன் றந்தை நேர்ந்த தென்றனன் றனியாய் நின்றான்.

(இ-ள்.) அச்சபையில் தலைவர்களாயுள்ள பிராமணர்கள் (இப்படிப் பிரியாது சொல்லிய அந்தணரைப்பார்த்து) பிராமணர்கள் அடிமையாவது பெருமை பொருந்திய இந்தவுலகத்தில் இதுவரையிலும் வழக்கமில்லை. (அங்ஙனமாக,) ஐயரே! நீர் என்னபொருந்தாதவழக்கைச் சொன்னீர் என்றார்கள்; அப்பொழுது பிராமணத் திருவுருவங்கொண்டு தனித்துநின்றவராகிய கடவுள் யான்கொண்டு வந்த வழக்குப்பொருத்தமுடையதல்லவோ? இவன் கிழித்த அடிமையோலை இவன்பாட்டன் எழுதிக்கொடுத்தது என்றருளிச் செய்தார்.—எ-று. (ருஉ)

இசைவினா லெழுது மோலை காட்டினா னாகி லின்று
விசையினால் வலிய வாங்கிக் கிழிப்பது வெற்றி யாமோ
தசையெலா மொடுங்க மூத்தான் வழக்கினைச் சாரச் சொன்னான்
அசைவிலா ஆரூ ரனெண்ண மென்னென்றா ரவையின் மிக்கார்.

(இ-ள்.) உடன்பாட்டால் எழுதிக்கொடுத்த அடிமையோலையை பிராமணர்கள் பலருமறிய இன்றுகாண்பித்தாராகில் அதனை விசையாக வலியவாங்கிக் கிழித்துவிடுவது வெற்றியாகுமோ? உடம்பிலுள்ள மாமிசமெல்லாம் சுருங்கும்படி மூப்பினையடைந்த இப்பிராமணர் தமது வழக்கை யாவரும் அங்கீகரிக்கும்படியாகச் சொன்னார்; இனி மனக்கவலையற்ற இந்த நம்பியாரூரரது கருத்து என்னவென்று கேட்டார்கள் அச்சபையிலுள்ள பெரியோர்கள்.—எ-று. (ருந)

அனைத்துநூ லுணர்ந்தீ ராதி சைவனென் றறிவீ ரென்னைத்
தனக்குவே றடிமை யென்றிவ் வந்தணன் சாதித் தானேன்
மனத்தினா லுணர்தற் கெட்டா மாயையென் சொல்லு கேன்யான்
எனக்கிது தெளிய வொண்ணா தென்றன னெண்ண மிக்கான்.

(இ-ள்.) வேதாகம புராணமுதலிய சகலசாஸ்திரங்களையும் அறிந்த பெரியோர்களே! நீங்கள் என்னை ஆதிசைவப்பிராமணனென்று அறிவீர்கள்; அப்படியிருக்க இந்தப்பிராமணர் (உலகவழக்கத்திற்கு விரோதமாக) என்னைத் தனக்குச் சாதாரண அடிமையென்று சாதிப்பாரானால் இது மனதினால் இப்படிப்பட்டதென்று நிச்சயித்தறியப்படாத மாயையாகவே யிருக்கின்றது. இதைக்குறித்து யான் என்னசொல்லப்போகின்றேன். எனக்கு இவ்வழக்கு நிச்சயிக்கக்கூடாததாக இருக்கின்றதென்று சொன்னார் யாவருடைய எண்ணங்களையும் பகுத்தறிவதில் வல்லவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று.

வேறடிமை என்பதற்குக் கொத்தடிமை - மீளாவடிமைஎன்று கூறினும் பொருந்தும். அது தன்னிற்குறைந்த பலவகை அடிமைகளினின்றும் வேறு பிரித்தற்கு வேறடிமை என்னப்பட்டது. (ருச)

அவ்வுரை யவையின் முன்பு நம்பியா ரூரர் சொல்லச்
செவ்விய மறையோர் நின்ற திருமறை முனியை நோக்கி
இவ்வுல கின்க ணீரின் றிவரை நும் மடிமை யென்ற
வெவ்வுரை யெம்முன் பேற்ற வேண்டுமென் றுரைத்து மீண்டும்.

(இ-ள்.) அப்படிப்பட்ட வார்த்தைகளை அச்சபையாருக்கு முன்பாகச் சுந்தரமூர்த்திசுவாமிகள் எடுத்துச்சொல்ல, உடனே நடுவுநிலைமையையுடைய பிராமணர்கள் (அங்கு வல்வழக்கிட்டு) நிற்கின்ற சிவபெருமானாகிய பிராமணரைப்பார்த்து, இந்தவுலகத்தில் இன்று நீர் இந்நம்பியாரூரரை உமது அடிமையென்று சாதித்த இக்கொடியமொழியை எங்களுக்கு முன்னே உறுதிப்படுத்தவேண்டுமென்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுவார்கள்.—எ-று. (ஙரு)

ஆட்சியி லாவ ணத்தி லன்றிமற் றயலார் தங்கள்
காட்சியின் மூன்றி லொன்று காட்டுவா யென்ன முன்னே
மூட்சியிற் கிழித்த வோலை படியோலை மூலவோலை
மாட்சியிற் காட்ட வைத்தே னென்றனன் மாயை வல்லான்.

(இ-ள்.) (ஒருவிவகாரத்தை உண்மையென்று நிச்சயிக்கவேண்டுமாயின் அதற்கு) அனுபவமும், லிகிதமும், அயலார்சொல்லுகின்ற சாட்சியுமாகிய இம்மூன்றும் வேண்டுமாதலால், நீர் இம்மூன்றில் ஒன்றை (இந்நம்பியாரூரர் உமக்கடிமையென்பதற்குக்) காட்டுவீராக வென்றுசொல்ல, (அதற்கு) மாயையில்வல்ல சிவபெருமானாகிய பிராமணர் முன்பு இவன்கோபத்தால் கிழித்த ஓலையானது மூலவோலையைப் பார்த்தெழுதிய படியோலையாம்; இவனடிமையென்பதை நியாயசபையில் பெருமையோடு காட்டுவதற்கு அம்மூலசாதனத்தை வைத்திருக்கின்றேனென்று சொன்னார்.—எ-று. (ஙசா)

படியோலை என்பது இக்காலத்துக் குறிப்பு என்று வழங்குகின்றது.

வல்லையேற் காட்டிங் கென்ன மறையவன் வலிசெய் யாமற்
சொல்லநீர் வல்லீ ராகிற் காட்டுவே னென்று சொல்லச்
செல்வநான் மறையோர் நாங்க ளுங்குற வொட்டோ மென்றார்
அல்லறீர்த் தாள நின்றா ராவணங் கொண்டு சென்றார்.

(இ-ள்.) (அச்சபையிலுள்ள வேதியர்கள் வாதியாகவந்த பிராமணரைப் பார்த்து) நீர் அம்மூலசாதனத்தைக் காட்டக்கூடுமானால் இவ்விடத்திற் காட்டக்கடவீரென்று சொல்ல, (அவர்) இந்நம்பியாரூரன் மூலவோலையையும் முன்கிழித்ததுபோல பறித்துக் கிழிக்காமலிருக்கும்படி நீங்கள்சொல்ல வ[redacted]ாகளானுல் அதனைக் காட்டுகின்றேனென்று சொல்ல, (அதற்கு) செல்வமிகுந்த அப்பிராமணர்கள் நாங்கள் உமக்கு அப்படி ஒரு தீங்கும்வரவொட்டோமென்றார்கள். (அப்பொழுது) சுந்தரமூர்த்திசுவாமிகளைத் துன்பத்தினின்று நீக்கித் தடுத்தாட்கொள்ளப் பிராமணத்திருவுருவங்கொண்டு நிற்கின்றவராகிய கடவுள் (அச்சபைக்கு மறைவாகப்போய்) மூலவோலையை யெடுத்துக்கொண்டு வந்தார்.—எ-று. (ஙஎ)

இருண்மறை மிடற்றோன் கையிலோலைகண் டவையோ ரேவ
அருள்பெறு கரணத் தானு மாவணந் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி விரித்ததன் றொன்மை நோக்கித்
தெருள்பெறு சவையோர் கேட்ப வாசகஞ் செப்பு கின்றான்.

(இ-ள்.) விஷத்தின் கருநிறத்தை மறைத்த கண்டத்தையுடைய சிவபெருமானது திருக்கரத்திலுள்ள ஓலையைப்பார்த்து அச்சபையிலுள்ளவர்கள் கட்டளையிட, அக்கட்டளையைப்பெற்ற கருணீகனும் அவ்வடிமையோலையைவணங்கி வாங்கிச் சுருளாயிருக்கின்ற மடிப்பைநீக்கி விரித்து அப்பத்திரத்தின் பழமையைப்பார்த்துக் கல்விகேள்விகளால் தெளிவடைந்திருக்கின்ற அச்சபையாரனைவரும் கேட்கும்படியாக அதிலெழுதியிருக்கின்ற வாசகத்தைப்படிக்கத் தொடங்கினன்.

அருமறை நாவ லாதி சைவனா ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானு மென்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையா லெழுதி நேர்ந்தே னிதற்கிவை யென்னெ ழுத்து.

(இ-ள்.) அருமையாகிய வேதத்தையுணர்ந்த திருநாவலூரிலிருக்கின்ற ஆதிசைவப்பிராமணனாகிய ஆரூரனென்னும் பெயரையுடைய யான் எழுதிக்கொடுத்த உடன்படிக்கையாவது, பெரிய முனிசிரேஷ்டராகிய திருவெண்ணெய் நல்லூரில் வசிக்கும் பித்தனென்னும் பிராமணருக்கு யானும், என்மரபில் வருகின்ற சந்ததியாரனைவரும் வழிவழி அடிமைசெய்வதற்கு உள்ளும்புறம்பும் ஒத்து இவ்வடிமைப்பத்திரத்தை எழுதிக்கொடுத்தேன்; இப்படிச் சம்மதித்தெழுதிக்கொடுத்ததற்காக இவை என்னுடைய கையெழுத்தாம்.—எ-று.

ஆரூரன் என்பது இவரது பாட்டன்பெயராதலின் இவருக்கும் அப்பெயரேயிட்டனரென வறிக. வழித்தொண்டாவது இவர் தொண்டுசெய்ததுபோலவே இவரது புத்திரபௌத்திரரனைவரும் முறையேவிடாது தொண்டுசெய் தொழுகுவது. (௫௯)

வாசகங் கேட்ட பின்னர் மற்றுமே லெழுத்திட் டார்கள்
ஆசிலா வெழுத்தை நோக்கி யவையொக்கு மென்ற பின்னர்
மாசிலா மறையோ ராயா மற்றுங்கள் பேர னார்தந்
தேசுடை யெழுத்தே யாகிற் றெளியப்பார்த் தறிதி யென்றார்.

(இ-ள்.) (இப்படிக்கு அவர்கொண்டுவந்த மூலவோலையில் எழுதியிருக்கின்ற) வாசகத்தைக் கேட்டபின்பு அதற்குச் சாட்சிக்காரராகக் கையெழுத்திட்டவர்களின்குற்றமில்லாத வேறுகையெழுத்துக்களைவருவித்து ஒத்துப்பார்த்து அவைகளும் சரியாகவே ஒத்திருக்கின்றனவென்று சொன்னபின்பு, குற்றமற்ற அப்பிராமணர்கள் (சுந்தரமூர்த்திசுவாமிகளைப் பார்த்து) ஐயரே! இவைகள் உம்முடைய பாட்டனாரது உண்மையான கையெழுத்தாக இருக்குமானல் தெளிவாகப்பார்த் துணர்வீரென்றார்கள்.—எ-று. (௬௦)

அந்தணர் கூற வின்னு மாளோலை யிவனோ காண்பான்
றந்தைதன் றந்தை தான்வே றெழுதுகைச் சாத்துண் டாகில்
இந்தவா வணத்தி னோடு மெழுத்துநீ ரொப்பு நோக்கி
வந்தது மொழிமி னென்றான் வலியவாட் கொள்ளும் வள்ளல்.

(இ-ள்.) அச்சபையிலுள்ள பிராமணர்கள் இவ்விதமாகச் சுந்தரமூர்த்திசுவாமிகளைப்பார்த்துச் சொல்ல, (அப்பொழுது) வலியவே தடுத்தாட்கொள்ளும்படி எழுந்தருளிய கடவுளானவர் இன்னும் இவன்பாட்டன் எழுதிக்கொடுத்த

அடிமையோலையை இவனே கண்டறியத்தக்கவன்? இவன்பாட்டன் இதுவன்றி வேறே எழுதியிருக்கும் கைச்சாத்துகள் இருக்குமானால் அவைகளைத் தருவித்து இந்தச்சாசனத்தோடு எழுத்துக்கள் நேராக ஒத்திருக்கப்பார்த்து (அதற்குமேல்) உங்கள்மனதில் தோன்றிய நியாயத்தைச் சொல்லுங்களென்று சொன்னார்.எ-று.

சிறுவனாதலின் இவன்பாட்டன் எழுதிக்கொடுத்த கையெழுத்தை அறிந்து நிச்சயிக்கவல்லனல்ல னென்பதுதோன்ற "இவனே காண்பான்" என்றார். கைச்சாத்தாவது:—ஒருவன் கணக்குமுதலியவைகளைக் குறித்துத் தனது கைப்படவெழுதிய சில ஏடுகளின் தொகுதி. கையெழுத்தெனினும் பொருந்தும். ()

திரண்டமா மறையோர் தாமுந் திருநாவ லூரர் கோமுன்
மருண்டது தெளிய மற்றை மறையவ னெழுத்தா லோலை
யரண்டரு காப்பில் வேறொன் றழைத்துட னொப்பு நோக்கி
இரண்டுமொத் திருந்த தென்னே யினிச்செய லில்லை யென்றார்.

(இ-ள்.) கூட்டமாயிருக்கின்ற பெருமைபொருந்திய பிராமணர்கள் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குமுன்னே சந்தேகித்த விஷயத்தைத் தெளிந்துகொள்ளும்படி அவர் பாட்டனார் கையெழுத்தால் அவர் வீட்டில் காவலான இடத்திலிருக்கின்ற வேறொரு கைச்சாத்தினை வரவழைத்து அதனோடு இதனை ஒத்துப் பார்த்துப் பின்பு இரண்டும் ஒத்திருக்கின்றன; இது என்ன ஆச்சரியம்! (ஆதலால் நீர் இதனை மறுப்பதற்கு) இனி வேறொரு செயலுமில்லை என்றார்கள்.—எ-று.

நான்மறை முனிவ னார்க்கு நம்பியா ரூரர் தோற்றீர்
பான்மையி னேவல் செய்தல் கடனென்று பண்பின் மிக்க
மேன்மையோர் விளம்ப நம்பி விதிமுறை யிதுவே யாகில்
யானிதற் கிசையே னென்ன விசையுமோ வென்று நின்றார்.

(இ-ள்.) நான்கு வேதங்களையுமுணர்ந்த இப்பிராமணருக்கு, நம்பியாரூரரே! நீர்வழக்கில்தோற்றீர். ஆதலால் அவரிஷ்டப்படி இடுகின்ற ஏவல்தொழில் செய்வதே உமக்குக்கடமையென்று நற்குணத்திற்சிறந்த அச்சபையிலுள்ள பெரியோர்கள் சொல்ல, அதைக்கேட்ட சுந்தரமூர்த்திசுவாமிகள் எனது ஊழ்வினையின் முறைமை இப்படியிருக்குமானால், நானிதற்குச் சம்மதிக்கமாட்டேனென்று சொல்லுவது பொருந்துமோ? என்று உடன்பட்டுச் சொல்லிநின்றார்.—எ-று.

சிவபெருமானுக்குப் பணிவிடைசெய்வதே தமது குலவொழுக்கமாயிருக்க ஓர் பிராமணனுக்கு அடிமைத்தொழில் செய்ய நேரிட்டதே யெனவும், அதுவும் நியாயமின்றி வீண்வழக்கால் உண்டாயிற்றே யெனவும், அரசச்செல்வத்தை யனுபவித்திருக்கும்படிக்கூட்டுவித்த நல்வினையானது நமக்கு இதுவரைக்குந்தா னிருந்து போனதெனவும் விசனமடைந்தன ரென்பதுதோன்ற "விதிமுறை யிதுவேயாகில்" என்றும், நமக்குள்ள ராஜாதிகாரத்தால் அவ்வடிமைத்தனத்தை நீக்கிக்கொள்ளுதல் கூடுமாயினும் அது தருமமன்றென்பது தோன்ற "இசையேனென்ன விசையுமோ" என்றும்,லிகிதமும் சாக்ஷியுமிருப்பினும் நெடுநாளாக அனுபவமின்மையால் அதைப்பற்றிச் சபையார் யாது கூறுவார்களோ என்னுங் கருத்துள்ளவராய்த் தாமும் ஒருவா றுடன்பட்டாரென்பதுதோன்ற "நின்றார்" என்றுங் கூறினார். (சுகூ)

திருமிகு மறையோர் நின்ற செழுமறை முனியை நோக்கி
அருமுனி நீர்முன் காட்டு மாவண மதனி லெங்கள்
பெருமைசேர் பதியே யாகப் பேசிய துமக்கிவ் வூரில்
வருமுறை மனையு நீடு வாழ்க்கையுங் காட்டு கென்றார்.

(இ-ள்.) பலவகைச் செல்வங்கள் பொருந்திய அந்தப் பிராமணர்கள் தங்களுக்கு முன்னே நிற்கின்ற சிறந்த வேதங்களையுணர்ந்த சிவபெருமானாகிய பிராமணரைப்பார்த்து அரியதவமுனிவரே! நீர் முன்பு இச்சபையில் காட்டிய அடிமைப்பத்திரத்தில் எங்கள் பெருமைபொருந்திய இத்திருவெண்ணெய்நல்லூரே உம்முடைய ஊராக எழுதப்பட்டிருக்கின்றது, (ஆதலால்) உமக்கு இவ்வூரில் தலைமுறையாக வந்த வீட்டையும், நிலைமையான சம்பத்தையுங் காட்டுமென்று சொன்னார்கள்.—எ-று.

நீடுவாழ்க்கையாவன:—பொன், வெள்ளி முதலிய பொருள்களைப்போல விரைந்து செல்லாமல், நெடுநாளளவும் தம்மையுடையவனைக் காத்தற்பொருட்டு அசையாப்பொருள்களா யமைந்துள்ள நன்செய் - புன்செய் - தோப்பு-பசுநிரை முதலியனவாம். (௬௪)

பொருவரும் வழக்கால் வென்ற புண்ணிய முனிவ னென்னை
யொருவரு மறியீ ராகிற் போதுமென் றுரைத்துச் சூழ்ந்த
பெருமறை யவர்கு ழாமு நம்பியும் பின்பு செல்லத்
திருவருட் டுறையே புக்கார் கண்டிலர் திகைத்து நின்றார்.

(இ-ள்.) ஒப்பற்ற வல்வழக்கினால் வெற்றியடைந்த புண்ணியசொரூபராகிய அப்பிராமணர் (இவ்வளவு விருத்தர்களாகிய உங்களில்) ஒருவரும் என் வீடு முதலியவற்றை யறியாதிருப்பீர்களானால் (அவற்றைக் காட்டுகிறேன்) வாருங்களென்று சொல்லித் தம்மைச் சூழ்ந்த பெருமைபொருந்திய பிராமணர்கூட்டமும் சுந்தரமூர்த்திசுவாமிகளும் பின்னே வரும்படி (அத்திருவெண்ணெய்நல்லூரிலுள்ள) திருவருட்டுறை என்னும் ஆலயத்துள் நுழைந்தார்; (அதன்பின்பு) அவர்களனைவரும் அவரைக்காணாமல் திகைப்புற்று நின்றார்கள்.—எ-று.

திருவருட்டுறை என்பது திருவெண்ணெய்நல்லூரிலிருக்குஞ் சிவாலயத்தின் திருப்பெயர்.

எம்பிரான் கோயி னண்ண விலங்குநூன் மார்ப னெங்க
ணம்பர்தங் கோயில் புக்க தென்கொலோ வென்று நம்பி
தம்பெரு விருப்பி னோடு தனிதொடர்ந் தழைப்ப மாதோ
டும்பரின் விடைமேற் றோன்றி யவர்தமக் குணர்த்த லுற்றார்.

(இ-ள்.) (பிராமணத்திருவுருவங் கொண்டுவந்த) எமது பெருமானாகிய பிராமணன் அத்திருக்கோயிலினுள்ளே சென்று மறைந்தருள, அப்பொழுது சுந்தரமூர்த்திசுவாமிகள் விளங்குகின்ற பூணூலை யணிந்த மார்பினையுடைய பிராமணர் எமது பெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயிலினுள்ளே புகுந்தது என்ன ஆச்சரியமென்று தமக்குண்டாயிருக்கின்ற மிகுந்த ஆசையோடும் தனியே தொடர்ந்துபோய்க் கூப்பிட (அப்பொழுது சிவபெருமான்) ஆகாயத்தில்

ரிஷபவாகனத்தின்மேல் பார்வதிசமேதராயெழுந்தருளி அச்சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு அருளிச்செய்கின்றார்.—எ-று. (௬௬)

முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்
பின்புநம் மேவ லாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாந்தடுத் தாண்டோ மென்றார்.

(இ-ள்.) முற்பிறப்பில் நீ நமக்குத் தொண்டனாகியிருந்தனை; பெண்களின்மேல் வைத்த ஆசைமிகுதியினாலே பின்பு நம்முடைய உத்தரவின்படியே பூமியில் மானிடனாகப்பிறந்தாய்; (அதனால்) துன்பத்தைத் தருகின்ற இவ்வுலகவாழ்க்கையானது உன்னைத் தொடராதிருக்கும்படி நாமே வலியத் தொடர்ந்துவந்து, நல்ல அறிவினையுடைய பிராமணர்களுக்குமுன்னே தடுத்தாட்கொண்டோமென்றருளிச்செய்தார்.—எ-று. (௬௭)

என்றெழு மோசை கேளா வீன்றவான் கனைப்புக் கேட்ட
கன்றுபோற் கதறி நம்பி கரசர ணாதி யங்கள்
துன்றிய புளக மாகத் தொழுதகை தலைமே லாக
மன்றுளீர் செயலோ வந்து வலியவாட் கொண்ட தென்றார்.

(இ-ள்.) இவ்விதமாக எழுந்த ஓசையைக்கேட்டுத் தன்னையீன்ற தாய்ப்பசுவின் குரலைக்கேட்ட கன்றைப்போல, சுந்தரமூர்த்திசுவாமிகள் அலறிக் கைகால் முதலிய அவயவங்களிலெல்லாம் நெருங்கியெழுந்த மயிர்க்குச்சானது உண்டாகக் குவித்தெடுத்த கைகள் சிரசின்மேல் பொருந்த, திருச்சிற்றம்பலத்தில் ஆநந்தத் தாண்டவஞ்செய்தருளுகின்ற எம்பெருமானே! தேவரீரது கிருபையின் செய்கையோ? (அடியேனை) இவ்வாறு வலியவந்து தடுத்தாட்கொண்டதென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று. (௬௮)

எண்ணிய வோசை யைந்தும் விசும்பிடை நிறைய வெங்கும்
விண்ணவர் பொழிபூ மாரி மேதினி நிறைந்து விம்ம
மண்ணவர் மகிழ்ச்சி பொங்க மறைகளு முழங்கி யார்ப்ப
அண்ணலை யோலை காட்டி யாண்டவ ரருளிச் செய்வார்.

(இ-ள்.) யாவரும் அறியும்படியாக ஐந்து வாத்தியங்களின் ஓசையும் ஆகாயத்தில் நிறையவும், எவ்விடங்களிலும் தேவர்கள் பொழிகின்ற புஷ்பவருஷங்கள் பூமியில் நிறைந்து பரிமளிக்கவும், பூமியிலுள்ளவர்கள் மிகுந்த சந்தோஷத்தை யடையவும், நான்கு வேதங்களும் மிகுதியாகச் சப்திக்கவும் சுந்தரமூர்த்திசுவாமிகளை அடிமையோலைகாட்டித் தடுத்தாட்கொண்ட சிவபெருமான் அருளிச்செய்கின்றார்.—எ-று.

ஐந்துவாத்தியங்களாவன:—தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பனவாம். இவற்றில், தோற்கருவி பேரிகை முதலியன; துளைக்கருவி வேய்ங்குழல்முதலியன; நரப்புக்கருவி வீணைமுதலியன; கஞ்சக்கருவி தாளமுதலியன; மிடற்றுக்கருவி கண்டத்தால் சப்தசுரங்களும் உண்டாகும்படி தொனியெடுத்துப்பாடுதல் எனவறிக. (௬௯)

மற்றுநீ வன்மை பேசி வன்றொண்ட னென்னு நாமம்
பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே யாகு மாதலான் மண்மே னம்மைச்
சொற்றமிழ் பாடு கென்றார் தூய்மறை பாடும் வாயார்.

(இ-ள்.) அதுவன்றிப் பின்னும் நீ எம்மோடு வன்மையானவார்த்தைகளைச்சொல்லி வன்றொண்டனென்னும் பெயரைப்பெற்றனை; நமக்கும் அன்பினால் மிகுந்தசிறப்போடு செய்யும் பலவகை ஆராதனைகளிலும் மேலான அர்ச்சனையாவது பாடல்களேயாகும்; ஆதலால், பூமியில் நம்மை மதுரமாகிய சொற்களையுடைய தமிழினாலே பாடென்று அருளிச்செய்தார். (அவர் யாரென்றால்) பரிசுத்தம் பொருந்திய வேதங்களை ஆதிகாலத்தில் அருளிச்செய்த சிவபெருமான்.—எ-று. ()

தேடிய வயனு மாலுந் தெளிவுறா தைந்தெ ழுத்தும்
பாடிய பொருளா யுள்ளான் பாடுவாய் நம்மை யென்ன
நாடிய மனத்த ராகி நம்பியா ரூரர் மன்றுள்
ஆடிய செய்ய தாளை யஞ்சலி கூப்பி நின்று.

(இ-ள்.) (முன்னாளில் அன்னமாகவும், பன்றியாகவும் உருவங்கொண்டு திருமுடியையுந் திருவடியையுந்) தேடித்திரிந்த பிரமனும், விஷ்ணுவுங்காணாமல் மறைந்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தினாற் சொல்லப்பட்ட உண்மைப்பொருளாயுள்ள சிவபெருமான் நம்மைத் தமிழ்ப்பாடலாற் பாடக்கடவாயென்றருளிச்செய்ய, (அதைக்கேட்டுச்) சிவபெருமானது திருவருளைப்பற்றுங் கருத்தினையுடையவராய்ச் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற ஸ்ரீ நடராஜமூர்த்தியின் சிவந்த தாமரைமலர்போன்ற திருவடிகளைக் கைகுவித்து வணங்கிநின்று.—எ-று. (எக)

வேதிய னாகி யென்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதிய மறியா தேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட
கோதிலா வமுதே யின்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை யறிந்தென் சொல்லிப் பாடுகே னெனமொ ழிந்தார்.

(இ-ள்.) பிராமணத் திருவுருவங்கொண்டு சிறியேனாகிய என்னை வழக்கினால் வெல்லும்படிக்கு எழுந்தருளிவந்த இலாபத்தையறியாத அடியேனுக்குப் பழையவுணர்ச்சியைக் கொடுத்து உலகவாழ்க்கையினின்றும் பிழைக்கும்படித் தடுத்தாட்கொண்டருளிய குற்றமற்ற தேவாமுதம்போன்ற எம்பெருமானே! இன்றைக்குத் தேவரீருடைய பெருமைபொருந்திய சமுத்திரம்போன்ற மிகுந்த குணங்களை நாய்க்கு ஒப்பாகிய யான் எக்குணத்தையறிந்து என்னசொல்லிப் பாடுவேனென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று.

சிவபெருமான் மானைக் காட்டி மானைப்பிடிப்பதுபோல மானிட வடிவமெடுத்துழலுதற் கேதுவாயிருந்த தம்மைத் தடுத்தடிமை கொள்ளும் பொருட்டு அம்மானிடத் திருவுருவமேகொண்டு எழுந்தருளிவந்த பெருமைதோன்ற "வேதியனாகி" என்றும், தான் உலகவாழ்விற்புக்குழலுஞ் சிறியனென்பதுதோன்ற "என்னை" என்றும், அத்தகைய வியல்பினையுடைய தன்னை வலியத் தடுத்தாட்கொண்டருளிய மேன்மைதோன்ற "வழக்கினால் வெல்லவந்த ஊதிய மறியாதேனுக்

கு" என்றும், அறிவீனனாகிய தனக்குப் பேருணர்ச்சியைத் தந்தருளிய பெருமைதோன்ற "உணர்வுதந் துய்யக்கொண்ட" என்றும், தன்னையுண்டவர்களை நரைதிரை மூப்பின்றிச் சிலகாலம் பிழைத்திருக்கச்செய்யினும் பகைவர்களாலுண்டாகுந் துன்பத்தினின்று நீக்கச் சக்தியற்றதும், நாவொன்றினுக்கே இனிமையைத் தரத்தக்கதும், இன்பமொன்றைமாத்திரம் பயக்கத்தக்கதுமாகிய சமுத்திரத்திற்றோன்றிய தேவாமிர்தம்போலாகாது சிவபெருமான் தம்மை யோகாதிகளால் அனுபவித்தவர்களை நரைதிரை மூப்பின்றி எக்காலத்தும் இளமையுடையோராய் யாதொரு துன்பமுமில்லாமல் வாழ்விக்குஞ் சக்தியுடைமையாலும், நினைத்தலால் மனத்திற்கும், துதித்தலால் நாவிற்கும், தரிசித்தலால் கண்களுக்கும், கேட்டலால் செவிகளுக்கும் இன்பத்தைக் கொடுத்து அவ்வின்பத்தோடு மோக்ஷசாம்பிராஜ்யத்தையும் தந்தருளும் அருளுடைமைதோன்ற "கோதிலாவமுதே" என்றும், முன்பு ஒன்றுமுணராதவனாய் இகழ்ந்துரைத்தே னென்பது தோன்ற "இன்று" என்றும், கிருமிமுதலாயுள்ள அற்பஜந்துக்களையும் அரசாளச்செய்யும் பேரருளுடைமை முதலிய அளவற்றகல்யாணகுணங்கள் நிறைந்திருத்தல்பற்றிக் "குணப்பெருங்கடலை" என்றும், ஆயிரம்நாவுகளையுடைய ஆதிசேஷனும் அளவிட்டுரைப்பதற்கரிய தேவரீரது குணங்களுள் விலங்கி னுணர்ச்சியையுடையஎன்னால் ஒருசிறுதும் அறிந்துரைக்கமுடியா தென்பதுதோன்ற "நாயேன்யாதினையறிந்து" என்றும்,அக்குணங்களுள் சிறிது மறியாது பாடக்கூடாமையின் "என்சொல்லிப் பாடுகேன்" என்றுங் கூறினார் எனவறிக. "யாதினையறிந்து" என்பதற்கு எந்த நூலை யுணர்ந்து என்று பொருள் கூறினும் பொருந்தும்.

அன்பனை யருளி னோக்கி யங்கண ரருளிச் செய்வார்
முன்பெனைப் பித்த னென்றே மொழிந்தனை யாத லாலே
என்பெயர் பித்த னென்றே பாடுவா யென்றார் நின்ற
வன்பெருந் தொண்ட ராண்ட வள்ளலைப் பாட லுற்றார்.

(இ-ள்.) (இப்படி விண்ணப்பஞ்செய்த) தமது அடியவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளைக் கிருபையோடு பார்த்து அழகிய காருண்யமூர்த்தியாகிய சிவபெருமான் அருளிச்செய்கின்றார், (அதுயாதென்றால்) முன்பு (யாம் உனது கலியாணகாலத்தில்வந்து அதைத்தடுத்தபோது) எம்மை பித்தனென்று சொல்லினை; ஆகையால் என்பெயரைப் பித்தனென்றேகொண்டு(அதை முதலாகவைத்துப்) பாடக்கடவையென் றருளிச்செய்தார். அவ்வார்த்தையைக்கேட்டு நின்ற பெருமை பொருந்திய வன்றொண்டராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் தம்மைத் தடுத்தாட்கொண்டருளிய சிவபெருமானைப் பாடத்தொடங்கினார்.—எ—று. (எக)

வேறு.

கொத்தார்மலர்க் குழலாளொரு கூறாயடி யவர்பால்
மெய்த்தாயினு மினியானையவ் வியனாவலர் பெருமான்
பித்தாபிறை சூடியெனப் பெரிதாந்திருப் பதிகம்
இத்தாரணி முதலாவுல கெல்லாமுய வெடுத்தார்.

(இ-ள்.) கொத்துக்களாகப் பொருந்திய மலர்மாலையைத்தரித்த கூந்தலையுடைய உமாதேவியாரது திருமேனியில் ஒரு பாதியாக இருந்து, தம்முடைய அடியவர்களிடத்தில் மெய்யன்புடைய தாயைப்பார்க்கிலும் இனியவராகிய சிவபெருமானை விசாலம்பொருந்திய திருநாவலூரிலுள்ளவர்களுக்குத் தலைவராகிய அச்

சுந்தரமூர்த்திசுவாமிகள் "பித்தாபிறைசூடி" என்னும் முதலையுடைய பெருமை பொருந்திய திருப்பதிகத்தை இம்மண்ணுலக முதலாகிய எல்லாவுலகத்திலுள்ளவர்களும் ஓதிக் கதியடையும்பொருட்டு எடுத்தருளினர்.—எ-று.

அருட்பெருஞ் செல்வியாகிய உமாதேவியார் நித்யகல்யாணி என்பதுதோன்ற "கொத்தார்மலர்க்குழலாள்" என்றும், அவ்வுமாதேவியாரை வாமபாகத்திலுடையபெருமான் அருள்வடிவினனென்பதும், அவ்வருளை முன்னிட்டு எழுந்தருளி வந்தனனென்பதுந்தோன்ற "ஒருகூறாய்" என்றும், அருந்தவஞ்செய்து தனக்குப் பேறாகப்பெற்ற தாயானவள் புத்திரனிடத்து மிக்க பேரன்புடையவளாயிருத்தலியற்கை, அங்ஙனமாக, சிவபெருமான் அடியவர்களிடத்தில் அத்தாயினும் எண்ணில்கோடிமடங்கு பேரன்புடையவராய்ப் பாதுகாத்தருள்பவனென்பது தோன்ற "அடியவர்பால் மெய்த்தாயினு மினியான்" என்றும், எத்தகைய பெரியோர்களுங் குறித்தறியுங் கோமானென்பதுதோன்ற சுட்டுவருவித்து "அ" என்றும், வேதாகமபுராணேதிகாசமுதலிய கலைஞானங்களைக் குறைவறக்கற்று நிரம்பிய அறிஞர் பலர்க்கும் சிகாமணியாய் விளங்குஞ்சீமானென்பது சிலேடைவகையாற்றோன்ற "வியனாவலர்பெருமான்" என்றும், தாம் சிவபெருமானைப் பரிகசித்துரைத்த பெயரும் வேதத்திற் கூறப்படும் பெருமானது பல திருநாமங்களோடு பொருந்துதலின், இஃதும் அவ்வேதசம்மதமேயாமென்பதுதோன்ற "பித்தாபிறைசூடி" என்றும், எவ்வகைப்பேற்றினுஞ் சிறந்த சிவப்பேற்றைத் தருதலின் "பெரிதாம்" என்றும், "சிற்றம்பலமேய - செல்வன்கழலேத்துஞ் செல்வஞ்செல்வமே" என்று கூறுந் தமிழ்வேதப்படி திருவருட்செல்வத்தைத் திருமால்முதலிய பெத்தாத்மாக்களுக்குப் பாலித்தருளும் பான்மையினதென்பதுதோன்ற "திருப்பதிகம்" என்றும், சர்வலோகங்களிலும் வசிக்கும் சர்வான்மாக்களும் என்பது தோன்ற "இத்தாரணிமுதலா முலகெல்லாம்" என்றும், சர்வான்மாக்களுக்கும் கர்த்தா சிவபெருமானைக்காட்டிலும் வேறுகிடையாதென்று வேதாகமங்கள் விதந்துரைப்பதனாலும், அவரதருளைப் பெறுதற்குச் சைவநெறியையன்றி வேறுய்யுநெறி கிடையாமையாலும், அந்நெறியைப் பிரகாசப்படுத்தி அருளவல்ல குருநாதரிவரையன்றி வேறுகாணாமையாலும், அவ்வதீதசைவம் பிரகாசிப்பதற்கு இத்திருப்பதிகமே முதன்மையாய் நின்றமையாலும், இதனடியாகவே திருத்தொண்டத்தொகை வெளிப்பட்டு அதிற்கூறப்படும் மற்றையடியார்களின் பிரபாவத்தை உலகமுணர்ந்துய்யும் ஹேதுவுண்மையாலும் இவையனைத்தும் ஒருங்கேயமைந்து தோன்ற "உய்ய" என்றும், இத்திருப்பதிகம் மிகவிலேசானே முடியக்கிடந்ததென்பதுதோன்ற "எடுத்தார்" என்றுங் கூறினர். ஈண்டு "உலகெல்லா முய்யவெடுத்தார்" என்பதனால் இவர் ஆன்மாக்களின் பாசமோசனத்தின் பொருட்டு அருளுருக்கொண் டெழுந்தருளிய பதிப்பொருளேயன்றி, ஜீவசுபாவத்தையுடைய பசுவன்றென்னுந் துல்லிய பொருளுந்தோன்றக்கிடந்தமை யறிக. (எச)

முறையால்வரு மருத்தத்துடன் மொழியிந்தள முதலிற்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழ மையினு
னிறைபாணியி னிசைகோள்புணர் நீடும்புகல் வகையால்
இறையான்மகி ழிசைபாடின னெல்லாநிக ரில்லான்.

(இ-ள்.) படிப்படியாய் உயர்ந்துவருகின்ற (ஸ்வரவின்னியாச விசேஷங்களால் உண்டாகின்ற) நயப்போடு முதலில் எடுத்துப்பாடுகின்ற இந்தளமென்

னும் பண்ணையுடைய அத்திருப்பதிகத்தைத் துரித விளம்பித மத்தியம் என்னும் இசை வேறுபாடுகுறையாமல் பொருந்திய உரிமையினாலும், நிறைந்த கைத்தாளத்தினின்றுண்டாகின்ற இசையின் பகுதி புணர்ந்து மிகுதியாகப்பொருந்திய வகையினாலும் சிவபெருமான் மகிழ்வடைதற்குக் காரணமாக இசையோடு பாடினார். எல்லா மேன்மைகளிலும் தமக்கு ஒருவரும் ஒப்பில்லாதவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள்.—எ-று. (எ௬)

## திருவெண்ணெய்நல்லூர்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா
வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே. (க)

நாயேன்பலநாளுநினைப்பின்றிமனத்துன்னைப்
பேயாய்த்திரிந்தெய்த்தேன்பெறலாகாவருள்பெற்றேன்
வேயார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாயாவுனக்காளாயினியல்லேனெனலாமே. (உ)

மன்னேமறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னைப்
பொன்னேமணிதானேவயிரமேபொருதுந்தி
மின்னார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளன்னேயுனக்காளாயினியல்லேனெனலாமே. (ந)

முடியேனினிப்பிறவேன்பெறின்மூவேன்பெற்றமூர்தீ
கொடியேன்பலபொய்யேயுரைப்பேனைக்குறிக்கொண்ணீ
செடியார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளடிகேளுனக்காளாயினியல்லேனெனலாமே. (ச)

பாதம்பணிவார்கள்பெறுபண்டமதுபணியா
யாதன்பொருளானேனறிவில்லேனருளாளா
தாதார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாதீயுனக்காளாயினியல்லேனெனலாமே. (ரு)

தண்ணார்மதிசூடிதழல்போலுந்திருமேனீ
யெண்ணார்புரமூன்றுமெரியுண்ணநகைசெய்தாய்
மண்ணார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளண்ணாவுனக்காளாயினியல்லேனெனலாமே. (சு)

ஊனாயுயிரானாயுடலானாயுலகானாய்
வானாய்நிலனானாய்கடலானாய்மலையானாய்
தேனார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளானாயுனக்காளாயினியல்லேனெனலாமே. (எ)

ஏற்றூர்புரமூன்றுமெரியுண்ணச்சிலைதொட்டாய்
தேற்றாதனசொல்லித்திரிவேனோசெக்கர்வானீ
ரேற்றாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாற்றாவுனக்காளாயினியல்லேனெனலாமே. (அ)

மழுவாள்வலனேந்தீமறையோதீமங்கைபங்கா
தொழுவாரவர்துயராயினதீர்த்தலுனதொழிலே
செழுவார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளழகாவுனக்காளாயினியல்லேனெனலாமே. (கூ)

காரூர்புனலெய்திக்கரைகல்லித்திரைக்கையாற்
பாரூர்புகழெய்தித்திகழ்பன்மாமணியுந்திச்
சீரூர்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாரூரனெம்பெருமாற்காளல்லேனெனலாமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

சொல்லார்தமி ழிசைபாடிய தொண்டன்றனை யின்னும்
பல்லாறுல கினினம்புகழ் பாடென்றுறு பரிசி
னல்லார்வெண்ணெய் நல்லூரருட் டுறைமேவிய நம்பன்
எல்லாவுல குய்யப்புர மெய்தானருள் செய்தான்.

(இ-ள்.) சிவஞானச்செல்வர்கள் வாழ்கின்ற திருவெண்ணெய் நல்லூரில் திருவருட்டுறை என்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கின்றவரும், எல்லாவுலகத்தாரும் பிழைக்கும்படியாகத் திரிபுரங்களை யெரித்தருளியவரும் ஆகிய சிவபெருமான் குற்றமற்ற சொற்கள் நிறைந்த தமிழ்ப்பதிகத்தை இசையோடுபாடிய சுந்தரமூர்த்திசுவாமிகளை இவ்வுலகத்தில் இன்னும் நமது புகழைக்குறித்துப் பலவகையாகச்சிறப்பித்துப் பாடக்கடவையென்று மிகுந்த கருணையோடு கட்டளையிட்டருளினார்.—எ-று. (எகூ)

அயலோர்தவ முயல்வார்பிற ரன்றேமண மழியுஞ்
செயலானிகர் புத்தூர்வரு சிவவேதியன் மகளும்
உயர்நாவலர் தனிநாதனை யொழியாதுணர் வழியிற்
பெயராதுயர் சிவலோகமு மெளிதாம்வகை பெற்றாள்.

(இ-ள்.) தனக்குத்தானே சமானமாக விளங்குகின்ற புத்தூரில்வாழும் சடங்கவிசிவாசாரியருடைய புத்திரியும், (சிவபெருமான் சுந்தரமூர்த்திசுவாமிகளைத் தடுத்தாட்கொண்டபொழுது) அத்திருமணந் தவிர்ந்த காரணத்தால் உயர்வுபொருந்திய நம்பியாரூரரை இடைவிடாமல் மனதில் தியானித்துக்கொண்டு அவ்வழியினின்றும் நீங்காமல் இருந்து பின்பு கிடைத்தற்கரிய சிவலோகத்தையும் எளிதாகக் கிடைக்கப்பெற்றாள்; அப்படிப் பெறுதற்கு அயலோராயுள்ளவர்கள் வேறிடங்களிற் சென்று தவஞ்செய்வார்கள்; சடங்கவிசிவாசாரியருடைய புத்திரியார் அத்தன்மையையுடைய பிறர்போலன்று.—எ-று.

மோக்ஷத்தைக்கருதிய பிறர் வனத்திற்சென்று எண்ணிறந்தகாலம் தவஞ்செய்தும் அடைதற்கரிய பேற்றை இவ்வம்மையார் நம்பியாரூரரைச்சிந்தித்து எளிதாகவே கிடைக்கப்பெற்றனர் என்றதனால், இந்நம்பியாரூரர் தம்மையடைந்தவர்களுக்கு எத்தகைய அரியகாரியமேனும் இலேசானே யருளவல்ல குருராயரென்பது கூறுமேயமைந்தது. இனி, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு நேர்ந்த திருமணம் சுபகரமானதும் வேதசம்மதமானதுமாயிருக்க அதனை அருட்பெருங்கடலாயுள்ள சிவபெருமான் தடுத்தமைக்குக் காரணம் யாதோவெனின், நங்குருநாதரது திருமேனி ஞானவடிவமானதாலும், கருப்பற்றாறிப் பிறவாமையாலும்,சடங்கவி சிவாசாரியரது புத்திரியாரின் சரீரம் மாயாகாரியமாதலாலும், கருப்பற்றாறிப் பிறந்தமையாலும் ஞானமும் மாயையும் ஒன்றுதல்கூடாமை நோக்கிப் பெருமான் தடுத்தருளினர், இதனால் ஆளுடையநம்பிகள் கருப்பவாசமுற்றுப் பிறவாதவரென்பது வெளியாகியது. ஆயின், இவர் சடையனாருக்கும் இசைஞானியாருக்கும் புத்திரராய் அவரது கருப்பத்திற்றங்கிப் பிறந்திலரோவெனின், அவ்வாறுகொள்ளுத லசங்கதமாம் ; என்னெனின், இவர் சிவபெருமானது பேரழகின் திருவுருவாளரானமையாலும், சிவபெருமான் பிறப்பிறப்பற்றவரென்று வேதங்கூறுகின்றமையாலும், "பிறப்பில் பெருமானை" என்றும், "யாதொருதெய்வங்கொண்டீ ரத்தெய்வ மாகியாங்கே-மாதொரு பாகனார்தாம் வருவர்மற் றத்தெய்வங்கள்-வேதனைபடுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யு-மாதலாலிவையிலாதானறிந்தருள் செய்வனன்றே" என்றும், "எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்-சொல்லாற் றெளிந்தேநஞ் சோணேச-ரில்விற்-பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண் - டிறந்தகதை யுங்கேட்டி லேம்" என்றும் பல ஆன்றோர் கூறுகின்றமையாலும் அச்சிவபெருமானது இலக்கணத்தையே நங்குருராயருக்குங் கொள்ளத்தக்கது. இவ்வுண்மைநோக்கியே இவரது அவதாரசந்தர்ப்பத்தில் "தீதகன்றுலகமுய்யத் திருவவதாரஞ்செய்தார்" என்று கூறப்பட்டிருக்கின்றது. பிறருடைய பாசத்தளையை யொழிக்கவந்த விவர் தாமும் அப்பாசத்திற்பட்டுப் பிறந்தாரென்றுகொள்ளுதல் கூடாதாகையால், தவச்செல்வர்களாகிய சடையனா ரிசைஞானியாரிவர்கட்குப் பிள்ளைகலிதீர்த்தற்பொருட்டு அயோனிஜராகவே எழுந்தருளினாரென்பது மேலோர் துணிபெனவறிக. விரிப்பிற்பெருகும். (எ)

வேறு.

நாவலர்கோ னாரூரன் றனைவெண்ணெய் நல்லூரின்
மேவுமருட் டுறையமர்ந்த வேதியராட் கொண்டதற்பின்
பூவலருந் தடம்பொய்கைத் திருநாவ லூர்ப்புகுந்து
தேவர்பிரான் றனைப்பணிந்து திருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) திருநாவலூராருக்குத் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைத் திருவெண்ணெய்நல்லூரிலுள்ள திருவருட்டுறை என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானாகிய பிராமணர் தடுத்தாட்கொண்டபின்பு (அவ்விடத்தினின்றுந்) தாமரைமுதலிய மலர்கள் மிகுதியாக மலர்கின்ற விசாலம்பொருந்திய தடாகங்கள்சூழ்ந்த திருநாவலூரையடைந்து அந்தத்தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானை நமஸ்கரித்துத் திருப்பதிகம்பாடியருளினார்.—எ-று. (எஅ)

### திருவெண்ணெய்நல்லூரும், திருநாவலூரும்.

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந்தீயெழுவித்தவனோரம்பினா
லேவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தென்னையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே.

நாதனுக்கூர்நமக்கூர்நரசிங்கமுனையரைய
னாதரித்தீசனுக்காட்செயுமூரணிநாவலூரென்
றோதநற்றக்கவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்தம்வினைகட்டறுமே.

திருச்சிற்றம்பலம்.

சிவனுறையுந் திருத்துறையூர் சென்றணைந்து தீவினையால்
அவநெறியே செல்லாமே தடுத்தாண்டா யடியேற்குத்
தவநெறிதந் தருளென்று தம்பிரான் முன்னின்று
பவநெறிக்கு விலக்காகுந் திருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருத்துறையூரென்னுந் தலத்தையடைந்து, கொடிய தீவினையினாலே பாவவழியில் பிரவேசிக்காமல் தடுத்தாட்கொண்ட எம்பெருமானே! அடியேனுக்குத் தவத்திற்குரிய மார்க்கத்தைக் கட்டளையிட்டருளுமென்று, சிவபெருமானது திருமுன்னே நின்று ஜனனவழிக்கு விலக்காகிய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று. (எகூ)

### திருத்துறையூர்.

பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மலையாரருவித்திரண்மாமணியுந்திக்
குலையாரக்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
கலையாரல்குற்கன்னியராடுந்துறையூர்த்
தலைவாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே.

செய்யார்கமலம்மலர்நாவலர்மன்னன்
கையாற்றொழுதேத்தப்படுந்துறையூர்மேற்
பொய்யாத்தமிழூரனுரைத்தனவல்லார்
மெய்யேபெறுவார்கடவநெறிதானே.

திருச்சிற்றம்பலம்.

புலனைந்தும் படிதவத்திற் புரிந்தநெறி கொடுத்தருள
அலர்கொண்ட நறுஞ்சோலைத் திருத்துறையூ ரமர்ந்தருளு
நிலவுந்தண் புனலுமொளிர் நீள்சடையோன் றிருப்பாத
மலர்கொண்டு போற்றிசைத்து வந்தித்தார் வன்றொண்டர்.

(இ-ள்.) பஞ்சேந்திரியங்களும் அவற்றின் விஷயங்களிற் செல்லாமல் அடங்கும்படிக்குத் தவத்தில் அவர்விரும்பிய நெறியைக் கொடுத்தருள, நல்லவாசனைவீசுகின்ற மலர்கள்பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருத்துறையூரில் வீற்றிருந்தருளும் சந்திரனும்,குளிர்ச்சிபொருந்திய கங்காநதியும் விளங்குகின்ற நீண்ட சடையினையுடைய சிவபெருமானது திருவடிகளை மலர்களைக்கொண்டு அருச்சனை செய்து ஸ்தோத்திரஞ்செய்தார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று.

போற்றிசைத்து என்பது மலர்கொண்டு என்றதனால் அருச்சித்து என்னும் பொருள்மே னின்றது. (அ०)

திருத்துறையூர் தனைப்பணிந்து சிவபெருமா னமர்ந்தருளும்
பொருத்தமா மிடம்பலவும் புக்கிறைஞ்சிப் பொற்புலியூர்
நிருத்தனார் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று
வருத்தமிகு காதலினால் வழிக்கொள்வான் மனங்கொண்டார்.

(இ-ள்.) திருத்துறையூரென்னுந் தலத்தை வணங்கிப் (பின்பு) சிவபெருமான் வீற்றிருக்கின்ற தகுதியையுடைய பலதலங்களுக்கும்போய் வணங்கி அழகிய திருப்புலியூரென்னுஞ்சிதம்பரத்தில் திருநடனஞ்செய்தருளுகின்ற ஸ்ரீநடராஜமூர்த்தியின் ஆனந்தத்தாண்டவத்தைத் தரிசனஞ்செய்வதற்கு எண்ணங்கொண்டு ஆராமை மிகுந்த பேரன்பினால் அவ்விடத்திற்குப் போகும்படித் திருவுள்ளங் கொண்டருளினார்.—எ-று. (அக)

மலைவளர்சந் தகில்பீலி மலர்பரப்பி மணிகொழிக்கும்
அலைதருதண் புனற்பெண்ணை யாறுகடந் தேறியபி
னிலவுபசும் புரவிநெடுந் தேரிரவி மேல்கடலிற்
செலவணையும் பொழுதணையத் திருவதிகைப் புறத்தணைந்தார்.

(இ-ள்.) மலையிலுண்டாகி வளர்ந்த சந்தனமரங்களும், அகில்மரங்களும், மயிற்பீலிகளும், பலவகைமலர்களுமாகிய இவைகளைப்பரப்பி முத்துமுதலியமணிகளைக் கரையில் ஒதுக்குகின்ற அலைகளையுடைய குளிர்ந்த நீர்பொருந்திய பெண்ணையாற்றினைக்கடந்து கரையேறியபின்பு, விளங்குகின்ற பச்சைக்குதிரைகள் கட்டிய பெரிய இரதத்தையுடைய சூரியனானவன் மேல் திசைக்கடலிற் சென்று அஸ்தமிக்கும் மாலைக்காலம்வர, (அப்பொழுது தாம் தங்கியிருப்பதற்காகத்) திருவதிகை என்னுந் தலத்திற்குச் சமீபத்தில்வந்தருளினார்.—எ-று. (அஉ)

உடையவர சுலகேத்து முழுவாரப் படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்
தடையுமதற் கஞ்சுவனென் றந்நகரிற் புகுதாதே
மடைவளர்தண் புறம்பணையிற் சித்தவட மடம்புகுந்தார்.

(இ-ள்.) உலகத்தார் துதித்து வணங்குகின்ற உழவாரப்படையை யுடையவரும், நம்மை அடிமையாகவுடையவருமாகிய திருநாவுக்கரசு சுவாமிகள் ரிஷபாரூடராகிய சிவபெருமானுக்குக் கைத்தொண்டு விரும்பிச்செய்த பெருமை பொருந்திய இந்தத்தலத்தை மிதித்துச்செல்வதற்கு அடியேன் அஞ்சுகின்றேனென்று அந்தத்திருவதிகை வீரட்டானமென்னுந் தலத்தினுள்ளே போகாமல் நீர் மடைகளையுடைய குளிர்ந்தவயல்களி னருகிலிருக்கின்ற சித்தவடமடத்தை யடைந்தருளினார்.—எ-று.

உழவாரப்படை-புல்லினைச்செதுக்குமோர் கருவி. கைத்தொண்டு விரும்பிச்செய்தலாவது, உழவாரப் படையினைக்கொண்டு சந்நிதானத்தின் பிரகாரங்களிலும் திருவீதிகளிலும் புல்முதலியவை முளைக்காமல் செதுக்கிக்கொண்டிருத்தல். மடை-வயலில் நீர்ப்பாய்ச்சுவதற்குத் திறக்கவும் அடைக்கவுமுள்ள ஓரிடம். அருட்பெருஞ்செல்வராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் தமது திருக்கரங்களால் உழவாரப்படைகொண்டு திருத்தொண்டுசெய்யப் பெற்றுள்ளதாகிய அத்தலத்தை அன்பென்பது ஒரு சிறிதுமில்லாத அடியேன் கால்களால் மிதிக்கின் அதனால் பெரும்பாவமுண்டாமென்று அஞ்சுகின்றேனென்பார் "அடையுமதற்கஞ்சுவன்" என்றார். (அஙு)

வரிவளர்பூஞ் சோலைசூழ் மடத்தின்கண் வன்றொண்டர்
விரிதிரைநீர்க் கெடிலவட வீரட்டா னத்திறைதாள்
புரிவுடைய மனத்தினராய்ப் புடையெங்கு மிடைகின்ற
பரிசனமுந் துயில்கொள்ளப் பள்ளியமர்ந் தருளினார்.

(இ-ள்.) வண்டுகள் ரீங்காரம்பண்ணுகின்ற ஓசைமிகுந்த பூஞ்சோலைகள் சூழ்ந்த சித்தவடமடத்தில், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பரந்த அலைகளையுடைய நீர்பொருந்திய கெடிலநதிக்கு வடபுறத்திலுள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளியசிவபெருமானது திருவடிகளை விரும்புகின்ற திருவுள்ளத்தினை யுடையவராய்த் தம்மைச்சுற்றி எவ்விடத்திலும் நெருங்கியிருக்கின்ற பரிசனங்களும் நித்திரைசெய்யத் தாமும் நித்திரைசெய்தருளினார்.—எ-று. (அச)

அதுகண்டு வீரட்டத் தமர்ந்தருளு மங்கணரு
முதுவடிவின் மறையவராய் முன்னொருவ ரறியாமே
பொதுமடத்தி னுட்புகுந்து பூந்தாரான் றிருமுடிமேற்
பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார் போற்பயின்றார்.

(இ-ள்.) அப்படிச் சுந்தரமூர்த்திசுவாமிகள் நித்திரைசெய்வதைத் திருவீரட்டானத்தில் வீற்றிருக்குஞ் சிவபெருமான் அறிந்து முதிர்ந்தவடிவினையுடைய ஒரு விருத்தப்பிராமணராகி முதலில் ஒருவரும் அறியாமலிருக்கும்படி யாவருக்கும் பொதுவாகிய அத்திருமடத்தினுள்ளே புகுந்து மலர்மாலையைத்தரித்த ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது திருமுடியின்மேல் தாமரைமலர்போன்ற தமது திருவடிகளைவைத்து நித்திரைசெய்பவரைப்போல இருந்தார்.—எ-று.

"பதுமமலர்த்தாள்வைத்து" என்றதனால் இச்செய்யுள் சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் திருவடிதீக்ஷை செய்தமையைக் குறிப்பித்ததாயிற்று. (அரு)

அங்கிலையா ரூரனுணர்ந் தருமறையோ யுன்னடியென்
சென்னியில்வைத் தனையென்னத் திசையறியா வகைசெய்த
தென்னுடைய மூப்புக்கா ணென்றருள வதற்கிசைந்து
தன்முடியப் பால்வைத்தே துயிலமர்ந்தான் றமிழ்நாதன்.

(இ-ள்.) அப்படித் திருவடிகளைத் தமது முடியின்மேல்வைத்த தன்மையைச்சுந்தரமூர்த்திசுவாமிகள் அறிந்து (அவரைப்பார்த்து) அரியவேதங்களையுணர்ந்த பிராமணரோ! உம்முடைய பாதங்களை எனது தலையின்மேல்வைத்தீரென்று சொல்ல, (அதற்குச் சிவபெருமானாகிய பிராமணர்) நீர் நித்திரைசெய்யுந் திசையறியாமல் காலைவைத்தது என்னுடைய விருத்தாப்பியமென்று அருளிச்செய்ய, அதற்கு ஒத்துக்கொண்டு தம்முடைய சிரசினை வேறொருதிசையில் வைத்து நித்திரைசெய்தருளினார் தமிழ்த்தலைவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று. (அசு)

அங்குமவன் றிருமுடிமேன் மீட்டுமவர் தாணீட்டச்
செங்கயல்பாய் தடம்புடைசூழ் திருநாவ லூராளி
யிங்கென்னைப் பலகாலு மிதித்தனைநீ யாரென்னக்
கங்கைசடைக் கரந்தபிரா னறிந்திலையோ வெனக்கரந்தான்.

(இ-ள்.) அவ்விடத்திலும் அந்தச் சுந்தரமூர்த்திசுவாமிகளின் திருமுடியின்மேல் மறுபடியும் அப்பிராமணராகிய கடவுள் தமதுதிருவடிகளை நீட்டியருள, புறத்தில் செவ்விய கெண்டைமீன்கள் பாய்ந்து விளையாடுகின்ற நீர்வளம்பொருந்திய தடாகங்கள் சூழ்ந்த திருநாவலூரராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் இவ்விடத்தில் என்னைப் பலதரமும் மிதித்தீர், அவ்வாறுசெய்த நீர் யாரென்றுகேட்க, (அப்பொழுது) கங்கையைச் சடையில் மறைத்துப் பிராமணத் திருவுருவங்கொண்டெழுந்தருளிய சிவபெருமான் என்னை அறியாயோ? வென்று சொல்லி மறைந்தருளினார்.—எ-று. (அஎ)

செம்மாந்திங் கியானறியா தென்செய்தே னெனத்தெளிந்து
தம்மானை யறியாத சாதியா ருளரேயென்
றம்மானைத் திருவதிகை வீரட்டா னத்தமர்ந்த
கைம்மாவி னுரியானைக் கழல்பணிந்து பாடினார்.

(இ-ள்.) (அப்பொழுது சுந்தரமூர்த்திசுவாமிகள் தமது முடியின்மேல் திருவடியைச் சூட்டினவர் சிவபெருமானென்றுணர்ந்து) இவ்விடத்தில் எழுந்தருளியவர் சிவபெருமானென்றறியாமல் இறுமாப்படைந்து யான் என்னகாரியஞ்செய்தேனென்று (மனங்கலங்கித்) தெளிவடைந்து, பெருமைபொருந்தியவராகிய திருவதிகை வீரட்டானத்தில்வீற்றிருக்கின்ற யானைத்தோலைப் போர்வையாகக்கொண்டருளிய வீரட்டானேசுரரைப் பாதம்பணிந்து "தம்மானையறியாத சாதியாருளரோ" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று.

மஹாந் என்னும் வடமொழி மான் எனத் தற்பவமாயிற்று. "கைம்மாவினுரியான்" என்பதன் வரலாறு,முன்பு ஒருகாலத்தில் யானையுருவத்தையுடைய கயாசுரனென்னு மோரசுரன் மேருமலையையடைந்து பிரமனைநோக்கி அநேககாலந் தவஞ்செய்தபோது பிரமன் பிரத்தியக்ஷமாகி யாதுவரம் வேண்டுமென்ன, அதற்

குக் கயாசுரன் எனக்குக்கெடாத ஆயுளும் மிகுந்தவல்லமையும் வேண்டுமென்ன, அவ்வாறே கொடுத்து நீ சிவபெருமான் றிருமுன்னேசென்றால் இவ்வரம் அழிவெய்துமென்று சொல்லிப்போயினன். பின்பு கயாசுரன் அவ்வரத்தைப்பெற்று, சிவபெருமான்றவிர மற்றியாவரையும் வெற்றிகொள்வோமென்று நினைத்து விண்ணுலகத்திலுள்ளவர்களையும், மண்ணுலகத்திலுள்ளவர்களையும் வருத்தஞ்செய்யும்போது அவ்வருத்தத்தைச் சகிக்கமுடியாதவர்களாய் முனிவர்கள் யாவரும் காசிப்பதியிலிருக்கும் மணிகன்னிகையென்னும் ஆலயத்துள் வீற்றிருக்கின்ற சிவபெருமானுடைய திருவடிகளைச் சரணாகவடைந்து எம்பெருமானே? கயாசுரனென்னுங் கண்டகனானவன் எங்களைக் கொலைசெய்யவருகின்றானாதலால் அத்துன்பத்தினின்று மெங்களைக் காத்தருளவேண்டுமென்றிரந்தனர். அப்பொழுது கயாசுரன் அவர்களைக் கொல்லும்பொருட்டு அவ்வாலயத்தின் வாயிலில் எதிர்த்து உருத்துவந்து நின்றான். அப்பொழுது முனிவர்கள்யாவரும் சிவபெருமானைத் தழுவிக்கொண்டனர். அதைக்கண்ட கடவுளானவர் ஓர் உக்கிரமூர்த்தி யுருவங்கொண்டு அவ்வசுரனுக்கு முன்னேவர, அவன் சிவபெருமானென்றறிந்தும் பிரமன்கொடுத்த வரத்தைக்கொஞ்சமுங்கருதாது எதிர்த்துநிற்க, சிவபெருமான் தமது ஒரு திருவடியினாலுதைத்துக்கீழேதள்ளி அவனது தலையை ஒருபதத்தினாலும் துடையையொருபதத்தினாலும் மிதித்துத் தோலையுரித்துப் போர்வையாகத்தரித்து அவர்களை அத்துன்பத்தினின்று நீக்கிப் பாதுகாத்தருளினர் என்பதாம். (அஅ)

### திருவதிகை வீரட்டானம்.

பண்-கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தம்மானையறியாதசாதியாருளரே
சடைமேற்கொள்பிறையானைவிடைமேற்கொள்விகிர்தன்
கைம்மாவினுரியானைக்கரிகாட்டிலாட
லுடையானைவிடையானைக்கறைகொண்டகண்டத்
தெம்மான்றனடிக்கொண்டென்முடிமேல்வைத்திடுமென்னு
மாசையால்வாழ்கின்றவறிவிலாநாயே
னெம்மானையெறிகெடிலவடவீரட்டானத்
துறைவானையிறைபோதுமிகழ்வன்போலியானே.

என்பினையேகலனாகவணிந்தானையெங்க
ளெருதேறும்பெருமானையிசைஞானிசிறுவன்
வன்பனையவளர்பொழில்சூழ்வயனாவலூர்க்கோன்
வன்றொண்டனாரூரன்மதியாதுசொன்ன
வன்பனையாவர்க்குமறிவரியவத்தர்
பெருமானையதிகைமாநகருள்வாழ்பவனை
யென்பொன்னையெறிகெடிலவடவீரட்டானத்
துறைவானையிறைபோதுமிகழ்வன்போலியானே.

திருச்சிற்றபலம்

பொன்றிரளு மணித்திரளும் பொருகரிவெண் கோடுகளு
மின்றிரண்ட வெண்முத்தும் விரைமலரு நறுங்குறடும்
வன்றிரைக ளாற்கொணர்ந்து திருவதிகை வழிபடலாற்
றென்றிசையிற் கங்கையெனுந் திருக்கெடிலந் திளைத்தாடி.

(இ-ள்.) திரட்சியாகிய பொற்பொடிகளையும், மணிகளின் தொகுதிகளையும், போர்செய்கின்ற யானைகளின் வெண்மையான தந்தங்களையும், பிரகாசம் பொருந்திய வெண்மையாகிய முத்துக்களையும், வாசனைவீசுகின்ற பலவகை மலர்களையும், நல்ல சந்தனக்கட்டைகளையும் வலிய அலையென்னுங்கைகளால் கொண்டுவந்து திருவதிகைஎன்னுந் தலத்தை வழிபடுதலாலே தென்திசையிலுள்ள கங்கையென்று பெரியோர்களால் சொல்லப்பட்ட திருக்கெடில நதியில்மூழ்கி ஸ்நானஞ்செய்து.—எ-று.

வழிபடல் என்பதற்கு வணங்குதல் என்றும், வழியாகச் செல்லுதலென்றும் பொருள் கொள்க. (அக)

அங்கணரை யடிபோற்றி யங்ககன்று மற்றந்தப்
பொங்குநதித் தென்கரைபோய்ப் போர்வலித்தோண் மாவலிதன்
மங்கலவேள் வியிற்பண்டு வாமனனாய் மண்ணிரந்த
செங்கணவன் வழிபட்ட திருமாணி குழியடைந்தார்.

(இ-ள்.) அழகிய கிருபாநோக்கத்தையுடையவராகிய வீரட்டானேசுவரரது திருவடிகளை வணங்கி அவ்விடத்தினின்று நீங்கிப் பொங்குகின்ற நீரையுடைய அந்தக்கெடிலநதியின் தென்கரைவழியேபோய் யுத்தஞ்செய்தலில் வல்லமைபொருந்திய தோள்களையுடைய மாவலிச்சக்கிரவர்த்தி செய்த மங்கலகரம்பொருந்திய யாகசாலையில் முற்காலத்தில் வாமனுவதாரங்கொண்டுபோய் மூன்றடிமண்ணை யாசித்த சிவந்தகண்களையுடைய விஷ்ணுவானவர் பூசித்த திருமாணிகுழியென்னுந் தலத்தை யடைந்தருளினார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று.

"வாமனனாய் மண்ணிரந்த செங்கணவன் வழிபட்ட" என்பதன் சரித்திரமாவது, பூர்வத்தில் மாவலிச்சக்கிரவர்த்தி என்னுமோரரசன் உலகமுழுமையும் செங்கோல்செலுத்துங்காலத்தில் அவன் ஒருயாகஞ்செய்யத் தொடங்கினான். அப்பொழுதுவிஷ்ணுவானவர் காசிபருக்கும் அதிதிக்கும் புத்திரராகப்பிறந்து வாமனவுருவங்கொண்டு அவன்செய்யும் யாகசாலையையடைந்து தனக்கு மூன்றடிமண் தானமாகக் கேட்க, அவ்வாறே தந்தனன். அப்பொழுது அருகிலிருந்த அசுரகுருவாகியசுக்கிரன் அவ்வஞ்சகத்தையுணர்ந்து தடுக்க, விஷ்ணுவானவர் அவரது ஒருகண்ணைக்கெடுத்துப்பின்பு அண்டமூடுருவவளர்ந்து இந்நிலவுலகத்தை யோரடியாகவும் விண்ணுலகத்தை யோரடியாகவுமளந்து மற்றோரடிக்கிடம்போதாமல் அம்மாவலியின் றலையின்மேல்வைத்து அவனைப்பாதலத்தழுத்திக் கொன்று அதனால் செருக்கடைய, அதனைச் சிவபெருமானுணர்ந்து வயிரவமூர்த்தியையழைத்து அக்கருவத்தை யடக்கும்படி யனுப்ப, அவர்வந்து போர்செய்து அவ்வாமனனது தோலையுரித்துத் தரித்து, முதுகெலும்பையொடித்துத் தண்டமாகக் கையிற்பிடித்து, பெருநரம்பையறுத்து மாலையாகத்தரித்தனர். அதனால் விஷ்ணுவானவர் துயருழந்து அத்தீமைநீங்க ஓர் சிவலிங்கப்பெருமானைத் தாபித்துப் பூசித்து அக்குற

றத்தினின்று நீங்கிச் சிவப்பிரசாதம்பெற்று வாழ்ந்தனர் எனவறிக. வாமனனாகிய பிரமசாரியினால் பூசிக்கப்பெற்ற காரணத்தினால், திருமாணிகுழிஎன்றுவழங்கியது. வாமனன் = குள்ளன். மாணி = பிரமசாரி. (௬0)

பரம்பொருளைப் பணிந்துதாள் பரவிப்போய்ப் பணிந்தவர்க்கு
வரந்தருவான் றினைநகரை வணங்கினர்வண் டமிழ்பாடி
நரம்புடையா ழொலிமுழவி னாதவொலி வேதவொலி
யரம்பையர்தங் கீதவொலி யறாத்தில்லை மருங்கணைந்தார்.

(இ-ள்.) அத் திருமாணிகுழியென்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானது திருவடிகளை வணங்கித் துதித்து அவ்விடத்தினின்று நீங்கித் தம்மிடத்தில்வந்து வந்தனஞ்செய்யும் அடியார்களுக்கு வேண்டிய வரத்தைக் கொடுக்கின்றவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருத்தினைநகரைவணங்கிச் சிறந்த தமிழ்ப்பதிகத்தைப் பாடி, நரம்புகளையுடைய வீணைகளின் ஓசையும், மத்தளங்களின் இனியவோசையும், வேதபாராயண வோசையும், அரம்பாஸ்திரீகள் பாடுகின்ற சங்கீதத்தின் ஓசையும் எக்காலத்தும் நீங்காதிருக்கின்ற ஸ்ரீசிதம்பரத்திற்குச்சமீபமாக எழுந்தருளினார்.—எ-று. (௬க)

## திருத்தினைநகர்.

பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

நீறுதாங்கியதிருநுதலானைநெற்றிக்கண்ணனைநிறைவளைமடந்தை
கூறுதாங்கியகொள்கையினானைக்குற்றமில்லியைக்கற்றையஞ்சடைமே
லாறுதாங்கியவழகனையமரர்க்கரியசோதியைவரிவராலுகளுஞ்
சேறுதாங்கியதிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைச்சென்றடைமனனே.

வீடுபோக்கையிற்பிறவியைப்பழித்துநீங்கலாமென்றுமனத்தினைத்தெருட்டிச், சேடலாம்பொழிற்றிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைத்திருவடியிணைத்தா, ணாடெலாம்புகழ்நாவலூராளிநம்பிவன்றொண்டனூரனுரைத்த, பாடலாந்தமிழ்பத்திவைவல்லார்முத்தியாவதுபரகதிப்பயனே.

திருச்சிற்றம்பலம்.

## வேறு.

தேமலங்கலணி மாமணி மார்பிற் செம்மலங்கயல்கள் செங்கமலத்தண்
பூமலங்கவெதிர் பாய்வன மாடே புள்ளலம்புதிரை வெள்வளை வாவித்
தாமலங்குக டடம்பணை சூழுந் தன்மருங்குதொழு வார்கட மும்மை
மாமலங்களற வீடரு டில்லை மல்லலம்பதியி னெல்லை வணங்கி.

(இ-ள்.) தேன்பொருந்திய மலர்மாலைகளையும், அழகிய மாணிக்க மாலைகளையுந்தரித்த மார்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அருகில் அன்னமுதலியபட்சிகள் சப்திக்கின்ற அலையோடுகூடிய வெண்மையான சங்குகளைத் தடாக

ங்களிலுள்ள குளிர்ந்தசெந்தாமரைமலர்கள் அசையும்படி அழகியகெண்டைமீன் கள்பாய்தற்கேதுவாகத் தாவுகின்றமலங்குமீன்கள் விசாலமாகிய வயல்களில் சூழ் ந்திருக்கின்ற அத்தில்லையின் புறவிடங்களை வணங்குகின்றவருடைய ஆணவம் - மாயை - கன்மமென்னும் மும்மலங்களும் ஒழிய மோக்ஷத்தைக் கொடுக்கின்ற ஸ்ரீசிதம்பரமென்னும் வளப்பம்பொருந்திய தலத்தின் அழகிய திருவெல்லையை வணங்கி.—எ-று.

பாய்வன முற்றெச்சம். செம்மல் மாடுள்ள வாவிச்செங்கமலங்கள் மலங்க க்கயல்கள் பாயும்படி மலங்குகள் சூழும் தன் மருங்கைத்தொழுவார் மலங்களற வருள் தில்லைப்பதியின் எல்லை வணங்கி எனக்கூட்டுக. (கஉ)

நாக சூதவகு ளஞ்சர ளஞ்சூழ் நாளி கேரமில வங்க நரந்தம்
பூக ஞாழல்குளிர் வாழைமது காம் பொதுளும்வஞ்சிபல வெங்குநெருங்கி
மேக சாலமலி சோலைக ளாகி மீது கோகில மிடைந்து மிழற்றப்
போக பூமியினு மிக்கு விளங்கும் பூம்பு றம்பணை கடந்து புகுந்தார்.

(இ-ள்.) புன்னை - மா - மகிழ் - சரளம் - சூழ்ந்திருக்கின்ற தென்னை - இலவங்கம் - நாரத்தை - கமுகு - குங்குமம் - குளிர்ச்சிபொருந்திய வாழை - இலுப்பை-நெருங்கிய வஞ்சி - பலா முதலிய விருக்ஷங்கள் எவ்விடங்களிலும் நெருக் கமுற்று மேகக்கூட்டங்கள் பொருந்திய சோலைகளாகி அச்சோலைகளிலுள்ள மரங்களின்மேல் குயில்கள் நெருங்கிக் கூவிக்கொண்டிருக்க, தெய்வலோகத்தை ப்பார்க்கிலும் மிகுதியாகச் சிறந்துவிளங்குகின்ற புறத்திலுள்ள அழகிய வயல்க ளைக்கடந்து ஸ்ரீசிதம்பரத்தின் எல்லைக்குள்சென்றருளினர்.—எ-று.

போகபூமி என்பதற்கு பரதகண்டத்திற்குப் புறம்பாயுள்ள கிம்புருடக ண்டமுதலியனவென்று பொருள்கூறுவாருமுளர். (கங)

வன்னி கொன்றைவழை சண்பக மார மலர்ப்ப லாசொடு செருந்தி மந்தாரங்,கன்னி காரங்குர வங்கமழ் புன்னை கற்பு பாடலங் கூவிள மோ ங்கித், துன்னு சாதிமரு மாலதி மௌவ லுறைந்த நந்திகர வீரமி டைந்த, பன்ம லர்ப்புனித நந்தவ னங்கள் பணிந்து சென்றனன் மணங்கமழ் தா ரான்.

(இ-ள்.) வன்னி-கொன்றை-சுரபுன்னை - சண்பகம் - சந்தனம் - மலர்கள் பொருந்திய முருக்கமரத்தோடு செருந்தி - மந்தாரை - கோங்கு - குரா - வாசனை வீசுகின்ற புன்னை-கொடிமல்லிகை - பாதிரி - வில்வம் முதலிய விருட்சங்கள் உய ர்ந்து, மலர்கள் நெருங்கிய சிறுசண்பகம் - வாசனைபொருந்திய முல்லை - மல்லி கை - இதழ்கள் பொருந்திய நந்தியாவர்த்தம்-அலரி முதலியவற்றின் மிகுந்த பல மலர்களையுடைய பரிசுத்தம்பொருந்திய திருநந்தவனங்களை வணங்கிச் சென்றார் மணம்வீசுகின்ற மாலையைத்தரித்த ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று.

திருநந்தனவனங்களில் வாய்நீருமிழ்தல் முதலிய குற்றங்கள் செய்யின் பெரும்பாதகம் விளையுமெனக்கருதி யாவரும் அவ்வாறு செய்யாது பாதுகாத்தற் குரிய இடமாதலின், அதனைப் "புனிதநந்தவனங்கள்" என்றும், அத்தன்மை யினவாகிய நந்தவனங்கள் சிவபெருமானது அர்ச்சனை அலங்காரமுதலியவற்றிற்

குப் பயன்படுவனவாகிய நன்மலர்களைக் கொடுக்குந்தன்மையால் அவைகள் அசேதனமாயினும்சிவபெருமானதுதிருவுருவமாகவே கொள்ளத்தக்கதாகலின்,"பணிந்துசென்றனன்" என்றுங் கூறினர்; அன்றி, சிவார்ப்பணமாகத்தக்க பொருள்களனைத்தும் சிறந்ததென்பது கருதி வணங்கினானெனினு மமையும். (கூச)

இடமருங்குதனி நாயகி காண வேழ்பெ ரும்புவன முய்யவெ டுத்து, நடநவின்றருள் சிலம்பொலி போற்று நான்ம றைப்பதியை நாளும் வணங்கக்,கடல்வ லங்கொள்வது போற்புடை சூழுங் காட்சி மேவிமிகு சேட்செல வோங்கும், தடம ருங்குவளர் மஞ்சிவ ரிஞ்சித் தண்கி டங்கையெதிர் கண்டு மகிழ்ந்தார்.

(இ-ள்.) இடப்பாகத்தில் ஒப்பற்ற உமாதேவியார் நின்று தரிசிக்கவும், பெருமைபொருந்திய ஏழுலகத்தி லுள்ளவர்களும் தரிசித்துக் கடைத்தேறவும் தூக்கி ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற (குஞ்சிதபாதத்தின்) திருச்சிலம் போசையையாவருந் துதிக்கும் நான்குவேதங்களும் சூழ்ந்துமுழங்குகின்ற அச் சிதம்பரத்தை நாள்தோறும் வணங்கும்பொருட்டுச் சமுத்திரமானது பிரதக்ஷணஞ்செய்வதுபோல நான்கு பக்கங்களிலுஞ் சூழும்படியாகிய காட்சியையடைந்து மிகவும் நெடுந்தூரமளவும் உயர்ந்திருக்கின்ற விசாலமாகிய அதன் அடிப்புறத்தில் பொருந்திய மேகங்கள் தவழ்ந்தேறுகின்ற மதிலைச் சூழ்ந்த குளிர்ச்சிபொருந்திய நீருள்ள அகழியை (ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்) தமக்கெதிராகக்கண்டு மகிழ்வடைந்தார்.—எ-று. (கூரு)

மன்று ளாடுமது வின்னசை யாலே மறைச்சு ரும்பறை புறத்தின்மருங்கே, குன்று போலுமணி மாமதில் சூழுங் குண்ட கழ்க்கமல வண்டலர் கைதை,துன்று நீறுபுனை மேனிய வாகித் தூய நீறுபுனை தொண்டர்களென்னச், சென்று சென்றுமுரல் கின்றன கண்டு சிந்தை யன்பொடுதிளைத்தெதிர் சென்றார்.

(இ-ள்.) திருச்சிற்றம்பலத்தில் ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற சபாநாயகராகிய தேனையுண்ணவேண்டுமென்னும் ஆசையினாலே வேதங்களாகிய வண்டுகள் முழங்குகின்ற அச்சிதம்பரத்தின் சுற்றுப்பக்கத்திலுள்ள மலைபோலுயர்ந்த அழகுபொருந்திய பெரிய மதிலைச்சூழ்ந்த ஆழமாகிய அகழியிலுள்ள தாமரைமலர்களிலிருக்கும் வண்டுகளானவை (அதனருகில்) அலர்ந்த தாழம்பூவில் செறிந்திருக்கின்ற வெண்பொடியைப்பூசிய உடம்பினையுடையவைகளாய்ப் பரிசுத்தம்பொருந்திய விபூதியைத் தரித்த அடியார்களைப்போல் மலர்கள்தோறும் போய்ச் சப்திப்பதைக்கண்டு உள்ளத்தில் மிகுந்த பேரன்போடும் பத்தியில் முழுகி எதிராகச்சென்றார்.—எ-று.

இச்செய்யுளின் முதலடியில் ஸ்ரீநடராஜமூர்த்திகளைத் தேனாகவும், வேதங்களை அத்தேனையுண்ணவந்த வண்டுகளாகவும் உருவகப்படுத்திக் கூறியிருக்கின்றது. இதனால், சிவபெருமானை வேதங்கள் சதா தோத்திரித்துத் தேடித்திரிகின்றனவென்பது வெளிப்படுகின்றது. (கூசு)

பார்வி ளங்கவளர் நான்மறை நாதம் பயின்ற பண்புமிக வெண்கொ டி யாடுஞ், சீர்வி ளங்குமணி நாவொலி யாலுந் திசைக ளுன்கெதிர் புற ப்பட லாலுந், தார்வி ளங்குவரை மார்பின யன்பொற் சதுர்மு கங்களெ ன லாயின தில்லை,யூர்வி ளங்குதிரு வாயில்க ளுன்கி னுத்த ரத்திசையின் வாயின்மு னெய்தி.

(இ-ள்.) உலகத்தார் நன்னெறியையடைந்து கடைத்தேறும்பொருட்டு விளங்குகின்ற நான்குவேதங்களின் அத்தியயனவோசை மிகுதியாக வுண்டாயிருப்பதினாலும், வெண்மையாகிய கொடிகளில் கட்டப்பட்டு அசைகின்றசிறப்புப் பொருந்திய மணிகளின் நாவின் ஓசையினாலும்,நான்கு திசைகளுக்கு நேராகப்புறப்பட்டுப்போவதற்கு வழிகளையுடைமையாலும், (சிலேடைவகையால்) நான்கு வேதங்களையும் நன்றாக வோதியுணர்ந்த நற்குணமிகும்படி சரஸ்வதி வசிக்கப்பெற்ற சிறப்புப் பொருந்திய அழகிய நாவில்நின்றும் வருகின்ற வேதமுழக்கத்தினாலும், நான்கு திக்கிற்கும் நேராகக் காணப்படுதலாலும் மலர்மாலையைத் தரித்த மலைபோன்ற மார்பினையுடைய பிரமதேவனது அழகிய நான்கு முகங்களைப்போலிருக்கும் ஸ்ரீசிதம்பரத்தில் விளங்குகின்ற நான்கு திருவாயில்களில் வடக்குத்திருவாயிலின்முன் அடைந்து.—எ-று.

வெண்கொடி = சரஸ்வதி. இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஎ)

அன்பின் வந்தெதிர் கொண்டசீ ரடியா ரவர்க ளோநம்பி யாரூரர் தாமோ, முன்பி றைஞ்சினரி யாவரொன் றறியா முறைமை யாலெதிர் வணங்கி மகிழ்ந்து, பின்பு கும்பிடும் விருப்பி னிறைந்து பெருகு நாவனக ரார்பெரு மானும், பொன்பி றங்குமணி மாளிகை நீடும் பொருவி றந் ததிரு வீதி புகுந்தார்.

(இ - ள்.) சுந்தரமூர்த்திசுவாமிகளைத் தரிசிக்கவேண்டுமென்னும் ஆசையோடு எதிர்கொண்டுவந்த சிறப்புப்பொருந்திய அடியார்களோ! அல்லது அச்சுந்தரமூர்த்திசுவாமிகளோ! முதலில் வணங்கினவர்கள் இன்னாரென்றறியக்கூடாத முறைமையோடு எதிரெதிராகவணங்கிச் சந்தோஷித்துப் பின்பு ஸ்ரீ நடராஜப்பெருமானை வணங்கவேண்டுமென்னும் ஆசையினால் தமது உள்ளம்பூரித்து அன்புபெருகுகின்ற திருநாவலூரிலுள்ளவர்களுக்குத் தலைவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளும் பொன்மயமாக விளங்குகின்ற அழகிய மாளிகைகள் நிறைந்த ஒப்பற்ற திருவீதியில் சென்றருளினார்.—எ-று.

ஓகாரங்கள் இரண்டும் ஐயம். (கூஅ)

அங்கண் மாமறை முழங்கு மருங்கே யாட ரம்பைய ரரங்கு முழங்கு, மங்குல் வானின்மிசை யைந்து முழங்கும் வாச மாலைகளின் வண்டு முழங்கும், பொங்கு மன்பருவி கண்பொழி தொண்டர் போற்றி சைக்கு மொலி யெங்கு முழங்குந், திங்க டங்குசடை கங்கை முழங்குந் தேவ தேவர்புரி யுந்திரு வீதி.

(இ-ள்.) சந்திரன் பொருந்திய சடையில் கங்கையாறானது சப்திக்கின்ற தேவதேவராகிய ஸ்ரீநடராஜப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற அழகியதிருவீதியில் சிறப்புப்பொருந்திய பலசாகைகளாகிய வேதங்கள் ஒலிக்கும், அதன்பக்கத்

தில் நாட்டியஞ்செய்கின்ற அரம்பாஸ்திரீகளினது நாடகசாலைகள் ஒலிக்கும், மேகங்கள்தவழுகின்ற ஆகாயத்தில் ஐந்துவகையாகிய வாத்தியங்களும் ஒலிக்கும், வாசனை பொருந்திய மலர்மாலைகளில் வண்டுகள் ஒலிக்கும், மிகுந்த அன்பினால் அருவியாற்றைப்போல் ஆநந்தக்கண்ணீரைச் சிந்துகின்ற அடியார்கள் துதிசெய்கின்ற தோத்திர வொலியானது எவ்விடத்திலும் ஒலிக்கும்.—எ-று.

"வாசமாலைகள்" என்றது அங்குள்ள ஸ்திரீ புருஷர்கள் தரிப்பதும், பந்தல் தோரணமுதலிவைகளில் நாற்றுவதுமாகிய மாலைகளை. (௯௯)

போக நீடுநிதி மன்னவன் மன்னும் புரங்க ளொப்பன வரம்பில வோங்கி, மாக முன்பருகு கின்றன போலு மாளி கைக்குலமி டைந்தப தாகை, யோக சிந்தைமறை யோர்கள் வளர்க்கு மோம தூமமுயர் வானி லடுப்ப, மேக பந்திகளின் மீதிடை யெங்கு மின்னு டங்குவன வென்ன விளங்கும்.

(இ-ள்.) மிகுந்த போகத்தையனுபவிக்கின்ற இந்திரனும், பெருஞ்செல்வத்தையுடைய குபேரனும், நிலைத்துவாழுகின்ற அமராவதி-அளகாபுரியென்னும் பட்டணங்களிலுள்ள மாளிகைகளை ஒப்பனவாகிய திருமாளிகைகளின்மேல் நெருங்கக்கட்டியிருக்கின்ற அளவற்ற கொடியாடைகள் ஆகாயத்தை முற்பட்டு விழுங்குகின்ற தோற்றம்போல உயர்ந்து சிவயோகம் பொருந்திய திருவுள்ளத்தினையுடைய பிராமணர்கள் ஆகுதியால்வளர்க்கின்ற யாகப்புகையானது உயர்ந்த ஆகாயத்தையடைய (அதனால்) மேகக்கூட்டங்களின் இடைவெளிகளிலெல்லாம் மின்னல்கள் தோன்றிமறைவன போலப்பிரகாசிக்கும்.—எ-று.

"போகநீடுநிதி மன்னவன்" என்பதைப் போகநீடுமன்னவன், நிதிநீடுமன்னவன் எனக்கூட்டுக. புரங்கள் ஆகுபெயர். ஒப்பன மாளிகைக்குலம் மிடைந்தவரம்பில்பதாகை ஓங்கி மின் என்ன விளங்கும் எனக்கூட்டுக. (௪00)

ஆடு தோகைபுடை நாசிக டோறு மரணி தந்தசுட ராகுதி தோறு, மாடு தாமமணி வாயில்க டோறு மங்க லக்கலசம் வேதிகை தோறுஞ், சேடு கொண்டவொளி தேர்நிரை தோறுஞ் செந்நெ லன்னமலை சாலைக டோறு, நீடு தண்புனல்கள் பந்தர்க டோறு நிறைந்த தேவர்கண நீளிடை தோறும்.

(இ-ள்.) கோபுரவிமானங்களின் உறுப்பாகிய மகா நாசியின் பக்கங்களிலெல்லாம் சிறைவிரித்தாடுகின்ற மயில்களும், ஆகுதிசெய்தற் கிடமாகிய யாகசாலைகளிலெல்லாம் தீக்கடைக்கோலினாற் கடைந்த அக்கினிகளும், அழகிய வாயில்களின் புறங்களிலெல்லாம் கட்டப்பட்ட மலர்மாலைகளும், திண்ணைகளிலெல்லாம் மங்கலகரமான பூரணகலசங்களும், இரதங்களின் வரிசைகளிலெல்லாம் பெருமைபொருந்திய மிகுந்த பிரகாசமும், அன்னசாலைகளிலெல்லாம் செந்நெல் அரிசியால் சமைக்கப்பட்ட அன்னமலைகளும், தண்ணீர்ப்பந்தல்களிலெல்லாம் (வெவ்வேறு வகையாகப்பொருந்திய) மிகவுங் குளிர்ந்தநீரும், நீண்ட திருவீதிகளிலெல்லாம் நெருங்கிய தேவர்கூட்டங்களும் உண்டாயிருந்தன.—எ-று.

வாயில்கள் மாடுதோறும் எனக்கூட்டுக. "ஆடு தோகையுடை நாஞ்சில்க டோறும்" என்றும் பாடம். நாஞ்சில்=மதிலுறுப்பு. (கOக)

எண்ணில் பேருல கனைத்தினு முள்ள வெல்லை யில்லழகு சொல்லி ய வெல்லா, மண்ணி லிப்பதியில் வந்தன வென்ன மங்க லம்பொலி வள த்தன வாகிப், புண்ணி யப்புனித வன்பர்கண் முன்பு புகழ்ந்து பாடல்பு ரி பொற்பின் விளங்கும், அண்ண லாடுதிரு வம்பலஞ் சூழ்ந்த வம்பொன் வீதியினை நம்பி வணங்கி.

(இ-ள்.) எண்ணிக்கையில்லாத பெரிய எல்லாவுலகங்களிலு மிருக்கின்ற அளவில்லாதனவாகச் சொல்லப்பட்ட எல்லா அழகுகளும் நிலவுலகத்திலுள்ள இத்திருத்தில்லைப்பதியில் வந்தனவென்று சொல்லும்படி மங்கலகரம்பொருந்திய வளங்களையுடையனவாகிப் புண்ணியசொரூபர்களாகிய பரிசுத்தம்பொருந்திய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்முதலிய சைவசமயாசாரியர்கள் முன்னுளில் புகழ்ந்து(தேவார திருவாசகங்களாகிய) திருப்பாசுரங்களைப்பாடப்பெற்ற சிறப்போடும் விளங்கும் சிவபெருமான் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற திருச்சிற்றம்பலத்தைச் சூழ்ந்த அழகிய பொன்மயமான (தேரோடும்) திருவீதியை ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் நமஸ்கரித்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கOஉ)

மால யன்சத மகன்பெருந் தேவர் மற்று முள்ளவர்கண் முற்று நெருங்கிச், சீல மாமுனிவர் சென்றுமுன் றுன்னித் திருப்பி ரம்பினடி கொண்டு திளைத்துக், கால நேர்படுதல் பார்த்தய னிற்பக் காத லன்பர்கண நாதர் புகும்பொற், கோல நீடுதிரு வாயி லிறைஞ்சிக் குவித்த செங்கைதலை மேற்கொடு புக்கார்.

(இ-ள்.) திருமால்-பிரமன்-இந்திரன்முதலிய பெரியதேவர்களும் அவர்களல்லாத மற்றுமுள்ளவர்களும் முழுவதும் நெருங்கியும்,நல்ல தவவொழுக்கத்தையுடைய சிறந்தமுனிவர்களும் முதலில்சென்றுநெருங்கியும்,(அகாலமானபடியால் திருநந்திதேவரது திருக்கரத்திலுள்ள) திருப்பிரம்பினடியைப் பெற்றுக்கொண்டு அதனால் வருந்திப்போய்த் தரிசிப்பதற்குரிய காலம்வருவதை எதிர்பார்த்துக்கொண்டு அருகில்நிற்க, மிகுந்த பத்தியையுடைய அடியார்கூட்டங்களும் சிவகணநாதர்களும் தடையின்றி உள்ளே செல்லுகின்ற பொன்மயமாகிய அழகிய நீண்ட திருக்கோபுரவாயிலை வணங்கிக் குவித்த திருக்கரங்களைச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு உள்ளே புகுந்தருளினார்.—எ-று. (கOஙு)

வேறு.

பெருமதில் சிறந்த செம்பொன்மா ளிகைமின் பிறங்குபே ரம்பல மேரு,வருமுறை வலங்கொண் டிறைஞ்சிய பின்னர் வணங்கிய மகிழ்வொடும் புகுந்தார், அருமறை முதலி னடுவினிற் கடையி லன்பர்தஞ் சிந்தையி லலர்ந்த, திருவள ரொளிசூழ் திருச்சிற்றம் பலமுன் றிருவணுக் கன்றிரு வாயில்.

(இ-ள்.) பெரியமதிலால் சிறப்பினையடைந்த செம்பொன்மயமாகிய மாளிகைவரிசையினுள்ளே மின்னலைப்போல ஒளிவீசுகின்ற பேரம்பலமாகிய மேருவை வலம்வரவேண்டிய முறைமைப்படிவலமாகவந்துவணங்கினபின்பு (ஸ்ரீநடராஜப்பெருமானை) வணங்கும்படிக்கு மிகுந்த களிப்போடும் அறிதற்கருமையாகிய வேதங்களின் முதல் - இடை - கடையென்னு மூன்றிடங்களிலும், அடியார்களது இதயதாமரைகளிலும் வெளிப்பட்டிருக்கின்ற அழகு வளருகின்ற பிரகாசம் பொருந்திய திருச்சிற்றம்பலத்திற்கு முன்பாகவுள்ள திருவணுக்கன் திருவாயிலை அடைந்தார்.—எ-று.

மேருமலைபோன்று உயர்ந்துஞ் சிறந்தும் பெருமானைத் தன்னிடத்துக் கொண்டும் விளங்கலால் பேரம்பலத்தோடு மேருவை உவமைகூறினர். பிரணவப் பொருளாயுள்ள திருச்சிற்றம்பலம் வேதத்தின் முதல் இடை கடை என்னு மூன்றிடத்தினும் விளங்கி நிற்றல்போல அன்பர்களின் இதயாரவிந்தத்தும் விளங்கி நிற்றலால், "அருமறை முதலி னடுவினிற் கடையி லன்பர்தஞ் சிந்தையி லலர்ந்த" என்றார். திருச்சிற்றம்பலம் பிரணவசொரூபமா யிருத்தல்பற்றியே வேதமோதுங்கால் பிரணவத்தை முதலிலும் கடையிலும் சாத்தியாகக் கூறுதல்போல, தமிழ்வேத மோதுங்கால் திருச்சிற்றம்பலத்தை முதலினுங் கடையினும் ஓதுமாறு ஆன்றோ ரமைத்தன ரெனவறிக. (கoசு)

வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப மன்றுளே மாலயன் றேட
ஐயர்தாம் வெளியே யாடுகின் றாரை யஞ்சலி மலர்த்திமுன் குவித்த
கைகளோ திளைத்த கண்களோ வந்தக் கரணமோ கலந்தவன் புந்தச்
செய்தவம் பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான் றிருக்களிற் றுப்படி
[மருங்கு.

(இ-ள்.) விஷ்ணு, பிரமன் என்னும் இருவர்களும் முன்னாளில் அடியையும் முடியையும் தேட அவர்களுக்கு அரியவராய் உலகத்தார் தரிசித்துக் களிப்படையும்படி. வேதங்களாகிய சிலம்புகள் சப்திக்கக் கனகசபையில் பகிரங்கமாக ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற ஸ்ரீநடராஜமூர்த்தியைத் திருமுன்னே அஞ்சலிசெய்து தலைமேல் ஏறக் குவித்தகைகளோ! திருமேனியைத் தரிசித்து அதனிடத்தே கலந்தகண்களோ! அக்கண்களின் வழியேசென்ற அந்தக்கரணங்களோ! கலப்பான அன்பின்வழியே செலுத்த, தவஞ்செய்தலில் பெரியோராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருக்களிற்றுப்படியி னருகில்சென்று நமஸ்காரஞ்செய்து எழுந்துநின்றார்.—எ-று.

ஓகாரங்கள் ஐயம். கைகள் கண்கள் கரணம் ஆகிய அனைத்தும் அன்பின் வழியே சென்றதென்பது கருத்து. திருக்களிற்றுப்படி என்றது பெருமானது சந்நிதானத்தின் முன்னுள்ள ஸ்ரீபஞ்சாக்ஷரப்படியை. (கoரு)

ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள வளப்பருங் கரணங்க ணான்குஞ்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையா னாடுமா னந்த வெல்லையி றனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

(இ-ள்.) சத்தம் - ஸ்பரிசம் ரூபம்-ரசம் - கந்தம் என்னும் பெரியஐம்புல வுணர்ச்சியினையும் மற்றை இந்திரியங்களன்றிக் கண்களே பெற்றுக்கொள்ளவும், இத்தன்மையினவென்று அளவிட்டுரைப்பதற்கரிய மனம்-புத்தி சித்தம்-அகங்கா ரம் என்னும் அந்தக்கரணங்கள்நான்கும் சித்தமேயாகவும், அக்கரணங்களைச் செலுத்துகின்ற சத்துவகுணம்-ரசோகுணம்-தமோகுணம் என்னும் முக்குணங்களும் திருத்தமாகிய சத்துவகுணமேயாகவும் சந்திரன்விளங்குகின்ற சடையினையுடைய சிவபெருமான் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற அளவில்லாத சிவானந்தத்தை விளைக்கும் ஒப்பற்ற திருநடனத்தின் காட்சியினு லுண்டாகிய பேரின்ப வெள்ளத்தில் முழுகினவராய் ஓர்காலத்துங் கெடாத மகிழ்ச்சியினால் உடலம் பூரித்தார்.—எ-று.

இச்செய்யுளின் தத்துவார்த்தத்தைக் குருமுகத்தானுணர்க. (௧0௬)

தெண்ணிலா மலர்ந்த வேணியா யுன்றன் றிருநடங் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே யெனக்கு வாலிதா மின்பமா மென்று
கண்ணிலா னந்த வருவிநீர் சொரியக் கைம்மல ருச்சிமேற் குவித்துப்
பண்ணினு னீடி யறிவரும் பதிகம் பாடினுர் பரவினுர் பணிந்தார்.

(இ-ள்.) பரிசுத்தம்பொருந்திய சந்திரன் விளங்குகின்ற சடையினையுடைய பெருமானே! தேவரீரது திருநடனத்தைத் தரிசிக்கப்பெற்று மண்ணுலகத்திலே பிறந்த இம்மானிடப்பிறவியே அடியேனுக்கு மேலான இன்பமாமென்று சொல்லி இரண்டுகண்களிலும் அருவியாற்றைப்போல ஆனந்தக்கண்ணீர் சிந்தத் தாமரைமலர்போன்ற கைகளைச் சிரசின்மேலேறக் குவித்துப் பண்ணோடுகூடி அரிதற்கரிய திருப்பதிகத்தைப் பாடித் துதித்து வணங்கினுர்.—எ-று. (௧0௭)

## கோயில்.

பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மடித்தாடுமடிமைக்கள்ன்றியேமனனேநீவாழுநாளுந்
தடுத்தாட்டித்தருமனுர்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
கடுத்தாடுங்கரதலத்திற்றமருகமுமெரியகலுங்கரியபாம்பும்
பிடித்தாடிபுலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே.

பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற
னூரூரன்றருமனுர்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வா
னூரூரன்றம்பிரானூரூரன்மீகோங்கிலணிகாஞ்சிவாய்ப்
பேரூரர்பெருமானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தேபெற்றாமன்றே.

திருச்சிற்றம்பலம்.

தடுத்துமுன் னாண்ட தொண்டனார் முன்பு தனிப்பெருந் தாண்டவம் புரிய, எடுத்தசே வடியா ரருளினாற் றரள மெறிபுனல் மறிதிரைப் பொன்னி, மடுத்தநீள் வண்ணப் பண்ணையா ரூரில் வருகநம் பாலென வானில், அடுத்தபோ தினில்வந் தெழுந்ததோர் நாதங் கேட்டலு மதுவுணர்ந் தெழுந்தார்.

(இ-ள்.) முன் திருமணக்காலத்திலே தனக்கடிமையென்று முறியோலையைக்காட்டித் தடுத்தாட்கொள்ளப்பெற்றவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கெதிரே ஒப்பற்றபெரிய ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும்பொருட்டுத் தூக்கிய சிவந்தகுஞ்சிதபாதத்தையுடைய சிவபெருமானது திருவருளினால் முத்துக்களைக் கரையில்வீசுகின்ற நீரையுடைய காவிரியாறுனது பாய்கின்ற அழகிய பெரியவயல்கள்சூழ்ந்த திருவாரூரில் நம்மிடத்தில் நீ வரக்கடவையென்று ஆகாயத்தில் அப்பொழுதே ஒலித்தெழுந்த ஓரசரீரிவாக்கைக் கேட்டவுடனே அதையறிந்து திருவாரூருக்குப் போகும்படி எழுந்தருளினார்.—எ-று. (கoஅ)

ஆடுகின் றவர்பே ரருளினா னிகழ்ந்த வப்பணி சென்னிமேற் கொண்டு, சூடுதங் கரங்க ளஞ்சலி கொண்டு தொழுந்தொறும் புறவிடை கொண்டு, மாடுபே ரொளியின் வளருமம் பலத்தை வலங்கொண்டு வணங்கினர் போந்து, நீடுவான் பணிய வுயர்ந்தபொன் வரைபோ னிலையெழு கோபுரங் கடந்து.

(இ-ள்.) (கனகசபையில்) ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற ஸ்ரீநடராஜப்பெருமானுடைய திருவருளினால் ஆகாயத்தில் அசரீரியாகத்தோன்றிய அந்தக்கட்டளையைச் சிரசின்மேல் வகித்துக்கொண்டு,தலையின்மேல்சூடிய தமதுகைகளை அஞ்சலிசெய்து வணங்கும்போதெல்லாம் அத்திருத்தில்லையினின்றும் புறத்தேபோவதற்கு அனுமதிபெற்றுக்கொண்டு, மிகுந்த பிரகாசமாக விளங்குகின்ற பொன்னம்பலத்தைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கிப் புறத்தேசென்று, நீண்ட மேகமண்டலமுந் தாழும்படி உயர்ந்த மேருமலைபோன்றிருக்கின்ற ஏழு நிலைகளையுடைய (தென்றிசைக்) கோபுரத்தைக் கடந்துசென்று.—எ-று. (கoகூ)

நின்றுகோ புரத்தை நிலமுறப் பணிந்து நெடுந்திரு வீதியை வணங்கி,மன்றலார் செல்வ மறுகினூ டேகி மன்னிய திருப்பதி யதனிற், றென்றிசை வாயில் கடந்துமுன் போந்து சேட்படு திருவெல்லை யிறைஞ்சிக், கொன்றைவார் சடையா னருளையே நினைவார் கொள்ளிடத் திருநதி கடந்தார்.

(இ-ள்.) அவ்விடத்தில் நின்று அத்திருக்கோபுரத்தைப் பூமியில் தமது தேகம் பொருந்தும்படிச் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து, பெரிய திருவீதியைத் தொழுது, கலியாணமுதலிய சுபகாரியங்கள் நீங்காதிருக்கின்ற செல்வத்தையுடைய அவ்வீதியின் வழியாகப்போய் நிலைபெற்ற அத்திருப்பதியிலுள்ள தெற்குவாயிலைக்கடந்து, புறத்தில் வந்து தூரத்திலிருக்கும் அத்திருவெல்லையைத் தொழுது, கொன்றைமலர்மாலையைத்தரித்த நீண்டசடையினையுடைய சிவபெரு

மானது திருவருளையே தியானித்துச் செல்கின்றவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அழகிய கொள்ளிடமென்னும் நதியைக்கடந்து சென்றருளினார்.—எ-று.

இதில், ஸ்ரீசிதம்பரத்தின் தெற்கெல்லை கொள்ளிடநதியென்று கூறப்பட்டது. பிறவெல்லைகள் மேற்கே நாகசேரியும், வடக்கே மணிமுத்தாநதியும், கிழக்கே கடலும் ஆமெனவறிக. (கக0)

வேறு.

புறந்தருவார் போற்றிசைப்பப் புரிமுந்நூ லணிமார்பர்
அறம்பயந்தா டிருமுலைப்பா லமுதுண்டு வளர்ந்தவர்தாம்
பிறந்தருளும் பெரும்பேறு பெற்றதெனை முற்றுலகிற்
சிறந்தபுகழ்க் கழுமலமாந் திருப்பதியைச் சென்றணைந்தார்.

(இ-ள்.) தம்மைச் சூழ்ந்துவருகின்ற பரிசனங்கள் துதிசெய்ய முப்புரியாகிய உபவீதத்தைத் தரித்த திருமார்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்த உமாதேவியாரது திருமுலைப்பாலமுதத்தையுண்டு வளர்ந்தவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருவவதாரஞ்செய்தருளுதற்கு ஏதுவான பெரிய தவப்பேற்றைப்பெற்றதென்று உலகமுழுவதும்பரவிய பெரும்புகழையுடைய சீகாழிஎன்னுந் திருப்பதிக்கு எழுந்தருளினார்.

தாம் அசைநிலை. (ககக)

பிள்ளையார் திருவவதா ரஞ்செய்த பெரும்புகலி
யுள்ளுநான் மிதியேனென் றூரெல்லைப் புறம்வணங்கி
வள்ளலார் வலமாக வரும்பொழுது மங்கையிடங்
கொள்ளுமால் விடையானு மெதிர்காட்சி கொடுத்தருள.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ்செய்தருளிய பெருமைபொருந்திய சீகாழியென்னுந்தலத்தின் திருவெல்லையுள்ளும் நான் காலினால் மிதிக்கமாட்டேனென்று அத்திருப்பதியின் புறவெல்லையைவணங்கி ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பிரதக்ஷணமாக வரும்பொழுது, உமாதேவியாரை இடப்பாகத்தில் வைத்தருளிய தோணியப்பரும் அவருக்கெதிராக எழுந்தருளித் தரிசனங்கொடுத்தருள.—எ-று. (ககஉ)

மண்டியபே ரன்பினால் வன்றொண்டர் நின்றிறைஞ்சித்
தெண்டிரைவே லையின்மிதந்த திருத்தோணி புரத்தாரைக்
கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்த படியென்று
பண்டருமின் னிசைபயின்ற திருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) நிறைந்த பேரன்பினாலே ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் (தமக்குக் காட்சிகொடுத்தருளிய) சிவபெருமானது திருமுன்னே நின்று வணங்கிப் பரிசுத்தம் பொருந்திய அலைகளையுடைய சமுத்திரத்தில் (கற்பகாலங்கள் தோறும்) மிதந்தருளிய திருத்தோணிபுரம் என்னும் சீகாழியில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானைத் திருக்கயிலாயத்தில் வீற்றிருந்தருளிய திருக்கோலமாக இங்குக் "கண்டுகொண்டேன்" என்று பண்ணமைந்த இனிய இசையோடு பொருந்திய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று. (ககங)

திருக்கழுமலம்.

பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

சாதலும்பிறத்தலுந்தவிர்த்தெனைவகுத்துத்
  தன்னருடந்தவெந்தலைவனைமலையின்
மாதினைமதித்தங்கோர்பால்கொண்டமணியை
  வருபுனல்சடையிடைவைத்தவெம்மானை
யேதிலேன்மனத்துக்கோரிரும்புண்டநீரை
  யெண்வகையொருவனையெங்கள்பிரானைக்
காதில்வெண்குழையனைக்கடல்கொளமிதந்த
  கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே.

செழுமலர்க்கொன்றையுங்கூவிளமலரும்
  விரவியசடைமுடியடிகளைநினைந்திட்
டழுமலர்க்கண்ணிணையடியவர்க்கல்லா
  லறிவரிதவன்றிருவடியிணையிரண்டுங்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டூரன்
  சடையன்றன்காதலன்பாடியபத்துந்
தொழுமலரெடுத்தகையடியவர்தம்மைத்
  துன்பமுமிடும்பையுஞ்சூழகிலாவே.

திருச்சிற்றம்பலம்.

இருக்கோல மிடும்பெருமா னெதிர்நின்று மெழுந்தருள
வெருக்கோளுற் றதுநீங்கி யாரூர்மேற் செலவிரும்பிப்
பெருக்கோதஞ் சூழ்புறவப் பெரும்பதியை வணங்கிப்போய்த்
திருக்கோலக் காவணங்கிச் செந்தமிழ்மா லைகள்பாடி.

(இ-ள்.) வேதங்கள் இன்னமும் இத்தன்மையினதென்று உணரமாட்டாமல் முறையிட்டுக்கொண்டிருக்கின்ற சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு எதிரில் நின்றும் தரிசனந்தந்தருளி அந்தர்த்தானமாக அதனால் பயந்து பின் அப்பயத்தினின்றும் நீங்கித் திருவாரூருக்கு எழுந்தருளத் திருவுள்ளங்கொண்டு நீர்ப்பெருக்கினையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த சீகாழியென்னும் பெருமைபொருந்திய திருப்பதியை வணங்கி அவ்விடத்தினின்றும்போய்த் திருக்கோலக்காவென்னுந் திருப்பதியை வணங்கிச் செவ்விய தமிழ்ப்பதிகத்தைப் பாடியருளி,—எ-று.

புகலி, புறவம், தோணிபுரம், கழுமலம் என்பன சீகாழியின் துவாதச திருநாமங்களுட் சேர்ந்தவை; இவற்றின் விவரங்களைத் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் புராணத்துட் கூறுதும் ஆண்டுக்கண்டுணர்க. (௧௧௪)

தேனார்க்கு மலர்ச்சோலைத் திருப்புன்கூர் நம்பர்பால்
ஆனாப்பே ரன்புமிக வடிபணிந்து தமிழ்பாடி
மானார்க்குங் கரதலத்தார் மகிழ்ந்தவிடம் பலவணங்கிக்
கானார்க்கு மலர்த்தடஞ்சூழ் காவிரியின் கரையணைந்தார்.

(இ-ள்.) வண்டுகள் (தேனையுண்டு) ஆரவாரிக்கின்ற மலர்கள் பொருந்திய சோலை சூழ்ந்த திருப்புன்கூரென்னுந் தலத்தில் எழுந்தருளிய சிவலோகநாதரிடத்தில் நீங்காத பேரன்பானது அதிகரிக்க அவரது திருவடிகளில் வணங்கித் தமிழ்வேதமாகிய திருப்பதிகம் பாடி மானானது சப்தித்துக்கொண் டிருக்கின்ற திருக்கரத்தையுடைய சிவபெருமான் மனமகிழ்ந்து வீற்றிருக்கின்ற திருநீடூர் முதலிய பலதிருப்பதிகளையும் வணங்கி வாசனைபொருந்திய தாமரைமுதலிய மலர்களையுடைய தடாகங்கள் சூழ்ந்த காவிரிநதியின் கரையினை யடைந்தார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று. (கக௫)

வம்புலா மலரலைய மணிகொழித்து வந்திழியும்
பைம்பொன்வார் கரைப்பொன்னிப் பயிறீர்த்தம் படிந்தாடித்
தம்பிரான் மயிலாடு துறைவணங்கித் தாவில்சீ
ரம்பர்மா காளத்தி னமர்ந்தபிரா னடிபணிந்தார்.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற பலவகை மலர்கள் அலைந்துகொண்டுவர முத்துமுதலிய மணிகளைக் கரையில் ஒதுக்கிக்கொண்டுவந்து பாய்கின்ற பசும்பொன் மயமாகிய நீண்ட கரையினையுடைய காவிரிநதியென்று சொல்லப்பட்ட தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஆத்மநாயகராகிய மயூரேசர் வீற்றிருக்கும் திருமயிலாடுதுறை என்னுந் தலத்தை வணங்கி அங்குநின்றும் எழுந்தருளிக் கெடாதசிறப்பினையுடைய திருவம்பர்மாகாளமென்னுந் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானது திருவடிகளை வணங்கியருளினார்.—எ-று.

திருமயிலாடுதுறை என்றது ஸ்ரீமாயூரத்தை. (கக௬)

மின்னார்செஞ் சடையண்ணல் விரும்புதிருப் புகலூரை
முன்னாகப் பணிந்தேத்தி முதல்வன்ற னருணினைந்து
பொன்னாரு முத்தரியப் புரிமுந்நூ லணிமார்பர்
தென்னாவ லூராளி திருவாரூர் சென்றணைந்தார்.

(இ-ள்.) மின்னலைப்போலும் விளங்குகின்ற சிவந்த சடைமுடியினையுடைய சிவபெருமான் விருப்பங்கொண்டு வீற்றிருக்கின்ற திருப்புகலூரைத்தமக்கு முன்பாகவணங்கித் துதித்து முதற்பெருங்கடவுளாகிய அப்பெருமானது திருவருளை நினைந்து பீதாம்பரவுத்தரியத்தை யுடைத்தாகிய முப்புரி நூலையணிந்த மார்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாரூரின் திருவெல்லையை யடைந்தருளினார்.—எ-று. (ககஎ)

தேராரு நெடுவீதித் திருவாரூர் வாழ்வாருக்
காராத காதலினம் மாரூர னுமழைக்க
வாராநின் றானவனை மகிழ்ந்தெதிர்கொள் வீரென்று
நீராருஞ் சடைமுடிமே னிலவணிந்தா ரருள்செய்தார்.

(இ-ள்.) கங்காதேி பொருந்திய சடையின்மேல் இளம்பிறையைத் தரித்தருளிய தியாகேசரானவர், நீண்டதேரோடுந் திருவீதிகளையுடைய திருவாரூரில் வாழ்கின்ற அடியார்களுக்குச் சொப்பனத்தில் தோன்றி, குறையாத பேரன்பினையுடைய நமது நம்பியாரூரன் நாம் அழைத்தகாரணத்தினால் இவ்விடத்திற்கு வருகின்றான், (ஆதலால்) அந்நம்பியாரூரனைச் சந்தோஷத்தோடு எதிர்கொண்டழைத்துவரக் கடவீர்களென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (ககஅ)

தம்பிரா னருள்செய்யத் திருத்தொண்ட ரதுசாற்றி
யெம்பிரா னாரருடா னிருந்தபரி சிதுவானா
லம்பிரா னாராவா ரவரன்றே யெனுநலத்தால்
உம்பர்நா டிழிந்ததென வெதிர்கொள்ள வுடனெழுந்தார்.

(இ-ள்.) சிவபெருமான் (அடியார்களின் சொப்பனத்தில்தோன்றி) இவ்வாறாகக் கட்டளையிட்டருள, திருத்தொண்டர்கள் அக்கட்டளையை யாவருமறியும்படித் தெரிவித்து எமது பெருமானுடைய திருவருளானது இத்தன்மையினையுடையதாயிருந்ததென்றால் நமக்கு ஆண்டவராயுள்ளவர் அந்த நம்பியாரூரரேயென்று நினைக்கும் அன்போடு உடனே தேவருலகம் ஒருங்கே புறப்பட்டு இப்பூவுலகத்தில் வந்ததென்று யாவருஞ் சொல்ல அவரை எதிர்கொண்டழைத்துவரும்படிச் சேர்ந்தெழுந்தார்கள்.—எ-று. (ககக)

மாளிகைகண் மண்டபங்கண் மருங்குபெருங் கொடிநெருங்கத்
தாளினெடுந் தோரணமுந் தழைக்கமுகுங் குழைத்தொடையு
நீளிலைய கதலிகளு நிறைந்தபசும் பொற்றசும்பும்
ஒளிநெடு மணிவிளக்கு முயர்வாயி றொறுநிரைத்தார்.

(இ-ள்.) மேல்வீடுகளிலும், மண்டபங்களிலும் பெரிய கொடியாடைகள் நெருங்கியிருக்கவும், கால்கள்நாட்டி அதில் கட்டப்பட்ட நீண்டதோரணங்களையும் தழைகளையுடைய கமுகமரங்களையும், மாவிலைமுதலிய தழைகளால் கட்டப்பட்டதோரணங்களையும், நீண்ட இலைகளையுடைய வாழைமரங்களையும், நீர் நிறைந்த பசும்பொன்னாலாகிய பூரணகலசங்களையும், ஒழுங்காக நீண்டிருக்கின்ற இரத்தின தீபங்களையும் உயர்ந்தவீட்டின் வாயில்கள்தோறும் வரிசையாக வைத்தார்கள்.—எ-று.

"தாளினெடுந்தோரணம்" என்பதற்கு பனை - தென்னை முதலியவற்றின் குருத்துக்களாலாகிய தோரணமென்றும், "மணிவிளக்கு" என்பதற்கு ஓர் முழுமாணிக்கத்தாற் செய்த விளக்கென்றும் பொருள்கூறுதலும்ஒருவகை.

சோதிமணி வேதிகைக டோய்நறுஞ்சாந் தணிநீவிக்
கோதில்பொரி பொற்சுண்ணங் குளிர்தரள மணிபரப்பித்
தாதவிழ்பூந் தொடைமாலைத் தண்பந்தர் களுஞ்சமைத்து
வீதிகளுண் டுகளடங்க விரைப்பனிநீர் மிகத்தெளித்தார்.

(இ-ள்.) பிரகாசம்பொருந்திய நவரத்தினங்கள்பதித்த திண்ணைகளில் பரிசுத்தமாகிய நல்ல சந்தனக்குழம்பை அழகாக மெழுகி அதன்மேல் குற்றமற்ற பொரிகளையும், பொற்சுண்ணங்களையும், குளிர்ச்சிபொருந்திய முத்துக்களையும், பல

வகை ரத்தினங்களையும்பரப்பி மகரந்தங்களைச்சிந்தி அலர்ந்த மலர்மாலைகளால் குளிர்ந்த பூம்பந்தல்களையும் உண்டாக்கித் திருவீதிகளில் சிறிய தூசுகளடங்கும் படி வாசனைவீசுகின்ற பனிநீரை மிகுதியாகத் தெளித்தார்கள்.—எ-று. (௧௨௧)

மங்கலகீ தம்பாட மழைநிகர்தூ ரியமுழங்கச்
செங்கயற்கண் முற்றிழையார் தெற்றிதொறு நடம்பயில
நங்கள்பிரான் திருவாரூர் நகர்வாழ்வார் நம்பியைமுன்
பொங்கெயினீ டிருவாயிற் புறமுறவந் தெதிர்கொண்டார்.

(இ-ள்.) மங்கலகரமான சங்கீதங்களைப் பாடவும், மேகத்தின் முழக்கத்தையொத்த பேரிகைமுதலிய வாத்தியங்கள் முழங்கவும், செவ்விய கெண்டைமீன்போன்ற கண்களையுடைய செய்தொழிலில் குறைவின்றி முற்றிய ஆபரணங்களையணிந்த நடனமாதர்கள் நடனசாலைகள்தோறும் நடனஞ்செய்யவும், நமது தியாகராஜப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருவாரூர்த் திருநகரில்வாழ்கின்ற அடியார்கள் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை முன்னே பொலிவினையுடைய நகர்ப்புறத்திலுள்ள நீண்ட மதிலினையுடைய திருவாயிலின் புறத்தேவந்து எதிர்கொண்டார்கள்.—எ-று.

ஈண்டு எயில் என்றது ஊரைச் சுற்றியிருக்கும் மதிலை. (௧௨௨)

## வேறு.

வந்தெதிர் கொண்டு வணங்கு வார்முன் வன்றொண்ட ரஞ்சலி கூப்பி வந்து,சிந்தை களிப்புற வீதியூடு செல்வார் திருத்தொண்டர் தம்மைநோக்கி, யெந்தை யிருப்பது மாரூரவ ரெம்மையு மாள்வரோ கேளீரென்னுஞ், சந்த விசைப்பதி கங்கள்பாடித் தம்பெரு மான்றிரு வாயில்சார்ந்தார்.

(இ-ள்.) வன்றொண்டப்பெருமானாகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் தம்மையெதிர்கொண்டுவந்து வணங்கும் அடியார்களுக்கு முன்னே தமது கைகளை அஞ்சலியாகக் குவித்து வணங்கி அவர்களுக்கெதிரே வந்து மனதில் சந்தோஷமுண்டாகத் திருவீதியில் எழுந்தருளுகின்றவர் அத் திருத்தொண்டர்களைப் பார்த்து "எந்தையிருப்பது மாரூரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்" என்கிற சந்தமாகிய இசையினையுடைய திருப்பதிகத்தைப்பாடியருளித் தமது பெருமானாகிய கடவுளினது திருக்கோயிலின் திருவாயிலை யடைந்தருளினார்.—எ-று. (௧௨௩)

---

## திருவாரூர்.

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கரையுங்கடலுமலையுங்காலையுமாலையுமெல்லா
முரையில்விரவிவருவாரொருவனுருத்திரலோகன்
வரையின்மடமகள்கேள்வன்வானவர்தானவர்க்கெல்லா
மரையனிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோகேளீர்.

எந்தையிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோவென்று
சிந்தைசெயுந்திறம்வல்லான்றிருமருவுந்திரடோளன்
மந்தமுழவமியம்பும்வளவயனாவலாரூரன்
சந்தமிசையொடும்வல்லார்தாம்புகழெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

வானுற நீடிரு வாயிலைநோக்கி மண்ணுற வைந்துறுப் பால்வணங்கித்
தேனுறை கற்பக வாசமாலைத் தேவா சிரியன் றொழுதிறைஞ்சி
யூனு முயிரு முருக்குமன்பா லுச்சி குவித்தசெங் கைகளோடுந்
தூநறுங் கொன்றையன் மூலத்தானஞ் சூழ்திரு மாளிகை வாயில்புக்கார்.

(இ-ள்.) ஆகாயத்தை யளாவ வுயர்ந்திருக்கின்ற திருவாயிலைத் தரிசித்துப் பூமியிலே தமது திருமேனி பொருந்தப் பஞ்சாங்கவிதிப்படி நமஸ்கரித்துத் தேன் பொருந்திய கற்பகமலர்களால் தொடுத்த வாசனைவீசுகின்ற மாலைகள் கட்டியிருக்கின்ற தேவாசிரியமண்டபத்தை வணங்கித் துதித்து, உடம்பையும் உயிரையும் உருகச்செய்கின்ற பேரன்பினால் தமது சிரசின்மேல் குவித்த சிவந்த திருக்கைகளோடும் பரிசுத்தம்பொருந்திய நல்லமணம்வீசுகின்ற கொன்றை மலர் மாலையைத்தரித்தருளிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருமூலத்தானத்தைச் சூழ்ந்த திருமாளிகையின் திருவாயிலையடைந்தருளினார்.—எ-று. (கஉச)

புற்றிடங் கொண்ட புராதனனைப் பூங்கோயின் மேய பிரானையார்க்கும்
பற்றிட மாய பரம்பொருளைப் பார்ப்பதி பாகனைப் பங்கயத்தாள்
அர்ச்சனை செய்ய வருள்புரிந்த வண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி
நற்றமிழ் நாவலர் கோனுடம்பா லன்மையின் றன்மையை மெய்ம்மை [பெற்றார்.

(இ-ள்.) புற்றினைத் தமக்கிடமாகக்கொண் டெழுந்தருளிய பழம்பொருளாயுள்ளவரை, பூங்கோயிலில் வீற்றிருக்கின்ற பெருமானை, யாவர்க்கும் அடைதற்கிடமாகிய பரம்பொருளை, உமாதேவியாரை யிடப்பாகத்திலுடைய கடவுளை, இலக்குமிதேவி பூசிக்க அவளுக்கு (மாங்கல்யபிக்ஷைதந்து) திருவருள்செய்த தலைவரைப் பூமியில் விழுந்து நமஸ்காரஞ்செய்து, நல்ல தமிழ்ப்பதிகத்தைப் பாடுகின்ற திருநாவலூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தேகத்தைப் பெற்றதனாலடையவேண்டிய நன்மையின் விளைவை மெய்மையாகப் பெற்றார்.—எ-று.

உடம்பைப்பெற்றதனா லடையவேண்டிய நல்ல பயனாவது பெருமானுடைய திருவடிகளைத் தரிசித்துச் சிவாநந்தத்திற் சுகித்திருத்தலேயன்றி வேறின்றாகலின், அதனை ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் உள்ளவாறே யடைந்தனரென்பது தோன்ற "நற்றமிழ்நாவலர்கோனுடம்பாலன்மையின்றன்மையைமெய்ம்மைபெற்றார்" என்றார். பங்கயத்தாள் அர்ச்சனைசெய்ய வருள்புரிந்த சரிதத்தை முன்னர்க்காண்க. (கஉரு)

அன்பு பெருக வுருகியுள்ள மலைய வட்டாங்க பஞ்சாங்கமாக
முன்பு முறைமையி னால்வணங்கி முடிவிலாக் காதன் முதிரவோங்கி
நன்புல னாகிய வைந்துமொன்றி நாயகன் சேவடி யெய்தப்பெற்ற
இன்பவெள் ளத்திடை மூழ்கிநின்றே யின்னிசை வண்டமிழ் மாலைபாட.

(இ-ள்.) அன்பானது தம்முள்ளே பெருக்கெடுத்து அதனால் மனங்கசிந்துருகித் ததும்ப அஷ்டாங்கமுறையும் பஞ்சாங்கமுறையும்பொருந்த முன்னே முறைமைப்படி வணங்கி முடிவில்லாத பேரன்பானது அதிகரிக்க அதனால் உயர்வையடைந்து நன்மைபொருந்திய ஐம்புலன்களும் ஒருவழிப்பட்டுச் சிவபெருமானுடைய திருவடிகளை அடையப்பெற்ற பேரின்பவெள்ளத்தில் முழுகிநின்று இனிய இசைபொருந்திய வளமாகிய தமிழ்ப்பதிகத்தைப்பாடியருள.—எ-று.

அஷ்டாங்கமாவது சிரம், இரண்டு கைகள், இரண்டு முழந்தாள்கள், இரண்டுகாதுகள், நெற்றி இவைகள் பூமியில் பொருந்தும்படி வணங்குதல். பஞ்சாங்கமாவது சிரமும், இரண்டுகைகளும், இரண்டுமுழந்தாள்களும் பூமியின்மேல் பொருந்த வணங்குதல் எனவறிக. (கஉசு)

வாழிய மாமறைப் புற்றிடங்கொண் மன்னவ னாரரு ளாலோர்வாக்குத்
தோழமை யாக வுனக்குநம்மைத் தந்தன நாமுன்பு தொண்டுகொண்ட
வேள்வியி லன்றுநீ கொண்டகோல மென்றும் புனைந்துநின் வேட்கைதீர
வாழிமண் மேல்விளை யாடுவாயென் றாரூரர் கேட்க வெழுந்ததன்றே.

(இ-ள்.) பெருமைபொருந்திய பிரணவசொரூபமாகிய புற்றினை யிடமாகக்கொண்டருளிய சிவபெருமானது திருவருளினால் ஓர் அசரீரிவாக்கானது நம்மை உனக்குத் தோழனாகக்கொடுத்தோம், நாம் முன்பு உன்னைத் தடுத்தாட்கொண்ட கலியாணகாலத்தில் நீ தரித்திருந்த மணக்கோலத்தைஎந்நாளும் தரித்துக்கொண்டு உன்னுடைய ஆசைதீரும்படி சமுத்திரஞ்சூழ்ந்த இந்நிலவுலகத்தில் விளையாடுவாயாகவென்று ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் காதில் கேட்கும்படியாக எழுந்தது.—எ-று.

வாழிய அசைநிலை. (கஉஎ)

கேட்க விரும்பிவன் றொண்டரொன்றுங் கேடிலா தானை யிறைஞ்சிநின்றே
யாட்கொள வந்த மறையவனே யாரூ ரமர்ந்த வருமணியே
வாட்கயல் கொண்டகண் மங்கைபங்கா மற்றுன் பெரிய கருணையன்றே
நாட்கம லப்பதந் தந்ததின்று நாயினே னைப்பொரு ளாகவென்றார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அவ்வசரீரிவாக்கைக் கேட்டவுடனே விருப்பங்கொண்டு, எக்காலத்திலும் அழிவில்லாத சிவபெருமானை வந்தனஞ்செய்து நின்று, என்னைத்தடுத்தாட்கொள்ளும்படி பிராமணத்திருவுருவங் கொண்டு எழுந்தருளிவந்த பெருமானே! திருவாரூரில் புற்றினையிடமாகக்கொண்டு வீற்றிருக்கின்ற விலையிடுதற்கரிய மாணிக்கமே! வாளையும் - கெண்டைமீனையும் ஒத்த கண்களையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திலுடையவரே! நாயினையொத்த அடியேனை இன்று ஒரு பொருளாகமதித்து புதிய தாமரைமலர்போன்ற திருவடி

கனை அடைக்கலமாகக் கொடுத்தருளியது தேவரீரது பெருங்கருணையல்லவோ? என்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று.

நாட்கமலப்பதம் என்றது ஈண்டுத்திருவருளை. (க௨அ)

என்று பலமுறை யால்வணங்கி யெய்திய வுள்ளக் களிப்பினேடும்
வென்றி யடல்விடை போனடந்து வீதிவி டங்கப் பெருமான்முன்பு[தார்
சென்று தொழுது துதித்துவாழ்ந்து திருமாளி கைவலஞ் செய்துபோந்
அன்று முதலடி யார்களெல்லாந் தம்பிரான் றோழனென் றேயறைந்தார்.

(இ-ள்.) இவ்விதமாகத் துதித்துப் பலமுறை வணங்கித்தமக்குண்டாகிய மனமகிழ்ச்சியோடும் வெற்றிபொருந்திய வலியரிஷபத்தைப்போல நடந்து, தியாகப்பெருமானது திருமுன்னே சென்று வணங்கித்துதித்து, அதனால் சிவாநந்தப்பெருவாழ்வடைந்து, ஆலயத்தைச் சூழ்ந்த திருமாளிகையைப் பிரதக்ஷணஞ் செய்து புறப்பட்டார். அன்றுமுதலாக அடியார்கள்யாவரும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைத் தம்பிரான் தோழனென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.—எ-று.

மைவளர் கண்ட ரருளினலே வண்டமிழ் நாவலர் தம்பெருமான்
சைவ விடங்கி னணிபுனைந்து சாந்தமு மாலையுந் தாருமாகி
மெய்வளர் கோல மெலாம்பொலிய மிக்க விழுத்தவ வேந்தரென்னத்
தெய்வ மணிப்புற்று ளாரைப்பாடித் திளைத்து மகிழ்வொடுஞ் செல்லா
நின்றார்.

(இ-ள்.) காளகண்டத்தையுடைய சிவபெருமானது திருவருளினலே வளப்பம் பொருந்திய தமிழில் வல்லவராகிய, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சைவமறையவர்க்குரிய சுந்தரவேடத்தைத்தரித்துக்கொண்டு சந்தனத்தையும், முத்துமாலையையும், மலர்மாலையையுந்தரித்தவராகி தமதுதிருமேனியில் விளங்குகின்ற அலங்காரமெல்லாம் பொலிந்துதோன்ற மிகவும் சிறந்ததவத்தலைவர் என்றுசொல்லும்படிக்குத் தெய்வத்தன்மைபொருந்திய அழகிய புற்றிடங்கொண்டருளியசிவபெருமானைத்திருப்பதிகங்கள்பாடித் துதித்துச் சிவாநந்தவெள்ளத்தில்முழுகி மகிழ்ச்சியோடு நாள்தோறும் தரிசித்துச் செல்கின்றவராயினர்.—எ-று. (க௩0)

வேறு.

இதற்குமுன் னெல்லை யில்லாத் திருநக ரிதனுள் வந்து
முதற்பெருங் கயிலை யாதி முதல்வர்தம் பங்கி னட்குப்
பொதுக்கடிந் துரிமை செய்யும் பூங்குழற் சேடி மாரிற்
கதித்தபூ ணேந்து கொங்கைக் கமலினி யவத ரித்தாள்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் இங்கு எழுந்தருளுவதற்குமுன்னமே அளவில்லாத பெருமையினையுடைய இத்திருவாரூரிலே முதன்மைபொருந்திய பெருமையினையுடைய திருக்கயிலாயத்தில் வீற்றிருந்தருளும் ஆதிகாரணராகிய சிவபெருமானது இடப்பாகத்திலுள்ள உமாதேவியாருக்குச் சிறப்பாக உரிமைத் தொண்டுசெய்கின்ற மலர்களைத்தரித்த கூந்தலையுடைய தோழிமார்களில் ஒளி பொருந்திய ஆபரணங்களைத்தாங்கிய ஸ்தனங்களையுடைய கமலினிஎன்னுந் தோழியார்வந்து திருவவதாரஞ்செய்தார்.—எ-று. (க௩க)

கதிர்மணி பிறந்த தென்ன வுருத்திர கணிகை மாராம்
பதியிலார் குலத்திற் றோன்றிப் பரவையா ரென்னு நாமம்
விதியுளி விளக்கத் தாலே மேதகு சான்றோ ரான்ற
மதியணி புனித னன்னாண் மங்கல வணியாற் சாற்றி.

(இ-ள்.) தங்கட்கு ஒருநாயகனையும் எய்தாதவர்களாகிய உருத்திரகணிகையர்குலத்தில் ஒளிபொருந்திய சிறந்தமாணிக்கம்போலத் திருவவதாரஞ்செய்து மேன்மைபொருந்திய பெரியோர்களால் பிரசித்தமாகிய வேதவிதிப்படியே சிறந்த திருவாதிரைநட்சத்திரத்தில் மங்கலகரமான சிறப்புடன் பரவையாரென்னுந் திருநாமஞ் சாற்றப்பட்டு.—எ-று.

சிவபெருமான் திருக்கயிலாயத்தில் கட்டளையிட்டருளியபடி ஆலாலசுந்தரர், கமலினியார், அனிந்திதையார் என்னும் மூவர்களில் ஆலாலசுந்தரர் சடையனாருக்கும் இசைஞானியாருக்கும் புத்திரராக எழுந்தருளிய விபவங்களை முன்னர்க் கூறியுள்ளோம். மேல் கமலினியார் பரவைநாச்சியாராக அவதரித்தமையை ஈண்டு விசாரிக்கப்புகின், அவரும் அயோனிஜராக அவதரித்தனரென்பதேயன்றி ஒருமாதாவின் கருப்பத்திற்றங்கிப் பிறந்ததாகக்கூறினதில்லை எனவறிக. இதனை, "(உருத்திரகணிகைமாராம் பதியிலார்குலத்திற்றோன்றி) என்று கூறியிருக்கின்றதெனின்,உருத்திரகணிகையர்குலத்தில் என்றதேயன்றி உருத்திரகணிகையொருத்திவயிற்றில் எனவாவது, இன்னபேருடையவள் வயிற்றில் எனவாவது கூறினதில்லை. தாயையும், அவள் கர்ப்பஸம்பந்தத்தையும், அவள் பேரையுங் கூறாமையானும், உருத்திரகணிகையர்குலத்தைக் கூறினவிடத்தும் (பதியிலார்குலத்திற்றோன்றி) என விதந்தமையானும் பரவையார் மாத்ருகர்ப்ப விஹீனராயினரென்பது ஸித்தமாயிற்று. (பதியிலார்குலம்) என்பது புருஷஸம்பர்க்கமில்லாதவர்குலம் என்றாகி, அதனால் அக்குலத்தவர்க்கு ஸந்ததியுண்டாகாமை வெளிப்பட்டு, அவர் கருப்பமெய்தலும் மகப்பேறடைதலுங் கூடாமைசாதிக்கப்பட்டது. அத்தகையார் வயிற்றில் பரவையார் பிறந்தாரெனல் யாங்ஙனம்? அவர் மணவினையாற் குறித்த வோர் புருடனைச் சேராதவரென்பதே (பதியிலார்) என்றதிற் கொள்ளக்கிடக்கிறதன்றி மணங்கருதாது காமவயத்தாற் புல்லுமாடவர் பல்லாரோடு முயங்காதவரெனக் கொள்ளக்கிடைத்திலது. ஆகலான், புருடர் பல்லாருடன் முயங்கி வாழு மன்னோர்க்கு மகப்பேறுண்டாகுமெனின், இது கேவலம் அஸங்கதம். எங்ஙனமெனின், உருத்திரகணிகையர் உருத்திரஸம்பந்தத்தால் அவ் வுருத்திரமூர்த்தியினது நின்மாலியப்பொருளாயினர். சிவநின்மாலியமாறனுள், தேவஸ்வம்- தேவதாதிரவியம் - சண்டாதிக்ருதம் - பஹிக்ஷிப்தம் - நைவேத்யம் என்னும் ஐந்தும் ஸ்வீகரிக்கற்பாலனவன்றெனவும், நிவேதிதமொன்றே ஸ்வீகரிக்கற்பாலதெனவும் உண்மை நூல்கள் கூறுமாற்றானும், "தேவஸ்வம்கிராமபூம்யாதி தாஸீதாஸசதுஷ்டயம்" என்ற வசனபரியாலோசனையால் சிவார்ப்பிதமாயுள்ள கிராமங்கள் - பூமிகள் - தாஸிகள்-தாஸர்கள் என்னு மிந்த நின்மாலியப்பகுதிகள் ஸ்வீகரிக்கற்பாலனவாகாத தேவஸ்வமாகத் தெளியப்படுமாற்றானும் (பதியிலார்குலம்) என்பதற்குப் பல புருடரைக் கூடிவாழ்கின்றவர்குலம் என்று பொருளுரைப்பது வேதபாஹியர்கூற்றாம். பிரதத்தன் என்னும் பேரையுடைய காசிராஜன் ஓர்கால் அருணசலத்தையடைந்து திருக்கோயிலுட்போனபோது அங்குப் பாடிக்கொண்டிருந்த

தேவதாசியைப்பார்த்து இச்சித்து அவளைத் தனது நாட்டிற்கொண்டுபோக நினைத்தமாத்திரத்தில் (நினைந்தனனதற்கு - முன்னமே குரங்குமுகமதாயிருந்தான்) என்றபடி ஆயினமையும் (பதியிலார்குலம்) என்பத னுண்மைப்பொருளை விளக்கும். இதனை வலியுறுத்துமாறு, "பன்னருமந்தப் பூசனைபுரிந்தான் பரமனுமவற்கருள் புரிந்தான், இன்னரமொழியாள் விருப்பினு லடைந்த இலேசவா னரமுக மொழிந்தான், நன்னரமுகம்பெற் றிறையுநாடணைந்தான்" என விதந்தமையானும் உண்மைதேர்ந்துய்க.உருத்திரகணிகையர் மகப்பேறெய்தாதபோது அவர் ஸந்ததிபெருகலும் அந்த ஸந்ததியார் உருத்திரகணிகையராதலும் கூடாதெனின், இதுவும் விபரீதமாம். சிவாகமங்களில் தந்துவாயர் மரபிற்றோன்றும் கன்னிகையையே உருத்திரார்ப்பணஞ்செய்ய விதித்தலால், அவர்சுத்தகுலமுடையராதல் பெறப்பட்டது. தந்துவாயர் (இழைநக்கி நூனெருடு மேற்றமுடையோர்.) இவர் கைக்கோளரென்று சிறந்திருக்கின்றனர். இக்குலத்தவர் ஓர்குடும்பத்தில் ஓர்பெண்ணைச் சிவார்ப்பிதஞ்செய்துவரும் பெரும்பாக்ய மெய்தியிருக்கின்றனர். இவருக்கன்றியேனையோர்க்கு அது சிறவாது. என்னெனின், வீரவாகுதேவர்முதலிய இலக்கத் தொன்பதின்மரைத்தந்த நவசத்திகள் அம்மையினது நூபுரத்திலுதிர்ந்த நவமணிகளினின்றும் பிறந்து, அவ்வம்மையாருக்குச் சேடிகளாயிருந்தாராகலின், அவர்குலத்தவரோ உருத்திரகணிகையராக உண்மைநூல்கள் விதிக்கும். இதனால், பலபுருடரைச்சேர்ந்து விபசரிக்கும் வேசியரையே உருத்திரகணிகையராக மயங்கியது அஸங்கதமாயிற்று. விபசாரஞ்செய்பவர் வேசியரேயன்றித் தாசியரன்று. அவ்வேசியரைத் தாசியராகக் கோடல் தவறு. காலகதியால் பிரகிருதத்தில் வேசியரே தாசியராக நியமிக்கப்படுகின்றனர். தாசியரும் வேசித்தொழில்புரிகின்றனர். இவ்வநிஷ்டாசாரம் பிரமாணமாகாது. பிராஹ்மணனொருவன் ஊழ்வலியாற் கள்ளருந்தலும் இழிகுலமாதைச்சேறலுங்கொண் டியையின், அதுவே பிராஹ்மணருடைய தருமமென்று யாவர்கொள்வர்? இந்த நயங்களை யுய்த்துணர்வார் (பதியிலார் குலத்திற் றோன்றி) என்பதின் மயங்கார்! மயங்கார்!! இவ் வுண்மைவிசாரத்தால் பரவையாரது திருவவதாரம் கற்பஹீனமென்பது இனிது சாதிக்கப்பட்டது." என்பதனுமுணர்க. (௧௩௨)

பரவினர் காப்புப் போற்றிப் பயில்பெருஞ் சுற்றந் திங்கள்
விரவிய பருவந் தோறும் விழாவணி யெடுப்ப மிக்கோர்
வரமலர் மங்கை யிங்கு வந்தன ளென்று சிந்தை
தரவரு மகிழ்ச்சி பொங்கத் தளர்நடைப் பருவஞ் சேர்ந்தார்.

(இ-ள்.) அந்நகரத்தில் வசிக்கின்ற பெருமைபொருந்திய தமது சுற்றத்தார்கள் தங்கள் குலதெய்வங்களை வணங்கினவர்களாய்க் காவலைப்பேணி மாதங்களால் நிறையப்பெற்ற பருவங்கள்தோறும் விழாவணிகளைச் செய்யவும், அறிஞர்கள் சிறந்ததாமரைமலரிலிருக்கும் இலக்குமியே இங்குவந்துஅவதரித்தனளென்று தங்கள் மனதிலுண்டாகிய மகிழ்ச்சியதிகரிக்கவும் தளர்நடைப்பருவத்தை யடைந்தார்.—எ-று.

காவலைப்பேணலாவது:—குழந்தை க்ஷேமமாக இருக்கவேண்டுமென்று தங்கள் இஷ்டதேவதையைப் பலவகையாகப் பிரார்த்தித்து வணங்குதல். திங்கள் விரவிய பருவந்தோறும் விழாவணியெடுத்தலாவது:—ஐந்தாமாதம் தாலப்

ருவமும், ஏழாமாதம் செங்கீரைப்பருவமும், ஒன்பதாமாதம் சப்பாணிப்பருவமுமாகப் பருவங்கள் மாதவரையறையாக வருதலால், அவ்வப் பருவங்கள்தோறும் அதததற்குச் செய்யவேண்டிய சிறப்புச்செய்தல். தளர்நடைப் பருவமாவது:—தத்தடியிட்டு நடக்கும் பாலப்பருவம். (க௩௩)

மானிளம் பிணையோ தெய்வ வளரிள முகையோ வாசத்
தேனிளம் பதமோ வேலைத் திரையிளம் பவள வல்லிக்
கானிளங் கொடியோ திங்கட் கதிரிளங் கொழுந்தோ காமன்
றூனிளம் பருவங் கற்குந் தனியிளந் தனுவோ வென்ன.

(இ-ள்.) இளமையாகிய பெண்மானே! தெய்வத்தன்மை பொருந்திய கற்பகவிருக்ஷத்தின் வளருகின்ற இளமையான அரும்போ! வாசனை வீசுகின்ற தேனின் இளம்பதமோ! அலைகளையுடைய சமுத்திரத்திலுள்ள இளமைபொருந்திய பவளவல்லியென்னுங் காட்டிற்றோன்றிய இளங்கொடியோ! கிரணங்களையுடைய இளஞ்சந்திரனே! மன்மதனவன் தான் சிறுபிராயத்தில் கற்பதற்கேதுவாக இருந்த ஒப்பற்ற இளமைபொருந்திய கருப்புவில்லோ! என்று பார்ப்பவர்கள் சொல்லும்படியாக.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (க௩௪)

நாடுமின் பொற்பு வாய்ப்பு நாளுநாள் வளர்ந்து பொங்க
ஆடுமென் கழங்கும் பந்து மம்மனை யூச லின்ன
பாடுமின் னிசையுந் தங்கள் பணிமலை வல்லி பாதங்
கூடுமன் புருகப் பாடுங் கொள்கையோர் குறிப்புத் தோன்ற.

(இ-ள்.) பலரும் விரும்பத்தகுந்த இனிய அழகின் சிறப்பானது நாளுக்கு நாள் வளர்ந்து அதிகரிக்க, மெல்லிய கழற்சிக்காயும், பந்தும், அம்மனையும், ஊசலுமாகிய இவைமுதலானவைகளை ஆடுவார், தங்கள் முதல்வியாகிய பார்வதியாரது திருவடிகளில் பொருந்திய அன்பினால் மனமுருகப்பாடுகின்ற கொள்கையையுடைய பெரியோர்களைப் போல ஓர்குறிப்புத் தோன்றும்படி இனிய சங்கீதத்தையும் பாடுவார்.—எ-று. (க௩௫)

பிள்ளைமைப் பருவ மீதாம் பேதைமைப் பருவ நீங்கி
யள்ளுதற் கமைந்த பொற்பா லனங்கன்மெய்த் தனங்க ளீட்டங்
கொள்ளமிக் குயர்வ போன்று கொங்கைகோங் கரும்பை வீழ்ப்ப
உள்ளமெய்த் தன்மை முன்னை யுண்மையுந் தோன்ற வுய்ப்பார்.

(இ-ள்.) குழந்தைப்பருவமாகிய ஐந்து வயதிற்கு மேல்வந்த பேதைப் பருவத்தினின்றும் நீங்கி அள்ளிக்கொள்ளுதற்கு அமைந்தபேரழகினால் மன்மதன் தேடிய உண்மையாகிய திரவியக்குவையைப் பெற்றுக்கொள்வதற்கு மிகவும் உயர்வதைப்போன்ற ஸ்தனங்கள் கோங்கரும்புகளைத் தோற்கசெய்ய, தமக்குள்ள மெய்ம்மைத் தன்மையையும், முன்பு திருக்கயிலாயத்தில் பார்வதியாருக்குத் தோழியாயிருந்த தன்மையையும் யாவருக்குந்தோன்றும்படி குறிப்பிப்பாராயினார் பரவைநாச்சியார்.—எ-று.

பேதைப்பருவம் ஐந்துவயதுமுதல் ஏழுவயதளவுமாதலின் அப்பேதைப் பருவம் நீங்கி மங்கைப்பருவமடைந்தன ரெனவறிக. பெண்கட்குரிய பருவங்களா

வன:—பேதை,பெதும்பை, மங்கை,மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என ஏழாம்; இவர்க்கு முறையே வயதெல்லை, ஐந்துமுதலேழளவும் பேதை, எட்டுமுதல் பதினொன்றளவும் பெதும்பை, பன்னிரண்டுமுதல் பதின்மூன்றளவும் மங்கை, பதினான்குமுதல் பத்தொன்பதளவும் மடந்தை, இருபதுமுதல் இருபத்தைந்தளவும் அரிவை, இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவும் தெரிவை, முப்பத்திரண்டுமுதல் நாற்பதளவும் பேரிளம்பெண் ஆகையால் ஒவ்வொருபருவங்கட்கு முறையே வருடம், ௩ - ௪ - ௨ - ௬-௬-௬-௯-ம் ஆகுமெனவறிக. (௧௩௬)

பாங்கியர் மருங்கு சூழப் படரொளி மறுகு சூழத்
தேங்கமழ் குழலின் வாசந் திசையெலாஞ் சென்று சூழ
ஓங்குபூங் கோயி லுள்ளா ரொருவரை யன்பி னோடும்
பூங்கழல் வணங்க வென்றும் போதுவா ரொருநாட் போந்தார்.

(இ-ள்.) தோழிமார்கள் பக்கங்களில் சூழ்ந்துவரவும், படர்ந்த தேககாந்தியானது திருவீதியில் சூழவும், தேன்கமழுகின்ற கூந்தலிலுள்ள வாசனையானது திசைகளெல்லாம் பரவிச்சூழவும், உயர்ந்த பூங்கோயிலில் வீற்றிருக்கின்றவராகிய ஒப்பற்ற சிவபெருமானை அன்போடும் அழகிய திருவடிகளை வணங்க நாள்தோறும் போகின்றவராகிய பரவைநாச்சியார் ஒருநாள் அப்பூங்கோயிலுக்குப் போயினார்.—எ-று. (௧௩௭)

அணிசிலம் படிகள் பார்வென் றடிப்படுத் தனமென் றார்ப்ப
மணிவளர் காஞ்சி யல்குல் வரியர வுலகை வென்ற
துணிவுகொண் டார்ப்ப மஞ்சு சுரிகுழற் கழிய விண்ணும்
பணியுமென் றினவண் டார்ப்பப் பரவையார் போதும் போதில்.

(இ-ள்.) பாதங்களில் அணிந்த சிலம்புகள் இப்பூவுலகத்தை வென்று கீழாக்கினோமென்று முழங்கவும், நிதம்பஸ்தானத்தின்மீதணிந்த முத்துமுதலிய மணிகளால் கோக்கப்பட்ட காஞ்சி என்னும் ஆபரணமானது சர்ப்பங்கள் வாழுகின்ற நாகலோகத்தைவென்ற துணிவுபற்றி முழங்கவும்,மேகங்கள் சுருண்டகூந்தலுக்குத் தோற்ற காரணத்தினால் விண்ணுலகமும் இவரை வணங்குமென்று அக்கூந்தலில் மொய்க்கின்ற வண்டின்கூட்டங்கள் முழங்கவும் பரவை நாச்சியார் போகும்பொழுதில்.—எ-று. (௧௩௮)

காஞ்சி இருகோவையாயுள்ள வோர் ஆபரணம். இதனை,
"எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை
பண்கொள் கலாபமிரு பத்தொன்று—கண்கொள்
பருமம் பதினாறு முப்பத் திரண்டு
விரிசிகை யென்றுணரற் பாற்று"—என்பதனானுணர்க.

புற்றிடம் விரும்பி னாைப் போற்றினர் தொழுது செல்வார்
சுற்றிய பரிச னங்கள் சூழவா ளுடைய நம்பி
நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந் திலங்கு செவ்வாய்
விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை யவரைக் கண்டார்.

(இ-ள்.) நெருங்கிய பரிசனங்கள் சூழ்ந்துவரப் புற்றினையிடமாகக்கொண்டு வீற்றிருக்கின்ற சிவபெருமானைத் துதித்து வணங்கிச் செல்கின்றவராகிய நம்மையடிமையாகவுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் நன்மையும் பெருமையுமுடைய

அச்சிவபெருமானது திருவருளானது கூட்ட மகிழ்ச்சியின் நகையைத்தன்னுள் அடக்கி விளங்குகின்ற சிவந்தவாயினையும், வில்லையொத்த நெற்றியினையும், வேல் போன்ற கண்களையும், விளங்குகின்ற ஆபரணத்தையும் உடையவராகிய பரவை நாச்சியாரைக் கண்டார்.—எ-று. (கஙக)

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ வறியேனென் றதிசயித்தார்.

(இ-ள்.) கற்பகத்தருவினது பொலிவினையுடைய கொம்போ! மன்மதனது பெருமை பொருந்திய சம்பத்தோ! அழகு பொருந்திய புண்ணியத்தினின்றுந்தோன்றிய ஓர்புண்ணியசொரூபமோ! மேகத்தைச்சுமந்து வில்லினையும் நீலோற்பலமலரையும், பவளத்தினையும், பிறமலர்களையும், சந்திரனையும் தன்னிடத்தில் மலரப்பெற்றவாசனைவீசுகின்ற ஓர்கொடியோ! அற்புதத்தின் திரண்டவடிவமோ! அல்லது சிவபெருமானது திருவருளாகிய ஓர் உருவமோ! இதனை இன்னதென்று நான் அறியேன் என்று ஆச்சரியப்பட்டார்.—எ-று.

ஓகாரங்கள் ஐயம். (கச0)

ஓவியநான் முகனெழுத வொண்ணாமை யுள்ளத்தான்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ
மூவுலகின் பயனாகி முன்னின்ற தெனநினைந்து
நாவலர்கா வலர்நின்றார் நடுநின்றார் படைமதனார்.

(இ-ள்.) பிரமனானவன் (பேரழகுள்ள ஒரு பெண்ணைச்சிருஷ்டிக்க நினைத்துத் தான் நினைத்தபடியே) ஒரு சித்திரப் படமெழுத முடியாமையால் இவ்விதமாக இருக்கவேண்டுமென்று வருந்தித் தன்மனதினால் உண்டாக்கிய ஒரு மாணிக்க தீபமோ! சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகத்திலுள்ளவர்களும் கண்டுகளிப்படையும்படியாக எனக்குமுன்னே நிற்கின்றதென்று நினைந்து ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இடம்விட்டுப்பெயராது நின்றருளினார், (அப்பொழுது) பஞ்சபாணங்களையுடைய மன்மதனும் (சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கும், பரவைநாச்சியாருக்கும் காமத்தை விளைக்கவேண்டி) நடுவே நின்றான்.—எ-று. (கசக)

தண்டரள மணித்தோடுந் தகைத்தோடுங் கடைபிறழுங்
கெண்டைநெடுங் கண்வியப்பக் கிளரொளிப்பூ ணுரவோனை
யண்டர்பிரான் திருவருளா லறியாமன் மனம்விரும்பப்
பண்டைவிதி கடைகூட்டப் பரவையா ருங்கண்டார்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய முத்துக்களினாலும், இரத்தினங்களினாலும் அமைத்த காதணிகளையுந் தாக்கி அதன்புறத்திற் செல்லுகின்ற நீண்ட கெண்டைமீனையொத்த கண்கள் களிப்படையும்படி ஒளிவிளங்குகின்ற ஆபரணத்தைத் தரித்த ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைத் தேவநாயகராகிய சிவபெருமானது திருவருளால் முன்னாளில் அமைந்த கட்டளையானது முற்றுப்பெறச் சேர்ப்பித்தலால் பரவைநாச்சியாரும் தம்மை அறியாமலேயே மனம்விரும்பப் பார்த்தருளினார்.

"அண்டர்பிரான் திருவருளா லயலறியா மனம்விரும்பி" என்றும் பாடபேதம். (கசஉ)

கண்கொள்ளாக் கவின்பொழிந்த திருமேனி கதிர்விரிப்ப
விண்கொள்ளாப் பேரொளியா னெதிர்நோக்கு மெல்லியலுக்
கெண்கொள்ளாக் காதலின்முன் பெய்தாத தொருவேட்கை
மண்கொள்ளா நாண்மடமச் சம்பயிர்ப்பை வலிந்தெழலும்.

(இ-ள்.) கட்புலனுக்கடங்காத அழகினைப்பொழிந்த திருமேனியானது பிரகாசத்தைவீச அதனால் ஆகாயவிட முழுவதும் அடங்காத பேரொளியையுடையவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை எதிராகப்பார்த்த பரவைநாச்சியாருக்கு அளவில்லாத ஆசையினாலே முன்பு (ஒருகாலத்தும் ஒருவரிடத்தும்) உண்டாயிராத ஒருபேராசையானது இவ்வுலகமுங் கொள்ளாதென்று சொல்லும்படி நாணம் - மடம் - அச்சம் *பயிர்ப்பு என்னும் பெண்மைக்குணங்கள் நான்கையுந் தடுத்து மேலெழுதலும்.—எ-று.

நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் இந்நான்கும் மகளிர்க்குரிய குணங்களாம்; இவற்றுள், நாண் என்பது நாணம்; அது, மகளிர்க்கியல்பாயுள்ளதோர்தன்மை. மடம் என்பது எல்லாமறிந்தும் ஒன்று மறியாததுபோலிருத்தல். அச்சம் என்பது பெண்தன்மையால் என்றும் காணாதவோர் பொருளைக் கண்டவிடத்து அஞ்சுதல். பயிர்ப்பு என்பது கணவரல்லாதவர் கை தன்மேற்படின் உடம்பு அருவருத்து நிற்றல் எனவறிக. (கசங)

முன்னேவந் தெதிர்தோன்று முருகனோ பெருகொளியாற்
றன்னேரின் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேயென் மனந்திரித்த விவன்யாரோ வெனநினைந்தார்.

(இ-ள்.) எனக்கு முன்னேவந்து எதிரில் தோன்றுகின்ற முருகக்கடவுளோ! மிகுந்த தேககாந்தியினால் தனக்கொருவரும் ஒப்பில்லாத மன்மதனோ! மாலையைத்தரித்த மார்பினையுடைய வித்தியாதரனோ! மின்னலைப்போலும் விளங்குகின்ற சிவந்த சடையினையுடைய சிவபெருமானது உண்மையாகிய திருவருளைப்பெற்றுள்ளவனோ! இது என்னகாரணம்? என்னுடைய மனதைத் தன்வசமாக விகாரப்படுத்திய இவன் யாரோவென்று நினைந்தார்.—எ-று. (கசச)

அண்ணலவன் றன்மருங்கே யளவிறந்த காதலினால்
உண்ணிறையுங் குணநான்கு மொருபுடைசாய்ந் தனவெனினும்
வண்ணமலர்க் கருங்கூந்தன் மடக்கொடியை வலிதாக்கிக்
கண்ணுதலைத் தொழுமன்பே கைக்கொண்டுசெலவுய்ப்ப.

(இ-ள்.) பெருமைபொருந்திய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளிடத்தில் அளவில்லாத ஆசைமிகுதியால் தனதுள்ளத்தில் நிறைந்த நாணம் முதலிய நான்குகுணங்களும் ஒரு புறத்தில் தடையின்றி விலகினவாயினும் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைத் தொழுதற்குக்காரணமாகிய அன்பே அழகிய மலர்மாலையைத் தரித்த கரியகூந்தலையுடைய பரவைநாச்சியாரை அவ்வாசையினின்றும் நீக்கித் தன்வசமாக்கித் திருக்கோயிலுக்குப் போகும்படிச்செய்ய.—எ-று. (கசரு)

பாங்கோடிச் சிலைவளைத்துப் படையனங்கன் விடுபாணந்
தாங்கோலி யெம்மருங்குந் தடைசெய்ய மடவாரும்
தேங்கோதை மலர்க்குழன்மேற் சிறைவண்டு கலந்தார்ப்பப்
பூங்கோயி லமர்ந்தபிரான் பொற்கோயில் போய்ப்புக்காள்.

(இ-ள்.) நால்வகைச் சேனைகளையுடைய மன்மதன் அருகில் ஓடிவந்து கருப்புவில்லை வளைத்து விடுகின்ற புஷ்பபாணங்கள் நாற்புறத்திலும் வளைந்து தடைசெய்யப் பரவைநாச்சியாரும் தேன்பொருந்திய மலர்மாலையைத்தரித்த கூந்தலின்மேல் சிறகினையுடைய வண்டுகள்நெருங்கி யாரவாரிக்கப் பூங்கோயிலில் வீற்றிருக்கின்ற சிவபெருமானது அழகிய ஆலயத்துக்குள் சென்றார்.—எ-று. (கசுசு)

வன்றொண்ட ரதுகண்டென் மனங்கொண்ட மயிலியலின்
இன்றொண்டைச் செங்கனிவா யிளங்கொடிதான் யாரென்ன
அன்றங்கு முன்னின்றா ரவர்நங்கை பரவையார்
சென்றும்பர் தரத்தார்க்குஞ் சேர்வரியா ரெனச்செப்ப.

(இ-ள்.) பரவைநாச்சியார் கோயிலுக்குள்சென்ற தன்மையை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பார்த்து என்னுடைய மனதைத் தன்னிடத்தில் கவர்ந்துகொண்டு சென்ற மயில்போன்ற சாயலையும், இனிய கொவ்வையின் சிவந்த கனிபோலும் வாயினையுமுடைய இளமைபொருந்திய கொடிபோன்ற இப்பெண் யாரென்று கேட்க, அப்பொழுது அவ்விடத்தில் முன்னே நின்றவர்கள் அவர்பெண்களிற்சிறந்த பரவையாரென்னுந் திருப்பெயரையுடையவர், தேவர்களுக்குஞ் சென்று சேர்தற்கரியவர் என்று சொல்ல.—எ-று. (கசுஎ)

பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்குல்
லார்பரவை யணிதிகழு மணிமுறுவ லரும்பரவை
சீர்பரவை யாயினு டிருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை யிடைப்பட்ட வென்னுசை யெழுபரவை.

(இ-ள்.) பெயர் பரவையென்று சொல்லப்படுவது, அவளுடைய பெண்ணிற்குரிய அழகு முதலியவைகளாற் குறிக்குமிடத்துப் பெரிய தேவர்கூட்டம் விரும்புகின்ற திலோத்தமைமுதலிய அரம்பாஸ்திரீகள் துதிசெய்யத்தக்க தெய்வமாம், அழகு விளங்குகின்ற வரிசையாகிய பற்கள் முல்லையரும்புகளை யொப்பானவை, சிறப்புப்பொருந்திய பரவையென்னுங் கூத்தினையுடையவளாகிய இலக்குமியினுடைய சௌந்தரியம்பொருந்திய வடிவம்போன்ற மெல்லிய சாயலையுடைய அப்பெண்ணினது அழகாகிய சமுத்திரத்தினிடத்தில் அகப்பட்ட என்னுடைய ஆசையானது ஏழுசமுத்திரங்களையு மொத்திருக்கின்றது.—எ-று.

சீர்பரவை என்பது தொகுத்தல்.பெண்மையினில் பெரும்பரவை என்பதற்கு பெண்தன்மையால்நோக்குமிடத்துப் பெரியதேவர்களுக்கெல்லாந் தாய்போல்பவள் என்றும், விரும்பல்குலார் பரவை என்பதற்கு விரும்புகின்ற அல்குலினுடைய அழகினிறைவானது சர்ப்பராஜனாகிய ஆதிசேடனுடைய படத்தையொக்கும் என்றும், சீர்பரவையாயினுள் என்பதற்கு இலக்குமி துதிசெய்யத் தக்க அழகையுடையவளது என்றும்பொருள்கூறுவது மொன்று. இவ்வாறு பொருள்கூறுங்கால், பெண்மையினில்-பெரு-உம்பர்-அவை என்றும், விரும்பு-அல்குல்-ஆர்பு-அரவு-ஐ என்றும், சீர்-பரவு-ஐயாயினுள் என்றும் பதம்பிரிக்க. முன் ஐ=இறை, பின் ஐ=அழகு. சீர்=இலக்குமி அவ்வை என்பது அவை என விகாரமாயிற்று.

என்றினைய பலவுநினைந் தெம்பெருமா னருள்வகையான்
முன்றொடர்ந்து வருங்காதன் முறைமையினாற் றொடக்குண்டு
நன்றெனையாட் கொண்டவர்பா னண்ணுவனென் றுண்மகிழ்ந்து
சென்றுடைய நம்பியும்போய்த் தேவர்பிரான் கோயில்புக.

(இ-ள்.) என்று இவ்விதமாகிய பலவற்றையும் நினைந்து எமதுபெருமானாகிய பரமசிவனது திருவருளின்படியே முன்னம் (தம்மைத்) தொடர்ந்துவருகின்ற ஆசையின் முறைமையால் தாம் பந்திக்கப்பட்டு நல்லது என்னை அடிமையாகக் கொண்டருளிய சிவபெருமானிடத்தில் நான் சேர்வேனென்று மனமகிழ்ந்து சென்று ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் தேவநாயகராகிய வன்மீகநாதர் வீற்றிருக்கின்ற திருக்கோயிலுக்குள்போக,—எ-று. (கசகூ)

பரவையார் வலங்கொண்டு பணிந்தேத்தி முன்னரே
புரவலனார் கோயிலினின் றொருமருங்கு புறப்பட்டார்
விரவுபெருங் காதலினான் மெல்லியலார் தமைவேண்டி
யரவிணை ரம்புனைந்தா ரடிபணிந்தா ராரூரர்.

(இ-ள்.) (அப்பொழுது) பரவைநாச்சியார் வன்மீகநாதரைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கித் துதித்து ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் போவதற்குமுன்னமே சிவபெருமானது சந்நிதானத்தினின்றும் ஒருபக்கமாகப் புறப்பட்டார், பின் சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் அடைந்த பேராசையினால் பரவைநாச்சியாரைச் சேர விருப்பங்கொண்டு சர்ப்பாபரணத்தையணிந்த வன்மீகநாதரது திருவடிகளை வணங்கினார்.—எ-று. (கரு0)

அவ்வாறு பணிந்தேத்தி யணியாரூரர் மணிப்புற்றின்
மைவாழுந் திருமிடற்று வானவன்பா னின்றும்போந்
தெவ்வாறு சென்றாளென் னின்னுயிரா மன்னமெனச்
செவ்வாய்வெண் ணகைக்கொடியைத் தேடுவா ராயினார்.

(இ-ள்.) (ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்) அவ்விதமாகப் பரவைநாச்சியாரைப் பெறும்படி வணங்கித் துதித்துத் திருவாரூரில் அழகிய புற்றினையிடமாகக் கொண்டருளிய காளகண்டராகிய சிவபெருமானிடத்தில் நின்றும் வெளிப்பட்டு வந்து என்னுடைய இனிய வுயிரையொத்த அந்தப்பெண்ணானவள் எந்தவழியாகப் போயினாளென்று சிவந்தவாயினையும் வெண்மைபொருந்திய பற்களையுமுடைய பரவைநாச்சியாரைத் தேடத் தொடங்கினார்.—எ-று. (கருக)

வேறு.

பாச மாம்வினைப் பற்றறுப் பான்மிகும்
ஆசை மேலுமொ ராசை யளிப்பதோர்
தேசின் மன்னியென் சிந்தை மயக்கிய
ஈச னாரரு ளெந்நெறிச் சென்றதே.

(இ-ள்.) (ஆன்மாக்களின்) பாசசம்பந்தமாக வருகின்ற இருவினையினது தொடர்பை அறவே நீக்குகின்றவராகிய சிவபெருமான் விஷயமாக அதிகரித்து

வருகின்ற ஆசையின்மேலும் வேறொரு ஆசையைக் கொடுக்கத்தக்கதாகிய ஒரு பிரகாசமாக விளங்கி எனதுபுத்தியை மயங்கச்செய்த அச்சிவபெருமானுடைய திருவருளானது எந்தவழியாகச் சென்றது.—எ-று.

பாசம் என்றது—ஆணவமலத்தை; இருவினை—நல்வினை தீவினைகள், நல்வினையும் தீவினைபோலப் பிறவிக் கேதுவாகலின் பொதுப்பட "வினை" என்றார். இதனை "இருள்சேரிருவினையுஞ் சேரா" என்னுந் திருக்குறளா னுணர்க. சிவபெருமானது திருவருளின்வழியே செல்லுகின்ற தனது புத்தியை மயக்குதற்கு அவ்வருளேயன்றி வேறொன்றற் கியலாமையால் பரவைநாச்சியாரை அருளாக வுருவகப்படுத்தி "ஈசனாருருள்" என்றார். (கருஉ)

உம்பர் நாயகர் தங்கழ லல்லது
நம்பு மாறறி யேனை நடுக்குற
வம்பு மால்செய்து வல்லியி னெல்கியின்
றெம்பி ரானரு ளெங்கெறிச் சென்றதே.

(இ—ள்.) தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானுடைய திருவடிகளை யல்லாமல் வேறொன்றையும் ஒருபொருளென்று நம்பியிருக்கும் வகையினையறியாத அடியேனை மனநடுங்கச்செய்ய நிலையில்லாத ஆசையைக்கொடுத்துக் கற்பகக் கொடிபோலத்துவண்டு எமது பெருமானுடைய திருவருளானது இன்று எந்தவழியாகச்சென்றது.—எ-று.

வம்பு=நிலையின்மை. (கருக)

பந்தம் வீடு தரும்பர மன்கழல்
சிந்தை யாரவு முன்னுமென் சிந்தையை
வந்து மால்செய்து மானென வேவிழித்
தெந்தை யாரரு ளெங்கெறிச் சென்றதே.

(இ-ள்.) உடம்போ டுயிரைக்கூட்டும் பந்தத்தையும், அதன் நீக்கமாகிய மோக்ஷத்தையும் தந்தருளுகின்ற சிவபெருமானது திருவடிகளில் மனமானது ஒருமைப்பட்டு நிற்கத் தியானிக்கின்ற என்னுடைய மனத்தை வந்து மயங்கச் செய்து மானைப்போல விழித்து (அவ்வாசையை அதிகப்படுத்திய) எமது பெருமானுடைய திருவருளானது எந்தவழியாகச் சென்றது.—எ-று. (கருச)

என்று சாலவு மாற்றல ரென்னுயிர்
நின்ற தெங்கென நித்திலப் பூண்முலை
மன்றல் வார்குழல் வஞ்சியைத் தேடுவான்
சென்று தேவா சிரியனைச் சேர்ந்தபின்.

(இ-ள்.) என்று இவ்விதமாகக்கூறி ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் மிகவும் விரகத்தைப் பொறுக்கமுடியாதவராய் என்னுடைய உயிரானது எங்கு நிற்கின்றதென்று முத்துமாலையையணிந்த ஸ்தனங்களையும் (இயற்கையாகவே) நல்ல வாசனைவீசுகின்ற நீண்ட அளகபாரத்தையுமுடைய அப்பரவைநாச்சியாரைத் தேடும்பொருட்டு ஆலயத்தினின்றும் புறப்பட்டுத் தேவாசிரிய மண்டபத்தை யடைந்தபின்பு.—எ-று. (கருரு)

காவி நேர்வருங் கண்ணியை நண்ணுவான்
யாவ ரோடு முரையியம் பாதிருந்
தாவி நல்குவ ராரூரை யாண்டவர்
பூவின் மங்கையைத் தந்தெனும் போழ்தினில்.

(இ-ள்.) நீலோற்பல மலரையொத்த கண்களையுடைய பரவைநாச்சியாரை யடையும்பொருட்டு (அங்குள்ள தமது பரிசனத்தார்முதலிய) யாவரிடத்திலும் இம்மாற்றத்தைச் சொல்லாதிருந்து திருவாரூரில் வீற்றிருக்கின்ற தியாகராஜப்பெருமான் தாமரைமலரிலிருக்கின்ற இலக்குமியையொத்த பரவையாரை எனக்கு அனுக்கிரகித்து எனது பிராணனை உடலில் நின்றும் நீங்காமல் பாதுகாத்தருளுவர் என்று நினைத்துக்கொண்டிருந்த சமையத்தில்.—எ-று. (௩௰௬)

நாட்டு நல்லிசை நாவலூ ரன்சிந்தை
வேட்ட மின்னிடை யின்னமு தத்தினைக்
காட்டு வன்கட லைக்கடந் தென்பபோற்
பூட்டு மேழ்பரித் தேரோன் கடல்புக.

(இ-ள்.) நிலைபெற்ற நல்லகீர்த்தியையுடைய சுந்தரமூர்த்திசுவாமிகள் தம்முள்ளத்தில் விருப்பங்கொண்டிருக்கின்ற மின்னற்கொடிபோன்ற இடையினையுடைய இனியதேவாமுதத்தையொத்த பரவைநாச்சியாரை, நான் இப்பொழுது சமுத்திரத்தைக்கடந்து சென்று அவருக்கு நாளைவந்து காட்டுவேனென்று சொல்வதுபோல ஏழ்பரியினைப்பூட்டிய தேரினையுடைய சூரியனானவன் மேற்றிசைக்கடலில் சென்று அஸ்தமிக்க.—எ-று.

ஏழ்பரி=ஏழ் என்னும் பெயரையுடைய குதிரை எனக்கொள்க. ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு மறுநாளுதயத்தில் திருமணம் நடத்தலால், கடலைக்கடந்து நாளைக்காட்டுவெனென்பபோல் என்றுரைக்க. அமுதம்-உவமையாகுபெயர். என்ப-இது என்பது என்னுஞ் சொல்லின் விகாரம். (௩௰௭)

எய்து மென்பெடை யோடிரை தேர்ந்துண்டு
பொய்கை யிற்பகல் போக்கிய புள்ளினம்
வைகு சேக்கைகண் மேற்செல வந்தது
பையுண் மாலை தமியோர் பனிப்புற.

(இ-ள்.) தம்முடன் பிரியாதிருக்கின்ற மெல்லியசிறகுகளையுடைய பெண்பறவைகளோடு நல்ல இரைகளை ஆராய்ந்துண்டு தடாகங்களில் பகற்காலத்தைக் கழித்தனவாகிய பலவகைப் பறவைக்கூட்டங்கள் தாம் தங்கிவசிக்கின்ற கூடுகளில் செல்லவும், பிரிவுற்ற நாயகனும் நாயகியுமாகிய இருவர்களும் விரகவேதனையடையவும் துன்பத்தைத்தருகின்ற மாலைக்காலமானது வந்தது.—எ-று. (௩௰௮)

பஞ்சின் மெல்லடிப் பாவைய ருள்ளமும்
வஞ்ச மாக்கடம் வல்வினை யும்மரன்
அஞ்செ ழுத்து முணரா வறிவிலோர்
நெஞ்சு மென்ன விருண்டது நீண்டவான்.

(இ-ள்.) பஞ்சினைப்போலும் மிருதுவாயிருக்கின்ற கால்களையுடைய பெண்களினது மனமும், வஞ்சகவொழுக்கத்தையுடைய மனிதர்களின் கொடியதீவினையும், சிவபெருமானது திருமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைத் தியானித்துணராத மூடர்களின் மனமும் என்று சொல்லும்படி உயர்ந்த ஆகாயமானது இருள் நிறத்தை யடைந்தது.—எ-று.

பாவையருள்ளம் அறியாமை அதிகரித்திருத்தலானும், வஞ்சமாக்கடம் வல்வினை மயக்கத்தையே நீங்காது விளைத்தலானும், அஞ்செழுத்தும் உணராவறிவிலோர் நெஞ்சம் மெய்யுணர்வின்மையானும் இவைகள் இருண்ட வானுக்கு உவமையாயின. "பஞ்சின் மெல்லடி" என்பதற்கு செம்பஞ்சின் குழம்பூட்டிய மிருதுவாகிய கால்கள் எனவும், "வஞ்சமாக்கடம் வல்வினையும்" என்பதற்கு வல்வினைமாக்கடம் வஞ்சமும் என்று உம்மையைப் பிரித்துக்கூட்டித் தீவினையையுடைய மனிதர்களின் வஞ்சகமும் எனவும் பொருள்கூறுதலும் ஒன்று. "அஞ்செழுத்தும்" என்பதில் உம்மை அசைநிலை. (கOசு)

மறுவில் சிந்தைவன் றொண்டர் வருந்தினால்
இறும ருங்குலார்க் கியார்பிழைப் பாரென்று
நறும லர்க்கங்கு லங்கைமுன் கொண்டபுன்
முறுவ லென்ன முகிழ்த்தது வெண்ணிலா.

(இ-ள்.) களங்கமற்ற திருவுள்ளத்தினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளே வருத்தப்பட்டால் (ஸ்தனபாரத்தினால்) வளைகின்ற இடையினையுடைய மாதர்களின் ஆசையினின்றும் யாவர்தாம் பிழைப்பார்களென்று நல்ல வாசனைவீசுகின்ற மலர்களையணிந்த கூந்தலையுடைய இராக்காலமாகிய பெண்ணானவள் முன்னதாக நகைத்த புன்சிரிப்பைப்போல வெண்மைபொருந்திய சந்திரன் உதயமாயிற்று.—எ-று. (கசுO)

அரந்தை செய்வார்க் கழுங்கித்தம் மாருயிர்
வரன்கை தீண்ட மலர்குல மாதர்போற்
பரந்த வெம்பகற் கொல்கிப் பனிமதிக்
கரங்க டீண்ட வலர்ந்த கயிரவம்.

(இ-ள்.) தம்மை விரும்பித் துன்பஞ்செய்கின்ற அன்னியபுருஷர்களுக்குச் சம்மதப்படாமல் பயந்து வருந்தித் தம்முடைய அருமையாகிய உயிரையொத்த புருஷர்கள் தமது கையைத் தீண்டுதலால் முகமலர்ச்சியை யடைகின்ற (கற்புள்ள) குலமாதர்களைப்போல நாற்புறங்களிலும் பரந்த வெவ்விய கிரணங்களையுடைய சூரியனுக்கு மலராமல் சுருங்கியிருந்து குளிர்ச்சிபொருந்திய சந்திரனது கிரணங்களாகிய கைகள் தீண்டுதலால் ஆம்பல்கள் மலர்ந்தன.—எ-று. (கசுக)

தோற்று மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே
சாற்று மின்பமுந் தண்மையுந் தந்துபோ
யாற்ற வண்டமெ லாம்பரந் தண்ணல்வெண்
ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா.

(இ-ள்.) நிலவுலகத்தில் தோன்றுகின்ற நிலைபெற்ற ஜீவகோடிகளுக்கெல்லாம் பரிசுத்தத்தையும் யாவராலும் புகழத்தக்க இன்பத்தையும் குளிர்ச்சியையு

ங்கொடுத்து மேலேசென்று அண்டத்தின் வெளியெல்லா மிகுதியாகப் பரவிச் சிவபெருமானது வெண்மைபொருந்திய திருநீற்றின் மிகுந்த பிரகாசத்தையொத்தது நீண்டநிலா.—எ-று. (கசுஉ)

வாவிப் புள்ளொலி மாற்றிய மாலையி
ஞவ லூரரு நங்கை பரவையாம்
பாவை தந்த படர்பெருங் காதலு
மாவி சூழ்ந்த தனிமையு மாயினர்.

(இ-ள்.) தடாகங்களில் பொருந்திய பறவைகளின் முழக்கத்தை நீக்கிய மாலைக்காலத்தில் திருநாவலூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும், பெண்களிற் சிறந்த பரவைநாச்சியார் கொடுத்த பரந்த பெரிய ஆசையும் தமது உயிரைச்சூழ்ந்திருக்கின்ற தனிமையென்னும் வஸ்துவும் அன்றி வேறொருதுணையும் இல்லாதவராயினர்.—எ-று.

நாவலூரரும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. பாவை - உவமையாகுபெயர். "ஆவிசூழ்ந்த தனிமையுமாயினர்" என்றதனால் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் ஒருவராகவே யிருந்தாரென்பதும், பரவைநாச்சியார்மேல் கொண்டமோகத்தால் தம்மிஷ்டர்களோடும் சம்பாஷிப்பதற்கு விருப்பமற்றிருந்தாரென்பதும் பெறப்பட்டது. தனிமையும் என்பதற்கு ஒப்பற்ற திருவருள் எனினுமாம்.

தந்தி ருக்கண் ணெரிதழ விற்பட்டு
வெந்த காமன் வெளியே யுருச்செய்து
வந்தென் முன்னின்று வாளி தொடுப்பதே
யெந்தை யாரரு ளிவ்வண்ண மோவென்பார்.

(இ-ள்.) சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணினின்றுண்டாகிய அக்கினியில் அகப்பட்டு முன்னாளில் எரிந்துவிழுந்த மன்மதனானவன் இப்பொழுது உருவமெடுத்து வெளியே எனக்கு முன்னேவந்து நின்று புட்பபாணங்களைத்தொடுப்பது என்னகாரணம்? எமது பெருமானுடைய திருவருளானது என்மேலிருப்பது இப்படித்தானோவென்று சொல்லுவார்.—எ-று.

"தந்திருக்கண் ணெரிதழலிற்பட்டு - வெந்தகாமன்" என்பதன் சரித்திர வரலாறு, முன்னொருகாலத்தில் சனகர்-சனந்தனர் - சனாதனர் - சனற்குமாரர் என்னும் முனிவர்கள் நால்வர்க்கும் ஞானோபதேசஞ் செய்தற்பொருட்டுச் சிவபெருமான் திருக்கயிலாயத்தில் கல்லாலவிருக்ஷத்தின்கீழே ஆசாரியமூர்த்தமாய் சின்முத்திரையோடு கூடியிருந்தகாலத்தில் பிரமன்முதலிய தேவர்களனைவரும் தங்கள்தங்கள் போகத்தை யிழந்து விஷ்ணுவினிடஞ்சென்றுகூற விஷ்ணுவானவர் மன்மதனையேவிப் புட்பபாணங்களை விடுத்துச் சிவபெருமான்கொண்டிருக்கின்ற யோகத்தைத் தவிர்த்தால் அப்பெருமான் பருவதராசனுக்குப் புத்திரியாகத் திருவவதாரஞ் செய்திருக்கின்ற பார்வதியாரைத் திருமணம்புரிந்து நமக்கும் போகத்தைக்கொடுத்துக் குமாரக்கடவுளை யருளிச் சூரபதுமன் முதலிய அசுரர்களால் உண்டாகிய துன்பத்தையும் நீக்கி யருளுவாரென்ன, அவ்வாறே பிரமன் தன்னுலகத்தையடைந்து மன்மதனை நினைத்தனன். உடனே மன்மதன் அதனையறிந்து பிரமனிடத்திற்குவந்து என்னை நினைத்தகாரணம் யாதென்று வணங்கிக் கேட்க

அப்பொழுது பிரமன் மன்மதனைப்பார்த்து நீ திருக்கயிலைக்குச்சென்று சிவபெருமான் கொண்டிருக்கின்ற யோகத்தை யொழித்து இங்கு வரக்கடவாயென்ன, அதற்கு மன்மதன் பயந்து தடுத்தனன். பின் பிரமன் அம்மன்மதனைத் தேற்றியனுப்ப அவன் திருக்கயிலாயத்தை யடைந்து திருநந்திதேவ ருத்தரவின்படியே மேலைவாயில்வழியே சென்று சிவபெருமான்மீது புட்பபாணங்களைத் தொடுக்க, அதனையுணர்ந்த சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணைச் சிறிது திறந்தருளினர். உடனே மன்மதன் சாம்பராயினன். பின் இரதிதேவி அதனையறிந்து வருந்திச் சிவபெருமானைச் சரணாகவடைந்து எம்பெருமானே! எனது கணவனை எழுப்பித் தந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க அப்பொழுது பெருமான் யாம் பார்வதியைத்திருமணம்புரிந்து உன் கணவனுக்கு உயிர்கொடுக்கின்றோமென்று கூறியருளி அவ்வாறே பார்வதியாரைத்திருமணம்புரிந்தபொழுது இரதியானவள்வந்து வேண்டிக்கொள்ள அவ்விரதிக்குமாத்திரம் உருவினனாகவும் ஏனையோ ரனைவர்க்கும் அருவினனாகவும் இருந்து தன்காரியங்களைக் குறைவற நடத்தி வாழும்படிக்குத் தந்தருளினர் எனவறிக.

(கசுச)

ஆர்த்தி கண்டுமென் மேனின் றழற்கதிர்
தூர்ப்ப தேயெனைத் தொண்டுகொண் டாண்டவர்
நீர்த்த ரங்க நெடுங்கங்கை நீண்முடி
சாத்தும் வெண்மதி போன்றிலை தண்மதி.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய சந்திரனே! யான் பரவையாரிடமாகக் கொண்டிருக்கின்ற ஆசையினால் படுந்துன்பத்தைப் பார்த்திருந்தும் ஆகாயத்தில் நின்று நெருப்புமயமாகிய கிரணங்களை என்மேல்நிறைப்பது தகுதியாகுமோ? (அதனால் நீ) என்னை அடிமைகொண்டவராகிய சிவபெருமானது நீருருவமான அலைகளையுடைய நெடிய கங்காநதியைத்தரித்த நீண்ட சடைமுடியில் தரிக்கப்பட்ட வெண்மைபொருந்திய சந்திரனையொத்திருக்கின்றாயில்லை.—எ-று.

சிவபெருமானுடைய திருமுடியில் பொருந்திய கங்கையோடுசேர்ந்த வெண்மைபொருந்திய சந்திரன் நீயேயானால் என்னை இவ்வாறு வருத்தமாட்டாய் ஆகையால் நீ வேறொரு சந்திரன்போலுமென்று கூறினானெனவறிக. (கசுரு)

அடுத்து மேன்மே லலைத்தெழு மாழியே
தடுத்து முன்னெனை யாண்டவர் தாமுணக்
கடுத்த நஞ்சுன் றரங்கக் கரங்களால்
எடுத்து நீட்டுநீ யென்னையின் றென்செயாய்.

(இ-ள்.) இடைவிடாமல் ஒன்றின்மேலொன்றாக அலைகளைவீசி எழுகின்ற கடலே! உலகமாயையிற் செல்லாமல் தடுத்து முன்னே என்னை அடிமைகொண்டவராகிய சிவபெருமான் உண்ணும்படியாகக் கொடுமைபொருந்திய விஷத்தை உன்னுடைய அலைகளாகிய கைகளால் (சற்றும் இரங்காமல் மனம் சம்மதித்து) எடுத்துக்கொடுத்த நீ (அவர்க்கு அடிமைபூண்டொழுகுகின்ற) என்னைஇப்பொழுது யாதுசெய்யாய்.—எ-று.

உன்னைச் சிருட்டித்துக்காப்பவரும் சர்வவல்லமையுள்ளவருமாகிய சிவபெருமானுக்கே சிறிதும் அஞ்சாமல் விஷத்தையுண்ணக்கொடுத்த நீ உனக்கோ

ருபகாரஞ் செய்யாதவனும், சிறிதும் வலியற்றவனுமாகிய என்னை யாதுசெய்யாய் என்பதும், இவ்வித இயல்பினையுடைய நின்னை நொந்துகொள்வதில் சிறிதும் பயனில்லை என்பதும் இதனாற் பெறப்பட்டது. "எடுத்து நீட்டினை" என்றும் பாடம். (கசுசு)

பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடை
சிறந்த ணைந்தது தெய்வநீர் நாட்டணி
புறம்ப ணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம்ப யின்றதெங் கோதமிழ் மாருதம்.

(இ-ள்.) தமிழோடுசேர்ந்து பழகிய தென்றற்காற்றே! நீ பிறந்தது எங்கள் சிவபெருமான் வீற்றிருக்கின்ற பொதியமலையில், பின் அம்மலையிலிருந்து சிறப்போடுவந்து சேர்ந்த இடம் தெய்வத்தன்மைபொருந்திய சோழநாட்டிலுள்ள அழகிய மருதநிலங்களில் உள்ள தடாகங்கள், (இவ்வாறிருக்க நீ குளிர்ச்சி நன்மணம் சுகம்முதலிய நற்குணங்களைக்கொடாமல் என்மேல் கொஞ்சமும் இரக்கமின்றி) கொதிக்கின்ற நெருப்பின் சுவாலையை வீசுதற்குக் கொடுமையை நீ எவ்விடத்திற்கற்றுக்கொண்டாய்.—எ-று.

ஒருவனுடைய குணம் பிறப்பினாலாயினும் சேர்க்கையினாலாயினும் உயர்வு தாழ்வையடையும்; அங்ஙனமாக, உனக்கு அவ்விரண்டிடத்தினும் ஓர் பழுதுமின்றி நன்மையாயிருக்க இத்தன்மையான வெப்பத்தை இடையில் நீ எவ்விடத்துப் பெற்றனை என்றாளென்றறிக. தமிழ் என்பது இனிமை, அது எல்லாப்பாஷைகளினும் சிறந்தமைபற்றித் திரவிடத்திற்குப் பண்பாகுபெயர் ஆயிற்று. "தெய்வநீர்நாட்டினில்" என்றும்பாடம். (கசுஎ)

இன்ன தன்மைய பின்னு மியம்புவான்
மன்னு காதல னாகிய வள்ளல்பாற்
றன்ன ரும்பெற னெஞ்சு தயங்கப்போம்
அன்ன மன்னவள் செய்கை யறைகுவாம்.

(இ-ள்.) (மன்மதன், சந்திரன், சமுத்திரம், தென்றல் முதலியவைகளைத் தூஷித்ததல்லாமல் பின்னும்) இத்தன்மையினவாகிய குயில்முதலாகிய பொருள்களையும் தூஷிக்கின்ற நிலைபெற்ற காதலையுடையவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளிடத்தில் பெறுதற்கருமையாகிய தன்னுடைய மனமானது மீளாது வருந்திச்செல்லத் (தாம் மாத்திரம் தனியே) திருமாளிகைக்குப் போகின்ற அன்னத்தின் நடையைப்போலும் நடையினையுடைய பரவைநாச்சியாரது செய்கையைக் குறித்துச் சொல்லுகின்றோம்.—எ-று. (கசுஅ)

வேறு.

கனங்கொண்ட மணிகண்டர் கழல்வணங்கிக் கணவனைமுன் பெறுவாள் போல, இனங்கொண்ட சேடியர்கள் புடைசூழ வெய்துபெருங் காத லோடுந், தனங்கொண்டு தளர்மருங்குற் பரவையும்வன் றொண்டர்பாற் றனித்துச் சென்ற, மனங்கொண்டு வரும்பெரிய மயல்கொண்டு தன்மணிமா ளிகையைச் சார்ந்தாள்.

(இ-ள்.) உயர்ந்த நீலமணிபோன்ற காளகண்டத்தையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கித் தாம்விரும்பிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளாகிய நாயகனை இனிமேல் பெறுபவளைப்போலக் கூட்டமாகிய தமது தோழிமார்கள் பக்கங்களில் சூழ்ந்துவர, பருத்ததனங்களைத்தாங்கி அதனால் தளர்ச்சியடைந்த இடையினையுடைய பரவைநாச்சியாரும் தாம் கொண்டிருக்கின்ற பெரியகாதலோடும் அச்சுந்தரமூர்த்திசுவாமிகளிடமாகத் தனியேபோன மனத்தை ஒருவகையாக வலிந்து தன் வசப்படுத்திக் காமத்தால் அதிகரித்துவருகின்ற பெரியமயக்கத்தைக் கொண்டு தமது இரத்தினமயமாகிய உபரிகையை யடைந்தார்.—எ-று. (கசுகூ)

சீறடிமே னூபுரங்க ளறிந்தனபோற் சிறிதளவே யொலிப்ப முன்னர், வேறொருவ ருடன்பேசாண் மெல்லவடி யொதுங்கிமா ளிகையின் மேலால், ஏறிமர கதத்தூணத் திலங்குமணி வேதிகையி னலங்கொள் பொற்கான், மாறின்மலர்ச் சேக்கைமிசை மணிநிலா முன்றின்மருங் கிருந்தாள் வந்து.

(இ-ள்.) சிறிய பாதங்களின்மேல் தரிக்கப்பட்ட சிலம்புகள் இப்பரவைநாச்சியார் ஆசைகொண்டிருப்பதை அறிந்தாற்போல மெல்ல ஒலிக்க, தமக்கு முன்னே நிற்கின்ற மற்றை மாதர்கள் ஒருவருடனும் பேசாதவராய்ப் பாதங்களை மிருதுவாகவைத்து நடந்து மாளிகையின் மேல்வீட்டிலேறி மரகத ரத்தினத்தினால் செய்யப்பட்ட தூண்கள் நிறுத்தி விளங்குகின்ற நவரத்தினங்களால் இழைத்துக் கட்டப்பட்ட திண்ணையில் அழகிய பொற்கால்களையுடைய வாடுதலில்லாத புஷ்ப சயனத்தின்மேல் அழகிய நிலாமுற்றத்தில் வந்திருந்தார் பரவைநாச்சியார்.—எ-று. (கஎ0)

அவ்வளவி லருகிருந்த சேடிதனை முகநோக்கி யாரூராண்ட
மைவிரவு கண்டரைநாம் வணங்கப்போ மறுகெதிர்வந் தவரா ரென்ன
இவ்வுலகி லந்தணரா யிருவர்தே டொருவர்தா மெதிர்நின் றாண்ட
சைவமுதற் றிருத்தொண்டர் தம்பிரான் றோழனார் நம்பி யென்றாள்.

(இ-ள்.) அச்சமயத்தில் தமக்குச் சமீபத்திலிருந்த ஒரு தோழியினது முகத்தைப்பார்த்து, திருவாரூரில் வீற்றிருக்கின்ற கருநிறம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானை யாம் வணங்குவதற்காகப்போகும் வீதியின் எதிரில் வந்தவர் யாரென்று கேட்க, (அதற்கு அந்தத் தோழியானவள் மறுமொழியாக) இவ்வுலகத்தில் திருமால் பிரமன் என்னும் இருவர்களும் (பன்றியாகவும் அன்னமாகவும், அடியையும் முடியையும்) தேடிக்காணாத ஒப்பற்ற சிவபெருமான் பிராமணத்திருவுருவங்கொண்டுவந்து (திருக்கலியாணகாலத்தில்) எதிரேநின்று தடுத்தாட்கொண்ட ஆதிசைவப்பிராமணகுலத்தலைவராகிய திருத்தொண்டரும், தம்பிரான் தோழர் என்னுந் திருநாமத்தையுடையவருமாகிய நம்பியாரூரர் என்று சொன்னாள்.—எ-று.

தாம் அசைநிலை. (கஎக)

என்றவுரை கேட்டலுமே யெம்பிரான் றமரோயோ வென்று முன்னம்
வன்றொண்டர் பால்வைத்த மனக்காத லளவின்றி வளர்ந்து பொங்க
நின்றநிறை நாண்முதலாங் குணங்களுட னீங்கவுயி ரொன்றுந் தாங்கி
மின்றயங்கு நுண்ணிடையாள் வெய்துயிர்த்து மெல்லணைமேல் வீழ்ந்த
[போது.

(இ-ள்.) என்று இவ்விதமாகத் தோழியானவள் சொல்லிய வார்த்தையைக்கேட்டபொழுதே எமது பெருமான் தடுத்தாட்கொண்ட அடியவரோயோ? என்று சொல்வதற்குமுன்னமே ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளிடத்து வைத்த மனத்தில் காதலானது அளவைக்கடந்து வளர்ந்து அதிகரிக்கத் தமக்குத் துணையாகக் கூடி நின்ற நிறை நாணம் முதலாகிய பெண்மைக்குணங்கள் உடனே தம்மை விட்டு நீங்க உயிரொன்றைமாத்திரந் தாங்கிக்கொண்டு மின்னலைப்போல விளங்குகின்ற சிறிய இடையினையுடைய பரவைநாச்சியார் பெருமூச்செறிந்து மிருதுவாகிய புஷ்பசயனத்தின்மேல் (சோகத்தால் மயங்கி) விழுந்தசமையத்தில்.—எ-று.

ஆரநறுஞ் சேறாட்டி யரும்பனிநீர் நறுந்திவலை யருகுவீசி
யீரவிளந் தளிர்குளிரி படுத்துமட வார்செய்த வினைவு மெல்லாம்
பேரழலி னெய்சொரிந்தா லொத்தனமற் றதன்மீது சமிதை யென்ன
மாரனுந்தன் பெருஞ்சிலையின் வலிகாட்டி மலர்வாளி சொரிந்தான் வந்து.

(இ-ள்.) (காமவெப்பந்தணியும்பொருட்டு) நல்ல வாசனைவீசுகின்ற சந்தனக்குழம்பை உடம்பில்பூசி அருமையாகிய நல்ல பனிநீர்த்துளிகளைச் சமீபத்தில் நின்று தெளித்துக் குளிர்ச்சிபொருந்திய இளந்துளிர்களையும் நீர்க்குளிரியையும் பரப்பித் தோழிமார்கள் செய்த இவைமுதலாகிய எல்லா உபசாரங்களும் பெரிய நெருப்பினிடத்தில் சொரிந்த நெய்யையொத்து மிகுந்த வெப்பத்தைக்கொடுத்திருந்தன; அந்த நெருப்பின்மேலிட்ட சமிதையைப்போல மன்மதனும் தனது பெரிய கருப்புவில்லின் வல்லமையைக் காட்டிப் புஷ்பபாணங்களைக்கொண்டுவந்து சொரிந்தான்.—எ-று.

காமவிகாரங் கொண்டவர்களுக்குத் தோழியர்கள்செய்யும் சந்தனம் பனிநீர்முதலிய உபசாரப்பொருள்கள் அக்காமத்தை அதிகரிக்கச்செய்தலின் "பேரழலி னெய்சொரிந்தாலொத்தன" என்றும், மன்மதன்விடுகின்ற புஷ்பபாணங்கள் அக்காமாக்கினிதணியாது மேன்மேல் வளர்தற்குக் காரணமாயிருத்தலின் "மற்றதன்மீது சமிதையென்ன" என்றுங் கூறினார். சந்தனமுதலியன காமங்கொண்டவர்கட்குத் துன்பந்தருமென்பதனை,

முத்துங் களபமுந் தண்பனி நீரு முயங்குமலர்த்
தொத்துங் குளிரியுந் தூய்மலர்ப் பாயலுஞ் சூழ்ந்துபுறங்
கத்துங் கடலுங் கதலியு மாவியுங் கங்குலுமிப்
பத்தும் பெரும்பகை யாய்விட்ட வாமொரு பைந்தொடிக்கே.—என்பதனு னுணர்க. குளிரி=நீர்க்குளிரி என்னும் ஓர்வகைக்கொடி. சமிதை=ஓமவிறகு. "ஈரவிளந்தளிர்குளிரப்படுத்து" என்றும் பாடம். (கஎ௩)

மலரமளித் துயிலாற்ருள் வருந்தென்றன் மருங்காற்ருண் மங்குல்வானி
னிலவுமிழுந் தழலாற்ரு ணிறையாற்றும் பொறையாற்ருணீர்மையோடுங்
கலவமயி லெனவெழுந்து கருங்குழலின் பரமாற்ருக் கைய ளாகி
யிலவ்விதழ்ச் செந்துவர்வாய் நெகிழ்ந்தாற்ரு மையின்வறிதே யின்னசொ
[ன்னுள்.

(இ-ள்.) புஷ்பசயனத்தின்மேல் படுத்து நித்திரைகொள்ளார்; பொதிய மலையிலிருந்து வந்து தன்மேல் வீசுகின்ற சிறுதென்றற்காற்றினைச் சகியார்; மேகங்கள்பொருந்திய ஆகாயத்தில்தோன்றும் சந்திரனது நிலவாகிய நெருப்பை ஆற்ருர்; நிறைமுதலாகிய குணங்கள் செய்யும் பாரத்தைப் பொறுக்கார்; இக்குணங்களோடு கலாபத்தையுடைய மயில்போல எழுந்து கரிய கூந்தலின் பாரத்தைத் தாங்கமுடியாத குணத்தையுடையவராய் இலவமலரையொத்த சிவந்த வாயைத்திறந்து பிரிவாற்ருமையால் வீணுக இப்படிப்பட்ட மொழிகளைச் சொல்லத் தொடங்கினுர் பரவைநாச்சியார்.—எ-று.

நிறையாற்றும் பொறையாவது:—நிறைக்குணந் தன்னினின்று நீங்குங்கால் அதனை அவ்வாறு செல்லாது தடுத்தலால் நேருந்துன்பம். "பொறையாற்ருநீர்மையோடு" என்றும் பாடம். (கஎச)

வேறு.

கந்தங் கமழ்மென் குழலீ ரிதுவென் கலைவாண் மதியங் கனல்வா னெனை
சந்தின் றழலைப் பனிநீ ரளவித் தடவுங் கொடியீர் தவிரீர் தவிரீர் [யிச்
வந்திங் குலவி நிலவும் விரையார் மலயா னிலமு மெரியாய் வருமால்
அந்தண் புனலு மரவும் விரவுஞ் சடையா னருள்பெற் றுடையா ரருளார்

(இ-ள்.) மணம்வீசுகின்ற மிருதுவாகிய கூந்தலினையுடைய தோழிமார்களே! கலைகள்நிறைந்த ஒளிபொருந்திய சந்திரன் என்னைச் சுடுதல் என்னகாரணத்திற்காக? இச்சந்தனத்தினின்றுந் தேய்த்த குழம்பாகிய நெருப்பைப் பனிநீரோடு கலந்து அன்புள்ளவர்களைப்போல் எனது உடம்பிற்பூசுகின்ற கொடியவர்களே! இதனைத் தவிருங்கள் தவிருங்கள். முன்பு இங்குவந்து உலாவிக்கொண்டிருந்த வாசனைபொருந்திய சிறுதென்றற்காற்றும் (இப்பொழுது) நெருப்பின் தன்மையை யடைந்து வருகின்றது. அழகிய குளிர்ந்த கங்காநதியும், பாம்பும் சேர்ந்திருக்கின்ற சடையினையுடைய சிவபெருமானது திருவருளைப்பெற்றுள்ளவராகிய அந்த நம்பியாரூரர் நமக்குக் கிருபைசெய்கின்ருரில்லை.—எ-று. (கஎ௫)

புலருந் படியன் றிரவென் னளவும் பொறையுந் நிறையு மிறையுந் தரியா, உலருந் தனமு மனமும் வினையே னொருவே னளவோ பெருவாழ்வுரையீர், பலரும் புரியுந் துயர்தா னிதுவோ படைமன் மதனுர் புடைநின் றகலார், அலருந் நிலவு மலரு முடியா ரருள்பெற் றுடையா ரவரோ வறியார்.

(இ-ள்.) இவ்விரவானது என்விஷயத்தில் விடியுந்தன்மையுடையதன்று; என்னுடைய பொறைக்குணமும் நிறைமுதலாகிய பெண்மைக்குணங்களும் சிறிதும் தங்கவில்லை; வெப்பத்தால் சந்தனமுதலியவற்றை உலரச்செய்கின்ற ஸ்த

னங்களும் வருந்துகின்ற மனமும் தீவினையையுடைய ஒருத்தியளவோ? (இப்ப டிவருந்துவதோ?) பெருவாழ்வானது நீங்கள் சொல்லுங்கள்; நீங்கள் யாவருங் கூடிச்செய்கின்ற துன்பம் இதுதானோ? பஞ்சபாணங்களையுடைய மன்மதன் என்னருகினின்றும் நீங்காதவனாயிருக்கின்றான்; கொன்றைமுதலாகிய மலர்களும் சந்திரனும் விளங்குகின்ற சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவருளைப் பெற்றுள்ளவராகிய நம்பியாரூரரோ இவ்வருத்தத்தையறியார்.—எ-று. (கஎசு)

தேருங் கொடியு மிடையு மருகிற் றிருவா ரூரர் நீரேயல்லால், ஆ ரென் றுயர மறிவா ரடிக ளடியே னயரும் படியோ விதுதா, னீரும் பிறை யும் பொறிவா ளரவி னிரையுந் நிரைவெண் டலையின் புடையே, யூருஞ் சடையீர் விடைமேல் வருவீ ருமதன் பிலர்போ லியானோ வுறுவேன்.

(இ-ள்.) தேர்களும் கொடிகளும் நெருங்கிய திருவீதிகளையுடைய திருவா ரூரில் வீற்றிருக்கின்ற பெருமானே! தேவரீரேயல்லாமல் யான் படுகின்ற விரகவே தனையை யாவர் அறியவல்லவர்கள்; எமது தலைவரோ! இவ்விரகமும் அடியேன் துன்பப்படும்படியோவந்தது; கங்கையும், பிறைச்சந்திரனும், படப்பொறிகளையு டைய ஒளிபொருந்திய பாம்பின்வரிசையும், வரிசையாகத்தரித்த வெண்டலையின் பக்கத்தில் உலாவுகின்ற சடையினையுடையவரோ! இடபவாகனத்தின்மேல் எழுந் தருளிவருகின்ற கடவுளே! தேவரீரிடத்தில் அன்பில்லாதவர்களைப்போல யானோ வருந்துவேன்.—எ-று. (கஎஎ)

என்றின் னனவே பலவும் புகலு மிருளா ரளகச் சுருளோ தியையும், வன்றொண் டனையும் படிமேல் வரமுன் பருள்வா னருளும் வகையார் நி னைவார், சென்றும் பர்களும் பணியுஞ் செல்வத் திருவா ரூர்வாழ் பெரு மா னடிகள், அன்றங் கவர்மன் றலைநீர் செயுமென் றடியா ரறியும் படியா லருளி.

(இ-ள்.) என்று இத்தன்மையான பல மொழிகளையும் எடுத்துச்சொல்லு கின்ற இருள்போலுங் கருநிறம்பொருந்திய சுருண்ட கூந்தலையுடைய பரவைநா ச்சியாரையும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளையும் இந்நிலவுலகத்திலே (மானிடத்திரு வுருவங்கொண்டு) அவதரிக்கும்படி கட்டளையிட்டருளிய சிவபெருமான் (அவர் களுக்கு அவ்விருப்பத்தைக்கூட்டிமுடிக்கக்) கருணைசெய்யும் வகையை யார் அறி வார்கள்? தேவர்களும் வந்து வணங்குகின்ற பலவகைச்செல்வங்கள் நிறைந்த திரு வாரூரில் வீற்றிருந்தருளும் பெருமானாகிய கடவுள், அப்பொழுது நம்பியாரூரர் பரவைநாச்சியாரென்னும் அவ்விருவர்களுக்கும் கலியாணத்தை நீங்கள் செய்விக் கவேண்டுமென்று அடியார்களுணரும்படி கட்டளையிட்டருளி.—எ-று. (கஎஅ)

மன்னும் புகழ்நா வலர்கோன் மகிழ மங்கை பரவை தன்னைத் தந் தோம், இன்ன வகைநம் மடியா ரறியும் படியே யுரைசெய் தனமென் றரு ளிப், பொன்னின் புரிபுன் சடையன் விடையன் பொருமா கரியி னுரி வை புனைவான், அன்னந் நடையாள் பரவைக் கணிய தாரூ ரன்பான் மணமென் றருள.

(இ-ள்.) நிலைபெற்ற புகழினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் மனமகிழும்படி (அவரிடத்தில்) நாம் பரவைநாச்சியாரை உனக்குக்கொடுத்தோம்; இந்தச்சங்கதியை நம் அடியார்கள் அறியும்படிக்கு அருளிச்செய்தோமென்று கூறிப் பொன்னின்புரிபோன்ற மெல்லிய சடையினையுடையவரும், ரிஷபவாகனத்தையுடையவரும், போர்செய்த பெரியயானைத்தோலை ஆடையாகத்தரித்தவருமாகிய சிவபெருமான் அன்னத்தின்நடைபோலும் நடையினையுடைய பரவைநாச்சியாரிடத்திற் சென்று நம்பியாரூரன் விஷயமாக உனக்குக் கலியாணம்சமீபித்ததென்று அருளிச்செய்ய.—எ-று.

"பொன்னின்புரிவன்சடையன்" என்றும் பாடம். (கஎகூ)

காமத் துயரிற் கவல்வார் நெஞ்சிற் கரையில் லிருளுங் கங்குற் கழிபோம்
யாமத் திருளும் புலரக் கதிரோ னெழுகா லையில்வந் தடியார் கூடிச்
சேமத் துணையா மவர்பே ரருளைத் தொழுதே திருநா வலர்கோன் மகிழத்
தாமக் குழலாள் பரவை வதுவை தருநீர் மையினு னிகழச் செய்தார்.

(இ-ள்.) காமநோயினால் வருந்துகின்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பரவைநாச்சியார் என்னும் இவ்விருவர்களின் மனத்தில் அடங்காத காமமாகிய இருளும், அவர்களுக்கு அன்று மிகுதியும் நீடித்திருந்த இராத்திரியின் இருளும்விடியச்சூரியன் உதயமாகின்ற காலைப்பொழுதில் சிவனடியார்கள் யாவரும்வந்து ஒன்றாகக் கூடித் தமக்குச் சேமநிதிபோலுந் துணையாயுள்ள சிவபெருமானது பெரியதிருவருளைத்தொழுது ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் மனமகிழும்படி மலர்மாலையைத் தரித்த கூந்தலையுடைய பரவைநாச்சியாரது திருக்கலியாணத்தைத் தருந்த வேதவிதிப்படியே சுபகரமாக நடக்கும்படிச் செய்தார்கள்.—எ-று. (கஅ0)

வேறு.

தென்னாவ லூர்மன்னன் றேவர்பிரான் திருவருளால்
மின்னாருங் கொடிமருங்குற் பரவையெனு மெல்லியறன்
பொன்னாரு முலையோங்கற் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்போகம் பரம்பரையின் விரும்பினார்.

(இ-ள்.) அழகிய திருநாவலூருக்குத் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமானது திருவருளினால் மின்னற்கொடிபோலும் இடையினையுடைய பரவைநாச்சியாரென்னும் அம்மையாரது பொற்கொடிபோலுந் தேமல்படர்ந்த ஸ்தனங்களாகிய மலைச்சிகரங்களே தமக்குச் சாருமிடமாகப் பலநாளும் அனுபவிக்கின்ற போகத்தை முறைமைப்படியே விரும்பி அனுபவித்திருந்தார்.—எ-று.

"பொன்னாரும்" என்பதனை ஓங்கல் என்பதனோடுகூட்டி மேருமலை என்று பொருள் கூறினும்பொருந்தும். "பன்னாளும்பயில்யோகம்" என்றும் பாடம்

தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியிலுஞ் சிந்தையிலு மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனு
மின்னிடையா ளுடன்கூடி விளையாடிச் செல்கின்றார்.

(இ-ள்.) (ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்) தம்மை யடிமையாகக்கொண்டருளிய சிவபெருமானது திருவடித்தாமரைகளைத் தமது திருமுடியிலும் திருவுள்ளத்திலும் மலரும்படிச்செய்து திருப்பதிகமாகிய நல்ல தமிழ்ச்சொற்களால் தொடுத்த பல பாமாலைகளைச்சாத்திப் பரவைநாச்சியாரென்னும் மின்னற்கொடிபோலும் இடையினையுடைய அம்மையாரோடு கூடி விளையாடிக்கொண்டு செல்கின்றவராயிருந்தார்.—எ-று. (கஅஉ)

வேறு.

மாதுடன் கூட வைகி மாளிகை மருங்கு சோலை
போதலர் வாவி மாடு செய்குன்றின் புடையோர் தெற்றி
சீதளத் தரளப் பந்தற் செழுந்தவி சிழிந்து தங்க
ணாதர்பூங் கோயி னண்ணிக் குப்பிடும் விருப்பா னம்பி.

(இ-ள்.) திருமாளிகையிலும், அருகிலுள்ள சோலைகளிலும், தாமரைமுதலாகிய மலர்கள் மலர்ந்திருக்கின்ற தடாகங்களிலும், பக்கத்திலுள்ள செய்குன்றிலும், அதன்சமீபத்திலுள்ள திண்ணைகளிலும் பரவைநாச்சியாரோடு கூட இருந்துவிளையாடி, பின்பு குளிர்ச்சிபொருந்திய முத்துப்பந்தலின் கீழிட்டிருக்கும் செழுமைபொருந்திய மலரணையினின்றும் நீங்கித் தங்கள்நாயகராகிய சிவபெருமானது பூங்கோயிலுக்குச்சென்று அப்பெருமானை வந்தனஞ் செய்யவேண்டுமென்னும் விருப்பத்தினால் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று.

ஓர் - அசைநிலை. இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கஅங)

அந்தரத் தமரர் போற்று மணிகிள ராடை சாத்திச்
சந்தனத் தளறு தோய்ந்த குங்குமக் கலவை சாத்திச்
சுந்தரச் சுழியஞ் சாத்திச் சுடர்மணிக் கலன்கள் சாத்தி
இந்திரத் திருவின் மேலா மெழின்மிக விளங்கித் தோன்ற.

(இ-ள்.) சுவர்க்கலோகத்தில் வசிக்கின்ற தேவர்களும் துதிக்கத்தக்க அழகுவிளங்குகின்ற பீதாம்பரத்தையணிந்து, சந்தனக்குழம்புகலந்த கலவையாகிய குங்குமச்சந்தனத்தைப் பூசி, (திருமுடியில்) அழகிய கிரீடத்தையணிந்து, ஒளிவீசுகின்ற பல்வகை இரத்தினாபரணங்களையுந் தரித்து, தேவேந்திரசம்பத்திற்கும் மேற்பட்ட செல்வச்சிறப்பானது மிகவும் விளங்கித்தோன்ற.—எ-று.

ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் நரசிங்கமுனையரைய ரது அபிமானபுத்திரராய் எழுந்தருளி யிருந்தமையாலும், சிவபெருமான் இவர்க்கு "நீ திருமணகாலத்துக் கொண்டிருந்த கோலத்தோடு வசிக்கக்கடவை" என்று அருளினமையாலும், சிவாலயத்திற்கெழுந்தருளிப் பெருமானைத்தரிசிக்கச்சென்றபொழுதும் "மிக்க விழுத்தவ வேந்தனென்ன" என்றபடி அரசர்க்குரிய அணி ஆடைமுதலிய அலங்காரத்தோடும் எழுந்தருளினாரெனவறிக. எல்லாச் செல்வத்துஞ் சிறந்த இந்திரச்செல்வத்தினும் சிறந்ததென்பதுதோன்ற "இந்திரத்திருவின் மேலாமெழில்" என்றார்.

கையினிற் புனைபொற் கோலுங் காதினி லிலங்கு தோடு
மெய்யினிற் றுவளு நூலு நெற்றியின் விளங்கு நீறும்
ஐயனுக் கழகி தாமென் றாயிழை மகளிர் போற்றச்
சைவமெய்த் திருவின் கோலந் தழைப்பவீ தியினைச் சார்ந்தார்.

(இ-ள்.) தமது திருக்கரத்தில் பொன்னினால் அலங்காரமாகப் புனைந்து செய்த கோலும், திருச்செவிகளில் விளங்குகின்ற பொன்னாலாகிய தோடும், திருமேனியில் துவளுகின்ற உபவீதமும், நெற்றியில் விளங்குகின்ற விபூதியும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு அழகாயிருக்கிறதென்று திருத்தமாகிய ஆபரணங்களையணிந்த மாதர்கள்புகழ உண்மையாகிய சைவத்திருக்கோலமானது விளங்கும்படியாகத் திருவீதியில் எழுந்தருளினார்.—எ-று.

தோடு - காதிலணியும் ஓர்வகை யாபரணம். "கையினிற் புனைபொற்செண்டும்" என்றும் பாடம். (கஅரு)

நாவலூர் வந்த சைவ நற்றவக் களிறே யென்றும்
மேவலர் புரங்கள் செற்ற விடையவர்க் கன்ப வென்றுந்
தாவில்சீர்ப் பெருமை யாரூர் மறையவர் தலைவ வென்றும்
மேவின ரிரண்டு பாலும் வேறுவே றுயம் போற்ற.

(இ-ள்.) திருநாவலூரில் திருவவதாரஞ்செய்தருளிய நல்ல தவக்களிறே யென்றும், பகைவர்களின் திரிபுரங்களை யழித்தருளிய சிவபெருமானுக்குரிய அன்பரோ என்றும், கெடாதபெருஞ்சிறப்பினையுடைய திருவாரூரில் வாழ்கின்ற வேதியர்களுக்குத் தலைவரோ என்றும் இரண்டுபக்கங்களிலும் சூழ்ந்துவருகின்றவர்களாகிய வெவ்வேறாகிய மாதர்கூட்டங்கள் போற்றுதல்செய்ய.—எ-று.

களிறு=யானை. (கஅசு)

கைக்கடா குரங்கு கோழி சிவல்கவு தாரி பற்றிப்
பக்கமுன் போது வார்கள் பயின்மொழி பயிற்றிச் செல்ல
மிக்கபூம் பிடகை கொள்வோர் விரையடைப் பையோர் சூழ
மைக்கருங் கண்ணி னார்கண் மறுகநீண் மறுகில் வந்தார்.

(இ-ள்.) கையில் கொண்டு திரிகின்ற ஆட்டுக்கடா, குரங்கு, கோழி, காடை, கவுதாரிமுதலியவைகளைப் பிடித்துக்கொண்டு இருபக்கங்களிலும் முன்னும் வருகின்றவர்கள் (போர்செய்தலுக்கும் விளையாடுதலுக்கும் உரிய) குறிப்புமொழிகளை அவைகளுக்குக் கற்றுக்கொடுத்து (அத்தொழில்களைச் செய்யும்படிசெய்து) செல்லவும் சிறந்தமலர்கள் நிறைந்திருக்கும் பூக்குடலைகளைத் தாங்கினவர்களும், வாசனைத்திரவியங்கள் பொருந்திய அடைப்பையைத் தாங்கினவர்களும் சூழ்ந்துவரவும், மையைத்தரித்த கரியகண்களையுடைய மாதர்கள் மையல்கொள்ளவும் திருவீதியில் எழுந்தருளினார்.—எ-று.

பயில்மொழி=குறிப்புமொழி. பூம்பிடகை=பூப்பெட்டி. அடைப்பை=தாம்பூலம் முதலிய முகவாசங்கள் வைத்திருக்கும் பை. (கஅஎ)

பொலங்கலப் புரவி பண்ணிப் போதுவார் பின்பு போத
இலங்கொளி வலயப் பொற்றோ ளிடையிடை மிடைந்து தொங்க
நலங்கிளர் நீழல் சூழ நான்மறை முனிவ ரோடும்
அலங்கலந் தோளி னன்வந் தணைந்தன னண்ணல் கோயில்.

(இ-ள்.) பொன்மயமாகிய ஆபரணங்களைப் பூட்டப்பட்ட குதிரையை அலங்கரித்துக் கொண்டுபோகின்றவர்கள் தமக்குப் பின்னாகவரவும், விளங்குகின்ற

காந்தியினையுடைய வாகுவலயத்தையணிந்த அழகியதோள்களின் இடையிடையில் மாலையானது நெருங்கி அதன் சிறந்த ஒளிசூழவும்,நான்குவேதங்களையுமுணர்ந்த மறையவர்களோடும் மாலையைத்தரித்த அழகிய தோள்களையுடையவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமானது திருக்கோயிலைவந்தடைந்தார்.-எ-று.

கண்ணுதல் கோயிற் றேவா சிரியனுங் காவ ணத்து
விண்ணவ ரொழிய மண்மேன் மிக்கசீ ரடியார் கூடி
யெண்ணிலா ரிருந்த போதி லிவர்க்கியா னடியே னாகப்
பண்ணுநா ளெந்நா ளென்று பரமர்தாள் பரவச் சென்றார்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது திருக்கோயிலினிடத்துள்ள தேவாசிரியன் என்னும் மண்டபத்தில் தேவர்கள் நீங்கலாக நிலவுலகத்தில் வாழ்கின்ற மிகுந்தசிறப்பினையுடைய அளவில்லாத அடியார்கள் கூடியிருந்த சமையத்தில் இவ்வடியார்களுக்கு யான் அடியவனாக என்னைச்செய்துகொள்ளுங் காலம் எக்காலமென்று தமது உள்ளத்தில் நினைத்துக்கொண்டு சிவபெருமானது திருவடிகளைவணங்கப்போயினார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று.

தேவர்கள் சிவனடியார்களைப்போலச் சிறப்புறு மடியரல்லராதலின், "விண்ணவரொழிய" என்று கூறினார். (௧௮௯)

அடியவர்க் கடிய னாவே னென்னுமா தரவு கூரக்
கொடிநெடுங் கொற்ற வாயில் பணிந்துகை குவித்துப் புக்கார்
கடிகொள்பூங் கொன்றை வேய்ந்தா ரவர்க்கெதிர் காணக் காட்டும்
படியெதிர் தோன்றி நிற்கப் பாதங்கள் பணிந்து பூண்டு.

(இ-ள்.) அடியார்களுக்கு யான் அடியேனாவேன் என்னும் அன்பு அதிகரிக்க வெற்றிக்கொடிகள்கட்டிய நெடியதிருவாயிலைப்பணிந்து தமது கைகளைக்குவித்து உள்ளே புகுந்தருளினார். (அப்பொழுது) வாசனைபொருந்திய கொன்றைமலர் மாலையைத்தரித்த சிவபெருமான் அச்சுந்தரமூர்த்திசுவாமிகளுக் கெதிராகத் தம்மைக் காணும்படி தரிசனங்கொடுத்து நிற்க, அக்கடவுளின் திருவடிகளைவணங்கிச் சிரசின்மேல் சூடிக்கொண்டு.—எ-று. (௧௯௰)

வேறு.

மன்பெ ருந்திரு மாமறை வண்டுசூழ்
அன்பர் சிந்தை யலர்ந்தசெந் தாமரை
நன்பெ ரும்பர மானந்த நன்மது
என்ற ரத்து மளித்தெதிர் நின்றன.

(இ-ள்.) நிலைபெற்ற பெருமைபொருந்திய மகத்தாகிய வேதங்களென்னும் வண்டுகள்சூழ்ந்த அடியார்களின் இதயமென்னும் அலர்ந்த தாமரைமலரில் பொருந்திய சிறந்த பரமாநந்தமென்னுந் தேனைச் சிறியேனாகிய எனக்கும் பிரசாதித்தருளி எதிரே வெளிப்பட்டு நின்றன.—எ-று.

வண்டுசூழ் பரமானந்தமது எனக்கூட்டுக. பரமானந்தம்=எவ்விடங்களிலும் குறைவின்றி நிறைந்த சிவானந்தம். "மன்பெருந்திருமாமறைவண்டுசூழ்ந்து" என்றும் பாடம். (௧௯௧)

ஞால மூய்ய நடமன்று ளாடின
கால னுருயிர் மாளக் கறுத்தன
மாலை தாழ்குழன் மாமலை யாள்செங்கை
சீல மாக வருடச் சிவந்தன.

(இ-ள்.) உலகத்திலுள்ளவர்கள் (தரிசித்துத் தமது கர்மபந்தத்தினின்று நீங்கிப்) பிழைக்கும்படி கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளின; யமனுடைய உயிர் அவனது உடலைவிட்டு நீங்கும்படி கோபித்தன; மலர்மாலையோடு தாழ்ந்த கூந்தலினையுடைய உமாதேவியார் தமது அழகிய திருக்கரங்களால் மிருதுவாகத்தடவ அதனால் சிவப்படைந்தன.—எ-று.

கறுப்பு=கோபம்; இதனை "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள" என்னுஞ் சூத்திரத்தா னுணர்க. (ககஉ)

நீதி மாதவர் நெஞ்சிற் பொலிந்தன
வேதி யாதவர் தம்மை வேதிப்பன
சோதி யாயெழுஞ் சோதியுட் சோதிய
ஆதி மாலயன் காணு வளவின.

(இ-ள்.) தருமநீதியில் நடக்கின்ற சிறந்த தபோதனர்களினது திருவுள்ளத்தில் எப்பொழுதும் பிரகாசிக்கின்றன; மலத்தில் நின்றும் நீங்காத அபக்குவர்களைப் பக்குவப்படுத்தி அம்மலத்தினின்றும் நீக்குகின்றன; பிரகாசமாக எழுகின்ற சோதிக்கு உட்சோதியாய் விளங்குகின்றன; முதன்மையாகிய திருமால் பிரமன் என்னும் இருவரும் காணக்கூடாத பெருமையையுடையனவா யிருக்கின்றன.

வேதியாதவர் தம்மை வேதித்தலாவது:—செம்பிற்களிம்புபோல ஆன்மாக்களுக்கு அநாதியேயுள்ள ஆணவமலத்தை பரிசவேதி அக்களிம்போடு சேர்ந்த செம்பைப் பொன்னுக்குவதுபோல சிவபெருமான் தனது திருவருளாகிய குளிகையால் பக்குவப்படுத்தி அவ்வான்மாக்களையும் முத்தாத்மாக்களாக்குதல் எனவறிக.

வேத வாரண மேற்கொண் டிருந்தன
பேதை யேன்செய் பிழைபொறுத் தாண்டன
ஏத மானவை தீர்க்க விசைந்தன
பூத நாதநின் புண்டரி கப்பதம்.

(இ-ள்.) வேதங்களாகிய குதிரைகளின்மேல் எழுந்தருளியிருந்தன; சிற்றறிவினனாகிய அடியேன்செய்த குற்றங்களைப்பொறுத்து ஆட்கொண்டன; அடியார்களதுதுன்பத்தைத் தீர்க்கும்படி இசைந்திருந்தன; பூதகணங்களுக்குத்தலைவராகிய எம்பெருமானே! தேவரீரது தாமரைமலர்போன்ற திருவடிகள்.—எ-று.

புண்டரிகப்பதம் என்னும் எழுவாயை மேல் "மன்பெருந்திருமாமறை" என்னுஞ் செய்யுள்தொடங்கியுள்ள நின்றன, ஆடின, கறுத்தன, சிவந்தன, பொலிந்தன, வேதிப்பன, சோதிய, அளவின, இருந்தன, ஆண்டன, இசைந்தன என்னும் பயனிலைகளோடு தனித்தனி கூட்டிமுடிக்க. (ககச)

வேறு.

இன்னவா றேத்து நம்பிக் கேறுசே வகனார் தாமும்
அந்நிலை யவர்தாம் வேண்டு மதனையே யருள வேண்டி
மன்னுசீ ரடியார் தங்கள் வழித்தொண்டை யுணர நல்கிப்
பின்னையு மவர்க டங்கள் பெருமையை யருளிச் செய்வார்.

(இ-ள்.) இவ்விதமாகத் துதிக்கின்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு ரிஷபவாகனத்தின்மே லெழுந்தருளுகின்ற சிவபெருமானும் அப்பொழுது அச்சுந்தரமூர்த்திசுவாமிகள் விரும்பிய அடியார்க்கடியராந் தன்மையையே அருளிச்செய்ய விரும்பி நிலைபெற்ற சிறப்பினையுடைய அடியார்களின் வழிபாட்டை உணர்ந்து கொள்ளும்படி அனுக்கிரகஞ்செய்து பின்னும் அவ்வடியார்களின் பெருமைகளையும் அருளிச்செய்கின்றார்.—எ-று. (௧௧௫)

பெருமையாற் றம்மை யொப்பார் பேணலா லெம்மைப் பெற்றார்
ஒருமையா லுலகை வெல்வா ரூனமே லொன்று மில்லார்
அருமையா நிலையி னின்றா ரன்பினா லின்ப மார்வார்
இருமையுங் கடந்து நின்றா ரிவரைநீ யடைவா யென்று.

(இ-ள்.) இவர்களுக்குள்ள பெருமையினாலே தமக்குத்தாமே ஒப்பானவர்கள்; அடிமைபூண்டொழுகுகின்ற குணத்தினால் எம்மைஅடையப்பெற்றவர்கள்; ஒப்பற்ற சிவானுபூதியினால் இவ்வுலகத்தை வெல்பவர்கள்; தமக்கு மேல்வருகின்ற ஒரு குறைவுமில்லாதவர்கள்; யாவர்க்கும் அடைதற்கரிய மோனநிலையில் நின்றவர்கள்; தாம்செய்கின்ற அன்பின்மிகுதியால் சிவானந்தத்தை யனுபவிக்கின்றவர்கள்; இம்மை மறுமைஎன்னும் இவ்விரண்டின் சுகங்களையும்கடந்து நின்றவர்கள்; இத்தன்மையாகிய அடியார்களை நீ அடைவாயாகவென்று.—எ-று.

இதுமுதல் நான்குபாட்டுங் குளகம். (௧௧௬)

நாதனா ரருளிச் செய்ய நம்பியா ரூரர் நானிங்
கேதந்தீர் நெறியைப் பெற்றே னென்றெதிர் வணங்கிப் போற்ற
நீதியா லவர்க டம்மைப் பணிந்துநீ நிறைசொன் மாலை
கோதிலா வாய்மை யாலே பாடென வண்ணல் கூற.

(இ-ள்.) சிவபெருமான் இவ்வாறு அருளிச்செய்ய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அடியேன் இவ்விடத்தில் குற்றமற்ற நல்லமார்க்கத்தைப் பெற்றேனென்று அப்பெருமானது திருமுன்னேநின்று வணங்கித்துதிக்க (அப்பொழுது) சிவபெருமான் முறைமைப்படியே நீஅவ்வடியார்களைப்பணிந்து பொருள்நிறைந்த பாமாலையைக் குற்றமற்ற மனவுண்மையினாலே பாடுவாயாகவென்று அருளிச்செய்ய.

தன்னையா ளுடைய நாதன் றானருள் செய்யக் கேட்டுச்
சென்னியால் வணங்கி நின்ற திருமுனைப் பாடி நாடர்
இன்னவா றின்ன பண்பென் றேத்துகே னதற்கி யானார்
பன்னுபா மாலை பாடும் பரிசெனக் கருள்செய் யென்ன.

(இ-ள்.) தம்மை அடிமையாகவுடைய சிவபெருமான் இவ்வாறு அருளிச் செய்யக்கேட்டு அவரது திருவடிகளில் சிரசினால்வணங்கிநின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அவ்வடியார்களைக்குறித்து அவர்கள் சரித்திரம் இவ்விதமானது, அவர்களது அன்பின்தன்மை இப்படிப்பட்டது என்று அறியாதயான் எவ்வாறு துதிப்பேன். அவ்வாறு துதிப்பதற்கு அடியேன் யார். (அதனால்) அவர்கள் புகழைச் சொல்லுகின்ற திருப்பதிகத்தைப் பாடுகின்ற சக்தியை அடியேனுக்கு அருள்செய்ய வேண்டுமென்று சொல்ல.—எ-று. (கசுஅ)

வேறு.

தொல்லைமால் வரைபயந்த தூயாடன் றிருப்பாகன்
அல்லறீர்ந் துலகுய்ய மறையளித்த திருவாக்காற்
றில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேனென்
றெல்லையில்வண் புகழாரை யெடுத்திசைப்பா மொழியென்றான்.

(இ-ள்.) பழமையாகிய பெரிய இமயபர்வதராஜன் புத்திரியாகப்பெற்ற உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமான் உலகத்திலுள்ளவர்கள் தீவினையினின்றும் நீங்கிக் கதியடையும்பொருட்டு வேதங்களை யருளிச்செய்த திருவாக்கினால் "தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன்" என்று அளவில்லாத புகழையுடைய அடியார்களை முதலில் எடுத்து இசையோடுபொருந்திய திருப்பதிகத்தைப் பாடுவாயாகவென்று கட்டளையிட்டருளினார்.—எ-று.

உலகுய்ய என்றதனால் இதனை யுணர்ந்தவர்கள் சத்தியமாகவே முத்தி பெறுவரொன்பதும், மறையளித்த திருவாக்கால் என்றதனால் இதுவும் அவ்வேத மேயாமென்பதும் கூறியதாயிற்று. (கசுகூ)

மன்னுசீர் வயலாரூர் மன்னவரை வன்றொண்டர்
சென்னியுற வடிவணங்கித் திருவருண்மேற் கொள்பொழுதின்
முன்னமா லயனறியா முதல்வர்தா மெழுந்தருள
அந்நிலைகண் டடியவர்பாற் சார்வதனுக் கணைகின்றார்.

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்பினையுடையவயல்கள் சூழ்ந்த திருவாரூரில் வீற்றிருக்கின்ற சிவபெருமானை ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தமது சிரசுபொருந்தும் படியாகத் திருவடிகளில் வணங்கித் திருவருளைப்பெற்றுக்கொள்ளும் சமயத்தில் பூர்வத்தில் திருமால் பிரமன்என்னும் இருவர்களாலுங் காணப்படாத சிவபெருமான் மறைந்தருள, அவ்வாறு மறைந்தருளிய தன்மையைக்கண்டு (பின்தேவாசிரியமண்டபத்தில் எழுந்தருளியிருக்கின்ற) அடியார்களை அடையும்படி செல்கின்றவராயினார்.—எ-று. (உ௦௦)

தூரத்தே திருக்கூட்டம் பலமுறையாற் றொழுதன்பு
சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி நின்றழியா
வீரத்தா ரெல்லார்க்குந் தனித்தனிவே றடியேனென்
றார்வத்தாற் றிருத்தொண்டத் தொகைப்பதிக மருள்செய்வார்.

(இ-ள்.) (அத்தேவாசிரியமண்டபத்தில் எழுந்தருளியிருக்கின்ற அடியார்களின்) திருக்கூட்டத்தைத் தூரத்திற்கண்டபொழுதே பலதரம்வணங்கி அன்பு

மிகுதியும் அதிகரிக்கப் பூமியில் சாஷ்டாங்கமாகவிழுந்து நமஸ்கரித்தெழுந்து அவ்வடியார்களின் சமீபத்திற்போய் நின்று ஓர்காலத்துங்கெடாத அன்பின்வலியையுடைய அடியார்களுக்கெல்லாம் தனித்தனியே ஒவ்வொருவருக்கும் வேறாக அடியேன் என்று பேரன்போடுந் திருத்தொண்டத்தொகை என்னுந் திருப்பதிகத்தை அருளிச்செய்வாராயினார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று. (உ0க)

தம்பெருமான் கொடுத்தமொழி முதலாகத் தமிழ்மாலைச்
செம்பொருளாற் றிருத்தொண்டத் தொகையான திருப்பதிகம்
உம்பர்பிரான் றானருளு முணர்வுபெற வுலகேத்த
எம்பெருமான் வன்றொண்டர் பாடியவ ரெதிர்பணிந்தார்.

(இ-ள்.) தமது பெருமானாகிய வன்மீகநாதர் அடியெடுத்துக்கொடுத்தருளிய "தில்லைவாழந்தணர்த மடியார்க்குமடியேன்" என்னுந் தொடர்மொழியை முதலாகவைத்துச் செவ்விய பொருளோடு திருத்தொண்டத்தொகை என்னுந் தமிழ்மாலையாகிய திருப்பதிகத்தைத் தேவநாயகராகிய சிவபெருமான் (தமது திருவாக்கால் அடியார்களின்பெருமையை) தமக்கு அருளிய உணர்ச்சியுண்டாக உலகத்தார் துதிக்கும்படி எமது பெருமானாகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பாடி அவ்வடியார்களுக்கு எதிரே வணங்கியருளினார்.—எ-று. (உ0உ)

## திருத்தொண்டத்தொகை.

பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன்
திருநீலகண்டத்துக்குயவனார்க்கடியேன்
இல்லையேயென்னாதவியற்பகைக்குமடியேன்
இளையான்றன்குடிமாறனடியார்க்குமடியேன்
வெல்லுமாமிக்வல்லமெய்ப்பொருளுக்கடியேன்
விரிபொழில்சூழ்குன்றையார்விறன்மிண்டர்க்கடியேன்
அல்லிமென்முல்லையந்தாரமர்நீதிக்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (க)

இலைமலிந்தவேனம்பியெறிபத்தர்க்கடியேன்
ஏனாதிநாதன்றனடியார்க்குமடியேன்
கலைமலிந்தசீர்நம்பிகண்ணப்பர்க்கடியேன்
கடவூரிற்கலயன்றனடியார்க்குமடியேன்
மலைமலிந்ததோள்வள்ளல்மானக்கஞ்சாறன்
எஞ்சாதவாட்டாயனடியார்க்குமடியேன்
அலைமலிந்தபுனன்மங்கையானாயர்க்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (உ)

மும்மையா லுலகாண்டமூர்த்திக்குமடியேன்
முருகனுக்குமுருத்திரபசுபதிக்குமடியேன்
செம்மையேதிருநாளைப்போவார்க்குமடியேன்
திருக்குறிப்புத்தொண்டர்தம்மடியார்க்குமடியேன்
மெய்ம்மையேதிருமேனிவழிபடாநிற்க
வெகுண்டெழுந்ததாதைதாள்மழுவினுலெறிந்த
அம்மையானடிச்சண்டிப்பெருமானுக்கடியே
னூரனூரிலம்மானுக்காளே. (ங)

திருநின்றசெம்மையேசெம்மையாக்கொண்ட
திருநாவுக்கரையன்றனடியார்க்குமடியேன்
பெருநம்பிகுலச்சிறைதனடியார்க்குமடியேன்
பெருமிழலைக்குறும்பர்க்கும்பேயார்க்குமடியேன்
ஒருநம்பியப்பூதியடியார்க்குமடியேன்
ஒலிபுனல்சூழ்சாத்தமங்கைநீலநக்கர்க்கடியேன்
அருநம்பிநமிநந்தியடியார்க்குமடியே
னூரனூரிலம்மானுக்காளே. (ச)

வம்பறுவரிவண்டுமணநாறமலரு
மதுமலர்நற்கொன்றையானடியலாற்பேணு
எம்பிரான்சம்பந்தனடியார்க்குமடியேன்
ஏயர்கோன்கலிக்காமனடியார்க்குமடியேன்
நம்பிரான்றிருமூலனடியார்க்குமடியேன்
நாட்டமிகுதண்டிக்குமூர்க்கர்க்குமடியேன்
அம்பரான்சோமாசிமாறனுக்குமடியே
னூரனூரிலம்மானுக்காளே. (ரு)

வார்கொண்டவனமுலையாளுமைபங்கன்கழலே
மறவாதுகல்லெறிந்தசாக்கியர்க்குமடியேன்
சீர்கொண்டபுகழ்வள்ளல்சிறப்புலிக்குமடியேன்
செங்காட்டங்குடிமேயசிறுத்தொண்டர்க்கடியேன்
கார்கொண்டகொடைக்கழறிற்றறிவார்க்குமடியேன்
கடற்காழிக்கணநாதனடியார்க்குமடியேன்
ஆர்கொண்டவேற்கூற்றன்களந்தைக்கோனடியே
னூரனூரிலம்மானுக்காளே. (சா)

பொய்யடிமையில்லாதபுலவர்க்குமடியேன்
பொழிற்கருவூர்த்துஞ்சியபுகழ்ச்சோழற்கடியேன்
மெய்யடியனரசிங்கமுனையரையற்கடியேன்
விரிதிரைசூழ்கடனாகையதிபத்தர்க்கடியேன்

கைதடிந்தவரிசிலையான்கலிக்கம்பன்கலியன்
கழற்சத்திவரிஞ்சையர்கோனடியார்க்குமடியேன்
ஐயடிகள்காடவர்கோனடியார்க்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௭)

கறைக்கண்டன்கழலடியேகாப்புக்கொண்டிருந்த
கணம்புல்லநம்பிக்குங்காரிக்குமடியேன்
நிறைக்கொண்டசிந்தையானெல்வேலிவென்ற
நின்றசீர்நெடுமாறனடியார்க்குமடியேன்
துறைக்கொண்டசெம்பவளமிருளகற்றுஞ்சோதித்
தொன்மயிலைவாயிலானடியார்க்குமடியேன்
அறைக்கொண்டவேனம்பிமுனையடுவார்க்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (அ)

கடல்சூழ்ந்தவுலகெலாங்காக்கின்றபெருமான்
காடவர்கோன்கழற்சிங்கனடியார்க்குமடியேன்
மடல்சூழ்ந்ததார்நம்பியிடங்கழிக்குந்தஞ்சை
மன்னவனாஞ்செருத்துணைதனடியார்க்குமடியேன்
புடைசூழ்ந்தபுலியதண்மேலரவாடவாடி
பொன்னடிக்கேமனம்வைத்தபுகழ்த்துணைக்குமடியேன்
அடல்சூழ்ந்தவேனம்பிகோட்புலிக்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௯)

பத்தராய்ப்பணிவார்களெல்லார்க்குமடியேன்
பரமனையேபாடுவாரடியார்க்குமடியேன்
சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்க்குமடியேன்
திருவாரூர்ப்பிறந்தார்களெல்லார்க்குமடியேன்
முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்க்கடியேன்
முழுநீறுபூசியமுனிவர்க்குமடியேன்
அப்பாலுமடிச்சார்ந்தாரடியார்க்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௰)

மன்னியசீர்மறைநாவனின்றவூர்ப்பூசல்
வரிவளையாண்மானிக்குநேசனுக்குமடியேன்
தென்னவனாயுலகாண்டசெங்கணார்க்கடியேன்
திருநீலகண்டத்துப்பாணனார்க்கடியேன்

என்னவனுமரனடியேயடைந்திட்டசடைய
　　னிசைஞானிகாதலன்றிருநாவலூர்க்கோர்
அன்னவனுமாரூரனடிமைகேட்டுவப்பா
　　ராரூரிலம்மானுக்கன்பராவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

உம்பர்நா யகரடியார் பேருவகை தாமெய்த
நம்பியா ரூரர்திருக் கூட்டத்தி னடுவணைந்தார்
தம்பிரான் றோழரவர் தாமொழிந்த தமிழ்முறையே
யெம்பிரான் தமர்கள்திருத் தொண்டேத்த லுறுகின்றேன்.

(இ-ள்.) சிவபெருமானது அடியார்கள் மிகுந்த சந்தோஷத்தையடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அவ்வடியார் திருக்கூட்டத்தின் நடுவேபோய் அவர்களுக்கடியவராக இருந்தருளினர். தம்பிரான் தோழராகிய அச்சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டத்தொகை என்னுந் திருப்பதிகத்தின் முறைப்படி எமது சிவபெருமானுடைய அன்பினராகிய அடியார்களின் திருத்தொண்டினியல்பை (யான்) துதிக்கத் தொடங்குகின்றேன்.—எ-று.

தமிழ்முறையே என்றதனுல் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டத்தொகையின் முறைப்படியே வரிசையாகவைத்து அவ்வடியார்களின் சரித்திரத்தைக் கூறுகின்றேனென்றாரெனவறிக. (உ0௩)

**தடுத்தாட்கொண்டபுராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆ செய்யுள் ௩சக.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

முதலாவது

## தில்லைவாழந்தணர்சருக்கம்.

# தில்லைவாழந்தணர்புராணம்.

ஆதியாய் நடுவு மாகி யளவிலா வளவு மாகிச்
சோதியா யுணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா வேக மாகிப் பெண்ணுமா யாணு மாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி.

(இ-ள்.) சர்வ லோகங்களுக்கும் முதற்காரணமாகவும், அவற்றின் நடுவாகவும், இவ்வளவினதென்று நிச்சயித்தறிதற்கரிய வியாபகமுடையதாகவும், சோதியே ஸ்வரூபமாகவும், சர்வ ஆன்மாக்களின் உணர்வுக் குணர்வாகவும், கட்புலனுக்குக் காணப்பட்ட எவ்வகைப் பொருள்களுமாகவும், பேதிக்கப்படாத ஏக வஸ்துவாகவும், பெண்ணாகவும், ஆணாகவும் வேதசிவாகமங்களால் போதிக்கப்படுகின்ற தில்லைத்திருச்சிற்றம்பலத்தில் செய்தருளுகின்ற திருநடனத்திற்கு வந்தனம் வந்தனம்.—எ-று.

ஆதியாய்நடுவுமாகி என்பதற்குச் சிருட்டிக் கடவுளாகவும் திதிக்கடவுளாகவும் என்று பொருள்கூறினும் பொருந்தும்.

**இது நிஷ்களநிருத்தவணக்கம்.** (க)

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

(இ-ள்.) (பல மதஸ்தர்களாலும் தங்கள் தங்களுக்குத் தோன்றியவாறே புனைந்துரைக்கப்பட்ட) கற்பனையைக் கடந்துநின்ற நடனசோதியானது தனது காருண்ணியமே திருவுருவமாகக்கொண்டு யாவருக்கும் அற்புதத்தை விளைக்குந் திருக்கோலத்தால் சிறப்புற்று அருமையாகிய உபநிடதங்களின் உச்சியின்மே

லாக விளங்கும் சிறந்த சிதாகாசவடிவமாகிய திருச்சிற்றம்பலத்துள் நின்று அழகோடு ஆநந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற பொலிவினையுடைய தாமரைமலர் போன்ற திருவடிகளுக்கு வந்தனம் வந்தனம்.—எ-று.

**இது சகளநிருத்தவணக்கம்.** (உ)

போற்றிநீ டில்லை வாழந் தணர்திறம் புகல லுற்றே
னீற்றினு னிறைந்த கோல நிருத்தனுக் குரிய தொண்டாம்
பேற்றினர் பெருமைக் கெல்லை யாயினர் பேணி வாழும்
ஆற்றினர் பெருகு மன்பா லடித்தவம் புரிந்து வாழ்வார்.

(இ-ள்.) இவ்விதமாகத் துதித்துப் (பலவகைச் செல்வத்திலுங் குறைவின்றி) நிறைந்த தில்லைவாழந்தணர்களின் சரித்திரத்தைச் சொல்லத்தொடங்கினேன்; (அவர்கள் எத்தன்மையினரென்றால்) விபூதியின் உத்தூளனத்தினால் நிறைந்த அழகினையுடைய ஸ்ரீநடராஜப்பெருமானுக்குரிய தொண்டுசெய்தலாகிய பெரும்பேற்றையுடையவர்கள்; பெருமையென்னும் பொருளுக்கு ஓர் எல்லையாயுள்ளவர்கள்; தாம் அனுசரித்து வாழ்தற்குரிய நல்லொழுக்கங்களையுடையவர்கள்; மிகுந்த அன்பினால் அந்நடராஜப்பெருமானுடைய திருவடிகளைத் தியானிக்கின்ற தவத்தைச்செய்து வாழ்கின்றவர்கள்.—எ-று. (௩)

பொங்கிய திருவி னீடும் பொற்புடைப் பணிக ளேந்தி
மங்கலத் தொழில்கள் செய்து மறைகளாற் றுதித்து மற்றுந்
தங்களுக் கேற்ற பண்பிற் றரும்பணி தலைநின் றுய்த்தே
யங்கணர் கோயி லுள்ளா வகம்படித் தொண்டு செய்வார்.

(இ-ள்.) சிறந்த பொன்னினாலும் பலவகை இரத்தினங்களினாலும் அதிகரித்திருக்கின்ற அழகிய திருவாபரணங்களைத் தாங்கிக்கொண்டு ஸ்ரீநடராஜப்பெருமானை அலங்கரித்தல் ஆராதித்தல் முதலிய மங்கலகரமான தொழில்களைச் செய்து இருக்கு முதலிய வேதங்களால் துதிசெய்து பின்னும் தங்களுக்கு ஏற்ற வகையாகவுள்ள தகுந்த வேறு திருத்தொண்டுகளையும் முக்கியமாக மேற்கொண்டு செய்து அழகிய கண்ணுளராகிய அப்பெருமானது திருக்கோயிலுள்ளாக இவ்விதமாக அகம்படித்தொண்டு செய்கின்றவர்கள்.—எ-று.

"மங்கலத்தொழில்" என்றதனால் நித்தியபூசையன்றித் திருவிழாமுதலியனவுங்கொள்க. "மற்றுந் தங்களுக்கேற்ற பண்பிற் றரும்பணி" என்றது சாமரம்-விசிறி-கட்டியங்கூறல் முதலிய பணிகளை எனவறிக. (௪)

வருமுறை யெரிமூன் றோம்பி மன்னுயி ரருளான் மல்கத்
தருமமே பொருளாக் கொண்டு தத்துவ நெறியிற் செல்லும்
அருமறை நான்கி னோடா றங்கமும் பயின்று வல்லார்
திருநடம் புரிவார்க் காளாந் திருவினாற் சிறந்த சீரார்.

(இ-ள்.) வேதத்திற் சொல்லுகின்றமுறைமைப்படியே மூன்று அக்கினிகளையும் வளர்த்து நிலைபெற்ற ஆன்மகோடிகள் தமது கருணையினால் சுகத்தையடையும்படி தருமம் ஒன்றையே பொருளாகக்கொண்டு உண்மைநெறியில் செல்

லுகின்ற அரிய நான்குவேதங்களோடு ஆறு வேதாங்கங்களையும் கற்று வல்லவர்கள்; (திருச்சிற்றம்பலத்தில்) திருநடனஞ்செய்தருளுகின்ற ஸ்ரீநடராஜப்பெருமானுக்கு அடிமையாகிய செல்வத்தினால் சிறந்த கீர்த்தியையுடையவர்கள்.

எரி மூன்றாவன:—ஆவகனீயம், காருகபத்தியம், தக்கணாக்கினி என்பன. இவற்றுள், ஆவகனீயம் என்பது நாற்சதுரமாய் யாகசாலையின் வடக்கில் வைக்கப்படுவது. காருகபத்தியம் முச்சதுரமாய் அதின் தெற்கில் வைக்கப்படுவது. தக்கணாக்கினி அதற்குத் தெற்கில் பிதிர்களுக்குப் பலி ஓமமுதலியவைகளைச் செய்வதற்கு வைக்கப்படுவது. அருமறை நான்காவன:— இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்பன. ஆறங்கமாவன:— மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்பனவாம். தருமம் என்பதற்கு வேதத்தின் கர்மகாண்டமெனவும், தத்துவம் என்பதற்கு வேதத்தின் ஞானகாண்டமெனவும் பொருள்கூறினும் பொருந்தும். (ரு)

மறுவிலா மரபின் வந்து மாறிலா வொழுக்கம் பூண்டார்
அறுதொழி லாட்சி யாலே யருங்கலி நீக்கி யுள்ளார்
உறுவது நீற்றின் செல்வ மெனக்கொளு முள்ள மிக்கார்
பெறுவது சிவன்பா லன்பாம் பேறெனப் பெருகி வாழ்வார்.

(இ-ள்.) குற்றமற்ற வேதியர்குலத்தில் அவதரித்துத் தங் குலவொழுக்கத்திற்கு மாறுதலில்லாத நல்லொழுக்கத்தையே மேற்கொண் டொழுகுகின்றவர்கள்; தாம் அறுவகையாகிய தொழில்களைச் செய்தலினால் (உலகத்தில் வருகின்ற) அரிய நோய் வறுமைமுதலிய துன்பங்களை நீக்கினவர்கள்; நமக்குப்பயனாகவுள்ளது திருநீற்றின் செல்வமே என்று எண்ணியிருக்கின்ற திருவுள்ளத்தையுடையவர்கள்; நாம் அடையத்தக்கது சிவபெருமானிடத்தில் பத்திசெய்வதாகிய பேறே யென்று மனங்களித்து வாழ்கின்றவர்கள்.—எ-று.

மறையவர்க்குரிய அறுதொழிலாவன:—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. இவற்றால் கலிநீக்குதலாவது வேதசம்மதமாக யாகாதி காரியங்களைச் செய்து தேவர்கள்முதலியோர்க்கு அவி யளித்து அதனால் மழைவளஞ்சுரக்கப்பண்ணி உலகத்தில் கலி யென்பது நெருங்காமல் காத் தளித்தல். இதனை "கற்றாங் கெரியோம்பிக் கலியைவாராமே - செற்றார் வாழ் தில்லை" என்னுந்திருநெறித்தமிழ்வேதத்தானுமுணர்க. (சு)

ஞானமே முதலா நான்கு நவையறத் தெரிந்து மிக்கார்
தானமுந் தவமும் வல்லார் தகுதியின் பகுதி சார்ந்தார்
ஊனமே லொன்று மில்லா ருலகெலாம் புகழ்ந்து போற்று
மானமும் பொறையுந் தாங்கி மனையறம் புரிந்து வாழ்வார்.

(இ-ள்.) ஞானம் முதலாகிய நான்கு பாதப்பொருள்களையும் குற்றமறத் தெரிந்து அதனால் சிறந்தவர்கள்; தானஞ்செய்வதிலும் தவஞ்செய்வதிலும் மிகவும் வல்லவர்கள்; மேன்மையாகிய பிரிவில்சேர்ந்துள்ளவர்கள்; தமக்குமேல்வருவதாகிய ஓர் குற்றமும் இல்லாதவர்கள்; எவ்வுலகத்திலுள்ளவர்களும் புகழ்ந்து துதிக்கத்தக்கதாகிய மானத்தையும் பொறுமையையுந் தாங்கிக்கொண்டு இல்லறதருமத்தை நடத்திவாழ்கின்றவர்கள்.—எ-று.

ஞானமே முதலா நான்காவன:—ஞானம், யோகம், கிரியை, சரியை என்பன; இவற்றைச் சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாதமார்க்கம் எனவும் நூல்கள்கூறும், இவற்றுள் சரியையால் சாலோகமும், கிரியையால் சாமீபமும், யோகத்தால் சாரூபமும், ஞானத்தால் சாயுச்சியமும் பிராப்தமாம். ஞானத்தாலடையும் சாயுச்சியத்தை முத்திமுடிவென்றும், ஏனைய மூன்றையும் பதமுத்தியென்றுங் கூறுவர்; இதனை "சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதமார்க்கமென்று சங்கரனையடையு, நன்மார்க்க நாலிவைதான் ஞானயோக நற்சரியாகிரிவையென்று நவிற்றுவதுஞ்செய்வர், சன்மார்க்கமுத்திகள் சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியங்களென்று சதுர்விதமா, முன்மார்க்கஞானத்தாலெய்து முத்திமுடிவென்பர் மூன்றினுக்கு முத்திபதமென்பர்." என்னும் ஸ்ரீ அருணந்தி சிவாசாரியா ரருள்வாக்கியத்தானறிக. "ஊனமேலொன்று மில்லார்" என்றதனுல் தன்னைப்பற்றியும், பிறவுயிர்களைப்பற்றியும், தெய்வத்தைப்பற்றியும் வருகின்றனவாகிய தாபத்திரையங்களொன்றும் தாம்செய்யும் சிவத்தியானத்தால் தம்மையணுகப் பெறுதவர் எனவறிக. (எ)

செம்மையாற் றணிந்த சிந்தைத் தெய்வவே தியர்க ளானோர்
மும்மையா யிரவர் தாங்கள் போற்றிட முதல்வ னூரை
யிம்மையே பெற்று வாழ்வா ரினிப்பெறும் பேறொன் றில்லார்
தம்மையே தமக்கொப் பான நிலைமையாற் றலைமை சார்ந்தார்.

(இ-ள்.) நல்லொழுக்கத்தோடு அடங்கிய சிந்தையினையுடைய தெய்வத்தன்மைபொருந்திய வேதியர்கள் மூவாயிரவர்; அவர்கள் ஸ்ரீநடராஜப்பெருமானைத் துதிப்பதற்கு இப்பிறப்பிலேதானே பெற்று வாழ்கின்றவர்கள்; இனி தாம்பெறவேண்டிய பேறாகிய பொருள் வேறொன்றுமில்லாதவர்கள்; தங்களுக்குத் தாங்களே சமானமாகிய மேன்மையினுல் உயர்வடைந்தவர்கள்.—எ-று.

பரத்தில் அனுபவிக்கின்ற தரிசனாநந்தத்தை இம்மையிலேயே எளிதாகத் தரிசிக்கப்பெற்றுச் சிவாநந்தத்தை அனுபவிக்கின்ற சீவன்முத்தர்கள் என்பது தோன்ற "இம்மையே பெற்று வாழ்வார்" என்று கூறினுர். (அ)

இன்றிவர் பெருமை யெம்மா லியம்பலா மெல்லைத் தாமோ
தென்றமிழ்ப் பயனு யுள்ள திருத்தொண்டத் தொகைமுன் பாட
அன்றுவன் றொண்டர் தம்மை யருளிய வாரூ ரண்ணன்
முன்றிரு வாக்காற் கோத்த முதற்பொரு ளானு ரென்றால்.

(இ-ள்.) இப்பொழுது இந்தத்தில்லைவாழ்ந்தணர்களின் பெருமையானது எம்மால் இவ்வளவினதென்று எடுத்துச் சொல்லுதற்குரிய தகுதியையுடையதாகுமோ? அழகிய தமிழ்வேதத்தின்பயனுகவுள்ள திருத்தொண்டத்தொகையை அடியார்கள்முன்னே பாடும்படியாக அந்நாளில் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு அருளிச்செய்த தியாகராஜப்பெருமான் தமது திருவாக்கினுல் முதலில் "தில்லைவாழந்தணர்த மடியார்க்குமடியேன்" என்று எடுத்துக்கொடுத்த முதற்பொருளாயிருந்தார்களென்றால்.—எ-று.

ஆரூரண்ணல் முன் திருவாக்யாற்கோத்த முதற்பொருளாவது " தில்லை வாழந்தணர்த மடியார்க்குமடியேன்" என்று முதலெடுத்துக்கொடுக்கப்பெற்றது எனவறிக. (கூ)

அகலிடத் துயர்ந்த தில்லை யந்தண ரகில மெல்லாம்
புகழ்திரு மறையோ ரென்றும் பொதுநடம் போற்றி வாழ
நிகழ்திரு நீல கண்டக் குயவனார் நீடு வாய்மை
திகழுமன் புடைய தொண்டர் செய்தவங் கூற லுற்றாம்.

(இ-ள்.) விசாலமாகிய இந்நிலவுலகத்தில் மேன்மைபொருந்திய தில்லைவாழந்தணர்கள் எல்லாவுலகத்தாராலும் புகழத்தக்க சிறந்தமறையவர்கள்; அவர்கள் எக்காலத்தும் திருச்சிற்றம்பலத்திற் செய்தருளுகின்ற ஆனந்தத்தாண்டவத்தைத் துதித்து வாழக்கடவர்களாக. இனி, சிறப்புற்று விளங்குகின்ற திருநீலகண்டக் குயவனார் என்னும் மிகுந்த மெய்மைவிளங்கப்பெற்ற பேரன்பினையுடைய திருத்தொண்டர் தாம் அருமையாகச்செய்த தவத்தின்செய்கையைச் சொல்லத்தொடங்குகின்றோம்.—எ-று.

இத்தில்லைவாழந்தணர்கள் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத்தொகை செய்தகாலத்தேயன்றிப் பின் பவுஷியகாலத்துந் திருத்தொண்டுசெய்து வருபவராதலின் " என்றும் பொதுநடம்போற்றி வாழ" என்று கூறினார். (கo)

தில்லைவாழந்தணர்புராணம் முற்றிற்று.




திருச்சிற்றம்பலம்.

ஆ செய்யுள் ௩௭௬.





திருநீலகண்டநாயனர்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநீலகண்ட நாயனார்புராணம்.

வேதியர் தில்லை மூதூர் வேட்கோவர் குலத்து வந்தார்
மாதொரு பாக நோக்கி மன்னுசிற் றம்ப லத்தே
யாதியு முடிவு மில்லா வற்புதத் தனிக்கூத் தாடு
நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடு நலத்தின் மிக்கார்.

(இ-ள்.) (மேற்சொல்லிய சிறப்பினையுடைய) தில்லைவாழந்தணர்கள் வாழ்கின்ற பழமையாகிய ஸ்ரீசிதம்பரத்தில் குயவர்குலத்தில் திருவவதாரஞ்செய்தவர்; உமாதேவியார் தமது இடப்பாகத்தில் நிருத்த தரிசனஞ்செய்துகொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டு நிலைபெற்ற திருச்சிற்றம்பலத்தில் முதலும் முடிவுமில்லாத அற்புதமாகிய ஒப்பற்ற திருநடனத்தைச் செய்தருளுகின்ற ஸ்ரீநடராஜப்பெருமானது திருவடிகளைத் துதித்துத் திருத்தொண்டுசெய்கின்ற நன்மையில் சிறந்தவர்.—எ-று.

சிவபெருமான் மலத்திற்கட்டுண்டுழலும் ஆன்மாக்களுக்குத் திருவருள்பாலித்தற்பொருட்டுச் செய்தருளுந் தாண்டவம் பஞ்சகிருத்தியத் தாண்டவமாதலானும், அது ஓர்காலத்துத்தோன்றி ஓர்காலத்துக் கெடுந்தன்மையினதன்றாதலானும், "ஆதியுமுடிவுமில்லா வற்புதத்தனிக்கூத்து" என்று கூறினார். இதனை

"தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு." எனவரும் உண்மைவிளக்கத்தா னுணர்க.

"தேசமலி பொதுஞானச் செவ்வொளியுந் திகழ்பதியாம்
ஈசனது நடத்தொழிலு மிலங்குபல வுயிர்த்தொகையும்
பாசமுமங் கதுகழியப் பண்ணுதிரு வெண்ணீறும்
ஆசிறிரு வெழுத்தஞ்சு மாதியிவை யாறாக." என்றார் உமாபதிசிவாசாரியரும். (க)

பொய்கடிந் தறத்தின் வாழ்வார் புனற்சடை முடியார்க் கன்பர்
மெய்யடி யார்கட் கான பணிசெயும் விருப்பி னின்றார்
வையகம் போற்றுஞ் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்
சைவமெய்த் திருவின் சார்வே பொருளெனச் சாரு நீரார்.

(இ-ள்.) பொய்சொல்வதினின்றும் நீங்கித் தருமவழியில் வாழ்கின்றவர்; கங்காநதியைத்தரித்த சடைமுடியினையுடைய சிவபெருமானுக்குச் சிறந்த அன்பராயுள்ளவர்; உண்மையாகிய திருத்தொண்டர்களுக்குத் தகுந்த தொண்டுசெய்

கின்ற விருப்பத்தையுடையவர்; உலகத்திலுள்ளவர்கள் புகழத்தக்க நற்செய்கையையுடைய இல்லறதருமத்தை நடத்தி வாழ்கின்றவர்; சைவநெறியில் வாழுகின்ற உண்மையாகிய செல்வத்தையடைதலே தமக்குரிய மெய்ப்பொருளென்று அதனையடைந்தொழுகுங் குணத்தையுடையவர்.—எ-று.

சித்தாந்தசைவமாகிய சைவசமயமே மெய்ச்சமயமென்பதும், அதனைச் சார்ந்தவர்களுக்கே முத்திப்பயன் சித்திக்குமென்பதும், ஏனைய உலகாயதமுதல் பாஞ்சராத்திர மீறாகவுள்ள இருபத்துநான்குசமயத்தும் புகுந்துழலுதல் "கரும்பிருக்க விரும்புகடித்தெய்த்தவாறு" போல வீணேயாமென்பதும், அதனை யடைந்தொழுகுவோர்களுக்கே இருவகைச் செல்வமும் எளிதில் கைகூடு மென்பதுந் தோன்ற "சைவமெய்த் திருவின் சார்வே பொருளெனச் சாரு நீரார்" என்று கூறினர். (உ)

அளவிலா மரபின் வாழ்க்கை மட்கல மமுதுக் காக்கி
வளரிளந் திங்கட் கண்ணி மன்றுளா ரடியார்க் கென்றும்
உளமகிழ் சிறப்பின் மல்க வோடளித் தொழுகு நாளில்
இளமைமீ தூர வின்பத் துறையினி லெளிய ரானார்.

(இ-ள்.) தம்முடையமரபிற்குத் தக்கபடிசெய்கின்ற அளவில்லாத மட்பாண்டங்களைத் தமது இல்வாழ்க்கைக்குவேண்டிய அமுதுமுதலியவற்றிற்கு மாத்திரம் அமைத்து ஜீவனஞ்செய்துகொண்டு, வளர்கின்ற இளமைபொருந்திய பிறைச்சந்திரனைக் கொண்டைமாலையாகத் தரித்த ஸ்ரீநடராஜப்பெருமானுடைய அடியார்களுக்கு எந்நாளும் மனமகிழ்தற்குக் காரணமான சிறப்பினால்விளங்கத் திருவோடுகளைக் கொடுத்துக்கொண்டு வாழுங்காலத்தில் இளமைப்பருவம் அதிகரித்துவர, சிற்றின்பவழியில் மிகுந்த விருப்பமுடையவராயிருந்தார்.—எ-று. (ந)

அவர்தங்கண் மனைவி யாரு மருந்ததி கற்பின் மிக்கார்
புவனங்க ளுய்ய வையர் பொங்குநஞ் சுண்ண யாஞ்செய்
தவமின்று தடுத்த தென்னத் தகைந்துதான் றரித்த தென்று
சிவனெந்தை கண்டந் தன்னைத் திருநீல கண்ட மென்பார்.

(இ-ள்.) (அந்நாயனார்) சிவபெருமான் சர்வலோகங்களும் பிழைக்கும் பொருட்டுத் (திருப்பாற்கடலில்) தோன்றிய கொடியவிஷத்தை அமுதுசெய்ய நாம் அனைவருஞ்செய்த தவமானது அங்குநின்று தடுத்தாற்போல (உள்ளேபுகவொட்டாமல்) தகைவுசெய்து தானே அவ்விஷத்தைத் தரித்துக்கொண்டதென்று எமது முதல்வராகிய சிவபெருமானது கண்டத்தைத் திருநீலகண்டமென்று எந்நாளும் சொல்லிக்கொண்டிருப்பார். அவருடைய மனைவியாரும் அருந்ததியையொத்த கற்பிற்சிறந்தவர்.—எ-று.

"புவனங்க ளுய்ய வையர் பொங்குநஞ் சுண்ண" என்பதன் வரலாறு:—முற்காலத்திலே தேவர்களும் அசுரர்களும் ஒருவருக்கொருவர் போர்புரிந்து இருதிறத்தாரிலும் அநேகர் இறந்துபோக அதனால் அவர்கள் யோசித்து, இனி நாம் இறப்பதைத் தவிர்க்கின்ற அமுதத்தைப் பெறவேண்டுமென்று கருதிப் பிரமலோகத்தையடைந்து, பிரமனைக்கண்டுகூற அப்பிரமன் அவர்களையழைத்துக்கொண்டு வைகுந்தமடைந்து, திருமாலைக்கண்டு சொல்ல அவர் நாமனைவரும் திருப்பாற்

கடலைக்கடைந்து அமுதம் பெறுவோம் வாருங்களென்று அழைத்துக்கொண்டு வந்து மந்தரமலையை மத்தாகவும் சந்திரனைத் தூணாகவும், வாசுகியை நாணாகவும், அமைத்துத் தேவர்கள் ஒருபுறமும் அசுரர்கள் ஒருபுறமுமாக விருந்து திருப்பாற் கடலைக் கடைந்தார்கள். அவ்வாறு கடையும்பொழுது மந்தரமலையானது கடலில்ஆழ, அப்பொழுது திருமால் கச்சபவடிவங் கொண்டு அதனை ஆழாமல் தாங்கி நிறுத்தினர். பின்பு முன்போலவே கடைந்தார்கள். அப்பொழுது அவ்வாசுகியென்னும் பாம்பின்வாயிலும், சமுத்திரத்திலும் இருந்து ஆலாலமென்னும் கொடியவிடமானது தோன்றி யுகாந்தகாலத்தைப்போல விருண்டு அனைவரையுங் கொல்லத்தொடங்கினபொழுது விஷ்ணுவானவர் இவ்வாபத்தினின்றும் நீக்கித் தேவர்களைக் காக்கவேண்டுமென்னும் எண்ணமுள்ளவராய் அவ்விஷத்தைச் சமீபிக்க அதன் கொடிய வேகத்தால் தனது வெண்ணிறமாகிய மேனி கருகிக் கரியவனென்னும் பெயர்பெற்றார். பிரமனும் தனது மேனியின் பொன்னிறம் நீங்கிப் புகைநிறம்பெற்றான். பின்பு விஷ்ணுவானவர் வருத்தமுற்றுத் திருக்கயிலாயத்தையடைந்து அவர்களனைவரையும் புறத்தே நிறுத்தித் திருநந்திதேவரிடத்தில் அனுமதிபெற்றுக்கொண்டு பிரமனோடு உள்ளே புகுந்து சிவபெருமானது திருமுன்னேநின்று எம்பெருமானே! யாங்கள் யாவரும் தேவரீரது திருவருளன்றித் திருப்பாற்கடலைக்கடைந்ததனாலுண்டாகிய விடவேகத்தால் வருந்தியடைந்தோமாதலால் எங்களைக் காத்தருள்வேண்டுமென்று இரந்துநிற்க, பெருமான் நீவிர் அஞ்சலீரென்று அருள்புரிந்து தமது சமீபத்தில் நின்றவராகிய சுந்தரரைப் பார்த்து அவ்விடத்தைக் கொண்டுவருவாயாகவென்று கட்டளையிட்டருள, அவர் சென்று அவ்விடத்தைக்கொண்டுவந்து கொடுப்ப அதனை ஓர் நீர்த்துளிபோலச் சுருங்கத் திருக்கரத்து ஏற்று உண்டனர். அப்பொழுது அவ்விடமானது பெருமானது கண்டத்தினளவாகச் செல்லும்பொழுது திருமால்முதலியதேவர்கள் யாவரும் சிவபெருமானை வணங்கி எம்பெருமானே! தேவரீர் எங்கள் உயிரைக் காத்தருளியதற்குச் சாக்ஷியாக அதனைக் கண்டத்திலேயே அமைத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க அவ்வாறே யாகுகவென்று அமைத்தருளினர். பின் திருமால் முதலாயுள்ள தேவர்களனைவரும் சிவபெருமானைத் துதித்துத் திருவருள்பெற்று அமுதங்கடையும்படி சென்றனர். சிவபெருமான் அவ்விஷத்தைக் கண்டத்தில் வைத்த காரணத்தினால் அவருக்குக் காளகண்டன், கறைமிடற்றண்ணல் முதலிய பல திருநாமங்கள் வழங்கப்பெற்றது என வறிக.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (௪)

ஆனதங் கேள்வ ரங்கோர் பரத்தைபா லணைந்து நண்ண
மானமுன் பொருது வந்த வூடலான் மனையின் வாழ்க்கை
யேனைய வெல்லாஞ் செய்தே யுடனுறை விசையா ரானார்
தேனலர் கமலப் போதிற் றிருவினு முருவ மிக்கார்.

(இ-ள்.) தேன்பொருந்திய தாமரைமலரில்இருக்கின்ற இலக்குமியைப்பார்க்கிலும் சிறந்த அழகினையுடையவராகிய அந்நாயனாரது மனைவியாரானவர் பிரியமுள்ள தமது கணவனார் அவ்வூரிலுள்ள ஓர் வேசியினிடத்தில் கூடியிருந்து தம்முடைய வீட்டிற்குவருதலும் (அதைப்பார்த்து) மானத்தை முன்னிட்டு அதனைப்பொறுக்காமல் தம்மிடத்து உண்டாகிய பிணக்கினால் இல்லறவாழ்க்கைக்குச்

செய்யவேண்டிய மற்றை எல்லாப்பணிகளையுஞ் செய்து தம்புருஷரோடு சம்பந்தப்படுதற்கு மாத்திரம் இஷ்டமில்லாதவராயிருந்தார்.—எ-று. (ரு)

மூண்டவப் புலவி தீர்க்க வன்பனார் மூன்பு சென்று
பூண்டயங் கிளமென் சாயற் பொற்கொடி யனையார் தம்மை
வேண்டுவ விரந்து கூறி மெய்யுற வணையும் போதிற்
நீண்டுவீ ராயி னெம்மைத் திருநீல கண்ட மென்றார்.

(இ-ள்.) (அதனையுணர்ந்த) திருநீலகண்டநாயனார் தமது மனைவியாருள்ளத்தில் அதிகரித்தெழுந்த அப்பிணிக்கை நீக்கும்பொருட்டு அவரிடத்திற்போய் ஆபரணங்கள் விளங்குகின்ற இளமைபொருந்திய மெல்லிய சாயலையுடைய பொற்கொடிபோன்ற தமது மனைவியாரை வேண்டுவனவாகிய பிரியவசனங்களை எளிமையாகச்சொல்லி அவர் திருமேனியைப்பொருந்தத்தழுவும்போதில் (அதற்கு அவ்வம்மையார் பிணங்கி) இனி எம்மை நீர் தீண்டினால் திருநீலகண்டம் என்று திருவாணை கூறினார்.—எ-று. (சு)

ஆதியார் நீல கண்டத் தளவுதாங் கொண்ட வார்வம்
பேதியா வாணை கேட்ட பெரியவர் பெயர்ந்து நீங்கி
ஏதிலார் போல நோக்கி யெம்மையென் றதனால் மற்றை
மாதரார் தமையு மென்றன் மனத்தினுந் தீண்டே னென்றார்.

(இ-ள்.) முதற் பெருங்கடவுளாகிய சிவபெருமானது திருநீலகண்டத்தினளவிலே தாம் வைத்திருக்கின்ற அன்பினின்றும் சிறிதும் வேறுபடாத அத்திருவாணையைக்கேட்ட திருநீலகண்டநாயனார் உடனே அவரைத்தீண்டாமல் நீங்கி அயலான் மனைவியைப்போலப் பார்த்து எம்மை என்று தன்மைப்பன்மையாகச் சொன்னதனால் மற்றை ஸ்திரீகளையும் (என்காயத்தினாலன்றி) என்மனத்தினாலும் தீண்டமாட்டேனென்று உறுதிசெய்துகொண்டார்.—எ-று.

பேதியா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம் பெரியவர் என்னும் பெயரைக்கொண்டது. (எ)

கற்புறு மனைவி யாருங் கணவனார்க் கான வெல்லாம்
பொற்புற மெய்யு றுமற் பொருந்துவ போற்றிச் செய்தே
இற்புறம் பொழியா ரங்க ணிருவரும் வேறு வைகி
யற்புறு புணர்ச்சி யின்மை யயலறி யாமை வாழ்ந்தார்.

(இ-ள்.) கற்பினையுடைய அத்திருநீலகண்டநாயனாருடைய மனைவியாரும் தமது கணவருக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளையெல்லாம் அழகாக அவரது திருமேனியில் தம்முடம்புமாத்திரம் தீண்டாமல் செய்தற்குரியவைகளை விரும்பிச்செய்து தமது வீட்டில்நின்றுபுறத்திற்செல்லாமல் ஸ்திரீபுருஷர்களாகிய இவ்விருவரும் வேறுவேறிடத்தில் வசித்து அன்புபொருந்திய புணர்ச்சியில்லாமலிருப்பதை அயலார் அறிந்துகொள்ளாதபடிக்கு வாழ்ந்துகொண்டிருந்தார்கள்.

இளமையின் மிக்கு ளார்க ளிருவரு மறிய நின்ற
அளவில்சீ ராணை போற்றி யாண்டுகள் பலவுஞ் செல்ல
வளமலி யிளமை நீங்கி வடிவுறு மூப்பு வந்து
தளர்வொடு சாய்ந்து மன்பு தம்பிரான் றிறத்துச் சாயார்,

(இ-ள்.) இளமைப்பருவத்தால் சிறந்துள்ளவர்களாகிய திருநீலகண்டநாரும், அவர்மனைவியாரும் (பிறர்அறியாமல்) தாங்களிருவரும் அறியும்படிநின்ற அளவில்லாத பெருஞ்சிறப்பினையுடைய அத்திருவாணையைத் தவறாமல் பாதுகாத்துப் பலவருஷங்களுஞ் செல்லாநிற்க, வளப்பமிகுந்த இளமைப்பருவம் நீங்கித் திரைமுதலியவைகளையுடைய முதுமைப்பருவம்வந்து (அதனால்) தேகத்தளர்ச்சியோடுசாய்வடைந்தும் தாம் சிவபெருமானிடத்தில்வைத்த அன்பினின்றும் சிறிதும் நீங்காதவரானார்கள்.—எ-று.

"அளவில் சீரானைப்போற்றி" என்றும் பாடம். (கூ)

இந்நெறி யொழுகு நாளி லெரிதளிர்த் தென்ன நீண்ட
மின்னொளிர் சடையோன் றானுந் தொண்டரை விளக்கங் காண
நன்னெறி யிதுவா மென்று ஞாலத்தோர் விரும்பி யுய்யும்
அந்நெறி காட்டு மாற்றா லருட்சிவ யோகி யாகி.

(இ-ள்.) (திருவாணையைப்போற்றி) இத்தன்மையான அன்பின்வழியில் நடக்கும் நாள்களில், நெருப்புத்தளிர்விட்டதைப்போலச் சிவந்து நீண்டிருக்கின்ற மின்னலைப்போல விளங்குஞ் சடையினையுடைய சிவபெருமானும் தமது அன்பராகிய திருநீலகண்டநாயனாரது மகிமையை யாவரும் இத்தன்மையினவொன்று அறிந்துகொள்ளவும், நன்மையாகியமார்க்கம் இதுவேயாகுமென்று இப்பூவுலகத்திலுள்ளவர்கள் விரும்பிக் கடைத்தேறுதற்குக் காரணமான அப்படிப்ப நல்லவழியைக் காட்டும்படியாகவும் அருள்பொருந்திய ஓர் சிவயோகியின் வடிவமெடுத்து.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கo)

வேறு.

கீளொடு கோவணஞ் சாத்திக் கேடிலா
வாள்விடு நீற்றொளி மலர்ந்த மேனிமேற்
றோளொடு மார்பிடைத் துவளு நூலுட
னீளொளி வளர்திரு முண்ட நெற்றியும்.

(இ-ள்.) (திருவரையில்) கீளுடனே கோவணத்தைத் தரித்துக் கெடுதலில்லாத ஒளிவீசுகின்ற திருவெண்ணீற்றின்பிரகாசமானது விளங்குகின்ற திருமேனியின்மேல் தோளிலும் மார்பிலும் அசைகின்ற பூணூலுடனே மிகுந்த வொளிவிளங்குகின்றசிறந்த திரிபுண்டரந்தீட்டிய நெற்றியும்.—எ-று.

கீள் என்பது அரைஞாணுக்குப்பதிலாய் நூலினால் தகட்டுவடிவமாக செய்யப்பட்டுள்ளது. முண்டம் திரிபுண்டரம் என்பதன் மரூஉ. (கக)

நெடுஞ்சடை கரந்திட நெறித்த பம்பையும்
விடுங்கதிர் முறுவல்வெண் ணிலவு மேம்பட
இடும்பலிப் பாத்திர மேந்து கையராய்
நடந்துவேட் கோவர்த மனையி னண்ணினார்.

(இ-ள்.) நெடிய சடையானது மறையும்படி நெறித்து வளர்ந்திருக்கின்ற பம்பையும், ஒளிவீசுகின்ற பற்களினின்றுந் தோன்றுகின்ற வெண்மைபொருந்தி

ய பிரகாசமும் அதிகரிக்கப் பிச்சையேற்பதற்குரிய பாத்திரத்தை யேந்திய திருக் கரத்தையுடையவராய் எழுந்தருளித் திருநீலகண்டநாயனாருடைய மனையில் வந் தருளினார்.—எ-று.

பம்பை என்பது சுருண்டு கீழ்விழாமல் தூருயிருக்கின்ற தலைமயிர். "மூறு வல் வெண்ணிலவுமேம்பட" என்றதனால் முகமலர்ச்சியோடு எழுந்தருளிவந்தன ரெனவறிக. (கஉ)

நண்ணிய தவச்சிவ யோக நாதனைக்
கண்ணுற நோக்கிய காத லன்பர்தாம்
புண்ணியத் தொண்டரா மென்று போற்றிசெய்
தெண்ணிய வகையினு லெதிர்கொண் டேத்தினார்.

(இ-ள்.) அவ்வாறு திருவேடங்கொண்டுவந்தருளிய தவத்தினையுடைய சிவயோகியாகிய சிவபெருமானைத் தம்முடைய கண்களால் நன்றாகத் தரிசித்த பேரன்பினையுடைய திருநீலகண்டநாயனார் இவர் புண்ணியவடிவத்தையுடைய ஓர் சிவனடியவரொன்று கருதித் துதித்து மதிக்கத்தருந்த பலவகை உபசாரங்க ளோடு எதிர்கொண்டு சென்று நமஸ்கரித்தார்.—எ-று.

"எண்ணிய வுவகையால்" என்றும் பாடம். (கங)

பிறைவளர் சடைமுடிப் பிரானைத் தொண்டரொன்
றுறையுளி லணைந்துபே ருவகை கூர்ந்திட
முறைமையின் வழிபட மொழிந்த பூசைக
ணிறைபெரு விருப்பொடு செய்து நின்றபின்.

(இ-ள்.) இளம்பிறைச்சந்திரன் வளருகின்ற சடைமுடியினையுடைய சிவ பெருமானை அவரது அடியவரொன்று நினைத்துத் தமது வீட்டிற் கழைத்துக்கொ ண்டுபோய் மிகுந்த சந்தோஷமுண்டாகச் சிவனடியார்களுக்கு வழிபாடுசெய்யும் பொருட்டுச் சாஸ்திரங்களில் விதித்திருக்கின்ற பூசைகளை அம்முறைமைப்படியே தம்முள்ளத்தில் நிறைந்த பேரன்போடு செய்துநின்றபின்பு.—எ-று.

மொழிந்தபூசைகளாவன திருவடிவிளக்கி மலர்கொண்டுபோற்றல் முதலி யன. இதுமுதல் நான்குபாட்டுங் குளகம். (கச)

எம்பிரா னியான்செயும் பணியெ தென்றனர்
வம்புலா மலர்ச்சடை வள்ளல் தொண்டனார்
உம்பர்நா யகனுமிவ் வோடுன் பால்வைத்து
நம்பிநீ தருகநாம் வேண்டும் போதென்று.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற மலர்மாலையைத் தரித்த சிவபெருமானுக்கு உரிய திருத்தொண்டராகிய திருநீலகண்டநாயனார் (அச்சிவயோகியாகிய கடவு ளைப்பார்த்து) எம்பெருமானே! அடியேன் தேவரீருக்குச் செய்யவேண்டிய குற் றேவல் யாதென்று கேட்டனர். (அப்பொழுது) தேவநாயகராகிய சிவயோகியா ரும் சிறந்த அன்பனே! இந்தத் திருவோட்டை உன்னிடத்தில் வைத்துக்கொ ண்டிருந்து நாம் கேட்கும்பொழுது நீ கொடுப்பாயாக வென்று சொல்லி.—எ-று.

நம்பி என்பது புருஷரிற் சிறந்தோன் என்னும் பொருளதாய் ஈண்டுத் தொண்டராகிய திருநீலகண்டநாயனாரை யுணர்த்தியது. (கரு)

தன்னையொப் பரியது தலத்துத் தன்னுழைத்
துன்னிய யாவையுந் தூய்மை செய்வது
பொன்னினு மணியினும் போற்ற வேண்டுவ
தின்னதன் மையதிது வாங்கு நீயென.

(இ-ள்.) (இந்தப்பிக்ஷாபாத்திரமானது) ஒப்பிடுங்கால் தனக்குத்தானே ஒப்பானது; இந்நிலவுலகத்தில் தன்னிடத்திற்சேர்ந்த அன்னங் கறிமுதலிய எல்லாப்பொருள்களையும் பரிசுத்தஞ்செய்வது; பொன்னைப்பார்க்கிலும் நவமணிகளைப்பார்க்கிலும் சிறந்ததாக வைத்துக் காப்பாற்றத்தக்கது; இப்படிப்பட்ட தன்மையையுடைய இதனை நீ வாங்கிவையென்று கொடுத்தருள.—எ - று. (கசு)

தொல்லைவேட் கோவர்தங் குலத்துட் டோன்றிய
மல்குசீர்த் தொண்டனார் வணங்கி வாங்கிக்கொண்
டொல்லையின் மனையிலோர் மருங்கு காப்புறும்
எல்லையில் வைத்துவந் திறையை யெய்தினார்.

(இ-ள்.) பழைமையாகிய குயவரது குலத்தில் திருவவதாரஞ்செய்தருளிய நிறைந்தகீர்த்தியினையுடைய திருநீலகண்டநாயனார் நமஸ்காரஞ்செய்து அத்திருவோட்டினை வாங்கிக்கொண்டு சீக்கிரமாகத் தம்வீட்டில் ஓர் பக்கத்தில் (அரிய பொருள்களைவைத்துக்) காப்பாற்றத்தக்க ஓரிடத்தில் பத்திரப்படுத்திவந்து சிவபெருமானாகிய சிவயோகியாரையடைந்தார்.—எ-று. (கஎ)

வைத்தபின் மறையவ ராகி வந்தரு
ணித்தனார் நீங்கிட நின்ற தொண்டரும்
உய்த்துடன் போய்விடை கொண்டு மீண்டனர்
அத்தர்தா மம்பல மணைய மேவினார்.

(இ-ள்.) அப்பிக்ஷாபாத்திரத்தைக் காவலான இடத்தில் வைத்துவந்த பின்பு பிராமணத்திருவுருவங்கொண் டெழுந்தருளிவந்த சிவபெருமான் அவ்விடத்தினின்று நீங்க, அங்கு நின்ற திருநீலகண்டநாயனாரும் அவரோடுகூடக் கொஞ்சத்தூரம்வரையில் பின்சென்று பின்பு அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வீட்டிற்குத் திரும்பிவந்தார். சிவயோகியாகவந்த சிவபெருமானும் திருவம்பலத்தை யடைந்தருளினார்.—எ-று.

பெரியோர்கள் தம்முடைய வீட்டிற்குவந்து மீண்டு செல்லுங்கால் அவருடன் பின்றொடர்ந்து சென்று, பின் அவரனுமதிபெற்று மீளுதல் சான்றோரொழுக்கமாதலால், இவரும் அவ்வாறே சென்று பின்விடைபெற்று மீண்டுவந்தனரெனவறிக. (கஅ)

வேறு.

சாலநாள் கழிந்த பின்பு தலைவனார் தாமுன் வைத்த
கோலமா ரோடு தன்னைக் குறியிடத் தகலப் போக்கிச்
சீலமார் கொள்கை யென்றுந் திருந்துவேட் கோவர் தம்பால்
வாலிதா நிலைமை காட்ட முன்புபோன் மனையில் வந்தார்.

(இ-ள்.) அவ்வோட்டைக்கொடுத்துப் பலநாள்கள் கழிந்தபிறகுமுதல்வ ராகிய சிவபெருமான் தாம் முன்பு அவரிடத்தில் கொடுத்துவைத்த அழகுபொருந்திய திருவோட்டை அதை வைத்திருந்த இடத்தினின்றும் வேறிடத்திற் போகும்படி மறைத்து எப்பொழுதும் சிறப்புப்பொருந்திய நற்குணங்களால் திருந்திய திருநீலகண்டநாயனரிடத்திலுள்ள பரிசுத்தமாகிய பத்திநிலைமையைப் பிறருக்குக் காட்டும்பொருட்டு முன்புபோலத் திருவுருவங்கொண்டு அவரது மனைக்குவந்தருளினர்.—எ-று. (௧௯)

வந்தபின் தொண்ட ஞரு மெதிர்வழி பாடு செய்து
சிந்தைசெய் தருளிற் றெங்கள் செய்தவ மென்று நிற்ப
முந்தைநா ளுன்பால் வைத்த மொய்யொளி விளங்கு மோடு
தந்துநில் லென்ற ுனெல்லாந் தான்வைத்து வாங்க வல்லான்.

(இ-ள்.) அவ்விதமாகச் சிவபெருமான் தமது மனைக்கு எழுந்தருளிவந்த பின்பு திருநீலகண்டநாயனரும் எதிராகச்சென்று வந்தனமுதலிய வுபசாரங்களைச்செய்து, தேவரீர் திருவுள்ளங்கொண்டு இவ்விடத்திற்கு எழுந்தருளியது நாங்கள் பூர்வத்தில்செய்த தவப்பயனென்று சொல்லிநிற்க, (அப்பொழுது) எல்லாப் பொருளையும் வைக்கவும் வாங்கவும் வல்லவராகிய சிவபெருமான் (அத்திருநீலகண்டநாயனரைப்பார்த்து அன்பனே!) முன்னளில் உன்னிடத்தில் யான்வைத்த மிகுந்த ஒளிவிளங்குகின்ற திருவோட்டை என்னிடத்திற்கொடுத்து அதன்பின்பு நின்று பேசுவாயாகவென்றார்.—எ-று.

வைத்துவாங்குதல் = சர்வலோகங்களையும் ஆக்கவும் அழிக்கவுஞ்செய்தல். "விச்சதன்றியே விளைவுசெய்குவாய் விண்ணுமண்ணக முழுதும்யாவையும்-வைச்சுவாங்குவாய்" என்றார் ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகளும். (௨௦)

என்றவர் விளைந்து கூற விருந்தவ ரேந்த வோடு
சென்றுமுன் கொணர்வான் புக்கார் கண்டிலர் திகைத்து நோக்கி
நின்றவர் தம்மைக் கேட்டார் நேடியுங் காணர் மாயை
யொன்றுமங் கறிந்தி லாதா ருரைப்பதொன் றின்றி நின்றார்.

(இ-ள்.) என்று இவ்விதமாக அச்சிவயோகியாகிய கடவுள் துரிதமாகச் சொல்ல அவர் கொடுத்த அத்திருவோட்டை அது வைத்திருந்த இடத்திற்குப் போய்க் கொண்டுவரும்படி சென்ற திருநீலகண்டநாயனர் அதனைக் காணமல் பார்த்துத்திகைத்து அங்கு நின்ற தமது மனைவியாரைக் கேட்டும் பிறவிடங்களில் தேடியுங் காணதவராய்ச் சிவபெருமானல் செய்யப்பட்ட மாயையைச் சிறிதும் அறியாதவராய் தாம் அச்சிவயோகியாருக்கு உத்தரஞ்சொல்வதற்கு ஒன்றுந் தோன்றமல் நின்றுகொண்டிருந்தார்.—எ-று. (௨௧)

மறையவ ஞகி நின்ற மலைமகள் கேள்வன் ருனும்
உறையுளிற் புக்கு நின்ற வொருபெருந் தொண்டர் கேட்ப
இறையிலிங் கெய்தப் புக்காய் தாழ்த்ததென் னென்ன வந்து
கறைமறை மிடற்றினனைக் கைதொழு துரைக்க லுற்றார்.

(இ-ள்.) பிராமணத்திருவுருவங்கொண்டு எழுந்தருளிநிற்கின்ற பார்வதி நாயகராகிய சிவபெருமானும் வீட்டில் நுழைந்து வருவதற்குத் தாமதப்பட்டு நிற்கும் ஒப்பற்ற பெருந்தொண்டராகிய திருநீலகண்டநாயனார் கேட்கும்படியாக நொடிப்பொழுதில் இவ்விடத்தில் வருகின்றேனென்று புகுந்த நீ நெடுநேரம் காலதாமதப்பட்டு ஏன் நிற்கின்றாயென்றுசொல்ல, திருநீலகண்டநாயனார் விஷத்தை மறைத்துவைத்த கண்டத்தை யுடையவராகிய சிவபெருமானிடத்திற்கு வந்து தமது கைகளால் தொழுது சொல்லத்தொடங்கினார்.—எ-று. (உ௨)

இழையணி முந்நூன் மார்பி னெந்தைநீர் தந்து போன
விழைதரு மோடு வைத்த வேறிடந் தேடிக் காணேன்
பழையமற் றதனி னல்ல பாத்திரந் தருவன் கொண்டிப்
பிழையினைப் பொறுக்க வேண்டும் பெருமவென் றிறைஞ்சி நின்றார்.

(இ-ள்.) இழையாக விளங்குகின்ற அழகிய முப்புரிநூலினையணிந்த திருமார்பினையுடைய எமது தலைவரே! தேவரீர் அடியேனிடத்திற்கொடுத்துவைத்துச்சென்ற விரும்பத்தக்கதாகிய அந்தப் பாத்திரம் வைத்த இடத்திலும் வேறிடங்களிலும் தேடி அதைக்கண்டிலேன், தேவரீரது அப்பழையபாத்திரத்தைப்பார்க்கிலும் புதிதான நல்ல பாத்திரந் தருகின்றேன், அதனைத் திருவுள்ளங்கொண்டு ஏற்று (அடியேனுடைய அசாக்கிரதையினால் நேரிட்ட) இப்பிழையினை மன்னித்தருளவேண்டும் பெருமானே! என்று வணங்கி விண்ணப்பஞ்செய்துநின்றார் திருநீலகண்டநாயனார்.—எ-று.

வேறிடம் என்பதற்குப் பொது இடத்திற்கு வேறாய்க் காவலாகவுள்ள இடம் என்று கூறினும் பொருந்தும். செய்து நாள்பட்டமையாலும், கையாளுதலாலும் பழைமையடைந்துள்ள பாத்திரத்திற்குப் பதிலாகப் புதியபாத்திரம் வாங்குதல் சிறந்ததென்பதும், அவ்வாறு புதியபாத்திரங் கொடுப்பினும் பெரியோர் கொடுத்துவைத்த பாத்திரத்தைப் போக்கடித்ததனாலுண்டாகும் பிழை மிகப் பெரிதாதலின் அதனை மன்னித்தருளவேண்டுமென்பதுந் தோன்ற "பழையமற்றதனினல்ல பாத்திரந் தருவன் கொண்டிப்-பிழையினைப் பொறுக்கவேண்டும்" என்று கூறினார். (உ௩)

சென்னியால் வணங்கிச் சொன்ன தொண்டரைச் செயிர்த்து நோக்கி
யென்னிது மொழிந்த வாநீ யான்வைத்த மண்ணோ டன்றிப்
பொன்னினா லமைத்துத் தந்தா யாயினுங் கொள்ளேன் போற்ற
முன்னைநான் வைத்த வோடே கொண்டுவா வென்றான் முன்னோன்.

(இ-ள்.) தலையினால் வணங்கித் தாம் செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்ட திருநீலகண்டநாயனாரை முதல்வராகிய கடவுள் கோபித்துப்பார்த்து என்னகாரணத்திற்காக இவ்வாறு நீ சொன்னது; யான் உன்னிடத்தில்வைத்த மண்பாத்திரமேயல்லாமல் பொன்னினாற்செய்து ஒன்றைக் கொடுத்தாயானாலும் யான் அதனை வாங்கமாட்டேன்; இனி யான் காப்பாற்றும்பொருட்டு முன்பு உன்னிடத்தில் வைத்துப்போன அத்திருவோட்டையே கொண்டுவருவாயாகவென்றார்.—எ-று. (உ௪)

கேடிலாப் பெரியோ யென்பால் வைத்தது கெடுத லாலே
நாடியுங் காணேன் வேறு நல்லதோ ரோடு சால
நீடுசெல் வதுதா னொன்று தருகின்றே னெனவுங் கொள்ளா
தூடிநின் றுரைத்த தென்ற னுணர்வெலா மொழித்த தென்ன.

(இ-ள்.) ஓர் குறைவுமில்லாத பெரியவரே! தேவரீர் என்னிடத்தில்வைத்த திருவோடு கெட்டுப்போனபடியினால் அதனை எவ்விடத்துந் தேடியுங் காணவில்லை. (ஆகையால்) அதற்கு வேறாகிய ஓர் நல்லபாத்திரம் மிகவும் நெடுங்காலம் கெடாமல் நீடித்திருக்கத்தக்கதாகிய ஒன்றைத் தருகின்றேனென்று சொன்னாலும் அதனை அங்கீகரியாமல் தேவரீர் கோபங்கொண்டு அதுவே வேண்டுமென்று கூறியது என்னுடைய அறிவுமுழுமையும் கெடுத்துவிட்டதென்று சொல்ல.

ஆவதெ னின்பால் வைத்த வடைக்கலப் பொருளை வௌவிப்
பாவகம் பலவுஞ் செய்து பழிக்குநீ யொன்று நாணா
யாவருங் காண வுன்னை வளைத்துநான் கொண்டே யன்றிப்
போவதுஞ் செய்யே னென்றான் புண்ணியப் பொருளாய் நின்றான்.

(இ-ள்.) இனி உன்னாலாகவேண்டியதென்ன? உன்னிடத்தில் அடைக்கலமாகவைத்த பொருளை அபகரித்துக்கொண்டு (அதை இல்லையென்று சாதிப்பதற்காகப்) பல வஞ்சகநடிப்புக்காட்டிப் பழியானகாரியஞ் செய்வதற்கு நீ சிறிதும் அஞ்சாதவனாக இருக்கின்றாய் (ஆதலால்) இவ்வூரிலுள்ள யாவரும் அறியும்படியாக உன்னைத் தப்பிப்போகவொட்டாமல் பிடித்துக்கொண்டு அத்திருவோட்டை உன்னிடத்தில் நின்றும் நான் வாங்கிக்கொள்ளாமல் போகவேமாட்டேன் என்று சொல்லியருளினார் புண்ணியத்தின் பயனாயுள்ள சிவபெருமான்.—எ-று.

பழியாவது:—ஓர் சிவயோகியார் கொடுத்துவைத்த பாத்திரத்தை அபகரித்தாரென்று பலரும் இகழ்ந்துகூற நிற்றல். (உ௬)

வளத்தினான் மிக்க வோடு வௌவினே னல்லே னல்லை
யுளத்தினுங் களவி லாமைக் கென்செய்கே னுரையு மென்னக்
களத்துநஞ் சொளித்து நின்றான் காதலுன் மகனைப் பற்றிக்
குளத்தினின் மூழ்கிப் போவென் றருளினான் கொடுமை யில்லான்.

(இ-ள்.) தூய்மைமுதலிய வளப்பத்தினால் சிறந்த அந்தப்பாத்திரத்தை அடியேன் கவர்ந்துகொண்டவனல்லன்; எனது மனத்தினும் கொஞ்சமும் கள்ளமில்லாமையைத் தெரிவிப்பதற்கு யான் என்னசெய்வேன் சொல்லுமென்று கேட்க, கண்டத்தில் விஷத்தைமறைத்துவைத்தருளிய சிவபெருமானாகிய நன்மைபொருந்திய சிவயோகியானவர் (ஆனால்) விருப்பத்தையுடைய உனது புத்திரனைப் பிடித்துக்கொண்டு குளத்தினில்முழுகி நான் அபகரிக்கவில்லை என்று சத்தியஞ்செய்துவிட்டுப் போவென்று அருளிச்செய்தார்.—எ-று.

திருநீலகண்டநாயனாரது அன்பின் தன்மையை உலகத்தில் பிரகாசப்படுத்தற்பொருட்டு எழுந்தருளிவந்த கருணாநிதியாதலின், சிவபெருமானைக் "கொடுமையில்லான்" என்றார். (உ௭)

அய்யர்நீ ரருளிச் செய்த வண்ணமியான் செய்வ தற்குப்
பொய்யில்சீர்ப் புதல்வ னில்லை யென்செய்கேன் புகலு மென்ன
மையறு சிறப்பின் மிக்க மனையவ டன்னைப் பற்றி
மொய்யலர் வாவிப் புக்கு மூழ்குவா யெனமொ ழிந்தார்.

(இ-ள்.) சுவாமீ! தேவரீர் அருளிச்செய்தபிரகாரம் அடியேன் சத்தியஞ் செய்து கொடுப்பதற்கு உண்மையாகிய சிறப்பினையுடைய புத்திரனில்லை ஆகையால் யான் அதற்கு என்னசெய்வேன் அருளிச்செய்யுமென்று கேட்க; (ஆனால்) குற்றமற்ற சிறப்பினையுடைய உனது மனைவியின் கையைப் பிடித்துக்கொண்டு நெருங்கிய மலர்களையுடைய தடாகத்தில் புகுந்து முழுகி இல்லையென்று சொல்லென்றார்.—எ-று. (உஅ)

வேறு.

கங்கைநதி கரந்தசடை கரந்தருளி யெதிர்நின்ற
வெங்கண்விடை யவரருள வேட்கோவ ருரைசெய்வார்
எங்களிலோர் சபதத்தா லுடன்மூழ்க விசைவில்லை
பொங்குபுன லியான்மூழ்கித் தருகின்றேன் போதுமென.

(இ-ள்.) கங்காநதியானது மறைந்திருக்குஞ் சடையினை மறைத்தருளிச் சிவயோகியாராகத் திருவுருவங்கொண்டு எதிராகநிற்கின்ற கோபக்கண்ணையுடைய ரிஷபத்தை வாகனமாகக்கொண்டருளிய சிவபெருமான் இவ்வாறு அருளிச்செய்ய, திருநீலகண்டநாயனார் அதற்கு உத்தரஞ்சொல்லுவார்; யானும் என்மனைவியுமாகிய எங்கள் இருவரிடத்திலும் உண்டாயிருக்கின்ற ஓர் சபதத்தினால் என்மனைவியோடு குளத்தில்முழுகிச் சொல்வதற்கு இஷ்டமில்லை; மிகுந்தநீரில் நானே முழுகி சத்தியஞ்செய்கின்றேன் வாருமென்றுசொல்ல.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உகூ)

தந்ததுமுன் றாராதே கொள்ளாமைக் குன்மனைவி
யந்தளிர்ச்செங் கைப்பற்றி யலைபுனலின் மூழ்காதே
சிந்தைவலித் திருக்கின்றாய் தில்லைவா ழந்தணர்கள்
வந்திருந்த பேரவையின் மன்னுவனியா னெனச்சென்றார்.

(இ-ள்.) (அப்பொழுது சிவபெருமான் திருநீலகண்டநாயனாரைப் பார்த்து) நான் முன்பு உன்னிடத்திற்கொடுத்த பாத்திரத்தை நீ கொடுக்காமலும், அதை அபகரித்துக்கொள்ளவில்லை யென்பதற்கு உன் மனைவியின் அழகிய தளிர்போன்ற சிவந்தகையைப் பிடித்துக்கொண்டு அலைகளைவீசுகின்ற நீரில்முழுகிச் சத்தியஞ்செய்யாமலும் மனத்தை உறுதிசெய்துகொண் டிருக்கின்றாய். தில்லையில் வாழ்கின்ற வேதியர்கள்வந்து கூடியிருக்கின்ற பெரியசபையில் இந்தவிவகாரத்தைக்குறித்துப் பேசப்போகின்றேனென்று சொல்லிப்போனார்.—எ-று. (௩0)

நல்லொழுக்கந் தலைநின்றார் நான்மறையின் றுறைபோனார்
தில்லைவா ழந்தணர்கள் வந்திருந்த திருந்தவையின்
எல்லையிலான் முன்செல்ல விருந்தொண்ட ரவர்தாமு
மல்குபெருங் காதலினால் வழக்குமே லிட்டணைந்தார்.

(இ-ள்.) நல்லொழுக்கத்தில் முதன்மையாக நின்றவர்களும், நான்குவேதங்களாகிய கடலின்கரையைக் கண்டவர்களுமாகிய தில்லைமூவாயிரவரொன்னும் வேதியர்கள்வந்து கூடியிருந்த குற்றமற்ற சபையில் அளவில்லாத குணக்கடலாகிய சிவபெருமான் முன்னே எழுந்தருள, பெருமைபொருந்திய திருநீலகண்டநாயனாரும் நிறைந்த பேரன்போடு சுவாமியினாற்சொல்லப்பட்ட வழக்கினைமேற்கொண்டு போயினார்.—எ-று. (கக)

அந்தணனா மெந்தைபிரா னருமறையோர் முன்பகர்வான்
இந்தவேட் கோவன்பால் யான்வைத்த பாத்திரத்தைத்
தந்தொழியான் கெடுத்தானேற் றன்மனைவி கைப்பற்றி
வந்துமூழ் கியுந்தாரான் வலிசெய்கின் றானென்றார்.

(இ-ள்.) பிராமணத் திருவுருவங்கொண்டு எழுந்தருளிய எமது பெருமானாகிய கடவுள் அரிய வேதங்களையுணர்ந்த தில்லைமூவாயிரவர்களுக்கு முன்னே சொல்லுவார். இந்தத் திருநீலகண்டநாயனாரிடத்தில் யான் கொடுத்துவைத்திருந்த பிக்ஷாபாத்திரத்தை நான் கேட்டபொழுது எனக்குக்கொடுக்காமலிருக்கின்றான்; (அதனைவைத்த இடத்தினின்றும்) இழந்துவிட்டானானால், தன்பெண்சாதியின் கையைப் பிடித்துக்கொண்டு குளத்திற்குவந்து அதில் முழுகிச் சத்தியமுஞ்செய்யான்; மனதை உறுதிப்படுத்தி யிருக்கின்றானென்று சொன்னார்.—எ-று. (கஉ)

நறைகமழுஞ் சடைமுடியு நாற்றோளு முக்கண்ணுங்
கறைமருவுந் திருமிடறுங் கரந்தருளி யெழுந்தருளு
மறையவனித் திறமொழிய மாமறையோ ருரைசெய்வார்
நிறையுடைய வேட்கோவர் நீர்மொழியும் புகுந்ததென.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற சடைமுடியையும், நான்குதிருத்தோள்களையும் மூன்றுகண்களையும், விஷம்பொருந்திய அழகிய கண்டத்தையும் மறைத்துக்கொண்டு எழுந்தருளிவந்த சிவபெருமானாகிய பிராமணர் இவ்வார்த்தைகளைச்சொல்ல, சிறந்ததில்லை மூவாயிரவர்கள் சொல்வார்கள், மாட்சிமைபொருந்திய திருநீலகண்டரோ! நடந்த விருத்தாந்தத்தை நீர் சொல்லுமென்றுகேட்க.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கா)

நீணிதியா மிதுவென்று நின்றவிவர் தருமோடு
பேணிநான் வைத்தவிடம் பெயர்ந்துகரந் ததுகாணேன்
பூணணிநூன் மணிமார்பீர் புகுந்தபரி சிதுவென்று
சேணிடையுந் தீங்கடையாத் திருத்தொண்ட ருரைசெய்தார்.

(இ-ள்.) இது உயர்ந்தநிதிக் கொப்பானதென்று சொல்லி நிற்கின்ற இப்பெரியவரால் முன்புகொடுக்கப்பட்ட பாத்திரமானது நான் விரும்பிப் பாதுகாப்பாக வைத்தஇடத்தில் நின்றும் நீங்கி மறைந்துபோய்விட்டது. (அதனால்) நான் அதைத்தேடிப்பார்த்துங் கண்டிலேன். ஆபரணமாக அணிந்த உபவீதம்பொருந்திய அழகிய மார்பினையுடைய மறையவர்களே! நடந்தவர்த்தமானம் இதுதானென்று சொன்னார் தீங்கென்பது நெடுந்தூரத்தும் தம்மை யணுகப்பெறாதவராகிய திருநீலகண்டநாயனார்.—எ-று. (கச)

வேறு.

திருவுடை யந்த ணாளர் செப்புவார் திகழ்ந்த நீற்றின்
உருவுடை யிவர்தாம் வைத்த வோட்டினைக் கெடுத்தீ ராகிற்
றருமிவர் குளத்தின் மூழ்கித் தருகவென் றுரைத்தா ராகின்
மருவிய மனைவி யோடு மூழ்குதல் வழக்கே யென்றார்.

(இ-ள்.) சிவஞானச் செல்வம்பொருந்திய தில்லைமூவாயிரவர்கள் நிச்சயம் சொல்பவர்களாய் விபூதியினால் விளங்குகின்ற திருவுருவத்தையுடைய இந்தச்சிவ யோகியார்கொடுத்த பாத்திரத்தைவைத்த இடத்தினின்றும் இழந்தீரானால் அதனை உம்மிடத்திற்கொடுத்த இவர் குளத்தில்மூழ்கிச் சத்தியஞ்செய்துகொடும் என்று சொன்னால் இல்வாழ்க்கைக்குப் பொருந்திய உமது மனைவியோடும் மூழ்கிச் சொல்லுதல் நியாயந்தானே என்று சொன்னார்கள்.—எ-று. (கூரு)

அரும்பெருந் தொண்டர் தாமு மந்தணர் மொழியக் கேட்டுத்
திருந்திய மனைவி யாரைத் தீண்டாமை செப்ப மாட்டார்
பொருந்திய வகையான் மூழ்கித் தருகின்றேன் போது மென்று
பெருந்தவ முனிவ ரோடும் பெயர்ந்துதம் மனையைச் சார்ந்தார்.

(இ-ள்.) அருமையாகிய தவத்தினையுடைய திருநீலகண்டநாயனாரும் தில்லைவாழந்தணர்கள் இவ்வாறு சொல்லக்கேட்டு இல்லறத்தில் வழுவாதிருக்கின்ற தமது மனைவியாரைத் தீண்டாமலிருக்குங் காரணத்தை அவ்விடத்து ஒன்றுஞ் சொல்லாதவராய்த் தகுந்தபடி குளத்தில்முழுகிச் சத்தியஞ்செய்கின்றேன் என்னுடன் வருவீராகவென்று பெரியதவத்தையுடைய சிவயோகியாரோடும் அவ்விடத்தைவிட்டு நீங்கித் தமது வீட்டிற்குவந்தார்.—எ-று. (கூசு)

மனைவியார் தம்மைக் கொண்டு மறைச்சிவ யோகி யார்முன்
சினவிடைப் பாகர் மேவுந் திருப்புலீச் சரத்து முன்னர்
நனைமலர்ச் சோலை வாவி நண்ணித்தம் முண்மை காப்பார்
புனைமணி வேணுத் தண்டி னிருதலை பிடித்துப் புக்கார்.

(இ-ள்.) தமது மனைவியாரை அழைத்துக்கொண்டு வேதங்களையுணர்ந்த சிவயோகியாருக்கு முன்னே கோபத்தையுடைய ரிஷபத்தை வாகனமாகக்கொண்டருளிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருப்புலீச்சரமென்னும் ஆலயத்தின் முன்னுள்ள அரும்புகளும் மலர்களும்பொருந்திய சோலைசூழ்ந்த தடாகத்தின்சமீபத்தில்வந்து தாம் மனைவியாரைத் தீண்டாமலிருக்கின்ற உண்மைதவறாமலிருக்கும்படி பல பேரழகினையுடைய மூங்கில்தண்டினை இருபுறத்திலும் தாமும் தமது மனைவியுமாகப் பிடித்துக்கொண்டு தடாகத்தைச் சேர்ந்தார்கள்.—எ-று.

தண்டிரு தலையும் பற்றிப் புகுமவர் தம்மை நோக்கி
வெண்டிரு நீற்று முண்ட வேதியர் மாதைத் தீண்டிக்
கொண்டுடன் மூழ்கீ ரென்னக் கூடாமை பாரோர் கேட்கப்
பண்டுதஞ் செய்கை சொல்லி மூழ்கினார் பழுதி லாதார்.

(இ-ள்.) (ஒருவரையொருவர் தீண்டாமல்) மூங்கிற்றண்டின் இருபுறத்தையும் பிடித்துக்கொண்டு குளத்தில் முழுகப்போகின்ற அத்திருநீலகண்டநாயனாரை

வெண்மையாகிய விபூதிப்புண்டரத்தையுடைய சிவயோகியார்பார்த்து உம்முடைய மனைவியின் கையைப்பிடித்துக்கொண்டு கூட முழுகுமென்று சொல்ல, தாம் அப்படி மனைவியாரின் கையைப்பிடித்துக்கொண்டு முழுகக்கூடாமையாயிருப்பதை உலகத்தார் கேட்கும்படி முன்னுளில்நடந்த தம்முடைய சபதத்தை எடுத்துச்சொல்லித் தடாகத்தில் முழுகினுர் ஓர் குற்றமில்லாத திருநீலகண்டநாயனுர்.—எ-று. (௩அ)

வாவியின் மூழ்கி யேறுங் கணவரு மனைவி யாரு
மேவிய மூப்பு நீங்கி விருப்புறு மிளமை பெற்றுத்
தேவரு முனிவர் தாமுஞ் சிறப்பொடு பொழியுந் தெய்வப்
பூவின்மா மழையின் மீள மூழ்குவார் போன்று தோன்ற.

(இ-ள்.) தடாகத்தில்முழுகிக் கரையேறுகின்ற திருநீலகண்டநாயனுரும் அவருடைய மனைவியாரும் தாமடைந்திருந்த கிழப்பருவம்நீங்கி யாவரும்விரும்பத்தகுந்த இளமைப்பருவத்தையடைந்து தேவர்களும் முனிவர்களும் சிறப்பாகப் பொழிகின்ற தெய்வத்தன்மைபொருந்திய கற்பக மலர்மாரியால் பின்னும் மூழ்குகின்றவர்களைப்போலப் பொலிவடைந்துதோன்ற.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௯)

அந்நிலை யவரைக் காணு மதிசயங் கண்டா ரெல்லா
முன்னிலை நின்ற வேத முதல்வரைக் கண்டா ரில்லை
இந்நிலை யிருந்த வண்ண மென்னென மருண்டு நின்ருர்
துன்னிய விசும்பி னூடு துணையுடன் விடைமேற் கண்டார்.

(இ-ள்.) தடாகத்தில்முழுகி இளமைப்பருவமடைந்த அவ்விருவரையும் (முன்னிருந்த முதுமைநிலைக்கு வேருகவுள்ள நிலைமையாகப்) பார்த்தவர்கள் யாவரும் தங்களுக்குமுன்னே நின்றுகொண்டிருந்த வேதகாரணமாகிய சிவபெருமானைக் காணுதவர்களாய், இப்படி உண்டாவதற்குக் காரணம் என்னவென்று மயங்கிநின்ருர்கள் பொருந்திய ஆகாயத்தில் ரிஷபவாகனத்தின்மேல் உமாதேவியாரோடு சிவபெருமான் எழுந்தருளக்கண்டார்கள்.—எ-று. (௪0)

கண்டனர் கைக ளாரத் தொழுதனர் கலந்த காதல்
அண்டரு மேத்தி னுர்க ளன்பர்தம் பெருமை நோக்கி
விண்டரும் பொலிவு காட்டி விடையின்மேல் வருவார் தம்மைத்
தொண்டரு மனைவி யாருந் தொழுதுடன் போற்றி நின்ருர்.

(இ-ள்.) அவ்வாறு சிவபெருமான் ஆகாயத்தில் ரிஷபாரூடராய் எழுந்தருளியதைத் தரிசித்தவர்கள் யாவரும் தங்கள்கைகளால்பொருந்த வணங்கினுர்கள். அவ்வடியாருடைய நிறைந்த அன்பினையும் பெருமையினையும்பார்த்துத் தேவர்களும் துதித்தார்கள். ஆகாயத்தில் காணப்படுகின்ற திருக்கோலப் பொலிவைக்காட்டி ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளிய சிவபெருமானைத் திருநீலகண்டநாயனுரும் அவர் மனைவியாரும் உடனே வணங்கித் தோத்திரஞ்செய்து நின்ருர்கள்.

மன்றுளே திருக்கூத் தாடி யடியவர் மனைக டோறுஞ்
சென்றவர் நிலைமை காட்டுந் தேவர்க டேவர் தாமும்
வென்றவைம் புலனுன் மிக்கீர் விருப்புட னிருக்க நம்பால்
என்றுமிவ் விளமை நீங்கா தென்றெழுந் தருளி னுரே.

(இ-ள்.) கனகசபையினிடத்தே ஆனந்தத்தாண்டவஞ்செய்து அடியார்களுடைய வீடுகள்தோறும் எழுந்தருளி அவர்கள் அன்பின்நிலைமையை யாவரும் அறியும்படிகாட்டி யருளுகின்ற தேவர்கள் தேவராகிய சிவபெருமானும் ஐம்புலன்களையும் வென்றதனால் சிறந்த அன்பர்களே ! நம்மிடத்தில் அன்போடும் நீங்கள் இருவரும் எக்காலத்திலும் இந்த இளமைப்பருவம் நீங்காமல் இருக்கக்கடவீர்களென்று அருளிச்செய்து மறைந்தருளினார்.—எ-று.

ஐம்புலன்களையும் வெல்லுதலாவது:—அப்புலன்களின்வழியே மனதைச் செலுத்தாது தடுத்தல். (சஉ)

விறலுடைத்தொண்டனாரும் வெண்ணகைச்செவ்வாய்மென்றோள்
அறலியற் கூந்த லாளா மனைவியு மருளி னார்ந்த
திறலுடைச் செய்கை செய்து சிவலோக மதனை யெய்திப்
பெறலரு மிளமை பெற்றுப் பேரின்ப முற்றா ரன்றே.

(இ-ள்.) அன்பின் வல்லமையையுடைய திருநீலகண்டநாயனாரும் வெண்மைபொருந்திய நகையையும் சிவந்தவாயையும், மெல்லிய தோள்களையும், கருமணல்போன்ற கூந்தலையுமுடையவராகிய அவரது மனைவியாரும் சிவபெருமானது திருவருளினால் செய்தற்கரிய மிகுந்த உறுதியாகிய செய்கையைச்செய்து அதனால் சிவலோகத்தையடைந்து யாவரும் பெறுதற்கரிய இளமைப்பருவத்தைப் பெற்றுப் பேரின்ப மடைந்தார்கள்.—எ-று. (சங)

அயலறி யாத வண்ண மண்ணலா ராணை யுய்த்த
மயலில்சீர்த் தொண்ட னாரை யானறி வகையில் வாழ்த்திப்
புயல்வளர் மாட நீடும் பூம்புகார் வணிகர் பொய்யில்
செயலியற் பகையார் செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன்.

(இ-ள்.) அயலில் உள்ளவர்கள் யாவரும் அறியாதிருக்கும்படி சிவபெருமானது திருநீலகண்டத்தின் விஷயமாக இடப்பட்ட திருவாணையைத்தவறாமல் பாதுகாத்த மயக்கமற்ற சிறப்பினையுடைய திருநீலகண்டநாயனாரை யானறிந்தவளவில் வாழ்த்துதல்செய்து, மேகங்கள் தவழுகின்ற மாளிகைகள் நிறைந்திருக்கின்ற அழகிய காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர்குலத்தில் அவதரித்திருந்த குற்றமற்ற சிவநேசத்தையுடைய இயற்பகைநாயனார்செய்த திருத்தொண்டின் இயல்பைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (சச)

திருநீலகண்டநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் சOங.

௮

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# இயற்பகைநாயனார்புராணம்.

சென்னி வெண்குடை நீடந பாயன் றிருக்கு லம்புகழ் பெருக்கிய சிறப்பின், மன்னு தொல்புகழ் மருதநீர் நாட்டு வயல்வ ளந்தர வியல்பி னளித்துப், பொன்னி நன்னதி மிக்கநீர் பாய்ந்து புணரி தன்னையும் புனிதமாக் குவதோர், நன்னெ டும்பெருந் தீர்த்தமுன் னுடைய நலஞ் சிறந்தது வளம்புகார் நகரம்.

(இ-ள்.) வெண்கொற்றக் குடையினையுடைய அநபாயச்சோழமகாராஜாவினது சிறந்தகுலத்தரசர்கள் தங்கள் கீர்த்தியை விளங்கச்செய்வதற்குக் காரணமாகிய சிறப்பினால் நிலைபெற்ற பழமையாகிய புகழினையுடைய மருதநிலஞ்சூழ்ந்த சோழநாட்டிலுள்ள வயல்கள் நல்ல விளைவைத்தரும்பொருட்டுக் காவிரிநதியானது காலந்தவறாமல் இயல்பாக நீரைக்கொடுத்து மிகுந்த நீரானதுபோய்ப் பாய்ந்து சமுத்திரத்தையும் புனிதமாகச்செய்கின்ற நல்ல பெரிய காவிரிசங்கமம் ன்மையால் சிறப்படைந்துள் -எ-று. (க)

பில் செல்வத்து வளமையி

னமைந்தார், வெண்பிறைச் சடையவ ரடிமைத் திறத்தின் மிக்கவர் மறைச்சிலம் படியார், மிக்க சீரடி யார்கள்யா ரேனும் வேண்டும் யாவையு மில்லையென் னாதே,இக்க டற்படி நிகழமுன் கொடுக்கு மியல்பி னின்றவ ருலகியற் பகையார்.

(இ-ள்.) அந்த உயர்வுபொருந்திய காவிரிப்பூம்பட்டினத்தில் குடியாகவுள்ள முதன்மைபொருந்திய வணிகர், அளவில்லாத செல்வத்தாலாகிய வளப்பத்தில் சிறந்தவர், வெண்மையாகிய பிறைச்சந்திரனையணிந்த சிவந்த சடையினையுடைய சிவபெருமானுக்குரிய அடிமைத்திறஞ் செய்வதில் மேம்பட்டவர், வேதமாகிய சிலம்பையணிந்ததிருவடிகளையுடைய சிவபெருமானது அடியவர்கள் எக்குலத்தினராயிருப்பினும் அவர்கள் விரும்பியபொருள்கள் எல்லாவற்றையும் இல்லையென்று சொல்லாமல் சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்தில் புகழ்விளங்கும்படி கொடுக்கின்ற தருமச்செய்கையில் முதன்மையாக நின்றவர், (அவர் திருப்பெயர் யாதென்றால்) உலகத்தார் புகழ்கின்ற இயற்பகையார் என்று சொல்லப்பட்டவர்.

ஆறு சூடிய வையர்மெய் யடிமை யளவி லாததோ ருளநிறை யருளா, னீறு சேர்திரு மேனியர் மனத்து நினைத்த யாவையும் வினைப்பட முடித்து, மாறி லாதநன் னெறியினில் விளங்கு மனைய றம்புரி மகிழ்ச்சி



இயற்பகைநாயனார்.

யின் வந்த, பேறெ லாமவ ரேவின செய்யும் பெருமை யேயெனப் பேணி வாழ் நாளில்.

(இ-ள்.) கங்காநதியைத் தரித்த சிவபெருமானுக்குச் செய்யும் மெய்மையாகிய அடிமைத்திறத்தை ஒப்பில்லாததாகத் தமது உள்ளத்தில் நினைத்திருப்பதனால் விபூதியினையணிந்த திருமேனியையுடைய அடியார்கள் திருவுள்ளத்தில் நினைத்தவைகளையெல்லாம் அவர்கள் எண்ணம் முற்றுப்பெறும்படியாகத் திருப்தி செய்து, மாறுபாடில்லாத நல்லவழியில் நிலைபெற்று விளங்குகின்ற இல்லறதருமத்தை நடத்துகின்ற சந்தோஷத்தினால் உண்டாகியகீர்த்திமுதலிய பேறுகளெல்லாம் அவ்வடியார்கள் ஏவியபணிவிடைகளைச் செய்கின்ற பெருமையினாலேயே வந்தனவென்று அதனை விரும்பி வாழ்கின்ற காலத்தில்.—எ-று. (ந)

ஆயு நுண்பொரு ளாகியும் வெளியே யம்ப லத்துநின் றாடுவா ரும்பர், நாய கிக்குமஃ தறியவோ பிரியா நங்கை தானறி யாமையோ வறியோந், தூய நீறுபொன் மேனியில் விளங்கத் தூர்த்த வேடமுந் தோன்றவே தியராய், மாயை வண்ணமே கொண்டுதந் தொண்டர் மறாத வண்ணமுங் காட்டுவான் வந்தார்.

(இ-ள்.) அறிஞர்கள் ஆராயத்தக்க நுட்பமாகிய பொருளாயிருந்தும், யாவருங்காணத் திருவம்பலத்தில் வெளிப்பட்டு நின்று ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற சிவபெருமான், தேவர்களுக்கெல்லாம் முதல்வியாகிய உமாதேவியாருக்குத் தாம் இங்குச் செய்யப்போகின்ற காரியம் அறிந்துதானோ? (அல்லது) எப்பொழுதும் பிரியாமல் தமது வாமபாகத்திற் பொருந்தியிருக்கின்ற அப்பெருமாட்டியார் அறியாமல்தானோ? யாம் அறியோம்; பரிசுத்தம்பொருந்திய திருவெண்ணீறு அழகிய திருமேனியில் பிரகாசிக்க அதனோடு காமுகர்க்குரிய வேடப்பொலிவுந் தோன்றும்படி பிராமணராய், பிறர் தம்மை இன்னாரென்று அறியக்கூடாத மாயையினுடைய ஓர் திருவுருவத்தைக்கொண்டு தமது அடியவராகிய இயற்பகைநாயனார் அடியார்கள் கேட்ட பொருள்களை இல்லையென்று தடைசெய்யாமல் கொடுக்கின்ற இயல்பையும் (அவர் அன்பின் தன்மையையும்) பலர்க்குங் காட்டும்படி வந்தருளினார்.—எ-று.

சிவபெருமான் இயற்பகைநாயனாரது மனைவியாரை விரும்பிக்கேட்கும் விஷயத்தை உமாதேவியாருக்குத் தெரிவித்து யாம் அவரது அன்பின் தன்மை உலகத்தில் பிரசித்தஞ்செய்யச் செல்கின்றோ மாதலால் நீ மனவருத்தங் கொள்ளாதே யென்று கூறிவந்தனரோவென்பார் "உம்பர்நா யகிக்குமஃ தறியவோ" என்றும், உமாதேவியார்காணின் அன்னிய ஸ்திரீயை அபகரிக்கச் செல்கின்றாரென்று கோபங்கொள்வாராதலின் தம்மைவிட்டுப் பிரியாத அவ்வுமாதேவியாரறியாமல் மாயஞ்செய்து வந்தனரோவென்பார் "பிரியாநங்கை தானறியாமையோ" என்றுங்கூறினார். (ச)

வந்து தண்புகார் வணிகர்த மறுகின் மருங்கி யற்பகை யார்மனை புகுத, எந்தை யெம்பிரா னடியவ ரணைந்தா ரென்று நின்றதோ ரின்பவாதரவாற், சிந்தை யன்பொடு சென்றெதிர் வணங்கிச் சிறப்பின் மிக்கவர்ச்

சனேகண்முன் செய்து, முந்தை யெம்பெருந் தவத்தினு லென்கோ முனி வ ரிங்கெழுந் தருளிய தென்றார்.

(இ ள்.) (நீர்வளப்பத்தால்) குளிர்ச்சிபொருந்திய காவிரிப்பூம்பட்டினத் திலுள்ள வணிகர்வீதியில் வந்து இயற்பகைநாயனுருடைய வீட்டிற்கு எழுந்தருள, அதைக்கண்ட நாயனுர் எமது முதல்வராகிய சிவபெருமானது அடியவர் எழுந்தரு ளினுரென்று தம்முடையமனதில்தோன்றிய ஒப்பற்ற இன்பத்தைத்தரத்தக்க பெ ருங் காதலினு லுண்டாகிய அன்புடனே அவர் எதிர்சென்று நமஸ்கரித்து, சிற ப்பினுல் மிகுந்த பாதபூசைமுதலிய வழிபாடுகளைச்செய்து, முற்பிறப்பில் யாங்கள் செய்த ஒப்பற்ற பெருந்தவத்தினுல் என்று சொல்லுவேனே? தவமுனிவரே! தேவரீர் இவ்விடத்து எழுந்தருளிவந்ததென்று சொன்னுர்.—எ-று. (ரு)

என்று கூறிய வியற்பகை யார்மு னெய்தி நின்றவக் கைதவ மறை யோர், கொன்றை வார்சடை யாரடி யார்கள் குறித்து வேண்டின குண மெனக் கொண்டே, ஒன்று நீரெதிர் மறாதுவந் தளிக்கு முண்மை கேட்டு நும் பாலொன்று வேண்டி, இன்றுநா னிங்கு வந்தன னதனுக் கிசைய லாமெனி லியம்பலா மென்றார்.

(இ-ள்.) இவ்விதமாகச்சொல்லிய இயற்பகைநாயனுருக்கு முன்னே எழுந் தருளிக் கபடமாகப் பிராமணத் திருவுருவங்கொண்டுவந்து நிற்கின்ற அக்கடவுள் அந்நாயனுரைப்பார்த்து கொன்றைமலர்மாலையைத் தரித்த நீண்ட சடையினையு டைய சிவபெருமானுக்குரிய அடியார்கள் விரும்பிக்கேட்டபொருள்களை நன்மை யாக அங்கீகரித்து அவற்றில் ஒன்றுவது நீர் இல்லையென்று எதிர்மறுக்காமல் சந் தோஷித்துக் கொடுக்கின்றீரென்கிற உண்மையானவார்த்தையைக் கேட்டு உம்மி டத்தில் உள்ள ஒரு பொருளைவிரும்பி இன்றைக்கு நான் இங்கு வந்தேன்; அப் பொருளை நீர் கொடுப்பதற்குச் சம்மதிப்பீராளுல் நான் அதனை இன்னதென்று சொல்லுவேனென்றார்.—எ-று.

இயற்பகை நாயனுரது மனைவியாரை விரும்பி வஞ்சக வேடங்கொண்டு வந்தவரென்பது தோன்ற "கைதவமறையோர்" என்றும், இரப்பவன் தான் வேண்டியபொருளை முதலிற்கூறின் கொடுப்பவன் தான் கொடேனென்று தடை சொல்லுவானுயின் அவ்விரப்பிற்கு இழிவுண்டாமாதலின் கருதிய பொருளை முதலி ற்கூறாது மறைத்துக் கூறினுரென்பது தோன்ற "ஒன்றுவேண்டி' என்றும்,நீர் அப்பொருளைக் கொடுப்பதற்கு இசைந்தாலல்லது கூறுதல்கூடாதென்பது தோன் ற "இசையலாமெனி லியம்பலாமென்றார்" என்றுங் கூறினுர். (சு)

என்ன வவ்வுரை கேட்டியற் பகையார் யாது மொன்றுமென் பக்க லுண் டாகில், அன்ன தெம்பிரா னடியவ ருடைமை யைய மில்லைநீ ரரு ள்செய்யு மென்ன, மன்னு காதலுன் மனைவியை வேண்டி வந்த திங்கென வங்கண ரெதிரே, சொன்ன போதிலு முன்னையின் மகிழ்ந்து தூய தொ ண்டனுர் தொழுதுரை செய்வார்.

(இ-ள்.) இவ்விதமாக அச்சிவபெருமானுகிய பிராமணர் சொல்லிய வார்த் தையை இயற்பகைநாயனுர் கேட்டு எப்படிப்பட்ட பொருளாயினும் என்னிடத்

தில் இருக்குமாயின் அந்தப் பொருள்கள் எமது சிவபெருமானது அடியார்களுக்கு உரிய உடைமையேயாம்; இவ்விஷயத்தில் உமக்குக் கொஞ்சமும் சந்தேகம்வேண்டுவதில்லை; தேவரீர் திருவுள்ளத்தில் விரும்பியதை அடியேனுக்கு இன்னதென் றருளிச்செய்யவேண்டுமென்றுசொல்ல, அப்பொழுது சிவபெருமானாகிய பிராமணர் அவரைப்பார்த்து நிலைபெற்ற ஆசையை உன்னிடத்தில் வைத்திருக்கின்ற உன் மனைவியை விரும்பி இவ்விடத்திற்கு வந்தேனென்று எதிரே சொன்னபோதும் அப்படிச்சொல்வதற்குமுன் அந்தப் பிராமணரிடத்தில் எவ்வளவு மகிழ்ச்சியுடையவராகவிருந்தாரோ அதைப்பார்க்கிலும் மிகுதியாக மகிழ்வடைந்து பரிசுத்தராகிய இயற்பகைநாயனார் வணங்கிச்சொல்லுகின்றார்.—எ-று. (எ)

இதுவெ னக்குமுன் புள்ளதே வேண்டி யெம்பி ரான்றந்த பேறெனக் கென்னக், கதுமெ னச்சென்று தம்மனை வாழ்க்கைக் கற்பின் மேம்படு காதலி யாரை, விதிம ணக்குல மடந்தையின் றுனையிம் மெய்த்த வர்க்கு நான் கொடுத்தன னென்ன, மதும லர்க்குழன் மனைவியார் கலங்கி மனந் தெ ளிந்தபின் மற்றிது மொழிவார்.

(இ-ள்.) எமது பெருமானே! அடியேனுக்கு முன்பே உண்டாயிருக்கின்ற இந்தப்பொருளையே தேவரீர் விரும்பிக்கேட்டது என்னுடைய பாக்கியமென்று சொல்லிச் சீக்கிரமாகப்போய்த் தமது இல்லறத்திற்குத் தகுந்த நன்னடக்கையையும் சிறந்த கற்பினையுமுடைய மனைவியாரைப்பார்த்து, நான் வேதவிதிப்படியே கலியாணஞ்செய்துகொண்ட நற்குலத்திற் பிறந்த பெண்ணே! இன்றையதினம் உன்னை இந்த மெய்மைபொருந்திய தவத்தினையுடைய பிராமணருக்கு நான் கொடுத்துவிட்டேனென்று சொல்ல, (அதைக்கேட்டுத்) தேன்பொருந்திய மலரைக் கூந்தலில் தரித்த அவரது மனைவியார் மனங்கலங்கிப் பின் தெளிந்து இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினார்.—எ-று.

கிடைத்தற்கரிய பொருளைக் கேட்டால் அதனைக் கொடுத்தற் கியலாமையின் விரதத்திற்குப் பழுதுண்டாம், அவ்வாறன்றி என்னிடத்து உள்ள பொருளையே கேட்டு அதனை நிலைநாட்டினீரென்பது தோன்ற "இதுவெனக்கு முன்புள்ளதே வேண்டி யெம்பிரான் றந்தபேறெனக்கு" என்றும், மனைவியார் தகாதவார்த்தையைக் கேட்டு மனம் வருந்தினாரென்பது தோன்ற "மனைவியார் கலங்கி" என்றும், எவ்வாறாயினும் தன் கணவன் கட்டளையின்படி நடத்தலே கற்புடையார்க்குக் கடமையென்று உடன்பட்டாரென்பது தோன்ற "மனந்தெளிந்தபின்" என்றுங்கூறினார். (அ)

இன்று நீரெனக் கருள்செய்த திதுவே லென்னு யிர்க்கொரு நாத நீ ருரைத்த, தொன்றை நான்செயு மத்தனை யல்லா லுரிமை வேறுள தோ வெனக் கென்று, தன்ற னிப்பெருங் கணவரை வணங்கத் தாழ்ந்து தொண்டனார் தாமெதிர் வணங்கச், சென்று மாதவன் சேவடி பணிந்து திகைத்து நின்றன டிருவினும் பெரியாள்.

(இ-ள்.) என்னுடைய உயிருக்கு ஒப்பற்ற துணைவராகிய தலைவரே! இன்றைக்குத் தேவரீர் அடியாளாகிய எனக்கு அருள்செய்தது இப்படிப்பட்டதாயிருந்

தால் தேவரீர் கட்டளையிட்ட தொன்றையே அடியேன் செய்வதேயல்லாமல் என்னிஷ்டம்போலச் செய்யத்தக்க காரியம் எனக்கு வேறொன்றிருக்கின்றதோ? என்று சொல்லித் தம்முடைய ஒப்பற்ற கணவனை வணங்கினபோது இயற்பகை நாயனாரும் நிலமுறத்தாழ்ந்து தமது மனைவியாரை எதிரே வணங்கிநிற்க (அப்பொழுது) இலட்சுமியைப்பார்க்கிலும் சிறந்தஅழகினையுடையவராகிய அவ்வம்மையார் (தமது கணவனாரது கருத்தின்படியே) சென்று சிவபெருமானாகிய மறையவரது திருவடிகளைவணங்கித் திகைத்து நின்றார்.—எ-று.

சிவனடியவர்களாயுள்ளவர்கள் சாஸ்திர விரோதமாகப் பிறருடைய மனைவியை விரும்பிக் கேளார்கள், ஆனால் இவரது பத்தியைப் பரிசோதிக்கலாமென்று இங்ஙனம் வந்தார்களோ வெனவும், அன்னியமதஸ்தர்கள் கபடவேடங்கொண்டு கவர்ந்து செல்ல வந்தார்களோ வெனவும் சந்தேகித்தாரென்பது தோன்ற "திகைத்து நின்றனள்" என்று கூறினர். என்னை உருபுமயக்கம். "ஒன்றைநான்செய்வதலதுமையல்லால்" என்றும் பாடபேதம். (கூ)

மாது தன்னைமுன் கொடுத்தமா தவர்தா மனமகிழ்ந்துபே ருவகையின் மலர்ந்தே, யாது நானினிச் செய்பணி தானென் றிறைஞ்சி நின்றவர் தம்மெதிர் நோக்கிச், சாதி வேதிய ராகிய தலைவர் தைய றன்னையான் றனிக்கொடு போகக், காதன் மேவிய சுற்றமும் பதியுங் கடக்க நீதுணை போதுக வென்றார்.

(இ-ள்.) தம்முடைய மனைவியாரைச் (சிவபெருமானாகிய வேதியர்) கேட்டவுடனே தடைசொல்லாமல்கொடுத்த மகத்தாகிய தவத்தினையுடையவராகிய இயற்பகைநாயனார் (இவ்வடியவர் கேட்டதை இல்லையென்று சொல்லாமல் கொடுக்கப் பெற்றேனென்னுங் கருத்தினால்) மனமகிழ்ந்து உடலம் பூரித்து எம்பெருமானே! அடியேன் இனி செய்யவேண்டுவதாகிய பணிவிடையாதென்று வணங்கி நிற்கின்றவராகிய அவ்வியற்பகைநாயனாரைச் சிறந்த வேதியர் குலத்தலைவராக எழுந்தருளிவந்த சிவபெருமான் எதிராகப்பார்த்து அன்பனே! இந்தப் பெண்ணை நான்தனியே அழைத்துக்கொண்டுபோகிறபடியால் உங்கள்மேல் அன்புள்ள பந்துக்களையும், இந்த நகரத்தையும் கடந்துபோகும்படி (எனக்கு ஓரிடையூறுண்டாகாமல்) நீ துணையாக வரவேண்டுமென்று அருளிச்செய்தார்.—எ-று. (௧0)

வேறு.

என்றவ ரருளிச் செய்ய யானேமுன் செய்குற் றேவல்
ஒன்றிது தன்னையென்னை யுடையவ ரருளிச் செய்ய
நின்றது பிழையாமென்று நினைந்துவே றிடத்துப் புக்குப்
பொன்றிக ழுறுவை சாத்திப் பூங்கச்சுப் பொலிய வீக்கி.

(இ-ள்.) இவ்விதமாகச் சிவபெருமானாகிய வேதியர் அருளிச்செய்ய (அதைக்கேட்ட இயற்பகைநாயனார்) கட்டளையிடுதற்குமுன்னமே அடியேனே செய்யவேண்டுவதாகிய இக்குற்றேவலொன்றை என்னை அடிமையாகவுடைய இவ்வேதியர் கட்டளையிடும்படி அடியேன் தாழ்த்துநின்றது குற்றமாமென்று நினைந்து அங்குநின்றும் வேறோரிடத்திற்குப்போய்ப் பீதாம்பரத்தை யணிந்து (அதன்மேல்) அழகிய கச்சை இடையில் விளங்கும்படி கட்டி.—எ-று.

வேறிடமாவது:—போர்க்கோலங்கொள்ளுதற்குரிய ஆயுதமுதலிய பொருளகளை வைத்திருக்கும் இடம். (கக)

வாளொடு பலகையேந்தி வந்தெதிர் வணங்கி மிக்க
ஆளரி யேறு போல்வா ரவரைமுன் போக்கிப் பின்னே
தோளிணை துணையே யாகப் போயினார் துன்னி னாரை
நீளிடைப் படமுன் கூடி நிலத்திடை வீழ்த்த நேர்வார்.

(இ-ள்.) வாளாயுதத்தையும் கேடகத்தையும் கையில் பிடித்துக்கொண்டு (சிவபெருமானாகிய வேதியருக்கு) எதிராகவந்து வணங்கி மிகுந்த வல்லமைபொருந்திய ஆண்சிங்கம்போன்ற பராக்கிரமத்தை யுடையவராகிய இயற்பகைநாயனார் இவ்விஷயத்தைக்குறித்துத் தம்மை எதிர்த்து வந்தவர்களை நெடுந்தூரத்தில் வரும்பொழுதே அவர்களோ டெதிர்த்துப் பூமியில் வெட்டுண்டு விழும்படிச் செய்து கொல்ல இஷ்டமுள்ளவராய் அவ்வேதியரையும் மனைவியாரையும்தமக்குமுன்னே போகச்செய்து அவர்களுக்குப் பின்னே தம்முடைய இரண்டுதோள்களுமே தமக்குச் சகாயமாகச் சென்றார்.—எ-று.

சுத்தவீரனுக்குப் புஜபலமே பெருந்துணையாதலின் "தோளிணை துணையேயாக" என்றும், அவ்வேதியருடன் செல்லும் தமது மனைவியாரைத் தம்முடைய எண்ணத்திற்கு விரோதமாகக் கொண்டுபோகத் தமது பந்துக்களாயுள்ள பகைவர்கள் சமீபித்து அவ் வேதியரினின்றும் மனைவியைப் பிரித்துக்கொண்டுபோதற்கும் கூடுமாதலின் அவ்வாறு செய்யுமுன் தூரத்தே வரும்பொழுதே துணிக்குங் கருத்துடையவராய்ச் சென்றனரென்பது தோன்ற "நீளிடைப் படுமுன் கூடி நிலத்திடை வீழ்த்த நேர்வார்" என்றுங் கூறினார். (கஉ)

மனைவியார் சுற்றத் தாரும் வள்ளலார் சுற்றத் தாரும்
இனையதொன் றியாரோ செய்தா ரியற்பகை பித்த னாற்
புனையிழை தன்னைக் கொண்டு போவதா மொருவ னென்று
துனைபெரும் பழியை மீட்பான் றொடர்வதற் கெழுந்து சூழ்வார்.

(இ-ள்.) இயற்பகைநாயனாரது மனைவியாருடைய உறவினரும், அவ்வியற்பகைநாயனாருடைய உறவினரும், தனது மனைவியை ஒருவனுக்குக் கொடுத்தலாகிய இக் கொடுஞ்செய்கையை இதுவரையில் யாவர்செய்தவர்கள், ஒருவரும் இல்லை; இவ்வியற்பகைதான் பயித்தியங்கொண்டவனானால் ஒரு வேதியன் ஆபரணங்களையணிந்த இப்பெண்ணைக் கொண்டுபோவது தகுதியாகுமோவென்று தங்கள் குடும்பத்தைத் தொடர்ந்த இப்பெரும்பழியை நீக்கிக்கொள்ளும்பொருட்டு அவர்களைப் பின்றொடர்வதற்கு எழுந்து சூழ்கின்றவரானார்கள்.—எ-று.

இயற்பகை பித்தங்கொண்டு, தன் மனைவியை மறையவனுக்குக் கொடுத்தால் அவன் சிறிதும் அச்சமின்றிக் கொண்டுசெல்கின்றானாதலின் அவ்வாறு அவ்வியற்பகை செய்யினும் யாம் சம்மதியோமென்னுங் கருத்துடையவர்களாய் வந்தனரென்பது தோன்ற "இயற்பகை பித்த னானால்-புனையிழை தன்னைக்கொண்டு போவதா மொருவன்" என்று கூறினார். (கந)

வேலொடு வில்லும் வாளுஞ் சுரிகையு மெடுத்து மிக்க
காலென விசையிற் சென்று கடிநகர்ப் புறத்துப் போகிப்
பாலிரு மருங்கு மீண்டிப் பரந்தவார்ப் பரவம் பொங்கி
மால்கடல் கிளர்ந்த தென்ன வந்தெதிர் வளைத்துக் கொண்டார்.

(இ-ள்.) வேலாயுதத்தோடு வில்லையும், வாளையும், சுரிகையையும் கையில் எடுத்துக்கொண்டு பெருங்காற்றைப்போல விரைவாக நடந்து காவலையுடைய அக் காவிரிப்பூம்பட்டணத்திற்குப் புறத்தேபோய்ச் சிவபெருமானாகிய வேதியருக்கு இருபுறத்திலும் நெருங்கிப் பரவிய ஆரவாரமானது அதிகரித்துப் பெரிய சமுத்திரமானது எழுந்ததுபோலத் தோன்றி எதிரேவந்து சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று.

ஆர்ப்பரவம் - ஒருபொருட்பன்மொழி. (கச)

வழிவிடுந் துணைபின் போத வழித்துணை யாகி யுள்ளார்
கழிபெருங் காதல் காட்டிக் காரிகை யுடன்போம் போதில்
அழிதகன் போகே லீண்ட வருங்குலக் கொடியை விட்டுப்
பழிவிட நீபோ வென்று பகர்ந்தெதிர் நிரைந்து வந்தார்.

(இ-ள்.) தம்மை வழிவிடுதற்குத் துணையாகவந்த இயற்பகைநாயனார்பின்னேவர, வழிக்குத்துணைவராகவுள்ள சிவபெருமான் இயற்பகைநாயனாருடைய மனைவியாருக்கு மிகுந்த விருப்பத்தைக் காட்டிக்கொண்டு அவ்வம்மையாரோடு போகும்பொழுது, (அவ்வுறவினர்கள்வந்து தடுத்து) ஓ பெருமைகெட்டவனே! நீ போகாதே; இவ்விடத்தில் எமது அருமையாகிய குலத்திற்பிறந்த அப்பெண்கொடியை எங்களுக்குப் பழியுண்டாகாமலிருக்கும்படி விட்டுவிட்டுப் பின்பு நீ போவாயாகவென்று சொல்லிக்கொண்டு அவருக்கெதிரே வரிசையாக வந்தார்கள்.—எ-று.

தனபாலனென்னும் வர்த்தகனுக்கு வழித்துணையாகவந்து பாதுகாத்தருளிய சிவபெருமான் இயற்பகைநாயனாரைத் தமக்கு வழிவிடுந் துணையாகக்கொண்டு நடித்தனரென்பது தோன்ற "வழிவிடுந் துணைபின் போத வழித்துணையாகி யுள்ளார்" என்று கூறினார். சிவபெருமான் வழித்துணைவராகவந்த வரலாறு; குந்தளதேசத்திலே வைசிய குலத்திற்பிறந்த தனபாலனென்னும் வர்த்தகனானவன் வியாபாரஞ் செய்யும்பொருட்டு எருதுகளின்மேல் மிளகுப்பொதிகளை ஏற்றிக்கொண்டு காஞ்சீபுரத்தை நோக்கி வரும்வழியில் விரிஞ்சைப்புரத்தைவந்து சேர்ந்தான்; அங்குள்ளவர்களில் சிலர் வழியில் வேடர்கள் அடித்துப்பறித்தார்களென்றுசொல்ல,அதை வர்த்தகன்கேட்டு இனி நாம் திரும்பிப்போய்விட்டால் முதலிலேகுறையும்; இங்கு விற்றாலும் முதலாகுமேயன்றி இலாபமில்லை; இனி காஞ்சீபுரத்திற்குப்போய்ச்சேர்வதும் அரிதாகஇருக்கின்றது என்று நினைத்து விரிஞ்சேசருடைய திருக்கோயிலின்முன்சென்று நின்று எம்பெருமானே! அடியேன் கொண்டுவந்திருக்கும் இம் மிளகுப்பொதிகளை வேடர்கள் பறிக்காவண்ணம் தேவரீர் வழித்துணையாகவந்தால் பத்து மிளகுப்பொதிகள் சுவாமிகளுடையதாகுமென்று பிரார்த்தித்துத் தன்னிருப்பிடத்திற்கு வந்து நித்திரைசெய்தான். அன்றிராத்திரி சிவபெருமான் அவன் கனவில் தோன்றி நாளைபதினம் உனக்கு நல்ல வழித்துணை

வரும் ஆதலால் பொதிகளை யேற்றிக்கொண்டுபோவென்று சொல்லி மறைந்தருளினர். மறுநாள் வர்த்தகன் எருதுகளின்மேல் பொதிகளை யேற்றிப் புறப்படும்பொழுது, சிவபெருமான் ஓர் குதிரையின்மேல் சர்வாயுதபாணியாக ஓர் சுத்தவீரனைப்போல எழுந்தருளிவந்து வர்த்தகனைக்கண்டு நாம் உனக்கு வழித்துணையாக வருகின்றோமென்று அவனுக்குப் பின்னே நடந்து சில காததூரஞ்சென்று பருத்திக்குன்றத்திற்குச் சமீபமாக வரும்பொழுது குதிரையை வேறு வழியில் திருப்பி மறைந்தருளினர்; அப்பொழுது அங்குள்ள வேடர்கள் வர்த்தகனைத் தடுத்து வருத்தி அவன் பொருள்களையெல்லாம் பறித்துக்கொண்டார்கள்; அவனுடன்வந்த ஆள்களும் பயந்து ஓடிப்போய்விட்டார்கள்; அப்பொழுது வர்த்தகன் சோர்வடைந்து விரிஞ்சைப்புரத்து வீற்றிருந்தருளும் எமது ஆண்டவரே! தேவரீர் அடியேன் சொப்பனத்திற் றோன்றி அருள்செய்ததைக்கொண்டன்றோ இவ்வனத்தில் வந்தேன்; இங்கு எனக்குத் துணையாகவந்த மகாபுருஷனும் மறைந்துபோனன்; எனது ஆயிரம் மிளகுப்பொதிகளும் போய்விட்டன; இனி தேவரீர் திருவருள்புரியவேண்டுமென்று தியானஞ்செய்தான். அப்பொழுது சிவபெருமான் அவ்வாறு பறித்துச்சென்ற வேடர்கள் ஒருவரும் தப்பாமல் பிடித்து எருதுகளின்மேல் மிளகுப்பொதிகளையும் ஏற்றிக்கொண்டு முன்போலக் குதிரையின்மேல் ஏறிக்கொண்டுவந்து வர்த்தகனைப்பார்த்து நீ இவர்களைத் தண்டனைசெய்யென்று சொன்னர். அப்பொழுது தனபாலனென்னும் வர்த்தகன் அவர்களைக் குறித்துப் பார்த்தபொழுது அவர்கள் நெற்றிகளிலெல்லாம் விபூதியிருக்கக்கண்டு வணங்கி உபசாரஞ்செய்து வேண்டியபொருள்களைக் கொடுத்து அனுப்பிப் பின் அவ்வீரரோடு காஞ்சீபுரத்தை யடைந்து கூடாரமிட்டுத் தங்கினன். பின்பு சிவபெருமான் வணிகனைப்பார்த்து அன்பனே! இனி யாம் எம்மூருக்குச் செல்கின்றோம்; எம்மை மறந்துவிடாதே; எமதுபெயர் மார்க்கசகாயர் என்று சொல்லிப்போயினர். பின் வர்த்தகன் மிளகுப்பொதிகளைக் கொட்டி உயர்ந்தவிலைக்கு விற்குங் களிப்பினலே சுவாமிக்குச் சொல்லிய பத்துப்பொதிகளையும் விற்றுவிட்டான். பின்புமிளகுவாங்கிப்போனவர்களெல்லாம் வீட்டில் மிளகைக்கொட்டிப் பார்த்தபொழுது பயறுகளாயிருக்கக் கண்டு தனபாலனிடஞ்சென்று அவனைப் பழித்தார்கள். அதைக்கண்ட வர்த்தகன் இஃது என்னமாயமென்று சிந்தித்து நாம் விரிஞ்சேசருக்குச்சொல்லிய பொதிகளை விற்றதனுலுண்டாகிய தோஷமென்று வருந்திப் பதினெருபொதியாகக் கொடுக்கப் பிரார்த்தித்தான். அப்பொழுது அவர்கள் கொண்டுவந்த பயறுகள் மிளகுகளாயிருக்கக்கண்டு அவனை உபசரித்துப் போய்விட்டார்கள். சிவபெருமான் அவ்வர்த்தகனது சொப்பனத்திற்றோன்றி அன்பனே! இனி நீ நமக்குக்கொடுத்த பதினெருபொதிகளையும் நமதடியார்களுக்குக் கொடுவென்று சொல்லி மறைந்தனர்; அவ்வாறே வர்த்தகன் அடியார்களுக்கு மிளகுகளை வாரிக்கொடுக்க அவையனைத்தும் நாகரத்தினங்களாயின. பின்பு வர்த்தகன் காஞ்சீபுரத்தைவிட்டு விரிஞ்சைப்புரத்தை யடைந்து, தனக்குக்கிடைத்த இலாபங்களையெல்லாம் விரிஞ்சேசருக்குக் கொடுத்து பிரமதீர்த்தக்கரையில் அலையேற்றுவிநாயகரைப் பிரதிஷ்டைசெய்து தன் நகரத்தை யடைந்து முடிவில் சிவசாயுச்சியம் பெற்றுன் என்பதாம். வழித்துணையாகியுள்ளார் என்பதற்கு ஆன்மாக்களடையும் முத்திவழிக்குப் பொருந்திய துணையாயுள்ள சிவபெருமான் எனினும் பொருந்தும். அழிதகன் = அழிந்ததகுதியையுடையவன். கொடி. ஆகுபெயர்.

மறைமுனி யஞ்சி னான்போன் மாதினைப் பார்க்க மாதும்
இறைவனே யஞ்ச வேண்டா மியற்பகை வெல்லு மென்ன
அறைகழ லண்ணல் கேளா வடியனே னவரை யெல்லாந்
தறையிடைப் படுத்துகின்றேன் றளர்ந்தருள் செய்யே லென்று.

(இ-ள்.) வேதங்களையுணர்ந்த சிவபெருமானாகிய வேதியர் பயங்கொண்டவரைப்போல நடித்து அவ்வியற்பகைநாயனாரது மனைவியாரைப் பார்க்க, அதற்கு அவ்வம்மையாரும் அவரைப்பார்த்து எம்பெருமானே! தேவரீர் சிறிதும் அஞ்சவேண்டுவதில்லை; இவ்வியற்பகையார் அவர்களை வெல்வாரென்று சொல்ல, அவ்வார்த்தையைச் சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த இயற்பகைநாயனார் கேட்டு எமதாண்டவரே! அடியேன் தேவரீரை எதிர்த்துவந்தவர்களையெல்லாம் கொன்று பூமியில் தள்ளுகின்றேன், இதற்காகத் தேவரீர் மனக்கலக்கங் கொள்ளவேண்டாமென்று சொல்லி.—எ-று. (கசா)

பெருவிற லாளி யென்னப் பிறங்கெரி சிதற நோக்கிப்
பரிபவப் பட்டு வந்த படர்பெருஞ் சுற்றத் தாரை
ஒருவரு மெதிர்நில் லாமே யோடிப்போய்ப் பிழையு மன்றேல்
எரிசுடர் வாளிற் கூறாய்த் துடிக்கின்றீ ரென்று நேர்ந்தார்.

(இ-ள்.) தங்களுக்கு அவமானம் உண்டானதென்று எண்ணிவந்த நெருங்கிய பெருமைபொருந்திய தமது உறவினரை மிகுந்த வல்லமைபொருந்திய சிங்கத்தைப்போல விளங்குகின்ற நெருப்புப்பொறிகள் பறக்கும்படியாகப் பார்த்து,நீங்கள் ஒருவரும் எனக்கெதிரில் நிற்காமல் ஓடிப்போய்ப் பிழையுங்கள்; அப்படி ஓடாதிருப்பீர்களானால் (என்கையிலிருக்கின்ற) ஒளிவீசுகின்ற வாளினால் இரண்டுதுண்டாக விழுந்து துடிக்கின்றீர்களென்று அவர்களைச் சமீபித்தார், இயற்பகைநாயனார்.—எ-று. (கஎ)

ஏடநீ யென்செய் தாயா லித்திற மியம்பு கின்றாய்
நாடுறு பழியு மொன்னார் நகையையு நாணு யின்று
பாடவ முரைப்ப துன்றன் மனைவியைப் பனவற் கீந்தோ
கூடவே மடிவதன்றிக் கொடுக்கயா மொட்டோ மென்றார்.

(இ-ள்.) ஏடா இயற்பகையே! நீ இங்கு என்ன தகாதகாரியஞ்செய்தாய்; (அப்படிச்செய்ததை நாங்கள் தடுப்பதற்கு யத்தனப்பட்டால்) இவ்விதமான சாமர்த்திய மொழிகளைப் பேசுகின்றாய்; நாட்டிலுள்ளவர்களால் நமக்குண்டான பழிக்கும், நம்முடைய பகைவர்கள் இதைப்பற்றிச் செய்யும் நகைப்புக்கும் நீ சிறிதும் நாணவில்லை; நீ இப்பொழுது சாமர்த்தியமொழிகளைப் பேசுவது உன்னுடைய மனைவியை ஒரு வேதியனுக்குக் கொடுத்துத்தானோ? நாங்களனைவரும் ஒருங்கே மடிவதேயல்லாமல், இப்பெண்ணைப் பிராமணருக்குக் கொடுக்கச் சம்மதிக்கமாட்டோமென்றார்கள்.—எ-று. (கஅ)

மற்றவர் சொன்ன மாற்றங் கேட்டலு மனத்தின் வந்த
செற்றமுன் பொங்க வுங்க ளுடற்றுணி யெங்குஞ் சிந்தி
முற்றநும் முயிரை யெல்லா முதல்விசும் பேற்றிக் கொண்டு
நற்றவர் தம்மைப் போக விடுவனென் றெழுந்தார் நல்லோர்.

(இ-ள்.) நன்மைபொருந்திய இயற்பகைநாயனுர் அவ்வுறவினர்கள் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டவுடனே மனத்தில் உண்டாகிய கோபமானது முன்னே அதிகப்பட உங்கள் உடம்பின் துண்டுகளை எவ்விடத்திலுஞ் சிந்தி உங்க ளனைவருடைய உயிரையும் முதன்மையாகிய வீரசுவர்க்கத்தை யடையச்செய்து விட்டு (அதன்பின்பு) சிறந்த தவத்தினையுடையவராகிய இவ்வேதியரைத் தடையில்லாமல் போகும்படி செய்வேனென்று எழுந்தார்.—எ-று. (கசு)

நேர்ந்தவ ரெதிர்ந்த போது நிறைந்தவச் சுற்றத் தாருஞ்
சார்ந்தவர் தம்முன் செல்லார் தையலைக் கொண்டு பெற்றம்
ஊர்ந்தவர் படிமேற் செல்ல வுற்றெதி ருடன்று பொங்கி
ஆர்ந்தவெஞ் சினத்தான் மேற்சென் றடர்ந்தெதிர் தடுத்தா ரன்றே.

(இ-ள்.) இயற்பகைநாயனுர் இவ்வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு அவர்களை எதிர்த்தபொழுது, (அவர் மனைவியாரை அழைத்துக்கொண்டுபோக வொட்டாமல் தடுக்கும்படி) திரளாகக்கூடிவந்த அச்சுற்றத்தார்கள் தங்களைக்கிட்டிப்போர்செய்துகொல்ல வந்தவராகிய இயற்பகைநாயனுரை எதிர்க்காமல், ரிஷபத்தை வாகனமாகச்செலுத்திய சிவபெருமானுகிய வேதியர் அவரது மனைவியாரை அழைத்துக்கொண்டு பூமியின்மேல் நடந்துசெல்ல அவருக் கெதிராகப்போய் மிகுதியாகக்கோபித்துப் பொருந்திய அக்கொடிய கோபத்தினுல் மேற்கொண்டு சென்று நெருங்கி (அவரைப் போகவொட்டாமல்) எதிரே தடுத்தார்கள்.—எ-று. (உ0)

சென்றவர் தடுத்த போதி லியற்பகை யார்முன் சீறி
வன்றுணை வாளே யாகச் சாரிகை மாறி வந்து
துன்றினர் தோளுந் தாளுந் தலைகளுந் துணித்து வீழ்த்து
வென்றடு புலியே றென்ன வமர்விளை யாட்டின் மிக்கார்.

(இ-ள்.) இவ்விதமாக அவ்வேதியர் மேற்சென்று அச்சுற்றத்தார்கள் தடுத்தபொழுது (அதைக்கண்ட) இயற்பகைநாயனுர் அவர்கள் முன் கோபங்கொண்டு தமக்கு வலியதுணையானது வாளாயுதமேயாகக் கையிற்கொண்டு இடசாரிவலசாரியாக மாறிமாறிச் சுற்றிவந்து தம்மை எதிர்த்துவந்த சுற்றத்தார்களது தோள்களையும்,கால்களையும், தலைகளையும் வெட்டிக் கீழேதள்ளிப் பலமிருகங்களையும்வென்று கொல்லுகின்ற ஆண்புலியைப்போலப் போர்செய்தலாகிய விளையாட்டிலே சிறந்தவராக விளங்கினுர்.—எ-று. (உக)

மூண்டுமுன் பலராய் வந்தார் தனிவந்து முட்டி னுர்கள்
வேண்டிய திசைக டோறும் வேறுவே றமர்செய் போழ்தில்
ஆண்டகை வீரர் தாமே யனைவர்க்கு மனைவ ராகிக்
காண்டகு விசையிற் பாய்ந்து கலந்துமுன் றுணித்து வீழ்த்தார்.

(இ-ள்.) (ஓர் வேதியனுக்கு இயற்பகையார் தமதுமனைவியைக் கொடுத்தாரென்னும் அவமானத்தினுலுண்டாகிய கோபமானது) அதிகரித்து முன்னே இயற்பகைநாயனுரிடத்துப் பலராகத் திரண்டுவந்து எதிர்த்தவர்களும், அதன்பின் ஒவ்வொருவராகவந்து எதிர்த்தவர்களுமாகிய சுற்றத்தார்கள் அவரவர்களுக்கு வேண்டியபடியே எட்டுத்திக்குகளிலும் சூழ்ந்து (வாள்முதலாகிய ஆயுதங்களைக் கையில்

பிடித்து) வெவ்வேறுகப் போர்செய்த சமையத்தில் ஆண்தன்மையையுடைய சுத்தவீரராகிய இயற்பகைநாயனுர் அவர்கள் எல்லாருக்கும் அவ்வெல்லாருமாகிப் பார்ப்பவர்கள் மதிக்கத்தகுந்த மிகுந்தவிசையாகப்பாய்ந்து அவர்களோடு கலந்து முன்னே பூமியில்வெட்டித் தள்ளினுர்.—எ-று.

இயற்பகைநாயனுர் விசையாகப்பாய்ந்து ஒவ்வொருவரிடத்துந் தனித்தனியெதிர்த்துப் போர்செய்தலின் " அனைவர்க்கு மனைவராகி " என்று கூறினுர். (உஉ)

சொரிந்தன குடல்க ளெங்குந் துணிந்தன வுடல்க ளெங்கும்
விரிந்தன தலைக ளெங்கு மிடைந்தன கழுகு மெங்கும்
எரிந்தன விழிகளெங்கு மெதிர்ப்பவ ரொருவ ரின்றித்
திரிந்தனர் களனி லெங்குஞ் சிவன்கழல் புனைந்த வீரர்.

(இ-ள்.) (இயற்பகைநாயனுர் தமதுசுற்றத்தினராகிய பகைவர்களை வாளால் வெட்டித் தள்ளும்பொழுது) குடல்கள் எவ்விடங்களிலும் சொரிந்துகிடந்தன; உடல்கள் எவ்விடங்களிலும் துண்டுகளாக வெட்டப்பட்டுக் கிடந்தன; தலைகள் எவ்விடங்களிலும் பிளந்து விரிந்துகிடந்தன; கழுகுகளும் (பருந்துகளும்) இறைச்சியையுண்பதற்காக எவ்விடங்களிலும்வந்து நிறைந்தன; கண்கள் கோபத்தினுல் எவ்விடங்களிலும் சிவந்து எரிந்துகொண்டிருந்தன; சிவபெருமானுடைய திருவடிகளை மனதில் தியானித்துக்கொண்டிருக்கின்ற வீரராகிய இயற்பகைநாயனுர் தம்மை எதிர்ப்பவர் ஒருவருமில்லாமல் அந்தப் போர்க்களமுழுமையும் நிர்ப்பயமாகத் திரிந்துகொண் டிருந்தார்.—எ-று.

மாடலை குருதி பொங்க மடிந்தசெங் களத்தி னின்றும்
ஆடுறு செயலின் வந்த கிளைஞரோ டணைந்தார் தம்மில்
ஓடினு ருள்ளா ருய்ந்தா ரொழிந்தவ ரொழிந்தே மாண்டார்
நீடிய வாளுந் தாமு நின்றவர் தாமே நின்ருர்.

(இ-ள்.) பக்கங்களில் இரத்தவெள்ளமானது அலைகளை வீசிக்கொண்டு பொங்கியோடும்படி (எதிர்ந்த சுற்றத்தாராகிய பகைவர்கள்) இறந்துகிடக்கின்ற செந்நிறமாகிய அந்த யுத்தகளத்தினின்றும் போர்செய்து வெற்றிகொள்வோமென்று வந்த தமையன் - தம்பி - மாமன் - மைத்துனன் முதலாகிய உறவினரோடு வந்தவர்களில்,போர்செய்யப் பயந்து ஓடினவர்கள் உயிர்பிழைத்தார்கள்; அப்படி ஓடாமல் எதிர்த்தவர்கள் ஒருவரும் தவருமல் உயிர்போய் மாண்டார்கள்; நீண்ட வாளாயுதமும் தாமுமாக வந்து முன்னே நின்ற இயற்பகைநாயனுர் தாம் ஒருவருமே அங்கு நின்ருர்.—எ-று. (உ௩)

திருவுடை மனைவி யாரைக் கொடுத்திடைச் செறுத்து முன்பு
வருபெருஞ் சுற்ற மெல்லாம் வாளினுற் றுணித்து மாற்றி
அருமறை முனியை நோக்கி யடிகணீ ரஞ்சா வண்ணம்
பொருவருங் கான நீங்க விடுவெனென் றுடனே போந்தார்.

(இ-ள்.) கற்பினையே செல்வமாகவுடைய தமது மனைவியாரை வேதியருக்குக்கொடுத்து அதுகாரணமாக இடையில் தம்மிடத்திற்கோபங்கொண்டு முன்னே

வந்தபெருமைபொருந்திய பந்துக்களை யெல்லாம் தம்முடைய கையிலுள்ள வாளாயுதத்தினால் வெட்டி இறக்கச்செய்து பின்பு அரிய வேதங்களையுணர்ந்த சிவபெருமானாகிய வேதியரைப்பார்த்து எமது ஆண்டவரே! தேவரீர் பயப்படாதிருக்கும்படியாக ஒப்பற்ற இந்தக் காட்டைக் கடந்துபோகும்படி உம்மோடு துணையாகவந்து அனுப்புகின்றேனென்று அவரோடுகூடச் சென்றார்.—எ-று. (௨௫)

இருவரா லறிய வொண்ணா வொருவர்பின் செல்லு மேழை
பொருதிறல் வீரர் பின்பு போதமுன் போரும் போதில்
அருமறை முனிவர் சாய்க்கா டதன்மருங் கணைய மேவித்
திருமலி தோளி னானை மீளெனச் செப்பி னாரே.

(இ-ள்.) விஷ்ணு-பிரமன் என்னும் இவ்விருவர்களாலும் அடியையும் முடியையும் தேடிக் காணப்படாத சிவபெருமானாகிய வேதியருக்குப் பின்னேபோகின்ற அவ்வியற்பகைநாயனாரது மனைவியார் போர்செய்யும் வல்லமை பொருந்திய சுத்தவீரராகிய இயற்பகைநாயனார் பின்னேவரத் தாம் முன்னே போகும்பொழுதில் அரிய வேதங்களையுணர்ந்த அவ்வேதியர் திருச்சாய்க்காடென்னுந் தலத்தின் சமீபத்தையடைந்து வீரலட்சுமிவிளங்குகின்ற தோள்களையுடைய இயற்பகைநாயனாரைப்பார்த்து இனி நீர் உம்முடைய வீட்டிற்குத் திரும்பிப்போகலாம் என்று சொன்னார்.—எ-று. (௨௬)

தவமுனிதன்னை மீளச் சொன்னபின் றலையா லார
அவன்மலர்ப் பதங்கள் சூடி யஞ்சலி கூப்பி நின்று
புவனமூன் றுய்ய வந்த பூசுரன் றன்னை யேத்தி
இவனருள் பெறப்பெற் றேனென் றியற்பகை யாரு மீண்டார்.

(இ-ள்.) தவமுனிவராகிய வேதியர் தம்மை வீட்டிற்குத் திரும்பிப்போவென்று சொன்னபின்பு, சிரசினாலே பொருந்தும்படி அவரது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி அஞ்சலிகூப்பி நின்றுகொண்டு (சுவர்க்க மத்திய பாதலமென்னும்) மூன்றுலகத்தாரும் திருவருள்பெற்றுய்யும்படி யெழுந்தருளிய பிராமணராகிய சிவபெருமானைத் துதித்து அடியேன் இவ்வேதியரது திருவருளை அடையப்பெற்றேனென்று சொல்லி இயற்பகைநாயனாரும் தமது வீட்டிற்குத் திரும்பினார்.—எ-று. (௨௭)

செய்வதற் கரிய செய்கை செய்தநற் றொண்டர் போக
மைதிகழ் கண்ட னெண்டோண் மறையவன் மகிழ்ந்து நோக்கிப்
பொய்தரு முள்ள மில்லான் பார்க்கிலன் போனா னென்று
மெய்தரு சிந்தை யாரை மீளவு மழைக்க லுற்றார்.

(இ-ள்.) யாவரும் செய்வதற் கருமையாகிய செய்கையைச் செய்த சிறந்த அன்பினையுடைய இயற்பகைநாயனார் தமது வீட்டிற்குத் திரும்பிப்போக, விஷம் பொருந்திய கண்டத்தையும், எட்டுத் திருப்புயங்களையுமுடைய சிவபெருமானாகிய வேதியர் மகிழ்ச்சியடைந்து பார்த்துப் பொய்முதலாகிய களங்கமில்லாத மனத்தினையுடைய இயற்பகை (தன் மனைவியைக் கொடுத்துத்) திரும்பிப்பாராமல் போ

இன்றானென்று மெய்மையாகிய திருவுள்ளத்தினையுடைய அவ்வியற்பகைநாயனை மறுபடியும் அழைக்கத் தொடங்கினார்.—எ-று. (உஅ)

இயற்பகை முனிவா வோல மீண்டுநீ வருவா யோலம்
அயர்ப்பிலா தானே யோல மன்பனே யோல மோலஞ்
செயற்கருஞ் செய்கை செய்த தீரனே யோல மென்றான்
மயக்கறு மறையோ லிட்டு மாலயன் றேட நின்றான்.

(இ-ள்.) இயற்பகைமுனிவனே! அபயம்; இவ்விடத்தில் நீ விரைவில் வரவேண்டும் உனக்கு அபயம்; (மனைவியாளைக் கொடுத்ததனால் மனத்தில் கொஞ்சமும்) சோர்வில்லாதவனே! அபயம்; எம்மிடத்தில் சிறந்த அன்புடையவனே! அபயம் அபயம்; ஒருவரும் செய்தற் கருமையாகிய காரியத்தைச் செய்த தீரபுருஷனே! அபயம் என்று சொன்னார்; குற்றமற்ற வேதங்கள் ஓலமிட்டுத் தம்மைக் காணாது தேடவும், திருமால் பிரமன் என்னும் இருவரும் அடியையும் முடியையும்காணாது தேடவும் நின்றவராகிய சிவபெருமான்.—எ-று. (உகூ)

அழைத்தபே ரோசை கேளா வடியனேன் வந்தேன் வந்தேன்
பிழைத்தவ ருளரே யின்னும் பெருவலித் தடக்கை வாளின்
இழைத்தவ ராகின் றானொன் றியற்பகை யார்வந் தெய்தக்
குழைப்பொலி காதி னானு மறைந்தனன் கோலங் கொள்வான்.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமானாகிய வேதியர் அழைத்த பெரியஓசையைக்கேட்டு அடியேன் இதோ வந்தேன் வந்தேன்; எனது கைவாளுக்குத் தப்பி உயிர்பிழைத்த எனது உறவினர்கள் தேவரீருக்குத் தீங்குசெய்ய இன்னும் இருப்பார்களானால் அவர்கள் மிகுந்த வல்லமைபொருந்திய எனது நீண்ட கையிலிருக்கும் வாளாயுதத்தினால் தங்கள் உயிரைப் போக்கடித்தவராகின்றார்கள் என்று சொல்லிக்கொண்டு இயற்பகைநாயனார் சீக்கிரமாகத் திரும்பி வந்தார்; (அப்பொழுது) சங்கக்குழை விளங்குகின்ற காதினையுடைய சிவபெருமானாகிய வேதியர் அவருக்குக் காட்சிகொடுக்கத் திருக்கோலங்கொள்ளும்படி மறைந்தருளினார்.—எ-று.

வந்தேன் வந்தேன் என்பது காலவழுவமைதி; அடுக்கு விரைவுப்பொருளில் வந்தது. "இழைத்தவராகி நின்றார்" என்றும் பாடம். (௩௦)

சென்றவர் முனியைக் காணார் சேயிழை தன்னைக் கண்டார்
பொன்றிகழ் குன்று வெள்ளிப் பொருப்பின்மேற் பொலிந்த தென்
தன்றுணை யுடனே வானிற் றலைவனை விடைமேற் கண்டார் [னத்
நின்றிலர் தொழுது வீழ்ந்தார் நிலத்தினின் றெழுந்தார் நேர்ந்தார்.

(இ-ள்.) (வேதியரிடத்து விரைந்து திரும்பிச்) சென்ற இயற்பகைநாயனார் அவ்வேதியரைக் காணாமல் தமது மனைவியாரைமாத்திரங்கண்டார்; (அப்பொழுது) விளங்குகின்ற பொன்மலையானது வெள்ளிமலையின்மேலிருந்து பிரகாசித்ததுபோலத் தமது இடப்பாகத்தில் எழுந்தருளிய உமாதேவியாரோடு ஆகாயத்தில் சிவபெருமானை ரிஷபவாகனத்தின்மேல் கண்டு தரிசித்தார்; ஆராமையினால் பூமியில் நில்லாமல் விழுந்து தொழுதார்; பூமியினின்றும் எழுந்து பின்னும் வந்தனஞ்செய்தார்.—எ-று. (௩க)

சொல்லுவ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லைவந் தருளி யென்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி
எல்லையி லின்ப வெள்ள மெனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடுஞ் சேவடி போற்றி யென்ன.

(இ-ள்.) (எம்பெருமானே! ஒன்றுக்கும் பற்றாத சிறியேனையும் ஓர்பொருளாகக்கருதி இவ்வாறு எழுந்தருளிவந்த கருணையின்பெருமையைக்குறித்துத்)தேவரீரைத் துதிப்பதற்கு ஒன்றும் அறியாதவனாக இருக்கின்றேன்; (ஆதலால் தேவரீரது பெருங்கருணையானது) நீடூழிவாழக்கடவது; இப்பொழுது அடியேனுக்குத் தரிசனங்கொடுத்தற் கெழுந்தருளிய திருக்கோலத்திற்கு வந்தனஞ்செய்கின்றேன்; விரைவாக எழுந்தருளிவந்து என்னை வழியடியனாக அடிமைகொண்டவரே! தேவரீருக்கு வந்தனம்; அளவிடப்படாத பேரின்பவெள்ளத்தை யென்னுள்ளே பெருகும்படி திருவருள்புரிந்த பெருமானே! தேவரீருக்கு வந்தனம்; தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற திருவடிகளுக்கு வந்தனம் என்று துதிக்க.—எ-று. (௩௨)

விண்ணிடை நின்ற வெள்ளை விடையவ ரடியார் தம்மை
எண்ணிய வுலகுதன்னி லிப்படி நம்பா லன்பு
பண்ணிய பரிவுகண்டு மகிழ்ந்தனம் பழுதி லாதாய்
நண்ணிய மனைவியோடு நம்முடன் போது கென்று.

(இ-ள்.) ஆகாயத்தில் காட்சிகொடுத்தருளிய வெள்ளிய ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமான் தமது அடியவராகிய இயற்பகைநாயனாரைப் பார்த்து யாவராலும் மதிக்கும்படி இந்நிலவுலகத்திலே இவ்விதமாக நம்மிடத்து அன்புசெய்த அடிமைத்திறத்தைப் பார்த்துச் சந்தோஷத்தையடைந்தோம்; ஓர் குற்றமும் இல்லாத அன்பனே! உனக்கு உரிமையாகப்பொருந்திய மனைவியாரோடு நம்முடனே வரக்கடவாய்என்று அருளிச்செய்து.—எ-று. (௩௩)

திருவளர் சிறப்பின் மிக்க திருத்தொண்டர் தமக்குந் தேற்ற
மருவிய தெய்வக் கற்பின் மனைவியார் தமக்குந் தக்க
பெருகிய வருளி னீடு பேறளித் திமையோ ரேத்தப்
பொருவிடைப் பாகர் மன்னும் பொற்பொது வதனுட் புக்கார்.

(இ-ள்.) அருட்செல்வமானது வளர்தற்குக் காரணமாகிய பெருஞ் சிறப்பினையுடைய இயற்பகைநாயனாருக்கும், தெளிவுபொருந்திய தெய்வீகமாகிய கற்பினையுடைய அவரது மனைவியாருக்கும் நிறைந்த பேரருளினால் உயர்ந்த மோக்ஷத்தைக் கொடுத்துத் தேவர்கள் வணங்கும்படியாக, போர்செய்கின்ற ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமான் கனகசபையில் பிரவேசித்தருளினார்.—எ-று. (௩௪)

வானவர் பூவின் மாரி பொழியமா மறைக ளார்ப்ப
ஞானமா முனிவர் போற்ற நலமிகு சிவலோ கத்தில்
ஊனமி றொண்டர் கும்பிட் டுடனுறை பெருமை பெற்றார்
ஏனைய சுற்றத் தாரும் வானிடை யின்பம் பெற்றார்.

(இ-ள்.) தேவர்கள் புஷ்பமாரி பொழியவும், சிறந்த வேதங்கள் முழங்கவும், சிவஞானத்தையுடைய பெரிய முனிவர்கள் தோத்திரஞ்செய்யவும் நன்மை பொருந்திய சிவலோகத்தில் யாதொரு குறைவுமில்லாத அவ்வியற்பகை நாயனார் சிவபெருமானைத் தொழுதுகொண்டே அவர்சமீபத்தில் வாழ்ந்திருக்கும் பெருமையைப் பெற்றார்; அவரோடு பகைத்துப் போர்செய்து இறந்த சுற்றத்தார்களனைவரும் சுவர்க்கலோகத்திற் சென்று இன்பத்தை அனுபவித்தார்கள்.—எ-று. (கூஉ)

இன்புறுந் தாரந் தன்னை யீசனுக் கன்ப ரென்றே
துன்புறா துதவுந் தொண்டர் பெருமையைத் தொழுது வாழ்த்தி
அன்புறு மனத்தா னாத னடியவர்க் கன்பு நீடு
மன்புக ழிளைசை மாறன் வளத்தினை வழுத்த லுற்றேன்.

(இ-ள்.) தாம் இன்பம் அனுபவிப்பதற்குக் காரணமாயிருந்த மனைவியைச் சிவபெருமானுக்குரிய அடியவரென்று நினைத்து யாதொரு வருத்தமுமில்லாமல் அவருக்குக் கொடுத்துவிட்ட இயற்பகைநாயனாருடைய திருத்தொண்டின் பெருமையைவணங்கி வாழ்த்துதல்செய்து, அன்பானது பொருந்திய மனத்தினால் சிவபெருமானுடைய அடியார்களிடத்தில் அன்பு மிகுந்திருக்கின்ற நிலைபெற்ற புகழினையுடைய இளையான்குடிமாறநாயனாருடைய பத்தியின்வளப்பத்தை அடியேன் துதிக்கத்தொடங்கினேன்.—எ-று. (௩௩)

இயற்பகைநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம் சஉ௩.



இளையான்குடிமாறநாயனர்

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# இளையான்குடிமாறநாயனார் புராணம்.

அம்பொ னீடிய வம்ப லத்தினி லாடு வாரடி சூடுவார்
தம்பி ரானடி மைத்தி றத்துயர் சால்பின் மேன்மை தரித்துளார்
நம்பு வாய்மையி னீடு சூத்திர நற்கு லஞ்செய் தவத்தினால்
இம்பர் ஞாலம் விளக்கி னாரிளை யான்கு டிப்பதி மாறனார்.

(இ-ள்.) அழகிய பொன்னினால் அலங்கரித்துச் சிறந்து விளங்குகின்ற திருவம்பலத்திலே ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற சிவபெருமானுடைய திருவடிகளைச் சதாகாலமும் தமது உள்ளத்தில் தியானஞ்செய்கின்றவர்; அப்பெருமானுடைய அடிமைத்திறத்தில் உயர்ந்தமேன்மையைப் பெற்றுள்ளவர்; யாவரும் நம்பத்தகுந்த சத்தியத்தினால் உயர்ந்த வேளாளர்களது நல்லகுலத்தார்செய்த தவத்தினாலே அவதாரஞ்செய்து இந்நிலவுலகத்தைப் பத்திமுதலியவற்றால் விளங்கச்செய்தவர் (அவர் திருப்பெயர் யாதென்றால்) இளையான்குடிமாறநாயனார். ()

ஏரின் மல்கு வளத்தி னால்வரு மெல்லை யில்லதொர் செல்வமு
நீரின் மல்கிய வேணி யாரடி யார்தி றத்து நிறைந்ததோர்
சீரின் மல்கிய வன்பின் மேன்மை திருந்த மன்னிய சிந்தையும்
பாரின் மல்க விரும்பி மற்றவை பெற்ற நீடு பயன்கொள்வார்.

(இ-ள்.) உழவுத்தொழில்செய்து பயிரிடும் வளப்பத்தால் உண்டாகிய அளவில்லாத செந்நெல்முதலாகிய செல்வங்களும், கங்கைநீரினால் விளங்குகின்ற சடையினையுடைய சிவபெருமானது அடியார்கள்விஷயத்தில் நிறைந்திருக்கின்ற சிறப்புப்பொருந்திய அன்பினால் மேன்மையுற்றுத் திருத்தமாக நிலைபெற்ற மனமும் இந்நிலவுலகத்தில் தமக்கு உண்டாயிருக்கும்படி விரும்பி அவ்விரண்டினையும் அடைந்ததனாலுண்டாகிய பயனைப் பெற்றுக்கொள்வாராயினார்.—எ-று.

நீடுபயன் கொள்ளுதலாவது:—சிவனடியார்களுக்குத் திருவமுது படைத்து அன்புபூண்டு அதன்வழித்தாக இருவகைப்பயன்களையு மடைதல். (உ)

ஆர மென்பு புனைந்த வையர்த மன்ப ரென்பதொர் தன்மையா
னேர வந்தவர் யாவராயினு நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத்
தீர மென்மது ரப்ப தம்பரி வெய்த முன்னுரை செய்தபின்.

(இ-ள்.) எலும்பினை மாலையாகத்தரித்த சிவபெருமானுடையஅடியார்களென்று சொல்லப்படுந் தன்மையினால் தம்மிடத்தில் வந்தவர்கள் எவர்களாயிருந்தா

லும் அழிவில்லாத பத்தி மிகும்படி எதிர்கொண்டு வந்து தமது இரண்டு கைகளை யும் குவித்துக்கொண்டு நின்று அவர்கள் காதுகளில் குளிர்ந்த மிருதுவான இனிய வார்த்தைகளை அவர்கள் சந்தோஷிக்கும்படி முதலில் சொன்னபின்பு.—எ-று.

"ஆரமென்பு புனைந்தவையர்" என்பதன் வரலாறு, சிவபெருமானனவர் பிரமன்-விஷ்ணுமுதலாகிய தேவர்களைச் சிருட்டித்து உலககாரியங்களை நடத்து வித்துப் பின் சர்வசங்காரகாலத்தில் அப்பிரமவிஷ்ணுக்களை யழித்து அவர்கள் எலும்புகளை மாலையாகக்கோத்துத் தாமே முதற்பெருங்கடவுளென்பதை நிலை நிறு த்தற்பொருட்டு ஓரடையாளமாகத் தரித்துக்கொண்டனர் என்பதாம். இதனை,

"நங்காயி தென்னதவ நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடீ
கங்காள மாமாகேள் காலாந்த ரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ"—என்னுந் தமிழ்வே

தத்தானுணர்க. எக்குலத்தினராயினும் சிவனடியார்களாயிருந்தால் அவர்களைச் சிவ னாகவே கண்டு அன்புசெய்து வணங்குவாரென்பது தோன்ற "யாவராயினும் * * செய்தபின்" என்று கூறினர்.

இதுமுதலிரண்டு பாடலுங்குளகம். (௯)

கொண்டு வந்து மனைப்பு குந்து குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலி னாத னத்திடை வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தி லாறு சுவைத்தி றத்தினி லொப்பிலா
அண்டர் நாயகர் தொண்ட ரிச்சையி லமுது செய்ய வளித்துளார்.

(இ-ள்.) இவ்வித உபசாரத்தோடு சிவனடியார்களை அழைத்துக்கொண்டு வந்து தமது வீட்டிற்குள் பிரவேசித்து அவ்வடியார்களின் விளங்குகின்ற திருவடி களை நீரினால் அலம்பி நிறைந்த அன்போடு அவர்களை ஆசனத்தில் உட்காரவைத் துப் பாதபூசை செய்தபின்பு உணவுகளை நான்கு விதத்தினால் அறுவகைச் சுவை யோடும் ஒப்பில்லாத தேவநாயகராகிய சிவபெருமானது அடியார்கள் தங்கள் இஷ்டப்படியே அமுதுசெய்யும்படி நாள்தோறும் இடுகின்றவர்.—எ-று.

நால்விதவுண்டியாவன - உண்ணல், தின்னல், நக்கல், பருகல் என்பன; இவற்றுள் உண்ணல் - சோறுமுதலியன; தின்னல் - கறிமுதலியன; நக்கல்-குழ ம்பு, தேன், பச்சடிமுதலியன; பருகல்-பாயசம், நீர் முதலியன. அறுசுவையாவன- கைப்பு, புளிப்பு, இனிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, உவர்ப்பு என்பன. (௪)

ஆன நாயக ரன்ப ரானவ ரளவி லாருள மகிழவே
நானா நாளுநி றைந்து வந்து நுகர்ந்த தன்மையி னன்மையா
னீன மாநிதி யின்ப ரப்பு நெருங்கு செல்வ நிலாவியெண்
டோனி னாரள கைக்கி ருத்திய தோழ னாரென வாழுநாள்.

(இ-ள்.) தம்மை அடிமையாகக் கொண்டருளிய சிவபெருமானுடைய எண்ணிறந்த அடியார்கள் மனங்களிக்கும்படி தினந்தோறும் கூட்டமாகத் திர ண்டுவந்து தமது வீட்டில் புசித்துக்கொண்டிருக்கின்ற நன்மையினாலே மிகுந்த

பொன்மணி முதலிய பெருஞ்செல்வத்தின் தொகுதியானது மிகுதியாகத்தக்க செல்வமானது மேற்பட்டு விளங்கி, எட்டுத்திருப்புயங்களையுடைய் சிவபெருமானு னவர் அளகாபுரிக்குத் தலைவனாக ஏற்படுத்திய தோழனாகிய குபேரனைப்போல வாழ்கின்ற காலத்தில்.—எ-று. (ரு)

செல்வ மேவிய நாளி லிச்செயல் செய்வ தன்றியு மெய்யினால்
அல்ல னல்குர வான போதினும் வல்ல ரென்றறி விக்கவே
மல்ல னீடிய செல்வ மெல்ல மறைந்து நாடொறு மாறிவந்
தொல்லை யில்வறு மைப்ப தம்புக வுன்னி னார்தில்லை மன்னினார்.

(இ-ள்.) தமக்குச் செல்வமுண்டாகிய காலத்தில் இவ்விதமாக அடியார்களுக்கு அமுதுபடைத்தல்முதலிய பணிவிடைகளைச் செய்வதுமாத்திரமல்லாமல் துன்பத்தைத் தருகின்ற தரித்திரம் உண்டானகாலத்திலும் தமது மெய்மையாகிய அன்பினால் இவ்வாறே செய்யத்தக்கவரென்று யாவர்க்குந் தெரிவிக்கும்பொருட்டு, வளப்பம்பொருந்திய இவரது பெருஞ்செல்வமானது நாளுக்குநாள் மெல்லமெல்லக்குறைந்து முன்னிருந்த நிலைமைமாறி விரைவாகத் தரித்திரநிலைமை யடையும்படி திருத்தில்லையில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானார் திருவுள்ளங்கொண்டருளினார்.—எ-று. (சா)

"ஒல்லைவல்வறுமைப்பதம்" என்றும் பாடம்.

இன்ன வாறுவ ளஞ்சு ருங்கவு மெம்பி ரானிளை யான்குடி
மன்னன் மாறன் மனஞ்சு ருங்குத லின்றி யுள்ளன மாறியுந்
தன்னை மாறியி றுக்க வுள்ள கடன்க டக்கன கொண்டுபின்
முன்னை மாறில் திருப்ப ணிக்கண் முதிர்ந்த செய்கைய ராயினார்.

(இ-ள்.) இவ்விதமாகச் சிவபெருமானுடைய திருவருளால் தமது செல்வங்கள் நாளுக்குநாள் குறையவும் எமது பெருமானாகிய இளையான்குடிமாறநாயனார் தமது மனத்தில் கொஞ்சமும் பத்திகுறையாமல் தம்வீட்டிலுள்ள நகைமுதலாகிய பொருள்களை விற்றும், தம்மைக்கூட ஒருவனுக்கு விற்றுக் கொடுக்கத்தக்க அவ்வளவு கடன்களைத் தகுதியாக வாங்கியும் பின்பு முன்போலக் குறைவில்லாத திருத்தொண்டு செய்வதில் மேம்பட்ட செய்கையையுடையவரா யிருந்தார்.—எ-று.

மற்ற வன்செய லின்ன தன்மைய தாக மாலய னானவக்
கொற்ற வேனமு மன்ன முந்தெரி யாத கொள்கைய ராயினார்
பெற்ற மூர்வது மின்றி நீடிய பேதை யாளுட னின்றியோர்
நற்ற வத்தவர் வேடமே கொடு ஞால முய்ந்திட நண்ணினார்.

(இ-ள்.) இளையான்குடிமாறநாயனாருடைய பத்தியின் செயலானது இப்படிப்பட்டதாயிருக்கத் திருமால்-பிரமன் என்று சொல்லப்பட்ட அவ்வெற்றிபொருந்திய பன்றியும், அன்னமும் (அடியையும் முடியையும் தேடி) அறியாமல் மறைந்துநின்ற சிவபெருமான் ரிஷபவாகனத்தில் எழுந்தருளாமலும் தமது இடப்பாகத்தில் வீற்றிருக்கின்ற உமாதேவியாரில்லாமலும் தாமே ஓர் சிறந்த தவத்தையுடைய சிவனடியார் வேடங்கொண்டு உலகத்தார் பிழைக்கும்பொருட்டு அவ்விளையான்குடிமாறநாயனாருடைய வீட்டிற்கு எழுந்தருளினார்.—எ-று. (அ)

வேறு.

மாரிக் காலத் திரவினில் வைகியோர்
தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்ல மடைத்தபின் பண்புற
வேரித் தாரன் விருந்தெதிர் கொண்டனன்.

(இ-ள்.) மழைக்காலத்தில் ஒருநாளிரவில் தனியே விழித்துக்கொண்டிருந்து தமக்கு உபகரிப்பார் ஒருவருமில்லாமல் (உணவு கொள்ளாமையால்) பசி அதிகப்படுவதை அடக்கிக்கொண்டு தம்முடைய வீட்டுக்கதவை மூடினபின்பு தேன்பொருந்திய மலர்மாலையைத்தரித்த இளையான்குடிமாறநாயனார் தம்முடைய வீட்டின் கதவைத்தட்டி அழைத்த சிவபெருமானாகிய விருந்தினரை ஆசையோடு எதிர்கொண்டு வரவழைத்தார்.—எ-று.

பெருமழையும் பேரிருளுமா யிருந்ததென்பது தோன்ற "மாரிக்காலத்திரவினில்" என்றும், உணவின்மையால் நித்திரை பிடிக்கவில்லை என்பது தோன்ற "வைகி" என்றும், உறவினர் - சிநேகர்-அயலார்முதலியவர்களால் ஒருதவியுமின்றென்பது தோன்ற "ஓர் தாரிப்பின்றி" என்றும், அன்றுமாத்திரமேயன்றி அதற்கு முன்பும் சிலநாள்களாய் பசித்திருந்தாரென்பது தோன்ற "பசிதலைக்கொள்வது பாரித்து" என்றும், நெடுநேரமாயிற்றென்பதுதோன்ற "இல்ல மடைத்த பின்" என்றும், அவ்வறுமைக்காலத்தும் அகத்தொன்றும் புறத்தொன்றுமாயிராமல் விரும்பி யுபசரித்தாரென்பது தோன்ற "பண்புற" என்றும், வறுமையும் அகாலமுமாகிய காலத்தும் வருகின்ற அடியார்களுக்குத் தம்மால் கூடியவரையில் அமுது படைப்பவரென்பது தோன்ற "விருந்தெதிர்கொண்டனன்" என்றுங் கூறினார். (கசு)

ஈர மேனியை நீக்கி யிடங்கொடுத்
தார வின்னமு தூட்டுதற் காசையாற்
றார மாதரை நோக்கித் தபோதனர்
தீர வேபசித் தார்செய்வ தென்னென.

(இ-ள்.) மழையினால் நனைந்துவந்த சிவபெருமானாகிய அவ்விருந்தினரது திருமேனியின் ஈரத்தை வஸ்திரத்தினால் துடைத்து, அவரிருப்பதற்குத் தகுதியான இடத்தைக்கொடுத்து அவருக்குத் திருப்தியாக இனியஉணவை உண்ணும்படி செய்வதற்கு ஆசைகொண்டு தமது மனைவியாரைப் பார்த்துச் சிறந்த தவச்செல்வத்தினையுடைய இவ்வடியவர் மிகவும் பசித்திருக்கின்றார் (ஆதலால்) இதற்காக நாம் செய்யவேண்டிய தென்னவென்று சொல்லிப் (பின்னுஞ் சொல்லுகின்றார்).

இதுமுதலைந்துபாடலுங் குளகம். (கஎ)

நமக்கு முன்பிங் குணவிலை யாயினும்
இமக்கு லக்கொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாமின் னடிசி றகவுற
அமைக்கு மாறெங்ங னேயணங் கேயென.

(இ-ள்.) நமது வீட்டில் நாம் உண்ணுதற்கு முன்னமே உணவில்லை, அப்படியிருந்தாலும் சிறந்த பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமானுக்கு அன்பராகிய இவ்வடியவருக்கு நாம் ஊட்டுதற்கு இனிய உணவை மேன்மையாகச் சமைக்கும் விதம் எப்படி பெண்ணே! என்று சொல்ல.—எ-று.

இமமலை என்பது குறைந்து நின்றது. (கக)

மாது கூறுவண் மற்றொன்றுங் காண்கிலேன்
ஏதி லாரு மினித்தரு வாரில்லை
போது வைகிற்று போமிடம் வேறிலை
தீது செய்வினை யேற்கென் செயலென்று.

(இ-ள்.) இப்படி இளையான்குடிமாறநாயனார் சொல்ல (அதைக்கேட்ட) அவரது மனைவியார் சொல்லுவார், (அவருக்குத் திருவமுது சமைப்பதற்கு) ஒரு பதார்த்தமும் இல்லை; இனிமேல் கடன்கொடுப்பதற்கு அயலாருமில்லை; (கடன் வாங்கவென்றாலும்) நெடுநேரமாயிற்று; ஆதலால் போய்க்கேட்பதற்கு இடமும் வேறேயில்லை; கொடிய தீவினையையுடைய எனக்கு என்ன செயலிருக்கின்றதென்றுசொல்லி.—எ-று.

அரிசியேயன்றிச் சாமை-தினை முதலிய ஒன்றுமில்லை யென்பதுதோன்ற "மற்றொன்றுங் காண்கிலேன்" என்றும், நமக்குக் கடன் மேலிட்டிருக்கின்றமையால் இனி கடன்கொடுப்பவர் ஒருவருமின்றென்பதுதோன்ற "ஏதிலாருமினித்தருவாரில்லை"என்றும், வேறொரிடத்திற்சென்று கடன்வாங்குவோமென்றாலும் நெடுநேரமாயினமையால் போவதற்கும் கேட்பதற்கும் கூடாதென்பதுதோன்ற "போதுவைகிற்று போமிடம்வேறிலை" என்றும், இதுவரையில் குறைவின்றிச் செய்துவந்த அடியார்பூசைக்கு இப்பொழுது பழுதுநேர்ந்தது முன்னைய தீவினையேயன்றி வேறன்றென்பதுதோன்ற "தீதுசெய் வினையேன்" என்றுங் கூறினர்.

செல்ல னீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்ல னீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலு மாகுமற்
றல்ல தொன்றறி யேனென் றயர்வுற.

(இ-ள்.) நமது துன்பம் நீங்கும்படி இன்றுபகல் கழனியில் விதைத்திருக்கின்ற சம்பாநெல்லினது வளப்பத்தையுடைய நீரிலூறிய முளையை ஓர் கூடையில் வாரிக்கொண்டுவந்தால் கூடினவரையில் அமுது சமைப்பதற்கும் ஆகும்; இதுவல்லாமல் வேறொன்றையும் அடியாள் அறியமாட்டேனென்றுசொல்லி துன்பப்பட்டபொழுது.—எ-று.

"செல்வநீங்க" என்றும் பாடபேதம். (கஉ)

மற்ற மாற்ற மனைவியார் கூறமுன்
பெற்ற செல்வ மெனப்பெரி துண்மகிழ்ந்
துற்ற காதலி னுலொருப் பட்டனர்
சுற்று நீர்வயல் செல்லத் தொடங்குவார்.

(இ-ள்.) இவ்வாறான வார்த்தையைத் தமது மனைவியார் சொல்லக்கேட்டு இளையான்குடிமாறநாயனர் தாம் முன்பு அடைந்த செல்வத்தைப்போல அதைக் கேட்டவுடனே மிகுதியும் சந்தோஷத்தையடைந்து தம்மிடத்தில் தோன்றிய அன்பினால் அப்படிசெய்வதற்குச் சம்மதித்து நீர் நிறைந்தகழனிக்குப் போகும்படியாகப் புறப்பட்டார்.—எ-று. (கச)

பெருகு வானம் பிறங்க மழைபொழிந்
தருகு நாப்ப ணறிவருங் கங்குறன்
கருகு மையிரு ளின்கணங் கட்டுவிட்
டொருகு கின்றது போன்ற துலகெலாம்.

(இ-ள்.) (இளையான்குடிமாறநாயனர் நென்முளை வாரிக்கொண்டுவரும்படி தமது வயலுக்குப் போகும்பொழுது) மிகுதியாகிய மேகக்கூட்டங்கள் அதிகமாக மழைபெய்து (அதனால்) சமீபமான இடமும், மத்தியிலுள்ள இடமும் அறிதற்கருமையாகிய அவ்வர்த்தராத்திரியானது கறுத்தமைபோன்ற இருட்கூட்டங்கள் நெக்குவிட்டு உலகமுழுவதும் உருகினாற்போலப் பரவியிருந்தது.—எ-று.

பிறங்க என்பதற்கு வெள்ளமாகத்தோன்ற எனினும் பொருந்தும். (கரு)

எண்ணு மிவ்வுல கத்தவர் யாவருந்
துண்ணெ னும்படி தோன்றமுன் றோன்றிடில்
வண்ண நீடிய மைக்குழம் பாமென்று
நண்ணல் செய்யா நடுவிருள் யாமத்து.

(இ-ள்.) மதிக்கத்தகுந்த இவ்வுலகத்தில் உள்ளவர்கள் யாவரும் அஞ்சும்படி (இருள் கண்களுக்குத்) தோன்ற அவ்விருளின் முன்னேசென்றால் கருமைநிற மிகுந்த மைக்குழம்பினால் பூசப்படுவோமென்று ஒருவரும் வெளியில் புறப்படுதலில்லாத இருளினையுடைய நடுராத்திரிப்பொழுதில்.—எ-று.

"துண்ணெ னும்படி தோன்றமுன் றேய்ந்திடில்" என்றும் பாடபேதம் இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (கசு)

உள்ள மன்புகொண் டூக்கவோர் பேரிடாக்
கொள்ள முன்கவித் துக்குறி யின்வழிப்
புள்ளு றங்கும் வயல்புகப் போயினார்
வள்ள லாரிளை யான்குடி மாறனார்.

(இ-ள்.) தமது மனத்தை அன்பானது இழுத்துச் செலுத்த ஒரு பெரிய கூடையை நனையாதிருக்கும்படி தலையில் கவிழ்த்துக்கொண்டு தம்முடைய வயல் இவ்விடத்திருக்கின்றதென்னும் குறிப்பின்வழியே பறவைகள் நித்திரைகொள்ளுதற் கிடமாகிய வயலினிடத்திற்குப் போயினார், (துன்பம் நேரிட்டகாலத்தும் தம்மை யடைந்தவர்களுக்கு இல்லையென்னாமல் திருவமுது படைக்கின்ற) பெருவள்ளலாகிய இளையான்குடிமாறநாயனார்.—எ-று.

வள்ளல்=வரையாது கொடுப்போன். இடா=இறைகூடை. மிகுந்த நீர்வளமுடையதென்பார் "புள்ளுறங்கும் வயல்" என்று கூறினார். (கஎ)

காலி னுற்றட விச்சென்று கைகளாற்
சாலி வெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலி வாரி யிடாநிறை யக்கொண்டு
மேலெ டுத்துச் சுமந்தொல்லை மீண்டனர்.

(இ-ள்.) (முளைகள் நாற்றுவிட்டிருக்கும் இடத்தைத்) தமது கால்களினால் தடவிக்கொண்டுபோய் அவ்வயலையடைந்து கைகளினால் செந்நெல்லினது வெண்மையாகிய முளைகள் நீரின்வழியே மிதந்து ஒதுங்கியிருக்கின்றவைகளைச் சேர்த்து வாரிக் கூடைநிறையப்போட்டுத் தலைமேலெடுத்துவைத்துச் சுமந்துகொண்டு விரைவாகத் தமது வீட்டிற்குத் திரும்பிவந்தார்.—எ-று. (கஅ)

வேறு.

வந்தபின் மனைவி யாரும் வாய்தலி னின்று வாங்கிச்
சிந்தையில் விரும்பி நீரிற் சேற்றினை யலம்பி யூற்றி
வெந்தழ லடுப்பின் மாட்ட விறகில்லை யென்ன மேலோர்
அந்தமின் மனையி னீடுமலக்கினை யறுத்து வீழ்த்தார்.

(இ-ள்.) (இளையான்குடிமாறநாயனார் வயலிற்சென்று கூடையில் சம்பாவின்முளைகளை வாரிக்கொண்டு) தமது வீட்டிற்கு வந்தபின்பு அவரது மனைவியாரும் வாசலில் நின்று எதிர்பார்த்திருந்து அக்கூடையை வாங்கிக்கொண்டு மனத்தில் சந்தோஷத்தை யடைந்து நீரினாலே அந்த நெல்லில் ஒட்டியிருந்த சேற்றைக் கழுவியூற்றிப் பின்பு அடுப்பில் வைத்து நெருப்பு மூட்டுவதற்கு விறகில்லையேயென்று சொல்ல அவ்விளையான்குடிமாறநாயனார் கிலமாயிருக்கின்ற தம்முடைய வீட்டின் வரிச்சுகளை அறுத்துத்தள்ளினார்.—எ-று.

சுவர் இடிந்தும், கூரை விழுந்தும், தூண்கள் சாய்ந்தும் பலவாறு பழுதுபட்டும் அதனைக் கட்டுவதற்கு நிர்வாகமில்லாமையால் அதிகமாகக் கிலமுற்றிருத்தலின் "அந்தமில் மனை" என்று கூறினார். அந்தம்=அழகு. (கக)

முறித்தவை யடுப்பின் மாட்டி முளைவித்துப் பதமுன் கொள்ள
வறுத்தபின் னரிசி யாக்கி வாக்கிய வுலையிற் பெய்து
வெறுப்பிலின் னடிசி லாக்கி மேம்படு கற்பின் மிக்கார்
கறிக்கினி யென்செய் கோமென் றிறைஞ்சினார் கணவ னாரை.

(இ-ள்.) அந்தவீட்டின் வரிச்சுகளை முறித்து அடுப்பில்வைத்து முளைத்த நெல்விரைகள் ஈரம்போய்ப் பதமாகும்படி வறுத்தபின்பு அரிசியாகக் குத்தியெடுத்து நீர்வார்த்துக் காய்ந்திருக்கின்ற உலையில் அவ்வரிசியைப் போட்டு விருப்பத்தைத் தரத்தக்க இனிய சோறாகச்சமைத்து மேலாகிய கற்பிற்சிறந்த அந்நாயனாரது மனைவியார் தமது கணவனாராகிய இளையான்குடிமாறநாயனாரைப் பார்த்துப் பதார்த்தத்திற்கு ஒன்றுமில்லையே இனி என்னசெய்வோமென்று வணங்கினார்.

வழிவரு மிளைப்பி னோடும் வருந்திய பசியி னாலே
அழிவுறு மைய னென்னு மன்பினிற் பொலிந்து சென்று
குழிநிரம் பாத புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப்
பழிமுதல் பறிப்பார் போலப் பறித்தவை கறிக்கு நல்க.

(இ-ள்.) வழிநடந்து வந்ததனா லுண்டாகிய இளைப்போடு தம்மை வருத்துகின்ற பசியினாலே இச்சிவனடியார் களைத்து வருந்துவாரென்னும் இரக்கத்தோ

டும் விளைவாகப்போய்க் குழிநிரம்பி மேல் எழும்பாது அடங்கியிருக்கின்ற புன்செய்களிலுள்ள சிறிய பயிர்களைத்தடவித் தமக்குண்டாகிய பாசத்தின் இழிவாகிய வேரைப் பறிப்பவரைப்போல அவைகளைப் பறித்துக்கொண்டுவந்து கறியமுதுசெய்யும்படி கொடுக்க.—எ-று.

"குழிநிரம்பாதபுன்செய்க்குறும்பயிர்" என்றதனால் பூசினி, சுரை, பீர்க்கு முதலியனவெனக் கொள்க. (உக)

மனைவியார் கொழுநர் தந்த மனமகிழ் கறிக ளாய்ந்து
புனலிடைக் கழுவித் தக்க புனிதபாத் திரத்துக் கைம்மை
வினையினில் வேறு வேறு கறியமு தாக்கிப் பண்டை
நினைவினாற் குறையை நேர்ந்து திருவமு தமைத்து நின்று.

(இ-ள்.) இளையான்குடிமாறநாயனாரது மனைவியார் தமது கணவனார்கொடுத்த மனமகிழத்தக்கதாகிய பயிர்க்கறிகளை ஆராய்ந்து பின்பு நீர்விட்டுக் கழுவித் தகுந்த பரிசுத்தம்பொருந்திய பாத்திரங்களில் இட்டுக் கைத்திறத்தினால் அவைகளைத் தனித்தனி கறியமுதாகச்செய்து முன்பு தாம் செல்வத்தோடு வாழ்ந்திருந்த காலத்தில் வேண்டிய உபகரணங்க ளனைத்து மிருந்ததுபோல இப்பொழுது இல்லையேயென்னும் நினைவினால் மனத்தில் குறைவைத்துக்கொண்டு மற்றும் செய்ய வேண்டிய திருவமுதுஞ் செய்துநின்று.—எ-று. (உஉ)

கணவனார் தம்மை நோக்கிக் கறியமு தான காட்டி
இணையிலா தவரை யீண்ட வமுதுசெய் விப்போ மென்ன
உணர்வின லுணர வொண்ணா வொருவரை யுணர்த்த வேண்டி
அணையமுன் சென்று நின்றங் கவர்துயி லகற்ற லுற்றார்.

(இ-ள்.) தம்முடைய கணவனாராகிய இளையான்குடிமாறநாயனாரைப் பார்த்துச் சமைக்கப்பட்டிருக்கின்ற பதார்த்தத்தையும் திருவமுதையும் அவருக்குக் காண்பித்து ஒப்பில்லாத இவ்வடியவரைத் திருவமுதுசெய்விப்போமென்று சொல்ல,அப்பொழுது இளையான்குடிமாறநாயனார் தமது அறிவினால் இத்தன்மையினரென்று அறிதற்கரிய சிவபெருமானாகிய அடியவருக்குத் தெரிவிக்கும்படியாகச் சமீபமாக அவர் திருமுன்னே சென்று நின்று அவரை நித்திரையினின்றும் எழுப்பத்தொடங்கினார்.—எ-று. (உந)

அழுந்திய விடரு ணீங்கி யடியனே னுய்ய வென்பா
லெழுந்தருள் பெரியோ யீண்ட வமுதுசெய் தருள்க வென்று
தொழும்பனா ருரைத்த போதிற் சோதியா யெழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாருந் தொண்டருந் திகைத்து நின்றார்.

(இ-ள்.) பிறவிச்சேற்றில் அழுந்திக்கிடக்குந் துன்பத்தினின்று நீங்கி அடியேன் பிழைக்கும்பொருட்டுத்திருவுள்ளங்கொண்டு என்னிடத்தில் விருந்தினனாக எழுந்தருளிய பெரியோனே! அடியேனால் சமைக்கப்பட்ட உணவினைத் தேவரீர் அங்கீகரித்துத் திருவமுது செய்தருளவேண்டுமென்று இளையான்குடிமாறநாயனார் விண்ணப்பஞ்செய்தபொழுது அடியவர்வேடங்கொண்டுவந்த சிவபெருமான் சோதிசொரூபமாக எழுந்து மேலே தோன்ற, சிறந்த அன்பாகிய செல்வத்தையுடைய மனைவியாரும் நாயனாரும் அதைக்கண்டு திகைத்து நின்றார்கள்.—எ-று. (உச)

மாலயற் கரிய நாதன் வடிவொரு சோதி யாகச்
சாலவே மயங்கு வார்க்குச் சங்கரன் றுன்ம கிழ்ந்தே
ஏலவார் குழலா டன்னே டிடபவா கனனுய்த் தோன்றிச்
சீலமார் பூசை செய்த திருத்தொண்டர் தம்மை நோக்கி.

(இ-ள்.) திருமால்-பிரமன் என்னும் இருவர்களாலும் தேடிக் காணப்படாதவராகிய சிவபெருமானது திருவுருவமானது ஒப்பற்ற சோதிசொரூபமாக இருக்கப்பார்த்து (இஃதென்னவென்று கருதி) மிகவும் மயங்குகின்றவராகிய அவ்விருவர்க்கும், சிவபெருமான் திருவுள்ளமகிழ்ந்து மயிர்ச்சார்ந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய உமாதேவியாரோடு ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளிக் காட்சிகொடுத்து, சிறந்த அடியார்பூசையைச்செய்த இளையான்குடிமாறநாயனுரைப் பார்த்தருளி.—எ-று. (உரு)

அன்பனே யன்பர் பூசை யளித்தநீ யணங்கி னேடும்
என்பெருந் தலத்தை யெய்தி யிருநிதிக் கிழவன் றுனே
முன்பெரு நிதிய மேந்தி மொழிவழி யேவல் கேட்ப
இன்பமார்ந் திருக்க வென்றே யருள்செய்தா னெவர்க்கு மிக்கான்.

(இ-ள்.) (நம்மிடத்துச் சிறந்த பத்தியுள்ள) அன்பனே! அடியார்களுக்குத் திருவமுதுபடைத்தலாகிய பூசையைச் செய்த நீ உனது மனைவியாரோடும் எமது சிறந்த சிவபதத்தை யடைந்து பெருஞ்செல்வத்தையுடைய குபேரனனவன் உனக்குமுன்னே பெரிய சங்கநிதி முதலாகிய பொருள்களைக் கையிலேந்திக்கொண்டு உன் உத்தரவின்படியே ஏவல்தொழிலைச்செய்ய இன்பத்தையனுபவித்திருக்கக்கடவாயாகவென்று அருளிச்செய்தார், எல்லாத்தேவர்களுக்கும் தலைவராகிய சிவபெருமான்.—எ-று.

"என்பெருமுலகம்" என்றும் பாடம். (உசு)

இப்பரி சிவர்க்குத் தக்க வகையினு லின்ப நல்கி
முப்புரஞ் செற்று ரன்பர் முன்பெழுந் தருளிப் போனுர்
அப்பெரி யவர்தந் தூய வடியிணை தலைமேற் கொண்டு
மெய்ப்பொருட் சேதி வேந்தன் செயலினை விளம்ப லுற்றேன்.

(இ-ள்.) இவ்விதமாக இவ்விளையான்குடிமாறநாயனுருக்கும் இவரது மனைவியாருக்கும் தகுந்தவகையோடு (சிவபதத்தில் வாழ்ந்திருத்தலாகிய) பேரின்பத்தைக்கொடுத்துத் திரிபுரதகனராகிய சிவபெருமான் அவ்வடியவருக்கு முன்னே அந்தர்த்தானமாயினுர். அத்தன்மையாகிய இளையான்குடிமாறநாயனுரென்னும் பெரியோரது பரிசுத்தம் பொருந்திய இரண்டு திருவடிகளையும் சிரசின்மேல்வைத்துக்கொண்டு சேதிநாட்டரசராகிய மெய்ப்பொருணயனுரது அடிமைத்திறத்தைச் சொல்லத்தொடங்குகின்றேன்.—எ-று. (உஎ)

இளையான்குடிமாறநாயனுர்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் சுசுசு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மெய்ப்பொருணாயனார் புராணம்.

சேதிநன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாக ரன்பின் வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை பூண்டு
காதலா லீசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார்.

(இ-ள்.) நல்ல சேதிநாட்டில் சிறப்புற்றோங்கிய திருக்கோவலூரில் நிலையாக வாசஞ்செய்து, உமாதேவியை ஒரு பாகத்திலுடைய சிவபெருமானுக்கு அன்புசெய்தொழுகுகின்ற மலையாளர்களுக்கு அரசராயுள்ளவர், வேதத்திற் சொல்லப்பட்ட நன்மார்க்கத்தின் உண்மையானது (உலகத்தில்) விளங்கும்படியாக அதனை மேன்மையாகக்கொண்டு அன்போடும் சிவபெருமானுடைய அடியார்களது திருவுள்ளக்குறிப்பையறிந்து (அவர்களுக்குப்) பணிவிடை செய்கின்றவர்.—எ-று. (க)

அரசிய னெறியின் வந்த வறநெறி வழாமற் காத்து
வரைநெடுந் தோளால் வென்று மாற்றலர் முனைகண் மாற்றி
யுரைதிறம் பாத நீதி யோங்குநீர் மையினின் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையா னன்பர் வேடமே சிந்தை செய்வார்.

(இ-ள்.) அரசாட்சிக் குரியவழியினின்றும் முறைமையாக வந்த தருமவழியைத்தவறாமல் பாதுகாத்து, மலையையொத்த பெரியபுஜபலத்தின் மிகுதியால் (பகைவர்களை) வென்று அப்பகைவர்களது படைமுனையையழித்து, சொன்ன சொல்தவறாமல் நடக்கின்ற நீதிமிகுந்த நற்குணத்தில் சிறந்தவர், (அவர்) அலைகளை வீசுகின்ற கங்காநதியைத்தரித்த சடையினையுடைய சிவபெருமானது அடியார்களின் திருவேடத்தையே மெய்ப்பொருளென்று சிந்திக்குங்காரணத்தினால் மெய்ப்பொருணாயனாரென்று சொல்லப்படுகின்றவர்.—எ-று. (உ)

மங்கையைப் பாக மாக வுடையவர் மன்னுங் கோயில்
எங்கணும் பூசை நீடி யேழிசைப் பாட லாடல்
பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கணா யகருக் கன்பர் தாளலாற் சார்பொன் றில்லார்.

(இ-ள்.) உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயில்களிலெல்லாம் பூசைகளைக் குறைவில்லாமல் நடத்தி சப்தஸ்வரத்தோடு கூடியபாடல்களும் ஆடல்களும் மிகுந்த திருவிழாச் சிறப்போடும் ஓங்கும்பொருட்டு அவைகளைப் பாதுகாத்து வாழ்கின்றவர்; தங்கள்நாய

கராகிய சிவபெருமானது அடியார்களின் திருவடிகளேயல்லாமல் வேறொன்றை யுந் தமக்குத் துணையாக எண்ணாதவர்.—எ-று. (௩)

தேடிய மாடு நீடு செல்வமுந் தில்லை மன்று
ளாடிய பெருமா னன்பர்க் காவன வாகு மென்று
நாடிய மனத்தி னோடு நாயன்மா ரணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார்.

(இ-ள்.) தாம் தேடியபொன்னும், விருத்தியாயிருக்கின்ற மற்றையசெல்வ ங்களும் தில்லைத்திருச்சிற்றம்பலத்தில்ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற சிவ பெருமானது அடியவர்களுக்கே உரியனவாகுமென்று மனதில் விருப்பத்தோடு சிவனடியார்கள் தம்மிடத்திற்கு எழுந்தருளும்போது அதனால் உண்டாகிய (அன் பினால்) சந்தோஷமதிகரிக்க அவர்களுக்கு ஓர் குறைவுமில்லாமலிருக்கும்படி வே ண்டியபொருள்களை மிகுதியாகக்கொடுத்து வந்தார்.—எ-று. (௪)

இன்னவா றொழுகு நாளி லிகற்றிறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லு மாசையா லமர்மேற் கொண்டு
பொன்னணி யோடை யானை பொருபரி காலாள் மற்றும்
பன்முறை யிழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப் போனான்.

(இ-ள்.) இவ்விதமாக மெய்ப்பொருணயனார் சிவனடியார்களுக்கு வழிபா டுசெய்து நீதியோடு அரசாட்சிசெய்து வருங்காலத்தில் (முத்தநாதனென்னும்) ஒரு அரசனானவன் அவரோடுபகைத்துநின்று அவரைப்போர்செய்து வெல்லவே ண்டுமென்னும் ஆசையினாலே போர்செய்தலை மேற்கொண்டுசெய்து பொன்னி னால்செய்த நெற்றிப்பட்டத்தை யணிந்தயானைகளையும், போர்செய்தற்குரிய குதி ரைகளையும் காலாட்சேனைகளையும், மற்றும் தேர்படைவீரர்முதலிய பலபொரு ள்களையும் பலமுறையிழந்துதோற்று அவமானப்பட்டுப்போயினான்.—எ-று. (௫)

இப்படி யிழந்த மாற்றா னிகலினால் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீல மறிந்துவெண் ணீறு சாத்தும்
அப்பெரு வேடங் கொண்டே யற்றத்தில் வெல்வா னாகச்
செப்பரு நிலைமை யெண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான்

(இ-ள்.) இவ்விதமாகப் பலமுறைதோற்று ஓடிப்போயின பகையரசனானவன் தனது சாமர்த்தியத்தினால் ஜயிக்கச்சக்தியற்றவனாகி மெய்ப்பொருணயனார் அடியார்களிடத்தில் வைத்திருக்கும் அன்பின் தன்மையையறிந்து திருவெண்ணீ ற்றைத்தரிக்கும் அச்சிவனடியார்களின் சிறந்ததிருவேடத்தை வஞ்சகமாகத் தரித் துச் சமயமறிந்து வெல்லுங்கருத்துடையவனாய்ச் சொல்லக்கூடாத தீமையைச் செய்யும்படி நினைத்துத் திருக்கோவலூருக்குப் போகப்புறப்படுவோனாயினான். ()

மெய்ப்பொருள்வேந்தன் சீலமறிதலாவது:—முத்தநாதனென்பவன் நாம் விபூதி-ருத்திராக்ஷந்தரித்துச் சிவனடியார் வேடங்கொண்டு சென்றால் நம்மைக் காவலாளரொருவரும் தீங்குசெய்யாமல் தடையின்றி உள்ளே விடுவார்கள்; அப் பொழுது நாம் வஞ்சகமாக மறைத்து மூடிவைத்திருக்கும் உடைவாளினால் குத்தி க் கொலைசெய்து விடலாம்; அப்பொழுதும் நமது வேடத்தைக்கண்டு அஞ்சி ஒரு தீங்கும் செய்யாமல் அனுப்பிவிடுவார்கள் என்று அறிதல். (௬)

மெய்யெலா நீறு பூசி வேணிகண் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி யேந்தி
மைபொதி விளக்கே யென்ன மனத்தினுட் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங்கொண்டு புகுந்தனன் முத்த நாதன்.

(இ-ள்.) தனது தேகமுழுமையும் விபூதியைத்தரித்துத் தலையிலுள்ளசடைகளை ஒன்றாகச்சேர்த்துக்கட்டி உடைவாளை மறைத்துவைத்திருக்கின்ற புத்தகக் கவளிகையைக்கையில் தாங்கிக்கொண்டு கருமைநிறத்தைத் தன்னுள்ளேவைத்திருக்கின்ற தீபத்தைப்போல மனதில் களங்கத்தை வைத்துக்கொண்டு பொய்யாகிய தவவேடத்தைப்பூண்டு முத்தநாதனென்னும் அப்பகையரசனானவன் மெய்ப்பொருணாயனாரிடத்திற்கு வந்தான்.—எ-று.

கவளிகையாவது:—புத்தகமும் எழுத்தாணியும் அடக்கிவைப்பதற்கு ஓலை அல்லது பட்டினால் அதனளவாகச்செய்து வைத்திருக்கும்பை; இது கவளிஎனக் கடைக்குறையாய் நின்றது. பொய்தவம்-தொகுத்தல். புத்திநாதனென்றும்,முத்திநாதனென்றும் பாடம். (எ)

மாதவ வேடங் கொண்ட வன்கணான் மாடந் தோறுங்
கோதைசூ ழளக பாரக் குழைக்கொடி யாட மீது
சோதிவெண் கொடிக ளாடுஞ் சுடர்நெடு மறுகில் போகிச்
சேதியர் பெருமான் கோயிற் றிருமணி வாயிற் சேர்ந்தான்.

(இ-ள்.) சிவனடியார்களைப்போல மகத்தாகிய தவவேடத்தைக்கொண்டு வந்த கொடியவஞ்சகனாகிய முத்தநாதனென்பவன் மேல்வீடுகள்தோறும் மாலைகள்சூழ்ந்த அளகபாரத்தையுடைய குண்டலமணிந்த பெண்களாகிய கொடிகள் நாட்டியஞ்செய்ய, அதன்மேல் பிரகாசம்பொருந்திய வெள்ளைக்கொடிகளாடுகின்ற ஒளிபொருந்திய பெரியவீதியிலேபோய் மெய்ப்பொருணாயனாரது அரண்மனையின் சிறந்தரத்தினங்கள் பதிக்கப்பட்டிருக்கின்றவாயிலையடைந்தான்.—எ-று.

கடையுடைக் காவ லாளர் கைதொழு தேற நின்றே
உடையவர் தாமே வந்தா ருள்ளெழுந் தருளு மென்னத்
தடைபல புக்க பின்பு தனித்தடை நின்ற தத்த
னிடைதெரிந் தருள வேண்டுந் துயில்கொளு மிறைவ னென்றான்.

(இ-ள்.) (முத்தநாதன் இவ்வித வஞ்சகவேடங்கொண்டு மெய்ப்பொருணாயனாருடைய அரண்மனை வாசலிற்போன பொழுது) வாசலில் காவல்செய்கின்றவர்கள் தங்கள் கைகளைக்குவித்து வணங்கித்தூரத்தில் நின்று நம்மை அடிமையாகவுடைய சிவனடியவர் இங்குத் தாமே எழுந்தருளினாரென்று சொல்லி (சுவாமிகளே! தேவரீர்) உள்ளே எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, இப்படி அடுத்தடுத்துள்ள பலதடைகளையுங்கடந்து உள்ளேபுகுந்தபின்பு மெய்ப்பொருணாயனாருக்கு ஒப்பற்ற உயிர்க்காவலாய்த் தனியே நின்ற தத்தனென்பவன் (அவனைப்பார்த்துச்) சமயந்தெரிந்து தேவரீர் உள்ளே எழுந்தருளவேண்டும்; இப்பொழுது நம்முடைய அரசன் நித்திரைசெய்கின்றானென்று சொன்னான்.—எ-று. (அ)

என்றவன் கூறக் கேட்டே யானிவற் குறுதி கூற
நின்றிடு நீயு மென்றே யவனையு நீக்கிப் புக்குப்
பொன்றிகழ் பள்ளிக் கட்டிற் புரவலன் றுயில மாடே
மன்றலங் குழன்மென் சாயன் மாதேவி யிருப்பக் கண்டான்.

(இ-ள்.) இவ்விதமாகத் தத்தனென்பவன்சொல்ல அதனை முத்தநாதன் கேட்டு நான் இந்த அரசனுக்கு மோக்ஷமடைதற்குரிய உறுதிப்பொருளை உபதேசிக்கப்போகிறபடியால் நீ தடைசெய்யாமல் நில்லென்று அந்தத் தத்தனையும் விலக்கிக்கொண்டு உள்ளேபுகுந்து பொன்னினால் செய்யப்பட்டு விளங்குகின்ற பள்ளியறைக்கட்டிலில் மெய்ப்பொருணயனார் நித்திரைசெய்ய அவர் பக்கத்தில் வாசனைபொருந்திய அழகிய கூந்தலையும் மிருதுவான சாயலையுமுடைய அவரது பத்தினியார் இருக்கப்பார்த்தான்.—எ-று. (க0)

கண்டுசென் றணையும் போது கதுமென வெழுந்து தேவி
வண்டலர் மாலை யானை யெழுப்பிட வுணர்ந்து மன்னன்
அண்டர்நா யகனார் தொண்ட ராமெனக் குவித்த செங்கை
கொண்டெழுந் தெதிரே சென்று கொள்கையின் வணங்கி நின்று.

(இ-ள்.) முத்தநாதனென்பவன் அவரது பத்தினியார் இருப்பதைப்பார்த்துச் சிறிதும் அச்சமில்லாமல் உள்ளே நுழையும்பொழுது (அதைக்கண்ட அந்நாயனரது மனைவியார்) சீக்கிரமாக எழுந்து வண்டுகள் மொய்க்கின்ற மலர்மாலையைத்தரித்த மெய்ப்பொருணயனாரை எழுப்ப அந்நாயனார் நித்திரை தெளிந்து தேவநாயகராகிய சிவபெருமானது அடியவரென்று நினைத்துத் தமது சிவந்தகைகளைத் தலைமேல் குவித்துவைத்துக்கொண்டு எழுந்திருந்து எதிராகப்போய் ஆகமவிதிப்படியே வந்தனஞ்செய்து நின்றுகொண்டு.—எ-று. (கக)

மங்கலம் பெருக மற்றென் வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற தென்கொலோ வென்று கூற
உங்கணா யகனார் முன்ன முரைத்தவா கமநூன் மண்மேல்
எங்குமில் லாத தொன்று கொடுவந்தே னியம்ப வென்றான்.

(இ-ள்.) மங்கலமானது பெருகும்படிக்கு என்னுடைய செல்வமானதுவிரைந்துவந்து சேர்ந்ததுபோல, தேவரீர் இவ்விடத்தில் எழுந்தருளப்பெற்றது என்னகாரணமாகவோ வென்றுசொல்ல, முத்தநாதன் உங்கள் நாயகராகிய சிவபெருமான் முன்னாளில் அருளிச்செய்த ஆகமசாஸ்திரத்துள் உலகத்தில் எங்குமில்லாததாகிய ஒருநூலை உனக்கு உபதேசிக்கக் கொண்டுவந்தேனென்று சொன்னான். ()

பௌத்த சமயத்தானாகிய அவ்வஞ்சகன் சாமர்த்தியத்தால் தனதுவேடத்தை மறைத்துச் சிவனடியார் வேடத்தைத்தரித்து நடித்தானாயினும் மெய்ப்பொருணயனாரிடத்துப் பேசும்பொழுது தன்னை யறியாமலேயே "உங்கணாயகனார்" என்று கூறினான். (கஉ)

பேறெனக் கிதன்மே லுண்டோ பிரானருள் செய்த விந்த
மாறிலா கமத்தை வாசித் தருள்செய்ய வேண்டு மென்ன
நாறுபூங் கோதை மாது தவிரவே நானு நீயும்
வேறிடத் திருக்க வேண்டு மென்றவன் விளம்ப வேந்தன்.

(இ-ள்.) (மெய்ப்பொருணாயனார் அடியார் வேடங்கொண்டுவந்த வஞ்சகனைப்பார்த்துத் தேவரீர் எழுந்தருளிவந்து திருவாய்மலர்ந்தருளிய இந்தக்கட்டளையைப் பார்க்கிலும்) சிறந்தபேறு அடியேனுக்கு உண்டோ இல்லை; சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்ட குற்றமற்ற இந்தச் சிவாகமசாஸ்திரத்தை வாசித்து அதன்பொருளை அடியேனுக்கு விளங்கும்படி அருளிச்செய்யவேண்டுமென்று சொல்ல, (அவனை முத்தநாதன்பார்த்து) வாசனைவீசுகின்ற மலர்மாலையைத்தரித்த கூந்தலையுடைய உனது பட்டத்தரசியில்லாமல் நானும் நீயும் தனித்திருக்கவேண்டுமென்று சொல்ல (அப்பொழுது) மெய்ப்பொருணாயனார்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௩)

திருமக ளென்ன நின்ற தேவியார் தம்மை நோக்கிப்
புரிவுடன் விரைய வந்தப் புரத்திடைப் போக வேவித்
தருதவ வேடத் தானைத் தவிசின்மே லிருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி யினியருள் செய்யு மென்றார்.

(இ-ள்.) இலட்சுமியைப்போல அவ்விடத்தில் நிற்கின்ற தமது மனைவியாரைப்பார்த்து ஆசையோடு விரைவாக அந்தப்புரத்திற்குப் போகும்படி உத்தரவு செய்து வஞ்சகமாகச் சிவனடியார் வேடங்கொண்டு வந்த அம் முத்தநாதனென்பவனை ஆசனத்தின்மேல் உட்காரவைத்துத் தாமும் பெருமையாகிய பூமியில் ஆசனமில்லாமல் இருந்து அவனைத்துதித்து இனிமேல் தேவரீர் அருளிச்செய்ய வேண்டுமென்று சொன்னார்.—எ-று. (௧௪)

கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தக மவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும் போதிற்
பத்திரம் வாங்கித் தான்மு னினைந்தவப் பரிசே செய்ய
மெய்த்தவ வேட மேமெய்ப் பொருளெனத் தொழுது வென்றார்.

(இ-ள்.) (அப்பொழுது முத்தநாதன்) தன்கையில் வைத்திருந்த வஞ்சகமான புத்தகக்கவளிகையைத் தன்னுடைய மடியின்மேல்வைத்து அதனுள்ளிருக்கும் புத்தகத்தை அவிழ்க்கின்றவன்போல, அம்மெய்ப்பொருணாயனார் விரும்பி வணங்கினபொழுது அதனுள் ஒளித்துவைத்திருந்த உடைவாளைக் கையில் எடுத்துத் தான் முன்பு நினைத்தபிரகாரம் செய்ய, (அப்பொழுது நாயனார்) தாம் மெய்ப்பொருளாகக்கொண்ட தவவேடத்தையே உண்மைப்பொருளாக நினைத்துத் தொழுது (தம்முடைய பொறுமையினாலே பிறவிக்கேதுவாகிய அஞ்ஞானத்தை) வென்றார்.—எ-று. (௧௫)

மறைத்தவன் புகுந்த போதே மனமங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கட் கூடி வாளினு லெறிய லுற்றான்
நிறைத்தசெங் குருதி சோர வீழ்கின்றார் நீண்ட கையாற்
றறைப்படு மளவிற் றத்தா நமரெனத் தடுத்து வீழ்ந்தார்.

(இ-ள்.) வஞ்சனையாகப்பூண்ட சிவனடியார் வேடத்தையுடைய அம் முத்தநாதன் உள்ளேபுகுந்தபொழுதே (நமது அரசனுக்கு என்ன ஆபத்து நேரிடுமோவென்று) மனதை அவ்விடத்திலேயே செலுத்தியிருந்த தத்தனென்பவன் க்ஷணநேரத்தில் உள்ளேபுகுந்து தன்கையிலுள்ள வாளாயுதத்தினால் அவ

னைவெட்டத் தொடங்கினபொழுது, உடைவாளினால் குத்தப்பட்டுத் தமது திரு மேனியினின்றும் சிவந்தஉதிரமானது பெருக்கெடுத்தோடும்படி பூமியில்விழப் போகின்ற அம்மெய்ப்பொருணயனார் பூமியில் விழும்பொழுது தமது நீளமாகிய கையினால் தத்தனே! இவர் நமது பெரியோர், (ஆதலால் இவருக்கு ஒரு தீங்குஞ் செய்யாதேயென்று) தடுத்து விழுந்தார்.—எ-று. (கசு)

வேதனை யெய்தி வீழ்ந்த வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனாந் தத்தன் றானுந் தலையினால் வணங்கித் தாங்கி
யாதுநான் செய்கே னென்ன வெம்பிரா னடியார் போக
மீதிடை விலக்கா வண்ணங் கொண்டுபோய் விடுநீ யென்றார்.

(இ-ள்.) அம்முத்தநாதனால் வருத்தத்தையடைந்து கீழேவிழுந்த மெய்ப் பொருணயனாரால் (தத்தா! நமர்) என்று சொல்லி விலக்கப்பட்ட அவரது பணி விடைசெய்வோனாகிய தத்தனென்பவனும் அந்நாயனாரைத் தலையினால் வணங்கி அவர் சிரத்தைக்கையினால் தாங்கிக்கொண்டு அடியேன் செய்யவேண்டிய பணிவி டை யாதென்று கேட்க, அவர் எமது சிவபெருமானுடைய அடியவராகிய இவர் போகும்பொழுது இடைவழியில் காவலாளர் ஒருவரும் தடைசெய்யாமலிருக்கும் படி நீ இவருக்குத் துணையாக இருந்து அழைத்துக்கொண்டுபோய் விடக்கடவா யென்று கட்டளையிட்டார்.—எ-று. (கஎ)

அத்திற மறிந்தா ரெல்லா மரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் றன்னைக் கொல்வோ மெனப்புடை சூழ்ந்த போது
தத்தனு மவரை யெல்லாந் தடுத்துடன் கொண்டு போவான்
இத்தவன் போகப் பெற்ற திறைவன தாணை யென்றான்.

(இ-ள்.) (தத்தன் முத்தநாதனென்பவனை வெளியில் அழைத்துக்கொண் டுபோகையில்) அவன் அரண்மனையில்செய்த கொடுஞ்செய்கையை அறிந்தவர்க ளெல்லாரும் நமதுஅரசனுக்கு உயிர்ச்சேதமாகிய தீமையைச்செய்த பொய்யாகிய தவவேடத்தையுடைய இவனைக் கொல்வோமென்று அவன் பக்கங்களில் சூழ்ந்த பொழுது தத்தனென்பவனும் அவர்களெல்லாரையும் தடுத்துத்தன்னுடன் அழை த்துக்கொண்டு போவதற்கு, இந்தத் தவவேடத்தையுடையவன் ஒரு அபாயமும் நேரிடாமல் தன்னிடத்திற்குப்போகப் பெற்றுக்கொண்டது நமது அரசனது கட் டளையாமென்று அவர்களுக்குச் சொன்னான்.—எ-று. (கஅ)

அவ்வழி யவர்க ளெல்லா மஞ்சியே யகல நீங்கச்
செவ்விய நெறியிற் றத்தன் றிருநகர் கடந்து போந்து
கைவ்வடி நெடுவா ளேந்தி யாளுறாக் கானஞ் சேர
வெவ்வினைக் கொடியோன் றன்னை விட்டவன் மீண்டு போந்தான்.

(இ-ள்.) தத்தன் சொல்லிய வார்த்தையைக் கேட்டவளவில் அவனைக் கொல்லும்படி வந்து சூழ்ந்தவர்களெல்லாரும் அரசன் ஆணைக்குப்பயந்து அவ்வி டத்தினின்றும் நீங்கிப்போக, தத்தனென்பவன் கையில் கூர்மையாகிய பெரிய வாளாயுதத்தைப் பிடித்து நல்லவழியாக அந்தநகரத்தைக் கடந்துபோய் மனிதர் சஞ்சரிக்காத காட்டையடையவும் (அவ்விடத்தில்) கொடிய தீவினையையுடைய முத்தநாதனை அனுப்பிவிட்டு அந்தத் தத்தன் தன்னுடைய பட்டணத்திற்குத் திரும்பிவந்தான்.—எ-று. (கசு)

மற்றவன் கொண்டு போன வஞ்சனை வேடத் தான்மேற்
செற்றவர் தம்மை நீக்கித் தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச் சோர்கின்ற வாவி தாங்குங்
கொற்றவன் முன்பு சென்றான் கோமகன் குறிப்பி னின்றான்.

(இ-ள்.) அந்தத்தத்தனென்பவன் அழைத்துக்கொண்டுபோன வஞ்சனையாகிய தவவேடத்தையுடைய முத்தநாதன்மேல் கோபித்துக் கொல்லஎதிர்த்தவர்களை விலக்கிக் குற்றமில்லாத நல்லஇடத்தில் கொண்டுபோய் விட்டுவந்த உண்மைவார்த்தையைக் கேட்பதற்காகத் தன்னைவிட்டு நீங்குகின்ற உயிரைத் தாங்கிக்கொண்டிருக்கும் மெய்ப்பொருணாயனாருக்கு முன்னே அவரது திருவுள்ளக்குறிப்பை யறிந்து நடக்கின்ற தத்தன்போய் நின்றான்.—எ-று. (உ0)

சென்றடி வணங்கி நின்று செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி விட்டன னென்று கூற
இன்றெனக் கையன் செய்த தியார் செய்ய வல்லா ரென்று
நின்றவன் றன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார்.

(இ-ள்.) தத்தன் மெய்ப்பொருணாயனார் சமீபத்தில் போய் அவரது திருவடிகளில் நமஸ்கரித்து, வஞ்சனையாகிய தவவேடத்தைக்கொண்டு தேவரீரை வென்றவனுக்கு யாதொரு இடையூறுமில்லாமல் அடியேன் அழைத்துக்கொண்டு போய் விட்டேனென்றுசொல்ல, (அதை மெய்ப்பொருணாயனார் கேட்டு) ஐயனே! இன்றைக்கு நீசெய்த உபகாரத்தைப்போல யாவர் செய்யவல்லவர்களென்று தமக்கு எதிரில் நிற்கின்ற அந்தத்தத்தனைப்பார்த்து மிகுந்த பெருங்கருணை செய்தார்.—எ-று. (உக)

அரசிய லாயத் தார்க்கு மழிவுறுங் காத லார்க்கும்
விரவிய செய்கை தன்னை விளம்புவார் விதியி னாலே
பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீ ரென்று
புரவலன் மன்று ளாடும் பூங்கழல் சிந்தை செய்தார்.

(இ-ள்.) மெய்ப்பொருணாயனார் தமக்குப்பின் அரசாட்சி செய்வதற்குரிய புத்திரர் சகோதரர்களுக்கும், தமக்குநேரிட்ட ஆபத்தைக்குறித்து மனம்வருந்துகின்ற விருப்பத்தையுடைய மந்திரிமுதலானவர்களுக்கும் தம்முள்ளத்தில் கலந்திருக்கின்ற கொள்கையைச் சொல்லுகின்றார்; வேதவிதிப்படியே உலகமுழுமையும் மேன்மையாகப் பரவியிருக்கின்ற திருவெண்ணீற்றினிடத்தில் அன்புவைத்து அதற்கு ஓர் குறைவும் நேரிடாமல் பாதுகாத்து வரக்கடவீர்களென்று, அம்மெய்ப்பொருணாயனார் கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற சிவபெருமானுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைத் தியானஞ்செய்தார்.—எ-று.

"திருநீற்றன்பு பாதுகாத்துய்ப்பீர்" என்றது விபூதியை நீவிர்தரித்து அவ்வாறு தரித்துவரும் சிவனடியார்களுக்கும் அன்பு செய்வீர் என்று கூறியதாம். "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்றமையால் ருத்திராக்ஷ முதலியனவுங் கொள்க. (உஉ)

தொண்டனார்க் கிமயப் பாவை துணைவனா ரவர்முன் றம்மைக்
கண்டவா றெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க
அண்டவா னவர்கட் கெட்டா வருட்கழ னீழல் சேரக்
கொண்டவ ரிடைய றாமற் கும்பிடுங் கொள்கை யீந்தார்.

(இ-ள்.) அடியவராகிய மெய்ப்பொருணயனாருக்கு, பர்வதராஜ புத்திரியாகிய உமாதேவியாரது நாயகராகிய சிவபெருமான் அந்நாயனார் முன்பு தம்மைத்தியானஞ்செய்த உருவமாகவே அவருக்குமுன்னேநின்று காட்சிகொடுத்தருளி, சிறந்த சுவர்க்கலோகத்தில் வாழ்கின்ற தேவர்களுக்கும் எட்டாத திருவருளுருவமாகிய திருவடி நிழலையடையும்படி ஆட்கொண்டு தம்மை இடைவிடாமல் கும்பிட்டுக்கொண்டிருக்கின்ற சிறந்த பேற்றைக்கொடுத்தருளினார்.—எ-று. (உரு)

இன்னுயிர் செகுக்கக் கண்டு மெம்பிரா னன்ப ரென்றே
நன்னெறி காத்த சேதி நாதனார் பெருமை தன்னில்
என்னுளா செய்தே னாக விகல்விறன் மிண்டர் பொற்றாள்
சென்னிவைத் தவர்முன் செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன்.

(இ-ள்.) எல்லாப்பொருள்களிலும் சிறந்ததாகப் பாதுகாக்கின்ற இனிய உயிரை உடைவாளால் குத்தக்கண்டும், இவர் எமது சிவபெருமானுடைய அடியவரென்று நினைத்து நன்மையாகிய சிவவேடமே உண்மைப்பொருளென்று தாங்கொண்டகொள்கையைக் காப்பாற்றிய சேதிநாட்டரசராகிய மெய்ப்பொருணயனாரது பெருமைகளில் கொஞ்சஞ் சொன்னேன்; இனி வல்லமைபொருந்திய விறன்மிண்டநாயனாருடைய அழகிய திருவடிகளைச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு அவர் முன்னே செய்த திருத்தொண்டைச் சொல்லத்தொடங்குகின்றேன்.

**மெய்ப்பொருணயனார்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் ௪௯௦.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# விறன்மிண்டநாயனார் புராணம்.

விரைசெய் நறும்பூந் தொடையிதழி வேணி யார்தங் கழல்பரவிப்
பரசு பெறுமா தவமுனிவன் பரசி ராமன் பெறுநாடு
திரைசெய் கடலின் பெருவளனுந் திருந்து நிலனின் செழுவளனும்
வரையின் வளனு முடன்பெருகி மல்கு நாடு மலைநாடு.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற நல்ல கொன்றைமலர்மாலையைத் தரித்த சடையினையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கி மழுவாயுதத்தைப் பெற்ற பெரியதவத்தினையுடைய முனிவராகிய பரசிராமரால் உண்டான நாடாகியும், அலைகளைவீசுகின்ற சமுத்திரத்தில் உண்டாகிய பெரியவளங்களும், திருத்தமாகிய நிலத்தில் உண்டாகிய செழியவளங்களும், மலையினிடத்தில் உண்டாகிய வளங்களும் ஒன்றாகச்சேர்ந்து அதிகரித்திருக்கும் நாடாகியுமுள்ளது மலைநாடாகும். ()

பரசிராமன் பெறுநாடு என்பதன் வரலாறு:—சமதக்கினிமுனிவர் தமது மனைவியாகிய இரேணுகையை கார்த்தவீரியனென்னு மரசன் இச்சித்தமை கருதிப் புத்திரனாகிய பரசிராமனால் அவளைக்கொல்வித்தமையால், அவ்வரசன் சமதக்கினிமுனிவரைக்கொன்றான், அதைக்கண்ட பரசிராமன் அவ்வரசனையும் அவன் மரபினரையும் கருவறுக்கக்கருதிச் சிவபெருமானைநோக்கித் தவஞ்செய்து மழுப்படையைப்பெற்று, அவனையும் அவன் மரபினரையும் கொன்று அவர்களுதிரத்தினால் தமது தந்தையாருக்குத் தர்ப்பணஞ்செய்து களி கூர்ந்து அவ்விரதத்தை முடித்தான். பின்பு அக்கொலையினாலுண்டாகிய பாவநீங்கச் சிவப்பிரதிஷ்டை செய்து ஒழித்து, ஓர்நாடுண்டாக்கிப் பிராமணர்களுக்குத் தானஞ்செய்யக்கருதி வருணதேவனை வேண்டித் தென்றிசைக்கடலில்மழுப்படையைவீச,அது விழுந்தஇடத்தில் நாடுண்டாக்கிப் பிராமணர்களுக்குத் தானஞ்செய்து குடியேறினான் என வறிக. கடலின் வளமாவன:—உப்பு - முத்து-பவளம்-சங்கு-ஒக்கோலை என்பன. நிலனின்வளமாவன:—செந்நெல்-சிறுபயறு-கரும்பு-வாழை-செவ்விளநீர்என்பன. வரையின் வளமாவன:—மிளகு-கோட்டம்-அகில்-தக்கோலம்-குங்குமம் என்பன.

வாரி சொரியுங் கதிர்முத்தும் வயன்மென் கரும்பிற் படுமுத்தும்
வேரல் விளையுங் குளிர்முத்தும் வேழ மருப்பி னொளிர்முத்து
மூர லெனச்சொல் வெண்முத்த நகையார் தெரிந்து முறைகோக்குஞ்
சேரர் திருநாட் டூர்களின்முன் சிறந்த மூதூர் செங்குன்றூர்.

(இ-ள்.) சமுத்திரத்தின் அலைகளால் கரையில் ஒதுக்கப்பட்ட பிரகாசம் பொருந்திய முத்துக்களும், வயல்களிலுள்ள மெல்லியகரும்புகளில் தோன்றிய மு

த்துக்களும், மூங்கில்களில் பிறந்த குளிர்ந்த முத்துக்களும், யானைத்தந்தங்களிலிருந்து தோன்றிய விளங்குகின்ற முத்துக்களும் பற்களென்று சொல்லப்பட்ட வெள்ளியமுத்தின் ஒளியையுடையபெண்கள் தனித்தனியே ஆராய்ந்தெடுத்து வெவ்வேறு வரிசையாகக் கோக்கின்ற சிறப்பினையுடைய சேரநாட்டிலுள்ள ஊர்களில் முதன்மையாகச் சிறந்தவூரானது பழமையாகிய திருச்செங்குன்றூர் என்று சொல்லப்படும்.—எ-று. (உ)

என்னும் பெயரின் விளங்கியுல கேறும் பெருமை யுடையதுதான்
அன்னம் பயிலும் வயலுழவி னமைந்த வளத்தா லாய்ந்தமறை
சொன்ன நெறியின் வழியொழுகுந் தூய குடிமைத் தலைநின்றோர்
மன்னுங் குலத்தின் மாமறைநூன் மரபிற் பெரியோர் வாழ்பதியாம்.

(இ-ள்.) திருச்செங்குன்றூர் என்னும்பெயரினால் விளக்கத்தையடைந்து, உலகத்தில் சிறந்தபெருமையையுடைய அந்நகரமானது, அன்னப்பட்சிகள் சஞ்சரிக்கின்ற வயல்களை உழுது பயிர்செய் துண்டாகிய பயிர்வளத்தினால் தெளிந்த பொருளமைந்தவேதத்தில் சொல்லிய விதிப்படியே நடக்கின்ற பரிசுத்தம்பொருந்திய உயர்ந்தகுடியிற் பிறந்தவர்களும், நிலைபெற்ற குலத்தினையுடைய பெருமை பொருந்திய வேதவிதிப்படி யொழுகுகின்றவர்களுமாகிய வேதியர்கள் வாழ்கின்ற ஊராகும்.—எ-று. (ந)

அப்பொற் பதியி னிடைவேளாண் குலத்தை விளக்க வவதரித்தார்
செப்பற் கரிய பெருஞ்சீர்த்திச் சிவனார் செய்ய கழல்பற்றி
எப்பற் றினையு மறவெறிவா ரெல்லை தெரிய வொண்ணாதார்
மெய்ப்பத் தர்கள்பாற் பரிவுடையா ரெம்பி ரானார் விறன்மிண்டர்.

(இ-ள்.) அத்தன்மையாகிய அழகிய திருச்செங்குன்றூரில் வேளாளரது குலத்தை விளக்கும் பொருட்டுத் திருவவதாரஞ்செய்தவர்; (யாவராலும்) சொல்லுதற்கரிய பெருஞ்சிறப்பினையுடைய சிவபெருமானதுசிவந்ததிருவடிகளைத் தமக்கு ஆதரவாக இடைவிடாது சிந்தித்து எப்படிப்பட்ட ஆசைகளையும் சிறிதும் விரும்பாமல் ஒழிக்கின்றவர்; (அவரது பெருமையை) இவ்வளவென்று அளவிட்டுரைக்கக்கூடாதவர்; உண்மையாகிய சிவனடியார்களிடத்தில் பேரன்புடையவர்; (அவர்யாரென்றால்) எமதுபெருமானாகிய விறன்மிண்டநாயனாராகும்.—எ-று.

"எப்பற்றினையும்" என்பது, யான்-எனது என்னும் இருவகைப் பற்றுக்களையும் எனவறிக. இவர்க்குச் சிவபெருமானிடத்தும்,அவரடியார்களிடத்தும் பொருந்திய பக்திவலிமையின் மிகுதியாகிய காரணத்தினால், விறன்மிண்டநாயனாரென்னுந் திருநாமம் அமைந்தது. (ச)

நதியு மதியும் புனைந்தசடை நம்பர் விரும்பி நலஞ்சிறந்த
பதிக ளெங்குங் கும்பிட்டுப் படருங் காதல் வழிச்செல்வார்
முதிரு மன்பிற் பெருந்தொண்டர் முறைமை நீடு திருக்கூட்டத்
தெதிர்முன் பரவு மருள்பெற்றே யிறைவர் பாதந் தொழப்பெற்றார்.

(இ-ள்.) (அவ்விறன்மிண்டநாயனார்) கங்காநதியையும், பிறைச்சந்திரனையுந் தரித்த சடையினையுடைய சிவபெருமான் திருவுள்ளங்கொண்டெழுந்தருளி

யிருக்கின்ற நன்மைபொருந்திய க்ஷேத்திரங்களெங்கும்போய் வணங்கிப் பரந்த அன்பின்வழியே செல்கின்றவர்; மிகுந்த பேரன்பினால் பெருமைபொருந்திய சிவனடியார்கள் முறைமையாகக் கூடியிருக்கின்ற திருக்கூட்டத்திற்கு எதிராகப் போய் முன்னேவணங்குதற்கு அருளைப்பெற்று, பின்பு சிவபெருமானுடைய திருவடிகளைவணங்கத்தக்க மேன்மையைப்பெற்றவர்.—எ-று.

பசுவிற்குப் பால் உடம்பெங்கும் பரவியிருப்பினும் மடியின் வழியாகவே வெளிப்படுமாறுபோல, சிவபெருமான் உலகெங்கும் நிறைந்திருப்பினும் அடியார் முகமாக வெளிப்படுதலின் அவ்வடியாரை முன்னர்த் தொழுது பின் பெருமானை வணங்குவாரென்பது தோன்ற "திருக்கூட்டத்-தெதிர்முன் பரவு மருள்பெற்றே யிறைவர் பாதந் தொழப்பெற்றார்" என்று கூறினார். (ரு)

பொன்றா ழருவி மலைநாடு கடந்து கடல்சூழ் புவியெங்குஞ்
சென்றா ளுடையா ரடியவர்தந் திண்மை யொழுக்க நடைசெலுத்தி
வன்றாண் மேருச் சிலைவளைத்துப் புரங்கள் செற்ற வைதிகத்தேர்
நின்றா ரிருந்த திருவாரூர் பணிந்தார் நிகரொன் றில்லாதார்.

(இ-ள்.) பொன்னின் பொடிகளோடு தாழ்ந்து விழுகின்ற அருவிகளையுடைய சேரநாட்டைக்கடந்து, சமுத்திரஞ் சூழ்ந்த இப்பூவுலகிலுள்ள எல்லாக்ஷேத்திரங்களிலுஞ்சென்று நம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது அடியார்கள் நடக்கின்ற உறுதியாகிய திருத்தொண்டின் நெறியில் தம்மை நடக்கும்படி செய்துகொண்டு, வலிமைபொருந்திய அடியினையுடைய மேருவாகிய வில்லை வளைத்து முப்புரங்களையெரித்த வேதங்களாகிய குதிரைபூட்டிய இரதத்தில் நின்றருளிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருவாரூரை அடைந்து வணங்கினார்; தமக்கு வேறொருவரும் ஒப்பில்லாதவராகிய விறன்மிண்டநாயனார்.—எ-று.

"வைதிகத்தேர்" என்றது வேதங்கள் குதிரைகளாகவும், பிரமன் சாரதியாகவும் அமைந்திருத்தலினென்க. (சு)

திருவார் பெருமை திகழ்கின்ற தேவா சிரிய னிடைப்பொலிந்து
மருவா நின்ற சிவனடியார் தம்மைத் தொழுது வந்தணையா
தொருவா றொதுங்கும் வன்றொண்டர் புறகென் றுரைப்பச் சிவனரு
பெருகா நின்ற பெரும்பேறு பெற்றார் மற்றும் பெறநின்றார். [ளாற்

(இ-ள்.) மங்கலகரம் பொருந்திய பெருமையினால் விளங்குகின்ற தேவாசிரியமண்டபத்தில் நிறைந்து பொருந்தியிருக்கின்ற சிவனடியார்களை (புறத்தில்) வணங்கி அவர்களோடுவந்துசேராமல் ஒருவகையாக ஒதுங்கிப்போகின்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை இவ்வடியார்களின் திருக்கூட்டத்திற்குப் புறம்பென்று சொல்ல, சிவபெருமானது திருவருளினால் மிகுதியாகவளருகின்ற பெரிய பேற்றினைப் பெற்றவர்; பின்னும் வேண்டியபேறுகளைப் பெறும்படி நின்றவர்.—எ-று.

"திருவார்பெருமை திகழ்கின்ற தேவாசிரியனிடை" என்பதற்கு, திருமகள் தனது நாயகனாகிய விஷ்ணுவை உயிர்ப்பிக்கவேண்டிப் பொருந்தித் தவஞ்செய்த பெருமையினால் விளங்குகின்ற திருவாரூரிலுள்ள தேவாசிரியமண்டபத்தில் என்று பொருள் கூறினும் பொருந்தும். (எ)

சேணார் மேருச் சிலைவளைத்த சிவனா ரடியார் திருக்கூட்டம்
பேணா தேகு மூரனுக்கும் பிரானாந் தன்மைப் பிறைசூடிப்
பூணா ரரவம் புனைந்தார்க்கும் புறகென் றுரைக்க மற்றவர்பாற்
கோணா வருளைப் பெற்றார்மற் றினியார் பெருமை கூறுவார்.

(இ-ள்.) ஆகாயத்தையளாவிய மேருவாகிய வில்லைவளைத்த சிவபெருமானது அடியவராகிய விறன்மிண்டநாயனார், திருக்கூட்டத்தடியவரை வணங்காமற் போகின்ற நம்பியாரூரருக்கும், அவர்க்கு முதல்வராகிய தன்மையைப்பெற்றுத் தடுத்தடிமைகொண்ட சந்திரனை அணிந்து சர்ப்பத்தை ஆபரணமாகப்பூண்ட சிவபெருமானுக்கும் புறம்பு என்று சொல்ல, அச்சிவபெருமானிடத்தும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளிடத்தும் கெடாததிருவருளைப்பெற்றுக்கொண்டாரென்றால் அவ்விறன்மிண்டநாயனாரது பெருமையைக்குறித்து இனியாவர்சொல்லவல்லவர்கள். ()

இவர் புறகு என்றுகூறியது அடியார்கள் மேல்வைத்த அன்பே ஆதலின், அஃது எமக்கும் உடன்பாடென்று அவ்விருவரும் கருணைகூர்ந்தருளப் பெற்றன ரென்பார் "மற்றவர்பாற் - கோணாவருளைப் பெற்றார்" என்று கூறினார். ஊரனுக்கும், புனைந்தார்க்கும் புறகென்றுரைக்க - என்பதை உருபுமயக்கமாகக்கொண்டு ஊரனையும், புனைந்தானையும் புறம்பென்றுசொல்ல என்று பொருளுரைப்பினும் பொருந்தும்.

இதனால், இவ் விறன்மிண்டநாயனார் திருத்தொண்டர் திருக்கூட்டத்தை வணங்காதுசெல்லும் நம்பியாரூரருக்கும், அவரைத் தடுத்தாட்கொண்ட சிவபெருமானுக்கும் புறம்பு என்னும் வார்த்தையை நிலைபெறச்செய்த தவவலியுடையா ரென்பது கூறியதாயிற்று. (அ)

ஞால முய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின்
சீல முய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைகள்
ஓல மிட்டு முணர்வரியா ரடியா ருடனா முளதென்றால்
ஆல மமுது செய்தபிரா னடியார் பெருமை யறிந்தாரார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் உலகத்தார் கடைத்தேறவும், நாமனைவரும் பிழைக்கவும், சிறந்தசைவசமயத்தின் நல்லொழுக்கங்கள் வளர்ந்தோங்கவும் திருத்தொண்டத்தொகையைப் பாடியருள, (அப்பொழுது இந்நாயனார்) சிறந்த வேதங்கள் இத்தன்மையினரென்று முறையிட்டும் காணுதற்கரியவராகிய சிவபெருமானது அடியார் திருக்கூட்டத்தோடு அவ்விருவரும் உடனாதல் உளதென்று சொன்னால், விஷத்தை அமுதமாகவுண்டருளிய சிவபெருமானது அடியவராகிய இவ்விறன்மிண்டநாயனாரது பெருமையை அறிந்தவர்கள் யார் (ஒருவருமில்லை.)—எ-று.

விறன்மிண்டநாயனார் அவ்விருவரையும் அடியார்களுக்குப் புறம்பென்று சொல்லவும், திருத்தொண்டத்தொகை பாடியதன்மேல் அவ்வடியார்க்கு உடன் என்று சொல்லவும்வல்ல மேன்மையுடையா ரென்பது விளக்கும் பொருட்டு "அடியாருடனாமுளதென்றால்" என்று கூறினார். (கூ)

ஒக்க நெடுநா ளிவ்வுலகி லுயர்ந்த சைவப் பெருந்தன்மை
தொக்க தலைமை நெறிபோற்றித் தொண்டு பெற்ற விறன்மிண்டர்
தக்க வகையாற் றம்பெருமா னருளி னாலே தாணிழற்கீழ்
மிக்க கணநா யகராகுந் தன்மை பெற்று விளங்கினார்.

(இ-ள்.) யாவரும் மதிக்கும்படி வெகுநாளளவும் இந்நிலவுலகத்தில் உயர்வாகிய சைவசமயத்தின் பெருந்தன்மையாகிய முதன்மைபொருந்திய ஒழுக்கநெறியைப் பாதுகாத்து, அடியார்களுக்குத் திருத்தொண்டுசெய்யும் பேற்றைப்பெற்ற விறன்மிண்டநாயனார் தகுந்த பத்திசெய்தலாலே தமது பெருமானாகிய பரமசிவனது திருவருளைப்பெற்று அவரது திருவடிநிழலின்கீழேசிறந்த சிவகணங்களுக்குத்தலைவராயிருக்கின்ற மேன்மையைப்பெற்று விளங்கினார்.—எ-று. (கo)

வேறு பிறிதென் றிருத்தொண்டத் தொகையா லுலகு விளங்கவரும்
பேறு தனக்குக் காரணராம் பிரானார் விறன்மிண் டரின்பெருமை
கூறு மளவென் னளவிற்றே யவர்தாள் சென்னி மேற்கொண்டே
யாறை வணிக ரமர்நீதி யன்பர் திருத்தொண் டுறைகுவாம்.

(இ-ள்.) இவரது அன்பின்பெருமையைக் குறித்து வேறுசொல்லுந்திறம் யாது? திருத்தொண்டத்தொகை அருளிச்செய்யுங் காரணத்தினால் உலகத்தார் நற்கதியடையவருகின்ற பெரும்பேற்றிற்குக்காரணராயிருந்த நமதுபெருமானாகிய விறன்மிண்டநாயனாரது பெருமையை அளவுபடுத்திக் கூறுந்தன்மை என்னளவினதன்று; ஆதலால் இவ்வடியவரது திருவடிகளை எமதுசிரசின்மேல் வைத்துக்கொண்டு, திருப்பழையாறை என்னும் திருப்பதியில்வாழ்ந்திருந்த வணிகர்குலத்தலைவராகிய அமர்நீதிநாயனாருடைய திருத்தொண்டைக்குறித்துச் சொல்லுகின்றோம்.—எ-று. (கக)

**விறன்மிண்டநாயனார் புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - ருoக.



அமர்நீதிநாயனார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அமர்நீதிநாயனார்புராணம்.

சீரி னீடிய செம்பியர் பொன்னிநன் னாட்டுக்
காரின் மேவிய களியளி மலர்ப்பொழில் சூழ்ந்து
தேரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து
பாரி னீடிய பெருமைசேர் பதிபழை யாறை.

(இ-ள்.) சிறப்பினால் மிகுந்த சோழராஜாக்களுக்குரியநல்லகாவிரிநாட்டில் மேகமண்டலமளவும் உயர்ந்த களிப்பினையுடைய வண்டுகள் வாழும் மலர்கள் பொருந்திய சோலைகளால் சூழப்பட்டு, தேர்களோடுகூடிய உயர்ந்த இரத்தினங்கள் இழைக்கப்பட்டிருக்கும் வீதிகளால் சிறப்படைந்து, உலகத்தில் மிகுந்த பெருமைபெற்றுள்ள நகரமானது திருப்பழையாறை என்று சொல்லப்படும். (க)

மன்னு மப்பதி வணிகர்தங் குலத்தினில் வந்தார்
பொன்னு முத்துநன் மணிகளும் பூந்துகின் முதலா
எந்நி லத்தினு முள்ளன வருவளத் தியல்பால்
அந்நி லைக்கண்மிக் கவரமர் நீதியா ரென்பார்.

(இ-ள்.) நிலைபெற்ற அந்தத் திருப்பழையாறை என்னும்நகரத்தில் வைசியர்குலத்தில் திருவவதாரஞ் செய்தவர்; பொன்களும்,முத்துக்களும்,நல்லரத்தினங்களும்,அழகிய வஸ்திரங்களுமாகிய இவைமுதலாக எந்தத்தேசங்களினுமுள்ளவைகள் வருதற்கேதுவான வியாபாரமுறைமையால்,அவ்வியாபாரத்தொழிலில் சிறந்தவராயிருந்தார் அமர்நீதிநாயனாரென்று சொல்லப்பட்டவர்.—எ-று. (உ)

சிந்தை செய்வது சிவன்கழ லல்லதொன் றில்லார்
அந்தி வண்ணர்த மடியவர்க் கமுதுசெய் வித்துக்
கந்தை கீளுடை கோவணங் கருத்தறிந் துதவி
வந்த செல்வத்தின் வளத்தினால் வரும்பயன் கொள்வார்.

(இ-ள்.) தாம் சதாகாலமும் சிந்தித்திருப்பது சிவபெருமானுடைய திருவடிகளேயல்லாமல் வேறொன்றையும் சிந்தியாதவராகிய அவ்வமர்நீதிநாயனார், செவ்வானம்போலும்நிறத்தினையுடைய சிவபெருமானது அடியார்களுக்குத் திருவமுதுபடைத்து, கந்தை - கீள்-உடை - கோவணம் இவைகளை அவர்கள் திருவுள்ளக்குறிப்பறிந்து கொடுத்து, தமக்குண்டாகிய செல்வச்சிறப்பினால் வருகின்ற புண்ணியப்பயனைக் கொள்ளுகின்றவராயிருந்தார்.—எ-று.

கந்தை என்பது நாள்பட்டுக்கிழிந்த பழையதுணிக்கு வந்த பெயராயிருப்பினும், ஈண்டு துணியோடு துணியைச் சேர்த்துப்பல இழையோட்டிப் போர்த்துக் கொள்வதற்குச் சமைத்த ஓர் வகைப்போர்வைக்குவந்தது. சிவனடியார்கள் தமது பசிநீங்க உண்ணுதற்கு உணவும், உடல் நடுக்க நீங்கத்தரித்தற்கு ஆடையும், வசித்திருத்தற்குத் திருமடமும் ஆகிய இக்கயிங்கரியஞ்செய்தலே தாம் பெற்றசெல்வத்தின் பயனாகக்கொண்டாரென்பது தோன்ற "வந்த செல்வத்தின் வளத்தினால் வரும்பயன்கொள்வார்" என்று கூறினார். (௩)

முக்க ணக்கரா முதல்வனா ரவர்திரு நல்லூர்
மிக்க சீர்வளர் திருவிழா விருப்புடன் வணங்கித்
தக்க வன்பர்க ளமுதுசெய் திருமடஞ் சமைத்தார்
தொக்க சுற்றமுந் தாமும்வந் தணைந்தனர் தூயோர்.

(இ-ள்.) திரிநேத்திரங்களையுடைய திகம்பரராகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருநல்லூர் என்னும் க்ஷேத்திரத்தில் மிகுந்த சிறப்போடுநடக்கின்ற திருவிழாவைப் பெருவிருப்பத்தோடுபோய்த் தரிசனஞ்செய்து,அவ்விடத்தில் தகுந்த சிவனடியார்கள் திருவமுதுசெய்வதற்காக ஒருசத்திரத்தைக் கட்டி, தம்மோடுகூடிய சுற்றத்தினரும் தாமுமாக அங்குவந்து சேர்ந்தனர், பரிசுத்தராகிய அமர்நீதி நாயனார்.—எ-று. (௪)

மருவு மன்பொடு வணங்கினர் மணிகண்டர் நல்லூர்த்
திருவி ழாவணி சேவித்துத் திருமடத் தடியார்
பெருகு மின்பமோ டமுதுசெய் திடவருள் பேணி
உருகு சிந்தையின் மகிழ்ந்துறை நாளிடை யொருநாள்.

(இ-ள்.) காளகண்டராகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருநல்லூரில் நடக்கின்ற திருவிழாவின் சிறப்பினைத் தம்மிடத்திற்பொருந்திய பேரன்போடுவணங்கித் துதித்து, தம்மால் கட்டப்பட்டுள்ள திருமடத்தில் சிவனடியார்கள் மிகுந்த ஆசையோடு திருவமுதுகொள்ளும்படி அவர்களுடைய திருவருளைப் பெற்றுக்கொண்டு அதனால் கசிந்துருகுகின்ற திருவுள்ளத்தில் சந்தோஷித்து வாழ்கின்ற நாள்களில் ஒருநாள்.—எ-று.

இதுமுதல் ஆறுசெய்யுளுங் குளகம். (௫)

பிறைத்த ளிர்ச்சடைப் பெருந்தகைப் பெருந்திரு நல்லூர்க்
கறைக்க ளத்திறை கோவணப் பெருமைமுன் காட்டி
நிறைத்த வன்புடைத் தொண்டர்க்கு நீடருள் கொடுப்பான்
மறைக்கு லத்தொரு பிரமசா ரியின்வடி வாகி.

(இ-ள்.) பிறைக்கொழுந்தையணிந்த சடையினையுடைய உயர்ந்தகுணங்களையுடையவரும், சிறந்த திருநல்லூர் என்னும் க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கின்ற காளகண்டருமாகிய சிவபெருமான், தமது அடியார்களுக்கு இந்நாயனார் விரும்பிக் கொடுக்கும் கோவணத்தினது பெருமையை முதலிலே காண்பித்து, தம்முள்ளத்தில் நிறைந்த பேரன்பினையுடைய அமர்நீதிநாயனாருக்கு மிகுந்த திருவருள்செய

யும் பொருட்டுப் பிராமணர்குலத்தில் தோன்றிய ஒரு பிரமசாரியின் வடிவத்தை யடைந்து.—எ-று.

இருவகைப் பற்றினையும் ஒழித்த சிவனடியார்கள் பொன்மணிமுதலியவற்றினும் சிறப்பாகவிரும்பிக்கொள்ளுதல் கோவணமாதலின் அதனினும் சிறந்த தருமம் வேறன்றென்பதுதோன்ற "கோவணப் பெருமைமுன்காட்டி" என்று கூறினர். (சு)

செய்ய புன்சடை கரந்ததோர் திருமுடிச் சிகையுஞ்
சைவ வெண்டிரு நீற்றுமுண் டத்தொளித் தழைப்பு
மெய்யில் வெண்புரி நூலுடன் விளங்குமான் றோலும்
கையின் மன்னிய பவித்திர மரகதக் கதிரும்.

(இ-ள்.) செந்நிறம்பொருந்திய மிருதுவாகிய சடையை மறைத்திருக்கின்ற திருமுடியின்மேல் குடுமியும், (நெற்றியில்) சைவநெறிக்குரிய திருவெண்ணீற்றினால் விளங்கும் திரிபுண்டரத்தின் பிரகாசமும், திருமேனியில் வெண்மையாகிய முப்புரிநூலோடு பொருந்தி விளங்குகின்ற மான்தோலும், திருக்கரத்தின் விரலில் பொருந்திய பவித்திரத்தினது மரகதரத்தினத்தின் ஒளியும்.—எ—று.

மான்றோலை ஓரங்குலத்தில் நூலளவாகக் கத்தரித்துப் பூணூலோடு சேர்த்துத்தரிப்பது பிரமசாரிக்கு விதியாதலின் "வெண்புரிநூலுடன்விளங்குமான்றோலும்" என்று கூறினர். "செய்யவொண்சடை கரந்த" என்றும் பாடம். (எ)

முஞ்சி நாணுற முடிந்தது சாத்திய வரையிற்
றஞ்ச மாமறைக் கோவண வாடையின் றசைவும்
வஞ்ச வல்வினைக் கறுப்பறு மனத்தடியார்க
ணெஞ்சி னீங்கிடா வடிமலர் நீணிலம் பொலிய.

(இ-ள்.) முஞ்சியென்னுந் தருப்பையை நாணாகமுடிந்து அதனைக்கட்டியிருக்கின்ற திருவரையில் யாவருக்கும் ஆதரவாகவுள்ள சிறந்த வேதமாகிய கோவணத்தின் அசைவும் வஞ்சகமாகிய வலியதீவினையின் களங்கத்தையறுத்த மனத்தினையுடைய அடியார்களின் திருவுள்ளத்தினின்றும் எக்காலத்தும் நீங்காத திருவடித்தாமரைகள் நீண்ட நிலத்தில் பொருந்திவிளங்க.—எ-று.

பிரமசாரி, நூல் - பட்டு முதலியவைகளால் செய்யப்பட்ட கயிறுகளை இடையில் தரித்தல் கூடாமையின் "முஞ்சி நாணுற முடிந்தது சாத்தியவரை" என்று கூறினர். (அ)

கண்ட வர்க்குறு காதலின் மனங்கரைந் துருகத்
தொண்ட ரன்பெனுந் தூநெறி வெளிப்படுப் பாராய்த்
தண்டின் மீதிரு கோவண நீற்றுப்பை தருப்பை
கொண்டு வந்தமர் நீதியார் திருமடங் குறுக.

(இ-ள்.) தமது திருவுருவத்தைப் பார்த்தவர்களுக்கு மிகுந்த ஆசையினாலே அவர்கள் மனமானது கரைந்து உருகும்படிஅமர்நீதிநாயனரது அன்பென்று சொல்லப்பட்ட பரிசுத்தம்பொருந்திய நல்ல நெறியை (உலகத்தில் யாவரும் அறி

ந்து கடைத்தேறும்பொருட்டு) வெளிப்படுத்தும் திருவுள்ளமுடையவராய், தமது கையில் பிடித்துவந்த பலாசத்தண்டின்மேல் இரண்டு கோவணத்தையும், திருநீற்றுப்பையையும், தருப்பையையும் கட்டிக்கொண்டு எழுந்தருளிவந்து அமர்நீதி நாயனார் வாழுகின்ற திருமடத்தையடைய.—எ-று. (௯)

வடிவு காண்டலு மனத்தினு முகமிக மலர்ந்து
கடிது வந்தெதிர் வணங்கியிம் மடத்தினிற் காணும்
படியி லாதநீ ரணையமுன் பயிறவ மென்னோ
அடிய னேன்செய்த தென்றன ரமர்நீதி யன்பர்.

(இ-ள்.) அமர்நீதிநாயனார் சிவபெருமானாகிய பிரமசாரியின் திருவுருவத்தைக் கண்டவுடனே மனதைப் பார்க்கிலும் முகமானது மிகவும் மலர்ச்சியையடைந்து விரைவாகவந்து அவருக்கெதிரே வந்தனஞ்செய்து இத்திருமடத்தில் இதுவரையிலும் காணும்படியாக வராத தேவரீர் இப்பொழுது எழுந்தருள அடியேன் பூர்வத்திற்செய்து பழகியதவம்யாதோ? என்றுசொன்னார்.—எ-று. (௧0)

பேணு மன்பரை நோக்கிநீர் பெருகிய வடியார்க்
கூணு மேன்மையி லூட்டிநற் கந்தைகீ ளுடைகள்
யாணர் வெண்கிழிக் கோவண மீதல்கேட் டும்மைக்
காண வந்தன மென்றனன் கண்ணுதற் கரந்தோன்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணை மறைத்துப் பிரமசாரியின் திருவுருவங்கொண்டு வந்த சிவபெருமான் தம்மை உபசரித்துவணங்கிய அமர்நீதிநாயனாரைப்பார்த்து (அன்பரே!) நீர் திரண்டுவருகின்ற அடியார்களுக்குத் திருவமுதைச் சிறப்பாக உண்பித்து, நல்லகந்தையும் - கீளும் - உடையுமாகிய இவைகளுடன் துண்டாகக் கிழிக்கப்பட்டிருக்கின்ற வெண்மையாகிய அழகியகோவணமும் கொடுப்பதைக் கேள்விப்பட்டு உம்மைப்பார்க்க வந்தோமென்று சொன்னார்.—எ-று. (௧௧)

என்று தம்பிரா னருள்செய வித்திரு மடத்தே
நன்று நான்மறைப் பெருந்தவ ரமுதுசெய் தருளத்
துன்று வேதியர் தூய்மையி னமைப்பது முளதால்
இன்று நீருமிங் கமுதுசெய் தருளுமென் றிறைஞ்ச.

(இ-ள்.) இவ்விதமாகச் சிவபெருமானாகிய பிரமசாரியர் அருளிச்செய்ய (அப்பொழுது அமர்நீதிநாயனார் அவரைப்பார்த்து சுவாமீ!) இந்தத்திருமடத்தில் நன்மைபொருந்திய நான்கு வேதங்களையுமுணர்ந்த பெருந்தவத்தினையுடைய பிராமணர்கள்போசனஞ்செய்யும்படி பெருமைபொருந்தியவேதியர்கள் பரிசுத்தமாகச் சமைக்குந் திருவமுதும் இருக்கின்றது; (ஆதலால்) இன்றைக்குத் தேவரீரும் இத்திருமடத்தில் திருவமுது செய்தருளுமென்று வணங்க.—எ-று. (௧௨.)

வணங்கு மன்பரை நோக்கியம் மறையவ ரிசைந்தே
அணங்கு நீர்ப்பொன்னி யாடிநான் வரமழை வரினும்
உணங்கு கோவணம் வைத்துநீ தாருமென் றொருவெண்
குணங்கொள் கோவணந் தண்டினி லவிழ்த்தது கொடுப்பார்.

(இ-ள்.) இவ்விடத்தில் திருவமுது செய்தருளவேண்டுமென்று தம்மை வணங்கிய அமர்நீதிநாயனாரைப் பார்த்து அந்தச்சிவபெருமானாகிய வேதியர் அதற்குச் சம்மதித்து, தெய்வத்தன்மைபொருந்திய நீரையுடைய காவிரிநதியில் ஸ்நானஞ்செய்து நான் வர மழைபெய்தாலும் (அப்பொழுதும் வருத்தமின்றித் தரித்துக்கொள்வதற்கு) உலர்ந்திருக்கின்ற இந்தக் கோவணத்தைப் பத்திரப்படுத்திவைத்திருந்து நீர்தாரும் என்று (பலாசத்தண்டில் கட்டியிருந்த இரண்டு கோவணத்துள்) ஒருவெண்ணிறத்தையுடைய கோவணத்தை அத்தண்டினின்றும் அவிழ்த்துக் கொடுப்பாராயினார்.—எ-று. (௧௫)

ஓங்கு கோவணப் பெருமையை யுள்ளவா றுமக்கே
ஈங்கு நான்சொல வேண்டுவ தில்லைநீ ரிதனை
வாங்கி நான்வரு மளவுமும் மிடத்திக ழாதே
ஆங்கு வைத்துநீர் தாருமென் றவர்கையிற் கொடுத்தார்.

(இ-ள்.) உயர்வாகிய இந்தக்கோவணத்தின் பெருமையைக்குறித்து உண்மையாக இப்படிப்பட்டதென்று உமக்கு இவ்விடத்தில் நான் எடுத்துச்சொல்ல வேண்டியதில்லை! (உமக்கேதெரியும்.) நீர் இக்கோவணத்தை வாங்கிக்கொண்டு நான்ஸ்நானஞ்செய்துவருகிறவரைக்கும் உம்மிடத்தில் இது அற்பமென்று அலட்சியஞ்செய்யாமல் பத்திரப்படுத்திவைத்திருந்து நீர்கொடும் என்று சொல்லி அவ்வமர்நீதிநாயனார் கையில் கொடுத்தார்.—எ-று.

நம்மிடத்து இதனினும் சிறந்தகோவணம் பலவுளவென்று கைசோரவிடாமல் காக்கவேண்டுமென்பார் "இகழாது" என்று கூறினார். ஆங்கு- அசை. (௧௬)

கொடுத்த கோவணங் கைக்கொண்டு கோதிலா வன்பர்
கடுப்பி லிங்கெழுந் தருளுநீர் குளித்தெனக் கங்கை
மடுத்த தும்பிய வளர்சடை மறைத்தவம் மறையோர்
அடுத்த தெண்டிரைப் பொன்னிநீ ராடுதற் ககன்றார்.

(இ-ள்.) சிவபெருமானால் கொடுக்கப்பட்ட கோவணத்தைக்குற்றமற்ற அமர்நீதிநாயனார் கையில்வாங்கிக்கொண்டு,தேவரீர் ஸ்நானஞ்செய்து விரைவில் இவ்விடத்தில் எழுந்தருளவேண்டுமென்றுசொல்ல, கங்கைநீரானது ததும்புகின்ற நீண்ட சடையினைமறைத்துவந்த சிவபெருமானாகிய அம்மறையவர் அத்திருநல்லூருக்குச் சமீபத்திலிருக்கின்ற தெளிவாகிய அலைகளையுடைய காவிரிநீரில் ஸ்நானஞ் செய்வதற்குச்சென்றார்.—எ-று. (௧௭)

தந்த கோவணம் வாங்கிய தனிப்பெருந் தொண்டர்
முந்தை யந்தணர் மொழிகொண்டு முன்புதாங் கொடுக்குங்
கந்தை கீளுடை கோவண மன்றியோர் காப்புச்
சிந்தை செய்துவே றிடத்தொரு சேமத்தின் வைத்தார்.

(இ-ள்.) சிவபெருமானாகிய வேதியர்கொடுத்த கோவணத்தை வாங்கிக்கொண்ட ஒப்பற்ற பெருந்தொண்டராகிய அமர்நீதிநாயனார் அவ்வேதியர் முன்பு சொல்லியவார்த்தையை உறுதியாகக்கொண்டு, முன்னே தாம் அடியார்களுக்குக் கொடுக்கின்ற கந்தையும் - கீளும் - உடையும் - கோவணமுமாகிய இவைகளி

வைத்திருக்கும் இடமல்லாமல் ஒரு காவலான இடத்தைச் சிந்தித்துச்சேமமாகிய ஒரு தனியிடத்தில் வைத்தார்.—எ-று. (கசு)

போன வேதியர் வைத்தகோ வணத்தினைப் போக்கிப்
பான லந்துறைப் பொன்னிநீர் படிந்துவந் தாரோ
தூந றுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்துவந் தாரோ
வான நீர்மழை பொழிந்திட நனைந்துவந் தணைந்தார்.

(இ-ள்.) காவிரிநதியில் நீராடுதற்குப்போன அப்பிராமணரானவர் அமர்நீதி நாயனார் தாம்பத்திரப்படுத்தி வைத்திருந்த கோவணத்தினை அவ்விடத்தினின்று மறைந்துபோகும்படி செய்து, குவளைமலர்கள் மலர்ந்திருக்கின்ற துறையினையுடைய காவிரிநீரில் ஸ்நானஞ்செய்து வந்தாரோ! அல்லது பரிசுத்தம் பொருந்திய அழகிய சடையிலுள்ள கங்கைநீரில் ஸ்நானஞ்செய்து வந்தாரோ! (அறியோம்;) மேகமானது மழைபொழிந்துகொண்டிருக்க அதில் நனைந்துகொண்டு அமர்நீதி நாயனாரது திருமடத்தில் வந்துசேர்ந்தார்.—எ-று. (கஎ)

கதிரி ளம்பிறைக் கண்ணியர் நண்ணிய பொழுதின்
முதிரு மன்புடைத் தொண்டர்தா முறைமையின் முன்னே
அதிக நன்மையி னறுசுவைத் திருவமு தாக்கி
யெதிரெ ழுந்துசென் றிறைஞ்சிட நிறைந்தநூன் மார்பர்.

(இ-ள்.) கிரணங்களையுடைய இளம்பிறையைக் கொண்டைமாலையாகத் தரித்த சிவபெருமானாகிய வேதியர் திருமடத்திற்கு வந்தபொழுது முதிர்ந்த அன்பினையுடைய அமர்நீதிநாயனார் அதற்கு முன்னமே கிரமப்படி மிகுந்த பக்குவமாக அறுவகைச்சுவைகளோடு கூடிய திருவமுதைச்சமைத்து அவருக்கெதிரே எழுந்துபோய்த் திருவடிகளில் வணங்க, விளங்குகின்ற முப்புரிநூலினையணிந்த மார்பினையுடைய அப்பிரமசாரியாகிய கடவுளானவர்.—எ-று. (கஅ)

தொண்ட ரன்பெனுந் தூயநீ ராடுதல் வேண்டி
மண்டு தண்புனன் மூழ்கிய வீரத்தை மாற்றத்
தண்டின் மேலுள தீரநான் றந்தகோ வணத்தைக்
கொண்டு வாருமென் றுரைத்தனர் கோவணக் கள்வர்.

(இ-ள்.) தொண்டராகிய அமர்நீதிநாயனாரது அன்பென்று சொல்லப்பட்ட பரிசுத்தம்பொருந்திய நீரில் முழுகத்திருவுள்ளங்கொண்டு விசையாகப்போகின்ற குளிர்ச்சியாகிய நீரில் மூழ்கியதனால் உண்டாகிய ஈரத்தை நீக்கிக்கொள்ள (அந்நாயனாரைப்பார்த்து அன்பரே!) இப்பலாசத்தண்டின்மேல் கட்டியிருக்கின்ற கோவணமானது ஈரமாயிருக்கின்றது ஆதலால் நான் உம்மிடத்தில் முன்பு கொடுத்துவிட்டுப்போன கோவணத்தைக் கொண்டுவாரும் என்று சொன்னார்; அவர் வைத்தகோவணத்தை வேறிடத்துச் செல்லும்படி மறைத்த கள்வராகிய சிவபெருமான்.—எ-று. (கசு)

ஐயர் கைதவ மறிவுறா தவர்கடி தணுக
எய்தி நோக்குறக் கோவண மிருந்தவே றிடத்தின்
மையில் சிந்தையர் கண்டிலர் வைத்தகோ வணமுன்
செய்த தென்னென்று திகைத்தனர் தேடுவா ரானார்.

(இ-ள்.) கோவணங் காணாமற்போக மறைத்தருளிய சிவபெருமானாகிய அப்பிரமசாரியின் வஞ்சகத்தையறியாமல் களங்கமற்ற திருவுள்ளத்தையுடைய அமர்நீதிநாயனார் அதனைக்கொண்டுவரும்படி விசையாகச் சென்றுபார்க்க, அக் கோவணம் வைத்திருந்த தனி இடத்தில் அதனைக் காணாமல் முன்பு நாம்வைத்த கோவணம் எவ்வாறு போய்விட்டதென்று மனந் திகைத்துத் தேடத்தொடங் கினார்.—எ-று. (உ0)

பொங்கு வெண்கிழிக் கோவணம் போயின நெறிமேற்
சங்கை யின்றியே தப்பின தென்றுதன் சரக்கில்
எங்கு நாடியுங் கண்டில ரென்செய்வார் நின்றார்
அங்கண் வேதியர் பெருந்தொடக் கினிலகப் பட்டார்.

(இ-ள்.) பிரகாசத்தையுடைய வெண்மைபொருந்திய துண்டாகிய இந்தக் கோவணமானது போனவழியை மேல் கருதுமிடத்துச் சந்தேகமில்லாமல் தப்பிப் போய்விட்டதென்று, தான்தருமத்தின்பொருட்டு வைத்திருக்கின்ற எல்லாச்சர க்குகளிலும் தேடிப்பார்த்துங்காணாதவராய் நின்றார்; அழகியகண்ணுளராகிய அப் பிராமணரது பெரியவிவாதமாகியவலையில்அகப்பட்டார்; என்னசெய்வார்.—எ-று.

பெருந்தொடக்காவது :— வேதியர் கொடுத்த கோவணத்தை மறைத்து வந்து பின் அதனைக்கொடு என்று வற்புறுத்தலாம். (உக)

மனைவி யாரொடு மன்னிய கிளைஞருந் தாமும்
இனைய தொன்றுவந் தெய்திய தெனவிடர் கூர்ந்து
நினைவ தொன்றிலர் வருந்தினர் நிற்கவு மாட்டார்
புனைய வேறொரு கோவணங் கொடுபுறப் பட்டார்.

(இ-ள்.) அந்நாயனார் தமது மனைவியாரோடு நிலைபெற்ற சுற்றத்தாரும் தா முமாக இதுவரையிலும் வராத இப்படிப்பட்ட பொல்லாங்கு ஒன்றுவந்து சம்பவி த்ததே என்று மனவருத்தமுற்று தாம் அதனை நீக்குவதற்கு வேறொன்றையும் நினையாமல் வருத்தப்பட்டு அவ்விடத்தில் தரித்துநிற்காமல் அப்பிராமணர்தரித் துக்கொள்ளும்பொருட்டு வேறொரு கோவணத்தை எடுத்துக்கொண்டு வெளியே றப்பட்டார்—எ-று. (உஉ)

அத்தர் முன்புசென் றடிகணீர் தந்தகோ வணத்தை
வைத்தி டத்துநான் கண்டிலன் மற்றுமோ ரிடத்தில்
உய்த்தொ ளித்தன ரில்லையஃ தொளித்தவா றறியேன்
இத்த கைத்தவே றதிசயங் கண்டிலே னென்று.

(இ-ள்.) அமர்நீதிநாயனார் சிவபெருமானாகிய பிரமசாரியின் முன்னேசெ ன்று எமதுஆண்டவரோ! தேவரீர் அடியேனிடத்திற் கொடுத்த கோவணத்தைச்சே மமாக வைத்திருந்தஇடத்தில்நான்காணவில்லை;அதனைவேறோரிடத்தில்கொண்டு போய்ஒளித்துவைத்தவர்களும் இல்லை; அதுகாணாமல்போன விதத்தை அறியவ ல்லவனல்லேன் ; இப்படிப்பட்டதாகிய வேறுஅதிசயத்தை அடியேன் எங்கும் பார்த்ததில்லை யென்றுசொல்லி.—எ-று.

"அதொழிந்தவாறறியேன்" என்றும்பாடம். (உங)

வேறு நல்லதோர் கோவணம் விரும்பிமுன் கொணர்ந்தேனி
றிது கோவண மன்றுநெய் தமைத்தது கிளர்கொ
ணீறு சாத்திய நெற்றியீர் மற்றது களைந்து
மாறு சாத்தியென் பிழைபொறுப் பீரென வணங்க.

(இ-ள்.) வேறே ஒருநல்லகோவணத்தை ஆசையோடு தேவரீரது சந்நிதியில்கொடுக்கக் கொண்டுவந்தேன் ; இது ஒருவஸ்திரத்திலிருந்து கிழித்தகோவணமன்று ; இயல்பாகவே கோவணமாக நெய்யப்பட்டிருப்பது; ஆதலால், பிரகாசம்பொருந்திய விபூதியையணிந்த நெற்றியையுடைய சுவாமீ ! ஈரமாயிருக்கின்ற அந்தக்கோவணத்தைக்களைந்து அதற்கு மாற்றாக இந்தக்கோவணத்தைத்தரித்து அடியேன்செய்த குற்றத்தைப் பொறுத்தருள்வீராகவென்று வணங்க.—எ-று. (உச)

நின்றவேதியர் வெகுண்டமர் நீதியார் நிலைமை
நன்று சாலவு நாளிடை கழிந்தது மன்றால்
இன்று நான்வைத்த கோவணங் கொண்டதற் கெதிர்வே
றொன்று கொள்கென வுரைப்பதே நீரென வுரையா.

(இ-ள்.) அவ்விடத்தில் நின்ற சிவபெருமானாகிய பிராமணர் அந்தவார்த்தையைக்கேட்டு அதிககோபங்கொண்டு, அமர்நீதியாரே ! உம்முடைய தருமத்தின் நிலைமையானது மிகவும் நன்றாயிருக்கின்றது ; நான்கொடுத்து ஒருநாளாவது இடையில் கழியவுமில்லை ; இன்றையத்தினத்திலே நான் உம்மிடத்தில் வைத்துவிட்டுப்போன கோவணத்தை அபகரித்துக்கொண்டு அதற்குப்பதிலாக வேறொரு கோவணத்தைக் கொண்டுவந்து இதைவாங்கிக் கொள்ளுமென்று நீர் சொல்லலாமா ? என்றுசொல்லி.—எ-று.

கொடுத்துவிட்டுப்போய்ப் பலநாளாயினும் அசாக்கிரதையினால் ஒருவன் திருடுதற்கும், தானே காணப்படாமல் கெடுதற்கும் கூடும் ; அவ்வாறின்றி, இன்றைத் தினத்திலேயே கொஞ்சநேரத்திற்குமுன் கொடுத்துவிட்டுப்போன கோவணத்தை அபகரித்துக்கொண்டு யான் அறியேனென்று சொல்வது பெருவஞ்சகமாயிருக்கின்றதென்பார் “ நாளிடை கழிந்ததுமன்று ” என்று கூறினார். (உரு)

நல்ல கோவணங் கொடுப்பனென் றுலகின்மே லுளுஞ்
சொல்லு வித்ததென் கோவணங் கொள்வது துணிந்தோ
ஒல்லை மீங்குறு வாணிப மழகிதே யுமக்கென்
றெல்லை யில்லவ னெரிதுள்ளி னாலென வெகுண்டான்.

(இ-ள்.) நீர் சிவனடியார்களுக்கு நல்ல கோவணங்களைக் கொடுப்பேனென்று உலகத்தில் நாள்தோறும் பறைசாற்றித்தெரிவித்தது என்னுடைய கோவணத்தை மோசமாக அபகரித்துக் கொள்வதற்காகவோ ? விரைவாக இங்கே நீர் செய்யும் வர்த்தகம் உமக்கே அழகாயிருக்கின்றதென்று சொல்லி, அளவில்லாத அருட்பெருங்கடலாகிய சிவபெருமான் நெருப்பானது ஓரிடத்தினின்றும் விரைவாகத் தாவிவீசியதுபோலக் கோபித்தார்.—எ-று.

நெடுநாளாகத் தருமஞ்செய்கின்றோமென்று நடித்துக்காட்டிச்சிவனடியார்களுடைய கோவணங்களைக்கைக்கொண்டு அதனால் வர்த்தகஞ்செய்து சீவிப்பது

மிகவும் நன்றாயிருக்கின்றதென்பார் "ஒல்லை யீங்குறு வாணிப மழகிதே" என்றும், நெருப்பு சுவாலைகொண்டு வீசும்பொழுது அருகிலுள்ளவர்களுக்குந் துன்பஞ்செய்வதுபோல, தமக்கு அருகிலுள்ள அமர்நீதிநாயனார் மனவருத்தப்படச் சில கடுஞ்சொற்களைச்சொல்லிக் கோபித்தாரென்பது தோன்ற "எரிதுள்ளினலென வெகுண்டான்" என்றுங் கூறினர். (உசு)

மறிக ரந்துதண் டேந்திய மறையவர் வெகுளப்
பொறிக லங்கிய வுணர்வின ராய்முகம் புலர்ந்து
சிறிய வென்பெரும் பிழைபொறுத் தருளுவீ ரடியேன்
அறிய வந்ததொன் றன்றென வடிபணிந் தயர்வார்.

(இ ள்.) திருக்கரத்தில் மானைமறைத்துப் பலாசத்தண்டினைப் பிடித்துவந்த சிவபெருமானாகிய பிராமணர் இவ்வாறு கோபங்கொள்ளவும் (அமர்நீதிநாயனார்) ஐம்பொறிகளுங்கலங்கிய உணர்வினையுடையவராய் முகம்வாடி (சுவாமி !) சிறியேனாகிய அடியேன்செய்த பெரியகுற்றத்தைப் பொறுத்தருளுவீர்; இப்பிழை அடியேன் அறிந்துசெய்ததன்று, என்றுசொல்லி அவரது திருவடிகளில் வணங்கிவிசனப்பட்டார்.—எ-று.

சிவனடியார்கள் வைத்த கோவணத்தைப் போக்கடித்தல் பெருங்குற்றமென்பார் "பெரும்பிழை" என்றும், அவ்வாறு போக்கடித்ததும் அடியேனை அறியாமல் நேர்ந்த குற்றமாதலின் அதனைப் பொறுத்தருளுதல் தேவரீரது அறக்கருணையேயாமென்பார் "பொறுத்தருளுவீரடியேன்-அறியவந்ததொன்றன்று" என்றுங் கூறினர். (உஎ)

செயத்த கும்பணி செய்வனிக் கோவண மன்றி
நயத்த குந்தன நல்லபட் டாடைகண் மணிகள்
உயர்த்த கோடிகொண் டருளுமென் றுடம்பினி லடங்காப்
பயத்தொ டுங்குலைந் தடிமிசைப் பலமுறை பணிந்தார்.

(இ ள்.) (இப்பிழைக்குப் பரிகாரமாகத்) தேவரீருக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளெல்லாஞ் செய்கின்றேன்; இந்தக் கோவணமல்லாமல், யாவரும் விரும்பத்தகுந்த திரவியங்களும் - நல்லபட்டாடைகளும்-பலவகை இரத்தினங்களுமாகிய இவைகளுள் மேன்மையாக அநேகம் பெற்றுக்கொண்டு அடியேனுக்குக் கிருபைசெய்வீரென்று தமதுடம்பி லடங்காத அச்சத்தோடும் நடுநடுங்கி அவரது திருவடிகளில் பலமுறைவிழுந்து வணங்கினர்.—எ-று.

கோடி என்பது ஈண்டுப் பல என்பதைக் காட்டவந்தது. (உஅ)

பணியு மன்பனை நோக்கியப் பரம்பொரு ளானர்
தணியு முள்ளத்த ராயினர் போன்றுநீர் தந்த
மணியும் பொன்னுநல் லாடையு மற்றுமென் செய்ய
அணியுங் கோவண நேர்தர வமையு மென்றருள.

(இ-ள்.) எல்லாப்பொருள்களுக்கும் மேலாகிய பொருளாயுள்ள சிவபெருமான் தம்மை வணங்கிநிற்கின்ற அமர்நீதிநாயனாரைப் பார்த்துக் கோபந்தணிந்த

திருவுள்ளத்தினையுடையவர்போலத் தோன்றி (அன்பரே! நீர் தருவதாகச்சொல்லிய இரத்தினங்களும், பொன்னும், நல்லபட்டாடைகளும், மற்றையபொருள்களும் எமக்கு என்னபிரயோசனத்துக் காகவேண்டும்; நான்தரித்துச்கொள்வதற்கு உபயோகமாயிருந்த கோவணத்திற்கு இடையாக இருக்க ஒருகோவணங்கொடுத்தால் அதுவே எமக்குப்போதுமென்று அருளிச்செய்ய.—எ-று. (உகூ)

மலர்ந்த சிந்தைய ராகிய வணிகரே றனையார்
அலர்ந்த வெண்ணிறக் கோவண மதற்குநே ராக
இலங்கு பூந்துகில் கொள்வதற் கிசைந்தருள் செய்யீர்
நலங்கொள் கோவணந் தரும்பரி சியாதென நம்பர்.

(இ-ள்.) (இவ்வாறு சொல்லிய சிவபெருமானாகிய வேதியரது வார்த்தையால்) மகிழ்ந்த மனத்தினையுடைய சிறந்தவர்த்தகராகிய அமர்நீதிநாயனார் பிரகாசம் பொருந்திய வெண்ணிறத்தையுடைய கோவணத்தின் இடைக்கு ஒத்திருக்க விளங்குகின்ற அழகிய பட்டாடை முதலியவற்றை வாங்கிக்கொள்வதற்குச் சம்மதித்துக் கிருபைசெய்யாதிருக்கிறீர்; ஆனால், நன்மையாகிய அந்தக்கோவணத்தின் இடைக்கு வேறுகோவணங்கொடுக்க எந்தக் கோவணத்தை இடையாகவைத்துக் கொடுக்க வேண்டியதென்றுகேட்க, அதற்குச் சிவபெருமானாகியவேதியர் சொல்லுகின்றார்.—எ-று. (கூ0)

உடுத்த கோவண மொழியநா மூங்கையிற் றாநீர்
கெடுத்த தாகமுன் சொல்லுமக் கிழித்தகோ வணநேர்
அடுத்த கோவண மிதுவென்று தண்டினி லவிழா
எடுத்து மற்றித னிடையிடுங் கோவண மென்றார்.

(இ-ள்.) நான் தரித்துக்கொண்டிருக்கிற கோவணமல்லாமல் நாம் உம்முடையகையில் நீராடுதற்குமுன் கொடுக்க நீர் போக்கடித்ததாகச் சொல்லுகிற அந்தக்கிழித்தகோவணத்தின் நிறைக்குச் சரியான நிறையுள்ள கோவணம் இதுவாகுமென்று தமதுகையிலுள்ள பலாசத்தண்டினின்றும் அவிழ்த்து எடுத்து, இந்தக் கோவணத்திற்குச் சரியான நிறையுள்ளதாக ஒரு கோவணத்தை நிறுத்துக் கொடுமென்று சொல்லியருளினார்.—எ-று. (கூக)

நன்று சாலவென் றன்பர்தா மொருதுலை நாட்டக்
குன்ற வில்லியார் கோவண மொருதட்டி லிட்டார்
நின்ற தொண்டருங் கையினி னெய்தகோ வணந்தட்
டொன்றி லேயிட நிறைநிலா தொழிந்தமை கண்டார்.

(இ-ள்.) இது மிகவும் நல்லதென்று அமர்நீதிநாயனார் ஒரு பெரியதராசைக்கொண்டுவந்து நாட்ட (அப்பொழுது) மேருமலையைவில்லாகவுடைய சிவபெருமான் தாம் பலாசத்தண்டினின்றும் அவிழ்த்த கோவணத்தை அத்தராசின் ஒரு தட்டில்வைத்தார்; அதைப்பார்த்துநின்ற அமர்நீதிநாயனாரும் தம்முடையகையிலே கொண்டுவந்த நெய்யப்பட்டுள்ள ஒரு கோவணத்தை மற்றொரு தட்டிலே வைக்க அது சிவபெருமானுடைய கோவணத்திற்கு நிறையில் ஒத்து நில்லாமல் மேலெழுந்ததைப்பார்த்தார்.—எ-று.

"நின்றவன்பரும்" என்றும் பாடம். (கூஉ)

நாடு மன்பொடு நாயன்மார்க் களிக்கமுன் வைத்த
நீடு கோவண மடையவே ராகவொன் றொன்றாக்
கோடு தட்டின்மீ திடவிடக் கொண்டெழுந் ததுகண்
டாடு சேவடிக் கடியரு மற்புத மெய்தி.

(இ-ள்.) மிகுந்த அன்போடு சிவனடியார்களுக்குக் கொடுக்கத் தாம் முன்னே வைத்திருந்த நீண்ட கோவணங்களை எல்லாம் நிறைக்குஒத்திருக்கும்படி ஒன்றொன்றாக மேலெழுந்த தட்டின்மேலே இட இட அக் கோவணங்களையெல்லாம் தாங்கிக்கொண்டு மேலே எழுந்ததைப்பார்த்து, பொன்னம்பலத்தில் திரு நடனஞ் செய்தருளுகின்ற திருவடிகளுக்கு அன்புபூண்டொழுகுகின்ற அமர்நீதி நாயனாரும் ஆச்சரியப்பட்டு.—எ-று. (௩௩)

உலகி லில்லதோர் மாயையிக் கோவண மொன்றுக்
கலகில் கோவண மொத்தில வென்றதி சயித்துப்
பலவு மென்றுகில் பட்டுட னிடவிட வுயர
இலகு பூந்துகிற் பொதிகளை யெடுத்துமே லிட்டார்.

(இ-ள்.) இது உலகத்தில் இந்நாள்வரையிலும் நடந்திராததாகிய ஒரு மாயையாக இருக்கின்றது; இந்த ஒரு கோவணத்திற்கு எண்ணிறந்த கோவணங்கள் நிறையினால் ஒத்திருக்கவில்லையென்று ஆச்சரியமடைந்து, பட்டாடைகளோடு மிருதுவாகிய பலவஸ்திரங்களையும் அத்தட்டில் ஒன்றின்மேல் ஒன்றாக இடுந்தோறும்தட்டு உயர்ந்து மேற்செல்ல, விளங்குகின்ற அழகிய வஸ்திரப்பொதிகளை எடுத்துக்கொண்டுவந்து முன்போட்டிருக்கின்ற ஆடைகளின்மேல் வைத்தார்.—எ-று.

முட்டி லன்பர்த மன்பிடுந் தட்டுக்கு முதல்வர்
மட்டு நின்றதட் டருளொடுந் தாழ்வுறும் வழக்காற்
பட்டொ டுந்துகி லநேககோ டிகளிடப் பத்தர்
தட்டு மேற்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு.

(இ-ள்.) அன்பினை இடுவதான குறைபாடில்லாத அடியார்களுடைய நிலைமையென்னுந்தட்டுக்குச் சிவபெருமானிடத்து நின்ற அருட்குணமென்னுந்தட்டானது அருளோடுதாழ்கின்ற முறைமையினால், பட்டாடைகளோடு அநேககோடி வஸ்திரங்களையும் அதன்மேல் கொண்டுவந்து வைக்குந்தோறும் அமர்நீதிநாயனாருடைய தட்டானது முன்போல மேல் எழும்ப, சிவபெருமானுடைய கோவணத் தட்டானது கீழேதாழ்ந்தது.—எ-று.

சிவபெருமான் அடியவர்களுக்கு எளியராந்தன்மை யுடையவரென்று வேதாகமங்களிற் சொல்லப்படுந் தன்மையினால், ஈண்டு அக்கடவுளின் கோவணம் வைத்ததட்டும் எளியதன்மையுடையதுபோலத் தாழ்ந்ததென்று சொற்சாதுரியந் தோன்றக் கூறினார்; எங்ஙனமெனின், அமர்நீதிநாயனார் பீதாம்பரமுதலிய பல வஸ்திரங்களை அத்தட்டில் இடுதல் அவர்மேல்வைத்த அன்பாதலினாலும், அவர் கோவணம் வைத்த தட்டைத் தாழ்த்தல் அந்நாயனாரது அன்பை வெளிப்படுத்தும் அருளாதலாலுமெனவறிக. அன்பருக்குத் தாழுந்தன்மை ஆண்டானி

டத்து உண்டென்பார் "முதல்வர்,மட்டு நின்றதட் டருளொடுந் தாழ்வுறும் வழக்கால்" என்று கூறினர். (கூ௫)

ஆன தன்மைகண் டடியவ ரஞ்சியந் தணர்முன்
றூந றுந்துகில் வர்க்கநூல் வர்க்கமே முதலா
மான மில்லன குவிக்கவுந் தட்டின்மட் டிதுவால்
ஏனை யென்றன மிடப்பெற வேண்டுமென் றிறைஞ்ச.

(இ-ள்.) இவ்விதமாக இருக்குந்தன்மையைக்கண்டு, அமர்நீதிநாயனார் அச்சப்பட்டு அவ்வேதியருக்கு முன்னே வந்து, பரிசுத்தம்பொருந்திய நல்ல ஆடைப்பொதிகளும் நூற்கட்டுகளும் முதலாக எண்ணிறந்த பொதிகளைக் குவிக்கவும் சரிவராமல் தட்டின் அளவு மேலாகவேயிருக்கின்றது; இன்னும் இவையல்லாமல் அடியேனுக்கிருக்கின்ற பொன்மணிமுதலிய தனங்களையும் இத்தட்டில் இடும்படியாகத் தேவரீரது கட்டளையைப்பெறவேண்டுமென்று வணங்கி நிற்க.—எ-று.

மங்கை பாகரா மறையவர் மற்றதற் கிசைந்தே
யிங்கு நாமினி வேறொன்று சொல்லுவ தென்கொல்
அங்கு மற்றுங்க டனங்களி னுகிலு மிடுவீர்
எங்கள் கோவண நேர்நிற்க வேண்டுவ தென்றார்.

(இ-ள்.) உமாதேவியாரை இடப்பாகத்திலேயுடைய சிவபெருமானுகிய பிராமணர் அமர்நீதிநாயனார்சொல்லிய வார்த்தைக்குச் சம்மதப்பட்டு இப்பொழுது உம்முடைய வார்த்தைக்கு எதிராக நாம் வேறொன்றைச் சொல்லுவதனால் பிரயோசனம் என்ன? (ஒன்றுமில்லை;) அந்தத்தட்டு நிறைநிற்கும்படி உங்கள் திரவியங்களையாவது இட்டு நிறை ஒத்திருக்கச்செய்வீர்; எம்முடைய கோவணமானது எவ்விதத்திலாயினும் நிறையில் ஒத்திருக்கவேண்டியதே என்று அருளிச்செய்தார்.—எ-று. (கூஎ)

நல்ல பொன்னொடும் வெள்ளியு நவமணித் திரளும்
பல்வ கைத்திறத் துலோகமும் புணர்ச்சிகள் பலவும்
எல்லை யில்பொருள் சுமந்தவ ரிடவிடக் கொண்டே
மல்கு தட்டுமீ தெழுந்தது வியந்தனர் மண்ணோர்.

(இ-ள்.) மாற்று உயர்ந்த பொன்கட்டிகளோடு வெள்ளிக்கட்டிகளும், நவரத்தினக்குவியல்களும், இன்னும் பலவகைப்பட்ட தாம்பிரமுதலிய உலோகக்கட்டிகளும், அவற்றைக்கலந்த வெண்கலமுதலியனவுமாகிய அளவில்லாத பொருள்களைச்சுமந்துகொண்டுவந்து அமர்நீதிநாயனார் அத்தட்டில் வைக்குந்தோறும் அப்பொருள்களையெல்லாம் தாங்கிக்கொண்டு சிறப்புப்பொருந்திய அத்தராசுத்தட்டு மேலே எழுந்தபடியேயிருந்தது; இதைக்கண்ட உலகத்திலுள்ளவர்கள் ஆச்சரியமடைந்தார்கள்.—எ-று.

நவமணித்திரளாவன:—மாணிக்கம், முத்து, பவளம், மரகதம், புருடராகம், வச்சிரம், கோமேதகம், நீலம், வைரேியம் என்பன. (கூஅ)

தவநி றைந்தநான் மறைப்பொரு ணூல்களாற் சமைந்த
சிவன்வி ரும்பிய கோவண மிடுஞ்செழுந் தட்டுக்
கவனி மேலமர் நீதியார் தனமெலா மன்றிப்
புவனம் யாவையு நேர்நிலா வென்பது புகழோ.

(இ-ள்.) மிகுந்த மேன்மைபொருந்திய நான்கு வேதங்களின் பொருள் வடிவான நூல்களினால் அமைந்திருக்கின்ற சிவபெருமானால் விரும்பப்பட்ட கோவணத்தை இடப்பட்டசிறந்த தட்டுக்கு இந்நிலவுலகத்தில் அமர்நீதிநாயனாருடைய திரவியங்களெல்லா மல்லாமல், எல்லா வுலகங்களையும் (எடுத்து) வைத்தாலும் அவைகள் நிறை ஒத்து நிற்கமாட்டாவென்று சொல்வது ஒருபுகழ்ச்சியாகுமோ? (ஆகாது).—எ-று. (௩௯)

நிலைமை மற்றிது நோக்கிய நிகரிலார் நேர்நின்
றுலைவில் பல்நிறை பொன்றொழி யாமையுய்த் தொழிந்தேன்
றலைவ யானுமென் மனைவியுஞ் சிறுவனுந் தருமேற்
றுலையி லேறிடப் பெறுவதுன் னருளெனத் தொழுதார்.

(இ-ள்.) (இவ்வாறு தமது பொருள்கள் அனைத்தையும் இட்டும் நிறை ஒவ்வாது இருக்கின்ற) இந்நிலைமையைப் பார்த்த ஒப்பில்லாத அன்பினையுடைய அமர்நீதிநாயனார் சிவபெருமானாகிய வேதியருக்கு முன்னே நின்று, எமது தலைவரே! கெடுதலில்லாத பல திரவியங்களையும் ஒன்றுமில்லாமல் தட்டில் இட்டுவிட்டேன்; அடியேனும், எனது மனைவியும், எனது புத்திரனும் நிறைக்கு உரிய பொருளாகத் தேவரீர் திருவுள்ளத்துக்கொப்பாயிருந்தால் அப்படியே தராசுத்தட்டில் ஏறி நிறை ஒத்துக்கொடுக்க உமது கட்டளையைப் பெறவேண்டுமென்று வணங்கினார்.—எ-று.

தமக்குரிய பொன் - மணி - ஆடை முதலிய எல்லாப் பொருள்களையும் இட்டும் நிறைசரியாகாமையின், பெண்பிள்ளைகளோடு தாமும் ஏறினால் ஒருவேளை ஒத்திருக்கக்கூடுமென்று கருதி, அஃது இவ்வேதியர் திருவுள்ளத்திற்கு இசையுமோவென்று கேட்டறிதற்கு விருப்புற்றாரென்பது தோன்ற "தலைவயானும் * * * தொழுதார்" என்று கூறினார். (௪0)

பொச்ச மில்லடி மைத்திறம் புரிந்தவ ரெதிர்நின்
றச்ச முன்புற வுரைத்தலு மங்கண ரருளா
னிச்ச யித்தவர் நிலையினைத் துலையெனுஞ் சலத்தால்
இச்ச ழக்கினின் றேற்றுவா ரேறுதற் கிசைந்தார்.

(இ-ள்.) உண்மையாகிய அடிமைத்திறஞ்செய்த அமர்நீதிநாயனார் தமக்கு எதிரே நின்று மனதில் அச்சத்தோடு இவ்வாறு சொன்னவுடனே சிவபெருமான் திருவருளினால் இவர் தொண்டிற் சிறந்தவரென்று நிச்சயித்து, அவ்வமர்நீதிநாயனாரது அன்பின்நிலைமையைத் துலாக்கோல்கொண்டு நிறுத்தலென்னும் ஓர்வியாசத்தினால், இவ்வுலகவாழ்க்கையாகிய துன்பத்தினின்றும் நீக்கி மோக்ஷமாகிய கரை

யிற் சேர்க்கத் திருவுள்ளங்கொண்டவராய் அந்நாயனார் தராசுத்தட்டில் ஏறுத ற்கு உடன்பட்டார்.—எ-று.

வியாசம் என்பது முகாந்தரம். (சக)

மனம கிழ்ந்தவர் மலர்க்கழல் சென்னியால் வணங்கிப்
புனைம லர்க்குழன் மனைவியார் தம்மொடு புதல்வன்
றனையு டன்கொடு தனித்துலை வலங்கொடு தகவால்
இனைய செய்கையி லேறுவார் கூறுவா ரெடுத்து.

(இ-ள்.) (சிவபெருமானாகிய வேதியர் சொல்லிய வார்த்தையைக்கேட்டு) மனமகிழ்ந்து அவரது தாமரைமலர்போன்ற திருவடிகளைச் சிரசினால் வணங்கி மலர்களையணிந்த கூந்தலையுடைய தமது மனைவியாரோடு புத்திரனையுங்கூட அழைத்துக்கொண்டு ஒப்பற்ற அந்தத் துலாக்கோலை வலஞ்செய்து தகுதியோடு இவ்வித செய்கையினால் ஏறுகின்ற அமர்நீதிநாயனார் இப்படிப்பட்ட வார்த்தைகளை எடுத்துச் சொல்லத்தொடங்கினார்.—எ-று. (சஉ)

இழைத்த வன்பினி லிறைதிரு நீற்றுமெய் யடிமை
பிழைத்தி லோமெனிற் பெருந்துலை நேர்நிற்க வென்று
மழைத்த டம்பொழிற் றிருநல்லூ ரிறைவனை வணங்கித்
தழைத்த வஞ்செழுத் தோதினா ரேறினார் தட்டில்.

(இ-ள்.) உண்மையாகச் செய்கின்ற அன்போடு சிவபெருமானது திருவெண்ணீறுதரித்த மெய்யடியார்களுக்கு இதுவரையினுஞ்செய்த அடிமைத்திறத்தில் நாம் சிறிதும் தவறாதிருந்தோமென்பது சத்தியமானால் இப்பெரிய துலையானது சரியாக நிற்கக்கடவதென்று, மேகங்கள் தவழுகின்ற விசாலமாகிய சோலைகள்சூழ்ந்த திருநல்லூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை வணங்கி மேன்மை பொருந்திய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் செபித்துக்கொண்டு அத்தராசுத்தட்டில் ஏறியருளினார்.—எ-று. (சங)

மண்டு காதலின் மற்றவர் மகிழ்ந்துட னேற
அண்டர் தம்பிரான் றிருவரைக் கோவண மதுவுங்
கொண்ட வன்பினிற் குறைபடா வடியவ ரடிமைத்
தொண்டு மொத்தலா லொத்துநேர் நின்றதத் துலைதான்.

(இ-ள்.) நிறைந்த விருப்பத்தோடு அவ்வமர்நீதிநாயனார் சந்தோஷத்தையடைந்து தமது மனைவியாரோடும் புத்திரனோடும் தட்டில் ஏறினபொழுது, தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானது திருவரையில் சாத்திய கோவணமும் தாம்கொண்ட பத்தியில் சிறிதும் குறைவுபடாத அமர்நீதிநாயனாரது அடிமைத்தொண்டும் ஒத்திருந்தபடியால் அத்தராசுத்தட்டும் ஒத்துநேராகநின்றது.—எ-று.

மதிவி ளங்கிய தொண்டர்தம் பெருமையை மண்ணோர்
துதிசெய் தெங்கணு மதிசய முறவெதிர் தொழுதார்
கதிர்வி சும்பிடை கரந்திட நிரைந்தகற் பகத்தின்
புதிய பூமழை யிமையவர் மகிழ்வுடன் பொழிந்தார்.

(இ-ள்.) பேரறிவினால் விளக்கமுற்ற அமர்நீதிநாயனரது மகிமையை இவ்வுலகத்திலுள்ளவர்கள் எல்லாம் துதிசெய்து ஆச்சரியப்பட்டு அவருக்கெதிரேவணங்கினார்கள் ; விளங்குகின்றஆகாயவெளி மறையும்படி வரிசையாயிருக்கின்ற கற்பகவிருட்சத்தி லுண்டாகிய புதிய புஷ்பமழையைத் தேவர்கள் மகிழ்ச்சியோடு பொழிந்தார்கள்.—எ-று.

"கதிர்வி சும்பிடைக் கரந்திட" என்று பாடமாயின், ஆகாயத்தின்கண் உதித்து விளங்குகின்ற சூரியன் மறையும்படி என்று பொருள்கொள்க. (சரு)

அண்டர் பூமழை பொழியமற் றதனிடை யொளித்த
முண்ட வேதிய ரொருவழி யான்முத னல்லூர்ப்
பண்டு தாம்பயில் கோலமே விசும்பினிற் பாகங்
கொண்ட பேதையுந் தாமுமாய்க் காட்சிமுன் கொடுத்தார்.

(இ-ள்.) தேவர்கள் புஷ்பமாரிபொழிய, அப்புஷ்பமாரியின் நடுவில் மறைந்த திரிபுண்டரத்தையணிந்த சிவபெருமானாகிய வேதியர் அந்தர்த்தானமாகி முதன்மைபொருந்திய திருநல்லூர் என்னும் க்ஷேத்திரத்தில் முன்னே தாம் எழுந்தருளியிருக்குந் திருக்கோலமாகவே ஆகாயத்தில் தமது இடப்பாகத்திலுள்ள உமாதேவியாருந் தாமுமாகத்தோன்றி அமர்நீதிநாயனருக்கு முன்னே காட்சிகொடுத்தருளினார்.—எ-று. (சகா)

தொழுது போற்றியத் துலைமிசை நின்றுநேர் துதிக்கும்
வழுவி லன்பரு மைந்தரு மனைவியார் தாமு
முழுது மின்னருள் பெற்றுத்தம் முன்றொழு திருக்கும்
அழிவில் வான்பதங் கொடுத்தெழுந் தருளினா ரையர்.

(இ-ள்.) (அத்திருக்கோலத்தைக்கண்டு) கைகூப்பித்தொழுது அத்தராசுத்தட்டின்மேல் நின்று நேரே ஸ்தோத்திரஞ்செய்கின்ற குற்றமற்ற அமர்நீதிநாயனரும், அவரது புத்திரனும், மனைவியாருமாகிய மூவரும் இனிய திருவருளை முழுவதும்பெற்றுத் தமது சந்நிதியின்முன்னே (சதாகாலமும்) தொழுதுகொண்டிருக்கும்படியான அழிவில்லாத உயர்ந்த சிவபதத்தை அவர்களுக்குக்கொடுத்து சிவபெருமான் எழுந்தருளிச் சென்றார்.—எ-று. (சஎ)

நாதர் தந்திரு வருளினா னற்பெருந் துலையே
மீது கொண்டெழு விமானம தாகிமேற் செல்லக்
கோதி லன்பருங் குடும்பமுங் குறையறக் கொடுத்த
ஆதி மூர்த்தியா ருடன்சிவ புரியினை யணைந்தார்.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருவருளினாலே நன்மைபொருந்திய பெரிய அத்தராசுதானே மேற்கொண்டெழுகின்ற தெய்வவிமான ரூபமாகி மேலே சிவபதத்தைநோக்கிச் செல்ல, குற்றமற்ற அமர்நீதிநாயனரும், அவரது மனைவியாரும், புத்திரனும் தமக்குக்குறைவில்லாமல் திருவருள்செய்த முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானோடு சிவலோகத்தை யடைந்தார்கள்.—எ-று. (சஅ)

வேறு.

மலர்மிசை யயனு மாலுங் காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூ ராவணப் பழைமை காட்டி
உலகுய்ய வாண்டுகொள்ளப் பெற்றவர் பாதமுன்னித்
தலைமிசை வைத்து வாழுந் தலைமைநந் தலைமை யாகும்.

(இ-ள்.) தாமரைமலரில்வாழுகின்ற பிரமனும், விஷ்ணும் அடியையும்முடியையும் தேடிக் காண்பதற்கரிய சிவபெருமான், யாவரும் புகழத்தகுந்த திருவெண்ணெய்நல்லூரில் பழமையாகிய முறியோலையைக்காண்பித்து உலகத்திலுள்ளவர்கள் (தமது பந்தத்தினின்றுநீங்கிக்) கடைத்தேறும்பொருட்டுத் தடுத்தாட்கொள்ளப்பெற்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது திருவடிகளைத்தியானஞ்செய்து அவைகளைத் தலையின்மேல் சூடிக்கொண்டு வாழுகின்ற மேன்மையே நமக்குச் சிறந்த மேன்மையாகும்.—எ-று.

ஆவணப் பழைமையாவது முன்பு ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது தந்தைதந்தையாகிய ஆரூரன் என்பவரால் எழுதிக்கொடுத்த பழைய மூலவோலை எனவறிக. (சஉ)

அமர்நீதிநாயனார்புராணம் முற்றிற்று.

முதலாவது

தில்லைவாழந்தணர் சருக்கம்

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் ௩௭௦.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது

## இலைமலிந்த சருக்கம்.

# எறிபத்தநாயனார் புராணம்.

மல்லனீர் ஞாலந் தன்னுண் மழவிடை யுடையா னன்பர்க்
கொல்லைவந் துற்ற செய்கை யுற்றிடத் துதவு நீரார்
எல்லையில் புகழின் மிக்க வெறிபத்தர் பெருமை யெம்மாற்
சொல்லலாம் படித்தன் றேனு மாசையாற் சொல்ல லுற்றாம்.

(இ-ள்.) வளப்பம்பொருந்திய சமுத்திரஞ்சூழ்ந்த இந்நிலவுலகத்தில் இளமைபொருந்திய ரிஷபத்தை வாகனமாகவுடைய சிவபெருமானதுஅடியார்களுக்கு ஆபத்துவந்தபோது சீக்கிரத்தில்வந்து அதை நீக்கவேண்டிய செய்கைகளைச் செய்கின்ற பெருங்குணத்தை யுடையவராகிய அளவில்லாதகீர்த்தியைப்பெற்றுச் சிறந்த எறிபத்தநாயனாரது பெருமையானது நம்மால் புகழ்ந்துசொல்லப்படுந் தகுதியையுடையதன்று; அவ்வா றிருந்தாலும், அதைச் சொல்லவேண்டுமென்னும் ஆசையினால் சொல்லத்தொடங்கினோம்.—எ-று. (க)

பொன்மலைப் புலிவென் றோங்கப் புதுமலை யிடித்துப் போற்றும்
அந்நெறி வழியே யாக வயல்வழி யடைத்த சோழன்
மன்னிய வநபா யன்சீர் மரபின்மா நகர மாகுந்
தொன்னெடுங் கருவூ ரென்னுஞ் சுடர்மணி வீதி மூதூர்.

(இ-ள்.) இமயமலையின்மேல் நாட்டிய தன்னுடைய புலிக்கொடியானது பகையரசர்களைவென்று விளங்க, மலைகளை இடித்துநிரவித் தன்னால் உண்டாக்கப்பட்ட அப்புதுவழியே நடப்போர்க்கு நேர்வழியாகச்செய்து முன்னிருந்த சுற்றுவழிகளை அடைத்த சோழவமிசத்தரசனாகிய நிலைபெற்ற புகழினையுடைய அநபாயச்சோழமகாராஜாவினது மரபினருக்குஉரிய சிறந்த நகரமாயிருக்கின்றது; (அது யாதென்றால்) பழமையாகிய பெரிய கருவூரென்று சொல்லப்பட்ட ஒளிவிளங்குகின்ற ரத்தினங்கள்பதித்த வீதிகளையுடைய ஊர்.—எ-று.

மலைகளை இடித்து நேர்வழியாக்கிச் சுற்றுவழிகளை அடைத்து உதவிபுரிதல் அரசர்களுக்குச் சிறப்பாதலின், "புதுமலையிடித்துப்போற்றும் - அந்நெறிவழியே யாக வயல்வழியடைத்த சோழன்" என்று கூறினார். "பொன்மலைப் புலிநின் றோங்க" என்றும் பாடம். (உ)

மாமதின் மஞ்சு சூழு மாளிகை நிரைவிண் சூழுந்
தூமணி வாயில் சூழுஞ் சோலையில் வாசஞ் சூழுந்
தேமல ரளகஞ் சூழுஞ் சிலமதி தெருவிற் சூழுந்
தாமகிழ்ந் தமரர் சூழுஞ் சததமக னகரந் தாழ.

(இ-ள்.) தேவர்கள் மிகுந்த சந்தோஷத்தையடைந்து சூழ்ந்து வாசஞ்செய்கின்ற தேவேந்திரனுடைய அமராவதியென்னும் நகரமானது இந்நகரத்தின் சிறப்புக்குத் தாழ்ந்திருக்கும்படியாகப் பெரிய மதில்களின் மேல் மேகக்கூட்டங்கள் சூழ்ந்துகொண்டிருக்கும், மாளிகைகளின் வரிசைகள் விண்ணுலகத்தை அளாவியிருக்கும்; பரிசுத்தம்பொருந்திய இரத்தினமாலைகள் வாயில்களில் தொங்கக்கட்டியிருக்கும்; சோலைகளில் புட்பங்களிலுண்டாகிய வாசனை வீசிக்கொண் டிருக்கும்; தேன்பொருந்திய மலர்மாலைகள் மாதர்களின் கூந்தலில் சூழ்ந்துகொண்டிருக்கும்; (அம்மாதர்களின்முகமாகிய) சில சந்திரர்கள் தெருவில் சூழ்ந்துகொண்டிருக்கும்.—எ-று. (ந)

கடகரி துறையி லாடுங் களிமயில் புறவி லாடும்
அடர்மணி யரங்கி லாடு மரிவையர் குழல்வண் டாடும்
படரொளி மறுகி லாடும் பயில்கொடி கதிர்மீ தாடுந்
தடநெடும் புவிகொண் டாடுந் தனிநகர் வளமை யீதால்.

(இ-ள்.) மதத்தைப் பொழிகின்ற யானைகள் நீர்த்துறைகளில் விளையாடும்; களிப்பினையுடைய மயில்கள் முல்லை நிலத்தில் ஆடிக்கொண்டிருக்கும்; நெருங்கிய பலவகை இரத்தினங்களிழைத்த சபையில் நடனஞ்செய்கின்ற மாதர்களின் கூந்தல்களில் வண்டுகள் சப்திக்கும்; படர்ந்த ஒளியையுடைய வீதிகளில் தோன்றக்கட்டிய கொடிகள் சூரியசந்திரமண்டலத்தின்மேல் உயர்ந்து ஆடிக்கொண்டிருக்கும்; விசாலம்பொருந்திய நீண்ட இந்நிலவுலகத்திலுள்ளவர்களால் புகழ்ந்து கொண்டாடப்பட்ட ஒப்பற்ற அக்கருவூரென்னு நகரத்தினது வளமானது இத்தன்மையதாக இருக்கும்.—எ-று. (ச)

மன்னிய சிறப்பின் மிக்க வளநகர் தன்னின் மல்கும்
பொன்னியல் புரிசை சூழ்ந்து சுரர்களும் போற்றும் பொற்பாற்
றுன்னிய வன்பின் மிக்க தொண்டர்தஞ் சிந்தை நீங்கா
அந்நிலை யானுர் வாழ்வ தானிலை யென்னுங் கோயில்.

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்பினால் உயர்ந்த வளப்பம்பொருந்திய அந்நகரத்தில் தேவர்களும் கூட்டமாகவந்து சுவர்ணமயமாகிய திருமதிலைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கத்தகுந்த பெருமையினால் பொருந்திய அன்பிற் சிறந்த அடியார்களின் திருவுள்ளத்தைவிட்டு நீங்காதிருக்கின்ற தன்மையினையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடமாகிய திருவானிலை என்னுந் திருக்கோயிலானது விளங்கிக்கொண்டிருக்கும்.—எ-று.

ஆனிலை என்பது கருவூரிலிருக்கும் சிவாலயத்தின் திருபெயர். (ரு)

பொருட்டிரு மறைக டந்த புனிதனை யினிதக் கோயின்
மருட்டுறை மாற்று மாற்றால் வழிபடுந் தொழில ராகி
இருட்கடு வொடுங்கு கண்டத் திறையவர்க் குரிமை பூண்ட
அருட்பெருந் தொண்டு செய்வா ரவரெறி பத்த ராவார்.

(இ-ள்.) பலபொருள்களும் அமைந்த சிறந்த வேதங்களால் அளவிடு தற்கரிய சிவபெருமானை இனிமையாக அத்திருக்கருவூர்த் திருவானிலை என்னுந் திருக்கோயிலில் மயக்கமாகிய வழியை நீக்குகின்ற வேதாகமவிதியின்படியே வழி படுகின்ற தொழிலையுடையவராகி, கருநிறம்பொருந்திய விஷமானது அடங்கியி ருக்கின்ற கண்டத்தினையுடைய அப்பெருமானுக்கு உரிமையாகத் தாங்கொண்ட அருளையுடைய பெரிய திருத்தொண்டைச்செய்கின்றவர்; (அவர் யாரெனில்) எறி பத்தநாயனார் என்று சொல்லப்பட்டவர்.—எ-று.

"மறைகடந்தபுனிதர்" என்பதற்கு வேதங்களை அருளிச்செய்த சிவபெ ருமான் என்று பொருளுரைப்பினும் பொருந்தும். "உரிமைபூண்டார்க்-கருட்பெ ருந்தொண்டு செய்வார்" என்றும் பாடம். (சு)

மழைவள ருலகி லெங்கு மன்னிய சைவ மோங்க
அழலவிர் சடையா னன்பர்க் கடாதன வடுத்த போது
முழையரி யென்னத் தோன்றி முரண்கெட வெறிந்து தீர்க்கும்
பழமறை பரசுந் தூய பரசுமுன் னெடுக்கப் பெற்றார்.

(இ-ள்.) மேகங்கள் சஞ்சரிக்கின்ற இவ்வுலகத்தில் எவ்விடங்களினும் நிலை பெற்ற சைவசமயமானது விருத்தியடைய, நெருப்பைப்போல விளங்குகின்ற சடையினையுடைய சிவபெருமானது அடியார்களுக்குத் துன்பம்நேரிட்டபொழுது மலைமுழையில் வாழ்கின்ற சிங்கத்தைப்போல வெளிப்பட்டு (அத் துன்பத்திற்குக் காரணமாயிருந்தவர்களின்) வலிகுன்றும்படி அவர்களைத்துணித்து அத்துன்பத் தை நீக்குகின்ற பழமையாகிய வேதங்களால் துதிக்கப்பட்டசிவபெருமானது திரு க்கரத்திலுள்ள பரிசுத்தம்பொருந்திய மழுவினை ஒத்த ஒரு மழுப்படையைத் தம் முடைய கையில் எடுக்கப்பெற்றவர்.—எ-று.

முழை=குகை. (எ)

அண்ணலார் நிகழு நாளி லானிலை யடிக ளார்க்குத்
திண்ணிய வன்பு கூர்ந்த சிவகாமி யாண்டா ரென்னும்
புண்ணிய முனிவ ரூர்தாம் பூப்பறித் தலங்கல் சாத்தி
உண்ணிறை காத லோடு மொழுகுவா ரொருநாண் முன்போல்.

(இ-ள்.) பெருமையிற் சிறந்தவராகிய எறிபத்தநாயனார் இவ்வாறு அடி யார்களுக்கு நேரிட்ட தீங்கை நீக்கி வாழ்கின்றநாள்களில், அத்திருவானிலை என் னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்கு உறுதியான அன்பிற்சிறந்த சிவகாமியாண்டார் என்னுந் திருப்பெயரையுடைய புண்ணியசொரூபராகிய ஒரு முனிவரர் மலர்களைப்பறித்து அம்மலர்களால் கட்டப்பட்ட திருப்பள்ளித்தாமங் களை அப்பெருமானுக்குச் சாத்தி, தம்முள்ளத்துள் நிறைந்த பேரன்போடும் நடக் கின்றவர்; அவர் ஒருநாள் தாம் முன்பு செய்துவந்ததுபோல்.—எ-று.

திருப்பள்ளித்தாமம் என்பது சிவபெருமானுக்குச் சாத்தும்படி கட்டும் மலர்மாலை. இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (அ)

வைகறை யுணர்ந்து போந்து புனன்மூழ்கி வாயுங் கட்டி
மொய்மலர் நெருங்கு வாச நந்தன வனத்து முன்னிக்
கையினிற் றெரிந்து நல்ல கமழ்முகை யலரும் வேலைத்
தெய்வநா யகர்க்குச் சாத்துந் திருப்பள்ளித் தாமங் கொய்து.

(இ-ள்.) விடியற்காலத்தில் நித்திரை தெளிந்து எழுந்து நதிக்குப்போய் நீரில் ஸ்நானஞ்செய்து, வாயையும் வஸ்திரத்தினல் கட்டிக்கொண்டு, கூட்டமாகிய மலர்கள் நிறைந்த வாசனை கமழும் திருநந்தனவனத்தையடைந்து, கையினலே ஆராய்ந்து மணம்வீசுகின்ற நல்ல அரும்புகள் மலரும்பொழுது, சகல தெய்வங்களுக்கும் நாயகராகிய சிவபெருமானுக்குச் சாத்துவதற்குரிய சிறந்த மலர்களைப் பறித்தெடுத்து.—எ-று.

ஈண்டுத் திருப்பள்ளித்தாமம் என்பது மலர்களுக்கு ஆகுபெயராய்வந்தது.

கோலப்பூக் கூடை தன்னை நிறைத்தனர் கொண்டு நெஞ்சில்
வாலிய நேசங் கொண்டு மலர்க்கையிற் றண்டுங் கொண்டங்
காலய மதனை நோக்கி யங்கணர்க் கமைத்துச் சாத்துங்
காலைவந் துதவ வேண்டிக் கடிதினில் வாரா நின்றார்.

(இ-ள்.) அழகிய திருப்பூங்கூடையை மலர்களால் நிறைத்துக்கொண்டு, தமது உள்ளத்தில் சிறந்த அன்பைவைத்து, மலர்போன்றகையில் தண்டத்தை ஊன்றிக்கொண்டு, அவ்விடத்துள்ள சிவாலயத்தைக்கருதி, சிவபெருமானுக்குத் திருப்பள்ளித்தாமஞ் சமைத்துச் சாத்தவேண்டிய சமையத்தில் கொண்டுபோய் உதவும்படியாகவிரும்பிச் சீக்கிரத்தில்வந்துகொண்டிருந்தார்.—எ-று. (கo)

மற்றவ ரணைய விப்பால் வளநகர் தன்னின் மன்னுங்
கொற்றவர் வளவர் தங்கள் குலப்புகழ் சோழ ஞர்தம்
பற்றலர் முனைகள் சாய்க்கும் பட்டவர்த் தனமாம் பண்பு
பெற்றவெங் களிறு கோலம் பெருகுமா நவமி முன்னாள்.

(இ-ள்.) அத்தன்மைபொருந்திய சிவகாமியாண்டார் என்னும் பெரியவர் வரும்பொழுது, இப்பால் வளம் பொருந்திய அந்தப் பட்டினத்தில் நிலைபெற்று வாழ்கின்ற அரசர்களாகிய சோழராஜாக்களின் குலத்தில் அவதரித்த புகழ்ச்சோழநாயனருடைய பகைவர்களது போர்முனையை அழிக்கின்ற பட்டவர்த்தனமென்னும் மேன்மைபொருந்திய கொடியயானையானது திருவிழாவைக் கொண்டாடுகின்ற மகாநவமியின் முதல்நாளாகிய அஷ்டமிதினத்தில்.—எ-று.

பட்டவர்த்தனம் = பட்டத்து யானை. இதுமுதல் இரண்டு பாடலுங் குளகம். (கக)

மங்கல விழவு கொண்டு வருநதித் துறை நீராடிப்
பொங்கிய களிப்பி னேடும் பொழிமதஞ் சொரிய நின்றார்
எங்கணு மிரியல் போக வெதிர்பரிக் கார ரோடத்
தூங்கமால் வரைபோற் றேன்றித் துண்ணென வணைந்த தன்றே.

(இ-ள்.) மங்கலகரமாகிய அலங்காரத்தைப்பெற்று வெள்ளமாகப்பெருகி வருகின்ற காவிரிநதித்துறையில் நீராடி மிருந்த களிப்போடும் பொழியாநின்ற மதநீர் சொரிய, எதிரில்வருபவர்கள் நாற்புறத்திலும் விலகியோடிப்போக, தனக்கு முன்னே குத்துக்கோற்காரர்கள் ஓட, உயர்ந்த பெரிய மலைபோலக் காணப்பட்டு விரைவாகவந்தது.—எ-று.

பரிக்காரராவார் யானைக்குமுன்னே போய்க்கொண்டு அதன் வருகையை எதிரில் வருபவர்களுக்குத் தெரிவித்து விலகும்படிச்செய்து அது மாறுபடுங்காலத்தில் அடக்கும்பொருட்டுக் குத்துக்கோலைக் கையில்வைத்துக்கொண் டிருப்பவர்; குதிரைமீதேறிக்கொண்டு முன்னே செல்பவர் எனினும் பொருந்தும். (கஉ)

வென்றிமால் யானை தன்னை மேல்கொண்ட பாக ரோடுஞ்
சென்றொரு தெருவின் முட்டிச் சிவகாமி யார்முன் செல்ல
வன்றனித் தண்டிற் றாங்கு மலர்கொள் பூக்கூடை தன்னைப்
பின்றொடர்ந் தோடிச் சென்று பிடித்துமுன் பறித்துச் சிந்த.

(இ-ள்.) வெற்றிபொருந்திய மதமயக்கத்தையுடைய அப்பட்டவர்த்தனயானையானது தன்மேல் ஏறிக்கொண்டிருக்கின்ற பாகர்களோடும்போய் ஒரு வீதியையடைந்து, அவ்வீதியில் தனக்குமுன்னே சிவகாமியாண்டார் போய்க்கொண்டிருக்கக்கண்டு, பின்னே தொடர்ந்தோடிப்போய் அவர்கையில் பிடித்திருக்கும் ஒப்பற்ற வலிய தண்டில் தொங்கிக்கொண்டிருந்த மலர்கள் நிறைந்த புஷ்பக்குடலையைப் பிடித்துப் பறித்துப் பூமியில் சிந்தினவளவில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கந)

மேல்கொண்ட பாகர் கண்டு விசைகொண்ட களிறு சண்டக்
கால்கொண்டு போவார் போலக் கடிதுகொண் டகலப் போக
நூல்கொண்ட மார்பிற் றொண்டர் நோக்கினர் பதைத்துப் பொங்கி
மால்கொண்ட களிற்றின் பின்பு தண்டுகொண் டடிக்க வந்தார்.

(இ-ள்.) அந்த யானையின்மேல் ஏறியிருக்கின்ற பாகர்கள் அச்செய்கையைப்பார்த்து, விசையாகப்போகின்ற யானையைச் சண்டமாருதத்தை வசப்படுத்திக்கொண்டுபோகிறவர்கள்போல (அவர்க்குத் தீங்குசெய்யாமல் விலக்கி) விரைவில் நடத்திக்கொண்டு அவ்விடத்தினின்றும் தூரமாகப்போக,பூணூலினையணிந்த மார்பினையுடைய சிவகாமியாண்டார் அதைப்பார்த்து மனம்பதைத்துக்கோபித்து, மதமயக்கங்கொண்ட அவ் யானையின்பின்னே தமது கையிலுள்ள தண்டினால் அடிக்கத் தொடர்ந்துவந்தார்.—எ-று. (கச)

அப்பொழு தணைய வொட்டா தடற்களி றகன்று போக
மெய்ப்பெருந் தொண்டர் மூப்பால் விரைந்துபின் செல்ல மாட்டார்
தப்பினர் விழுந்து கையாற் றரையடித் தெழுந்து நின்று
செப்பருந் துயர நீடிச் செயிர்த்துமுன் சிவதா வென்பார்.

(இ-ள்.) அப்பொழுது சிவகாமியாண்டாரை நெருங்கவொட்டாமல் வலிபொருந்திய யானையானது நீங்கிப்போக, உண்மையாகிய பெருந்தொண்டராகிய சிவகாமியாண்டார் தமக்கு உள்ள மூப்புப்பருவத்தினால் விரைவாக அதன்பின்

தொடர்ந்தோடுவதற்குச் சக்தியற்றவராய்த் தவறி விழுந்து தமது கைகளைத்தரை யில் மோதியடித்து எழுந்து நின்றுகொண்டு சொல்லுதற்கரிய துயரம் அதிகரித் துக் கோபித்து முன்னே சிவதா என்னும் மொழியைச் சொல்லுகின்றவரானார்.

சிவதா என்பது நன்மையைச் செய்கின்றவனே என்னும் விளிப்பெயரா தாய் அக்காலத்து அடியார்கள் கூறும் வடமொழி. இவர் அதனை நாடோறும் உச்சரித்துவரும் வழக்குடைமையால் துன்பம் நேர்ந்தகாலத்து அவ்வாறு கூறி னரென்க; இதனால், தமக்கு நேரிட்ட துன்பத்தைத் தவிர்த்து இன்பத்தைத் தரல்வேண்டுமென்பது கூறியதாயிற்று.

இதுமுதல் ஆறுபாடலுங் குளகம். (கரு)

வேறு.

களியா னையினீ ருரியாய் சிவதா
எளியார் வலியா மிறைவா சிவதா
அளியா ரடியா ரறிவே சிவதா
தெளிவா ரமுதே சிவதா சிவதா.

(இ-ள்.) களிப்பினையுடைய யானையினது உரித்த தோலினைப்போர்த்த பெருமானே! சிவதா! எளியவர்களுக்கு வலிய துணையாக இருக்கின்ற முதல்வ ரே! சிவதா! அன்புபொருந்திய மெய்யடியார்களின் அறிவாக நின்ற கடவுளே! சிவதா! தெளிவாகிய அமிர்தம்போன்ற சுவாமீ! சிவதா! சிவதா!!.—எ-று.

கயாசுரன் என்னும் கொடிய யானையைக் கொன்று உரித்துப் போர்வை யாகத்தரித்த உமக்கு இவ் யானையைக் கொல்லல் அரிதன்றாதலின், அவ்வாறு செய்தல்வேண்டுமென்னுங் கருத்துள்ளவர் என்பது தோன்ற "களியானையினீ ருரியாய்" என்று கூறினார். (கசா)

ஆறும் மதியும் மணியுஞ் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதே
வேறுந் நினைவார் புரம்வெந் தவியச்
சீறுஞ் சிலையாய் சிவதா சிவதா.

(இ-ள்.) கங்காநதியையும் பிறைச்சந்திரனையும்அணிந்த தேவரீரது சடை முடியின்மேல் சாத்துவதற்குத் தகுதியாகிய மலர்களை இந்த யானை சிந்தலாமா? பகைமையை நினைத்த அசுரர்களின் முப்புரங்களும் நீறாக வெந்து அழியும்பொரு ட்டுக் கோபித்த மேருவாகிய வில்லையுடைய எமது ஆண்டவரோ! சிவதா! சிவ தா!!.—எ-று.

அசங்கியசாத்தியமாகாத மேருவை வில்லாக வளைத்து முப்புரங்களையும் நகைப்புமாத்திரத்தானே யழித்த உமக்கு இவ் யானை ஒருபொருட்டன்றென்பது தோன்ற "புரம்வெந்தவியச்-சீறுஞ்சிலையாய்" என்று கூறினார். "வேறுந்நினைவார்" என்பதில் நகரம் விரித்தல்விகாரம். "வேறுண்ணினைவார்" என்றும் பாடம். (கஎ)

தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சேய் துயரங் கெடநேர் தொடரு
மஞ்சே யெனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய் சிவதா சிவதா.

(இ-ள்.) தமக்குத் தஞ்சமென்று அடைக்கலம்புகுந்த மார்க்கண்டேயரது மனத்திற் பொருந்திய துன்பம் நீங்கும்படி எதிராகத்தொடர்ந்து மேகம்போல நெருங்கிவந்த யமனுக்காகச் சிறிதளவு நீண்டுதைத்த சிவந்த திருவடிகளையுடைய கடவுளே! சிவதா! சிவதா!!.—எ-று.

எல்லா வுயிர்களையும் மாய்க்கும் இயமனும் உயிர்மாயும்படி சிறிதளவு நீட்டிய உமது திருவடியை இவ் யானையின்பொருட்டுச் சிறிது நீட்டல்வேண்டுமென்பது தோன்ற "மறலிக்கிறைநீள் - செஞ்சேவடியாய்" என்று கூறினர். (கஅ)

நெடியோ னறியா நெறியா ரறியும்
படியா லடிமைப் பணிசெய் தொழுகும்
அடியார் களில்யா னுரா வணைவார்
முடியா முதலா ரெனவே மொழிய.

(இ-ள்.) விஷ்ணுவினாலும் அறியப்படாத சிவானுபவநெறியை மிருதியும் அறிந்தடையும்படியாக அடிமைத்தொழில் செய் தொழுகுகின்ற அடியார்களில் என்னை எதிற்சேர்ந்தவனாக மதித்து (யான் வருந்தி யழைக்குங்கால்) எழுந்தருளிவந்து அனுக்கிரகஞ்செய்வார், என்றும் அழிவில்லாத முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமான் என்று வருந்திச்சொல்ல.—எ-று. (கக)

வேறு.

என்றவ ருரைத்த மாற்ற மெறிபத்த ரெதிரே வாரா
நின்றவர் கேளா மூளு நெருப்புயிர்த் தழன்று பொங்கி
மன்றவ ரடியார்க் கென்றும் வழிப்பகை களிறே யன்றோ
கொன்றது வீழ்ப்ப னென்று கொலைமழு வெடுத்து வந்தார்.

(இ-ள்.) இவ்விதமாகச் சிவகாமியாண்டார் முறையிட்டுக்கூறிய வார்த்தையை அவர்க்கெதிரில்வருகின்ற எறிபத்தநாயனார் கேட்டுத் தம்முள்ளே அதிகரித்தெழுந்த கோபத்தீயோடு பெருமூச்சுவிட்டு மனமழன்று கோபித்து, கனகசபையில் திருநடனஞ்செய்தருளும் சிவபெருமானுடைய அடியவராகிய இச்சிவகாமியாண்டாருக்கு எந்நாளும் வழிப்பகையாக உள்ளது யானையல்லவோ? ஆதலால், அந்த யானையைக் கொன்று பூமியில் விழத்தள்ளுவேனென்று கொலைசெய்தற்கேதுவாகிய மழுப்படையைக் கையில் எடுத்துக்கொண்டுவந்தார்.—எ-று.

"கேளாமுன்னம் நெருப்புயிர்த்து" என்றும் பாடம். (உ0)

வந்தவ ரழைத்த தொண்டர் தமைக்கண்டு வணங்கி யும்மை
இந்தவல் லிடும்பை செய்த யானையெங் குற்ற தென்ன
எந்தையார் சாத்தும் பூவை யென்கையிற் பறித்து மண்மேற்
சிந்திமுன் பிழைத்துப் போகா நின்றதித் தெருவே யென்றார்.

(இ-ள்.) இவ்வாறு வந்த எறிபத்தநாயனார் சிவதா வென்று முறையிட்டுக் கூறிய சிவகாமியாண்டாரைக்கண்டு தொழுது, உமக்கு இக்கொடிய துன்பத்தைச் செய்த யானையானது எவ்விடத்திற்சென்றது என்று கேட்க, (அப்பொழுது அவர்) நமது சிவபெருமானுக்குச் சாத்தும்பொருட்டுக் கொண்டுவந்தமலர்களை எனது கையிலிருந்து பூக்குடலையோடு பிடுங்கிப் பூமியில் இறைத்து முன்னே தப்பி இந்தத் தெருவின்வழியாகவே ஓடுகின்றது என்று சொன்னார்.—எ-று. (உக)

இங்கிது பிழைப்ப தெங்கே யினியென வெரிவாய் சிந்தும்
அங்கையின் மழுவுந் தாமு மனலும்வெங் காலு மென்னப்
பொங்கிய விசையிற் சென்று பொருகரி தொடர்ந்து செல்லுஞ்
செங்கண்வா ளரியிற் கூடிக் கிடைத்தனர் சீற்ற மிக்கார்.

(இ-ள்.) அதைக்கேட்டு எறிபத்தநாயனார் மிகுந்த கோபங்கொண்டு இனி இந்த யானையானது எப்படி உயிர்தப்பிப்பிழைத்துக்கொள்ளுமென்று, கையிற்பிடித்த நெருப்பைச் சிந்துகின்ற கூரியமழுப்படையும் தாமுமாக, நெருப்புங் காற்றும்போல மிகுந்த வேகமாகப்போய்,போர்செய்கின்ற யானைகளைக்கொல்லப் பின்தொடர்ந்து செல்லுகின்ற சிவந்த கண்களையுடைய ஒளிபொருந்தியசிங்கம் போல எதிர்த்து அந்தப் பட்டவர்த்தனயானையைக் கிட்டினார்.—எ-று. (உஉ)

கண்டவ ரிதுமுன் பண்ண லுரித்தவக் களிறே போலும்
அண்டரு மண்ணு ளோருந் தடுக்கினு மடர்ந்துச் சிந்தத்
துண்டித்துக் கொல்வே னென்று சுடர்மழு வலத்தில் வீசிக்
கொண்டெழுந் தன்பர் சென்று காலினாற் குலுங்கப் பாய்ந்தார்.

(இ-ள்.) அந்த யானையைக்கண்ட அன்பராகிய எறிபத்தநாயனார் இது முன்பு சிவபெருமான் தோலுரித்த கயாசுரனென்னும் யானைக்குச் சமானமாக இருப்பதுபோலுமென்று நினைத்து,தேவர்களும் - இந்நிலவுலகத்திலுள்ளவர்களும் இதனைக் கொல்லவேண்டாமென்று வந்து தடுத்தாலும் கோபித்து இரத்தஞ்சிந்தும்படியாக வெட்டிக்கொன்றுவிடுவேனென்று விளங்குகின்ற மழுப்படையை வலதுகையில் வீசி, காலினால் கிளம்பி அந்த யானையானது நடுங்கும்படி அதன்மேல் பாய்ந்தார்.—எ-று.

"வலங்கொண்டு வீசி" என்பதற்கு தமது வல்லமையைக் கொண்டு வீசி என்று பொருளுரைப்பினும் பொருந்தும். (உ௩)

பாய்தலு மிசைகொண் டுய்க்கும் பாகரைக் கொண்டு சீறிக்
காய்தழ லுமிழ்கண் வேழந் திரிந்துமேற் கதுவ வச்சந்
தாய்தலை யன்பின் முன்பு நிற்குமே தகைந்து பாய்ந்து
தோய்தனித் தடக்கை வீழ மழுவினாற் றுணித்தார் தொண்டர்.

(இ-ள்.) எறிபத்தநாயனார் பாய்ந்தவுடனே எரிகின்ற நெருப்புப்பொறியைக் கக்குகின்ற கண்களையுடைய யானையானது தன்மேல் ஏறிச் செலுத்துகின்ற பாகர்களைத் தாங்கிக்கொண்டு சீறி, அந்நாயனார்மேல் கோபித்துத் திரும்ப, அவர் அதனுடையபாய்தலைத் தடுத்து எதிர்த்து,நிலத்தில் தாழ்ந்த பெரிய துதிக்கையானது விழும்படியாகத் தமதுகையிலுள்ள மழுவாயுதத்தினால் வெட்டித்தள்ளினார். அச்சமானது தாய்ப்பசு தன்னிளங்கன்றினிடத்து வைத்த தலையன்புபோல, இவர் சிவனடியார்களிடத்துவைத்த பேரன்புக்கு முன் நிற்குமோ? நில்லாது.—எ-று.

கன்றினிடத்துத் தாய்ப் பசுவானது தன்பயன்கருதாது அக்கன்றின் பயன் கருதியே அன்புசெலுத்துமாறுபோல, இந்நாயனாரும் சிவனடியார்க்குத் துன்பம்நேர்ந்தபோது அதனால் தனக்கிறுதிவரினும் அதனைக் கருதாது அவ்வடியார்துன்பத்தையேநீக்கக்கருதுதலின் அவ்வன்பின்மேன்மைதோன்ற "தாய்தலையன்பு"

என்றும்,அத்தகைய அன்பின்முன்னே அச்சம் சிறிதும் நில்லாதென்பது தோன்ற "நிற்குமே" என்றுங் கூறினார். (உ௪)

கையினைத் துணித்த போது கடலெனக் கதறி வீழ்ந்து
மைவரை யனைய வேழம் புரண்டிட மருங்கு வந்த
வெய்யகோற் பாகர் மூவர் மிசைகொண்டா ரிருவ ராக
ஐவரைக் கொன்று நின்றா ரருவரை யனைய தோளார்.

(இ-ள்.) கரியமலையையொத்த அந்தயானையானது துதிக்கையை வெட்டினபொழுது கடல்முழக்குவதுபோலப் பேரிரைச்சலிட்டு விழுந்துபுரள, அதனருகில் வந்துகொண்டிருந்த கொடியகுத்துக்கோற்காரர்கள் மூவரும், மேலேறிவந்த பாகர் இருவருமாகிய ஐந்துபேரையும் சங்கரித்து நின்றார், பெரிய மலைபோன்ற தோள்களையுடைய எறிபத்தநாயனார்.—எ-று. (உ௫)

வெட்டுண்டு பட்டு வீழ்ந்தா ரொழியவே றுள்ளா ரோடி
மட்டவிழ் தொங்கன் மன்னன் வாயிற்கா வலரை நோக்கிப்
பட்டவர்த் தனமும் பட்டுப் பாகரும் பட்டா ரென்று
முட்டநீர் கடிது புக்கு முதல்வனுக் குரையு மென்றார்.

(இ-ள்.) எறிபத்தநாயனாரால் வெட்டுப்பட்டு இறந்துவீழ்ந்த ஐவர்கள் தவிர மற்றப்பாகர்கள் உயிர்தப்பி ஓடிப்போய்த் தேன்பொருந்திய ஆத்திமாலையைத்தரித்த புகழ்ச்சோழநாயனரது அரண்மனைவாயிலைக் காக்கின்றவர்களைப்பார்த்து நீங்கள் விரைந்துசென்று பட்டவர்த்தனயானையும் அதன் பாகர்களும் இறந்தார்களென்று நமதுஅரசனுக்குத்தெரிவியுங்கள்என்று சொன்னார்கள்.—எ-று.(உ௬)

மற்றவர் மொழிந்த மாற்ற மணிக்கடை காப்போர் கேளாக்
கொற்றவன் றன்பா லெய்திக் குரைகழல் பணிந்து போற்றிப்
பற்றல ரிலாதாய் நின்பொற் பட்டமால் யானை வீழச்
செற்றனர் சிலரா மென்று செப்பினர் பாக ரென்றார்.

(இ-ள்.) அப்பாகர்கள் சொல்லியவார்த்தையை அழகிய வாயில் காப்பவர்கள் கேட்டுப் புகழ்ச்சோழநாயனரது சமுகத்தையடைந்து சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளைவணங்கித் துதித்து,ஒரு சத்துருவும் இல்லாத அரசர்பெருமானே ! தேவரீரது பட்டத்துயானை இறந்துவிழும்படி சில மனிதர்கள் கொன்றார்களென்று பாகர்கள் சொன்னார்களெனக் கூறினார்கள்.—எ-று.

ஈண்டுச் சிலர் என்றது சிவகாமியாண்டார் எறிபத்தநாயனார் இருவரையும் குறித்தற்கு எனவறிக. (உ௭)

வளவனுங் கேட்ட போதின் மாறின்றி மண்காக் கின்ற
கிளர்மணித் தோள லங்கற் சுரும்பினங் கிளர்ந்து பொங்க
அளவில்சீற் றத்தி னாலே யார்செய்தா ரென்றுங் கேளான்
இளவரி யேறு போல வெழின்மணி வாயி னீங்க.

(இ-ள்.) புகழ்ச்சோழநாயனரும் அந்த வார்த்தையைக் கேட்டவுடனே ஒரு பகைவருமில்லாமல் நிலவுலகத்தைப் பாதுகாக்கின்ற பூரித்தஅழகியதோளில் தரித்த மாலையில் வண்டினங்கள் கிளம்பி ஓலிக்க, அளவில்லாத பெருங்கோபத்தி

ளுலே, யார் அந்த யானையைக்கொன்றவர்கள் என்று வாயிலாளர்களையுங் கேளாமல் இளமைபொருந்திய ஆண்சிங்கம்போல அழகிய அரண்மனைவாயிலினின்றும் வெளிப்பட்டுவர.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (உ௮)

தந்திரத் தலைவர் தாமுந் தலைவன்ற னிலைமை கண்டு
வந்துறச் சேனை தன்னை வல்விரைந் தெழமுன் சாற்ற
அந்தரத் தகல மெல்லா மணிதுகிற் பதாகை தூர்ப்ப
எந்திரத் தேரு மாவு மிடையிடை களிறு மாகி.

(இ-ள்.) சேனைத்தலைவர்களும் புகழ்ச்சோழநாயனார் போர்செய்யக் கருதிச் செல்லுகின்ற நிலைமையைப்பார்த்துவந்து தங்களுடைய ஆக்கினையின் கீழ்ப்பட்டிருக்கும் திரண்டசேனைகளை விரைவில் போர்க்கோலங்கொண்டுவரும்படியாக முன்னே பறை சாற்றுவிக்க, ஆகாயத்தின் பரந்த இடங்களெல்லாம் அழகிய வஸ்திரக்கொடிகள் மறைக்க, சூத்திரங்களமைத்திருக்கின்ற தேர்களும், குதிரைகளும், நடுவில் நடுவில் யானைகளுமாகக்கூடி.—எ-று. (உ௯)

வில்லொடு வேல்வா டண்டு பிண்டிபா லங்கண் மிக்க
வல்லெழு முசல நேமி மழுக்கழுக் கடைமுன் னான
பல்படைக் கலன்கள் பற்றிப் பைங்கழல் வரிந்த வன்கண்
எல்லையில் படைஞர் கொட்புற் றெழுந்தன ரெங்கு மெங்கும்.

(இ-ள்.) வில் - வேல் - வாள் - தண்டம் - பிண்டிபாலங்கள்-மிகுந்த வலிபொருந்திய இருப்புலக்கைகள் - சக்கரம் - மழுவாயுதம் - சூலம் இவை முதலாயுள்ள அநேக ஆயுதங்களைக் கையிற்பிடித்துக்கொண்டு கால்களில் அழகிய வீரகண்டையைத்தரித்த அஞ்சாமையையுடைய எண்ணிறந்த போர்வீரர்கள் இடசாரி வலசாரியாகச் சுற்றி எவ்விடத்தினின்றும் எழுந்தார்கள்.—எ-று. (௩௦)

சங்கொடு தாரை காளந் தழங்கொலி முழங்கு பேரி
வெங்குரற் பம்பை கண்டை வியன்றுடி திமிலை தட்டி
பொங்கொலிச் சின்ன மெல்லாம் பொருபடை மிடைந்தபொற்பின்
மங்குல்வான் கிளர்ச்சி நாண மருங்கெழுந் தியம்பி மல்க.

(இ-ள்.) சங்கவாத்தியமும் - தாரையும் - எக்காளமும் - மிகுந்த ஒலி முழங்குகின்ற பேரிகையும் - வெவ்விய ஒலியையுடைய பம்பையும் - கண்டையும்-பெருமைபொருந்திய உடுக்கையும் - திமிலைப்பறையும் ஆகிய இவைகளை முழங்கச்செய்து மற்றும் வேண்டியவாத்தியங்களின் ஒலித்தொகுதிகளெல்லாம் போர்செய்கின்ற சேனைகள்நெருங்கிய தோற்றத்தோடு ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற மேகக்கூட்டங்களின் இடியொலி நாணும்படி புகழ்ச்சோழநாயனாருக்கு நாற்புறத்திலும் எழுந்து சப்தித்துநெருங்க.—எ-று. (௩௧)

தூரியத் துவைப்பு முட்டுஞ் சுடர்ப்படை யொலிப்பு மாவின்
மூர்மணி யிசைப்பும் வேழ முழக்கமுந் தடந்தேர்ச் சீறும்
வீரர்தஞ் செருக்கி னார்ப்பு மிக்கெழுந் தொன்றா மெல்லைக்
காருடன் கடைநாட் பொங்குங் கடலெனக் கலித்த வன்றே.

(இ-ள்.) பலவகை வாத்தியங்களின் முழக்கமும், பிரகாசம்பொருந்திய ஆயுதங்கள் ஒன்றோடொன்று தாக்குதலாலுண்டாகிய முழக்கமும், குதிரைகளின் கழுத்திலணிந்த கிண்கிணி மாலையின் முழக்கமும், யானைகள் வீரிடுகின்ற முழக்கமும், விசாலமாகிய தேரோடுதலாலுண்டாகின்ற முழக்கமும், போர்வீரர்களுடைய செருக்கினாலுண்டாகின்ற முழக்கமும் அதிகரித்தெழுந்து ஒன்றாகச் சேர்ந்தபொழுது, கற்பாந்தகாலத்தில் எழுந்த மேகத்தோடுபெருகி முழங்குகின்ற சமுத்திரத்தின்கோஷம்போல முழங்கின.—எ-று.

கற்பாந்தகாலத்தில் சப்தமேகங்களும் ஒருங்குகூடிவருஷித்தலால் "காருடன் கடைநாட்பொங்குங்கடல்" என்று கூறினார். (௩௨)

பண்ணுறு முறுப்பு நான்கிற் பரந்தெழு சேனை யெல்லா
மண்ணிடை யிறுகான் மேன்மேல் வந்தெழுந் ததுபோற் றோன்றத்
தண்ணளிக் கவிகை மன்னன் றானைபின் றொடரத் தானோர்
அண்ணலம் புரவி மேற்கொண் டரசமா வீதி சென்றான்.

(இ-ள்.) அலங்கரிக்கப்பட்ட ரதகஜதுரகபதாதி என்னும் நால்வகையுறுப்பாகப் பரவியெழுகின்ற சேனைகளெல்லாம் பூமியில் ஊழிக்காற்றானது மேலுமேலும் அடித்தெழும்பி வந்ததுபோலத் தோன்ற, உயிர்களிடத்துக்குளிர்ந்த கிருபைபொருந்திய வெண்கொற்றக் குடையினையுடைய புகழ்ச்சோழநாயனார் சேனைகள் தம்மைப் பின்னே தொடர்ந்துவர, தாம் ஒருபெருமைபொருந்திய அழகிய குதிரையின்மேல் ஏறிக்கொண்டு பெரிய ராஜவீதியின்வழியாகச் சென்றார்.—எ-று. ()

கடுவிசை முடுகிப் பொங்கிக் களிற்றொடும் பாகர் வீழ்ந்த
படுகளங் குறுகச் சென்றான் பகைப்புலத் தவரைக் காணான்
விடுசுடர் மழுவொன் றேந்தி வேறிரு தடக்கைத் தாய
அடுகளி றென்ன நின்ற வன்பரை முன்பு கண்டான்.

(இ-ள்.) புகழ்ச்சோழநாயனார் மிகுந்த வேகத்தோடுசென்று கோபித்துப் பட்டவர்த்தன யானையோடு பாகர்களும் இறந்துகிடக்கின்ற போர்க்களத்திற்குச் சமீபமாகப்போய்; அங்குப் பகைவர்கள் ஒருவரையுங் காணாதவராய் ஒளிவீசுகின்ற ஒருமழுப்படையைக் கையிற்றாங்கிக்கொண்டு துதிக்கையின்றி வேறே இரண்டு பெரிய கைகளையுடைய கொலைசெய்கின்ற யானையைப்போலத் தனியே நின்ற எறிபத்தநாயனாரைத் தமக்குமுன்னே பார்த்தார்.—எ-று. (௩௪)

பொன்றவ ழருவிக் குன்ற மெனப்புரள் களிற்றின் முன்பு
நின்றவர் மன்று ளென்று நிருத்தமே பயிலும் வெள்ளிக்
குன்றவ ரடியா ரானர் கொன்றவ ரிவரொன் றோரான்
வென்றவ ரியாவ ரென்றான் வெடிபட முழங்குஞ் சொல்லான்.

(இ-ள்.) பொற்பொடிகள் தவழ்ந்துவருகின்ற அருவியாற்றையுடைய மலையைப்போலப் புரளுகின்ற யானைக்குமுன்னே நிற்கின்ற இவர் கனகசபையில் எப்பொழுதும் ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற ஸ்ரீகைலாசபதியினுடையஅடியவராயிருக்கின்றார்; அதனால் அந்தயானையைக்கொன்றவர் இவரொன்றுஅறியாமல்

இந்தயானையைக் கொன்றவர்கள் யாவரென்று கேட்டார் கோபத்தினால் பூமியதி ரும்படியாக ஒலிக்கின்ற சொல்லையுடைய புகழ்ச்சோழநாயனார்.—எ-று. (கரு)

அரசனிங் கருளிச் செய்ய வருகுசென் றணைந்து பாகர்
விரைசெய்தார் மாலை யோய்நின் விறற்களிற் றெதிரோ நிற்குந்
திரைசெய்நீ ருலகின் மன்ன ரியாருளார் தீங்கு செய்தார்
பரசுமுன் கொண்டு நின்ற விவரெனப் பணிந்து சொன்னார்.

(இ-ள்.) புகழ்ச்சோழநாயனார் இவ்வாறு சொன்னவளவில் பாகர்கள் அவ ரருகில்சென்று சேர்ந்துவாசனைபொருந்திய மலர்மாலையைத்தரித்த எமதுஅரசர் பெருமானே! உம்முடைய வெற்றிபொருந்திய பட்டவர்த்தனயானையை எதிர்த்து நிற்கின்றஅலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திலுள்ள அரசர்கள் யாரிருக் கின்றார்கள் ? (ஒருவருமில்லை ;) அந்த யானையைக்கொன்றவர் மழுப்படையைக் கையில்தாங்கிக்கொண்டு முன்னே நிற்கின்ற இவர்தானென்று வணங்கிச் சொன் னார்கள்.—எ-று. (கசா)

குழையணி காதி னானுக் கன்பராங் குணத்தின் மிக்கார்
பிழைபடி னன்றிக் கொல்லார் பிழைத்ததுண் டென்றுட்கொண்டு
மழைமத யானைச் சேனை வரவினை மாற்றி மற்ற
வுழைவயப் புரவி மேனின் றிழிந்தன னுலக மன்னன்.

(இ-ள்.) குண்டலத்தையணிந்த திருச்செவியினையுடைய சிவபெருமானு க்கு அடியவராகிய நற்குணத்திற் சிறந்த இவ் வெறிபத்தநாயனார் இந்த யானை யானது பிழைசெய்தாலல்லாமல் கொல்லமாட்டார்; ஆதலால் இது அவர்க்குத் தீங்குசெய் திருக்கவேண்டுமென்று மனதில் நினைத்து, மழைபோல மதத்தைப் பொழிகின்ற யானைகளோடு கூடிய சேனைகளின் வருகையை அங்கு வரவொட் டாமல்நிறுத்தி, தாம் ஏறிவந்த பிடரிமயிரையுடைய வெற்றிபொருந்திய குதிரை யினின்றும் கீழே இறங்கினார், உலகத்தை யாளுகின்ற அரசராகிய புகழ்ச்சோழ நாயனார்.—எ-று. (கஎ)

மைத்தடங் குன்று போலு மதகளிற் றெதிரோ விந்த
மெய்த்தவர் சென்ற போது வேறொன்று புகுதா விட்ட
அத்தவ முடையே னானே னம்பல வாண ரன்பர்
இத்தனை முனியக் கெட்டே னென்கொலோ பிழையென் றஞ்சி.

(இ-ள்.) கருநிறம்பொருந்திய பெரியமலையையொத்த மதங்கொண்ட யா னைக்கு எதிரே இந்த உண்மையாகிய தவத்தினையுடைய அடியவர்போனபொழுது வேறொருதீங்கு இவர்க்குச் சம்பவிக்காமல் இருக்கப்பெற்ற அந்தப் பெருந்தவத் தை அடியேன் பூர்வத்தில் செய்தவனானேன்; ஸ்ரீநடராஜப்பெருமானுக்கு அன்ப ராகிய இந்நாயனார் இவ்வளவு கோபங்கொள்ள என்னபிழை நேரிட்டதோ ! என் று பயந்து.—எ-று.

புகுதா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். கெட்டேன் என் பது இரக்கத்தில்வரும் ஓரிடைசொல்.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (கஅ)

செறிந்தவர் தம்மை நீக்கி யன்பர்முன் றொழுது சென்றீ
தறிந்திலே னடியே னங்குக் கேட்டதொன் றதுதா னிற்க
மறிந்தவிக் களிற்றின் குற்றம் பாகரோ டிதனை மாள
எறிந்ததே போது மோதா னருள்செய்யு மென்று நின்றான்.

(இ-ள்.) (புகழ்ச்சோழநாயனார்) தம்மைச் சூழ்ந்துவந்த பரிசனங்களைவில க்கி அவ்வெறிபத்தநாயனாருக்கு முன்னேபோய்த் தொழுது நின்றுகொண்டு இந்த யானை தேவரீருக்குத் தீங்குசெய்ததென்பதை அடியேன் அறியேன்; நான் என து அரண்மனையில் கேள்விப்பட்டவார்த்தை ஒன்றாயிருக்கின்றது; அது நிற்கட் டும்;எதிர்த்த இந்த யானையினாலுண்டாகிய குற்றத்திற்குப் பாகரோடு இந்தயானை யை இறக்கும்படி மழுப்படையால் துணித்ததுபோதுமோ? போதாதாயின், அத னையும் தேவரீர் அருளிச்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து நின்றார்.—

அங்குக் கேட்டதொன்று என்பது பட்டவர்த்தனயானையை அடியார் கொன்றார் என்னுமல், சிலர் கொன்றனர் என்று சொல்லக்கேட்டல். (௩௯)

மன்னவன் றன்னை நோக்கி வானவ ரீசர் நேசர்
சென்னியித் துங்க வேழஞ் சிவகாமி யாண்டார் கொய்து
பன்னகா பரணர்ச் சாத்தக் கொடுவரும் பள்ளித் தாமந்
தன்னைமுன் பறித்துச் சிந்தத் தரைப்படத் துணித்து வீழ்த்தேன்.

(இ-ள்.) தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானது அடியவராகிய எறி பத்தநாயனார் (அவ்வாறு விண்ணப்பஞ்செய்து நின்ற) புகழ்ச்சோழநாயனாரைப் பார்த்து, சோழர்பெருமானே! இந்த உயர்ந்தயானையானது சிவகாமியாண்டார் என்னும் பெரியவர் சர்ப்பாபரணராகிய சிவபெருமானுக்குச் சாத்தும்படி பறித்து க்கொண்டுவந்த திருப்பள்ளித்தாமத்திற்குரிய மலர்களை முன்னேபறித்துக் கீழே சிந்தினபடியால் இதனை நிலத்தில்விழும்படி வெட்டித்தள்ளினேன்.—எ-று. (௪0)

மாதங்கந் தீங்கு செய்ய வருபரிக் காரர் தாமு
மீதங்குக் கடவு வாரும் விலக்கிடா தொழிந்து பட்டார்
ஈதிங்கு நிகழ்ந்த தென்றா றெறிபத்த ரென்ன வஞ்சிப்
பாதங்கண் முறையாற் றாழ்ந்து பருவரைத் தடந்தோண் மன்னன்.

(இ-ள்.) இந்த யானையானது மலர்களைக் கீழேசிந்தித் தீங்குசெய்தபோது முன்னேவருகின்ற குத்துக்கோற்காரர்களும், மேலேறியிருந்து செலுத்துகின்ற பாகர்களும் அதனை விலக்காதிருந்த குற்றத்தினால் அவர்களும் வெட்டுண்டு இறக் கப்பட்டார்கள்; இதுதான் இவ்விடத்தில் நடந்த செய்தியென்று எறிபத்தநாய னார்சொல்ல, பருத்தமலைபோலும் பெரியதோள்களையுடைய புகழ்ச்சோழநாயனார் (அதைக்கேட்டுப்) பயந்து அவரது திருவடிகளில் முறையாகவணங்கி.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (௪௧)

அங்கண ரடியார் தம்மைச் செய்தவிவ் வபரா தத்துக்
கிங்கிவை தம்மாற் போதா தென்னையுங் கொல்லவேண்டு

மங்கல மழுவாற் கொல்கை வழக்குமன் றிதுவா மென்று
செங்கையி லுடைவாள் வாங்கிக் கொடுத்தனன் றீர்வு நேர்வான்.

(இ-ள்.) சிவபெருமானுடைய அடியார்க்கு இந்தயானையானது செய்ததீங்குக்குப் பரிகாரமாக இந்தயானையோடு பாகரையுங்கொன்றதனால் போதாது; (அத்தீங்குக்காரணமாயிருந்த) அடியேனையுங் கொல்லவேண்டும்: தேவரீர் திருக்கரத்திலுள்ள மங்கலகரம்பொருந்திய மழுப்படையினால் கொடியவனாகிய என்னைக் கொல்லுதல் முறைமையல்ல; அதற்கு இதுவே தகுதியானதென்று தமது சிவந்த திருக்கரத்தினால் இடையிற்கட்டிய உடைவாளை எடுத்துக்கொடுத்தார், அத்தீங்கு தீரவேண்டுமென்னுங் கருத்துடையவராகிய புகழ்ச்சோழநாயனார். ()

வெந்தழற் சுடர்வா ணீட்டும் வேந்தனை நோக்கிக் கெட்டேன்
அந்தமில் புகழா னன்புக் களவின்மை கண்டே னென்று
தந்தவாள் வாங்க மாட்டார் தன்னைத்தான் றுறக்கு மென்று
சிந்தையா லுணர்வுற் றஞ்சி வாங்கினார் தீங்கு தீர்ப்பார்.

(இ-ள்.) கொடியநெருப்பைப்போலப் பிரகாசிக்கின்ற உடைவாளை எடுத்துத் தமதுகையிற்கொடுக்கின்ற புகழ்ச்சோழநாயனாரது அன்பின் மிகுதியைப்பார்த்து, ஆ கெட்டேன்; அளவில்லாத புகழையுடைய இவ்வரசர்பெருமானது அன்கு ஒரு அளவில்லாமையைக் கண்டேனென்று அவர்கொடுத்த உடைவாளை வாங்காதவராய்ப் பின்பு அதனை வாங்காதிருந்தால் தம்முயிரைத் தாமே மாய்த்துக் கொள்ளுவாரென்று மனதில் ஆலோசித்து அத்தீங்கை நீக்கவேண்டுமென்னுங் கருத்துள்ளவராய் அதனைத் தம் திருக்கரத்தில் வாங்கினார்.—எ-று. (௪௩)

வாங்கிய தொண்டர் முன்பு மன்னனார் தொழுது நின்றே
ஈங்கெனை வாளி னாற்கொன் றென்பிழை தீர்க்க வேண்டி
ஓங்கிய வுதவி செய்யப் பெற்றன னிவர்பா லென்றே
ஆங்கவ ருரைப்பக் கண்ட வெறிபத்த ரதனுக் கஞ்சி.

(இ-ள்.) தாம் கொடுத்த உடைவாளை வாங்கிக்கொண்ட எறிபத்தநாயனாருக்கு முன்னே புகழ்ச்சோழநாயனார் வணங்கிநின்று இவ்விடத்தில் அடியேனை இவ்வுடைவாளினால் கொன்று யான் செய்த குற்றத்தைத்தீர்க்கும்பொருட்டு மிகுந்த உதவிசெய்ய இந்நாயனாரிடத்தில் அடியேன் பெற்றுக்கொண்டேனென்று அப்புகழ்ச்சோழநாயனார் சொல்ல, அவரது அன்பின் மிகுதியைக் கண்ட எறிபத்தநாயனார் அவ்வாறு செய்வதற்குப் பயப்பட்டு.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௪௪)

வன்பெருங் களிறு பாகர் மடியவு முடைவா ளைத்தந்
தென்பெரும் பிழையி னாலே யென்னையுங் கொல்லு மென்னும்
அன்பனார் தம்மைத் தீங்கு நினைத்தன னென்று கொண்டு
முன்பென துயிர்செ குத்து முடிப்பதே முடிவென் றெண்ணி.

(இ-ள்.) வலிய பெருமைபொருந்திய தமது பட்டத்துயானையும், பாகர்களும் மடிந்துபோகவும் அதற்குச் சிறிதும் விசனப்படாமல் தமது கையிலுள்ள

உடைவாளைக்கொடுத்து (அசாக்கிரதையாகவிருந்த) என்னுடைய பெரிய குற்றத்தினாலே அடியேனையுங் கொல்லவேண்டுமென்று சொல்லுகிற சிவபத்தராகிய இவ்வரசருக்குத் தீங்குசெய்ய நினைத்தேனென்று தம்முள்ளத்திற் குறித்து முதலில் என்னுடைய உயிரை உடைவாளால் குத்தி இறக்கச்செய்வதே அப்பிழைக்குத் தக்க தீர்வு என்று நினைத்து.—எ-று.

தம்மை என்பது உருபுமயக்கம். (சரு)

புரிந்தவர் கொடுத்த வாளை யன்பர்தங் கழுத்திற் பூட்டி
அரிந்திட லுற்ற போதி லரசனும் பெரியோர் செய்கை
இருந்தவா றிதுவென் கெட்டே னென்றெதிர் கடிதிற் சென்று
பெருந்தடந் தோளாற் கூடிப் பிடித்தனன் வாளுங் கையும்.

(இ-ள்.) புகழ்ச்சோழநாயனார் தம்மை வெட்டும்படி விரும்பிக் கொடுத்த உடைவாளை அன்பராகிய எறிபத்தநாயனார் தம்முடைய கழுத்தில் சேர்த்து அறுக்கத்தொடங்கினபொழுது, புகழ்ச்சோழநாயனாரும் இப்பெரியோரது செய்கையானது இருந்தவிதம் இவ்வாறுதானோ? ஆ கெட்டேன்! என்று அவருக்கெதிரில் விரைந்துபோய் விசாலமாகிய பெரிய கைகளினால் தொடர்ந்து (அவ்வாறுசெய்யாமல்) வாளையும் கையையும் தடுத்துப் பிடித்தார்.—எ-று. (சசு)

வளவனார் விடாது பற்ற மாதவர் வருந்தி நிற்ப
அளவிலாப் பரிவில் வந்த விடுக்கணை யகற்ற வேண்டிக்
களமணி களத்துச் செய்ய கண்ணுத லருளால் வாக்குக்
கிளரொளி விசும்பின் மேல்வந் தெழுந்தது பலருங் கேட்ப.

(இ-ள்.) புகழ்ச்சோழநாயனார் கையைவிடாமல் பிடித்துக்கொள்ள பெரியதவத்தினையுடைய எறிபத்தநாயனார் தமது எண்ணம் நிறைவேறாமல் வருத்தப்பட்டு நிற்க (அப்பொழுது) அளவில்லாத பேரன்பினாலுண்டாகிய துன்பத்தை அவ்விருவருக்கும் நீக்கத் திருவுள்ளங்கொண்டு விஷத்தையணிந்த கண்டத்தையும், சிவந்த நெற்றிக்கண்ணையுமுடைய சிவபெருமானது திருவருளினால் ஓர் அசரீரிவாக்கானது விளங்குகின்ற ஒளியினையுடைய ஆகாயத்தினின்றுயாவருங் கேட்கும்படியாக எழுந்தது.—எ-று.

களம் - கறுப்பு, அது விஷத்திற்கு ஆகுபெயர். (சஎ)

தொழுந்தகை யன்பின் மிக்கீர் தொண்டினை மண்மேற் காட்டச்
செழுந்திரு மலரை யின்று சினக்கரி சிந்தத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்த ரருளினாற் கூடிற் றென்றங்
கெழுந்தது பாகரோடு மியானையு மெழுந்த தன்றே.

(இ-ள்.) (அவ்வசரீரிவாக்கு எவ்வாறெழுந்ததென்றால்) யாவருந் தொழுதற்குத் தகுதியாகிய அன்பிற் சிறந்தவர்களே! உங்களுடைய திருத்தொண்டின் பெருமையை உலகத்தில் யாவருக்கும் காட்டும்படி செழிப்பாகிய சிறந்த புட்பங்களை இன்றையத்தினத்தில் கோபம்பொருந்திய பட்டவர்த்தனயானையானது சிந்தும்படியாக இளம்பிறையையணிந்த சடையினையுடைய சிவபெருமானது திருவருளினால் உண்டாயினது என்று அவ்விடத்து எழுந்தது; (அப்பொழுது) இறந்துகிடந்த ஐந்து பாகர்களோடும் யானையும் உயிர்பெற்றெழுந்தது.—எ-று. (சஅ)

ஈரவே பூட்டும் வாளை விட்டெறி பத்தர் தாமு
நேரியர் பெருமான் முண்மேல் விழுந்தனர் நிருபர் கோனும்
போர்வடி வாளைப் போக வெறிந்தவர் கழல்கள் போற்றிப்
பார்மிசைப் பணிந்தான் விண்ணோர் பனிமலர் மாரி தூர்த்தார்.

(இ-ள்.) தமது கழுத்தை அறுத்துக்கொள்ளும்படியாகப் பூட்டிய உடைவாளை எறிபத்தநாயனார் கீழேவிட்டுப் புகழ்ச்சோழநாயனாருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினார்; அரசர்பெருமானாகிய புகழ்ச்சோழநாயனாரும் போர்செய்தற்குரிய கூர்மையாகிய உடைவாளைத் தூரத்திற்போகும்படி எறிந்துவிட்டு அவ்வெறிபத்தநாயனாரது திருவடிகளைத் துதித்துப் பூமியில் விழுந்து வணங்கினார், அதைக்கண்ட தேவர்கள் குளிர்ந்த புஷ்பமாரி பொழிந்தார்கள்.—எ-று.

"ஈரவே பூட்டும் வாள்விட் டெறிபத்தர் தாழு மந்த" என்றும், "கழல்கள்பற்றி" என்றும் பாடம். (௪௯)

இருவரு மெழுந்து வானி லெழுந்தபே ரொலியைப் போற்ற
அருமறைப் பொருளா யுள்ளா ரணிகொள்பூக் கூடை தன்னின்
மருவிய பள்ளித் தாம நிறைந்திட வருள மற்றத்
திருவருள் கண்டு வாழ்ந்து சிவகாமி யாரு நின்றார்.

(இ-ள்.) எறிபத்தநாயனாரும் புகழ்ச்சோழநாயனாரும் ஒருவரையொருவர் வணங்கி எழுந்து நின்று ஆகாயத்திலிருந்துண்டாகிய அசரீரி வாக்கைத் துதிக்க, அரிய வேதத்தின் பொருளாயுள்ள சிவபெருமான் அழகிய புஷ்பக்குடலையில் முன்பு சேர்ந்திருந்த திருப்பள்ளித்தாமத்துக்குரிய மலர்கள் முன்புபோல நிறைந்திருக்கும்படி கிருபைசெய்ய, அவ்வாறாகிய சிவபெருமானுடைய திருவருளைக்கண்டு அதனால் சிவானந்தப்பெருவாழ்வடைந்து சிவகாமியாண்டாரும் நின்றருளினார்.

"திருவருள்கொண்டுவாழ்ந்து" என்றும் பாடம். (௫௦)

மட்டவி ழலங்கல் வென்றி மன்னவர் பெருமான் முன்னர்
உட்டரு களிப்பி னோடு முறங்கிமீ தெழுந்த தொத்து
முட்டுவெங் கடங்கள் பாய்ந்து முகிலென முழங்கிப் பொங்கும்
பட்டவர்த் தனத்தைக் கொண்டு பாகரு மணைய வந்தார்.

(இ-ள்.) தேன் சிந்துகின்ற மலர்மாலையைத் தரித்த வெற்றிபொருந்திய அரசர்பெருமானாகிய புகழ்ச்சோழநாயனாருக்கு முன்னே உள்ளத்திலுண்டாகிய களிப்பினோடும் நித்திரைசெய்து பின் எழுந்ததைப்போல நாற்புறத்திலும் நிறைய வெவ்விய மதநீரைச் சொரிந்து மேகம்போலக் கர்ச்சித்து ஆரவாரிக்கின்ற பட்டவர்த்தன யானையை நடத்திக்கொண்டு பாகர்களும் அவர்களுக்குச் சமீபத்தில் வந்துசேர்ந்தார்கள்.—எ-று. (௫௧)

ஆனசீர்த் தொண்டர் கும்பிட் டடியனேன் களிப்ப விந்த
மானவெங் களிற்றி னேறி மகிழ்ந்தெழுந் தருளு மென்ன
மேன்மையப் பணிமேற் கொண்டு வணங்கிவெண் குடையி னீழல்
யானைமேல் கொண்டு சென்றா ரிவுளிமேல் கொண்டு வந்தார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய தொண்டராகிய எறிபத்தநாயனார் புகழ்ச்சோழநாயனாரை வணங்கி அடியேன் மனமகிழ்ச்சியடையும்படியாக இந்தப் பெருமைபொருந்திய வெவ்விய யானையின்மேல் ஏறி மகிழ்ச்சியோடு எழுந்தருளுமென்று சொல்ல, மேன்மையாகிய அந்தக்கட்டளையைச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு அவ்வெறிபத்தநாயனாரைத் தொழுது, முன்பு குதிரையின்மேல் ஏறிக்கொண்டுவந்த புகழ்ச்சோழநாயனார் வெண்கொற்றக் குடையின் நிழலின்கீழ் அந்தப் பட்டவர்த்தனயானையின்மே லேறிக்கொண்டுபோனார்.—எ-று. (ருஉ)

அங்கிலே யெழுந்த சேனை யார்கலி யேழு மொன்றாய்
மன்னிய வொலியி னார்ப்ப மண்ணெலா மகிழ்ந்து வாழ்த்தப்
பொன்னெடும் பொதுவி லாட னீடிய புனிதர் பொற்றாள்
சென்னியிற் கொண்டு சென்னி திருவளர் கோயில் புக்கான்.

(இ-ள்.) அவ்விடத்தில் திரண்டெழுந்த சேனைகள் சப்த சமுத்திரங்களும் ஒன்றாகக் கூடி ஒலித்ததுபோல ஆரவாரிக்கவும், இந்நிலவுலகத்திலுள்ளவர்கள் யாவரும் சந்தோஷித்துத் துதிக்கவும், நெடிய பொன்னம்பலத்தில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுகின்ற ஸ்ரீநடராஜப்பெருமானது அழகிய திருவடிகளைச் சிரசில் பொருந்தத் தியானித்துக்கொண்டு புகழ்ச்சோழநாயனார் தமது அழகிய அரண்மனையில் புகுந்தார்.—எ-று. (ருங)

தம்பிரான் பணிமேற் கொண்டு சிவகாமி யாருஞ் சார
எம்பிரா னன்ப ரான வெறிபத்தர் தாமு மென்னே
அம்பல நிறைந்தார் தொண்ட ரறிவதற் கரியா ரென்று
செம்பியன் பெருமை யுன்னித் திருப்பணி நோக்கிச் சென்றார்.

(இ-ள்.) சிவபெருமானுக்குத் தாம் திருப்பள்ளித்தாமம் சமைத்துச் சாத்துகின்ற திருப்பணியை மேற்கொண்டு சிவகாமியாண்டாரும் திருக்கோயிலுக்குப்போக, எமது பரமசிவனுக்கு அன்பராகிய எறிபத்தநாயனாரும் இது என்ன ஆச்சரியம்; பொன்னம்பலத்தில் திருநடனஞ்செய்தருளுகின்ற சிவபெருமானது அடியவர்கள் யாவராலும் அளவிட்டுரைப்பதற்கரியவரென்று புகழ்ச்சோழநாயனாரது அன்பின் மேன்மையைத் திருவுள்ளத்து நினைத்துத் தாம் செய்கின்ற திருப்பணியைக் குறித்துச் சென்றருளினார்.—எ-று. (ருச)

மற்றவ ரினைய தான வன்பெருந் தொண்டு மண்மேல்
உற்றிடத் தடியார் முன்சென் றுதவியே நாளு நாளு
நற்றவக் கொள்கை தாங்கி நலமிகு கயிலை வெற்பின்
கொற்றவக் கணத்தின் முன்னாங் கோமுதற் றலைமை பெற்றார்.

(இ-ள்.) அவ்வெறிபத்தநாயனார் சிவகாமியாண்டாருக்கு நேர்ந்த ஆபத்தைத் தீர்த்ததுபோல அனேகம் வலிமையாகிய பெரிய திருத்தொண்டுகளை உலகத்தில் அடியார்களுக்கு ஆபத்துவந்தபோது அவர்களுக்கு முன்சென்று அவ்வாபத்தைநீக்கி நாள்தோறும் நல்ல தவநெறியை மேற்கொண்டு மேன்மை மிகுந்திருக்கும் ஸ்ரீகயிலாயத்தில் வெற்றிபொருந்திய சிவகணங்களுக்கு முன்னே சிறந்த தலைவராயிருக்கின்ற முதன்மையைப்பெற்றார்.—எ-று. (ருரு)

ஆளுடைத் தொண்டர் செய்த வாண்மையுந் தம்மைக் கொல்ல
வாளினைக் கொடுத்து நின்ற வளவனார் பெருமை தானு
நாளுமற் றவர்க்கு நல்கு நம்பர்தா மளக்கி லன்றி
நீளுமித் தொண்டி னீர்மை நினைக்கிலா ரளக்க வல்லார்.

(இ-ள்.) நம்மை அடிமையாகவுடைய எறிபத்தநாயனார்செய்த திருத்தொண்டின் வல்லமையையும் (சிவகாமியாண்டார் விஷயத்தில் யானையானது செய்த தீங்குகாரணமாகத்) தம்மைக் கொல்லும்படி உடைவாளைக்கொடுத்து நின்ற புகழ்ச்சோழநாயனாரது பெருமையையும் நாள்தோறும் அவ்விருவர்களுக்குந் திருவருள்செய்கின்ற சிவபெருமானே அளவிடவேண்டுமேயல்லாமல், உயர்ந்த இத்திருத்தொண்டின்பெருமையை ஆலோசிக்குமிடத்து வேறேயாவர் அளவிட்டுரைக்கவல்லவர்கள்; (ஒருவருமில்லை.)—எ-று. (ருசு)

தேனாருந் தண்பூங் கொன்றைச் செஞ்சடை யவர்பொற் றாளில்
ஆனாத காத லன்ப ரெறிபத்த ரடிகள் சூடி
வானாளுந் தேவர் போற்று மன்றுளார் நீறு போற்றும்
ஏனாதி நாதர் செய்த திருத்தொழி லியம்ப லுற்றேன்.

(இ-ள்.) தேன் பொருந்திய குளிர்ந்த கொன்றைமலர்மாலையைத் தரித்த சிவந்த சடையினையுடைய சிவபெருமானது அழகிய திருவடிகளில் நீங்காத பேரன்பினையுடையவராகிய எறிபத்தநாயனாரது திருவடிகளை எமது சிரசின்மேல் தரித்துக்கொண்டு, விண்ணுலகத்தை யாளுகின்ற தேவர்களும் வணங்குகின்ற ஸ்ரீநடராஜப்பெருமானது திருவெண்ணீற்றினையே மெய்ப்பொருளாகக் கருதி அன்புசெலுத்திய ஏனாதிநாதநாயனார் செய்த திருத்தொண்டின் செய்கையைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (ருஎ)

**எறிபத்தநாயனார்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் சுOஎ.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஏனாதிநாதநாயனார் புராணம்.

புண்டரிகம் பொன்வரைமே லேற்றிப் புவியளிக்கும்
தண்டரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்
வண்டறை பூஞ்சோலை வயன்மருதத் தண்பணைசூழ்ந்
தெண்டிசையு மேறியசீர் மூதா ரெயினனூர்.

(இ-ள்.) புலிக்கொடியைப் பொன்மயமாகிய இமயமலையின்மேல் நாட்டி உலகத்தை அரசாட்சி செய்கின்ற குளிர்ந்த வெண்மையாகிய முத்துக்குடையினை யுடைய ஆத்திமாலையைத்தரித்த சோழராஜாக்களது இராஜதானியாகிய சோழ தேசத்தில் வண்டுகள் சப்திக்கின்ற பூஞ்சோலைகளும், வயல்களையுடைய குளிர்ந்த மருதநிலமுஞ் சூழ்ந்து, எட்டுத் திக்குகளிலும் பரவிய சிறப்பினையுடைய பழமை யாகிய ஊரானது எயினனூராம்.—எ-று.

"எண்டிசையுமேறியசீரெயின்மூதூர்" என்றும் பாடம். (க)

வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலிற்
றாழக் கதிர்ச்சாலி தானோங்குந் தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மன்னியவப் பொற்பதியில்
ஈழக் குலச்சான்றா ரேனாதி நாதனார்.

(இ-ள்.) வேழக் கரும்புகளோடு மெல்லிய கரும்புகளும் குளிர்ச்சி பொருந்திய வயல்களில் தம் வளர்ச்சியில் தாழும்படி கதிர்களையுடைய செந்நெற்பயிர்கள் ஓங்கி வளருகின்ற தன்மையையுடையதாய் வாழ்கின்ற அங்குள்ள குடிகள் தழைத்து நிலைபெற்றிருக்கின்ற அந்த அழகிய எயினனூரில் ஈழக்குலத்தில் அவதரித்த சான்றார் மரபினையுடையவர் (அவர் யாரெனில்) ஏனாதிநாதநாயனார் என்று சொல்லப்பட்டவர்.—எ-று.

வேழக்கரும்பு என்பது நாணற்கரும்பு. (உ)

தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டி
னன்மைக்க ணின்ற நலமென்றுங் குன்றாதார்
மன்னர்க்கு வென்றி வடிவாட் படைபயிற்றுந்
தன்மைத் தொழில்விஞ்சை யிற்றலைமை சார்ந்துள்ளார்.

(இ-ள்.) (அந்நாயனார்) பழமையாகிய திருவெண்ணீற்றின்மேல் அன்பு வைத்தொழுகுகின்ற திருத்தொண்டினது நன்மையாகிய வழிபாட்டில் நிற்கின்ற

நலத்தில் சிறிதுங் குறையாதவர்; அரசர்களுக்கு வெற்றிபொருந்திய கூர்மையாகிய வாட்படையைப் பயிற்றுவிக்குந்தன்மையாகிய வாள்வித்தையிலே முதன்மையாயிருக்கின்றவர்.—எ-று. (௩)

வாளின் படைபயிற்றி வந்த வளமெல்லா
நாளும் பெருவிருப்பா னண்ணுங் கடப்பாட்டிற்
றாளுந் தடமுடியுங் காணுதார் தம்மையுந்தொண்
டாளும் பெருமா னடித்தொண்டர்க் காக்குவார்.

(இ-ள்.) வாள் வித்தையை யாவருக்குங் கற்பித்து அதனால் வந்த பொருள்களையெல்லாம், திருவடிகளையும் விசாலமாகிய திருமுடியினையும் தேடிக்காணுதவர்களாகிய திருமால் பிரமன் என்னு மிருவரையும் அடிமையாகக்கொண்டருளிய சிவபெருமானது திருத்தொண்டர்களுக்கு எப்பொழுதும் மிகுந்த விருப்பத்தோடு பொருந்திய ஈகைக்குணத்தினுல் கொடுக்கின்றவர்.—எ-று. (௪)

நள்ளார் களும்போற்று நன்மைத் துறையின்கண்
எள்ளாத செய்கை யியல்பி னொழுகுநாட்
டள்ளாத தங்க டொழிலுரிமைத் தாயத்தின்
உள்ளா னதிசூர னென்பா னுளனுனன்.

(இ-ள்.) தமக்குப் பகைவர்களாயுள்ளவர்களும் புகழத்தகுந்த நன்மையாகிய சிவபக்தி மார்க்கத்தில் யாவரும் நிந்திக்காத நற்செய்கையாகிய முறைமையோடொழுகின்றகாலத்தில், தள்ளக்கூடாத வாள்வித்தை கற்றுக்கொடுத்தலாகிய தங்கள் தொழிலின் உரிமைக்குரிய தாயாதிகள்மரபில் பிறந்தவனுகி அதிசூரனென்னும்பெயரையுடைய ஒருவனிருந்தான்.—எ-று. (௫)

மற்றவனுங் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்க டன்னிற் கடந்துள்ளா ரில்லையெனும்
பெற்றிமையான் மாநிலத்து மிக்க பெருமிதம்வந்
துற்றுலகிற் றன்னையே சாலமதித் துள்ளான்.

(இ-ள்.) அவ்வதிசூரனென்பவனும் வெற்றிபொருந்திய கூரிய வாள்வித்தையைக் கற்றுக்கொண்டவர்களில் தன்னைப்பார்க்கிலும் சிறந்தவர்கள் ஒருவருமில்லையென்று சொல்லுந்தன்மையையுடையவனுகிப் பெரிய இந்நிலவுலகத்தில் மிகுந்த கர்வத்தையடைந்து (பிறரைச் சிறிது மதியாமல்) தனக்குத் தானேசமானமென்று தன்னை மிகுதியும் மதித்துக்கொண்டிருந்தான்.—எ-று. (௬)

தானுள் விருத்திகெடத் தங்கள்குலத் தாயத்தின்
ஆனுத செய்தொழிலா மாசிரியத் தன்மைவள
மேனுளுந் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலால்
ஏனுதி நாதர்திறத் தேலா விகல்புரிந்தான்.

(இ-ள்.) தான் அனுபவித்து வருகின்ற விருத்தியானது கெடும்படி தங்கள் மரபிற்குரிய தாயாதிகளுக்குக் குறையாத செய்தொழிலாகிய ஆசாரியத்தன்

மையினால் வருகின்ற வருவாயானது நாளுக்குநாள் கொஞ்சங்கொஞ்சமாகக்குறைந்து ஏனாதிநாதநாயனாருக்கே அதிகப்பட்டு வருவதினால் அந்நாயனார் விஷயத்தில் நியாயவிரோதமாகப் பகைசெய்துகொண்டான்.—எ-று. (எ)

கதிரோ னெழுமழுங்கிக் கால்சாயுங் காலை
மதிபோ லழிந்துபொறா மற்றவனுஞ் சுற்றப்
பதியோ ருடன்கூடப் பண்ணியவர் மேற்சென்
றெதிர்போர் விளைப்பதற்கே யெண்ணித் துணிந்தெழுந்தான்.

(இ-ள்.) சூரியன் உதயஞ்செய்ய ஒளிமழுங்கி இருளடைகின்ற காலைவேளையில் தோன்றும் அபரபக்ஷத்துச் சந்திரனைப்போல தனது விருத்திகளைத் தும் கெட்டு அதனைப் பொறுக்கலாற்றாத அவ்வதிசூரனும் தனது உறவினராகிய அவ்வூரிலுள்ளவர்களைத் தனக்குத் துணையாகவரும்படிசெய்துகொண்டு ஏனாதிநாதநாயனார்மேல் சென்று எதிராகப் போர்செய்வதற்கே எண்ணி மனத்தில் துணிவு கொண்டு எழுந்தான்.—எ-று. (அ)

தோள்கொண்ட வல்லாண்மைச் சுற்றத் தொடுந்துணையாங்
கோள்கொண்ட போர்மள்ளர் கூட்டத் தொடுஞ்சென்று
வாள்கொண்ட தாயம் வலியாரே கொள்வதென
மூள்கின்ற செற்றத்தான் முன்கடையி னின்றழைத்தான்.

(இ-ள்.) தோள்களில் மிகுந்த வல்லமையைப்பெற்ற தனது உறவினரோடும் உதவியாகவந்த வலிய போர்வீரர்களின் கூட்டத்தோடும்போய் வாள்வித்தையினால் நாம் அனுபவிக்கும் பங்கின் உரிமையை யாவர் வல்லவர்களோ அவர்களே கொள்வதற்கு உரியவர்களென்று மிகுந்த கோபத்தோடு அவரது தலைவாயிலில் வந்து நின்றுகொண்டு போர்செய்வதற்கு அழைத்தான்.—எ-று. (௯)

வெங்கட் புலிகிடந்த வெம்முழையிற் சென்றழைக்கும்
பைங்கட் குறுநரியே போல்வான் படைகொண்டு
பொங்கிப் புறஞ்சூழ்ந்து போர்குறித்து நேர்நின்றே
யங்கட் கடைநின் றழைத்தா னொலிகேளா.

(இ-ள்.) கொடிய கண்களையுடைய புலியானது வாசஞ்செய்கின்ற பயங்கரமாகிய மலைக்குகையினிடத்திற்போய் அதனைச்சண்டைசெய்வதற்குஅழைக்கின்ற திருட்டுப் பார்வையையுடைய சிறிய நரியையொத்த அவ்வதிசூரன் ஆயுதங்களைக் கையில் தாங்கிக்கொண்டு கோபித்து (தானும் தன்னுடன்வந்தவர்களும்) அவரது இருக்கையைச்சூழ்ந்து யுத்தத்தைக்குறித்து நேராகநின்று அழகிய தலைக்கடைவாயிலில் நின்றுகொண்டு அழைத்த அவ்வதிசூரனது ஒலியை ஏனாதிநாதநாயனார் தமது காதிற்கேட்டு.—எ-று. (௧0)

ஆர்கொல் பொரவழைத்தா ரென்றரியேற் றிற்கிளர்ந்து
சேர்வுபெறக் கச்சிற் செறிந்தவுடை மேல்வீக்கி
வார்கழலுங் கட்டி வடிவாட் பலகைகொடு
போர்முனையி லேனாதி நாதர் புறப்பட்டார்.

(இ-ள்.) போர்செய்வதற்கு எம்மை அழைத்தவர்கள் யாவரென்று ஆண்சிங்கம்போலக் கர்ச்சித்து, இடையில் உறுதியாகப் பொருந்தக் கச்சோடு சேர்ந்த ஆடையை மேலே கட்டி, நீண்ட வீரக்கழலைக் காலில் தரித்து, கூர்மையாகிய வாளாயுதத்தையும்,கேடகத்தையும் கையில் தாங்கிக்கொண்டு யுத்தமுகத்தில் ஏனாதிநாதநாயனார் புறப்பட்டார்.—எ-று. (கக)

புறப்பட்ட போதின்கட் போர்த்தொழில்கள் கற்கும்
விறற்பெருஞ்சீர்க் காளையர்கள் வேறிடத்து நின்றார்
மறப்படைவாட் சுற்றத்தார் கேட்டோடி வந்து
செறற்கரும்போர் வீரர்க் கிருமருங்குஞ் சேர்ந்தார்கள்.

(இ-ள்.) ஏனாதிநாதநாயனார் இவ்வாறு போர்க்கோலங்கொண்டு புறப்பட்டபொழுது அவரிடத்தில் யுத்தத்தொழிலைக் கற்றுக்கொண்டிருக்கும் வலிய பெருஞ் சிறப்பினையுடைய பாலிய புருஷர்களும், வேறிடங்களிலிருந்து கற்றுக்கொண்டவர்களாகிய கொடிய வாளாயுதத்தைப்பிடித்த உறவினர்களும் இந்தச் சங்கதியைக் கேள்விப்பட்டு விரைந்து ஓடிவந்து ஒருவராலும் செயித்தற்கரிய யுத்தவீரராகிய அந்நாயனாருக்கு இரண்டு பக்கத்திலுஞ் சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று.

வந்தழைத்த மாற்றான் வயப்புலிப்போத் தன்னார்முன்
நந்தமது வாட்பயிற்று நற்றாயங் கொள்ளுங்கால்
இந்தவெளி மேற்கைவகுத் திருவேம் பொருபடையுஞ்
சந்தித் தமர்விளைத்தாற் சாயாதார் கொள்வதென.

(இ-ள்.) தலைவாசலில் வந்து போர்செய்யக் கருதி அழைத்த பகைவனாகிய அதிசூரனென்பவன் வெற்றிபொருந்திய ஆண்புலியை யொத்த ஏனாதிநாதநாயனாருக்குமுன்னே நின்று நமது மரபினுக்குரிய வாள்வித்தையைக் கற்றுக்கொடுப்பதனால் வருகின்ற சிறந்த பங்கினுரிமையை நாமிருவரும் அனுபவிக்குமிடத்து இவ்விடத்திலுள்ள வெளியில் நம்மிருவர் சேனைவீரர்களையும் அணிவகுத்து எதிர்த்து யுத்தஞ்செய்தால் அதில் தோல்வியடையாமல் வெற்றி பெறுகின்றவர்கள் யாரோ? அவர்களே அதனைப் பெற்றுக்கொள்ளவேண்டியது என்று.—எ-று. ()

என்றுபகைத் தோனுரைப்ப வேனாதி நாதரது
நன்றுனக்கு வேண்டுமே னண்ணுவனென் றுண்மகிழ்ந்து
சென்றவன்முன் சொன்ன செருக்களத்துப் போர்குறிப்பக்
கன்றி யிருபடையுங் கைவகுத்து நேர்மலைவார்.

(இ-ள்.) இவ்விதமாகப் பகைவனாகிய அதிசூரன்சொல்ல (அதனைக்கேட்ட) ஏனாதிநாதநாயனார் (அவனைப்பார்த்து) நீசொல்லியது நன்றாயிருக்கின்றது; உனக்கு என்னோடு எதிர்த்துப்போர்செய்யச் சம்மதமிருக்குமானால் நானும் உன்னோடுயுத்தஞ்செய்வதற்குச் சித்தமாயிருக்கின்றேனென்று மனமகிழ்ந்து தம்முடைய யுத்தவீரர்களை அழைத்துக்கொண்டுசென்று அவ்வதிசூரன் முன்பு சொன்னயுத்தகளத்தில் போர்செய்வதற்கு உரியகாலத்தை நிச்சயிக்க மேல் இருவர்களுடைய யுத்தவீரர்களும் ஒருவர்க்கொருவர் கோபங்கொண்டு அணிவகுத்து எதிர்த்துப் போர்செய்யத்தொடங்கினார்கள்.—எ-று. (க௪)

வேறு.

மேக வொழுங்குகண் முன்கொடு மின்னிரை தம்மிடை யேகொடு
மாக மருங்கினு மண்ணினும் வல்லுரு மேறெதிர் செல்வன
வாக நெடும்பல கைக்குல மாள்வினை வாளுடை யாடவர்
காக மிடைந்த களத்திரு கைகளின் வந்து கலந்தனர்.

(இ-ள்.) வலிய இடியேறுகள் மேகக்கூட்டங்களைத் தம்முன்னேகொண்டு மின்னலின் வரிசைகளைத் தம்மிடத்திற் பெற்றுக்கொண்டு ஆகாயத்திலும் பூமியிலும் ஒன்றற்கொன்று எதிரெதிராகப்போவதுபோல நெடியகேடகக்கூட்டங்களையும், பகைவர்களைக் கொலைசெய்யுந் தொழிலையுடைய வாளாயுதத்தையுமுடைய யுத்தவீரர்கள் (இறந்தவர்களின் மாமிசங்களைத் தின்னும்பொருட்டுக்) காகங்கள் மிகுதியாக நெருங்கியிருக்கின்ற யுத்தகளத்தில் இரண்டு படைவகுப்பிலும் வந்து சேர்ந்தார்கள்.—எ-று.

இதில், வீரர்களின் கையிலுள்ள கேடகங்களை மேகக்கூட்டங்களாகவும் வாளாயுதங்களை மின்னல்களாகவும், அவர்கள் கூறும் சபதவார்த்தைகளை இடியேறுகளாகவும் உவமைகூறினார். (கரு)

கால்கழல் கட்டிய மள்ளர்கள் கைகளின் மெய்க ளடக்கிய
வாளொளி வட்ட முனைத்திட வந்திரு கைகளின் முந்தினர்
வேலொடு வேலெதிர் நீள்வன மேவிய பாதலம் விட்டுயர்
ஞால முறும்பணி வீரர்க ளுகிமிர் கின்றன வொத்தன.

(இ-ள்.) (வெற்றியைக்குறித்துத்) தமது கால்களில் வீரக்கழலையணிந்த யுத்தவீரர்கள் தங்கள்கைகளில் ஏந்தப்பட்டு, அவர்களுடம்புகளை மறைத்துக்கொண்டிருக்கின்ற மிகுந்த ஒளிபொருந்திய கேடகங்கள் சுழல இருதிறத்தார்படைவகுப்பிலும் வந்து சேர்ந்தார்கள்; (அவர்கள் எதிர்த்துப்போர்செய்யுங்கால்) வேற்படைகளோடு வேற்படைகள் எதிரெதிராகநீண்டுகொண்டிருத்தல் (எப்படியிருந்ததென்றால்) நாகராஜாக்கள் தாங்கள் வாசஞ்செய்கின்ற பாதாளலோகத்தைவிட்டு உயர்ந்த இந்நிலவுலகத்தில் வந்து தங்கள் நாக்களை எதிர்நீட்டுதலுக்கு ஒப்பாயிருந்தன.—எ-று. (கசு)

வெங்கண் விறற்சிலை வீரர்கள் வேறிரு கையினு நேர்பவர்
தங்கள் சிலைக்குல முந்தின தாவில் சரங்க ணெருங்குவ
பொங்கு சினத்தெரி யிற்புகை போகு கொடிக்கள் வளைத்தெதிர்
செங்கண் விழிக்கனல் சிந்திய சீறு பொறிச்செல வொத்தன.

(இ-ள்.) வெவ்வேறாகிய இருதிறத்தார் படைவகுப்பிலும் எதிர்த்துப்போர் செய்கின்ற கோபக்கண்களையுடைய வெற்றிபொருந்திய வில்வீரர்கள் தங்கள் கையிற்பிடித்த விற்கூட்டத்தினின்றும் புறப்பட்ட கெடுதலில்லாத அம்புகள் ஒன்றோடொன்று நெருங்கியிருத்தல், மிகுந்த கோபமாகிய நெருப்பினின்றும் எழும்பிய கொடிபோன்று நீண்ட புகைகள் சுற்றி எதிரெதிராகச் சிவந்த கண்களினின்றும் எழும்பிய கோபாக்கினியினால் சிந்திய பொறிகள் விழுவதை ஒத்திருந்தன.—எ-று. (கஎ)

வாளொடு நீள்கை துடித்தன மார்பொடு வேல்கள் குளித்தன
தோளொடு வாளி நிலத்தன தோலொடு தோல்க டகைத்தன
தாளொடு வார்கழ லிற்றன தாரொடு சூழ்சிர மற்றன
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில்.

(இ-ள்.) தங்கள் வாழ்நாள்களைக் கருதாமல் அவற்றோடு கோபித்துத் துணிந்து யுத்தஞ்செய்கின்ற வீரர்கள் விரும்பிய அந்தப் போர்க்களத்தில் வாளாயுதத்தோடு நீண்ட கைகள் அறுபட்டுவிழுந்து துடித்தன; மார்புகளில் வேலாயுதங்கள் பாய்ந்து முழுகின; வெட்டுப்பட்ட தோள்களோடு அம்புகளும் பூமியில்விழுந்துகிடந்தன; கேடகங்களோடு கேடகங்கள் நெருக்கமாயிருந்தன; கால்களோடு அக்கால்களில் கட்டிய வீரக்கழல்கள் அறுபட்டுக் கிடந்தன; மாலையோடு சூழ்ந்த தலைகள் அறுந்துகிடந்தன.—எ-று. (௧௮)

குருதியி னதிகள் பரந்தன குறையுட லோடி யலைந்தன
பொருபடை யறுதுணி சிந்தின புடைசொரி குடருடல் பம்பின
வெருவர வெருவை நெருங்கின விசியறு துடிகள் புரண்டன
இருபடை தனினு மெதிர்ந்தவ ரெதிரெதி ரமர்செய் பறந்தலை.

(இ-ள்.) இருதிறத்தார் சேனைகளிலும் எதிர்த்தவர்கள் எதிரெதிராகப் போர்செய்கின்ற யுத்தகளத்தில் இறந்தவர்களின் இரத்தமாகிய ஆறுகள் பரவியோடின; தலையறுபட்ட கவந்தங்கள் ஓடியலைந்துகொண்டிருந்தன; போர்செய்கின்ற படைவீரர்களின் உடலில் அற்ற துண்டுகள் சிந்திக்கிடந்தன; பக்கங்களில் ஒருபுறமாகச் சரிந்த குடல்களையுடைய உடம்புகள் நிறைந்து கிடைந்தன; யாவரும் அஞ்சும்படி கழுகுகள் நெருங்கின; வார் அறுந்த உடுக்கைகள் எங்கும் புரண்டு கொண்டிருந்தன.—எ-று. (௧௯)

நீளிடை முடுகி நடந்தெதிர் நேரிரு வரிலொரு வன்றொடர்
தாளிரு துடையற முன்பெயர் சாரிகை முறைமை தடிந்தனன்
வாளொடு விழுமுடல் வென்றவன் மார்பிடை யறமு னெறிந்திட
ஆளியி னவனு மரிந்தன ஞயினர் பலருள ரெங்கணும்.

(இ-ள்.) நெடுந்தூரம்வரையில் விரைவாய்நடந்து நேராகஎதிர்த்த இரண்டு வீரர்களில் ஒருவன் தன்னைத்தொடர்ந்த மற்றொருவனது இரண்டு கால்களும் - துடைகளும் அற்றுவிழும்படி முன்னே போகின்ற சாரிகைவரிசையால் வெட்டினான், (அப்படி வெட்டப்பட்டு) வாளாயுதத்தோடு பூமியில் விழுகின்ற உடம்பானது தன்னைச்செயித்தபகைவனுடையமார்பானது இடையில் அறும்படி தன்னை வெட்டுவதற்குமுன்னே வீசிவெட்ட, சிங்கம்போன்ற அவ்வீரனும் இறந்தான்; இவ்விதமாக இறந்த அநேகம் சுத்தவீரர்கள் அப்போர்க்களத்தில் எங்கும் விழுந்து கிடந்தார்கள்.—எ-று. (௨0)

கூர்முனை யயில்கொடு முட்டினர் கூடிமு னுருவிய தட்டுட
னேருர முருவ வுறைப்புட னேர்பட வெதிரெதிர் குத்தினர்
ஆருயிர் கழியவு நிற்பவ ராண்மையி லிருவரு மொத்தமை
போரடு படைகொ டளப்பவர் போல்பவ ரளவிலர் பட்டனர்.

(இ-ள்.) கூர்மையாகிய முனைகளையுடைய வேலாயுதங்களைக் கையிற்பிடித்துக்கொண்டு எதிர்த்துப் போர்செய்தவீரர்கள் நெருங்கி முன் உருவியிருக்கின்ற கேடகத்தோடு நேராக மார்பில் உருவும்படி உறுதியாக எதிரெதிராகக் குத்திக் கொண்டவர்களாய்ப் பெறுதற்கரிய உயிர் நீங்கவும் நின்றுகொண் டிருப்பவர்கள் தங்கள் வல்லமையில் இருவரும் ஒத்திருத்தலைப் போர்செய்கின்ற ஆயுதங்களைக் கொண்டு அளப்பவர்களைப்போன்றிருந்தார்கள், இவ்விதமாக அளவில்லாத போர் வீரர்கள் இறந்தார்கள்.—எ-று. (உ௧)

பொற்சிலை வளைய வெதிர்ந்தவர் புற்றர வனைய சரம்பட
விற்படை துணியவு நின்றிலர் வெற்றிகொள் சுரிகை வழங்கினர்
முற்றிய பெருவள னின்றியு முற்படு கொடைநிலை நின்றிட
உற்றன வுதவிய பண்பின ரொத்தன ருளர்சில கண்டகர்.

(இ-ள்.) அழகியவிற்கள் வளையும்படி எதிர்த்தவர்கள் புற்றிலிருக்கும் பாம்பையொத்த அம்புகள்படுதலால் தங்கள் கையிலிருக்கும் வில்லுகள் துண்டாகவும், வீணாக நிற்காமல் வெற்றிபொருந்திய உடைவாளை அப்பாணங்களுக்குப் பதிலாகப் பிரயோகித்தார்கள், அதனால், நிரம்பிய பெருஞ் செல்வங்கள் குறைந்திருந்தகாலத்தும் தாங்கள் முன்பு கொடுத்துக்கொண்டிருந்த கொடையானது கெடாமல் நிலைநிற்கும்படி தமக்கு இயன்ற பொருள்களை யாசிப்பவர்களுக்குக் கொடுக்கின்ற ஈகைக்குணமுடையதாதாக்களை ஒத்தவர்களாய் இருந்தார்கள் சிலபோர் வீரர்கள்.—எ-று.

"முற்றியபெருவளநின்றற" என்றும் பாடம். (உ௨)

அடன்முனை மறவர் மடிந்தவ ரலர்முக முயிருள வென்றுறு
படர்சிறை சுலவு கருங்கொடி படர்வன சுழல்வன துன்றலில்
விடுசுடர் விழிக ளிரும்புசெய் வினைஞர்த முலையின் முகம்பொதி
புடைமிடை கரியிடை தங்கிய புகைவிடு தழலை நிகர்த்தன.

(இ-ள்.) போர்முகத்தில் இறந்த வீரர்களுடைய மலர்ந்த முகங்களைப்பார்த்து இவ்வுடலில் இன்னும் உயிரிருக்கின்றனவென்று (மாமிசங்களையுண்பதற்கு) அங்குவந்த படர்ந்த சிறகினை யுடைத்தாய்ச் சூழ்ந்துகொண்டிருக்கின்ற கரிய காகங்கள் நாற்புறங்களிலும் நெருங்கியும், நீங்கிச்சூழ்ந்துகொண்டும் இருத்தலால், இறந்தவீரர்களின் பிரகாசிக்கின்ற கண்கள் இரும்புவேலை செய்கின்ற கொல்லர்களுடைய உலைமுகத்தில் போட்டிருக்கின்ற சூழ்ந்துநெருங்கிய கரிகளின்மத்தியில் தங்கிய புகையைவீசுகின்ற நெருப்பினை யொத்திருந்தன.—எ-று. (உ௩)

திண்படை வயவர் பிணம்படு செங்கள மதனிடை முன்சிலர்
புண்படு வழிசொரி யுங்குடர் பொங்கிய கழுகு பருந்தொடு
கொண்டெழு பொழுதினு முன்செயல் குன்றுத லிலர்தலை நின்றனர்
விண்படர் கொடிவிடு பண்பயில் விஞ்சையர் குமரரை வென்றனர்.

(இ-ள்.) வலிய படையினையுடைய வீரர்கள் இறந்துகிடக்கின்ற யுத்தகளத்தில் சில வீரர்களின் உடலில் ஆயுதங்களினால் காயம்பட்டவிடத்தில் நின்றும் சரிந்த குடல்களை மிகுந்த கழுகுகளும் பருந்துகளும் கௌவிக்கொண்டு மேலே எழும்பியபொழுதும், முன்னே அவர்களுக்குண்டாயிருந்த தைரியத்தில் சிறிதும்

குறையாமல் நின்றுகொண்டிருந்தார்கள் ; ஆதலால் அவர்கள் ஆகாயத்தில் பறக்கும்படி காற்றாடியைவிட்டு விளையாடுகின்ற வித்தையையுடைய சிறுவர்களை அத்தொழிலால் வென்றார்கள்.—எ-று. (உச)

வேறு.

இம்முனைய வெம்போரி லிருபடையின் வாள்வீரர்
வெம்முனையின் வீடியபின் வீடாது மிக்கொழிந்த
தம்முடைய பல்படைஞர் பின்னாகத் தாமுன்பு
தெம்முனையி லேனாதி நாதர் செயிர்த்தெழுந்தார்.

(இ-ள்.) இவ்விதமாகக் கொடிய யுத்தமுனையில் இரண்டு சேனைகளினுமுள்ள வாளையேந்திய சுத்தவீரர்கள் கொடிதாகிய யுத்தத்தில் இறந்தபின்பு இறவாமல் மிகுதியாக இருந்த தம்முடைய பல படைவீரர்களும் பின்னே நிற்கத் தாம் முன்னாகப் போர்முகத்தில் ஏனாதிநாதநாயனார் கோபித்துப் போர்செய்வதற்கு எழுந்தார்.—எ-று. (உரு)

வெஞ்சினவா ளுமிழ வீரக் கழல்கலிப்ப
நஞ்சணிகண் டர்க்கன்பர் தாமெதிர்ந்த ளாட்பின்கண்
எஞ்சியெதிர் நின்ற விகன்முனையில் வேலுழவர்
தஞ்சிரமுந் தோளுரமுந் தாளுரமுந் தாந்துணித்தார்.

(இ-ள்.) வெவ்விய கோபத்தோடு வாளாயுதமானது நெருப்பினைக் கக்க, பாதங்களில் தரித்த வீரக்கழலானது சப்திக்க, காளகண்டராகிய சிவபெருமானுக்கு அன்பராகிய ஏனாதிநாதநாயனார் தாம் எதிர்த்துச்செய்கின்ற போர்க்களத்தில் (அதிசூரன்பக்ஷத்தில் இறந்தவர்கள் போக இறவாமல்) மிகையாக எதிரே நின்ற போர்முனையில் வந்த வேலைப்பிடித்த வீரர்களுடைய தலைகளையும், தோள்களையும், மார்புகளையும், வலிய கால்களையும் விழும்படி வெட்டினார்.—எ-று.

"தாளும்விழத்துணித்தார்" என்றும் பாடம். (உசா)

தலைப்பட்டா ரெல்லாருந் தனிவீரர் வாளிற்
கொலைப்பட்டார் முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட வார்வமுதற் குற்றம்போ லாயினார்.

(இ-ள்.) போர்செய்வதற்கு எதிர்த்தவர்களெல்லாம் ஒப்பற்ற சுத்தவீரராகிய ஏனாதிநாதநாயனாருடைய கையிலுள்ள வாளாயுதத்தினால் கொலைசெய்யப்பட்டார்கள் ; அவரை எதிர்க்காதவர்கள் கொலைசெய்கின்ற யுத்தகளத்தைவிட்டு நிலையாகிய உண்மையறிவானது ஒருவனுக்கு உண்டானபொழுது அவனைவிட்டு நீங்குகின்ற காமமுதலிய குற்றங்களைப்போலானார்கள்.—எ-று.

மெய்யுணர்வாவது - நிலையாகிய பொருளையுணரும் உணர்வு. ஆர்வமுதற் குற்றமாவன:—காமம் - வெகுளி - மயக்கம் என்பன ; ஒருவனுக்கு மெய்யுணர்ச்சி உதித்தகாலத்துப் பொய்யுணர்ச்சி யனைத்தும் நீங்குமாறுபோல, ஏனாதிநாதநாயனாருக்குமுன்னே எதிர்த்து நில்லாமல் மறைந்தோடிப்போய்விட்டார்க ளென்பார்,

"மெய்யுணர்வு நேர்பட்டகாலை-அலைப்பட்ட வார்வழுதற் குற்றம்போலாயினர்" என்று கூறினர். (உ௭)

இந்நிலைய வெங்களத்தி லேற்றழிந்த மானத்தாற்
றன்னுடைய பல்படைஞர் மீண்டார் தமைக்கொண்டு
மின்னொளிவாள் வீசி விறல்வீரர் வெம்புலியே
றன்னவர்த முன்சென் றதிசூர னேரடர்ந்தான்.

(இ-ள்.) இப்படிப்பட்ட தன்மையையுடைய வெவ்வியயுத்தகளத்தில் எதிர்த்துத் தான் தோல்வியடைந்த அவமானத்தினால் அதிசூரனனவன் தோற்றோடித்திரும்பிவந்த தன்னுடைய பலபடைவீரர்களையும் அழைத்துக்கொண்டு, மின்னலைப்போல விளங்குகின்ற வாளாயுதத்தைவீசிக்கொண்டு கொடிய ஆண்புலியையொத்த சுத்தவீரராகிய ஏனாதிநாதநாயனருக்கு முன்னேபோய் எதிர்த்து யுத்தஞ் செய்தான்.—எ-று. (உ௮)

மற்றவர்தஞ் செய்கை வடிவா ளொளிகாணச்
சுற்றிவரும் வட்டணையிற் றோன்றா வகைகலந்து
பற்றியடர்க் கும்பொழுதிற் றானும் படைபிழைத்துப்
பொற்றடந்தோள் வீரர்க் குடைந்து புறகிட்டான்.

(இ-ள்.) ஏனாதிநாதநாயனார்தமது தொழிலாகிய கூரியவாளாயுதத்தை ஒளி காணும்படியாகவீசிக் கையிற்பிடித்துவருகின்ற கேடகத்தினால் ஒருவருக்கும் தம் முடம்பு தோன்றாதிருக்கும் வண்ணம் எதிர்த்துப்பிடித்து அவர்களைக் கொல்லும் பொழுது, அவ்வதிசூரனும் தன்னுடையபடைவீரரோடு உயிர்தப்பிப்பிழைத்து அழகிய விசாலமாகிய தோள்களையுடைய சுத்தவீரராகிய ஏனாதிநாதநாயனருக்குத் தோற்றுப்புறங்காட்டி யோடினான்.—எ-று. (உ௯)

போன வதிசூரன் போரி லவர்க்கழிந்த
மானமிக மீதூர மண்படுவான் கண்படான்
ஆனசெய லோரிரவுஞ் சிந்தித் தலமந்தே
ஈனமிகு வஞ்சனையால் வெல்வனென வெண்ணினான்.

(இ-ள்.) இவ்வாறு தோற்றுப்புறங்காட்டி யோடிப்போன அதிசூரனனவன் யுத்தத்தில் ஏனாதிநாதநாயனருக்குத் தோற்றதனாலுண்டாகிய அவமானமானது தன்னைமிகவும்வருத்த மண்ணில்படுத்து நித்திரைகொள்ளாமல் தனக்கு நேரிட்டதோல்வியைக்குறித்து ஒரு இராத்திரிமுழுமையும் சிந்தித்து மனம் வருந்திக் குற்றம்பொருந்திய வஞ்சனையினால் அவரைவெல்வேனென்று தன்மனதில்எண்ணினான்.—எ-று.

"மண்படுவான்" என்பதற்கு இனித் தான் செய்யுந் தீங்குகாரணமாக நரகத்தில் நாசமடையப்போகின்றவனாய், என்று பொருள்கூறினும் பொருந்தும்

"சிந்தித்தலமருவான்" என்றும் பாடம். (௩௦)

சேட்டாருங் கங்குல் புலர்காலைத் தீயோனு
நாட்டாரைக் கொல்லாதே நாமிருவேம் வேறிடத்து
வாட்டாயங் கொள்போர் மலைக்க வருகவெனத்
தோட்டார்பூந் தாரார்க்குச் சொல்லிச் செலவிட்டான்.

(இ-ள்.) கொடியவனாகிய அதிசூரனானவன் நீண்ட இராக்காலங்கழிந்து விடியும்பொழுது, நமக்காக நாட்டிலுள்ளவர்களை அழைத்துக்கொல்லாமல் நாமிருவரும் வேறோரிடத்தில் வாள்வித்தையினால் அனுபவிக்கின்ற பங்கினுரிமையைக்கைக்கொள்ளுவதற்குக் காரணமாகிய போரைச்செய்வதற்கு நீர்வரக்கடவீரொன்று இதழ்களையுடைய மலர்மாலையைத்தரித்த ஏனாதிநாதநாயனாருக்கு ஒரு ஆள் வசமாகச் சொல்லியனுப்பினான்.—எ-று. (௯௧)

இவ்வாறு கேட்டலுமே யேனாதி நாதனார்
அவ்வாறு செய்த லழகி தெனவமைந்து
கைவ்வா ளமர்விளைக்கத் தான்கருது மக்களத்தில
வெவ்வா ளூரவோன் வருகவென மேற்கொள்வார்.

(இ-ள்.) இவ்விதமாக அதிசூரனானவன் சொல்லியனுப்பியவார்த்தையைக் கேட்டவுடனே ஏனாதிநாதநாயனார் அவன்சொல்லியபடியே தனியே சண்டை செய்வது மிகவும் நல்லதென்று அதற்குச் சம்மதித்துக் கையில் தாங்கிய வாளாயுதத்தினால் போர்செய்யும்படி அவ்வதிசூரன் குறித்தஅந்தப் போர்க்களத்தில் வெவ்வியவாளைப்பிடித்த வல்லமைபொருந்திய அப்பகைவன் வரக்கடவனென்று ஒப்புக்கொண்டார்.—எ-று. (௯உ)

சுற்றத்தார் யாரு மறியா வகைசுடர்வாள்
பொற்பலகை யுந்தாமே கொண்டு புறம்போந்து
மற்றவன்முன் சொல்லி வரக்குறித்த வக்களத்தே
பற்றலனை முன்வரவு பார்த்துத் தனிநின்றார்.

(இ-ள்.) ஏனாதிநாதநாயனார் தம்முடைய உறவினர்கள் யாவரும் தாம்போர் செய்யச்செல்வதை அறியாமலிருக்கும்படி ஒளிவீசுகின்ற வாளாயுதத்தையும் அழகிய கேடகத்தையும் தாம் ஒருவராகவே கையிலெடுத்துக்கொண்டு புறத்தில் வந்து அவ்வதிசூரன் முன்பு போர்க்குவரும்படியாகச் சொல்லிக் குறிப்பித்த அந்தப்போர்க்களத்தில் தமது சத்துருவாகிய அக்கொடியவனுடைய வருகையை எதிர்பார்த்துக்கொண்டு தனியே நின்றார்.—எ-று. (௯௩)

தீங்கு குறித்தழைத்த தீயோன் றிருநீறு
தாங்கிய நெற்றியினார் தங்களையே யெவ்விடத்தும்
ஆங்கவருந் தீங்கிழையா ரென்ப தறிந்தானாய்ப்
பாங்கிற் றிருநீறு பண்டு பயிலாதான்.

(இ-ள்.) நன்மையைத் தருகின்ற திருவெண்ணீற்றினை முன்பு ஓர்நாளுந் தரித்தறியாதவனும், ஏனாதிநாதநாயனாருக்கு வஞ்சகமாகத்தீங்குசெய்யக்கருதிப் போர்க்கு அழைத்த கொடியவனுமாகிய அதிசூரனானவன் விபூதியைத் தரித்த

நெற்றியினையுடைய சிவனடியார்களை எவ்விடத்திலும் ஏனாதிநாதநாயனார் ஒரு தீங்கும் செய்யார் என்பதை அறிந்தவனாகி.—எ-று.

எவ்விடத்தும் என்றது சிவனடியார் தம்மேல் பகைகொண்டு தீங்குசெய்யக்கருதி வந்தவிடத்தும் எனவறிக.

இதுமுத விரண்டுபாடலுங் குளகம். (கச)

வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
யுண்ணெஞ்சில் வஞ்சக் கறுப்பு முடன்கொண்டு
வண்ணச் சுடர்வாண் மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப்போர் வீரர்க்குச் சொன்ன விடம்புகுந்தான்.

(இ-ள்.) வெண்மையாகிய விபூதியைத் தனது நெற்றியிலும் உடம்பிலும் பொருந்தும்படி நிறையப் பூசி நெஞ்சினுள்ளே வஞ்சகமாகிய களங்கத்தையும் வைத்துக்கொண்டு பிரகாசம்பொருந்திய அழகிய வாளாயுதத்தையும், அழகிய கேடகத்தையும் கையில் பிடித்துக்கொண்டு புண்ணியத்தையுடைய போர்வீரராகிய ஏனாதிநாதநாயனாருக்குத் தான் முன்பு குறித்துச் சொல்லியனுப்பிய இடத்தில் வந்துசேர்ந்தான்.—எ-று. (கரு)

வென்றி மடங்கல் விடக்குவர முன்பார்த்து
நின்றாற்போ னின்ற நிலைகண்டு தன்னெற்றி
சென்று கிடைப்பளவுந் திண்பலகை யான்மறைத்து
முன்றனிவீ ரர்க்கெதிரே மூண்டான் மறம்பூண்டான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய ஆண்சிங்கமானது தனக்கு மாமிசவுணவுக்குரிய மிருகம்வர அதனை எதிர்பார்த்துக்கொண்டு நின்றாற்போல நிற்கின்ற ஏனாதிநாதநாயனாரது நிலைமையைக்கண்டு தன் நெற்றியைத் தான் அவருக்குச் சமீபத்தில் போய் எதிர்க்கிறவனாயினும் வலிய கேடகத்தினால் மறைத்துக்கொண்டு ஒப்பற்ற சுத்தவீரராகிய அந்நாயனாருக்கு முன்னே பாவத்தையே ஆபரணமாகப் பூண்டவனாகிய அதிசூரன் முடுகி நடந்தான்.—எ-று.

விடக்கு - அதனையுடைய மிருகத்துக்கு ஆகுபெயர். (கசு)

அடல்விடையே றென்ன வடர்த்தவனைக் கொல்லும்
இடைதெரிந்து தாள்பெயர்க்கு மேனாதி நாதர்
புடைபெயர்ந்த மாற்றான் பலகை புறம்போக்கக்
கடையவன்ற னெற்றியின்மேல் வெண்ணீறு தாங்கண்டார்.

(இ-ள்.) வல்லமைபொருந்திய ரிஷபம்போல எதிர்த்துவந்த அதிசூரனைக் கொல்லத்தக்க சமையந் தெரிந்து தமது பாதங்களைப் பெயர்த்துவைத்த ஏனாதிநாதநாயனார் தம்முடைய சமீபத்தில் வந்த பகைவனாகிய அவ்வதிசூரன் தன்முகத்தை மறைத்துக்கொண்டிருந்த கேடகத்தைப் புறத்தில் எடுக்க (அப்பொழுது) கொடிய பாவியாகிய அவனுடைய நெற்றியில் பூசியிருந்த திருவெண்ணீற்றைப் பார்த்தார்.—எ-று. (கஎ)

கண்டபொழு தேகெட்டேன் முன்பிவர்மேற் காணாத
வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன் வேறினியென்
அண்டர்பிரான் சீரடியா ராயினா ரொன்றுமனங்
கொண்டிவர்தங் கொள்கைக் குறிவழிநிற் பேனென்று.

(இ-ள்.) அவ்விதமாக அவன் நெற்றியில் விபூதியைப் பார்த்தபொழுதே ஆ கெட்டேன்; முன்பு ஒருபொழுதும் இவருடைய தேகத்தில் காணப்படாத வெண்மையாகிய திருநீற்றின் பிரகாசத்தை இப்பொழுதிருக்கக்கண்டேன்; வேறே இனி என்னயோசனையிருக்கின்றது? தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானுக்குச் சிறந்த அடியவராயினாரொன்று மனதில் அன்புகொண்டு இவர் உட்கொண்ட இஷ்டப்படியே யான் நிற்பேனென்று நினைத்து.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (கஅ)

கைவா ளுடன்பலகை நீக்கக் கருதியது
செய்யார் நிராயுதரைக் கொன்றா ரெனுந்தீமை
யெய்தாமை வேண்டி யிவர்க்கென் றிரும்பலகை
நெய்வா ளுடனடர்த்து நேர்வார்போ னேர்நின்றார்.

(இ-ள்.) கையிற்பிடித்த வாளாயுதத்தோடு கேடகத்தையும் விட்டுவிட முன்பு நினைத்து, பின்பு இவர்க்குக் கையில் ஆயுதமில்லாத நிராயுதரைக்கொன்றாரென்னும் பழிமொழியானது சேராதிருக்கவேண்டுமென்று ஆயுதங்களைக் கைவிடாதவராய்ப் பெரிய கேடகமும் வாளுமாகிய இவைகளோடு எதிர்த்து நிற்பவரைப் போல அவனுக்கு எதிரில் நின்றார்.—எ-று. (கசு)

அங்நின்ற தொண்டர் திருவுள்ள மாரறிவார்
முன்னின்ற பாதகனுந் தன்கருத்தே முற்றுவித்தான்
இங்நின்ற தன்மை யறிவா ரிவர்க்கருள
மின்னின்ற செஞ்சடையார் தாமே வெளிநின்றார்.

(இ-ள்.) இவ்விதமாக அவ்விடத்தில் நின்ற அன்பராகிய ஏனாதிநாதநாயனாருடைய திருவுள்ளக்குறிப்பை யாரறிந்து சொல்லவல்லவர்கள்? (ஒருவருமில்லை;) அவருக்கெதிரில்நின்ற பாதகனாகிய அதிசூரனும் தன்னுடையஎண்ணத்தின்படியே நிறைவேற்றினான்; இத்தன்மையாகிய விபூதியின் நிலைமையை உயர்வென்றுணர்ந்தவராகிய இவ்வடியவருக்குத் திருவருள் செய்யும்படி மின்னலைப்போல் விளங்குகின்ற சிவந்த சடையினையுடைய சிவபெருமான் தாமே பிரத்தியக்ஷமாய் நின்றார்.—எ-று. (சo)

மற்றினிநாம் போற்றுவதென் வானோர் பிரானருளைப்
பற்றலர்தங் கைவாளாற் பாச மறுத்தருளி
யுற்றவரை யென்று முடன்பிரியா வன்பருளிப்
பொற்றொடியாள் பாகனார் பொன்னம் பலமணைந்தார்.

(இ-ள்.) இனி நாம் வேறே புகழ்ந்துபேசவேண்டுவது என்ன? (ஒன்றுமில்லை;) பகைவனுடைய கையிற்பிடித்த வாளாயுதத்தினால் தம்முடைய பாசபந்தங்களை யறுத்துத் தேவர் நாயகராகிய சிவபெருமானது திருவருளையடைந்த அவ்வேனாதிநாதநாயனாரை உமாசகாயராகிய அக்கடவுள் எந்நாளும் தம்மைவிட்டுப் பிரியாதிருந்து வாழ்கின்ற அன்பினைக்கொடுத்துப் பொன்னம்பலத்திற்கு எழுந்தருளினார்.—எ-று. (சக)

தம்பெருமான் சாத்துந் திருநீற்றுச் சார்புடைய
எம்பெருமா னேனாதி நாதர் கழலிறைஞ்சி
யும்பர்பிரான் காளத்தி யுத்தமர்க்குக் கண்ணப்ப
நம்பெருமான் செய்தபணி நாந்தெரிந்த வாறுரைப்பாம்.

(இ-ள்.) தமது முதல்வராகிய சிவபெருமான் தரிக்கின்ற திருவெண்ணீற்றினதுசார்பையே சிறந்ததாகக் கொண்டு அன்புசெலுத்திய எமது பெருமானாகிய ஏனாதிநாதநாயனாரது திருவடிகளைத் துதித்து, தேவர்பெருமானாகிய திருக்காளத்திநாதருக்குக் கண்ணப்பநாயனாராகிய நமது பெருமான் செய்த திருத்தொண்டினை நமக்குத் தெரிந்தவளவில் சொல்லுகின்றோம்.—எ-று. (சஉ)

ஏனாதிநாதநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் சுசக.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கண்ணப்பநாயனார்புராணம்.

மேவலர் புரங்கள் செற்ற விடையவர் வேத வாய்மைக்
காவலர் திருக்கா ளத்திக் கண்ணப்பர் திருநா டென்ப
நாவலர் புகழ்ந்து போற்று நல்வளம் பெருகி நின்ற
பூவலர் வாவி சோலை சூழ்ந்தபோத் தப்பிநாடு.

(இ-ள்.) சிறந்த வித்துவான்களால் புகழ்ந்து சொல்லப்பட்ட நன்மைபொருந்திய பலவளங்களும் குறைவின்றி நிறைந்து நிலைபெற்ற தாமரைமுதலிய புட்பங்கள் மலர்ந்திருக்கின்ற தடாகங்களும், பூஞ்சோலைகளும் நாற்புறங்களிலுஞ் சூழ்ந்திருக்கின்ற போத்தப்பி நாட்டினை, பகைவர்களது முப்புரங்களையும் எரித்தருளிய ரிஷபாரூடரும், வேதத்தின் உண்மைக்கடவுளுமாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்காளத்தி என்னும் க்ஷேத்திரத்தில் சிவப்பேறெய்திய கண்ணப்பநாயனாரது திருநாடென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.—எ-று. (க)

இத்திரு நாடு தன்னி லிவர்திருப் பதியா தென்னி
னித்தில வருவிச் சார னீள்வரை சூழ்ந்த பாங்கர்
மத்தவெங் களிற்றுக் கோட்டு வன்றொடர் வேலி கோலி
ஒத்தபே ரரணஞ் சூழ்ந்த முதுபதி யுடுப்பூ ராகும்.

(இ-ள்.) இத்தன்மைபொருந்திய சிறந்த போத்தப்பிநாட்டிலே இந்தக் கண்ணப்பநாயனார் திருவவதாரஞ் செய்தருளிய திருப்பதியாதென்றால், முத்துக்களை அரித்துக்கொண்டு வருகின்ற அருவிகள்பொருந்திய சாரல்களையுடைய நீண்டமலைகள் சூழ்ந்த இடங்களில் மதம்பொருந்திய வெவ்விய யானைத்தந்தங்களினால் மிகுந்ததொடர்ச்சியாகிய வேலிகளைவளைத்து வரிசையாக ஒத்திருக்கின்ற பெரியகாட்டரணால் சூழப்பட்ட பழையநகரமாகிய உடுப்பூர் என்றுசொல்லப்படும். ()

குன்றவ ரதனில் வாழ்வார் கொடுஞ்செவி ஞமலி யார்த்த
வன்றிறல் விளவின் கோட்டு வார்வலை மருங்கு தூங்கப்
பன்றியும் புலியு மெண்குங் கடமையு மானின் பார்வை
அன்றியும் பாறை முன்றி லெவன முணங்கு மெங்கும்.

(இ-ள்.) அந்த உடுப்பூரில் வாழ்கின்ற குறவர்கள் கோணலாகிய காதுகளையுடைய நாய்களைக்கட்டிய மிகுந்த வலிமையாகிய விளாமரத்தினது கொம்புகளின் ஒரு புறத்தில் நீண்டவலைகள் தொங்கிக்கொண்டிருக்க, மிருகங்களை எளிதிற்

பிடிப்பதற்குப் பன்றி - புலி-கரடி - மான்முதலாகிய பார்வைமிருகங்களை வைத்து வளர்த்துக்கொண்டிருப்பதன்றியும் பாறையாயிருக்கின்ற தமது * முற்றங்களெங்கும் மலைநெல்லுகளும் காய்ந்துகொண்டிருக்கும்.—எ-று.

மூன்றில்-இலக்கணப்போலி. (கூ)

வன்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்றலைச் சிறும கார்கள் புரிந்துட னாட லன்றி
அன்புறு காதல் கூர வணையுமான் பிணைக ளோடும்
இன்புற மருவி யாடு மெயிற்றியர் மகளி ரெங்கும்.

(இ-ள்.) புல்லிய தலைமயிரையுடைய சிறிய வேடப்பிள்ளைகள், வலியபுலிக்குட்டிகளோடும் வெற்றிபொருந்திய யானைக்கன்றுகளோடும் விரும்பிவிளையாடுவதேயல்லாமல் அன்பும் மிகுந்த ஆசையும் அதிகரிக்கும்படி தங்களிடத்தில் வருகின்ற பெண்மான்களோடும் இன்பமுண்டாகும்படி சேர்ந்துவிளையாடுகின்றசிறிய வேடப்பெண்களும் எவ்விடங்களிலும் இருப்பார்கள்.—எ-று.

மானினங்கள் தம் கண்களைப்போல வேடச்சிறுமியர்களின் கண்களுந் தோன்றுதலால் தங்கள் இனமென்றுகருதி அப்பெண்களை அடைந்தன வென்க.

வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந் தோறுங்
கொல்லெறி குத்தென் றார்த்துக் குழுமிய வோசை யன்றிச்
சில்லரித் துடியுங் கொம்புஞ் சிறுகணு குளியுங் கூடிக்
கல்லெனு மொலியின் மேலுங் கறங்கிசை யருவி யெங்கும்.

(இ-ள்.) தம்மை எதிர்த்த பகைவர்களை வெல்லுகின்ற ஆயுதங்களையும், தாக்ஷண்யமில்லாமையையும், கொடுஞ்சொற்களையுமுடைய வேடர்களது கூட்டமிருக்குமிடங்களிலெல்லாம் இதைக்கொல், இதைவளைதடிமுதலியவைகளினால் எறி, இதை ஈட்டிமுதலியவைகளினால் குத்து என்று ஆரவாரித்து அதனால் நிறைந்தெழுந்த ஓசைகளேயல்லாமல் சில சிறுகற்களையிட்டிருக்கின்ற உடுக்கைகளும், கொம்புஎன்னும் வாத்தியமும், சிறியகண்களையுடைய சிறுபறையும் ஒன்றாகச் சேர்ந்து கல் என்றொலிக்கும் ஓசையைப்பார்க்கினும் மிகுந்தொலிக்கின்ற அருவியாற்றினது ஓசைகள் எவ்விடங்களிலுமிருக்கும்.—எ-று.

அரி என்பது வெண்கலமுதலிய உலோகங்களால் சிறுமணிகள்போலச் செய்யப்பட்டு உடுக்கை - சிலம்புமுதலியவற்றின் உள்ளேபோட்டிருப்பது. (எ)

ஆறலைத் துண்ணும் வேட ரயற்புலங் கவர்ந்து கொண்ட
வேறுபல் லுருவின் மிக்கு விரவுமா னிரைக ளன்றி
ஏறுடை வானந் தன்னி லிடிக்குர லெழிலி யோடு
மாறுகொண் முழக்கங் காட்டு மதக்கைம்மா நிரைக ளெங்கும்.

(இ-ள்.) வழியிற்போகின்றவர்களை அடித்துப்பறித்து அதனால் சீவனஞ்செய்கின்ற வேடர்கள் அயல் நாடுகளில்போய்க் கொள்ளையிட்டுக் கொண்டுவந்த

---

* முற்றம் = தலைவாசல்.

பலவேறுவகையான உருவத்தினால் அதிகரித்து நெருங்கியிருக்கின்ற பசுக்கூட்டங்களேயல்லாமல் உயர்வாகிய ஆகாயத்தில் இடிமுழக்கமாகிய குரலையுடைய மேகங்களோடு மாறுபட்ட பேரொலியைக்காட்டுகின்ற மதம்பொழிகின்றயானைக் கூட்டங்களும் எவ்விடங்களிலும் இருக்கின்றன.—எ-று. (சு)

மைச்செறிந் தனைய மேனி வன்றொழின் மறவர் தம்பால்
அச்சமு மருளு மென்று மடைவிலா ருடைவன் றோலார்
பொச்சையி னறவு மூனின் புழுக்கலு முணவு கொள்ளும்
நச்சழற் பகழி வேடர்க் கதிபதி நாக னென்பான்.

(இ-ள்.) மைக்குழம்பு திரண்டதுபோலும் உடம்பினையும், கொடியகொலைத்தொழிலையுமுடைய வேடர்கள் தம்மிடத்தில் அச்சமும், பிற வுயிர்களின்மேல் கிருபையும் என்றுமில்லாதவர்கள்,வலியதோலினையே ஆடையாகவுடையவர்கள், மலைகளில்தேடி எடுக்கின்றதேனையும், மிருகங்களின் தசைகளோடு கூடிய மலைநெல்லின் சோற்றையும் தமக்கு உணவாகக்கொள்ளுகின்றவர்களும் விஷம்பூசி நெருப்பை யொத்திருக்கின்ற அம்புகளையுடையவர்களுமாகிய அவ்வேடர்களுக்கு அரசனாயுள்ளவன் நாகனென்று சொல்லப்பட்டவன்.—எ-று.

பொச்சம் - காடு எனினும் பொருந்தும். (எ)

பெற்றியாற் றவமுன் செய்தா னாயினும் பிறப்பின் சார்பாற்
குற்றமே குணமா வாழ்வான் கொடுமையே தலைநின் றுள்ளான்
விற்றொழில் விறலின் மிக்கான் வெஞ்சின மடங்கல் போல்வான்
மற்றவன் குறிச்சி வாழ்க்கை மனைவியுந் தத்தை யென்பாள்.

(இ-ள்.) கண்ணப்பநாயனார் தன்னிடத்துப் புத்திரராகத் திருவவதாரஞ்செய்த பெருமையினால் பூர்வசன்மத்தில் பெருந்தவத்தினைச் செய்தவனாயிருந்தாலும் தான்பிறந்த வேடசாதிக்குரிய ஒழுக்கத்தினால் குற்றமாகிய தொழில்களையே நல்ல தொழிலாகக்கொண்டு வாழ்கின்றவன், தீமைசெய்தலிலேயே தலைமையாக நிற்கின்றவன், வில்வித்தையிலும் தேகவலிமையிலும் சிறந்தவன், கொடிய கோபத்தையுடைய ஆண்சிங்கத்தை யொத்தவன், அத்தன்மையாகிய சிறப்புப்பொருந்திய நாகனுடைய குறிச்சியில்வாழ்கின்ற இல்வாழ்க்கைக்குரிய மனையாளும் தத்தை என்று சொல்லப்பட்டவள்.—எ-று.

குறிச்சி என்பது குறிஞ்சிநிலத்து ஊர். (அ)

அரும்பெறன் மறவர் தாயத் தான்றதொல் குடியில் வந்தாள்
இரும்புலி யெயிற்றுத் தாலி யிடையிடை மனவு கோத்துப்
பெரும்புற மலையப் பூண்டாள் பீலியுங் குழையுந் தட்டச்
சுரும்புறு படலை முச்சிச் சூரரிப் பிணவு போல்வாள்.

(இ-ள்.) அவள் வேடர்குலத்தில் உயர்ந்தபழமையாகிய குடிப்பிறப்பில் பெறுதற்கரிய பேறாகப்பிறந்தவள், பெரிய புலியினது பல்லாலாகிய தாலியின் இடையிடையே சங்குமணிகளைக் கோத்துக்கழுத்தின்புறமாகிய முதுகுமுதலிய விடங்களில் அலையும்படியாகத் தரித்தவள், மயிற்பீலிகளும் தழைகளும் ஒன்றோ

டொன்று தாக்க வண்டுகள் மொய்க்கின்ற மாலையைத்தரித்த உச்சிக்கொண் டையையுடைய அச்சத்தைத்தருகின்ற பெண்சிங்கத்தையொத்தவள்.—எ-று. ()

பொருவருஞ் சிறப்பின் மிக்கா ரிவர்க்கினிப் புதல்வர்ப் பேறே
அரியதென் றெவருங் கூற வதற்படு காத லாலே
முருகல ரலங்கற் செவ்வேன் முருகவேண் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும் பராய்க்கட னெறியி னிற்பார்.

(இ-ள்.) ஒப்புசொல்வதற்கரிய சிறப்பில் மிகுந்தநாகன் தத்தை என்னும் இவ்விருவர்களுக்கும் வயதுமுதிர்ந்தபடியால் இனிப் புத்திரசந்தானமொன்றே உண்டாவது அரிதென்று பார்த்தவர்கள் யாவருஞ் சொல்ல, அதனால் புத்திரப்பேறு உண்டாகவேண்டுமென்னும் ஆசையினாலே வாசனைவீசுகின்ற கடம்ப மலர்மாலையைத்தரித்த சிவந்தவேலாயுதத்தையுடைய சுப்பிரமணியக்கடவுளினது சந்நிதிக்குப்போய்த் துதிசெய்து நாள்தோறும்வணங்கி அவர்க்குச் செய்யவேண்டிய பணிவிடையின் முறைமையில் சிறிதும் தவறாது நின்றார்கள்.—எ-று. (௧0)

வாரணச் சேவ லோடும் வரிமயிற் குலங்கள் விட்டுத்
தோரண மணிக டூக்கிச் சுரும்பணி கதம்ப நாற்றிப்
போரணி நெடுவே லாற்குப் புகழ்புரி குரவை தூங்கப்
பேரணங் காடல் செய்து பெருவிழா வெடுத்த பின்றை.

(இ-ள்.) சேவற்கோழிகளையும் புள்ளிகளையுடைய மயிற்கூட்டங்களையும் பிரார்த்தனையாகச்செலுத்தி, மணிகள்கோத்த தோரணங்கள் கட்டி, வண்டுகள் வரிசையாக மொய்க்கின்ற கடம்பமலர் மாலைகளைத்தொங்கவிட்டு, போர்செய்தலையே தமக்கு ஆபரணமாகக்கொண்ட நீண்டவேலாயுதத்தைத்தரித்த முருகக்கடவுளுக்குப் புகழ்ச்சிபொருந்திய குரவையாட்டு நடந்துகொண்டுவர, பெரிய தேவராட்டியை வெறியாட்டயர்வித்துச் சிறந்த திருவிழாவைநடத்தினபின்பு.—எ-று.

சேவலும் - மயிலும் முருகக்கடவுளுக்கு வாகனமாதலின் அவைகளை உலகத்திலுள்ளவர்கள் தமது எண்ணம் நிறைவேறும்பொருட்டுப் பிரார்த்தித்துவிடுவது தொன்றுதொட்டுள்ள வழக்கமெனவறிக. குரவை என்பது கைகோத்தாடல். தேவராட்டியைப் பூசாரிச்சி என்பது கிராமியவழக்கு.

இது முதல் நான்குபாடலுங் குளகம். (௧௧)

பயில்வடுப் பொலிந்த யாக்கை வேடர்தம் பதியா நாகற்
கெயிலுடைப் புரங்கள் செற்ற வெந்தையார் மைந்த ரான
மயிலுடைக் கொற்ற வூர்தி வரையுரங் கிழித்த திண்மை
அயிலுடைத் தடக்கை வென்றி யண்ணலா ரருளி னாலே.

(இ-ள்.) தன்னை எதிர்த்த பகைவர்களாலும் மிருகங்களாலும் உண்டாகிய தழும்புகள் நிறைந்த உடம்பினையுடைய வேடர்களுக்கு அரசனாகிய நாகனென்பவனுக்குப் பொன் - வெள்ளி - இரும்பு ஆகியமதில்கள் சூழ்ந்த முப்புரங்களையும் எரித்தருளிய எமது சிவபெருமானது திருக்குமாரராகிய ஜயம்பொருந்திய மயில் வாகனத்தையுடையவரும்,கிரவுஞ்சபர்வதத்தின் வல்லமைகெடும்படி பிளந்தவலிய

வேலாயுதத்தைத் தாங்கிய திருக்கரத்தை யுடையவருமாகிய வெற்றிபொருந்திய குமாரக்கடவுளினது திருவருளினாலே.—எ-று. (கஉ)

கானவர் குலம்வி ளங்கத் தத்தைபாற் கருப்ப நீட
ஊனமில் பலிகள் போக்கி யுறுகடன் வெறியாட் டோடும்
ஆனவத் திங்கள் செல்ல வளவில்செய் தவத்தி னாலே
பான்மதி யுவரி யீன்றா லெனமகப் பயந்த போது.

(இ-ள்.) வேடர்களுடைய குலமானது சிறந்து விளங்கும்படியாகத் தத்தையின் வயிற்றில் கருப்பமுண்டாகிவளர, அக்கருப்பத்திற்கு ஓர் குறைவும் வராமல் தெய்வங்களுக்குக் கெடுதலில்லாதபலிகள் கொடுத்துச் செய்யவேண்டிய பெருங்கடமையாகிய வெறியாட்டுடனே அதுவளர்தற்குரிய பத்துமாதங்களும் ஒன்றொன்றாகச் செல்ல, அவர்கள் அளவில்லாமல் செய்த பெருந் தவத்தினாலே உவர்நீரையுடைய சமுத்திரமானது வெண்மை பொருந்திய சந்திரனைப்பெற்றது போல ஒருகுழந்தையைப்பெற்றபொழுது.—எ-று.

**நாகன் தத்தை** என்னுமிவ்விருவர்களுஞ் செய்த பெருந்தவத்தினால் அருச்சுனனே தங்கள் வேடர்குலம்விளங்க அருமைப்புதல்வனாகப் பிறந்தனனென்பார், "பான்மதி யுவரி யீன்றா லெனமகப் பயந்த போது" என்று கூறினார். அருச்சுனன் கண்ணப்பநாயனாராகத் திருவவதாரஞ்செய்ததின் வரலாறு:—பாண்டுபுத்திரர்களுக்குள்ளே அருச்சுனனென்பவன் தம்மை வஞ்சகச்சூதாடிக் காட்டிற்கனுப்பிய துரியோதனனாதியரை வெல்லும்பொருட்டுச் சிவபெருமானை வேண்டிப் பாசுபதாஸ்திரம் பெற விரும்பி, இந்திரநீலபர்வதத்தையடைந்து அருந்தவம்புரிந்துகொண்டிருந்தான். இங்ஙனமிருக்கையில், இவனைக் கொல்லும்பொருட்டுத் துரியோதனனா லேவப்பட்ட மூகாசுரனென்பவன் பன்றியுருக்கொண்டு அங்குள்ள முனிவர்களுக்குத் தீங்கு விளைத்துவர, சிவபெருமான் அதனால் அருச்சுனனுக்குத் தீங்கு விளையாவண்ணம் அதனை மடிக்கத் திருவுள்ளங்கொண்டு தம்மைவிட்டு நீங்காத உமாதேவியாருந் தாமுமாக வேடவுருவமெடுத்து அப்பன்றியை நெருங்கி ஓர் திருவிளையாடலாக ஒரு கணையை மெல்லவிடுத்தனர்; அதுபடுதலும் அப்பன்றி யஞ்சி மேகம்போல முழங்கி மறைந்து அங்குத் தவஞ்செய்திருந்த முனிவரை யணுக, அவர்கள் பயந்து அருச்சுனனை யடைந்தார்கள். உடனே அவனெழுந்து அப்பன்றியின்மீது ஒரு கொடிய பாணத்தை விடுத்துக் கீழேதள்ளினான். அப்பொழுது சிவபெருமான் அவனைச் சமீபித்து "இப்பன்றியை யான் கொன்றேன்" என்ன, அருச்சுனன் அவரைநோக்கி "வேடனே! நின் பாணம் இதனைக் கொல்லுந்திறலுடையதன்று; யான்விடுத்தபாணமே அதனை மடியச்செய்தது." என்று கூற, இதனால் அவ்விருவருக்கும் கலகம் நேர்ந்து போர்செய்ய, அருச்சுனன் தனது வில்லைக்கொண்டு சிவபெருமான் திருமுடியின்மீது தாக்கினான். அவ்வடி சராசரங்களெல்லாவற்றிலும்பட்டது. உடனே பெருமான் உமதேவியாரோடு இடபவாகனருடராய்க் காக்ஷிதந்தருளினர். அதனை அருச்சுனன்கண்டு பயந்து வணங்கிநின்று "எம்பெருமானே! சிறியேன்செய்த பிழையைப் பொறுத்தருள்வீராக" என்று பிரார்த்தித்து நிற்க, பெருமான் திருவருள் சுரந்து "விஜயனே! நீ சிறிதும் அஞ்சாதே நின் மொழியனைத்தும் நமது குமரன்மொழியே யாம்; ஆதலால் உனக்கு யாதுவரம் வேண்டும்" என்ன, அவன் "அடியேனுக்கு முத்திதந்தருளவேண்டும்"

என்றனன். சிவபெருமான் அவனைப்பார்த்து "நீ பாசுபதாஸ்திரம் பெறத் தவம் புரிந்தனை யாதலால் முன்னர் அதனைப் பெறுக" என்று கொடுத்துப் பின்பு "எம்மைவேடனென்று இகழ்ந்து கூறினபடியால் நீ வேடர்குலத்திற் பிறந்து திருக்காளத்தியை யடைந்து அன்புருவமாகி எம்மைப் பூசித்துப் பன்றிமுதலிய மிருகங்களின் இறைச்சியை உண்பித்து வாழுநாளிலே முத்திதந்தருள்வோம்" என்றுரைத்து மறைந்தருளினார். அவ்வாறே அருச்சுனன் திண்ணனாராக அவதரித்துத் திருக்காளத்திநாதனைப் பூசித்துச் சிவப்பேறெய்தினன்; எனவறிக. இதனை,

"பத்தியிற் பணிந்துபின் பாண்டு மைந்தனும்
மெத்தவெம் பவத்தினுன் மிகவு நொந்தனன்
அத்தனின் னருளினு லடிய னேனுய்ய
முத்தியை யருளென முதல்வன் கூறிடும்.

வாங்குவிற் றடக்கையாய் வாரி சூழ்நிலத்
தோங்கிய பகைஞரை யொறுக்கு மாற்றினால்
தீங்கறு கணைபெறச் சிந்தை செய்துநீ
யோங்கிய தவமிக வுஞற்றி வைகினாய்.

முன்னிய பகழிநீ கோடி முன்னெனத்
தன்னிகர் சங்கரன் றான ளித்தெமை
யின்னல்செய் வேடனென் றிகழ்ந்து கூறினை
யன்னதால் வேட்டுவ வரச னாகியே.

தென்றிசைக் கயிலையைச் சென்று சேர்ந்துநீ
குன்றலி லன்புருக் கொண்டு நம்மைய
நன்றிகொ ளிலிங்கபூ சனைநற் பத்தியா
லொன்றையு முணர்ந்திடா துவந்து செய்தரோ.

கோலமே முதலிய விலங்கு கொன்றுநீ
சாலவே தசையமு தருத்திச் சாருநாள்
ஏலவே முத்தியு மீதும் போவென
நீலமார் களத்திறை நீங்கி னனரோ.

அன்னதன் மையினருச் சுனனும் வேடனாய்
முன்னவன் பூசனை முயன்று செய்துபின்
கன்னிபங் குடையகா ளத்தி நாதனார்
தன்னரு ளாலுயர் முத்தி சார்ந்தனன்."

என்னும் சீகாளத்தி புராணத்தா னுணர்க. (கஈ)

கரிப்பரு மருப்பின் முத்துங் கழைவிளை செழுநீர் முத்தும்
பொருப்பினின் மணியும் வேடர் பொழிதரு மழையே யன்றி
வரிச்சுரும் பலைய வானின் மலர்மழை பொழிந்த தெங்கும்
அரிக்குறுந் துடியே யன்றி யமரர்துந் துபியு மார்த்த.

(இ-ள்.) யானைகளினது பருத்த தந்தங்களிலிருந்துண்டாகிய முத்துக்களும், மூங்கில்களிலிருந்துண்டாகிய நல்ல நீரையுடைய முத்துக்களும் மலைகளினு

ண்டாகிய வயிரம் முதலிய இரத்தினங்களும் ஆகிய இவைகளை வேடர்கள் யாசகர்களுக்கு வாரி இறைக்கின்ற மழையேயல்லாமல், வரிகளையுடைய வண்டுகள் சுழலும்படி ஆகாயத்தினின்றும் புஷ்பமாரியும் அவ்வேடர்களினுடைய சிற்றூரெங்கும் பொழிந்தது; பறல்களையுடைய சிறிய உடுக்கை வாத்தியங்களேயல்லாமல் தேவதுந்துபியும் முழங்கின.—எ-று. (கச)

அருவரைக் குறவர் தங்க ளகன்குடிச் சீறூ ராயம்
பெருவிழா வெடுத்து மிக்க பெருங்களி கூருங் காலைக்
கருவரை காளமேக மேந்திய தென்னத் தாதை
பொருவரைத் தோள்க ளாரப் புதல்வனை யெடுத்துக் கொண்டான்

(இ-ள்.) ஏறுதற்கருமையாகிய மலையில் வசிக்கின்ற வேடர்கள் தங்கள் மிகுந்தகுடிகள்வாழுகின்ற சிற்றூர்களிலுள்ள சனங்கள் பெரிய உற்சவங்கொண்டாடி மிகுந்த சந்தோஷமடைந்திருக்கும்பொழுது மைநாகமானது ஒரு கருமையாகிய மேகத்தைத் தாங்கிக்கொண்டதுபோலத் தந்தையாகிய நாகன்போர் செய்தற்குரிய மலைபோன்ற தனது தோள்களில் பொருந்தும்படியாக அக்குழந்தையை எடுத்துக்கொண்டான்.—எ-று. (கரு)

கருங்கதிர் விரிக்கு மேனிக் காமரு குழவிதானும்
இரும்புலிப் பறழி னோங்கி யிறவுள ரளவே யன்றி
யரும்பெற லுலகமெல்லா மளப்பரும் பெருமை காட்டித்
தருங்குறி பலவுஞ் சாற்றுந் தன்மையிற் பொலிந்து தோன்ற.

(இ-ள்.) கருமையாகிய கிரணங்களை வீசுகின்ற திருமேனியையுடைய அழகுபொருந்தியஅக்குழந்தையும் பெருமையாகிய புலிக்குட்டியைப்போல நாளுக்குநாள் வளர்ந்து வேடர்களினளவே யல்லாமல் பெறுதற்கரிய உலகமுழுமையும் அளவிட்டுரைப்பதற்கரிய பெருமையைக் காண்பிக்கும் பல அடையாளங்களையும் தெரிவிக்கின்ற தன்மையோடு பிரகாசித்துத்தோன்ற.—எ-று.

இதனால், கண்ணப்பநாயனார் சிறுகுழந்தையாயிருக்கும்பொழுதே அவரது முகவடிவுமுதலிய பல இலக்கணங்களால் சிவபெருமானது திருவருட்குரியராயிருக்குந்தன்மை விளங்கியதாகத் தோன்றுகின்றது. காமர்மரு என்பது காமரு என்றாயது மரூஉ.

இது முதலிரண்டு பாடலுங் குளகம். (கசு)

அண்ணலைக் கையி லேந்தற் கருமையா லுரிமைப் பேருந்
திண்ணனென் றியம்பு மென்னத் திண்சிலை வேட ரார்த்தார்
புண்ணியப் பொருளா யுள்ள பொருவில்சீ ருருவி னானைக்
கண்ணினுக் கணியாத் தங்கள் கலன்பல வணிந்தா ரன்றே.

(இ-ள்.) அக்கண்ணப்பநாயனாராகிய குழந்தையைக் கைகளால் எடுத்துத் தாங்குவதற்குக் கூடாமையாயிருந்தபடியினால் அவருக்கு உரிமையாகிய திருநாமமும் திண்ணனென்று அழையுங்களென்றுசொல்ல, அதைக்கேட்ட வலியவிற்களையுடைய வேடர்கள் சந்தோஷத்தினால் ஆரவாரித்தார்கள்; புண்ணியமே ஒரு வடிவங்கொண்டு திரண்டு வந்ததையொத்த ஒப்பற்ற திருவுருவத்தையுடைய

அத்திண்ணனாைக் கண்களுக்கு அழகாக விளங்கும்படி தங்கள் மரபினுக்குரிய பலவகை ஆபரணங்களையும் தரித்தார்கள்.—எ-று.

திண்ணன் = வலிவுள்ளவன். (கள)

வரையுறை கடவுள் காப்பு மறக்குடி மரபிற் றங்கள்
புரையிறுன் முறைமைக் கேற்பப் பொருந்துவ போற்றிச் செய்து
விரையிளந் தளிருஞ் சூட்டி வேம்பிழைத் திடையிற் கோத்த
அரைமணிக் கவடி கட்டி யழகுற வளர்க்கு நாளில்.

(இ-ள்.) மலையில்வாழுகின்ற தெய்வங்களுக்குக் (குழந்தையைக் காப்பாற் றும்பொருட்டு)வழிபாடுசெய்யும் காவலும்,அது வல்லாமல் மறவருடையகுலத்தில் தங்கள் குற்றமற்ற பழைமையாகிய நடத்தைக்குத் தகுதியாகப் பொருந்திய பூசைமு தலியவைகளையும் விரும்பிச்செய்து வாசனைபொருந்திய இளமையாகிய தளிர்களை த்தரித்து மலைவேப்பங்கொட்டைகளை அலங்கரித்து இடையிடையிற்கோத்த பல கறை மாலைய அரையில் கட்டி,அழகாக வளர்க்கும் நாள்களில்.—எ-று.

"வேம்பிழைத்திடையிற்கோத்த" என்பதற்கு வேப்பங்கோலினைத்துண் டாகத்தரித்துப் பலகறையின் மத்தியில்கோத்த,என்று பொருளுரைப்பினும் பொ ருந்தும்.

இது முதலிரண்டுபாடலுங் குளகம். (கஅ)

வருமுறைப் பருவந் தோறும் வளமிகு சிறப்பிற் றெய்வப்
பெருமடை கொடுத்துத் தொக்க பெருவிறல் வேடர்க் கெல்லாந்
திருமலி துழனி பொங்கச் செழுங்களி மகிழ்ச்சி செய்தே
யருமையிற் புதல்வற் பெற்ற வார்வமுந் தோன்ற வுய்த்தார்.

(இ-ள்.) குழந்தைக்கு முறையாக வருகின்ற பருவங்கள்தோறும் மிகுந்த வளமாகச்செய்கின்ற சிறப்போடு தெய்வங்களுக்குப்பெருமைபொருந்திய பிரசாத ங்களை நிவேதித்துத் தம்மைச் சூழ்ந்துள்ள மிக்கவல்லமைபொருந்திய வேடர்களு க்கெல்லாம் மங்கலகரமாகிய வாத்தியத்தொனி அதிகரிக்கும்படி சிறந்த பெருமகி ழ்ச்சியைச்செய்ததுமல்லாமல் அருமையாகப்பிள்ளையைப்பெற்ற அன்பும்யாவருக் கும் நன்றாகத்தோன்றும்படி நடத்தினார்கள்.—எ-று.

மடை என்றது வனதேவதைகளுக்குக் காய்-கிழங்கு - இறைச்சி முதலியவை களை யமைத்துத் தனித்தனி குவித்து நிவேதித்தலை. (கக)

ஆண்டெதி ரணைந்து செல்ல விடுமடித் தளர்வு நீங்கிப்
பூண்டிகழ் சிறுபுன் குஞ்சிப் புலியுகிர்ச் சுட்டி சாத்தி
மூண்டெழு சினத்துச் செங்கண் முளவுமுள் ளரிந்து கோத்த
நாண்டரு மெயிற்றுத் தாலி நலங்கிளர் மார்பிற் றூங்க,

(இ-ள்.) அக்குழந்தைக்கு ஒருவருஷகாலம் நிறைந்துவர, தத்தடியிட்டு நடக்கும் தளர்நடைப்பருவத்தினின்றும் நீங்கி ஆபரணங்கள் விளங்குகின்ற மிரு துவாகிய சிறிய தலைமயிரில் புலிநகம்பதித்த நெற்றிச்சுட்டியைத்தரித்து அதிகரித் தெழுகின்ற கோபத்தினால் சிவந்தகண்களையுடைய முள்ளம்பன்றியின் முட்களை

நுனியில் அரிந்து கோத்திருக்கின்ற கயிற்றில் தொங்குகின்ற புலிப்பல்லின் தாலி யானது நன்மைபொருந்திய மார்பினிடத்தில் பிரகாசிக்க.—எ-று.

ஈண்டுத் தாலிஎன்றது முள்ளம்பன்றியின் முட்களையரிந்து புலிப்பல்லோ டுசேர்த்துக் கோத்த மாலையை எனவறிக.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (உ0

பாசொளி மணியோ டார்த்த பன்மணிச் சதங்கை யேங்கக்
காசொடு தொடுத்த காப்புக் கலன்புனை யரைஞாண் சேர்த்தித்
தேசுடை மருப்பிற் றண்டை செறிமணிக் குதம்பை மின்ன
மாசறு கோலங் காட்டி மறுகிடை யாடு நாளில்.

(இ-ள்.) பசுமையாகிய நீலமணிகளோடுகோத்த வேறு பலமணிகளையுடைய சதங்கையானது திருவரையில் சப்திக்க, பல இரத்தினங்களோடு தொடுத்த காப்பினையும், ஆபரணமாகச்செய்யப்பட்ட அரைஞாணையும் திருக்கரத்திலும் திருவரையிலும் தரித்து, ஒளிவீசுகின்ற யானைக்கொம்பினால் செய்யப்பட்ட தண்டையும், நெருங்கியமணிகள் பதித்தகுதம்பையும் திருவடியினும் திருச்செவியிலும் பிரகாசிக்க, இவ்விதமாகிய குற்றமற்ற திருக்கோலப்பொலிவைப் பார்ப்பவர்கள் கண்களிக்கும்படியாகக் காண்பித்து வீதியில் விளையாடிக்கொண்டிருக்கின்ற நாள்களில்.—எ-று.

குதம்பை என்பது காதில் தொங்கும்படி அணியும் ஒருவகை ஆபரணம்; அது,முருகுபோல்வது. (உக)

தண்மல ரலங்கற் றாதை தாய்மனங் களிப்ப வந்து
புண்ணியக் கங்கை நீரிற் புனிதமாந் திருவாய் நீரில்
உண்ணனைந் தமுத மூறி யொழுகிய மழலைத் தீஞ்சொல்
வண்ணமென் பவளச் செவ்வாய் குதட்டியே வளரா நின்றார்.

(இ-ள்.) குளிர்ந்த மலர்மாலையைத்தரித்த தந்தையாகிய நாகனும் தாயாகிய தத்தையும் மனமகிழும்படி அவர்களுக்கு அருகில்வந்து புண்ணிய சொரூபமாகிய கங்கைநீரைப்பார்க்கிலும் மிகுந்த பரிசுத்தம்பொருந்திய அழகிய வாய்நீரில் உள் நனைந்து அமுதத்தைப்பெருக்கி வெளிப்படுகின்ற இனிமையாகிய மழலைச்சொற்களை அழகிய மிருதுவாகிய பவளம்போலுஞ் சிவந்த வாயினால் குதட்டிப்பேசிக் கொண்டு வளர்ந்தார்.—எ-று. (உஉ)

பொருபுலிப் பார்வைப் பேழ்வாய் முழையெனப் பொற்கை நீட்டப்
பரிவுடைத் தந்தை கண்டு பைந்தழை கைக்கொண் டோச்ச
இருசுடர்க் குறுகண் டீர்க்கு மெழில்வளர் கண்ணீர் மல்கி
வருதுளி முத்த மத்தாய் வாய்முத்தங் கொள்ள மாற்றி.

(இ-ள்.) பார்வை மிருகமாகிய போர்செய்யத்தக்க புலிகளினது ஆழ்ந்தவாயைச் சிறிய குகையென்று நினைத்துத் தமது அழகியதிருக்கரத்தை அதினுள்ளே நீட்ட, அதை அவர்மேலன்புடைய தந்தையாகிய நாகன் பார்த்துப் பசியதழையைத்தனது கையிலெடுத்து அப்படிச் செய்யாதேயென்று அடிக்கும்படி ஓங்க,

சிவபெருமானுடைய சூரிய சந்திரர்களாகிய இரண்டு கண்களுக்கும் சேர்ந்த துன்பத்தைப்பின்னே நீக்குதற்குக் காரணமாகிய தமது அழகு பொருந்திய கண்களினின்றும் நீரைச்சொரிந்து, பெருகிவருகின்ற முத்துக்களையொத்த அக்கண்ணீர்த்துளிகளைத் தாயாகிய அந்தத்தத்தையானவள் எடுத்து வாயைமுத்தமிட்டுக்கொள்ள மாற்றினவராகி.—எ-று.

அத்தாய் வாய்முத்தங்கொள்ள கண்ணீர்மல்கி வருதுளிமுத்தம் மாற்றி எனக்கூட்டுக.

இது முதல் ஐந்துபாடலுங் குளகம். (உக)

துடிக்குற டுருட்டி யோடித் தொடக்குநாய்ப் பாசஞ் சுற்றிப்
பிடித்தறுத் தெயினப் பிள்ளைப் பேதைய ரிழைத்த வண்டல்
அடிச்சிறு தளிராற் சிந்தி யருகுறு சிறுவரோடுங்
குடிச்சிறு குரம்பை யெங்குங் குறுநடைக் குறும்பு செய்து.

(இ-ள்.) உடுக்கை வடிவாகச்செய்த மரக்கட்டையை வீதியில் உருட்டி அதன்பின்னேயோடி, கட்டியிருக்கின்ற வேட்டை நாய்களின் கழுத்துக்கயிறுகளைக் கையில்சுற்றிப்பிடித்து அறுத்து,வேடர்களுடைய சிறுபெண்கள் விளையாடுதற்குக்கட்டிய சிறுவீடுகளைத் தமது தளிரையொத்த சிறிய திருவடியினால் அழித்து, தனக்கு அருகில் சூழ்ந்திருக்கின்ற வேடச்சிறுவர்களோடும் வேடர்கள் குடியிருக்கின்ற குடிசைகள்தோறுஞ் சென்று சிறியநடையோடு பல குறும்புகளைச் செய்து.—எ-று.

துடிக்குறடு என்றது தோலினை மேல்மூடாமல் உடுக்கைபோலச் செய்யப்பட்ட மரக்கட்டை யெனவறிக. (உஉ)

அனையன பலவுஞ் செய்தே யைந்தின்மே லான வாண்டின்
வனைதரு வடிவார் கண்ணி மறச்சிறு மைந்த ரோடுஞ்
சினைமலர்க் காவு ளாடிச் செறிகுடிக் குறிச்சி சூழ்ந்த
புனைமருப் புழலை வேலிப் புறச்சிறு கானிற்போகி

(இ-ள்.) அப்படிப்பட்ட பலவிளையாடல்களையுஞ்செய்து ஐந்துவயது நிறைந்து மேல்வருகின்றஆறுவது வயதில் அழகியமாலையைத்தரித்த சிறிய வேடப்பிள்ளைகளோடும் கிளைகள் பொருந்திய மலர்ச்சோலைகளில்சேர்ந்து விளையாடி, நெருங்கிய குடிகளையுடைய அந்தச்சிற்றூரைச் சூழ்ந்திருக்கின்ற அலங்காரமாகிய யானைக்கொம்புகளினால் செய்யப்பட்ட உழலைவேலியின் புறத்திலிருக்கும் சிறியகாட்டில் சென்று.—எ-று.

"வனைதருவடிவார்கண்ணி" என்பதற்கு அழகாகச் செய்த வார்களையும் கண்ணிகளையுங் கையிற்பிடித்த, என்று பொருளுரைப்பினும் பொருந்தும். உழலைவேலியாவது:—வழியில்நடப்பட்டுப் போகின்றவர்களுக்கு இடங்கொடுத்துப்பின் உழன்றுகொண்டு தன்னிலையில் நிற்கும் உழலைமரம்பொருந்திய வழியினையுடைய வேலி எனவறிக. (உ௩)

கடுமுயற் பறழி னோடுங் கானவே னத்தின் குட்டி
கொடுவரிக் குருளை செந்நாய் கொடுஞ்செவிச் சரப மான

முடுகிய விசையி லோடித் தொடர்ந்துமுன் பற்றி முற்றத்
திடுமரத் திரளிற் கட்டி வளர்ப்பன வெண்ணி லாத.

(இ-ள்.) மிகுந்த வேகத்தையுடைய முயற்குட்டியும், காட்டுப்பன்றியின் குட்டியும், புலிக்குட்டியும், செந்நாயும் ஆகிய இவைகளைக் கொடியகாதுகளையுடைய சரபப்பட்சியைப்போல மிகுந்தவிசையோடு ஓடிப் பின்தொடர்ந்து முன்னே தடுத்துப் பிடித்துக்கொண்டு வந்து வாசல்களில் இருக்கின்ற மரக்கூட்டங்களில் கட்டி அந்நாயகனால் வளர்க்கப்பட்டவைகள் அளவில்லாதனவாயிருக்கின்றன.—எ-று. (உ௬)

அலர்பகல் கழிந்த வந்தி யையவிப் புகையு மாட்டிக்
குலமுது குறத்தி யூட்டிக் கொண்டுகண் டுயிற்றிக் கங்குல்
புலரவூ ணுணவு நல்கிப் புரிவிளை யாட்டின் விட்டுச்
சிலமுறை யாண்டு செல்லச் சிலைபயில் பருவஞ் சேர்ந்தார்.

(இ-ள்.) உதயமாகிய பகற்காலம் கழிந்தபின்பு மாலைப்பொழுதில் கடுகின் புகையினால் திருஷ்டிகழுதததங்கள் குறவர்குலத்தில்வந்த முதிர்ந்தவயதுடையவளாகிய குறத்தியானவள் உணவுகளையூட்டி எடுத்துக்கொண்டு நித்திரைகொள்ளும்படிச்செய்வித்துப் பொழுதுவிடிந்தவுடனே மாமிசவுணவுகளைக் கொடுத்துத் தாம் விரும்பிய விளையாடல்களைச்செய்யும்படிவிட்டு, இப்படிச் சிலவருஷங்கள் முறையாகப் போய்க்கொண்டிருக்கப் பின்பு வில்வித்தையைக் கற்றுக்கொள்ளத் தக்க பருவத்தையடைந்தார் கண்ணப்பநாயனார்.—எ-று. (உ௭)

தந்தையு மைந்த னாரை நோக்கித்தன் றடித்த தோளாற்
சிந்தையுண் மகிழப் புல்லிச் சிலைத்தொழில் பயிற்ற வேண்டி
முந்தையத் துறையின் மிக்க முதியரை யழைத்துக் கூட்டி
வந்தநாட் குறித்த தெல்லா மறவர்க்குச் சொல்லிவிட்டான்.

(இ-ள்.) தந்தையாகிய நாகனென்பவனும் புத்திரராகிய திண்ணனாரைப் பார்த்துத் தனது பருத்ததோள்களினால் மனத்தில் பெருமகிழ்ச்சி யுண்டாகும்படி ஆலிங்கனஞ்செய்து அவர்க்கு வில்வித்தையைக் கற்றுக்கொடுக்க விருப்பங்கொண்டு, முன்னே அந்த வில்வித்தையில் சமர்த்தர்களாகிய சிறந்தவிருத்தர்களை வரவழைத்துக்கூட்டி, வில்வித்தையைக் கற்பிக்கும்படி நல்ல நாளை நியமித்தசெய்திகளை எல்லாம் தம்மைச்சார்ந்துள்ள வேடர்களுக்குச் சொல்லியனுப்பினான்.—எ-று. (உ௮)

வேடர்தங் கோமா னுகன் வென்றிவே ளருளாற் பெற்ற
சேடரின் மிக்க செய்கைத் திண்ணன்விற் பிடிக்கின் றானென்
றூடியற் றுடியுஞ் சாற்றி யறைந்தபே ரோசை கேட்டு
மாடுயர் மலைக ளாளு மறக்குலத் தலைவ ரெல்லாம்.

(இ-ள்.) வேடர்களுக்குத் தலைவனாகிய நாகனென்பவன் வெற்றிபொருந்திய முருகக்கடவுளின் திருவருளினால் பெற்றெடுத்த அறிவுடையோர்களைப் பார்க்கினும் சிறந்த அறிவின் செய்கையையுடைய திண்ணனென்னும் புத்திரன்

இன்னதினத்தில் வில்லைப்பிடிக்கின்றானென்று அசையுமியல்பினையுடைய உடுக்கைவாத்தியத்தையும் மற்ற வாத்தியங்களையும் முழக்கித் தெரிவித்த பேரோசையைக்கேட்டுப் பக்கங்களிலுள்ள உயர்ந்தமலைகளை ஆளுகின்ற வேடர்குலத்திற்குத் தலைவர்களெல்லாரும்.—எ-று. (உ௯)

மலைபடு மணியும் பொன்னுந் தரளமும் வரியின் றோலுங்
கொலைபுரி களிற்றின் கோடும் பீலியின் குவையுந் தேனுந்
தொலைவில்பன் னறவு மூனும் பலங்களுங் கிழங்குந் துன்றச்
சிலையுடை வேடர் கொண்டு திசைதொறு நெருங்க வந்தார்.

(இ-ள்.) மலையில் உண்டாகிய பலவகை இரத்தினங்களும், பொன்னும், முத்துக்களும், புலித்தோலும், கொலைசெய்கின்ற யானைகளின் கொம்புகளும், மயிற்பீலிக்கூட்டமும், மலைத்தேனும், கெடுதலில்லாத பலவகையான கள்ளும், மாமிசங்களும், பழங்களும், கிழங்குகளும் ஒன்றாகச்சேர வில்லையுடைய வேடர்கள் எடுத்துக்கொண்டு திக்குகள்தோறும் நெருங்கும்படிவந்து சேர்ந்தார்கள். ()

மல்கிய வளங்க ளெல்லா நிறைந்திட மாறில் சீறூர்
எல்லையி லடங்கா வண்ண மீண்டினர் கொணர்ந்தா ரெங்கும்
பல்பெருங் கிளைஞர் போற்றப் பராய்க்கடன் பலவு நேர்ந்து
வில்விழா வெடுக்க வென்று விளம்பினன் வேடர் கோமான்.

(இ-ள்.) இவ்விதமாகநெருங்கிய வளமாகிய பொருள்களெல்லாம் நிறையும்படி மாறுபாடில்லாத அந்தச்சிற்றூரின் எல்லையினளவும் அடங்காதிருக்கும் விதமாக எவ்விடத்தும் நெருங்கிக்கொண்டுவந்தார்கள்; அப்பொழுது வேடர்களுக்கு அரசனாகிய நாகனானவன் பெருமைபொருந்திய பலஉறவினர்களும் துதிக்கும்படி வனதெய்வங்களை வழிபட்டுப் பலிமுதலாகிய பலகடமைகளைச்செய்து இனி வில்வித்தையைக் கற்பிப்பதற்காக ஒரு விழாவை நடத்தக்கடவீர்களென்று அவ்வேடர்களுக்குச் சொன்னான்.—எ-று. (௩௧)

பான்மையிற் சமைத்துக் கொண்டு படைக்கலம் வினைஞ ரேந்தத்
தேனலர் கொன்றை யார்தந் திருச்சிலைச் செம்பொன் மேரு
வானது கடலி னஞ்ச மாக்கிட வவர்க்கே பின்னுங்
கானவூ னமுத மாக்குஞ் சிலையினைக் காப்புச் சேர்த்தார்.

(இ-ள்.) தகுந்தமுறைமைப்படியே வில்விழாவிற்குவேண்டிய பொருள்களையெல்லாம் ஏற்படுத்திக்கொண்டு பலவகை ஆயுதங்களை வீரர்கள் அருகில் ஏந்திநிற்க, தேன்பொருந்திய கொன்றைமலர்மாலையைத்தரித்த சிவபெருமானது சிறந்தவில்லென்று சொல்லப்பட்ட சிவந்த பொன்மயமாகிய மேருமலையானது முன்பு அக்கடவுளுக்குத் திருப்பாற்கடலில் தோன்றிய விஷத்தை அமுதுசெய்யும்படி கொடுத்த காரணத்தினால் (அத்தீங்கு தீரும்படி) பின்னும் அது அவருக்கே காட்டிலிருக்கின்ற மாமிசத்தை அமுதமாகச் செய்விக்கக்கருதி உருக்கொண்டு வந்ததுபோலுமிருக்கின்ற ஓர்வில்லுக்குக் காப்புக்கட்டினார்கள்.—எ-று.

தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்தபோது மந்தரகிரிமத்தாக இருக்க, ஈண்டு மேருவைமத்தாகக்கூறியது அம்மேருவின் ஓர்பகுதியாக இருக்குந்தன்மை பற்றி, எனவறிக. (கூஉ)

சிலையினைக் காப்புக் கட்டுந் திண்புலி நரம்பிற் செய்த
நலமிகு காப்பு நன்னா ணுகனார் பயந்த நாகக்
குலம்விளங் கரிய குன்றின் கோலமுன் கையிற் சேர்த்தி
மலையுறை மாக்க ளெல்லாம் வாழ்த்தெடுத் தியம்பி னார்கள்.

(இ-ள்.) வில்வினைக்காப்புக்கட்டிய வலிபொருந்திய புலியின் நரம்பினால் செய்த மிகுந்த நன்மையைத்தருகின்ற அழகியகாப்புநாணை நாகனென்னும் வேடராஜனால் பெறப்பட்டவரும், தேவர்களுக்குந் தன்னியல்பினை அறிதற்கரிய குணக்குன்றுமாகிய திண்ணனாரது அழகுபொருந்திய முன்னங்கையில் கட்டி மலையில் வசிக்கின்ற வேடர்களெல்லாம் மங்கலவாழ்த்துக் கூறினார்கள்.—எ-று. (கூகூ)

ஐவன வடிசில் வெவ்வே றமைந்தன புற்பாற் சொன்றி
மொய்வரைத் தினைமென் சோறு மூங்கில்வன் பதங்கண் மற்றுங்
கைவினை யெயின ராக்கிக் கலந்தவூன் கிழங்குங் கூடச்
செய்வரை யுயர்ப்ப வெங்குங் கலந்தனர் சினவில் வேடர்.

(இ-ள்.) மலைநெல்லின் சோறும், வெவ்வேறாகப் பால்பெய்துசமைத்த புல்லரிசிச்சோறும், நெருங்கிய மலைச்சாரலில்விளைந்த மிருதுவாகிய தினையரிசிச்சோறும், மூங்கிலரிசியால் சமைத்த வலியசோறும், இன்னும் வேறுவகையான அரிசிச்சோறும் சமையல்தொழிலில் வல்லவர்களாகிய வேடர்கள் சமைத்து, மாமிசத்தோடுகலந்த கிழங்குகளும் சேர்ந்திருக்கும்படி செய்குன்றுபோலக் குவிக்க எவ்விடத்திலும் கோபம்பொருந்திய வில்லையுடைய வேடர்கள் ஒருமித்தார்கள். (கூச)

செந்தினை யிடியுந் தேனு மருந்துவார் தேனிற் றோய்த்து
வெந்தவூ னயில்வார் வேரி விளங்கனிக் கவளங் கொள்வார்
நந்திய வீய லுண்டி நசையொடு மிசைவார் வெவ்வே
றந்தமி லுணவின் மேலோ ராயினா ரளவி லார்கள்.

(இ-ள்.) சிலர் சிவந்த தினைமாவையும் தேனையும் புசிப்பார்கள்; சிலர் தேனிலேதோய்த்து வெந்தமாமிசத்தை உண்பார்கள்; சிலர் தேன்விட்டுப் பிசைந்திருக்கின்ற விளாம்பழங்களின் கவளத்தை உட்கொள்வார்கள்; சிலர் மிகுந்த ஈசெல்லினால் செய்யப்பட்ட உணவை ஆசையோடு உண்பார்கள்; இவ்வாறு வெவ்வேறாகிய அநேகவிதஉணவினால் எண்ணிறந்தவர்கள் உண்டு மகிழ்ச்சியினால் மேம்பட்டவர்களானார்கள்.—எ-று. (கூரு)

அயல்வரைப் புறத்தின் வந்தா ரருங்குடி யிருப்பி னுள்ளார்
இயல்வகை யுணவி லார்ந்த வெயிற்றிய ரெயின ரெல்லாம்
உயர்கதி ருச்சி நீங்க வொழிவில்பன் னறவு மாந்தி
மயனுறு களிப்பி னீடி வரிசிலை விழவு கொள்வார்.

(இ-ள்.) அயற்புலத்திலுள்ள மலையிடங்களிலிருந்து வந்தவர்களும், அருமையாகிய அச்சிற்றூரில் குடியிருப்பாக உள்ளவர்களுமாகிய வேடிச்சிகளும் வேடர்களும் தகுந்தமுறையாக உணவையுண்டு, உயர்வுபொருந்திய சூரியன் உச்சியினின்றும் சாய,கெடுதலில்லாத பலவகையாகிய மதுவைக்குடித்து மயக்கம்பொருந்திய களிப்பினால் அதிகரித்துக் கட்டமைந்த வளிந்த வில்விழாவைச் செய்கின்றவர்களானார்கள்.—எ-று. (௩௬)

பாசிலைப் படலை சுற்றிப் பன்மலர்த் தொடையல் சூடிக்
காசுடை வடத்தோல் கட்டிக் கவடிமெய்க் கலன்கள் பூண்டார்
மாசில்சீர் வெட்சி முன்னா வருந்துறைக் கண்ணி சூடி
ஆசிலா சிரிய னேந்து மடற்சிலை மருங்கு சூழ்ந்தார்.

(இ-ள்.) பசுமைபொருந்திய தழைகளால் கட்டப்பட்டமாலைகளைச்சுற்றிப் பலவகையாகிய மலர்களால் தொடுக்கப்பட்ட மாலைகளைத்தரித்து, இரத்தினங்கள் கோத்திருக்கின்ற தோல்வடத்தை இடையில்கட்டி, உடம்பில் பலகறைகளாகிய ஆபரணங்களைத்தரித்த வேடர்கள் குற்றமற்ற வெட்சிமலர்முதலாகப் புறப்பொருளிற் சொல்லப்பட்ட மாலைகளைத்தரித்து, பழுதில்லாத வில்லாசிரியனால் ஏந்தப்பட்ட வலிய வில்லின்சமீபத்தில் சூழ்ந்தார்கள்.—எ-று. (௩௭)

தொண்டக முரசுங் கொம்புந் துடிகளுந் துளைகொள் வேயும்
எண்டிசை நிறைந்து விம்ம வெழுந்தபே ரொலியி னோடுந்
திண்டிறன் மறவ ரார்ப்புச் சேண்விசும் பிடித்துச் செல்லக்
கொண்டசீர் விழவு பொங்கக் குறிச்சியை வலங்கொண் டார்கள்.

(இ-ள்.) தொண்டக மென்னுங் குறிஞ்சிப்பறையும், முரசவாத்தியமும், ஊதுகொம்பும், உடுக்கைகளும், துளைகள்பொருந்திய புள்ளாங்குழல்களும் ஆகிய வாத்தியங்கள் எட்டுத்திக்குகளிலும் நிறைந்து அதிகரிக்க எழுந்த பேரோசைகளோடு மிகுந்த வல்லமைபொருந்திய வேடர்களின் ஆரவாரமும் நெடுந்தூரத்திலிருக்கின்ற விண்ணுலகத்தையுந் தாண்டி அப்பாற்செல்ல, தாங்கள் செய்யக்கருதிய சிறந்த வில்விழாவானது செவ்வையாக நடக்க அச்சிற்றூரைப் பிரதட்சிணமாக வந்தார்கள்.—எ-று. (௩௮)

குன்றவர் வரிகொண் டாடக் கொடிச்சியர் துணங்கை யாடத்
துன்றிய மகிழ்ச்சி யோடுஞ் சூரர மகளி ராட
வென்றிவில் விழவி னோடும் விருப்புடை யேழா நாளாம்
அன்றிரு மடங்கு செய்கை யழகுற வமைத்த பின்னர்.

(இ-ள்.) மலையிலுள்ள வேடர்கள் குறிஞ்சிப் பண்ணைப் பாடிக்கொண்டு ஆட, வேடப்பெண்கள் துணங்கைக்கூத்தை ஆட, அம்மலையிலுள்ள ஒருவகையான தெய்வப்பெண்கள் பொருந்திய மகிழ்ச்சியோடு கூத்தாட,வெற்றிபொருந்திய வில்விழாவோடும் விருப்பத்தைத்தருகின்ற ஏழாநாளாயினன்று மற்றையநாள்களைப் பார்க்கிலும் இரண்டுபங்கு அதிகமாகிய சிறப்புக்களை அழகாகச் செய்த பின்பு.—எ-று.

துணங்கை என்பது இருகையு முடக்கிப் பழுப்புடை யொற்றியாடல். இதனை "பழுப்புடை யிருகை முடக்கியடிக்கத் - துடக்கியநடைய து துணங்கை யாகும்" என்னுஞ் சூத்திரத்தா னுணர்க.

"குன்றவர்களி கொண்டாட" என்றும் பாடம். (௩௯)

வெங்கதிர் விசும்பி னுச்சி மேவிய பொழுதி லெங்கு
மங்கல வாழ்த்து மல்க மருங்குபல் லியங்க ளார்ப்பத்
தங்கடொன் மரபின் விஞ்சைத் தனுத்தொழில் வலவர் தம்பாற்
பொங்கொளிக் கரும்போ ரேற்றைப் பொருசிலை பிடிப்பித் தார்கள்.

(இ-ள்.) வெவ்விய கிரணங்களையுடைய சூரியனானவன் ஆகாயத்தின் உச்சியை யடைந்தபொழுதில் மங்கலகரமாகிய வாழ்த்தின் ஒலியானது எங்கும் நிரம்பவும், அருகில் பலவகைவாத்தியங்கள் முழங்கவும் தங்களுடையபழமைபொருந்திய மரபினுக்கு உரிய வித்தையாகிய தனுர்வேதத்தைக்கற்பிக்க வல்லவர்களிடத்தில் மிகுந்த ஒளிவீசுகின்ற கருநிறத்தையுடைய போர்செய்யும் ஆண்சிங்கம் போன்ற திண்ணனைக் கையில் வில்லினைப் பிடிக்கும்படிசெய்வித்தார்கள் வேடர்கள்.—எ-று. (௪0)

பொற்றட வரையின் பாங்கர்ப் புரிவுறு கடன்முன் செய்த
விற்றொழிற் களத்தி னண்ணி விதிமுறை வணங்கி மேவும்
அற்றைநா டொடங்கி நாளு மடற்சிலை யாண்மை முற்றக்
கற்றன னென்னை யாளுங் கானவர்க் கரிய சிங்கம்.

(இ-ள்.) அழகுபொருந்திய விசாலமாகிய அம்மலைகளின் பக்கத்தில் செய்யத்தகுந்த பூசைகளை முன்னேசெய்துமுடித்த வில்வித்தை கற்கும் இடத்திற்குப் போய் வில்லாசிரியனை சாஸ்திரவிதிப்படி வணங்கி அவ்வித்தையைக் கற்கத்தொடங்கிய அன்றுமுதல் நாள்தோறும் வலிய விற்பயிற்சியின்வல்லமையை நிரம்பக் கற்றுக்கொண்டார் என்னையாட்கொண்டருளியவரும், வேடர்குலத்தில் திருவவதாரஞ்செய்த அரிய சிங்கம்போன்றவருமாகிய கண்ணப்பநாயனர்.—எ-று. (௪௧)

வண்ணவெஞ் சிலையு மற்றப் படைகளு மலரக் கற்றுக்
கண்ணகன் சாயல் பொங்கக் கலைவளர் திங்க ளேபோல்
எண்ணிரண் டாண்டின் செவ்வி யெய்தினு ரெல்லை யில்லாப்
புண்ணியந் தோன்றி மேன்மேல் வளர்வதன் பொலிவு போல்வார்.

(இ-ள்.) அழகுபொருந்திய கொடியவில்வித்தையையும், மற்றைய வாள்-வேல்-ஈட்டிமுதலாகிய ஆயுதங்களைப்பிரயோகிக்கும் பலவகை வித்தைகளையும் பூரணமாகக் கற்றுக்கொண்டு கண்களுக்கடங்காத திருமேனியின் காந்தியானது அதிகப்பட நாளுக்குநாள் கலைகள் வளருகின்ற சுக்கிலபக்ஷத்துச் சந்திரனைப்போலப் பதினாறுவயது நிரம்பியபருவத்தை யடைந்தார் அளவில்லாத புண்ணியங்கள் (இந்நிலவுலகத்தில்) ஒருருவாகத்தோன்றி மேலுமேலும் விருத்தியாகின்ற பொலிவை ஒத்தவராகிய திண்ணனார்.—எ-று. (௪௨)

வேறு.

இவ்வண்ணந் திண்ணனார் நிரம்பு நாளி லிருங்குறவர் பெருங்குறிச் சிக் கிறைவ னாய, மைவ்வண்ண வரைநெடுந்தோ ணாகன் றானு மலையெங் கும் வனமெங்கும் வரம்பில் காலங், கைவண்ணச் சிலைவேட்டை யாடித் தெவ்வர் கணநிரைகள் பலகவர்ந்து கானங் காத்து, மெய்வண்ணந் தளர்மூப்பின் பருவ மெய்தி வில்லுழவின் பெருமுயற்சி மெலிவா னானான்.

(இ-ள்.) இந்தவிதமாகத் திண்ணனார் வில்வித்தையைக் கற்றுப் பதினாறு வயதும் நிரம்பியநாளில் பெருமைபொருந்திய வேடர்கள் வாழுகின்ற பெரிய குறிச்சிகளுக்குத் தலைவனாகிய மைநாகம்போன்ற நெடியதோள்களையுடைய நாகனென்பவனும் மலைகளெங்கும் வனங்களெங்கும் நெடுங்காலம்வரையிலும் கையிற் பிடித்த அழகிய வில்லினால் வேட்டையாடி, பகைவர்களினது பல பசுக்கூட்டங் களைக்கவர்ந்து, காட்டினைக் காவல்செய்து உடம்பின் அழகானது தளர்தற்குக் காரணமாகிய முதுமைப்பருவத்தையடைந்து வில்வித்தையினது பெரியமுயற்சியில் இளைத்தவனானான்.—எ-று. (சுங)

அங்கண்மலைத் தடஞ்சாரற் புனங்க ளெங்கு மடலேனம் புலிகரடி கடமை யாமா, வெங்கண்மரை கலையொடுமான் முதலா யுள்ள மிருகங்க ண் மிகநெருங்கி மீதூர் காலைத், திங்கண்முறை வேட்டைவினை தாழ்த் ததென்று சிலைவேடர் தாமெல்லாந் திரண்டு சென்று, தங்கள்குல முதற் றலைவ னாகி யுள்ள தண்டெரிய னாகன்பாற் சார்ந்து சொன்னார்.

(இ-ள்.) அழகிய இடத்தையுடைய மலைகளின் விசாலமாகிய பக்கங்களி லிருக்கும் புனங்களிலெல்லாம் வலிபொருந்திய பன்றி - புலி - கரடி - கடமை - காட்டுப்பசு - கொடிய கோபக்கண்களையுடைய மரை - கலைமான் - பெண்மான் முதலாகிய மிருகங்கள் மிகவும்நெருங்கிப் பலன்களையழிக்க அதிகரித்திருக்கும் போது, மாதந்தோறும் முறையாகச்செய்துவருகின்ற வேட்டையாடுந் தொழிலா னது தவறியதென்று வில்லையுடைய வேடர்களெல்லாம் ஒன்றாகத்திரண்டுபோய்த் தங்கள்குலத்துக்கு முதற்றலைவனாக இருக்கின்ற குளிர்ந்தமாலையைத்தரித்த நாகனிடத்தில் அடைந்து சொன்னார்கள்.—எ-று. (சுச)

சொன்னவுரை கேட்டலுமே நாகன் றானுஞ் சூழ்ந்துவரு தன்மூப் பின் றொடர்வு நோக்கி,முன்னவர்கட் குரைசெய்வான் மூப்பி னாலே முன்போல வேட்டையினின் முயல கில்லேன்,என்மகனை யுங்களுக்கு நாத னாக வெல்லீருங் கைக்கொண்மி னென்ற போதின், அன்னவரு மிரங்கிப் பின் மகிழ்ந்து தங்கோ னடிவணங்கி யிம்மாற்ற மறைகின் றார்கள்.

(இ-ள்.) அவ்வேடர்கள்சொல்லிய வார்த்தைகளைக் கேட்டவுடனே நாகனென்பவனும் தன்னைத் தொடர்ந்துவருகின்ற மூப்புப்பருவத்தின் சம்பந்தத்தை நினைந்து தன்முன்னே நிற்கின்ற அவ்வேடர்களுக்குச் சொல்லுகின்றான், நான் எனது வயோதிகத்தினாலே முன்போல் வேட்டையாட வல்லமையில்லாதவனா யிருக்கின்றேன் ; ஆதலால் எனது புத்திரனாகிய திண்ணனை உங்களுக்குத் தலைவ

ளுக நீங்களெல்லாரும் அங்கீகரித்துக்கொள்ளுங்களென்று சொன்னபொழுதில் அவர்களும் நாகனது மூப்புப்பருவத்தைக்குறித்து இரக்கமுற்று, பின்பு திண்ணனை நமக்கு அரசனாகக்கொள்ளுதல் நல்லதென்று சந்தோஷத்தை யடைந்து தங்கள் தலைவனாகிய நாகனது பாதத்தைவணங்கி இவ்வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினார்கள்.—எ-று. (சரு)

இத்தனைகா லமுநினது சிலைக்கீழ்த் தங்கி யினிதுண்டு தீங்கின்றி யிருந்தோ மின்னும், அத்தவுன தருள்வழியே நிற்ப தல்லா லடுத்தநெறி வேறுளதோ வதுவே யன்றி, மெய்த்தவிறற் றிண்ணனையுன் மரபிற் சால மேம்படவே பெற்றளித்தாய் விளங்கு மேன்மை, வைத்தசிலை மைந்தனையிண் டழைத்து நுங்கள் வரையாட்சி யருளென்றார் மகிழ்ந்து வேடர்.

(இ-ள்) இவ்வளவுகாலமும் உமது வில்லாண்மையின் கீழேஅடங்கி இனிமையாக உண்டு யாதொரு தீங்குமில்லாமல் சவுக்கியத்தை யடைந்திருந்தோம்; இன்னும் எமது தலைவரோ! உமது கட்டளையின்வழியே நாங்கள் நிற்பதல்லாமல் எங்களுக்கு இசைந்தமார்க்கம் இனி வேறே இருக்கின்றதோ? இல்லை; அதுவேயல்லாமல் வல்லமைபொருந்திய தேகத்தினையுடைய திண்ணனை உமதுவமிசத்தில் மிகுந்த மேன்மையுண்டாகவே புத்திரனாகப் பெற்றுக்கொடுத்தீர்; ஆதலால், விளங்குகின்ற மேன்மைபொருந்திய வில்லையுடைய உமது புத்திரனை இன்றைக்கு இங்கேவரவழைத்து உங்களுக்கு உரித்தாகிய மலைகளின் அரசாட்சியைக்கொடுப்பீராகவென்று வேடர்கள் சந்தோஷித்துச் சொன்னார்கள்.—எ-று. (சகூ)

சிலைமறவ ருரைசெய்ய நாகன் றானுந் திண்ணனைமுன் கொண்டுவரச் செப்பி விட்டு, மலைமருவு நெடுங்கானிற் கன்னி வேட்டை மகன்போகக் காடுபலி மகிழ வூட்டத், தலைமரபின் வழிவந்த தேவராட்டி தனையழைமி னெனவங்குச் சார்ந்தோர் சென்று, நிலைமையவ னுரைத்துரைப்ப நரைமூ தாட்டி நெடிதுவந்து விருப்பினொடுங் கடிது வந்தாள்.

(இ-ள்.) வில்லையுடைய வேடர்கள் இவ்விதமாகச்சொல்ல, நாகனென்பவனும் திண்ணனைத் தனக்குமுன்னே அழைத்துவரும்படியாகச் சொல்லியனுப்பிவிட்டு மலைகள்பொருந்திய நெடியகாட்டில் கன்னிவேட்டையைக்குறித்துத் தனது புத்திரன்போகும்படி,காட்டிலுள்ளதெய்வங்களுக்குச் சந்தோஷமுண்டாகப் பலியிடுவதற்காகத் தலைமைபொருந்திய தமது வமிசத்தின்வழியாகவந்த தேவராட்டியை இங்கு அழையுங்களென்ன, அங்கிருந்த வேடர்கள்போய் நாகன்சொல்லியவார்த்தையை அவளுக்குச்சொல்ல நரைத்த முதுமைப் பருவத்தையுடைய அத்தேவராட்டியானவள் மிகுந்த மகிழ்ச்சியடைந்து களிப்போடும் சீக்கிரத்தில் வந்தாள்.—எ-று.

கன்னிவேட்டை என்பது ஒருவன் நல்லநாள்குறித்து நூதனமாகச் செய்யும் முதல்வேட்டை, எனவறிக. (சஎ)

கானில்வரித் தளிர்துதைந்த கண்ணி சூடிக் கலைமருப்பி னரிந்தகுழை காதிற் பெய்து, மானின்வயிற் றரிதாரத் திலக மிட்டு மயிற்கழுத்து

மனவுமணி வடமும் பூண்டு,தாளிழிந்து திரங்கிமுலை சரிந்துதாழத் தழை ப்பீலி மரவுரிமேற் சார வெய்திப், பூ ... க்கு தோளாமலி சேடைநல கிப் போர்வேடர் கோமானைப் போற்றி நின்றாள்.

(இ-ள்.) காட்டிலுள்ள உரியினையுடைய தளிர்கள்நெருங்கிய மாலையைத் தரித்து, மான்கொம்பினை அரிந்து வட்டமாகச்செய்த குண்டலத்தைக் காதில்தரி த்து,மானின்வயிற்றில் தோன்றிய அரிதாரத்தினால் நெற்றியில்திலகமிட்டு, மயிற்க ழுத்துக்களைத் துண்டாகநறுக்கி இடையிடையில்கோத்த சங்குமணிவடத்தைக் கழுத்தில்பூண்டுகொண்டு, ஸ்தனங்கள் தம்முடைய நிலையில்நின்று இறங்கித் திர ங்கிச் சரிந்துதொங்க இடையிற்கட்டிய மரவுரியின்மேல் சந்தனத்தழைகளும்மயி ற்பீலிகளும் நிறைந்திருக்கும்படி அங்குவந்து மலர்கள் நெருங்கியிருக்கின்ற மலை நெல்லாலாகிய சேடை அரிசியை மங்களமுண்டாகும்படி வாழ்த்திக்கொடுத்துப் போர்செய்கின்ற வேடர்களுக்கு இறைவனாகிய நாகனென்பவனைத் துதித்து நின் றாள்.—எ-று.

சேடையாவது ஒருவனை வாழ்த்தும்பொழுது அதனைக் குறிப்பிக்கும்படி மலர்கள் மஞ்சள் இவைகளோடு கலந்துஆசீர்வதித்துக்கொடுக்கும் அரிசி. (சஅ)

நின்றமுது குறக்கோலப் படிமத் தாளை நேர்நோக்கி யன்னைநீ நிரப் புநீங்கி,நன்றினிதி னிருந்தனையோ வென்று கூறு நாகனெதிர் நலம்பெருக வாழ்த்தி நல்ல, மென்றசைபு மீயலொடு நறவும் வெற்பில் விளைவளனும் பிறவளனும் வேண்டிற் றெல்லாம், அன்றுநீ வைத்தபடி பெற்று வாழ்வே னழைத்தபணி யென்னென்று ளணங்கு சார்ந்தாள்.

(இ-ள்.) தனக்குமுன்னே வந்துநின்ற படிமத்தாளாகிய வேடங்கொண்ட முதிர்ந்தவயதினையுடைய குறத்தியை நேராகப்பார்த்து தாயே! நீ குறைவில்லா மல் சுகமாக வாழ்ந்திருக்கின்றனையோவென்று சொல்லுகின்ற நாகனுக்கு எதிரே அவனுக்கு மங்களமுண்டாகும்படி ஆசீர்வதித்து, மிருதுவாகிய நல்ல மாமிசமும், ஈசெல்பொரியும், தேனும், மலையில் விளைகின்ற கிழங்கு-காய் - கனிமுதலிய பொ ருள்களும், மற்றைப்பொருள்களுமாகிய விரும்பியவைகளையெல்லாம் முன்னாளில் நீ எனக்குக்கொடுக்கும்படி நியமித்தபடியே பெற்று வாழ்ந்துகொண் டிருக்கின் றேன்; அதுநிற்க, என்னை இப்பொழுது அழைத்தகாரியம் என்னவென்று கேட் டாள் அந்தத் தேவராட்டியானவள்.—எ-று.

படிமத்தாள்=சன்னதங்கொண்டவள்; தேவராட்டி எனினும் ஆம். ()

கோட்டமிலென் குலமைந்தன் றிண்ண னெங்கள் குலத்தலைமை யான்கொடுப்பக் கொண்டு பூண்டு,பூட்டுறுவெஞ் சிலைவேடர் தம்மைக்கா க்கும் பொருப்புரிமை புகுகின்றா னவனுக் கென்றும், வேட்டைவினை யெனக்குமே லாக வாய்த்து வேறுபுலங் கவரவென்றி மேவுமாறு,காட்டி லுறை தெய்வங்கள் விரும்பி யுண்ணக் காடுபலி யூட்டென்றான் கவலையி ல்லான்.

(இ-ள்.) ஓர் குற்றமுமில்லாத எனது குலத்திற்பிறந்த புத்திரனாகிய திண் ணனென்பவன் எங்கள் குலத்திற்குரிய அரசனாயிருக்குந் தலைமையை யான்கொடு

க்கப்பெற்றுக்கொண்டு அம்பைப் பூட்டுகின்ற வெவ்வியவில்லையுடைய வேடர்க ளைக்காக்கின்ற மலையாளுகையை அடைகின்றான்; ஆதலால், அவனுக்கு எப்பொழுதும் வேட்டைத் தொழிலானது என்னைப்பார்க்கிலும் அதிகமாகக் கிடைத்து, பகையரசர்களின் சிற்றூரைக்கொள்ளையிடத்தக்க வெற்றி உண்டாகும்படி வன தெய்வங்கள் மனமகிழ்ந்து உண்ணும்பொருட்டுக்காட்டில் பலியிடு என்று சொன்னான் யாதொரு வருத்தமுமில்லாத நாகனென்பவன்.—எ-று. (ருo)

மற்றவன்றன் மொழிகேட்ட வரைச்சூ ராட்டி மனமகிழ்ந்திங் கன்போடு வருகின் றேனுக்,கெற்றையினுங் குறிகண்மிக நல்ல வான விதனாலே யுன்மைந்தன் றிண்ண னானை, வெற்றிவரிச் சிலையோனின் னளவிலன்றி மேம்படுகின் றானென்று விரும்பி வாழ்த்திக், கொற்றவன தெய்வங்கண் மகிழவூட்ட வேண்டுவன குறைவின்றிக் கொண்டு போனாள்.

(இ-ள்.) அந்த நாகன்சொல்லிய வார்த்தையைக்கேட்ட மலையில் வாழுகின்ற தேவராட்டியானவள் மனதில் சந்தோஷத்தையடைந்து, இவ்விடத்தில் மிகுந்த அன்போடும் வருகின்ற எனக்கு முன்பு உன்னிடத்திற்குவந்த எந்நாட்களிலும் கண்ட குறிகளைப்பார்க்கிலும் இன்றுகண்ட குறிகள் மிகவும் நன்றாக இருந்தன; இந்தக்காரணத்தினாலே வெற்றிபொருந்திய நீண்டவில்லைப்பிடித்த உனது புத்திரனாகிய திண்ணனென்பவன் உன்னளவிலல்லாமல் மேன்மையடையப்போகின்றானென்று மனவிருப்பத்தோடு வாழ்த்துதல்செய்து, ஜயம்பொருந்திய அவ்வனதேவதைகள் சந்தோஷிக்கும்படி பலியூட்டுதற்குவேண்டியபொருள்களையெல்லாம் குறைவில்லாமல் வாங்கிக்கொண்டுபோனாள்.—எ-று. (ருக)

தெய்வவிகழ் குறமுதியாள் சென்றபின்பு திண்ணனார் சிலைத்தாதையழைப்பச் சீர்கொண், மைவிரவு நறுங்குஞ்சி வாசக்கண்ணி மணிநீல மலையொன்று வந்ததென்னக், கைவிரவு சிலைவேடர் போற்றவந்து காதல்புரி தாதைகழல் வணங்கும்போதிற், செவ்வரைபோற் புயமிரண்டுஞ் செறியப்புல்லிச் செழும்புலித்தோ லிருக்கையின்முன் சேரவைத்தான்.

(இ-ள்.) தெய்வசன்னதங்கொண்ட முதிர்ந்தவயதினையுடைய குறத்தியானவள் போனபிறகு வில்லையுடைய தன்தந்தையாகிய நாகன்அழைக்கத் திண்ணனாரானவர் சிறந்த கருநிறம்பொருந்திய நல்லகுடுமியில் மணம்பொருந்திய மாலையைத்தரித்த அழகிய ஒரு நீலமலையானது வந்ததுபோலக் கையில் வில்லைப்பிடித்த வேடர்கள் தம்மைச் சூழும்படியாகவந்து தம்மேல் அன்பையுடைய தந்தையாகிய நாகன் பாதங்களை வணங்கினபொழுது, அவன் அழகிய மலைபோன்ற இரண்டு புஜங்களும் சேரும்படி அணைத்துக்கொண்டு செழிப்பாகிய புலித்தோல் ஆசனத்தின்மேல் தன்முன்னேயிருக்கும்படி உட்காரவைத்தான்.—எ-று. (ருஉ)

முன்னிருந்த மைந்தன்முக நோக்கிநாகன் மூப்பெனைவந் தடைதலினான் முன்பு போல, என்னுடைய முயற்சியினால் வேட்டை யாட வினியெனக்குக் கருத்தில்லை யெனக்கு மேலாய், மன்னுசிலை மலையர்குலக் காவல் பூண்டு மாறெறிந்து மாவேட்டை யாடி யென்றும், உன்னுடைய

மரபுரிமை தாங்கு வாயென் றுடைதோலுஞ் சுரிகையுங்கைக் கொடுத் தானன்றே.

(இ-ள்.) நாகனென்பவன் தனக்குமுன்னே ஆசனத்திலிருந்த புத்திரரா கிய திண்ணனாரது முகத்தைப்பார்த்து மைந்தனே! எனக்கு மூப்புப்பருவமானது வந்தபடியினால் முன்போல என்னுடைய முயற்சியைக்கொண்டு காட்டில் மிரு கவேட்டையாடுவதற்கு இனிமேல் எனக்கு மனமில்லை; ஆதலால் என்னைப்பார்க் கிலும் சிறந்தவர்களாக நிலைபெற்ற வில்லைப்பிடித்த வேடர்குலத்தை ஆளும்படி ஒப்புக்கொண்டு பகைவர்களை நாசஞ்செய்து மிருகவேட்டைகளையாடி, எப்பொழு தும் உன்னுடைய சாதியுரிமையை நீ தாங்கிக்கொள்ளவேண்டுமென்று தான் உடு த்தற்குரிய தோலையும் உடைவாளையும் அவர் கையிற்கொடுத்தான்.—எ-று. (ருங)

தந்தைநிலை யுட்கொண்டு தளர்வு கொண்டு தங்கள்குலத் தலைமை க்குச் சார்வு தோன்ற, வந்தகுறைப் பாடதனை நிரப்பு மாறு மனங்கொ ண்ட குறிப்பினான் மறுமை கொண்டு, முந்தையவன் கழல்வணங்கி மு றைமை தந்த முதற்சுரிகை யுடைதோலும் வாங்கிக் கொண்டு, சிந்தைப ரங் கொளநின்ற திண்ண னார்க்குத் திருத்தாதை முகமலர்ந்து செப்பு கின்றான்.

(இ-ள்.) தமது தகப்பன்சொல்லியவார்த்தையை மனதில் நினைத்து (அவ னுக்குநேர்ந்த முதுமைப்பருவத்தைக்குறித்து) வருத்தமடைந்து தங்கள் குலத்தி ற்கு முறைமையாகவருகின்ற அரசுரிமைக்கு ஒரு துணையுண்டாகவும், (வேடர்கள் குடிக்கு) இப்பொழுது நேரிட்ட குறையை ஒழித்துவிடவும் மனதிற்கொண்ட எண்ணத்தினால் அவன்வார்த்தையை மறுக்காமல் ஒப்புக்கொண்டு முதலில் அந்த நாகனுடையபாதத்தைவணங்கி, கிரமமாகக்கொடுத்தமுதன்மைபொருந்தியஉடை வாளையும், தோலுடையையும் கையில்வாங்கிக்கொண்டு, மனதில் அரசாட்சி என் னும் ஒரு பெரும்பாரங் கொள்ளும்படி நிற்கின்ற திண்ணனாருக்குத் தந்தையாகிய நாகன் முகமலர்ச்சியோடு சொல்லத்தொடங்கினான்.—எ-று. (ருச)

நம்முடைய குலமறவர் சுற்றத் தாரை நான்கொண்டு பரித்ததன் மே னலமே செய்து, தெம்முனையி லயற்புலங்கள் கவர்ந்து கொண்ட தி ண்சிலையின் வளமொழியாச் சிறப்பின் வாழ்வாய், வெம்முனையின் வேட் டைகளு முனக்கு வாய்க்கும் விரைந்துநீ தாழாதே வேட்டை யாட, இம்முரண்வெஞ் சிலைவேடர் தங்க ளோடு மெழுகவென விடைகொடுத் தா னியல்பி னின்றான்.

(இ-ள்.) நம்முடைய குலத்திற்குரிய வேடர்களாகிய பந்துக்களை நான்தா ங்கிக் காப்பாற்றினதைப்பார்க்கிலும் அதிகமாகப் பாதுகாத்து, பகைவர்களது போர்முனையில் அயல்நாட்டிலிருந்து கவர்ந்துகொண்டுவந்த வலியவில்லினால்பெ ற்ற வளமானது என்றும்குறையாமல் சிறப்போடுவாழ்வாய்; கொடிய வேட்டைத் தொழிலில் வேட்டைமிருகங்களும் உனக்கு மிகுதியாகக்கிடைக்கும்; ஆதலால் நீ காலதாமசஞ்செய்யாமல் துரிதப்பட்டு வேட்டையாடுதற்கு இந்தவலிமைபொருந் திய கொடிய வில்லையுடைய வேடர்களோடு எழுந்து செல்வாயாகவென்று உத்த

ரவுசெய்தான், தன் அரசுரிமையைப் புத்திரராகிய திண்ணனாருக்குச் செய்யவேண்டுமென்னும் இயல்பினையுடைய நாகன்.—எ-று. (௫௫)

செங்கண்வயக் கோளரியே றன்ன திண்மைத் திண்ணனார் செய்தவத்தின் பெருமை பெற்ற, வெங்கண்விறற் றாதைகழல் வணங்கி நின்று விடைகொண்டு புறம்போந்து வேட ரோடு, மங்கலநீர்ச் சுனைபடிந்து மனையின் வைகி வைகிருளின் புலர்காலை வரிவிற் சாலைப், பொங்குசிலை யடல்வேட்டைக் கோலங் கொள்ளப் புனைதொழிற்கை வினைஞரோடும் பொலிந்து புக்கார்.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய வெற்றிபொருந்திய ஆண்சிங்கத்தையொத்த பராக்கிரமசாலியாகிய திண்ணனார், முன் அருமையாகச்செய்ததவத்தினால் பெருமையைப்பெற்ற கொடியகோபக்கண்களையும் வெற்றியையுமுடைய தந்தையாகிய நாகனது பாதங்களில்வணங்கி நின்று விடைபெற்றுக்கொண்டு புறத்தில் வந்து, வேடர்களோடு மங்கலகரமாகியநீரையுடைய சுனையில்முழுகித் தம்முடைய வீட்டில் தங்கியிருந்து பொருந்திய இருளையுடைய விடியற்காலத்தில் வரிந்த விற்சாலையிலே பொலிவினையுடைய வில்லினால் மிருகங்களைக்கொல்லுகின்ற வேட்டைக்குரிய கோலங்கொள்ளும்படி அலங்கரிக்கும் தொழிலில் கைதேர்ந்தவர்களோடும் விளங்கிப்புகுந்தார்.—எ-று. (௫௬)

வேறு.

நெறிகொண்ட குஞ்சிச் சுருளுஞ்சி நிமிர்ந்து பொங்க
முறிகொண்ட கண்ணிக் கிடைமொய்யொளிப் பீலி சேர்த்தி
வெறிகொண்ட முல்லைப் பிணைமீது குறிஞ்சி வெட்சி
செறிகொண்ட வண்டின் குலஞ்சீர்கொளப் பின்பு செய்து.

(இ-ள்.) வணங்கி நெறிப்படைந்திருக்கின்ற தலைமயிரினது சுருள்கள் உச்சியில்முடிக்கப்பட்டு நிமிர்ந்துவிளங்க, அதன்மேல் தளிரால்கட்டப்பட்ட கண்ணிமாலைக்குநடுவில் மிகுந்த பிரகாசத்தையுடைய மயிற்பீலியைச்சேர்த்து, அதன்கீழ் வாசனைவீசுகின்ற முல்லைமலர் மாலையின்மேல் குறிஞ்சிமலர்மாலையையும், வெட்சிமலர்மாலையையும் நெருங்கியவண்டின் கூட்டங்கள் மொய்த்துக்கொள்ளும்படி அலங்கரித்து.—எ-று. (௫௭)

முன்னெற்றியின் மீது முருந்திடை வைத்த குன்றி
தன்னிற்புரி கொண்ட மயிர்க்கயி றாரச் சாத்தி
மின்னிற்றிகழ் சங்கு விளங்குவெண் டோடு காதின்
மன்னிப்புடை நின்றன மாமதி போல வைக.

(இ-ள்.) முன்னெற்றியின்மேல் மயிலிறகின் அடிமுள்ளோடு இடையிடையேதொடுத்த குன்றிமணிகளால் புரியாகக்கொண்ட மயிரால் திரித்த கயிற்றைப் பொருந்தத்தரித்து, மின்னலைப்போல விளங்குகின்ற சங்கினால்செய்யப்பட்ட வெண்மைபொருந்திய குண்டலங்கள் இரண்டுகாதுகளிலும் நிலைபெற்று இருபக்கங்களிலும் உதித்து விளங்குகின்ற பெருமைதங்கிய இரண்டுசந்திரனைப்போலத் தோன்ற.—எ-று. (௫௮)

கண்டத்திடை வெண்கவ டிக்கதிர் மாலை சேரக்
கொண்டக்கொடு பன்மணி கோத்திடை யேனக் கோடு
துண்டப்பிறை போல்வன தூங்கிட வேங்கை வன்றோல்
தண்டைச்செயல் பொங்கிய சன்னவீ ரந்த யங்க.

(இ-ள்.) கழுத்தில் வெண்மைபொருந்திய பலகறையினலாகிய ஒளிவிளங்குகின்ற மாலைகளைத்தரித்துக்கொண்டு, சங்குமணிகளோடுபலமணிகளையுங்கோத்து நடுவில் மூன்றாம்பிறைபோன்றிருக்கின்ற பன்றியினது கொம்புகள்தொங்க, புலியினது வலியதோலினல் தடையாகச்செய்த சன்னவீரமென்னும் மாலையானது கழுத்தினிடமாகவிளங்க.—எ-று.

சன்னவீரம் என்பது முத்தினல் சிறுகயிறுபோலச் செய்து அரசர்முதலாயினோர் கழுத்திலணியும் ஒருவகை ஆபரணம்; அதனை வேடர்கள் இத்திண்ணனருக்குப் புலித்தோலால் அமைத்துத் தரித்தன்ரொன வறிக. (௭௯)

மார்பிற்சிறு தந்த மணித்திரண் மாலை தாழத்
தாரிற்பொலி தோள்வல யங்க டழைத்து மின்னச்
சேர்விற்பொலி கங்கண மீது திகழ்ந்த முன்கை
கார்விற்செறி நாணெறி கைச்செறி கட்டி கட்டி.

(இ-ள்.) மார்பினிடத்தில் யானைத்தந்தங்களால் கடைந்த சிறிய மணிகளைக் கொத்தாகக்கோத்திருக்கின்ற தாழ்வடமானது தாழ்ந்துவிளங்க, மாலையோடுவிளங்குகின்றதோளினிடத்து வாகுவலயங்கள் ஒளியைவீசிப் பிரகாசிக்க, பேரொளியையுடைய கங்கணமானது தன்மேல் விளங்கத்தரித்த முன்னங்கையில் கறுத்தவில்லினிடத்தில் கட்டியிருக்கின்ற நாணையேற்றி அம்புவிடுதற்குச் சாதனமாகிய கைக்கோதையென்னும் கவசந்தரித்து.—எ-று.

கைச்செறிகட்டியாவது - கைவிரல்களுக்குத் தோலினல் தைத்துப்போடுகின்ற உறை. (௮௦)

அரையிற்சர ணத்துரி யாடையின் மீது பௌவத்
திரையிற்படு வெள்ளல கார்த்து விளிம்பு சேர்த்தி
நிரையிற்பொலி நீளுடைத் தோல்சுரி கைப்பு றஞ்சூழ்
விரையிற்றுவர் வார்விசி போக்கி யமைத்து வீக்கி.

(இ-ள்.) இடையில் தரித்த சல்லடமாகிய புலித்தோலாடையின்மேல் சமுத்திரத்தின் அலைகளில் தோன்றிய வெண்மையாகிய பலகறைகளை ஒழுங்காக நிறைத்து ஓரத்தில்கட்டி, வரிசையாகவிளங்குகின்ற நீண்ட உடையாகிய தோலினை உடைவாளின்புறத்தைச் சூழும்படி நல்லமணம்பொருந்திய சிவந்த வார்க்கச்சைச் செலுத்தி அமையும்படி கட்டி.—எ-று. (௮௧)

வீரக்கழல் காலின் விளங்க வணிந்து பாதஞ்
சேரத்தொடு நீடு செருப்பு விருப்பு வாய்ப்பப்
பாரப்பெரு வில்வலங் கொண்டு பணிந்து திண்ணன்
சாரத்திருத் தாண்மடுத் தேற்றி வியந்து தாங்கி.

(இ-ள்.) திண்ணனார் வீரக்கழலைக் கணைக்காலில் விளங்கும்படியாகத்தரித்து, கால்களுக்கு நன்றாகப்பொருந்தத் தொடுக்கப்பட்ட நீண்ட செருப்பானது விருப்பத்தைக்கொடுக்க, மிகவும் பருத்திருக்கின்ற வில்லை வலமாகவந்து நமஸ்கரித்து, திருவடியில்பொருந்த வில்லின் குதையை வைத்து வளைத்து நாணேற்றிச் சந்தோஷித்துக் கையிற்பிடித்துக்கொண்டு.—எ-று. (சுஉ)

அங்கப்பொழு திற்புவ னத்திடர் வாங்க வோங்கித்
துங்கப்பெரு மாமழை போன்றுதுண் ணென்றொ லிப்ப
வெங்கட்சின நீடு விலங்கு விலங்கி நீங்கச்
செங்கைத்தலத் தாற்றட விச்சிறு நாணெ றிந்தார்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் உலகத்திலுள்ள துன்பமானது ஒழியும்படியாகச் சிறந்து மிகுந்த பெரியமேகம்போல விரைவாகச் சப்திக்கும்படி கொடிய கோபக்கண்களையுடைய மிருகங்கள் பயந்து நீங்கியோட அழகியகையினால் தடவிச் சிறியநாணினை இழுத்துக் குணத்தொனிசெய்தார்.—எ-று. (சுங)

பல்வேறு வாளி புதைபார்த்துடன் போத வேவி
வில்வேட ராயத் துடிமேவி யொலிக்கு முன்றிற்
சொல்வேறு வாழ்த்துத் திசைதோறுந் துதைந்து விம்ம
வல்லேறு போல்வா ரடல்வாளி தெரிந்து நின்றார்.

(இ-ள்.) பலவகையான அம்புகளை அம்புக்கட்டுகளிலிருந்து பார்த்து எடுத்துக்கொண்டு ஒருங்கே தன்னோடுவரும்படியாக வேவுகாரருக்குச்சொல்லி, வில்லைப்பிடித்த வேடர்கூட்டங்களின் உடுக்கைவாத்தியங்கள் பொருந்தி முழங்குகின்ற முற்றத்தில் சொல்லுகின்ற பல வேறுவகையான வாழ்த்து மொழிகள் திக்குகள்தோறும் நிறைந்து சப்திக்க, வலிய ஆண்சிங்கம்போன்ற திண்ணனார் கொலைசெய்தற்குரிய பாணங்களைத் தொடுத்து நின்றார்.—எ-று.

"வல்லேறுபோல்வார்" என்பதை "அல்லேறுபோல்வார்" எனப்பிரித்து, கரியரிஷபம்போன்ற திண்ணனாரென்று பொருள்கூறினும் பொருந்தும். ()

மானச்சிலை வேடர் மருங்கு நெருங்கு போதிற்
பானற் குல மாமல ரிற்படர் சோதி யார்முன்
றேனற்றசை தேறல் சருப்பொரி மற்று முள்ள
கானப்பலி நேர்கட வுட்பொறை யாட்டி வந்தாள்.

(இ-ள்.) வலிமைபொருந்திய வில்லைப்பிடித்த வேடர்கள் தமக்குச்சமீபத்தில் நெருங்கியிருக்கும்பொழுதில் கூட்டமாகிய நீலோற்பலமலரின் ஒளிபோல விளங்குகின்ற கரிய திருமேனியையுடைய திண்ணனாருக்கு முன்னே தேன் - நல்லமாமிசம் - மது - அவிசு - பொரி இன்னும் மற்றபொருள்களையும் காட்டில் தேவதைகளுக்குப் பலிஇடுகின்ற தேவராட்டியானவள் வந்தாள்.—எ-று.

சரு என்பது தேவர்களுக்கு நிவேதனஞ்செய்யச் சமைத்தவுணவு. (சுரு)

நின்றெங்கு மொய்க்குஞ் சினவேடர்க ணீங்கப் புக்குச்
சென்றங்கு வள்ள திருநெற்றியிற் சேடை சாத்தி
யுன்றந்தை தந்தைக்கு மிந்நன்மைக ளுள்ள வல்ல
நன்றும்பெரி துன்விற லம்மவன் றிதென்றாள்.

(இ-ள்.) நாற்புறத்திலும்நெருங்கிச் சூழ்ந்துகொண்டிருக்கின்ற கோபத்தையுடைய வேடர்கள் விலகும்படி உள்ளேபுகுந்து சென்று அவ்விடத்தில் திண்ணனாரது திருநெற்றியில் அட்சதையைத் தரித்து, உன்னுடைய தகப்பனுக்கும் அவனுடைய தந்தைக்கும் இப்படிப்பட்ட நல்லசகுனங்கள் உண்டாகவில்லை, ஆதலால் உனது வல்லமையால் வரும்பெருமைகள் மிகவும் சிறப்பாயிருக்கும், இச்சிறப்பானது நம்முடைய குலத்தினளவாக இராது என்று சொன்னாள்.—எ-று.

நெற்றியில் சேடைசாத்துவதற்கு முன்னர் அங்குச் சந்தனமிட்டன்றிச் சாத்துதற் கியலாமையால் சந்தனத்திலதமிட்டு அதன்மேல் சேடை அரிசியைத் தரித்தனளென வறிக. இத்தேவராட்டியானவள் திண்ணனாரது தந்தையாகிய நாகனும் அவனுடைய தந்தையும் சிறுவர்களாயிருந்து புதிதாகக் கன்னிவேட்டைக்குச்சென்ற காலத்தும் இவளே அவர்களுக்குச் சேடைசாத்தி யனுப்புவித்தனளென்பதும், அவர்களுக்கும் இப்பொழுதுகண்ட நற்சகுனங்களைப்போலக் காணவில்லையென்பதும், அக்காலந்தொட்டுள்ள நீடித்தவாணாளையுடைய மூதாட்டியென்பதுந்தோன்ற "உன்றந்தை தந்தைக்கு மிந்நன்மைகளுள்ளவல்ல" என்று கூறினார். (சுசு)

அப்பெற்றியில் வாழ்த்து மணங்குடை யாட்டி தன்னைச்
செப்பற்கரி தாய சிறப்பெதிர் செய்து போக்கிக்
கைப்பற்றிய திண்சிலைக் கார்மழை மேக மென்ன
மெய்ப்பொற்புடை வேட்டையின் மேற்கொ டெழுந்து போந்தார்.

(இ-ள்.) அத்தன்மையாக வாழ்த்துகின்ற தேவராட்டிக்குச் சொல்லுதற்கரிய பலவகைச்சிறப்புக்களை அவளுடையவாழ்த்துதலுக்குக் கைம்மாறாகச் செய்து அனுப்புவித்து, கையிற்பிடித்த வலியவில்லையுடைய கரியசூல்கொண்ட மேகம் போலத் திருமேனியின் பொலிவையுடையவராய் வேட்டையாடுதலை மேற்கொண்டு எழுந்து புறப்பட்டார் திண்ணனார்.—எ-று.

தேவராட்டி தன்னை - உருபுமயக்கம். (சுஎ)

வேறு.

தாளில்வாழ் செருப்பர்தோ றழைத்தநீடு தானையார்
வாளியோடு சாபமேவு கையர்வெய்ய வுன்கணார்
ஆளியேறு போலவேகு மண்ணலார்மு னெண்ணிலார்
மீளிவேடர் நீடுகூட்ட மிக்குமே லெழுந்ததே.

(இ-ள்.) (வேட்டையாடுந்தொழிலை மேற்கொண்டு) ஆண் சிங்கத்தைப் போலச் செல்கின்ற திண்ணனாருக்கு முன்னே கால்களில் செருப்பைத்தரித்தவர்களும், தோலினால் அகலமாக நீண்ட ஆடையைத்தரித்தவர்களும், அம்புகளோடு வில்லைப்பிடித்த கையையுடையவர்களும், கொடுமைபொருந்தியவர்களும், தாட்சணியமில்லாதவர்களுமாகிய அளவில்லாத வலியவேடர்களின் கூட்டமானது அதிகரித்துப் புறப்பட்டது.—எ-று. (சுஅ)

வன்றொடர்ப் பிணித்தபாசம் வன்கைமள்ளர் கொள்ளவே
வென்றிமங்கை வேடர்வில்லின் மீதுமேவு பாதமுன்

சென்றுநீளு மாறுபோல்வ செய்யநாவின் வாயவாய்
ஒன்றொடொன்று நேர்படாம லோடுநாய்கண் மாடெலாம்.

(இ-ள்.) வலிய சங்கிலித்தொடரோடு கட்டப்பட்டகயிற்றைப் பலம்பொருந்திய கையினையுடைய வேடர்கள் பிடித்துக்கொண்டுவர, விஜயலட்சுமியானவள் வேடர்களுடைய வில்லின்மேல் ஏறுதற்காகவைத்த திருவடிகள் முன்னே சென்று பின்பு நீளுதல்போல சிவந்த நாவினைப்பெற்ற வாயையுடையவைகளாய் ஒன்றொடொன்று ஒத்துநில்லாமல் அவ்வேடர்களின் பக்கங்களிலெல்லாம் நாய்கள் ஓடிக்கொண்டிருந்தன.—எ-று. (சுகூ)

போர்வலைச் சிலைத்தொழிற் புறத்திலே விளைப்பவச்
சார்வலைத் தொடக்கறுக்க வேகுமையர் தம்முனே
கார்வலைப் படுத்தகுன்று கானமா வளைக்கநீள்
வார்வலைத் திறஞ்சுமந்து வந்தவெற்பர் முந்தினார்.

(இ-ள்.) வேட்டைப்போர் செய்வதற்கு உதவியாயிருக்கின்ற வலைகட்டுந்தொழிலையும், வில்லினால்செய்யுந்தொழிலையும் புறத்திலேசெய்யவும், தம்மைத்தொடர்ந்துவருகின்ற ஜனனமரணங்களாகிய வலையின்பிணியை அறுக்கவும்போகின்றதிண்ணனாருக்குமுன்னே, மேகங்கள் வலையிட்டதுபோல மூடிக்கொண்டிருக்கின்ற மலைகளிலும், காடுகளிலுமுள்ள மிருகங்களைப் பிடிக்கும்பொருட்டு நீண்ட வார்களினால்செய்யப்பட்ட வலைத்தொகுதிகளைச் சுமந்துகொண்டுவந்த வேடர்கள் முற்பட்டு நடந்தார்கள்.—எ-று. (எ0)

நண்ணிமா மறைக்குலங்க ளுடவென்று நீடுமத்
தண்ணிலா வடம்புகொன்றை தங்குவேணி யார்தமைக்
கண்ணினீடு பார்வையொன்று கொண்டுகாணு மன்பர்முன்
எண்ணில்பார்வை கொண்டுவேட ரெம்மருங்கு மேகினார்.

(இ-ள்.) பெருமைபொருந்திய அநேகவேதங்கள் விரும்பி எந்நாளும் தேடிக்கொண்டிருக்க அவைகளால் காணப்படாமல் நீடித்திருக்கின்ற தன்மையினையுடைய குளிர்ந்த சந்திரனும், அடப்பமலரும், கொன்றைமலரும் பொருந்திய சடையினையுடைய திருக்காளத்தியப்பரை நீண்ட ஒருகண்ணினது பார்வையைக் கொண்டு காணப்போகின்றவராகிய திண்ணனாருக்குமுன்னே அளவற்றபார்வை மிருகங்களைக்கொண்டு வேடர்கள் எப்பக்கங்களிலும் புறப்பட்டார்கள்.—எ-று.

கோடுமுன் பொலிக்கவுங் குறுங்கணு குளிக்குல
மாடுசென் றிசைப்பவு மருங்குபம்பை கொட்டவுஞ்
சேடுகொண்ட கைவிளிச் சிறந்தவோசை செல்லவுங்
காடுகொண் டெழுந்தவேடு கைவளைந்து சென்றதே.

(இ-ள்.) ஊதுகொம்புகள் முன்னே முழங்கவும், குறுகியகண்ணையுடைய சிறுபறைஎன்னும் வாத்தியக்கூட்டங்கள் பக்கங்களில்சேர்ந்து சப்திக்கவும், அதன்பக்கத்தில் பம்பைஎன்னும் வாத்தியம் அடிக்கவும், வேடர்கள் திரண்டு கைதட்டுதலால் உண்டாகிய சிறந்தபேரோசையானது நெடுந்தூரமளவும் சென்று பரவவும் காடுபோலத்திரண்டு எழுந்த வேடர்கூட்டமானது திண்ணனாருடைய இரண்டுபக்கங்களிலும் சூழ்ந்து சென்றது.—எ-று.

வேடு என்பது குணவாகுபெயர். (எஉ)

நெருங்குபைந் தருக்குலங்க ணீடுகாடு கூடநேர்
வருங்கருஞ் சிலைத்தடக்கை மானவேடர் சேனைதான்
பொருந்தடந் திரைக்கடற் பரப்பிடைப் புகும்பெருங்
கருந்தரங்க நீள்புனற் களிந்திகன்னி யொத்ததே.

(இ-ள்.) நெருங்கிய பசுமைபொருந்திய மரக்கூட்டங்கள் நீண்டுவளர்ந்திருக்கின்ற காட்டினை அடையும்படி, நேராகவருகின்ற கருமை நிறம்பொருந்திய வில்லைப்பிடித்த நீண்டகைகளையுடைய வலிய வேடர்சேனையானது, கரையை மோதுகின்ற விசாலமாகிய அலைகளையுடைய பரந்தசமுத்திரத்தில் சங்கமமாகின்ற பெரிதாகிய கருநிறமுள்ள அலைகளோடு ஒலிமிகுந்திருக்கின்ற வெள்ளத்தையுடைய காளிந்தி என்னும் நதியாகிய பெண்ணையொத்திருந்தது.—எ-று.

காடானது அகன்றும் பசுநிறமமைந்தும் இருத்தல்பற்றிக்கடலாகவும்,கருநிறம்பொருந்தியுள்ள வேடர்கூட்டங்கள் காட்டினையடைதல் அந்நிறத்தையுடைய காளிந்திநதி அக்கடலை யடைதலாகவும் உவமைகூறினார். காளிந்தி என்பது களிந்தி எனக்குறுக்கல் விகாரம் பெற்றது. (எங)

தென்றிசைப் பொருப்புடன் செறிந்தகானின் மானினம்
பன்றிவெம் மரைக்கணங்க ளாதியான பல்குலந்
துன்றிநின்ற வென்றடிச் சுவட்டி னொற்றர் சொல்லவே
வன்றடக்கை வார்கொடெம் மருங்கும் வேட ரோடினார்.

(இ-ள்.) நம்மூருக்குத் தெற்குத்திக்கிலுள்ளதாகிய மலையோடு மரங்கள் நெருங்கிய காட்டினிடத்தில் மான்களும், காட்டுப்பன்றிகளும், கொடியமரை என்னு மிருகங்களுமாகிய இவைமுதலான பல மிருகக்கூட்டங்கள் நிறைந்திருக்கின்றனவென்று அவைகளின் காலடியின் அடையாளங்களால் வேவுகாரர்கள் சொல்ல, வல்லமைபொருந்திய பெரியகைகளில் வார்வலைகளை எடுத்துக்கொண்டு நான்குபக்கங்களிலும் வேடர்கள் ஓடினார்கள்,—எ-று. (எச)

ஓடியெறிந்து வாரொழுக்கி யோசனைப் பரப்பெலா
நெடியதிண் வலைத்தொடக்கு நீளிடைப்பி ணித்துநேர்
கடிகொளப் பரந்தகாடு காவல்செய் தமைத்தபின்
செடிதலைச் சிலைக்கைவேடர் திண்ணனார்மு னண்ணினார்.

(இ-ள்.) சுருக்குவலைகளைவீசி வார்களைக்கட்டி, காட்டின் ஒருயோசனை எல்லையளவும் நீண்ட வலிமைபொருந்திய கயிற்றுவலைகளை நெடுந்தூரஞ் செல்லும்படி மரங்களிற்பிடித்துக்கட்டி, நேராகக் கண்டவர்கள் அச்சங்கொள்ளும்படியாகப் பரவியிருக்கின்ற அக்காட்டில் மிருகங்கள் புறத்திற்செல்லாதபடி காவல்செய்துவைத்தபின்பு தூறுகிய மயிர்கள்பொருந்திய தலையினையுடைய வில்லைப்பிடித்த வேடர்கள் திண்ணனாருக்கு முன்னேவந்து சேர்ந்தார்கள்.—எ-று.

ஓடிதல் என்பது மடங்குதல் அது அத்தொழிலையுடைய வலைக்கானது ஆகுபெயர். ஓடி - கவண் எனினுமாம். (எரு)

வெஞ்சிலைக்கை வீரனும் வேடரோடு கூடிமுன்
மஞ்சலைக்கு மாமலைச் சரிப்புறத்து வந்தமா
அஞ்சுவித் தடர்க்குநாய்க ளட்டமாக விட்டுநீள்
செஞ்சரத்தி னோடுசூழல் செய்தகானு ளெய்தினார்.

(இ-ள்.) கொடியவில்லைக் கையிற்பிடித்த வீரராகிய திண்ணனாரும்,வேடர்களோடு சேர்ந்து முன்னே மேகங்கள் சஞ்சரிக்கின்ற பெரியமலைச்சாரல்களினின்றும் வந்த மிருகங்களை அஞ்சும்படிசெய்து கொலைக்கு உட்படுத்துகின்ற நாய்களைக் குறுக்காகவிட்டு நீண்ட கூர்மையாகிய பாணங்களோடு வேட்டையின்பொருட்டு வேடர்களால் வளைக்கப்பட்ட காட்டிற்குப்போயினார்.—எ-று.

செஞ்சரம் என்பதற்கு மிருகங்களின் உதிரந்தோய்தலால் செம்மைநிறம் பொருந்திய பாணம் எனினும் பொருந்தும். (எசு)

வெய்யமா வெழுப்பவேவி வெற்பராய மோடிநேர்
எய்யும்வாளி முன்றெரிந்து கொண்டுசெல்ல வெங்கணு
மொய்குரற் றுடிக்குலங்கள் பம்பைமுன்சி லைத்தெழக்
கைவிளித் ததிர்த்துமா வெழுப்பினார்கள் கானெலாம்.

(இ-ள்.) வேடர்கூட்டங்கள் கொடியமிருகங்களை அவைகளிருக்குமிடத்தில் நின்று எழுப்பும்படியாக வேவுகாரரைச்செலுத்தி, அவர்கள் எழுப்புங்கால் எதிர்ப்பட்ட மிருகங்களின்மேல் எய்தற்கு உரிய அம்புகளை முன்னே ஆராய்ந்து எடுத்துக்கொண்டு விரைவாகப்போக எவ்விடங்களிலும் நிறைந்த பேரோசையையுடைய உடுக்கைவாத்தியங்களும்,பம்பைகளும் முன்னே முழங்கிஎழும்ப,கையைத்தட்டி வாயினால் இரைச்சலிட்டு அக்காட்டில்மறைந்து சஞ்சரிக்கின்ற மிருகங்களையெல்லாம் எழுப்பினார்கள்.—எ-று. (எஎ)

ஏனமொடு மானினங்க ளெண்குதிண் கலைக்குலங்
கானமேதி யானைவெம் புலிக்கணங்கள் கான்மரை
யானமா வநேகமா வெருண்டெழுந்து பாயமுன்
சேனைவேடர் மேலடர்ந்து சீறியம்பு நூறினார்.

(இ-ள்.) காட்டுப்பன்றிகள் - மான்கள் - கரடிகள்- வலிய கலைமான்கூட்டங்கள் - காட்டெருமைகள் - யானைகள் - கொடுமைபொருந்திய புலிக்கூட்டங்கள்-காட்டுப்பசுக்கள் இவைமுதலாகிய அநேக மிருகங்கள் மிகவும்பயந்து எழுந்து பாய்ந்தோடும் பொழுது அவைகளுக்கு முன்னேசென்ற கூட்டமாகிய வேடர்கள் எதிர்த்துக் கோபங்கொண்டு அம்புகளினால் அழித்தார்கள்.—எ-று. (எஅ)

வேறு.

தாளறு வனவிடை துணிவன தலைதுமி வனகலைமான்
வாளிக ளொடுகுடல் சொரிதர மறிவன சிலமரைமா
நீளுடல் விடுசர முருவிட நிமிர்வன மிடைகடமா
மீளிகொள் கணைபடு முடலெழ விழுவன பலவுழையே.

(இ-ள்.) கலைமான்கள் கால்கள் அறுபட்டவைகளும், இடுப்புகள் துணிக்கப்பட்டவைகளும், தலைகள் வெட்டுண்டவைகளுமாய்க் கிடந்தன; சில மரைமிருகங்கள் உடம்பில்தைத்த அம்புகளோடு குடல்களும் கீழேசொரியவிழுந்து இறந்துகிடந்தன; மிகுந்த மதத்தைப்பொழிகின்ற யானைகள் தமது நீண்டஉடம்பில் வேடர்களால் விடப்பட்ட பாணங்கள் ஊடுருவ, அதனால் கீழேவிழாமல் நிமிர்ந்து நின்றன; பல மான்கூட்டங்கள் பலம்பொருந்திய அம்புகள் தைத்ததனால் உடலானது மேலேஎழும்பிப் பின்பு நிலத்தில்விழுந்தன.—எ-று. (எகூ)

வெங்கணை படுபிடர் கிழிபட விசையுரு வியகயவாய்
செங்கனல் விடவத னொடுகணை செறியமு னிருகருமா
அங்கெழு சிரமுரு வியபொழு தடலெயி றுறவதனைப்
பொங்கிய சினமொடு கவர்வன புரைவன சிலபுலிகள்.

(இ-ள்.) முன்னேயுள்ள பெரியபன்றிகளுக்குக் கொடுமையாகிய அம்புகள்படுதலால் பிடர்கிழிந்துபோக விசையாக உருவிய ஆழ்ந்தவாயானது நெருப்பைக்கக்க, அந்தப்பன்றிகளை இழுத்துக்கொண்டு அவ்வம்புகள் நெருங்கிப் புலிகளின் அழகிய தலையில் உருவியபொழுது அவற்றின் வாயிலுள்ள வலியபற்களில் பொருந்துதலால் அப்பன்றிகளை மிகுந்தகோபத்தோடு விழுங்குதலை ஒத்தனவாகிச் சிலபுலிகள் கிடந்தன.—எ-று.

பன்றியின்மேற் பட்டு உருவிய அம்புகள் அப்பன்றியை இழுத்துக்கொண்டுசென்று புலியின்வாயில் தைத்துப்பல்லில் பொருந்துதலால் அப்புலி பன்றியைக்கவர்வது போன்றிருந்தன வென்பது கருத்து. (அ0)

பின்மற வர்கள்விடு பகழிகள் பிறகுற வயிறிடைபோய்
முன்னடு முகமிசை யுருவிட முடுகிய விசையுடனக்
கொன்முனை யடுசர மினமெதிர் குறுகிய முகமுருவத்
தன்னெதி ரெதிர்பொரு வனநிகர் தலையன பலகலைகள்.

(இ-ள்.) பின்புறத்திலிருந்துகொண்டு வேடர்கள்விடுகின்ற பாணங்கள் பல கலைமான்களின் பின்புறமாகப்பாய்ந்து வயிற்றின்வழியாகப்போய் முன்னேயுள்ள நடுமுகத்தில் உருவி மிகுந்தவேகத்தோடு அவ்வேட்டைப்போரில் கொல்லுகின்ற அம்புகள் தன் எதிராகவந்த கலைமான்களினது முகத்தையும் உருவுதலால் அக்கலைமான்களின் தலைகள் ஒன்றினோடொன்று எதிர்த்துத் தாக்கிப் போர்செய்தலை ஒத்திருந்தன.—எ-று. (அக)

கருவரை யொருதனு வொடுவிசை கடுகிய தெனமுனைநேர்
குரிசின்முன் விடுமடு சரமெதிர் கொலைபயில் பொழுதவையே
பொருகரி யொடுசின வரியிடை புரையறு முடல்புகலால்
வருமிர வொடுபக லணைவன வெனமிடை யுமவ்வனமே.

(இ-ள்.) கருமைநிறம் பொருந்திய மலையானது ஒரு வில்லை யேந்திக்கொண்டு விரைந்து வந்ததுபோல மிருகவேட்டையில்வந்த திண்ணனார்அம்மிருகங்களுக்கு எதிரில்விடுகின்ற கொலைத்தொழிலையுடைய அம்புகள் எதிரேசென்று அவைகளைக் கொல்லும்பொழுது அவ்வம்புகள் போர்செய்தற்குரிய யானையின்மேல்தைத்து அதனோடு கோபமுள்ள சிங்கத்தினது வலிய உடலினும்தைத்து அவ்விரண்டினையும் ஒன்றாகச்சேர்த்தலால் வருகின்ற இராக்காலத்தோடு பகற்காலமும் ஒன்றுபடச்சேர்ந்து இருந்தனபோல அவ்வனமானது விளங்கிக்கொண்டிருக்கும்.—எ-று.

இதில், கருநிறமுடைய யானையை இரவாகவும், வெண்ணிறமுடைய சிங்கத்தைப் பகலாகவும் உவமைபடுத்திக் கூறினர். (அஉ)

நீளிடை விசைமிசை குதிகொள நெடுமுகி றொடவெழுமான்
ருளுறு கழன்மற வர்கள்விடு சரநிரை தொடர்வனதாம்
வாள்விடு கதிர்மதி பரிவுற வருமென விழுமுழையைக்
கோளொடு பயில்பணி தொடர்நிலை கொளவுள வெதிர்பலவே.

(இ-ள்.) வெளிப்புறத்தில் விசையோடு மேலேகுதித்து நீண்ட மேகமண்டலத்தைத் தொடும்படி எழும்புகின்ற மான்களை வீரகண்டையைத்தரித்த காலினையுடைய வேடர்கள்விட்ட அம்பின்வரிசைகள் சென்று தொடர்வது எப்படியிருந்தனவென்றால்,ஒளியைவீசுகின்ற கிரணங்களையுடைய சந்திரன் இராகுவினால் ஓர்காலத்தில் துன்பப்படவேண்டிவரும் என்றுபயந்து அதனைவிட்டுப்பிரிந்து விழுகின்ற மானை அவ்விராகுவானது வலிவோடுதொடர்ந்துபிடிக்கும் நிலைமையையொத்திருந்தன; இப்படிஎதிரே பல இடங்கள் உள்ளன.—எ-று.

"கோளொடு பயில்பணி" என்பதற்கு கிரகங்களோடு ஒன்றாகப் பயில்கின்ற இராகு எனினும் பொருந்தும். (அ௩)

கடல்விரி புனல்கொள விழுவன கருமுகி லெனநிரையே
படர்வொடு செறிதழை பொதுளிய பயில்புதல் வனமதன்மேல்
அடலுறு சரமுட லுறவரை யடியிட மலமரலான்
மிடைகரு மரைகர டிகளொடு விழுவன வனமேதி.

(இ-ள்.) வரிசையாகத் தழைகள் படர்ச்சியோடு நெருங்கிய மிருகங்கள் சஞ்சரிக்கின்ற புதல்களையுடையவனத்தில் (வேடர்களுடைய) வலிமைபொருந்திய அம்புகள் உடம்பில்தைக்க மலையின்அடிவாரத்தில் சுழன்றுவருந்துதலோடு நெருங்கிய கருநிறம் பொருந்திய மரை என்னும் மிருகங்களும் கரடிகளோடு காட்டெருமைகளும் சமுத்திரத்தில் விரிந்த நீரையுண்ணும்படி விழுகின்ற கறுத்தமேகம்போல இறந்து விழுகின்றன.—எ-று. (அ௪)

பலதுறை களின்வெரு வரலொடு பயில்வலை யறநுழைமா
வுலமொடு படர்வன தகைவுற வுறுசின மொடுகவர்நாய்
நிலவிய விருவினை வலைபிடை நிலைசுழல் பவர்நெறிசேர்
புலனுறு மனனிடை தடைசெய்த பொறிகளி னளவுளவே.

(இ-ள்.) பலவழிகளினின்றும் பயத்தோடு கட்டியிருக்கின்ற வலைகள் அற்று விழும்படி நுழைகின்ற மிருகங்கள் வேகமாக ஓடுதலைத் தடுக்கும்படி மிகுந்தகோபத்தோடு அவைகளைக் கவ்வுகின்ற நாய்கள், பொருந்திய நல்வினை தீவினைஎன்னும் இருவினைகளாகிய வலையினிடத்தில் அகப்பட்டுத் தமது நிலை கலங்கி வருந்துகின்றவர்கள் மோக்ஷத்தை அடைதற்குச் சாதனமாகிய ஞானம் பொருந்திய மனத்தினை அம்மோக்ஷநெறியில் செல்லவொட்டாமல் இடையில் தடைசெய்த ஐம்பொறிகளின் தன்மையை ஒத்திருந்தன.—எ-று. (அ௫)

துடியடி யனமடி செவியன துறுகய முனிதொடரார்
வெடிபட விரிசிறு குருளைகண் மிசைபடு கொலைவிரவார்

அடிதளர் வுறுகரு வுடையன வணைவுறு பிணையலையார்
கொடியன வெதிர்முடு கியுமுறு கொலைபுரி சிலைமறவோர்.

(இ-ள்.) கொடியமிருகங்களை எதிராகச்சென்று தடுத்து மிருதியாகக் கொலைசெய்கின்ற வில்லையுடைய வேடர்கள் உடுக்கைபோன்ற கால்களையும், மடிந்த காதுகளையுமுடையனவாகிய நெருங்கிய யானைக்கன்றுகளைத்தொடர்ந்து வேட்டையாடார்கள் ; முழக்கமுண்டாக ஒலித்துவிலகி ஓடுகின்ற சிறிய குட்டிமிருகங்களின்மேல் சென்று அவற்றைக் கொலைசெய்யார்கள் ; காலடிகள் தளர்வடைந்து கருப்பமுடையவைகளாய் வருகின்ற பெண்மான்களை வருத்திக் கொல்லமாட்டார்கள்.—எ-று. (அசு)

இவ்வகை வருகொலை மறவினை யெதிர்நிகழ் வுழியதிரக்
கைவரை களும்வெரு வுறமிடை கானெழு வதொரேனம்
பெய்கரு முகிலென விடியோடு பிதிர்கனல் விழிசிதறி
மொய்வலை களையற நிமிர்வுற முடுகிய கடுவிசையில்.

(இ-ள்.) இவ்விதமாகவருகின்ற கொலைசெய்தலாகிய வேட்டைத்தொழிலானது தனக்குஎதிரே நடக்கும்பொழுது, பூமிஅதிரவும் துதிக்கையினையுடைய யானைகளும் பயங்கொள்ளவும் நெருங்கிய காட்டினின்றும் எழும்பிய ஒரு பன்றியானது மழைபெய்கின்ற கரியமேகத்தைப்போல இடித்த குரலோசையோடு நெருப்புப்பொறிகளைக் கண்களினின்றும் சிந்தி நெருங்கிய வலைகள்அறும்படி மேல் எழும்பி மிகுந்தவேகத்தோடு ஓடியது.—எ-று.

முடுகியது என்பதில் துவ்விகுதி கெடுதல்விகாரம்பெற்றது. (அஎ)

போமது தனையடு திறலொடு பொருமற வர்களரியே
றாமவர் தொடர்வுறும் விசையுட னடிவழி செலுமளவிற்
றாமொரு வருமறி கிலரவர் தனிதொடர் வுழியதன்மேல்
ஏமுனை யடுசிலை விடலைக ளிருவர்க ளடிபிரியார்.

(இ-ள்.) இவ்விதமாக ஓடிப்போகின்ற அந்தப்பன்றியைக் கொல்லத்தக்க வலியோடு எதிர்க்கின்ற வேடர்களுக்கு ஆண்சிங்கம்போன்ற திண்ணனார் அதனைத் தொடர்ந்துபிடிக்கும்விசையோடு காலடியின்வழியாகப் போகும்பொழுது, அவர் தனியாக அப்பன்றியைப் பின்பற்றித்தொடர்ந்ததை அவ்வேடர்களில் ஒருவரும் அறிய வில்லை; அதன்பின்பு, போர்முனையில் விடுகின்ற அம்பையும் வில்லையுமுடைய இரண்டு காளைப்பருவமுள்ள வேடர்கள்மாத்திரம் அவரடியைப்பிரியாமல் பின்தொடர்ந்தார்கள்.—எ-று. (அஅ)

நாடிய கழல்வய வர்களவர் நாணனு நெடுவரிவிற்
காடனு மெனுமிரு வருமலை காவல ரொடுகடிதிற்
கூடினர் விடுபக ழிகளொடு கொலைனுமு விகள்வழுவி
நீடிய சரிபடர் வதுதரு நீழலின் விரைகேழல்.

(இ-ள்.) தேடிப்புறப்பட்ட வீரக்கழலையணிந்த வீரர்களாகிய நாணனும், கட்டமைந்த நீண்டவில்லினையுடைய காடனும் என்றுசொல்லப்பட்ட இருவரும்

மலைக்காவலராகிய திண்ணனாரோடு விரைவாகச்சேர்ந்து அவர்களால் விடப்பட்ட அம்புகளோடு கடித்துக் கொல்லுகின்ற நாய்களுக்குந்தப்பி நீண்ட மலைச்சாரலில் ஓருமரத்தின் நிழலில் விசையாக அப்பன்றியானது ஓடியது.—எ-று. (அகூ)

குன்றியை நிகர்முன் செறவெரி கொடுவிழி யிடிகுர னீள்
பன்றியு மடல்வன் றிறலொடு படர்நெறி நெடிதோடித்
துன்றிய தொருகுன் றடிவரை சுலவிய நெறிசூழல்
சென்றத னிடையின் றதுவலி தெருமர மரநிழையில்.

(இ-ள்.) முன்னே கோபத்தினால் சிவந்த குன்றிமணியையொத்த நெருப்புப்பொறி பறக்கின்ற கொடியகண்களையும், இடிபோன்ற குரலையுமுடைய நீண்ட பன்றியும் மிகுந்த வலியோடு தான்போகின்ற வழியில் நெடுந்தூரம் ஓடி, நெருங்கிய ஒருமலையினடியில் வளைவாகிய வழியையுடைய ஒரு சோலையையடைந்து அங்கு தனது வலியிழந்து மரச்செறிவில் நின்றுவிட்டது.—எ-று. (கூ0)

அத்தரு வளர்சுழ லிடையடை யதனிலை யறிபவர்முன்
கைத்தெரி கணையினி லடுவது கருதலர் விசைகடுகி
மொய்த்தெழு சுடர்விடு சுரிகையை முனைபெற வெதிருருவிக்
குத்தின ருடன்முறி படவெறி குலமற வர்கடலைவர்.

(இ-ள்.) அந்தமரங்கள் நெருங்கியிருக்கின்ற சோலையையடைந்த அப்பன்றியின் இருப்பை அறிந்தவராய்த் தாம் முன்பு மிருகங்களைக்கொல்வதற்குக் கையில் ஆராய்ந்தெடுத்த அம்பினால் அதனைக்கொல்ல நினையாமல் விசையாகப்போய் நெருங்கி யெழுகின்ற ஒளிவீசுகின்ற உடைவாளை யுருவி அதன்முனையானது நன்றாயழுந்தும்படியாக அப்பன்றியின் உடல்முறியக் குத்தினார், கொலைத் தொழிலையுடைய வேடர்குலத்தலைவராகிய திண்ணனார்.—எ-று.

சூழல் என்பது சுழல்என்று குறுக்கல் விகாரம் பெற்றது. (கூக)

## வேறு.

வேடர்தங் கரிய செங்கண் வில்லியார் விசையிற் குத்த
மாடிரு துணியாய் வீழ்ந்த வராகத்தைக் கண்டு நாணன்
காடனே யிதன்பி னின்று காதங்கள் பலவந் தெய்த்தோம்
ஆடவன் கொன்று னச்சோ வென்றவ ரடியிற் றாழ்ந்தார்.

(இ-ள்.) கரியநிறத்தையும் சிவந்தகண்களையுமுடைய வேடர்களுக்குத் தலைவராகிய திண்ணனார் விசையோடு உடைவாளினால் குத்த, அவ்விடத்தில் இரண்டு துண்டாகவிழுந்து இறந்தபன்றியை நாணனென்பவன் பார்த்து, ஓ காடனே! இந்தப்பன்றியின்பின்னாக இன்றைக்குப் பலகாததூரம் தொடர்ந்துவந்து இளைத்தோம்; இதனை ஆண்தன்மையையுடைய நமது திண்ணனாரோ கொன்றார், இது ஆச்சரியமென்று அவ்விருவரும் அவருடைய திருவடிகளில் வணங்கினார்கள்.—எ-று.

அச்சோ என்றது ஆச்சரியக் குறிப்பு. நெடுநாளாக வேட்டையிற்பழகிய தங்களால் கொல்லப்படாமல் முதலில் கன்னிவேட்டைக்கு வந்தவராகிய திண்ணனார் தமது உடைவாளினால் குத்திக் கொன்றமைபற்றி, அச்சோஎன்றுகூறினார்.

மற்றவர் திண்ண னார்க்கு மொழிகின்றார் வழிவந் தாற்ற
உற்றது பசிவந் தெம்மை யுதவிய விதனைக் காய்ச்சிச்
சற்றுநீ யருந்தி யாமுந் தின்றுதண் ணீர்கு டித்து
வெற்றிகொள் வேட்டைக் காடு குறுகுவோ மெல்ல வென்றார்.

(இ-ள்.) அந்த நாணனும் காடனும் திண்ணனாைப்பார்த்துச் சொல்லுகின்றார்கள், வெகுதூரம் வழிநடந்து வந்தபடியினால் நமக்குப் பசியானது மிகவும் உண்டாயிருக்கின்றது ; ஆதலால், இப்பொழுது நமக்குக்கிடைத்த இந்தப்பன்றியை நெருப்பில்காய்ச்சி நீருங் கொஞ்சம்உண்டு நாங்களுந்தின்று குளிர்ந்தநீரைக் குடித்துப் பசிதணித்துக்கொண்டு பின்பு நாம் வெற்றிபெற்ற வேட்டையாடிய காட்டிற்கு மெல்லப்போவோம் என்று சொன்னார்கள்.—எ-று (கஙஉ)

என்றவர் கூற நோக்கித் திண்ணனார் தண்ணீ ரெங்கே
நன்றுமிவ் வனத்தி லுள்ள தென்றுரை செய்ய நாண
னின்றவிப் பெரிய தேக்கி னப்புறஞ் சென்றா னீண்ட
குன்றினுக் கயலே யோடுங் குளிர்ந்தபொன் முகலி யென்றான்.

(இ-ள்.) என்று இவ்விதமாக அவ்விருவர்களும் சொல்ல, அதைக்கேட்ட திண்ணனார் அவர்களைப்பார்த்து நல்லதண்ணீரானது இந்தவனத்தில் எவ்விடத்தில் இருக்கிறதென்று கேட்க,அதற்கு நாணனென்பவன் (இதோ நமக்குமுன்னே) நிற்கின்ற இந்தப் பெரியதேக்கமரத்திற்கு அப்புறம்போனால் அவ்விடத்திலுள்ள உயர்ந்தமலைக்குப் பக்கத்தில் குளிர்ச்சிபொருந்திய பொன்முகலி நதியானது ஓடுகின்றது என்று சொன்னான்.—எ-று.

நீண்டகுன்று என்றது திருக்காளத்தி மலையை. (கஙச)

பொங்கிய சினவில் வேடன் சொன்னபின் போவோ மங்கே
இங்கிது தன்னைக் கொண்டு போதுமி னென்று தாமும்
அங்கது நோக்கிச் சென்றார் காவத மனையிற் கண்டார்
செங்கணே றுடையார் வைகுந் திருமலைச் சாரற் சோலை.

(இ-ள்.) மிகுந்த கோபத்தினையுடைய வில்லைத்தாங்கிய நாணன்சொன்ன பின்பு, திண்ணனார் ஆனால் நீ சொன்ன இடத்திற்குப் போவோம், அவ்விடத்தில் இப்பன்றியை எடுத்துக்கொண்டு வாருங்களென்று சொல்லித் தாமும் அம்மலையை நோக்கிப்போனார், அவ்வாறு போகும்பொழுது அரைக்காதவழிதூரத்திற்கு அப்பால் சிவந்தகண்களையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்டருளிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருக்காளத்திமலையினது அடிவாரத்திலிருக்கின்ற சோலையைத் தரிசித்தார்.—எ-று. (கஙரு)

நாணனே தோன்றுங் குன்றி னண்ணுவே மென்ன நாணன்
காணநீ போதி னல்ல காட்சியே காணு மிந்தச்
சேணுயர் திருக்கா ளத்தி மலைமிசை யெழுந்து செவ்வே
கோணமில் குடுமித் தேவ ரிருப்பர்கும் பிடலா மென்றான்.

(இ-ள்.) (திண்ணனார் நாணனைப்பார்த்து) நாணனே நமக்குமுன்னேதோன்றுகின்ற இம்மலையினிடத்திற்குப் போவோமென்று சொல்ல, அதற்கு நாணன் சொல்லுகின்றான், நீர் அதனைப் பார்க்கும்படிபோனால் நல்லதரிசனமே உண்டாகும், (அதுயாதென்றால்) ஆகாயவரையிலும் அளாவிய திருக்காளத்தி மலையின் மேல் தோன்றிச் செவ்வையாகக் குறைவில்லாத குடுமித்தேவர் இருப்பார், அவரைக் கும்பிடலாம் என்று சொன்னான்.—எ-று.

குடுமித்தேவர் - மலைச்சிகரத்திலிருக்கும் கடவுள். (கூசு)

ஆவதெ னிதனைக் கண்டிங் கணைதொறு மென்மேற் பாரம்
போவதொன் றுளது போலு மாசையும் பொங்கி மேன்மேல்
மேவிய நெஞ்சும் வேறோர் விருப்புற விளையா நிற்குந்
தேவரங் கிருப்ப தெங்கே போதென்றார் திண்ண னார்தாம்.

(இ-ள்.) திண்ணனார் இனி விளையப்போகிறது யாதோ? இந்த மலையைத் தரிசித்துக்கொண்டு இதனைச் சேரச்சேர என்மேல் ஏற்றப்பட்டுள்ள பாரமானது கொஞ்சங்கொஞ்சமாக நழுவிப்போவதுபோலு மிருக்கின்றது; இம்மலையை யடைந்து குடுமித்தேவரைத் தரிசிக்கவேண்டுமென்னும் ஆசையும்; அதிகரித்து மேலுமேலும் பொருந்திய மனமும் என்னால் இப்படிப்பட்டதென்று நிச்சயித்து அறியக்கூடாத ஓர்விருப்பத்தை அடையும்படி தோன்றி நிற்கின்றது ; ஆகையினால் குடுமித்தேவர் அம்மலையில் எவ்விடத்தில் எழுந்தருளியிருப்பது, அவ்விடத்தில் நீ வரக்கடவாய் என்று சொன்னார்.—எ-று.

விரைந்து செல்லுகின்ற ஒருவனுடைய தலையின்மேலுள்ள பாரப்பொருள் சிறிதுசிறிதாய்க் குறைந்துகொண்டேவர அவனுக்குள்ளவருத்தநீங்கித்தடைபடாமல் நடப்பதுபோல, திண்ணனார் மலையினைச் சேரச்சேரத் தமது கரணவிருத்திகளனைத்தும் முன்போலன்றிச் சிறிதுசிறிதாய் ஒதுங்கி உடல்பற்றற நிற்றல் பற்றி " என்மேற் பாரம் - போவதொன்றுளதுபோலும் " என்று கூறினார்.

"விருப்புற விளையா நின்று" என்றும் பாடம். (கூஎ)

உரைசெய்து விரைந்து செல்ல வவர்களு முடனே போந்து
கரைவளர் கழையின் முத்துங் காரகிற் குறடுஞ் சந்தும்
வரைதரு மணியும் பொன்னும் வயிரமும் புளினந் தோறுந்
திரைகண்முன் றிரட்டி வைத்த திருமுக லியினைச் சார்ந்தார்.

(இ-ள்.) திண்ணனார் இவ்விதமாகச்சொல்லி விரைவாகப்போக, அவ்விருவர்களும் அவரோடு கூடப்போய்க் கரையில்வளருகின்ற மூங்கிலில்தோன்றிய முத்துக்களையும், கரிய அகிற் றுண்டுகளையும், சந்தனக் கட்டைகளையும், மலைகளில் உண்டாகிய இரத்தினங்களையும்,பொன்னையும், வயிரத்தையும் மணற்குன்றுகள்தோறும் அலைகளால்முன்னே ஒதுக்கப்பட்டிருக்கின்ற பொன்முகலியாற்றையடைந்தார்கள்.—எ-று. (கூஅ)

ஆங்கதன் கரையின் பாங்கோ ரணிநிழற் கேழ விட்டு
வாங்குவிற் காடன் றன்னை மரக்கடை தீக்கோல் பண்ணி

ஈங்குநீ நெருப்புக் காண்பா யிம்மலை யேறிக் கண்டு
நாங்கள்வந் தணைவோ மென்று நாணனுந் தாமும் போந்தார்.

(இ-ள்.) அந்தப் பொன்முகலியாற்றின் கரையருகிலுள்ள ஒரு மரத்தினது அழகிய நிழலில் தாம்கொண்டுவந்த பன்றியைப்போடுவித்து, வளைந்த வில்லைத்தாங்கிய காடனென்பவனைப் பார்த்து, மரக்கொம்பினால் தீக்கடைகோல்செய்துகொண்டு இவ்விடத்தில் நீ நெருப்பையுண்டாக்குவாய், நாங்கள் இந்தமலையில் ஏறி அங்கு எழுந்தருளியிருக்கின்ற குடுமித்தேவரைத் தரிசித்துக்கொண்டு வந்து சேருகின்றோம் என்றுசொல்லி நாணனுந் தாமுமாகப்போனார்கள்.—எ-று. (௯௯)

அளிமிடை கரைசூழ் சோலை யலர்கள்கொண் டணைந்த வாற்றின்
றெளிபுன லிழிந்து சிந்தை தெளிவுறுந் திண்ண னார்தாங்
களிவரு மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு
குளிர்வரு நதியூ டேகிக் குலவரைச் சாரல் சேர்ந்தார்.

(இ-ள்.) வண்டுகள்மொய்க்கும் கரையிலிருக்கின்ற சோலைகளிலுள்ள மலர்களை அலைக்கரங்களால் வாரிக்கொண்டுவருகின்ற பொன்முகலியாற்றினது தெளிந்தநீரில் இறங்கி மனத்தெளிவடைந்த திண்ணனார் மிகுந்த சந்தோஷமானது அதிகரிக்கத் திருக்காளத்திமலையைப் பார்த்துக்கொண்டு குளிர்ச்சிபொருந்திய அந்நதியின்வழியாகச் சென்று சிரேஷ்டமாகிய அத்திருமலையின் அடிவாரத்தை அடைந்தார்.—எ-று. (௧00)

கதிரவ னுச்சி நண்ணக் கடவுண்மால் வரையி னுச்சி
அதிர்தரு மோசை யைந்து மார்கலி முழக்கங் காட்ட
இதுவென்கொ னாணா வென்றார்க் கிம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து
மதுமல ரீக்கண் மொய்த்து மருங்கெழு மொலிகொ லென்றான்.

(இ-ள்.) சூரியன் உச்சியில்வர, தெய்வத்தன்மைபொருந்திய பெரிய அத்திருக்காளத்திமலையின் சிகரத்தில் தேவர்கள் முழக்குகின்ற தேவதுந்துபி ஐந்தும் சமுத்திரத்தின் கோஷம்போல முழங்க, (அதனைக்காதிற்கேட்டு) நாணனே! இவ்வோசையாதென்றுகேட்டவராகிய திண்ணனாருக்கு நாணன் இம்மலையினிடத்தில் பெரிய தேனடையைச் சூழ்ந்து தேனைவிரும்பிய ஈக்கள்மொய்த்தலால் இம் மலைப் பக்கத்தில் உண்டாகின்ற முழக்கம்போலும் என்றான்.—எ-று.

திண்ணனாரது திருச்செவியிற் கேட்கப்பட்ட தேவதுந்துபியின் ஒலியை யுணராத நாணன் ஈதென்னவென்று கேட்டதற்குஉத்தரமாகத் தனக்குக்கேட்ட தேனீயினொலிபோலுமென்று சந்தேகித்துக் கூறினனென்க. தேவதுந்துபி ஐந்தாவன:—தோற்கருவி - துளைக்கருவி - நரம்புக்கருவி - கஞ்சக்கருவி - மிடற்றுக்கருவி என்பனவாம். (௧0௧)

முன்புசெய் தவத்தி னீட்ட முடிவிலா வின்ப மான
அன்பினை யெடுத்துக் காட்ட வளவிலா வார்வம் பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
என்புநெக் குருகி யுள்ளத் தெழுபெரு வேட்கை யோடும்.

(இ-ள்.) திண்ணனார் முற்பிறப்பில்செய்த சிவபுண்ணியத்தின் தொகுதிகள் ஓர்காலத்தும் அழியாதபேரின்பத்திற்குக் காரணமாகிய அன்பினை அவர்க்கு எடுத்துக் காண்பிக்க அதனால் அளவில்லாத ஆசையானது உண்டாகி, நிலைபெற்ற பெருங்காதல் அதிகரிக்க, சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்காளத்திமலையைப் பார்த்துக்கொண்டு எலும்பு நெக்குவிட்டுருகி உள்ளத்தில்எழுகின்ற பெரிய அவாவோடும்.—எ-று.

கண்ணப்பநாயனார் முற்பிறப்பில் அருச்சுனனாகத் தோன்றி இந்திரநீலபர்வதத்தை யடைந்து செய்த அருந்தவப்பயனே ஈண்டு அன்பினை யுதவியதென்பார் "முன்புசெய் வினையினீட்ட முடிவிலா வின்ப மான-அன்பினை யெடுத்துக் காட்ட" என்று கூறினார்.

இதுமுதல் மூன்றுபாட்டாலுங் குளகம். (௧௦உ)

நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பான மேறி
ஆணையாஞ் சிவத்தைச் சார வணைபவர் போல வையர்
நீணிலை மலையை யேறி நேர்படச் செல்லும் போதில்.

(இ-ள்.) நாணனென்பவனும் சிவபெருமானைத் தரிசிக்க வேண்டுமென்னும் தமது உள்ளத்தெழுந்த பேரன்பும் முன்பாகக் குளிர்ச்சிபொருந்திய மலையில் ஏற,பின்னே திண்ணனார், விரும்புகின்ற தத்துவங்களென்று சொல்லப்பட்ட படிகளின்வழியாக ஏறிச் சிருட்டிமுதலிய பஞ்சகிருத்தியங்களுக்கும் காரணமாகிய முடிவிலாற்றல் என்னும் சத்தியையுடைய சிவபெருமானை அடைபவர்களைப் போலத் திருக்காளத்திநாதர் எழுந்தருளியிருக்கின்ற நீண்டநிலையையுடைய அத்திருமலையில் ஏறி, சந்நிதியைநோக்கி நேராக நடக்கும்பொழுது.—எ-று.

முப்பத்தாறு தத்துவங்களையும் தனித்தனி நியதிகளைந்து தத்துவாதீதனாகிய சிவத்தையடைதலே முத்தியாதல்போல, திண்ணனாரும் இம்மலையின் சோபானவழியே யேறிச் சிவபெருமானைத் தரிசனஞ்செய்தனரென்பார் "பேணுதத் துவங்களென்னும் * * * நீணிலைமலையையேறி" என்று கூறினார். "ஆறு றையுநீத் ததன்மே னிலையைப்-பேறு வடியேன் பெறுமா றுளதோ" என்றார் அருணகிரிநாதரும். தத்துவங்கள் முப்பத்தாறும் ஆன்மதத்துவம் - வித்தியாதத்துவம்-சிவதத்துவம் என மூன்றுவகைப்படும்; அவற்றுள் ஆன்மதத்துவம் பிருதிவு - அப்பு-தேயு - வாயு - ஆகாயம் எனப் பூதங்கள் ஐந்தும்; சப்தம் - ஸ்பரிசம்-ரூபம்-ரஸம்-கந்தம் எனப் புலன்கள் ஐந்தும்; மெய்-வாய்-கண்-மூக்கு-செவி என ஞானேந்திரியங்கள் ஐந்தும்; வாக்கு - பாதம்-பாணி - பாயுரு - உபஸ்தம் எனக் கன்மேந்திரியங்கள் ஐந்தும்; மனம் - புத்தி-சித்தம்-அகங்காரம் எனக் கரணங்கள் நான்கு மாகிய இருபத்துநான்குமாம்; வித்தியாதத்துவம் காலம்-நியதி - கலை-வித்தை-இராகம் - புருடன் - மாயை என ஏழாம்; சிவதத்துவம் - சுத்தவித்தை - ஈச்சுரம் - சாதாக்கியம் - சத்தி - சிவம் எனஐந்தாம் ஆக தத்துவங்கள் முப்பத்தாறுதல் காண்க. இம்மூவகைத் தத்துவங்களும் அசுத்தம் - சுத்தாசுத்தம் - சுத்தம் எனவும் பெயர்பெறும். புலன் எனினும் தன்மாத்திரை எனினும் ஒக்கும். ஞானேந்திரியமெனினும் பொறி எனினும் ஒக்கும். (௧௦௩)

திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணு முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்தத்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய வொளியி னீழற் பொருவிலன் புருவ மானார்.

(இ-ள்.) சந்திரனைத் தரித்த சடையினையுடைய சிவபெருமானை யடைந்து திண்ணனார் தரிசிப்பதற்கு முன்னமே அப்பெருமானது கிருபைமிகுந்த திருவருட்பார்வையானது தம்மை யடைந்தபடியால் முற்பிறப்பில் உண்டாகியகன்ம பந்தங்கள் விட்டு நீங்கி, தம்முள்ளத்தில் அதிகரித்தெழுந்த திருவருணீழலில் தங்கி, ஒப்பற்ற அன்பே உருவமாயினார்.—எ-று. (௧0௪)

மாகமார் திருக்கா ளத்தி மலையெழு கொழுந்தா யுள்ள
ஏகநா யகரைக் கண்டா ரெழுந்தபே ருவகை யன்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடு
மோகமா யோடிச் சென்றார் தழுவினார் மோந்து நின்றார்.

(இ-ள்.) ஆகாயத்தை யளாவிய திருக்காளத்திமலையில் அதன் கொழுந்து போல எழுந்தருளியிருக்கின்ற முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானைத் தரிசித்தார்; தமது உள்ளத்தில் உண்டாகிய பெருமகிழ்ச்சிக்குக் காரணமாகிய அன்பின் எழுச்சியானது அதிகப்பட மிகுந்த விரைவோடு ஆசையாய் ஓடிச் சிவபெருமானை யடைந்து தழுவிக்கொண்டு உச்சியை மோந்து நின்றார்.—எ-று.

கண்ணப்பநாயனார் சிவபெருமானைக் கண்டபொழுதே வணங்காமல் சென்று தழுவி மோந்துகொண்டதென்னெனின், அவருக்குத் தெய்வங்களைக் காணின் வணங்கவேண்டுமென்னு முறைமை தெரியாமையி னென்க; ஒருவர் தமக்கு நண்பர்கள் உறவினர் முதலியவர்களைக் கண்டபோது தழுவுதலும் மோத்தலுஞ்செய்வதும், தாய்தந்தையர்கள் தமது புத்திரர்களைக்கண்டபோது அவ்வாறு செய்தலும் உலகவியற்கை யாதலால் இவரும் பெருமானைத் தழுவுதலும் மோத்தலுஞ் செய்தனரென வறிக. (௧0௫)

நெடிதுபோ துயிர்த்து நின்று நிரைத்தெழு மயிர்க்கா றோறும்
வடிவெலாம் புளகம் பொங்க மலர்க்கண்ணீ ரருவி பாய
அடியனேற் கிவர்தா மிங்கே யகப்பட்டா ரச்சோ வென்று
படியிலாப் பரிவு தானோர் படிவமாம் பரிசு தோன்ற.

(இ-ள்.) நெடுநேரம்வரையினும் உச்சியை மோந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு நின்று, உடல்முழுவதும் வரிசையாய் எழுகின்ற மயிர்க்கால்கள்தோறும் புளகமானது நிறைந்து தோன்ற, தாமரைமலர்போன்ற, தமது கண்களிலிருந்து ஆனந்தத்தினால் வருகின்ற நீரானது அருவிபோலப் பாய, அடியேனுக்கு இவ்வருட்பெருங்கடலாகிய கடவுள் இவ்விடத்திற்றானே அகப்பட்டார்; இது என்ன ஆச்சரியமென்று,ஒப்பில்லாத அன்பே ஒரு உருவங்கொண்டதுபோலப் பார்ப்பவர்களுக்குத் தோன்றும்படி,—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧0௬)

வெம்மறக் குலத்து வந்த வேட்டுவச் சாதி யார்போற்
கைம்மலை கரடி வேங்கை யரிதிரி கானந் தன்னில்

உம்முடன் றுணையா யுள்ளா ரொருவரு மின்றிக் கெட்டேன்
இம்மலைத் தனியே நீரிங் கிருப்பதே யென்று நைந்தார்.

(இ-ள்.) கொடிய மறவர் குலத்திற் பிறந்த வேடச்சாதியார்களைப்போல யானை - கரடி - வேங்கை - சிங்கமுதலிய மிருகங்கள் திரிகின்ற இக்காட்டில் தேவரீரோடு துணையாயுள்ளவர்கள் ஒருவருமில்லாமல் இந்த மலையில் நீர்மாத்திரம் தனியே இங்கிருக்கிறதா, ஆ கெட்டேன் என்று வருந்தினர்.—எ-று. (கoஎ)

கைச்சிலை விழுந்த தோரார் காளையார் மீள விந்தப்
பச்சிலை யோடு பூவும் பறித்திட்டு நீரும் வார்த்து
மச்சிது செய்தார் யாரோ வென்றலு மருங்கு நின்ற
அச்சிலை நாணன் றானு நானிது வறிந்தே னென்பான்.

(இ-ள்.) திண்ணனர் தமது கையில் பிடித்த வில்லானது கீழே விழுந்ததையும் அறியாமல் பரவசப்பட்டு, பின்பு இந்தப் பச்சிலையோடு பூவையும் பறித்துத் தரித்து நீரையும் வார்த்துப் பயனற்ற இந்தக் காரியத்தைச் செய்தவர் யாவரோ என்று கேட்கவும்,அவருக்குச் சமீபத்தில் நின்ற வில்லைப்பிடித்த அந்த நாணனென்பவனும் நான் இதனை முன்னமே அறிந்திருக்கின்றேனென்று சொல்லுகின்றான்.—எ-று. (கoஅ)

வன்றிற லுந்தை யோடு மாவேட்டை யாடிப் பண்டிக்
குன்றிடை வந்தோ மாகக் குளிர்ந்தநீ ரிவரை யாட்டி
ஒன்றிய விலைப்பூச் சூட்டி யூட்டிமுன் பறைந்தோர் பார்ப்பான்
அன்றிது செய்தா னின்று மவன்செய்தா னாகு மென்றான்.

(இ-ள்.) மிகுந்த வல்லமைபொருந்திய உமது தந்தையாரோடு நாங்கள் மிருகவேட்டை யாடிக்கொண்டு முன்பு ஒருநாளில் இந்த மலையினிடத்திற்கு வந்தோம்; அப்பொழுது, ஒரு பார்ப்பான் குளிர்ச்சிபொருந்திய நீரினால் இக்குடுமித்தேவரை முழுக்காட்டித் தகுதியாகிய இலைகளையும் மலர்களையும் தரித்து,எதனையோ படைத்து முன்னேநின்று நமக்குத் தெரியாத சில வார்த்தைகளைச் சொல்லி இவ்வண்ணமே செய்தான்; ஆதலால் இன்றைக்கும் அவனே செய்திருக்கவேண்டுமென்று சொன்னான்.—எ-று. (கoகூ)

உண்ணிறைந் தெழுந்த தேனு மொழிவின்றி யாரா வன்பிற்
றிண்ணனார் திருக்கா ளத்தி நாயனார்க் கினிய செய்கை
எண்ணிய விவைகொ லாமென் றிதுகடைப் பிடித்துக் கொண்டவ்
வண்ணலைப் பிரிய மாட்டா தளவிலா தரவு நீட.

(இ-ள்.) மனத்தினுள்ளெல்லாம் நிரம்பி யெழுந்ததாயிருந்தாலும் ஒழிவில்லாமல் இன்னும்உதிக்கின்ற அடங்காத பேரன்பினையுடைய திண்ணனர்,திருக்காளத்திமலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்கு இனியனவாகிய செய்கைகள் இவைதாம்போலுமென்று, இவ்வாறு செய்யவேண்டுமென்பதையே உறுதியாகப்பிடித்துக்கொண்டு அந்தத் திருக்காளத்திநாதனைப் பிரியமாட்டாமல் அளவில்லாத ஆசையானது அதிகரிக்க.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங்குளகம். (ககo)

இவர்தமைக் கண்டே னுக்குத் தனியரா யிருந்தா ரென்னே
இவர்தமக் கமுது செய்ய விறைச்சியு மிடுவா ரில்லை
இவர்தமைப் பிரிய வொண்ணு தென்செய்கே னினியான் சால
இவர்தமக் கிறைச்சி கொண்டிங் கெய்தவும் வேண்டு மென்று.

(இ-ள்.) இப் பெருமானைக் கண்ட எனக்கு ஒருவராகவே யிருக்கின்றார், இஃது என்னகாரணம்; இக்கடவுளுக்குத் திருவமுதுசெய்யும்படி மாமிசத்தைக் கொண்டுவந்துகொடுப்பவர் ஒருவருமில்லை; இத்தேவரைப் பிரியவுங்கூடாது; இதற்கு என்னசெய்வேன்; இனி நான் இவர் உண்பதற்காக மிகுதியாக இறைச்சியை எடுத்துக்கொண்டு இங்கு வரவேண்டும் என்று நினைத்து.—எ-று. (கககக)

போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர்
காதலி னேக்கி நிற்பர் கன்றகல் புனிற்றாப் போல்வர்
நாதனே யமுது செய்ய நல்லமெல் லிறைச்சி நானே
கோதறத் தெரிந்து வேறு கொண்டிங்கு வருவே னென்பார்.

(இ-ள்.) திருக்காளத்திநாதரைவிட்டுச் சிறிதுதூரம் போவார்; மறுபடியும் திரும்பிவருவார்; தழுவி யணைத்துக்கொள்ளுவார், திரும்பவும்போவார்; கொஞ்சதூரம்போய்ப் பின்பு பேரன்போடு சுவாமியைப் பார்த்து நிற்பார்; கன்றைவிட்டுப் பிரிந்த தலையீற்றுப் பசுவைப்போல அலறுவார்; எமது ஆண்டவரே! தேவரீர் திருவமுதுசெய்யும்படி மிருதுவாயிருக்கின்ற நல்ல மாமிசத்தை நானே பழுதில்லாமல் சோதித்து வெவ்வேறாக எடுத்துக்கொண்டு இவ்விடத்திற்கு வருவேனென்று சொல்லுவார்.—எ-று. (ககஉ)

ஆர்தம ராகி நீரிங் கிருப்பதென் றகல மாட்டே
னீர்பசித் திருக்க விங்கு நிற்கவுங் கில்லே னென்று
சோர்தரு கண்ணீர் வாரப் போய்வரத் துணிந்தா ராகி
வார்சிலை யெடுத்துக் கொண்டு மலர்க்கையாற் றொழுது போந்தார்.

(இ-ள்.) யாவரை உறவினராகக்கொண்டு தேவரீர் இவ்விடத்தில் இருப்பதென்று அதனால் பிரியவும்மாட்டேன்; நீர் பசியோடிருப்பதனால் இங்கேநிற்கவும் மாட்டேனென்று அரும்புகின்ற கண்ணீரானது ஒழுக, போய் இறைச்சி கொண்டுவரும்படியாகத் துணிந்து நீண்ட வில்லினை எடுத்துக்கொண்டு தாமரைமலர்போன்ற தமது திருக்கரத்தினால் கும்பிட்டுக்கொண்டுபோயினார் எமது கண்ணப்பநாயனார்.—எ-று. (ககங)

முன்புநின் றரிது நீங்கி மொய்வரை யிழிந்து நாணன்
பின்புவந் தணைய முன்னைப் பிறதுறை வேட்கை நீங்கி
அன்புகொண் டுய்ப்பச் செல்லு மவர்திரு முகலி யாற்றின்
பொன்புனை கரையி லேறிப் புதுமலர்க் காவிற் புக்கார்.

(இ-ள்.) திருக்காளத்திநாதரது திருமுன்னே நெடுநேரம்நின்று பின்பு ஆராமையோடு அருமையாகநீங்கி, மரங்கள் நெருங்கிய அம்மலையினின்றும் இறங்கி, நாணனென்பவன் தமக்குப் பின்னே வந்துகொண்டிருக்க முன்னே பிற

விஷயங்களில் உண்டாயிருந்த ஆசையினின்றும் நீங்கி அன்பானது தள்ளிக்கொண்டு செல்லப் போகின்ற திண்ணனார் பொன்முகலியாற்றினது அழகிய கரையிலேறிப் புதிய மலர்களையுடைய சோலையில் புகுந்தார்.—எ-று. (கக௪)

காடனு மெதிரோ சென்று தொழுதுதீக் கடைந்து வைத்தேன்
கோடுடை யேன முங்கள் குறிப்படி யுறுப்பை யெல்லா
மாடுற நோக்கிக் கொள்ளு மறித்துநாம் போகைக் கின்று
நீடநீர் தாழ்த்த தென்னோ வென்றலு நின்ற நாணன்.

(இ-ள்.) காடனென்பவனும் திண்ணனாருக்கு எதிராகப்போய்க் கைகுவித்து வணங்கி (தேவரீர் கட்டளைப்படியே) அரணியைக்கொண்டு தீக்கடைந்து வைத்திருக்கின்றேன், கொம்பினையுடைய பன்றியினது அவயவங்களையெல்லாம் உமது அடையாளப்படியே இங்கு இருக்கப்பார்த்துக்கொள்ளும்; மீண்டும் நாம் போவதற்கு இப்பொழுது நீங்கள் மிகவும் தாமசஞ்செய்தது என்னவென்று கேட்கவும், அருகில் நின்ற நாணனென்பவன் (சொல்லுகின்றான்).—எ-று. (கக௫)

இதுமுத லிரண்டுபாடலும் குளகம்.

அங்கிவன் மலையிற் றேவர் தம்மைக்கண் டணைத்துக் கொண்டு
வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன நீங்கா
னிங்குமத் தேவர் தின்ன விறைச்சிகொண் டேகப் போந்தா
னங்குலத் தலைமை விட்டா னலப்பட்டான் தேவர்க் கென்றான்.

(இ-ள்.) நாங்கள்போன அவ்விடத்தில் இத்திண்ணனார் மலைமேலிருக்கின்ற குடுமித்தேவரைப்பார்த்துத் தமது கையினால் அணைத்துக்கொண்டு மரப்பொந்தினைப்பற்றி அப்புறஞ்செல்லாத வலிய உடும்பைப்போல விட்டு நீங்காதவராய், அக்குடுமித்தேவர் உண்ணும்பொருட்டு இறைச்சி கொண்டுபோவதற்கு இவ்விடத்திற்கும் வந்தார்; நம்முடைய குலத்திற்குத் தலைவராக இருப்பதையும் விட்டுவிட்டார்; அத்தேவருக்கு அடிமையானார் என்று சொன்னான்.—எ-று. (கக௬)

என்செய்தாய் திண்ணா நீதா னென்னமால் கொண்டா யெங்கள்
முன்பெரு முதலி யல்லை யோவென முகத்தை நோக்கார்
வன்பெரும் பன்றி தன்னை யெரியினில் வதக்கி மிக்க
இன்புறு தசைகள் வெவ்வே றம்பினா லீர்ந்து கொண்டு.

(இ-ள்) (இவ்வாறு நாணன் சொல்லிய வார்த்தையைக் காடன் கேட்டு அவரைப்பார்த்துத்) திண்ணனாரே! நீர் என்னகாரியஞ் செய்தீர்; எப்படிப்பட்ட பயித்தியங்கொண்டீர்; முன்னே எங்களுக்கு நீர் பெருமைபொருந்திய தலைவராயிருந்தவரன்றோ? என்று சொல்ல, அவனுடைய முகத்தைப் பார்க்காமல் வலிமை பொருந்திய பெரிய பன்றியை நெருப்பினில் வதக்கிச் சிறந்த இனிமையாகிய இறைச்சிகளை வேறுவேறாக அம்பினால் அரிந்தெடுத்துக்கொண்டு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கக௭)

கோலினிற் கோத்துக் காய்ச்சிக் கொழுந்தசை பதத்தில் வேவ
வாலிய சுவைமுன் காண்பான் வாயினி லதுக்கிப் பார்த்துச்

சாலவு மினிய வெல்லாஞ் சருகிலை யிணைத்த கல்லை
ஏலவே கோலிக் கூட வதன்மிசை யிடுவா ரானார்.

(இ-ள்.) கொழுப்பாகிய இறைச்சிகளை அம்பினில் கோத்துக் காய்ச்சிப் பக்குவமாக வெந்துகொண்டிருக்கும்பொழுது அவைகள் இனியசுவையாயிருக்கின்றனவோ வென்று முன்னே அறியும்படிக்கு வாயில்போட்டு அதுக்கிப்பார்த்து மிகவும் இனிப்பா யிருக்கின்ற இறைச்சிகளையெல்லாம் உதிர்ந்த இலைகளினால் இணைக்கப்பட்ட கல்லையை நன்றாகத் தைத்து, அதன்மேல்வைத்தார்.—எ-று.

மருங்குநின் றவர்கள் பின்னு மயன்மிக முதிர்ந்தா னென்னே
அரும்பெற லிறைச்சி காய்ச்சி யதுக்கிவே றுமிழா நின்றான்
பெரும்பசி யுடைய னேனும் பேச்சில னெமக்கும் பேறு
தரும்பரி சுணரான் மற்றைத் தசைபுறத் தெறியா நின்றான்.

(இ-ள்.) அப்பொழுது திண்ணனாருக்குச் சமீபத்தில்நின்ற நாணன் காடன் என்னுமிருவரும் சொல்லுகின்றார்கள், முன்பு குடுமித்தேவரைக் காணும்பொழுதிருந்த பயித்தியத்திலும் இப்பொழுது அதிக பயித்தியங்கொண்டிருக்கின்றார், இது என்னஆச்சரியம்; கிடைத்தற்கரிய இப்பன்றியின் இறைச்சியை நெருப்பிற்காய்ச்சி வாயிலிட்டு அதுக்கி விழுங்காமல் வீணாகக்கீழேயுமிழ்கின்றார்; மிகுந்தபசியுடையவராயிருந்தாலும் அதைக்குறித்து நம்மிடத்தில் ஒன்றும் பேசவில்லை; நமக்கும் அவ்விறைச்சியைப்பகிர்ந்து கொடுக்குந்தன்மையையும் அறியவில்லை; மிகுந்த இறைச்சியைப்புறத்தில் எறிந்துவிடுகின்றார்.—எ-று. (கககூ)

தேவுமால் கொண்டா னிந்தத் திண்ணன்மற் றிதனைத் தீர்க்க
லாவதொன் றறியோந் தேவ ராட்டியை நாகனோடு
மேவிநாங் கொணர்ந்து தீர்க்க வேண்டுமெவ் வேட்டைக் கானில்
ஏவலாட் களையுங் கொண்டு போதுமென் றெண்ணிப் போனார்.

(இ-ள்.) இந்தத்திண்ணனார் தெய்வப்பயித்தியங் கொண்டிருக்கின்றார்; இதனைத்தீர்க்கத்தகுந்த வழியொன்றையும் அறியோம்; நாம்போய்த்தேவராட்டியைநாகனோடு அழைத்துக்கொண்டுவந்து இந்தப்பயித்தியத்தைத் தீர்க்கவேண்டும்; ஆதலால், அந்தவேட்டைக்காட்டில் வந்திருக்கின்ற ஏவலாளர்களையும் அழைத்துக்கொண்டு நம்மூருக்குப்போவோமென்று நினைத்துப்போனார்கள்.—எ-று.

கானவர் போன தோரார் கடிதினிற் கல்லை யின்கண்
ஊனமு தமைத்துக் கொண்டு மஞ்சன மாட்ட வுன்னி
மாநதி நன்னீர் தூய வாயினிற் கொண்டு கொய்த
தூநறும் பள்ளித் தாமங் குஞ்சிமேற் றுதையக் கொண்டார்.

(இ-ள்.) திண்ணனார் தமக்கு அருகில் இருந்தவேடர்கள் அவ்விடத்திலிருந்து நீங்கிப்போனசங்கதியை அறியாதவராய், சீக்கிரமாகக்கல்லையில் இறைச்சியாகிய திருவமுதைவைத்துக்கொண்டு, திருமஞ்சனமாட்டவேண்டுமென்று நினைத்துப்பெருமைபொருந்திய பொன்முகலியாற்றினது நல்லஜலத்தைச் பரிசுத்தமாகிய

வாயில் எடுத்துக்கொண்டு சாத்துவதற்காகப்பறித்த தூய்மைபொருந்திய மலர்களை த்தமது தலைமயிரின்மேல் நிறையும்படி சொருகிக்கொண்டார்.—எ-று. (கஉக)

தனுவொரு கையில் வெய்ய சரத்துடன் றாங்கிக் கல்லைப்
புனிதமெல் லிறைச்சி நல்ல போனக மொருகை யேந்தி
இனியவெம் பிரானார் சாலப் பசிப்பரொன் றிரங்கி யேங்கி
நனிவிரைந் திறைவர் வெற்பை நண்ணினார் திண்ண னார்தாம்.

(இ-ள்.) தமது ஒரு திருக்கரத்தில் வில்லையும் அம்பையும் பிடித்துக்கொண்டு, கல்லையில்வைத்திருக்கின்ற பரிசுத்தம்பொருந்திய மெல்லிய இறைச்சியாகிய நல்ல உணவை மற்றொரு திருக்கரத்தில் ஏந்திக்கொண்டு, இனியவராகிய எமது ஆண்டவர் மிகவும் பசியடைந்திருப்பாரொன்று மனமிரங்கி விசனப்பட்டு, அதிக விரைவாக நடந்து, முதல்வராகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருமலையையடைந்தார் திண்ணனார்.—எ-று. (கஉஉ)

இளைத்தனர் நாய னாரென் றீண்டச்சென் றெய்தி வெற்பின்
முளைத்தெழு முதலைக் கண்டு முடிமிசை மலரைக் காலில்
வளைத்தபொற் செருப்பான் மாற்றி வாயின்மஞ் சனநீர் தன்னை
விளைத்தவன் புமிழ்வார் போல விமலனார் முடிமேல் விட்டார்.

(இ-ள்.) எமதுகடவுள் பசியினால் இளைப்படைந்திருப்பாரொன்று விரைவாகப்போய், அத்திருமலையில்தோன்றி எழுந்தருளியிருக்கின்ற முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானைக்கண்டு அவரது திருமுடியின்மேல் முன்புசாத்தப்பட்டிருந்த மலர்களைத்தமது திருவடியில் தரித்திருக்கின்ற அழகியசெருப்பினால் கீழேதள்ளி, வாயில்வைத்திருந்த திருமஞ்சனநீரைத் தம்முள்ளத்தில் அடங்காமல் அதிகரித்தெழுந்த அன்பினை உமிழ்பவர்போலத் திருக்காளத்திநாதரது திருமுடியின்மேல் அபிஷேகஞ்செய்தார்.—எ-று. (கஉ௩)

தலைமிசைச் சுமந்த பள்ளித் தாமத்தைத் தடங்கா ளத்தி
மலைமிசைத் தம்பி ரானார் முடிமிசை வணங்கிச் சாத்திச்
சிலைமிசைப் பொலிந்த செங்கைத் திண்ணனார் சேர்த்த கல்லை
இலைமிசைப் படைத்த வூனின் றிருவமு தெதிரே வைத்து.

(இ-ள்.) சிவந்தகையினிடத்தில் விளங்குகின்ற வில்லைப்பிடித்த திண்ணனார் தமது தலையின்மேல் வைத்திருந்த புட்பங்களை விசாலமாகிய திருக்காளத்திமலையில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானுடைய திருமுடியின்மேல் தொழுது சாத்தி, இலைகளால் இணைத்துத்தைக்கப்பட்ட கல்லையில் இட்டுப்படைத்த இறைச்சியாகிய திருவமுதைச் சந்நிதிமுன்னேவைத்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஉ௪)

கொழுவிய தசைக ளெல்லாங் கோலினிற் றெரிந்து கோத்தங்
கழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினா லதுக்கி நாவிற்
பழகிய வினிமை பார்த்துப் படைத்தவிவ் விறைச்சி சால
அழகிது நாய னீரே யமுதுசெய் தருளு மென்றார்.

(இ-ள்.) கொழுமையாகிய இறைச்சிகளையெல்லாம் ஆராய்ந்தெடுத்து அம்பினில்கோத்து, நெருப்பில் மிருந்தபதமாகக்காய்ச்சி, அதனைப்பல்லினால் அதுக்கி நாவின்பழக்கப்படியே சுவைபார்த்துத் தேவரீருக்குப்படைத்த இந்த இறைச்சியானது மிகவும் நன்றாயிருக்கின்றது ; ஆதலால், எமது ஆண்டவரே ! இதனைத் திருவமுது செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று. (கஉரு)

அன்னவிம் மொழிகள் சொல்லி யமுதுசெய் வித்த வேடர்
மன்னனார் திருக்கா ளத்தி மலையினார்க் கினிய நல்லூண்
இன்னமும் வேண்டு மென்னு மெழுபெருங் காதல் கண்டு
பன்னெடுங் கரங்கள் கூப்பிப் பகலவன் மலையிற் றாழ்ந்தான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட இந்தவார்த்தைகளைச்சொல்லித் திருக்காளத்திநாதரைத்திருவமுது கொள்ளும்படிசெய்த வேடர்களுக்குத்தலைவராகிய திண்ணனார் அத்திருக்காளத்திமலையில் வீற்றிருக்கின்றசிவபெருமானுக்கு இனிமையாகிய நல்லமாமிசங்கள் இன்னும் வேண்டியிருக்குமென்னுங்கருத்தால் எழுகின்ற பெரிய ஆசையைக்கண்டு(இன்றுபகல்முழுவதும் வேட்டையில் இளைத்த இவ்வன்பர் இன்னும் வேட்டையாடின் மிகுந்த வருத்தமுண்டாமென்றுகருதித்)தன்னுடைய பலவாகிய நீண்ட கிரணங்களாகிய கைகளைக்கூப்பிக்கொண்டு சூரியன் அஸ்தமானகிரியையடைந்தான்.—எ-று.

கண்ணப்பநாயனார் சிறந்த அன்புமயமாயிருந்து பாகம்பண்ணிப்படைத்த ஊனமுதத்தைச் சிவபெருமான் மனமுவந்துண்டருளினரென்பதுதோன்ற "அமுதுசெய்வித்தவேடர் - மன்னனார்" என்றுகூறினார். "பகலவன்மலையிற்றாழ்ந்தான்" என்பதனால்,மலையில் வணங்கினான் என்னுங்குறிப்புப் பொருளுந்தோன்றுமாறுகாண்க. (கஉசு)

அவ்வழி யந்தி மாலை யணைதலு மிரவு சேரும்
வெவ்விலங் குளவென் றஞ்சி மெய்ம்மையின் வேறு கொள்ளாச்
செவ்விய வன்பு தாங்கித் திருக்கையிற் சிலையுந் தாங்கி
மைவ்வரை யென்ன வையர் மருங்குநின் றகலா நின்றார்.

(இ-ள்.) அப்பொழுது அந்திப்போதாகிய மாலைக்காலம் வரவும், இனி இராக்காலத்தில் வந்து சேருகின்ற கொடியமிருகங்கள் இந்த மலையில் இருக்கின்றன; அதனால்,எமது ஆண்டவருக்கு ஒருவேளை தீங்குநேரிடுமென்றுபயந்து, உண்மையினின்றும் நீங்காத சிறந்தஅன்பைத்தாங்கித் திருக்கரத்தில் வில்லையுந்தாங்கிக்கொண்டு, கரியமலையைப்போல எமது கண்ணப்பநாயனார் திருக்காளத்திநாதருடையபக்கத்தில் நின்றும் பிரியாமலிருந்தார்.—எ-று. (கஉஎ)

சார்வருந் தவங்கள் செய்து முனிவரு மமரர் தாமுங்
கார்வரை யடவி சேர்ந்துங் காணுதற் கரியார் தம்மை
ஆர்வமுன் பெருக வாரா வன்பினிற் கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்றார் நீளிரு ணீங்க நின்றார்.

(இ-ள்.) நீண்ட இ[redacted]நீங்கிப் பொழுதுவிடிதலை எதிர்பார்த்து நின்றவராகிய கண்ணப்பநாய களும், தேவர்களும் மேகங்கள் தவழுகி

ன்றமலைகளையும் வனங்களையும் சேர்ந்து செய்வதற்கருமையாகிய தவங்களைச்செய்தும் அறியக்கூடாதவராகிய சிவபெருமானை ஆசையானது முன்னேஅதிகரிக்க அடங்காத பேரன்பினால் தியானித்துக்கொண்டு (வேறொன்றையும்பாராமல்,) அப்பெருமானது திருமேனியை நேரேபார்த்துக்கொண்டுகின்றார்.—எ-று.

முனிவர்களும், தேவர்களும் சீவபோதமுடைமைபற்றிக் "காணுதற்கரியார்" என்றும்,கண்ணப்பநாயனார் பசுகரணங்கெட்டுச் சிவகரணம்பெற்றமைபற்றி "நேர்பெறநோக்கிநின்றார்" என்றுங்கூறினார். "நீளிருணீங்கநின்றார்" என்றதனால், அநாதியாகவே தம்மைத் தொடர்ந்துவருகின்ற மலவிருளானது நீங்கும்படி நின்றவர் என்னும் குறிப்புப் பொருளுந் தோன்றுமாறறிக. (கஉஅ)

கழைசொரி தரளக் குன்றிற் கதிர்நில வொருபாற் பொங்க
முழையர வுமிழ்ந்த செய்ய மணிவெயி லொருபான் மொய்ப்பத்
தழைகதிர்ப் பரிதி யோடுஞ் சந்திரன் றலையு வாவிற்
குழையணி காதர் வெற்பைக் கும்பிடச் சென்றா லொக்கும்.

(இ-ள்.) மூங்கில்கள் சொரிகின்ற முத்துக்குவைகளின் ஒளிவீசுகின்ற பிரகாசமானது ஒருபக்கத்தில் விளங்குதலினாலும், மலைக்குகைகளிலிருக்கின்ற பாம்புகள் கக்கிய சிவந்தமாணிக்கங்களினுடைய பிரகாசமானது ஒருபக்கத்தில் நெருங்குதலினாலும் தழைத்த கிரணங்களையுடைய சூரியனோடுகூடச் சந்திரனும் அமாவாசைத்தினத்தில் சங்கக்குழையைத்தரித்த திருச்செவியினையுடைய காளத்திநாதரது திருமலையைத் தரிசிக்கவந்ததற் கொப்பாயிருக்கும்.—எ-று.

உவா என்பது அமாவாசைக்கும் பூரணைக்கும் பொதுப்பெயராயிருத்தல் பற்றி அமாவாசையை "தலையுவா" என்று பிரித்துக்கூறினார். (கஉகூ)

விரவுபன் மணிகள் கான்ற விரிகதிர்ப் படலை பொங்க
மரகத மொளிகொ ணீல மணிகளு மிமைக்குஞ் சோதி
பொரவிரு சுடருக் கஞ்சிப் போயின புடைக டோறும்
இரவிரு ளொதுங்கி னாலே போன்றுள தெங்கு மெங்கும்.

(இ-ள்.) கூட்டமாகத்திரண்டிருக்கின்ற பலவகை இரத்தினங்கள் உமிழ்கின்ற விரிந்த ஒளித்திரள்விளங்க, மரகதமணிகளும் நீலமணிகளுமாகிய இவைகள் வீசுகின்றபிரகாசமானது, சந்திரசூரியர்களாகிய இரண்டு சுடர்களும் தன்வலியைக் கெடுக்க அதற்குப்பயந்து சிதறிப்போன இடங்கள்தோறும் இராக்காலத்தில் வருகின்ற இருளானது ஒதுங்கியிருந்தாற்போல் இருந்தது அம்மலையிடங்களிலெல்லாம்.—எ-று. (கஙo)

செந்தழ லொளியிற் பொங்குந் தீபமா மரங்க ளாலு
மந்திகண் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்
ஐந்துமா றடக்கி யுள்ளா ரரும்பெருஞ் சோதி யாலும்
எந்தையார் திருக்கா ளத்தி மலையினி லிரவொன் றில்லை.

(இ-ள்.) சிவந்தநெருப்பின் ஒளியைப்போல விளங்குகின்ற பெரியசோதி விருக்ஷங்களினாலும், குரங்குகள் தாங்கள்வாழுகின்ற குகையாகிய வீடுகளில்கொ

ண்டுவந்து வைத்த இரத்தினதீபங்களின் பிரகாசத்தினாலும், ஐம்புலன்களையும் அறுவகைப்பகைகளையும் அடக்கினவர்களாகிய முனிவர்களினது திருமேனியின் அருமையாகிய பெரிய சோதியினாலும், எமதுபெருமானாகிய காளத்திநாதரது திருமலையினிடத்தில் எப்பொழுதும் இராத்திரியென்பது இல்லை.—எ-று.

சோதிவிருட்சம் என்பது, தெய்வீகமமைந்த மலை-தபோவனமுதலிய இடங்களிலிருந்து பகலில் கண்களுக்குத் தோன்றாமல் இராக்காலத்தில்மாத்திரம் சோதியாகத் தோன்றுகிற ஓர் சிறந்தவிருட்சம். அதின் சமீபத்தில்போனால் கண்களுக்குப் புலப்படாது. ஐம்புலன்களாவன :— சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்கள். அறுவகைப்பகைகளாவன:—காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பனவாம். (௧௩௧)

வருங்கறைப் பொழுது நீங்கி மல்கிய யாமஞ் சென்று
சுருங்கிட வறிந்த புள்ளின் சூழ்சிலம் போசை கேட்டுக்
கருங்கட லென்ன நின்ற கண்டுயி லாத வீரர்
அரும்பெறற் றம்பி ரானார்க் கமுதுகொண் டணைய வேண்டி.

(இ-ள்.) வருகின்ற இராக்காலமானது நீங்கி, நிறைந்த நயாமமுஞ் சென்று பொழுதுவிடிய, அவ் விடியுநேரத்தையறிந்த பறவைகள் சூழ்ந்து ஒலிக்கின்ற ஓசையைக்கேட்டு இராத்திரிமுழுவதும் நித்திரை கொள்ளாமல் கரியகடல்போல நின்றுகொண்டிருந்த கண்ணப்பநாயனார் தமக்கு அடைதற்கரிய பேறாகக்கிடைத்த திருக்காளத்திநாதருக்குத் திருவமுது சம்பாதித்துக்கொண்டு வரவேண்டுமென்று நினைத்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௩௨)

ஏறுகாற் பன்றி யோடு மிருங்கலை புனமான் மற்றும்
வேறுவே றினங்கள் வேட்டை வினைத்தொழில் விரகி னாலே
ஊறுசெய் காலஞ் சித்தித் துருமிகத் தெரியாப் போதின்
மாறடு சிலையுங் கொண்டு வள்ளலைத் தொழுது போந்தார்.

(இ-ள்.) வயிற்றில் ஏறியகுறுகிய காலினையுடைய பன்றிகளோடும், பெரியகலைமான்களும்,வனத்திலுள்ள புள்ளிமான்களும்,இவையொழிந்த வேறுவேறான மிருகங்களையும் வேட்டை யாடுதலில் தாம் கற்றுள்ள சாமர்த்தியத்தினாலே அவைகளைக் கொல்லத்தகுந்தகாலம் இதுவென்று நினைத்து,உருவம் மிகவும் தெரியாதிருக்கின்ற விடியற்காலத்திலே பகைவரைவெல்லத்தகுந்த வில்லையும் கையில் எடுத்துக்கொண்டு அருள்வள்ளலாகிய திருக்காளத்திநாதரைவணங்கி வேட்டைக்குப்போயினார்.—எ-று. (௧௩௩)

வேறு.

மொய்காட்டு மிருள்வாங்கி முகங்காட்டுந் தேரிரவி
மெய்காட்டு மன்புடைய வில்லியார் தனிவேட்டை
எய்காட்டின் மாவளைக்க விட்டகருந் திரையெடுத்துக்
கைகாட்டு வான்போலக் கதிர்காட்டி யெழும்போதில்.

(இ-ள்.) உலகத்தில் நிறைந்திருந்த இருளையொழித்துத் தனது மண்டலத்தை வெளிப்படக்காட்டுகின்ற தேரினையுடைய சூரியனானவன் உண்மையாகிய பத்தியினையுடைய கண்ணப்பநாயனார் தனியே வேட்டைக்குப்போகின்ற காட்டிலுள்ள மிருகங்களை வளைக்கும்படி சுற்றிலும் இட்டிருந்த கரிய திரையை நீக்கிக் கைகளினால் அம்மிருகங்களைக் காட்டுகின்றவனைப்போலக் கிரணங்களைவிரித்துக்கொண்டு உதயமானபொழுது.—எ-று.

'வேட்டை-எய்காட்டின்மாவளைக்க' என்பதற்கு வேட்டையில் காட்டுப்பன்றியையும் காட்டிலுள்ள மற்றமிருகங்களையும் வளைக்கும்படி, என்று பொருள் கூறினும் பொருந்தும்.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (கஙச)

எய்தியசீ ராகமத்தி லியம்பியபூ சனைக்கேற்பக்
கொய்தமல ரும்புனலு முதலான கொண்டணைந்தார்
மைதழையுங் கண்டத்து மலைமருந்தை வழிபாடு
செய்துவருந் தவமுடைய முனிவர்சிவ கோசரியார்.

(இ-ள்.) விஷத்தின்கருநிறம்பொருந்திய கண்டத்தினையுடைய திருக்காளத்திமலையில் வீற்றிருந்தருளும் மலைமருந்தாகிய காளத்திநாதனை நாள்தோறும் வழிபாடுசெய்துகொண்டுவருகின்ற தவமுனிவராகிய சிவகோசரியார் என்னும் ஆதிசைவமறையவர், சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்ட சிறந்த காமிகமுதலிய சைவாகமங்களில் விதித்திருக்கின்ற பூசாவிதிக்கு ஏற்கும்படி பறித்தபுட்பங்களும், திருமஞ்சனமும் முதலிய உபகரணங்களை அமைத்துக்கொண்டு சுவாமியின் சந்நிதியைநோக்கிவந்தார்.—எ-று.

காமிகமுதலிய சைவாகமங்களாவன :—காமிகம்—யோகஜம் - சிந்தியம் - காரணம் - அசிதம் - தீப்தம் - சூக்குமம்-சகச்சிரம் - அஞ்சுமான் - சுப்பிரபேதம் - விசயம்-நிச்சுவாசம்-சுவாயம்புவம்-ஆக்கினேயம் - வீரம் - இரௌரவம் - மகுடம் - விமலம் - சந்திரஞானம் - முகவிம்பம்-புரோற்கீதம்-இலலிதம் -சித்தம்-சந்தானம்-சருவோக்தம் - பாரமேச்சுரம் - கிரணம் - வாதுளம் என்னும் இருபத்தெட்டுமாம். சதாசிவமூர்த்தியினுடைய ஐந்து திருமுகங்களுள் ஊர்த்துவமுகமாகிய ஈசானமுகத்தினின்றும் இச்சிவாகம மிருபத்தெட்டும், அதோமுகங்க ளைங்கினுள் தற்புருடமுகத்தினின்றும் இருபத்தொரு சாகைகளோடு இருக்குவேதமும், அகோரமுகத்தினின்றும் நூறு சாகைகளோடு யசுர்வேதமும், வாமதேவமுகத்தினின்றும் ஆயிரம் சாகைகளோடு சாமவேதமும், சத்தியோசாதமுகத்தினின்றும் ஒன்பது சாகைகளோடு அதர்வணவேதமும் தோன்றின. இதனை,

"இன்னவை யிரண்டு மிவனருள் வலியா லீன்றநான் மறையையங் நான்கும்
பின்னிவ னருளா லளவில வான பிரணவ மாதிமந் திரமும்
அன்னவா றுன தாரகத் தகார மாதியக் கரங்களு முதித்த
சொன்னவக் கரத்திற் சிவாகம நூலிச் சுரவர னடுமுகத் துதித்த."

"கீட்டிசை முகத்தோன் றடுத்தநா[redacted]த்ததா விருக்கது தெண்பா
லீட்டிய விரண்டாம் வேதநூ றுரு ந்து குடதிசை முகத்தி

னீட்டிய சாம மாயிர முகத்தா னிமிர்ந்தது வடதிசை முகத்தி
னூட்டிய வொன்ப தருவொடு கிளைத்து நடந்தது நான்கதா மறையே.''

என்னுந் திருவிளையாடற்புராணத்தா னுணர்க. இவ்வாறன்றி, காமிகம் முதல் அசிதம்ஈறாகிய ஐந்தும், சதாசிவமூர்த்தியினுடைய ஐந்து திருமுகங்களுள் சத்தியோசாத முகத்திலும், தீப்தம் முதல் சுப்பிரபேதம் ஈறாகியஐந்தும் வாமதேவ முகத்திலும்,விசயம் முதல் வீரம் ஈறாகியஐந்தும் அகோரமுகத்திலும், இரௌரவம் முதல் முகவிம்பம் ஈறாகிய ஐந்தும் தற்புருட முகத்திலும், புரோற்கீதம் முதல் வாதுளம் ஈறாகிய எட்டும் ஈசான முகத்திலும் முறையே தோன்றினவென்றும் சில ஆகமங்கள் கூறும். இதனை,

"சத்தியோ சாதக்திற் காமிக மாதியைந்தும்
உற்பவித்து நீடுமென வோர்."

"தீப்தமுத லைந்துந் திகழ்வாம வத்திரத்தில்
வாய்த்தன வென்றே மதி."

"விசயமுத லைந்தும் விகிர்தவகோ ரத்தி
லிசையவுதித் தேயிலங்கு மென்."

"தற்புருடத் தேரௌர வாதியைந்துஞ் சாதமா
யற்புதமாய் நீடு மறி."

"ஈசானந் தன்னிற் புரோற்கீத மாதியெட்டும்
தேசார வேயுதிக்குந் தேறு"—என்னும் சைவசமயநெறித் திருக்குறள் களானுணர்க.

இவ்வாகமங்கள் இருபத்தெட்டனுள் காமிகமுதலிய பத்தும் சிவபேதமெனவும், விசயமுதலிய பதினெட்டும் உருத்திரபேத மெனவும் சொல்லப்படும். இச்சிவாகமங்கள் தனித்தனி ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என நான்குபாதங்களையுடையனவா யிருக்கும்; இவை சித்தாந்தமெனவும், மாந்திரமெனவும், தந்திரமெனவும் பெயர்பெறும். ஆகமம் என்பதில், ஆ என்பது பாசம், க என்பது ஆன்மா, ம என்பது சிவம் என்னும் பொருள்மேல் நிற்றலால், திரிபதார்த்த நிச்சய முணர்த்தும் நூல் எனவும், ஆ என்பதுசிவஞானம், க என்பதுமோட்சம், ம என்பது மலநாசம் என்னும் பொருள்மேனிற்றலால் ஆன்மாக்களின் மலத்தை நாசஞ்செய்து சிவஞானத்தை யுதிப்பித்து மோட்சத்தைத் தரும் நூல் எனவும் பொருள்படுமாறுகாண்க. (கங0)

வந்துதிரு மலையின்கண் வானவர்நா யகர்மருங்கு
சிந்தைநிய மத்தோடுஞ் செல்கின்றார் திருமுன்பு
வெந்தவிறைச் சியுமெலும்புங் கண்டகல மிதித்தோடி
இந்தவநு சிதங்கெட்டே னியார்செய்தா ரென்றழிவார்.

(இ-ள்.) திருக்காளத்திமலைக்குவந்து தேவர்களுக்கு நாயகராகிய காளத்திநாதரது சந்நிதியில் நியமம்பொருந்திய மனதோடும்போகின்ற அச்சிவகோசரியார் சுவாமியின் திருமுன்னேவெந்தமாமிசங்களையும் எலும்புகளையும்பார்த்து அவைகளை மிதியாமல் தூரத்தேகால்வைத்து மிதித்தோடி, இந்தஅநுசிதமானகாரியத்தை யாவர் செய்தவர்கள்; ஆ கெட்டேனென்று விசனப்பட்டார்.—எ-று.

அநுசிதம் = அசுத்தம். (கங௧)

மேவநோர் வரவஞ்சா வேடுவரோ யிதுசெய்தார்
தேவதே வீசனே திருமுன்பே யிதுசெய்து
போவதே யிவ்வண்ணம் புகுதநீர் திருவுள்ளம்
ஆவதே யெனப்பதறி யழுதுவிழுந் தலமந்தார்.

(இ-ள்.) சந்நிதியை அடைவதற்கும், நேரே வருவதற்கும் மனதில்கொஞ்சமும் அச்சமில்லாத வேடுவர்களே இந்த அநுசிதத்தைச் செய்தவர்கள்; தேவர்களுக்கெல்லாந் தேவராயிருக்கின்ற எமது ஆண்டவரே! தேவரீருடைய சந்நிதியின்முன்னேதானே இப்படிச்செய்துபோகலாமா? இத்தன்மையான காரியம் சம்பவிக்கும்படி திருவுள்ளங்கொள்ளலாமா? என்று தேகம் பதறிக் கண்ணீர் விட்டழுது பூமியில் விழுந்து மனங்கலங்கினார்.—எ-று. (கஅஎ)

பொருப்பிலெழுஞ் சுடர்க்கொழுந்தின் பூசனையுந் தாழ்க்கநான்
இருப்பதினி யென்னென்றவ் விறைச்சியெலும் புடனிலையுஞ்
செருப்படியு நாயடியுந் திருவலகால் மாற்றியபின்
விருப்பினொடுந் திருமுகலிப் புனன்மூழ்கி விரைந்தணைந்தார்.

(இ-ள்.) திருக்காளத்திமலையில் எழுந்தருளியிருக்கின்ற சுடர்க்கொழுந்தாகிய சிவபெருமானுக்குச் செய்யவேண்டிய பூசைவேளையும் தவறும்படி நானிங்கேயிருப்பதில் என்ன பிரயோசனமென்று அங்கு இறைந்துகிடக்கின்ற இறைச்சி எலும்புகளோடு தேக்கிலையால் தைத்த கல்லையையும், கண்ணப்பநாயனார் தமது பாதத்திலணிந்த செருப்பினடையாளத்தையும், நாயின் அடிச்சுவட்டையும் திருவலகைக் கொண்டுபோகும்படி விளக்கிச் சுத்தஞ்செய்தபின்பு, அன்போடு பொன்முகலியாற்றின் நீரில் ஸ்நானஞ்செய்து சீக்கிரமாகவந்தார் சிவகோசரியார்.—எ-று.

நாயடியாவது கண்ணப்பநாயனார் வேட்டைக்கு வந்தபோது அவரோடு கூடவந்த வேட்டைநாயின் காலடியென வறிக; இதனை,

"கடும்பகல் வேட்டையிற் காதலிற் றடிந்த
வுடும்பொடு சிலைகணை யுடைத்தோல் செருப்புத்
தொடர்ந்த நாயொடு தோன்றினன் றோன்றலும்" — என்று

நக்கீரதேவநாயனா ரருளிய திருக்கண்ணப்பதேவர் திருமறத்தா னுணர்க. (கஅஅ)

பழுதுபுகுந் ததுதீரப் பவித்திரமாஞ் செயல்புரிந்து
தொழுதுபெறு வனகொண்டு தூயபூ சனைதொடங்கி
வழுவிதிரு மஞ்சனமே முதலாக வரும்பூசை
முழுதுமுறை மையின்முடித்து முதல்வனார் கழல்பணிந்தார்.

(இ-ள்.) திருக்காளத்திநாதர் வீற்றிருந்தருளும் இடத்திற்குச் சம்பவித்த குற்றம் நீங்கும்படியாகப் பரிசுத்தமாகிய பிராயச்சித்தஞ்செய்து வணங்கித் தாம் பெற்ற பூசைக்குரிய உபகரணங்களைக்கொண்டு தூய்மையாகிய பூசைசெய்யத் தொடங்கிக் குற்றமற்ற திருமஞ்சனமுதலாகப் பொருந்திய பூசனைமுழுவதும் கிரமப்படியே செய்துமுடித்து, முதல்வராகிய சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கினார்.—எ-று.

பவித்திரம் - பாவத்தையொழித்து நன்மையைத் தருவது; 'பவித்திர மாஞ் செயல்புரிந்து' என்றதனால், பிராயச்சித்தத்தின்பொருட்டுச் செய்யவேண்டிய பஞ்சகவ்விய ஸ்நானமுதலியனவுங் கொள்க. 'திருமஞ்சனமேமுதலாக வரும்பூசை' ஆவது அபிடேகஞ்செய்தல், சந்தனபுஷ்பஞ் சாத்தல், தூபதீபங்கொடுத்தல், நிவேதனஞ்செய்தல் முதலியனவாம். (கங௯)

பணிந்தெழுந்து தனிமுதலாம் பரனென்று பன்முறையாற்
றுணிந்தமறை மொழியாலே துதிசெய்து சுடர்த்திங்கள்
அணிந்தசடை முடிக்கற்றை யங்கணரை விடைகொண்டு
தணிந்தமனத் திருமுனிவர் தபோவனத்தி னிடைச்சார்ந்தார்.

(இ-ள்.) நமஸ்கரித்து எழுந்துநின்று ஒப்பற்ற முதல்வராகிய பரம்பொருளாவார் இப்பெருமானேயென்று பலதரம் நிச்சயித்துச் சொல்லுகின்ற வேதவாக்கியங்களினாலே ஸ்தோத்திரஞ்செய்து, ஒளிவிளங்குகின்ற இளம்பிறையைத் தரித்த கற்றையாகிய சடைமுடியினையுடைய சிவபெருமானிடத்தினின்றும் விடைபெற்றுக்கொண்டு சாந்தமாகிய மனத்தினையுடைய சிவகோசரியார் தாம் வாசஞ்செய்கின்ற தபோவனத்தை யடைந்தார்.—எ-று.

தபோவனம்=தவஞ்செய்யும்வனம். (கசo)

இவ்வண்ணம் பெருமுனிவ ரேகினா ரினியிப்பால்
மைவண்ணக் கருங்குஞ்சி வனவேடர் பெருமானார்
கைவண்ணச் சிலைவளைத்துக் கான்வேட்டை தனியாடிச்
செய்வண்ணத் திறமொழிவேன் றீவினையின் றிறமொழிவேன்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் பெருமைபொருந்திய சிவகோசரியார் சிவபெருமானைப் பூசித்து விடைபெற்றுக்கொண்டு தமது தபோவனத்தை யடைந்தார்; இனி இவ்விடத்தில் மைபோலக் கருநிறம்பொருந்திய சிகையினையுடைய வனத்திலுள்ள வேடர்களுக்கு அரசராகிய திண்ணனார் தாம் கையில் ஏந்திய அழகிய வில்லைவளைத்துக் காட்டில் தனியே வேட்டையாடி, சிவபெருமானுக்குச் செய்கின்ற பூசனையின் வகையைச் சொல்லத்தொடங்குவேன், தீவினையினது வலிமையினின்றும் நீங்கக்கருதுகின்ற யான்.—எ-று.

இது கவிக்கூற்று. (கசக)

திருமலையின் புறம்போன திண்ணனார் செறிதுறுகற்
பெருமலைக ளிடைச்சரியிற் பெரும்பன்றி புனமேய்ந்து
வருவனவுந் துணிபடுத்து மானினங்கள் கானிடைநின்
றொருவழிச்சென் றேறுதுறை யொளிநின்று கொன்றருளி.

(இ-ள்.) திருக்காளத்தி மலைக்குப் புறத்தில் போன கண்ணப்பநாயனார் நெருங்கிய துறுகற்கள்பொருந்திய பெரிய மலையிடங்களிலும் சாரல்களிலுமுள்ள பெரிய பன்றிகள் தினைப்புனத்திலுள்ள பலங்களை மேய்ந்து வருவனவற்றையும் தமது கையிலுள்ள பாணத்தினால் துண்டித்து,மான்கூட்டங்கள் காட்டினின்றும்

ஒருவழியாகப்போய் ஏறுகின்ற நீர்த்துறைகளில் மறைந்துநின்று அவைகளைக் கொலைசெய்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (௧௪௨)

பயில்விளியாற் கலையழைத்துப் பாடுபெற வூடுருவும்
அயின்முகவெங் கணைபோக்கி யடியொற்றி மறையினங்க
டுயிலிடையிற் கிடையெய்து தொடர்ந்துகட மைகளெய்து
வெயில்படுவெங் கதிர்முதிரத் தனிவேட்டை வினைமுடித்தார்.

(இ-ள்.) அவ்வம் மிருகங்கள்போலக் கூப்பிடுகின்ற பயிலோசையினால் கலைமான்களையழைத்து அவைகள் வருந்தும்படிதைத்து உருவத்தக்க கூர்மைபொருந்திய கொடிய அம்புகளைச்செலுத்தி, அடியினடையாளங்களைப்பற்றித்தொடர்ந்து மறை யென்னு மிருகக் கூட்டங்கள் நித்திரைசெய்யுமிடங்களில் அவைகளையெய்து, பின்தொடர்ந்து கடமை மிருகங்களையுங் கொன்று ஒளிபொருந்திய சூரியன் உச்சியில் வரும்போது ஒப்பற்ற வேட்டைத்தொழிலை முடித்தார். (௧௪௩)

பட்டவன விலங்கெல்லாம் படர்வனத்தி லொருசூழல்
இட்டருகு தீக்கடைகோ லிருஞ்சுரிகை தனையுருவி
வெட்டிநறுங் கொற்றேனை மிகமுறித்துத் தேக்கிலையால்
வட்டமுறு பெருங்கல்லை மருங்குபுடை படவமைத்தார்.

(இ-ள்.) எமது கண்ணப்பநாயனார் தம்மால் கொல்லப்பட்ட காட்டிலுள்ள மிருகங்களையெல்லாம் மரங்கள் நெருங்கிய அவ்வனத்தின் ஒருபுறத்தில் இட்டு, பெருமைபொருந்திய தமது உடைவாளையுருவித் தீக்கடைகோல் ஒன்றை வெட்டிச்செய்து கொண்டு நல்லகொம்புத்தேனை மிகுதியாகப்பிழிந்து தேக்கிலையினால் வட்டமாகத் தைக்கப்பட்ட பெரிய கல்லையினிடத்தில் நிறையும்படி வார்த்தார்.—எ-று. (௧௪௪)

இந்தனத்தை முறித்தடுக்கி யெரிகடையு மரணியினில்
வெந்தழலைப் பிறப்பித்து மிகவளர்த்து மிருகங்கள்
கொந்தியயி லலகம்பாற் குட்டமிடுங் கொழுப்பறிந்து
வந்தனகொண் டெழுந்தழலில் வக்குவன வக்குவித்து.

(இ-ள்.) விறகை முறித்து அடுக்கி, தீக்கடைகின்ற அரணிக்கோலினால் கொடிய நெருப்பையுண்டாக்கி மிகவும் அதிகமாக மூட்டித் தாம் கொண்டுவந்த மிருகங்களைக் கூர்மைபொருந்திய அம்பினால் கொத்தி வட்டமாகத் தோண்டியெடுக்கின்ற கொழுப்புள்ள இடத்தைத்தெரிந்து வந்தமாமிசங்களை எடுத்துக்கொண்டு மூண்டெழுகின்ற நெருப்பிலிட்டுவதக்கவேண்டிய மாமிசங்களை வதக்கி.—

வதக்குவன என்பது வக்குவன என்று இடைகுறைந்து வந்தது; இது வேடர்கள் கூறும் குழூஉக்குறிவழக்கு. (௧௪௫)

வாயம்பா லழிப்பதுவும் வகுப்பதுவுஞ் செய்தவற்றின்
ஆயவுறுப் பிறைச்சியெல்லா மரிந்தொருகல் லையிலிட்டுக்

காயநெடுங் கோல்கோத்துக் கனலின்க ணுறக்காய்ச்சித்
தூயதிரு வமுதமைக்கச் சுவைகாண லுறுகின்றார்.

(இ-ள்.) கூர்மைபொருந்திய அம்பினால் அழித்தும், கீறியும் வெவ்வேறாக எடுக்கப்பட்ட அம்மிருகங்களின் உறுப்புகளிலமைந்த இறைச்சிகளையெல்லாம் அரிந்து ஒரு கல்லையிலிட்டு அவைகளை நீண்ட அம்பில் கோத்து நெருப்பில் பொருந்தக் காயும்படியாக வெதுப்பிப் பரிசுத்தம்பொருந்திய திருவமுதைத் திருக்காளத்திநாதருக்கு அமைக்கும்படி கருதி, முன்பு தமது வாயிலிட்டுச் சுவைபார்க்கத் தொடங்கினார்.—எ-று. (௧௭௬)

எண்ணிறந்த கடவுளருக் கிடுமுணவு கொண்டூட்டும்
வண்ணவெரி வாயின்கண் வைத்ததெனக் காளத்தி
அண்ணலார்க் காம்பரிசு தாஞ்சோதித் தமைப்பதற்குத்
திண்ணனார் திருவாயி லமைத்தாருன் றிருவமுது.

(இ-ள்.) அளவில்லாத தேவர்களுக்கு வேள்வியில் ஊட்டுகின்ற அவிப்பாகத்தை முன்பு தான் பெற்றுக்கொண்டு பின்பு அத்தேவர்களுக்கு ஊட்டுகின்ற செந்நிறம்பொருந்திய அக்கினியானது தனது வாயில்வைத்துச் சுவைபார்ப்பது போல, திருக்காளத்திமலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்கு இவை இவை ஆகும் என்னும் தன்மையைத் தாம் பரிசோதித் தமைப்பதற்குத் திண்ணனார் தமது திருவாயில் அக்கடவுளுக்குப் படைக்கவேண்டிய மாமிசமாகியதிருவமுதையிட்டுச் சுவைபார்த்தார்.—எ-று.

'வண்ண வெரிவாயின்கண் வைத்தலாவது, வேள்விசெய்யுங் காலத்தில் அவியுணவை அவ்வேள்வித்தீயிலிட்டு வதக்கிப் பின்பு தேவர்களுக்குப் பிரித்துத் தனித்தனி ஓமம்பண்ணுதல் எனவறிக. (௧௭௭)

நல்லபத முறவெந்து நாவின்க ணிடுமிறைச்சி
கல்லையினிற் படைத்துத்தேன் பிழிந்துகலந் ததுகொண்டு
வல்விரைந்து திருப்பள்ளித் தாமமுந்தூய் மஞ்சனமும்
ஒல்லையினின் முன்புபோ லுடன்கொண்டு வந்தணைந்தார்.

(இ-ள்.) நல்லபதமாக வெந்தபின்பு நாவிலிட்டு இனிப்பாயிருக்கின்ற மாமிசத்தைத் தேக்கிலையினால் தைக்கப்பட்ட கல்லையில் படைத்துத் தேனைப்பிழிந்து கலந்து அதனை எடுத்துக்கொண்டு விரைவாகச்சென்று கடவுளுக்குச் சாத்தவேண்டிய மலர்களையும் பரிசுத்தம்பொருந்திய நீரையும் நொடிப்பொழுதில் முன்புபோலத் தமது குடுமியிலும், வாயிலுமாக அமைத்துக்கொண்டு சுவாமியினிடத்திற்குவந்து சேர்ந்தார்.—எ-று.

நல்ல பதம் என்றது, சரியாய் வேகாததும், அதிகமாகவெந்து தீய்ந்ததுமல்லாதமாமிசத்தை. (௧௭௮)

வந்துதிருக் காளத்தி மலையேறி வனசரர்கள்
தந்தலைவ ருரிமையோர் தலைவனார் தமையெய்தி
அந்தணனார் பூசையினை முன்புபோ லகற்றியபின்
முந்தைமுறை தம்முடைய பூசனையின் செயன்முடிப்பார்.

(இ-ள்.) வேடர்களுக்குத் தலைவராகிய திண்ணனார் அவ்விடத்தினின்றும் வந்து திருக்காளத்தி மலையின்மேலேறித் தேவர்களுக்கு நாயகராகிய காளத்திநாதனை யடைந்து, சிவகோசரியார் அவரது திருமுடியின்மீது அருச்சித்தமலர்களை முன்புபோலத் தமது செருப்புக்காலால் நீக்கியபின்பு தாம் செய்யவேண்டிய பூசையை முன்செய்ததுபோலச் செய்துமுடித்தார்.—எ-று. (கசகூ)

ஊனமுது கல்லையுடன் வைத்திதுமுன் னையினன்றால்
ஏனமொடு மான்கலைகண் மரைகடமை யிவையிற்றில்
ஆனவுறுப் பிறைச்சியமு தடியேனுஞ் சுவைகண்டேன்
றேனுமுடன் கலந்ததிது தித்திக்கு மெனமொழிந்தார்.

(இ-ள்.) மாமிசமாகிய திருவமுதைக்கல்லையுடன் சிவபெருமானுடையசந்நிதியின்முன்னேவைத்து எமது ஆண்டவரே! இது அடியேன் முன்பு கொண்டுவந்து கொடுத்ததைப்பார்க்கிலும் சிறந்தது; பன்றியோடு மான்களும், கலைமான்களும், மரைகளும், கடமைமிருகங்களுமாகிய இவைகளில் உண்டான அவயவங்களிலுள்ள இறைச்சியமுதாகும்; இதனை அடியேனும் சுவைபார்த்திருக்கின்றேன்; தேனும் கலந்திருக்கின்றது; ஆதலால் இது தேவரீருக்கு மிகவும் தித்திப்பாயிருக்குமென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று. (கடுo)

இப்பரிசு திருவமுது செய்வித்துத் தம்முடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியி லொழுகுவார்
எப்பொழுது மேன்மேல்வந் தெழுமன்பாற் காளத்தி
அப்பரொதி ரல்லுறங்கார் பகல்வேட்டை யாடுவார்.

(இ-ள்.) இவ்விதமாக நாள்தோறும் காளத்திநாதனைத் திருவமுதுசெய்வித்து, தமது ஒப்பில்லாத மற்றைப்பூசனையுஞ் செய்துகொண்டு அந்தமார்க்கத்தில் ஒழுகுகின்றவராகிய திண்ணனார்,இடைவிடாமல் மேலுமேலும் அதிகரித்தெழுகின்ற பேரன்பினால் திருக்காளத்திநாதருடைய சந்நிதிமுன்னே நின்று இராத்திரிகால முழுவதும் நித்திரைசெய்யாதவராய்ப் பகற்காலத்தில் திருவமுதுக்காக மிருகவேட்டையாடுவார்.—எ-று. (கடுக)

மாமுனிவர் நாடோறும் வந்தணைந்து வனவேந்தர்
தாமுயலும் பூசனைக்குச் சாலமிகத் தளர்வெய்தித்
தீமையென வதுநீக்கிச் செப்பியவா கமவிதியால்
ஆமுறையி லர்ச்சனைசெய் தந்நெறியி லொழுகுவரால்

(இ-ள்.) பெருமைபொருந்திய தவமுனிவராகிய சிவகோசரியார் தினந்தோறும் சிவபெருமானுடைய சந்நிதிக்குவந்து திண்ணனார் முயன்றுசெய்கின்ற பூசையைக்குறித்து அதிகமாகத் தளர்ச்சியையடைந்து, இது தீமையானகாரியமென்று அவர்செய்த பூசனையை மாற்றிச் சைவாகமங்களில் சொல்லியிருக்கின்ற விதிப்பிரகாரம் முறைமையாக அருச்சனைசெய்து தாமும் அவ்வாறே நடந்துகொண்டுவந்தார்.—எ-று. (கடுஉ)

நாணனொடு காடனும்போய் நாகனுக்குச் சொல்லியபின்
ஊணுமுறக் கமுமின்றி யணங்குறைவா ளையுங்கொண்டு
பேணுமக னார்தம்பால் வந்தெல்லாம் பேதித்துக்
காணுநெறி தங்கள்குறி வாராமற் கைவிட்டார்.

(இ-ள்.) நாணனும் காடனும் சென்று தந்தையாகிய நாகனென்பவனுக்குத் திண்ணனாருடைய செய்கையைச் சொன்னபின்பு, அவன் அதனைக்கேட்டதனால் ஊணும் உறக்கமுமில்லாமல்,தேவராட்டியையும் அழைத்துக்கொண்டு விருப்பம்பொருந்திய தனது புத்திரராகிய திண்ணனாரிடத்துக்குவந்து, அவருக்குமுன்னிருந்த மாயாசம்பந்தமாகிய உலகவிவகாரங்களெல்லாம் பேதித்திருக்கும் முறைமையினால் தாங்கள் தேவராட்டியைக்கொண்டு பார்க்குங்குறியானது அனுகூலப்படாமல் அவரைவிட்டுப் போய்விட்டார்கள்.—எ-று.

தங்கள்குறி யாவது, தேவராட்டியானவள் சன்னதங்கொண்டு சொல்லுங் குறிகளும், மலைநெல்முதலியவற்றை எடுத்துவைத்து ஒற்றை யிரட்டைபார்த்தல் முதலியவுமாம். (கஙூங)

முன்புதிருக் காளத்தி முதல்வனா ரருளோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கை
தன்பரிசும் வினையிரண்டுஞ் சாருமல மூன்றுமற
அன்புபிழம் பாய்த்திரிவா ரவர்கருத்தி னளவினரோ.

(இ-ள்.) கண்ணப்பநாயனார் தரிசிப்பதற்குமுன்னமே திருக்காளத்தி மலையில்வீற்றிருந்தருளும் சிவபெருமானது கிருபாகடாக்ஷத்தினால், இன்பத்தைத்தருகின்ற இரசகுளிகையினால் இரும்பானது பொன்னானதுபோல, உடம்பின்தன்மையும்,நல்வினை தீவினையென்னும் இருவினைகளும், தம்மைப் பந்தித்துவருகின்ற ஆணவம் - கன்மம் - மாயையென்னும் மும்மலங்களும் விட்டு நீங்க,அன்பே தமக்கு ஒரு உருவமாகத்திரிகின்றவராகிய கண்ணப்பநாயனார் அந்த நாகன்முதலினோருடைய எண்ணத்தினளவில் நிற்கின்றவரோ ? அன்று.—எ-று.

வேதகம்-வேதித்தல்; அது தரிசனவேதி என்றும், பரிசவேதி என்றும் இரண்டுவகைப்படும்; அவற்றுள் தரிசனவேதி தன்னைக்கண்டதொருபொருளைத் தன்போலாக்குதல் ; பரிசவேதி தன்பரிசம்பட்டபொருளைத் தன்போலாக்குதல்; அவ்வேதி இரண்டும் அடங்குமாறுபொதுப்பட 'இன்புறுவேதகம்' என்று கூறினார். அது இரும்பிற்கு அநாதியாயுள்ள களிம்பைநீக்கிப் பொன்னாக்குவதுபோல, சிவபெருமானது திருவருணோக்கத்தால் அநாதியாகவே பந்தித்துவருகின்ற மும்மலமும், இருவினையும், ஆன்மபோதமும் விட்டொழிந்ததென்பார் 'தன்பரிசும் வினையிரண்டுஞ் சாருமல மூன்றுமற' என்றும், அவை நீங்கவே பின்னர் அன்பே உருவமாயினரென்பார் 'அன்புபிழம் பாய்த்திரிவார்' என்றுங் கூறினார். பிழம்பு-திரண்ட உருவம். இதனால், எமது கண்ணப்பசுவாமிகள் இருவினையொப்பும் மலபரிபாகமும் பெற்ற சத்திநிபாதத்துத்தமராயினரென்பது கூறியதாயிற்று. (கஙூச)

அங்கிலையி லன்பனா ரறிந்தநெறி பூசிப்ப
மன்னியவா கமப்படியான் மாமுனிவ ரர்ச்சித்திங்
கென்னுடைய நாயகனே யிதுசெய்தார் தமைக்காணேன்
உன்னுடைய திருவருளா லொழித்தருள வேண்டுமென.

(இ-ள்.) மேற்சொல்லிய முறைமையினல் கண்ணப்பநாயனர் தாம்அறிந்த அளவில் சிவபெருமானைப்பூசித்துவர,நிலைபெற்ற சைவாகம விதியின்பிரகாரம் சிறந்த முனிவராகிய சிவகோசரியார் பூசைசெய்து நின்று, எம்முடைய ஆண்டவரே! இவ்விடத்தில் இந்த அநுசிதமாகியகாரியத்தைச்செய்தமனிதர்கள் இன்னுரென்று அடியேன் பார்க்கவில்லை ; ஆதலால், தேவரீரது திருவருளினல் இத்தன்மையான கொடுஞ்செய்கை இனி உண்டாகாமலிருக்கும்படி நீக்கியருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து செல்ல.—எ-று.

'அன்பனுரறிந்தநெறி பூசித்தலாவது, சிவபெருமானுக்கு மாமிசம் நிவேதிக்கலாகாதென்பதும், வாயிற்கொண்டுவந்த நீர் அபிஷேகித்தற்கு உதவாதென்பதும், சிகையில் சூடியமலர் சாத்தலாகாதென்பதும், செருப்புக்கால் அவரது திருமேனியில் தீண்டலாகாதென்பதும்,அறியாமல், தாம் காளத்திநாதனைத் தரிசித்த பொழுது இக்குடுமித்தேவருக்குச் சிரசில் நீர் வார்த்து மலர்பறித்துச்சூடினவர்கள் யாரென்று நாணனைக்கேட்க, அவன் யாரோ ஒருபார்ப்பான் நீர்வார்த்து இலையும் பூவுஞ்சூடி எதையோ கொண்டுவந்து படைத்து வாயில் நமக்குத்தெரியாத சில வார்த்தைகளைச் சொல்லி இவ்வாறு செய்தானென்று சொல்லவும், அதுகேட்ட திண்ணனர் இஃதே எம்பெருமானுக்கிசைந்ததுபோலு மாதலின் யானு மவ்வாறே செய்வேனென்று கருதி,வாயில் திருமஞ்சனநீரும், குடுமியில் பத்திரபுட்பங்களும், கையில் தேக்கிலைக்கல்லையில் வைத்த ஊனமுதுமாகவந்து தொழுதுபடைத்த தன்மையாமென வறிக. (கநிரு)

அன்றிரவு கனவின்க ணருண்முனிவர் தம்பாலே
மின்றிகழுஞ் சடைமவுலி வேதியர்தா மெழுந்தருளி
வன்றிறல்வே டுவனென்று மற்றவனை நீநினையே
லன்றவன்றன் செயறன்னை நாமுரைப்பக் கேளென்று.

(இ-ள்.) (சிவகோசரியார் காளத்திநாதரது சந்நிதிமுன்னே நின்று இவ்வாறு வேண்டிக்கொண்டு மனவருத்தத்தோடுபோன) அன்றிராத்திரியில் மின்னலைப்போல விளங்குகின்ற சடைமுடியினையுடைய சிவபெருமானவர் அருளையுடைய சிவகோசரியாரிடத்துக்குச் சொப்பனத்தில் எழுந்தருளிவந்து அன்பனே! நீ அவனை மிகுந்த வலிமைபொருந்திய வேடுவனுக நினைக்கவேண்டாம் ; அவனுடைய நல்லசெய்கைகளை நாம்சொல்லக்கேட்பாயாகவென்று.—எ-று. (கநிசு)

அவனுடைய வடிவெல்லா நம்பக்க லன்பென்றும்
அவனுடைய வறிவெல்லா நமையறியு மறிவென்றும்
அவனுடைய செயலெல்லா நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள்செய்தார்.

(இ-ள்.) நீ வேடனுக நினைத்திருக்கின்ற அவனுடைய உருவம் முழுமையும் நம்மிடத்திற்பொருந்தியுள்ள அன்பின்வடிவமேயென்றும்,அவனுடைய உணர்வெல்லாம் நம்மை உணருமுணர்ச்சியேயென்றும், அவன் நம்விஷயமாகச் செய்கின்ற செய்கைகளெல்லாம் நமக்குஇனியசெய்கையேயாமென்றும், அவனுடைய நிலைமையானது இத்தன்மையானதென்று நீஅறிவாயாகவென்று கட்டளையிட்டருளினர்.—எ-று. (கநிஎ)

பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மேல்
அருப்புறுமென் மலர்முன்னை யவைநீக்கு மாதரவால்
விருப்புறுமன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படியவ் விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்.

(இ-ள்) மலையில் ஏறிவந்து அவன் நமக்குச்செய்யும் பூசைக்கு முன்பு, எமது முடியின்மேல் உன்னால் சாத்தப்பட்ட முன்னுள்ள அரும்பாகிய மெல்லிய மலர்களை நீக்கித் தான் கொண்டுவந்த மலரைச் சாத்தவேண்டுமென்னும் ஆசையினால், விருப்பம்பொருந்திய அன்பென்னும் வெள்ளத்தினது காலானது பெருகினதுபோல எமது முடியில்பட்ட அவனுடைய செருப்படியானது, அவ்விளம்பருவத்தையுடைய முருகவேளினது கால் படுவதைப்பார்க்கிலும் மிகவும் சிறப்புடையதாகும்.—எ-று.

இதுமுதல் "மன்பெருமா மறைமொழிகள்" என்பது காறுமுள்ள ஐந்து செய்யுட்களும் வெள்ளிபாடல்கள். (கஙு அ)

உருகியவன் பொழிவின்றி நிறைந்தவவ னுருவென்னும்
பெருகியகொள் கலமுகத்திற் பிறங்கியினி தொழுகுதலால்
ஒருமுனிவன் செவியுமிழு முயர்கங்கை முதறீர்த்தப்
பொருபுனலி னெனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம்.

(இ-ள்.) உருகுதற்கு ஏதுவாகிய அன்பானது குறைவின்றி நிறைந்த அவனது வடிவமென்னும் பெரியபாத்திரத்தினிடத்தில் விளங்கி இனிமையோடு ஒழுகுகின்றபடியால், அது சன்னு என்னும்பெயரையுடைய ஒருமுனிவன் தன்காதின் வழியாக வெளிப்படுத்திய உயர்ந்த கங்கைமுதலாகிய தீர்த்தங்களின் அலைகளால் மோதுகின்ற நீரைப்பார்க்கிலும், எமக்கு அவன்வாயினின்றும் உமிழப்பட்ட நீரானது பரிசுத்தமுள்ளதா யிருக்கின்றது.—எ-று.

'ஒருமுனிவன் செவியுமிழு முயர்கங்கை' என்பதன் வரலாறு, பூர்வத்தில் அயோத்தியாபுரியையாண்ட சகரமகாராஜன் அஸ்வமேதயாகஞ்செய்ய விடுத்த குதிரையைத் தேவேந்திரன் வஞ்சகமாகக்கொண்டுபோய்ப் பாதலத்தில் கபிலமகாமுனிவர் தவஞ்செய்யுமிடத்தில் ஒளித்துவைத்தனன். அதனை அவ்வரசன்புத்திரர்களாகிய சகரர்கள் அறுபதினாயிரம்பேரும் உலகெங்கும் தேடியுங்காணமல், பூமியைத்தோண்டிப் பாதலத்திற்சென்று அங்குத் தவஞ்செய்திருந்த கபிலமுனிவருக்குச் சமீபத்தில் குதிரையைக்கண்டு, அவர் அதனைக் களவுசெய்ததாக எண்ணி வைதார்கள். அப்பொழுது முனிவர் கோபத்தினால் விழித்துப்பார்க்க,அவ்வறுபதினாயிரம் பெயரும் சாம்பராயினர். அதனையுணர்ந்த அஞ்சுமானென்பவன் அவர்க்கு இதங்கூறிக் குதிரையைக்கொணர்ந்து தனது பிதாமகன்செய்யும் வேள்வியை முடித்தான். அவன் சந்ததியில்வந்த பகீரதனென்பவன் கபிலமுனிவர் கோபத்தினால் சாம்பலாயெரிந்து நரகமடைந்த தன் முன்னோர்களாகிய சகரர்கள் அறுபதினாயிரம் பெயரையும் சுவர்க்கத்திற்சேர்க்கக் கருதிப் பிரமனைநோக்கித் தவஞ்செய்தான். அப்பொழுது பிரமன் பிரசன்னமாய் ஆகாயகங்கைவந்து அவர்கள் அஸ்தியில்படின் சுவர்க்கமடைவார்கள்.அக்கங்கைபூமியில்வரின்அதின்வேகத்தைச்சிவபெருமானையன்றித் தடுப்பவரொருவருமில்லை; ஆதலால்,அவரைநோக்கித் தவஞ்செய்யென்று கூறியகன்றனன். அவ்வாறே பகீரதன் சிவபெருமானைநோக்கித்

தவஞ்செய்து கங்கையைப்பெற்றுவருகையில் அது சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகமும் நடுங்கும்படியாக விரைந்துவர, அதனைப் பெருமானுணர்ந்து தமது சடையின் ஒருநுனியில் தரித்தனர். பின்பு பகீரதன்வருந்தி வேண்டி அதில் ஒருசிறுதுளியைப் பெற்றுக்கொண்டுவரும்பொழுது அக்கங்கை வழியில் தவஞ்செய்துகொண்டிருந்த சன்னுமுனிவருடைய யாகசாலையையழிக்க, அவர் அதனை உள்ளங்கையில் ஏற்றுப் பானஞ்செய்தனர். இப்பால் பகீரதன் தன்பின்னே கங்கைவராததைக் கண்டு, இஃது இம்முனிவரால் நேரிட்டதென்றறிந்து அவரை வருந்திவேண்ட, சன்னுமுனிவர் இரங்கி அக்கங்கையைக் காதின்வழியாகப் பூமியில் விட்டார். பின் பகீரதன் பாதலத்திற் கொண்டுபோய்ச் சாம்பராய்க்கிடந்த சகரர்கள் எலும்பிற்படிவித்து அவர்களைச் சுவர்க்கத்திற் சேர்த்தான் என்பதாம். கங்கை பகீரதனால் பூமியில் கொண்டுவரப்பட்டமையால் பகீரதி என்றும், சன்னுமுனிவரின் காதின்வழியே வந்தமையால் சானவி என்றும் சொல்லப்பட்டது. (கடுகூ)

இம்மலைவந் தெனையடைந்த கானவன்ற னியல்பாலே
மெய்ம்மலரு மன்புமேல் விரிந்தனபோல் விழுதலால்
செம்மலர்மே லயனெடுமால் முதற்றேவர் வந்துபுனை
எம்மலரு மவன்றலையா லிடுமலர்போ லெனக்கொவ்வா.

(இ-ள்.) இந்தமலையில் ஏறிவந்து எம்மையடைந்த அந்தவேடுவனுடைய செய்கையினாலே அவன் தன் குடுமியில் சூடியமலரும் அன்பானது மேல்விரிந்திருப்பதுபோல அவன் சிகையினின்றும் விழுகின்றபடியால், சிவந்த தாமரை மலரில் வசிக்கின்ற பிரமனோடு விஷ்ணுமுதலாகிய தேவர்கள்வந்து அருச்சனைசெய்கின்ற எப்படிப்பட்ட புஷ்பங்களும் அவன் தலையில்வைத்துக்கொண்டுவந்து எமக்குத் தரிக்கின்ற புஷ்பங்களுக்குச் சமானமாகாவாம்.—எ-று. (கசுO)

வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ வெனுமன்பால்
நையுமனத் தினிமையினி னையமிக மென்றிடலால்
செய்யுமறை வேள்வியோர் முன்புதருந் திருந்தவியில்
எய்யும்வரிச் சிலையவன்று னிட்டவூ னெனக்கினிய.

(இ-ள்.) வெப்பமாகிய நெருப்பினிடத்தில் காய்ச்சி இதுபதமாகவெந்திருக்கின்றதோ? அதைப் பரீக்ஷிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் உருகுகின்ற மனத்திலுண்டாகிய இனிமையோடு நையும்படி மெல்லுதலினால்,வேதவிதிப்படியே வேள்விசெய்கின்ற வேதியர்கள் முதலில் கொடுக்கின்ற நல்ல அவிப்பாகமாகிய மாமிசத்தைப்பார்க்கிலும், எய்கின்ற கட்டமைந்த வில்லையுடைய அவ்வேடனானவன் படைத்த ஊனமுதம் எமக்கு இனியனவாயிருக்கின்றன.—எ-று. (கசுக)

மன்பெருமா மறைமொழிகண் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கும்
இன்பமொழித் தோத்திரங்கண் மந்திரங்க ளியாவையினும்
முன்பிருந்து மற்றவன்றன் முகமலர வகநெகிழ்ந்த
அன்பினினெந் தெனையல்லா லறிவுறா மொழிநல்ல.

(இ-ள்.) நிலைபெற்ற மிகுந்தபெருமைபொருந்திய வேதவாக்கியங்களும், சிறந்த முனிசிரேஷ்டர்கள் சந்தோஷித்துச் சொல்லுகின்ற இன்பமயமான மொழிகளையுடைய தோத்திரங்களும், மந்திரங்களுமாகிய இவையெல்லாவற்றிலும் நம

க்குமுன்னே யிருந்துகொண்டு அந்தவேடன் முகமலர்ச்சி யடைந்து மனமுருக அன்பினால் நினைந்து எம்மையல்லாமல் வேறொருவனையும் அறிந்து துதியாத அவனுடைய வார்த்தைகளே மிகவும் இனியனவாகும்.—எ-று. (கசுஉ)

உனக்கவன்றன் செயல்காட்ட நாளைநீ யொளித்திருந்தால்
எனக்கவன்றன் பரிவிருக்கும் பரிசெல்லாங் காண்கின்றாய்
மனக்கவலை யொழிகென்று மறைமுனிவர்க் கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியா ரெழுந்தருளிப் போயினார்.

(இ-ள்.) உனக்கு அத்தன்மையாகிய வேடனது அன்பின்நிலைமையைக்காண்பிப்பதற்கு நாளைக்குநீ அவ்விடத்தில் ஒளித்துக்கொண்டிருந்தால் எம்மிடத்தில் அவன்செய்யும் அடிமைத்திறத்தின் முறைமையனைத்தும் அறிந்துகொள்வாய்; ஆதலால், நீ அவ்வேடன் இழிவானகாரியஞ் செய்தானென்று கொண்டிருக்கின்ற மனவருத்தத்தை ஒழித்துவிடக்கடவாயென்று வேதங்களையுணர்ந்த சிவகோசரியாருக்குக் கனவில் அருளிச்செய்து கங்கையைத்தரித்த சடைமுடியினையுடைய சிவபெருமான் மறைந்தருளினார்.—எ-று. (கசுங)

கனவுநிலை நீங்கியபின் விழித்துணர்ந்து கங்குலிடைப்
புனைதவத்து மாமுனிவர் புலர்வளவுங் கண்டுயிலார்
மனமுறுமற் புதமாகி வரும்பயமு முடனாகித்
துனைபுரவித் தனித்தேர்மேற் றோன்றுவான் கதிர்தோன்ற.

(இ-ள்.) அருமையாகச்செய்த சிறந்த தவமுனிவராகிய சிவகோசரியார் அன்றிரவில் கண்டசொப்பனமானது நீங்கினபின்பு விழித்து,சிவபெருமான் எழுந்தருளிவந்து அருள்செய்ததை யுணர்ந்து, பொழுதுவிடியுமளவும் நித்திரைகொள்ளாதவராய், மனத்தில் மிகுந்த ஆச்சரியமும் (அவ்வன்பர்செய்த காரியத்தை அநுசிதமாகக் கொண்டோமென்னும்) அச்சமும் அடைந்து, வேகமாகச்செல்லுகின்ற குதிரைகள் பூட்டிய ஒப்பற்ற இரதத்தின்மேல் தோன்றுகின்ற சிறந்த சூரியன் உதயஞ்செய்ய.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கசுச)

முன்னைநாள் போல்வந்து திருமுகலிப் புனன்மூழ்கிப்
பன்முறையுந் தம்பிரா னருள்செய்த படிநினைந்து
மன்னுதிருக் காளத்தி மலையேறி முன்புபோற்
பின்னுகனைப் பூசித்துப் பின்பாக வொளித்திருந்தார்.

(இ-ள்.) முன்னாள்போலப் பொன்முகலியாற்றுக்குவந்து ஸ்நானஞ்செய்து, தமதுபெருமானாகிய காளத்திநாதர் சொப்பனத்தில் எழுந்தருளிவந்து கட்டளையிட்டருளிய முறைமையைப் பலதரமும் சிந்தித்து, நிலைபெற்ற திருக்காளத்திமலையில் ஏறி, முன்புபோலச் சிவபெருமானைப் பூசித்து, அவருக்குப் பின்புறமாக ஓரிடத்தில் ஒளித்துக்கொண்டிருந்தார்.—எ-று. (கசுரு)

வேறு.

கருமுகி லென்ன நின்ற கண்படா வில்லி யார்தாம்
வருமுறை யாறு நாளின் வருமிர வொழிந்த காலை

அருமறை முனிவ ரூர்வந் தணைவதன் முன்னம் போகித்
தருமுறை முன்பு போலத் தனிப்பெரு வேட்டை யாடி.

(இ-ள்.) கருமையாகிய மேகம்போல இரவில் நித்திரைகொள்ளாமல் காளத்திநாதரைப் பாதுகாத்துக்கொண்டிருந்த திண்ணனூர் கிரமமாகவருகின்ற ஆறு நாளில் வந்த ஐந்தாநாளிராத்திரிப்பொழுது விடிந்தபோது, அரிய வேதங்களை யுணர்ந்த சிவகோசரியார் பூசைசெய்ய வருவதற்கு முன்னே தாம் சிவபெருமானுக்கு ஊனமுதமைத்து ஊட்டுகின்ற வழக்கம்போலக் காட்டிற்குப்போய் ஒப்பற்ற பெரிய மிருகவேட்டையாடி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௬௬)

மாறிலூ னமுது நல்ல மஞ்சனப் புனலுஞ் சென்னி
ஏறுநாண் மலரும் வெவ்வே றியல்பினி லமைத்துக் கொண்டு
தேறுவார்க் கமுத மான செல்வனூர் திருக்கா ளத்தி
ஆறுசேர் சடையார் தம்மை யணுகவந் தணையா நின்றூர்.

(இ-ள்.) குற்றமற்ற மாமிசமாகிய திருவமுதையும், பரிசுத்தம்பொருந்திய திருமஞ்சன நீரையும், திருமுடியில் சாத்துதற்குரிய புதிய பூங்கொத்துக்களையும் தனித்தனி முறைமைப்படியே அமைத்துக்கொண்டு, தம்மை உண்மைப்பொருளென்று உணர்ந்த மெய்யன்பர்களுக்கு முத்திச்செல்வத்தைத் தந்தருளுகின்றவரும் திருக்காளத்திமலையில் வீற்றிருந்தருளும் கங்கையைத் தரித்த சடையினையுடையவருமாகிய சிவபெருமானை அடையும்படி வந்துகொண்டிருந்தார்.—எ-று.

இத்தனை பொழுது தாழ்த்தே னெனவிரைந் தேகு வார்முன்
மொய்த்தபல் சகுன மெல்லா முறைமுறை தீங்கு செய்ய
இத்தகு தீய புட்க ளீண்டமுன் னுதிரங் காட்டும்
அத்தனுக் கென்கொல் கெட்டே னடுத்ததென் றணையும் போதில்.

(இ-ள்.) (எமது ஆண்டவருக்கு ஊனமுது படைப்பதற்கில்லாமல்) இவ்வளவுநேரம் காலதாமசஞ் செய்தேனென்று சீக்கிரமாகப்போகின்ற திண்ணனூருக்கு முன்னே,கூட்டமாகிய பல சகுனப்பட்சிகளெல்லாம் அடிக்கடி தீக்குறியைக் காட்ட, இத்தன்மையாகிய தீச்சகுனங்களை யுணர்த்துகின்ற பறவைகள் என் கண்களுக்குத் தோன்றுகிறதினால், முன்னே இரத்தக் குறியைக் காட்டும்; ஆதலால், நானில்லாதபொழுது எம்பெருமானுக்கு என்ன அபாயம் நேரிட்டதோ, ஆ கெட்டேன் என்று விசனப்பட்டு வருகிறபொழுது.—எ-று. (௧௬௮)

அண்ணலார் திருக்கா ளத்தி யடிகளார் முனிவ னூர்க்குத்
திண்ணனூர் பரிவு காட்டத் திருநய னத்தி லொன்று
துண்ணென வுதிரம் பாய விருந்தனர் தூரத் தேயவ்
வண்ணவெஞ் சிலையார் கண்டு வல்விரைந் தோடி வந்தார்.

(இ-ள்.) பெருமையிற் சிறந்தவராகிய திருக்காளத்திமலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் சிவகோசரியாருக்குக் கண்ணப்பநாயனூருடைய அன்பின் மிகுதியைக் காட்டும்பொருட்டுத் தமது திருக்கண்களில் வலதுகண்ணிலிருந்து பார்த்தவர்கள் அஞ்சும்படி உதிரஞ் சொரியக் காணப்பட்டார்; அதனை அழகு

பொருந்திய கொடிய வில்லையுடைய அந்தத் திண்ணனார் தூரத்தே கண்டு மிகுந்த விரைவாக ஓடிவந்தார்.—எ-று. (௧௬௯)

வந்தவர் குருதி கண்டார் மயங்கினார் வாயி னன்னீர்
சிந்திடக் கையி லூனுஞ் சிலையுடன் சிதறி வீழக்
கொந்தலர் பள்ளித் தாமங் குஞ்சியின் றலைந்து சோரப்
பைந்தழை யலங்கன் மார்பர் நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார்.

(இ-ள்.) பசிய தழைகளால் கட்டப்பட்ட மாலையைத் தரித்த மார்பினையுடைய திண்ணனார் வந்தவுடனே சிவபெருமானுடைய கண்ணிலிருந்து ஒழுகுகின்ற உதிரத்தைப் பார்த்து (எமது ஆண்டவருக்கு இவ்வாறு சம்பவித்ததே இதற்கு நான் என்னசெய்வேனென்று) மயங்கினார்; தாம் பொன்முகலியாற்றிலிருந்து திருமஞ்சனத்துக்காக வாயில் கொண்டுவந்த நல்ல நீரும் நிலத்தில் சிந்திப்போகவும், கையிலிருக்கின்ற மாமிசமும் வில்லுடன் சிதறிக் கீழே விழவும், கொத்தாக மலர்ந்திருக்கின்றமலர்களும் குடுமியினின்றும் அலைந்து கீழே விழவும் பூமியில் பதைபதைத்து விழுந்தார்.—எ-று. (௧௭0)

விழுந்தவ ரெழுந்து சென்று துடைத்தனர் குருதி வீழ்வ
தொழிந்திடக் காணார் செய்வ தறிந்தில ருயிர்த்து மீள
அழிந்துபோய் வீழ்ந்தார் தேறி யாரிது செய்தாரென்னா
எழுந்தனர் திசைக ளெங்கும் பார்த்தன ரெடுத்தார் வில்லும்.

(இ-ள்.) நிலத்தில் பதைத்து விழுந்த கண்ணப்பநாயனார் மறுபடியும் எழுந்துபோய்ச் சிவபெருமானுடைய திருக்கண்ணிலிருந்து ஒழுகுகின்ற உதிரமானது நிற்கும்படி தமது கையினால் துடைத்தார்; அப்படித் துடைத்ததனால் நில்லாமல் சொரியக்கண்டு, அவ்வுதிரம் சொரியாமல் நிற்பதற்கு வேறொன்றையும் அறியாதவராய்ப் பெருமூச்சுவிட்டு,மீளவும் மனம்வருந்திச் சிறிதுதூரஞ் சென்று மயங்கிக் கீழேவிழுந்தார்; பின்பு மூர்ச்சை தெளிந்து எமது ஆண்டவருக்கு யார் இப்படிப்பட்ட துன்பத்தைச் செய்தவர்கள் என்று எழுந்திருந்து வில்லையெடுத்துக்கொண்டு எட்டுத்திக்கிலும்போய்ப் பார்த்தார்.—எ-று. (௧௭௧)

வாளியுந் தெரிந்து கொண்டிம் மலையிடை யெனக்கு மாறா
மீளிவெம் மறவர் செய்தா ருளர்கொலோ விலங்கின் சாதி
ஆளிமுன் னாகி யுள்ள விளைத்தவோ வறியே னென்று
நீளிருங் குன்றச் சார னெடிதிடை நேடிச் சென்றார்.

(இ-ள்.) அம்புகளைத் தெரிந் தெடுத்துக்கொண்டு இம் மலையினிடத்தில் எனக்கு விரோதமாக எம்பெருமானுடைய கண்ணிற்குத் தீங்கு செய்த வலிமை பொருந்திய கொடிய வேடர்கள் இருக்கின்றார்களோ? அல்லது சிங்கமுதலாகிய மிருகசாதிகள் இப்படிச்செய்தனவோ? யான் அறியமாட்டேனென்று நீண்டிருக்கின்ற பெரிய மலைப்பக்கத்தில் நெடுந்தூரமளவும் தேடிப்போனார்.—எ-று. ()

வேடரைக் காணார் தீய விலங்குகண் மருங்கு மெங்கு
நாடியுங் காணார் மீண்டு நாயனார் தம்பால் வந்து

நீடிய சோகத் தோடு நிறைமலர்ப் பாதம் பற்றி
மாடுறக் கட்டிக் கொண்டு கதறினர் கண்ணீர் வார.

(இ-ள்.) அங்கு வேடர்கள் ஒருவனையுங்காணுதவராய்க் கொடிய மிருகங்களைப் பக்கத்தில் எவ்விடத்திலும் தேடியுங்காணுமல் திரும்பிச் சிவபெருமானிடத்திற்கு வந்து மிகுந்த வருத்தத்தோடும் ஒளிபொருந்திய தாமரைமலர்போன்ற திருவடிகளைப் பிடித்துக்கொண்டு அப்பெருமானது திருமேனியை அருகில் பொருந்தக் கட்டியணைத்துக்கொண்டு கண்ணீரொழுகும்படியாகக் கதறியழுதார். ()

பாவியேன் கண்ட வண்ணம் பரமனுர்க் கடுத்த தென்னோ
ஆவியி னினிய வெங்க ளத்தனுர்க் கடுத்த தென்னோ
மேவினர் பிரிய மாட்டா விமலனுர்க் கடுத்த தென்னோ
ஆவதொன் றறிகி லேனு னெய்செய்கே னென்று பின்னும்.

(இ-ள்.) பாவியாகிய நான் கண்ட தீச்சகுனத்தின்படியே எமது பரமனுருக்கு இத்தீங்குநேர்ந்தது யாது காரணமோ? எனது உயிரைப்பார்க்கிலும் சிறந்தவராகிய எங்கள் முதல்வருக்கு இத்துன்பம் சம்பவித்தது யாதுகாரணமோ? தம்மையடைந்தவர்கள் அன்பினுல் பிரியாமலிருக்கின்ற நின்மலராகிய எமது ஆண்டவருக்கு இவ்வருத்தம் உண்டாகியது யாதுகாரணமோ? இதனைத் தீர்ப்பதற்குரிய மருந்தொன்றையும் நான்அறியேன்; ஆதலால் என்னசெய்வேனென்று விசனப்பட்டுப் பின்னும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௭௪)

என்செய்தாற் றீரு மோதா னெம்பிரான் றிறத்துத் தீங்கு
முன்செய்தார் தம்மைக் காணேன் மொய்கழல் வேட ரொன்று
மின்செய்வார் பகழிப் புண்க டீர்க்குமெய் மருந்து நாடிப்
பொன்செய்தாழ் வரையிற் கொண்டு வருவனு னென்று போனுர்.

(இ-ள்.) என்னசெய்தால் இக்கண்ணிலிருந்து ஒழுகுகின்ற உதிரமானது நிற்கும்; எமது ஆண்டவர்விஷயத்தில் இத் தீங்கான செய்கையை முன்னேசெய்தவர்கள் ஒருவரையும் நான் பார்க்கவில்லை; ஆதலால், நெருங்கிய வீரக்கழலையணிந்த கால்களையுடையவேடர்கள் எப்பொழுதும் ஒளிபொருந்திய நீண்ட அம்பினுல் உண்டாகிய புண்களைத் தீர்க்கின்றதாகிய மெய்மையாகிய மருந்தைத்தேடிப் பொன்பொடிகளையுடைய இம்மலையி னடிவாரத்திற்போய்க் கொண்டுவருவேனென்று போனுர்.—எ-று. (௧௭௫)

நினைத்தனர் வேறு வேறு நெருங்கிய வனங்க ளெங்கும்
இனத்திடைப் பிரிந்த செங்க ணேறெனை வெருக்கொண் டெய்திப்
புனத்திடைப் பறித்துக் கொண்டு பூதநா யகன்பால் வைத்த
மனத்தினுங் கடிது வந்து மருந்துகள் பிசைந்து வார்த்தார்.

(இ-ள்.) மருந்துகளைத் தேடுங் கருத்துடையவராய்த் தனித்தனி மரங்கள் நெருங்கிய வனங்களெங்கும் தனது கூட்டத்தை விட்டுப் பிரிந்த சிவந்த கண்ணையுடைய ரிஷபம்போல, சுவாமிக்குச் சம்பவித்த துன்பத்தைக்குறித்து மனதில் அச்சங்கொண்டு சென்று, புனங்களில் அப்பச்சிலை மருந்துகளைப் பறித்து

க்கொண்டு பூதகணங்களுக்கு நாயகராகியசிவபெருமானிடத்தில் தாம் வைத்தமனதைப்பார்க்கிலும் அதிக விரைவாகவந்து அம்மருந்துகளைப்பிழிந்து உதிரம் ஒழுகுகின்ற அவர் திருக்கண்ணில் வார்த்தார்.—எ-று. (கஎசு)

மற்றவர் பிசைந்து வார்த்த மருந்தினாற் றிருக்கா ளத்திக்
கொற்றவர் கண்ணிற் புண்ணீர் குறைபடா தொழுகக் கண்டே
இற்றையி னிலைமைக் கென்னோ வினிச்செய லென்று பார்ப்பார்
உற்றநோய் தீர்ப்ப தூனுக் கூனெனு முரைமுன் கண்டார்.

(இ-ள்.) இவ்விதமாகத் திண்ணனார் பிழிந்து வார்த்த ஓர் மருந்தினாலும் திருக்காளத்திமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானது கண்ணினின்றும் பெருகிவருகின்ற உதிரமானது சிறிதும் நில்லாமல் ஒழுகப்பார்த்து, இப்படி மாறாமல் உதிரஞ்சொரிகின்ற நிலைமைக்கு இனிச்செய்யவேண்டியது யாதென்று ஆலோசித்துப்பார்த்தார், ஊனுக்கு உண்டான நோயைத் தீர்ப்பது ஊனேயென்று உலகிலுள்ளவர்கள் வழங்கும் பழமொழியை நினைத்துக்கொண்டார்.—எ-று. (கஎஎ)

இதற்கினி யென்க ணம்பா லிடந்தப்பி னெந்தை யார்கண்
ணதற்கிது மருந்தாய்ப் புண்ணீர் நிற்கவு மடுக்கு மென்று
மதர்த்தெழு முள்ளத் தோடு மகிழ்ந்துமுன் னிருந்து தங்கண்
முதற்சர மடுத்து வாங்கி முதல்வர்தங் கண்ணி லப்ப.

(இ-ள்.) இக்கண்ணுக்குண்டாகிய நோயைத் தீர்ப்பதற்காக இனி என்னுடைய கண்ணை அம்பினால் பெயர்த்துப்பதித்தால், எமது ஆண்டவருடைய கண்ணிற்கு இதுவே தகுந்தமருந்தாகி ஒழுகுகின்ற உதிரமானது நின்றுவிடவுங்கூடுமென்று பூரித்து எழுந்தமனதோடு மகிழ்ந்து சந்நிதிமுன்னேயிருந்துகொண்டு தம்முடைய வலக்கண்ணை ஒப்பற்ற அம்பினால் தோண்டி யெடுத்துச் சிவபெருமானுடைய கண்ணில் அப்பினவளவில்.—எ-று. (கஎஅ)

நின்றசெங் குருதி கண்டார் நிலத்தினின் றேறப் பாய்ந்தார்
குன்றென வளர்ந்த தோள்கள் கொட்டினார் கூத்து மாடி
நன்றுநான் செய்த விந்த மதியென நகையுந் தோன்ற
ஒன்றிய களிப்பி னாலே யுன்மத்தர் போல மிக்கார்.

(இ-ள்.) முன் ஒழுகிக்கொண்டிருந்த உதிரமானது நின்றுவிடக்கண்டார்; சந்தோஷத்தினால் பூமியினின்றும் எழுந்து குதித்தார்; மலையைப்போல வளர்ந்த இரண்டு புயங்களையும் தட்டி ஆனந்தக்கூத்தாடினார்; நான் இப்போது கொண்ட இந்தப்புத்தியானது மிகவும் நன்றாயிருக்கின்றதென்று சிரிப்புமுண்டாக மனதிற்பொருந்திய சந்தோஷத்தினாலே பயித்தியங்கொண்டவர்போல ஒன்றுந் தோன்றாமல் மேம்பட்டவரானார்.—எ-று. (கஎகூ)

வலத்திருக் கண்ணிற் றங்க ணப்பிய வள்ள லார்த
நலத்தினைப் பின்னுங் காட்ட நாயனார் மற்றைக் கண்ணில்

உலப்பில்செங் குருதி பாயக் கண்டனா ருலகில் வேடர்
குலப்பெருந் தவத்தால் வந்த கொள்கையி னும்பர் மேலார்.

(இ-ள்.) சுவாமியினுடைய வலக்கண்ணில் தம்முடைய வலக்கண்ணை அம்பினால்பெயர்த்து அப்பிய எமது கண்ணப்பநாயனாரது அன்பின் முதிர்ச்சியை மறுபடியும் சிவகோசரியாருக்குக் காட்டும்பொருட்டுக் காளத்திநாதர் தமது இடக்கண்ணிலும் வற்றாத சிவந்த உதிரமானது பெருகச்செய்ய,இந்நிலவுலகத்தில் வேடர்குலத்தார் செய்த பெருந்தவத்தினால் அவதரித்துப் பத்தியினால் தேவர்களுக்கும் மேம்பட்டவராகிய கண்ணப்பநாயனார் அதனைப்பார்த்தார்.—எ-று. (கஅ0)

கண்டபின் கெட்டே னெங்கள் காளத்தி யார்கண் ணொன்று
புண்டரு குருதி நிற்க மற்றைக்கண் குருதி பொங்கி
மண்டுமற் றிதனுக் கஞ்சேன் மருந்துகை கண்டே னின்னும்
உண்டொரு கண்ணக் கண்ணை யிடந்தப்பி யொழிப்பே னென்று.

(இ-ள்.) அவ்வாறு பார்த்தபின்பு, ஆ கெட்டேன் என்று வருந்தி, எங்கள் காளத்திநாதரது கண்களில் ஒருகண் புண்பட்டு வருகின்ற உதிரமானது நின்றுவிட, மற்றை இடக்கண்ணிலிருந்து உதிரமானது பொங்கி ஓடி வருகின்றது; ஆனால் இதற்கு நான் பயப்படமாட்டேன் ; இதனைத் தீர்க்கத்தக்க மருந்தைக் கைகண்டிருக்கின்றேன் ; எனக்கு இன்னும் ஒரு கண்ணிருக்கின்றது ; ஆதலால், அக்கண்ணையும் பெயர்த்து அப்பி, எமது சுவாமியினுடைய கண்ணுக்கு நேர்ந்த புண்ணைத் தீர்ப்பேனென்று.—எ-று.

கை காணல் = அனுபவப்பட்டிருத்தல். (கஅக)

கண்ணுதல் கண்ணிற் றங்க ணிடந்தப்பிற் காணு நேர்பா
டெண்ணுவார் தம்பி ரான்றன் றிருக்கண்ணி லிடக்கா லூன்றி
உண்ணிறை விருப்பி னோடு மொருதனிப் பகழி கொண்டு
திண்ணனார் கண்ணி லூன்றத் தரித்திலர் தேவ தேவர்.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருக்கண்ணில் தம்முடையகண்ணைப் பெயர்த்து அப்பும்போது தமக்கு இரண்டுகண்ணும் இல்லாமையால் சுவாமியினது கண்ணிருக்குமிடத்தைத் தெரிந்துகொள்ள எண்ணங்கொண்டு, காளத்திநாதருடைய உதிரமொழுகுகின்ற கண்ணில் தமது இடக்காலை ஊன்றிக்கொண்டு, உள்ளத்தில் நிறைந்த பெருவிருப்பத்தோடும் ஒப்பற்ற ஒரு அம்பைக்கையில் எடுத்துத்திண்ணனார் தமதுகண்ணைத்தோண்டும்படி ஊன்றினபொழுது, தேவர்களுக்கெல்லாம் தேவராகிய சிவபெருமான் அதனைத் தரியாதவரானார்.—எ-று. (கஅஉ)

செங்கண்வெள் விடையின் பாகர் திண்ணனார் தம்மை யாண்ட
அங்கணர் திருக்கா ளத்தி யற்புதர் திருக்கை யம்பாற்
றங்கண்முன் னிடக்குங் கையைத் தடுக்கமுன் றடுக்குநாக
கங்கண ரமுத வாக்கு கண்ணப்ப நிற்க வென்ற.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய வெண்மையாகிய ரிஷபவாகனத்தில் எழுந்தருளுகின்றவரும், திண்ணனாரை அடிமைகொண்டருளிய அருட்கண்ணையுடையவரும், திருக்காளத்திமலையில் வீற்றிருந்தருளும் அற்புதருமாகிய சிவபெருமானுடைய திருக்கையானது வெளிப்பட்டு, அம்பினால் தமது இடக்கண்ணை விரைந்து தோண்டுகின்ற அவரது கையைத்தடுக்க மூன்றுஅடுக்காக நாககங்கணத்தை யணிந்த எமது ஆண்டவருடைய அமுதம்போன்ற திருவாக்கானது கண்ணப்பனே ! நிற்க என்று எழுந்தன.—எ-று.

'மூன்றடுக்கு நாககங்கண ரமுதவாக்கு' என்றது, நில்லுகண்ணப்ப நில்லு கண்ணப்ப நில்லுகண்ணப்ப, என்று அருளியதாம். இதனை,

"அப்பலுங் குருதி நிற்பதொத் துருப்பெறக்
கண்டு நெஞ்சுகந் துகந்து மற்றைக்
கண்ணிலும் வடிக்கணை மடுத்தனன் மடுத்தலும்
நில்லுகண் ணப்ப நில்லுகண் ணப்பவென்
னன்புடைத் தோன்ற னில்லுகண் ணப்பவென்
றின்னுரை யதனொடு மெழிற்சிவ லிங்கந்
தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையா
லன்னவன் றன்கை யம்பொடு மகப்படப்
பிடித்தருளினன்"— என்று நக்கீரதேவநாயனா ரருளிச்செய்த திருக்கண்ணப்பதேவர் திருமறத்தும்,

"மறைமொழி பிறந்த தம்வாய் மலர்திறந் தருட்பே ராழி
இறைவர்கண் ணப்ப நிற்க வெனமுக்கான் மொழிந்து கொண்டே
கறையணற் கங்க ணத்த கையினாற் பிடித்தார் செங்கை
யுறைநறும் பொலம்பூ மாரி யும்பர்மண் புதையப் பெய்தார்." — என்று சீகாளத்திபுராணத்தும் வருமாறுகாண்க.

'தடுக்குமூன்றடுக்குநாக-கங்கணரமுதவாக்கு கண்ணப்ப நிற்கவென்றே' என்றும் பாடம். (௧அ௩)

கானவர் பெருமா னார்தங் கண்ணிடந் தப்பும் போதும்
ஊனமு துவந்த வைய ருற்றுமுன் பிடித்த போதும்
ஞானமா முனிவர் கண்டார் நான்முகன் முதலா யுள்ள
வானவர் பூவின் மாரி பொழிந்தனர் மறைக ளார்ப்ப.

(இ-ள்.) வேடர்களுக்குத் தலைவராகிய கண்ணப்பநாயனார் தமது கண்ணைத்தோண்டிச் சுவாமியினுடையகண்ணில் அப்பும்பொழுதும், அவரால் இடப்பட்ட மாமிசமாகிய திருவமுதை விரும்பியுண்டருளிய சிவபெருமான் பிரசன்னமாகி அவரதுகையைப் பிடித்தபொழுதும், சிவஞானத்தையுடைய பெரிய தவமுனிவராகிய சிவகோசரியார் பார்த்துக்கொண்டிருந்தார்; அப்பொழுது பிரமன்முதலாகிய தேவர்கள் வேதகோஷங்கள் அதிகரிக்கப் புஷ்பமாரியை இடைவிடாமல் பொழிந்தார்கள்.—எ-று. (௧அ௪)

பேறினி யிதன்மே லுண்டோ பிரான்றிருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தங்க ணிடந்தப்ப வுதவுங் கையை
ஏறுயர்த் தவர்தங் கையாற் பிடித்துக்கொண் டென்வ லத்தின்
மாறிலாய் நிற்க வென்று மன்னுபே ரருள்பு ரிந்தார்.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருக்கண்ணிலுண்டாகிய கெடுதியைப்பார்த்துப் பயமடைந்து தம்முடைய கண்ணைத்தோண்டி அப்புதற்கு உதவியாயிருந்த கண்ணப்பநாயனருடைய கையை ரிஷபக்கொடியையுடைய சிவபெருமான் தமது திருக்கரத்தினல்பிடித்துக்கொண்டு, குற்றமற்ற அன்பினையுடைய கண்ணப்பனே! நீ எமது வலப்புறத்தில் இருக்கக்கடவாயென்று நிலைபெற்ற பெரிய திருவருள்புரிந்தருளினர்; இதைப்பார்க்கிலும் சிறந்த பேறு வேறே ஒருவர்க்கு உண்டோ? இல்லை.—எ-று. (௧அ௫)

மங்குல்வாழ் திருக்கா ளத்தி மன்னனார் கண்ணிற் புண்ணீர்
தங்கணான் மாற்றப் பெற்ற தலைவர்தா டலைமேற் கொண்டே
கங்கைவாழ் சடையார் வாழுங் கடவூரிற் கலய னாராம்
பொங்கிய புகழின் மிக்கார் திருத்தொண்டு புகல லுற்றேன்.

(இ-ள்.) மேகங்கள் தவழுகின்ற திருக்காளத்தி மலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருக்கண்ணிலிருந்து ஒழுகிய உதிரத்தைத், தமது திருக்கண்ணைப் பெயர்த்து அப்பி நிற்கும்படி செய்யப்பெற்ற எமது தலைவராகிய கண்ணப்பநாயனரது திருவடிகளைச் சிரசின்மேற் சூடிக்கொண்டு, கங்காநதியுலாவுகின்ற சடையினையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கடவூரில்வாழ்ந்திருந்த குங்கிலியக்கலயநாயனரென்னும் சிறந்த புகழினையுடைய அடியவரது திருத்தொண்டினை இனிச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (௧அ௬)

**கண்ணப்பநாயனர்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

---

ஆக திருவிருத்தம் - அ௩௫.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.




---

# குங்கிலியக்கலய நாயனார் புராணம்.

வாய்ந்தநீர் வளத்தா லோங்கி மன்னிய பொன்னி நாட்டின்
ஏய்ந்தசீர் மறையோர் வாழு மெயிற்பதி யெறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் சடையார் பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி யிருப்பது கடவூ ராகும்.

(இ-ள்.) நீர்வளம்பொருந்தியிருப்பதினா லுயர்வடைந்து நிலைபெற்ற காவிரிநதி சூழ்ந்த சோழவளநாட்டில் சிறப்பினையுடைய வேதியர்கள் வாழும் மதில் சூழ்ந்தநகரமானது (யாதெனில்,) அலைவீசுகின்ற கங்கைநீர்பொருந்தியநீண்டசடையினையுடையவரும், முற்காலத்தில் அன்பராகிய மார்க்கண்டேயனை எதிர்த்துப் பிடிக்கவந்த யமனை உதைத்தருளிய சிவந்த திருவடியையுடையவருமாகிய அமிர்தகடேசுரர் நெடுநாளாக வீற்றிருந்தருளும் திருக்கடவூரென்று சொல்லப்படும்.

'தொண்டர்மேல் வந்தகூற்றைக் காய்ந்தசேவடியார்' என்பதன் வரலாறு: பூர்வத்தில் மிருகண்டுமுனிவர் புத்திரப்பேறில்லாமல் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்ய, சிவபெருமான் பிரசன்னமாய் அவரைப்பார்த்து உனக்குச்சகலசற்குணங்களும் நிரம்பின ஒரு புத்திரன் பிறந்து பதினாறுவயதளவும் உயிர்பெற்றிருப்பான்; அவனால் நீ இருமைப்பயனு மடைவாயென்று வரமளிக்கப்பெற்றுத் தமது ஆசிரம மடைந்து வாழுநாளில், ஒரு புத்திரன் பிறக்க, அவருக்கு மார்க்கண்டேயர் என்று திருநாமந்தரித்து வளர்த்துவர, அவர் இளமையிலேயே சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து சிவநேச முதிர்ந்து சிவார்ச்சனை செய்துகொண்டிருக்கும் நாள்களில் இவருக்குப் பதினாறுவயதும்சென்றன. பின்பு யமன் தனது பாசத்தை வீசிப் பிடிக்கவந்தபோது இவர் திருக்கடவூரில் வீற்றிருந்தருளும் சிவலிங்கப்பெருமானைச் சென்றுசேர்ந்து தழுவிக்கொள்ளுதலும் அக்கூற்றுவன் சிறிதும் அஞ்சாமல் தனது பாசத்தை வீசினான். அப்பொழுது சிவபெருமானுக்குக் கோபம்பிறந்து அச்சிவலிங்கத்தினிடமாகத் தோன்றி அவனுடல் நிலத்திற் றேயுமாறு உதைத்தருளினார் என்பதாம். (க)

வயலெலலாம் விளைசெஞ் சாலி வரம்பெலா மலையின் முத்தம்
அயலெலலாம் வேள்விச் சாலை யணையெலாங் கழுநீர்க் கற்றை
புயலெலலாங் கமுகின் காடப் புறமெலா மதன்சீர் போற்றல்
செயலெலலாந் தொழில்க ளாறே செழுந்திருக் கடவூ ரென்றும்.

(இ-ள்.) வளப்பம்பொருந்திய திருக்கடவூரில் எந்நாளும் வயல்களிலெல்லாம் விளைகின்ற செந்நெற்பயிர்களும், அவ் வயல்வரம்புகளிலெல்லாம் அலைகளால்

ஓதுக்கப்பட்ட முத்துக்களும், பக்கங்களிலெல்லாம் யாகசாலைகளும், நீர்க்காவின் அணைகளிலெல்லாம் செங்கழுநீர் மலர்க்கூட்டங்களும், கமுகஞ்சோலைகளிலெல்லாம் மேகக்கூட்டங்களும், அம்மருதநிலத்தின் புறங்களிலெல்லாம் அந்நிலவளங்களைச் சிறப்படுத்துதலும், வேதியர்களின் செய்கைகளெல்லாம் அறுவகைத்தொழில்களுமா யிருக்கின்றன.—எ-று.

அறுவகைத்தொழில்களாவன:—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பனவாம். (உ)

குடங்கையி னகன்ற வுண்கட் கடைசியர் குழுமி யாடும்
இடம்படு பண்ணை தோறு மெழுவன மருதம் பாடல்
வடம்புரி முந்நூன் மார்பின் வைதிக மறையோர் செய்கைச்
சடங்குடை யிடங்கடோறு மெழுவன சாமம் பாடல்.

(இ-ள்.) உள்ளங்கையைப் பார்க்கிலும் விசாலமாகிய மைதீட்டிய கண்களையுடைய பள்ளஸ்திரீகள் கூட்டமாகச் சேர்ந்து குரவைக்கூட்டத்தாடுகின்ற விசாலமாகிய வயலிடங்கள்தோறும் மருதப்பண்ணின் பாடல்கள் உண்டாவன; முப்புரியாகிய உபவீதத்தை யணிந்த மார்பினையுடைய வைதிகப் பிராமணர்கள் தங்கள் செய்கையாகிய சடங்குகளைச்செய்கின்ற யாகசாலைகள்தோறும் சாமவேதத்தின் கானம் உண்டாவன.—எ-று.

குரவைக்கூத்தாவது, மங்கையரெழுவர் கைகோத்து வட்டமாகஆடுவதாம்;

"குரவை யென்ப தெழுவர் மங்கையர்
செந்நிலை மண்டிலக் கடகக்கை கோத்துத்
தந்நிலை கொட்பகின் றாட லாகும்"—என்பதனானுணர்க. (௩)

துங்கநீண் மருப்பின் மேதி படிந்துபால் சொரிந்த வாவிச்
செங்கயல் பாய்ந்து வாசக் கமலமுந் தீம்பா லூறு
மங்குலேய் மாடச் சாலை மருங்கிறை யொதுங்கு மஞ்சும்
அங்கவை பொழிந்த நீரு மாகுதிப் புகைப்பா லூறும்.

(இ-ள்.) உயர்வாக நீண்ட கொம்பினையுடைய எருமைகள் நீரில் படிந்து பாலைச் சொரிந்த தடாகத்திலுள்ள சிவந்த கெண்டைமீன்கள் பாய்ந்து, வாசனை பொருந்திய தாமரைமலர்களும் மதுரமாகிய பால்மணம் வீசும்; ஆகாயம்வரைக்கும் அளாவிய வரிசையாகிய மேல்வீடுகளின் பக்கத்தில் சிறிதுநேரம் தங்கும் மேகமும், அம்மேகங்கள் பொழிந்த நீரும் வேதியர்கள் யாகசாலையில் ஆகுதிசெய்யும் புகையினிடமாகக் கமழ்ந்துகொண்டிருக்கும்.—எ-று. (௪)

மருவிய திருவின் மிக்க வளம்பதி யதனில் வாழ்வார்
அருமறை முந்நூன் மார்பி னந்தணர் கலய ரென்பார்
பெருநதி யணியும் வேணிப் பிரான்கழல் பேணி நாளும்
உருகிய வன்பு கூர்ந்த சிந்தையா ரொழுக்க மிக்கார்.

(இ-ள்.) நிலைபெற்ற செல்வத்தினால் சிறந்திருக்கின்ற வளப்பம்பொருந்திய அத்திருக்கடவூரில் வாழ்கின்றவர்; அரிய வேதசம்பந்தமாகிய முப்புரிநூலைய

ணிந்த மார்பினையுடைய மறையவர்; பெருமைபொருந்திய கங்காநதியைத்தரித்த சடையினையுடைய சிவபெருமானது திருவடியைத்தியானித்துநாள்தோறும் இள கிய அன்புமிகுந்த திருவுள்ளத்தினையுடையவர்; நல்லொழுக்கத்திற் சிறந்தவர் (அவர் யாரென்றால்) குங்கிலியக்கலய நாயனாரென்று சொல்லப்பட்டவர்.—எ-று.

பாலனார் மறையோன் பற்றப் பயங்கெடுத் தருளு மாற்றான்
மாலுநான் முகனுங்காணா வடிவுகொண் டெதிரே வந்து
காலனா ருயிர்செற் றார்க்குக் கமழ்ந்த குங்கிலியத் தூபஞ்
சாலவே நிறைந்து விம்ம விடும்பணி தலைநின் றுள்ளார்.

(இ-ள்.) பாலியவயதினை யுடையவராகிய மார்க்கண்டேயர் அஞ்சித் தம் மைத்தழுவிக்கொள்ள அவரது பயத்தை ஒழித்து அருள்செய்யும்பொருட்டுத் திருமால் பிரமன் என்னுமிருவரும் அடியையும்முடியையும் தேடிக்காணாத திருவுருவத்தைக்கொண்டு அவருக்கெதிராகவந்து யமனுடைய உயிரைப்போக்கிய அமிர்தகடேசருக்கு நல்ல மணம்வீசுகின்றகுங்கிலியதூபமானது ஆலயமுழுமையும் மிகவும் நிறைந்துபரவும்படிச்செய்கின்ற திருப்பணியை முதன்மையாகச் செய்கின்றவர்.—எ-று.

'பாலநான்மறையோன்போற்ற' என்றும் பாடம். (௬)

கங்கைநீர் கலிக்குஞ் சென்னிக் கண்ணுத லெம்பி ராற்குப்
பொங்குகுங் கிலியத் தூபம் பொலிவுறப் போற்றிச் செல்ல
அங்கவ ரருளி னாலே வறுமைவந் தடைந்த பின்னுந்
தங்கணா யகர்க்குத் தாமுன் செய்பணி தவாமை யுய்த்தார்.

(இ-ள்.) கங்கைநீரானது முழங்குகின்ற சிரசினையும், நெற்றிக்கண்ணினையுமுடைய எமது சிவபெருமானுக்கு மணம் வீசுகின்ற குங்கிலிய தூபத்திருப்பணியை நாள்தோறும் அதிகரிக்கும்படி நடத்திவருங்காலத்தில் அக்கடவுளினுடைய திருவருளினாலே அவர்க்கு வறுமை யுண்டானபொழுதும் தங்கள் நாயகராகிய அமிர்தகடேசருக்குத் தாம் முன்பு செய்துவந்த திருப்பணியைச் சிறிதும் தவறாமல் நடத்திக்கொண்டு வந்தார்.—எ-று.

அருளினாலே வறுமைவந்தமைக்குக் காரணம், இவர்வறுமைப்பட்ட காலத்திலும் தாம்சிவபெருமானுக்குச்செய்யும் திருப்பணியில் சிறிதும்தவறாமல் செய்யும் சீரியர்என்பதை உலகத்தி லுள்ளவர்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டு என வறிக. (௭)

இந்நெறி யொழுகு நாளி லிலம்பாடு நீடு செல்ல
நன்னில முற்றும் விற்று நாடிய வடிமை விற்றும்
பன்னெடுந் தனங்கண் மாளப் பயின்மனை வாழ்க்கை தன்னின்
மன்னிய சுற்றத் தோடு மக்களும் வருந்தி னார்கள்.

(இ-ள்.) இவ்விதமாகத் தாம் செயயும் திருப்பணியில் தவறாமல் நடத்திவரும்நாளில், தரித்திரமானது அதிகப்படத் தமது நல்ல வளம்பொருந்திய விளைநிலங்களையெல்லாம் விற்றும், தம்மை யடைந்த அடிமையாட்களை விற்றும், பல

வகையான மிகுந்த சொத்துக்களெல்லாம் அழிந்துவிட, அதனால் தாம்நடத்துகின்ற இல்வாழ்க்கையில் நிலைபெற்ற சுற்றத்தாரும் புத்திரர்களும் உணவில்லாமல் பசியினால் வருத்தமடைந்தார்கள்.—எ-று. (அ)

யாதொன்று மில்லை யாகி யிருபக லுணவு மாறிப்
பேதுறு மைந்த ரோடும் பெருகுசுற் றத்தை நோக்கிக்
காதல்செய் மனைவி யார்தங் கணவனார் கலய னார்கைக்
கோதின்மங் கலநாற் றாலி கொடுத்துநெற் கொள்ளு மென்றார்.

(இ-ள்.) இவ்விதமாகிய வறுமையினால் போசனஞ்செய்வதற்குப் பொன் வெள்ளி முதலிய யாதொரு பொருளுமில்லாமல் இரண்டுநாள்வரையிலும் பட்டினியிருந்து வருத்தப்படுகின்ற பிள்ளைகளோடு தம்மைச் சூழ்ந்துள்ள மிகுந்த சுற்றத்தாரையும் பார்த்து அவர்கள்மேல் அன்புவைத்திருக்கின்ற மனைவியார் தம் கணவனாராகிய குங்கிலியக்கலயநாயனாருடைய திருக்கரத்தில் குற்றமற்ற மங்கலகரமான கயிற்றில் கோத்திருக்கின்ற திருமங்கிலியத்தைக் கழற்றிக்கொடுத்து இதைக்கொண்டுபோய் விற்று நெல்வாங்கிவாருமென்று சொன்னார்.—எ-று. (௯)

அப்பொழு ததனைக் கொண்டு நெற்கொள்வா னவரும் போக
ஒப்பில்குங் கிலியங் கொண்டோர் வணிகனு மெதிர்வந் துற்றான்
இப்பொதி யென்கொ லென்றார்க் குள்ளவா றியம்பக் கேட்டு
முப்புரி வெண்ணூன் மார்பர் முகமலர்ந் திதனைச் சொன்னார்.

(இ-ள்.) தமது மனைவியார் திருமங்கிலியத்தைக் கழற்றிக்கொடுத்தபொழுது அதனைக் கையில் வாங்கிக்கொண்டு நெல்கொள்ளும்படியாக அந்தக் குங்கிலியக்கலயநாயனாரும் கடைவீதிவழியாகப்போக,உயர்வுபொருந்திய குங்கிலியப் பொதியை எடுத்துக்கொண்டு ஒரு வர்த்தகனும் இவருக்கு எதிராக வந்தான்; அவர் அதனைப்பார்த்து இது என்னபொதி என்றுகேட்க அவன் உள்ளபடியே இது குங்கிலியப்பொதியென்று சொல்லக்கேட்டு முப்புரியாகிய வெள்ளிய பூணூலைத்தரித்த மார்பினையுடைய குங்கிலியக்கலயநாயனார் முகமலர்ச்சியை யடைந்து இவ்வித வார்த்தைகளைச் சொன்னார்.—எ-று. (௧௦)

ஆறுசெஞ் சடைமேல் வைத்த வங்கணர் பூசைக் கேற்ற
நாறுகுங் கிலிய மீதே லின்று பெற்றே னல்ல
பேறுமற் றிதன்மே லுண்டோ பெறாப்பேறு பெற்று வைத்து
வேறினிக் கொள்வ தென்னென் றுரைத்தெழும் விருப்பின் மிக்கார்.

(இ-ள்.) சிவந்த சடையின்மேல் கங்காநதியைத் தரித்தருளிய சிவபெருமானுடைய பூசைக்கு ஏற்ற மணம்பொருந்திய குங்கிலியம் இதுவேயானால் நான் இன்றைக்கு இதனைப் பெற்றுக்கொண்டேன், இதைப்பார்க்கிலும் சிறந்த பேறு வேறேயிருக்கின்றதோ? ஒருவராலும் பெறுதற்கரிய பேறாகிய இதனைப் பெற்று வைத்துக்கொண்டு இனி வேறே கடைக்குப்போய் நெல்முதலியவைகளைக் கொள்ளுதல் என்னவீண்காரியமென்று சொல்லி அதிகரித்தெழுகின்ற களிப்பிற்சிறந்தவரானார்.—எ-று. (௧௧)

பொன்றரத் தாரு மென்று புகன்றிட வணிகன் றானும்
என்றர விசைந்த தென்னத் தாலியைக் கலய ரீந்தார்
அன்றவ னதனை வாங்கி யப்பொதி கொடுப்பக் கொண்டு
நின்றிலர் விரைந்து சென்றார் நிறைந்தெழு களிப்பி னோடும்.

(இ-ள்.) (நாயனார் அவ்வர்த்தகனைப் பார்த்துச் செட்டியாரே!) நான் பொன்னைக்கொடுக்கின்றேன்; நீர் இக் குங்கிலியப்பொதியைக் கொடுமென்று கேட்க, அவ்வர்த்தகனும் நீர் எனக்கு எவ்வளவு பொன்கொடுப்பதற்கு இசைந்தீரொன்றுசொல்ல, குங்கிலியக்கலயநாயனார் தாம் கொண்டுபோன திருமங்கிலியத்தைக் கையில்கொடுத்தார்; அப்பொழுது அவன் அதனை வாங்கிக்கொண்டு தான்கொண்டுவந்த குங்கிலியப் பொதியைக் கொடுக்கப்பெற்றுக்கொண்டு அங்குநில்லாமல், மனத்தில் நிறைந்தெழுகின்ற சந்தோஷத்தோடும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலைநோக்கிச் சீக்கிரமாகப்போனார்.—எ-று. (௧௨)

விடையவர் வீரட் டானம் விரைந்துசென் றெய்தி யென்னை
உடையவ ரெம்மை யாளு மொருவர்தம் பண்டா ரத்தில்
அடைவுற வொடுக்கி யெல்லா மார்ந்தெழு மன்பு பொங்கச்
சடையவர் மலர்த்தாள் போற்றி யிருந்தனர் தமக்கொப் பில்லார்.

(இ-ள்.) ரிஷபவாகனத்தையுடைய அமிர்தகடேசரது திருவீரட்டானத்தை விரைவாகச்சென்று சேர்ந்து, என்னை அடிமையாக உடையவரும், எம்மைப் போன்ற உலகத்திலுள்ள மற்ற யாவரையும் ஆட்கொண்டருளியவருமாகிய சிவபெருமானுக்குச் செய்யவேண்டிய பூசாதிரவியங்கள் வைத்திருக்கின்ற பண்டசாலையில் எல்லாக்குங்கிலியத்தையும் முறையாகவைத்து, மனத்தில் நிறைந்தெழுந்த பேரன்பானது அதிகரிக்க, சடாதரராகிய அச்சுவாமியினது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கித் தமக்கொப்புயர்வில்லாதவராகிய குங்கிலியக்கலயநாயனார் அவ்விடத்தில் தூபப்பணி செய்துகொண்டிருந்தார்.—எ-று.

வீரட்டானம் என்பது சிவபெருமான் வீரஞ்செலுத்திய ஸ்தானம். இத்தலம் அவ்வீரஞ்செலுத்திய ஸ்தானம் எட்டனுள் ஒன்றாதலின் இவ்வாறு கூறினார். இதனை,

"பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன் குறுக்கை யமன்கட வூரிந் தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே." — என்பதனுணர்க. (௧௩)

அன்பரங் கிருப்ப நம்ப ரருளினா லளகை வேந்தன்
றன்பெரு நிதியந் தூர்த்துத் தரணிமே னெருங்க வெங்கும்
பொன்பயில் குவையு நெல்லும் பொருவில்பல் வளனும் பொங்க
மன்பெருஞ் செல்வ மாக்கி வைத்தனன் மனையி னீட.

(இ-ள்.) குங்கிலியக்கலயநாயனார் திருக்கோயிலில்தானே தூபப்பணி செய்துகொண்டிருக்க, சிவபெருமானுடைய திருவருளினாலே அளகாபுரிக்குத் தலை

வணங்கிய குபேரனானவன் தன்னுடைய பொக்கிஷசாலையிலுள்ள மிகுந்த திரவியங்களைக் கொண்டுவந்து நிலவுலகத்தில் அந்நாயனாருடைய வீட்டில் நிறைத்து எவ்விடத்திலும் பொற்குவியலும், நெற்குவியலும், ஒப்பற்ற பல வளங்களும் அதிகரித்திருக்க நிலைபெற்ற பெருஞ்செல்வமுண்டாகும்படி வைத்தான்.—எ-று. (௧௪)

மற்றவர் மனைவியாரு மக்களும் பசியால் வாடி
அற்றைநா ளிரவு தன்னி லயர்வுறத் துயிலும் போதி
னற்றவக் கொடிய னார்க்குக் கனவிடை நாத னல்கத்
தெற்றென வுணர்ந்து செல்வங் கண்டபின் சிந்தை செய்வார்.

(இ-ள்.) அக் குங்கிலியக்கலய நாயனாருடைய மனைவியும், பிள்ளைகளும் பசியினால் வருத்தப்பட்டு, அன்று இராத்திரியில் சோர்ந்து நித்திரைசெய்யும்பொழுது, முற்பிறப்பில் நல்லதவத்தைச்செய்து பிறந்த கொடிபோன்ற அவ்வம்மையாருக்குச் சொப்பனத்தில் சிவபெருமான் எழுந்தருளிவந்து (செல்வமுண்டான தன்மையை) அனுக்கிரகஞ்செய்ய, உடனே நித்திரைதெளிந்தெழுந்து (தாம் சொப்பனத்தில் கண்டபடியே தங்கள்வீட்டில்) பலவகைச் செல்வங்களைப்பார்த்தபின்பு மனதில் இவ்வாறு நினைக்கின்றார்.—எ-று. (௧௫)

கொம்பனா ரில்ல மெங்குங் குறைவிலா நிறைவிற் காணும்
அம்பொனின் குவையு நெல்லு மரிசியு முதலா யுள்ள
எம்பிரா னருளா மென்றே யிருகரங் குவித்துப் போற்றித்
தம்பெருங் கணவ னார்க்குத் திருவமு தமைக்கச் சார்ந்தார்.

(இ-ள்.) பொற்கொம்புபோன்ற உடம்பினையுடைய குங்கிலியக் கலய நாயனாருடைய மனைவியார் தம்முடைய வீடுமுழுவதும் குறைவில்லாமல் நிறைந்துகாணப்படுகின்ற அழகிய பொற்குவையும், நெற்குவையும், அரிசிக்குவையு முதலாகவுள்ள பொருள்களனைத்தும்,எமதுசிவபெருமானுடைய திருவருளினால் உண்டாயினவென்று இரண்டுகைகளையுங் குவித்து வணங்கித் தம்முடைய பெருமை பொருந்திய பத்தாவுக்குத் திருவமுது சமைக்கும்படி பாகசாலையையடைந்தார்.

காலனை காய்ந்த செய்ய காலனார் கலய னாராம்
ஆலுமன் புடைய சிந்தை யடியவ ரறியு மாற்றாற்
சாலநீ பசித்தா யுன்றன் றடநெடு மனையி னண்ணிப்
பாலினின் னடிசி லுண்டு பருவர லொழிக வென்றார்.

(இ-ள்.) யமனை மாளும்படி உதைத்த சிவந்த திருவடிகளையுடைய சிவபெருமான், சிறந்தஅன்புபொருந்திய மனத்தினையுடைய அடியவராகிய குங்கிலியக்கலயநாயனார் அறிந்துகொள்ளும்படி (சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு, அன்பனே!) நீ மிகவும் பசித்திருக்கின்றாய்; ஆதலால் உன்னுடைய விசாலமாகிய பெரிய வீட்டிற்குப்போய்ப் பாலோடுகூடிய இனிய அன்னத்தையுண்டு உன் பசிவருத்தத்தை நீக்கிக்கொள்வாயாகவென்று சொல்லியருளினார்.—எ-று. (௧௭)

கலையனா ரதனைக் கேளாக் கைதொழு திறைஞ்சிக் கங்கை
அலைபுனற் சென்னி யார்த மருண்மறுத் திருக்க வஞ்சித்

தலைமிசைப் பணிமேற் கொண்டு சங்கரன் கோயி னின்று
மலைநிகர் மாட வீதி மருங்குதம் மனையைச் சார்ந்தார்.

(இ-ள்.) குங்கிலியக்கலயநாயனார் அவ்வார்த்தையைக்கேட்டுத் தமதுகை களைக்கூப்பி வணங்கிநின்று அசைகின்ற நீர்மயமாகிய கங்கையைத்தரித்த திருமுடியினையுடைய சிவபெருமானது கட்டளையைத் தடுத்து அங்கிருக்கப்பயப்பட்டு, அந்தப்பணியைச் சிரசின்மேல்கொண்டு அவ்வெம்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயிலினின்றும் மலைகளுக்கொப்பாகிய மாடவீதியிலுள்ள தம்முடைய வீட்டையடைந்தார்.—எ-று. (௧௮)

இல்லத்திற் சென்று புக்கா ரிருநிதிக் குவைக ளார்ந்த
செல்வத்தைக் கண்டு நின்று திருமனை யாரை நோக்கி
வில்லொத்த நுதலா யிந்த விளைவெலா மென்கொ லென்ன
அல்லொத்த கண்ட னெம்மா னருடர வந்த தென்றார்.

(இ-ள்.) குங்கிலியக்கலயநாயனார் தமது வீட்டினுள்ளே புகுந்து அவ்விடத்தில் பெரிய நிதிக்குவைகளாக நிறைந்திருக்கின்ற செல்வத்தைக்கண்டு நின்று சிறந்த அழகினையுடைய தமது மனைவியாரைப்பார்த்து, வில்லையொத்த நெற்றியையுடைய பெண்ணே! இப்படிப்பட்ட சம்பத்துக்களெல்லாம் எவ்விதமாக உண்டாயினவென்று கேட்க, (அதற்கு அவ்வம்மையார்) இருள்போன்ற காளகண்டத்தையுடைய எமது சிவபெருமான் திருவருள்செய்தலால் வந்ததென்று சொன்னார்.—எ-று. (௧௯)

மின்னிடை மடவார் கூற மிக்கசீர்க் கலய னார்தா
மன்னிய பெருஞ் செல்வத்து வளமலி சிறப்பை நோக்கி
என்னையு மாளுந் தன்மைக் கெந்தையெம் பெருமா னீசன்
தன்னரு ளிருந்த வண்ண மென்றுகை தலைமேற் கொண்டார்.

(இ-ள்.) இவ்விதமாக மின்னலையொத்த இடையினையுடைய அவரது மனைவியார் சொல்ல, பெருஞ்சிறப்பினையுடைய குங்கிலியக்கலயநாயனார் தமக்கு உண்டாகிய மிகுந்த செல்வத்தினது வளம்பொருந்திய சிறப்பைப்பார்த்து, (அன்பானது சிறிதுமில்லாத) அடியேனையும் ஆட்கொள்ளும்பொருட்டு எமது பரமபிதாவும் எம்பெருமானுமாகிய பரமசிவனது திருவருளிருந்தவண்ணம் இதுவென்று தமது இரண்டுகைகளையும் சிரசின்மேல் குவித்து வணங்கினார்.—எ-று. (௨௦)

பதுமநற் றிருவின் மிக்கார் பரிகலந் திருத்திக் கொண்டு
கதுமெனக் கணவ னாரைக் கண்ணுதற் கன்ப ரோடும்
விதிமுறை தீப மேந்தி மேவுமின் னடிசி லூட்ட
அதுநுகர்ந் தின்ப மார்ந்தா ரருமறைக் கலய னார்தாம்.

(இ-ள்.) தாமரைமலரிலிருக்கின்ற இலட்சுமியைப்பார்க்கிலும் சிறந்த அழகினையுடைய குங்கிலியக்கலயநாயனாருடைய மனைவியார் திருவமுது செய்விப்பதற்காகப் பரிகலத்தைச் சுத்திசெய்துகொண்டு, சிவனடியார்களோடு தம்முடைய கணவனாரையும் முறைமைப்படியே தீபாராதனைசெய்து, விரும்பத்தக்க இனிமையாகிய

அன்னத்தை உண்பிக்க, அப் பாலடிசிலேயுண்டு, இன்பமடைந்திருந்தார் அரிய வேதங்களை யுணர்ந்த குங்கிலியக்கலயநாயனர்.—எ-று. (௨௧)

ஊர்தொறும் பலிகொண் டுய்க்கு மொருவன தருளி னாலே
பாரினி லார்ந்த செல்வ முடையராம் பண்பி னீடிச்
சீருடை யரிசி நல்ல செழுங்கறி தயிர்நெய் பாலால்
ஆர்தரு காதல் கூர வடியவர்க் குதவு நாளில்.

(இ-ள்.) (தாருகாவனமுனிவர்கள் வசித்திருந்த) ஊரிடங்கடோறும் பிட்சையேற்று,அவர்களை அன்பின்வழியே செலுத்திய ஒப்பற்ற சிவபெருமானுடைய திருவருளினாலே, உலகத்தில் நிறைந்த பெருஞ்செல்வமுடையவரா யிருக்கின்ற தன்மையில் நீடித்து, சிறந்த செந்நெ ல்லரிசியும், நல்ல செழுமையான கறிகளும், தயிரும், நெய்யும், பாலுமாகிய இவைகளால் உண்ணத்தக்க மிகுந்த விருப்பமுண்டாகும்படி சிவனடியார்களுக்கு அமுதுசெய்வித்து வருகின்ற நாள்களில்.—எ-று.

செங்கண்வெள் ளேற்றின் பாகன் றிருப்பனந் தாளின் மேவும்
அங்கணன் செம்மை கண்டு கும்பிட வரச னார்வம்
பொங்கித்தன் வேழ மெல்லாம் பூட்டவும் நேர்நில் லாமைக்
கங்குலும் பகலுந் தீராக் கவலையுற் றழுங்கிச் செல்ல.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய வெள்ளிய ரிஷபவாகனத்தையுடையவரும், திருப்பனந்தாள் என்னுந் தலத்தில் வீற்றிருந்தருளும் அழகியகண்ணுளருமாகிய சிவலிங்கப்பெருமான் சாய்ந்திருப்பதினால் முன்புபோல் நேராகநிற்குந் தன்மையைக்கண்டு வணங்கும்படி, சோழராஜன் ஆசைமிகுந்து தன்னுடைய யானைகளையெல்லாம் பூட்டி இழுக்கவும், நேராக நில்லாமையினால் இரவும்பகலும் நீங்காத மனக்கவலையடைந்து வருந்திச்செல்ல.—எ-று.

திருப்பனந்தாள் என்னுந்தலத்தில் சிவலிங்கப்பெருமான் சாய்ந்திருந்தமைக்குக் காரணம்:—திருப்பனந்தாளில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்குப் பாரம்பரியமாகப் பூசைசெய்தொழுகும் ஆதிசைவப் பிராமணர்களில் ஒருவர் சிவபதமடைய, அவர் பங்குக்குரிய நாள்களைத் தாங்கள் கவர்ந்து அதனால் வரும் ஊதியத்தைக் கைக்கொள்ளும்பொருட்டு, அத்தினங்களில் மற்றைய ஆதிசைவப்பிராமணர்கள் ஒருவரும் பூசைபண்ணமல் கட்டுப்பாடுசெய்துகொண்டு, அவருக்கு உறவினராய் அயல் ஊரிலிருந்துவந்து பூசிப்பவர்களையும் வரவொட்டாமல் தடைசெய்ய, அதனை அவ்விறந்தவர் மனைவியார் அறிந்து மனம்வருந்தி இனி என்ன செய்கிறது; நான் பெண்ணாயிருந்தாலும் எமது சிவபெருமானை ஆராதிக்கின்றேன். அது அவ்வெம்பெருமானுக்குத் திருவுள்ள மில்லாவிடின் அதனால் எனக்கோரிடையூறுண்டாகட்டுமென்று கருதி, சுவாமி சந்நிதியை யடைந்து அபிஷேகஞ்செய்து தனது இரண்டுகைகளினாலும் பூமாலையையெடுத்துச் சாத்தப்போகுந் தருணத்தில் இடையிலுடுத்திருந்த ஆடையானது சற்றுக்கீழேநழுவ, அதை அவ்வம்மையார் தனது இரண்டு முழங்கைகளாலும் இடுக்கிக்கொண்டதனால் சுவாமியின் திருமுடியில் மாலைசாத்துவதற்குக் கைகளெட்டாமல் தூக்கித்து நிற்க, அதனைப் பெருமானுணர்ந்து அருள்கூர்ந்து தமது திருமுடியைச் சாய்த்தருளினார். அப்பொ

மூது அப்பெண்கொடியார் அவ்வாறு சாய்ந்த சிவபெருமானுடைய திருமுடியின் மேல் கையிலுள்ள பூமாலையைத்தரித்துப் பூசைசெய்துபோயினார் எனவறிக. (௨௩)

மன்னவன் வருத்தங் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலய னார்தா நாதனை நேரே காணும்
அந்நெறி தலைநின் றானென் றரசனை விரும்பித் தாமு
மின்னெறித் தனைய வேணி விகிர்தனை வணங்க வந்தார்.

(இ-ள்.) சோழராஜன் படுகின்ற வருத்தைக் கேள்விப்பட்டுக் குற்றமற்ற புகழிற்சிறந்த நன்மார்க்கத்தையுடைய குங்கிலியக்கலயநாயனார் சாய்ந்திருக்கின்ற சிவலிங்கப்பெருமானை நேராக நிற்கத் தரிசிக்கவேண்டுமென்னும் முயற்சியில் இருக்கின்றானென்று அவ்வரசனைக்குறித்துச்சந்தோஷித்து, தாமும் மின்னல்வீசுவது போல விளங்குகின்ற சடையினையுடைய சிவபெருமானை வணங்கும்பொருட்டு வந்தார்.—எ-று.

சிவபெருமானுடைய திருச்சடையானது மின்னலைப்போலப் பேரொளி வீசுந் தன்மைத்தாதலின் 'மின்னெறித் தனையவேணி விகிர்தன்' என்று கூறினார். இதனை,

"பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி பொலிந்திலங்கு
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை வெள்ளிக்குன்றந்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மால்விடை தன்னைக்கண்ட
வென்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மாகிய வீசனுக்கே." என்னும் பொன்வண்ணத்தந்தாதியா னுணர்க. (௨௪)

மழுவுடைச் செய்ய கையர் கோயிலின் மருங்கு சென்று
தொழுது போந் தன்பினோடுந் தொன்மறை நெறி வழாமை
முழுதுல கினையும் போற்ற மூன்றெரி புரப்போர் வாழுஞ்
செழுமலர்ச் சோலை வேலித் திருப்பனந் தாளைச் சேர்ந்தார்.

(இ-ள்.) மழுவாயுதத்தைத் தரித்த சிவந்த திருக்கரத்தினையுடைய அமிர்தகடேசர் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயிலுக்குப்போய் அன்பினோடும் வணங்கிவிடைபெற்றுக்கொண்டு சென்று, பழமையாகிய வேதநெறி தவறாமல் உலக முழுவதையும் காக்கும்பொருட்டு மூன்றுவகையாகிய அக்கினியை வளர்க்கின்ற பிராமணர்கள் வாழுகின்ற செழுமைபொருந்திய மலர்ச்சோலைகள் சூழ்ந்த திருப்பனந்தாள் என்னுந் தலத்தை யடைந்தார்.—எ-று.

மூன்றெரியாவன-ஆகவனீயம், காருகபத்தியம், தக்கணாக்கினி என்பன.

காதலா லரச னுற்ற வருத்தமுங் களிற்றி னோடுந்
தீதில்வன் சேனை செய்யுந் திருப்பணி நேர்ப டாமை
மேதினி மிசையே யெய்த்து வீழ்ந்திளைப் பதுவு நோக்கி
மாதவக் கலயர் தாமு மனத்தினில் வருத்த மெய்தி.

(இ-ள்.) சிவலிங்கப்பெருமானை நேரே தரிசிக்க வேண்டுமென்னும் ஆசையினால் சோழராஜன் அடைந்த மனவருத்தத்தையும், யானைகளோடு குற்றமற்ற

வலியசேனைகள்செய்கின்ற திருப்பணியானது நேராய் முடியாமையால் வலிகுறைந்து வீழ்ந்து இளைத்துநிற்பதையும் பார்த்துப் பெருந்தவத்தினையுடைய குங்கிலியக்கலயநாயனார் தம்முடைய மனத்தில் வருத்தத்தையடைந்து.—எ-று. (௨௬)

சேனையு மானைபூண்ட திரளுமெய்த் தெழாமை நோக்கி
யானுமிவ் விளைப்புற் றெய்க்கு மிதுபெற வேண்டு மென்று
தேனலர் கொன்றை யார்தந் திருமேனி பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறு பூண்டு கழுத்தினால் வருந்த லுற்றார்.

(இ-ள்.) சேனைகளும், பூங்கச்சில் கட்டிய யானைக்கூட்டங்களும் இழுத்து இளைத்தும் அதனால் நேர்நில்லாமல் விருப்பதைப்பார்த்து, அடியேனும் இப்படிப் பட்ட இளைப்பையடைந்து எய்த்திருக்கின்றதாகிய இத்திருப்பணிசெய்யப்பெற வேண்டுமென்று தேன்பொருந்திய கொன்றைமலர்மாலையைத் தரித்த சிவபெருமானுடைய திருமேனியில் பூங்கச்சோடு பொருந்திய வலிய கயிற்றைத் தம்முடைய கழுத்தில் சுற்றிக்கொண்டு வருந்தி இழுக்கத்தொடங்கினார்.—எ-று. (௨௭)

நண்ணிய வொருமை யன்பி னூறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி யிளைத்தபின் றிறம்பி நிற்க
ஒண்ணுமோ கலயனார்த மொருப்பாடு கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றா ரமரரும் விசும்பி லார்த்தார்.

(இ-ள்.) ஒருமையாகப்பொருந்திய அன்போடு நார்க்கயிற்றினாலே பத்தி வலியினையுடைய அவ்வடியவர் தமது கழுத்திற் பூட்டிஇழுத்து இளைத்தபின்பு, அவரது அன்பிற்குத் தவறிநிற்கக்கூடுமோ? குங்கிலியக்கலயநாயனாருடைய அன்பின்தன்மையைக் கண்டபொழுதே சிவலிங்கப்பெருமான் முன்போலத் தாழ்ந்திராமல் நேராக நின்று தரிசனங்கொடுத்தார்; தேவர்களும் ஆகாயத்தில் துதித்து ஆரவாரித்தார்கள்.—எ-று. (௨௮)

பார்மிசை நெருங்க வெங்கும் பரம்பின பயில்பூ மாரி
தேர்மலி தானை மன்னன் சேனையுங் களிறு மெல்லாங்
கார்பெறு கானம் போலக் களித்தன கைகள் கூப்பி
வார்கழல் வேந்தன் றொண்டர் மலரடி தலைமேல் வைத்து.

(இ-ள்.) அப்பொழுது உலகத்தில் எங்கும் நெருங்கும்படி தேவர்கள்பொழிகின்ற புஷ்பவருஷங்கள் பரவின; தேரோடுநெருங்கிய தானைகளையுடைய சோழராஜனது சேனைகளும் யானைகளுமாகிய எல்லாம் மழை பொழியப்பெற்ற காடுபோலச் சந்தோஷித்தன; நீண்ட வீரக்கழலை யணிந்த காலினையுடையஅச் சோழர்பெருமான் அஞ்சலியஸ்தனாய்க் குங்கிலியக்கலயநாயனாருடைய தாமரை மலர்போன்ற திருவடிகளைச் சிரசின்மேல்வைத்துக்கொண்டு.—எ-று. (௨௯)

விண்பயில் புரங்கள் வேவ வைதிகத் தேரின் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர்
மண்பருந் தவனுங் காணு மலரடி யிரண்டும் யாரே
பண்புடை யடியா ரல்லாற் பரிந்துநேர் காண வல்லார்.

(இ-ள்.) ஆகாயத்தில் சஞ்சரித்திருந்த முப்புரங்களும் நீறாக வேகும்படி வேதரூபமாகிய இரதத்தின்மேல் மேருமலையாகிய வலிய வில்லானது வளையும்படி நின்ற சிவபெருமானை நேராக நிற்கச்செய்தருளினீர்; வராகவுருவங்கொண்டு பூமியைத் தோண்டிச்சென்ற விஷ்ணுவினாலுங் காணப்படாத அக்கடவுளினுடைய தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளையும் நற்குணங்களையுடைய சிவனடியார்களேயல்லாமல் வேறே யாவர் விரும்பி நேரே காணவல்லவர்கள் (ஒருவருமில்லை.)—எ-று. (ருo)

என்றுமெய்த் தொண்டர் தம்மை யேத்தியங் கெம்பி ரானுக்
கொன்றிய பணிகண் மற்று முள்ளன பலவுஞ் செய்து
நின்றவெண் கவிகை மன்ன னீங்கவு நிகரி லன்பர்
மன்றிடை யாடல் செய்யு மலர்க்கழல் வாழ்த்தி வைகி.

(இ-ள்.) என்று இவ்விதமாக மெய்ம்மைபொருந்திய குங்கிலியக்கலயநாயனாைப் புகழ்ந்து, அங்கே எமது சிவபெருமானுக்குச் செய்யவேண்டிய திருப்பணிகளும் மற்றுஞ்செய்யத்தக்க பலவற்றையும் செய்து, நிலைபெற்ற வெண்கொற்றக்குடையினையுடைய சோழராஜன் அத்தலத்தினின்றுந் தன்னூருக்குப்போகவும், ஒப்பற்ற குங்கிலியக்கலயநாயனார் பொன்னம்பலத்தில் திருநடனஞ் செய்தருளுகின்ற திருவடிகளைத் துதித்து வசித்திருந்து.—எ-று. (ருக)

சிலபகல் கழிந்த பின்பு திருக்கட வூரி னண்ணி
நிலவுதம் பணியிற் றங்கி நிகழுநாள் நிகரில் காழித்
தலைவராம் பிள்ளை யாருந் தாண்டகச் சதுர ராகும்
அலர்புக ழரசுங் கூட வங்கெழுந் தருளக் கண்டு.

(இ-ள்.) சிலகாலஞ் சென்றபின்பு திருக்கடவூருக்குவந்து, விளங்குகின்ற குங்கிலியதூபத் திருப்பணி செய்தலில் அமர்ந்து வாழ்ந்துகொண்டிருக்கும் நாள்களில் ஒப்பற்ற சீர்காழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும், திருத்தாண்டகச்சதுரர் என்னும் பரவிய புகழினையுடைய திருநாவுக்கரசு சுவாமிகளும் சேர்ந்து அத்தலத்திற்கு எழுந்தருளிவரக்கண்டு—எ-று. (ருஉ)

மாறிலா மகிழ்ச்சி பொங்க வெதிர்கொண்டு மனையி லெய்தி
ஈறிலா வன்பின் மிக்கார்க் கின்னமு தொக்கு மாற்றால்
ஆறுநற் சுவைக ளோங்க வமைத்தவ ரருளே யன்றி
நாறுபூங் கொன்றை வேணி நம்பர்த மருளும் பெற்றார்.

(இ-ள்.) குங்கிலியக்கலயநாயனார் நீங்காத பெருமகிழ்ச்சியானது அதிகரிக்கத் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளையும் திருநாவுக்கரசுசுவாமிகளையும் எதிர்கொண்டு தம்முடைய வீட்டிற்கு அழைத்துவந்து, கெடாத அன்பிற்சிறந்தவர்களாகிய அவ்விருவர்க்கும் இனிய திருவமுதைப் பொருந்தும் வகையினால் அறுவகைச்சுவை பதார்த்தங்களும் குறைவுபடாமல்செய்து படைத்து அவர்கள் கிருபையைப்பெற்றதேயல்லாமல் வாசனைவீசுகின்ற கொன்றைமலர்மாலையைத் தரித்த சடையினையுடைய சிவபெருமானது திருவருளையும் பெற்றார்.—எ-று. (ருங)

கருப்புவில் லோனைக் கூற்றைக் காய்ந்தவர் கடவூர் மன்னி
விருப்புறு மன்பு மேன்மேன் மிக்கெழு வேட்கை கூர
ஒருப்படு முள்ளத் தன்மை யுண்மையாற் றமக்கு நேர்ந்த
திருப்பணி பலவுஞ் செய்து சிவபத நிழலிற் சேர்ந்தார்.

(இ-ள்.) கரும்பு வில்லினையுடைய மன்மதனையும், யமனையும் கோபித்து அழித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கடவூரில் வசித்து யாவருக்கும் விருப்பத்தைத்தருகின்ற பேரன்பானது மேலும்மேலும்அதிகரித்தெழுகின்றஆசை யுண்டாக ஒருமைப்பட்ட பத்திமையானது பொருந்தியிருப்பதனால் தம்மால்செய்யக்கூடிய பலதிருப்பணிகளையுஞ்செய்து, பின்பு சிவபெருமானது திருவடிநிழலை யடைந்தார்.—எ-று. (௩௪)

தேனக்க கோதை மாதர் திருநெடுந் தாலி மாறிக்
கூனற்றண் பிறையி னார்க்குக் குங்கிலி யங்கொண் டிய்த்த
பான்மைத்திண் கலய னாரைப் பணிந்தவ ரருளி னாலே
மானக்கஞ் சாறர் மிக்க வண்புகழ் வழுத்த லுற்றேன்.

(இ-ள்.) தேன் பொருந்திய மலர்மாலையைத் தரித்த தமது மனைவியார் கழுத்தி லணிந்திருந்த பெரிய திருமங்கிலியத்தை விற்று வளைவாகிய குளிர்ந்த பிறைச்சந்திரனைத்தரித்த சிவபெருமானுக்குக் குங்கிலியப்பொதியை வாங்கிக்கொண்டுவந்து தூபத்திருப்பணிசெய்த அன்பின்தன்மையையுடைய வலிய குங்கிலியக்கலயநாயனாரைவணங்கி,அவரது திருவருளினாலே மானக்கஞ்சாறநாயனாருடைய சிறந்தவளம்பொருந்திய புகழமைந்த சரித்திரத்தைச் சொல்லத்தொடங்கினேன்.

**குங்கிலியக்கலயநாயனார்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் - அஎ௦.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மானக்கஞ்சாறநாயனார் புராணம்.

மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது
நூலாறு நன்குணர்வார் தாம்பாடு நோன்மையது
கோலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகுங்
காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர்.

(இ-ள்.) கொம்புத்தேன்கள் அக்கொம்பின்வழியே சொரிய, அதனோடு செழுமைபொருந்திய பழங்களின் சாறும் ஒழுகுகின்ற வாய்க்காலின் வழியே வயல்களிலுள்ள கரும்பினது மணம்வீசுகின்ற சாறுனது பாய்கின்ற கஞ்சாறூர் என்னுந் தலமானது,சிவந்த சடையின்மேல் ஆகாயகங்கையைவைத்தருளிய சிவபெருமானால் விரும்பப்பட்டது; பலவகையாகிய சாஸ்திரத்தின்பகுதிகளை நன்றாக அறிந்த புலவர்கள் புகழ்ந்துபாடுகின்ற பெருமையையுடையது.—எ-று. (க)

கண்ணீலக் கடைசியர்கள் கடுங்களையிற் பிழைத்தொதுங்கி
யுண்ணீர்மைப் புணர்ச்சிக்கண் ணுறைத்துமலர்க் கண்சிவக்குந்
தண்ணீர்மென் கழுநீர்க்குத் தடஞ்சாலி தலைவணங்கு
மண்ணீர்மை நலஞ்சிறந்த வளவயல்க ளுளவயல்கள்.

(இ-ள்.) நீலோற்பல மலரையொத்த கண்களையுடைய பள்ளஸ்திரிகள் பிடுங்குகின்ற களைகளினின்றும் தப்பி ஒதுங்கி, உள்ளே நிலவுகின்ற நீர்மையாகிய புணர்ச்சியினிடத்துப் பிணங்கிப் பூவாகிய கண்கள் சிவப்படையும் குளிர்ச்சிபொருந்திய மெல்லிய செங்கழுநீர்மலராகிய நாயகிக்கு, வளர்ந்த செந்நெற்பயிராகிய நாயகன் அப்பிணக்குத் தீரும்படி தலையினால் வணங்குகின்ற நிலவளத்தினால் நன்றாகச் சிறந்திருக்கின்ற வளம்பொருந்திய வயல்கள் பக்கங்களிலுள்ளன.—எ-று.

'உண்ணீர்மைப் புணர்ச்சி' என்பதற்கு, வயலினிடத்துள்ள நீரின் சம்பந்தம் என்றும், உள்ளத்தின்கண் தோன்றுகின்ற அன்பு ஒத்த புணர்ச்சி என்றும் சிலேடை செய்துகொள்க. (உ)

புயல்காட்டுங் கூந்தல்சிறு புறங்காட்டப் புனமயிலின்
இயல்காட்டி யிடையொதுங்க வினங்காட்டு முழத்தியர்கண்
முயல்காட்டு மதிதோற்கு முகங்காட்டக் கண்மூரிக்
கயல்காட்டுந் தடங்கள்பல கதிர்காட்டுந் தடம்பணைகள்.

(இ-ள்.) மேகம்போலுங் கருநிறத்தைக் காட்டுகின்ற கூந்தலானது சிறிய பின்புறத்தில் தாழ்ந்திருக்கவும், புனத்தில் சஞ்சரிக்கின்ற மயிலினது சாயலைக் காண்பித்து இடையானது தளரவும், கூட்டமாகவருகின்ற பள்ளஸ்திரிகள் முயற்களங்கத்தைத் தன்னிடத்திற் காட்டுகின்ற சந்திரனைத் தோற்கச்செய்கின்ற முகத்தைக் காட்ட, அவர்களது கண்களை வலிபொருந்திய கெண்டைமீன்கள் காட்டுகின்ற பல தடாகங்களும், நெற்கதிர்களைக் காட்டிக்கொண்டிருக்கின்ற விசாலமாகிய பல வயல்களு மிருக்கின்றன.—எ-று. (௩)

சேறணிதண் பழனவயற் செழுநெல்லின் கொழுங்கதிர்போய்
வேறருகு மிடைவேலிப் பைங்கமுகின் மிடறுரிஞ்சி
மாறெழுதிண் குலைவளைப்ப வண்டலைதண் டலையுழவர்
தாறரியு நெடுங்கொடுவா ளனையவுள தனியிடங்கள்.

(இ-ள்.) சேற்றால் அழகுபொருந்திய குளிர்ந்த வயல்களிலுள்ள செழித்த செந்நெற்பயிர்களின் கொழுமையாகிய கதிர்கள் சென்று, வேறாக அருகில் வேலிபோல் நெருங்கிய பசுமைபொருந்திய கமுகமரத்தினது கழுத்தை உராய்ந்து, மாறாக எழும்பிய அதன்வலியகுலைகளை வளைக்க (அவ்வளைத்துநிற்குங்கதிர்கள்) வண்டுகள் சஞ்சரிக்கின்றசோலைகளிலிருக்கின்ற உழவர்கள் கமுகின்குலைகளை அரிகின்ற கோணலாகியநீண்ட அரிவாளை ஒத்தனவாக இருக்கின்றன, தனித்த அநேக இடங்களில்.—எ-று. (௪)

பாங்கின்மணிப் பலவெயிலுஞ் சுலவெயிலு முளமாடு
ஞாங்கரணி துகிற்கொடியு நகிற்கொடியு முளவரங்கம்
ஓங்குநிலைத் தோரணமும் பூரணகும் பமுமுளவாற்
பூங்கணைவீ தியிலணைவோர் புலமறுகுஞ் சிலமறுகு.

(இ-ள்.) மேல்வீடுகள் குற்றமற்ற பலவகை இரத்தினங்களின் ஒளிகளையும்,சூழ்ந்திருக்கின்றமதில்களையும் உடைத்தாயிருக்கும்; சபைகள் முன்பக்கத்தில் அலங்கரிக்கப்பட்ட வஸ்திரக்கொடிகளையும், ஸ்தனங்களையுடைய மாதர்களாகிய கொடிகளையும் உடையனவாயிருக்கும்; மன்மதன் புஷ்பபாணங்களைத் தொடுக்கின்ற வீதியில் அடைந்தவர்களின் அறிவுமயங்கத்தக்க சிலவீதிகள் உயர்ந்த நிலையாகிய மகரதோரணங்களையும், பூரண கலசங்களையும் உள்ளனவாயிருக்கும்.—எ-று.

'பூங்கணைவீதியிலணைவோர் புலமறுகுஞ்சிலமறுகு' என்றதனால், பரத்தையர் வீதி என்னும் பொருள் தோன்றுமாறுகாண்க. (௫)

மனைசாலு நிலையறத்தின் வழிவந்து வளம்பெருகும்
வினைசாலு முழவுதொழின் மிக்கபெருங் குடிதுவன்றிப்
புனைசாயன் மயிலனையார் நடம்புரியப் புகல்முழவங்
கனைசாறு மிடைவீதிக் கஞ்சாறு விளங்கியதால்.

(இ-ள்.) பெருமைபொருந்திய நிலையினையுடைய இல்லறமார்க்கத்திற்கு ஒத்துநடந்து செல்வம் விருத்தியடைதற் கேதுவாகிய தொழிலிற்சிறந்த பயிரிடுந்தொழிலால் மேம்பட்ட பெரிய குடிகள் நெருங்கி அழகிய மயில்போன்ற சாயலையு

டைய பெண்கள் நாட்டியஞ்செய்ய,புகழ்ந்துசொல்லப்பட்ட மத்தளமுதலிய வாத்தியங்கள் முழங்குகின்ற திருவிழாக்கள் இடைவிடாமல் நடக்கின்ற வீதிகளையுடைய கஞ்சாறு என்னுந் திருப்பதியானது விளங்கியிருந்தது.—எ-று. (௬)

அப்பதியிற் குலப்பதியா யரசர்சே னாபதியாஞ்
செப்பவருங் குடிவிளங்கத் திருவவதா ரஞ்செய்தார்
மெய்ப்பொருளை யறிந்துணர்ந்தார் விழுமியவே ளாண்குடிமை
வைப்பனைய மேன்மையினார் மானக்கஞ் சாறனார்.

(இ-ள்.) அந்த ஊரில் வாழும் வேளாண்குலத்திற்கு முதல்வராய் அரசர்களுக்குச் சேனாதிபதி என்று சொல்லப்பட்ட குடியானது விளங்கும்படியாகத் திருவவதாரஞ்செய்தருளினவர்; உண்மையாகிய பதிப்பொருளை யாராய்ந்துணர்ந்தவர்; சிறந்த வேளாளர் குலத்திற்கு ஓர் புதையலையொத்த மேன்மையையுடையவர்; மானக்கஞ்சாறநாயனார் என்னுந் திருநாமத்தை யுடையவர்.—எ-று. (எ)

பணிவுடைய வடிவுடையார் பணியினொடும் பனிமதியின்
அணிவுடைய சடைமுடியார்க் காளாகும் பதம்பெற்ற
தணிவில்பெரும் பேறுடையார் தம்பெருமான் கழல்சார்ந்த
துணிவுடைய தொண்டர்க்கே யேவல்செயுந் தொழில்பூண்டார்.

(இ-ள்.) (சிவனடியார்களைக் கண்டால் அவர்களை) வணங்குதல் செய்கின்ற திருவுருவத்தையுடையவர்; பாம்புகளோடு குளிர்ச்சிபொருந்திய சந்திரனையும் தரித்த சடைமுடியினையுடைய சிவபெருமானுக்கு அடிமையாகின்ற நிலைமையைப்பெற்ற குறைவற்ற பெரும்பேற்றையுடையவர்; தமது முதல்வராகிய அக்கடவுளினது திருவடிகளையே ஆதரவாக அடைந்த துணிவுபொருந்திய தொண்டர்களுக்கே பணிவிடைசெய்கின்ற தொழிலை மேற்கொண்டொழுகுகின்றவர். ()

மாறில்பெருஞ் செல்வத்தின் வளம்பெருக மற்றதெலாம்
ஆறுலவுஞ் சடைக்கற்றை யந்தணர்த மடியாராம்
ஈறில்பெருந் திருவுடையா ருடையாரென் றியாவையுநேர்
கூறுவதன் முன்னவர்தங் குறிப்பறிந்து கொடுத்துள்ளார்.

(இ-ள்.) கெடுதலில்லாத பெருஞ்செல்வத்தின் வளமானது நாளுக்குநாள் விருத்தியடைய அந்தச் செல்வ முழுமைக்கும் கங்காநதி யுலாவுகின்ற கற்றையாகிய சடையினையுடைய சிவபெருமானது அடியவரொன்னும் முடிவில்லாத அருட்பெருஞ்செல்வத்தையுடைய மெய்யன்பர்களே உரியவர்களென்று, எல்லாப்பொருள்களையும் அவ்வடியவர்கள் எமக்கு இது வேண்டுமென்று எதிரே சொல்வதற்கு முன்னே அவர்கள் மனக்குறிப்பையறிந்து கொடுக்கின்றவர்.—எ-று. (௯)

விரிகடல்சூழ் மண்ணுலகில் விளங்கியவித் தன்மையராம்
பெரியவர்க்கு முன்சிலநாள் பிள்ளைப்பே றின்மையினால்
அரியறியா மலர்க்கழல்க ளறியாமை யறியாதார்
வருமகவு பெறற்பொருட்டு மனத்தருளால் வழுத்தினார்.

(இ-ள்.) விசாலமாகிய சமுத்திரஞ்சூழ்ந்த நிலவுலகத்தில் விளங்குகின்ற இப்படிப்பட்ட அன்பின்தன்மையையுடையவராகிய மானக்கஞ்சாறநாயனருக்குச் சிலநாள்வரையிலும் புத்திரப்பேறில்லாமையினால், விஷ்ணுவினால் முன்பு தேடிக் காணப்படாத தாமரைமலர்போன்ற திருவடிகளின் பெருமையை அறிந்தவராகிய அந்நாயனர் தமது குலம் விருத்தியாவதற்கு ஏதுவாக வருகின்ற புத்திரப்பேறு பெறும்பொருட்டுத் தமது மனதில் நிறைந்த அன்போடும் சிவபெருமானைத் தோத்திரஞ்செய்தார்.—எ-று. (௧0)

குழைக்கலையும் வடிகாதிற் கூத்தனு ரருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பால்
இழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த விப்பிறவிக் கொடுஞ்சூழல்
பிழைக்குநெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்.

(இ-ள்.) குண்டலமானது அலைகின்ற நீண்ட திருச்செவியினையுடைய ஸ்ரீநடராசப்பெருமானது திருவருளினாலே, மழை வேண்டிப் பெய்யென்றால் பெய்யத்தக்க பெருங்கற்பினையுடைய அவரது மனைவியாரிடத்து, முற்பிறப்பில் செய்த வினைப்பயனை யனுபவிப்பதற் கேதுவாயிருக்கின்ற இந்தப் பிறவியாகிய கொடியகாட்டினின்றும் பிழைத்து உய்யும் நல்லநெறியைத் தமக்குக் கொடுக்கும் பொருட்டு ஒரு பெண்குழந்தையைப் பெற்றெடுத்தார்.—எ-று.

தங்கணவனையே வழிபடுந் தெய்வமாகக்கருதிக் கற்புநிலை கடவாது ஒழுகுகின்ற பதிவிரதையானவள் பெய்யென்று சொன்னமாத்திரத்திலேயே மழை பெய்யுமென்பார் 'மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தியார்' என்று கூறினர்.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."—என்றார் தெய்வப்புலவரும்.

குழைக்கு என்பதில் - கு-சாரியை. (௧௧)

பிறந்தபெரு மகிழ்ச்சியினாற் பெருமூதூர் களிசிறப்பச்
சிறந்தநிறை மங்கலதூ ரியமுழங்கத் தேவர்பிரான்
அறந்தலைநின் றவர்க்கெல்லா மளவில்வளத் தருள்பெருக்கிப்
புறந்தருவார் போற்றிசைப்பப் பொற்கொடியை வளர்க்கின்றார்.

(இ-ள்.) தமக்குக் குழந்தைபிறந்த மிகுந்த சந்தோஷத்தினாலே பெரிய பழமையாகிய அவ்வூரானது மகிழ்ச்சியினால் அதிகரிக்க,சிறப்புப்பொருந்திய நிறைந்த மங்கலவாத்தியங்கள் கோஷிக்க, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவருள்வழியே நின்ற அடியார்களுக்கெல்லாம் அளவில்லாத வளத்தினையுடைய கொடையினால் சிறப்புண்டாகச் செய்து, புறத்திற் சூழ்ந்துள்ள பலரும் வாழ்த்துதல் சொல்ல, பொற்கொடிபோன்ற அப்புத்திரியை வளர்க்கின்றவராயினார்.

'புறந்தருவார்பலர்போற்ற' என்றும் பாடம். (௧௨)

காப்பணியு மிளங்குழவிப் பதநீங்கிக் கமழ்சுரும்பின்
பூப்பயிலுஞ் சுருட்குழலும் பொலன்குழையு முடன்றாழ

யாப்புறுமென் சிறுமணிமே கலையணிசிற் றுடையுடன்
கோப்பமைகிண் கிணியசையக் குறுந்தளிர்மெல் லடியொதுங்கி.

(இ-ள்.) காப்பணிதற்குரிய இளமைபொருந்திய குழந்தைப்பருவங்கழிந்து, வாசனை வீசுகின்ற வண்டுகளையுடைய மலர்களை முடித்த சுருண்ட கூந்தலும், பொன்னாற் செய்யப்பட்ட குண்டலமும் தாழ்ந்து தொங்கிக்கொண்டிருக்க, சிறிய மணிகளால் கட்டப்பட்ட மெல்லிய மேகலாபரணமணிந்த சிற்றுடையோடு கோக்கப்பட்ட சிறு சதங்கையானது அசையும்படி சிறிய தளிர்போன்ற மிருதுவாகிய பாதங்களினால் ஒதுங்கி நடந்து.—எ-று. (௧௩)

புனைமலர்மென் கரங்களினாற் போற்றியதா தியர்நடுவண்
மனையகத்து மணிமுன்றின் மணற்சிற்றி லிழைத்துமணிக்
கனைகுரனூ புரமலையக் கழன்முதலாப் பயின்றுமுலை
நனைமுகஞ்செய் முதற்பருவ நண்ணினளப் பெண்ணமிர்தம்.

(இ-ள்.) அழகியதாமரைமலர்போன்ற மிருதுவாகிய கைகளினால் தன்னை யெடுத்துப்பாதுகாக்கின்ற தாதியர்களுக்கு நடுவில், வீட்டிலுள்ள அழகிய முற்றத்தில் மணலினால் சிறுவீடுகட்டியும்,பரல்மணிகளினால் சப்திக்கின்ற பாதச்சிலம்புகள் அசையும்படி கழங்காடல் முதலிய விளையாடல்களைச் செய்தும், ஸ்தனங்கள் அரும்புபோலத்தோன்றுகின்ற பேதைப் பருவத்தை அடைந்தாள், அந்தப் பெண்ணமிர்தமாகிய மானக்கஞ்சாறநாயனாருடைய மகள்.—எ-று. (௧௪)

உறுகவின்மெய்ப் புறம்பொலிய வொளிநுசுப்பை முலைவருத்த
முறுவல்புற மலராத முகிண்முத்த நகையென்னு
நறுமுகைமென் கொடிமருங்கு னளிர்ச்சுருளந் தளிர்ச்செங்கை
மறுவில்குலக் கொழுந்தினுக்கு மணப்பருவம் வந்தணைய.

(இ-ள்.) நிலைபெற்ற பேரழகானது தேகத்தின் புறத்தில் விளங்க, ஒளிபொருந்திய இடையை ஸ்தனங்கள் பாரத்தினால் வருத்த, இளஞ்சிரிப்பானது புறத்தில் வெளிப்படாத ஒளிபொருந்திய முத்துக்களையொத்த தந்தபந்திகளாகிய நல்ல அரும்பினையுடைய மிருதுவாகிய கொடிபோன்ற இடையினையும், நெய்ப்பசையினால் குளிர்ந்த கூந்தலையும், அழகுபொருந்திய தளிர்போன்ற சிவந்த கையினையுமுடைய குற்றமற்ற மானக்கஞ்சாறநாயனாருடைய குலத்திற்குக் கொழுந்துபோன்றிருக்கின்ற அப்புத்திரிக்குக் கலியாணப்பருவம் வந்துசேர.—எ-று. (௧௫)

திருமகட்கு மேல்விளங்குஞ் செம்மணியின் றீபமெனும்
ஒருமகளை மன்னுலகி லோங்குகுல மரபினராய்க்
கருமிடற்று மறையவனார் தமராய கழலேயர்
பெருமகற்கு மகட்பேச வந்தணைந்தார் பெருமுதியோர்.

(இ-ள்.) அழகில் இலட்சுமியைப்பார்க்கிலும் மேலாக விளங்குகின்ற சிவந்தமாணிக்கதீபம்போன்ற ஒப்பற்றபுத்திரியை நிலைபெற்றஉலகத்தில் உயர்ந்தவேளாளர்குலத்திற்கேற்ற மரபினையுடையவராய்க் காளகண்டத்தையுடைய சிவபெ

ருமானுக்கு அடியவராகிய கழலேயர் என்பவரது சிறந்தபுத்திரராகிய ஏயர்கோன் கலிக்காமநாயனருக்குப் பெண்பேசும்படி பெருமைபொருந்திய சிலமுதியோர்கள் வந்துசேர்ந்தார்கள்.—எ-று. (௧௬)

வந்தமூ தறிவோரை மானக்கஞ் சாறனர்
முந்தைமுறை மையின்விரும்பி மொழிந்தமணத் திறங்கேட்டே
யெந்தமது மரபினுக்குத் தகும்பரிசா லேயுமெனச்
சிந்தைமகிழ் வுறவுரைத்து மணநேர்ந்து செலவிட்டார்.

(இ-ள்.) மானக்கஞ்சாறநாயனர் தம்மிடத்தில் பெண்கேட்கும்படி வந்த பேரறிவினையுடைய பெரியோர்களைத் தமதுபழையஉறவினைான்னும் முறைமையால் விரும்பிவரவழைத்து, அவர்கள்சொல்லிய கலியாணவார்த்தையைக்கேட்டு எம்முடையவமிசத்திற்குத் தகுதியாயிருக்கின்றபடியால் அக்கலிக்காமநாயனருக்குப் பெண்கொடுக்கத்தகுமென்று மனமகிழ்வோடுசொல்லி மணஞ்செய்து கொடுக்கச்சம்மதித்து அவர்களை அனுப்புவித்தார்.—எ-று. (௧௭)

சென்றவருங் கஞ்சாறர் மணமிசைந்த படிசெப்பக்
குன்றனைய புயத்தேயர் கோனருமி கவிரும்பி
நின்றநிலை மையினிரண்டு திறத்தார்க்கு நேராய
மன்றல்வினை மங்கலநாண் மதிநூல்வல் லவர்வகுத்தார்.

(இ-ள்.) மானக்கஞ்சாறநாயனர் தமது புத்திரியைக் கலியாணஞ்செய்து கொடுக்க ஒப்புக்கொண்டதைக் கேட்டுப்போன பெரியோர்கள்சொல்ல, மலைபோன்ற புயத்தினையுடைய ஏயர்கோன்கலிக்காமநாயனரும் மிகுந்த சந்தோஷமடைந்து நிற்குமிடத்து, அவ்விருதிறத்தாருக்கும் ஒத்திருக்கின்ற கலியாணஞ்செய்தற்குரிய முகூர்த்தநாளைப் பேரறிவினையுடைய சோதிடசாஸ்திரிகள் வகுத்து நியமித்தார்கள்.—எ-று. (௧௮)

மங்கலமாஞ் செயல்விரும்பி மகட்பயந்த வள்ளலார்
தங்குலநீள் சுற்றமெலாந் தயங்குபெருங் களிசிறப்பப்
பொங்கியவெண் முளைப்பெய்து பொலங்கலங்க ளிடைநெருங்கக்
கொங்கலர்தண் பொழின்மூதூர் வதுவைமுகங் கோடித்தார்.

(இ-ள்.) கலியாணப்பெண்ணைப்பெற்ற மானக்கஞ்சாறநாயனர் மங்கலகரமாகியகாரியத்தைச் செய்யவிருப்பமுற்று, தமதுகுலத்திலுள்ள பெரியஉறவினரொல்லாம் மிகுந்தகளிப்பினல் சிறப்படையப் பொற்பாத்திரங்களில் நெருங்கும்படி விளங்குகின்ற வெண்மையாகிய பாலிகை முளைகளைவைத்து, மணம் வீசுகின்ற குளிர்ந்தசோலைகள் சூழ்ந்த பழமையாகிய கஞ்சாறூரைக் கலியாணஞ் செய்தற்குரிய சிறப்புண்டாக அலங்காரஞ் செய்தார்கள்.—எ-று. (௧௯)

கஞ்சாறர் மகட்கொடுப்பக் கைப்பிடிக்க வருகின்ற
எஞ்சாத புகழ்ப்பெருமை யேயர்குலப் பெருமானுந்
தஞ்சால்பு நிறைசுற்றந் தலைநிறைய முரசியம்ப
மஞ்சாரு மலர்ச்சோலைக் கஞ்சாற்றின் மருங்கணைய.

(இ-ள்.) மானக்கஞ்சாறநாயனார் தமது புத்திரியைக்கொடுக்கக் கலியாணஞ்செய்துகொள்ள வருகின்ற குறையாத பெரும்புகழையுடைய ஏயர்கோன் கலிக்காமநாயனாரும் தம்முடைய பெருமைபொருந்திய உறவினர்கள் கூட்டமாய் நிறைந்துவர, முரசவாத்தியம்முழங்க,மேகங்கள் தவழுகின்றமலர்களையுடையசோலைகள் சூழ்ந்த கஞ்சாறு என்னும் ஊருக்குச்சமீபமாகவந்துசேர.—எ-று.()

வள்ளலார் மணமவ்வூர் மருங்கணையா முன்மலர்க்கண்
ஒள்ளிழையைப் பயந்தார்தந் திருமனையி லொருவழியே
தெள்ளுதிரை நீருலக முய்வதற்கு மற்றவர்தம்
உள்ளநிலைப் பொருளாய வும்பர்பிரா னுமணைவார்.

(இ-ள்.) ஏயர்கோன்கலிக்காமநாயனாருடைய மணவெழுச்சியானது அவ்வூரில் வருவதற்குமுன்னமே நீலோற்பலமலர்போன்ற கண்களையும், பிரகாசம்பொருந்திய ஆபரணத்தையுமுடைய அம்மணமகளைப்பெற்ற மானக்கஞ்சாறநாயனாருடைய அழகியவீட்டில், ஒருவழியாக, தெளிவாகிய அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திலுள்ளவர்கள் கதிபெற்றுய்யும்பொருட்டு அம்மானக்கஞ்சாறநாயனாருடைய திருவுள்ளத்தில் நிலைத்து வாசஞ்செய்கின்ற மெய்ப்பொருளாகிய சிவபெருமான் எழுந்தருளத் திருவுள்ளங்கொண்டருளினார்.—எ-று. (உ௧)

முண்டநிறை நெற்றியின்மேன் முண்டித்த திருமுடியிற்
கொண்டசிகை சிகையின்கட் கோத்தணிந்த வெற்புமணி
பண்டொருவ னுடலங்கம் பரித்தநா ளதுகடைந்த
வெண்டரள மெனக்காதின் மிசையசையுங் குண்டலமும்.

(இ-ள்.) திரிபுண்டரம் நிறைந்த திருநெற்றியின்மேல் க்ஷௌரஞ்செய்துள்ள சிரசினுச்சியில் வைத்திருக்கின்ற குடுமியும், அக்குடுமியில் கோத்துத்தரிக்கப்பட்ட எலும்புமணிகளும் முற்காலத்தில் வாமனவுருவங்கொண்ட விஷ்ணுவினது உடம்பிலுள்ள முதுகெலும்பைத் தரித்துக்கொண்டபொழுது அவ்வெலும்பாற்கடைந்தெடுத்த வெள்ளியமுத்தைப்போலக்காதில் அசைகின்ற குண்டலங்களும்.—எ-று.

'பண்டொருவனுடலங்கம்பரித்த' என்பதன்வரலாற்றை முன்னர்க்காண்க.

இதுமுதல் நான்குபாடலுங்குளகம். (உஉ)

அவ்வென்பி னொளிமணிகொத் தணிந்ததிருத் தாழ்வடமும்
பைவன்பே ரரவொழியத் தோளிலிடும் பட்டிகையும்
மைவந்த நிறக்கேச வடப்பூணு நூலுமனச்
செவ்வன்பர் பவமாற்றுந் திருநீற்றுப் பொக்கணமும்.

(இ-ள்.) மேற்சொல்லிய அவ்வெலும்பினாற்செய்த ஒளிபொருந்திய மணிகளைக்கோத்துத் தரிக்கப்பட்ட அழகியதாழ்வடமும், படத்தினையுடைய வலிய பாம்பில்லாமல் தோளில் தரித்தயோகப்பட்டையும், கருமைநிறம்பொருந்திய மயிரினால் வடமாகச்செய்யப்பட்டிருக்கின்ற பூணூலும், சிவஞானம்பொருந்திய நல்ல

மனத்தினையுடைய அடியார்களின் பிறவித்துன்பத்தைப் போக்குகின்ற திருநீற்றுப்பையும்.—எ-று. (உங)

ஒருமுன்கைத் தனிமணிகோத் தணிந்தவொளிர் சூத்திரமும்
அருமறைநூற் கோவணத்தின் மிசையசைத்த திருவுடையும்
இருநிலத்தின் மிசைதோய்ந்த வெழுதரிய திருவடியும்
திருவடியிற் றிருப்பஞ்ச முத்திரையுந் திகழ்ந்திலங்க.

(இ-ள்.) முன்னங்கையொன்றில் ஒரு எலும்புமணியைக் கோத்துத்தரித்த விளங்குகின்ற சூத்திரமும், அரிய வேதமாகிய கோவணத்தின்மேல் கட்டியிருக்கின்ற அழகிய உடையும், பெரிய பூமியின்மேல் பொருந்தியிருக்கின்ற எழுதுதற்கரிய திருவடிகளும், அத்திருவடிகளில் (இரேகைசாஸ்திரத்திற் சொல்லப்பட்ட) சிறந்த பஞ்சமுத்திரைகளும் விளங்கித்தோன்ற.—எ-று.

சூத்திரம்=கயிறு. பஞ்சமுத்திரைகளாவன :—பதுமம், சங்கம், மகரம், சக்கரம், தண்டம் என்பனவாம். இவ்விரேகை ரூபமான பஞ்சமுத்திரைகளும் திருவடியின் உட்பரட்டில் அமைந்துதோன்றினவென்பார் 'இருநிலத்தின் மிசைதோய்ந்த * * * திருவடியிற் றிருப்பஞ்ச முத்திரையும்' என்று கூறினர். (உச)

பொடிமூடு தழலென்னத் திருமேனி தனிற்பொலிந்த
படிநீடு திருநீற்றின் பரப்பணிந்த பான்மையராய்க்
கொடிநீடு மறுகணைந்து தம்முடைய் குளிர்கமலத்
தடிநீடு மனத்தன்பர் தம்மனையி னகம்புகுந்தார்.

(இ-ள்.) நீறுபூத்த நெருப்புப்போலத்தமது திருமேனியில் விளங்குகின்ற சிறப்புப்பொருந்திய திருவெண்ணீற்றினது உத்தூளனத்தை யணிந்த தன்மையையுடையவராய், கொடிகள் கட்டிய நீண்ட வீதியில் சேர்ந்து, தமது குளிர்ந்த தாமரைமலர்போன்ற திருவடிகள் தங்குகின்ற திருவுள்ளத்தையுடைய மெய்யன்பராகிய மானக்கஞ்சாறநாயனரது வீட்டினுள்ளே புகுந்தருளினர்.—எ-று. (உரு)

வந்தணைந்த மாவிரத முனிவரைக்கண் டெதிரொழுந்து
சிந்தைகளி கூர்ந்துமகிழ் சிறந்தபெருந் தொண்டனார்
எந்தைபிரான் புரிதவத்தோ ரிவ்விடத்தே யெழுந்தருள
உய்ந்தொழிந்தே னடியேனென் றுருகியவன் பொடுபணிந்தார்.

(இ-ள்.) தமது வீட்டில் எழுந்தருளிய மாவிரதசமயத்தினராகிய முனிவரைப்பார்த்து உடனேஎழுந்து எதிர்கொண்டு மனதில் மிகவும் சந்தோஷித்துப் பெருவிருப்பமடைந்த சிறந்த மானக்கஞ்சாறநாயனர் எமது ஆண்டவராகிய சிவபெருமானிடத்தில் அன்புசெலுத்துகின்ற தவத்தினையுடைய இப்பெரியவர் இவ்விடத்தில் எழுந்தருளிவந்ததனாலே அடியேன் பிறவித்துன்பத்தினின்றும் நீங்கிப் பிழைத்தேன் என்று உருக்கமாகிய அன்போடு பணிந்தார்.—எ-று. (உசு)

உற்றவராம் பெருமானர் நலமிகுமன் பரைநோக்கி
உற்றசெயன் மங்கலமிங் கொழுகுவதென் னென்னவடியேன்

பெற்றதொரு பெண்கொடிதன் வதுவையெனப் பெருந்தவரு
மற்றுமக்குச் சோபனமா குவதென்று வாய்மொழிந்தார்.

(இ-ள்.) நல்ல தவமுனிவர்போலத் திருவேடங் கொண்டுவந்த சிவபெருமான் நற்குணமிகுந்த மானக்கஞ்சாறநாயனாரைப் பார்த்து, இப்பொழுது மங்கலகரமான செயலை இங்கேசெய்துகொண்டிருப்பது எதற்காகவென்று கேட்க, (அதற்கு அந்நாயனார்) அடியேன் அருமையாகப்பெற்ற ஒரு பெண்குழந்தையினது கலியாணம் என்று சொல்ல, சிறந்த தவமுனிவராகிய கடவுளும் (அன்பரே!) உமக்குச் சுபமுண்டாகக்கடவதென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௨௭)

ஞானச்செய் தவரடிமேற் பணிந்துமனை யகநண்ணி
மானக்கஞ் சாறனார் மணக்கோலம் புனைந்திருந்த
தேனக்க மலர்க்கூந்தற் றிருமகளைக் கொண்டணைந்து
பானற்கந் தரமறைத்து வருமவரை பணிவித்தார்.

(இ-ள்.) மானக்கஞ்சாறநாயனார் சிவஞானம்பொருந்திய தவத்தினையுடைய மாவிரதவேடங்கொண்டுவந்த சிவபெருமானுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, வீட்டினுள்புகுந்து, திருமணக்கோலந்தரித்திருந்த தேன்மணங்கமழும் மலர்களைமுடித்த கூந்தலையுடைய தமது புத்திரியை அழைத்துக்கொண்டுவந்து நீலோற்பலமலர்போன்ற காளகண்டத்தைமறைத்து எழுந்தருளிவந்த சுவாமியைப்பணியும்படி செய்வித்தார்.—எ-று. (௨அ)

தஞ்சரணத் திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன்
மஞ்சுதழைத் தெனவலர்ந்த மலர்க்கூந்தற் புறநோக்கி
அஞ்சலிமெய்த் தொண்டரைப்பார்த் தணங்கிவடன் மயிர்நமக்குப்
பஞ்சவடிக் காமென்றார் பரவவடித் தலங்கொடுப்பார்.

(இ-ள்.) தம்மைவணங்குகின்ற ஜீவகோடிகளுக்குத் திருவடியைத் தந்தருளுகின்றவராகிய சிவபெருமான் தம்முடைய பாதங்களில் வீழ்ந்து நமஸ்காரஞ்செய்து எழுந்த இளமைபொருந்திய அப்பெண்ணினது மேகம்பரவினதுபோல அசைந்துகொண்டிருக்கின்ற மலர்களைமுடித்த கூந்தலின் புறத்தைப்பார்த்து, தம்மை அஞ்சலிசெய்துகொண்டு நிற்கின்ற மெய்யன்பராகிய மானக்கஞ்சாறநாயனாரைநோக்கி உமது புத்திரியாகிய இப்பெண்ணினது கூந்தலானது நமக்குப்பஞ்சவடிக்கயிற்றுக்குத் தகுதியாயிருக்குமென்றுசொன்னார்.—எ-று.

பஞ்சவடியாவது, மயிரினாலே அகலமாகச்செய்யப்பட்டு மார்பிலே பூணூலாகத்தரிக்கப்படும் வடமாம்; பஞ்சம்=விரிவு; வடி=வடம். (௨௯)

அருள்செய்த மொழிகேளா வடற்சுரிகை தனையுருவிப்
பொருள்செய்தா மெனப்பெற்றே னெனக்கொண்டு பூங்கொடிதன்
இருள்செய்த கருங்கூந்த லடியிலரிந் தெதிர்நின்ற
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட.

(இ-ள்.) மாவிரதமுனிவராகிய கடவுள் அருளிச்செய்த வார்த்தையை மானக்கஞ்சாறநாயனார் கேட்டு, வலிமைபொருந்திய உடைவாளையுருவி, பெரும்

பொருளைவிருத்தியாக்கிக் கொண்டவனைப்போல, இத்தவமுனிவர் இதனைக்கேட்கப்பெற்றேனென்று மனத்தில்எண்ணி, பூங்கொடிபோன்ற அப்புத்திரியினது இருளையொத்த கருமையாகிய கூந்தலை அடியில் அரிந்து தமக்கு எதிரேநிற்கும் மயக்கத்தைத்தருகின்ற பிறப்பை ஒழிக்க வல்லவராகிய சிவபெருமானது மலர்போன்ற திருக்கரத்தில் கொடுக்கும்படி நீட்ட.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (௲௰)

வாங்குவார் போனின்ற மறைப்பொருளா மவர்மறைந்து
பாங்கின்மலை வல்லியுடன் பழையமழ விடையேறி
ஓங்கியவிண் மிசைவந்தா ரொளிவிசும்பு நிலநெருங்கத்
தூங்கியபொன் மலர்மாரி தொழும்பர்தொழு தெதிர்விழுந்தார்.

(இ-ள்.) அக்கூந்தலைக் கைநீட்டி வாங்குகின்றவரைப்போல் மாவிரதவேடங்கொண்டு நின்ற வேதத்தின் மெய்ப்பொருளாகிய சிவபெருமான் மறைந்தருளி, இடப்பாகத்திலிருக்கும் உமாதேவியாரோடு பழமையாகிய இளமை பொருந்திய ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளி, உயர்ந்த ஆகாயத்தில் காட்சிகொடுத்தருளினார்; ஒளிபொருந்திய ஆகாயத்திலும் பூமியிலும் நெருங்கும்படி கற்பகமலர்மாரி மிகுதியாகச்சொரிந்தன; அடியவராகிய மானக்கஞ்சாறநாயனார் தமது கைகளைச்சிரமேற்குவித்து எதிரே பூமியில் விழுந்து வணங்கினார்.—எ-று. (௲௧)

விழுந்தெழுந்து மெய்மறந்த மெய்யன்பர் தமக்குமதிக்
கொழுந்தலைய விழுங்கங்கை குதித்தசடைக் கூத்தனார்
எழும்பரிவி னம்பக்க லுனக்கிருந்த பரிசிந்தச்
செழும்புவனங் களிலேறச் செய்தோமென் றருள்செய்தார்.

(இ-ள்.) இவ்வாறுபூமியில்விழுந்து வணங்கிஎழுந்து,தேகம்பரவசமடைந்து நின்ற மெய்யன்பராகிய மானக்கஞ்சாறநாயனாருக்கு,இளம்பிறையானது அசையும்படிவிழுகின்ற கங்கைதங்கிய சடைமுடியினையுடைய சிவபெருமான் மிகுந்த அன்போடு நம்மிடத்தில் உனக்கிருந்த அன்பின் தன்மையை இந்தச்செழுமைபொருந்திய உலகங்களில் பரவும்படிசெய்தோமென்று திருவாய்மலர்ந்தருளினார்.-எ-று.

மருங்குபெருங் கணநாதர் போற்றிசைப்ப வானவர்க
ணெருங்கவிடை மேற்கொண்டு நின்றவர்மு னின்றவர்தாம்
ஒருங்கியநெஞ் சொடுகரங்க ளுச்சியின்மேற் குவித்தையர்
பெருங்கருணைத் திறம்போற்றும் பெரும்பேறு நேர்பெற்றார்.

(இ-ள்.) தமக்கு அருகில் பெருமைபொருந்திய சிவகணத்தலைவர்கள் துதிசெய்யவும், தேவர்கூட்டங்கள் சூழவும், ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளிநின்ற சிவபெருமானுக்கு முன்னே நிற்கின்ற மானக்கஞ்சாறநாயனார் ஒருமைப்பட்ட மனதோடு கைகளைச் சிரசின்மேல் குவித்துக்கொண்டு சிவபெருமானது பெருங்கருணைத்திறத்தைச் சதாகாலமும் துதித்துக்கொண்டிருக்கின்ற பெருமைபொருந்திய சிவப்பேற்றை உடனேபெற்றுக்கொண்டார்.—எ-று. (௲௨)

தொண்டனார் தமக்கருளிச் சூழ்ந்திமையோர் துதிசெய்ய
இண்டைவார் சடைமுடியா ரெழுந்தருளிப் போயினார்

வண்டுவார் குழற்கொடியைக் கைப்பிடிக்க மணக்கோலங்
கண்டவர்கள் கண்களிப்பக் கலிக்காம னூர்புகுந்தார்.

(இ-ள்.) மானக்கஞ்சாறநாயனாருக்கு இவ்விதமாக அருள்செய்து, தேவர்கள் நாற்புறத்திலுஞ்சூழ்ந்து துதிக்க இண்டைமாலையைத்தரித்த நீண்டசடைமுடியினையுடைய சிவபெருமான் மறைந்தருளினார்; வண்டுகள்மொய்க்கின்ற நீண்ட கூந்தலையுடைய அவரது புத்திரியைக் கலியாணஞ் செய்யும்பொருட்டுக்கொண்ட மணக்கோலத்தைப்பார்த்தவர்கள் கண்கள் களிப்படையும்படி ஏயர்கோன் கலிக்காமநாயனார் அங்குவந்து சேர்ந்தார்.—எ-று. (௩௪)

வந்தணைந்த வேயர்குல மன்னவனார் மற்றந்தச்
சிந்தைநினை வரியசெயல் செறிந்தவர்பாற் கேட்டருளிப்
புந்தியினின் மிகவுவந்து புனிதனா ரருள்போற்றிச்
சிந்தைதளர்ந் தருள்செய்த திருவாக்கின் றிறங்கேட்டு.

(இ-ள்.) மானக்கஞ்சாறநாயனாருடைய வீட்டிற்குவந்து சேர்ந்த ஏயர்கோன் கலிக்காமநாயனார் மனதினால் நினைத்தற்கரிய அந்தத் தெய்வீகச்செயலை அங்கு நிறைந்திருக்கின்றவர்களிடத்தில் கேள்விப்பட்டு, தமது உள்ளத்தில் மிகவும் மகிழ்ந்து, சிவபெருமானது திருவருளைத்துதித்து, மனத்தளர்ச்சியடைந்து (அத்தளர்ச்சி நீங்கும்பொருட்டுச்) சிவபெருமானருளிச்செய்த திருவாக்கின் உறுதியைக் கேட்டு.—எ-று.

சிந்தை நினைவரியசெயலாவது, மணக்கோலங்கொண்டிருந்த புத்திரியின் கூந்தலை மாவிரதவேடங்கொண்டுவந்த சிவபெருமானுக்குச் சிறிதும் அஞ்சாது அரிந்துகொடுத்தலாம். புந்தியினின்மிகவுவத்தலாவது, சிவபெருமானது திருவருள்பெற்றமெய்யன்பருடையமகள் நமக்கு மனைவியாயினளென்று மகிழ் கூர்தலாம். புனிதனாரருள் போற்றலாவது, சிவபெருமான் இவ்வாறு வெளிப்பட்டருளுங் கருணையின் றிறத்தைத் தொழுதலாம். சிந்தைதளர்ந்ததாவது, நாம் மணம்புரிந்தபின்னர் இவ்வாறு நிகழின் நமக்கும் அத்திருவருள் கிடைக்கும்; அங்ஙனமின்றி முன்னர் நிகழ்ந்தன்வே யென்று மனம் வருந்துதலாம். முண்டிதஸ்திரியை விவாகஞ்செய்தல் சாஸ்திரவிரோதமாயிற்றே யென்று மனவருத்தப்பட்டாரென்றாலும் பொருந்தும். அருள்செய்த திருவாக்கின் றிறமாவது, சிவபெருமான் அசரீரியாய் "கலிக்காமா! நீ துன்பப்படாதே; நாம் இந்தப் பெண்ணுக்குக் கூந்தலை மீளக்கொடுத்தருள்கின்றோமாதலால்சந்தோஷமாகக் கலியாணஞ்செய்துகொள்" என்று எழுந்த வார்த்தையாம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௫)

மனந்தளரு மிடர்நீங்கி வானவர்நா யகரருளாற்
புனைந்தமலர்க் குழல்பெற்ற பூங்கொடியை மணம்புணர்ந்து
தனம்பொழிந்து பெருவதுவை யுலகெலாந் தலைசிறப்ப
இனம்பெருகத் தம்முடைய வெயின்மூதூர் சென்றணைந்தார்.

(இ-ள்.) ஏயர்கோன் கலிக்காமநாயனார் தம்மனதிற்குத் தளர்ச்சியையுண்டாக்குகின்ற துன்பத்தினின்றும் நீங்கித் தேவர்கள்நாயகராகிய சிவபெருமானது

திருவருளினால் முன்போல அலங்கரித்த மலர்களைமுடித்த கூந்தலை மறுபடியும் பெற்றுக்கொண்ட மானக்கஞ்சாறநாயனாருடைய புத்திரியை விவாகஞ்செய்து கொண்டு,பெருமைபொருந்திய இக்கலியாணச்செயல் உலகமுழுமையும் சிறப்புற்றோங்க வேதியர்முதலானவர்களுக்கு மிகுந்த திரவியங்களைத் தானமாகச் சொரிந்து, சுற்றத்தார் சந்தோஷமடைய மதில்சூழ்ந்த பழமையாகிய திருப்பெருமங்கல மென்னும் தமது ஊருக்குச் சென்றுசேர்ந்தார்.—எ-று. (௩௬)

வேறு.

ஒருமகள் கூந்த றன்னை வதுவைநா ளொருவர்க் கீந்த
பெருமையார் தம்மைப் போற்றும் பெருமையென் னளவிற் றேமே
மருவிய கமரிற் புக்க மாவடு விடேலென் றோசை
உரிமையாற் கேட்க வல்லார் திறமினி யுரைக்க லுற்றேன்.

(இ-ள்.) தம்முடைய ஏகபுத்திரியினது கூந்தலை அப்பெண்ணின் கலியாணகாலத்தில் (மாவிரதவேடங்கொண்டுவந்த அடியவராகிய) சிவபெருமானுக்கு அரிந்துகொடுத்த மேன்மையை யுடைய மானக்கஞ்சாறநாயனாரைக் குறித்துத் துதிக்கும்பெருமை என்னளவில் சொல்லிமுடியுமோ? முடியாது. இனி, மேன்மை பொருந்திய கமரினுள் புகுந்த மாவடுவினது விடேல் விடேல் என்னும் ஓசையை அன்பினுரிமையினால் கேட்கவல்ல அரிவாட்டாயநாயனாரது திருத்தொண்டைக் குறித்துச் சொல்லுகின்றேன்.—எ-று.

விடேல் என்பது அனுகரணவோசை. (௩௭)

மானக்கஞ்சாறநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம் - ௯௦௭.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# அரிவாட்டாய நாயனார்புராணம்.

வரும்பு னற்பொன்னி நாட்டொரு வாழ்பதி
சுரும்பு வண்டொடு சூழ்ந்து முரன்றிட
விரும்பு மென்க ணுடையவாய் விட்டுநீள்
கரும்பு தேன்சொரி யுங்கண மங்கலம்.

(இ-ள்.) இடையறாது ஒழுகுகின்ற நீர்வளம்பொருந்திய சோழநாட்டில் குடிகள் சுகமாகவாழ்வதற்கிடமாகிய ஒப்பற்ற ஊரானது, ஆண்வண்டுகள் பெண்வண்டுகளோடு சூழ்ந்து ஒலிக்க,நீண்டகரும்புகள் விரும்பத்தகுந்தமிருதுவாகிய கணுக்களையுடைய வாயைப்பிளந்து மதுரமாகிய சாற்றைச்சொரிகின்ற கணமங்கலம் என்னும் நகரமாம்.—எ-று. (க)

செங்கெ லார்வயற் கட்டசெங் தாமரை
முன்னர் சங்குமிழ் முத்தஞ் சொரிந்திடத்
துன்னு மள்ளர்கை மேற்கொண்டு தோன்றுவார்
மன்னு பங்கய மாநிதி போன்றுளார்.

(இ-ள்.) செந்நெற் பயிர்களையுடைய வயல்களினிடத்துக் களை கடிந்த செந்தாமரைமலர்களின்மேல் முற்பட்டுச் சங்குகள் ஈன்ற முத்துக்கள் சொரிய, நெருங்கிய பள்ளர்கள் அத்தாமரைமலர்களைக் கையில் எடுத்துக்கொண்டு நிலைபெற்ற பதுமநிதியையுடையவர்களைப்போல வருவார்கள்.—எ-று. (உ)

வளத்தி னீடும் பதியதன் கண்வரி
யுளர்த்து மைம்பா லுடையோர் முகத்தினுங்
களத்தின் மீதுங் கயல்பாய் வயலயற்
குளத்து நீளுங் குழையடை நீலங்கள்.

(இ-ள்.) பல வளங்களாலும் உயர்ந்திருக்கின்ற அந்தக் கணமங்கலமென்னும் நகரத்தில் வண்டுகள் கிண்டுகின்ற கூந்தலையுடைய மாதர்களின் முகத்திலும், அவர்கள் கழுத்திலும், கெண்டைமீன்கள் பாய்கின்ற வயல்களின் புறத்திலுள்ள குளங்களிலும் குழையையடைந்த நீலமலர்கள் மிகுதியாகஇருக்கும்—எ-று.

முகத்திற் குழையடைநீலங்கள் என்பதற்கு, காதளவாகச் செல்லுங் கண்களென்றும், களத்திற் குழையடை நீலங்கள் என்பதற்கு, குழைவாகச்செய்த நீலமணிகளென்றும் பொருள்கொள்க. (ஙு)

அக்கு லப்பதி தன்னி லறநெறித்
தக்க மாமனை வாழ்க்கையிற் றங்கினார்
தொக்க மாநிதித் தொன்மையி லோங்கிய
மிக்க செல்வத்து வேளாண் டலைமையார்.

(இ-ள்.) அந்தச் சிரேஷ்டம்பொருந்திய கணமங்கல நகரத்தில் தருமநெறியினால் சிறந்த பெருமையினையுடைய இல்வாழ்க்கையில் நிலைத்துவாழ்கின்றவர்; தலைமுறைதலைமுறையாகத் திரண்டிருக்கின்ற மிகுந்த திரவியத்தின் பழமையால் உயர்ந்திருக்கின்ற பெருஞ்செல்வத்தினையுடைய வேளாளர்குலத்திற்குத் தலைவராயுள்ளவர்.—எ-று. (௪)

தாய னாரெனு நாமந் தரித்துளார்
சேய காலந் தொடர்ந்துந் தெளிவிலா
மாய னார்மண் கிளைத்தறி யாதவத்
தூய நாண்மலர்ப் பாதந் தொடர்ந்துளார்.

(இ-ள்.) தாயனாரென்னுந் திருநாமந்தரித்தவர்; அஞ்ஞானத்தையுடைய விஷ்ணுவானவர் அநேககாலமாகத்தேடியும் (வராகவுருவங்கொண்டு) மண்ணைத்தோண்டியும் அறியக்கூடாத அந்தச் சிறப்பினையுடைய சிவபெருமானது பரிசுத்தம்பொருந்திய புதிய தாமரைமலர்போன்ற திருவடிகளைத் தமக்குப் பற்றுக்கோடாகக்கொண் டொழுகுகின்றவர்.—எ-று. (௫)

மின்னு செஞ்சடை வேதியர்க் காமென்று
செந்நெ லின்னமு தோடுசெங் கீரையு
மன்னு பைந்துணர் மாவடு வுங்கொணர்ந்
தன்ன வென்று மமுதுசெய் விப்பரால்.

(இ-ள்.) அவர் மின்னலைப்போலவிளங்குகின்ற சிவந்த சடையினையுடைய சிவபெருமானுக்கு ஆகுமென்று செந்நெலரிசியாலாகிய இனியஅன்னத்தோடு சிவந்தகீரையும், நிலைபெற்ற பசுமைபொருந்திய பூங்கொத்துக்களையுடைய மாம்பிஞ்சுங் கொண்டுவந்து அவைகளை எப்பொழுதும் அப்பெருமானுக்குத்திருவமுதுசெய்விப்பார்.—எ-று. (௬)

இந்த நன்னிலை யின்னல்வந் தெய்தினுஞ்
சிந்தை நீங்காச் செயலி னுவந்திட
முந்தை வேத முதல்வ ரவர்வழி
வந்த செல்வ மறியாமை மாற்றினார்.

(இ-ள்.) இப்படி திருவமுது செய்விக்கின்ற நல்ல திருத்தொண்டினை வறுமை நேரிட்டகாலத்திலும் மனதில் மறவாமல் செய்கின்ற இந்நாயனாரது செய்கை காரணமாக உலகத்தார் சந்தோஷிக்கும்பொருட்டு, பழமையாகிய வேதங்களையருளிச்செய்த முதல்வராகிய சிவபெருமான் அவரிடத்திருந்த செல்வங்களனைத்தும் இவ்வாறு சென்றதென்று ஒருவரும் அறியாத விதமாகப் போக்கிவிட்டார்.

மேவு செல்வங் களிறுண் விளங்கனி
யாவ தாகி யழியவு மன்பினற்
பாவை பங்கர்க்கு முன்பு பயின்றவத்
தாவில் செய்கை தவிர்ந்திலர் தாயனூர்.

(இ-ள்.) தாயனூர் தம்மிடத்து நிலைபெற்றிருந்த பலவகைச்செல்வங்களும் யானையுண்ட விளாம்பழத்தைப்போல நிலைகெட்டு அழிந்துபோகவும், பத்தியினுலே பார்வதிபாகராகிய சிவபெருமானுக்குத் தாம் முன்பு செல்வத்தோடிருந்தகாலத்தில் செய்துவந்த அந்தக்கெடுதலில்லாத செய்கையினின்றும் சிறிதும் தவறுமல் நடத்திக்கொண்டுவந்தார்.—எ-று.

களிறுண்விளங்கனி-என்பது, வேழமுண்ட விளாங்கனி; வேழமாவது, அக்கனிக்குண்டாவதோர் நோய். அது விளாங்கனியை உள்ளதுபோற் காட்டி உள்ளீடின்றுகச்செய்யும்; அதுபோல, இவரது செல்வம் உள்ளதுபோலிருந்து இல்லையாயிற்றென்பார் 'மேவுசெல்வங் களிறுண்விளங்கனி- யாவதாகியழியவும்' என்று கூறினூர். (அ)

அல்ல னல்குர வாயிடக் கூலிக்கு
நெல்ல றுத்துமெய் நீடிய வன்பினு
னல்ல செந்நெலிற் பெற்றன நாயனூர்க்
கொல்லை யின்னமு தாக்கொண் டொழுகுவார்.

(இ-ள்.) துன்பத்தைத் தருகின்ற தரித்திரமானது அதிகரிக்கக் கூலிக்கு நெல்லறுத்தும் உண்மையாகிய பேரன்பினுல் நல்ல சம்பாநெல்லினுல் கிடைத்த அரிசிகளைச் சிவபெருமானுக்கு விரைவில் இனிமைபொருந்திய திருவமுதாகச் சமைத்துக்கொண்டு அத் திருத்தொண்டு செய்துவருவார்.—எ-று.

வீடு, பொன், மாடு, நிலம் முதலிய எல்லாப் பொருள்களையும் இழந்து தரித்திரராயினரென்பார் 'அல்லனல்குரவாயிட' என்று கூறினூர். (கூ)

சாலி நேடி யறுத்தவை தாம்பெறுங்
கூலி யெல்லாந் திருவமு தாக்கொண்டு
நீல நெல்லரி கூலிகொண் டுண்ணுநாண்
மால யற்கரி யாரது மாற்றுவார்.

(இ-ள்.) சம்பாநெற்கள் எவர்கள்வயலில் விளைந்திருக்கின்றனவோவென்று தேடி, அதற்கு உரியவர்களின் உத்தரவுபெற்றுக்கொண்டு அறுத்து, அவைகளில் தாம் பெறுகின்ற கூலிநெற்களையெல்லாம் சுவாமிக்குத் திருவமுதுக்குரியனவாக அமைத்துக்கொண்டு, கார்நெல்லரிந்த கூலியைத் தாம்பெற்றுக்கொண்டு அந்தநெல்லின் அரிசியினுல் சீவனஞ்செய்துகொண்டுவரும்நாள்களில், திருமால் பிரமன் என்னும் இருவருக்கும் அரியவராகிய சிவபெருமான் அந்தக் கார்நெல்லில்லாமல் நீக்கத் திருவுள்ளங்கொண்டருளினூர்.—எ-று.

இதனுல், சிவபெருமானுக்குச் சம்பாநெல்லரிசி யன்னம் படைத்தலால் தாமும் அவ்வரிசியன்னம் புசித்தல் தகுதியன்றென்று, காரரிசியன்னம்உண்டுவந்த

னரென்று கூறியதாயிற்று. கார்நெல்விளையுங் கழனிகளிருப்பதாலன்றோ இவன் அவ்வன்னம் புசிக்கின்றான் அவற்றையெல்லாம் செந்நெல்லாக்குவோமென்று திருவுள்ளங்கொண்டருளினரென்பார் 'அது மாற்றுவார்' என்று கூறினர். (௧0)

வேறு.

நண்ணிய வயல்க ளெல்லா நாடொறு முன்னங் காண
வண்ணவார் கதிர்ச்செஞ் சாலி யாக்கிட மகிழ்ந்து சிந்தை
அண்ணலா ரறுத்த கூலி கொண்டிஃ தடியேன் செய்த
புண்ணிய மென்று போத வமுதுசெய் விப்பா ராளுர்.

(இ-ள்.) தாம் கூலிக்கு அறுக்கும்படியாகச் சென்ற அவ்வூரிலுள்ள வயல்களிலெல்லாம் நாள்தோறும் தன் கண்முன்னே காணும்படி சிவபெருமான் அழகிய நீண்ட கதிர்களையுடைய சம்பாநெல்லாகச்செய்ய, அதனால் தாயநாயனார் மனமகிழ்ந்து தாம் அறுத்த சம்பாநெற்கூலியைப் பெற்றுக்கொண்டு, இப்படி எல்லாம் சம்பாநெல்லாகக்கிடைத்தது அடியேன் பூர்வத்தில் செய்த புண்ணியத்தின் பயனென்று சுவாமிக்கு முன் செய்துவந்ததைப் பார்க்கிலும் மிகுதியாகத் திருவமுது செய்விப்பவராயினர்.—எ-று. (௧௧)

வைகலு முணவி லாமை மனைப்படப் பையினிற் புக்கு
நைகர மில்லா வன்பி னங்கைகை யடகு கொய்து
பெய்கலத் தமைத்து வைக்கப் பெருந்தகை யருந்தித் தங்கள்
செய்கடன் முட்டா வண்ணந் திருப்பணி செய்யு நாளில்.

(இ-ள்.) இப்படி நடக்கின்றபடியினால் நாள்தோறும்உணவில்லாமைபற்றி, தமது வீட்டின் பின்புறத்திலுள்ள தோட்டத்திற்குப்போய், குறைவில்லாத அன்பினையுடைய அவரது மனைவியார் தமது கையினால் இலைக்கறிகளைக் கொய்து சமைத்துப் போசனபாத்திரத்தில் படைக்க, பெருங்குணத்தையுடைய தாயநாயனார் அதனைப் புசித்துத் தாங்கள் இருவரும் செய்துவருகின்ற கடமையானது தடைபடாதிருக்கும் விதமாகத் திருப்பணிசெய்துவரும் நாள்களில்.—எ-று.

மனைமருங் கடகு மாள வடநெடு வான மீனே
அனையவர் தண்ணீர் வார்க்க வமுதுசெய் தன்ப னாரும்
வினைசெயன் முடித்துச் செல்ல மேவுநா ளொருநாண் மிக்க
முனைவனார் தொண்டர்க் கங்கு நிகழ்ந்தது மொழியப் பெற்றேன்.

(இ-ள்.) தமது தோட்டத்திலுள்ள இலைக்கறிகளெல்லாம் அற்றுப்போக, சிறந்த அருந்ததியையொத்த கற்பினையுடைய அவரது மனைவியார் குளிர்ந்த நீரைப்பாத்திரத்தில் வார்க்க அதனைப் பானம்பண்ணி,மெய்யன்பராகிய தாயநாயனாரும் தாம் சுவாமிக்குச் செய்துவருகின்ற திருப்பணிகளை முடித்துக்கொண்டுவர, அவ்வாறு நடந்துகொண்டிருக்கும் நாள்களில் ஒருநாள் ஒப்பற்ற சிவபெருமானுடைய அடியவராகிய அத்தாயநாயனாருக்கு அவ்விடத்தில் சம்பவித்த ஓர் விசேடத்தைச் சொல்லத் தொடங்குகின்றேன்.—எ-று.

இலைக்கறி - கீரைமுதலியன; அவை அற்றுப்போனமைக்குக் காரணம் அவற்றைப் பிடுங்கியபின்னர் பாத்திகோலிப் பயிரிடுதற்கில்லாமல் காலத்தையெல்

லாம் நெல்லறுத்தலிலேயே செலுத்தலாமெனக. வடமீன் = அருந்ததி. இதனால், இந்நாயனார் செல்வம் நீங்கி வறுமையுற்றும், கூலிக்கு அரியரிந்து, தமதுணவுக்குக் கார்நெல்கூலி கிடையாமைக்குக் களித்தும், கீரை யுண்டும், நீருண்டும் தாம் செய்யும் திருத்தொண்டிற் சிறிதுந் தவறாது ஒழுகினரென்பது வெளியாயிற்று. (௧௩)

முன்புபோன் முதல்வ னாரை யமுதுசெய் விக்க மூளும்
அன்புபோற் றூய செந்நெ லரிசிமா வடுமென் கீரை
துன்புபோ மனத்துத் தொண்டர் கூடையிற் சுமந்து செல்லப்
பின்புபோ மனைவி யாரான் பெற்றவஞ் சேந்திச் சென்றார்.

(இ-ள்.) தாம் செல்வத்தை யனுபவித்திருந்த காலத்தைப்போலச் சிவபெருமானுக்குத் திருவமுது செய்விக்கும்பொருட்டு அதிகரித்தெழுந்த அன்புபோலப் பரிசுத்தம்பொருந்திய சம்பாநெல் அரிசியும், மாவடுவும், மிருதுவாகிய கீரையும் துன்பமில்லாத மனத்தினையுடைய தாயநாயனார் கூடையில் வைத்துச் சுமந்து கொண்டுபோகப் பின்னே போகின்ற அவரது மனைவியார் பஞ்சகவ்வியத்தை எடுத்துக்கொண்டுபோனார்.—எ-று.

ஆன்பெற்ற அஞ்சாவன:—பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பனவாம். (௧௪)

போதரா நின்ற போது புலர்ந்துகா றளர்ந்து தப்பி
மாதரார் வருந்தி வீழ்வார் மட்கல மூடு கையாற்
காதலா லணைத்து மெல்லாங் கமரிடைச் சிந்தக் கண்டு
பூதநா யகர்தந் தொண்டர் போவதங் கினியென் னென்று.

(இ-ள்.) தாயநாயனார் இவ்வாறு கூடையையெடுத்துக்கொண்டு போகும்பொழுது உணவில்லாமையால் தேகம் இளைத்து, அதனால் கால் தள்ளாடித் தவறி வருந்திவிழுந்தார்; அவரது மனைவியார் பஞ்சகவ்விய பாத்திரத்தை மூடியிருக்கின்ற தமது கையினால் மிகுந்த அன்போடு அவரை அணைத்துக்கொண்டும் எல்லாம் கமரில் சிந்திவிழக்கண்டு, பூதகணங்களுக்கு நாயகராகிய சிவபெருமானது அடியவராகிய தாயநாயனார் இனி நாம் சுவாமிசந்நிதிக்குப் போவதனால் என்னபிரயோசனமென்று.—எ-று.

கமர் என்பது நிலத்தின் வெடிப்பு. வெறுநிலத்தில் சிந்தினாலும் எடுத்துச் சுத்திசெய்து பெருமானுக்கு உபயோகப்படுத்தக்கூடும்; அவ்வாறின்றிக் கமரிற் சிந்தினமையால் வெறுங்கையோடு கோயிலுக்குப்போவதில் ஒருபயனுமின்றென்பார் 'போவதங்கினியென்' என்று கூறினார்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௫)

நல்லசெங் கீரை தூய மாவடு வரிசி சிந்த
அல்லறீர்த் தாள வல்லா ரமுதுசெய் தருளு மப்பே
றெல்லையி றீமை யேனிங் கெய்திடப் பெற்றி லேனென்
றொல்லையி லரிவாட் பூட்டி யூட்டியை யரிய லுற்றார்.

(இ-ள்.) நல்ல செங்கீரையும், பரிசுத்தம்பொருந்திய மாவடுவும், செந்நெலரிசியும் கமரில் சிந்திவிடவும், பிறவித்துன்பத்தை நீக்கி ஆண்டருள வல்லவராகிய சிவபெருமான் திருவமுது செய்தருளுகின்ற பெரும்பேற்றை அளவில்லாத தீமை

யையுடைய அடியேன் இவ்விடத்து அடையும்படி பெறவில்லை யென்று விரைவில் தமது கையிலுள்ள அரிவாளைக் கழுத்திற்பூட்டி ஊட்டியை அறுக்கத்தொடங்கினார்.—எ-று.

ஊட்டி என்பது கழுத்தின் முன்பக்கத்திலுள்ள முடிச்சு. (கசு)

ஆட்கொள்ளு மையர் தாமிங் கமுதுசெய் திலர்கொ லென்னப்
பூட்டிய வரிவாட் பற்றிப் புரையற விரவுமன்பு
காட்டிய நெறியி னுள்ளந் தண்டறக் கழுத்தி னோடே
ஊட்டியு மரியா நின்று ருறுபிறப் பரிவா ரொத்தார்.

(இ-ள்.) எம்மை அடிமையாகக்கொண்டருளிய சிவபெருமான் இங்குத் திருவமுதுசெய்யவில்லையென்று கழுத்திற்பூட்டிய அரிவாளைப்பிடித்துக்கொண்டு, குற்றமறக்கலந்த பேரன்பைக்காட்டும் வழியால், உள்ளந் தண்டானது அறும்படி கழுத்திேனாடு ஊட்டியையும் அறுத்துக்கொண்டார்; (அதனால் அவர்) பொருந்திய பிறவித்துன்பமாகிய வேரை அரிகின்றவரை யொத்துள்ளவரானார்.—எ-று.

உள்ளந்தண்டு என்பது, ஊட்டியின் அருகிலுள்ள பெருநரம்பு. (கஎ)

மாசறு சிந்தை யன்பர் கழுத்தரி யரிவாட் பற்றும்
ஆசில்வண் கையை மாற்ற வம்பலத் தாடு மையர்
வீசிய செய்ய கையு மாவடு விடேல் விடேலென்
றோசையுங் கமரி னின்று மொக்கவே யெழுந்த தன்றே.

(இ-ள்.) குற்றமற்ற மனத்தினையுடைய தாயநாயனார் தமது கழுத்தை யறுத்துக்கொள்ளுகின்ற அரிவாளைப்பிடித்த சிறந்த வளப்பம்பொருந்திய கையைத் தடுக்கும்படியாகக் கனகசபையில் திருநடனஞ் செய்தருளும் சிவபெருமானது வீசியெடுத்த சிவந்த கையும்,மாவடுவைக் கடிப்பதனாலுண்டாகிய விடேல்விடேல் என்னும் ஓசையும் கமரினின்றும் ஏககாலத்தில் எழும்பியது.—எ-று.

எழுந்தது-என்பது, பால்வழுவமைதி. (கஅ)

திருக்கைசென் றரிவாட் பற்றுந் திண்கையைப் பிடித்த போது
வெருக்கொடங் கூறு நீங்க வெவ்வினை விட்டு நீங்கிப்
பெருக்கவே மகிழ்ச்சி நீடத் தம்பிரான் பேணித் தந்த
அருட்பெருங் கருணை நோக்கி யஞ்சலி கூப்பி நின்று.

(இ-ள்.) சிவபெருமானுடைய அழகிய கையானது வெளிப்பட்டு அரிவாளைப்பிடித்துக்கொண்டிருக்கும் அவரது வலிமைபொருந்திய கையைப்பிடித்தபொழுது, அவ்விடத்துத் தாயநாயனார் அச்சமுற்று அரிவாளினாலரிந்ததுன்பமானது நீங்கிவிட, கொடிய தீவினைகள் தம்மைவிட்டு நீங்கி மிகுந்தசந்தோஷமுண்டாகும்படி சிவபெருமான் விரும்பி அனுக்கிரகஞ்செய்த திருவருளாகிய பெருங்கருணையைக்கண்டு கைகளை அஞ்சலியாகக் குவித்துக்கொண்டு நின்று.—எ-று. (கசு)

அடியனே னறிவி லாமை கண்டுமென் னடிமை வேண்டிப்
படிமிசைக் கமரில் வந்திங் கமுதுசெய் பரனே போற்றி
துடியிடை பாக மான தூயநற் சோதி போற்றி
பொடியணி பவள மேனிப் புரிசடைப் புராண போற்றி.

(இ-ள்.) அடியேனுடைய அறிவில்லாமையைப் பார்த்திருந்தும் என்னை அடிமையாகக்கொள்ள விரும்பிப் பூமியின்மேல் கமரில் எழுந்தருளிவந்து திருவமுதுசெய்தருளிய பரமனே! உமக்கு வந்தனம்; உடுக்கைபோன்ற இடையினையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய பரிசுத்தம்பொருந்திய அருட்பெருஞ் சோதியே! உமக்கு வந்தனம்; திருவெண்ணீற்றையணிந்த பவளம்போன்ற திருமேனியையும் முறுக்காகிய சடையையுமுடைய பழம்பொருளாயுள்ளவரே! உமக்கு வந்தனம்.—எ-று. (௨௦)

என்றவர் போற்றி செய்ய விடபவா கனராய்த் தோன்றி
நன்றுநீ புரிந்த செய்கை நன்னுத லுடனே கூட
என்றுநம் முலகில் வாழ்வா யென்றவ ருடனே நண்ண
மன்றுளே யாடு மையர் மழவிடை யுகைத்துச் சென்றார்.

(இ-ள்.) என்று இவ்விதமாக அத்தாயநாயனார் துதிசெய்ய, ரிஷபவாகனரூடராய்க் காட்சிகொடுத்தருளி (அன்பனே!) நீசெய்த திருத்தொண்டானது மிகவும் நன்றாயிருக்கின்றது; உனது மனைவியோடு வந்து எக்காலத்தும் நமது சிவலோகத்தில் வாழ்வாயாகவென் றருளிச்செய்து, அத்திருத்தொண்டரும், அவரது மனைவியாரும் தம்முடனேவர, பொன்னம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற சிவபெருமான் இளமைபொருந்திய ரிஷபவாகனத்தை நடத்திக் கொண்டு திருக்கயிலாயத்திற் கெழுந்தருளினார்.—எ-று. (௨௧)

பரிவுறு சிந்தை யன்பர் பரம்பொரு ளாகி யுள்ள
பெரியவ ரமுது செய்யப் பெற்றிலே னென்று மாவின்
வரிவடு விடேலெ னாமுன் வன்கழுத் தரிவாள் பூட்டி
அரிதலா லரிவாட் டாய ராயினார் தூய நாமம்.

(இ-ள்.) அன்புபொருந்திய மனதினையுடைய அத் தாயநாயனார் பரம்பொருளாயிருக்கின்ற சிவபெருமான் திருவமுது செய்யும்படி அடியேன் புண்ணியஞ் செய்யவில்லையென்று, மாவினது நீண்டவடுவானது விடேலென்று ஒலிப்பதற்கு முன்னே வலியகழுத்தில் அரிவாளைப்பூட்டி அரிந்தகாரணத்தினால் அரிவாட்டாயநாயனார் என்னும் பரிசுத்தம்பொருந்திய திருநாமத்தையுடையவரானார்.—எ-று.

முன்னிலை கமரே யாக முதல்வனா ரமுது செய்யச்
செந்நெலி னரிசி சிந்தச் செவியுற வடுவி னோசை
அந்நிலை கேட்ட தொண்ட ரடியிணை தொழுது வாழ்த்தி
மன்னுமா னாயர் செய்கை யறிந்தவா வழுத்த லுற்றேன்.

(இ-ள்.) கமரே முன்னிலையாயிருக்க முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் திருவமுது செய்யும்பொருட்டுச் சம்பாநெல்லின் அரிசி அந்தக்கமரில் சிந்த, மாவடுவினது கடியுண்ட ஓசையை அப்பொழுதே தமது காதிற்பொருந்தக்கேட்ட அரிவாட்டாயநாயனாருடைய இரண்டு திருவடிகளையும் வணங்கித் துதித்து, நிலைபெற்ற புகழினையுடைய ஆனாயநாயனாரது திருத்தொண்டின்செய்கையை எனக்குத் தெரிந்தவளவில் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (௨௩)

**அரிவாட்டாயநாயனார்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - ௬௩௰.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆனாய நாயனார் புராணம்.

மாடு விரைப்பொலி சோலையில் வான்மதி வந்தேறச்
சூடு பரப்பிய பண்ணை வரம்பு சுரும்பேற
ஈடு பெருக்கிய போர்களின் மேக மிளைத்தேற
நீடு வளத்தது மேன்மழ நாடெனு நீர்நாடு.

(இ-ள்.) பக்கங்களிலுள்ள சோலைகளில் வெண்மைபொருந்திய சந்திரன் வந்து தவழவும், நெல்லரிசிகளைப் பரப்பியிருக்கின்ற வயல்வரம்புகளில் வண்டுகள் உயர்ந்து மொய்க்கவும், ஒன்றுக்கொன்று சமானமாக உயர்ந்திருக்கின்ற நெற்போர்களில் மேகங்கள் இளைப்படைந்து ஏறவுமாகிய மிகுந்த வளப்பத்தையுடையது மேன்மழநாடென்று சொல்லப்பட்ட நீர்வளம்பொருந்தியநாடு.—எ-று. (௧)

நீவி நிதம்ப வுழத்தியர் நெய்க்குழன் மைச்சூழன்
மேவி யுறங்குவ மென்சிறை வண்டு விரைக்கஞ்சப்
பூவி லுறங்குவ நீள்கயல் பூமலி தேமாவின்
காவி னறுங்குளிர் நீழ லுறங்குவ கார்மேதி.

(இ-ள்.) ஆடையைக் கொய்சகமாக வைத்து உடுத்திய நிதம்பத்தினையுடைய பள்ளஸ்திரிகளின் மயிர்ச்சாந்தணிந்தகூந்தலாகிய இருண்டவிடத்தில் மெல்லிய சிறகினையுடைய வண்டுகள் சேர்ந்து நித்திரைசெய்யும்; நீண்ட கெண்டைமீன்கள் வாசனைபொருந்திய தாமரைமலர்களில் தூங்கும்; புட்பங்கள் நிறைந்த தேமாமரத்தினையுடைய சோலைகளின் நல்ல குளிர்ச்சிபொருந்திய நீழலில் கருநிறம்பொருந்திய எருமைகள் நித்திரைகொள்ளும்.—எ-று. (௨)

வன்னிலை மள்ள ருகைப்ப வெழுந்த மரக்கோவை
பன்முறை வந்தெழு மோசை பயின்ற முழக்கத்தால்
அன்ன மருங்குறை தண்டுறை வாவி யதன்பாலைக்
கன்ன லடும்புகை யான்முகில் செய்வ கருப்பாலை.

(இ-ள்.) வலிமைபொருந்திய மள்ளர்கள் மாடுகளைப் பூட்டி யோட்டுதலால் சுற்றுகின்ற கரும்பாலையில் இணைத்திருக்கும் மரங்கள் பலதரமும் சுற்றிவருதலால் உண்டாகின்ற அதிர்ச்சியோடுகூடிய முழக்கத்தினாலும், அன்னப்பறவைகள் வாசஞ்செய்கின்ற குளிர்ந்த துறையினையுடைய தடாகங்களின் பக்கத்தில் கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகின்ற புகையினாலும், அக் கரும்பாலைகள் முழக்கத்திலும் உருவத்திலும் மேகத்தை யொத்திருக்கும்.—எ-று.

அதன்பாலை என்பதில், ஐ-சாரியை. (௩)



ஆனாயநாயனார்.

பொங்கிய மாநதி நீட லை யுந்து புனற்சங்கந்
துங்க விலைக்கத லிப்புதன் மீது தொடக்கிப்போய்த்
தங்கிய பாசடை சூழ்கொடி யூடு தவழ்ந்தேறிப்
பைங்கமு கின்றலை முத்த முதிர்க்குவ பாளையென.

(இ-ள்.) வெள்ளமாகப் பொங்குகின்ற பெரிய காவிரிநதியினது நீண்ட அலைகளால் ஒதுக்கப்பட்ட நீரிலுள்ள சங்குகள் உயர்ந்த இலையினையுடைய வாழைப்புதல்களின்மேல் தொடர்ந்து சென்று, பசுமைபொருந்திய இலைகளையுடைய கொடிகளின் வழியாகத் தவழ்ந்து ஏறி, பசிய கமுகமரத்தின் தலைமேல் அக்கமுகம்பாளை பூக்களையுதிர்ப்பதுபோல முத்துக்களைச் சொரிகின்றன.—எ-று. (௪)

அல்லி மலர்ப்பழ னத்தய லாகிள வானீனும்
ஒல்லை முழுப்பை யுகைப்பி னுழக்கு குழக்கன்று
கொல்லை மடக்குறு மான்மறி யோடு குதித்தோடு
மல்கு வளத்தது முல்லை யுடுத்த மருங்கோர்பால்.

(இ-ள்.) அல்லிமலர்களையுடைய வயல்களின்பக்கத்தில் மிகவும் இளமைபொருந்திய பசுவானது பெற்றசீக்கிரத்தில் சிறுபுதல்களை காலுதையினால் கலக்குகின்ற இளங்கன்றானது கொல்லையிலிருக்கின்ற அறியாமையுள்ள சிறியமான் கன்றுகளோடு குதித்து ஓடுகின்ற நிறைந்த வளப்பத்தையுடையதா யிருக்கும் முல்லைநிலத்தைச் சூழ்ந்திருக்கின்ற நிலத்தின் ஒருபுறத்தில்.—எ-று. (௫)

கண்மலர் காவிகள் பாய விருப்பன கார்முல்லைத்
தண்ணகை வெண்முகை மேவு சுரும்பு தடஞ்சாலிப்
பண்ணை யெழுங்கயல் பாய விருப்பன காயாவின்
வண்ண நறுஞ்சினை மேவிய வஞ்சிறை வண்டானம்.

(இ-ள்.) கார்காலத்தில் மலருகின்ற முல்லையினது குளிர்ந்த ஒளிபொருந்திய வெண்மையாகிய அரும்புகளிலிருக்கும் வண்டுகள், தேன் தங்கிய நீலோற்பல மலர்களில் பாயும்படியிருக்கின்றன; காயாமரத்தினது கரிய மணம்பொருந்திய கிளைகளில் சேர்ந்திருக்கின்ற அழகிய சிறகினையுடைய நாரைகள், விசாலமாகிய செந்நெற்பயிர்களையுடைய வயல்களிலிருந்து எழுகின்ற கெண்டைமீன்கள் பாயும்படியாக இருக்கின்றன.—எ-று.

இச்செய்யுள் திணைமயக்கமாக வந்தது. (௬)

பொங்கரில் வண்டு புறம்பலை சோலைகண் மேலோடும்
வெங்கதிர் தங்க விளங்கிய மேன்மழ நன்னாடாம்
அங்கது மண்ணி னருங்கல மாக வதற்கேயோர்
மங்கல மானது மங்கல மாகிய வாழ்மூதூர்.

(இ-ள்.) மரக்கொம்புகளி லிருக்கின்ற வண்டுகள் புறத்தில் அலைகின்ற சோலைகள் ஆகாயத்திற் செல்லுகின்ற சூரியன் தடைபடும்படியாக உயர்ந்துவிள

ங்குகின்ற நல்ல மேன்மழநாடாகிய அந்நாடானது உலகத்திற்கு அருமையாகிய ஒரு ஆபரணம்போல விளங்க அதற்கு ஓர்மங்கலகரமாயுள்ளது திருமங்கலமென்னும் பெயரையுடைய செல்வமிகுந்த பழமையாகிய ஊர்.—எ-று. (எ)

ஒப்பில் பெருங்குடி நீடிய தன்மையி லோவாமே
தப்பில் வளங்கள் பெருக்கி யறம்புரி சால்போடுஞ்
செப்ப வுயர்ந்த சிறப்பின் மலிந்தது சீர்மேவும்
அப்பதி மன்னிய வாயர் குலத்தவ ரானுயர்.

(இ-ள்.) (அவ்வூர்) ஒப்பில்லாத பெருமைபொருந்திய பிரம - க்ஷத்திரிய - வைசிய-சூத்திரரென்னும் நான்கு வருணத்துக் குடிகளும் அதிகரித்திருக்கும் தன்மையிற் குறையாமல் குற்றமற்ற பல வளங்களையும் பெருக்கித் தருமஞ்செய்கின்ற மேன்மையால் யாவரும் புகழ்ந்துசொல்லும்படி உயர்ந்த சிறப்போடுவிளங்குகின்றது; சிறப்புப்பொருந்திய அத் திருமங்கலமென்னும் நகரத்தில் நிலைபெற்று வாழ்கின்ற இடையர்குலத்தில் திருவவதாரஞ்செய்தவர்ஆனுயநாயனுர்.—எ-று. (அ)

ஆயர் குலத்தை விளக்கிட வந்துத யஞ்செய்தார்
தூய சுடர்த்திரு நீறு விரும்பு தொழும்புள்ளார்
வாயினின் மெய்யின் வழுத்து மனத்தின் வினைப்பாலிற்
பேயுட ஞடு பிரானடி யல்லது பேணுதார்.

(இ-ள்.) (அவ்வானுயநாயனுர்) இடையர்கள் குலத்தை உலகத்தில் பிரசித்தஞ் செய்யும்பொருட்டு வந்து அவதாரஞ் செய்தவர்; பரிசுத்தம்பொருந்திய விளங்குகின்ற விபூதியை விரும்பித் தரிக்கின்ற பத்தியையுடையவர்; வாக்கினுலும், காயத்தினுலும், துதிக்கின்ற மனத்தினுலும், (வாழ்த்துதலும், வணங்குதலும் நினைத்தலுமாகிய) செய்கைகளினுல் பேயோடுஆடுகின்ற சிவபெருமானது திருவடிகளையல்லாமல் வேறென்றையும் விரும்பாதவர்.—எ-று. (௯)

ஆனிரை கூட வகன்புற விற்கொடு சென்றேறிக்
கானுறை தீய விலங்குறு நோய்கள் கடிந்தெங்குந்
தூநறு மென்பு லருந்தி விரும்பிய தூநீருண்
டூனமி லாய முலப்பில பல்க வளித்துள்ளார்.

(இ-ள்.) பசுமந்தைகள் முழுவதையும் விசாலமாகிய இடத்தையுடையகாடிற் கொண்டுபோய், அக் காட்டில் வசிக்கும் புலி முதலிய கொடிய மிருகங்களால் உண்டாகின்ற துன்பத்தை யொழித்து, எங்கும் பரிசுத்தமாகிய நல்ல மிருதுவான புல்லைமேய்ந்து, விரும்பத்தக்க நல்லநீரையுண்டு குற்றமற்ற பசுக்கூட்டங்கள் அளவற்றவைகள் விருத்தியடையும்படி காப்பாற்றுகின்றனர்.—எ-று. (௧0)

கன்றொடு பான்மறை நாகு கறப்பன பாலாவும்
புன்றலை மென்சினை யானொடு நீடு புனிற்றுவும்
வென்றி விடைக்குல மோடு மினந்தொறும் வெவ்வேறே
துன்றி நிறைந்துள சூழ லுடன்பல தோழங்கள்.

(இ-ள்.) கன்றுகளும், பால்மறுத்தபசுக்களும், இளங்கன்றுகளும், பால் கறக்கின்ற பசுக்களும், சிறிய தலையினையுடைய மிருதுவான சினைப்பசுக்களும், சிறந்த கன்றினை யீன்ற பசுக்களும், பலம்பொருந்திய இடபங்களுமாகிய இவைகள் கூட்டங்கள்தோறும் வெவ்வேறாகச் சேர்ந்து நிறைந்திருக்கின்ற சோலைகளோடு பல தோழங்களும் எங்கும் இருக்கின்றன.—எ-று. (கக)

ஆவி னிரைக்குல மப்படி பல்க வளித்தென்றுங்
கோவல ரேவல் புரிந்திட வாயர் குலம்பேணுங்
காவலர் தம்பெரு மானடி யன்புறு கானத்தின்
மேவு துளைக்கரு விக்குழல் வாசனை மேல்கொண்டார்.

(இ-ள்.) பசுக் கூட்டங்களின் தொகுதிகள் அவ்விதமாக நாள்தோறும் விருத்தியடையும்படி காப்பாற்றி, எப்பொழுதும் இடையர்கள் தாம் இடுகின்ற வேலையைச் செய்யும்படி இடையர்குலத்தைப் பாதுகாக்கின்ற தலைவராகிய ஆனாய நாயனார் தமதுஆண்டவராகிய சிவபெருமானது திருவடிகளுக்கு அன்புமிகுந்து இசையோடுபொருந்திய துளைக்கருவியாகிய புள்ளாங்குழலை வாசித்தலை மேற்கொண்டொழுகினார்.—எ-று. (கஉ)

வேறு.

முந்தைமறை நூன்மரபின் மொழிந்தமுறை யெழுந்தவே
யந்தமுத லிரண்டி லரிந்துநரம் புறுதானம்
வந்ததுளை நிரையாக்கி வாயுமுதல் வழங்குதுளை
யந்தமில்சீ ரிடையீட்டி னங்குலியெண் களினமைத்து.

(இ-ள்.) பழமையாகிய காந்தருவவேதத்தில் சொல்லியிருக்கின்ற முறைமைப்படியே (இருபதுவிரல் நீளத்தில் ஓர் கணுவும், சுற்று நாலரைவிரலுமுள்ளதாய்) நன்றாக வளர்ந்திருக்கின்ற மூங்கிலை நுனியில் இரண்டுபங்கும், முதலில் நாலுபங்கும் நீக்கி (நடுப்பாகத்தை மேற்கூறிய இருபதுவிரலளவில்) அரிந்தெடுத்துக்கொண்டு, மெட்டுக்க ளிருக்கவேண்டிய இடங்களில் செய்யப்பட்ட துளைகளை வரிசையாக அமைத்து, காற்றுண்டாவதற்கு ஓர்துளையையும் குற்றமில்லாத சிறப்போடு ஒவ்வொரு துவாரத்தின் இடையில்:ஓவ்வோ ரங்குலவளவு இருக்கும்படிசெய்து.—எ-று. (கந)

எடுத்தகுழற் கருவியினி லெம்பிரா னெழுத்தஞ்சுந்
தொடுத்தமுறை யேழிசையின் சுருதிபெற வாசித்துத்
தடுத்தசரா சரங்களெல்லாந் தங்கவருந் தங்கருணை
யடுத்தவிசை யமுதளித்துச் செல்கின்றா ரங்கொருநாள்.

(இ-ள்.) மேற்சொல்லியபடியே அமைத்துக் கையிற் பிடித்த புள்ளாங்குழலில் எமது சிவபெருமானுடைய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையும் வைத்த முறைமைப்படி சப்தசுரங்களுக்குரிய சுருதிகள் அமையும்படி வாசித்து,இசையால் தடுக்கப்பட்ட சரம் அசரமாகிய எல்லாஉயிர்வர்க்கங்களும் உருகிநிற்றற் கேதுவாகவருகின்ற தமக்குண்டாயிருக்கும் கருணையினால் பாடுகின்ற இசையாகிய அமிர்தத்தைக் காதின்வழியாகப் புகட்டி ஒழுகுகின்றவர் அப்படி யொழுகுநாளில் ஒருநாள்.—எ-று.

ஏழிசையாவன:—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. சரம் = அசையும்பொருள்; அசரம் = அசையாப்பொருள். (கச)

வாசமலர்ப் பிணைபொங்க மயிர்நுழுதி மருங்குயர்ந்த
தேசுடைய சிகழிகையிற் செறிகண்ணித் தொடைசெருகிப்
பாசிலைமென் கொடியின்வடம் பயிலநறு விலிபுனைந்து
காசுடைநா ணதற்கயலே கருஞ்சுருளின் புறங்கட்டி.

(இ-ள்.) வாசனைபொருந்திய மலர்களால் தொடுத்த பிணையல்மாலையானது விளங்க, மயிரைக் கோதி வலப்புறத்தில் உயரமுடிக்கப்பட்ட ஒளிபொருந்திய மயிர்முடியில் நெருக்கமாகக் கட்டியிருக்கின்ற கண்ணிமாலையைச் செருகி, அதன்மேல் மிருதுவாகிய பசிய இலைகளையுடைய கொடியின் வடமானது பொருந்த அதில் நறுவிலிக்காயைக் கட்டி, பொற்காசு கோத்திருக்கின்ற மயிர்க்கயிற்றை அப்பச்சிலையின் அருகில் கறுத்த மயிர்முடியின் புறத்தில் கட்டி.—எ-று.

பிணையல், கண்ணி என்னும் மாலையின்பேதத்தை முன்னர்க்காண்க.
'காசறுநாண்' என்றும் பாடம். (கரு)

வெண்கோட விலைச்சுருளிற் பைந்தோட்டு விரைத்தோன்றித்
தண்கோல மலர்புனைந்த வடிகாதி னொளிதயங்கத்
திண்கோல நெற்றியின்மேற் றிருநீற்றி னொளிகண்டோர்
கண்கோட னிறைந்தாராக் கவின்விளங்க மிசையணிந்து.

(இ-ள்.) வெண்காந்தளி னிலையைச் சுருளாகச்செய்துவைத்து அதில் பசுமையாகிய புறவிதழையுடைய மணம்பொருந்திய செங்காந்தளினது குளிர்ந்த அழகிய மலரைத்தரித்த நீண்ட காதின் ஒளியானது விளங்க, சிறந்த அழகினையுடைய நெற்றியின்மீது திருநீற்றின் ஒளியானது கண்டவர்களுடைய கண்களைக் கவரும்படி நன்றாக நிறைந்து நீங்காத அழகு விளங்கத்தரித்து.—எ-று.

நிறைந்தநீ றணிமார்பி னிரைமுல்லை முகைசுருக்கிச்
செறிந்தபுனை வடந்தாழத் திரடோளின் புடையலங்கல்
அறைந்தசுரும் பிசையரும்ப வரையுடுத்த மரவுரியின்
புறந்தழையின் மலிதானைப் பூம்பட்டுப் பொலிந்தசைய.

(இ-ள்.) நிறைவாகிய திருநீற்றைத்தரித்த மார்பில் முல்லையரும்பை வரிசையாகச் சுருக்கிக்கட்டப்பட்ட அலங்காரமாகிய மாலையானதுதாழவும், திரண்ட தோள்களினிடத்தில் தொங்கும்மாலைகளில் ஒலிக்கின்றவண்டுகள் இசைபாடவும், இடையில் உடுத்தியமரவுரியின்புறத்தில் தழையால்செய்யப்பட்ட முன்தானையையுடைய பூம்பட்டானது பிரகாசித்து அசையவும்.—எ-று. (கள)

சேவடியிற் றொடுதோலுஞ் செங்கையினில் வெண்கோலு
மேவுமிசை வேய்ங்குழலு மிகவிளங்க வினைசெய்யுங்
காவல்புரி வல்லாயர் கன்றுடையா னிரைசூழப்
பூவலர்தார்க் கோவலனார் நிரைகாக்கப் புறம்போந்தார்.

(இ-ள்.) சிவந்த திருவடிகளில் தரித்தசெருப்பும், அழகிய திருக்கரத்தில் வெண்மைபொருந்தியகோலும், இசைபொருந்திய புள்ளாங்குழலும் மிகவும் விளங்கவும், ஏவற்றொழிலைச்செய்கின்ற பசுமந்தைகளைக்காக்கும் வலிமை பொருந்திய இடையர்களும், கன்றுகளையுடைய பசுக்கூட்டங்களும் சூழ்ந்துவரவும், பூக்கள் அலர்ந்தமாலையையணிந்த ஆனாயநாயனார் அப்பசுமந்தைகளைக் காக்கும்படி புறத்தில்வந்தார்.—எ-று. (௧அ)

வேறு.

நீலமா மஞ்ஞை யேங்க நிறைக்கொடி புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லைக் கோபம்வாய் முறுவல் காட்ட
ஆலுமின் னிடைசூழ் மாலைப் பயோதர மசைய வந்தாள்
ஞாலநீ டரங்கி லாடக் காரெனும் பருவ நல்லாள்.

(இ-ள்.) நீலநிறத்தையுடைய பெருமைபொருந்திய மயில்கள் ஒலிக்கவும், வரிசையாகிய கொடிகளிலுள்ள (வண்டுகள்) முல்லைப்பண்ணைப்பாடவும், அழகிய வெண்மைபொருந்திய சிறந்த முல்லையரும்புகளும் இந்திரகோபமும், வாயையும் பற்களையும்காட்டவும், துவளுகின்ற மின்னலாகிய இடையோடு மாலைப்பயோதரம் அசையவும்,கார்காலமாகிய இளம்பருவத்தையுடைய பெண்ணானவள் நிலவுலகமாகிய பெரியசபையில் ஆடும்படிவந்தாள்.—எ-று

இதனால், மழைக்காலம் வந்ததென்பதாம். 'மாலைப்பயோதரமசைய' என்பதற்கு மாலைக்காலத்தில் தோன்றுகின்ற மேகம் அசைய எனவும், மாலையைத்தரித்த ஸ்தனங்கள் குலுங்க எனவும் சிலேடை செய்துகொள்க. (௧௯)

எம்மருங்கு நிரைபரப்ப வெடுத்கோ லுடைப்பொதுவர்
தம்மருங்கு தொழுதணையத் தண்புறவில் வருந்தலைவர்
அம்மருங்கு தாழ்ந்தசினை யலர்மருங்கு மதுவுண்டு
செம்மருந்தண் சுரும்புசுழல் செழுங்கொன்றை மருங்கணைந்தார்.

(இ-ள்.) நான்கு பக்கங்களிலும் பசுக்கூட்டங்கள் பரவும்படி கையிற்பிடித்தகோலையுடைய இடையர்கள் தமக்குச் சமீபத்தில் தொழுதுகொண்டுவர, குளிர்ந்தமுல்லைநிலமாகிய காட்டில்வருகின்ற ஆனாயநாயனார் அவ்விடத்தில் தாழ்ந்திருக்கும் மரக்கிளைகளில் புட்பித்தமலர்களிலுள்ள தேனையுண்டு களிப்படைந்திருக்கும் குளிர்ந்தவண்டுகள் சூழ்ந்திருக்கின்ற செழுமைபொருந்திய கொன்றைவிருட்சத்தின் சமீபத்தில்வந்துசேர்ந்தார்.—எ-று. (௨௦)

சென்றணைந்த வானாயர் செய்தவிரைத் தாமமென
முன்றன்மலர்த் துணர்தூக்கி மருங்குதாழ் சடையார்போ
னின்றநறுங் கொன்றையினை நேர்நோக்கி நின்றுருகி
யொன்றியசிந் தையிலன்பை யுடையவர்பான் மடைதிறந்தார்.

(இ-ள்.) கொன்றைவிருட்சத்தின் சமீபத்திற்சென்றுசேர்ந்த ஆனாயநாயனார் கட்டப்பட்ட வாசனைபொருந்திய மலர்மாலையைப்போலப் பரிமளமிகுந்த

பூங்கொத்துக்களைத்தாங்கி, புறத்தில் தாழ்ந்திருக்கின்ற சடையினையுடைய சிவ பெருமானைப்போல நிற்கின்ற நல்லகொன்றைமரத்தை நேராகப்பார்த்து மனமுருகிநின்று, (புலன்களின்வழியே செல்லாமல்) ஒருமைப்பட்ட தமது மனதில் உதித்தபேரன்பை, தம்மை அடிமையாகவுடைய சிவபெருமானிடத்தில் மடை திறந்ததுபோலப்பாயச்செய்தார்.—எ-று. (உக)

அன்பூறி மிசைப்பொங்கு மமுதவிசைக் குழலொலியால்
வன்பூதப் படையாளி யெழுத்தைந்தும் வழுத்தித்தா
முன்பூதி வருமளவின் முறைமையே யெவ்வுயிரும்
என்பூடு கரைந்துருக்கு மின்னிசைவேய்ங் கருவிகளில்.

(இ-ள்.) அன்பானது அதிகரித்து மேலேபொங்குகின்ற அமுதம்போன்ற இசையினையிடைய புள்ளாங்குழலின் ஓசையினால் வலிமை பொருந்திய பூதப்படையினையுடைய சிவபெருமானது திருவெழுத்தைந்தையும் தோத்திரஞ்செய்து, தாம்முன்பு ஊதிக்கொண்டுவருகின்ற முறைமைப்படி எல்லாவுயிர்களும் எலும்பும் கரைந்துருகச் செய்கின்ற இனிய இசை பொருந்திய பலவகைப் புள்ளாங்குழல்களில்.—எ-று. (உஉ)

ஏழுவிர லிடையிட்ட வின்னிசைவங் கியமெடுத்துத்
தாழுமலர் வரிவண்டு தாதுபிடிப் பனபோலச்
சூழுமுரன் றெழுகின்று தூயபெருந் தனித்துளையில்
வாழியநந் தோன்றலார் மணியதரம் வைத்தூத.

(இ-ள்.) ஒவ்வொருதுளைக்குப்புறத்திலும் ஒவ்வொருவிரலளவாக ஏழுவிரலளவுஇடையில் இடம்விட்டிருக்கின்ற (முத்திரை யென்னும் துவாரத்தோடு எட்டுத்துவாரங்களையுடைய) இனிய இசைபொருந்திய வங்கியமென்னும் புள்ளாங்குழலையெடுத்து மலரில்விழுகின்ற வரிகளையுடையவண்டுகள் அந்த மலர்களிலுள்ள தாதுக்களைப் பிடித்துக்கொண்டு அசையாமல் ஊதுவதுபோல நாற்புறமும் இசையானது நிறைந்து பரவும்படி நின்று, (புள்ளாங்குழலின் முதலிலுள்ள) பரிசுத்தம்பொருந்திய பெரிய ஒப்பற்ற துளையில் நமது ஆனாயநாயனார் அழகிய அதரத்தை வைத்து ஊத.—எ-று.

வங்கியமென்னும் புள்ளாங்குழலின் பேதத்தை,

"இருவிரல்க ணீக்கி முதல்வாயேழ் நீக்கி
மருவுதுளை யெட்டு மன்னும்—பெருவிரல்க
ளலஞ்சு கொள்க பரப்பென்று நன்னுதலாய்
கோலஞ்செய் வங்கியத்தின் கூற்று."

"சரிக மபதனியென் றேழெழுத்தாற் றானம்
வரிபரந்த கண்ணினாய் வைத்துத்—தெரிவரிய
வேழிசையுந் தோன்று மிதனுள்ளே பண்பிறக்குஞ்
சூழ்முதலாஞ் சுத்த துளை."—என்பதனானுணர்க. (உ௩)

முத்திரையே முதலனைத்து முறைத்தானஞ் சோதித்து
வைத்ததுளை யாராய்ச்சி வக்காளை வழிபோக்கி

யொத்தநிலை யுணர்ந்ததற்பி னொன்றுமுதல் படிமுறையால்
அத்தகைமை யாரோசை யமரோசை களினமைத்தார்.

(இ-ள்.) முத்திரைமுதலிய எல்லாத் துளைகளையும் முறைமையாக ஸ்தான சோதனைசெய்து அமைக்கப்பட்ட துளைகளை ஆராய்ச்சிசெய்து, இராக சோதனை யறிய விரல்களை முறையேசெலுத்தி ஸ்வரங்களெல்லாம் ஒத்திருக்கின்ற நிலைமை யையறிந்தபின்பு சட்சம்முதல் நிஷாதம்வரைக்கும் வரிசையாக, எச்சாகவும், தக்காகவும் அமைத்து அவ்வுயர்ந்த தகுதியாகப்பாடினார்.—எ-று.

முத்திரையென்பது வளைவாய்க் கடுத்த எட்டாவது துளை. வக்காளை யென்பது, எல்லாராகங்களும் இத்துவாரங்களிலேயே உண்டாகும்படி விரல்களினால் துளைகளை அழுத்தியும், மெலித்தும், சமஞ்செய்தும் சோதித்தல். ஒன்றுமுதற்படி முறையாவன, சட்சம், இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பனவாம், இவ்விசைகள் பிறக்குமிடத்து, தாரத்தில் உழையும், உழையில் குரலும், குரலில் இளியும், இளியில் துத்தமும், துத்தத்தில் விளரியும், விளரியில் கைக்கிளையும், கைக்கிளையில் தாரமுமாகத் தோன்றுமெனவறிக. (உச)

மாறுமுதற் பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி
யேறியதா ரமுமுழையுங் கிழமைகொள விடுந்தானம்
ஆறுலவுஞ் சடைமுடியா ரஞ்செழுத்தி னிசைபெருகக்
கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினிநிறுத்தி.

(இ-ள்.) சுரங்கள் மாறுபட்டுவருகின்ற குறிஞ்சிப்பண்ணைப்பாடினபின்பு, வளர்ந்த முல்லைப்பண்ணை யமைத்துப்பாடி, பாலையாழுக் கமைந்த தாரம் உழை என்னும் இரண்டு பண்களையும் பொருந்தும்படி இடப்பட்ட தானங்களில் கங்காநதி யுலாவுகின்ற சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவைந்தெழுத்தின் இசையானது பெருகும்படி (அப்பாலையாழின் பேதங்களைமுடித்துப் பின்பு) சொல்லப்பட்ட இளியைக்குரலாகவுடைய கொடிப்பாலைப்பண்ணில் நிறுத்தி.—எ-று.

"தாரத்துழைதோன்றப் பாலையாழ்" என்றபடி தாரமும் உழையும் பாலைப்பண்ணுதல் காண்க. 'பட்டடைக்குரலாங் கொடிப்பாலையினினிறுத்தி' என்றதனால், அப்பாலையாழுக்குள் குரல்குரலாய செம்பாலையினும், துத்தங்குரலாய படுமலைப்பாலையினும், கைக்கிளைகுரலாய செவ்வழிப்பாலையினும், உழைகுரலாய அரும்பாலையினும் அமைத்து,பின் இளிகுரலாய கொடிப்பாலையினினிறுத்தினர்க.

ஆயவிசைப் புகலான்கி னமைந்தபுகல் வகையெடுத்து
மேயதுளைப் பற்றுவன விடுவனவாம் விரனிரையிற்
சேயவொளி யிடையலையத் திருவாள னெழுத்தஞ்சுந்
தூயவிசைக் கிளைகொள்ளுந் துறையஞ்சின் முறைவிளைத்தார்.

(இ-ள்.) இசைக்குரித்தாகிய பண் - பண்ணியல் - திறம் - திறத்திறம் என்னும் இசைவகை நான்கிலும் தாம் பாடுகின்ற கொடிப்பாலைக் கமைந்த இசையையெடுத்துப் பொருந்திய புள்ளாங்குழலில் துளைகளைப் பொத்துதலும் விடுத

னுமாகிய விரல்வரிசையில் தோன்றுகின்ற சிவந்த பிரகாசமானது அப் புள்ளாங் குழலின் நடுவில் ததும்பி விளங்க, சிவபெருமானது திருவெழுத் தைந்தையும் குற்றமற்ற இசையின் பிரிவாயிருக்கின்ற ஆயத்தம், எடுப்பு, உக்கிரம், சஞ்சாரம், இடாயம் என்னும் ஐந்து துறைகளிலும் முறைமையாகப்பாடினர்.—எ-று. (உசு)

மந்தரத்து மத்திமத்துந் தாரத்தும் வரன்முறையாற்
றந்திரிகண் மெலிவித்துஞ் சமங்கொண்டு வலிவித்தும்
அந்தரத்து விரற்றொழில்க ளளவுபெற வசைத்தியக்கிச்
சுந்தரச்செங் கனிவாயுந் துளைவாயுந் தொடக்குண்ண.

(இ-ள்.) மந்தரம் - மத்திமம் - தாரம் என்னும் மூன்றுசுருதிகளின் முறைமைப்படியே தெரிவிக்கின்ற துளைகளை விரல்களினால் மென்மையாகப் பொத்தியும், சமமாகப் பொத்தியும், வலிவாகப் பொத்தியும் இம்மூன்றுமல்லாத மற்ற துளைகளின் விரற்றொழில்களை அளவுகுறையாமல் அசைத்து இயக்குவித்தும் அழகுபொருந்திய சிவந்த கனிபோன்ற அதரமும், புள்ளாங்குழலின் துவாரவாயும் ஒன்றுபட்டிணங்க.—எ-று.

மந்தரம்-தாழ்ந்த ஓசை; மத்திமம்-சமமாகிய ஓசை; தாரம்-எடுத்தஓசை.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உஎ)

எண்ணியநூற் பெருவண்ண மிடைவண்ணம் வனப்பென்னும்
வண்ணவிசை வகையெல்லா மாதுரிய நாதத்தி
னண்ணியபா ணியுமியலுந் தூக்குநடை முதற்கதியிற்
பண்ணமைய வெழுமோசை யெம்மருங்கும் பரப்பினர்.

(இ-ள்.) உயர்வாக மதிக்கப்பட்ட இசைநூலிற் கூறிய பெருவண்ணம் இடைவண்ணம் - வனப்பு என்னும் அழகிய இசையின் வேறுபாடுகளையெல்லாம் இனிமையாகிய நாதத்தால் அமைந்த தாளமும், இராகமும், ஏற்றமும், நடைமுதலாகிய கதியோடு பண்ணானது அமையும்படி எழுகின்ற ஓசையை எவ்விடத்திலும் பரவச்செய்தார்.—எ-று.

பெருவண்ணம் - நெட்டெழுத்துக்களையே தொடுத்துப் பாடுவது; இடைவண்ணம் - இடையெழுத்தே மிகுத்துவருவது. வனப்பு - எழுத்துக்கள் ஒன்றினோடொன்று இசைந்து பிளவுபடாமல் வருவது. (உஅ)

வள்ளலார் வாசிக்கு மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறையஞ் செழுத்தாக வொழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கு மேலமரர் தருவிளைதேன்
றெள்ளமுதி னுடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க.

(இ-ள்.) இவ்வாறு ஆனாயநாயனார் வாசிக்கின்ற அழகிய துளைகள் பொருந்திய புள்ளாங்குழலின் உள்ளமைந்த மொழியானது திருவைந்தெழுத்தாகப் பரவி எழுகின்ற இனிய ஓசையாகிய வெள்ளமானது நிறைவுபெற்று எல்லாவுயிர்களுக்கும் விண்ணுலகத்திலுள்ள கற்பகத்தருவின் தேனைத் தெளிவாகிய அமிர்தத்தோடு கலந்து காதாகியவாயில் வார்ப்பதுபோல நிறைக்க.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (உகூ)

ஆனிரைக ளறுகருந்தி யசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையிற் பற்றுமிளங் கன்றினமுந்
தானுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமு
மான்முதலாங் கான்விலங்கு மயிர்முகிழ்த்து வந்தணைய.

(இ-ள்.) பசுக்கூட்டங்கள் அறுகம்புற்களை மேய்ந்து பின் அதனை அசைவு இடாமல் தம்மையடைந்து உருக, பாலின் நுரைபொருந்திய வாயினை யுடையன வாகித் தாய்ப்பசுவின் முலையைப்பற்றி யுண்ணுகின்ற இளங்கன்றின் கூட்டமும் தான் உண்ணுகின்ற உணவாகிய பாலை மறந்து நீங்க, பெரியகொம்புகளையுடைய இடபக் கூட்டங்களும், மான்முதலாகிய காட்டிலுள்ள மிருகங்களும் மயிர் சிலிர்த்துக்கொண்டுவந்து சேர.—எ-று. (௯௦)

ஆடுமயி லினங்களுமங் கசைவயர்ந்து மருங்கணுக
வூடுசெவி யிசைநிறைந்த வுள்ளமொடு புள்ளினமு
மாடுபடிந் துணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகுங்
கூடியவன் கோவலருங் குறைவினையின் றுறைநின்றார்.

(இ-ள்.) காட்டில் சிறைவிரித்தாடுகின்ற மயிற்கூட்டங்களும் அவ்வாடுதலொழிந்து சமீபத்தில் வர, பலவகைப் பறவைக்கூட்டங்களும் பண்ணோசையானது காதின்வழியாகச்சென்று நிறைந்த மனதோடு அருகில் சேர்ந்துஉணர்வொழிந்து நிற்க, தமக்குச் சமீபத்தில் பசுமேய்த்தலாகிய தொழிலைச் செய்துகொண்டிருக்கும் திரண்ட வலிபொருந்திய இடையர்களும் தாங்கள் செய்யும் வேலையில் நின்றும் ஒழிந்து புள்ளாங்குழலின் இசையைக் கேட்டு மன முருகி நின்றார்கள்.—எ-று. (௯௧)

பணிபுவனங் களிலுள்ளார் பயில்பிலங்கள் வழியணைந்தார்
மணிவரைவா ழரமகளிர் மருங்குமயங் கினர்மலிந்தார்
தணிவிலொளி விஞ்சையர்கள் சாரணர்கின் னரரமரர்
அணிவிசும்பி னயர்வெய்தி விமானங்கண் மிசையணைந்தார்.

(இ-ள்.) நாகலோகத்திலுள்ளவர்கள் (இப்புள்ளாங்குழலினிசையைக்கேட்டு) தாம் பழகியிருக்கின்ற பிலங்களின்வழியாகப் பூவுலகத்தில் வந்தார்கள்; அழகிய மலைகளில் வாழுகின்ற தெய்வப்பெண்கள் இசையால் மயங்கி அவருக்குச்சமீபத்தில் வந்து நெருங்கினார்கள் ; குறைவில்லாத தேககாந்தியையுடைய வித்தியாதரர்களும், சாரணர்களும், கின்னரர்களும், தேவர்களும் இசையைக்கேட்டு மெய்மறந்து அழகிய ஆகாயத்தினின்றும் விமானங்களின்மேல் ஏறிவந்தார்கள்.-எ-று.

சுரமகளிர் கற்பகப்பூஞ் சோலைகளின் மருங்கிருந்து
கரமலரி னமுதூட்டுங் கனிவாய்மென் கிள்ளையுடன்
விரவுநறுங் குழலலைய விமானங்கள் விரைந்தேறிப்
பரவியவே ழிசையமுதஞ் செவிமடுத்துப் பருகினார்.

(இ-ள்.) தெய்வப்பெண்கள் மலர்களையுடைய கற்பகச்சோலைகளின் அருகிலிருந்துகொண்டு மலர்போன்ற கைகளில் வைத்து அமிர்தத்தை யூட்டுகின்ற

கொவ்வைக்கனிபோன்ற சிவந்த வாயினையுடைய மெல்லிய கிளிப்பிள்ளைகளோடு வாசனைவீசுகின்ற கூந்தல்கள் அலையும்படி தேவவிமானங்களில் விரைவாக ஏறி எவ்விடத்திலும் பரவியிருக்கின்ற ஏழிசைகளாலுண்டாகிய சங்கீதமாகிய அமிர்தத்தைச் செவியின் வழியாக நிறையவுண்டார்கள்.—எ-று. (௩௩)

நலிவாரு மெலிவாரு முணர்வொன்றாய் நயத்தலினான்
மலிவாய்வெள் ளெயிற்றரவ மயின்மீது மருண்டுவிழுஞ்
சலியாத நிலையரியுந் தடங்கரியு முடன்சாரும்
புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும்.

(இ-ள்.) வருத்துகின்ற வலியவர்களும், அவ்வருத்தத்தை யனுபவிக்கின்ற எளியவர்களும் (இக்குழலோசையைக்கேட்டுப் பேதமில்லாமல்) மனம் ஒருமைப் பட்டு விருப்பங்கொள்ளுதலால் அகன்ற வாயையும், வெள்ளிய பற்களையுமுடைய பாம்புகள் மயில்களின்மேல் மயங்கிவிழும்; கெடாத வலியினையுடைய சிங்கங்களும் பெரிய யானைகளும் விரோதமில்லாமல் ஒன்றாகச் சேர்ந்திருக்கும்; சிறிய வாயினையுடைய மான்களும் புலியின் வாயினிடமாகப் பயமின்றிப்போகும்.

மருவியகால் விசைத்தசையா மரங்கண்மலர்ச் சினைசலியா
கருவரைவீ ழருவிகளுங் கான்யாறுங் கலித்தோடா
பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா
இருவிசும்பி னிடைமுழங்கா வெழுகடலு மிடைதுளும்பா.

(இ-ள்.) (ஆனாயநாயனார் வாசிக்கின்ற புள்ளாங்குழலின் இசையினால்) சஞ்சரிக்கின்ற காற்றுகள் விசைகொண்டு அசையாமலிருந்தன; மரங்களிலுள்ள மலர்களையுடைய கிளைகள் அசைவற்றிருந்தன; கருமையாகிய மலைகளிலிருந்து விழுகின்ற அருவிகளும், காட்டாறுகளும் இரைச்சலிட்டு ஓடாமலிருந்தன; பெரியமேகக்கூட்டங்கள் ஓரிடம்விட்டு வேறோரிடத்திற்குப் போவது ஒழிந்து நீரைப் பொழியாமலிருந்தன; அம்மேகங்கள் பெரிய ஆகாயத்தில் முழங்காமலிருந்தன; சப்தசமுத்திரங்களும் தம்மிடத்தில் நீர் ததும்பாமலிருந்தன.—எ-று. (௩௫)

இவ்வாறு நிற்பனவுஞ் சரிப்பனவு மிசைமயமாய்
மெய்வாழும் புலன்கரண மேவியவொன் றாயினவான்
மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையா ரடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனையுருக்க.

(இ-ள்.) இவ்விதமாக மரம் மலைமுதலிய நிலையியற்பொருள்களும், மனிதர் விலங்குமுதலிய இயங்கியற்பொருள்களுமாகிய எல்லாம் புள்ளாங்குழலிசையின் மயமாகி உடம்பிலுள்ள ஐம்புலன்களும், அந்தக்கரணங்களும் வேறுபாடில்லாமல் கேட்பதில் ஒன்றுபட்டுப்போயின; மிகுந்த வாசனைபொருந்திய நல்ல கொன்றை மலர்மாலையைத் தரித்த சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவடிகளுக்கன்பராகிய ஆனாயநாயனார் தமது சிவந்த வாயில் வைத்து ஊதுகின்ற சிறந்த புள்ளாங்குழலின் நாதமானது உருகச்செய்தபடியால்.—எ-று.

திருக்குழல்வாசனையுருக்க ஒன்றாயின-எனக்கூட்டுக. (௩௬)

மெய்யன்பர் மனத்தன்பின் விளைந்தவிசைக் குழலோசை
வையந்தன் னையுநிறைத்து வானுந்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவி னடம்புரியும்
ஐயன்றன் றிருச்செவியி னருகணையப் பெருகியதால்.

(இ-ள்.) மெய்யன்பராகிய ஆனாயநாயனாரது மனதிற்பொருந்திய அன்பினாலுண்டாகிய புள்ளாங்குழலின் ஓசையானது மண்ணுலகத்தையும் நிரப்பி,விண்ணுலகத்தையும் அப்படியே தன் வசப்படுத்தி, பொய்யாகிய அன்புக்கு எட்டாத பொன்னம்பலத்தில் திருநடனஞ்செய்தருளுகின்ற சிவபெருமானது திருச்செவியினருகில் சென்று நிறைந்தது.—எ-று. (௩எ)

ஆனாயர் குழலோசை கேட்டருளி யருட்கருணை
தானாய திருவுள்ள முடையதவ வல்லியுடன்
கானாதி காரணராங் கண்ணுதலார் விடையுகைத்து
வானாறு வந்தணைந்தார் மதிநாறுஞ் சடைதாழ.

(இ-ள்.) ஆனாயநாயனார் வாசிக்கின்ற புள்ளாங்குழலின் ஓசையைத் திருச்செவியிற் கேட்டு உயிர்களிடத்தில் வைத்த பெருங்கருணையே வடிவமாயமைந்த திருவுள்ளத்தையுடைய உமாதேவியாரோடு இசைக்கு ஆதிகாரணராய் விளங்குகின்ற நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் ரிஷபவாகனத்தை நடத்திக் கொண்டு பிறைச்சந்திரன் விளங்குகின்ற சடையானது தாழும்படி ஆகாயமார்க்கத்தில் எழுந்தருளிவந்தார்.—எ-று. (௩அ)

திசைமுழுதுங் கணநாதர் தேவர்கட்கு முன்னெருங்கி
மிசைமிடைந்து வரும்பொழுது வேற்றொலிகள் விரவாமே
யசையவெழுங் குழனாதத் தஞ்செழுத்தாற் றமைப்பரவும்
இசைவிரும்புங் கூத்தனா ரெழுந்தருளி யெதிர்நின்றார்.

(இ-ள்.) எல்லாத் திக்குகளிலும் சிவகணநாதர்கள் தேவர்கூட்டங்களுக்கு முன்னே நெருங்கி ஆகாயவழியாக நிறைந்துவரும்பொழுது, வேறே எந்த ஒலிகளும் உண்டாகாமல் அசைந்து எழுகின்ற புள்ளாங்குழலின் நாதத்தில் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தினால் தம்மைத் தோத்திரஞ்செய்கின்ற இசையை விரும்பிய சிவபெருமான் ஆனாயநாயனாருக்குமுன்னே ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளிக் காட்சி கொடுத்து நின்றார்.—எ-று. (௩௯)

முன்னின்ற மழவிடைமேன் முதல்வனாரப் பொழுதுஞ்
செந்நின்ற மனப்பெரியோர் திருக்குழல்வா சனைகேட்க
இந்நின்ற நிலையேநம் பாலணைவா யெனவவரும்
அந்நின்ற நிலைபெயர்ப்பா ரையர்திரு மருங்கணைந்தார்.

(இ-ள்.) இளமைபொருந்திய ரிஷபவாகனத்தின்மேல் காட்சிகொடுத்தருளிய முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் (ஆனாயநாயனாரைப்பார்த்து அன்பனே!) சிறந்த அன்புபொருந்திய மனதினையுடைய நமது அடியார்கள் எப்பொழுதும் நீவாசிக்கின்ற புள்ளாங்குழலின் இசையைக்கேட்கும்பொருட்டுஇப்பொழுது இவ்விடத்தில் நீ நின்றபடியே நம்மிடத்திற்கு வருவாயாகவென்று திருவாய்மலர்ந்



மூர்த்திநாயனார்

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மூன்றுவது,

மும்மையாலுலகாண்ட சருக்கம்.

# மூர்த்திநாயனார் புராணம்.

சீர்மன்னு செல்வக் குடிமல்கு சிறப்பி னோங்குங்
கார்மன்னு சென்னிக் கதிர்மாமணி மாட வைப்பு
நார்மன்னு சிந்தைப் பலநற்றுறை மாந்தர் போற்றும்
பார்மன்னு தொன்மைப் புகழ்பூண்டது பாண்டி நாடு.

(இ-ள்.) சீரினையுடைய ஐசுவரியமிருந்த குடிகள் நிறைந்திருத்தலால் சிறந்தோங்கி மேகங்கள்தங்கிய சிகரத்தையும், ஒளிவீசுகின்ற மாணிக்கங்களிழைத்த மாளிகைகளையுமுடைய நாடாவது, அன்புபொருந்திய உள்ளத்தினையுடைய பல நன்னெறிகளில் ஒழுகுகின்ற மனிதர்களால் துதிக்கப்பட்ட உலகத்தில் நிறைந்த பழமையான புகழைப்பெற்றதாகிய பாண்டிநாடாம்.—எ-று. (க)

சாயுந்தளிர் வல்லி மருங்கு னெடுந் தடங்கண்
வேயும்படு தோளியர் பண்படு மின்சொற் செய்ய
வாயும்படு நீள்கரை மண்பொருந் தண்பொருந்தம்
பாயுங்கட லும்படு நீர்மை பணித்த முத்தம்.

(இ-ள்.) தளிர்கள்சாய்ந்திருக்கின்ற கொடிபோன்ற இடையையும், நீண்டவிசாலமாகிய கண்களையும், மூங்கில்போன்ற தோள்களையுமுடைய மாதர்களின்து பண்ணமைந்த இனியசொற்களையுடைய சிவந்தவாயிலும், நீண்டகரையிலுள்ள மண்ணை அலையாகிய கைகளால் மோதுகின்ற குளிர்ந்த தாம்பிரபர்ணிநதியானது பாய்கின்ற கடலிலும் நிறமுள்ள முத்துக்கள் உண்டாயிருக்கும்.—எ-று.

வாயில் படுமுத்தம்-என்றது பற்களை. (உ)

மொய்வைத்த வண்டின் செறிசூழன் மூரன்ற சந்தின்
மைவைத்த சோலை மலயந்தர வந்த மந்த
மெய்வைத்த காலுந் தருஞால மளந்த மேன்மைத்
தெய்வத்தமி ழுந்தருஞ் செவ்வி மணஞ்செ யீரம்.

(இ-ள்.) வண்டின் கூட்டங்கள் சூழ்ந்து ஒலிக்கின்ற மேகங்கள் தவழும் சந்தனச்சோலையையுடைய பொதியமலையினின்றும் வந்த சிறு தென்றற்காற்றும்,

உலகமுழுமையும் பரந்த மேன்மையையுடைய தெய்வத்தன்மைபொருந்தியதமிழும் மணத்தோடு குளிர்ச்சியையுங்கொடுக்கும்.—எ-று.

'மந்தமெய்வைத்தகால்' = மந்தத்தைத்தேகத்தில் வைத்தகாற்று ; எனவே இளந்தென்றலென்பது பெற்றும். முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் அகத்தியமுனிவருக்கு அன்புடனருளப்பெற்றதும், அக்கடவுள்தாமே சங்கத்தலைவராயிருந்து பழுதறவாராயப்பெற்றதும், திருஞானசம்பந்தப்பிள்ளையார் முதலிய சமயாசாரியர்கள் அநேக அற்புதங்கள் செய்தருளப்பெற்றதும் தமிழ்மொழியேயென்பது தோன்ற 'தெய்வத்தமிழ்' என்று கூறினர் ;

"விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொன்
மடம கட்கரங் கென்பது வழுதிநா டன்றே."

"கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ."

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்." எனவரும் திருவிளையாடற்புராணத்தானுணர்க. (௩)

தெய்வத்தமிழ் மணத்தையும் ஈரத்தையுங்கொடுத்தலாவது, யாவரும் மேன்மையாகப்படித்திருத்தலும், பேரன்புடையரா யிருத்தலுமாம்.

சூழுமி தழ்ப்பங் கயமாகவத் தோட்டின் மேலாள்
தாழ்வின்றி யென்றுந் தனிவாழ்வதத் தைய லொப்பார்
யாழின்மொழி யிற்குழ லின்னிசை யுஞ்சு ரும்பும்
வாழு நகர மதுரா புரியென்ப தாகும்.

(இ-ள்.) இதழ்கள்பொருந்திய தாமரைமலராக எண்ணி அந்தமலரில்வாசஞ்செய்கின்ற இலக்குமியானவள் குறைவின்றி எக்காலத்திலும் தனிமையாக வாழ்ந்து கொண்டிருப்பது; அந்த இலக்குமியையொத்த மாதர்களினுடைய இனிமையாகிய மொழியில் வீணையினிசையும், கூந்தலில் இனிய இசையோடுவண்டுகளும் வாழ்கின்ற நகரமாகிய மதுராபுரியென்று சொல்லப்படுவதாகும்.—எ-று. (௪)

சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய வங்கண் மூதூர்
நூல்பா யிடத்தும் முளகோன்றலை மேதி பாயப்
பால்பாய் முலைதோய் மதுப்பங்கயம் பாய வெங்குஞ்
சேல்பாய் தடத்தும் முளசெய்யுண்மிக் கேறு சங்கம்.

(இ-ள்.) பெருமைபொருந்திய இயல் - இசை - நாடகம் என்னும் மூன்று தமிழுந் தங்கிய அழகிய இடமகன்ற பழமையாகிய அம்மதுராபுரியில் சாஸ்திரப்

பயிற்சிசெய்யுமிடத்திலும் செய்யுள்களான் மிகவும் உயர்ந்தகல்விச்சங்கங்களுள்ளன ; பெரியதலையினையுடைய எருமைக்கடாக்கள்பாய்ந்து அவைகளின் முலையிலிருந்து ஒழுகுகின்றபாலானது தேனையுடைய தாமரைமலர்களில் பாய எவ்விடத்திலும் கெண்டைமீன்கள் பாய்கின்ற தடாகங்களிலும் வயல்களில் மிகுதியாகத்தவழுகின்ற சங்குகள் உள்ளன.—எ-று.

'செய்யுண்மிக்கேறுசங்கம்' என்பதை, நூல்பாயிடத்தும் சேல்பாய்தடத்தும் என்னுமிரண்டிடத்துங் கூட்டிச் சிலேடையாகப் பொருள்கூறப்பட்டது.

மந்தாநிலம் வந்தசை பந்தரின் மாட முன்றிற்
பந்தாடிய மங்கையர் பங்கயச் செங்கை தாங்குஞ்
சந்தார்முலை மேலன தாழ்குழை வாண்முகப்பொற்
செந்தாமரை மேலன நித்திலஞ் சேர்ந்த கோவை.

(இ-ள்.) சிறுதென்றற்காற்றானது வந்து உலாவுகின்றபந்தலையுடைய வீடுகளின் முற்றங்களில் பந்தடித்து விளையாடுகின்ற மாதர்களினுடைய தாமரைமலர்போன்ற சிவந்தகைகளால் தாங்கப்பட்ட சந்தனமணிந்த ஸ்தனங்களின்மேல் முத்துமாலைகளிருக்கின்றன ; தாழ்ந்தகுழையோடுகூடிய ஒளிபொருந்திய அழகிய தாமரைமலர்போன்ற முகங்களின்மேல் முத்துப்போலும் வேர்வையினது கோவைகளிருக்கின்றன.—எ-று. (சு)

மும்மைப்புவ னங்களின் மிக்கதன் றேயம் மூதூர்
மெய்ம்மைப்பொரு ளாந்தமிழ் நூலின் விளங்கு வாய்மைச்
செம்மைப்பொரு ளுந்தரு வார்திரு வால வாயில்
எம்மைப்பவந் தீர்ப்பவர் சங்க மிருந்த தென்றல்.

(இ-ள்.) உண்மைப்பொருளையுடைய தமிழ்நூல்களில் (அவற்றின் பொருளைக்குறித்து மாறுகொண்டெழுந்த புலவர்களின் சந்தேகநீங்கும்படி) விளங்குகின்ற மெய்ம்மையாகிய சிறந்தபொருளை அருளிச்செய்கின்றவராய்த் திருவாலவாயின்கண் வீற்றிருந்தருளி அடியேங்களைப் பிறவித்துன்பத்தினின்றும் நீக்கியருளுகின்றவராகிய சோமசுந்தரப்பெருமான் (தலைமைப்புலவராயிருந்து ஏற்படுத்திய) செந்தமிழ்ச்சங்கமிருக்கப்பெற்றதென்றல், பழமைபொருந்திய அம்மதுரைமாநகரமானது சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்று உலகங்களிலும் சிறந்ததேயாகும்.—எ-று.

'மெய்ம்மைப்பொருளாந் தமிழ்நூலின் விளங்குவாய்மைச் - செம்மைப்பொருளுந்தருவார்' என்பதன் வரலாறு, சங்கப்புலவர்கள் நாற்பத்தெண்மரும் தனித்தனி தமிழ்ப்பிரபந்தங்களைச்செய்து இறுமாந்து, தத்தம்பாடலிற்பெருமை கூறி, ஒருவரோடொருவர் மாறுகொண்டு சிவபெருமான்திருமுன்னடைந்து விண்ணப்பஞ்செய்துநிற்க அச்சிவபரஞ்சுடர் உருத்திரசன்மனைக்கொண்டு அவைகளைச் சீர்தூக்கித் தெரிவித்தருளினாரென்பதாம். 'விளங்குவாய்மைச் - செம்மைப்பொருளுந்தருவார்' என்பதற்கு விளங்குகின்ற மெய்ம்மையினையுடைய அகப்பொருளிலக்கணத்தைச் சங்கத்தாருக்கு அருளிச்செய்தவர் எனினும் பொருந்தும். (எ)

அப்பொற்பதி வாழ்வணி கக்குலத் தான்ற தொன்மைச்
செப்பத்தகு சீர்க்குடி செய்தவஞ் செய்ய வந்தார்

எப்பற்றினையுமறுத் தேறுகைத் தேறு வார்தாண்
மெய்ப்பற்றெனப் பற்றி விடாத விருப்பின் மிக்கார்.

(இ-ள்.) அந்த அழகுபொருந்திய மதுரைமாநகரத்தில் வாழ்கின்ற வணிகர்களுடைய குலத்தில் பரம்பரையாகச்செல்வம்பொருந்தி பழமையான அறிஞர்களால் புகழத்தக்க சிறப்பினையுடைய ஒரு குடும்பமானது செய்த தவத்தினால் அவதரித்தவர்; எல்லா ஆசைகளையும் ஒழித்து, ரிஷபத்தை வாகனமாகச் செலுத்துகின்ற சிவபெருமானது திருவடிகளையே உண்மையாகிய ஆதரவாகப்பிடித்து அவ்வன்பினின்றும் நீங்காத விருப்பத்தில் சிறந்தவர்.—எ-று. (அ)

நாளும்பெருங் காத லயப்புறும் வேட்கை யாலே
கேளுந்துணை யும்முதற் கேடில் பதங்க ளெல்லாம்
ஆளும்பெரு மானடித் தாமரை யல்ல தில்லார்
மூளும்பெரு கன்பெனு மூர்த்தியார் மூர்த்தி யார்தாம்.

(இ-ள்.) நாள்தோறும் மிகுந்த ஆசையானது அதிகரித்தெழுகின்ற அன்பினாலே பந்துக்களும் துணைவர்களும் முதலாகிய குறைவற்ற எல்லாப்பேறுகளும் தம்மை யடிமைகொண்டருளிய சிவபெருமானது திருவடித்தாமரையே யல்லாமல் வேறொன்றையும் கொள்ளாதவர்; (அவர்யாரென்றால்) மிகுந்த பேரன்பே திருவுருவமாகக்கொண்ட மூர்த்திநாயனார்.—எ-று. (௯)

அந்திப்பிறை செஞ்சடை மேலணி யால வாயில்
எந்தைக்கணி சந்தனக் காப்பிடை யென்று முட்டா
அந்தச்செய லின்னிலை நின்றடி யாரு வப்பச்
சிந்தைக்கினி தாய திருப்பணி செய்யு நாளில்.

(இ-ள்.) மாலைக்காலத்தில் தோன்றுகின்ற மூன்றாம் பிறையைச் சிவந்த சடையின்மேல் தரித்த திருவாலவாயில் வீற்றிருந்தருளும் எமது பெருமானாகிய சுந்தரேசருக்குச் சந்தனக்காப்பணிகின்ற திருப்பணியானது இடையில் என்றைக்கும் முட்டுப்பாடு வராமல் செய்கின்ற அத்திருத்தொண்டின் நிலைமையில் நின்று, அடியார்கள் மனமகிழும்படி தமது திருவுள்ளத்திற்கு இனிமையாகிய அத்திருப்பணியைச் செய்துகொண்டு வரும் நாள்களில்—எ-று. (௧0)

கானக்கடி சூழ்வடு கக்கரு நாடர் காவன்
மானப்படை மன்னன் வலிந்து நிலங்கொள் வானா
யானைக்குதி ரைக்கரு விப்படை வீரர் திண்டேர்
சேனைக்கட லுங்கொடு தென்றிசை நோக்கி வந்தான்.

(இ-ள்.) காட்டரண்சூழ்ந்த வடுகச்சாதியானாகியகரு நாடதேசத்தாளையாளுகின்ற வலிமைபொருந்திய ஆயுதத்தையுடைய ஒரு அரசன் வலியவே அன்னியதேசத்தரசர்களைப் பிடித்து அவர்கள் இராச்சியத்தைக் கைக்கொள்ளும்பொருட்டு யானைகளும், குதிரைகளும், ஆயுதங்களைப் பிடித்த படைவீரர்களும், வலிமை பொருந்திய தேர்களுமாகிய சமுத்திரம்போன்ற நால்வகைச் சேனைகளையும்அழைத்துக்கொண்டு தென்திசையை நோக்கிப் போர்செய்யும்படிவந்தான்.—எ-று.

வந்துற்ற பெரும்படை மண்புதை யப்ப ரப்பிச்
சந்தப்பொதி யிற்றமிழ் நாடுடை மன்னன் வீரஞ்
சிந்தச்செரு வென்றுதன் னாணை செலுத்து மாற்றால்
கந்தப்பொழில் சூழ்மது ராபுரி காவல் கொண்டான்.

(இ-ள்.) கருநாடதேசத்தரசன் தன்னோடு வந்த பெரிய சேனைகளை அந் நாடு முழுமையும் பரவச்செய்து, சந்தனமரங்களையுடைய பொதியமலையிற்பிறந்த தமிழ்வழங்குகின்ற நாட்டையாளுகின்ற பாண்டியனுடைய வீரமானது குன்றும்படி யுத்தஞ்செய்து வென்று, அந்நாட்டில் தனது ஆக்கினையைச் செலுத்தும்படி மணம்பொருந்திய சோலைகள் சூழ்ந்த மதுராபுரியின் ஆளுகையைக் கைக்கொண்டான்.—எ-று. (௧௨)

வல்லாண்மையின் வண்டமிழ் நாடு வளம்ப டுத்து
நில்லாநிலை யொன்றிய வின்மையி னீண்ட மேரு
வில்லானடி மைத்திற மேவிய நீற்றின் சார்பு
செல்லாதரு கந்தர் திறத்தினிற் சிந்தை தாழ்ந்தான்.

(இ-ள்.) வலிய ஆண்மையினால் சிறந்த பாண்டிநாட்டை வளஞ்செய்து நில்லாத நிலைமையோடுகூடிய வறுமையினால் நீண்ட மேருமலையைவில்லாகவுடைய சிவபெருமானுக்கு அடிமைத்திறஞ்செய்தற்கு அமைந்த திருநீறு தரித்தலாகிய தொழிலின் சார்பில் அவ்வரசன் செல்லாமல், சமணர்களுடைய போதனைக்குட்பட்டு அவர்கள் மதத்தில் பிரவேசிக்க எண்ணங்கொண்டான்.—எ-று. (௧௩)

தாழுஞ்சமண் கையர் தவத்தைமெய் யென்று சார்ந்து
வீழுங்கொடி யோனது வன்றியும் வெய்ய முன்னைச்
சூழும்வினை யாலர வஞ்சுடர்த் திங்க ளோடும்
வாழுஞ்சடை யானடி யாரையும் வன்மை செய்வான்.

(இ-ள்.) தாழ்வுபொருந்திய சமணர்களாகிய வஞ்சகர்களின் தவத்தை மெய்யென்று நம்பி, அந்த மதத்தில் விழுகின்ற கொடியவனாகிய அக்கருநாடதேசத்தரசன் தான் அம்மதத்தில் சேர்ந்ததல்லாமலும், முற்பிறப்பிற்செய்த கொடிய தீவினையினால், பாம்பானது சந்திரனோடு வாழுகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானது அடியார்களையும் வருத்தப்படுத்துவான்.—எ-று. (௧௪)

செக்கர்ச்சடை யார்விடை யார்திரு வால வாயுண்
முக்கட்பர னார்திருத் தொண்டரை மூர்த்தி யாரை
மைக்கற்புரை நெஞ்சுடை வஞ்சகன் வெஞ்ச மண்பேர்
எக்கர்க்குட னாக விகழ்ந்தன செய்ய வெண்ணி.

(இ-ள்.) செவ்வானம்போலும் சிவந்த சடையினையுடையவரும், ரிஷபவாகனத்தையுடையவரும், மூன்றுகண்களை யுடையவருமாகிய திருவாலவாயில் எழுந்தருளிய சிவபெருமானது அடியவராகிய மூர்த்திநாயனாரைக் கருங்கல்லையொத்த நெஞ்சினையுடைய வஞ்சகனாகியஅவ்வரசன் கொடிய சமணர்களுடைய கூட்டத்துக்கு உட்படுத்தும்பொருட்டு அவருக்கு இழிவாகிய கொடுஞ்செய்கைகளைச் செய்ய நினைத்து—எ-று. (௧௫)

அந்தமில வாமிறை செய்யவு மன்ப னார்தா
முந்தைம்முறை மைப்பணி முட்டலர் செய்து வந்தார்
தந்தம்பெரு மைக்கள வாகிய சார்பி னிற்கும்
எந்தம்பெரு மக்களை யாவர் தடுக்க வல்லார்.

(இ-ள்.) (அவ்வரசன்) அளவில்லாத துன்பங்களைச் செய்யவும் அடியவரா கிய அம்மூர்த்திநாயனார் தாம் முன்பு சிவபெருமானுக்குச் செய்துவந்த சந்தனக்கா ப்புத்திருப்பணியில் சிறிதும் குறைவுவராமல் செய்துகொண்டுவந்தார்; தங்கள் தங்கள் பெருமைக்கு ஏற்ற அளவாகிய திருத்தொண்டின் சார்பில் நிற்கின்ற எமது பெரியோர்களைத் தடுக்கவல்லவர்கள் யாவர் (ஒருவருமில்லை.)—எ-று. (கசு)

எள்ளுஞ்செயல் வன்மைக ளெல்லையில் லாத செய்யத்
தள்ளுஞ்செய லில்லவர் சந்தனக் காப்புத் தேடிக்
கொள்ளுந்துறை யுமடைத் தான்கொடுங் கோன்மை செய்வான்
றெள்ளும்புனல் வேணியர்க் கன்பருஞ் சிந்தை நொந்து.

(இ-ள்.) சமணசமயத்திற் புகுந்து கொடுங்கோல்செலுத்துகின்ற அவ்வரச னைவன் எல்லாராலும் இகழத்தக்க கொடிய செய்கைகளை மூர்த்திநாயனாருக்கு அளவில்லாதனவாகச்செய்ய, அதனால் தாம் செய்யும் திருப்பணியில் குறைவுப டாதவராகிய அந்நாயனார் சந்தனக்காப்புக்குரிய சந்தனக்கட்டைகளைத் தேடி வாங்குகின்ற இடங்களிலும் அவர்க்குக்கொடுக்கவொட்டாமல் தடுத்துவிட்டான்; (அவன் அப்படிச்செய்தபடியால்) தெளிவாகிய கங்காநதியைத்தரித்த சடையினை யுடைய சிவபெருமானுக்கு அன்பராகிய அம்மூர்த்திநாயனாரும் மனவருத்தமடை ந்து—எ-று. (கஎ)

புன்மைச்செயல் வல்லமண் குண்டரிற் போது போக்கும்
வன்மைக்கொடும் பாதகன் மாய்ந்திட வாய்மை வேத
நன்மைத்திரு நீற்றுயர் நன்னெறி தாங்கு மேன்மைத்
தன்மைப்புவி மன்னரைச் சார்வதென் றென்று சார்வார்.

(இ-ள்.) இழிவாகியசெயலில் வல்லவர்களாகிய கொடிய சமணர்கள் கூட் டத்திற்சேர்ந்து வீணாகப் பொழுதுபோக்குகின்ற வலிய கொடும்பாதகனாகிய இவ் வரசன் இறந்து, உண்மையாகிய வேதத்திற்சொல்லியபடி நன்மை பொருந்திய திருநீற்றைத்தரிக்கின்ற உயர்ந்த நன்மார்க்கத்தை அனுசரிக்கும் பெருங்குணத் தையுடைய அரசனை இந்நாடு எப்பொழுது அடையுமென்று தம் முள்ளத்தில் நினைத்து விசனப்படுவார்.—எ-று. (கஅ)

காய்வுற்ற செற்றங் கொடுகண்டகன் காப்ப வுஞ்சென்
றாய்வுற்ற கொட்பிற் பகலெல்லை யடங்க நாடி
யேய்வுற்ற நற்சந் தனமெங்கும் பெறாது சிந்தை
சாய்வுற்றிட வந்தனர் தம்பிரான் கோயி றன்னில்.

(இ-ள்.) (இவர் செய்துவரும் சந்தனக்காப்புத் திருப்பணிக்குத் தடையு ண்டாகும்படி) கோபத்தோடு பகைமையையுங் கொண்டு வஞ்சகனாகிய அவ் வர

தன் சந்தனக்கட்டையை யாவரும் கொடுக்காமல் தடைசெய்யவும், மூர்த்திநாயனார் பகற்காலமுழுமையும் பல விடங்களிலும் சென்று அலைந்துதேடித் தகுதியாகிய சந்தனக்கட்டை எவ்விடத்திலும் கிடைக்கப் பெறாமல், மனமானது மிகவும் தளர்ச்சியையடைய சொக்கலிங்கப்பெருமான் வீற்றிருந்தருளும்திருக்கோயிலுக்கு வந்தார்.—எ-று. (கக)

நட்டம்புரி வாரணி நற்றிரு மெய்ப்பூச் சின்று
முட்டும்பரி சாயினுந் தேய்க்குங்கை முட்டா தென்று
வட்டந்திகழ் பாறையின் வைத்து முழங்கை தேய்த்தார்
கட்டும்புறந் தோனரம் பென்பு கரைந்து தேய.

(இ-ள்.) திருநடனஞ் செய்தருளுகின்ற சிவபெருமான் திருமேனியில் தரிக்கத்தக்க நல்ல சந்தனம் இன்றைக்குக் கிடையாமற்போயினும் சந்தனக்கட்டையைத் தேய்க்கின்ற கைக்கு ஒரு முட்டுப்பாடும் இல்லையென்று, வட்டமாக விளங்குகின்ற சந்தனக்கல்லின்மேல் தமது முழங்கையை வைத்துத் தேகத்துக்கு உறுதியாகக் கட்டியிருக்கின்ற புறத்திலுள்ள தோலும், அதனுள்ளிருக்கும் நரம்பும், எலும்பும் கரைந்து குறையும்படி தேய்த்தார்.—எ-று. (உ0)

கல்லின்புறந் தேய்த்த முழங்கை கலுழ்ந்து சோரி
செல்லும்பரப் பெங்கணு மென்பு திறந்து மூளை
புல்லும்படி கண்டு பொறுத்திலர் தம்பி ரானார்
அல்லின்க ணெழுந்த துவந்தருள் செய்த வாக்கு.

(இ-ள்.) (மூர்த்திநாயனார்) சந்தனக்கல்லினிடத்தில் வைத்துத் தேய்த்த முழங்கையானது உதிரத்தைப் பெருக்கிச்செல்லு மிடங்களிலெல்லாம் எலும்பு வெளிப்பட்டு அதனுள்ளிருக்கும் மூளை வெளியில் ஒழுகுவதைப்பார்த்து, சொக்கலிங்கப்பெருமான் மனம் பொறுக்காதவராய் அவரைக் காப்பாற்றும்பொருட்டுத் திருவுள்ளங்களித்து அருளிச்செய்த ஒரு அசரீரி வாக்கானது அன்றிராத்திரியில் உண்டாயிற்று.—எ-று. (உக)

அன்பின்றுணி வாலிது செய்திட லைய வுன்பால்
வன்புன்கண் விளைத்தவன் கொண்டமண் ணெல்லாங் கொண்டு
முன்பின்னல் புகுந்தன முற்றவு நீத்துக் காத்துப்
பின்புன்பணி செய்துநம் பேருல கெய்து கென்ன.

(இ-ள்.) அன்பனே! பத்தியினது உறுதிப்பாட்டினால் இப்படிப்பட்ட செய்கையைச் செய்யாதிருக்கக்கடவாய்; உனக்கு மிகுந்த துன்பத்தைச்செய்த அக் கொடுங்கோலரசன் பெற்றிருக்கின்ற இராச்சியமுழுமையும் நீயே கைக்கொண்டு, முன்பு அவனால் உண்டாகிய கொடுமைகளனைத்தையும் ஒழித்து, செங்கோல் செலுத்தி, நீசெய்துவருகின்ற சந்தனக்காப்புத் திருப்பணியைச் செய்து, பின்பு நமது சிவலோகத்தை யடைவாயாகவென்று.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உஉ)

இவ்வண்ண மெழுந்தது கேட்டெழுந் தஞ்சி முன்பு
செய்வண்ண மொழிந்திடத் தேய்ந்தபுண் ணூறு தீர்ந்து

கைவ்வண்ண நிரம்பின வாசமெல் லாங்க லந்து
மொய்வண்ண விளங்கொளி யெய்தினர் மூர்த்தியார் தாம்.

(இ-ள்.) இவ்விதமாக எழுந்த திருவாக்கினைக் கேட்டு அச்சமுற்று எழுந்து, தாம் முன்பு செய்யும் முழங்கையைத் தேய்க்கும் தொழிலினின்றும் நீங்க, உடனே அம் முழங்கையானது தேய்ந்ததனாலுண்டாகிய காயம் ஒழிந்து அக்கையின் அழகனைத்தும் ஒரு குறைவுமின்றி வளர்ந்தன; இரத்தநாற்றம் போய் நல்ல மணங்களெல்லாங் கலந்து மிகுந்த அழகைத்தருகின்ற காந்தியைத்தேகத்தில் அடைந்தார் மூர்த்திநாயனார்.—எ-று. (உ௩)

அந்நாளிர வின்க ணமண்புகல் சார்ந்து வாழு
மன்னாகிய போர்வடு கக்கரு நாடர் மன்னன்
றன்னாளு முடிந்தது சங்கரன் சார்பி லோர்க்கு
மின்னுமென நீடிய மெய்ந்நிலை யாமை வெல்ல.

(இ-ள்.) அன்று இராத்திரியில் சமணர்களுடைய மதத்தில் பிரவேசித்துக் கொடுங்கோல் செலுத்தி வாழ்கின்ற அரசனாகிய வடுகக்கருநாடராசனுடைய வாழ்நாளும் முடிந்தது; சிவபெருமானுடைய திருவருளில்லாதவர்களுக்கு நீடித்தபூரணாயுளையுடைய தேகமும் பாவமிகுதியால் மின்னலைப்போல நிலையாமல் அழிந்துவிடுமென்பதை யாவர்க்கும் புலப்படுத்துங் காரணமாக.—எ-று.

நீடித்த வாழ்நாள்களையுடையவராயிருப்பினும் அடியார்களுக்குத் தீங்கிழைப்பின் அவை அன்றே யழிந்து விடுமென்பார் 'மின்னுமென நீடிய மெய்ந்நிலையாமை வெல்ல' என்று கூறினார். 'நிலையாமை வெல்ல முடிந்தது' எனக்கூட்டுக.

இவ்வாறுல கத்தி னிறப்ப வுயர்ந்த நல்லோர்
மெய்வாழுல கத்து விரைந்தணை வார்க ளேபோல்
அவ்வாறர னாரடி யாரை யலைத்த தீயோன்
வெவ்வாய்நிர யத்திடை வீழ்வான் விரைந்து வீந்தான்.

(இ-ள்.) இந்நிலவுலகத்தில் மேன்மைபொருந்திய நல்லோர்கள் தேகவியோகமடைந்தால் மெய்ப்பொருளாகிய சிவபெருமான்வாழ்ந்தருளுகின்றசிவலோகத்தில் எவ்வாறு விரைந்து சேர்வார்களோ, அதுபோல, சிவனடியவராகிய மூர்த்திநாயனாரை மேற்சொல்லியவிதமாக வருத்தப்படுத்திய கொடியவனாகிய அவ்வரசன் கொடியவாயினையுடைய நரகத்தில் வீழ்ந்து வருந்தும்படி விரைந்து இறந்தான்.—எ-று. (உ௫)

முழுதும்பழு தேபுரி மூர்க்க னுலந்த போதின்
எழுதுங்கொடி போல்பவ ருட்பட வெங்கு ஞ் சுற்ற
முழுதும்புலர் வுற்றது மற்றவ னன்ன மாலைப்
பொழுதும்புலர் வுற்றது செங்கதிர் மீது போத.

(இ-ள்.) சிவனடியார்களுக்கு முழுமையும் துன்பத்தையேசெய்துகொண்டிருந்த மூர்க்கனாகிய அவ்வரசன் இறந்தபொழுது, சித்திரமெழுதுங் கொடிபோன்றவராகிய அவன் மனைவிமார்களோடு எவ்விடத்திலுமுள்ள உறவினரெல்லாம்

விசனப்பட்டார்கள் ; சிவந்த கிரணங்களையுடைய சூரியனுதயமாக அவ்வரசனுடைய மனதையொத்த இராக்காலமும் விடிந்தது.—எ-று. (உ௬)

அவ்வேலையி லங்க ணமைச்சர்கள் கூடித் தங்கள்
கைவ்வேறுகொ ளீம வருங்கடன் காலை முற்றி
வைவேலவன் றன்குல மைந்தரு மின்மை யாலே
செய்வேறு வினைத்திறஞ் சிந்தனை செய்து தேர்வார்.

(இ-ள்.) அப்பொழுது அந்தப்பட்டணத்திலுள்ள மந்திரிகள் ஒன்றாகக் கூடித் தங்கள் ஒழுக்கத்திற்கு வேறுவகையாகச்செய்கின்ற தகனமுதலாகிய கடன்களைக் காலைப்பொழுதே செய்துமுடித்து,கூர்மைபொருந்திய வேலாயுதத்தைப் பிடித்த அவ்வரசனது குலத்துக்குரிய புதல்வர்களும் இல்லாதபடியினால் தாம் செய்யத்தகுந்தவேறாகிய் ஒரு செயலைமனதில்சிந்தித்துத் தெளிவாராயினார்.—எ-று.

தாழுஞ்செய லின்றொரு மன்னவன் றாங்க வேண்டுங்
கூழுங்குடி யுமுத லாயின கொள்கைத் தேனுஞ்
சூழும்படை மன்னவன் றோளிணை காவ லின்றி
வாழுந்தகைத் தன்றிந்த வையக மென்று சொன்னார்.

(இ-ள்.) பயிர், குடிமுதலிய பலவகைச் சிறப்புக்களையுடையதா யிருந்தாலும் தன்னைச்சூழ்ந்துள்ள சேனைகளையுடைய அரசனது இரண்டு புயங்களாலும் காக்குங்காவலில்லாமல் இவ்வுலகமானது வாழ்வடையும் தகுதியையுடையதல்ல ; (அதனால்) இராசநீதியிற் குறைவுபடாமல் ஒரு அரசன் உலகத்தை யாளுகை செய்யவேண்டுமென்று சொன்னார்கள்.—எ-று. (உ௮)

வேறு.

பன்முறை யுயிர்க ளெல்லாம் பாலித்து ஞாலங் காப்பான்
றன்னெடுங் குடைக்கீழ்த் தத்த நெறிகளிற் சரித்து வாழ
மன்னரை யின்றி வைகு மண்ணுல கெண்ணுங் காலை
யின்னுயி ரின்றி வாழும் யாக்கையை யொக்கு மென்பார்.

(இ-ள்.) பலவகைப்பட்ட உயிர்களையெல்லாம் பரிபாலித்து உலகத்தையாளும்படி தனது நெடிய வெண்கொற்றக் குடையின்கீழ் நான்குவருணத்தாரும் தங்கள்தங்களுக்குரிய தருமநெறிகளில் தவறாமல் நடக்கும்படிச்செய்து வாழ்கின்ற அரசர்களில்லாமல் தங்கிய இப்பூவுலகமானது ஆலோசிக்குமிடத்தில் இனிய உயிரில்லாமல் வாழ்கின்ற உடம்பையொக்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.—எ-று. (உ௯)

இவ்வகை பலவு மெண்ணி யிங்கினி யரச ரில்லைச்
செய்வகை யிதுவேயென்று தெளிபவர் சிறப்பின் மிக்க
மைவரை யனைய வேழங் கண்கட்டி விட்டான் மற்றக்
கைவரை கைக்கொண் டார்மண் காவல்கைக் கொள்வா ரென்று.

(இ-ள்.) இப்படிப்பலவற்றையும் தாங்கள் யோசித்து, இவ்விடத்தில் இனி பட்டத்துக்குரிய அரசர்கள் ஒருவருமில்லை ஆதலால் செய்யவேண்டியது இதுவே

யென்று தெளிந்தவர்களாகிய அம்மந்திரிமார்கள் அலங்கரிக்கப்பட்ட கரியமலையை யொத்த யானையைக் கண்ணைக்கட்டி வீதியில் விட்டால் அந்தயானை எவனையெடுத்துக்கொள்ளுகிறதோ, அவனோ இந்த இராச்சியத்தை அரசாட்சிசெய்வதற்கு உரியவனென்று நினைத்து.—எ-று. (௩௦)

வேறு.

செம்மாண்வினை யர்ச்சனை நூன்முறை செய்து தோளால்
இம்மாநில மேந்தவோ ரேந்தலை யேந்து கென்று
பெய்ம்மாமுகில் போன்மதம் பாய்பெரு கோடை நெற்றிக்
கைம்மாவை நறுந்துகில் கொண்டுகண் கட்டி விட்டார்.

(இ-ள்.) செவ்விய மாட்சிமையையுடைய அர்ச்சனைமுதலாகிய செய்கைகளை சாஸ்திரவிதிப்படியே யானைக்குச் செய்து, தோளினால் இந்தப்பெரிய நிலவுலகத்தைத்தாங்கும்படி ஓர் அரசனை நீ எடுத்து உன்முதுகில் தாங்கென்று, நீரைப் பெய்யாநின்ற பெரியமேகத்தைப்போல மதம்பாய்ந்து பெருகுகின்ற பட்டத்தையணிந்த நெற்றியையுடைய யானையை நல்லவஸ்திரங்கொண்டு கண்ணைக்கட்டி விட்டார்கள்.—எ-று. (௩௧)

கண்கட்டி விடுங்களி யானையக் காவன் மூதூர்
மண்கொட்புற வீதி மருங்கு திரிந்து போகித்
திண்பொற்றட மாமதில் சூழ்திரு வால வாயின்
விண்பிற்பட வோங்கிய கோபுர முன்பு மேவி.

(இ-ள்.) வஸ்திரத்தினால் கண்ணைக்கட்டி விடப்பட்ட மதச்செருக்கினையுடைய பட்டவர்த்தனயானையானது காவலையுடைய பழமையாகிய அந்த மதுரைமாநகரத்தில் தூசுகள் மேலேகிளம்பிச்சுழல,வீதிகளில் திரிந்துகொண்டுபோய்,வலியபொன்மயமாகிய மிகவும் உயர்ந்த மதில்கள் சூழ்ந்த திருவாலவாயென்னும் ஆலயத்தின் விண்ணுலகமும் பின்னிடும்படியாக உயர்ந்த முதற்கோபுரத்திற்கு முன்னேபோய்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங்குளகம். (௩௨)

நீங்கும்மிர வின்க ணிகழ்ந்தது கண்ட தொண்டர்
ஈங்கெம்பெரு மானரு ளாமெனி லிந்த வையந்
தாங்குஞ்செயல் பூண்பனெனன் றுள்ளந் தளர்வு நீங்கிப்
பூங்கொன்றை மிலைந்தவர் கோயிற் புறத்தி னிற்ப.

(இ-ள்.) நீங்கிய முதல்நாளிரவில் தமக்காக அசரீரிவாக்குண்டானதை யறிந்த அன்பராகிய மூர்த்திநாயனார் இவ்விடத்தில் எமது பெருமானாகிய சொக்கலிங்க மூர்த்தியினது திருவருளானது இப்படியிருந்ததென்றால், இந்த வுலகத்தையாளுதற்குரிய அரசுரிமையை நான் பெற்றுக்கொள்வேனென்று, தம்மனதிலுள்ள துயரம் ஒழிந்து,அழகிய கொன்றைமலர்மாலையைத்தரித்த சொக்கலிங்கப்பெருமானது திருக்கோயிலின் புறத்தில்நிற்க.—எ-று. (௩௩)

வேழத்தர சங்கண் விரைந்து நடந்து சென்று
வாழ்வுற்றுல கஞ்செய் தவத்தினின் வள்ள லாரைச்
சூழ்பொற்சுடர் மாமணி மாநிலந் தோய முன்பு
தாழ்வுற்றெடுத் துப்பிடர் மீது தரித்த தன்றே.

(இ-ள்.) பட்டத்துயானையானது அவ்விடத்தில் சீக்கிரமாக நடந்துபோய், வாழ்வையடையும்படி உலகத்தார்செய்த தபோபலத்தினால் மூர்த்திநாயனாரைத்தன்கழுத்திற் சூழ்ந்திருக்கின்ற ஒளிபொருந்திய பொன்மயமாகிய மணிகள் பெரிய பூமியில்படும்படி அவர்முன்பாகத்தாழ்ந்து எடுத்துத் தன் முதுகின்மேல் வைத்துக்கொண்டது.—எ-று. (ருச)

மாதங்க மெருத்தினில் வைத்தவர் தம்மைக் காணா
ஏதங்கெட வெண்ணிய திண்மை யமைச்ச ரெல்லாம்
பாதங்களின் மீது பணிந்தெழுந் தார்க ளப்போ
தோதங்கிளர் வேலையை யொத்தொலி மிக்க தவ்வூர்.

(இ-ள்.) பட்டத்துயானையானது தன் முதுகின்மேல் எடுத்துவைக்கப்பெற்றவராகிய மூர்த்திநாயனாரைக்கண்டு, உலகத்தில் தீங்கு நீங்கும்படி நினைத்த சாமர்த்தியத்தையுடைய மந்திரிகளெல்லாம் அவருடைய திருவடிகளில் வணங்கியெழுந்தார்கள்; அப்பொழுது பிரவாகித்தெழுகின்ற சமுத்திரத்தையொத்து சந்தோஷத்தினாலுண்டாகிய ஆரவாரமானது அவ்வூரில் மிகுதியாக உண்டாயிற்று.

சங்கங்கண் முரன்றன தாரைகள் பேரி யோடும்
எங்கெங்கு மியம்பின பல்லிய மெல்லை யில்ல
அங்கங்கு மலிந்தன வாழ்த்தொலி யம்பொற் கொம்பின்
பங்கன்னரு ளாலுல காள்பவர் பாங்க ரெங்கும்.

(இ-ள்.) அழகிய பொற்கொம்புபோன்ற உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சொக்கலிங்கப்பெருமானது திருவருளினால் உலகத்தை அரசாளப்பெற்றவராகிய மூர்த்திநாயனாருடைய நான்குபக்கங்களிலும், தாரைகள் பேரிகைகளோடு சங்கவாத்தியங்களும் ஒலித்தன; அளவில்லாதனவாகிய பல வாத்தியங்கள் எவ்வெவ்விடங்களிலும் முழங்கின; அவ்வவ்விடங்களிலும் வாழ்த்துதலாலுண்டாகிய முழக்கங்கள் நிறைந்தன.—எ-று. (ருசு)

வெங்கட்களிற் றின்மிசை நின்று மிழிச்சி வேரித்
தொங்கற்சுடர் மாலைகள் சூழ்முடி சூடு சாலை
யங்கட்கொடு புக்கரி யாசனத் தேற்றி யொற்றைத்
திங்கட்குடைக் கீழரி மைச்செயல் சூழ்ந்து செய்வார்.

(இ-ள்.) கொடிய கோபக்கண்ணையுடைய பட்டவர்த்தனயானையினது முதுகினின்றும் மூர்த்திநாயனாரை இறக்கித் தேன்பொருந்திய மலர்மாலைகளும், விளங்குகின்ற இரத்தினமாலைகளும் சூழ்ந்திருக்கும் முடிசூட்டு மண்டபத்திற் கொண்டுபோய்ச்சிங்காசனத்தின்மேல் எழுந்தருளச்செய்து,ஒப்பற்றசந்திரவட்டக்குடை

யின்கீழ் பட்டாபிஷேகத்திற்குரிய மங்கலகிருத்தியங்களை ஆலோசித்துச் செய்யத் தொடங்கினார்கள்.—எ-று.

சூடுசோலையென்றும் பாடம். (௩௭)

மன்னுந்திசை வேதியின் மங்கல வாகு திக்கட்
டுன்னுஞ்சுடர் வன்னி வளர்த்துத் துதைந்த நூல்சூழ்
பொன்னின்கல சங்கள் குடங்கள் பூரித்த தூநீர்
உன்னுஞ்செயன் மந்திர யோகி னிறுத்தி னார்கள்.

(இ-ள்.) மூர்த்திநாயனார் வீற்றிருக்கும் கிழக்குத்திக்கில் அவரெதிரில் இடப்பட்ட வேதிகையில் மங்கலகரமான ஆகுதிகள்பண்ணுகின்ற யாககுண்டத்தில் விளங்குகின்ற அக்கினியை வளர்த்து, முப்புரிநூலை நெருங்கச்சுற்றிய பொற்கலசங்களிலும், குடங்களிலும் நிறைக்கப்பட்ட பரிசுத்தம்பொருந்திய கங்கைமுதலிய தீர்த்தங்களைத் தியானிக்கின்ற செய்கையையுடைய மந்திரவிதிப்படியே நிறுத்தினார்கள்.—எ-று. (௩௮)

வந்துற்றெழு மங்கல மாந்தர்க டம்மை நோக்கிச்
சிந்தைச்சிவ மேதெளி யுந்திரு மூர்த்தி யார்தா
முந்தைச்செய லாமமண் போய்முதற் சைவ மோங்கில்
இந்தப்புவி தாங்கியிங் கின்னர சாள்வ னென்றார்.

(இ-ள்.) தம்மைவந்து வணங்கி மங்கலகரமான செயல்களைச்செய்கின்ற மந்திரிமுதலானவர்களைப் பார்த்துச் சித்தத்தில் சிவபெருமானையே மெய்ப்பொருளென்று தெளிகின்ற தவச்செல்வத்தையுடைய மூர்த்திநாயனார் இதற்குமுன்னே கொடியசெயலில் இருந்த சமணமதம் அழிந்து முதன்மையாகிய சைவசமயம் விருத்தியானால் இந்த இராச்சியத்தைத் தாங்கப்பெற்று இவ்விடத்தில் இனிய அரசாட்சியைக் கைக்கொள்வேனென்று சொன்னார்.—எ-று. (௩௯)

அவ்வாறு மொழிந்தது கேட்ட வமைச்ச ரோடு
மெய்வாழ்தரு நூலறி வின்மிகு மாந்தர் தாமும்
எவ்வாறருள் செய்தனை மற்றவை யன்றி யாவர்
செய்வார்பெரி யோயெனச் சேவடி தாழ்ந்து செப்ப.

(இ-ள்.) அந்தப்பிரகாரம் மூர்த்திநாயனார் அருளிச்செய்ததைக்கேட்ட மந்திரிகளோடு உண்மையாகிய வேதாகமசாஸ்திரங்களைக் கற்று அறிவிற்சிறந்த பெரியோர்களும் (அவரைப்பார்த்து) சுவாமீ! தேவரீர் எவ்விதமாகக் கட்டளையிடுகின்றீரோ அவ்வாறு செய்வதேயல்லாமல் வேறு வகையாகயாவர் செய்யவல்லவர்கள் என்று அவருடைய திருவடிகளில் வணங்கிச்சொல்ல.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (௪௦)

வையம்முறை செய்குவ னாகில் வயங்கு நீறே
செய்யும்மபி டேகமு மாகச் செழுங் கலன்கள்

ஐயன்னடை யாளமு மாக வணிந்து தாங்கு
மொய்புன்சடை மாமுடி யேமுடி யாவ தென்றார்.

(இ-ள்.) யான் இவ்வுலகத்தை அரசாட்சி செய்வதற்கு உரியவனானால் விளங்குகின்ற விபூதியே செய்யப்பட்ட அபிஷேகதிரவியமாகவும், சிவபெருமானது அடியவனென்று தெரிந்துகொள்வதற்குக் குறியாகவுள்ள ருத்திராக்ஷமாலையே செழுமைபொருந்திய திருவாபரணங்களாகவும் அணிந்துகொண்டு, நான் தரிக்கின்ற நெருங்கிய சடைமுடியே என்தலையில் பின்சூட்டும் கிரீடமாகவும் இருக்கத்தக்கதென்று சொன்னார்.—எ-று. (௪௰)

என்றிவ்வுரை கேட்டலு மெல்லையில் கல்வி யோரும்
வன்றிண்மதி நூல்வளர் வாய்மை யமைச்சர் தாமு
நன்றிங்கரு ளானென நற்றவ வேந்தர் சிந்தை
யொன்றும்மர சாளுரி மைச்செய லான வுய்த்தார்.

(இ-ள்.) என்று இவர் சொல்லியவார்த்தையைக் கேட்டவுடனே அளவில்லாத பெரும் கல்வியையுடைய பெரியோர்களும், சிறந்த நீதிநூலையறிந்த பேரறிவினையும் உண்மையையுமுடைய மந்திரிமார்களும், இவ்விடத்தில் தேவரீர் அருளிச்செய்த மொழியானது மிகவும் நன்றாயிருக்கின்றதென்று இசைந்து, நல்ல தவத்தினையுடைய அம் மூர்த்திநாயனார் தமது திருவுள்ளத்திற்குப் பொருந்தியபடி அரசாட்சி செய்வதற்கு வேண்டிய செய்கைகளைச் செய்தார்கள்.-எ-று.(௪௨)

மாடெங்கு நெருங்கிய மங்கல வோசை மல்கச்
சூடுஞ்சடை மௌலி யணிந்தவர் தொல்லை யேனந்
தேடுங்கழ லார்திரு வாலவாய் சென்று தாழ்ந்து
நீடுங்களிற் றின்மிசை நீண்மறு கூடு போந்தார்.

(இ-ள்.) மங்கலவாத்தியங்களின் ஓசைகள் பக்கங்களிலெல்லாம் நெருங்கி நிறைய, சூட்டப்பட்ட சடையையே முடியாகக்கொண்ட மூர்த்திநாயனார் முன்னாளில் விஷ்ணுவாகிய பன்றியினால் தேடிக் காணப்படாத திருவடியையுடைய சொக்கலிங்கப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருவாலவாயென்னும் ஆலயத்தையடைந்து வணங்கிப் பின்பு உயர்ந்த பட்டவர்த்தனயானையின்மேலேறி நீண்ட வீதியின்வழியாகப் பவனிவந்தார்.—எ-று. (௪௩)

மின்னும்மணி மாளிகை வாயிலின் வேழ மீது
தன்னின்று மிழிந்து தயங்கொளி மண்ட பத்திற்
பொன்னின்னரி மெல்லணைச் சாமரைக் காமர் பூங்கான்
மன்னுங்குடை நீழலி ருந்தனர் வையந் தாங்கி.

(இ-ள்.) ஒளிவிளங்குகின்ற மணிகளிழைத்த அரண்மனைவாசலிற் சென்றவுடனே அந்த யானையினின்றும் கீழே இறங்கி,விளங்குகின்ற காந்தியையுடைய அரசாட்சிமண்டபத்தில் பொன்னினால் செய்யப்பட்ட மெல்லிய சிங்காசனத்தில் சாமரம்வீச, அழகிய பொலிவுள்ள காலினையுடைய வெண்கொற்றக்குடையின் நீழலில் உலகத்தைத் தாங்கி வீற்றிருந்தருளினார்.—எ-று. (௪௪)

குலவுந்துறை நீதி யமைச்சர் குறிப்பின் வைகக்
கலகஞ்செ யமண்செய லாயின கட்டு நீங்கி
நிலவுந்திரு நீற்று நெறித்துறை நீடு வாழ
உலகெங்கு நிரம்பிய சைவ முயர்ந்து மன்ன.

(இ-ள்.) நல்ல தருமநெறியில் ஒழுகுகின்ற நீதியையுடைய மந்திரிமார்கள் தம்முடைய குறிப்பின்வழியே நடக்கவும், கலகஞ்செய்துகொண்டிருந்த சமணர்களுடைய மதக்கொள்கைகளாகிய கட்டுப்பாடுகள் ஒழிந்து விளங்குகின்ற திருவெண்ணீற்றைத் தரிக்கும் நல்லொழுக்கமானது நீடித்து வாழவும்,உலகமுழுமையும் நிரம்பிய சைவசமயமானது நிலைபெற்றோங்கவும்.—எ-று. (௬௫)

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம்.

நுதலின்கண் விழித்தவர் வாய்மை நுணங்கு நூலின்
பதமெங்கு நிறைந்து விளங்கப் பவங்கண் மாற்ற
உதவுந்திரு நீறுயர் கண்டிகை கொண்ட வேணி
முதன்மும்மையி னாலுல காண்டனர் மூர்த்தி யார்தாம்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானால்அருளிச்செய்யப்பட்ட உண்மைபொருந்திய வேதாகமங்களிற்சொல்லிய வைதிகமார்க்கமானது எவ்விடத்திலும் பரவிவிளங்கவும், பிறவித்துன்பத்தை நீக்குதற் கேதுவாக வுதவுகின்ற திருநீறும்,உயர்ந்த ருத்திராக்ஷமும்,தரித்துக்கொண்ட சடைமுடியுமாகிய முதன்மைபொருந்திய இம்மூன்று அடையாளங்களோடும் மூர்த்திநாயனார் உலகத்தை அரசாண்டருளினார்.—எ-று.

'பவங்கண்மாற்றி' எனவும்பாடம். (௬௬)

ஏலங்கமழ் கோதையர் தந்திற மென்று நீங்குஞ்
சீலங்கொடு வெம்புலன் றெவ்வுடன் வென்று நீக்கி
ஞாலந்தனி னேமி நடாத்தி நலங்கொ ளூழிக்
காலம்முயிர் கட்கிட ரான கடிந்து காத்து.

(இ-ள்.) மயிர்ச்சாந்து மணக்கின்ற கூந்தலையுடைய ஸ்திரிகளாலுண்டாகும் ஆசையை எப்போதும் ஒழிந்திருப்பதற் கேதுவாகிய துறவை ஒழுக்கமாகக்கொண்டு, பகைவர்களோடு கொடிய ஐம்புலன்களையும் செயித்துத்தள்ளி, உலகத்தில் ஒப்பற்ற தனது ஆஞ்ஞாசக்கரத்தை நடத்தி நன்மைபெறும்படி வெகுகாலம் ஆன்மகோடிகளுக் குண்டாகின்ற துன்பங்களையொழித்துப் பாதுகாத்து.-எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (௬௭)

பாதம்பர மன்னவர் சூழ்ந்து பணிந்து போற்ற
ஏதம்பிணி யாவகை யிவ்வுல காண்டு தொண்டின்
பேதம்புரி யாவருட் பேரர சாளப் பெற்று
நாதன்கழற் சேவடி நண்ணின ரண்ண லாரே.

(இ-ள்.) அன்னியதேசத்து அரசர்கள் கப்பங்கொண்டு சூழ்ந்து தமது திருவடிகளில் வணங்கித் துதிக்க, உயிர்களுக்கு ஓர் துன்பமும் நேரிடாமல் இந்த உலகத்தை ஆண்டு, (அதனோடு) சிவபெருமானுக்குச் செய்யும் பணிவிடைகளில் யாதொரு வித்தியாசமும் வரவொட்டாத பெருமைபொருந்திய அருளரசாளவும் பெற்று மூர்த்திநாயனார் அவ்வெம்பெருமானுடைய வீரக்கழலையணிந்த சிவந்த திருவடியை அடைந்தார்.—எ.று. (௪௮)

அகல்பாறையின் வைத்து முழங்கையை யன்று தேய்த்த
இகலார்களிற் றன்பரை யேத்தி முருக னாரா
முகில்சூழ்நறுஞ் சோலையின் மொய்யொளி மாட வீதிப்
புகலூர்வரு மந்தணர் தந்திறம் போற்ற லுற்றும்.

(இ-ள்.) சந்தனக்கட்டை கிடைக்காதகாலத்தில் அகன்ற சந்தனக்கல்லில் முழங்கையை வைத்துத் தேய்த்த பகைகொண்ட யானையையொத்த மூர்த்திநாயனாரை ஸ்தோத்திரஞ்செய்து, மேகங்களால் சூழப்பட்ட நல்ல மணம்பொருந்திய சோலைகளையும், மிகுந்த ஒளிவீசுகின்ற மாடவீதிகளையுமுடைய திருப்புகலூரில் அவதாரஞ்செய்த முருகநாயனாரென்று சொல்லப்பட்ட வேதியர் செய்த அடிமைத்திறத்தைச் சொல்லத்தொடங்குவோம்.—எ-று. (௪௯)

**மூர்த்திநாயனார்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் ௧௦௨௧.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முருகநாயனார்புராணம்.

தாது சூழுங் குழன்மலையா டளிர்க்கை சூழுந் திருமேனி
மீது சூழும் புனற்கற்றை வேணி நம்பர் விரும்புபதி
சோதி சூழு மணிமௌலிச் சோழர் பொன்னித் திருநாட்டுப்
போது சூழுந் தடஞ்சோலைப் பொய்கை சூழும் பூம்புகலூர்.

(இ-ள்.) பூந்தாதுகள் பொருந்திய கூந்தலையுடைய உமாதேவியாரது தளிர்போன்ற கைகளினால் தழுவிக்கொள்ளப்பட்ட திருமேனியையும், திருமுடியின்மேல் பெருக்கெடுக்கும் கங்கைநதி தங்கிய சடைமுடியையுமுடைய சிவபெருமான் விருப்பங்கொண்டு வீற்றிருந்தருளும் ஸ்தலமாவது, பிரகாசம் பொருந்திய மாணிக்கங்களிழைத்த கிரீடத்தையணிந்த சோழராஜாக்கள் அரசாட்சிசெய்கின்ற சிறந்த காவிரிநாட்டில் மலர்கள் நிறைந்த பெரிய சோலைகளும், தடாகங்களும் நாற்புறத்திலும் சூழ்ந்திருக்கும் திருப்புகலூராகும்.—எ-று. (க)

நாம மூதூர் மற்றதனு ணல்லோர் மனம்போ லவரணிந்த
சேம நிலவு திருநீற்றின் சிறந்த வெண்மைத் திருந்தொளியால்
யாம விருளும் வெளியாக்கு மிரவே யல்ல விரைமலர்மேற்
காமர் மதுவுண் சிறைவண்டுங் களங்க மின்றி விளங்குமால்.

(இ-ள்.) புகழ்பெற்றிருக்கின்ற பழமையாகிய அத்திருப்புகலூரில் நன்மை பொருந்திய சிவனடியார்களின் திருவுள்ளத்தைப்போல் அவ்வடியார்களணிந்த மோட்ச வின்பத்தைக்கொடுக்கும் விபூதியினது சிறப்பாகிய வெண்மைபொருந்திய பிரகாசத்தினால் இராக்காலத்து இருளும் வெளிச்சமாகச் செய்யப்படும்; அவ்வாறான இரவேயல்லாமல், வாசனைபொருந்திய மலர்களிலுள்ள மதுரமாகியதேனையுண்ணும் சிறகினையுடைய வண்டுகளும் (விடியற்காலத்தில் அவ்வடியார்கள் மலர்கொய்ய வருகின்ற நந்தனவனங்களில்) கருமைநிறம்நீங்கி வெண்ணிறத்தையுடையனவாய்ப்பிரகாசிக்கும்—எ-று.

'நல்லோர்மனம்போலரணிந்தார்' என்றும் பாடம். (உ)

நண்ணு மிசைதேர் மதுகரங்க ணனைமென் சினையின் மருங்கலைய
வண்ண மதுரத் தேன்பொழிவ வாச மலர்வா யேயல்ல
தண்ணென் சோலை யெம்மருங்குஞ் சாரு மடமென் சாரிகையின்
பண்ணின் கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழியுமால்.

(இ-ள்.) சோலைகளிலுள்ள இசை பாடுகின்ற வண்டுகள் அரும்புகளையுடைய கிளைகளின் புறத்தில்அலைதலாலே வாசனைபொருந்தியமலர்களின் வாய்மாத்திரம் அழகிய மதுரமாகிய தேனைப் பொழிவனவல்ல; குளிர்ச்சிபொருந்திய சோலைகளின் எந்தப்புறத்திலும் வாசஞ்செய்யும் இளமைபொருந்திய மெல்லிய நாகணவாய்ப்புள்ளின் பண்ணமைந்த சொல்லையுடைய அழகிய வாயும் தேவாரப் பதிகங்களாகிய செழுமைதங்கிய தேனைப் பொழியும்.—எ-று. (ட)

வண்டு பாடப் புனற்றடத்து மலர்ந்து கண்ணீ ரரும்புவன
கொண்ட வாச முகையவிழ்ந்த குளிர்பங் கயங்க ளேயல்ல
அண்டர் பெருமான் றிருப்பாட்டி னமுதம் பெருகச் செவிமடுக்குந்
தொண்டர் வதன பங்கயமுந் துளித்த கண்ணீ ரரும்புமால்.

(இ-ள்.) வண்டுகள் பாடும்படி நீரையுடைய தடாகத்தில் விகசித்துக் கண்ணீரைத் துளிப்பன, வாசனைபொருந்திய முறுக்குவிட்டு விரிந்த குளிர்ச்சியாகிய தாமரைமலர்கள்மாத்திரமேயல்ல; தேவர்கள் நாயகராகிய சிவபெருமானைத் துதிக்கின்ற தேவாரப்பதிகத்திலுள்ள இசையமுதமானது பெருக, அதனைக் காதுகளாகியவாயினால் பானம்பண்ணுகின்ற அடியார்களின் முகமாகிய தாமரைமலர்களும் துளிக்கின்ற ஆனந்தக்கண்ணீரைச் சொரியும்.—எ-று.

பங்கயங்கள் கண்ணீரரும்புவன, என்றது தாமரைகள் தேனாகிய நீரைச் சிந்துவன, என்பதாம். (ச)

ஆன பெருமை வளஞ்சிறந்த வந்தண் புகலூ ரதுதன்னின்
மான மறையோர் குலமரபின் வந்தார் முந்தை மறைமுதல்வர்
ஞான வரம்பின் றலைநின்றார் நாகம் புனைவார் சேவடிக்கீழ்
ஊன மின்றி நிறையன்பா லுருகு மனத்தார் முருகனார்.

(இ-ள்.) இப்படிப்பட்ட பெருமையோடு வளப்பம்பொருந்திய அழகிய திருப்புகலூரில் வாழும் மேன்மைபொருந்திய பிராமணர்குலத்தில் அவதரித்தவர்; முதன்மையாகிய வேதங்களையுணர்ந்தவர்; ஞானமார்க்கத்தில் தலைமையாக நின்றவர்; சர்ப்பாபரணத்தை யணிந்த சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளில் குற்றமில்லாமல் நிறைந்த அன்பினால் உருகுகின்ற மனநினைவுடையவர் (அவர் யாரென்றால்) முருகநாயனார்.—எ-று. (ரு)

அடைமே லலவன் றுயிலுணர வலர்செங் கமல வயற் கயல்கண்
மடைமே லுகளுந் திருப்புகலூர் மன்னி வாழுந் தன்மையராய்
விடைமேல் வருவார்க் காளாய மெய்ம்மைத் தவத்தா லவர்கற்றைச்
சடைமே லணியத் திருப்பள்ளித் தாமம் பறித்துச் சாத்துவார்.

(இ-ள்.) நண்டுகள் தாமரையிலைகளில் நித்திரைசெய்ய, அலர்ந்த செந்தாமரைமலர்களையுடைய வயல்களிலுள்ள கெண்டைமீன்கள் நீர்மடைகளின்மேல் பாய்கின்ற திருப்புகலூரில் நிலைபெற்றுவாழுந் தன்மையையுடையவராய், ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளிவருகின்ற சிவபெருமானுக்கு அடிமைத்திறம் பூண்ட மெய்ம்மையாகிய தபோபலத்தினால் அப்பெருமானது கூட்டமாகிய சடை

யின்மேல் தரிக்கும்படி திருப்பள்ளித்தாமத்துக்குரிய மலர்களைப்பறித்துச் சாத்து கின்றவர்.—எ-று. (சு)

புலரும் பொழுதின் முன்னெழுந்து புனித நீரின் மூழ்கிப்போய்
மலருஞ் செவ்வித் தம்பெருமான் முடிமேல் வானீ ராறுமதி
உலவு மருங்கு முருகுயிர்க்க நகைக்கும் பதத்தி னுடன்பறித்த
அலகின் மலர்கள் வெவ்வேறு திருப்பூங் கூடை களிலமைப்பார்.

(இ-ள்.) சூரியன் உதயமாவதற்குமுன்னே விடியற்காலத்தில் நித்திரை விட்டெழுந்து, பரிசுத்தம்பொருந்திய நீரில் ஸ்நாநஞ்செய்து திருநந்தனவனத்திற்குச்சென்று, விடிந்தவுடனே தமது நாயகராகிய சிவபெருமானது திருமுடியின் மேல் கங்காநதியும், சந்திரனும் சஞ்சரிக்கின்ற இடத்தில் வாசனைவீசும்படியாக, மலரும்பக்குவத்தில் பறித்த எண்ணிறந்த மலர்களை வெவ்வேறு இனமாகப் புஷ்பக்குடலைகளில் வைப்பார்.—எ-று. (எ)

கோட்டு மலரு நிலமலருங் குளிர்நீர் மலருங் கொழுங்கொடியின்
றோட்டு மலரு மாமலருஞ் சுருதி மலருந் திருவாயிற்
காட்டு முறுவ னிலவலராக் கனக வரையிற் பன்னகநாண்
பூட்டு மொருவர் திருமுடிமேற் புனைய லாகு மலர்தெரிந்து.

(இ-ள்.) கோட்டுப்பூவும், நிலப்பூவும், குளிர்ச்சியாகிய நீர்ப்பூவும், செழுமைபொருந்திய கொடியில் பூத்த இதழ்களையுடைய பூவும் ஆகிய நால்வகைமலர்களும், வேதங்களை அருளிச்செய்த திருவாயினிடத்தில் காட்டப்பட்ட புன்முறுவலானது நிலவை வீச மேருமலையாகிய வில்லில் ஆதிசேஷனாகிய நாணியைப் பூட்டிய ஒப்பற்ற சிவபெருமானது திருமுடியின்மேல் (காலைமுதலிய காலங்களுக்கேற்கத்) தரிக்கத்தக்க மலர்களென்று தெரிந்து பறித்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (அ)

கொண்டு வந்து தனியிடத்தி னிருந்து கோக்குங் கோவைகளும்
இண்டைச் சுருக்குந் தாமமுட னிசைக்கும் வாச மாலைகளுந்
தண்டிற் கட்டுங் கண்ணிகளுந் தாளிற் பிணைக்கும் பிணையல்களு
நுண்டா திறைக்குந் தொடையல்களுஞ் சமைத்து நுடங்குநூன்மார்பர்.

(இ-ள்.) நால்வகை மலர்களையும் பறித்து எடுத்துக்கொண்டுவந்து, தனியான இடத்திலிருந்து கோக்கப்பட்ட கோவைமாலைகளும், இண்டைமாலைகளும், சுருக்கிக்கட்டப்பட்ட பத்திமாலைகளும், ஒன்றோடொன்றாகச் சேர்த்துக்கட்டப்பட்ட வாசனைபொருந்திய ஆரம் முதலிய மாலைகளும், தண்டுபோலப் பெரிதாகக் கட்டப்பட்ட கொண்டைமாலைகளும், மலர்களின் காம்போடு காம்பைச்சேர்த்துப் பிணைக்கின்ற சரமாலைகளும், நுட்பமாகிய மகரந்தப்பொடிகளை இறைக்கும் தொங்கல் மாலைகளும் கட்டி, அசைகின்ற பூணூலை யணிந்த மார்பினையுடைய முருக நாயனார்.—எ-று. (கூ)

ஆங்கப் பணிக ளானவற்றுக் கமைத்த காலங் களினமைத்துத்
தாங்கிக் கொடுசென் றன்பினொடுஞ் சாத்தி வாய்ந்த வர்ச்சனைகள்

பாங்கிற் புரிந்து பரிந்துள்ளார் பரமர் பதிகப் பற்றான
லோங்கிச் சிறந்த வஞ்செழுத்து மோவா நாவி னுணர்வினர்.

(இ-ள்.) மாலைகளைச்சாத்துவதற்கு நியமிக்கப்பட்ட காலை முதலிய நான்கு காலங்களிலும் கட்டி எடுத்துக்கொண்டு ஆலயத்துக்குப் போய் அன்போடு சாத்திச் செய்யவேண்டிய அர்ச்சனைகளைத் தகுதியாகச் செய்து, உருகிய மனதை யுடையவராய், சிவபெருமானுடைய திருப்பதிகச் சார்பாகிய உயர்வாகிச் சிறந்த திருவைந்தெழுத்தையும் இடைவிடாமல்நாவினால் உச்சரிக்கின்ற உணர்வினை யுடையவராயிருந்தார்.—எ-று. (௧௦)

தள்ளு முறைமை யொழிந்திடவித் தகுதி யொழுகு மறையவர்தாந்
தெள்ளு மறைகண் முதலான ஞானஞ் செம்பொன் வள்ளத்தில்
அள்ளி யகில மீன்றளித்த வம்மை முலைப்பா லுடனுண்ட
பிள்ளை யார்க்கு நண்பருமாம் பெருமை யுடையா ராயினர்.

(இ-ள்.) வேதாகமங்களில் விலக்கி யிருக்கின்றவற்றை யாவரும் நீங்க, (அவர்களுக் குணர்த்தும்பொருட்டு) இப்படிப்பட்ட தகுதியில் நடக்கின்ற முருக நாயனார் தெளிந்த வேதாகம முதலிய ஞானங்களைச் சிவந்த பொன்னாற் செய்யப்பட்ட கிண்ணத்திலிருந்து எடுத்து சர்வலோகங்களையும் பெற்றெடுத்த உமாதேவியாரது திருமுலைப்பாலோடு உண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குச் சிநேகிதராகவும் இருக்கின்ற பெருமையையுடையவராயினர்.—எ-று. (௧௧)

அன்ன வடிவு மேனமுமா யறிவா ரிருவ ரறியாமே
மன்னும் புகலூ ருறைவாரை வர்த்த மான வீச்சரத்து
நன்னர் மகிழ்ச்சி மனங்கொள்ள நாளும் பூசை வழுவாமே
பன்னும் பெருமை யஞ்செழுத்தும் பயின்றே பணிந்து பரவினர்.

(இ-ள்.) அன்னமும் பன்றியுமாக உருவங்கொண்டு முடியையும் அடியையும் அறியத்தொடங்கிய பிரமன் விஷ்ணு என்னும் இருவராலும் அறியப்படாமல் நிலைபெற்ற திருப்புகலூரில் வாசஞ்செய்கின்ற சிவபெருமானை அவர் வீற்றிருந்தருளும் வர்த்தமானவீச்சரமென்னும் ஆலயத்தில் தம் மனதில் அதிக சந்தோஷமுண்டாக நாள்தோறும் தவறாமல் பூசை செய்து, செபித்தற்குரிய பெருமை பொருந்திய திருவைந்தெழுத்தையும் செபித்து வணங்கித் துதிசெய்துவந்தார்.—எ-று. ()

அங்க ணமருந் திருமுருக ரழகார் புகலிப் பிள்ளையார்
பொங்கு மணத்தின் முன்செய்த பூசை யதனாற் புக்கருளிச்
செங்க ணடலே றுடையவர்தாஞ் சிறந்த வருளின் பொருளளிக்கத்
தங்கள் பெருமா னடிநீழற் றலையா கில்லை சார்வுற்றார்.

(இ-ள்.) அவ்விடத்தில் இவ்விதமாகத் திருத்தொண்டு செய்துகொண்டிருந்த முருகநாயனார் அழகுபொருந்திய சீகாழியில் திருவவதாரஞ்செய்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிறந்த திருமணத்தில் தாம் முன்புசெய்த சிவபூசையின் பலத்தினால் அவ்விடத்திற்குச்சென்று சிவந்த கண்களையுடைய வலிய ரிஷபத்தை வாகனமாகக்கொண்டருளிய சிவபெருமான் சிறப்பாகிய திருவருட்செல்வத்

தைக்கொடுத்தருள (அதனால்) தங்கள் பெருமானாகிய அக்கடவுளின் திருவடி நீழலில்வாசஞ்செய்யும் தலைமையாகிய மோக்ஷநிலைமையைஅடைந்தார்.—எ-று.(௧௩)

அரவ மணிந்த வரையாரை யர்ச்சித் தவர்தங் கழனிழற்கீழ்
விரவு புகலூர் முருகனார் மெய்ம்மைத் தொண்டின் றிறம்போற்றி
கரவி லவர்பால் வருவாரைக் கருத்தி லுருத்தி ரங்கொண்டு
பரவு மன்பர் பசுபதியார் பணிந்த பெருமை பகர்வுற்றேன்.

(இ-ள்.) சர்ப்பத்தையணிந்த இடையினையுடைய சிவபெருமானை அர்ச்சனைசெய்து அப்பெருமானுடைய திருவடிநிழலின்கீழ் அடைந்தருளிய திருப்புகலூரில் அவதரித்த முருகநாயனார் செய்த மெய்மையாகிய திருத்தொண்டின்பெருமையைத் துதித்து, வஞ்சகமற்ற நெஞ்சினையுடைய அடியார்களிடத்தில் எழுந்தருளித் திருவருள் செய்கின்ற சிவபெருமானைத் தம்மனதில் திருவுருத்திரமந்திரத்தைக்கொண்டு (இரவும்பகலும்) துதிக்கின்ற உருத்திரபசுபதிநாயனார் வழிபட்ட பெருமையைக்குறித்துச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

உருத்திரமாவது - எசுர்வேதத்தின் நாலாங்காண்டத்தில் சிவபெருமானை ஸ்தோத்திரஞ்செய்யும் பாகம். (௧௪)

முருகநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

திருவிருத்தம்-௧௦௩௫.

# உருத்திரபசுபதிநாயனார் புராணம்.

நிலத்தி னோங்கிய நிவந்தெழும் பெரும்புன னீத்த
மலர்த்த டம்பணை வயல்புகு பொன்னிநன் னாட்டுக்
குலத்தி னோங்கிய குறைவிலா நிறைகுடி குழுமித்
தலத்தின் மேம்படு நலத்தது பெருந்திருத் தலையூர்.

(இ-ள்.) உலகத்தில் உயர்வுபெற்று அதிகமாகப் பெருகிவருகின்ற சிறந்த காவிரிநதியின் பிரவாகமானது தாமரைமலர்களையுடைய விசாலமாகிய வயல்களில் செல்லுகின்ற சோழவளநாட்டில், குலத்திற்சிறந்து யாதொரு குறைவுமில்லாமல் நிறைந்த குடிகள் நெருங்கி அந்நாட்டிலுள்ள எல்லா ஊர்களிலும் மேம்பட்ட நலத்தையுடையது; (அது யாதெனின்) பெருமைபொருந்திய திருத்தலையூர் என்னு நகரமாம்.—எ-று. (க)

வான ளிப்பன மறையவர் வேள்வியின் வளர்தீ
தேன ளிப்பன நறுமலர்ச் செறிசெழுஞ் சோலை
ஆன ளிப்பன வஞ்சுகந் தாடுவார்க் கவ்வூர்
தான ளிப்பன தருமமு நீதியுஞ் சால்பும்.

(இ-ள்.) பிராமணர்கள் செய்யும் யாகத்தில் ஆகுதியால் வளர்ந்தெரிகின்ற அக்கினியானவை மழை பெய்யச்செய்கின்றன; நன்மணம்பொருந்திய மலர்கள் நிறைந்த செழிப்பாகிய சோலைகள் தேனைப் பொழிகின்றன; பசுக்கள் பஞ்சகௌவியத்தை விரும்பி அபிஷேகங்கொண்டருளுகின்ற சிவபெருமானுக்கு அக்கௌவியங்களைக்கொடுக்கின்றன; அவ்வூரிலுள்ளவர்கள் தருமத்தையும் நீதியையும் பெருமையையும் கொடுக்கின்றார்கள்.—எ-று. (உ)

அங்கண் மாநக ரதனிடை யருமறை வாய்மைத்
துங்க வேதியர் குலத்தினிற் றோன்றிய தூயோர்
செங்கண் மால்விடை யார்செழும் பொன்மலை வல்லி
பங்கி னாரடி மைத்திறம் புரிபசு பதியார்.

(இ-ள்.) அழகிய இடமகன்ற பெருமைபொருந்திய அந்நகரத்தில் அருமையாகிய வேதத்திற்சொல்லுகின்ற மெய்ம்மையமைந்த ஒழுக்கத்திற் சிறந்த பிராமணர்குலத்தில் அவதரித்த பரிசுத்தராயுள்ளவர்; (அவர்யாரெனின்) சிவந்த கண்களையுடைய விஷ்ணுவாகிய ரிஷபத்தை வாகனமாகவுடையவரும், செழித்த பர்வத

ராஜபுத்திரியாகிய உமாதேவியாரை இடப்பாகத்தி லுடையவருமாகிய சிவபெருமானுக்கு அடிமைத்திறம் பூண்டொழுகுகின்ற பசுபதிநாயனாரென்னுந் திருப்பெயருடையவர்.—எ-று. (௩)

ஆய வந்தண ரருமறை யுருத்திரங் கொண்டு
மாய னாறி யாமலர்ச் சேவடி வழுத்துந்
தூய வன்பொடு தொடர்பினி லிடையறாச் சுருதி
நேய நெஞ்சின ராகிய தொழிற்றலை நின்றார்.

(இ-ள்.) அப்படிப்பட்ட சிறப்பினையுடைய பசுபதிநாயனார் அருமையாகிய எசுர் வேதத்திற் சொல்லும் திருவுருத்திர மந்திரத்தைக்கொண்டு, விஷ்ணுவினால் தேடியறியப்படாத தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதிக்கின்ற பரிசுத்தமாகிய அன்புடனே தொடர்ச்சியாக இடைவிடாமல் சுருதியை விரும்பிய மனமுடையவராயிருக்கும் ஓதற்றொழிலில் சிறந்தவராயினார்.—எ-று. (௪)

கரையில் கம்பலை புள்ளொலி கறங்கிட மருங்கு
பிரச மென்சுரும் பறைந்திடக் கருவரால் பிறழு
நிரைநெ டுங்கய னீரிடை நெருப்பெழுந் தனைய
விரைநெ கிழ்ந்தசெங் கமலமென் பொய்கையுண் மேவி.

(இ-ள்.) கரைகளில் முழக்கத்தைப் பறவைகள் உண்டாக்கிச் சுழல, பக்கத்தில் தேனையுண்ணும்படி வந்த ஆண் வண்டுகள் சப்திக்க, பெரிய வரால்மீன்கள் துள்ளுகின்ற அலைகளையுடைய நீண்ட தடாகத்திலுள்ள நீரில் நெருப்பின் சுவாலை யெழுந்ததுபோன்ற மணம்விரிந்த மெல்லிய செந்தாமரைமலர்களையுடைய தடாகத்துக்குப்போய்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫)

தெள்ளு தண்புனல் கழுத்தள வாயிடைச் செறிய
உள்ளு றப்புக்கு நின்றுகை யுச்சிமேற் குவித்துத்
தள்ளு வெண்டிரைக் கங்கைநீர் ததும்பிய சடையார்
கொள்ளு மன்பினி லுருத்திரங் குறிப்பொடு பயின்றார்.

(இ-ள்.) அத் தடாகத்திலுள்ள தெளிவாகிய குளிர்ந்த நீரானது தமது கழுத்தளவாகப் பொருந்தும்படி அந்நீரினுள்ளே புகுந்து நின்று, இரண்டு கைகளையும் சிரசின்மேல் குவித்து வைத்துக்கொண்டு, வெண்மையாகிய அலைவீசுகின்ற கங்கைநதியானது நிறைந்து ததும்புகின்ற சடைமுடியினையுடைய சிவபெருமான் விரும்பிக் கொள்ளத்தக்க அன்பினால் திருவுருத்திர மந்திரத்தை உள்ளக்கருத்தோடு செபித்தார்.—எ-று. (௬)

அருமறைப்பய னாகிய வுருத்திர மதனை
வருமு றைப்பெரும் பகலும்மெல் லியும்வழு வாமே
திரும லர்ப்பொகுட் டிருந்தவ னனையவர் சிலநாள்
ஒருமை யுய்த்திட வுமையிட மகிழ்ந்தவ ருவந்தார்.

(இ-ள்.) அருமையாகிய வேதத்தின் சாரமாயிருக்கின்ற திருவுருத்திரமந்திரத்தைக் கிரமமாக ஓதிவருகின்ற முறைமையில் பெரிய பகற்காலத்திலும் இரா

க்காலத்திலும் தவறாமல் சிறந்த தாமரைமலரின் * கர்ணிகையில் வீற்றிருக்கின்ற நான்முகனையொத்த உருத்திரபசுபதிநாயனார் சிலநாள் வரையிலும் ஒருமைப்பட்ட மனதோடு தோத்திரஞ்செய்துவர, உமாதேவியாரை இடப்பாகத்தில் கொண்டருளிய சிவபெருமான் அவர்பணிக்குத் திருவுள்ளமகிழ்ந்தார்.—எ-று. (எ)

காத லன்பர்த மருந்தவப் பெருமையுங் கலந்த
வேத மந்திர நியதியின் மிகுதியும் விரும்பி
ஆதி நாயக ரமர்ந்தருள் செய்யமற் றவர்தாந்
தீதி லாநிலைச் சிவபுரி யெல்லையிற் சென்றார்.

(இ-ள்.) அன்பினையுடைய உருத்திரபசுபதிநாயனாரது அருமையாகிய தவத்தின் பெருமையையும், அதனோடு சேர்ந்த வேதமந்திரநியமத்தின் மிகுதியையும் விரும்பி, முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் திருவுள்ளங்கொண்டு அருள்செய்ய, அந்நாயனார் குற்றமில்லாத நிலைமையையுடைய சிவலோகத்தின் எல்லையைத் தமக்கு இடமாகச்சென்றருளினார்.—எ-று. (அ)

நீடு மன்பினி லுருத்திர மோதிய நிலையால்
ஆடு சேவடி யருகுற வணைந்தன ரவர்க்குப்
பாடு பெற்றசீ ருருத்திர பசுபதி யாராங்
கூடு நாமமு நிகழ்ந்தது குவலயம் போற்ற.

(இ-ள்.) சிறந்த பேரன்போடு திருவுருத்திரமந்திரத்தைச் செபித்த நியமத்தால் பொன்னம்பலத்தில் ஆநந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற சிவபெருமானது திருவடியின் அருகில் அடைந்தார்; (அதனால்) அவருக்குப் பெருமைபொருந்திய சிறப்பினை யுடைய உருத்திரபசுபதிநாயனார் என்னும் சம்பந்தத்தையுடைய திருநாமமும் உலகத்தார் துதிக்கும்படியாக உண்டாயிற்று.—எ-று. (௯)

அயில்கொண் முக்குடு மிப்படை யார்மருங் கருளாற்
பயிலு ருத்திர பசுபதி யார்திறம் பரசி
எயிலு டைத்தில்லை யெல்லையி னாளைப்போ வாராஞ்
செயலு டைப்புறத் திருத்தொண்டர் திறத்தினை மொழிவாம்.

(இ-ள்.) கூர்மைபொருந்திய மூன்றுகவராயிருக்கின்ற சூலத்தை ஆயுதமாகக்கொண்ட சிவபெருமானுக்கு அருகில் அவரது திருவருளினால் அன்புசெய்கின்ற உருத்திரபசுபதிநாயனாருடைய அடிமைத்திறத்தைத் துதிசெய்து, மதில்கள் சூழ்ந்ததில்லைமாநகரத்தின் எல்லையில் நாளைப்போவார் என்னும் திருப்பெயரையுடைய புறத்திலிருந்து வணங்குகின்ற அடியவரது அன்பின்திறத்தைச் சொல்லுகின்றோம்.—எ-று. (௧௦)

உருத்திரபசுபதிநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத் திருவிருத்தம்-௧௦௪௫.

---

* கர்ணிகை=தாமரைப்பூங்கொட்டை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுநாயனார்புராணம்.

பகர்ந்துலகு சீர்போற்றும் பழையவளம் பதியாகுந்
திகழ்ந்தபுனற் கொள்ளிடம்பொன் செழுமணிக டிரைக்கரத்தான்
முகந்துதர விருமருங்கு முளரிமலர்க் கையேற்கும்
அகன்பணைநீர் நன்னாட்டு மேற்காநாட் டாதனூர்.

(இ-ள்.) உலகத்தார் சொல்லிப் புகழத்தக்க சிறப்பினையுடைய பழமையாகிய வளப்பம்பொருந்திய நகரமாயிருக்கின்றது; விளங்குகின்ற நீரையுடைய கொள்ளிடநதியானது பொன்னையும், செழுமையாகிய மணிகளையும் அலைகளாகிய கைகளினால் வாரிக்கொடுக்க, அதன் இரண்டு பக்கத்திலுமுள்ள தாமரைகள் தமது மலராகிய கைகளினால் ஏற்றுக்கொள்ளுகின்ற விசாலமாகிய வயல்களையுடைய நல்ல சோழநாட்டில் மேற்காநாட்டைச்சார்ந்த ஆதனூரானது.—எ-று.

நீற்றலர்பே ரொளிநெருங்கு மப்பதியி னிறைகரும்பின்
சாற்றலைவன் குலைவயலிற் றகட்டுவரா லெழப்பகட்டேர்
ஆற்றலவன் கொழுக்கிழித்த சால்வழிபோ யசைந்தேறிச்
சேற்றலவன் கருவுயிர்க்க முருகுயிர்க்குஞ் செழுங்கமலம்.

(இ-ள்.) விபூதியைத் தரித்தலால் விரிந்த பெரிய ஒளியானது பரவியிருக்கின்ற அந்த ஊரில், நிறைந்த கரும்பின்சாற்றினால் அலைகின்ற வலிய நெற்குலைகளையுடைய வயலில் அச்சவடிவாகிய வரால்மீன்கள் எழும்பும்படி, எருமைக்கடாக்கள்பூட்டிய ஏர் செல்லும்வழியில் கலப்பையின் நுனியிலிருக்கும் வலிய கொழுவினால் பிளக்கப்பட்ட படைச்சாலின்வழியே போய் அசைந்துகொண்டு ஏறி, சேற்றில் நண்டுகள் கருவை ஈனச் செழுமைபொருந்திய தாமரைமலர்கள் மலர்ந்து தேனைச் சொரியும்.—எ-று. (உ)

நனைமருவுஞ் சினைபொதுளி நறுவிரைசூழ் செறிதளிரிற்
றினகரன்மண் டிலம்வருடுஞ் செழுந்தருவின் குலம்பெருகிக்
கனமருவி யசைந்தலையக் களிவண்டு புடைசூழப்
புனன்மழையோ மதுமழையோ பொழிவொழியா பூஞ்சோலை.

(இ-ள்.) அரும்புகளையுடைய கிளைகள் நெருங்கி நல்ல வாசனைபொருந்திய நிறைந்த தளிர்களினால் சூரியனுடைய வட்டவடிவைத் தடவுகின்ற செழுமையாகிய விருட்சக்கூட்டங்கள் நிறைந்து, மேகக்கூட்டங்கள் அதில் சேர்ந்து அசைந்து சஞ்சரித்தலாலும், களிப்பினையுடைய வண்டுகள் புறத்தில் சூழ்ந்து

மொய்த்தலாலும் பூஞ்சோலைகள் பொழிதல் ஒழியவில்லை; அவ்வாறு பொழிவது நீர்மழையோ? அல்லது தேன்மழையோ? அறியோம்.—எ-று.

புனன்மழையோ மதுமழையோ என்றது, அச்சொரிதலைத் தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு அவ்விரண்டும் வேற்றுமைதெரியவில்லை யெனக் கூறியபடியாம்; புன்மழை மதுமழை ஆகிய இரண்டினையும் பொழிந்தன வென்பது கருத்து. (௩)

பாளைவிரி மணங்கமழும் பைங்காய்வன் குலைத்தெங்கின்
றாளதிர மிசைமுட்டித் தடங்கிடங்கி னெழப்பாய்ந்த
வாளைபுதை யச்சொரிந்த பழமிதப்ப வண்பலவி
னீளமுதிர் கனிகிழிதே னீத்தத்தி லெழுந்துகளும்.

(இ-ள்.) பாளைகள் விரிந்து மணம்வீசுகின்ற பசிய காய்கள் நிறைந்த குலைகளையுடைய தென்னமரங்களின் அடிப்புறமானது அதிரும்படியாக அதினிடத்து முட்டி, விசாலமாகிய குளங்களிலிருந்து எழும்பிப் பாய்ந்த வாளைமீனானது புதைந்துபோகும்படி அத்தென்னமரங்கள் சொரிந்த நெற்றுக்கள் மிதக்க, (பின்பு) செழித்த பலாமரத்தினது நீண்டு முதிர்ந்த பழங்கள் வெடித்து ஒழுகுகின்ற தேன்வெள்ளத்தினால் மேலே எழும்பிக் குதித்துவிளையாடும்.—எ-று. (௪)

வயல்வளமுஞ் செயல்படுபைந் துடவையிடை வருவளமும்
வியலிடமெங் கனுநிறைய மிக்கபெருந் திருவினவாம்
புயலடையு மாடங்கள் பொலிவெய்த மலிவுடைத்தா
யயலிடைவே றடிநெருங்கக் குடிநெருங்கி யுளதவ்வூர்.

(இ-ள்.) வயல்களில் உண்டாகின்ற வளங்களும், வைத்து வளர்க்கப்பட்ட பசுமைபொருந்திய சோலைகளில் உண்டாகின்ற வளங்களும் விசாலமாகிய அந்நாடெங்கும் நிறைய அதனால் மேம்பட்ட பெருஞ் செல்வத்தை யுடைத்தாயிருக்கின்ற மேகங்கள் தவழும் மாளிகைகள் சிறப்படையும்படி மிகுந்த தோற்றமுடையதாய்ப் பக்கங்களில் அடிக்கொருகுடியாக நெருங்கியுள்ளது அந்த ஊர்.—எ-று.

அடிநெருங்கக் குடி நெருங்குதலாவது, நடுவில் நடுவில் இடம் விடாமல் வீடுகள் நெருங்கக் கட்டியிருப்பது. இதனால், குடிகளின் மிகுதிதோன்றுமாறு காண்க. (௫)

மற்றவ்வூர்ப் புறம்பணையின் வயன்மருங்கு பெருங்குலையிற்
சுற்றம்விரும் பியகிழமைத் தொழிலுழவர் கிளைதுவன்றிப்
பற்றியபைங் கொடிச்சுரைமேற் படர்ந்தபழங் கூரையுடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல நிறைந்துளதோர் புலைப்பாடி.

(இ-ள்.) இப்படிப்பட்ட வளங்களையுடைய அந்த ஆதனூரின் மருதநிலத்தைச் சார்ந்த வயலின் புறத்திலுள்ள பெரிய கரையில், சுற்றத்தாரால் விரும்பப்பட்டுத் தமக்கு உரித்தாகிய உழுது நாற்றுநடுதல் முதலிய தொழில்களைச் செய்கின்ற பள்ளர்களது கூட்டம் நெருங்கித் தாவியோடுகின்ற பசிய சுரைக்கொடியானது மேலே படர்ந்திருக்கின்ற விழலினால் மேயப்பட்ட பழங் கூரையையுடைய பல சிறுகுடிசைகள் நிறைந்துள்ளது ஒரு புலைச்சேரி.—எ-று. (௬)

கூருகிர்மெல் லடியளகின் குறும்பார்ப்புக் குழுச்சுழலும்
வார்பயின்முன் றினினின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்
காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட
வார்சிறுமென் குரைப்படக்கு மரைக்கசைத்த விருப்புமணி.

(இ-ள்.) கூர்மையாகிய நகத்தோடு கூடிய மென்மைபொருந்திய அடியை யுடைய கோழிப்பெடையின் சிறிய குஞ்சுகளின் கூட்டங்கள் சுழன்றுகொண் டிருக்கும் வார்வலைகள்தொங்குகின்ற முற்றத்தில்நிற்கின்ற கூரியநகத்தையுடைய நாய்களின் துள்ளியோடுங் குட்டிகளைக் கரிய இரும்பினால்செய்யப்பட்டகாப்பைக் கையில் தரித்த கருநிறத்தையுடைய புலைச்சிறுவர்கள் பிடித்துக்கொண்டு ஓட, அச் சிறுவர்கள் இடையில்கட்டிய இரும்புமணிகளின் ஓசையானது அந்தக் குட் டிகளின் குரைக்கின்ற சிறிய ஓசையை அடக்கும்.—எ-று. (எ)

வன்சிறுதோன் மிசையுழத்தி மகவுறக்கு நிழன்மருதுந்
தன்சினைமென் பெடையொடுங்குந் தடங்குழிசிப் புதைநீழன்
மென்சினைய வஞ்சிகளும் விசிப்பறைதூங் கினமாவும்
புன்றலைநாய்ப் புனிற்றுமுழைப் புடைத்தெங்கு முடைத்தெங்கும்.

(இ-ள்.) வலிதாகிய சிறிய தோலின்மேல் பள்ளஸ்திரிகள் தங்கள் பிள்ளை களைத் தூங்கச்செய்கின்ற நிழலையுடைய மருதமரமும், தன்னுடைய சினையோடு மெல்லிய கோழிப் பெடைகள் ஒடுங்குகின்ற பெரிய பானைகளைப் புதைத்திருக் கும் நிழலையுடைய கிளைகள்பொருந்திய வஞ்சிமரங்களும், வாரினால் கட்டப்பட்ட பறைகள் தொங்குகின்ற மாமரங்களும், சிறிய தலையினையுடைய நாய்க்குட்டிக ளிருக்கின்ற பள்ளத்தினருகிலுள்ள தென்னமரங்களும் எங்கு முடைத்தாயிரு க்கின்றது.—எ-று. (அ)

செறிவலித்திண் கடைஞர்வினைச் செயல்புரிவை கறையாமக்
குறியளக்க வழைக்குஞ்செங் குடுமிவா ரணச்சேக்கை
வெறிமலர்த்திண் சினைக்காஞ்சி விரிநீழன் மருங்கெல்லா
நெறிகுழற்புன் புலைமகளிர் நெற்குறுபாட் டொலிபரக்கும்.

(இ-ள்.) மிகுந்த வல்லமைபொருந்திய கடையர்கள் தங்களுக்குரிய உழ வுத்தொழிலைச் செய்கின்ற விடியற்சாமத்தினது குறியைத்தெரிவிக்கக் கூவுகின்ற சிவந்த உச்சிக்கொண்டையையுடைய கோழிச் சேவல்களின் படுக்கையிடமாகிய வாசனைபொருந்திய மலர்களையுடைய கிளைகளோங்கிய காஞ்சிமரத்தினதுஅகன்ற நிழலின் இடங்களெல்லாம் நெறித்த கூந்தலையுடைய புலைச்சியர்கள் நெல்லைக் குத்தும்போது பாடுகின்ற பாட்டின் ஓசையானது பரவியிருக்கும்.—எ-று. (கூ)

புள்ளுந்தண் புனற்கலிக்கும் பொய்கையுடைப் புடையெங்குந்
தள்ளுந்தா ளடையசையத் தளையவிழ்பூங் குவளைமது
விள்ளும்பைங் குழற்கதிர்நெல் மிலைச்சியபுன் புலைச்சியர்கள்
கள்ளுண்டு களிதூங்கக் கறங்குபறை யுங்கலிக்கும்.

(இ-ள்.) பறவைகள் முழங்குகின்ற நீரையுடைய குளங்களி லெல்லாம் தள்ளாடுகின்ற அப்பறவைகளின் கால்நடையானது படுதலால் இதழ்கள் விரிந்த நீலோற்பலமலர்கள் தேனைச் சிந்தும்; கரிய கூந்தலில் நெற்கதிர்களை அழகாகச்

கூடிய சிறிய புலைச்சியர்கள் கள்ளைக்குடித்துக் கூத்தாட, அக்கூத்துக்கிசைய அடிக்கின்ற பறை யென்னும் வாத்தியமும் முழங்கும்.—எ-று. (௧௦)

இப்படித்தா கியகடைஞ ரிருப்பின்வரைப் பினின்வாழ்வார்
மெய்ப்பரிவு சிவன்கழற்கே விளைத்தவுணர் வொடும்வந்தார்
அப்பதியி லூர்ப்புலைமை யான்றதொழிற் றாயத்தார்
ஒப்பிலவர் நந்தனா ரெனவொருவ ருளரானார்.

(இ-ள்.) இத்தன்மையையுடைய தீண்டாதார் இருப்பிடமாகிய அப் புலைச்சேரியில் வாழ்கின்றவர்; சிவபெருமானுடைய திருவடிகளுக்கே உண்மையாகிய அன்பைச் செலுத்துகின்ற மெய்யறிவையுடையவர்; அவ்வூரில் ஊர்வெட்டியானென்னும் நிறைந்த காணியாட்சியையுடையவர்; ஒருவரும் தமக்கு ஒப்பில்லாதவர்; நந்தனார் என்று சொல்லும் பெயரையுடைய ஒருவரிருந்தார்.—எ-று. (௧௧)

பிறந்துணர்வு தொடங்கியபின் பிறைக்கண்ணிப் பெருந்தகைபாற்
சிறந்தபெருங் காதலினாற் செம்மைபுரி சிந்தையராய்
மறந்துமய லினைவின்றி வருபிறப்பின் வழிவந்த
அறம்புரிகொள் கையராயே யடித்தொண்டி னெறிநின்றார்.

(இ-ள்.) (அவர்) தாம் அவதரித்து விவேகம் வந்தபின்பு, சந்திரனைத் தரித்த சிவபெருமானிடத்தில் வைத்த சிறந்த பேரன்பினால் நன்மார்க்கத்தில் செல்லுகின்ற மனமுடையவராய்,மறந்தும்பிறதெய்வங்களைநினையாமல் (அச்சிவபரஞ்சுடரையே தியானித்துக்கொண்டு) தாம் பிறந்த குலாசாரமுறைமைக்கு ஏற்றபடி செய்யவேண்டிய சிவதருமங்களைச் செய்யுங் கொள்கையையுடையவராய் அக்கடவுளது திருவடிகளுக்குத் தொண்டுபூண் டொழுகுவதில் சிறந்தவரானார்.—எ-று.

பிறைக்கண்ணி=பிறையாகியமாலை. (௧௨)

ஊரில்விடும் பறைத்துடவை யுணவுரிமை யாக்கொண்டு
சார்பில்வருந் தொழில்செய்வார் தலைநின்றார் தொண்டினாற்
கூரிலைய முக்குடுமிப் படையண்ணல் கோயிறோறும்
பேரிகையே முதலாய முகக்கருவி பிறவினுக்கும்.

(இ-ள்.) ஊரிலுள்ளவர்களால் வெட்டிமைக்காக மானியமாகவிடப்பட்டிருக்கின்ற நிலத்தில் விளைகின்ற தானியத்தைத் தமக்கு உரியனவாகப்பெற்றுக்கொண்டு, அவர் சார்பிற்குச் செய்யவேண்டிய வேலைகளைச் செய்து, திருத்தொண்டிற் சிறந்தவராய்க் கூர்மைபொருந்திய அச்சவடிவான சூலாயுதத்தைத் தாங்கிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயில்களிலெல்லாம் பேரிகைவாத்தியம் முதலாகிய முகத்தையுடைய பிற வாத்தியங்களுக்கும்.—எ-று.

தோல்கட்டும் வாயே பேரிகை முதலியவற்றிற்கு முகமாதலின் 'முகக்கருவி' என்று கூறினார்; பிற என்றது, மத்தளமுதலியவைகளை.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

போர்வைத்தோல் விசிவாரென் றினையனவும் புகலுமிசை
நேர்வைத்த வீணைக்கும் யாழுக்கு நிலைவகையாற்
சேர்வுற்ற தந்திரியுந் தேவர்பிரா னர்ச்சனைகட்
கார்வத்தி னுடன்கோரோ சனமுமிவை யளித்துள்ளார்.

(இ-ள்.) (வாத்தியங்களின் வாயைமூடுதற்குப்) போர்வையா யிருக்கின்ற தோலும், அதனைக்கட்டுதற்காக வேண்டிய வாருமாகிய இப்படிப்பட்டவைகளும், புகழ்ந்து சொல்லப்பட்ட இசையையுடைய நல்ல வீணைக்கும், யாழ்வாத்தியத்துக்கும் ஏற்றவகையினால் பொருந்திய நரம்புகளும், தேவர்கள் நாயகராகிய சிவபெருமானுக்குரிய பூசனைக்குக் கோரோசனமுமாகிய இவைகளை ஆசையோடு கொடுக்கின்றவராயினார்.—எ-று. (கச)

இவ்வகையாற் றந்தொழிலி னியன்றவெலா மெவ்விடத்துஞ்
செய்வனவுங் கோயில்களிற் றிருவாசற் புறநின்று
மெய்விரவு பேரன்பு மிகுதியினா லாடுதலும்
அவ்வியல்பிற் பாடுதலு மாய்நிகழ்வா ரந்நாளில்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் தம்முடைய சாதித்தொழிலுக்கமைந்த பணிகளை எல்லாம் தாம் போகின்ற எல்லாஆலயங்களுக்கும் செய்துவருதலும், அவ்வாலயங்களின் திருவாசலின் புறத்தில் நின்றுகொண்டு உண்மைபொருந்திய பேரன்பின் மிகுதியினால் ஆனந்தக்கூத்தாடுதலும், அத்தன்மையாகவே பாடுதலுமாகிய குணங்களைப்பொருந்தி வாழ்ந்துகொண்டிருந்தார்; அந்நாள்களில் ஒருநாள்.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (கரு)

திருப்புன்கூர்ச் சிவலோகன் சேவடிகண் மிகநினைந்து
விருப்பினொடுந் தம்பணிகள் வேண்டுவன செய்வதற்கே
அருத்தியினா லொருப்பட்டங் காதனூர் தனினின்றும்
வருத்தமுறுங் காதலினால் வந்தவ்வூர் மருங்கணைந்தார்.

(இ-ள்.) திருப்புன்கூர் என்னும் க்ஷேத்திரத்தில் வீற்றிருந்தருளும் சிவலோகநாதராகிய சிவபெருமானது திருவடிகளை மிகவும் நினைந்து அன்புடனே தாம் செய்யத்தக்க திருப்பணிகளைச் செய்வதற்காக ஆசையினால் மனவொருமைப்பட்டு அந்த ஆதனூரிலிருந்து (நமக்குத் தரிசனங்கிடைக்குமோவென்னும்) வருத்தத்தை விளைக்கும் அன்பினால் அத்திருப்புன்கூருக்குவந்து சேர்ந்தார்.—எ-று.

சீர்ேறு மிசைபாடித் திருத்தொண்டர் திருவாயி
னேரேகும் பிடவேண்டு மெனநினைந்தார்க் கதுநேர்வார்
காரேறு மெயிற்புன்கூர்க் கண்ணுதலார் திருமுன்பு
போரேற்றை விலங்கவருள் புரிந்தருளிப் புலப்படுத்தார்.

(இ-ள்.) சிவபெருமானது சிறப்புப்பொருந்திய புகழைப்பாடித் திருவாசலில் நின்றுகொண்டு அப்பெருமானை நேராகவேதரிசிக்கவேண்டுமென்று நினைந்த திருநாளைப்போவார்நாயனாருக்கு அப்படியே அருள்செய்யவிரும்பி, மேகங்கள் தவழ்கின்ற மதில்சூழ்ந்த திருப்புன்கூரி லெழுந்தருளியிருக்கும் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் தமது சந்நிதியின்முன்னேயிருக்கின்ற வலிமைபொருந்திய திருநந்திதேவரை விலகும்படிச் செய்து தரிசனங்கொடுத்தருளினார்.—எ-று. (கஎ)

சிவலோக முடையவர்தந் திருவாயின் முன்னின்று
பவலோகங் கடப்பவர்தம் பணிவிட்டுப் பணிந்தெழுந்து
சுவலோடு வாரலையப் போவார்பின் பொருசூழல்
அவலோடு மடுத்ததுகண் டாதரித்துக் குளந்தொட்டார்.

(இ-ள்.) அத்திருப்புன்கூரி லெழுந்தருளிய சிவலோகநாதருடைய திருவாசலின் முன்னே நின்று பிறவிக்குக்காரணமாகிய இந்த உலகத்தைக்கடந்து செல்பவராகிய திருநாளைப்போவார்நாயனர் தம்முடைய பணிவிடையைவிட்டு வணங்கி எழுந்திருந்து முதுகில் வாத்தியங்களைக் கட்டுதற்காக வைத்திருக்கின்ற வார்கள் அலையும்படிப் போகின்றவர் பின்பு ஓரிடத்தில் ஒரு பள்ள மிருப்பதைக் கண்டு ஆசைகொண்டு அதை ஒரு குளமாகவெட்டினர்.—எ-று.

அவல்=பள்ளம். (௧௮)

வடங்கொண்ட பொன்னிதழி மணிமுடியார் திருவருளாற்
றடங்கொண்ட குளத்தளவு சமைத்ததற்பின் றம்பெருமான்
இடங்கொண்ட கோயில்புறம் வலங்கொண்டு பணிந்தெழுந்து
நடங்கொண்டு விடைகொண்டு தம்பதியி னண்ணினர்.

(இ-ள்.) பொன்போலும் நிறமுள்ள கொன்றைமலர்மாலையைத் தரித்த அழகிய முடியையுடைய சிவபெருமானது திருவருளினல் அப்பள்ளத்தை விசாலமாகிய குளத்தளவாகவெட்டி ஏற்படுத்தினபின்பு தமது ஆண்டவராகிய சிவலோகநாதர் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயிலைப் புறத்தில் வலமாகவந்துவணங்கியெழுந்து ஆனந்தத்தால் கூத்தாடி அக்கடவுளின் அனுமதிபெற்றுக்கொண்டு தம்முடைய ஊருக்குவந்தார்.—எ-று. (௧௯)

இத்தன்மை யீசர்மகிழ் பதிபலவுஞ் சென்றிறைஞ்சி
மெய்த்ததிருத் தொண்டுசெய்து விரவுவார் மிக்கெழுந்த
சித்தமொடுந் திருத்தில்லைத் திருமன்று சென்றிறைஞ்ச
உய்த்தபெருங் காதலுணர் வொழியாது வந்துதிப்ப.

(இ-ள்.) இவ்விதமாகச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற பல ஸ்தலங்களுக்கும்போய் வணங்கி உண்மையாகிய திருத்தொண்டுகளைச் செய்துவருகின்றவராகிய அந்நாயனர் அன்பானது அதிகரித்தெழுந்த மனதோடு சிதம்பரத்திலுள்ள கனகசபைக்குப்போய் ஸ்ரீநடராஜப்பெருமானை வணங்கும்படி தூண்டுகின்ற பேராசையோடுகூடிய விவேகமானது தம்மை விட்டு நீங்காமல் அடிக்கடிதோன்றிக்கொண்டிருக்க.—எ-று. (௨௦)

அன்றிரவு கண்டுயிலார் புலர்ந்ததற்பி னங்கெய்த
ஒன்றியணை தருதன்மை யுறுகுலத்தோ டிசைவில்லை
யென்றிதுவு மெம்பெருமா னேவலெனப் போக்கொழிவார்
நன்றுமெழுங் காதன்மிக நாளைப்போ வேனென்பார்.

(இ-ள்.) (தாம் உள்ளத்திற்கொண்டிருக்கின்ற ஆசையின் மிகுதியினல்) அன்று இராத்திரி முழுமையும் நித்திரை கொள்ளாதவராய்ப் பொழுதுவிடிந்த பின்பு அச்சிதம்பரத்துக்குப் போகவென்றல் அவ்வூரினுள்ளே புகுந்து திருக்கோயிலுக்குப்போய் சுவாமியைவணங்கத் தகுந்த யோக்கியதை நம்முடைய குலத்துக்குச் சம்பந்தமில்லையேயென்று நினைத்து, இவ்வாறு போகக்கூடாமையும் எமது ஆண்டவருடைய திருவருளே யென்று அங்குப்போகாமல் நிற்பார்; பின்பு நன்றாக எழுந்த ஆசையானது தூண்ட நாளைக்கு அச்சிதம்பரத்துக்குப் போவேனென்று சொல்லுவார்.—எ-று. (௨௧)

நாளைப்போ வேனென்று நாள்கள்செலத் தரியாது
பூளைப்பூ வாம்பிறவிப் பிணிப்பொழியப் போவாராய்ப்
பாளைப்பூங் கமுகுடுத்த பழம்பதியி னின்றும்போய்
வாளைப்போத் தெழும்பழனஞ் சூழ்தில்லை மருங்கணைந்தார்.

(இ-ள்.) இவ்வாறு நாளைக்குப்போவேன் என்று அநேக நாள்கள் கழிந்து போக, ஸ்ரீநடராசப்பெருமானைத் தரிசிக்கவேண்டுமென்னும் ஆசையை அடக்கக் கூடாமல் பூளைப்பூவையொத்த (நிலையாமையையுடைய) இப்பிறவியின் சம்பந்தமானது நீங்கும்பொருட்டுப் போகின்ற எண்ணமுடையவராய்ப்பாளைகளையுடைய பொலிவாகிய கமுகமரங்கள் சூழ்ந்த தம்முடைய பழமையாகிய ஆதனூரினின்றும் புறப்பட்டு ஆண்வாளைமீன்கள் துள்ளிவிளையாடுகின்ற வயல்கள் சூழ்ந்த தில்லைப்பதியின் எல்லையைவந்தடைந்தார்.—எ-று.

இவர் இப்படியே "நாளைக்குப்போவேன் நாளைக்குப் போவேன்" என்று அநேகநாள்களைக்கழித்த காரணம்பற்றி இவருக்குத் திருநாளைப்போவார் நாயனார் என்று பெயர்உண்டாயிற்றெனவறிக. (உஉ)

செல்கின்ற போழ்தந்தத் திருவெல்லை பணிந்தெழுந்து
பல்குஞ்செந் தீவளர்த்த பயில்வேள்வி யெழும்புகையு
மல்குபெருங் கிடையோது மடங்களொருங் கினவுங்கண்
டல்குந்தங் குலநினைந்தே யஞ்சியணைந் திலர்நின்றார்.

(இ-ள்.) திருநாளைப்போவார்நாயனார் போகும்பொழுது அந்தச் சிதம்பரத்தின்திருவெல்லையைக்கண்டு நமஸ்கரித்து எழுந்து, சுவாலித்தெரிகின்ற சிவந்த அக்கினியைவளர்த்துச் செய்கின்றயாகசாலைகளில் உண்டாகிய புகையும், மிகுந்த பிராமணப்பிள்ளைகளின் கூட்டங்கள் வேதாத்தியயனஞ் செய்கின்ற நெருங்கிய மடங்களையும்பார்த்து, இழிவாகிய தம்முடைய குலத்தைநினைத்துப் பயந்து உள்ளேபோகாமல் நின்றுவிட்டார்.—எ-று. (உஙு)

நின்றவரங் கெய்தரிய பெருமையினை நினைப்பார்முன்
சென்றிவையுங் கடந்தூர்சூ ழெயிற்றிருவா யிலைப்புக்கார்
குன்றனைய மாளிகைக டொறுங்குலவும் வேதிகைகள்
ஒன்றியமூ வாயிரமங் குளவென்பா ராகுதிகள்.

(இ-ள்.) அவ்வெல்லையில் நின்றுகொண்டிருந்த திருநாளைப்போவார்நாயனார் தாம்உள்ளேபோகக்கூடாத அவ்வாலயத்தின் பெருமையைநினைத்து முற்பட்டுப்போய், அந்த எல்லையையுங்கடந்து,ஊரைச்சூழ்ந்திருக்கும் மதிலின் திருவாசலையடைந்தார்; மலைபோலுயர்ந்த மாளிகைகள்தோறும் விளங்குகின்ற வேதிகைகளும், பொருந்திய மூவாயிரம் ஓமசாலைகளும் அங்குள்ளனவென்று சொல்லிக்கொள்வார்.—எ-று. (உச)

இப்பரிசா யிருக்கவெனக் கெய்தலரி தென்றஞ்சி
அப்பதியின் மதிற்புறத்தி னாராத பெருங்காதல்
ஒப்பரிதாய் வளர்ந்தோங்க வுள்ளுருகிக் கைதொழுதே
செப்பரிய திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார்.

(இ-ள்.) தில்லைமூவாயிரவர்களுடைய வீடுகள் இத்தன்மையாயிருக்க (அதனால்) எனக்கு அவ்விடத்திற்குப்போகுதல் அருமையென்று பயந்து அந்தச்சித

ம்பரத்தின் மதிலின்புறத்தில் நீங்காத பேரன்பானது சமானமில்லாமல் வளர, ம னமுருகிக்கைகூப்பி வணங்கிக்கொண்டு சொல்லுதற்கரிய திருவெல்லையை வலஞ் செய்துகொண்டு போகின்றவராயினார்.—எ-று. (உ௬)

இவ்வண்ண மிரவுபகல் வலஞ்செய்தங் கெய்தரிய
அவ்வண்ண நினைந்தழிந்த வடித்தொண்ட ரயர்வெய்தி
மைவண்ணத் திருமிடற்றார் மன்றினடங் கும்பிடுவ
தெவ்வண்ண மெனநினைந்தே யேசறவி னொடுந்துயில்வார்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் இரவும்பகலுமாக வலம்வந்துகொண்டு, தாம் உ ள்ளே போகக்கூடாத தன்மையைநினைத்து வருத்தப்பட்ட திருத்தொண்டராகி ய திருநாளைப்போவார்நாயனார் சோர்வடைந்து, காளகண்டத்தையுடைய ஸ்ரீநட ராஜப்பெருமான் கனகசபையில் செய்தருளுகின்ற திருநடனத்தைத் தரிசிப்பது எவ்வாறென்றுநினைத்து மனவருத்தத்தோடும் நித்திரை செய்வாராயினார்.—எ-று.

இன்னறரு மிழிபிறவி யிதுதடையென் றேதுயில்வார்
அந்நிலைமை யம்பலத்து ளாடுவா ரறிந்தருளி
மன்னுதிருத் தொண்டரவர் வருத்தமெலாந் தீர்ப்பதற்கு
முன்னணைந்து கனவின்கண் முறுவலொடு மருள்செய்வார்.

(இ-ள்.) துன்பத்தைத்தருகின்ற இழிவாகிய இந்த நீசப் பிறவியானது (நாம் ஸ்ரீ நடராசமூர்த்தியைத் தரிசிப்பதற்குத்) தடையா யிருக்கின்றதென்று நினைத்து நித்திரைசெய்கின்ற அத்திருநாளைப்போவார்நாயனாருடைய மனநிலைமை யைக்கனகசபையில் ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற ஸ்ரீநடராசப்பெருமா ன் அறிந்து, நிலைபெற்ற திருத்தொண்டராகிய அந்நாயனாரது மனவருத்தத்தை யெல்லாம் தீர்க்கும்பொருட்டுச் சொப்பனத்தில் அவர்க்குமுன்னேவந்து புன்சிரி ப்புடனேயருளிச்செய்கிறார்.—எ-று. (உ௭)

இப்பிறவி போய்நீங்க வெரியினிடை நீமூழ்கி
முப்புரிநூன் மார்பருடன் முன்னணைவா யெனமொழிந்த
அப்பரிசே தில்லைவா ழந்தணர்க்கு மெரியமைக்க
மெய்ப்பொருளா னாருளி யம்பலத்தே மேவினார்.

(இ-ள்.) மெய்ப்பொருளாகிய சிவபெருமான் (அன்பனே!) இந்த இழி பிறப்பானது ஒழியும்படி நீ அக்கினியில்முழுகி யெழுந்து மூன்றுபுரியாகிய பூணூ லைத்தரித்த மார்பினையுடைய தில்லைவாழந்தணர்களோடு நம்முடைய சபைக்குமு ன்னேவந்து தரிசிக்கக்கடவாயென்று அருளிச்செய்து, அவ்வாறாகவே தில்லையில் வாழ்ந்தருளும் மூவாயிரம் பிராமணர்களுக்கும் (சொப்பனத்தில்தோன்றி திருநா ளைப்போவார் மூழ்குதற்கு) நெருப்பினைவளர்க்கக் கட்டளையிட்டுத் திருவம்பலத் தில் எழுந்தருளினார்.—எ-று. (உ௮)

தம்பெருமான் பணிகேட்ட தவமறையோ ரெல்லாரும்
அம்பலவர் திருவாயின் முன்பச்ச முடனீண்டி
யெம்பெருமா னருள்செய்த பணிசெய்வோ மென்றேத்தித்
தம்பரிவு பெருகவருந் திருத்தொண்டர் பாற்சார்ந்தார்.

(இ-ள்.) தமது பெருமானாகிய ஸ்ரீ நடராசமூர்த்தியினது கட்டளையைக் கேட்ட தவத்தினையுடைய தில்லைமூவாயிரவர்கள் யாவரும் அம்பலவாணரது கோ

யிற்றிருவாசலின் முன்னே அச்சத்தோடுகூடி எமது ஆண்டவராகிய சிவபெருமான் கட்டளையிட்டருளிய பணிவிடையை யாம் செய்வோமென்று துதித்து, தம்முடைய அன்பானது அதிகரிக்கும்படி அங்குவந்திருக்கும் திருநாளைப்போவார் நாயனாரிடத்தில் அடைந்தார்கள்.—எ-று. (உசு)

ஐயரோ யம்பலவ ரருளாலிப் பொழுதணைந்தோம்
வெய்யவழ லமைத்துமக்குத் தரவேண்டி யெனவிளம்ப
நையுமனத் திருத்தொண்டர் நானுய்ந்தே னெனத்தொழுதார்
தெய்வமறை முனிவர்களுந் தீயமைத்த படிமொழிந்தார்.

(இ-ள்.) ஐயரோ! ஸ்ரீநடராசப்பெருமானுடைய கட்டளையினால் இப்பொழுது வெவ்விய அக்கினியைமூட்டி (நீர் அதில் மூழ்கும்படி) உமக்குக் கொடுக்க வேண்டி வந்தோமென்றுசொல்ல, இளகிய மனதினையுடைய திருநாளைப்போவார் நாயனார் அடியேன் கடைத்தேறினேன் என்று அவர்களை வணங்கினார்; தெய்வத் தன்மைபொருந்திய வேதங்களையுணர்ந்த தில்லைமூவாயிரவர்களும் அங்கு அக்கினி வளர்த்ததைச் சொன்னார்கள்.—எ-று. (௩0)

மறையவர்கண் மொழிந்ததற்பின் றென்றிசையின் மதிற்புறத்துப்
பிறையுரிஞ்சுந் திருவாயின் முன்னாகப் பின்னாகர்த
நிறையருளான் மறையவர்க ணெருப்பமைத்த குழியெய்தி
இறையவர்தாண் மனங்கொண்டே யெரிசூழ வலங்கொண்டார்.

(இ-ள்.) (தீயைவளர்த்தோமென்று) தில்லைவாழந்தணர்கள் சொன்னபின்பு, தெற்குத்திக்கிலுள்ள மதிலின்புறத்தில் சந்திரன் தவழுகின்ற திருக்கோபுரவாசலுக்குமுன்னே சிவபெருமானுடைய நிறைந்ததிருவருளினால் தில்லைமூவாயிரவர்கள் அக்கினியைவளர்த்திருக்கின்ற குழியையடைந்து, ஸ்ரீநடராசப்பெருமானுடைய திருவடியை மனதில் தியானித்துக்கொண்டு அந்த அக்கினியை வலமாகச் சூழ்ந்து வந்தார்.—எ-று. (௩க)

கைதொழுது நடமாடுங் கழலுன்னி யழல்புக்கார்
எய்தியவப் பொழுதின்க ணெரியின்க ணிம்மாயப்
பொய்தகையு முருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய்
மெய்திகழ்வெண் ணூல்விளங்க வேணிமுடி கொண்டெழுந்தார்.

(இ-ள்.) தமது கைகளைக்கூப்பி வணங்கித் திருநடனஞ்செய்கின்ற சபாநாதரது குஞ்சிதபாதத்தை மனதில் தியானித்துக்கொண்டு அந்த அக்கினியில் மூழ்கினார்; அப்படிச்செய்தபொழுது, அந்தநெருப்பில் இந்தமயக்கத்துக் கேதுவாகிய நிலையில்லாத சரீரத்தையொழித்துப் புண்ணியத்தையுடைய பெருமைபொருந்திய பிராமணமுனியின் வடிவமாய்த் திருமேனியில் பூணூலானது விளங்கச் சடைமுடியோடு எழுந்தார்.—எ-று. (௩உ)

செந்தீமே லெழும்பொழுது செம்மலர்மேல் வந்தெழுந்த
அந்தணன்போற் றோன்றினா ரந்தரதுந் துபிநாதம்
வந்தெழுந்த திருவிசும்பில் வானவர்கண் மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந் தாரத்தின் பனிமலர்மா ரிகள்பொழிந்தார்.

(இ-ள்.) சிவந்த நெருப்பில் முழுகி மேல் எழுந்தபொழுது (விஷ்ணுவினது நாபியாகிய) சிவந்ததாமரைமலரில் தோன்றி யெழுந்த பிரமனைப்போல் விளங்கினார்; (அப்பொழுது) பெருமைபொருந்திய ஆகாயத்தில் தேவதுந்துபியின் ஒலியானது உண்டாயிற்று; தேவர்கள் மனமகிழ்ந்து ஆரவாரித்துப் பசிய துளிர்களையுடைய கற்பகவிருட்சத்தின் குளிர்ந்த மலர்மழைகளைச் சொரிந்தார்கள்.—எ-று.

திருவுடைய தில்லைவா ழந்தணர்கள் கைதொழுதார்
பரவரிய தொண்டர்களும் பணிந்துமனங் களிபயின்றார்
அருமறைசூழ் திருமன்றி லாடுகின்ற கழல்வணங்க
வருகின்றார் திருநாளைப் போவாரா மறைமுனிவர்.

(இ-ள்.) திருவருட்செல்வத்தையுடைய தில்லைவாழந்தணர்கள் மூவாயிரவரும் கைகூப்பித்தொழுதார்கள்; சொல்லுதற்கரிய மற்றைச் சிவனடியார்களும் வணங்கி மனதில் களிப்படைந்தார்கள்; அருமையாகிய வேதங்கள்சூழ்ந்து முழங்குகின்ற கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற (சிவபெருமானது) திருவடிகளை வணங்கும்பொருட்டுத் திருநாளைப்போவார் என்னும் திருப்பெயரையுடைய ஒரு வேதமுனிவரானவர் வருகின்றவரானார்.—எ-று. (௩௪)

தில்லைவா ழந்தணரு முடன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான் மறிக்கரத்தார் கோபுரத்தைத் தொழுதிறைஞ்சி
ஒல்லைபோ யுட்புக்கா ருலகுய்ய நடமாடும்
எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால்.

(இ-ள்.) தில்லைவாழந்தணர்கள் மூவாயிரவரும் தம்மோடு கூடவரப்போய்த் தினைக்கொல்லையிலிருக்கின்ற மானைத்தரித்த திருக்கரத்தினையுடைய ஸ்ரீநடராசப்பெருமானது தெற்குக்கோபுரத்தைத் தொழுது வணங்கி விரைவாகப்போய் உள்ளேபுகுந்து, உலகத்தார் திருவருள்பெற்றுய்யும்பொருட்டு ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற கனகச்சபையின் திருவெல்லையை யடைந்தார்; பின்பு அங்கு நின்ற யாவர்களும் அவரைக்காணாதவர்களானார்கள்.—எ-று.

சிவபெருமான் திருக்கரத்திலுள்ள மான் தாருகாவனத்து முனிவர்களால் யாகஞ்செய்து அனுப்பப்பட்டதாயிருப்பினும், அந்தச்சாதியின் பிறப்பிடத்தை நோக்கி 'கொல்லைமான் மறிக்கரத்தார்' என்று கூறினார். (௩௫)

அந்தணர்க ளதிசயித்தா ரருமுனிவர் துதிசெய்தார்
வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்
சுந்தரத்தா மரைபுரையுந் துணையடிக டொழுதிருக்க
அந்தமிலா வானந்தப் பெருங்கூத்த ரருள்புரிந்தார்.

(இ-ள்.) தில்லைவாழந்தணர்கள் ஆச்சரியப்பட்டார்கள்; அருமையாகிய முனிவர்கள் ஸ்தோத்திரஞ்செய்தார்கள்; முடிவில்லாத ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற ஸ்ரீநடராசப்பெருமான் முனிவர் வடிவமாகத் தம்மைவந்தடைந்த அத்திருநாளைப்போவார்நாயனாரது தீவினையாகிய களங்கத்தை யொழித்து

அழகிய தாமரைமலர்போன்ற தமது இரண்டு திருவடிகளையும் வணங்கியிருக்கும்படி கிருபைசெய்தருளினார்.—எ-று. (ருசு)

மாசுடம்பு விடத்தீயின் மஞ்சனஞ்செய் தருளியெழுந்
தாசின்மறை முனியாகி யம்பலவர் தாளடைந்தார்
தேசுடைய கழல்வாழ்த்தித் திருக்குறிப்புத் தொண்டர்வினைப்
பாசமற முயன்றவர்செய் திருத்தொண்டின் பரிசுரைப்பாம்.

(இ-ள்.) (தமக்குமுன்னிருந்த) களங்கமாகிய உடம்பானது நீங்கும்படி அக்கினியில் முழுகியெழுந்து, குற்றமற்ற பிராமணமுனிவராகிச் சபாநாதருடைய திருவடியையடைந்த திருநாளைப்போவார் நாயனாருடையஅழகிய ஸ்ரீபாதங்களைத் துதித்து, தீவினையாகிய பாசம் அறும்படியாக முயன்ற திருக்குறிப்புத்தொண்டநாயனார்செய்த திருத்தொண்டின் தன்மையைச் சொல்லுகின்றோம்.—எ-று. ()

திருநாளைப் போவார்நாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - சுo அஉ.



24th June 1897.



திருக்குறிப்புத்தொண்ட நாயனார்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணம்.

ஏயு மாறுபல் லுயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாய ருடனி யாயின தலைவரைத் தழுவ
வாயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூய மாதவஞ் செய்தது தொண்டைநன் னாடு.

(இ-ள்.) பல உயிர்களுக்கும் பக்குவத்திற்கிசைய அளவில்லாத கிருபையைவிளைக்கின்ற உலகமாதாவாகிய உமாதேவியார் ஒப்பற்ற தமது நாயகராகிய சிவபெருமானைத் தழுவும்பொருட்டு, அறிஞர்களால் ஆராயப்பட்ட நான்கு வேதங்களும் துதிக்கும்படி நின்று அருமையாகிய தவஞ்செய்யப் பரிசுத்தம்பொருந்திய பெரிய தவத்தைச்செய்திருப்பது நல்ல தொண்டைநாடாம்.—எ-று. (க)

நன்மை நீடிய நடுநிலை யொழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப
வன்மை யோங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பின்
றொன்மை மேன்மையி னிகழ்பெருந் தொண்டைநன் னாடு.

(இ-ள்.) நன்மை மிகுந்த நடுவுநிலைமையாகப் பொருந்திய ஒழுக்கத்தால் விரும்பிய குணத்தினையுடைய தலைமையாகிய பெரிய குடிகள் விருத்தியடையும்படி வலிமைபொருந்திய மதிலால் சூழப்பட்ட வளப்பத்தையுடைய நகரங்களுக்கு இடமாயிருக்கின்றது,நன்னெறியின் பழமையான மேன்மையினால் விளங்குகின்ற பெருமையினையுடைய நல்லதொண்டைநாடு.—எ-று. (உ)

நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நவைவந்
துற்ற போதுதம் முயிரையும் வணிகனுக் கொருகாற்
சொற்ற மெய்ம்மையுந் தூக்கியச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையி னிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு.

(இ-ள்.) நல்ல செய்கைகளைச்செய்கின்ற பழையனூரில் வாசஞ்செய்து சிவபெருமானுக்குக் குற்றேவல்செய்யும் அடியவர்களாகிய வேளாளர்கள் ஒரு குற்றம் நேரிட்டபொழுது, தங்கள் உயிரையும், ஒருவர்த்தகனுக்கு ஒருதரம் தாங்கள் சொல்லிய சத்தியவார்த்தையையும் சீர்தூக்கிப்பார்த்து, அவ்வர்த்தகனுக்குச் சொல்லிய சத்தியமொழியையே காப்பாற்றும்பொருட்டுப் பழிக்குப் பழியாகத் தங்களுயிரைக்கொடுக்கப்பெற்ற மேன்மையினால் சிறப்படைந்துள்ளது, பெரிய தொண்டைநாடு.—எ-று.

ஒருவர்த்தகனுக்குச்சொல்லிய சத்தியவார்த்தையின் பொருட்டு வேளாளர்கள் தங்கள் உயிரைவிடுத்ததாவது:—ஒருவன் நாள்தோறும் பிறமங்கையரிடஞ் சென்று நட்புற்றிருந்ததை அவன் மனைவியறிந்து தடுத்துத் தன் வசமாகும்படி வேண்டிய உபாயங்கள் சொல்லியும் கேளாமல், இவள் தன் எண்ணத்திற்கு ஓர் இடையூறாயிருக்கிறாளென்று அவளை வஞ்சகமாய்க் கொல்லநினைத்து, ஒருநாள் அடுத்தஊரில்நடக்கும் ஒருசிறப்பை அவளுக்குக்காட்ட விருப்பமுள்ளவன்போல இதங்கூறி அழைத்துக்கொண்டுபோய் நடுக்காட்டில் கொன்றுவிட்டான். மறுபிறப்பில் அவள் ஒருபிசாசாகி அவனைக்கொல்லக் கருதியிருந்தாள். அவள் புருஷன் ஒரு செட்டியாகப்பிறந்து வளர்ந்து வர்த்தகஞ் செய்துகொண்டிருக்கும் நாள்களில் ஒருநாள் சோதிடசாஸ்திரி ஒருவன்வந்து அவனுக்குச் சாதகம்பார்த்து, நீ வடதிசைநோக்கிச்சென்றால் அங்கு ஒரு பேயினால் இறப்பாய்; அது தவறாது. ஆயினும், அப்பேய் உன்னைத்தொடராதிருக்கும்படி நான் ஒரு மந்திரவாளை உனக்குக் கொடுக்கிறேன். இது உன்னிடத்திலிருக்குமளவும் அந்தப்பேய் உன்னை நெருங்காது என்று சொல்லிக் கொடுத்துவிட்டுப்போயினான். பின் சிலநாள் பொறுத்து அந்தச்செட்டி வர்த்தகஞ்செய்யும்பொருட்டுத் தன் ஊரிலிருந்து வடதிசையிலுள்ள பழையனூருக்குப் போகும்பொழுது,நீலி என்னும் அந்தப்பேய் முற்பிறப்பில் அவன் தன்னைக்கொன்ற பழிக்குப் பழி வாங்கும்படி அவன் மனைவிபோல உருவங்கொண்டு பின் தொடர்ந்துவர, அவ்வணிகன் சில குறிகளால் இதுபேயென்று அறிந்து தன் கையிலிருக்கும் மந்திரவாளின் பலத்தினால் சிறிதும் அஞ்சாமல் அந்த ஊரிலுள்ள வேளாளர்களிடத்துச் சேர்ந்தான். அப்பொழுது அந்தப் பேய் அவர்களிடத்துச் சென்று, என் கணவராகிய இவர் நெடுநாளாக என்னோடு பேச்சின்றி விரோதப்பட்டிருக்கின்றார். நான் எவ்வளவு தாழ்மையாக வேண்டிக் கொண்டாலும் சிறிதும் இரக்கமற்று வெறுக்கின்றார். ஐயோ! இவருக்கு நான் என்னதீங்குசெய்தேன். நீதிமான்களாகிய நீங்கள் அவருக்கு என்னிடத்திலுள்ள கோபத்தைநீக்கி எதிரிலுள்ள இம்மண்டபத்தினுள் அவரையும் என்னையும் போகவிடுவீர்களாயின் அவருடன் சிலவார்த்தைகள் பேசிப்போகின்றேனென்று சொன்னவுடனே, செட்டி இவளை என் மனைவியென்று நீங்கள் நினைக்கவேண்டாம். இது ஒரு கொடியபேய், என்னைக்கொல்லவந்திருக்கிறது என்றுசொன்னான். அதற்கு நீலி ஐயா! இவர் என் கணவரேயாகும், அதை உங்களுக்கு நிச்சயமாகத்தெரிவிக்கிறேனென்று (கள்ளிக்கட்டையைக் குழந்தையுருவாகச்செய்து) இடுப்பில் வைத்திருந்த மாயக்குழந்தையைக் கீழேவிட, அது யாவரிடத்தும் செல்லாமல்செட்டியினிடத்துக்குப்போய் மேல்விழுந்து விளையாடிற்று. அப்பொழுது வேளாளர்கள் அவனைப்பார்த்துச் செட்டியாரே! நீரென் பொய்சொல்லுகிறீர்; உம்முடைய மனைவி துன்பமடையாமல் இம்மண்டபத்தில் புகுந்து அவளுக்கு ஒரு சமாதானஞ்சொல்லிவாருமென்று அனுப்ப, அவன் கையில் மந்திரவாளைப்பிடித்துக்கொண்டு சென்றான். அதைக்கண்ட நீலி ஐயா! இவர்கையிலுள்ள கத்தியை நீங்கள் வாங்கிக் கொள்ளுங்கள்; இல்லாவிட்டால் என்னைக்கொன்றுவிடுவாரென்றுகூற, அவர்கள் அதனை நிச்சயமாக நினைத்து அந்தவாளைவாங்கிக்கொள்ளவும், வணிகன்பயந்து ஐயோ! இந்த ஆயுதமிருக்கிறபடியினால்தான் நான் இதுவரையிலும் பிழைத்திருந்தேன். இல்லாவிட்டால் இந்த யமன் அப்போதே வாயில்போட்டுக்கொள்ளுமே என, வேளாளர்கள் செட்டியாரே! நீர் ஒருவர் இறந்தால் உமக்காக நாங்கள் எழு

பதின்மரும் உயிர்விடுகிறோமென்று தேற்றி உள்ளே அனுப்பினார்கள். அவ்வாறு புகுந்தபொழுதே அந்தப்பேய் வணிகனைக் கிழித்துக் கொன்றுவிட்டுப் பின் அவன் தாய்போல் வேஷங்கொண்டு வந்து வேளாளர்களைப்பார்த்து, உங்களிடத்து வந்த என்மகனை என்னசெய்தீர்களென்று கேட்க, அவர்கள் செட்டிவருவானென்று வெகுநேரம் காத்திருந்தும் அவன் வராமையால் அம்மண்டபத்தின் கதவைத்திறந்து பார்த்தபொழுது அவனுடலம் கிழிக்கப்பட் டிறந்துகிடப்பதைக்கண்டு, அவர்கள் எழுபதுபேரும் தாங்கள் சொல்லிய சொல்தவறாமல் தீயில் குதித்து உயிரைக் கொடுத்தார்களென்பதாம்.

"மாறுகொடு பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
கூறியசொற் பிழையாது துணிந்து செந்தீக்
குழியிலெழு பதின்மர்களு முழுகிக் கங்கை
ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப
னண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற்
பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ." — என்னுந்திருத்

தொண்டர்புராண வரலாற்று னுணர்க. (௩)

ஆனை யாமென நீறுகண் டடிச்சேர னென்னுஞ்
சேனு லாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணி லாவுபூண் வயவர்கண் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு.

(இ-ள்.) சிவபெருமானது அருள்வடிவமென்று (ஒரு வண்ணான் ஆடையைவெளுக்க உழமண்மூட்டையைக்கொண்டுபோக அது அவனுடம்பிற் கசிவுற்றிருத்தலைத்) திருவெண்ணீறாகக்கண்டு அடியேன் சேரனென்று வணங்கிக்கூறிய நெடுந்தூரம் பரவிய கீர்த்தியையுடைய சேரமான்பெருமாணாயனார் அரசுசெய்திருந்த மலைநாட்டிலுள்ள ஒளிவீசுகின்ற ஆபரணங்களையணிந்த வணிகர்கள் மைத்துனராயிருக்கும் சம்பந்தத்தை விரும்ப நீடித்தமுறைமையையுடையது பெருமைபொருந்திய தொண்டைநாடு.—எ-று.

மலைநாட்டிலுள்ள வணிகர்கள் தொண்டைநாட்டாரை மைத்துன முறைகொண்டசரித்திரமாவது :—ஒரு காலத்தில் சேரநாட்டிலிருந்த வணிகசாதியார் ஒருகலகத்தால் தங்கள் இருப்பிடத்தினின்றும் பிரிந்துவேறு தேசத்திற்குக் குடிவாங்கினார்கள். அப்பொழுது அவர்கள் மரபில் ஒருபெண் விடுபட்டுத் தொண்டைநாட்டிலிருக்கும் வேளாளர்களிடத்து வந்து வளர்ந்துகொண்டிருக்க, பின்பு கலகந்தீர்ந்தவுடனே அந்த வணிகர்கள் தங்கள் ஊருக்குப்போய், தம் மரபினர் யாவரும் வந்து சேர்ந்தார்களோவென்று விசாரித்துப் பார்த்தபொழுது, ஒரு பெண்குறைந்திருக்கக்கண்டு தேடும்படி தேசமெங்குந்திரிந்து, காஞ்சிமண்டலத்தில் வந்து அந்தப் பெண்ணைக்கண்டு அழைத்துக்கொண்டு போகும்படி வளர்த்த வேளாளர்களைக் கேட்க, அவர்கள் நாங்கள் இதுவரையிலும் எங்கள் புத்திரிபோல வளர்த்து ஒரு பழுதுமின்றிக் காத்தோம், ஆதலால் நீங்கள் குறைவாகநினையா

மல் உங்கள் சாதியிற் சிறந்த ஒரு புருஷனுக்கு மணஞ்செய்து கொடுக்க ஒப்புக் கொள்வீர்களாயின் தடையின்றி அனுப்புவோமென்றார்கள். அதற்கு அவர்கள் அப்படியே சம்மதித்துத் தங்கள் குலத்திற் சிறந்த ஒரு பிள்ளைக்குக் கலியாணஞ் செய்து கொண்டு இவ் வேளாளர்களால் சீதன முதலானவைகளையும் பெற்றுத் தொண்டைநாட்டாரை மைத்துனமுறை கொண்டாடினார்களென்பதாம். இதனை,

"கொத்தலர் கோதை வியன்சேர மண்டலக் கொம்பைத்தம்பால்
வைத்திருந் தாங்கவ டன்கேளிர் நேடி வரவவர்க்கே
யுய்த்திரு வோர்க்கும் வரிசையு மாற்றி யுடனுஞ்சென்று
மைத்துனக் கேண்மை படைத்ததன் றேதொண்டை மண்டலமே."—

என்பதனாலுணர்க. (ச)

கறைவி ளங்கிய கண்டர்பாற் காதல்செய் முறைமை
நிறைபு ரிந்திட நேரிழை யறம்புரிந் ததனாற்
பிறைபு ரிஞ்செயிற் பதிபயில் பெருந்தொண்டை நாடு
முறைமை யாமென வுலகினின் மிகுமொழி யுடைத்தால்.

(இ-ள்.) கருநிறம் விளங்குகின்ற காளகண்டத்தையுடைய சிவபெருமானிடத்தில் அன்புசெய்கின்ற முறைமையானது நிறைவாக உமாதேவியார் முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்தபடியினால், சந்திரன் தவழ்ந்து செல்கின்ற மதில்சூழ்ந்த காஞ்சிபுரம் விளங்குதற்கிடமாகிய பெருமை பொருந்திய தொண்டைநாடானது, எல்லா நாடுகளைப் பார்க்கிலும் சிறந்த நீதியையுடையதாமென்று உலகத்தில் மேம்பட்டதாகிய ஒரு வார்த்தையையுடைத்தா யிருக்கின்றது. எ-று.

தாவில் செம்மணி யருவியா றிழிவன சாரல்
பூவில் வண்டினம் புதுநற வருந்துவ புறவம்
வாவி நீள்கயல் வரம்பிற வுகைப்பன மருதம்
நீவி நித்திலம் பரத்திய ருணக்குவ நெய்தல்.

(இ-ள்.) அத் தொண்டைநாட்டிலுள்ள மலைச்சாரலிலிருந்து குற்றமற்ற மாணிக்கங்களோடு அருவியாறுகள் இறங்குகின்றன; முல்லைநிலத்தில் மலர்களிலுள்ள புதிய தேனை வண்டின் கூட்டங்கள் உண்ணுகின்றன; மருதநிலத்தில் தடாகங்களிலுள்ள நீண்ட கெண்டைமீன்கள் வயல் வரம்புகள் இற்றுவிழும்படியாகப் பாய்கின்றன; நெய்தல்நிலத்தில் பரத்தியர்களால் முத்துக்கள் கழுவிஉலர்த்தப்படுகின்றன.—எ-று. (சு)

குறவர் பன்மணி யரித்திதை விதைப்பன குறிஞ்சி
கறவை யானிரை மானுடன் பயில்வன கானம்
பறவை தாமரை யிருந்திற வருந்துவ பழனஞ்
சுறவ முண்மருப் பணங்கயர் வனகழிச் சூழல்.

(இ-ள்.) குறிஞ்சிநிலத்திலுள்ள குறவர்களால் பல ரத்தினங்களையும் அரித்தெடுத்து காராமணிமுதலிய தானியங்கள்விதைக்கப்படுகின்றன; முல்லைநிலத்தில் கறக்கின்ற பசுக்கூட்டங்கள் மான்கூட்டங்களோடு சஞ்சரிக்கின்றன; மருதநில

த்தில் பறவைகள் தாமரைமலர்களிலிருந்து இருல்மீன்களைப் புசிக்கின்றன; கழியையுடைய நெய்தல்நிலத்தில் சுறுமீன்களினது முள்ளையுடைய கொம்புகளை தெய்வத்தின் அறிகுறியாக வைத்து திருவிழாக்கொண்டாடப்படுகின்றன.—எ-று. ()

கொண்டல் வானத்தின் மணிசொரி வனகுல வரைப்பாற்
றண்டு ணர்க்கொன்றை பொன்சொரி வனதள வயற்பால்
வண்டன் முத்தநீர் மண்டுகால் சொரிவன வயற்பாற்
கண்டன் முன்றுறைக் கரிசொரி வனகலங் கடற்பால்.

(இ-ள்.) மேகங்கள் ஆகாயத்திலிருந்து உயர்வாகிய மலைகளின்மேல் முத்துக்களைச் சொரிகின்றன; முல்லைநிலத்தின் அருகில் குளிர்ந்த பூங்கொத்துக்களையுடைய கொன்றைவிருட்சங்கள் மலர்களாகிய பொன்னைச் சொரிகின்றன; மருதநிலத்தில் நீர் விசையாகச் செல்கின்ற வாய்க்கால்கள் அந்தநிலத்துச் சிறுபெண்கள் விளையாடிச்சிந்திய முத்துக்களைக் கரையில் ஒதுக்குகின்றன; கடலினிடத்துள்ள கப்பல்கள் தாழைகளையுடைய துறைகளினிடத்தில் யானைகளைச் சொரிகின்றன.—எ-று.

கலம் கரிசொரிதலாவது,—வேறு தீபங்களிலுள்ள யானைகளைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு வந்து இறக்குதலாம். (அ)

தேனி றைந்தசெந் தினையிடி தருமலைச் சீறூர்
பானி றைந்தபுற் பதத்தன முல்லைநீள் பாடி
தூநெ லன்னநெய் கன்னலின் கனியதண் டுறையூர்
மீனி றைந்தபே ருணவின வேலைவைப் பிடங்கள்.

(இ-ள்.) குறிஞ்சிநிலத்திலிருக்கின்ற சிறிய ஊர்கள் தேன்விட்டுப் பிசைந்த சிவந்த தினைமாவைத் தன்னிடத்தில் வைத்திருக்கின்றன; முல்லைநிலத்திலிருக்கின்ற நீண்ட இடையர்பாடிகள் பால்விட்டுச் சமைத்த புல்லரிசிச் சோற்றையுடையனவா யிருக்கின்றன; குளிர்ந்த நீர்த்துறைகளையுடைய மருதநிலத்தூர்கள் பரிசுத்தமாகிய நெல்லரிசிச்சோறும், நெய்யும், கருப்பஞ்சாறும், இனிய பழங்களுமாகிய இவைகளை யுடையனவாயிருக்கின்றன; சமுத்திரச்சார்பாகிய நெய்தல்நிலத்தூர்கள் மீன்கள் கலந்த பெரிய உணவினையுடையனவாயிருக்கின்றன.—எ-று. (கூ)

குழல்செய் வண்டினங் குறிஞ்சியாழ் முரல்வன குறிஞ்சி
முழவு கார்கொள முல்லைகண் முகைப்பன முல்லை
மழலை மென்கிளி மருதமர் சேக்கைய மருத
நிழல்செய் கைதைசூழ் நெய்தலங் கழியன நெய்தல்.

(இ-ள்.) குறிஞ்சிநிலத்தில் (குறப்பெண்களுடைய) கூந்தலில் மொய்க்கின்ற வண்டின் கூட்டங்கள் குறிஞ்சியாழினிசையைப் பாடுகின்றன; முல்லைநிலத்தில் முழவப்பறைபோல மேகங்கள் முழங்க முல்லைச்செடிகள் அரும்புவிடுகின்றன; மருதநிலத்தில் மழலைச்சொற்களையுடைய மிருதுவாகிய கிளிப்பிள்ளைகள் மருதமரங்களைத் தமக்குத் துயிலிடமாகவுடையன; நெய்தல்நிலங்கள் நிழலைக்கொடுக்கின்ற தாழைகள் சூழ்ந்த நெய்தல்மலர்கள் மலர்ந்திருக்கும் கழிக்கரையையுடையன.—எ-று. (கO)

மல்கு மப்பெரு நிலங்களில் வரைபுணர் குறிஞ்சி
யெல்லை யெங்கணு மிறவுள ரேனன்முன் விளைக்கும்
பல்பெ ரும்புனம் பயில்வன படர்சிறைத் தோகை
சொல்லு மப்புனங் காப்பவுஞ் சுரிகுழற் றோகை.

(இ-ள்.) வளம்பொருந்திய முன்சொல்லிய அந்த நால்வகைநிலங்களில் மலையைச்சார்ந்த குறிஞ்சிநிலத்தின் இடங்களிலெல்லாம் குறவர்கள் தினைப்பயிரிடுகின்ற பல பெரிய தினைப்புனங்களில், படர்ந்த கலாபத்தையுடைய மயில்கள் சஞ்சரிக்கின்றன; புகழ்ந்து சொல்லப்பட்ட அந்தத் தினைப்புனங்களைக் காக்கின்றவர்களும் சுருண்ட கூந்தலையுடைய மயில்போலும் சாயலைப்பெற்ற குறமாதர்களாம்.—எ-று. (கக)

அங்கண் வான்மிசை யரம்பையர் கருங்குழற் சுரும்பு
பொங்கு பூண்முலைக் கொடிச்சியர் குழன்மூழ்கிப் போகாச்
செங்கண் மால்விடை யார்திருக் காளத்தி யென்னு
மங்குல் சூழ்வரை நிலவிய வாழ்வினுன் மல்கும்.

(இ-ள்.) அழகிய இடமகன்ற விண்ணுலகத்தில் வாழ்ந்திருக்கும் அரம்பை முதலிய தெய்வப்பெண்களினது கரிய கூந்தலில் மொய்க்கின்ற வண்டுகள் ஒளிவிளங்குகின்ற ஆபரணத்தையணிந்த ஸ்தனங்களையுடைய குறப்பெண்களினது கூந்தலில் விழுந்து (வாசனைமிகுதியால்) அக்கூந்தலைவிட்டு நீங்காதிருக்கின்ற சிவந்த கண்களையுடைய விஷ்ணுவாகிய ரிஷபத்தை வாகனமாகவுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்காளத்தியென்றுசொல்லப்பட்ட மேகங்கள் சூழ்ந்த மலையானது விளங்குகின்ற பல வளங்களினால் உயர்வுபெற்றிருக்கும்.—எ-று. ()

பேறு வேறுசூ ழிமையவ ரரம்பையர் பிறந்து
மாறில் வேடரு மாதரு மாகவே வணங்கும்
ஆறு சூழ்சடை யண்ணலார் திருவிடைச் சுரமுங்
கூறு மேன்மையின் மிக்கதந் நாட்டுவண் குறிஞ்சி.

(இ-ள்.) மோக்ஷத்தை விரும்பி வெவ்வேறாகச் சூழ்ந்து வலம்வருகின்ற தேவர்களும் தெய்வமாதர்களும், மாறுபாடில்லாத வேடர்களும் வேடிச்சிகளுமாகப் பிறந்து வணங்குகின்ற கங்கைநதிதங்கிய சடையினையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவிடைச்சுரமென்னும் ஸ்தலமும் புகழ்ந்து சொல்லத்தக்க மேன்மையோடு சிறந்திருக்கிறது; அத்தொண்டைநாட்டிலுள்ள வளப்பம்பொருந்திய குறிஞ்சிநிலத்தில்.—எ-று. (கங)

அம்பொன் வார்குழற் கொடிச்சிய ருடனர மகளிர்
வம்பு லாமலர்ச் சுனைபடிந் தாடுநீள் வரைப்பின்
உம்பர் நாயகர் திருக்கழுக் குன்றமு முடைத்தால்
கொம்பர் வண்டுசூழ் குறிஞ்சிசெய் தவங்குறை யுளதோ.

(இ-ள்.) அழகிய பொன்னிறமுள்ள மலர்களைமுடித்த கூந்தலையுடைய வேடப்பெண்களோடு தெய்வமாதர்கள் வாசனை வீசுகின்ற மலர்கள் நெருங்கிய

சுனைநீரில் படிந்து முழுகுகின்ற நீண்ட இடங்களையுடைய தேவர்களுக்கு நாயகரா கிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கழுக்குன்றமென்னும் ஸ்தலத்தையும் பூங்கொம்புகளினிடத்துள்ள வண்டுகள் சூழ்ந்திருக்கும் குறிஞ்சிநிலம் உடைத்தா யிருக்கின்றது; ஆதலால் அந்நிலம் செய்த தவமானது குறைவுள்ளதென்று சொல் லலாமோ.—எ-று. (கச)

கோல முல்லையுங் குறிஞ்சியு மடுத்தசில் லிடங்க
ணீல வாட்படை நீலிகோட் டங்களு நிரந்து
கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்
பாலை யுஞ்சொல்ல லாவன வுளபரன் முரப்பு.

(இ-ள்.) அழகிய முல்லைநிலத்தையும் குறிஞ்சிநிலத்தையும் அடுத்த சில இடங்கள் நீலநிறமுள்ள வாளாயுதத்தைப் பிடித்த காளியினது கோயில்களும் நெருங்கியுள்ளதாய்ப் பெரும்பொழுதாகிய வேனிற்காலத்தில் கொடிய பகற்பொ ழுதைச் சேர்த்துப் பாலைநிலமென்றுஞ் சொல்லப்படுகின்றன ;பருக்கைக்கற்களையு டைய சிலமேட்டுநிலங்கள்.—எ-று. (கரு)

சொல்லு மெல்லையின் புறத்தன துணர்ச்சுரும் பலைக்கும்
பலபெ ரும்புனற் கானியா றிடையிடை பரந்து
கொல்லை மெல்லிணர்க் குருந்தின்மேற் படர்ந்தபூம் பந்தர்
முல்லை மென்புதன் முயலுகைத் தடங்குநீண் முல்லை.

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கின்ற பூங்கொத்துக்களை அலைத்துக்கொண்டு ஓடிவருகின்ற வெள்ளமாகிய நீரையுடைய பல காட்டாறுகள் இடையிடையே பெருக்கெடுத்து முல்லைநிலத்திலுள்ள மிருதுவான துளிர்களையுடைய குருந்தமர த்தின்மேல் பூப்பந்தல்போலப் படர்ந்திருக்கின்ற முல்லைக்கொடிகளின் சிறியபுதரி லிருக்கும் முயல்களை ஓட்டித் தானும் தன் பெருக்கினின்றும் அடங்கும் நீண்ட முல்லைநிலம் முன்சொல்லிய குறிஞ்சிநிலத்தினது எல்லையின் புறத்திலுள்ளன.

பிளவு கொண்டதண் மதிநுதற் பேதைய ரெயிற்றைக்
களவு கொண்டது தளவெனக் களவலர் தூற்றும்
அளவு கண்டவர் குழனிறங் கனியுமக் களவைத்
தளவு கண்டெதிர் சிரிப்பன தமக்குமுண் டென்று.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய மூன்றாம்பிறையையொத்த நெற்றியையு டைய இடைச்சியர்களின் பற்களினழகை முல்லையரும்புகள் திருடிக்கொண்டன வென்று களாச்செடிகள் அலர்தூற்றுகின்றன ; அத்தன்மையையறிந்து அப்பெ ண்களினது கூந்தலின் நிறம்போலப் பழுத்திருக்கின்ற அக்களாச்செடியை முல் லைச்செடிகள் பார்த்துத்தமக்குச் சொல்லியதுபோல அவைகளுக்கும் திருட்டுத்த னம் உண்டென்று எதிரேசிரிக்கின்றன.—எ-று.

அலர்தூற்றல்—மலர்சிந்தலும், பழித்தலுமாம். சிரித்தல் — மலர்தலும், நகைத்தலுமாம். தளவு என்பது செடிக்கும் அரும்புக்கும், களவு என்பது செடிக் கும் பழத்துக்கும் முதல்சினை யொற்றுமைநயம்பற்றிக்கூறினர். (கஎ)

மங்கை யர்க்குவாள் விழியிணை தோற்றமான் குலங்கள்
எங்கு மற்றவ ரிடைக்கிடை மலர்க்கொடி யெங்கும்
அங்கண் முல்லையின் றெய்வமென் றருந்தமி ழுரைக்குஞ்
செங்கண் மாறொழுஞ் சிவன்மகிழ் திருமுல்லை வாயில்.

(இ-ள்.) அழகிய முல்லைநிலத்திற்குத்தெய்வமென்று அருமையாகிய பொருளிலக்கண நூலிற் சொல்லப்பட்ட சிவந்தகண்களையுடையவிஷ்ணுவானவர் தொழுகின்ற சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருமுல்லைவாயிலினிடத்து, இடைப்பெண்களினது வாள்போன்ற கண்களுக்குத் தோற்ற மான் கூட்டங்கள் எவ்விடத்தும் உள்ளன; அப்பெண்களின் இடைகளுக்குத் தோற்ற பூங்கொடிகள் எங்கும் படர்ந்திருக்கின்றன.—எ-று.

திருமால் முல்லைநிலக்கடவுளாதலின் 'அங்கண்முல்லையின் றெய்வமென் றருந்தமி ழுரைக்குஞ் - செங்கண்மால்' என்று கூறினார். இதனை,

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருதநெய் தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே." — என்பதனாலுணர்க.

நீறு சேர்திரு மேனியர் நிலாத்திகழ் முடிமேன்
மாறில் கங்கைதா னவர்க்குமஞ் சனந்தர வணைந்தே
யூறு நீர்தரு மொளிமலர்க் கலிகைமா நகரை
வேறு தன்பெரு வைப்பென விளங்குமா முல்லை.

(இ-ள்.) திருநீறு சேர்ந்து விளங்குகின்ற திருமேனியையுடைய சிவபெருமானது திருமுடியின்மேலுள்ள அழிவில்லாத கங்கையானது அப்பெருமானுக்குத் திருமஞ்சனநீரைக் கொடுக்கும்படியாக உலகத்தில்வந்து இடைவிடாமல் நீர் ஊறுகின்ற ஓர் தீர்த்தத்தைக்கொடுக்கின்ற ஒளி பொருந்திய மலர்களையுடைய திருவூறலென்னும் ஸ்தலத்தை வேறாகத் தனக்குப் பெரிய இடமாகக் கொண்டு முல்லைநிலம் விளங்குகின்றது.—எ-று.

திருவூறல் என்பது தக்கோலம். (கக)

வாச மென்மலர் மல்கிய முல்லைசூழ் மருதம்
வீசு தெண்டிரை நதிபல மிக்குயர்ந் தோடிப்
பாச டைத்தடந் தாமரைப் பழனங்கண் மருங்கும்
பூசல் வன்கரைக் குளங்களு மேரியும் புகுவ.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற மிருதுவாகியமலர்கள் நிறைந்த முல்லைநிலத்தையடுத்த மருதநிலத்தில் தெளிவாகிய அலைவீசுகின்ற அநேக நதிகள் மிகுதியாக வெள்ளம் பெருகிப்பாய்ந்து பசுமைபொருந்திய இலைகள்தங்கிய விசாலமாகிய தாமரை

மலர்களையுடைய வயல்களிலும், அலைமோதுகின்ற வலிய கரைகளையுடைய குளங்களிலும், ஏரிகளிலும் புகுகின்றன.—எ-று. (௨0)

துங்க மாதவன் சுரபியின் திருமுலை சொரிபால்
பொங்கு தீர்த்தமாய் நந்திமால் வரைமிசைப் போந்தே
யங்க ணித்திலஞ் சந்தன மகிலொடு மணிகள்
பங்க யத்தட நிரைப்பவந் திழிவது பாலி.

(இ-ள்.) உயர்வாகிய தவத்தினையுடைய வசிட்டமுனிவரது காமதேனுவின் திருமுலையினின்றும் சொரிந்த பாலானது பெருமைபொருந்திய தீர்த்தமாய் நந்திபர்வதத்தினின்றும் பூமியில் இழிந்து, அவ்விடத்திலுள்ள முத்துக்களையும், சந்தனக்கட்டைகளையும், அகிற்கட்டைகளோடு இரத்தினங்களையும் தாமரைத் தடாகங்களில் கொண்டுவந்து நிறைக்கும்படி இறங்குகின்றது பாலாறானது.

முன்பு ஒரு காலத்தில் சிறந்த தவச்செல்வராகிய வசிட்டமகாமுனிவர் நந்திமலையில் இருந்தபொழுது அவருக்கு ஏவற்றொழில் செய்துகொண்டிருந்த காமதேனுவானது சிவபெருமான் ஊர்ந்தருளுகின்ற விடைத்தேவரைக்கண்டு விருப்பங்கொண்டதை அம்முனிவ ரறிந்து ஒரு தருப்பையை யெடுத்து மந்திரித்து இளங்கன்றாகச்செய்து செல்லவிட, காமதேனுவானது அதனைப் பார்த்து மனங் கனிந்து தனது முலைப்பாலை அம்மலையில் சொரிய, அது ஒரு தீர்த்தமாய்ப் பாலாறு என்னும் பெயரோடு சென்றது என வறிக. (௨க)

பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய்போல்
மள்ளர் வேனிலின் மணற்றிடர் பிசைந்துகை வருட
வெள்ள நீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப்
பள்ள நீள்வயற் பருமடை யுடைப்பது பாலி.

(இ-ள்.) குழந்தைகள் தடவ மிகுந்த பாலைச்சொரிகின்ற முலையையுடைய தாயைப்போல, உழவர்கள் வேனிற்காலத்தில் அந்நதியிலுள்ள மணல் மேடுகளைக் கையினால் தோண்டி மணல்களை வாரி ஊற்றுண்டாக்க, அதனால் வெள்ளமாகப் பெருகுகின்ற நீரானது இரண்டு பக்கங்களிலுமுள்ள வாய்க்கால்களில் நிறைந்து சென்று, பள்ளமாகிய நீண்ட வயல்களிலுள்ள பருத்த நீர்மடைகளை யுடைப்பதற்குக் காரணமாயிருக்கின்றது பாலாறு.—எ-று.

இதனால், இப்பாலாறானது வேனிற்காலத்தும் ஊற்றுநீர் மிகுதியால் உழவர்கள் பயிரிடுதற்கு உதவியாயிருக்கின்றதென்பது கூறியதாயிற்று (௨௨)

அனைய வாகிய நதிபரந் தகன்பணை மருங்கிற்
கனைநெ டும்புன னிறைந்துதிண் கரைப்பெருங் குளங்கள்
புனையி ருங்கடி மதகுவாய் திறந்திடப் புறம்போய்
வினைஞ ரார்ப்பொலி யெடுப்பநீர் வழங்குவ வியன்கால்.

(இ-ள்.) அப்படிப்பட்ட மேன்மையை யுடைய பாலாறானது பெருகுதலால் விசாலமாகிய வயல்களின் பக்கத்திலுள்ள வலி

ய கரைகளையுடைய பெரிய குளங்களில் ஒலிக்கின்ற மிகுந்த நீரானது நிறைந்து அவைகளுக்குக் கட்டப்பட்ட பெரிய காவலையுடைய மதகுகளும் உடைத்துக் கொள்ளும்படி புறத்திற் போய் உழவர்கள் ஆரவாரஞ்செய்ய விசாலமாகிய கால்வாய்கள் நீரைக்கொடுக்கின்றன.—எ-று. (உ௩)

மாறில் வண்பகட் டேர்பல நெருங்கிட வயல்கள்
சேறு செய்பவர் செந்நெலின் வெண்முளை சிதறி
நாறு வார்ப்பவர் பறிப்பவர் நடுபவ ரான
வேறு பல்வினை யுடைப்பெருங் கம்பலை மிகுமால்.

(இ-ள்.) மாறுபாடில்லாத வளத்தினையுடைய எருமைக்கடாக்களைப் பூட்டிய பல ஏர்கள் வயல்களில் நெருங்க அவ்வயல்களைச் சேறுசெய்கின்றவர்களும், சம்பாநெல்லினது வெண்மையாகிய முளைகளை விதைத்து நாற்று விடுகின்றவர்களும், அந்த நாற்றைப் பறிக்கின்றவர்களும், அதனைநடுகின்றவர்களுமாகிய வெவ்வேறான பலதொழில்களையுடைய (உழவர்களினது) பெரியமுழக்கம் அதிகரித்திருக்கும்.

வரும்பு னற்பெருங் கால்களை மறித்திட வாளை
பெருங்கு லைப்பட விலங்குவ பிறங்குநீர்ப் பழன
நெருங்கு சேற்குல முயர்த்துவ நீள்கரைப் படுத்துச்
சுருங்கை நீர்வழக் கறுப்பன பருவராற் றொகுதி

(இ-ள்.) நீர் வருகின்ற பெரிய கால்வாய்களை வாளைமீன்கள் அணைபோல் குறுக்கிட்டு மறிக்க, அந்த நீர் பெரிய கரை உடைபட்டுப்போகும்படி விலங்கிப் போகின்றன; விளங்குகின்ற நீரையுடைய வயல்களில் நெருங்கியிருக்கின்ற கெண்டைமீன்கள் அவ்வுடைபட்ட நீண்ட கரைவழியாக நீர் வராமல் ஒன்றின்மேலொன்றாகப் படுத்து உயர்த்துகின்றன; பருத்த வரால்மீன்களின் கூட்டம் மதகுகளிலிருந்து நீர்வரும் வழக்கத்தை அவ்வாறு வரவொட்டாமல் அதில் புகுந்து அடைக்கின்றன.—எ-று.

சுருங்கை = நீர்வரும் சிறுவழி. (உ௫)

தளைத்த டம்பணை யெழுந்தசெந் தாமரைத் தவிசின்
இளைத்த சூல்வளை கண்படுப் பனவிடை யெங்கும்
விளைத்த பாசொளி விளங்குநீள் விசும்பிடை யூர்கோள்
வளைத்த மாமதி போன்றுள மருதநீர் வைப்பு.

(இ-ள்.) எவ்விடத்திலும் தளைகளாயிருக்கின்ற விசாலமாகிய வயல்களில் முளைத்த செந்தாமரைமலர்களாகிய ஆசனத்தில் சூல்கொண்டிருத்தலால் இளைப்பையடைந்த சங்குகள் நித்திரைசெய்துகொண்டிருப்பன, அவை பசிய ஒளிவிளங்குகின்ற நீண்ட ஆகாயத்தில் பரிவேடத்தால் வளைக்கப்பட்ட பூரணசந்திரனையொத்திருந்தன; நீர்வளம் பொருந்திய மருதநிலத்தில்.—எ-று. (உ௬)

ஓங்கு செந்நெலின் புடையன வுயர்கழைக் கரும்பு
பூங்க ரும்பயன் மிடைவன பூகமப் பூகப்

பாங்கு நீள்குலைத் தெங்குபைங் கதலிவண் பலவுந்
தூங்கு தீங்கனிச் சூதநீள் வேலிய சோலை.

(இ-ள்.) ஓங்கி வளர்ந்திருக்கின்ற செந்நெற்பயிரின் பக்கத்தில் உயர்வாகிய கரும்புகளிருக்கின்றன; பொலிவினையுடைய அக்கரும்புகளின் பக்கத்தில் கமுக மரங்கள் நெருங்கியிருக்கின்றன; அக்கமுகமரங்களின் பக்கத்தில் நீண்ட குலையினையுடைய தென்னமரங்களும், பசுமையாகிய வாழைமரங்களும், வளம்பொருந்திய பலாமரங்களும், தொங்குகின்ற மதுரமான கனிகளையுடைய மாமரங்களுமாகிய இவைகளின் நீண்ட சோலைகள் வேலியாக இருக்கின்றன.—எ-று.

கழைக்கரும்பு = மீமிசை. (உஎ)

நீடு தண்பணை யுடுத்தநீண் மருங்கின நெல்லின்
கூடு துன்றிய விருக்கைய விருந்தெதிர் கொள்ளும்
பீடு தங்கிய பெருங்குடி மனையறம் பிறங்கு
மாட மோங்கிய மறுகன மல்லன்மூ தூர்கள்.

(இ-ள்.) வளப்பந் தங்கிய பழமையாகிய ஊர்கள் குளிர்ச்சிபொருந்திய பெரிய வயல்கள் சூழ்ந்த நீண்ட பக்கங்களையுடையனவாயும், நெற்கூடுகள் நெருங்கிய வீடுகளையுடையனவாயும், வந்த விருந்தினரை எதிர்கொண் டழைத்துவருகின்ற பெருமைபொருந்திய பெரிய குடிகளின் இல்லறமானது விளங்கியிருக்கும் மாளிகைக ளுயர்ந்த வீதிகளை யுடையனவாயு மிருக்கின்றன.—எ-று. (உஅ)

தொல்லை நான்மறை முதற்பெருங் கலையொலி துவன்றி
இல்ல றம்புரிந் தாகுதி வேள்வியி லெழுந்த
மல்கு தண்புகை மழைதரு முகிற்குலம் பரப்புஞ்
செல்வ மோங்கிய திருமறை யவர்செழும் பதிகள்.

(இ-ள்.) பழமையாகிய நான்கு வேதங்கள் முதலாகிய பெருமைபொருந்திய சாஸ்திரங்களை ஓதுதலா லுண்டாகிய ஒலிகள் நிறைந்து இல்லறத்தை நடத்தி ஆகுதிகளைச்செய்யும் யாகத்தி லுண்டாகிய குளிர்ச்சியாகிய மிகுந்த புகையானது மழையைப் பெய்கின்ற மேகக்கூட்டங்களோடு படர்ந்து செல்கின்ற பலவகைச்செல்வங்களால் மேன்மைபெற்றிருக்கின்ற பிராமணர்களின் செழுமைபொருந்திய ஊர்களிருக்கின்றன.—எ-று. (உகூ)

தீது நீங்கிடத் தீக்கலி யாமவு ணற்கு
நாதர் தாமருள் புரிந்தது நல்வினைப் பயன்செய்
மாதர் தோன்றிய மரபுடை மறையவர் வல்லம்
பூதி சாதனம் போற்றிய பொற்பினால் விளங்கும்.

(இ-ள்.) (விஷ்ணுவின் சக்கரத்தினால் இறக்கும்படிநேரிட்ட) தீங்குநீங்கும்படி தீக்கலியென்னும் அசுரனுக்குச் சிவபெருமான் அனுக்கிரகஞ் செய்ததாய், நல்வினைகளின் பயனையே தமக் குரித்தாகச் செய்தொழுகும் மாதர்கள் பிறந்த மரபினையுடைய பிராமணர்கள் வாழ்கின்ற திருவல்லமென்னும் ஸ்தலமானது

விபூதிமுதலாகிய மோக்ஷசாதனத்தை அனுஷ்டித்துவருகின்ற அழகினல் விளங்கியிருக்கும்—எ-று.

'நல்வினைப் பயன்செய் - மாதர்தோன்றிய மரபுடை மறையவர்' என்பதன் வரலாறு, ஒருபிராமணன் தனக்குப் புத்திரிகளே யன்றிப் புத்திரப்பேறில்லையென்றறிந்து சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்ய அக்கடவுள் எழுந்தருளி அவ் வேதியனைப் பார்த்து உனக்குப் புத்திரிகளேயன்றிப் புத்திரனில்லையென்று அருளிச்செய்ய, அவன் எமது ஆண்டவரோ! தேவரீருக்குரிய திருத்தொண்டு செய்யும்படி அப்புத்திரிகள் பிறக்க வரந்தரவேண்டுமென்று பிரார்த்தித்துப் பெற்றுக்கொண்டு இல்லறம் நடத்திப் புத்திரிகளைப் பெற்று மேன்மைபெற்றிருந்தான் என்பதாம். (௬0)

அருவி தந்தசெம் மணிகளும் புறவிலாய் மலரும்
பருவி யோடைக ணிறைந்திழி பாலியின் கரையின்
மருவு கங்கைவாழ் சடையவர் மகிழ்ந்தமாற் பேறும்
பொருவில் கோயிலுஞ் சூழ்ந்ததப் புறம்பணை மருதம்.

(இ-ள்.) மலைச்சாரலிலிருந்து வருகின்ற அருவிகள் கொழித்துவந்த சிவந்த இரத்தினங்களையும், முல்லைநிலத்திலிருந்து பறிக்கப்பட்ட மலர்களையும் கலந்துகொண்டு ஓடைகளில் நிறைந்து ஓடுகின்ற பாலாற்றின் கரையிலிருக்கின்ற கங்கைதங்கிய சடையினையுடைய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருமாற்பேறு என்னும் ஒப்பற்ற திருக்கோயிலும் இருக்கப்பெற்றது, வயல்களைப் புறத்திலுள்ள அந்த மருதநிலம்.—எ-று. (௬௧)

விரும்பு மேன்மையென் பகர்வது விரிதிரை நதிகள்
அருங்க ரைப்பயில் சிவாலய மனேகமு மணைந்து
பருங்கை யானையை யுரித்தவ ரிருந்தவப் பாசூர்
மருங்கு சூழ்தவம் புரிந்ததன் றேமற்ற மருதம்.

(இ-ள்.) விரிந்த அலைகளையுடைய பாலாறு முதலிய நதிகளின் அருமையாகிய கரையிலிருக்கின்ற அநேகஞ் சிவாலயங்களைத் தன்னிடத்தி லுடைத்தாய்ப் பருத்த துதிக்கையையுடைய கயாசுரனென்னும் யானையை உரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் அந்தத் திருப்பாசூர் என்னும் ஸ்தலமும் தன்னிடத்தி லிருக்கத்தக்க தவத்தை மருதநிலம் செய்திருக்கின்றபடியால் யாவராலும் விரும்பத்தகுந்த அந்நிலத்தின் மேன்மையை விசேஷமாக எடுத்துச் சொல்ல வேண்டியது என்ன இருக்கின்றது.—எ-று. (௬௨)

பூம ருங்புனல் வயற்களம் பாடிய பொருநர்
தாம ருங்கிளை யுடன்றட மென்மலர் மிலைந்து
மாம ருங்குதண் ணீழலின் மருதயாழ் முரலுங்
காமர் தண்பணைப் புறத்தது கருங்கழி நெய்தல்

(இ-ள்.) பூக்கள் மருவிய நீரையுடைய மருதநிலத்தின் போர்க்களத்தைக்குறித்து மருதப் பண்ணைப் பாடுகின்ற உழவர்கள் நெருங்கிய சுற்றத்தாரோடு

தடாகங்களிலுள்ள மெல்லிய மலர்களைத் தரித்துக்கொண்டு மாமரத்தினது குளிர்ந்த நிழலிலிருந்து மருதயாழை வாசிக்கின்ற அழகிய குளிர்ந்த வயல்களின் புறத்திலுள்ளது கருமையாகிய கழிகளையுடைய நெய்தல்நிலம்.—எ-று.

ஈண்டு வயற்களம் என்றது வயல்களில் நெற்போர் தெளிக்கும் களத்தை எனவறிக. (ருரு)

தூய வெண்டுறைப் பரதவர் தொடுப்பன வலைகள்
சேய நீள்விழிப் பரத்தியர் தொடுப்பன செருந்தி
யாய பேரளத் தளவர்க ளளப்பன வுப்பு
சாயன் மென்னடை யளத்திய ரளப்பன தரளம்.

(இ-ள்.) (நெய்தல்நிலத்தில்) தூய்மையாகிய வெள்ளிய மணலையுடைய கடற்கரைகளில் பரதவர்களால் வலைகள் பின்னப்படுகின்றன; செவ்வரிபரந்த நீண்ட கண்களையுடைய பரத்தியர்களால் செருந்திமலர்கள் மாலையாகத் தொடுக்கப்படுகின்றன; அந்நிலத்திலுள்ள பெரிய அளங்களில் அளவர்களால் உப்பு அளக்கப்படுகின்றன; மயில்போன்ற சாயலையும் மிருதுவாகிய நடையையுமுடைய அளத்தியர்களால் முத்துக்கள் அளக்கப்படுகின்றன.—எ-று. (ருச)

கொடுவி னைத்தொழி னுளையர்கள் கொடுப்பன கொழுமீன்
படும ணற்கரை நுளைச்சியர் கொடுப்பன பவளந்
தொடுக டற்சங்கு துறையவர் குளிப்பன வவர்தம்
வடுவ கிர்க்கண்மங் கையர்குளிப் பனமணற் கேணி.

(இ-ள்.) கொடிய தொழிலைச் செய்கின்ற நுளையர்களால் கொழுமையாகிய மீன்கள் விற்கப்படுகின்றன; மிகுந்த மணற்கரைகளிலிருந்து நுளைச்சியர்களால் பவளம் விற்கப்படுகின்றன; சகரர்களால் தோண்டப்பட்ட கடலிலுள்ள சங்குகள் அத்துறையிலுள்ள நுளையர்களால் குளித்தெடுக்கப்படுகின்றன; அவர்களுடைய மாவடுவின் பிளப்பினையொத்த கண்களையுடைய பெண்களால் மணற்கேணிகள் குளிக்கப்படுகின்றன —எ-று. (ருரு)

சுழிப்பு னற்கட லோதமுன் சூழ்ந்துகொண் டணிய
வழிக்க ரைப்பொதிப் பொன்னவிழ்ப் பனமலர்ப் புன்னை
விழிக்கு நெய்தலின் விரைமலர்க் கட்சுரும் புண்ணக்
கழிக்க ரைப்பொதி சோறவிழ்ப் பனமடற் கைதை.

(இ-ள்.) சுழித்தலையுடைய நீர் நிறைந்த சமுத்திரத்தின் பெருக்கானது முற்பட்டுச்சூழ்ந்து தரித்துக்கொள்ளும்படி அந்நீர்செல்லும் வழிக்கரையிலிருக்கும் புன்னைமரங்கள் பொன்னிறமாகிய புஷ்பங்களை மலர்கின்றன; கண்போலத் தோன்றுகின்ற வாசனைபொருந்திய நெய்தற்பூவிலுள்ளவண்டுகள் உண்ணும்படி கடற்கரையிலிருக்கும் மடலையுடைய தாழைகள் தம்முடைய மலர்களிலிருந்து கட்டுச்சோறுகளை அவிழ்க்கின்றன.—எ-று.

சோறவிழ்த்தல்=பொடிகளைச் சிந்துதல். (ருசா)

காயல் வண்கரைப் புரைநெறி யடைப்பன கனிமுட்
சேய தண்ணறுஞ் செழுமுகை செறியுமுண் டகங்கள்
ஆய நுண்மணல் வெண்மையை மறைப்பன வன்னந்
தாய முன்றுறைச் சூழல்சூழ் ஞாழலின் றுது.

(இ-ள்.) கழிகளின் வளப்பமாகிய கரையிலுள்ள குற்றமானவழிகளை மிருதுவானமுட்கள் நிறைந்த சிவந்த குளிர்ச்சியோடு கூடிய செழுமையாகிய முகையையுடைய தாழைகள் அடைக்கின்றன; அன்னங்கள் தாவி விளையாடுகின்ற துறையையுடைய நெய்தல் நிலத்திலிருக்கும் சோலையைச்சூழ்ந்த ஞாழல் மலர்களின் தாதுக்கள் கடற்கரையிலிருக்கின்ற நுண்மையாகிய மணல்களின் வெண்மையை மறைக்கின்றன.—எ-று. (௩௭)

வாம்பெ ருந்திரை வளாகமுன் குடிபயில் வரைப்பிற்
றூம்ப ரப்பிய கயல்களின் விழிக்கய றவிரக்
காம்பி னேர்வருந் தோளியர் கழிக்கயல் விலைசெய்
தேம்பொ திந்தசின் மழலைமென் மொழியசெவ் வழியாழ்.

(இ-ள்.) மோதுகின்ற பெரிய அலைகளையுடைய கடற்கரையில் பரதவர்கள் குடியிருக்குமிடங்களில் அவர்கள் பரப்பிக்காயப்போட்டிருக்கின்ற கெண்டைமீன்களுள் கண்களாகிய கெண்டைகள் நீங்க, மூங்கிலை யொத்த தோள்களையுடைய நுளைச்சியர்கள் அந்தக்கழியிற் பிடித்தகயல்களை விற்கின்ற தேன்போல இனிமையாகிய சிறியமழலைச்சொல்லுக்கு ஒப்பாக அந்நிலத்துச்செவ்வழியாழ் வாசிக்கப்படுகின்றன.—எ-று. (௩௮)

மருட்கொ டுந்தொழின் மன்னவ னிறக்கிய வரியை
நெருக்கி முன்றிரு வொற்றியூர் நீங்கலென் றெழுதும்
ஒருத்தர் தம்பெருங் கோயிலி னொருபுறஞ் சூழ்ந்த
திருப்ப ரப்பையு முடையதத் திரைக்கடல் வைப்பு.

(இ-ள்.) மயக்கத்தோடு கொடுந்தொழிலைச் செய்யக்கருதியமாந்தா என்னும் அரசனானவன் (எல்லாச்சிவாலயங்களுக்கும் ஏற்படுத்தியபடித்திட்டத்தைக்) குறைப்ப, (அவ்வாறு குறைத்தெழுதப்பட்ட) ஏட்டின்முன்வரியை நெருக்கித் திருவொற்றியூர் நீங்கலாகவென்று எழுதிய ஒப்பற்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும்பெரிய திருக்கோயிலுக்கு ஒருபக்கத்தில் சூழ்ந்திருக்கும் திருவெல்லையையுமுடையது மேற்சொல்லிய அலைகளையுடைய கடலின் இடமாகிய நெய்தல் நிலம்.—எ-று.

திருவொற்றியூர் நீங்கலென்றெழுதிய சரித்திரமாவது:— முன்பு ஒருகாலத்தில் மாந்தா என்னும் அரசனானவன் அயோத்தியாபுரியை நீதியோடு அரசாட்சி செய்துவரும் நாள்களில் தனக்கு முதுமைப்பருவம்வந்து தேகந் தளர்ந்து கைகால்கள் நடுக்கமுற்று மிகுந்த வருத்தத்தோடு அரசாட்சிசெய்கின்றவன் ஒருநாள் தன்னருகிலிருக்கும் சில வஞ்சகரைப்பார்த்து மூப்புப்பருவமடைந்த இந்த உடலுடனே யிருந்து நான் வருந்தாவண்ணம் இறக்குமுறைமையைச் சொல்லுங்களென்ன, அவர்கள் மகாராசாவே! நீர்முன்னம் செய்துள்ள சிவ புண்ணியங்களை

லாம் அழிந்து போவதற்குக்கட்டளையிட்டால் இப்போதே உமது உயிர் தொலைந்துபோமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட அரசன் தன் சபையிலிருக்கும் கருணீகனைப்பார்த்து யான் செய்துவருகின்ற தருமங்களையெல்லாம் ஒழித்துவிட்டால் என்உயிர் போய்விடுமென்று சொல்லுகிறார்கள்; ஆதலால் யான் சிவாலயங்களுக்குச் செய்துவரும் தருமங்களைக் குறைத் தெழுதி என்னெதிரில் கொண்டுவாவென்றான். அதனைக்கருணீகன்கேட்டுத் தேவாலயக்கணக்குக் கட்டுகளை யெடுத்து அங்கங்கும் செய்துவருகின்ற தருமங்களைக்குறைத்து எழுதி அவைகளை அரசன்கையிற் கொடுக்கப்பார்த்து அந்தக் கையேட்டின் வரிமத்தியில் "திருவொற்றியூர் நீங்கல்" என்று எழுதியிருப்பதைக்கண்டு நாம் சொல்லாமல் இவன் இவ்வாறு எழுதிக்கொண்டுவந்து கொடுத்தான் ஆதலால் இவனைச் சிரச்சேதஞ் செய்யுங்களென்று கோபித்தபொழுது,கருணீகன்பார்த்து மகாராஜாவே! இஃது அடியேன் எழுதியதல்லவென்று விண்ணப்பஞ்செய்ய, அரசன் அவன் கையெழுத்தினையும் திருவொற்றியூர் நீங்கல் என்றிருப்பதையும் ஒத்துப்பார்த்து ஒருகையெழுத்தல்லவென்று தெளிந்து அவ்வாறு எழுதியிருப்பதை அழித்துவிட்டு அதனைத் தன்னரண்மனையிற் காவல்செய்துவைத்து மறுநாள் எடுத்துப்பார்க்க முன்போலவே எழுதியிருக்கக்கண்டு ஆச்சரியமடைந்து, இது அத்திருவொற்றியூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது கையெழுத்தேயென்றுணர்ந்து இதுவரையில் அவ் வெம்பெருமானைத் தரிசித்தோமில்லையென்று சிந்தித்து, தன் மனைவியுடன் திருவொற்றியூரையடைந்து ஆலயத்தினுள்ளிருக்கும் பிரமதீர்த்தத்தில் முழுகிப் பலகைநாதரைத் தரிசித்து வந்தான். இவ்வாறு அவ்விருவர்களும் செய்துவந்ததனால் தங்கள் முதுமைப்பருவம் நீங்கி இளமைப்பருவமடைந்தார்கள். பின்பு அவ்வரசன் படம்பக்கநாதரைப் பலவகையாகத்துதித்து அவ்வாலயத்துள் ஒரு சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து அப்பெருமானுக்கு இளமைதந்த நாயனாரென்று திருநாமஞ்சாத்திப் பல தருமங்களைச்செய்து பின் தன் நகரத்தையடைந்து நெடுங்காலம் அரசாண்டு தன் மனைவியுடன் சிவபதமடைந்தான் என்பதாம். இறக்கிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (௩௬)

மெய்த ரும்புகழ்த் திருமயி லாபுரி விரைசூழ்
மொய்த யங்குதண் பொழிற்றிரு வான்மியூர் முதலாப்
பைத ரும்பணி யணிந்தவர் பதியெனைப் பலவால்
நெய்த லெய்தமுன் செய்தவங் நிறைதவஞ் சிறிதோ.

(இ-ள்.) மெய்ம்மையாகிய புகழினையுடைய திருமயிலையும், வாசனைவீசுகின்ற நெருங்கிய குளிர்ச்சிபொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவான்மியூரும் முதலாகப் படத்தையுடைய சர்ப்பத்தை ஆபரணமாக அணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் வேறு பலதிருப்பதிகளும் இருக்கின்றன; ஆதலால், நெய்தல்நிலமானது அத்திருப்பதிகளைத் தன்னிடத்திலுடைத்தாயிருக்கும்படி முன்னே செய்ய நிறைந்த தவமானது குறைவானதோ? அன்று.—எ-று. (௪0)

கோடு கொண்டெழுந் திரைக்கடற் பவளமென் கொழுந்து
மாடு மொய்வரைச் சந்தனச் சினைமிசை வளரு
நீடு நெய்தலுங் குறிஞ்சியும் புணர்நிலம் பலவால்
ஆடு நீள்கொடி மாடமா மல்லையே யனைய.

(இ-ள்.) அலைகளையுடைய சமுத்திரத்தில் கொம்புகளாகக் கிளைத் தெழுகின்ற பவளக்கொடிகளின் மிருதுவாகிய கொழுந்துகள் பக்கத்திலெருங்கிய மலைகளிலிருக்கும் சந்தனமரத்தின் கிளைகளின்மேல் வளர்கின்ற நீண்ட நெய்தல் நிலமும் குறிஞ்சிநிலமும் மயங்கியிருக்கும் நிலங்கள் பலவுள்ளன; அவை நீண்டகொடிகள் ஆடுகின்ற மாளிகைகளையுடைய மல்லைநகரத்தை ஒத்திருக்கின்றன.—எ-று.

மல்லை=மாவலிபுரம்; அது மலையையுடையதாய்க் கடற்கரையிலிருக்கின்றமையால் 'மல்லையேயனைய' என்று கூறினர். (௪க)

மலைவி ழிப்பன வெனவயற் சேல்வரைப் பாறைத்
தலையு கைப்பவுந் தளைச்செறு விடைநெடுங் கருமான்
கலைகு திப்பன கரும்பகட் டேர்நிகர்ப் பவுமாய்
அலைபு னற்பணை குறிஞ்சியோ டணைவன வனேகம்.

(இ-ள்.) மருதநிலத்திலிருக்கின்ற சேல்மீன்கள் மலைகள் கண்ணைத்திறந்து பார்த்தல்போல் மலைப்பாறைகளில் பாய்ந்து புரளவும், தலைகளாகத் தடுத்திருக்கின்ற வயல்களையுடைய மருதநிலத்தில் நீண்ட கருமையாகிய கலைமான்கூட்டங்கள் குதிப்பது அந்நிலத்திலுள்ள ஏரில்பூட்டும் கரிய எருமைக்கடாக்களை ஒப்பனவுமாகி அலைவீசுகின்ற நீரையுடைய மருதநிலம் குறிஞ்சிநிலத்தோடு மயங்கியிருக்குமிடங்கள் பல இருக்கின்றன.—எ-று. (௪உ)

புணர்ந்த வானிரைப் புறவிடைக் குறுமுயல் பொருப்பின்
அணைந்த வான்மதி முயலினை யினமென வணைந்து
மணங்கொள் கொல்லையில் வரகுபோர் மஞ்சன வரைக்கார்
இணைந்து முல்லையுங் குறிஞ்சியுங் கலப்பன வெங்கும்.

(இ-ள்.) பசுமந்தைகள்நெருங்கியிருக்கின்ற முல்லைநிலத்திலிருக்கும் சிறிய முயலானது மலையில் தவழ்ந்துபோகின்ற வெண்மையாகிய சந்திரனிடத்திலுள்ள முயலைத் தன் இனமென்று நினைத்துச் சேர்தலினாலும், வாசனைபொருந்திய முல்லைநிலத்திலிருக்கும் வரகுபோர்களில் மலைகளிலிருக்கும் கரிய மேகங்கள் சேர்தலினாலும் முல்லைநிலமும் குறிஞ்சிநிலமும் எவ்விடத்திலும் கலந்திருக்கின்றன. ()

கவரு மீன்குவை கழியவர் கானவர்க் களித்துச்
சிவலுஞ் சேவலு மாறியுஞ் சிறுகழிச் சியர்கள்
அவரை யேனலுக் கெயிற்றியர் பவளமுத் தளந்தும்
உவரி நெய்தலுங் கானமுங் கலந்துள வொழுக்கம்.

(இ-ள்.) நெய்தல் நிலத்திலுள்ள பரதவர்கள் தாங்கள்பிடித்த மீன்குவியலை முல்லை நிலத்திலிருக்கும் இடையர்களுக்குக்கொடுத்து அவர்களிடத்துள்ள கவுதாரியையும் சேவலையும் மாறிக்கொள்ளுதலினாலும், சிறிய நெய்தனிலப்பெண்கள் அவரைக்கும் தினைக்கும், இடைச்சியர்களுக்குப் பவளத்தையும் முத்தையும் அளந்து கொடுத்தலினாலும் கடற்கரையிலிருக்கின்ற நெய்தல்நிலமும் முல்லைநிலமும் தொழிலினால் கலந்திருக்கின்றன.—எ-று.

நெய்தலுங் குறிஞ்சியும் மயங்குதல் முன்கூறினமையால், இச்செய்யுளில் நெய்தலும் முல்லையுங் கூறினாராதலின் கானவர் எயிற்றியர் என்பதற்கு இடையர் இடைச்சியர் என்று பொருள்கூறினும். (௪௪)

அயன றும்புற வினிவிடைச் சியரணி நடையும்
வியனெ டும்பணை யுழத்தியர் சாயலும் விரும்பி
இயலு மன்னமுந் தோகையு மெதிரெதிர் பயில
வயலு முல்லையு மியைவன பலவுள மருங்கு.

(இ-ள்.) சமீபத்திலிருக்கும் நல்ல முல்லைநிலத்திலுள்ள இடைச்சியர்களுடைய அழகிய நடையையும், விசாலமாகிய நீண்ட மருதநிலத்திலிருக்கின்ற உழத்தியர்களுடைய உடம்பின் சாயலையும் விரும்பி நடக்கின்ற அன்னமும் மயிலும் ஒன்றற்கொன்று எதிரெதிராகச் சஞ்சரிக்க மருதநிலமும் முல்லைநிலமும் அடுத்திருக்கும் இடங்கள் பலவுள்ளன; அத்தொண்டைநாட்டில்.—எ-று. (௪௫)

மீளு மோதமங் கொழித்தவெண் டரளமுங் கமுகின்
பாளை யுக்கவும் விரவலிற் பரத்தியர் பணைமென்
றோளு ழத்தியர் மகளிர்மா றாடிமுன் றொகுக்கு
நீளு நெய்தலு மருதமுங் கலந்துள நிலங்கள்.

(இ-ள்.) கரையிற்போய்த் திரும்பிவருகின்ற கடற்பெருக்கானது அக்கரையில் ஒதுக்கிய வெண்மையாகிய முத்துக்களும் மருதநிலத்திலுள்ள கமுகம்பாளைகளிலிருந்து உதிர்ந்த மலர்களும் ஒன்றாகக் கலந்திருக்கின்றபடியால் பரத்தியர்களும், மூங்கில்போன்ற மெல்லிய தோள்களையுடைய உழத்தியர்களும் ஒருவருக்கொருவர் மாறுபட்டு அவைகளைமுன்னே வாரிக் குவிக்கின்ற நீண்ட நெய்தலும் மருதமுமாகிய நிலங்கள் அந்நாட்டில் கலந்திருக்கின்றன.—எ-று. (௪௬)

ஆய நானிலத் தமைதியிற் றத்தமக் கடுத்த
மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீய வென்பன கனவிலு நினைவிலாச் சிந்தைத்
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்புசொல் வரைத்தோ.

(இ-ள்.) இவ்வாறாகிய குறிஞ்சி-முல்லை - மருதம் - நெய்தல் என்னும் நால்வகைப்பட்ட நிலங்களில் தங்கள் தங்களுக்கு ஏற்ற வெவ்வேறு தொழில்களைச்செய்கின்ற அநேகசாதிகளால் விளக்கமுற்றுத் தீமையாகிய காரியங்களைச் சொப்பனத்திலும் செய்ய நினையாத பரிசுத்தம் பொருந்திய சிந்தையையுடைய மனிதர்கள் வாழ்கின்ற தொண்டைநாட்டின் சிறப்பானது என்சொல்லின் அளவினதோ? அன்று.—எ-று. (௪௭)

இவ்வ ளந்தரு பெருந்திரு நாட்டிடை யென்று
மெய்வ ளந்தரு சிறப்பினு லுலகெலாம் வியப்ப
எவ்வு கங்களு முள்ளதென் றியாவரு மேத்துங்
கைவி ளங்கிய நிலையது காஞ்சிமா நகரம்.

(இ-ள்.) இப்படிப்பட்ட வளங்களைத்தருகின்ற பெருமைபொருந்திய தொண்டைநாட்டில் எந்நாளும் உண்மையாகிய முத்திச்செல்வத்தைக்கொடுக்கின்ற

சிறப்பினால் எல்லா வுலகத்திலுள்ளவர்களும் சந்தோஷிக்கும்படி எந்த யுகங்களி லும் அழியாதிருக்கும் நிலைமையையுடையதென்று எல்லாச்சமயத்தாரும் துதி செய்கின்ற ஒழுக்கத்தால் விளங்குந் தன்மையையுடையது காஞ்சிபுரம்.—எ-று.

ஆன தொன்னக ரம்பிகை தம்பெரு மானை
மான வர்ச்சனை யாலொரு காலத்து வழிபட்
டேனை யில்லற மனேகமு முலகுய்ய வைத்த
மேன்மை பூண்டவப் பெருமையை யறிந்தவா விளம்பில்.

(இ-ள்.) அப்படிப்பட்ட சிறப்பினையுடைய பழமையாகிய காஞ்சிபுர மானது உமாதேவியார் தமது நாயகராகிய சிவபெருமானைப் பெருமைபொருந் திய அர்ச்சனையினால் முன்பு ஒருகாலத்தில் வழிபாடுசெய்து குற்றமற்ற அநேக தருமங்களையும் உலகத்திலுள்ள ஆன்மகோடிகள் பிழைக்கும்பொருட்டு வளர்த்த மேன்மையடைந்த அந்தப் பெருமையை அறிந்த விதமாகச் சொல்லப்புகுந் தால்.—எ-று. (௬௯)

வெள்ளி மால்வரைக் கயிலையில் வீற்றிருந் தருளித்
துள்ளு வார்புனல் வேணியா ரருள்செயத் தொழுது
தெள்ளு வாய்மையி னாகமத் திறனெலாந் தெரிய
உள்ள வாறுகேட் டருளினா ளுலகையா ளுடையாள்.

(இ-ள்.) பெருமைபொருந்திய வெள்ளிமலையாகிய ஸ்ரீ கயிலாசத்தில் வீற் றிருந்து ததும்புகின்ற மிகுந்த கங்கைநீரைத்தரித்த சடைமுடியினையுடைய சிவ பெருமான் கிருபைசெய்யவணங்கித் தெளிவாகிய உண்மையினையுடைய ஆகமங் களின் வலிய பாகுபாடுகளையெல்லாம் தெரியும்படி உள்ளபடியே கேட்டறிந்து கொண்டார்; சர்வலோகங்களையும் தமக்கு அடிமையாகவுடைய உமாதேவி யார்.—எ-று. (௬௦)

எண்ணி லாகம மியம்பிய விறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை யெனவுரைத் தருள
அண்ண லார்தமை யர்ச்சனை புரியவா தரித்தாள்
பெண்ணி னல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து.

(இ-ள்.) (அக்காலத்தில் உமாதேவியார்பொருட்டு) அளவில்லாத ஆகமங் களை அருளிச்செய்த சிவபெருமான் அவ்வாகமசாரமாய்த் தாம் விரும்புகின்ற உண்மைநெறியாவது பூசனையேயென்று சொல்லியருள (அதனைத் திருவுள்ளத்திற் கொண்டு) தெய்வத்தன்மைபொருந்திய மாதர்களில் உயர்ந்தவராகிய பெருமை பொருந்திய தவக்கொழுந்துபோன்ற உமாதேவியார் சிவபெருமானை அர்ச்சனை செய்வதற்கு விருப்பங்கொண்டார்.—எ-று. (௬௧)

வேறு.

நங்கை யுண்ணிறை காதலை நோக்கி நாய கன்றிரு வுள்ளத்து மகிழ் ந்தே, அங்க ணெய்திய முறுவலுந் தோன்ற வடுத்த தென்கொ னின்

பாலென்று வினவ, இங்கு நாதநீ மொழிந்தவா கமத்தி னியல்பி னாலுனை யர்ச்சனை புரியப், பொங்கு கின்றதென் னாசையென் றிறைஞ்சிப் போக மார்த்தபூண் முலையினள் போற்ற.

(இ-ள்.) பிராட்டியாரது மனத்தில் நிறைந்த விருப்பத்தைப் பார்த்துச் சிவபெருமான் திருவுள்ள மகிழ்ந்து அப்போதுண்டாகிய புன் முறுவலும் விளங்க உனக்குண்டாகிய விருப்பம் யாதென்று கேட்க, இப்பொழுது நாதரே! தேவரீர் அருளிச்செய்த திவ்வியாகமங்களில் விதித்த முறைமைப்படியே உம்மை அர்ச்சனைசெய்ய எனக்கு ஆசைமேன்மேலும் அதிகரிக்கின்றதென்றுசொல்லி வணங்கிச்சிவபோகமமைந்த ஆபரணங்களையணிந்த ஸ்தனங்களையுடைய உமாதேவியார் ஸ்தோத்திரஞ்செய்ய.—எ-று.

இதுமுதலிரண்டு பாடலுங்குளகம். (௫௨)

தேவ தேவனு மதுதிரு வுள்ளஞ் செய்து தென்றிசை மிக்கசெய் தவத்தால், யாவ ருந்தனை யடைவது மண்மே லென்று முள்ளது காஞ்சி மற் றதனுண், மாவ மர்ந்தநம் மிருக்கையி லணைந்து மன்னு பூசனை மகிழ் ந்துசெய் வாயென், றேவ வெம்பெரு மாட்டியும் பிரியா விசைவு கொண் டெழுந் தருளுதற் கிசைந்தாள்.

(இ-ள்.) தேவர்களுக்கெல்லாம் நாயகராகிய சிவபெருமானும் உமாதேவியார் சொல்லியவார்த்தையைத் திருவுள்ளத்திற்கொண்டு, தெற்குத்திக்கானது செய்திருக்கின்ற மிகுந்த தபோபலத்தினால் பிரமாதிதேவர்கள்யாவரும் தன்னையடையத்தக்கதும், பூலோகத்தில் என்றும் அழியாதிருப்பதுமாயுள்ளது காஞ்சிபுரமாம்; அக்காஞ்சிபுரத்தில் மாமரத்தின் கீழிருக்கும் நம்முடைய ஆலயத்திற்குவந்து நிலைபெற்றபூசனையைவிரும்பிச் செய்வாயாகவென்று கட்டளையிட்டனுப்ப, எமது பெருமாட்டியாராகிய உமாதேவியாரும் சுவாமியைப் பிரியக்கூடாத உடன்பாட்டைக்கொண்டு அவ்விடத்திற்குப் போகும்படி சம்மதித்தார்.—எ-று. (௫௩)

ஏத மில்பல யோனியெண் பத்து நான்கு நூறு யிரமதில் வைத்த, பேத மும்புரந் தருளுமக் கருணைப் பிரான்மொ ழிந்தவா கமவழி பேணிப், போது நீர்மையிற் றொழுதனள் போதப் பொருப்பில் வேந்தனும் விருப் பில்வந் தெய்தி, மாத வம்புரிந் தருளுதற் கமைந்த வளத்தொ டும்பரி சனங்களை விடுத்தான்.

(இ-ள்.) (உமாதேவியார்) குற்றமற்ற பலவகையாகிய எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதங்களையும் பாதுகாத்தருள்கின்ற கருணையையுடைய சிவபெருமான் அருளிச்செய்த சைவாகமவிதியை அனுசரித்துத் (தவஞ்செய்ய நினைத்துப்) போகவேண்டுமென்னும் எண்ணத்தோடு அப்பெருமானைவணங்கிப் புறப்பட, அதனையுணர்ந்த பர்வதராசனும் விருப்பத்தோடு வந்துசேர்ந்து, பிராட்டியார் மகத்தாகிய தவத்தைச்செய்வதற்கு அமைந்த வளத்துடனே பரிசனங்களை அனுப்பினான்.—எ-று.

'ஏதமில் பலயோனி யெண்பத்துநான்கு நூறுயிரம்' என்பதன் வகையினை.

"தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற்
றுதைந்துவரு முற்பீசஞ் சராயுசங்க ணன்கி
னூற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்று
மூர்வபதி னொந்தமரர் பதினொன்றே லெவா
மாற்றருநீ ருறைவனநற் பறவைகளுற் காலி
மன்னியிடும் பப்பத்து மானிடரொன் பதின்ம
ரேற்றியொரு தொகையதனி லியம்புவர்கள் யோனி
யெண்பத்து நான்குநூ றுயிரமென் றெடுத்தே" என்னும் சிவப்பிரகாசத்தானுணர்க.

(௩௪)

துன்னு பல்லுயிர் வானவர் முதலாச் சூழ்ந்து டன்செலக் காஞ்சியி லணையத், தன்னை நேர்வரும் பதுமமா நாகந் தம்பி ராட்டிதா டலைமிசை வைத்தே, அன்னை யாயுல கனைத்தையு மீன்று யடிய னேனுறை பிலமத னிடையே, மன்னு கோயில்கொண் டருளுவா யென்ன மலைம டந்தைமற் றதற்கருள் புரிந்து.

(இ-ள்.) பர்வத ராசபுத்திரியாகிய உமாதேவியார் நெருங்கிய தேவர்கள் முதலாகச் சொல்லப்பட்ட பலவகையாகிய சீவராசிகளும் தம்மைச் சூழ்ந்துவரும்படி காஞ்சிபுரத்திற்கு வந்தவுடனே தனக்குத்தானே ஒப்பாகிய பதுமனென்னும் நாகமானது தங்கள் பெருமாட்டியாகிய உமாதேவியாரது திருவடிகளைச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு, தாயாகிச் சர்வலோகங்களையும் பெற்றருளியதலைவியே! அடியேன் வாசஞ்செய்கின்ற பிலத்தினிடத்தில் நிலைபெற்ற திருக்கோயில் கொண்டருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அதற்குச்சம்மதித்து.—எ-று.

வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்னும் அஷ்டமாநாகத்துள் ஒன்றென்பார் 'தன்னைநேர்வரும் பதுமமாநாகம்' என்று கூறினர்.

(௩௫)

அங்கு மண்ணுல கத்துயிர் தழைப்ப வளவி லின்பத்தி னருட்கருவிருத்தித், திங்க டங்கிய புரிசடை யார்க்குத் திருந்து பூசனை விரும்பினள் செய்ப, எங்கு நாடவுந் திருவிளை யாட்டா லேக மாமுத லெதிர்ப்படாதொழியப், பொங்கு மாதவஞ் செய்துகாண் பதற்கே புரிவு செய்தனள் பொன்மலை வல்லி.

(இ-ள்.) அக்காஞ்சிபுரத்தில் நிலவுலகத்திலுள்ள சீவகோடிகளெல்லாம் விருத்தியடையும்பொருட்டு அளவில்லாத இன்பங்களைக்கொடுக்கும் கிருபையென்னுங்காரணத்தைத் திருவுள்ளத்திற்கொண்டு, சந்திரனைத் தரித்த முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமானுக்குத் திருத்தமாகிய பூசையைவிருப்பத்தோடுசெய்யும்படி எவ்விடத்துந்தேட, ஒப்பற்ற முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் ஒருதிருவிளையாட்டினால் தரிசனங்கொடுக்காமல் மறைய, பொலிவினையுடைய மகத்தாகிய தவத்தைச்செய்து காண்பதற்காக விருப்பங்கொண்டார் உமாதேவியார்.—எ-று.

உமாதேவியார் தவஞ்செய்தமைக்குக் காரணம் உலகுயிர்மேல்வைத்த பெருங்கருணையே யென்பார் 'அருட்கருவிருத்தி' என்று கூறினார். அக்கருணையாவது தாம் வழிபடல்போலப் பிறரும் வழிபடுக எனக்காட்டும் இரக்கமிகுதியாம்.

நெஞ்சமீசனைக் காண்பதே விரும்பி நிரந்த ரந்திரு வாக்கினி னிகழ்வ, தஞ்செ ழுத்துமே யாகவா ளுடைய வம்மை செம்மலர்க் கைகுவித் தருளித், தஞ்ச மாகிய வருந்தவம் புரியத் தரிப்ப ரேயவ டனிப்பெருங் கணவர், வஞ்ச நீக்கிய மாவின்மூ லத்தில் வந்து தோன்றினர் மலைமகள் காண.

(இ-ள்.) எம்மை அடிமையாகக்கொண்டருளிய உமாதேவியார் தமது உள்ளத்தில் சிவபெருமானைக்காண்பதே முக்கியமாக விருப்பங்கொண்டு,எப்பொழுதும் திருவாயில் உச்சரிப்பது ஸ்ரீபஞ்சாக்ஷரமேயாகச் சிவந்த தாமரைமலர்போன்ற திருக்கரங்களைக் கூப்பித்தொழுது, தமது அன்பிற்கு ஆதரவாகிய அருமையான தவத்தைச்செய்ய,அப்பெருமாட்டியாரது ஒப்பற்ற நாயகராகிய சிவபெருமான் தரியாதவராய்க் குற்றமற்ற மாமரத்தினடியில் இமயபர்வதராசன் புத்திரியாகிய பார்வதிதேவியார் காணும்படிவந்து சிவலிங்கரூபமாகத் தோன்றினார்.—எ-று. (௫௭)

கண்ட போதிலப் பெருந்தவப் பயனுங் கம்ப மேவிய தம்பெருமானை, வண்டு லாங்குழற் கற்றைமுன் ருழ வணங்கி வந்தெழு மாசைமுன் பொங்கக், கொண்ட காதலின் விருப்பள வின்றிக் குறித்த பூசனை கொள்கைமேற் கொண்டு, தொண்டை யங்கனி வாயுமை நங்கை தூய வர்ச்சனை தொடங்குதல் புரிவாள்.

(இ-ள்.) தாம்செய்த பெரிய தவத்திற்குப் பயனாயிருக்கும் திருவேகம்பத்தையடைந்த தமது நாயகராகிய சிவபெருமானைத் தரிசித்தபொழுதே வண்டுகள் உலாவுகின்ற கற்றையாகியகூந்தலானது முன்னே தாழும்படிவணங்கி, மனத்தில் தோன்றியெழுந்த ஆசையானது அதிகரிக்க, மேம்பட்ட பெருங்காதலினாலாகிய விருப்பமானது அளவில்லாமல் தாம் நினைத்திருந்த சிவபூசையாகிய கொள்கையை மேற்கொண்டு, கொவ்வைக்கனிபோன்ற அழகியவாயினையுடைய உமாதேவியார் பரிசுத்தமாகிய அர்ச்சனைசெய்யத் தொடங்கினார்.—எ-று. (௫௮)

உம்பர் நாயகர் பூசனைக் கவர்தா முரைத்த வாகமத் துண்மையே தலைநின், றெம்பி ராட்டியர்ச் சனைபுரி வதனுக் கியல்பில் வாழ்திருச் சேடிய ரான, கொம்ப னார்கள்பூம் பிடகைகொண் டணையக் குலவு மென்றளி ரடியிணை யொதுங்கி, யம்பி காவன மாந்திரு வனத்தி லான தூநறும் பூமலர் கொய்தாள்.

(இ-ள்.) தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமான் தம்மைப்பூசிப்பதற்காக அவரருளிச்செய்த ஆகமத்திற்கூறும் உண்மையாகிய விதிவழியே நின்று எமது பிராட்டியாராகிய உமாதேவியார் பூசைசெய்வதற்கு,இயல்பினால் வாழ்கின்ற தோழியர்களாகிய கமலினி - அனிந்திதை என்பவர்கள் புஷ்பக்குடலையை எடுத்துக்கொண்டுவர, விளங்குகின்ற மிருதுவாகிய தளிர்போன்ற இரண்டுபாதங்களால் (சிறுகற்களுக்கு) ஒதுங்கி நடந்து,அம்பிகாவனமென்னும் திருநந்தனவனத்தில் சிவபெருமானுக்குப் பொருந்திய பரிசுத்தமாகிய நல்லமலர்களைப்பறித்தார்,-எ-று.

கொய்து பன்மலர் கம்பைமா நதியிற் குலவு மஞ்சன நிலவுமெய்ப் பூச்சு, செய்த ருங்கொழுந் தூபதீ பங்க ணிறைந்த சிந்தையி னீடிய வன்பின், மெய்த ரும்படி வேண்டின வெல்லாம் வேண்டு போதினி லுதவமெய்ப் பூசை, யெய்த வாகம விதியெலாஞ் செய்தா ளுயிர்கள் யாவையு மீன்றவெம் பிராட்டி.

(இ-ள்.) பலவகை மலர்களைப்பறித்து, திருமஞ்சனமாகக் கம்பையாற்றினீரையும், பிரகாசமுள்ள சந்தனத்தையும், நெய்யினு லமைந்தசெழிய தூபதீபங்களையும் நிறைதங்கிய மனத்தில்தோன்றிய பேரன்பினால் உண்மையாகப் பூசைக்குவேண்டிய மற்றத் திரவியங்களையும் தமக்கு வேண்டியபொழுது ஏவலாளர்கள் கொடுக்க, மெய்ம்மையாகிய பூசையை ஆகமவிதிவழுவாமல் முழுமையும் செய்தார் எல்லாவுயிர்களையும்பெற்றருளிய எமதுதாயாராகிய உமாதேவியார்.—எ-று. (சு௦)

கரந்த ரும்பய னிதுவென வுணர்ந்து கம்ப மேவிய வும்பர்நா யகர்பா னிரந்த காதல்செ யுள்ளத்த ளாகி நீடு நன்மைக ளியாவையும் பெருக வரந்த ரும்பொரு ளாமலை வல்லி மாறி லாவகை மலர்ந்தபே ரன்பாற் சிரம்ப ணிந்தெழு பூசைநா டோறுந் திருவு ளங்கொளப் பெருகிய தன்றே.

(இ-ள்.) இவ்வாறு பூசைசெய்வது கையைப்பெற் றதனாலுண்டாகிய பயனே என்றறிந்து திருவேகம்பத்தில் வீற்றிருந்தருளும் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானிடத்தில் பரந்த விருப்பத்தைச் செய்கின்ற மனமுடையவராய்ச்சிறந்த நன்மைகள்யாவு முண்டாக யாவர்க்கும் வரத்தைத்தந்தருள்கின்ற மெய்ப்பொருளாகிய உமாதேவியார் மாறுபாடில்லாமல் விளங்கிய பேரன்பினால் தலையால்வணங்கிச் செய்கின்ற பூசனையானது நாள்தோறும் அக்கடவுளின் திருவுள்ளத்துக்குப் பொருந்தும்படி விருத்தியாயிற்று.—எ-று. (சுக)

நாத ரும்பெரு விருப்பொடு நயந்து நங்கை யர்ச்சனை செய்யும் பொழுதிற், காதன் மிக்கவோர் திருவிளை யாட்டிற் கனங்கு ழைக்கருள் புரிந்திட வேண்டி, யோத மார்கட லேழுமொன் றாகி யோங்கி வானமு முட்படப் பரந்து, மீது செல்வது போல்வரக் கம்பை வெள்ள மாந்திருவுள்ளமுஞ் செய்தார்.

(இ-ள்.) திருவேகம்பநாதரும் மிகுந்த ஆசையோடு நயந்துஉமாதேவியார் தம்மைப் பூசைசெய்யும் பொழுதில் விருப்பமிகுந்த ஒரு திருவிளையாட்டாகக் கனத்த குண்டலத்தையணிந்த அவ்வுமாதேவியாருக்குத் திருவருள் செய்யவிரும்பி, குளிர்ச்சிபொருந்திய சப்தசமுத்திரங்களும் ஒன்றாகித் தேவலோகமும் கீழாகும்படி எழும்பிப்பரந்து மேல்வருவதுபோலக் கம்பாநதியில் வெள்ளம்வரும்படி திருவுள்ளங்கொண்டருளினர்.—எ-று. (சுஉ)

அண்ண லாரருள் வெள்ளத்தை நோக்கியங்க யற்கண்ணி தம்பெருமான்மேல், விண்ணெ லாங்கொள வரும்பெரு வெள்ள மீது வந்துறு மெனவெருக் கொண்டே, யுண்ணி லாவிய பதைப்புறு காத லுடன்றி ருக்கையாற் றடுக்கிலா மை, தண்ணி லாமலர் வேணியி னாரைத் தழுவிக் கொண்டன டன்னையே யொப்பாள்.

(இ-ள்.) சிவபெருமானது கட்டளையால் வருகின்ற வெள்ளத்தை அழகிய சேற்கெண்டைபோன்ற கண்களையுடைய ஒப்பற்ற உமாதேவியார் பார்த்து ஆகாயமுழுமையும் கொள்ளும்படிவரும் இந்தப் பெரியவெள்ளமானது பெருகித் தமது ஆண்டவன்மேல் வருமென்று பயந்து, மனதினின்றும் பதைத்தெழுகின்ற ஆசையோடு திருக்கைகளால் அவ்வெள்ளம் வரவொட்டாமல் தடுக்க, அது நில்லாமையைக்கண்டு குளிர்ந்த சந்திரன்விளங்குகின்ற சடைமுடியினையுடைய சிவபெருமானைத் தழுவிக்கொண்டார்.—எ-று. (௬௩)

மலைக்கு லக்கொடி பரிவுறு பயத்தான் மாவின் மேவிய தேவர்நா யகனை, முலைக்கு வட்டொடு வளைக்கையா னெருக்கி முறுகுகாதலா லிறுகிடத் தழுவச், சிலைத்த னித்திரு நுதலிரு முலைக்குஞ் செந்த ளிர்க்கரங் களுக்குமெத் தெனவே, கொலைக்க ளிற்றுரி புனைந்ததம் மேனி குழைந்து காட்டினர் விழைந்தகொள் கையினர்.

(இ-ள்.) மலையரசனது குலத்தில் அவதரித்தருளிய உமாதேவியார் (இந்நதிப்பெருக்கினால் எமது ஆண்டவருக்கு இடையூறுண்டாகுமென்னும்) துன்பத்தோடு பயத்தையும் அடைந்து, மாமரநிழலில் வீற்றிருந்தருளும் தேவர்கள் நாயகராகிய திருவேகம்பநாதரை மலைச்சிகரத்தையொத்த ஸ்தனங்களோடு வளையலையணிந்த கைகளாலும் நெருக்கி மிகுந்த அன்பினால் இறுகத்தழுவும்போது அவ்வம்மையாரது அழகிய ஸ்தனங்களுக்கும், சிவந்ததளிர்போன்ற கைகளுக்கும் மெத்தென்று, கொலைத்தொழிலையுடைய கயாசுரனென்னும் யானையின் தோலைப்போர்த்த தம்முடைய திருமேனியைக் குழையும்படிச் செய்தார்; அப்பூசையை விரும்பியவராகிய கடவுள்.—எ-று. (௬௪)

சிலைத்தனித்திருநுதல்=ஒப்பற்ற வில்லினையொத்த புருவத்தையுடைய உமாதேவியார்.

கம்பர் காதலி தழுவமெய் குழையக் கண்டு நிற்பவுஞ் சரிப்பவு மான, உம்ப ரேமுதல் யோனிக ளெல்லா முயிரும் யாக்கையு முருகியொன் றாகி, யெம்பி ராட்டிக்கு மெல்லிய ராந ரென்று மேகம்ப ரென்றெடுத் தேத்த, வம்பு லாமலர் நிறையவிண் பொழியக் கம்பை யாறுமுன் வணங்கிய தன்றே.

(இ-ள்.) திருவேகம்பநாதர் தமது மனைவியார் தழுவுதலால் திருமேனி குழையப்பார்த்துச் சரமும் அசரமுமாகிய தேவர்கள்முதல் எழுவகைப்பட்ட ஜீவராசிகளும் உடம்பும் உயிரும் உருகி ஒரு தன்மைப்பட்டு, இத்திருவேகம்பநாதர் எங்கள் தாயாகிய உமாதேவியாருக்குத் தழுவக் குழைந்த திருமேனியையுடையவரானாரென்று எடுத்து ஸ்தோத்திரஞ்செய்யவும், வாசனைபொருந்திய கற்பகமலர்களை ஆகாயத்திலிருந்து நிறையும்படி தேவர்கள்பொழியவும், கம்பாநதியின் வெள்ளமானது பிராட்டியார் திருமுன்னே (சுவாமிக்கு ஒரு இடையூறும் நேரிடாமல்) வந்து வணங்கி அடங்கிவிட்டது.—எ-று. (௬௫)

பூதி யாகிய புனிதநீ றாடிப் பொங்கு கங்கைதோய் முடிச்சடை புனைந்து, காதில் வெண்குழை கண்டிகை தாழக் கலந்த யோகத்தின் மரு

வீய கருத்தால், ஆதி தேவனு ராயுமா தவஞ்செ யவ்வ ரங்கொலோ வங்
கமீன் றளித்த, மாது மெய்ப்பயன் கொடுப்பவே கொண்டு வளைத்த பூ
ம்புடன் முலைச்சுவ டணிந்தார்.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் மகதயிசுவரியமென்று கூறும் பரிசுத்தம்பொருந்திய விபூதியை உத்தூளனமாகத்தரித்து, பொங்குகின்ற கங்கைநதிபொருந்திய முடியில் சடையைப்புனைந்துகொண்டு, திருச்செவிகளில் வெண்மையாகிய சங்கக்குழைகளும் ருத்திராக்ஷமும் தாழும்படி பொருந்திய சிவ யோகத்தில் வீற்றிருந்த கருத்தோடு அறிஞர்களால் ஆராயத்தக்க மகத்தாகிய தவத்தைச்செய்த விசேடந்தானே? சர்வலோகங்களையும் பெற்றெடுத்த தாயாகிய உமாதேவியார் தேகஸ்பரிசமுண்டாகப்பெற்று வளைத்தழும்போடு முலைத்தழும்பையும் கொண்டருளினர்.—எ-று.

உமாதேவியார் சிவபெருமானைத் தவங்காரணமாய்த் தழுவினதுபோலப் பெருமானுக்கும் அவரது திருமேனியைப்பரிசித்து வளைத்தழும்பும் முலைத்தழும்பும் பெறுதற்கு ஓர் தவமும் உளதென்று கூறியவாறுகாண்க. (௬௬)

கோதி லாவமு தனையவண் முலைக்குக் குழைந்த தம்மண வாளநற்
கோல, மாது வாழவே காட்டிமு னின்று வரங்கள் வேண்டுவ கொள்க
வென் றருள,வேத கார ண ராயவே கம்பர் விரைம லர்ச்செய்ய தாமரைக்
கழற்கீழ், ஏத நீங்கிய பூசனை முடிந்த தின்மை தானறி விப்பதற் கிறை
ஞ்சி.

(இ-ள்.) குற்றமற்ற தேவாமிர்தத்தையொத்த உமாதேவியாரது ஸ்தனங்களுக்குக் குழைவுற்ற தமது நன்மைபொருந்திய மணவாளக்கோலத்தை அவ்வம்மையார் வாழ்வடையும்படி காண்பித்து முன்னேநின்று நீ வேண்டியவரங்களைப் பெற்றுக்கொள்வாயாக வென்று அருளிச்செய்ய, பிராட்டியார் வேதங்களுக்குக் காரணராயிருக்கின்ற திருவேகம்பநாதரது வாசனைபொருந்திய சிவந்ததாமரை மலர்போன்ற திருவடியின்கீழ் குற்றமறச்செய்யும் பூசையானது முடியாதிருப்பதை அறிவிக்கும்படியாக வணங்கி.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங்குளகம்.

(௬௭)

அண்டர் நாயக ரெதிர்நின்று கூறு மளவி லுலஞ்சி யஞ்சலி கூப்பிக்,
கொண்ட விற்றையென் பூசனை யின்னுங் குறைநி ரம்பிடக் கொள்கவென்
றருள, வண்டு வார்குழன் மலைமகள் கமல வதன நோக்கிய மலர்க்கணை
ற் றியின்மேன், முண்ட நீற்றர்நின் பூசனை யென்று முடிவ தில்லைநம் பா
லென மொழிய.

(இ-ள்.) தேவர்களுக்கு நாயகராகிய திருவேகம்பநாதர் தமக்கு எதிரே நின்று கட்டளையிட்ட அளவில் வண்டுகள் மொய்க்கின்ற நீண்டகூந்தலையுடைய உமாதேவியார் அச்சப்பட்டுக் கைகளை அஞ்சலியாகக்குவித்து, இன்று அடியேன் செய்யத்தொடங்கிய பூசையை இன்னும் குறையும் நிரம்பும்படி கொண்டருள வேண்டுமென்று பிரார்த்திக்க, அவ்வம்மையாரது தாமரைமலர்போன்ற முகத்தை

ப்பார்த்தருளிய சிவபெருமான் நம்மிடத்திற்செய்யும் உன்னுடைய பூசையானது என்றும் முடிகிறதில்லையென்று சொல்ல.—எ-று.

மலர்க்கணெற்றியின்மேண் - முண்ட நீற்றர் - நெற்றியின்மேல் விளங்கும் கண்ணையும், திரிபுண்டரமாக அணிந்த விபூதியையுமுடையவர். (சுஅ)

மாறி லாதவிப் பூசனை யென்று மன்ன வெம்பிரான் மகிழ்ந்துகொ ண் டருளி, யீறி லாதவிப் பதியினு ளெல்லா வறமும் யான்செய வருள் செய வேண்டும், வேறு செய்வினை திருவடிப் பிழைத்த லொழிய விங்கு ளார் வேண்டின செயினும், பேறு மாதவப் பயன்கொடுத் தருளப் பெற வும் வேண்டுமென் றனள்பிறப் பொழிப்பாள்.

(இ-ள்.) மாறுபாடில்லாத இந்தப் பூசனையானது எந்நாளும் நிலைபெறும் படி எமது பெருமானே! தேவரீர் திருவுள்ளங்கொண்டருளி, ஓர் காலத்திலும் அழிவில்லாத இந்த ஸ்தலத்தில் எல்லாத்தருமங்களையும் அடியேன்செய்யும்படி கிருபைசெய்யவேண்டும்; இந்நகரத்திலுள்ளவர்கள் தேவரீர் திருவடிகளுக்குச் செய்யும் குற்றம் நீங்கலாகத் தங்கள் மனதின்படிவேண்டிய எந்தத்தீமைகளைச் செய்தாலும் அத்தீமைக்குப் பெறும்பேறாக மகத்தாகிய தவப்பயனை அவர்களுக் குக்கொடுத்தருளவும் வேண்டுமென்றருளிச்செய்தார்; உயிர்களின் பிறவித்துன்ப த்தை நீக்கியருள்பவராகிய உமாதேவியார்.—எ-று.

சிவநிந்தை சிவனடியார்நிந்தை முதலியன எல்லாத்தீவினைகளிலும் உய்தி யில் குற்றமாதலின் அது திருவடிப் பிழைத்தல் எனவிலக்கப்பட்டது. (சுகூ)

விடையின் மேலவர் மலைமகள் வேண்ட விரும்பு பூசனை மேவிவீற் றிருந்தே, யிடைய றாவற மாக்கும்வித் தாக விகப ரத்திரு நாழிநெல் லளி த்துக், கடைய ராகியு முயர்ந்தவ ராயுங் காஞ்சி வாழ்பவர் தாஞ்செய்தீ வினையுந், தடைப டாதுமெய் நெறியடை வதற்காந் தவங்க ளாகவு முவந் தருள் செய்தார்.

(இ-ள்.) ரிஷபவாகனத்தின்மேல் வீற்றிருந்தருளும் சிவபெருமான் உமா தேவியார் வேண்டிக்கொள்ள, அவர் விரும்பிச்செய்கின்ற பூசையை அங்கீகரித்து அங்கு வீற்றிருந்தருளி, நீங்காத தருமத்தை வளர்க்கும்பொருட்டு இகத்துக்கும் பரத்துக்கும் பயனாக இருநாழி நெல்லைக்கொடுத்து, தாழ்ந்தசாதியாராகியும், உயர் ந்தசாதியாராகியும் காஞ்சிநகரத்தில் வாழ்கின்றவர்கள் செய்கின்ற பாவங்களும், தடைபடாமல் உண்மையாகிய மோட்சத்தை யடைவதற்கேதுவாகிய தவங்களா யிருக்கவும் விரும்பி வரங்கொடுத்தருளினார்.—எ-று. (எ0)

எண்ண ரும்பெரு வரங்கண்முன் பெற்றங் கெம்பி ராட்டிதம் பிரா ன்மகிழ்ந் தருள, மண்ணின் மேல்வழி பாடுசெய் தருளி மனைய றம்பெரு க் குங்கரு ணையினு, னண்ணு மன்னுயிர் யாவையும் பல்க நாடு காதலி னீ டிய வாழ்க்கைப், புண்ணி யத்திருக் காமக்கோட் டத்துப் பொலிய முப் பதோ டிரண்டறம் புரக்கும்.

(இ-ள்.) எமது தாயாராகிய உமாதேவியார் அளவில்லாதபெரியவரங்களை முன்னே பெற்றுக்கொண்டு, தமது பெருமான் மகிழ்ந்தருளும்படி பூசைசெய்து, உலகத்தில் இல்லறதருமத்தை விருத்திசெய்ய வேண்டுமென்னும் கருணையினால் நிலைபெற்றவுயிர்களெல்லாம் நாளுக்குநாள்பெருகும்படி பொருந்திய ஆசையோடு நீடித்த வாழ்க்கைக்குரிய இடமாகிய புண்ணிய சொரூபமான திருக்காமக்கோட்டத்தில் வீற்றிருந்து முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்க்கின்றவரானார்.—எ-று.

திருக் காமக்கோட்டம் என்பது - காமாட்சியம்மையார் வீற்றிருந்தருளும் ஆலயத்தின்பெயர். அறப்பெருஞ்செல்வியாகிய உமாதேவியார் வளர்த்தமுப்பத்திரண்டுதருமங்களின் வகையினை,

"வண்ணான்புன் னாவிதன் காதோலை சோலை மடந்தடம்வெண்
சுண்ணம் பறவைப் பிணஞ்சுடற் றூரியஞ் சோறளித்தல்
கண்ணாடி யாவிற் குரிஞ்சுகல் வாயுறை கண்மருந்து
தண்ணீர்ப்பந் தறலைக் கெண்ணெய்பெண் போகந் தரலையமே.

மேதகு மாதுலர்க் குச்சாலை யேறு விடுத்தல்கலை
யோதுவர்க் குண்டி விலங்கிற் குணவொ டுயர்பிணிநோய்க்
கீதன் மருந்து சிறைச்சோ றளித்த வியல்பிறரின்
மாதுயர் காத்தனற் கந்நியர் தானம் வழங்கலுமே.

கற்ற வறுசம யத்தார்க் குணவு கருதும்விலை
யுற்ற தளித்துயிர் மீட்டல் சிறுருக் குதவனற்பான்
மற்று மகப்பெறு வித்தல் சிறுரை வளர்த்தலெனப்
பெற்ற விவற்றினை யெண்ணான் கறமெனப் பேசுவரே."— என்பனவுணர்க.

(எக)

அலகி னீடவத் தறப்பெருஞ் செல்வி யண்ட மாந்திரு மனைக்கிடுந் தீப,முலகில் வந்துறு பயனறி விக்க வோங்கு நாண்மலர் மூன்றுட னென்று, நிலவ வாண்டினுக் கொருமுறை செய்யு நீடு தொன்மையா னிறைந்தபே ருலக, மலர்பெ ருந்திருக் காமக்கோட் டத்து வைத்த நல்லற மன்னவே மன்னும்.

(இ-ள்.) அளவில்லாத மிகுந்த தவத்தையுடைய அறப்பெருஞ்செல்வியாகிய உமாதேவியார் பிரமாண்டமாகிய திருமாளிகைக்கு இடப்பட்ட விளக்காகிய (சோமசூரியாக்கினியென்னும் முச்சுடரும்) பிராட்டியார் உலகத்தில் வந்தபயனை அறிவிக்கும்படி (வந்தாற்போல) உயர்ந்த புதிய நீலமலர்கள் மூன்றோடுகூடிய ஒரு பூவானது வருஷத்துக்கு ஒருதரம் முறையாகமலரும் நீடித்த பழமையினால் நிறைந்த பெரிய உலகத்தில் விளங்குகின்ற பெருமைபொருந்திய திருக்காமக்கோட்டத்தில் வைக்கப்பட்ட நல்ல தருமங்கள் விருத்தியாகும்படி வளர்க்கப்படும்.—எ-று.

தீங்கு தீர்க்குநற் றீர்த்தங்கள் போற்றுஞ் சிறப்பி னாற்றிருக் காமக்கோட் டத்தின்,பாங்கின் மூன்றுல கத்தினு ளோரும் பரவு தீர்த்தமாம் பைம்புனற் கேணி, வாங்கு தெண்டிரை வேலைமே கலைசூழ் வைய கந்த

னக் கெய்திய படியா,யோங்கு தன்வடி வாய்நிறைந் தென்று முள்ள தொ
ன்றுல காணியென் றுளதால்.

(இ-ள்.) முழுதினவர்களுடைய பாவங்களைப்போக்குகின்ற நன்மைபொரு
ந்திய தீர்த்தங்களெல்லாம் போற்றுகின்ற சிறப்பினால் திருக்காமக்கோட்டத்தின
ருகில் சுவர்க்கமத்திய பாதலமென்னும் மூன்றுலகத்திலுள்ளவர்களும் துதிக்கத்
தக்க தீர்த்தமாகிய குளிர்ந்த நீரையுடைய ஒரு தடாகமானது, வளைந்தகெளிவா
கிய அலைவீசுகின்ற சமுத்திரமாகிய மேகலைசூழ்ந்த உலகத்திலுள்ளவர்களுக்கு
மோக்ஷத்திற்கு ஏறக்கிடைத்த ஏணியாகி உயர்ந்த நீர்வடிவாகவே நிறைவுற்று எக்
காலத்தும் உள்ளதாய் உலகாணியென்னும்பெயர்பெற்றுள்ளது.—எ-று. (எங)

அந்த மின்றிநல் லறம்புரிந் தளிக்கு மம்மை தன்றிருக் காமக்கோட்
டத்தில், வந்து சந்திர சூரியர் மீது வழிக்கொளாததன் மருங்குபோ தலி
னற், சந்த மாதிர மயங்கியெம் மருங்குஞ் சாயை மாறிய தன்றிசை மயக்
கம், இந்த மாநிலத் தவரெலாங் காண வென்று முள்ளதொன் றின்றுமங்
குளதால்.

(இ-ள்.) கெடுதலில்லாமல் நல்ல தருமங்களைச்செய்து உயிர்களைக்காப்பாற்
றுகின்ற உமாதேவியார் வீற்றிருந்தருளும் திருக்காமக்கோட்ட மென்னும் ஆலய
த்தில்,சந்திர சூரியர்கள்வந்து அவ்வாலயத்தின்மேலே செல்லாமல் பக்கத்தில் போ
கின்றபடியால் நல்ல திக்குகள் மாறுபட்டு,அதனால் எவ்விடத்திலும் நிழல்கள் மாறி
யிருக்கின்ற அவ்விடத்தின் திசைமயக்கமானது இந்தப்பெரிய உலகத்திலுள்ளவர்
கள் யாவருங்காணும்படி எந்நாளும் உள்ளதாகிய ஒன்று இக்காலத்திலும் அங்கு
இருக்கின்றது.—எ-று. (எச)

கன்னி நன்னெடுங் காப்புடை வரைப்பிற் காஞ்சி யாந்திரு நதிக்கரை
மருங்கு,சென்னி யிற்பிறை யணிந்தவர் விரும்பு திருப்பெ ரும்பெய ரிருக்
கையிற் றிகழ்ந்து,மன்னு வெங்கதிர் மீதெழும் போது மறித்து மேற்கடற்
றலைவிழும் போதுந்,தன்னி ழற்பிரி யாதவண் காஞ்சித் தான மேவிய மே
ன்மையு முடைத்தால்.

(இ-ள்.) உமாதேவியாரது நல்ல பெருங்காவலையுடைய காஞ்சிபுரத்தில்
காஞ்சியென்னும் பெயர்பெற்ற நதிக்கரையினருகில்,சிரசில் மூன்றும் பிறையைத்
தரித்த சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருப்பெரும்பெயரிருக்கையென்னும் ஆல
யத்திலிருந்து விளங்கி நிலைபெற்ற வெவ்விய கிரணங்களையுடைய சூரியன் உதய
கிரியினின்றும் உதயமாகும் பொழுதும், மீண்டு மேல்கடலில் அஸ்தமிக்கும் பொ
ழுதும் நிழலானது தன்னிடத்திலிருந்து மேற்குக் கிழக்குகளில் பிரிந்துசெல்லாத
வளம்பொருந்திய காஞ்சிவிருட்சமிருக்கின்ற மேன்மையையுமுடையது; அந்த
நகரம்.—எ-று.

காஞ்சிபுரம் என்பதற்குக் காஞ்சிவிருட்சத்தையுடையபுரம் என்றும், பிர
மனால் பூசிக்கப்பட்டபுரமென்றும் இரண்டு பொருளுண்டெனவறிக. (எரு)

மறைக ளாற்றுதித் தருந்தவம் புரிந்து மாறி லாகிய மந்தலை நின்று
முறைமை யால்வரும் பூசனை செய்ய முனிவர் வானவர் முதலுயி ரெல்லா

நிறையு மன்பினு லர்ச்சனை செய்ய நீடு காமங்க ளவரவர்க் கருளி
யிறைவர் தாமகிழ்ந் தருளிய பதிக ளெண்ணி றந்தவத் திருநக ரெல்லை.

(இ-ள்.) முனிவர்கள் வேதங்களால் துதித்து, அருமையாகிய தவங்களைச் செய்து, கெடுதலில்லாத நியமநெறியில்நின்று, வேதாகமவிதிப்படியே பூசனைசெய்தலாலும், தேவர்கள் முதலிய உயிர்களெல்லாம் உள்ளத்தில் நிறைந்த அன்புடனே அர்ச்சனைசெய்தலாலும் வேண்டியவரங்களை அவரவர்களுக்குக் கொடுத்தருளிச் சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற ஆலயங்கள் அந்த நகரத்தின் எல்லையில் அளவில்லாதனவாம்.—எ-று. (எசு)

மன்னு கின்றவத் திருநகர் வரைப்பின் மண்ணின் மிக்கதோர் நன்மையி னுலே, துன்னும் யானையைத் தூற்றில்வாழ் முயல்முன் றுரக்கவெய்திய தொலைவிலாக் கத்தா, றன்னி லத்துநின் றகற்றுதல் செய்யுந் தானமன்றியுந் தனுவெழுந் தரணி, யெந்நி லத்தினுங் காண்பரு மிறவாத் தானமென்றிவை யியல்பினி லுடைத்தால்.

(இ-ள்.) நிலைபெற்ற அந்தக்காஞ்சிபுரத்தின் எல்லையில், உலகத்தார்செய்த தவப்பேற்றினுல், வலிய ஒருயானையைப் புதலில்வாழ்கின்ற ஒருமுயலானது முன் சென்று துரத்தும்படிவந்த கெடாதவல்லமையினுல் தன்னிடத்தில்நின்றும் போகும்படி செய்யும் ஸ்தானம் இருப்பதல்லாமலும், இறந்து கிடக்கின்ற உடம்புகள் மறுபடியும் உயிர் பெற்றெழுகின்ற இடமும், எவ்விடத்திலுங் காண்பதற் கருமையாகிய அடைந்தவர்கள் இறவாத தானமுமாகிய இவைகள் இயல்பாகவுள்ளன.

தனுவெழுந்தரணி என்பது இறந்தவர்களின் உடலைக் கொண்டுபோய்ப் போட அவைகள் உயிர்பெற்றெழும் பூமி; இறவாத்தானம் என்பது தமக்குச்சாங்காலம் சமீபித்ததறிந்து அங்குச்சென்று வாசஞ்செய்யின் அவர் ஒருகாலத்தும் சாகாதிருக்குந் தன்மையைத்தரும் தானம் எனவறிக. (எஎ)

ஈண்டு தீவினை யாவையு நீக்கி யின்ப மேதரும் புண்ணிய தீர்த்தம், வேண்டி னுர்தமக் கிட்டசித் தியதாய் விளங்கு தீர்த்தநன் மங்கல தீர்த்த, நீண்ட காப்புடைத் தீர்த்தமூன் றுலகி னிகழ்ந்த சாருவ தீர்த்தமு முதலா, ஆண்டு நீடிய தீர்த்தமெண் ணிலவு மமர ராட்டவ ராடுத லொழியார்.

(இ-ள்.) இவ்வுலகத்தில் (முழுகினவர்களுடைய) பாவங்களையெல்லாம் ஒழித்து இன்பத்தையே கொடுக்கும் (துரிதநாசமென்னும்) புண்ணியதீர்த்தமும், விரும்பினவர்களுக்கு இஷ்டமான பொருளைச் சித்திக்கச் செய்வதாய் விளங்குகின்ற இஷ்டசித்தி தீர்த்தமும், நல்ல சுபத்தைத்தருகின்ற மங்கலதீர்த்தமும், தேவர்களால் காக்கப்பட்ட (சுரரட்சிதம் என்னும்) காப்புடைத்தீர்த்தமும், மூன்றுலகத்திலுள்ள (தீர்த்தங்களெல்லாம் ஒன்றாகச்சேர்ந்த) சர்வதீர்த்தமும்முதலாக அந்நகரத்திலுள்ள எண்ணிறந்த தீர்த்தங்களில் விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் ஸ்நானஞ்செய்தலை யொழியார்கள்.—எ-று. (எஅ)

தாள தொன்றினின் மூன்றுபூ மலருந் தமனி யச்செழுந் தாமரைத் தடமு
நீள வார்புனல் குடதிசை யோடி நீக்க ரக்குமா நதியுட னீடு

காள லர்ந்தசெங் குவளைபைங் கமல நன்ப கற்றரு பாடல மன்றிக்
காளமேகமொப் பாளுறை வரைப்பிற் கண்ப டாதகா யாப்புளி யுளதால்.

(இ-ள்.) ஒருநாளில் மூன்றுபுஷ்பங்கள் மலர்கின்ற பொற்றாமரையை யுடைய தடாகமும், மிகுந்த நீரானது கிழக்கிலிருந்து மேற்குத்திக்கில் ஓடிப் பின் அந்நீர் மறைந்துபோகின்ற (பம்பை யென்னும்) நதியுடனே நீண்டபகற்காலத்தில் மலர்ந்த செங்குவளைமலரும் (இரவில் மலர்ந்த) பசியதாமரைமலரும், நல்ல பகலில் மலரும் பாதிரிமரமுமல்லாமல், கரியமேகம்போன்ற திருமேனியையுடைய காமாட்சியம்மையார் வீற்றிருக்கும் அந்தநகரத்தில் மனிதர் கண்களுக்குத் தோற்றாத காயாப்புளியமரமும் இருக்கின்றது.—எ-று. (எக)

சாயை முன்பிணிக் குங்கிண றொன்று தஞ்ச முண்ணினஞ் சாந்தடமொன்று, மாயை யின்றிவக் குள்ளடைந் தார்கள் வான ரத்துரு வாம்பில மொன்று, மேய வவ்வுரு நீங்கிடக் குளிக்கும் விளங்கு பொய்கையு மொன்றுவிண் ணவரோ, டாய வின்பமுய்க் கும்பில மொன்றோ டனைய வாகிய வதிசயம் பலவால்.

(இ-ள்.) தன்னைப்பார்த்தவர்களுடைய சாயையை அவர்களுக்குத்தோன்றாமல் தன்னுள் அடக்கிக்கொள்ளும் ஒருகிணறும், எளிதாகக்குடித்தால் விஷமாய்க்கொல்லுகின்ற ஒரு தடாகமும், வஞ்சகமின்றிவந்து உட்புகுந்தவர்கள் குரங்கினுருவத்தையடையும் ஒரு பிலத்துவாரமும், அப்படியடைந்த அந்தக் குரங்கினுருவம் நீங்கும்படி குளிக்கின்ற காந்தியுள்ள ஒரு பொய்கையும், தேவர்களோடு கலந்து அவ்விடத்திலுண்டாகிய இன்பத்தையனுபவிக்கின்ற ஒரு பிலத்துவாரமுமாகிய இவைகளுடனே அத்தன்மையாகிய பல அதிசயங்கள் அக்காஞ்சிபுரத்திலிருக்கின்றன.—எ-று.

சாயை என்றது-பிரதிபிம்பத்தை. (அ0)

அஞ்சு வன்கரத் தாறிழி மதத்தோ ரானை நிற்கவு மரையிருட் டிரியு, மஞ்சு நீள்வது போலுமா மேனி மலர்ப்ப தங்களில் வண்சிலம் பொலிப்ப, நஞ்சு பில்கெயிற் றரவவெற் றரையி லுமழ மூன்றிலைப் படையுடைப் பிள்ளை, யெஞ்ச வின்றிமுன் றிரியவுங் குன்ற மெறிந்த வேலவன் காக்கவு மிசையும்.

(இ ள்.) வலிய ஐந்து திருக்கரங்களையும் ஆறுபோலப்பெருகுகின்ற மதத்தையுமுடைய விநாயகமூர்த்தியாகிய ஓரானையானது நின்றுகாக்கவும், தாமரைமலர்போன்ற திருவடிகளில் வளம் பொருந்திய சிலம்புகள் ஒலிக்க மேகம் செல்வதுபோல அர்த்தராத்திரியில் சஞ்சரிக்கின்ற பெரிய திருமேனியையும், நஞ்சு ஒழுகுகின்ற பற்களையுடைய பாம்பைக் கச்சாக அணிந்த இடையினையு முடைய அச்சத்தைத்தருகின்ற சூலப்படையைத்தரித்த வயிரவமூர்த்தி இடைவிடாமல் முன்னே திரிந்துகொண்டுகாக்கவும், கிரவுஞ்சமலையைப்பிளந்த வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள் காக்கவும் அந்தநகரம் ஓரிடையூறுமில்லாமலிருக்கின்றது.

சத்தி தற்பர சித்தயோ கிகளுஞ் சாத கத்தனித் தலைவரு முதலா, நித்த மெய்திய வாயுண்மெய்த் தவர்க ணீடு வாழ்திருப் பாடியு மனேகஞ், சித்தர் விஞ்சைய ரியக்கர்கந் தருவர் திகழ்ந்து மன்னுவார் செண்டுகை

யேந்தி, வித்த கக்கரி மேற்கொளுங் காரி மேவு செண்டணை வெளியுமொ
ன் றுளதால்.

(இ-ள்.) சத்திகளும், மேலாகிய சித்தத்தையுடைய யோகிகளும், அவ் யோகநெறியைச்சாதிக்கும் சாதகரென்னும் ஒப்பற்ற தலைவர்களும், அழிவில்லாத வாழ்நாளையுடைய மெய்ம்மையான தவத்தையுடையவர்களுமாகிய இவர்கள் முதலாயுள்ளவர்கள் நீடித்து வாழ்கின்ற இடங்களும் அநேகமிருக்கின்றன ; சித்தர்களும், வித்தியாதரர்களும், இயக்கர்களும், கந்தருவர்களும் விளங்கி அந்நகரத்தில் வசிப்பார்கள் ; செண்டாயுதத்தைக் கையிற்பிடித்துச் சிறந்த யானையின்மேல் ஏறிச்செல்லும் ஐயனார் உலாவிவருகின்ற வையாளிவெளியும் ஒன்றிருக்கின்றது.-எ-று.

வையாளிவெளி என்பது, குதிரைநடத்தும்வெளி..சாதகத்தனித்தலைவராவார் மருந்து, மந்திரம், யோகம்முதலியவற்றால் ஆயுள் நீடித்திருக்கச் சாதகம் செய்கின்றவர்கள். (அஉ)

வந்த டைந்தவர் தம்முரு மாய மற்று ளாரைத்தாங் காண்பிட முள
து, சிந்தை யோகத்து முனிவர்யோ கினிகள் சேரும் யோகபீ டமுமுள
தென்றும், அந்தமில்லறம்புரப்பவள்கோயிலானபோகபீடமுமுளதாகும்,
எந்தை யார்மகிழ் காஞ்சிநீ டெல்லை யெல்லை யில்லன வுள்ளவா ரறிவார்.

(இ-ள்.) வந்து சேர்ந்தவர்கள் உடலம் பிறருக்குத்தோன்றாமல் மறைய, அவர்கள் பிறரைக்காணும்படியான ஒரு சபையிருக்கின்றது ; யோகஞ்செய்கின்ற சிந்தையையுடைய முனிவர்களும், யோகினிகளும், சேர்ந்திருக்கின்ற யோகபீடமும் ஒன்றிருக்கின்றது ; அழிவில்லாத முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்க்கின்ற காமாட்சியம்மையார் வீற்றிருந்தருளும் திருக்கோயிலில் சிறந்த (திருக்காமக்கோட்டமென்னும்) போகபீடமும் ஒன்றிருக்கின்றது ; எமது ஆண்டவராகிய திருவேகம்பநாதர் வீற்றிருக்கின்ற காஞ்சிநகரத்தின் நீண்ட எல்லையில் அளவற்ற அதிசயங்கள் உள்ளன; அவைகளை யாவரறிவார்கள் ? (ஒருவருமில்லை.)—எ-று.

விம்மிதங்கள் இன்னும் பலவுள்ளனவென்பார் ' எல்லையில்லன ' என்றார்.

தூண்டு சோதியொன் றெழுந்திரு ளக்குஞ் சுரர்கள் வந்துசூ ழுரு
த்திர சோலை, வேண்டி னார்கடம் பிறப்பினை யொழிக்கு மெய்ந்நெ றிக்கணி
ன் றார்கடாம் விரும்பித், தீண்டில் யாவையுஞ் செம்பொனாக் குவதோர்
சிலையு முண்டுரை செய்வதற் கரிதால், ஆண்ட நாயகி சமயங்க ளாறு ம
கிலயோனியு மளிக்குமந் நகரம்.

(இ-ள்.) விளங்கி யெழுகின்ற ஒருசோதியானது இரவில்தோன்றி இருளைக்குதற் கிடமாயிருக்கும் தேவர்கள்வந்து சூழ்ந்துகொண்டிருக்கின்ற உருத்திர சோலையென்னும் பூங்காவனமும், விரும்பினவர்களுடைய பிறப்பினை யொழிக்கின்ற (ஒருகல்லும்) மெய்ம்மையான நன்னெறியில் நின்றவர்கள் (பொன்னாக்கவேண்டுமென்று) விரும்பித்தீண்டும்படிச்செய்தால் (ஓடுமுதலிய எல்லாப் பொருள்களையும்) சிவந்த பொன்னாகச்செய்கின்ற ஒரு கல்லும் உண்டு ; இத்தன்மையான அதன்பெருமையைச் சொல்வதற்கு அரிதாகும் ; எம்மை யடிமையாகக்கொண்ட

முதல்வியாகிய காமாட்சியம்மையார் அறுசமயங்களையும், எல்லாவுயிர்களையும் காப்பாற்றுகின்ற அந்த நகரத்தில்.—எ - று.

அறு சமயங்களாவன,— சைவம், பாசுபதம், மஹாவிரதம், காளாமுகம், வாமம், பைரவம் என்பனவாம். ஓர்சிலை என்றது முன்னுங் கூட்டப்பட்டது. நீண்டில் என்றது பிறவினைப்பொருளில்வந்தது. (அச)

என்று முள்ளவிந் நகர்கலி யுகத்தி விலங்கு வேற்கரி காற்பெரு வளத்தோன், வன்றி றற்புலி யிமயமால் வரைமேல் வைக்க வேகுவோன் றனக்கிதன் வளமை, சென்று வேடன்முன் கண்டுரை செய்யத் திருந்து காதநான் குட்பட வகுத்துக், குன்று போலுமா மதில்புடை போக்கிக் குடியி ருத்தின கொள்கையின் விளங்கும்.

(இ - ள்.) எக்காலத்திலும் அழிவில்லாதிருக்கின்ற இந்தக் காஞ்சிநகரமானது கலியுகத்திலே மிகுந்த வலிமைபொருந்திய புலிக்கொடியை இமயமலையின் மேல் நாட்டும்படி சென்றவனாகிய விளங்குகின்றவேலைப்பிடித்த கரிகாற்சோழனென்னும் அரசனுக்கு இந்நகரத்தின்வளத்தை முன்னாகச் சிந்துமேதனென்னும் ஒரு வேடன்போய்க்கண்டு சொல்ல, திருத்தமான சுற்றெல்லை நான்குகாததூரம் அடங்கும்படி ஒருபட்டணமாக வகுத்து மலையைப்போல் உயர்ந்த மதிலை நான்கு பக்கத்திலும் சூழ்ந்திருக்கும்படி உண்டாக்கி அநேகங்குடிகளை அவ்விடத்தில் வாசம் பண்ணும்படி செய்தபெருமையோடு விளங்கும்.—எ - று. (அரு)

வேறு.

தண்காஞ்சி மென்சினைப்பூங் கொம்ப ராடல் சார்ந்தசைய வதன்மருங்கு சுரும்பு தாழ்ந்து, பண்காஞ்சி யிசைபாடும் பழன வேலிப் பணைமருதம் புடையுடைத்தாய்ப் பாரி னீடு, திண்காஞ்சி நகர்நொச்சி யிஞ்சி சூழ்ந்த செழுங்கிடங்கு திருமறைக ளொலிக்குந் தெய்வ, வண்காஞ்சி யல்குன்மலை வல்லி காக்க வளர்கருணைக் கடலுலகஞ் சூழ்ந்தான் மானும்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய காஞ்சிமரத்தினது மெல்லிய பூங்கொத்துக்களையுடைய கொம்புகள் காற்றால் அசைந்தாட, அக் கொம்புகளிலுள்ள மலர்களில் வண்டுகள் விழுந்து காஞ்சியென்னும் பண்ணை இசையோடுபாடுகின்ற சோலையாகிய வேலிகளையுடைய வயலோடு கூடிய மருதநிலத்தை அருகிலுடையதாய் உலகத்தில் சிறந்த காஞ்சிநகரத்தினது வலியநொச்சியாகிய மதிலைச்சூழ்ந்த செழுமைபொருந்திய அகழியானது சிறந்த வேதங்கள் ஒலிக்கும் தெய்வீகமாகிய காஞ்சியென்னும் ஆபரணத்தைத்தரித்த இடையினையுடைய உமாதேவியார் காப்பதனால் அவ்வம்மையாருடைய மிகுந்த கிருபையாகிய கடலானது அந்நகரத்தைச் சூழ்ந்திருப்பதை யொக்கும்.— எ - று. (அசு)

கொந்தலர்பூங் குழலிமயக் கொம்பு கம்பர் கொள்ளும்பூ சனைகுறித்த தானங் காக்க, மந்திரமா மதிலகழி யவர்தாந் தந்த வாய்மையா கமவிதியின் வகுப்புப் போலு, மந்தமில்சீர்க் காஞ்சியைவந் தடைந்தார்க் கன்றி யடைகளங்க மறுப்பரிதென் றறிந்து சூழ,வந்தணைந்து தன்கறுப்பு முவர்ப்பு நீக்கு மாகடலும் போலுமலர்க் கிடங்கு மாதோ.

(இ-ள்.) தாமரைமலர்களையுடைய அகழியானது கொத்துக்களாக அலர்ந்த மலர்களை முடித்த கூந்தலையுடைய உமாதேவியார் திருவேகம்பநாதர் விரும்பி ஏற்றுக்கொள்ளும் பூசனையைச் செய்யக்குறித்த இடத்தைக் காப்பாற்றும் பொருட்டு மந்திரமயமான மதிலோடு கூடிய அகழியை அக்கடவுளால் அருளிச்செய்யப்பட்ட உண்மையாகிய சிவாகமவிதியினால் நிருமித்தலையொத்திருக்கும். அன்றியும், கெடாதசிறப்பினையுடைய காஞ்சிநகரத்தை வந்தடைந்தவர்களுக்கல்லாமல் தம்மையடைந்த குற்றத்தை நீக்கிக்கொள்ளுதல் அருமையென்று அக்காஞ்சியைச் சூழும்படிவந்து தன்னிடத்திலுள்ள கறுப்பையும் உவர்ப்பையும் நீக்கிக்கொள்ளும் பெரியகடலையும் ஒத்திருக்கும்.—எ-று. (அஎ)

ஆங்குவள ரெயிலினுடன் விளங்கும் வாயி லப்பதியில் வாழ்பெரியோ ருள்ளம் போல, ஓங்குநிலைத் தன்மையவா யகில முய்ய வுமைபாகரருள்செய்த வொழுக்க மல்லாற், றீங்குநெறி யடையாத தடையு மாகிச் செந்நெறிக்க ணிகழ்வாய்மை திருந்து மார்க்கந், தாங்குலவ நிலவிவளரொளியா லென்றுந் தடநெடுவா னளப்பனவாந் தகைய வாகும்.

(இ-ள்.) அவ்வகழியி னருகில் ஓங்கிய மதிலுடன் விளங்குகின்ற கோபுரவாசல்கள் அந்நகரத்தில் வாசஞ்செய்கின்ற பெரியோர்களது மனம்போல உயர்ந்த தன்மையையுடையனவாய், உலகத்திலுள்ளவர்கள் நற்கதியடையும்படி சிவபெருமான் அருளிச்செய்த ஆகமத்தில் விதித்த நல்லநடத்தையல்லாமல் தீமையாகிய நடத்தையைச் சேர்வதற்கு ஓர் தடையாகியும், நேரானவழியில் நடக்கும்படிசெய்கின்ற மெய்ம்மைபொருந்தி விளங்குகின்ற சோதியோடு தாம் நிலைபெறவணங்கி அகன்று நெடிதாயிருக்கும் ஆகாயத்தை அளப்பதற்கு எழுந்த தன்மையையுடையனவா யிருக்கும்.—எ-று.

உமைபாகரருள்செய்த செந்நெறிக்கணிகழ் வாய்மைதிருந்து மார்க்கவொழுக்கம் என்றும், வளரொளியால் தாங்குலவநிலவி என்றுங் கூட்டுக. செந்நெறிக்கணிகழ்வாய்மை என்றது சிவாகமத்தை. (அஅ)

மாறுபெற லருங்கனக மாட நீடு மணிமறுகு நெடுந்தெருவும் வளத்தில் வந்த, ஆறுபயி லாவணவீ திகளு மற்று மமைந்தநக ரணிவரைக ணடுவு போக்கிக், கூறுபடு நவகண்ட மன்றி மல்கக் கொண்டவனே கங்கண்ட மாகி யன்ன, வேறொருமண் ணுலகுதனி லுளதா லென்ன விளங்கியமா லோகநிலை மேவிற் றன்றே.

(இ-ள்.) களங்கமற்ற பொன்மயமாகிய மண்டபங்கள் மிகுதியா யிருக்கின்ற அழகிய வீதிகளும், நீண்டி தெருக்களும், வளம்பொருந்திய பண்டங்கள் விற்கின்ற கடைவீதிகளும் மற்றுமுள்ளவைகளும் பொருந்திய அந்த நகரமானது அழகிய இமயமுதலிய மலைகளை எல்லையாக நடுவில் அமைத்து வெவ்வேறாகப் பிரிக்கப்பட்டிருக்கும் நவகண்டங்கள்போ லிருப்பதல்லாமல், நெருக்கமாகக்கொண்ட அநேகங்கண்டங்களாக வகுக்கப்பட்ட வேறொரு பூவுலகத்தை இந்தக் காஞ்சிமண்டலம்தன்னிடத்தில் உளதென்று சொல்லும்படி விளங்குகின்ற ஒரு மகாலோகத்தின்தன்மையையடைந்தது.—எ-று.

காஞ்சிநகரத்திலிருக்கும் ஒவ்வொரு வீதியும் ஒவ்வொரு கண்டம்போல வும், மேல்வீடுகளின் வரிசை அக்கண்டங்களின் நடுவிலுள்ள மலைகள்போலவும் விளங்கினவென்க. நவ கண்டங்களாவன,— பரதகண்டம், கிம்புருடகண்டம், அரிவருடகண்டம், இளாவிரதகண்டம், இரமியகண்டம், இரணியகண்டம், குரு கண்டம், கேதுமாலகண்டம், பத்திராசுவகண்டம், என்பன. இமயமுதலிய மலைக ளாவன,—இமயகிரி, ஏமகிரி, நிடதகிரி, நீலகிரி சுவேதகிரி, சிருங்ககிரி, கந்தமாதன கிரி, மாலியவான்கிரி என்பனவாம். இதனை,

" இமகிரிக்குந் தென்கடற்கு மிடைப்பாகம் பாரதமே
யிமகிரிமற் றேமகிரி யிடைப்பாகங் கிம்புருட
மமைநிலவு நிசதகிரித் தென்பாக மரிவருட
மிமையவரு மிருந்தபெரு வரைச்சார விளாவிரதம்.

நீலகிரி வடதேச மிரமியமே யெனநினைக
பாலனைய கிரிவடபா லிரணியமே யெனப்பார்க்க
சீலமுளார் சிருங்ககிரி வடபாலைத் தென்பாலை
யோலமிடு முததிக்குங் குருவெனவே யுன்னுகவே.

குடகடற்குக் கீழ்க்கேது மாலமெனக் குறித்திடுக
மிடலுடைய வியன்கந்த மாதனத்தின் மேற்கதுதா
னிடமுடைய மாலியவா னெனுங்கிரிக்குக் கீழ்பாற்கீழ்க்
கடலினுக்கு மேல்பாகம் பத்திரமாக் கருதுகவே." — என்னும் சிவதரு

மோத்தரத்தானுணர்க. (அசு)

பாகமருங் கிருபுடையு முயர்ந்து நீண்ட படரொளிமா ளிகைநிரை கள் பயின்மென் கூந்தற், றோகையர்தங் குழாமலையத் தூக்கு முத்தின் சுடர்க்கோவைக் குளிர்நீர்மை துதைந்த வீதி, மாகமிடை யொளிதழை ப்ப மன்னி நீடு மருங்குதா ரகையலைய வரம்பில் வண்ண, மேகமிடை கிழித்தொழுகுந் தெய்வக் கங்கை மேனதிகள் பலமண்மேல் விளங்கி யோங்கும்.

(இ-ள்.) ஓரமாகிய இருபுறத்திலும் உயர்ந்து நீண்டிருக்கின்ற படர்ந்த ஒ ளியையுடைய மாளிகைகளின் வரிசைகளில் வாசஞ்செய்கின்ற மிருதுவாகிய கூ ந்தலையுடைய மாதர் கூட்டங்கள் அவ்வுப்பரிகைகளில் அலையும்படி தொங்கக் கட்டியிருக்கும் முத்துமாலைகளின்கோவைகளினால் குளிர்ந்ததன்மையையுடைய வீதியானது ஆகாயத்தில் விளங்க நிலைபெற்றுள்ள நட்சத்திரங்கள் அலையும்படி ஒப்பற்ற கருநிறத்தையுடைய மேகங்களை நடுவில் கிழித்துக்கொண்டு பூமியில் இ றங்குகின்ற தெய்வத்தன்மைபொருந்திய ஆகாயகங்கையினின்றும் பிரிந்தபல நதி கள் உலகத்தில் வந்ததுபோல விளங்கியிருக்கும்.—எ-று.

நெருங்கிய முத்துமாலைகள் ஆகாயகங்கையின் வீழ்ச்சிபோலவும், அவைக ளினொளி வெள்ளம்போலவும், அதற்கிடமாகிய வீதிகள் அப்பிரவாகத்தை யடக் கிக்கொண்டிருக்கும் ஆறுகள்போலவும் தோன்றினவென்க, (சுo)

கிளரொளிச்செங் கனகமயந் தானாய் மாடு கீழ்நிலையோர் நீலச்சோ பானம் பூணக், கொளவமைத்து மீதொருபாற் கன்ன சாலை குலவயிரத் தாலமைத்த கொள்கை யாலே, யளவில்சுடர்ப் பிழம்பானார் தம்மைத்

தேடி யகழ்ந்தேன மானுனு மன்னமாகி, வளர்விசும்பி லெழுந்தானுட போல நீடு மாளிகைக ளுளமற்ற மறுகு தோறும்.

(இ-ள்.) அவ்வீதிகள்தோறு மிருக்கின்ற சிலமாளிகைகள் மிகுந்த ஒளியையுடைய சிவந்த பொன்மயமாகச் செய்யப்பட்டு அருகிலுள்ள கீழ் நிலையில் நீலமணிகளிழைத்த படியையுடையனவாகி மேல் நிலையின் ஓர்பக்கத்தில் சிறந்த வயிரத்தால் அமைத்த சாளரத்தையுங்கொண்டிருக்கின்ற முறைமையினால், அளவில்லாத ஒளிப்பிழம்பாய் நின்ற சிவபெருமானுடைய அடியையும் முடியையும் தேடிக்காணும்படி பன்றியுருவங்கொண்டு பூமியைத்தோண்டியவிஷ்ணுவும்,அன்னவுருவங்கொண்டுநீண்ட ஆகாயத்தில்பறந்த பிரமனும் (இவர்கள் கலகத்தையொழிக்கச் சோதியாயெழுந்த சிவபெருமானும்) போன்றிருக்கின்றன.—எ-று.(சுக)

மின்பொலிபன் மணிமிடைந்த தவள மாட மிசைப்பயில்சந் திரகாந்தம் விசும்பின் மீது, பொன்புனையுஞ் செக்கர்நிறப் பொழுது தோன்றும் புனிற்றுமதி கண்டுருகிப் பொழிந்த நீரால், வன்புலியி னுரியாடைத் திருவே கம்பர் வளர்சடையு மிளம்பிறையுங் கண்டு கும்பிட், டன்புருகி மெய்பொழியக் கண்ணீர் வாரு மடியவரு மனையவுள வலகிலாத.

(இ-ள்.) மின்னலைப்போல விளங்குகின்ற பலமணிகளிழைத்த வெண்மை பொருந்திய உப்பரிகைகளின் மேற்புறத்தில் பதித்திருக்கின்ற சந்திரகாந்தக்கற்கள் ஆகாயத்தில்பொன்போலுஞ் செந்நிறத்தையுடைய மாலைப்பொழுதில் தோன்றுகின்ற இளம்பிறையைக்கண்டு உருகிச்சொரிந்த நீரினால், வலியபுலித்தோலாகிய ஆடையையுடைய திருவேகம்பநாதரது வளர்ந்த சடையையும், இளமையாகிய பிறையையும் தரிசித்துக் கைகுவித்து வணங்கி அன்பினால்உருகித்தமது உடம்பில் சிதறும்படி ஆனந்தக்கண்ணீர் சொரிகின்ற அடியவரையும்ஒத்திருந்தன; இப்படி அளவில்லாத மேல்வீடுகளிருக்கின்றன.—எ - று. (சுஉ)

முகிலுரிஞ்சுங் கொடிதொடுத்த முடிய வாகு முழுப்பளிங்கின் மாளிகைகண் முற்றுஞ் சுற்று, நிகரில்சரா சரங்களெல்லா நிழலினாலே நிறைதலினு னிறைதவஞ்செ யிமயப்பாவை, நகிலுழுத சுவடும்வளைத் தழும்பும் பூண்ட நாயகனார் நான்முகற்குப் படைக்க நல்கும், அகிலயோ னிகளெல்லா மமைத்து வைத்த வரும்பெரும்பண் டாரநிலை யனைய வாகும்.

(இ-ள்.) மேகங்கள் உராய்ந்து செல்கின்ற கொடிகள் கட்டிய சிகரங்களையுடைய பெரிய பளிங்குக்கற்களினால் கட்டப்பட்ட மாளிகைகளின் புறம்முழுவதும்,சுற்றுகின்ற ஒப்பற்ற சரம் அசரமாகிய எல்லாவுயிர்களும் அவைகளின் பிரதிபிம்பத்தினால் நிறைந்திருப்பதுபோலத் தோன்றுதலினால், நிறைவாகிய தவத்தைச் செய்த பர்வதராசபுத்திரியாகிய உமாதேவியாரது ஸ்தனங்கள் அழுந்திய தழும்பையும், வளையல்களழுந்திய தழும்பையும் தமதுதிருமேனியில் தரித்துக்கொண்ட திருவேகம்பநாதர் பிரமனுக்கு உலகங்களைச் சிருஷ்டிக்கும்படி கொடுக்கும் சகல சீவராசிகளையும் சேர்த்துவைத்திருக்கின்ற அருமையாகிய பெரிய பொக்கிஷசாலையை யொத்திருக்கும்.—எ - று. (சுங)

பொற்களப மாளிகைமேன் முன்றி னின்று பூங்கழங்கு மணிப்பந்தும் போற்றி யாடும், விற்புருவக் கொடிமடவார் கலன்கள் சிந்தி விழுவனவுங் கெழுவுதுணை மேவு மாதர், அற்புமுதிர் கலவியினிற் பரிந்து சிந்து மணி

மணிச்சே டியர்தொகுக்கு மவையு மாகி, நற்கனக மழையன்றிக் காஞ்சி யெல்லை நவமணிமா ரியும்பொழியு நாளு நாளும்.

(இ-ள்.) பொன்மயமாகிய களபச்சாந்து பூசியஉப்பரிகைகளின்மேல் முற் றத்தினின்று மெல்லியகழற்காய்களையும் அழகியபந்துகளையும் விரும்பி விளையாடு கின்ற வில்லையொத்த புருவத்தையுடைய கொடிபோன்ற மாதர்களின் ஆபரணங் களினின்றும் சிந்திவிழுந்த பொன்களும், தழுவுகின்ற புருஷர்களோடுகூடிய மா தர்கள் அன்புமுதிர்ந்த புணர்ச்சியில் உண்டாகிய பிணக்கினால் வருந்திச்சிந்திய ஆபரணங்களும் பாங்கியர்களால் ஒதுக்கப்பட்ட முத்துமுதலாகிய மணிகளுமாய்ச் சேர்ந்துவிழுதலால் காஞ்சிபுரத்தின் எல்லையில் நாள்தோறும் நல்ல பொன்மழை யேயல்லாமல் நவரத்தின மழையும் பொழிவதுபோலத் தோன்றும்.—எ-று.

மணிகள் பெண்கள் சிற்றிலிழைத்த மணிகளும் ஆபரணங்களிலிருந்து சிதறிய மணிகளுமாம். (கூச)

பூமகளுக் குறையுளெனுந் தகைய வான பொன்மாடத் தரமியங்கள் பொலிய நின்று, மாமகரக் குழைமகளிர் மைந்த ரங்கண் வந்தேறு முன் னறுநீர் வண்ட லாடத், தூமணிப்பொன் புனைநாளத் துருத்தி வீசுஞ் சு டர்விடுசெங் குங்குமநீர்த் துவலை தோய்ந்த, காமர்மணி நாசிகையின் ம ருங்கு தங்குங் கருமுகில்கள் செம்முகில்க ளாகிக் காட்டும்.

(இ-ள்.) திருமகளுக்கு இருப்பிடமென்று சொல்லத்தக்க தகுதியை யு டையபொன்மயமாகிய மாளிகைகளின் மேலுள்ள நிலாமுற்றங்களில் அழகு வி ளங்கும்படி நின்று பெரிய மகரகுண்டலங்களை யணிந்த மாதர்கள் தங்கள் புருஷ ர்கள் அந்நிலாமுற்றங்களில்வந்து ஏறுவதற்கு முன்னே நல்ல பனிநீரால் விளையா டும்படி விரும்பிக் குற்றமற்ற பொன்னினாற்செய்து மணிகளழுத்திய துளைகளையு டைய நீர்தூவுந் துருத்தியினின்றும் இறைத்த ஒளிவீசுகின்ற சிவந்த குங்குமங்க லந்த பனிநீர்த்துளிகள் தோய்ந்திருக்கின்ற அழகிய மணிகளிழைத்த கோபுரநாசி களின் பக்கத்தில் தங்கிய கரியமேகங்கள் செந்நிறத்தையுடைய மேகங்களாய்த் தோன்றும்.—எ-று. (கூரு)

இமமலிய வெடுத்தநெடு வரைகள் போல விலங்குசுதைத் தவளமா ளிகைநீள் கோட்டுச், சிமையடையுஞ் சோபான நிரையும் விண்ணுந் தெரி வரிய தூய்மையினா லவற்றுட் சேர்ந்து, தமர்களுட னிழிந்தேறு மைந்தர் மாதர் தங்களையும் விசும்பிடைநின் றிழியா நிற்கும், அமரரையு மரமகளி ர் தமையும் வெவ்வே றறிவரிதாந் தகைமையன வனேக மங்கண்.

(இ-ள்.) பனிமூடும்படி உயர்ந்த நெடியமலைகள்போன்று விளங்குகின்ற சுண்ணச்சாந்து பூசுதலால் வெண்மையாகிய மாளிகைகளின் நீண்ட சிகரத்தின் உச்சியையடையும்படி யமைத்திருக்கும் படிகளின் வரிசையையும், விண்ணுலக த்தையும் வேறாகப்பிரித்து அறியக்கூடாத தன்மையினால், அவைகளைச்சேர்ந்து உறவினரோடு இறங்கி ஏறுகின்ற புருஷர்களையும் ஸ்திரிகளையும், விண்ணுலகத்தி னின்றும் இறங்கிவருகின்ற தேவர்களையும் தேவரம்பையர்களையும் வெவ்வேறாக அறிவதற்கருமையான தன்மையை யுடையனவாய் அந்நகரத்தில் அநேகம் மாளி கைகள் இருக்கின்றன.—எ-று. (கூசு)

அரவநெடுந் தேர்வீதி யருகு மாடத் தணிமணிக்கோ புரத்தயலே வியல்வாய் நீண்ட, விரவுமர கதச்சோதி வேதித் திண்ணை விளிம்பிறெ ளிதுளும்புமுறை படிமீ தேறுங்,குரவலருங் குழன்மடவா ரடியி னூட்டுங் குழம்படுத்த செம்பஞ்சின் சுவட்டுக் கோலம், பரவைநெடுந் தரங்கமி சை விளங்கித் தோன்றும் பவளநறுந் தளிரனைய பலவும் பாங்கர்.

(இ-ள்.) ஒலியையுடைய நெடியதேரோடும் வீதிகளின் இருபுறத்திலுமி ருக்கும் மண்டபங்களின் அழகியமணிகள்பதித்த கோபுரத்தின் அருகிலுள்ள வி சாலமாய் நீண்ட மரகதமணிகளிழைத்து ஒளிபொருந்திய திண்ணைவிளிம்புகளின் ஒளியானது பாயும் முறைமையினால் அப் படிகளின்மேல் ஏறுகின்ற குராமலர் கள் விளங்கும் கூந்தலையுடைய மாதர்களின் பாதங்களில்பூசிய செம்பஞ்சுக் குழ ம்பின் வைப்புகளின் அடையாளங்கள் நீண்ட அலைகளையுடைய கருங்கடலின் மேல் விளங்கித்தோன்றுகின்ற நல்ல பவளக்கொழுந்துகளை யொத்திருக்கின்றன; இப்படி அநேக இடங்கள்.—எ-று. (கூஎ)

வெம்புசினக் களிற்றதிர்ப்பு மாவி னார்ப்பும் வியநெடுந்தேர்க் காலி சைப்பும் விழவ றாத, அம்பொன்மணி வீதிகளி லரங்கி லாடு மரிவையர் நூ புரவொலியோ டமையு மிம்பர், உம்பரினிந் திரன்களிற்றின் முழக்கு ந் தெய்வ வயரிரவி மாக்கலிப்பு மயனூர் தித்தேர், பம்பிசையும் விமான த்தி லாடுந் தெய்வப் பாவையர்நூ புரவரவத் துடனே பல்கும்.

(இ-ள்.) காஞ்சிபுரத்தின் கீழிடத்தில், மிகுந்த கோபத்தையுடைய யானை களின் முழக்கமும், குதிரைகளின் கனைப்பும், விசாலமாகிய நீண்ட தேர்ச்சக்கர ங்களின் ஒலியும், என்றும் திருவிழாக்கள் நீங்காத அழகிய பொன்னையும் மணிக ளையும் பரப்பிய வீதிகளிலுள்ள நாடகசாலைகளில் ஆடுகின்ற நாடகப்பெண்களின் காலிலணிந்த சிலம்புகளினொலியும் பொருந்தியிருக்கும்; அந்நகரத்தின் மேலிடத் தில் தேவேந்திரனுடைய அயிராவதமென்னும் யானையின் முழக்கமும், தெய்வத் தன்மைபொருந்திய சூரியனுடைய தேரிற்பூட்டியசப்தா வென்னும் குதிரையின் கனைப்பும், பிரமனுடைய ஊர்தியாகிய தேரினின்றும் பரவிய முழக்கமும், தேவ விமானங்களில் ஆடுகின்ற தெய்வமாதர்களின் காலில் தரித்த சிலம்பின் ஓசை யும் நிறைந்திருக்கும்.—எ-று. (கூஅ)

அருமறையந் தணர்மன்னு மிருக்கை யான வாகுதியின் புகையடுத் த வம்பொன் மாடப், பெருமறுகு தொறும்வேள்விச் சாலை யெங்கும் பெ றுமவிர்ப்பா கங்கொடுக்கும் பெற்றிமேலோர், வருமுறைமை யழைத்து விடு மந்திரமெம் மருங்கும் வானவர்நா யகர்திருவே கம்பர் முன்றிற், திரு மலிபொற் கோபுரத்து நெருங்கு மெல்லாத் தேவரையு மணித்தாகக் கொண்டு செல்லும்.

(இ-ள்.) அரிய வேதங்களை யுணர்ந்த பிராமணர்கள் வாழ்ந்திருக்கின்ற இடங்களாகிய அழகிய பொன்மயமாகிய மாளிகைகளையுடைய வீதிகள்தோறும் ஆகுதிசெய்வதால் புகைகள் பரவிய யாகசாலைகளிலெல்லாம் தேவர்கள் பெறுதற் குரிய அவிர்ப்பாகத்தைக் கொடுக்கின்ற குணத்தினையுடைய மேலோர்கள் அத் தேவர்கள் அந்த அவியைப்பெறும்படி அழைக்கின்ற மந்திரங்கள் தேவர்களுக்கு நாயகராகிய திருவேகம்பநாதரது திருக்கோபுரவாசலினுடையநாற்புறத்திலும் (சே

வைசெய்யும்பொருட்டு) நெருங்கியிருக்கின்ற எல்லாத்தேவர்களையும் யாகசாலையின்சமீபமாக அழைத்துக்கொண்டுபோகும்.—எ-று.

அவிர்பாகம் என்பது தேவர்களுக்குத் திருப்தியாக யாகாக்கினியி லிடும்பொருளாம். (சசக)

அரசர்குலப் பெருந்தெருவுந் தெற்றிமுற்றத் தாயுதங்கள் பயிலும் விய விடமு மங்கண், புரசைமதக் கரிகளொடு புரவி யேறும் பொற்புடைய வீதிகளும் பொலிய வெங்கும், விரைசெய்நறுந் தொடையலங்கற் குமார் செய்யும் வியப்புறுசெய் தொழில்கண்டு விஞ்சை விண்ணோர், நிரைசெறியும் விமானவூர் திகளின் மேலு நிலமிசையும் பலமுறையு நிரந்து நீங்கார்.

(இ-ள்.) அரசர்குலத்தார் வாழ்கின்ற பெரிய வீதிகளும், சித்திரகூடங்களின் முற்றத்தில் படைக்கலங்களைப் பழகுகின்ற விசாலமாகிய இடமும், கழுத்துக்கயிற்றையுடைய மதயானைகளோடு குதிரைகளையும் ஏறிநடத்துகின்ற அழகிய வீதிகளும் ஆகிய எவ்விடத்தினும் பொலிவடையும்படி வாசனைபொருந்திய நல்ல மலர்மாலைகளைத்தரித்த அரசகுமாரர்கள் செய்கின்ற அதிசயிக்கத்தக்க பலவகைத் தொழில்களைக்கண்டு வித்தியாதரர்முதலிய தேவர்கள் வரிசையாக நெருங்கியிருக்கின்ற தேவவிமானங்களின்மேலும் பூமியினும் பலதரமும்வந்து கூடி நீங்காதிருப்பார்கள்.—எ-று. (சOO)

வெயிலுமிழும் பன்மணிப்பூண் வணிக மாக்கள் விரவுநிதி வளம்பெருக்கும் வெறுக்கை மிக்க, வயினிலவு மணிக்கடைமா நகர்க ளெல்லாம் வனப்புடைய பொருட்குலங்கள் மலித லாலே, கயிலைமலை யார்கச்சி யாலயங்கள் கம்பமுமே வியதன்மை கண்டு போற்றப், பயிலுமுருப் பல கொண்டு நிதிக்கோ னங்கப் பயிலளகா புரிவகுத்த பரிசு காட்டும்.

(இ-ள்.) ஒளிவீசுகின்ற பல ரத்தினங்களிழைத்த ஆபரணத்தை யணிந்த வணிகர்கள் வர்த்தகஞ்செய்தலால் பெற்ற செல்வமிகுந்த காசுக்கடைகளையுடைய வீதிகளிலெல்லாம் சிறப்புப்பொருந்திய பொன் மணிமுதலிய பொருட்குப்பைகள் மிகுதியாகநிறைந்திருப்பதினால், சிவபெருமான் காஞ்சிநகரத்திலுள்ள பலசிவாலயங்களிலும் திருவேகம்பத்திலும் வீற்றிருந்தருளும்தன்மையை அறிந்து வணங்கும்படிகுபேரன் தான்பழகிய பல வுருவங்களையெடுத்து அந்நகரத்தில் வாசஞ்செய்யத் தனக்கு இடமாகிய அளகாபுரியையும் பலவுருவங்கொள்ள வகுக்கப்பட்டது போலத் தோன்றுகின்றன.—எ-று. (சOக)

விழவின்மலி திருக்காஞ்சி வளைப்பின் வேளாண் விழுக்குடிமைப் பெருஞ்செல்வர் விளங்கும் வேணி, மழவிளவெண் டிங்கள்புனை கம்பர் செம்பொன் மலைவல்லிக் களித்தவருளுணவின் மூலந், தொழவுலகு பெறுமவடா னருளப் பெற்றுத் தொன்னிலத்து மன்னுபயிர் வேத வாய்மை, யுழவுதொழி லாற்பெருக்கி யுயிர்க ளெல்லா மோங்கவருந் தரும வினைக் குளரா லென்றும்.

(இ-ள்.) திருவிழாக்களால் சிறந்திருக்கின்ற காஞ்சிநகரத்தின் எல்லையில் வாழ்கின்ற சிறந்த வேளாளர்குலத்திற் பிறந்த செல்வர்கள் ஒளிவிளங்குகின்ற ச

டையில் வெண்மையாகிய இளம்பிறையைத் தரித்த திருவேகம்பநாதர் பர்வதராச புத்திரியாகிய உமாதேவியாருக்குக் கொடுத்தருளிய அருள்வடிவமான இருநாழி நெல்லையும், சர்வலோகங்களையும்பெற் றருளிய அவ்வம்மையார் கொடுக்கத்தொழுது பெற்றுக்கொண்டு பழமையாகிய இவ்வுலகத்தில் நிலைபெற்ற பயிர்களை வேதத்தில் விதித்த உழவுத்தொழிலினால் விருத்திசெய்து ஆன்மகோடிகளெல்லாங் ஓங்கும்படிவருகின்ற தருமச்செய்கைகளில் குறைவில்லாதவர்களாய் எந்நாளும் இருக்கின்றார்கள்.—எ-று. (கoஉ)

ஓங்கியநாற் குலத்தொவ்வாப் புணர்விற் றம்மி லுயர்ந்தனவு மிழிந்தனவு மான சாதி, தாங்குழுமிப் பிறந்தகுல பேத மெல்லாந் தந்தமைக்கேற்றதனி யிடங்கண் மேவி, யாங்குநிறை கிளைபயின்று மரபி னேற்ற வடுத்தவினைத் தொழின்முறைமை வழாமை நீடு, பாங்குவள ரிருக்கைநிலை பலவு மெல்லாம் பண்புநீ டியவுரிமைப் பால வன்றே.

(இ-ள்.) உயர்வுபொருந்திய பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர ரென்னும் நான்குசாதிகளில் உயர்ந்தசாதி யாண் தாழ்ந்தசாதிப் பெண்ணையும், தாழ்ந்தசாதியாண் உயர்ந்தசாதிப்பெண்ணையும் புணர்ந்ததனால் பிறந்தஅநுலோமர் பிரதிலோமர் என்கிற உயர்வுதாழ்வாகிய சாதிகளும், அவ்விரண்டுசாதிகளில் ஒருசாதி யாணும் பெண்ணும், மற்றொரு சாதிப்பெண்ணையும் ஆணையும்சேர்ந்து பிறந்த பல வகைப்பட்டசாதியாரும் அவரவர்கள் யோக்கியதைக்குத்தகுந்த வெவ்வேறுஇடங்களிலிருந்துகொண்டு அவ்வவ்விடங்களில் நிறைந்த உறவினர்களோடு கலந்து தங்கள் மரபிற்கு ஏற்ற தொழில்முறைமை தவறாமல் மிகுந்த குணத்தோடு வாழ்ந்திருக்கும் வீடுகளையுடைய இடங்களெல்லாம் உரிமையும் நற்குணங்களும் பொருந்திய தன்மையையுடையனவா யிருக்கின்றன.—எ-று.

பிராமணன் க்ஷத்திரிய வைசிய சூத்திர சாதிப் பெண்களைக் கூடிப்பிறந்த மூன்று சாதியாரும், அரசன் வைசிய சூத்திரசாதிப் பெண்களைக் கூடிப் பிறந்த இரண்டுசாதியாரும், வைசியன் சூத்திரசாதிப் பெண்ணைச்சேர்ந்துபிறந்த ஒரு சாதியானுமாகிய அறுவரும் அநுலோமர்; இவர்களுயர்ந்தசாதியாம். பிராமணஸ்திரியினிடத்தில் க்ஷத்திரியன் வைசியன் சூத்திரன் இம்மூவருஞ் சேர்ந்து பிறந்த மூன்றுசாதியாரும், க்ஷத்திரிய ஸ்திரீயினிடத்தில் வைசியன் சூத்திரன் இவ்விருவருங் கூடிப்பிறந்த இரண்டுசாதியாரும், வைசியஸ்திரீயினிடத்தில் சூத்திரன் கூடிப்பிறந்த ஒரு சாதியானுமாகிய அறுவரும் பிரதிலோமர்; இவர்கள் தாழ்ந்தசாதியாம். (அநுலோமர்வகை) பிராமணனுக்கு க்ஷத்திரியப்பெண்ணினிடத்திற் பிறந்தவன் சவர்ணன். வைசியமாதினிடத்திற் பிறந்தவன் நிஷாதனன். சூத்திரஸ்திரீயினிடத்திற்பிறந்தவன் பார்சுவன். க்ஷத்திரியனுக்கு வைசியஸ்திரீயினிடத்திற் பிறந்தவன் மாஹிஷன். சூத்திரப்பெண்ணினிடத்திற் பிறந்தவன் தௌஷண்யன். வைசியனுக்கு சூத்திரஸ்திரீயினிடத்திற் பிறந்தவன் உக்கிரன். (பிரதிலோமர்வகை) பிராமணஸ்திரீயினிடத்தில் க்ஷத்திரியனுக்குப் பிறந்தவன் சூதன். வைசியனுக்குப் பிறந்தவன் வைதேகன். சூத்திரனுக்குப்பிறந்தவன் சண்டாளன். க்ஷத்திரிய ஸ்திரீயினிடத்தில் வைசியனுக்குப்பிறந்தவன் மாகதன். சூத்திரனுக்குப்பிறந்தவன் க்ஷத்தா. வைசியஸ்திரீயினிடத்தில் சூத்திரனுக்குப்பிறந்தவன் இரதகாரன் என வறிக. பிரதிலோமத்தானுக்கும் அநுலோமப்பெண்ணுக்கும்பிறந்தவன் விரா

த்தியன் எனவும், அனுலோமத்தானுக்கும் பிரதிலோமப் பெண்ணுக்கும் பிறந்தவன் அந்தராளன் எனவும் பெயர்பெறுவர். (௧0௨)

**வே று.**

ஆதி மூதெயி லந்நகர் மன்னிய
சோதி நீண்மணித் தூபமுந் தீபமுங்
கோதில் பல்லிய முங்கொடி யும்பயில்
வீதி நாளு மொழியா விழாவணி.

(இ-ள்.) முதன்மையாகிய பழையமதில்சூழ்ந்த அந்தக் காஞ்சிநகரத்திலுள்ள வீதிகள் ஒளிவிளங்குகின்ற பெரியமணிகளிழைத்த தூபகலசங்களில் இடுகின்ற தூபங்களும், தீபங்களும், குற்றமற்ற பலவகையாகியவாத்தியங்களும், கொடியாடைகளும்உடையனவாகி எந்நாளும்திருவிழாக்களின் சிறப்புக்களை நீங்காதிருக்கின்றன.—எ-று. (௧0௩)

வாயி லெங்கணுந் தோரண மாமதின்
ஞாயி லெங்கணுஞ் சூழ்முகி லொண்மதி
தோயி லெங்கணு மங்கலந் தொண்டர்சூழ்
கோயி லெங்கணு மும்பர் குலக்குழாம்.

(இ-ள்.) அந்நகரத்திலுள்ள மாளிகைகளின் வாயில்கள்தோறும் மகரதோரணங்கள் கட்டியிருக்கின்றன. பெரிய மதிலின் உறுப்புக்களிலெல்லாம் மேகங்கள் தவழ்கின்றன. ஒளிவிளங்குகின்ற சந்திரன் தவழ்கின்ற மேல்வீடுகளிலெல்லாம் மங்கலகரமான காரியங்கள் நடக்கின்றன. சிவனடியார்கள் சூழ்ந்திருக்கின்ற திருக்கோயில்களிலெல்லாம் தேவர்களுடைய கூட்டங்கள் மிகுதியாக நிறைந்திருக்கின்றன.—எ-று. (௧0௫)

வேத வேதியர் வேள்வியே தீயன
மாத ரோதி மலரே பிணியன
காதல் வீதி விலக்கே கவலைய
சூத மாதவி யேபுறஞ் சூழ்வன.

(இ-ள்.) வேதங்களையுணர்ந்த பிராமணர்கள் செய்கின்ற யாகங்களே தீயனவாயிருக்கின்றன. ஸ்திரீகளின் கூந்தல்களிலுள்ள மலர்களே பிணியனவாயிருக்கின்றன. விருப்பத்தைத் தரத்தக்க வீதிகளிலுள்ள விலக்காகிய வழிகளே கவலையுடையனவா யிருக்கின்றன. மாமரங்களும் குருக்கத்திமரங்களுமே புறத்திற் சூழ்ந்துகொண்டிருப்பன.—எ-று.

தீயனவென்பதற்கு நெருப்பையுடையனவென்றும், பிணியனவென்பதற்கு கட்டப்பட்டிருக்கின்றனவென்றும், கவலையவென்பதற்கு சிறுவழிகளையுடையனவென்றும் பொருள்தோன்றச் சிலேடைவகையாற்கூறினார். இங்ஙனங் கூறவே, அக்காஞ்சிநகரத்தில் கொடுஞ்செய்கைகளும், நோயாளிகளும், மனவருத்தமுள்ளவர்களும், புறத்திற்சூழ்ந்து இரப்பவர்களும் இல்லையென்பது பெற்றாம். (௧0௬)

சாய லார்க ளுசுப்பே தளர்வன
ஆய மாடக் கொடியே யசைவன
சேய வோடைக் களிறே திகைப்பன
பாய சோலைத் தருவே பயத்தன.

(இ-ள்.) மயில்போன்ற சாயலையுடைய பெண்களின் இடைகளே தளர்வடைந்திருக்கின்றன. நன்றாகக் கட்டியிருக்கின்ற உப்பரிகைகளின்மேலுள்ள கொடிகளே அசைகின்றன. சிவந்த பொன்மயமாகிய நெற்றிப்பட்டத்தையணிந்த யானைகளே திகைக்கின்றன. விசாலமாகிய சோலைகளிலுள்ள மரங்களே பயத்தையுடையனவா யிருக்கின்றன.—எ-று.

பயத்தன என்பது,காய்கனிமுதலிய பலனையுடையன வென்பதாம். இதனால் அந்நகரத்திலுள்ள யாவர்க்கும் தளர்ச்சியும், அசைவும், திகைப்பும், பயமும் இல்லையென்பது கூறியதாயிற்று. (௧0௭)

அண்ண லாரன்ப ரன்பேமு ளார்த்தன
தண்ண றுஞ்செழுந் தாதே துகளன
வண்ண நீண்மணி மாலையே தாழ்வன
எண்ணில் குங்குமச் சேறே யிழுக்கின.

(இ-ள்.) சிவபெருமானுடைய அடியார்களின் அன்பே வலிவாகக் கட்டப்பட்டன. குளிர்ச்சியும் வாசனையுமுள்ள செழிய பூந்தாதுக்களே துகளாயிருக்கின்றன. அழகுபொருந்திய நீண்ட இரத்தினமாலைகளே தாழ்கின்றன. மிகுந்த குங்குமக்குழம்பே இழுக்கை யுடையனவா யிருக்கின்றன.—எ-று.

துகளன=பொடியாயுள்ளன. தாழ்வன=தொங்குகின்றன. இழுக்கின=வழுக்குதலையுடையன. சிலேடைவகையால் குற்றமுள்ளனவென்றும், தாழ்வடைந்துள்ளனவென்றும், குறைவுள்ளனவென்றும் பொருள்கொள்க. (௧0அ)

வென்றி வானவர் தாம்விளை யாடலும்
என்று முள்ளவர் வாழு மியற்கையு
நன்று முள்ளத்து நண்ணினர் வேட்கையுள்
ஒன்று மங்கொழி யாவகை யுய்ப்பது.

(இ-ள்.) வெற்றிபொருந்திய தேவர்கள் விளையாடல் செய்தலையும், எந்நாளும் அழியாத நிலைமையைப்பெற்ற சித்தர்கள் வாழ்ந்திருக்கின்ற இயல்பையும்,எல்லாநன்மைகளையும், தங்கள் மனதில் நினைத்திருக்கின்ற அவரவர்களுடைய விருப்பத்துள் ஒன்றையும் அவ்விடத்தில் நீங்காமலிருக்கும்படி செலுத்துவது அந்நகரம்.—எ-று. (௧0௯)

புரங் கடந்தவர் காஞ்சி புரம்புகழ்
பரம்பு நீள்புவ னம்பதி னன்கினும்
வரம்பில் போக வளப்பின் வளமெலா
நிரம்பு கொள்கல மென்ன நிறைந்ததால்.

(இ-ள்.) திரிபுரத்தை யெரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் காஞ்சிபுரமானது புகழ்பரவிய நீண்ட பதினான்கு உலகங்களிலு முண்டாகிய அளவற்றபோகங்களின் அழகியவளப்பங்களெல்லாம் நிறைந்திருக்கின்ற ஒருபாண்டம் போல விளங்கி இருந்தது.—எ-று. (கக௦)

வேறு.

அவ்வகைய திருநகர மதன்கணொரு மருங்குறைவார்
இவ்வுலகிற் பிறப்பினா லேகாலிக் குலத்துள்ளார்
செவ்வியவன் புடைமனத்தார் சீலத்தி னெறிநின்றார்
மைவிரவு கண்டரடி வழித்தொண்ட ருளரானார்.

(இ-ள்.) அத்தன்மையாகிய சிறப்பினையுடைய காஞ்சிபுரத்தில் ஓரிடத்தில் வாழ்கின்றவரும், இந்தவுலகத்தில் அவரது பிறப்பைக்குறித்து விசாரிக்குமிடத்து ஏகாலியர்குலத்தில் அவதரித்தவரும், செம்மையாகிய அன்புபொருந்திய மனத்தினையுடையவரும், நல்லொழுக்க நெறியில் வழுவாமல் நின்றவரும், காளகண்டத்தினையுடைய சிவபெருமானது திருவடிகளுக்கு வழிவழியே தொண்டு செய்தொழுகுகின்றவருமாகிய ஒரு அடியவரிருந்தார்.—எ-று. (கக௧)

மண்ணின்மிசை வந்ததற்பின் மனமுதலா யினமூன்றும்
அண்ணலார் சேவடியின் சார்வாக வணைவிப்பார்
புண்ணியமெய்த் தொண்டர்திருக் குறிப்பறிந்து போற்றுநிலைத்
திண்மையினாற் றிருக்குறிப்புத் தொண்டரெனுஞ் சிறப்பினார்.

(இ-ள்.) அவர் இவ்வுலகத்தில் அவதரித்தபின்பு மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்களும் சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளினிடத்தே பொருந்தும்படி செலுத்துகின்றவர்; சிவபுண்ணியத்தையுடைய உண்மைபொருந்திய அடியார்களின் திருவுள்ளக் குறிப்பையறிந்து அவர்களுக்கு வழிபாடுசெய்கின்ற நிலைமையான உறுதியினால் திருக்குறிப்புத்தொண்டரென்னும் பெயர்பெற்ற சிறப்பினையுடையவர்.—எ-று. (கக௨)

தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க்காஞ்சி
யூரொலிக்கும் பெருவண்ணா ரெனவொண்ணா வுண்மையினார்
நீரொலிக்க வராவிரைக்க நிலாமுகிழ்க்குந் திருமுடியார்
பேரொலிக்க வுருகுமவர்க் கொலிப்பர்பெரு விருப்பினொடும்.

(இ-ள்.) தேர்களும் குதிரைகளும் ஒலித்தலால் சிறப்புற்றுத் திக்குகளிலெல்லாம் பரவியபுகழினையுடைய காஞ்சிபுரத்தில், ஊரிலுள்ள ஆடைகளை வெண்மை செய்கின்ற பெரிய வண்ணானென்று சொல்லக்கூடாத மெய்யன்பினையுடையவர்; கங்கைநீர் முழங்கவும், பாம்புகள் இரைக்கவும் இளம்பிறையானது விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானது திருநாமங்களை உச்சரித்தபொழுதே மனமுருகுகின்ற அடியார்களுக்கு மிகுந்த விருப்பத்தோடு அவர்கள் வஸ்திரங்களை ஒலித்துக்கொடுப்பவர்.—எ-று,

ஒலித்தல்=வெண்மையாக்கல். (கக௩)

தேசுடைய மலர்க்கமலச் சேவடியா ரடியார்தந்
தூசுடைய துகண்மாசு கழிப்பார்போற் றொல்லைவினை
யாசுடைய மலமூன்று மணையவரும் பெரும்பிறவி
மாசுதனை விடக்கழித்து வருநாளி லங்கொருநாள்.

(இ-ள்.) ஒளிபொருந்திய தாமரைமலர்போன்ற சிவந்த திருவடிகளையுடைய சிவபெருமானது அடியார்களின் வஸ்திரங்களிலுள்ள குற்றமாகிய அழுக்கினை நீக்குகின்றவரைப்போலப் பழைய கன்மமுதலாகிய குற்றத்தை விளைக்கும் மும்மலங்களும் பொருந்தும்படி தொடர்ந்துவருகின்ற பெரிய பிறவியாகிய அழுக்கானது தம்மைவிட்டு நீங்கும்படி செய்துவருகின்ற நாள்களில் ஒருநாள்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

(கககூ)

பொன்னிமயப் பொருப்பரையன் பயந்தருளும் பூங்கொடிதன்
னன்னிலைமை யன்றளக்க வெழுந்தருளு நம்பெருமான்
றன்னுடைய வடியவர்தந் தனித்தொண்டர் தம்முடைய
அந்நிலைமை கண்டன்பர்க் கருள்புரிவான் வந்தணைவான்.

(இ-ள்.) பொன்மயமாகிய இமயபர்வதராசன் பெற்றருளிய உமாதேவியாருடைய நல்ல அன்பின்நிலைமையைப் பரிசோதிக்கும்படி முன்னாளில் எழுந்தருளிய நமது பெருமானாகிய திருவேகம்பநாதர் தம்முடைய அடியார்களுக்கு அடியவராயிருக்கின்ற ஒப்பற்ற திருக்குறிப்புத்தொண்டநாயனாருடைய அன்பின் நிலைமையை யறிந்து அவர்க்குக் கிருபைசெய்யும்படி வருகின்றவராயினார்.—எ-று. ()

சீதமலி காலத்துத் திருக்குறிப்புத் தொண்டர்பால்
ஆதுலராய் மெலிந்துமிக வழுக்கடைந்த கந்தையுடன்
மாதவவே டந்தாங்கி மாலறியா மலரடிகள்
கோதடையா மனத்தவர்முன் குறுநடைகள் கொளக்குறுகி.

(இ-ள்.) சீதள மிகுந்த குளிர்காலத்தில் திருக்குறிப்புத்தொண்டநாயனாரிடத்தில் ஏழைபோலத் திருமேனி இளைத்து, மிகவும்அழுக்காகிய கந்தையுடனே மகத்தான தவவேடமாகிய விபூதி ருத்திராக்ஷங்களை யணிந்து, விஷ்ணுவினால் தேடி யறியப்படாத தாமரை மலர்போன்ற திருவடிகள் குற்றமற்ற மனத்தினையுடைய அத்திருக்குறிப்புத்தொண்டநாயனாருக்கு முன்னே தளர்ந்த நடைகொள்ளும்படியாக எழுந்தருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

(கககூ)

திருமேனி வெண்ணீறு திகழ்ந்தொளிருங் கோலத்துக்
கருமேக மெனவழுக்குக் கந்தையுட னெழுந்தருளி
வருமேனி யருந்தவரைக் கண்டுமன மகிழ்ந்தெதிர்கொண்
டொருமேவு மயிர்ப்புளக முளவாகப் பணிந்தெழுந்தார்.

(இ-ள்.) திருமேனியில் வெண்மையாகிய திருநீறு விளங்குகின்ற கோலத்துடனே கருநிறம்பொருந்திய மேகம்போல அழுக்குப்பிடித்த கந்தையையுடைய

வராய் எழுந்தருளிவருகின்ற அரியதவவேடத்தையுடைய சிவபெருமானைப்பார்த்து மனதில் மகிழ்வடைந்து எதிர்கொண்டு சென்று தமது தேகத்தில் மயிர்புளகிக்கும்படி வணங்கி யெழுந்தார்.—எ-று. (௧௧௭)

எய்துமவர் குறிப்பறிந்தே யினியமொழி பலமொழிந்து
செய்தவத்தீர் திருமேனி யிளைத்திருந்த தென்னென்று
கைதொழுது கந்தையினைத் தந்தருளுங் கழுவவென
மைதிகழ்கண் டங்கரந்த மாதவத்தோ ரருள்செய்வார்.

(இ-ள்.) இவ்வாறு தம்மிடத்திற்கு எழுந்தருளிய சிவபெருமானாகிய அடியவரின் திருவுள்ளக்குறிப்பை யறிந்து இனிமையாகிய பல உபசாரவார்த்தைகளைச்சொல்லி, அருமையாகச்செய்த தவத்தினையுடைய பெரியோரே! தேவரீருடைய திருமேனி இளைத்திருப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்டுக் கைகூப்பி வணங்கி,நீர் தரித்திருக்கின்ற ஆடையை அழுக்குநீக்கித்தருவதற்குக் கொடுத்தருளுமென்று கேட்க, கருநிறம்பொருந்திய கண்டத்தை மறைத்துப் பெரிய தவமுனிவர்போல எழுந்தருளிய சிவபெருமான் அருளிச்செய்வார்.—எ-று.

குறிப்பறிதலாவது - இவ்வடியவர் அழுக்காயுள்ள கந்தையையணிந்து வந்தமையால் அதனை வெளுப்பாக்குங் கருத்துடையவரென அவரது திருவுள்ளக்குறிப்பை யுணர்தலாம். (௧௧௮)

இக்கந்தை யழுக்கேறி யெடுக்கவொணா தெனினும்யான்
மெய்க்கொண்ட குளிர்க்குடைந்து விடமாட்டேன் மேற்கடற்பால்
அக்குன்றம் வெங்கதிரோ னணைவதன்முன் றருவீரேற்
கைக்கொண்டு போயொலித்துக் கொடுவாருங் கடிதென்றார்.

(இ-ள்.) நான் தரித்திருக்கின்ற இந்தக் கந்தைத்துணியானது அதிக அழுக்கடைந்து தரிப்பதற்குத் தகுதியற்றதாயிருந்தாலும் உடம்பில் வீசுகின்ற குளிர்காற்றுக்குப் பயந்து இதனைக்கைவிடாமல் வைத்துக்கொண்டிருக்கின்றேன்; ஆதலால், நீர் மேற்கடலிலுள்ள அஸ்தமயகிரியில் சூரியன் அடைவதற்குமுன்னே கொடுப்பீராயின் இதனைக் கையில் எடுத்துக்கொண்டுபோய் வெளுக்க வொலித்து விரைவில் கொண்டுவாருமென்று சொன்னார்.—எ-று. (௧௧௯)

தந்தருளு மிக்கந்தை தாழாதே யொலித்துமக்கின்
றந்திபடு வதன்முன்னந் தருகின்றே னெனவவருங்
கந்தையிது வொலித்துணக்கிக் கடிதின்றே தாரீரேல்
இந்தவுடற் கிடர்செய்தீ ரென்றுகொடுத் தேகினார்.

(இ-ள்.) (திருக்குறிப்புத்தொண்ட நாயனார் இவ்வாறு அருளிச்செய்த சிவபெருமானாகிய அடியவரைப்பார்த்து) தேவரீர் இக்கந்தையைக் கொடுத்தருளும்; அடியேன் பொழுதுபோக்காமல் வெளுத்து இன்று அந்திவேளையாவதற்கு முன்னமே தருகின்றேனென்று சொல்ல, அடியவர் வேடங்கொண்டுவந்த அக்கடவுளும், கந்தையாகிய இத்துணியை வெண்மையாக்கி உலர்த்தி விரைவில் இத்தினத்திலேயே கொடுக்காமற் போவீராயின் இந்த உடலுக்கு நீர் துன்பஞ்செய்தவராவீரென்று கொடுத்துவிட்டுப் போனார்.—எ-று. (௧௨௦)

குறித்தபொழு தேயொலித்துக் கொடுப்பதற்குக் கொடுபோந்து
வெறித்தடநீர்த் துறையின்கண் மாசெறிந்து மிகப்புழுக்கிப்
பிறித்தொலிக்கப் புகுமளவிற் பெரும்பகல்போய்ப் பின்பகலாய்
மறிக்கரத்தார் திருவருளான் மழையெழுந்து பொழிந்திடுமால்.

(இ-ள்.) (சிவபெருமானாகிய அடியவர்) குறித்த பொழுதிலேயே வெளுத்துக்கொடுக்கும்படி வாங்கிக்கொண்டுபோய் மலர்களின் வாசனைபொருந்திய (ஆடையொலிக்கும்) ஒருதடாகத்தின் நீர்த்துறையில் அழுக்குநீங்கும்படி தோய்த்து, பின்பு வெள்ளாவியில்வைத்துப் புழுக்கி, அவ்வழுக்கைப்பிரித்து ஒலிக்கப்போனபொழுது உச்சிப்பகலானது ஒழிந்து அந்திவேளைபோலத் தோன்ற, மானைத்தரித்த திருக்கரத்தினையுடைய சிவபெருமானது கிருபையினால் மேகங்கள் திரண்டெழுந்து மழைபொழிந்தன.—எ-று. (௧௨௧)

திசைமயங்க வெளியடைத்த செறிமுகிலின் குழாமிடைந்து
மிசைசொரியும் புனற்றாரை விழிநுழையா வகைமிடைய
அசைவுடைய மனத்தன்ப ரறிவுமறந் தருந்தவர்பால்
இசைவுநினைந் தழிந்தினியா னென்செய்கே னெனநின்றார்.

(இ-ள்.) திக்குகள் தெரியாமல் மயங்கும்படி ஆகாயத்தின் இடைவெளியைமூடி நெருங்கிய மேகக்கூட்டங்கள் ஒன்றாகச்சேர்ந்து மேலிடத்திலிருந்து சொரிகின்ற நீர்த்தாரைகள் கட்பொறிகள் நுழைந்து செல்வதற்கிடமில்லாமல் நெருங்கி விழுந்துகொண்டிருக்க, (அப்பொழுது அந்திவேளைக்கு முன்னமே கந்தையைத்தோய்த்து உலர்த்திக் கொடுக்கிறேனென்று சொல்லிய சங்கதி எவ்வாறாகுமோ வென்று) வருத்தப்பட்டுக்கொண்டிருக்கின்ற மனத்தினையுடைய திருக்குறிப்புத்தொண்டநாயனார் தமது உணர்வுமயங்கி அரியதவமுனிவர் வேடங்கொண்டு வந்த சிவபெருமானிடத்தில் தாம் வாக்குத்தத்தஞ்செய்ததை நினைந்து மனம்புழுங்கி இனி இதற்கு நான் என்னசெய்வேனென்று வருத்தமுற்று நின்றார்.—எ-று.

ஓவாதே மொழியுமழை யொருகால்விட் டொழியுமெனக்
காவாலி திருத்தொண்டர் தனிநின்றார் விடக்காணார்
மேவார்போற் கங்குல்வர மெய்குளிரும் விழுத்தவர்பால்
ஆவாவென் குற்றேவ லழிந்தவா வெனவிழுந்தார்.

(இ-ள்.) சிவபெருமானுக்கு அன்பராகிய திருக்குறிப்புத்தொண்ட நாயனார் இடைவிடாமல் பெய்கின்ற மழையானது ஒருதரம் விட்டுவிடுமென்று தனியே யோசித்துக்கொண்டு நின்றார்; மழைவிடாததைக்கண்டு பகைவரைப்போல இராக்காலம் வந்தால் குளிரினால் திருமேனி நடுங்குகின்ற சிறந்ததவத்தினையுடைய அப்பெரியவரிடத்தில் அடியேன்செய்ய விரும்பிய சிறியபணிவிடையானது ஐயோ! அழிந்துபோயிற்றேயென்று பூமியில் மயங்கிவிழுந்தார்.—எ-று.

காபாலி என்பது காவாலி எனத் திரிந்தது. ஆவா என்பது இரக்கக்குறிப்பு.

விழுந்தமழை யொழியாது மெய்த்தவர்சொல் வியவெல்லை
கழிந்ததுமுன் பொலித்துமனைக் காற்றேற்க வறிந்திலேன்

செழுந்தவர்தந் திருமேனி குளிர்காணுந் தீங்கிழைத்த
தொழும்பனேற் கினியிதுவே செயலென்று துணிந்தெழுவார்.

(இ - ள்.) பெய்கின்ற மழையானது விடாதிருக்கின்றது. உண்மையாகிய தவத்தினையுடைய அவ்வடியவர் (ஆடையை வெளுத்துக்கொடுக்கும்படி) சொல்லிய மாலைப்பொழுதும் நீங்கிவிட்டது. முன்னமே இவ்வாடையைவெளுத்து வீட்டில் காற்றையேற்றி உலர்த்திக்கொடுக்கவும் அறியவில்லை. சிறந்த தவத்தையுடைய அப்பெரியவரது திருமேனியானது குளிரினால்வருந்தும்படி குற்றஞ்செய்த அடியேனுக்கு இனிமேல் செய்யவேண்டிய செய்கை இதுவேயென்று துணிவுகொண்டு எழுந்தார்.—எ-று.

மனைக்காற்றேற்றலாவது, — தோய்த்தகந்தையைப் பிழிந்து இருபுறத்திலும் இருவர்பிடித்து மனையில்நின்று காற்றுண்டாக வீசுதலாம். (கஉச)

கந்தையுடைத் திடவெற்றுங் கற்பாறை மிசைத்தலையைச்
சிந்தவெடுத் தெற்றுவனென் றணைந்துசெழும் பாறைமிசைத்
தந்தலையைப் புடைத்தெற்ற வப்பாறை தன்மருங்கு
வந்தெழுந்து பிடித்ததணி வளைத்தழும்பர் மலர்ச்செங்கை.

(இ - ள்.) கந்தைகளைத் தோய்ப்பதற்குக் கருவியாயிருக்கின்ற கற்பாறையின்மேல் என்னுடைய தலையைச்சிதறும்படியாக மோதிக்கொள்வேனென்று போய்ச் செழிய துறைக்கல்லின்மேல் தம்முடைய சிரசினை உறுதியாகமோதியடித்துக்கொள்ள, அப்பொழுது அந்தத்துறைக்கல்வி னிடத்திலிருந்து (காமாட்சியம்மையாரின்) அழகியவளைத்தழும்பினையணிந்த திருவேகம்பநாதருடையதாமரை மலர்போன்ற சிவந்தகையானது தோன்றி அவரைப்பிடித்துக்கொண்டது.—எ-று.

வானிறைந்த புனன்மழைபோய் மலர்மழையா யிடமருங்கு
தேனிறைந்த மலரிதழித் திருமுடியார் பொருவிடையின்
மேனிறைந்த துணைவியொடும் வெளிநின்றார் மெய்த்தொண்டர்
தானிறைந்த வன்புருகக் கைதொழுது தனிநின்றார்.

(இ·ள்.) ஆகாயத்திலிருந்து நிறைந்து விழுகின்ற நீர்மழை நீங்கித் தேவர்கள் பொழிகின்ற கற்பகமலர் மழையாய்ச்சொரிய, தேன்ததும்பிய கொன்றை மலர்மாலையைத் தரித்த திருமுடியையுடைய சிவபெருமான் போர்செய்கின்ற ரிஷபவாகனத்தின்மேல் விளங்குகின்ற தமது தேவியாராகிய பார்வதியாரோடும் வெளிப்பட்டருளினார், அப்பொழுது மெய்யன்பராகிய திருக்குறிப்புத்தொண்டநாயனார் தமது திருவுள்ளத்தில் நிறைந்த பேரன்பானது அதிகரிக்கும்படி கைகளைக்கூப்பி வணங்கித் தனியே நின்றார்.—எ-று. (கஉரு)

முன்னவரை நேர்நோக்கி முக்கண்ணர் மூவுலகு
நின்னிலைமை யறிவித்தோ நீயுமினி நீடியநம்
மன்னுலகு பிரியாது வைகுவா யெனவருளி
யந்நிலையே யெழுந்தருளி யணியேகாம் பரமணைந்தார்.

(இ-ள்.) சோமசூரியாக்கினி யென்னும் மூன்றுகண்களையுடைய சிவபெருமான் தமக்கு முன்னே நிற்கின்ற திருக்குறிப்புத்தொண்ட நாயனாரை நேராகப்பார்த்தருளி உன்னுடைய அன்பின் நிலைமையை சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகங்களிலும் விளங்கும்படிச் செய்தோம்,(அது வன்றியும்)நீயும் இனிஎன்றும் அழியாத நமது சிவலோகத்தில் எம்மை நீங்காதிருப்பாயாக வென்று கிருபைசெய்து,அப்பொழுதே மறைந்து எழுந்தருளி அழகிய திருவேகாம்பரத்தை யடைந்தருளினார்.—எ-று.

(கஉஎ)

சீர்நிலவு திருக்குறிப்புத் தொண்டர்திருத் தொழில்போற்றிப்
பார்குலவத் தந்தைதா ளெறவெறிந்தார் பரிசுரைக்கேன்
பேரருளின் மெய்த்தொண்டர் பித்தனெனப் பிதற்றுதலால்
ஆருலகி விதனுண்மை யறிந்துரைக்க விசைந்தெழுவார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய திருக்குறிப்புத்தொண்ட நாயனாருடைய திருத்தொண்டின் சிறப்பைத் துதித்து, உலகத்தாரறியத் தமது தந்தையாகிய எச்சதத்தனுடைய தாள்கள் அறும்படி மழுவினால் துணித்த சண்டேசுரநாயனாருடைய சரித்திரத்தைச் சொல்லத்தொடங்கினேன், (தந்தைதாளெறிதல் குற்றமன்றோவெனின்) பேரருளினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமான் தம்மை யாட்கொள்ளவருங்கால் பித்தனென்று கூறியதனால் உலகத்தில் யாவர் தாம் இதனுடைய உண்மையை அறிந்துசொல்வதற்குச் சம்மதித்து எழுவார்கள், (ஒருவருமில்லை.)—எ-று.

சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைத் தடுத்தாட்கொள்ளப் பிராமணத் திருவுருவங்கொண்டு எழுந்தருளியபொழுது அவர் பித்தனென்று இகழ்ந்து கூறியதையே சிறந்ததாகக்கொண்டு, பின் அப்பித்தனென்றதையே முதலாகவைத்துப் பாடுகவென்று அருளியதுபோல, இப்பாதகத்தையும் நன்றாகக்கொண்டு சண்டேசர் பதங்கொடுத்தனரென்பார் 'ஆருலகிவிதனுண்மை யறிந்துரைக்க விசைந்தெழுவார்' என்று கூறினார்.

(கஉஅ)

**திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் கஉ௫௦.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சண்டேசுரநாயனார் புராணம்.

பூந்தண் பொன்னி யெந்நாளும் பொய்யா தளிக்கும் புனனாட்டு
வாய்ந்த மண்ணித் தென்கரையின் மன்ன முன்னாள் வரைகிழிய
ஏந்து மயில்வே னிலைகாட்டி யிமையோ ரிகல்வெம் பகைகடக்குஞ்
சேந்த னளித்த திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர்.

(இ-ள்.) பொலிவினையும் குளிர்ச்சியையுமுடைய காவிரிநதியானது எக்காலத்திலும் மாறுமல் நீரைத்தருகின்ற சோழவளநாட்டில், சிறப்புப்பொருந்திய மண்ணியாற்றின் தென்கரையில் நிலைபெறும்படி, ஆதிகாலத்தில் கிரவுஞ்சகிரியானது இருகூருகப் பிளவுபடக் கையிற்பிடித்த கூர்மையாகிய வேலாயுதத்தின் வலிமையைக்காண்பித்துத் தேவர்களுடைய பெரும்பகைவராகிய சூரபதுமன்முதலிய அசுரர்களைக் கொன்றருளிய சுப்பிரமணியக்கடவுள் உண்டாக்கிய பழமையாகியவூரானது (யாதெனின்) சிறந்தவேதியர்கள் வாழ்ந்திருக்கும் செல்வமிகுந்த திருச்சேய்ஞலூராம்.—எ-று.

சேய்ஞலூர் என்பதில் நகரத்துக்கு ஞகரம் போலியாகவந்தது. ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள் தேவர்களின் துன்பம் நீங்கக் கிரவுஞ்சகிரியையும், தாருகாசுரனையும் கொன்றபாவம் ஒழியச் சிவபெருமானைப் பூசித்த தலமாதலின் 'சேந்தனளித்த திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர்' என்று கூறினர்.

சேய்ஞலூர் என்பதற்கு முருகக்கடவுளால் ஏற்படுத்தப்பட்ட நல்ல ஊர் என்று பொருளாம். (க)

செம்மை வெண்ணீற் றொருமையினா ரிரண்டு பிறப்பின் சிறப்பினார்
மும்மைத் தழலோம் பியநெறியார் நான்கு வேத முறைபயின்றார்
தம்மை யைந்து புலனும்பின் செல்லுந் தகையா ரறுதொழிலின்
மெய்ம்மை யொழுக்க மேழுலகும் போற்று மறையோர் விளங்குவது.

(இ-ள்.) செம்மையாகிய திருவெண்ணீறுதரிக்கும் ஒருமைப்பட்ட அன்பையுடையவர்களும், சன்மத்தினாலும் கன்மத்தினாலுமாகிய இரண்டுபிறப்பின் சிறப்பினையுடையவர்களும், மூன்றக்கினிகளைவளர்க்கும் வைதிக நெறியையுடையவர்களும், நான்குவேதங்களையுங் கிரமமாக ஓதியுணர்ந்தவர்களும், ஐம்புலன்களும் அவ்வைகள் போம்வழியில்போகாமல் தங்கள் கருத்தின்படியே செலுத்துந் தகுதியையுடையவர்களும், அறுவகைத் தொழிலோடுகூடிய மெய்ம்மையாகிய ஒழுக்கத்தை ஏழுலகத்தாரும் புகழத்தக்கவர்களுமாகிய மறையவர்கள் விளங்கியிருப்பது (அந்தத் திருச்சேய்ஞலூர்.)—எ-று. (உ)

கோதின் மான்றோற் புரிமுந்நூல் குலவு மார்பிற் குழைக்குடுமி
யோது கிடைசூழ் சிறுவர்களு முதவும் பெருமை யாசானும்
போதின் விளங்குந் தாரகையு மதியும் போலப் புணர்மடங்கண்
மீது முழங்கு முகிலொதுங்க வேத வொலிகண் முழங்குவன.

(இ-ள்.) குற்றமற்றமான்றோலைப்பிணித்த முப்புரியாகிய பூணூலைத்தரித்து விளக்குகின்ற மார்பினையும், மிருதுவாகிய குடுமியையுமுடைய கூட்டமாகச் சேர்ந்து வேதமோதுகின்ற சிறுவர்களும்,அவ்வேதத்தை ஓதுவிக்கின்ற பெருமை பொருந்திய ஆசாரியனும், இராக்காலத்தில் விளங்குகின்ற நக்ஷத்திரங்களையும், சந்திரனையும்போலச் சேர்ந்திருப்பதற்கிடமாகிய பலமடங்களின் மேலிடத்தில் மேகங்கள் முழங்கியொதுங்கக், கீழிடத்தில் வேதகோஷங்கள் முழங்குகின்றன.—எ-று.

யாக நிலவுஞ் சாலைதொறு மறையோ ரீந்த வவியுணவின்
பாக நுகர வருமாலு மயனு மூரும் படர்சிறைப்புண்
மாக மிகந்து வந்திருக்குஞ் சேக்கை யெனவும் வானவர்கோ
னாக மணையுங் கந்தெனவு நாட்டும் யூப வீட்டமுள.

(இ-ள்.) விளங்குகின்ற யாகசாலைகளிலெல்லாம் பிராமணர்கள் கொடுக்கின்ற அவிப்பாகத்தை உண்ணவருகின்ற விஷ்ணுவினும் பிரமனும் நடத்தப்படுகின்ற படர்ந்த சிறகினையுடைய கருடனும் அன்னமும் ஆகாயத்திலிருந்துவந்து தங்குகின்ற கூண்டுபோலவும், தேவேந்திரனுடைய ஐராவதமென்னும் வெள்ளையானையைக்கட்டுந் தறிபோலவும் நாட்டியிருக்கின்ற யூபஸ்தம்பங்கள் அநேகம் உண்டு (அந்தத் திருச்சேய்ஞலூரில்.)—எ-று.

யூபஸ்தம்பமாவது - யாகப்பசுவைக் கட்டும்பொருட்டு அந்த யாகசாலையில் நாட்டப்பட்ட ஒருஸ்தம்பம். (௪)

தீம்பா லொழுகப் பொழுதுதொறு மோம தேனுச் செல்வனவுந்
தாம்பா டியசா மங்கணிப்போர் சமிதை யிடக்கொண் டணைவனவும்
பூம்பா சடைநீர்த் தடமூழ்கி மறையோர் மகளிர் புகுவனவும்
ஆம்பான் மையினில் விளங்குவன வணிநீண் மறுகு பலவுமுள.

(இ-ள்.) மதுரமாகிய பால் ஒழுகும்படி காலங்கள்தோறும் ஓமத்திற்குப் பால்கொடுக்கும் பசுக்கள்போவனவும், தாங்கள் ஓதிய வேதங்களை உருவோட்டுகின்ற பிரமசாரிகள் ஓமத்தீயில் இடும்படியாகச் சமித்துக்கள் கொண்டுவருகின்றனவும், மலர்களையும் பசிய இலைகளையுமுடைய நீர் நிறைந்த தடாகங்களில் முழுகிப் பிராமணஸ்திரீகள் புகுவனவுமாகிய தன்மையோடு விளங்கும் அழகிய நீண்டவீதிகள் (அந்த ஊரில்) பல இருக்கின்றன.—எ-று.

பிரமசாரியர்களுக்கு அக்கினிகோத்திர மின்மையால் சமிதைமாத்திரம் மாலைக்காலத்தில் ஓமஞ் செய்வராதலின் 'சமிதையிடக்கொண்டணைவனவும்' என்று கூறினர். செல்வன, அணைவன, புகுவன, பன்மைமுற்றுத் தொழிற்பெயராய் நின்றன. (௫)

வாழ்பொற் பதிமற் றதன்மருங்கு மண்ணித் திரைகள் வயல்வரம்பின்
சூழ்விற் றரளஞ் சொரிகுலைப்பாற் சமைத்த யாகத் தடஞ்சாலை
சூழ்வைப் பிடங்க ணெருங்கியுள தொடங்கு சடங்கு முடித்தேறும்
வேள்வித் தலைவர் பெருந்தேர்கள் விண்ணோ ரேறும் விமானங்கள்.

(இ-ள்.) இத்தன்மையாகிய பிராமணர்கள் வாழ்கின்ற அழகினையுடைய அந்தத் திருச்சேய்ஞலூரில் வயல்வரம்பின் பள்ளத்தில் முத்துக்களை வீசுகின்ற அலைகளையுடைய மண்ணியாற்றின் கரையில் ஏற்படுத்திய விசாலமாகிய யாகசாலைகளைச் சூழ்ந்த இடங்களில், தாங்கள் செய்யத்தொடங்கிய யாகச்சடங்குகளைச் செய்து முடித்து, யாகத்தலைவர்கள் ஏறுகின்ற பெரியதேர்களும், தேவர்கள் ஏறுகின்ற விமானங்களும் மிகுதியாக நெருங்கியிருக்கின்றன.—எ-று.

ஈண்டு, வேள்வித்தலைவர் என்றது, வேள்விசெய்வித்தாரை. (௬)

மடையிற் கழுநீர் செழுநீர்சூழ் வயலிற் சாலிக் கதிர்க்கற்றைப்
புடையிற் சுரும்பு மிடைகமுகு புனலிற் பரம்பு பூம்பாளை
அடையிற் பயிலுந் தாமரைநீ ளலரிற் றுயிலுங் கயல்கள்வழி
நடையிற் படர்மென் கொடிமௌவ லனையிற் றிகழுஞ் சினைக்காஞ்சி.

(இ-ள்.) நீர் ஓடுகின்ற மடைகளில் செங்கழுநீரும், செழித்த நீர்சூழ்ந்த வயல்களில் நெற்கதிர்களின் கூட்டமும், அதன்பக்கங்களில் வண்டுகள் வாசனை பற்றி மொய்க்கும் கமுகமரங்களும், நீரில் பரவியிருக்கின்ற கமுகமரத்தின் பூம்பாளைகளும், இலைகளையுடைய நீண்ட தாமரைமலர்களில் நித்திரைசெய்கின்ற கெண்டைமீன்களும், நடக்கும் வழிகளில் படர்ந்த மிருதுவாகிய கொடிகளையுடைய முல்லைகளும், அரும்புகளால் விளங்கும் கிளைகளையுடைய காஞ்சிமரங்களும் (அவ்வூரில் மிகுதியாக இருக்கின்றன).—எ-று. (௭)

சென்னி யபயன் குலோத்துங்கச் சோழன் றில்லைத் திருவெல்லை
பொன்னின் மயமாக் கியவளவர் போரே றென்றும் புவிகாக்கு
மன்னர் பெருமா னநபாயன் வருந்தொன் மரபின் முடிசூட்டுந்
தன்மை நிலவு பதியைந்தி னொன்றாய் விளங்குந் தகைத்தவ்வூர்.

(இ-ள்.) அபய குலசேகரசோழனும், குலோத்துங்கச் சோழனும், ஸ்ரீ சிதம்பரத்தின் திருவெல்லையைப் பொன்தகட்டினால் வேய்ந்த அச்சோழ வமிசத்திற் பிறந்து, போர்செய்கின்ற ஆண்சிங்கம்போன்று, தன்காலமுழுவதும் உலகத்தைக் காக்கும் அரசர்பெருமானாகிய அநபாயச்சோழனும் அவதரித்த பழமையான மரபினராகிய சோழராசாக்கள் முடிசூட்டிக்கொண்டு அரசாட்சிசெய்தற்கு இடமாகிய சிறந்த ஐந்துநகரங்களில் ஒன்றாக விளங்குந் தன்மையையுடையது ; அந்தத் திருச்சேய்ஞலூர்.—எ-று.

அபய குலசேகரசோழன், நம்பியாண்டார் நம்பிகள்மூலமாகத் திருமுறை கண்ட சோழன். குலோத்துங்கச்சோழன், பூர்வம் திருச்சேய்ஞலூரை அரசாண்டிருந்த கீர்த்திபெற்ற ஓர்அரசன். அநபாயச்சோழன் இந்நூல்செய்வித்த சோழன். சோழராசாக்கள் வீற்றிருந்து அரசாட்சிசெய்த ஐந்து நகரங்களாவன:— கருவூர்,

உறையூர், திருவாரூர், திருச்சேய்ஞலூர், காவிரிப்பூம்பட்டணம் என்பனவாம். சோழபுரமும், கங்கைகொண்ட சோழபுரமும் பின்பு உண்டாயினவென்க. (அ)

பண்ணின் பயனா நல்லிசையும் பாவின் பயனா மின்சுவையுங்
கண்ணின் பயனும் பெருகொளியுங் கருத்தின் பயனா மெழுத்தஞ்சும்
விண்ணின் பயனும் பொழிமழையும் வேதப் பயனாஞ் சைவமும்போன்
மண்ணின் பயனா மப்பதியின் வளத்தின் பெருமை வரம்புடைத்தோ.

(இ-ள்.) இராகங்களுக்குப் பயனாகிய நல்ல இசையும், பாவினுக்குப் பயனாகிய இனியசுவையும், கண்களுக்குப் பயனாகிய மிகுந்த ஒளியும், நினைப்பிற்குப் பயனாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரமும், ஆகாயத்திற்குப் பயனாகிய பொழிகின்றமேகமும், வேதத்திற்குப் பயனாகிய சைவசமயமும்போல, உலகத்திற்குப்பயனாயமைந்திருக்கின்ற அந்தத் திருச்சேய்ஞலூரின் வளத்தின் பெருமையானது ஒரு அளவினையுடையதோ? (அன்று.)—எ-று.

வேதம் பல பொருள்படக் கூறுமேனும், அதின்சாரமாய்க் கொள்ளக் கிடந்தது சைவமேயாதலின் 'வேதப்பயனாஞ் சைவம்' என்று கூறினார். முன்னும், "அருமறைச்சைவமோங்க" என ஆசிரியர் கூறியதனாலுணர்க. "வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்தம்" என்றார் பெரியாரும். (கூ)

பெருமை பிறங்கு மப்பதியின் மறையோர் தம்முட் பெருமனைவாழ்
தரும நிலவு காசிபகோத் திரத்துத் தலைமை சார்மரபில்
அருமை மணியு மளித்ததுவே நஞ்சு மளிக்கு மரவுபோல்
இருமை வினைக்கு மொருவடிவா மெச்ச தத்த னுளனானான்.

(இ-ள்.) பெருமைவிளங்கிய அந்தத் திருச்சேய்ஞலூரில்வாழ்கின்ற பிராமணர்களுக்குள் சிறந்த இல்வாழ்க்கைக்கு வேண்டிய தருமங்களைவழுவாமல் செய்துகொண்டுவரும் காசிபகோத்திரத்தில் தலைமையாகிய குடியில் கிடைத்தற்கரிய மாணிக்கத்தையும் பிறர்க்குக்கொடுத்துப் பின் விஷத்தையுங் கொடுக்கும் பாம்புபோல, நல்வினை தீவினையென்னும் இரண்டினையுஞ் செய்வதற்கு ஒரேவடிவுகொண்ட எச்சதத்தனென்பவன் ஒருவனிருந்தான்.—எ-று.

பாம்பானது மணியையும் நஞ்சையும் கொடுப்பதுபோல, எச்சதத்தனும், சண்டேசுரநாயனாரைப் புத்திரராகப் பெறுதற்குரிய நல்வினையையும், அவர்செய்யும் பூசைக்கு விக்கினஞ்செய்தலாகிய தீவினையையும் பயத்தல்பற்றி 'அருமை மணியு மளித்ததுவே நஞ்சுமளிக்கு மரவுபோல்' என்று கூறினார். (௧0)

மற்றை மறையோன் திருமனைவி வாய்ந்த மரபின் வந்துதித்தாள்
சுற்றம் விரும்பு மில்வாழ்க்கைத் தொழிலா ளுலகிற் றுணைப்புதல்வற்
பெற்று விளங்குந் தவஞ்செய்தாள் பெரும்பே றெல்லைப் பயன்பெறுவாள்
பற்றை யெறியும் பற்றுவரச் சார்பா யுள்ள பவித்திரையாள்.

(இ-ள்.) மேற்சொல்லிய தன்மையைப்பெற்ற எச்சதத்தனுடைய மனைவியானவள் நல்ல மரபில் பிறந்தவள். சுற்றத்தார் விரும்பத்தக்க இல்வாழ்க்கையைக் குறைவின்றி நடத்துகின்ற நற்செய்கையை யுடையவள். உலகத்தில் தமக்

ருத்துணையாய்ச் சண்டேசுரநாயனாரைப் புத்திரராகப் பெறுதற்குரிய சிறந்ததவத்தைச்செய்தவள். பெறவேண்டிய வீடு பேற்றின்முடிவாகிய பயனைப் பெறத்தக்கவள் உலகப்பற்றை நீக்குதற்குக் கருவியாகிய சிவநேசமானது வருதற்குச் சார்பான குணத்தினையுடைய பவித்திரையென்பவ ளிருந்தாள்.—எ-று.

பற்றை யெறியும் பற்றுவருதலாவது,-மாயாகாரியமாகிய உலகவாசனையை யொழித்துத் தத்துவாதீதனாகிய சிவபெருமானுடைய திருவடிகளையே இடைவிடாது சிந்தித்திருத்தலாம். இதனை,

“பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு” —என்னுந் திருக்குறளாலுணர்க. (கக)

நன்றி புரியு மவர்தம்பா னன்மை மறையின் றுறைவிளங்க
என்று மறையோர் குலம்பெருக வேழு புவனங் களுமுய்ய
மன்றி னடஞ்செய் பவர்சைவ வாய்மை வளர மாதவத்தோர்
வென்றி விளங்க வந்துதயஞ் செய்தார் விசார சருமனார்.

(இ-ள்.) நன்மையைச்செய்து வருகின்ற எச்சதத்தன் - பவித்திரை என்பவர்களினிடமாகச் சிறந்த வேதவொழுக்கங் குறைவின்றி விளங்கவும், எந்நாளும் பிராமணர்களுடைய குலம் விருத்தியடையவும்,ஏழுலகத்திலுள்ளவர்களும் கடைத்தேறவும், பொன்னம்பலத்தில் ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற சிவபெருமானுடைய சைவசமயமானது வளர்ந்தோங்கவும், மகத்தாகிய தவத்தினையுடைய பெரியோர்களின் தபோமகிமை நிறைந்து விளங்கவும் விசாரசருமர் என்னும்புத்திரர் திருவவதாரஞ்செய்தருளினார்.—எ-று. (கஉ)

ஐந்து வருட மவர்க்கணைய வங்க மாறு முடனிறைந்த
சந்த மறைக ளுட்படமுன் றலைவர் மொழிந்த வாகமங்கண்
முந்தை யறிவின் றொடர்ச்சியினான் முகைத்த மலரின் வாசம்போற்
சிந்தை மலர வுடன்மலருஞ் செவ்வி யுணர்வு சிறந்ததால்.

(இ-ள்.) அவ்விசாரசருமருக்கு ஐந்தாம்வயது வந்தவுடனே வேதாங்கங்களாறும் நிறைந்தஸ்வரங்களையுடைய நான்குவேதங்களும் உட்படச் சிவபெருமான் அருளிச்செய்த ஆகமங்களும் பூர்வ சன்மத்தி லுண்டாகிய அறிவின் சம்பந்தத்தினால், அரும்பாயிருக்கும் மலரில் அடங்கியிருக்கின்ற மணம் (அலருங்காலத்தில் விளங்குவது) போலச் சித்தவிருத்தியானது விகசித்தவுடனே தாமேயறிந்துகொள்ளுகின்ற உயர்ந்த அறிவானது அவர்க்கு உண்டாயிற்று.—எ-று.

வேதாங்கம் ஆறுவன:—மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம்,சோதிடம் என்பன. சந்தமாவன-உதாத்தம், அனுதாத்தம்-சுவரிதம்,பிரசயம் என்பனவாம். (கங)

நிகழு முறைமை யாண்டேழு நிரம்பும் பருவம் வந்தெய்தப்
புகழும் பெருமை யுபநயனப் பொருவில் சடங்கு முடித்தறிவின்
இகழு நெறிய வல்லாத வெல்லா மியைந்த வெனினுந்தந்
திகழு மரபி னோதுவிக்குஞ் செய்கை பயந்தார் செய்வித்தார்.

(இ-ள்.) இவ்வாறு நடக்கின்ற முறைமைப்படியே அவர்க்கு ஏழுவயது நிரம்பினவுடனே நூல்களால் புகழ்ந்துசொல்லப்பட்ட பெருமையினையுடைய ஒப்பற்ற உபநயனச்சடங்கைச் செய்துமுடித்து, அவரது அறிவினால் நிந்திப்பதற்கிடமில்லாத எல்லாக்கலைகளும் அறிந்திருந்தாலும், தங்கள்குலாசாரப்படி உபநயனஞ் செய்தபின்பு வேதமோதுவிக்கின்ற முறைமையானதொழிலைத் தாய்தந்தையர்கள் அவருக்குச் செய்வித்தார்கள்.—எ-று. (கச)

குலவு மறையும் பலகலையுங் கொளுத்து வதன்முன் கொண்டமைந்து
நிலவு முணர்வின் றிறங்கண்டு நிறுவுமறையோ ரதிசயித்தார்
அலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே யெனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினிற் றெளிந்தார் சிறிய பெருந்தகையார்.

(இ-ள்.) விளங்குகின்ற வேதங்களையும், பலகலைஞானங்களையும் ஓதுவிப்பதற்கு முன்னமே அப்பொருள்களைத் தாமே அறிந்துகொண்டு அமைந்து விளங்குகின்ற அவரது அறிவின்திறத்தைக் கண்டு, அவரை ஓதுந்தொழிலில் நிறுத்தும் பிராமணர்கள் ஆச்சரியமடைந்தார்கள். அளவில்லாத எல்லாநூல்களிலும் கூறும் பொருள்களுக்கெல்லாம் முடிந்தபொருள் சிவபெருமானுடைய திருவடியேயென்று விசாலமாகிய தமது சித்தத்தில்தெளிந்துகொண்டார்; உருவத்தால் சிறியவராயினும் உணர்வினால் பெருந்தகைமையை யுடையவராகிய விசாரசருமர்.—எ-று.

நடமே புரியுஞ் சேவடியார் நம்மை யுடையா ரெனுமெய்ம்மை
உடனே தோன்று முணர்வின்க ணொழியா தூறும் வழியன்பின்
கடனே யியல்பாய் முயற்றிவருங் காதன் மேன்மே லெழுங்கருத்தின்
றிடநேர் நிற்குஞ் செம்மலார் திகழு நாளி லாங்கொருநாள்.

(இ-ள்.) ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற திருவடியையுடைய சிவபெருமான் நம்மை அடிமையாகவுடையவரென்று அறிவினிடமாக ஒழியாமல் வளர்கின்ற உண்மையாகிய அன்பினால் செய்யவேண்டிய அடிமைத்திறம் முதலாகிய கடமைகளை இயல்பாகவே செய்துகொண்டுவருகின்ற ஆசையானது மேன்மேலும் அதிகரிக்கின்ற திருவுள்ளக்கருத்தின் உறுதிப்பாட்டில் நிலைபெற்று நிற்கும் விசாரசருமனார் இவ்வாறு விளங்கியிருக்கும் நாள்களில் ஒருநாள்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கரு)

ஓது கிடையி னுடன்போவா ரூரா னிரையி னுடன்புக்க
போது மற்றங் கொருபுனிற்று போற்று மவன்மேன் மருப்போச்ச
யாது மொன்றுங் கூசாதே யெடுத்த கோல்கொண் டவன்புடைப்ப
மீது சென்று மிகும்பரிவால் வெகுண்டு விலக்கி மெய்யுணர்ந்து.

(இ-ள்.) வேதமோதுகின்ற பிராமணச்சிறுவர்களுடனே போகின்ற விசாரசருமர் ஊரிலுள்ளவர்களின் பசுமந்தையோடுகூடப் போனபொழுது, அவ்விடத்தில் ஒரு கன்றுபோட்ட பசுவானது தன்னை மேய்க்கின்ற இடையனைக்கொம்பால் முட்ட, அவன்மனத்தில் சிறிதும் அச்சமில்லாமல் தன் கையில் பிடித்திருக்கின்ற கோலினால் அந்தப்பசுவையடித்தான். அப்பொழுது விசாரசருமர் அவ்விடையனி

டத்திற்சென்று, அப் பசுவின்மேல் வைத்திருக்கின்ற அன்பினால் அவனைக் கோபித்து, அதனை அடிப்பதை விலக்கிப் பசுவிற்குள்ள மகிமையை யுணர்ந்து.—எ-று.

பாவுங் கலைக ளாகமநூல் பரப்பின் றெருகுதி பான்மையினால்
மேவும் பெருமை யருமறைகண் மூல மாக விளங்குலகில்
யாவுந் தெளிந்த பொருணிலையே யெய்த வுணர்ந்த வுள்ளத்தால்
ஆவின் பெருமை யுள்ளபடி யறிந்தா ராயற் கருள்செய்வார்.

(இ-ள்.) பரவிய மிருதி புராணம் முதலிய கலைகளும், பலவாக விரிந்திருக்கின்ற சைவாகமங்களின் தொகுதியும், பகுதியினால் பெருமைபொருந்திய அரிய வேதங்களும் ஆகிய இவைகள் மூலமாக நிலைபெற்று விளங்கும் உலகத்தில், எல்லாப்பொருளியல்புகளையும் ஒருங்கேயுணர்ந்திருக்கின்ற மனத்தினால் பசுவினது பெருமையை உள்ளபடியே யறிந்த விசாரசருமர் அவ்விடையனுக்கு அருளிச்செய்கின்றார்.—எ-று. (கஅ)

தங்கு மகில யோனிகட்கு மேலாம் பெருமைத் தகைமையன
பொங்கு புனித தீர்த்தங்க ளெல்லா மென்றும் பொருந்துவன
துங்க வமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்து பிரியாத
அங்க மனைத்துந் தாமுடைய வல்ல வோநல் லானினங்கள்.

(இ-ள்.) உலகத்தில் வாழ்கின்ற எல்லா யோனிகளுக்கும் மேலாக விளங்குந் தகுதியையுடையனவும், நீர் பெருகுகின்ற பரிசுத்தமாகிய கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களெல்லாம் எந்நாளும் பொருந்தி யிருப்பனவும், உயர்வாகிய தேவகணங்களும் முனிவர்கணங்களும் சூழ்ந்து பிரியாமலிருக்கும் எல்லா உறுப்புக்களையும் தம்மிடத்தில் உடையனவுமாயிருக்கின்றனவல்லவோ? நல்ல பசுக்கூட்டங்கள்.—எ-று.

பசுவின் உறுப்புக்களில் தேவர்களும், முனிவர்களும், தீர்த்தங்களும் இருத்தலாவது:— பிரமனும், விஷ்ணுவும் பசுவின் கொம்பி னடியிலும் கோதாவிரி முதலிய தீர்த்தங்களும் சராசரமும் கொம்பினுனியிலும், சிவபெருமான் சிரசிலும், உமாதேவியார் நடுநெற்றியிலும், முருகக்கடவுள் நாசிநுனியிலும், திக்குப்பாலகர்கள் உண்ணாசியிலும், அசுவினிதேவர்கள் செவிகளிலும், சந்திரனும் சூரியனும் கண்களிலும், வாயு தந்தத்திலும், வருணன் நாவிலும், சரஸ்வதி இருதயத்திலும், இயமனும் இயக்கர்களும் கபோலத்திலும், உதயம் - மத்தியானம் - அஸ்தமனமென்னும் மூன்று காலத்திற்குமுரிய அதிதேவதைகள் உதட்டிலும், இந்திரன் கழுத்திலும், அருக்கதேவர் முசிப்பிலும், சாத்தியர் மார்பிலும், அநிலவாயு நான்கு கால்களிலும், மருத்துக்கள் முழங்காலிலும், நாகலோகத்தார் குளம்பினுனியிலும், கந்தருவர் குளம்பின் நடுவிலும், தேவமாதர்கள் மேற்குளம்பிலும், உருத்திரர் முதுகிலும், அஷ்டவசுக்கள் சந்துகளிலும், பிதுர்தேவர்கள் அரைப்பரப்பிலும், சத்தமாதர்கள் பகத்திலும், திருமகள் குதத்திலும், தேவர்கள் அடிவாலிலும், சூரியனொளி வால்மயிரிலும், ஆகாயகங்கை கோசலத்திலும், யமுனை கோமயத்திலும், மாதவர்கள் உரோமத்திலும், பூமிதேவி வயிற்றிலும், சமுத்திரங்கள் முலையிலும், காருகபத்தியம்-ஆவகனீயம்-தக்கணாக்கினி யென்னும் மூன்றக்கினிகளும் வயிறு-

இதயம் - முகம் என்னும் மூன்றிடங்களிலும், யாகத்தொழில் முழுவதும் எலும்பி லும் சுக்கிலத்திலும், கற்புடைமாதர்கள் எல்லா அவயவங்களிலும் வசிப்பார்கள் என்பதாம். இதனை,

“ வேதாவுங் கரியவனு மாவினது கோட்டடியின் விளங்கி வாழ்வர்
கோதாவி முதற்றீர்த்தங் கோட்டினுதிச் சராசரமுங் கூடி நிற்கு
மீதான சிரத்தமலன் விமலையத னடுநெற்றி விசாக னுசி
மீதானந் தனிலதனுண் ணுசிதனி னுகேசர் விளங்கு வாரே.

ஆசகல விருகன்ன நாப்பணச்ச வினிதேவ ரமர்ந்து வாழ்வர்
தேசுடைய பருதிமதி நயனத்திற் றந்தத்திற் செறியும் வாயு
வோசையுறு நாவதனில் வருணனுனை மகளோங்கூங் கார நெஞ்சி
னேசமுற யமனியக்கர் கெண்டதலத் தெற்றாறு நிலவுவாரே.

ஒட்டத்தி லுதையாத்த மனசந்தி யிவையுறையு முறைவன் கண்டத்
திட்டுடைய விந்திரனே யிமிலிருப்ப ருருக்கரொன வியம்புந் தேவர்
வாட்டமிலாச் சாத்தியரே வாழ்வார்க ளுரமதனி லனில வாயு
நீட்டியதா ளொருநான்கின் மருத்தென்பர் முழந்தாளி னிலவு வாரே.

குரத்தினுதிப் பன்னகரே குடிகொள்வர் காந்தருவர் குரத்தி னுப்ப
ணிருப்பரர மகளிர்கண மிவரெல்லா மேற்குரத்தின் முதுகி னெல்லை
யுருத்திரரே சந்துதொறு முறைவார்கள் வசுதேவர் பிதுர்க்க ளோங்கிப்
பருத்தவரைப் பலகைதனிற் பகத்துறைவ ரெழுமாதர் பரிவு கூர்ந்தே.

திருமகளே யபானத்தி னுகேச ரடிவாலிற் சிறந்து வாழ்வ
ரிரவியொளி வாலின்மயி ரிலங்கியிடுஞ் சுரநதிதா னேயு நீரின்
வரமுடைய யமுனைமய மதுதன்னின் மாதவர்க ளுரோமம் வாழ்வ
ருரமுடைய பூதேவி யுதரத்திற் பயோதரத்தி னுததி யெல்லாம்.

சடரத்தி னிதையத்திற் றழைத்தமுக மதுதன்னிற் றங்கு மங்கி
கடனுடனே காருகபத் தியமெழுவா யொருமூன்றுங் கடின வெள்பி
னுடனுறுசுக் கிலந்தனினு முறையுமக வினையனைத்து முறுப்புத் தோறுந்
திடமுறுகற் புடைமடவார் செறிந்திருப்பா ரிம்முறையைச் சிந்தைசெய்தே.”

என்னும் சிவதருமோத்தரத்தா லுணர்க.

(௧௧)

ஆய சிறப்பி னாற்பெற்ற வன்றே மன்று ளடம்புரியு
நாய னார்க்கு வளர்மதியு நதியு நகுவெண் டலைத்தொடையு
மேய வேணித் திருமுடிமேல் விரும்பி யாடி யருளுதற்குத்
தூய திருமஞ் சனமைந்து மளிக்கு முரிமைச் சுரபிகடாம்.

(இ-ள்.) கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற ஸ்ரீநட ராசப்பெருமானுக்கு வளர்கின்ற இளம்பிறையும், கங்கையும், சிரிக்கின்ற வெண்ட லைமாலையும் பொருந்திய சடையையுடைய திருமுடியின்மேல் விரும்பி அபிஷேக ஞ்செய்வதற்குப் பரிசுத்தம்பொருந்திய திருமஞ்சனப்பொருள்கள் ஐந்தையும் கொ டுக்கின்ற உரிமையையுடைய பசுக்கள் தமக்குரிய சிறப்பினால் பெற்றனவல்ல வோ?—எ-று.

திருமஞ்சனப் பொருள்கள் ஐந்தாவன:—பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் பஞ்சகௌவியமாம். (௨௦)

சீல முடைய கோக்குலங்கள் சிறக்குந் தகைமைத் தேவருடன்
கால முழுது முலகனைத்துங் காக்கு முதற்கா ரணராகு
நீல கண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறுதரு
மூல மவதா ரஞ்செய்யு மூர்த்த மென்றான் முடிவென்னோ.

(இ-ள்.) எக்காலமும்,பரிசுத்தம்பொருந்திய பசுக்கூட்டங்கள், சிறந்த பெருமையையுடைய திருமால் பிரமன் முதலிய தேவர்களோடு, எல்லா வுலகங்களையும் காக்கின்ற முதற்காரணராயிருக்கும், நீலகண்டத்தையும் சிவந்த சடையையுமுடைய சிவபெருமான் திருமேனியில் தரித்தருளும் விபூதியுண்டாவதற்கு மூலமாயிருக்கும் திருச்சாணம் தோன்றுவதற்குக் காரணமாயிருக்கின்றனவென்றால், இதைவிட வுயர்ந்த பொருள் வேறே என்னஇருக்கின்றது.—எ-று. (௨௧)

உள்ளுந் தகைமை யினிப்பிறவே றுளவே யுழைமான் மறிக்கன்று
துள்ளுங் கரத்தா ரணிபணியின் சுடர்சூழ் மணிகள் சுரநதிநீர்
தெள்ளுஞ் சடையார் தேவர்கடம் பிராட்டி யுடனே சேரமிசைக்
கொள்ளுஞ் சினமால் விடைத்தேவர் குலமன் றோவிச் சுரபிகுலம்.

(இ-ள்.) இந்தப் பசுக்கூட்டங்கள், மான்கன்று துள்ளிக்கொண்டிருக்கும் திருக்கரத்தினையுடையவரும், தரித்திருக்கும் பாம்புகளின் ஒளிவீசும் மாணிக்கங்களைக் கங்கைநீரானது அலையால் கொழிக்கின்ற சடையினையுடையவருமாகிய சிவபெருமான், உமாதேவியாரோடு ஏறி நடத்துகின்ற கோபத்தினையுடைய பெரிய விடைத்தேவரது பத்தினிகளாகிய பசுக்களின் குலமல்லவோ ? ஆதலால் இப் பசுக்களின் பெருமையைக் குறித்துச் சொல்லவேண்டிய சிறப்புக்கள் வேறென்ன இருக்கின்றன ; (ஒன்றுமில்லை.)—எ-று.

சிவபெருமான் சந்நிதியிலிருக்கின்ற விடைத்தேவரைத் திருப்பாற்கடலிற் றோன்றிய நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை,சுமனை யென்னும் ஐவகைப் பசுக்களும் பத்தினிகளாகச் சூழ்ந்திருக்கும் ; அதனால் அப்பசுக்களில் தோன்றிய குலமுடையது இச்சுரபிகுலம் என்றார். (௨௨)

என்றின் னனவே பலவுநினைந் திதத்தின் வழியே மேய்த்திந்தக்
கன்று பயிலா னிரைகாக்கு மிதன்மே லில்லை கடனிதுவே
மன்று ளாடுஞ் சேவடிகள் வழுத்து நெறியா வதுமென்று
நின்ற வாயன் றனைநோக்கி நிரைமேய்ப் பொழிக நீயென்பார்

(இ-ள்.) இவ்விதமாகப் பசுக்களுக்கு இருக்கும் பல உயர்வுகளையும் நினைந்து, அவைகளின் இஷ்டப்படியே மேய்த்து, இந்தக்கன்றையுடைய பசுக்கூட்டத்தைக் காப்பதைக்காட்டிலும் சிறந்தது ஒன்றுமில்லை. இப்பசுக்களைக்காத்தலே கனகசபையில் திருநடனஞ்செய்தருளுகின்ற சிவபெருமானுடைய திருவடிகளை வணங்குதற்குரிய மார்க்கமாவதும்என்று,அங்குநிற்கின்ற இடையனைப்பார்த்து,இனி நீ பசுக்களைமேய்க்க வேண்டியதில்லையென்று சொல்கின்றவராயினார்.—எ-று.(௨௩)

யானே யினியிந் நிரைமேய்ப்ப னென்று ரஞ்சி யிடைமகனுந்
தானே ரிறைஞ்சி விட்டகன்றான் றாழு மறையோ ரிசைவினால்
ஆனே நெருங்கும் பேராய மளிப்பா ராகிப் பைங்கூழ்க்கு
வானே யென்ன நிரைகாக்க வந்தார் தெய்வ மறைச்சிறுவர்.

(இ-ள்.) இனிமேல், நானே இப்பசுக்களை மேய்ப்பேனென்று சொன்னார். அதனைக்கேட்ட இடையனும் தான்செய்த குற்றத்திற்குப்பயந்து, அவர்க்கு எதிராகவந்து வணங்கி நீங்கிப்போயினான். பின், தெய்வத்தன்மைபொருந்திய பிராமணச்சிறுவராகிய விசாரசருமர் பசுக்களுக்குரிய பிராமணர்களின் சம்மதியின்மேல் பசுக்கள்நெருங்கியிருக்கும் பெரியமந்தையைக் காப்பாற்றுகின்றவராகிப் பயிர்களுக்கு மேகம்போலப் பசுக்களைமேய்க்கும்படி வந்தார்.—எ-று. (உச)

கோலுங் கயிறுங் கொண்டுகுழைக் குடுமி யலையக் குலவுமான்
றோலு நூலுஞ் சிறுமார்பிற் றுவள வரைக்கோ வணஞ்சுடரப்
பாலும் பயனும் பெருகவரும் பசுக்கண் மேய்க்கும் பான்மையினாற்
சாலும் புல்லி னவைவேண்டுந் தனையு மிசையுந் தலைச்சென்று.

(இ-ள்.) பசுமேய்க்குங்கோலையும்,அணைகயிற்றையும் கையில்எடுத்துக்கொண்டு குடுமிமுடியானது அலையவும், விளங்குகின்ற மான்றோலோடு பூணூலானது சிறிய மார்பினிடத்தில் அசையவும், இடையில்தரித்த கோவணம் பிரகாசிக்கவும், பாலும் அதனாலுண்டாகியபயனும் பெருகும்படி வரும் பசுக்களை மேய்க்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் மிகுந்த புற்களில் அப்பசுக்கள் வேண்டுமளவும் மேயத்தக்க இடத்தில் ஓட்டிக்கொண்டுபோய்.—எ-று.

இதுமுதல் விரண்டுபாடலுங் குளகம். (உரு)

பதவு காலங் களின்மேய்த்துப் பறித்து மளித்தும் பரிவகற்றி
இதமுண் டுறையு ணற்றண்ணீ ரூட்டி யச்ச மெதிர்நீக்கி
அதர்நல் லனமுன் செலநீழ லமர்வித் தமுத மதுரப்பால்
உதவும் பொழுது பிழையாம லுடையோ ரில்லந் தொறுமுய்த்தார்.

(இ-ள்.) பசும்புல்தரையில் பசுக்களை மேய்க்கவேண்டிய காலங்களில் மேய்த்தும், மேய்க்கக்கூடாத இடத்திலிருக்கிற புல்லினைப்பறித்து அவைகள் உண்ணும்படி கொடுத்தும், அவைகளின் துன்பத்தைநீக்கியும், இனிமையாக நீருண்ணத்தக்க துறையிலே நல்லநீரைஉண்பித்தும், வேற்றுமிருகங்களால் அவைகளுக்கு அச்சமுண்டாகாமல் எதிர்நின்று காத்தும், நல்லவழியிலே போகும்படிசெய்து, வெயிலில் நிழலிருக்குமிடத்தில் ஓட்டியும்,மதுரமாகிய பால்கொடுக்குங்காலத்தில் அப்பசுக்கள் தப்பிப்போகாமல் அவைகளுக்குரிய பிராமணர்களின் வீடுகள்தோறும் ஓட்டிக்கொண்டு போய் விடுகின்றவரா யிருந்தார்.—எ-று.

பதவு=புல் ; அதனோடுகூடிய இடத்துக்கானது ஆகுபெயர். (உசு)

மண்ணிக் கரையின் வளர்புறவின் மாடும் படுகர் மருங்கினிலுந்
தண்ணித் திலநீர் மருதத்தண் டலைசூழ் குலையின் சார்பினிலும்
எண்ணிற் பெருகு நிரைமேய்த்துச் சமிதை யுடன்மே லெரிகொண்டு
நண்ணிக் கங்குன் முன்புகுது நன்னாள் பலவா மந்நாளில்.

(இ-ள்.) மண்ணியாற்றின் கரைப்புறத்திலுள்ள குறுங்காட்டிலும், அவ்வாற்றின் நீர்நிற்கின்ற பள்ளங்களிலும், குளிர்ந்த முத்துக்களையுடைய நீர்வளம் பொருந்திய மருதநிலத்தைச்சேர்ந்த சோலைசூழ்ந்த கரையோரங்களிலும் அளவில்லாத பசுக்களைமேய்த்து, சமித்துக்களையும், அரணிக்கோல்களையும் எடுத்துக்கொண்டு ஊரில்வந்து, அஸ்தமித்தவுடனே வீட்டிற்குச் செல்கின்ற நல்லநாள்கள் பலகழிகின்ற நாள்களில்.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (உஎ)

ஆய நிரையின் குலமெல்லா மழகின் விளங்கி மிகப்பல்கி
மேய வினிய புல்லுணவும் விரும்பு புனலு மார்தலினல்
ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி யெய்தி யிரவு நண்பகலுந்
தூய தீம்பான் மடிபெருகிச் சொரிய முலைகள் சுரந்தனவால்.

(இ-ள்.) மேய்தற்கினிய புல்லாகிய உணவையும், நல்லநீரையும் உண்ணுதலினல்,அப்பசுக்கூட்டங்களெல்லாம் அழகிட்டுவிளங்கி மிகுதியாகப்பெருகி,மனதில் பொருந்திய மிகுந்த மகிழ்ச்சியையடைந்து, இரவிலும், பகலிலும் பரிசுத்தம் பொருந்திய மதுரமாகிய பாலானது மடியினின்றும் பெருகிச் சொரியும்படி முலைகளைச் சுரந்தன.—எ-று. (உஅ)

பூணுந் தொழில்வேள் விச்சடங்கு புரிய வோம தேனுக்கள்
காணும் பொலிவின் முன்னையினு மனேக மடங்கு கறப்பனவாய்ப்
பேணுந் தகுதி யன்பாலிப் பிரம சாரி மேய்த்ததற்பின்
மாணுந் திறத்த வானவென மறையோ ரெல்லா மனமகிழ்ந்தார்.

(இ-ள்.) பிராமணர்கள் நியமமாகக்கொண்டொழுகுந் தொழிலாகிய யாகச்சடங்குகளைச் செய்தற்கேதுவாக ஔபாசனத்துக்குப் பால்கொடுக்கும் பசுக்கள், காணத்தக்க பொலிவோடு முன் கறப்பதைப்பார்க்கிலும் அநேகம்பங்கு பாலைக்கறக்கின்றனவாய்த் தோன்றுகின்றபடியால், பசுக்களைப்பாதுகாக்கின்ற தகுதியாகிய அன்போடு இந்த விசாரசருமரொன்னும் பிரமசாரியானவர் மேய்ப்பதற்கு உடன்பட்ட பின்பு செழித்திருக்கின்றனவென்று, பிராமணர்களெல்லாம் மனமகிழ்ச்சியடைந்தார்கள்.—எ-று. (உகூ)

அனைத்துத் திறத்து மானினங்க ளணைந்த மகிழ்ச்சி யளவின்றி
மனைக்கட் கன்று பிரிந்தாலு மருவுஞ் சிறிய மறைக்கன்று
தனைக்கண் டருகு சார்ந்துருகித் தாயாந் தன்மை நிலைமையவாய்க்
கனைத்துச் சுரந்து முலைக்கண்கள் கறவா மேபால் பொழிந்தனவால்.

(இ-ள்.) பலவகை உபசாரங்களினுலும் அப்பசுக்கூட்டங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓரளவில்லாமல்,வீட்டில் கட்டியிருக்கும் கன்றுகள் ஒருவேளை பிரிந்திருந்தாலும் (அதனால் வருந்தாமல்,) தங்களை அன்போடு மேய்க்கின்றபிராமணச்சிறுவராகிய கன்றினைக் கண்டு,அவரருகில் சென்று மனமுருகி, தாய்க்கு உண்டாகிய அன்புபோல்க்கனைத்து,மடிசுரந்து, முலைக்கண்களிலிருந்து ஒருவரும் கறவாமலிருக்கத் தாமே பாலைப்பொழிந்தன.—எ-று. (௩௦)

தம்மை யணைந்த வான்முலைப்பால் தாமே பொழியக் கண்டுவந்து
செம்மை நெறியே யுறுமனத்திற் றிருமஞ் சனமாங் குறிப்புணர்ந்தே
எம்மை யுடைய வள்ளலா ரெய்த நினைந்து தெளிந்ததனின்
மெய்ம்மைச் சிவனார் பூசனையை விரும்பும் வேட்கை விளைந்தெழலும்.

(இ-ள்.) விசாரசருமர் தம்மையடைந்த பசுக்கள் முலையினின்றும் தாமே பாலைச் சொரியக்கண்டு, அதனால் களிப்படைந்து, நன்மையாகிய சிவபத்திமார்க்கத்தில் செல்கின்ற தமது மனதில், இது சிவபெருமானது திருமஞ்சனத்திற்குத் தகுதியாயிருக்குமென்னுங் குறிப்பையறிந்து, எம்மை யடிமையாகவுடைய அக்கடவுள் வரும்படி நினைந்து மனந்தெளிந்து, மெய்மையாகிய சிவபூசையைச்செய்ய விரும்புகின்ற ஆசையானது உண்டாகவும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௧)

அங்கண் முன்னை யர்ச்சனையி னளவின் றொடர்ச்சி விளையாட்டாப்
பொங்கு மன்பான் மண்ணிமணற் புளினக் குறையி லாத்தியின்கீழ்ச்
செங்கண் விடையார் திருமேனி மணலா லாக்கிச் சிவாலயமுந்
துங்க நீடு கோபுரமுஞ் சுற்று லயமும் வகுத்தமைத்தார்.

(இ-ள்.) அவ்வாறு சிவபெருமானைப் பூசைசெய்யவேண்டுமென்னும் ஆசையுண்டாகவும், முற்பிறப்பிற்செய்த பூசாபலத்தின் தொடர்ச்சியே ஒருவிளையாட்டாக அதிகரிக்கும் அன்பினால், மண்ணியாற்றின் கரையிலிருக்கும் மணற்குன்றுகளையுடைய ஒருதிட்டில், திருவாத்திமரத்தின் கீழே, சிவந்தகண்களையுடைய ரிஷபத்தை வாகனமாகக்கொண்டருளிய சிவபெருமானது இலிங்கத் திருமேனியை மணலால்சமைத்து, அக்கடவுளுக்குத்திருக்கோயிலையும், உயர்ந்த கோபுரத்தையும், திருமதிலையும் அம்மணலினால் வகுத்துச் செய்தார்.—எ-று.

சிறுபிள்ளைகளுக்கு இளமையில் விளையாடுவ தியல்பாயினும், இவர் முற்பிறப்பிற்செய்த தவத்தால் அவ்வாறு செய்யாமல், அதனைச் சிவபூசைசெய்தலாகத் திருப்பினமையால் 'விளையாட்டா' என்று கூறினர். (௩௨)

ஆத்தி மலருஞ் செழுந்தளிரு முதலா வருகு வளர்புறவிற்
பூத்த மலர்க டாந்தெரிந்து புனிதர் சடிலத் திருமுடிமேல்
சாத்த லாகுந் திருப்பள்ளித் தாமம் பலவுந் தாங்கொய்து
கோத்த விலைப்பூங் கூடையினிற் கொணர்ந்து மணந்தங் கிடவைத்தார்.

(இ-ள்.) திருவாத்திமலரும், செழுமையாகிய தளிர்களும் முதலாக அருகில் வளர்ந்த காட்டில் பூத்த பலவகைமலர்களையும் நோக்கி, அவற்றுள், சிவபெருமானது சடைமுடியின்மேல் சாத்துவதற்குத் தகுதியாயிருக்கின்ற பலவகைமலர்களையும் பறித்து, இணைத்துத்தைத்த இலையாகிய திருப்பூங்கூடையில் எடுத்துக்கொண்டு வந்து வாசனைவீசும்படி வைத்தார்.—எ-று. (௩௩)

நல்ல நவகும் பங்கள்பெற நாடிக் கொண்டு நாணற்பூங்
கொல்லை யிடத்துங் குறைமறைவு மேவுங் கோக்க ளுடன்கூட

ஒல்லை யணைந்து பாலாக்க ளொன்றுக் கொருகா லாகவெதிர்
செல்ல வவையுங் கனைத்துமுலை தீண்டச் செழும்பால் பொழிந்தனவால்.

(இ-ள்.) நன்மையாகிய புதியகுடங்களைத் தேடிச் சம்பாதித்துக்கொண்டு வந்து, நாணற்செடிகள் முளைத்திருக்கின்ற அழகிய கொல்லைகளிலும், மறைவாயிருக்கின்ற ஆற்றிடைக்குறைகளிலும் போகின்ற பசுக்களோடுகூட விரைவாகப் போய்ப் பாலுள்ள பசுக்கள் ஒவ்வொன்றுக்கு ஒருதரமாகக்கறக்கும்படி தொட்டபொழுதே, அவைகள் கனைத்து மதுரமாகிய பாலைச்சொரிந்தன.—எ-று. (நச)

கொண்டு மடுத்த குடநிறையக் கொணர்ந்து விரும்புங் கொள்கையினால்
அண்டர் பெருமான் வெண்மணலா லயத்து ளவைமுன் றாபித்து
வண்டு மருவுந் திருப்பள்ளித் தாமங் கொண்டு வரன்முறையே
பண்டைப் பரிவா லருச்சித்துப் பாலின் றிருமஞ் சனமாட்டி.

(இ-ள்.) பால்கறந்த குடங்கள் நிறைந்தவுடனே எடுத்துக்கொண்டு வந்து, விரும்பிய குணத்தோடு தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானை ஸ்தாபித்திருக்கும் வெண்மையாகிய மணலால் அமைத்த ஆலயத்தின் ஒரு புறத்தில்வைத்து, வண்டுகள்மொய்க்கின்ற மலர்களையெடுத்துக்கொண்டு, முற்பிறப்பின் வாசனையினால் தோன்றிய அன்புடனே விதிப்படி அருச்சித்து, பாலாகிய திருமஞ்சனத்தை அபிஷேகஞ்செய்து.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (நரு)

மீள மீள விவ்வண்ணம் வெண்பால் சொரிமஞ் சனமாட்ட
ஆள வுடையார் தம்முடைய வன்ப ரன்பின் பாலுளதாய்
மூள வமர்ந்த நயப்பாடு முதிர்ந்த பற்று முற்றச்சூழ்
கோள மதனி லுண்ணிறைந்து குறித்த பூசை கொள்கின்றார்.

(இ-ள்.) அடிக்கடி இவ்விதமாக வெண்மைபொருந்திய பாலைச்சொரிந்து அபிஷேகஞ்செய்ய, அடியார்களை ஆளுதற்குரியவராகிய சிவபெருமான் தமது அன்பராகிய விசாரசருமருடைய அன்பிற்கலந்து அதிகரிக்கும்படி பொருந்திய பூசைத்தொண்டில் முதிர்ந்த பேரன்பானது முற்றும்பொருட்டு, விளங்குகின்ற சிவலிங்கத்தில் கலந்து நின்று, அவர் கருதிச்செய்கின்ற பூசையை ஏற்றுக்கொண்டார்.—எ-று. (நசு)

பெருமை பிறங்குஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தா முள்ளத்தில்
ஒருமை நினைவா லும்பர்பிரா னுவக்கும் பூசை யுறுப்பான
திருமஞ் சனமே முதலவற்றிற் றேடா தனவன் பினினிரப்பி
வருமந் நெறியே யர்ச்சனைசெய் தருளி வணங்கி மகிழ்கின்றார்.

(இ-ள்.) பெருமைபொருந்திய திருச்சேய்ஞலூரில் அவதரித்தருளிய விசாரசருமனார், தமது திருவுள்ளத்தில் ஒருமைப்பட்ட அன்பினால்,தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் விரும்பத்தக்க பூசையின் அங்கமாயிருக்கின்ற திருமஞ்சனமுதலாகிய பொருள்களில் தாம் சம்பாதிக்காத பிறபொருள்களை மானசிகமாக அன்பி

ளால் பாவித்து நிரப்பி, தாம் செய்துவருகின்ற விதிப்படியே பூசைசெய்து வண
ங்கி மகிழ்ச்சியடைந்தார்.—எ-று.

தேடாதனவாவன:—சந்தனம், தூபம், தீபம், நைவேத்தியம் முதலிய பல
பொருள்களாம். (௩௭)

இறையோ னடிக்கீழ் மறையவனு ரெடுத்துத் திருமஞ் சனமாட்டு
நிறைபூ சனைக்குக் குடங்கள்பா னிரம்பச் சொரிந்து நிரைக்குலங்கள்
குறைபா டின்றி மடிபெருகக் குவிந்த மூலைப்பால் குறைவின்றி
மறையோர் மனையின் முன்புதரும் வளங்கள் பொலிய வைகுமால்.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருவடிகளில் விசாரசருமர் தமது கையால்
எடுத்து அபிஷேகஞ்செய்யும் நிறைந்த பூசைக்குப் பசுக்கூட்டங்கள் குடங்களில்
நிறையும்படி பாலைச்சுரந்துகொடுத்தும், குறைவில்லாமல் மடியானது பெருகும்
படி குவிந்திருக்கும் முலைகளினின்றும் பாலைக்குறையாமல் பிராமணர்களின் வீடு
களில் முன்போலக் கொடுக்குந் தன்மையில் சிறந்து இருக்கும்.—எ-று. (௩௮)

செயலிப் படியே பலநாளுஞ் சிறந்த பூசை செய்வதற்கு
முயல்வுற் றதுவே திருவிளையாட் டாக முந்நூ லணிமார்பர்
இயல்பிற் புரியு மற்றிதனைக் கண்டித் திறத்தை யறியாத
அயன்மற் றொருவ னப்பதியி லந்த ணாளர்க் கறிவித்தான்.

(இ-ள்.) முப்புரியாகிய பூணூலையணிந்த மார்பினையுடைய விசாரசருமர்
அநேகநாளாக இவ்விதமான முறைமைப்படியே சிறப்பாகிய பூசையைச் செய்யத்
தொடங்கி,அதுவே ஓர்விளையாட்டாக நடத்துவதைப்பார்த்து,இதன் உண்மையை
அறியாத ஒரு அயலான் அவ்வூரில்வாழ்கின்ற பிராமணர்களுக்குக் (கோபமுண்டா
கும்படி விரோதமாகத்) தெரிவித்தான்.—எ-று. (௩௯)

அச்சொற் கேட்ட வருமறையோ ராய னறியா னென்றவற்றின்
இச்சை வழியே யான்மேய்ப்பே னென்றெம் பசுக்க டமைக்கறந்து
பொச்ச மொழுகு மாணவகன் பொல்லாங் குரைக்க வவன்றாதை
யெச்ச தத்தன் றனையழைமி னென்று ரவையி னிருந்தார்கள்.

(இ-ள்.) அயலான்சொல்லிய அந்தவார்த்தையைக்கேட்ட சபையிலிருந்த
அரியவேதங்களை யுணர்ந்த பிராமணர்கள், இடையனுக்குப் பசுக்களைமேய்க்கத்
தெரியாதென்றும், அப்பசுக்களின் கருத்தின்படியே யான் மேய்ப்பேனென்றும்
சொல்லி வஞ்சித்து, எம்முடைய பசுக்களின்பாலைக் கறந்து (தன்னிஷ்டப்படியே
செலவிட்டு,அப்படிச்செய்யாதவன்போல்) பொய்வேடங்கொண்டு நடிக்கின்ற இந்
தப் பிரமசாரியினுடைய பொல்லாங்கைத் தெரிவிக்க, அவன் தந்தையாகிய எச்ச
தத்தனை அழையுங்களென்று சொன்னார்கள்.—எ-று. (௪0)

ஆங்கு மருங்கு நின்றார்க ளவ்வந் தணன்றன் றிருமனையின்
பாங்கு சென்று மற்றவனை யழைத்துக் கொண்டு வரப்பரந்த
ஓங்கு சபையோ ரவனைப்பார்த் தூரா னிரைமேய்த் துன்மகன்செய்
தீங்கு தன்னைக் கேளென்று புகுந்த பரிசு செப்புவார்.

(இ-ள்,) (அப்படிச்சொன்னபொழுது) அங்கே சபையினருகில்நின்ற ஏவ ல்ாளர்கள் அவ்வெச்சதத்தனுடைய திருமாளிகைக்குப் போய்,அவனை அழைத்து க்கொண்டு வந்தார்கள்; மிகுதியாகப் பரவியிருக்கின்ற அச்சபையிலுள்ளவர்கள் அவ்வெச்சதத்தனைப்பார்த்து, ஊராருடைய பசுக்களை மேய்க்கிறேனென்று சொ ல்லி மேய்த்து, உன் மகன்செய்த தீங்கைக் கேளென்று நடந்தசெய்கையைச் சொல்லத்தொடங்கினார்கள்.—எ-று. (௬௧)

அந்த ணாள ராகுதிக்குக் கறக்கும் பசுக்க ளானவெல்லாஞ்
சிந்தை மகிழ்ந்து பரிவினாற் றிரளக் கொடுபோய் மேய்ப்பான்போற்
கந்த மலிபூம் புனன்மண்ணி மணலிற் கறந்து பாலுகுத்து
வந்த பரிசே செய்கின்றா னென்றா னென்று வாய்மொழிந்தார்.

(இ-ள்.) பிராமணர்கள் ஓமத்தின் ஆகுதிக்குப் பால்கறக்கின்ற பசுக்களை யெல்லாம் மனமகிழ்ந்து அன்போடு மேய்க்கிறவன்போலச் சேர்த்துக்கொண்டு போய்,வாசனைவீசுகின்ற மலர்கள்பொருந்திய நீரையுடைய மண்ணியாற்றின் மண லில் பாலைக்கறந்து வீணாகச்சொரிந்து, தன் மனம்வந்தபடி செய்கின்றானென்று ஒருவன்வந்து சொன்னதாகத் தங்கள்கருத்தைச் சொன்னார்கள்.—எ-று. (௬௨)

மறையோர் மொழியக் கேட்டஞ்சிச் சிறுமா ணவகன் செய்தவீ
திறையு நான்முன் பறிந்திலே னிதற்கு முன்பு புகுந்ததனை
நிறையும் பெருமை யந்தணர்காள் பொறுக்க வேண்டு நீங்களெனக்
குறைகொண் டிறைஞ்சி யினிப்புகுதிற் குற்ற மெனதே யாமென்றான்.

(இ-ள்.) (எச்சதத்தன் தன்பிள்ளைசெய்த குற்றத்தைக்குறித்துப்) பிராம ணர்கள் சொல்லக்கேள்விப்பட்டுப் பயங்கொண்டு,சிறுபிள்ளையாகிய என்குமாரன் செய்த இக்குற்றத்தை இதற்குமுன்பு நான் கொஞ்சமும் அறியேன். நீங்கள் என க்குத் தெரிவிப்பதற்கு முன்னே நடந்தசங்கதியைக்குறித்துப் பெருமைபொருந் திய மறையவர்களே! நீங்கள் மன்னிக்கவேண்டுமென்று அவர்களைக் குறையிரந்து வணங்கி,இனிமேல் அவன் இவ்வாறு செய்வானாயின் அக்குற்றம் யான்செய்ததே யாகுமென்று சொன்னான்.—எ-று. (௬௩)

அந்த ணாளர் தமைவிடைகொண் டந்தி தொழுது மனைபுகுந்து
வந்த பழியொன் றெனநினைந்தே மகனார் தமக்கு வாய்நேரான்
இந்த நிலைமை யறிவேனென் றிரவு கழிந்து நிரைமேய்க்க
மைந்த னார்தாம் போயினபின் மறைந்து சென்றான் மறைமுதியோன்.

(இ-ள்.) வேதங்களையுணர்ந்த முதியோனாகிய எச்சதத்தன் இவ்விதமாகச் சொல்லி, அச்சபையிலிருந்த பிராமணர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மா லைக்காலத்தில் செய்யவேண்டிய அனுஷ்டானத்தை முடித்துத் தன் வீட்டிற்கு வந்து, இப்புத்திரனால் நமக்குவந்த பழி இது ஒன்றென்று நினைத்து, அவர்க்கு இச் செய்தியைத் தெரிவிக்காமல், இவன்செய்யும் இச்செயலை யான்சோதிக்கவேண்டு மென்றிருந்து, அன்றிரவுகழிந்து விசாரசருமர் பசுக்களை மேய்க்கப்போன பின்பு, அவர்க்குத் தெரியாமல் மறைவாக அவர்பின்னே போயினான்.—எ-று. (௬௪)

சென்ற மறையோன் றிருமகனார் சிறந்த வூரா னிரைகொடுபோய்
மன்றன் மருவும் புறவின்கண் மேய்ப்பார் மண்ணி மணற்குறையில்
அன்று திரளக் கொடுசென்ற வதனை யறிந்து மறைந்தப்பா
னின்ற குரவின் மிசையேறி நிகழ்வ தறிய வொளித்திருந்தான்.

(இ - ள்.) அவ்வாறு மறைந்து பின்னேசென்ற எச்சதத்தன், தனது செல்வப்புத்திரராகிய விசாரசருமர் சிறப்புப்பொருந்திய அவ்வூரிலுள்ள பசுக்கூட்டங்களை ஓட்டிக்கொண்டுபோய் மலர்களின் வாசனைநிறைந்த சிறுகாட்டில் மேய்க்கின்றவர், மண்ணியாற்றிலுள்ள மணற்றிட்டில் அன்றைக்குத் திரளாக ஓட்டிக்கொண்டுபோனதைப்பார்த்து, மறைவாக அருகிலிருந்த ஒருகுராமரத்தில் ஏறி, அங்கே நடப்பதை அறியும்படி ஒளித்துக்கொண்டிருந்தான்.—எ-று. (௬௫)

அன்பு புரியும் பிரமசா ரிகளு மூழ்கி யரனார்க்கு
முன்பு போல மணற்கோயி லாக்கி முகைமென் மலர்கொய்து
பின்பு வருமான் முலைபொழிபால் பெருகுங் குடங்கள் பேணுமிட
தன்பாற் கொணர்ந்து தாபித்துப் பிறவும் வேண்டு வனசமைத்தார்.

(இ-ள்.) சிவபெருமானிடத்திலேயே எப்பொழுதும் அன்பைச்செலுத்துகின்ற பிரமசாரியாகிய விசாரசருமரும், மண்ணியாற்றில் ஸ்நானஞ்செய்து, சிவபெருமானுக்குத் தாம் முன்புசெய்ததுபோல மணலினால் திருக்கோயிலும், சிவலிங்கமுஞ்செய்து, மலர்கின்ற மிருதுவாகிய மலர்களைப்பறித்துக்கொண்டுவந்து வைத்து, பின்பு பசுக்கள் மடியினின்றும் பொழிந்த பால்நிறைந்த குடங்களைவைக்க வேண்டிய இடத்தில் கொண்டுவந்து ஸ்தாபித்து, பூசைக்கு வேண்டுவனவாகிய பிறபொருள்களையும் சித்தப்படுத்தினார்.—எ-று. (௬௬)

நின்ற விதியின் விளையாட்டா னிறைந்த வரும்பூ சனைதொடங்கி
யொன்று முள்ளத் துண்மையினு லுடைய நாதன் றிருமுடிமேன்
மன்றல் விரவுந் திருப்பள்ளித் தாமஞ் சாத்தி மஞ்சனமா
நன்று நிறைதீம் பாற்குடங்க ளெடுத்து நயப்புற் றாட்டுதலும்.

(இ-ள்.) சைவாகமத்தில் நிலைபெற்ற விதிப்படியே விளையாட்டாகநிறைந்த அருமையாகிய பூசனையைச் செய்யத்தொடங்கி, தமது மனதில் பொருந்திய உண்மையாகிய அன்போடு தம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது திருமுடியின்மேல் வாசனைபொருந்திய மலர்களை எடுத்துச்சாத்தி, திருமஞ்சனமாக நன்றாக நிறைந்த மதுரமான பாற்குடங்களையெடுத்து விருப்பத்தோடு அபிஷேகஞ்செய்த வளவில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௭)

பரவ மேன்மே லெழும்பரிவும் பழைய பான்மை மிகும்பண்பும்
விரவ மேதக் கவர்தம்பான் மேவும் பெருமை வெளிப்படுப்பான்
அரவ மேவுஞ் சடைமுடியா ரருளா மென்ன வறிவழிந்து
குரவ மேவு முதுமறையோன் கோப மேவும் படிகண்டான்.

(இ-ள்.) வணங்குதலால் மேலும்மேலும் அதிகரித்தெழுகின்ற அன்பும், முற்பிறப்பின் வாசனையினால் உண்டாகிய முறைமையும்பொருந்த, மேன்மையையுடைய விசாரசருமரிடத்தில் பொருந்திய பெருமையை யாவர்க்கும் வெளிப்படுத்தும் பொருட்டு, சர்ப்பத்தையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருள் வெளிப்பட்டதுபோல, குராமரத்தில் ஏறியிருந்த கிழப்பிராமணனாகிய எச்சதத்தன் புத்திமயங்கிக் கோபமுண்டாகும்படி பார்த்தான்.—எ-று.

விசாரசருமருடைய அன்பின் பெருமையை எச்சதத்தனுடைய கோபமானது வெளிப்படுத்தினமைபற்றி, அதனைச் சிவபெருமானுடைய திருவருளோடு உருவகப்படுத்திக் கூறினார் எனவறிக. (௫அ)

கண்ட போதே விரைந்திழிந்து கடிது சென்று கைத்தண்டு
கொண்டு மகனார் திருமுதுகிற் புடைத்துக் கொடிதா மொழிகூறத்
தொண்டு புரியுஞ் சிறியபெருந் தோன்ற லார்தம் பெருமான்மேன்
மண்டு காத லருச்சனையின் வைத்தார் மற்றொன் றறிந்திலரால்.

(இ-ள்.) எச்சதத்தன் அவர் செய்கையைப்பார்த்தபொழுதே குராமரத்தினின்றும் விரைவாக இறங்கி ஓடி, கையில்வைத்திருக்குங்கோலினால் தன் புத்திரராகிய விசாரசருமருடைய முதுகில் அடித்துக் கொடிய வார்த்தைகளைச்சொல்ல, பூசைத்தொண்டு செய்துகொண்டிருக்கின்ற சிறுவயதினையுடைய பேரருளாளராகிய விசாரசருமர் தமது ஆண்டவராகிய சிவபெருமான் விஷயத்தில் அதிகரித்திருக்கின்ற பேரன்புபொருந்திய மனதைப் பூசிக்கும் முறைமையில் செலுத்தியிருக்கின்றபடியால், எச்சதத்தன் அடித்தல் முதலிய வேறொன்றையும் அறியாதவராயிருந்தார்.—எ-று. (௫௯)

மேலாம் பெரியோர் பலகாலும் வெகுண்டோ னடிக்க வேறுணரார்
பாலார் திருமஞ் சனமாட்டும் பணியிற் சலியா ததுகண்டு
மாலா மறையோன் மிகச்செயிர்த்து வைத்த திருமஞ் சனக்குடப்பால்
காலா லிடறிச் சிந்தினான் கையாற் கடைமைத் தலைநின்றான்.

(இ-ள்.) எச்சதத்தன் பின்னுங்கோபமுடையவனாகிப்பலதரம் கோலினால் அடிக்கவும், திருவருட்செல்வராகிய விசாரசருமர் (தாம் பூசைசெய்தலே யன்றி அவன் அடித்தலாலுண்டாகிய வருத்தம்) ஒன்றுந் தோன்றாதவராய்ப் பாலினாலாகிய திருமஞ்சனத்தை அபிஷேகஞ்செய்யும் திருத்தொண்டில் தவறாமலிருப்பதைக்கண்டு, அஞ்ஞானத்தையுடைய அவ்வெச்சதத்தன் மிகுந்த கோபங்கொண்டு, அருகில் வைத்திருக்கின்ற திருமஞ்சனக் குடத்திலிருந்தபாலைத் தன் காலினால் உதைத்துக் கவிழ்த்தான்.—எ-று.

கையால் கடைமைத்தலை நின்றான்=ஒழுக்கத்தால் கீழ்மையின் முதலில் நின்றவன்; எனவே, தீயவொழுக்கத்தையுடையவனென்று கூறியதாயிற்று. அது பற்றியே, சிவபெருமானுக்கு அபிஷேகஞ் செய்ய வைத்திருந்த பாற்குடத்தைக் காலாலிடறிச் சிந்தினனெனவறிக. (௬0)

சிந்தும் பொழுதி லதுநோக்குஞ் சிறுவ ரிறையிற் றீயோனைத்
தந்தை யெனவே யறிந்தவன்றன் றாள்கள் சிந்துந் தகுதியினான்
முந்தை மருங்கு கிடந்தகோ லெடுத்தார்க் கதுவே முறைமையினால்
வந்து மழுவா யிடவெறிந்தார் மண்மேல் வீழ்ந்தான் மறையோனும்.

(இ-ள்.) திருமஞ்சனக் குடத்திலிருந்த பாலைச்சிந்தினபொழுது, அதைப் பார்த்த விசாரசருமர் அந்த நிமிஷத்திலேயே கொடியவனுகிய எச்சதத்தனைத் தந்தையென்றறிந்துகொண்டு, அவன் கால்களைத் துணிக்கவேண்டுமென்னுங் கருத்துள்ளவராய்த் தமக்கு முன் அருகில்கிடந்த ஒருகோலை எடுத்தபொழுது, அக்கோலே அவர்கருத்தின்படி மழுப்படையாய்க்கிடக்க,அதனால் அவன் கால்களைவெட்டினார். அப்பொழுது எச்சதத்தனும் நிலத்தில் விழுந்து இறந்தான்.—எ-று.

சிவாபராதமாகிய கொடும்பாதகத்தைச் செய்தவன் தந்தையாயிருப்பினுந் தண்டித்தலே தகுதியாமென்பார் 'தந்தையெனவேயறிந்து' என்றும், பாற்குடத்தை யிடறிச் சிந்திய காலொன்றைமாத்திரந் துணித்தால் மற்றொருகாலினால் ஒருவேளை அவ்வாறு செய்யவுங் கூடுமெனக் கருதி, இரண்டினையும் வெட்டத் துணிந்தனரென்பார் 'தாள்கள்' என்றும், சிவஞானச்செல்வராகிய அவர் கருத்தின்படி தாம் கையிலெடுத்த கோலே மழுவாய்த் தோன்றின வென்பார் 'அதுவேமுறைமையினுன்-வந்து மழுவாயிட' என்றுங்கூறினார். (ருக)

எறிந்த வதுவே யர்ச்சனையி லிடையூ றகற்றும் படையாக
மறிந்த தாதை யிருதாளுந் துணித்த மைந்தர் பூசனையில்
அறிந்த விடையூ றகற்றினராய் முன்போ லர்ச்சித் திடப்புகலுஞ்
செறிந்த சடைநீண் முடியாருந் தேவி யோடும் விடையேறி.

(இ-ள்.) எறியப்பட்ட அம்மழுப்படையே சிவபூசைகாலத்தில் உண்டாகிய விக்கினத்தை ஒழிக்கின்ற ஆயுதமாக இருக்க, தடைசெய்த தமது தந்தையாகிய எச்சதத்தனுடைய இரண்டு கால்களையும் வெட்டிய விசாரசருமர் தாம் செய்யும் சிவபூசையில் சம்பவித்த வியாகுலத்தை நீக்கினவராய் முன்போலப் பூசைசெய்யத்தொடங்கவும், நெருங்கிய சடையினால் நீண்டதிருமுடியினையுடைய சிவபெருமானும் உமாதேவியாரோடும் ரிஷபவாகனத்தில் எழுந்தருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (ருஉ)

பூத கணங்கள் புடைசூழப் புராண முனிவர் புத்தேளிர்
வேத மொழிக ளெடுத்தேத்த விமல மூர்த்தி திருவுள்ளங்
காதல் கூர வெளிப்படலுங் கண்டு தொழுது மனங்களித்துப்
பாத மலர்கண் மேல்விழுந்தார் பத்தி முதிர்ந்த பாலகனார்.

(இ-ள்.) பூதக்கூட்டங்கள் பக்கத்திற் சூழவும், பழமையாகிய முனிவர்களும், தேவர்களும் வேதவாக்கியங்களால் புகழ்ந்து துதிக்கவும், மலரகிதராகிய சிவபெருமான் திருவுள்ளத்தில் கருணை மிகுதியாகக் காட்சி கொடுத்தருளவும், முதிர்ந்த அன்பினையுடைய சிறுவராகிய விசாரசருமர் தரிசித்துக் கைகூப்பித்தொழுது மனதில் களிப்புற்று, அப்பெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளில் விழுந்து சாஷ்டாங்கமாக வணங்கினார்.—எ-று. (ருங)

தொடுத்த விதழி சூழ்சடையார் துணைத்தா ணிழற்கீழ் விழுந்தவரை
யெடுத்து நோக்கி நம்பொருட்டா லீன்ற தாதை விழவெறிந்தா
யடுத்த தாதை யினியுனக்கு நாமென் றருள்செய் தணைத்தருளி
மடுத்த கருணை யாற்றடவி யுச்சி மோந்து மகிழ்ந்தருள.

(இ-ள்.) தொடுக்கப்பட்ட கொன்றைமலர்மாலையைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமான் தமது இரண்டு திருவடிகளிலும் வீழ்ந்து வணங்கின

விசாரசருமரைத் திருக்கரத்தினால் எடுத்துக் கிருபாநோக்கஞ்செய்து, எமக்காகவே, உன்னைப்பெற்ற தகப்பன் இறக்கும்படி அவனுடைய கால்களை வெட்டினாய் ; ஆதலால், இனிமேல் நாமே உனக்குரிய தந்தையாயினோமென்று அருளிச்செய்து, (திருமார்பில்) அணைத்து, நிறைந்த கருணையினால் உடலைத்தடவி, அவரது உச்சியைமோந்து மகிழ்ந்தருளவும்.—எ-று.

'அடுத்தாதை யினி யுனக்கு நாம்' என்றதற்கேற்ப,விசாரசருமரை அணைத்தலும், தடவலும், உச்சிமோத்தலும் சிவபெருமான் செய்தனவொன்க. (ருச)

செங்கண் விடையார் திருமலர்க்கை தீண்டப் பெற்ற சிறுவனார்
அங்கண் மாயை யாக்கையின்மே லளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கி யெழுந்த திருவருளின் மூழ்கிப் பூமே லயன்முதலாத்
துங்க வமரர் துதிசெய்யச் சூழ்ந்த வொளியிற் றோன்றினார்.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய ரிஷபத்தை வாகனமாகக் கொண்டருளிய சிவபெருமான் அழகிய தாமரைமலர்போன்ற திருக்கைகளால் தீண்டும்படி பெற்றுக்கொண்ட விசாரசருமர் அவ்விடத்தில் மாயாகாரியமாகிய தேகத்தின்மேல் அளவின்றி உயர்ந்த சிவசொரூபத்தையடைந்து, அதிகரித்தெழுந்த திருவருளாகிய வெள்ளத்தில் முழுகினவராய்த் தாமரைமலரில் வாழும் பிரமன்முதலாகிய உயர்ந்த தேவர்கள் துதிக்கும்படி பரவிய ஒளியோடு விளங்கினார்.—எ-று. ()

அண்டர் பிரானுந் தொண்டர்தமக் கதிப னாக்கி யனைத்துநாம்
உண்ட கலமு முடுப்பனவுஞ் சூடு வனவு முனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோ மென்றங் கவர்பொற் றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை வாங்கிச் சூட்டினார்.

(இ-ள்.) தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானும் அவரைத்திருதொண்டர்களுக்குத் தலைவராகச்செய்து, நாம் ஏற்றுக்கொண்ட அமுதும், பரிவட்டமும், தரிக்கப்பட்ட மாலைமுதலியனவும் ஆகியஎல்லாம் உனக்கே கிடைக்கும்படி சண்டீசர்பதத்தையும் கொடுத்தோம் என்று அருளிச்செய்து,அவ்விசாரசருமருடைய அழகிய திருமுடியின்மேல், இளம்பிறையையணிந்த தமது சடைமுடியிலுள்ள கொன்றைமலர் மாலையை யெடுத்துச் சூட்டியருளினார்.—எ-று.

அனைத்தும் என்றதனால் சந்தனம் - தாம்பூலம் முதலியனவுங்கொள்க. ()

எல்லா வுலகு மார்ப்பெடுப்ப வெங்கு மலர்மா ரிகள்பொழியப்
பல்லா யிரவர் கணநாதர் பாடி யாடிக் களிபயிலச்
சொல்லார் மறைக டுதிசெய்யச் சூழ்பல் லியங்க ளெழச்சைவ
நல்லா றோங்க நாயகமா நங்கள் பெருமான் றொழுதணைந்தார்.

(இ-ள்.) சர்வலோகத்திலுள்ளவர்களும் மகிழ்ச்சியினால் அரகரவென்று ஆரவாரிக்கவும், தேவர்கள் எவ்விடத்திலும் புஷ்பவருஷங்கள் பொழியவும், அநேகமாயிரம் சிவகணநாதர்கள் புகழ்ந்து பாடி ஆனந்தக்கூத்தாடிக் களிப்படையவும், சிறந்தவேதங்கள் துதிசெய்யவும், நாற்புறத்திலுஞ் சூழ்ந்த பலவாத்தியங்கள் முழங்கவும், நன்மைபொருந்திய சைவசமயமானது நிலைபெற்றோங்கவும், நமது தலைவராகிய சண்டேசுரநாயனார் சிவபெருமானைத் தொழுது சிவலோகத்தையடைந்தார்.—எ-று. (ருஎ)

ஞால மறியப் பிழைபுரிந்து நம்ப ரருளா ஞன்மறையின்
சீலந் திகழுஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தந் திருக்கையிற்
கோல மழுவா லேறுண்டு குற்ற நீங்கிச் சுற்றமுடன்
மூல முதல்வர் சிவலோக மெய்தப் பெற்றான் முதுமறையோன்.

(இ-ள்.) முதிர்ந்த வேதியனாகிய எச்சதத்தன் உலகத்தார் அறியும்படி சிவபூசைக்கு இடையூறாகிய குற்றத்தைச்செய்து, சிவபெருமானது திருவருளினால் நான்குவேதங்களினும் சொல்லப்பட்ட நல்லொழுக்கமானது விளங்கப்பெற்ற திருச்சேய்ஞலூரில் அவதரித்தருளிய சண்டேசுரநாயனாரது திருக்கரத்தில் தாங்கிய அழகிய மழுப்படையினால் வெட்டுப்பட்டு, தான் முன்புசெய்த குற்றத்தினின்று நீங்கித் தன்சுற்றத்தாரோடு மூலகாரணராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கயிலையையடைந்தான்.—எ-று.

'கோலமழு' என்பதற்குக் கோலாகியமழு எனினும்பொருந்தும். (௫௮)

வந்து மிகைசெய் தாதைதாள் மழுவாற் றுணித்த மறைச்சிறுவர்
அந்த வுடம்பு தன்னுடனே யரனார் மகனா ராயினார்
இந்த நிலைமை யறிந்தாரா ரீறி லாதார் தமக்கன்பு
தந்த வடியார் செய்தனவே தவமா மன்றோ சாற்றுங்கால்.

(இ-ள்.) தமக்குமுன்னேவந்து சிவபூசைக்கு இடையூறுசெய்த தந்தையாகிய எச்சதத்தனுடைய கால்களைமழுப்படையினால்வெட்டிய விசாரசருமர் தாம் கொண்டிருந்த அந்த மானிடதேகத்துடனே சிவபெருமானுக்குத் திருக்குமாரரானார். இப்படிப்பட்ட நிலைமையை யறிந்தவர்கள் யாவர்? சொல்லுமிடத்தில் நித்தியராகிய சிவபெருமானுக்கு அன்புசெய்கின்ற அடியவர்கள்செய்கின்ற காரியங்கள் அவமாயினும் அவைகள் தவமாகவே விளங்கும்.—எ-று.

இந்த நிலைமை என்றது தந்தையின்றாளைத் துணித்தல் கொடும்பாவமாயினும், சிவபூசையின் பொருட்டுச்செய்ததாதலின் அதுவே பெரும்புண்ணியமாயிற்றென்னுந் தன்மை. (௫௯)

நேச நிறைந்த வுள்ளத்தா னீல நிறைந்த மணிகண்டத்
தீச னடியார் பெருமையினை யெல்லா வுயிருந் தொழவெடுத்துத்
தேச முய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்.

(இ-ள்.) அன்பு நிறைந்த திருவுள்ளத்தோடு நீல நிறமாகிய காளகண்டத்தினையுடைய சிவபெருமானது அடியவர்களின் பெருமையை உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் பிழைக்கும்பொருட்டுத் தொழும்படி திருத்தொண்டத்தொகையை முன்பு அருளிச்செய்த திருவருளாளராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளின் மணம் வீசுகின்ற தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கும்படிஎமக்குக்கிடைத்த இந்த மானிடப் பிறப்பினை யாம் வணங்குகின்றோம்.—எ-று. (௬0)

சண்டேசுரநாயனார்புராணமுற்றிற்று.

மூன்றாவது,

மும்மையாலுலகாண்டசருக்கம்

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - ௧௨௭0.



திருநாவுக்கரசுசுவாமிகள்.

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீவாகீசதேசிகாய நம



நான்காவது,

திருநின்றசருக்கம்.

# திருநாவுக்கரசுசுவாமிகள்புராணம்.

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன்.

(இ-ள்.) சிறந்தோங்குகின்ற திருத்தொண்டினைச் செய்கின்ற பத்திநெறியானது உலகில் நீடித்துவாழும்பொருட்டுத் (திருக்கயிலாயத்தினின்றும்) எழுந்தருளிவந்த சிவஞானத்தையுடைய தவமுனிவராகிய ஸ்ரீவாகீசமூர்த்திகளின் திருவவதாரமாகிய திருநாவுக்கரசுசுவாமிகளினுடைய உண்மைபொருந்திய பெரிய சரிதத்தின் சிறப்பைக்குறித்துத் துதிக்கத்தொடங்கினேன், விசாலமாகிய இவ்வுலகத்தில் அதனை என் ஒருநாவினால் புகழ்ந்து சொல்லமுடியாதென்பதை அறியாதவனாகிய யான்.—எ-று.

சர்வான்மாக்களின் நாவையும் ஆளத்தக்க பேராற்றலும் அருண்முதிர்ச்சியுமமைந்த திருநாவினையுடையவரென்பார், சிவபெருமானால் அன்பினாலைத்தருளப்பெற்ற அருமைநோக்கி முதற்கண் 'திருநாவுக்கரசு' என்றும், "விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும் - அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே" என்றபடி சரியையாதிநான்கும், சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமைத்தாய முத்தியையடைதற்குச் சாதனமாயுள்ளதென்பார் சோபான முறைமைதோன்ற 'திருத்தொண்டினெறி' என்றும், அந்நெறியை ஆன்மகோடிக ளனுட்டித்துச் சுகப்பேறெய்தற்பொருட்டே யீண்டவதரித்தருளினரென்பார் 'வாழவரும்' என்றும், தாங் கடந்தசன்மத்திலேயே சிவஞானச்செல்வராய பெருந்தவமுடையராயிருந்தன ரென்பார் 'ஞானத்தவமுனிவரென்றும், ஆண்டும், இத்திருநாவுக்கரசு என்பதன் பெயர்ப்பொருளையே சொற்றிரிபாகக்கொண்டு விளங்கின ரென்பார் 'வாகீசர்' என்றும், இத்தகைய அருள்வள்ளலாரது அருஞ்சீர்த்தியைக்குறித்து ஆயிரம் நாவினையுடைய ஆதிசேடனாலும் பல்லூழிகால மளந்துரைப்பினு முலவாதாயின் சிற்றறிவினையுடைய சிறியேன் எனதொருநாவினாலுரைக்கத்தொடங்கியதறியாமையே யென்பார் 'வாய்மைதிகழ் - பெருநாமச்சீர்பரவ லுறுகின்றேன் பேருலகி - லொருநாவுக்குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன்' என்றுங் கூறினர். (௧)

தொன்மைமுறை வருமண்ணின் றுகளன்றித் துகளில்லா
நன்மைநிலை யொழுக்கத்தி னலஞ்சிறந்த குடிமல்கிச்
சென்னிமதி புனையவளர் மணிமாடச் செழும்பதிகண்
மன்னிநிறைந் துளதுதிரு முனைப்பாடி வளநாடு.

(இ-ள்.) பழமையாகிய முறைமைப்படியே வருகின்ற மண்ணில்தோன்றிய புழுதித்துகளிருப்பதேயன்றி, வேறே யாதொரு குற்றமுமில்லாத நல்ல அறநிலைக்குரிய குலவொழுக்கத்தினால் சிறப்புற்றிருக்கின்ற குடிகள் நிறைந்து, சிகரங்களில் சந்திரன் பொருந்தும் படியாக உயர்ந்திருக்கின்ற மணிகளிழைத்த உப்பரிகைகளையுடைய பலநகரங்கள் நிலைபெற்று நிறைந்துள்ளது, வளப்பம் பொருந்திய திருமுனைப்பாடிநாடு.—எ-று. (௨)

புனப்பண்ணை மணியினொடும் புறவினறும் புதுமலரின்
கனபவெண்ணி றிரைசுமந்து கரைமருங்கு பெரும்பகட்டே
ரினப்பண்ணை யுழும்பண்ணை யெறிந்துலவி யெவ்வுலகும்
வனப்பெண்ண வரும்பெண்ணை மாநதிபாய் வளம்பெருகும்.

(இ-ள்.) குறிஞ்சி நிலத்திலிருக்கும் மூங்கில்களிலுண்டாகிய முத்துக்களோடு முல்லைநிலத்திலுள்ள வாசனை பொருந்திய புதியமலர்களின் தொகுதிகளையும், அளவில்லாத அலையாகிய கைகளால்வாரி இரண்டு கரையோரங்களில் பெரிய எருமைக்கடாக்களைப்பூட்டிய ஏர்க்கூட்டங்களால் உழப்பட்ட வயல்களில் வீசியெறிந்து உலாவி, எவ்வுலகத்திலுள்ளவர்களும் தன்பெருமையைக்குறித்து மதிக்கும்படி நீர் பெருகிவருகின்ற பெரிய பெண்ணையாறானது பாய்கின்ற வளத்தினால் சிறப்புற்றிருக்கும் அந்தத் திருமுனைப்பாடிநாடு.—எ-று.

பனை என்பது, பண்ணை என விரித்தல் விகாரம்பெற்றது. பனை=மூங்கில். (௩)

காலெல்லாந் தகட்டுவரால் கரும்பெல்லாங் கண்பொழிதேன்
பாலெல்லாங் கதிர்ச்சாலி பரப்பெல்லாங் குலைக்கமுகு
சாலெல்லாந் தரளநிரை தடமெல்லாஞ் செங்கழுநீர்
மேலெல்லா மகிற்றூபம் விருந்தெல்லாந் திருந்துமனை.

(இ-ள்.) வயல்களுக்கு நீர்பாய்ச்சுங் கால்களிலெல்லாம் அச்சவடிவாகிய வரால்மீன்களும், கரும்புகளிலெல்லாம் கணுக்கள்வெடித்துப் பொழிகின்றதேனும், பக்கங்களிலெல்லாம் கதிர்களையுடைய செந்நெற்பயிர்களும், பரந்த இடங்களிலெல்லாம் குலைகளையுடைய கமுகமரங்களும், படைச்சால்களிலெல்லாம் முத்துக்களின் வரிசைகளும், தடாகங்களிளெல்லாம் செங்கழுநீர்மலர்களும், மேல்வீடுகளிலெல்லாம் அகிற்கட்டையினாலுண்டாகிய புகைகளும், திருத்தமாகிய வீடுகளிலெல்லாம் பலவகை விருந்தினர்களுமாக விளங்கிக்கொண் டிருக்கும்.—எ-று.

விருந்து என்றது, புதிதாகவந்தவர்களை. (௪)

கடைஞர்மிடை வயற்குளைக்க கரும்புகுறை பொழிகொழுஞ்சா
றடைமதாடுத்த தேன்கிழிய விழிந்தொழுகு நீத்தமுடன்
புடைபரந்து ஞிமிறொலிப்பப் புதுப்புனல்போய் மடையுடைப்ப
உடைமடையக் கரும்படுகட் டியினடைப்ப வூர்கடொறும்.

(இ-ள்.) 'பள்ளர்கள் நெருக்கமாகிய வயல்களில் வெட்டிய கரும்புகளின் அடித்துண்டுகளினின்றும் பொழிந்த கொழுமையாகிய சாறுனது,அவ்வடித்துண்டுகளின் இடையிடையே கட்டியிருக்கின்ற தேன்கூடுகள் கிழிதலால் பெருகி ஓடுகின்ற தேன்வெள்ளத்தோடு, பக்கங்களில் வண்டுகள் பரவி ஒலிக்கும்படி செல்கின்ற புதியநீரோடு சென்று மடைகளையுடைத்துவிட, அவ்வாறு உடைக்கப்பட்ட மடைகளை அக்கருப்பஞ்சாற்றைக் காய்ச்சிய வெல்லக்கட்டிகளைக் கொண்டு அடைப்பார்கள் ; அந்நாட்டிலுள்ள ஊர்கள்தோறும்.—எ-று. (ரு)

கருங்கதலிப் பெருங்குலைகள் களிற்றுக்கை முகங்காட்ட
மருங்குவளர் கதிர்ச்செந்நெல் வயப்புரவி முகங்காட்டப்
பெருஞ்சகடு தேர்காட்ட வினைஞரார்ப் பொலிபிறங்க
நெருங்கியசா துரங்கபல நிகர்ப்பனவா நிறைமருதம்.

(இ-ள்.) வளப்பம் நிறைந்த மருதநிலங்கள், கருவாழைமரங்களின் பெரிய குலைகள் யானைகளின் துதிக்கையோடு கூடிய முகத்தினுருவத்தைக் காட்டவும், பக்கங்களில் வளர்கின்ற செந்நெல்களின் கதிர்க்குலைகள் வெற்றிபொருந்திய குதிரைகளின் முகத்தினுருவத்தைக் காட்டவும், பெரியபண்டிகள் தேரினுருவத்தைக் காட்டவும், வேலைசெய்கின்ற பள்ளர்களின் ஆரவாரமானது படைவீரர்களின்ஒலிபோல விளங்கவும் தோன்றுங் காரணத்தினால், நெருக்கமாகிய நால்வகைச் சேனைகளையுடைய இடத்தையொத்திருக்கும்.—எ-று. (சு)

நறையாற்றுங் கமுகுநவ மணிக்கழுத்தி னுடன்கூந்தற்
பொறையாற்று மகளிரெனப் புறம்பலைதண் டலைவேலித்
துறையாற்ற மணிவண்ணச் சுரும்பிரைக்கும் பெரும்பெண்ணை
நிறையாற்று நீர்க்கொழுந்து படர்ந்தேறு நிலைமைத்தால்.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற கமுகமரங்கள் (கழுத்தினிடத்துப் பழுங்களையும்,காய்களையும், பாளைகளையும்,நீண்டபச்சோலைகளையும் உடையனவாயிருத்தலால்) கழுத்தில் நவரத்தினங்க ளிழைத்த ஆபரணங்களோடு கூந்தலின் பாரத்தையும் தாங்கமாட்டாத மாதர்களைப் போன்று, புறத்தில் அலைகின்ற சோலைகளாகிய வேலியையுடைய கரையில் மிகுந்த கருநிறத்தையுடைய வண்டுகள் முழங்குகின்ற பெரிய பெண்ணையாற்றினது நிறைந்த நீர்க்கொழுந்தானது படர்ந்து செல்கின்ற நிலைமையையுடையது (அந்தமருதநிலம்.)—எ-று.

'துறையாற்ற மணிசொரியச் சுரும்பிரைக்கும் பெரும்பண்ணை'—என்றும் பாடம். (எ)

மருமேவு மலர்மேய மாகடலி னுட்படியும்
உருமேக மெனமண்டி யுதைத்தகருங் கன்றுபோல்
வருமேனிச் செங்கண்வரான் மடிமுட்டப் பால்சொரியுங்
கருமேதி தனைக்கொண்டு கரைபுரள்வ திரைவாவி.

(இ-ள்.) மணம்வீசுகின்ற மலர்களைமேயும்படி பெரியகடலில் நீரையுண்ணும்பொருட்டுப் படிகின்ற கருநிறத்தையுடைய மேகம்போலத் தடாகத்தில் விழுந்து,துள்ளுகின்ற கரிய கன்றுகள்போலப் பருத்த உடலையும், சிவந்தகண்களையுமுடைய வரால்மீன்கள் மடிகளைமுட்டப் பாலைச்சொரிகின்ற கரிய எருமைகளை அடித்துக்கொண்டு கரைபுரளுகின்றன அலைகளையுடைய தடாகங்கள்.—எ-று. ()

எருமைகள் குளங்களில் திடீரென்றுவிழுதலாலும், வரால்மீன்கள் துள்ளி அவற்றின் மடியிற் பாய்தலாலும், அதுபற்றி அவைகள் பாலைச்சொரிதலாலும் நீர்களைபுரண்டதென்பது கருத்து. (அ)

மொய்யளிசூழ் நிரைநீல முழுவலயங் களினலையச்
செய்யதளிர் நறுவிரலிற் செழுமுகைபி னகஞ்சிறப்ப
மெய்யொளியி னிழற்காணு மாடியென வெண்மதியை
வையமகள் கையணைத்தாற் போலுயர்வ மலர்ச்சோலை.

(இ-ள்.) மலர்களையுடையசோலைகள், சூழ்ந்துமொய்த்துக்கொண்டிருக்கும் வண்டுகளின் கூட்டங்கள் நீலமணிகளாற்செய்த பெரியவளையல்கள்போல அசையவும், சிவந்ததளிர்களாகிய நல்லவிரல்களினிடத்து நகத்தைப்போலச் செழுமை பொருந்திய பூவரும்புகள் சிறப்படையவும், பூமிதேவியானவள் தன் திருமேனி அழகின் பிரதிபிம்பத்தைப் பார்த்தற்குரிய கண்ணாடியென்று வெண்மையாகிய சந்திரனைத் தன்கைகளால் அணைத்தாற்போல உயர்ந்திருக்கின்றன.—எ-று. (கூ)

எயிற்குலவும் வளம்பதிக ளெங்குமணந் தங்கும்வயற்
பயிர்க்கண்வியலுகவிடங்கள் பரந்துயர்நெற் கூடுகளும்
வெயிற்கதிர்மென் குழைமகளிர் விரவியமா டமுமேவி
மயிற்குலமு முகிற்குலமு மாறாட மருங்காடும்

(இ-ள்.) மதில்சூழ்ந்த வளப்பம்பொருந்திய அந்நாட்டிலுள்ள நகரங்களிலெல்லாம், மணம்வீசுகின்ற பயிரையுடைய வயலிடங்களிலுள்ள விசாலமாகிய களங்களில் பரவி உயர்ந்திருக்கின்ற நெற்போர்களிலும், ஒளிபொருந்திய கிரணங்களைவீசுகின்ற குண்டலங்களையணிந்த மாதர்கள் நெருங்கியிருக்கும் உப்பரிகைகளிலும், மயிற்கூட்டங்களும் மேகக்கூட்டங்களும் தங்கிக் கண்டோர்க்கு இது அது என்று வேற்றுமைதோன்றாதிருக்க அவ்விடங்களில் ஆடும்.—எ-று. (௧0)

மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
யறந்தருநா வுக்கரசு மாலால சுந்தரரும்
பிறந்தருள வுளதானு னம்மளவோ பேருலகிற்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு.

(இ-ள்.) பாவத்தைவிளைவிக்கின்ற கொடிய சமயநெறிகள் நீங்கும்படிக்குக் காளகண்டத்தையுடைய சிவபெருமான் அருளிய உண்மைநெறியாகிய சைவசமயத்திற் கூறும் தருமங்களை நிலைநிறுத்திய திருநாவுக்கரசுசுவாமிகளும், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் திருவவதாரஞ்செய்யத்தக்க மேன்மையைப்பெற்றதென்றால், பெரிய உலகத்தில் சிறப்புப்பொருந்திய அத்திருமுனைப்பாடி நாட்டின் வளப்பத்தைக் குறித்துப் புகழ்கின்ற சிறப்பானது நம்மளவினதோ? அன்று.—எ-று.

இவ்வகைய திருநாட்டி லெனைப்பலவூர் களுமென்று
மெய்வ்வளங்க ளோங்கவரு மேன்மையன வாங்கவற்றுட்
சைவநெறி யேழுலகும் பாலிக்குந் தன்மையினுற்
றெய்வநெறிச் சிவம்பெருக்குந் திருவாமூர் திருவாமூர்.

(இ-ள்.) இத்தன்மையாகிய சிறப்பினையுடைய திருமுனைப்பாடி நாட்டில், எல்லா ஊர்களும் எந்நாளும் அழிவில்லாதவளங்கள் வளர்ந்தோங்கும்படிக்குத்தங்கிய பெருமையையுடையன; அவ்வூர்களுள், சைவசமயமார்க்கத்தை ஏழுலகத்திற்குந் தெரிவிக்கின்ற மேன்மையை யுடைத்தாயிருப்பதினால், திருமகள் வாசஞ்செய்யும் ஊராகியதிருவாமூரானது தெய்வத்தன்மை பொருந்திய நன்மார்க்கத்தைப் பெருக்கிக்கொண்டிருக்கும்.—எ-று. (கஉ)

ஆங்குவன முலைகள்சுமந் தணங்குவன மகளிரிடை
ஏங்குவன நூபுரங்க ளிரங்குவன மணிக்காஞ்சி
ஓங்குவன மாடநிரை யொழுகுவன வழுவிலறம்
நீங்குவன தீங்குநெறி நெருங்குவன பெருங்குடிகள்.

(இ-ள்.) அத்திருவாமூரில் மாதர்களின் இடைகளானவை அழகிய ஸ்தனபாரங்களைத் தாங்குவதனால் வருந்துகின்றன; அவர்கள் காலில்தரித்த சிலம்புகள் (ஸ்தனங்களைச் சுமப்பதனால் அவ்விடைகளுக்குத் துன்பமுண்டாகுமேயென்று அலறுதல்போல) சப்திக்கின்றன; இடையில்தரித்த நவமணிகளிழைத்த மேகலாபரணமானது (தனக்கும் அபாயம் சம்பவிக்குமென்று விசனப்படுவதுபோல) ஒலிக்கின்றன; மாளிகைகளின் வரிசைகள் உயர்ந்திருக்கின்றன; குற்றமற்ற சிறந்த தருமங்கள் தவறாமல் நடக்கின்றன; தீயவொழுக்கங்கள் விலகுகின்றன; பெரிய குடிகள் (செழிப்புற்று) நிறைகின்றன.—எ-று. (கங)

மலர்நீலம் வயல்காட்டு மஞ்ஞில மதிகாட்டும்
அலர்நீடு மறுகாட்டு மணையூசல பலகாட்டும்
புலர்நீல விருள்காட்டும் பொழுதுழவ ரொலிகாட்டும்
கலநீடு மனைகாட்டுங் கரைகாட்டாப் பெருவளங்கள்.

(இ-ள்.) வயல்கள் நீலோற்பலமலர்களைக் காட்டுகின்றன; பூரணசந்திரன் கரிய மறுவைத் தன்னிடத்துக்காட்டுகின்றது; விசாலமாகிய நீண்ட வீதிகள் மனிதர்களால் ஆட்டப்பட்ட அழகிய பல ஊசல்களைக்காட்டுகின்றன; கரிய இருளுண்டாகின்ற விடியற்காலமானது உழவர்களினுடைய ஒலியைக் காட்டுகின்றது; பல பாண்டங்களும் நிறைந்திருக்கின்ற வீடுகள் அளவில்லாத பெரிய வளங்களைக் காட்டுகின்றன.—எ-று.

நீலம் என்பது ஞீலம் எனப் போலியாயிற்று. (கச)

தலத்தின்கண் விளங்கியவத் தனிப்பதியி லனைத்துவித
நலத்தின்கண் வழுவாத நடைமரபிற் குடிதாப்பண்
விலக்கின்மனை யொழுக்கத்தின் மேதக்க நிலைவேளாண்
குலத்தின்கண் வரும்பெருமைக் குறுக்கையர்தங் குடிவிளங்கும்.

(இ-ள்.) உலகத்தில் சிறந்துவிளங்குகின்ற ஒப்பற்ற அத்திருவாமூரில் எல்லாவித நன்மைகளிலும் தவறாத நல்லொழுக்கத்தையுடைய குடிகளினிடையில், பழிப்பில்லாத இல்லறவொழுக்கத்தில் மேன்மைபொருந்திய வேளாளர்மரபில், தொன்றுதொட்டுவருகின்ற பெருமையையுடைய குறுக்கையர் குடியானது விளங்கியிருக்கும்.—எ-று. (கரு)

அக்குடியின் மேற்றோன்ற லாயபெருந் தன்மையினார்
மிக்கமனை யறம்புரிந்து விருந்தளிக்கு மேன்மையினார்
ஒக்கல்வளர் பெருஞ்சிறப்பி னுளரானா ருளரானார்
திக்குநில வும்பெருமை திகழவரும் புகழனார்.

(இ-ள்.) அந்தக் குறுக்கையர் குடியில் தோன்றிய மேலாகிய பெருமையையுடையவரும், சிறந்த இல்லறத்தை நடத்தி விருந்தினரைப் பாதுகாக்கின்ற மேன்மையையுடையவரும், உறவினர்களுக்குஉதவிபுரிந்து விருத்திசெய்கின்ற பெருஞ்சிறப்பினையுடையவருமாகிய திக்குகளிலெல்லாம் பரவிய பெருமையானது விளங்கும்படிவந்த புகழனாரென்பவர் ஒருவரிருந்தார்.—எ-று. (கசு)

புகழனார் தமக்குரிமைப் பொருவில்குலக் குடியின்கண்
மகிழவரு மணம்புணர்ந்த மாதினியார் மணிவயிற்றி
னிகழுமலர்ச் செங்கமல நிரையிதழி னகவயினிற்
றிகழவருந் திருவனைய திலகவதி யார்பிறந்தார்.

(இ-ள்.) அவர் தமக்குரிய ஒப்பற்ற குடிமரபில் விருப்பமாகக் கலியாணஞ்செய்துகொண்ட மாதினியாரென்னும் மனைவியாரது திருவயிற்றில், மலர்ந்த செந்தாமரை மலரினது வரிசையாகிய இதழ்களின் நடுவில் விளங்குகின்ற திருமகளையொத்த திலகவதியாரென்னும் புத்திரியார் அவதரித்தார்.—எ-று. (கஎ)

திலகவதி யார்பிறந்து சிலமுறையாண் டகன்றதற்பின்
அலகில்கலைத் துறைதழைப்ப வருந்தவத்தோர் நெறிவாழ
உலகின்வரு மிருணீக்கி யொளிவிளங்கு கதிர்போல
மலருமருணீக்கியார் வந்தவதா ரஞ்செய்தார்.

(இ-ள்.) திலகவதியாரென்னும் புத்திரியார் அவதரித்து முறையாகச் சிலவருஷங்கள் கடந்தபின்பு, அளவில்லாத வேதாகமங்களிற் கூறும் தருமங்கள் தழைத்தோங்கவும், அருமையாகிய தவத்தினையுடையவர்களது நல்லொழுக்கமானது சிறப்புற்று வாழவும், உலகத்தில் நிறைந்த இருளையொழித்துப் பிரகாசிக்கின்ற சூரியனைப்போல விளங்குகின்ற மருணீக்கியாரென்னும் புத்திரர் திருவவதாரஞ் செய்தருளினார்.—எ-று.

உலகத்தில் நிறைந்த புறவிருளை யொழித்துப் பிரகாசத்தைத் தருகின்ற சூரியனைப்போல, நமது ஸ்ரீ அப்பர்சுவாமிகளும் ஆன்மாக்களின் அகத்திலுள்ள அஞ்ஞானவிருளையொழித்துச் சிவஞானத்தை விளக்குதலால் 'உலகில்வருமிருணீக்கி யொளிவிளங்கு கதிர்போல - மலருமருணீக்கியார்' என்று கூறினார். இதனால், அப்பெருந்தகையார் தனக்கெனவேண்டாது ஆன்மாக்களின் பொருட்டே அவதரித்தருளினரெனவும், தாம் இயல்பாகவே, சிவஞான பூரணராயுள்ளவரெனவும் கூறினரென்பது வெளிப்படை. (கஅ)

மாதினியார் திருவயிற்றின் மன்னியசீர்ப் புகழனார்
காதலனா ருதித்ததற்பின் கடன்முறைமை மங்கலங்கண்
மேதகுநல் வினைசிறப்ப விரும்பியவா றாற்றினுடன்
ஏதமில்பல் கிளைபோற்ற விளங்குழவப் பதங்கடந்தார்.

(இ-ள்.) தமது பத்தினியாகிய மாதினியாரது திருவயிற்றில் மருணீக்கி யாரென்னும் புத்திரார் அவதரித்தவுடனே, நிலைபெற்ற சிறப்பினையுடைய புகழ னாரானவர் விதிப்படிசெய்யவேண்டிய மங்கலங்களாகிய நல்வினைகளைச் சிறக்கச் செய்த பின்பு குற்றமற்ற சுற்றத்தார்யாவரும் மருணீக்கியார்க்கு வரிசை எடுத்துப் பாராட்டிவளர்க்க, அவர் இளமையாகிய குழந்தைப் பருவங்கடந்தார்.—எ-று.

கடன்முறைமை மங்கலங்கள் என்றது, சாதகன்ம முதலியவற்றை. (௧௯)

மருணீக்கி யார்சென்னி மயிர்நீக்கு மணவினையுந்
தெருணீர்ப்பன் மாந்தரெலா மகிழ்சிறப்பச் செய்ததற்பின்
பொருணீத்தங் கொளவீசிப் புலன்கொளுவ மனமுகிழ்த்த
சுருணீக்கி மலர்விக்குங் கலைபயிலத் தொடங்குவித்தார்.

(இ-ள்.) (புகழனார்) தம்புத்திரராகிய மருணீக்கியாரது தலையிலுள்ள சிகை யைக்கழிக்கின்ற குடுமிக்கலியாணத்தைத் தெளிந்த நற்குணத்தையுடைய சுற்றத் தார் பலரும் மகிழ்ச்சியடையும்படி செய்தபின்பு, பொருள்களை வெள்ளமாக எடு த்துத் தானஞ்செய்து,ஞானமுண்டாகும்பொருட்டுச்சுருள்போல்மூடியிருக்கின்ற மனதை விரியச்செய்யுங் கருவியாகிய நூல்களைப் படிக்கும்படி வித்தியாரம்பஞ் செய்வித்தார்.—எ-று. (௨0)

தந்தையார் களிமகிழ்ச்சி தலைசிறக்கு முறைமையினாற்
சிந்தைமலர்ந் தெழுமுணர்விற் செழுங்கலையின் றிறங்களெல்லா
முந்தைமுறை மையிற்பயின்று முதிரவறி வெதிருமவகை
மைந்தனார் மறுவொழித்த விளம்பிறைபோல் வளர்கின்றார்.

(இ-ள்.) தந்தையாராகிய புகழனார்க்குப் பெருங்களிப்பானது படிப்படி யாகச் சிறந்தோங்குகின்ற முறைமையினால், புத்திரராகிய மருணீக்கியார் சிந்தை யினின்றும் அதிகரித்தெழுந்த அறிவினிடத்தில் அருமையாகிய சாஸ்திரங்க ளின் வேறுபாடுகளையெல்லாம் தொன்றுதொட்டு வருகின்ற சம்பிரதாயப்படியே கற்று அறிவுமுதிர்ந்து களங்கமற்ற இளம்பிறைப்போல நாளுக்குநாள் வளர்கின்ற வராயினார்.—எ-று. (௨௧)

அந்நாளிற் றிலகவதி யாருக்காண் டாறிரண்டின்
முன்னாக வொத்தகுல முதல்வேளாண் குடித்தலைவர்
மின்னார்செஞ் சடையண்ணன் மெய்யடிமை விருப்புடையார்
பொன்னாரு மணிமௌலிப் புரவலன்பா லருளுடையார்.

(இ-ள்.) அப்படி வளர்ந்துவருகின்ற நாள்களில், திலகவதியாரென்னும் புத்திரியாருக்குப் பன்னிரண்டாம்வயதில் பழமையாகத் தம்மரபிற்கு ஒத்த வே ளாளர் குலத்தில்பிறந்த தலைவரும், மின்னலைப்போல் விளங்குகின்ற சிவந்தசடை முடியையுடைய சிவபெருமானுக்கு மெய்யாகிய அடிமைத்திறஞ்செய்வதில் விரு ப்பமுடையவரும், பொன்னால்செய்யப்பட்டு மணிகளழுத்திய கிரீடத்தைத்தரித்த அரசனிடத்தில் அன்புள்ளவரும்,—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௨)

ஆண்டகைமைத் தொழிலின்க ணடலரியே றெனவுள்ளார்
காண்டகைய பெருவனப்பிற் கலிப்பகையா ரெனும்பெயரார்
பூண்டகொடைப் புகழனூர் பாறுமபாருவன மகட்கொள்ள
வேண்டியெழுங் காதலினன் மேலோரைச் செலவிட்டார்.

(இ-ள்.) ஆண்தன்மையாகிய வீரத்தொழிலில் வல்லமைபொருந்திய ஆண் சிங்கத்தையொத்தவருமாகிய பலரும் விரும்பத்தகுந்த பேரழகினையுடைய கலிப்பகையாரென்னும் பெயரையுடையவர், யாவருக்கும் வரையாதுகொடுக்கின்ற ஈகைத்தன்மையையே ஆபரணமாகப் பூண்ட புகழனாரிடத்தில் ஒப்பற்ற அவரது புத்திரியாரைக் கலியாணஞ்செய்துகொள்ள விரும்பி, அதனாலுண்டாகிய ஆசையினால், தம்முறவினர்களுள் பெரியோர்களைப் புகழனாரிடத்தில் பெண்கேட்கும்படி அனுப்பினார்.—எ-று. (உ௩)

அணங்கனைய திலகவதி யார்தம்மை யாங்கவர்க்கு
மணம்பேசி வந்தவரும் வந்தபடி யறிவிப்பக்
குணம்பேசிக் குலம்பேசிக் கோதில்சீர்ப் புகழனார்
பணங்கொளரா வகலல்குற் பைந்தொடியை மணநேர்ந்தார்.

(இ-ள்.) இலட்சுமியையொத்த அழகினையுடைய திலகவதியாரை அந்தக் கலிப்பகையாருக்கு மணம்பேசும்படிவந்த பெரியவர்களும் தாங்கள்வந்த காரியத்தைத் தெரிவிக்க, குற்றமற்ற சிறப்பினையுடைய புகழனாரானவர் அப்பிள்ளையினது குணத்தையும், குலத்தையும் விசாரித்துப் பின்பு பசியவளையலையணிந்த திலகவதியாரைக் கலியாணஞ்செய்து கொடுப்பதற்குச் சம்மதித்தார்.—எ-று. (உச)

கன்னிதிருத் தாதையார் மணமிசைவு கலிப்பகையார்
முன்னணைந்தா ரறிவிப்ப வதுவைவினை முடிப்பதன்முன்
மன்னவற்கு வடபுலத்தோர் மாறேற்க மற்றவர்மேல்
அன்னவர்க்கு விடைகொடுத்தா னவ்வினைமே லவரகன்றார்.

(இ-ள்.) புகழனார் தம்முடைய புத்திரியாரைக் கலியாணஞ் செய்துகொடுக்கச் சம்மதித்ததைப் பெண்கேட்கப்போனவர்கள் வந்து கலிப்பகையாருக்குத் தெரிவிக்க, அவர் தாம் கலியாணஞ்செய்துகொள்வதற்கு முன்னே, தம்முடைய அரசன்மேல் வடதேசத்திலுள்ள பகையரசர்கள் படையெடுத்துவர, அவர்கள் மேல் யுத்தஞ்செய்யும்படி அவ்வரசன் கலிப்பகையாருக்கு உத்தரவுசெய்தான்; அப்போர்த்தொழிலை மேற்கொண்டு அவர்போயினார்—எ-று. (உரு)

வேந்தற்குற் றுழிவினைமேல் வெஞ்சமத்தில் விடைகொண்டு
போந்தவரும் பொருபடையு முடன்கொண்டு சிலநாளிற்
காய்ந்தசினப் பகைப்புலத்தைக் கலந்துகடுஞ் சமர்க்கடலை
நீந்துவார் நெடுநாள்க ணிறைவெம்போர்த் துறைவிளைத்தார்.

(இ-ள்.) தமது அரசனுக்குப் பகைவர்களால் துன்பம் உண்டானபொழுது, அதனையொழிக்கும்பொருட்டுக் கொடிய போர்த்தொழிலைச்செய்ய விடைபெற்று, நால்வகைச்சேனைகளையும் தம்முடன் அழைத்துக்கொண்டுபோன கலிப்பகையாரும் சிலதினத்தில் மிகுந்த கோபத்தையுடைய பகைவர்கள் போர்செய்யும்

இடத்தையடைந்து கொடியபோராகிய கடலைக்கடக்கவேண்டுமென்னுங் கருத்துடையவராய் நெடுநாள்வரையிலும் கொடியபோர்த்தொழிலைச்செய்தார்.—எ-று.

ஆயவ னிடையிப்பா லணங்கனையா டனைப்பயந்த
தூயகுலப் புகழனார் தொன்றுதொடு நிலையாமை
மேயவினைப் பயத்தாலே யிவ்வுலகை விட்டகலத்
தீயவரும் பிணியுழந்து விண்ணுலகிற் சென்றடைந்தார்.

(இ-ள்.) கலிப்பகையார் பகைவர்மேற்சென்று போர்செய்து கொண்டிருக்கும் நாள்களில், திருவாமூரில், இலட்சுமியை யொத்த திலதவதியாரைப் பெற்ற சிறந்த குலத்திற்பிறந்த புகழனார் தொன்றுதொட்டுவருகின்ற தேகம்நிலையாமைக்குக் காரணமாகிய இருவினையின்பயனால் இவ்வுலகத்தைவிட்டு நீங்கும்படியாகக் கொடியவியாதியினால் வருந்திப் பின்பு சுவர்க்கலோகத்தை யடைந்தார்.—எ-று.

புகழனார், நமது பரமாசாரியமூர்த்திகளாகிய திருநாவுக்கரசுசுவாமிகள் தமக்குப் புத்திரராக எழுந்தருளத்தக்க பெரும்புண்ணியத்தைச் செய்திருந்தாரேனும், தீவினையுமுடன் செய்திருத்தலின், அதனை அனுபவித்தாலன்றித் தீராமையின், தீயவரும்பிணியுழந்தனர் எனவறிக. (உஎ)

மற்றவர்தா முயிர்நீப்ப மனைவியார் மாதினியார்
சுற்றமுடன் மக்களையுந் துகளாக வேநீத்துப்
பெற்றிமையா லுடனென்றும் பிரியாத வுலகெய்துங்
கற்புநெறி வழுவாமற் கணவனா ருடன்சென்றார்.

(இ-ள்.) புகழனார் சுவர்க்கபதவியை யடையவும், அவர்மனைவியாராகிய மாதினியாரும் தமது சுற்றத்தாரையும் மக்களிருவரையும் அலட்சியமாக நினைத்துநீக்கிவிட்டு, மனம்ஒத்த தன்மையையுடையவராய்த் தம்நாயகரோடு என்றும் பிரியாதிருக்கும் உலகத்தையடையும் கற்புநெறிதவறாமல் கணவனாரோடு சககமனஞ்செய்தார்.—எ-று.

சககமனமாவது,—உடன்கட்டையேறுதல்; அது புருஷன்இறந்தவுடனே தானும் அவ்வீமவிறகில் தீமூட்டி வீழ்ந்து உயிர்விடுதல் : கற்புடையமாதர்கட்குத்தங்கணவரினும் சிறந்தபொருள் வேறின்றென்பார், 'சுற்றமுடன் மக்களையுந் துகளாகவேநீத்து' என்றுகூறினார். (உஅ)

தாதையா ரும்பயந்த தாயாரு மிறந்ததற்பின்
மாதரார் திலகவதி யாருமவர் பின்வந்த
காதலனார் மருணீக்கி யாருமனக் கவலையினாற்
பேதுறுநற் சுற்றமொடும் பெருந்துயரி லழுந்தினார்.

(இ-ள்.) தம்மைப்பெற்ற தாய்தந்தையர்களிருவரும் இறந்தபின்பு அவர்கள் புத்திரியாராகிய திலதவதியாரும் அவருக்குப் பின்னேஅவதரித்தருளிய புத்திரராகிய மருணீக்கியாரும்,மனதிலுண்டாகிய கவலையினால் வருந்துகின்ற நல்லசுற்றத்தாரோடும் பெரியதுன்பமாகிய கடலில் முழுகினவர்களானார்கள்,—எ-று. (உகூ)

ஒருவாறு பெருங்கிளைஞர் மனந்தேற்றத் துயரொழிந்து
பெருவான மடைந்தவர்க்குச் செய்கடன்கள் பெருக்கினர்
மருவாரமேன் மன்னவற்கா மலையப்போங் கலிப்பகையார்
பொருவாரும் போர்க்களத்தி லுயிர்கொடுத்துப் புகழ்கொண்டார்.

(இ-ள்.) தமனுபெரிய சுற்றத்தார்களாயுள்ளவர்கள்திலதவதியாரையும் மருணீக்கியாரையும் மனந்தேற்ற ஒருவகையாகத் துயரம் ஒழிந்து,பெருமைபொருந்திய சுவர்க்கபதவியை யடைந்த தாய்தந்தையர்களிருவருக்கும் செய்யவேண்டிய நீர்க்கடன்முதலிய கருமங்களைச்செய்து முடித்தார்கள்; இங்கு இவ்வாறிருக்க, தம்முடைய அரசனுக்காகப் பகையரசர்கள்மேல் யுத்தஞ்செய்யப்போயின கலிப்பகையாரும் சண்டைசெய்கின்ற யுத்தகளத்தில் தம்பூதவுடலைக் கொடுத்துப் புகழுடம்பைப் பெற்றுக்கொண்டார்.—எ-று. (௩௰)

வெம்முனைமேற் கலிப்பகையார் வேல்வேந்த னேவப்போய்
அம்முனையிற் பகைமுருக்கி யமருலக மாள்வதற்குத்
தம்முடைய கடன்கழித்த பெருவார்த்தை தலஞ்சாற்றச்
செம்மலர்மேற் றிருவனைய திலகவதி யார்கேட்டார்.

(இ-ள்.) கலிப்பகையார் வேலைத்தாங்கிய தம்முடைய அரசன்கட்டளையிட்டனுப்பக் கொடியபோர்செய்யச் சென்று,அப்போர்முகத்திலுள்ள பகைவர்களைக் கொன்று, தாமும் வீரசுவர்க்கத்தையாளும் பொருட்டு,அரசனுக்குச் செய்யவேண்டிய போர்செய்யும் முறைமையைக்கழித்து இறந்தாரென்னும் பெரும்புகழாகிய வார்த்தையை உலகத்தார் சொல்ல, அதனைச் செந்தாமரைமலரில் வீற்றிருக்கும் இலட்சுமியையொத்த திலகவதியார் கேள்விப்பட்டார்.—எ-று. (௩௧)

எந்தையுமெம் மனையுமவர்க் கெனைக்கொடுக்க விசைந்தார்கள்
அந்தமுறை யாலவர்க்கே யுரியதுதா னாதலினால்
இந்தவுயி ரவருயிரோ டிசைவிப்ப னெனத்துணிய
வந்தவர்தம் மடியிணைமேன் மருணீக்கி யார்விழுந்தார்.

(இ-ள்.) என்தந்தையாரும் தாயாரும், அவருக்கு என்னை விவாகஞ்செய்துகொடுக்கும்படி சம்மதித்திருந்தார்கள்; அவர்கள் எண்ணியிருந்த முறைமைப்படியே இந்தவுயிர் அவருக்கே சொந்தமாயுள்ளது; ஆகையினால், இந்த வுயிரை வீரசுவர்க்கத்தையடைந்த அவருயிருடன் சேர்த்துவிடுகிறேனென்று இறக்கும்படி துணிந்தார்; அப்பொழுது மருணீக்கியார்வந்து தமக்கையாராகிய திலகவதியாருடைய இரண்டுபாதங்களிலும் விழுந்து புலம்பினார்.—எ-று. (௩௨)

அந்நிலையின் மிகப்புலம்பி யன்னையுமத் தனுமகன்ற
பின்னையுநா னுமைவணங்கப் பெறுதலினா லுயிர்தரித்தேன்
என்னையினித் தனிக்கைவிட் டேகுவீ ரெனில்யானு
முன்னமுயிர் நீப்பனென மொழிந்திடரி னழுந்தினார்.

(இ-ள்.) மருணீக்கியார் திலதவதியாருடையதிருவடிகளில் விழுந்துகிடக்கும் நிலையில் மிகவும் அழுது, தாய்தந்தையர்கள் இறந்தபின்பும், அடியேன் உம்மையே அவர்களாகப் பாவித்து வணங்கப்பெற்றதனா லன்றோ உயிர்வைத்துக்கொண்டிருக்கின்றேன்; அங்ஙனமாக, இனி அடியேனைத்தனியே கைவிட்டு நீர் இறப்

பீராயின், நானும் உமக்குமுன்னமே உயிரைவிடுவேனென்று சொல்லித் துன்பத்தை யடைந்தார்.—எ-று. (௩௩)

தம்பியா ருளராக வேண்டுமென வைத்ததயா
உம்பருல கணையவுறு நிலைவிலக்க வுயிர்தாங்கி
அம்பொன்மணி நூறாங்கா தனைத்துயிர்க்கு மருடாங்கி
இமபாமனைத் தவமபுரிந்து திலகவதி யாரிருந்தார்.

(இ-ள்.) மருணீக்கியார் சொன்ன வார்த்தையைக்கேட்ட திலகவதியார், தம்முடைய தம்பியார் உயிரோடிருக்கவேண்டுமென்று அவர்மேல் வைத்திருக்கும் அன்பானது உயிரைத் துறந்து சுவர்க்கத்தை யடையவேண்டுமென்று எண்ணங்கொண்ட உறுதிப்பாட்டை விலக்கியபடியால், தம்முயிரைத் தாங்கிக்கொண்டு வேறொருவரையும் விவாகஞ்செய்துகொள்ளாமல் எல்லா உயிர்களிடத்திலும் காருண்ணியமுடையவராய் இவ்வுலகத்தில் வீட்டிலேயே தவஞ்செய்துகொண்டிருந்தார்.—எ-று.

அம்பொன் மணிநூல் என்பது, மாங்கிலியசூத்திரம். (௩௪)

மாசின்மனத் துயரொழிய மருணீக்கி யாரிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்க்
காசனைமயற் புகழ்விளங்க நிதியளித்துக் கருணையினால்
ஆசிலறச் சாலைகளுந் தண்ணீர்ப்பந் தருமமைப்பார்.

(இ-ள்.) மருணீக்கியார் (தமது தமக்கையார் உயிரோடிருக்குங் காரணத்தினால்) குற்றமற்ற மனத்திலுள்ள துயரமொழிந்து மகிழ்வடைந்து, இவ்வுலகியலின் நிலையாமையை யுணர்ந்து தருமங்களைச் செய்யவிரும்பி, உலகத்தில் புகழுண்டாகும்படி அன்புடனே திரவியங்களைச் செலவுசெய்து, குற்றமற்ற தருமசாலைகளையும், தண்ணீர்ப்பந்தல்களையும் அமைத்தார்.—எ-று.

அறச்சாலை—அன்னசத்திர முதலியன. (௩௫)

காவளர்த்துங் குளந்தொட்டுங் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியுநா னிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத வீகைவினைத் துறைநின்றார்.

(இ-ள்.) (வெயிலில் இளைப்புற்று வருவோர் அவ்விளைப்பாறும்படி வழிகளில்) சோலைகளை வைத்து வளர்த்தும், (நீர்விடாய் தணித்தற்கும், முழுகுவதற்கும் தகுதியாகக்) குளங்களை வெட்டியும், ஈகைநிலை தவறாமல் தம்மை யடைந்தவர்களுக்கு அவர்கள் விரும்பிய பொருள்களை மகிழ்ச்சியோடு கொடுத்தும், வந்த விருந்தினரைப் பாதுகாத்தும், புலவர்களுக்கு வளமுண்டாகப் பொருள்களை மிகுதியாகக்கொடுத்தும் இவ்வாறு இவ்வுலகத்திலுள்ள யாவருக்கும் இல்லையென்று சொல்லாமல் கொடுக்கின்ற கொடைத்தொழிலிலேயே சிறந்து நின்றார்.—எ-று.

நானிலமாவன:— முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன. (௩௬)

நில்லாத வுலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லேனென் றறத்துறந்து சமயங்க ளானவற்றி
னல்லாறு தெரிந்துணர நம்பரரு ளாமையினாற்
கொல்லாமை மறைந்துறையு மமண்சமயங் குறுகினார்.

(இ-ள்.) அநித்தியமாகிய உலகவாழ்க்கையை யறிந்து, நிலையில்லாத இவ் வாழ்க்கைக்கு யான் உரியவனல்லேனென்று எல்லாவற்றையும் அறவே யொழித்துவிட்டு, எல்லாச்சமயங்களுள்ளும் சற்சமயம் இதுதானென்று அறிந்துகொள்ளும்படி சிவபெருமான் அனுக்கிரகஞ் செய்யாமையினால் கொல்லாவிரதம் என்னும் அறமொன்றில் மறைந்துவாழ்கின்ற சமணசமயத்தை யடைந்தார்.—எ-று.

சமயங்களாவன:—புறப்புறச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், அகச்சமயம் என்பனவாம். இவற்றின்விரிவை, 'உலகெலாம்' என்னும் முதற்செய்யுளின் விசேடத்திற் காண்க. (௩எ)

பாடலிபுத் திரமென்னும் பதியணைந்து சமண்பள்ளி
மாடணைந்தார் வல்லமணர் மருங்கணைந்து மற்றவர்க்கு
வீடறியு நெறியிதுவே யெனமெய்போற் றங்களுடன்
கூடவரு முணர்வுகொளக் குறிபலவுங் கொளுவினார்.

(இ-ள்.) அந்தச் சமணசமயத்தை யடைந்த மருணீக்கியார் பாடலிபுத்திரமென்னும் நகரத்திற் சென்று சமணர்களுடைய கோயிலை யடைந்தார்; அப்பொழுது, வலிய சமணர்கள் அவரிடத்திற்கு வந்து மோக்ஷத்தை யடைதற்குரிய மார்க்கம் இதுவேயென்று தங்களோடு அவர்சேர்தற்கு எண்ணங்கொள்ளும் பொருட்டு, மெய்போலக் குறித்தறியும் பல வஞ்சனையான நூல்களையும் போதித்தார்கள்.—எ-று. (௩அ)

அங்கவரு மமண்சமயத் தருங்கலைநூ லானவெலாம்
பொங்குமுணர் வுறப்பயின்றே யந்நெறியிற் புலன்சிறப்பத்
துங்கமுழு வுடற்சமணர் சூழ்ந்துமகிழ் வாரவர்க்குத்
தங்களின்மே லாந்தரும சேனரெனும் பெயர்கொடுத்தார்.

(இ-ள்.) அம்மருணீக்கியாரும் சமணசமயத்திலுள்ள அருமையான நூல்களெல்லாவற்றையும் மிகுந்த அறிவில் அமையும்படியாக ஓதியுணர்ந்து, அந்தவிஷயத்தில் உணர்வு அதிகரித்திருப்பதனால், பருத்த உடம்பினையுடைய சமணர்கள் இவரை எப்பொழுதும் சூழ்ந்து மகிழ்கின்றவர்களாய்த் தங்களுக்கெல்லாம் தலைவராக இருக்கின்ற தருமசேனரென்னும் பட்டப்பெயரை கொடுத்தார்கள்.—எ-று.

அத்துறையின் மீக்கூரு மமைதியினா லகவிடத்திற்
சித்தநிலை யறியாத தேரரையும் வாதிக்கண்
உய்த்தவுணர் வினில்வென்றே யுலகின்க ணொளியுடைய
வித்தகரா யமண்சமயத் தலைமையினின் மேம்பட்டார்.

(இ-ள்.) அந்தச் சமணசமய நூல்களைப்படித்துச் சிறப்புற்றிருக்குந் தன்மையினால், இவ்வுலகத்தில் மனம் ஒருமைப்படும் நெறி இதுவென்று அறியாத

பௌத்தர்களையும், தம்முடைய உணர்வின்மிகுதியினால் வாதத்தில்வென்று, உலகத்தில் நீங்காத புகழுடையவராய்ச் சமணசமயத்திலுள்ள தலைமையான ஒழுக்கத்தில் சிறந்திருந்தார்.—எ-று. (௪0)

அந்நெறியின் மிக்கா ரவரொழுக வான்றதவச்
செந்நெறியின் வைகுந் திலதவதி யார்தாமுந்
தொன்னெறியின் சுற்றத் தொடர்பொழியத் தூயசிவ
நன்னெறியே சேர்வதற்கு நாதனரு ணண்ணுவார்.

(இ-ள்.) மருணீக்கியார் அச்சமணமார்க்கத்தில் சிறந்தவராய் ஒழுகிவர,உயர்ந்த தவத்தினையுடைய நல்லசைவசமயநெறியில் இருக்கின்ற திலதவதியாரும் தொன்றுதொட்டு வருகின்ற முறைமையினையுடைய பந்துக்களின் தொடர்ச்சியானது நீங்க, பரிசுத்தம்பொருந்திய சிவபதத்தையடையும்படிக்குச் சிவபெருமானுடைய திருவருளைப் பெறுங்கருத்துடையவராயிருந்தார்.—எ று. (௪௧)

பேராத பாசப் பிணிப்பொழியப் பிஞ்ஞகன்பால்
ஆராத வன்புபெற வாதரித்த வம்மடவார்
நீரார் கெடிலவட நீள்கரையி னீடுபெருஞ்
சீரார் திருவதிகை வீரட்டா னஞ்சேர்ந்தார்.

(இ-ள்.) தம்மைவிட்டு நீங்காத ஆணவாதி பாசபந்தங்கள் நீங்கவும்,சிவபெருமானிடத்தில் நீங்காத பேரன்பினைப்பெறவும் விரும்பியிருக்கின்ற அந்தத்திலதவதியார் நீர்நிறைந்த கெடிலநதியின் நீண்டவடகரையிலுள்ள பெருஞ்சிறப்பினையுடைய திருவதிகைவீரட்டானத்தை யடைந்தார்.—எ-று. (௪௨)

'பேராதபரசமயப்பிணிப்பொழிய' என்றும் பாடம்.

சென்றுதிரு வீரட்டா னத்திருந்த செம்பவளக்
குன்றையடி மிசைப்பணிந்து கோதில் சிவசின்னம்
அன்று முதற்றாங்கி யார்வமுறத் தங்கையாற்
றுன்று திருப்பணிகள் செய்யத் தொடங்கினார்.

(இ-ள்.) திருவதிகையிற் சென்று திருவீரட்டானமென்னும் ஆலயத்தின்கண் வீற்றிருந்தருளும் சிவந்தபவளமலைபோல் விளங்குகின்ற சிவபெருமானுடைய திருவடிகளில் வணங்கிக் குற்றமற்ற சிவசின்னங்களை அன்றுமுதலாகத் தரித்துக்கொண்டு, அன்பானது பெருகத் தம்முடையகையினால் நிலைபெற்ற பலதிருப்பணிகளைச் செய்யத்தொடங்கினார்.—எ-று.

சிவசின்னங்களாவன:—விபூதி ருத்திராக்ஷ முதலியன. (௪௩)

புலர்வதன்முன் றிருவலகு பணிமாறிப் புனிறகன்ற
நலமலியா னசாணத்தா னன்குதிரு மெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளுந் தொடுத்தமைத்துப்
பலர்புகழும் பண்பினாற் றிருப்பணிகள் பலசெய்தார்.

(இ-ள்.) தினந்தோறும் சூரியோதயத்திற்குமுன்னே திருக்கோயிலின் உள்ளும் புறமும், திருவலகிட்டு, இளமைபோய்ப் பருவமடைந்த நல்லபசுவின் சாணத்தினால் நன்றாக மெழுகி, நல்லமலர்களைப் பறித்துக்கொண்டுவந்து திருப்பள்ளித்

தாமங்கள் தொடுத்துச்சாத்தி, யாவரும் புகழ்ந்து சொல்லுகின்ற முறைமையோடு இவைமுதலாகிய பலதிருப்பணிகளைச் செய்துவந்தார் அத்திலகவதியார்.—எ-று.

நாளுமிகும் பணிசெய்து குறைந்தடையு நன்னாளிற்
கேளுறுமன் புறவொழுகுங் கேண்மையினார் பின்பிறந்தார்
கோளுறுதீ வினைமுந்தப் பரசமயங் குறித்ததற்கு
மூளுமனக் கவலையினான் முற்றவருந் துயருழந்து.

(இ-ள்.) தமது சுற்றத்தாரிடத்தில் அன்புண்டாகும்படிக்கு ஒழுகுகின்ற நண்பினையுடையதிலகவதியார் இவ்வாறாக நாள்தோறும் மிகுந்த திருப்பணிகளைச் செய்து,தமதுகுறையை விண்ணப்பஞ்செய்துகொண்டுவரும் நாள்களில்,தம்பியாராகிய மருணீக்கியார் வலியதீவினையை யனுபவிக்கக் காலம் நேரிட்டபடியினாலே சமணசமயத்திற் பிரவேசித்ததைக்குறித்து உண்டாகிய மனவருத்தத்தினால் மிகுந்த துயரத்தையடைந்து.—எ-று.

குறைந்தடைதலாவது:—தமது தம்பியார் சமணசமயத்திற் பிரவேசித்து வருந்தாவண்ணம் அருள்புரியவேண்டுமெனக் குறையிரந்துவேண்டுதல்.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (௬௫)

தூண்டுதவ விளக்கனையார் சுடரொளியைத் தொழுதென்னை
ஆண்டருளு நீராகி லடியேன்பின் வந்தவனை
ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்று மெடுத்தருள
வேண்டுமெனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனரால்.

(இ-ள்.) தூண்டப்பட்ட தவவிளக்கினையொத்த அத்திலகவதியார் விளங்குகின்ற சோதிசொரூபராகிய சிவபெருமானைத் தொழுது, எம்பெருமானே ! தேவரீர் என்னை அடிமைகொண்டருளியது சத்தியமாயின்,என் தம்பியைத் தீவினையே மிகுதியாகச்செய்கின்ற சமணசமயமாகிய படுகுழியினின்றும் எடுத்துக்காத்தருள வேண்டுமென்று பலதரமும் விண்ணப்பஞ் செய்துகொண்டார்.—எ-று. (௬௬)

தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும்
அவமொன்று நெறிவீழ்வான் வீழாமே யருளுமெனச்
சிவமொன்று நெறிநின்ற திலகவதி யார்பரவப்
பவமொன்றும் வினைதீர்ப்பார் திருவுள்ளம் பற்றுவார்.

(இ-ள்.) தவமென்றுசொல்லிப் பாயையிடுக்கித் தலைமயிரைப்பறித்து நின்றுகொண் டுண்ணுகின்ற தீமைபொருந்திய சமணமார்க்கத்தில் வீழ்ந்து அலைகின்ற என்தம்பியை அவ்வாறு வீழாமல் திருவருள் செய்யவேண்டுமென்று சிவத்தையடையத்தக்க சைவநெறியில் நிற்கின்ற திலகவதியார் விண்ணப்பஞ்செய்ய, பிறவிக்கேதுவாயிருக்கும் தீவினையை நீக்கியருள்பவராகிய சிவபெருமான் அவ்வம்மையாருக்கு இதனைத் திருவுள்ளம்பற்றுகின்றார்.—எ-று. (௬௭)

மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழவிடையார்
உன்னுடைய மனக்கவலை யொழிநீயுன் னுடன்பிறந்தான்
முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்
அன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வ மெனவருளி.

(இ-ள்.) இளமைபொருந்திய ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமான் நிலைபெற்ற தவச்செல்வத்தையுடைய திலதவதியாரது சொப்பனத்தில் வெளிப்பட்டு, நீ உன்னுடைய மனதிற்கொண்டிருக்கின்ற வருத்தத்தை யொழிப்பாயாக; உன்னோடு பிறந்தவன், முற்சனனத்திலேயே ஒரு முனிவனாக இருந்து எம்மை அடையும்பொருட்டுத் தவஞ்செய்திருக்கின்றான்; ஆதலால், இனி சூலை நோயைக்கொடுத்து நாம் அவனை ஆட்கொள்வோமென்று அருளிச்செய்து.—எ-று.

இதுமுதலிரண்டு பாடலுங்குளகம். (சஅ)

பண்டுதவம் புரிதவத்துப் பழுதினள விறைவழுவுந்
தொண்டரையா ளத்தொடங்குஞ் சூலைவே தனைதன்னைக்
கண்டருநெற் றியருளக் கடுங்கனல்போ லடுங்கொடிய
மண்டுபெருஞ் சூலையவர் வயிற்றினிடைப் புக்கதால்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான், முற்சனனத்திற் செய்த நல்ல தவத்தில் கொஞ்சங்குற்றத்தால் வழுவிச் சமணமதத்தில் பிரவேசித்திருந்த தொண்டராகிய மருணீக்கியாரை மறுபடியும் அடிமைகொள்ளும் பொருட்டுச் சூலைநோயைக்கொடுக்க, கொடிய நெருப்பைப்போலப்பற்றி வருத்துகின்ற தீமை பொருந்திய அந்தச் சூலைநோயானது அவர்வயிற்றிற்புகுந்தது.—எ-று. (சகூ)

அடைவிலமண் புரிதரும சேனர்வயிற் றடையுமது
வடவனலுங் கொடுவிடமும் வச்சிரமும் பிறவுமாங்
கொடியவெலா மொன்றாகு மெனக்குடரி னகங்குடையப்
படருழந்து நடுங்கியமண் பாழியறை யிடைவீழ்ந்தார்.

(இ-ள்.) நல்லொழுக்கமில்லாத சமணசமயத்தை விரும்பியிருக்கின்ற தருமசேனருடைய வயிற்றில் அடைந்த அந்தச் சூலைநோயானது வடவாமுகாக்கினியும், கொடியவிஷமும், வச்சிராயுதமும் மற்றுமுள்ள கொடியபொருள்களெல்லாம் ஒன்றாகச்சேர்ந்ததென்று சொல்லும்படி குடலினுள்ளேபுகுந்து குடைய, அதனால்வருந்தி நடுக்கமுற்றுச்சமணர்களுடைய மடத்தின் அறையில் மூர்ச்சித்து விழுந்தார்.—எ-று. (ருo)

அச்சமயத் திடைத்தாமுன் னதிகரித்து வாய்த்துவரும்
விச்சைகளாற் றடுத்திடவு மேன்மேலு மிகமுடுகி
உச்சமுற வேதனைநோ யோங்கியெழ வாங்கவர்தா
நச்சரவின் விடந்தலைக்கொண் டெனமயங்கி நவையுற்றார்.

(இ-ள்.) அவ்வாறு விழுந்தபொழுது அந்தச் சமணசமயத்தில் தாம் முன்பு அப்பியசித்துக்கைவந்திருக்கும் மந்திரவித்தைகளினால் தடுக்கவும், தடைபடாமல் மேலும்மேலும் அதிகப்பட்டு மிகுந்ததுன்பத்தைத்தருகின்ற அந்நோயானது மேற்கொண்டெழும்ப, அத்தருமசேனர் பாம்பின் விஷந்தலைக்கேறினாற்போல மயங்கி வருத்தப்பட்டார்.—எ-று. (ருக)

அவர்நிலைமை கண்டதற்பி னமண்கையர் பலரீண்டிக்
கவர்கின்ற விடம்போன்முன் கண்டறியாக் கொடுஞ்சூலை
இவர்தமக்கு வந்ததினி யாதுசெய லென்றழிந்தார்
தவமென்று வினைபெருகிச் சார்பல்லா நெறிசார்வார்.

(இ-ள்.) அத்தருமசேனர் சூலைநோயினால் வருந்துகின்ற நிலைமையைப் பார்த்தபின்பு, தவமென்று தீவினையைவளர்த்து உறுதியில்லாத சமணமார்க்கத்தை அனுசரித்து ஒழுகுகின்றவர்களாகிய கொடியசமணர்கள் பலர் ஒன்றாகக்கூடி, உயிரைவாங்குகின்ற விஷம்போல, நாம் முன்பு ஒருபோதும் பார்த்தறியாத கொடிய இச்சூலைநோயானது இவருக்குவந்தது; இதனை நீக்குவதற்கு இனி என்னசெய்ய வேண்டியதென்று துன்பப்பட்டார்கள்.—எ-று.

அமணர் என்பது அமண் என ஈறு குறைந்தது. (ருஉ)

புண்டலைவன் முருட்டமணர் புலர்ந்துசெய லறியாது
குண்டிகைநீர் மந்திரித்துக் குடிப்பித்துந் தணியாமை
கண்டுமிகப் பீலிகொடு காலளவுந் தடவிடவும்
பண்டையினு நோவுமிகப் பரிபவத்தா லிடருழந்தார்.

(இ-ள்.) மயிரைப்பறித்தலாற் புண்கொண்டிருக்கின்ற தலையினையும், வலிய முருட்டுத் தன்மையையுமுடைய சமணர்கள் மனம் வருந்தி, அந்நோயை நீக்குவதற்குச் செய்யவேண்டிய முறைமை இன்னதென்றறியாமல் தங்கள் கமண்டலத்திலுள்ள நீரை மந்திரித்துக் குடிக்கச்செய்தும் அந்நோய் தணியாமலிருப்பதைப் பார்த்து, மிகுந்த மயிற்பீலியைக்கொண்டு சிரசுமுதல் கால்வரைக்கும் தடவவும், அதனால் அந்நோயானது முன்னிருந்ததைப் பார்க்கிலும் அதிகப்பட, அதனைச் சகிக்க முடியாமையால் துன்பத்தையடைந்தார்.—எ-று. (ருங)

தாவாத புகழ்த்தரும சேனர்க்கு வந்தபிணி
ஓவாது நின்றிடலு மொழியாமை யுணர்ந்தாராய்
ஆவாநா மென்செய்கோ மென்றழிந்த மனத்தினராய்ப்
போவார்க ளிதுநம்மாற் போக்கரிதா மெனப்புகன்று.

(இ-ள்.) கெடாத கீர்த்தியையுடைய தருமசேனர்க்குவந்த சூலைநோயானது அந்தச் சமணர்கள் செய்யும் மந்திரங்களால் ஒழியாமல் நின்று வருத்தவும், அது நீங்காதிருப்பதை யுணர்ந்து, ஐயோ! இதற்கு நாம் என்னசெய்வோமென்று மனங்கலங்கினவர்களாய், இந்நோய் நம்மால் நீக்கமுடியாத தாயிருக்கின்றதென்று சொல்லிக்கொண்டு அவரைக்கைவிட்டுப் போவார்களாயினர்.—எ-று. (ருச)

குண்டர்களுங் கைவிட்டார் கொடுஞ்சூலை கைக்கொண்டு
மண்டிமிக மேன்மேலு முடுகுதலான் மதிமயங்கிப்
பண்டையுற வுணர்ந்தார்க்குத் திலதவதி யாருளராக்
கொண்டவர்பா லூட்டுவான் றனைவிட்டார் குறிப்புணர்த்த.

(இ-ள்.) சமணர்களும் (இந்த நோய்க்குப் பரிகாரமில்லையென்று) கைவிட்டார்கள்; கொடிய சூலைநோயானது வயிற்றைப்பற்றி மேலும்மேலும் அதிகரித்து வருத்துதலால் புத்திமயங்கிப் பழைய உறவைக்கருதிய தருமசேனர்தமக்குத் திலதவதியாரென்னும் தமக்கையார் இருக்கின்றாரென்று நினைத்துத் தம்முடைய சமாசாரத்தைத் தெரிவிக்கும் பொருட்டுச் சமையற்றொழில் செய்கின்ற பாகுகனை அவரிடத்திற்கு அனுப்பினார்.—எ-று. (ருரு)

ஆங்கவன்போய்த் திருவதிகை தனையடைய வருந்தவத்தார்
பூங்கமழ்நந் தனவனத்தின் புறம்பணையக் கண்டிறைஞ்சி

யீங்கியா னுமக்கிளையா ரேவலினல் வந்ததெனத்
தீங்குளவோ வெனவினவ மற்றவனுஞ் செப்புவான்.

(இ-ள்.) தருமசேனரால் அனுப்பப்பட்ட அந்தப்பாகுகன் திருவதிகைக்குப்போய்,அரியதவத்தினையுடைய திலதவதியார் மலர்கள் மணம்வீசுகின்ற ஒரு திருநந்தனவனத்திற்குச் சமீபத்தில் வர, அவரைக்கண்டு வணங்கி, நான் உம்முடைய தம்பியார் கட்டளையினால் இவ்விடத்திற்குவந்தேன் என்றுசொல்ல, திலதவதியார் தம்பியாருக்கு யாதாயினும் தீங்குநேரிட்டதுண்டோவென்று கேட்க, அதற்கு அவன் சொல்லுகின்றான்.—எ-று. (௫௬)

கொல்லாத சூலைநோய் குடர்முடக்கித் தீராமை
யெல்லாருங் கைவிட்டா ரிதுசெயலென் முன்பிறந்த
நல்லாள்பாற் சென்றியம்பி நானுய்யும் படிகேட்டிங்
கல்லாகும் பொழுதணைவா யென்றானென் றறிவித்தான்.

(இ-ள்.) உயிரைவாங்காமல் வருத்துகின்ற சூலைநோயானது குடலைச்சுருட்டியிழுத்து, மருந்து மந்திரங்களினால் தீராமையினால் சமண முனிவர்கள் எல்லாரும் கைவிட்டார்கள் ; இச்செய்தியை என் தமக்கையாராகிய திலதவதியாரிடத்திற்போய்த் தெரிவித்து நான் பிழைக்கும்பொருட்டுச் செய்யவேண்டிய உபாயத்தைக் கேட்டுக்கொண்டு இராப்பொழுதில் இங்குவந்து சேர்வாயென்று என்னையனுப்பினானென்று சொன்னான்.—எ-று. (௫௭)

என்றவன்முன் கூறுதலும் யானங்குன் னுடன்போந்து
நன்றறியா ரமண்பள்ளி நண்ணுகிலே னெனுமாற்றஞ்
சென்றவனுக் குரையென்று திலதவதி யார்மொழிய
அன்றவனு மீண்டுபோய்ப் புகுந்தபடி யவர்க்குரைத்தான்.

(இ-ள்.) இவ்விதமாக அந்தப்பாகுகன்முன்னேநின்று சொல்லவும்,அதைக்கேட்ட திலதவதியார் நான் உன்னோடு அவ்விடத்திற்கு வந்து நன்மார்க்கத்தையறியாத சமணர்களுடைய பள்ளியை அடையமாட்டேனென்னும் வார்த்தையை நீ போய் என் தம்பிக்குச்சொல்லென்று கூற, அவன் அதைக்கேட்டுத் திரும்பிப்போய் நடந்த சங்கதியைத் தருமசேனருக்குச் சொன்னான்.—எ-று. (௫௮)

அவ்வார்த்தை கேட்டலுமே யயர்வெய்தி யிதற்கினியான்
எவ்வாறு செய்வனென வீசரருள் கூடுதலால்
ஒவ்வாவிப் புன்சமயத் தொழியாவித் துயரொழியச்
செவ்வாறு சேர்திலத வதியார்தாள் சேர்வனென.

(இ-ள்.) திலதவதியார் சொல்லியனுப்பிய அந்தவார்த்தையைக் கேட்டவுடனே மனவருத்தமடைந்து, இந்நோய் நீங்குவதற்கு இனி யான் என்ன உபாயம் செய்வேனென்று விசனப்பட்டிருக்கும்பொழுது,சிவபெருமானுடைய திருவருளானது அவர்க்குக் கைகூடியபடியால், தீமைசெய்வதில் தனக்கு ஒன்றும் ஒப்பில்லாத இவ்வற்பமாகிய சமணசமயத்தில் நீங்காத இந்நோயானது ஒழியும்படிக்குச் செம்மையாகிய சைவசமயமார்க்கத்தை அனுஷ்டிக்கின்ற திலதவதியாருடைய திருவடிகளை யான் அடைவேனென்று நினைத்து.—எ-று. (௫௯)

ஏடுத்தமனக் கருத்துய்ய வெழுதலா லெழுமுயற்சி
யடுத்தலுமே யயர்வொதுங்கத் திருவதிகை யணைவதனுக்
குடுத்துழலும் பாயொழிய வுறியுறுகுண் டிகையொழியத்
தொடுத்தபீ லியுமொழியப் போவதற்குத் துணிந்தெழுந்தார்.

(இ-ள்.) தாம் மனதிற்கொண்ட கருத்தானது கடைத்தேறுதற் கேதுவாகத் தோன்றினமையால், அவ்விடத்தினின்றும் புறப்படுவதற்கு முயற்சியுண்டாகவும், அதனல் தமக்குண்டாயிருந்த துன்பம் ஒருவாறு நீங்க, அவ்விடத்தினின்றும் திருவதிகை வீரட்டானத்தை யடையும்பொருட்டு இடையில் உடுத்துக்கொண்டிருந்தபாயையும்,உறியில்உற்ற கமண்டலத்தையும்,சேர்த்துக்கட்டியிருக்கின்ற மயிற்பீலியையும் நீக்கிவிட்டுப் போகும்படி துணிவுகொண்டு எழுந்தார்.—எ-று. ()

பொய்தருமா லுள்ளத்துப் புன்சமண ரிடங்கழிந்து
மெய்தருவா னெறியடைவார் வெண்புடைவை மெய்சூழ்ந்து
கைதருவார் தமையூன்றிக் காணுமே யிரவின்கட்
செய்தவமா தவர்வாழுந் திருவதிகை சென்றடைவார்.

(இ-ள்.) பொய்யை விளைவிக்கின்ற மயக்கம்பொருந்திய மனத்தினையுடைய புல்லிய சமணர்களிடத்தினின்றும் நீங்கி, மெய்யாகிய உயர்ந்த சைவசமயநெறியை அடைய விரும்பினவராய்,தமதுஉடம்பை வெண்மையாகிய வஸ்திரத்தினுல் மூடிக்கொண்டு, தமக்குப் பற்றுக்கோடாகக் கைகொடுத்துவருகின்ற ஏவலாளர்களைப் பிடித்துக்கொண்டு அன்றிரவில் ஒருவருக்குங்காணுமல், தவஞ்செய்யும் பெரியமுனிவர்கள் வாழ்கின்ற திருவதிகை வீரட்டானத்தைநோக்கிச் செல்கின்றவராயினர்.—எ-று. (௬௧)

சுலவிவயிற் றகங்கனலுஞ் சூலைநோ யுடன்றொடரக்
குலவியெழும் பெருவிருப்புக் கொண்டணையக் குலவரைபோ
னிலகுமணி மதிற்சோதி யெதிர்கொடிரு வதிகையினிற்
றிலதவதி யாரிருந்த திருமடத்தைச் சென்றணைந்தார்.

(இ-ள்.) வயிற்றினுள்ளே குடலைச்சுற்றி நெருப்பைப்போல் எரிகின்ற சூலைநோயானது ஒழியாமல் தொடர்ந்துவரவும், உள்ளத்தில் அதிகரித்தெழுந்த மிகுந்த விருப்பமானது தம்மைக்கொண்டு செலுத்தவும், உயர்ந்த மலைகளையொத்து விளங்குகின்ற மணிகளிழைத்த மதில்களின் பிரகாசமானது எதிரெதிராக வீசுகின்ற திருவதிகை வீரட்டானத்தில் திலதவதியார் எழுந்தருளியிருக்கும் திருமடத்தை யடைந்தார்.—எ-று. (௬௨)

வந்தணைந்து திலதவதி யாரடிமே லுறவணங்கி
நந்தமது குலஞ்செய்த நற்றவத்தின் பயனனையீர்
இந்தவுடற் கொடுஞ்சூலைக் கிடைந்தடைந்தே னினிமயங்கா
துய்ந்துகரை யேறுநெறி யுரைத்தருளு மெனவுரைத்து.

(இ-ள்.) திருமடத்தில்வந்து சேர்ந்து திலதவதியாருடைய திருவடிகளில் சாஷ்டாங்கமாக வணங்கி,நமதுகுலத்தார்செய்த நல்லதவப்பயனெல்லாம்திரண்டு ஒருவடிவங்கொண்டதுபோலும் அம்மே! இந்தஉடலைப்பற்றி வருத்துகின்ற கொடியசூலைநோயைச் சகிக்கமாட்டாமல் உம்மையே கதியென்று அடைந்தேன்; இனி

நான் வருத்தப்படாமல் பிழைத்துக் கரையேறும்வழியைக் கட்டளையிட்டருளு மென்று விண்ணப்பஞ்செய்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டலுங் குளகம். (சுஙு)

தாளிணைமேல் விழுந்தயருந் தம்பியார் தமைநோக்கி
யாளுடைய தம்பெருமா னருணினைந்து கைதொழுது
கோளில்பர சமயநெறிக் குழியில்விழுந் தறியாது
மூளுமருந் துயருழந்தீ ரெழுந்திரீ ரெனமொழிந்தார்.

(இ-ள்.) திலகவதியார் தமது இரண்டுதிருவடிகளில் விழுந்து வருந்துகின்ற தம்பியாராகிய மருணீக்கியாரைப் பார்த்துத் தம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது திருவருளை நினைந்து கைகூப்பித்தொழுது, உறுதியில்லாத புறச்சமயப் படுகுழியில் அறியாமல்விழுந்து கொடுந்துன்பத்தை அனுபவிக்கின்றதம்பியாரே! எழுந்திருமென்று கட்டளையிட்டார்.—எ-று.

எழுந்திரீர் என்றது, எம்மை வணங்குதலினின்றும் எழுந்திருப்பீர்என்றும், சமணசமயப் படுகுழியினின்றும் கரையேறுவீர் என்றும், இரண்டுபொருள் போந்தவாறு காண்க. (சுச)

மற்றவுரை கேட்டலுமே மருணீக்கி யார்தாமும்
உற்றபிணி யுடனடுங்கி யெழுந்துதொழ வுயர்தவத்தோர்
கற்றைவே ணியரருளே காணுமிது கழலடைந்தோர்
பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீ ரெனப்பணித்தார்.

(இ-ள்.) அவர்சொன்ன வார்த்தையைக் கேட்டவுடனே மருணீக்கியாரும் தம்மை வருத்துகின்ற சூலைநோயுடனே நடுக்கமுற் றெழுந்திருந்து வணங்க, உயர்ந்த தவத்தினையுடைய திலகவதியார் (அவரைப்பார்த்துத் தம்பியாரே!) உமக்கு இச்சூலைநோய் வந்தது கூட்டமாகிய சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருளேயாகும்; ஆதலால், தம்முடைய திருவடியையடைந்த மெய்யன்பர்களின் பாசபந்தங்களைநீக்கி யருள்கின்ற அப்பெருமானையே வணங்கித் திருத்தொண்டுசெய்யுமென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (சுரு)

என்றபொழு தவரருளை யெதிரேற்றுக் கொண்டிறைஞ்ச
நின்றதபோ தனியாரு நின்மலன்பே ரருணினைந்து
சென்றுதிரு வீரட்டம் புகுவதற்குத் திருக்கயிலைக்
குன்றுடையார் திருநீற்றை யஞ்செழுத்தோ திக்கொடுத்தார்.

(இ-ள்.) திலகவதியார் இவ்வாறுசொன்னபொழுது அவருடைய உபதேசமொழியை மருணீக்கியார் அங்கீகரித்துக்கொண்டு பின்னும்வணங்க, அப்பொழுது அவ்வம்மையாரும் சிவபெருமானுடைய பெருங்கருணையைச் சிந்தித்து, அவருடன் தாமும்போய்த் திருவதிகை வீரட்டானத்தை யடையும்பொருட்டுத் திருக்கயிலைமலையையுடையசிவபெருமானது திருவெண்ணீற்றை ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யுச்சரித்துக் கொடுத்தருளினார்.—எ-று. (சுசு)

திருவாளன் றிருநீறு திலகவதி யாரளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்

குருவார வணிந்துதமக் குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் ருய்வந்தார்.

(இ-ள்.) சிறந்த திருவருட்செல்வத்தையுடைய சிவபெருமானது திருவெண்ணீற்றைத் திலதவதியார் கொடுக்க, மருணீக்கியார் தமக்குப் பெரிய சம்பத்து வந்ததாக எண்ணி, வணங்கி வாங்கித் திருமேனியில் அணிந்துகொண்டு, தமக்கு ஆபத்துநேரிட்டபோது அவ்வாபத்தினின்றும் நீக்கிப் பிழைக்கும்வழியைக் கொடுக்கும்பொருட்டுத் தமக்குமுன்பிறந்திருக்கின்ற திலதவதியாருக்குப்பின்னே தாம் வந்தார்.—எ-று. (சுஎ)

நீறணிந்தா ரகத்திருளு நிறைகங்குற் புறத்திருளு
மாறவருந் திருப்பள்ளி யெழுச்சியினின் மாதவஞ்செய்
சீறடியார் திருவலகுந் திருமெழுக்குத் தோண்டியுங்கொண்
டாறணிந்தார் கோயிலினுள் ளடைந்தவரைக் கொடுபுக்கார்.

(இ-ள்.) திருநீற்றை யணிந்த மருணீக்கியாரது அகத்திலுள்ள அஞ்ஞானமாகிய இருளும், நிறைந்த இரவாகிய புறத்திலுள்ள இருளும் நீங்கும்படியாக வருகின்ற திருப்பள்ளியெழுச்சிக்காலத்தில் பெருமைபொருந்திய தவத்தைச்செய்கின்ற திலதவதியார் திருவலகையும், திருமெழுக்குத்தோண்டியையும் எடுத்துக்கொண்டு, கங்கை நதியைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலினுள் அம்மருணீக்கியாரை அழைத்துக்கொண்டு போயினர்.—எ-று.

சிவபெருமானுடைய திருவருளுதயத்தால், மருணீக்கியாருடைய அகவிருணீங்குங் காலமும், சூரியோதயத்தினால் புறவிருணீங்குங் காலமும் அத்திருப்பள்ளியெழுச்சிக் காலமாதலின் 'நீறணிந்தாரகத்திருளும் நிறைகங்குற்புறத்திருளும்-மாறவருந்திருப்பள்ளி யெழுச்சி, என்று கூறினர். (சுஅ)

திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக
வரைச்சிலையார் பெருங்கோயி றொழுதுவலங் கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரான் றிருவருளால்
உரைத்தமிழ்மா லைகள்சாத்து முணர்வுபெற வுணர்ந்துரைப்பார்.

(இ-ள்.) அலைகளையுடைய கெடிலநதியின் வடகரையிலுள்ள திருவீரட்டானத்திலிருக்கின்ற மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பெரிய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து சிரசின்மேல் கைகூப்பி வணங்கிப் பின்பு பூமியில் சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து, அப்பெருமானுடைய திருவருளினாலே தமிழ்ச்செய்யுளாகிய பாமாலைகளைப்பாடுஞ் சத்தியுண்டாகத்திருவருளைச் சிந்தித்துப் பாடத்தொடங்கினர்.—எ-று. (சுகூ)

வேறு.

நீற்றானிறை வாகிய மேனியுட னிறையன்புறு சிந்தையி னேசமிக
மாற்றார்புர மாற்றிய வேதியரை மருவும்பிணி மாயை யறுத்திடுவான்
கூற்றாயின வாறு விலக்ககிலீ ரெனநீடிய கோதி றிருப்பதிகப்
போற்றாலுல கேழின் வருந்துயரும் போமாறெதிர் நின்று புகன்றனரால்.

(இ-ள்.) திருவெண்ணீற்றினால் நிறைவுபெற்ற திருமேனியுடன் குறையாத அன்புபொருந்திய உள்ளத்தில் அவ்வன்பானது அதிகரிக்க, பகைவர்களின்

முப்புரத்தை எரித்தருளிய வீரட்டானேசுவரரைக்குறித்து மயக்கத்தை விளைவிக்கின்ற சூலைநோயையும்,பிறவிக்கேதுவாகிய மாயையின்வலியையும் அறுக்கும்பொருட்டுக் "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்பதை முதலிலுள்ள குற்றமற்ற திருப்பதிகத்தின் துதியினால்,தமக்குண்டாகிய துன்பமேயன்றி ஏழுலகத்திலுள்ளவர்களுக்கும் வருந்துன்பமும் நீங்கும்படி சிவபெருமானுடைய சந்நிதியின் முன்னே நின்று பாடியருளினார்.—எ-று. (௭௰)

---

## திருவதிகை வீரட்டானம்.

பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கூற்றாயினவாறுவிலக்ககிலீர்
கொடுமைபலசெய்தனநானறியே
னேற்றாயடிக்கேயிரவும்பகலும்
பிரியாதுவணங்குவனெப்பொழுதுந்
தோற்றாதென்வயிற்றினகம்படியே
குடரோடுதொடக்கிமுடக்கியிட
வாற்றேனடியேனதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (௧)

நெஞ்சம்முமக்கேயிடமாகவைத்தே
னினையாதொருபோதுமிருந்தறியேன்
வஞ்சம்மிதுவொப்பதுகண்டறியேன்
வயிற்றோடுதொடக்கிமுடக்கியிட
நஞ்சாகிவந்தென்னைநலிவதனை
நணுகாமற்றுரந்துகரந்துமிடா
ரஞ்சேலுமென்னீரதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (௨)

பணிந்தாரனபாவங்கள்பாற்றவல்லீர்
படுவெண்டலையிற்பலிகொண்டுழல்வீர்
துணிந்தேயுமக்காட்செய்துவாழலுற்றாற்
சுடுகின்றதுசூலைதவிர்த்தருளீர்
பிணிந்தார்பொடிக்கொண்டுமெய்பூசவல்லீர்
பெற்றமேற்றுகந்தீர்சுற்றும்வெண்டலைகொண்
டணிந்தீரடிகேளதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (௩)

முன்னம்மடியேனறியாமையினான்
முனிந்தென்னைநலிந்துமுடக்கியிடப்
பின்னையடியேனுமக்காளும்பட்டேன்
சுடுகின்றதுசூலைதவிர்த்தருளீர்

தன்னையடைந்தார்வினை தீர்ப்பதன்றோ
தலையாயவர் தங்கடுவது தா
னன்னநடையாரதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (௪)

காத்தாள்பவர்காவலிகழ்ந்தமையாற்
கரைநின்றவர் கண்டுகொளென்றுசொலி
நீத்தாயகயம்புகநூக்கியிட
நிலைக்கொள்ளும்வழித்துறையொன்றறியேன்
வார்த்தையிதுவொப்பதுகேட்டறியேன்
வயிற்றோடுதொடக்கிமுடக்கியிட
வார்த்தார்புனலாரதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (௫)

சலம்பூவொடுதூபமறந்தறியேன்
றமிழோடிசைபாடன்மறந்தறியே
னலந்தீங்கிலுமுன்னைமறந்தறியே
னுன்னாமமென்னாவின்மறந்தறியே
னுலந்தார்தலையிற்பலிகொண்டுழல்வா
யுடலுள்ளுறுசூலைதவிர்த்தருளா
யலந்தேனடியேனதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (௬)

உயர்ந்தேன்மனைவாழ்க்கையுமொண்பொருளு
மொருவர்தலைகாவலிலாமையினால்
வயந்தேயுமக்காட்செய்துவாழலுற்றால்
வலிக்கின்றதுசூலைதவிர்த்தருளீர்
பயந்தேயென்வயிற்றினகம்படியே
பறித்துப்புரட்டியறுத்தீர்த்திடநா
னயர்ந்தேனடியேனதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (௭)

வலித்தேன்மனைவாழ்க்கைமகிழ்ந்தடியேன்
வஞ்சம்மனமொன்றுமிலாமையினாற்
சலித்தாலொருவர்துணையாருமிலைச்
சங்கவெண்குழைக்காதுடையெம்பெருமான்
கலித்தேயென்வயிற்றினகம்படியே
கலக்கிமலக்கிட்டுக்கவர்ந்துதின்ன
அலுத்தேனடியேனதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (௮)

பொன்போலமிளிர்வதொர்மேனியினீர்
புரிபுன்சடையீர்மெலியும்பிறையீர்
துன்பேகவலைபிணியென்றிவற்றை
நணுகாமற்றுரந்துகரந்துமிடீ
ரென்போலிகளும்மையினித்தெளியா
ரடியார்படுவதிதுவேயாகி
லன்பேயமையுமதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (கூ)

போர்த்தாயங்கொரானையினீருரிதோல்
புறங்காடரங்காநடமாடவல்லா
யார்த்தாரரக்கன்றனைமால்வரைக்கீ
ழடர்த்திட்டருள்செய்தவதுகருதாய்
வேர்த்தும்புரண்டும்விழுந்துமெழுந்தா
லென்வேதனையானவிலக்கியிடா
யார்த்தார்புனல்சூழதிகைக்கெடில
வீரட்டானத்துறையம்மானே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

இந்தத்தலம் நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - **வீரட்டானேசுவரர்** - தேவியார் - **திருவதிகைநாயகி.**



மன்னும்பதி கம்மது பாடியபின் வயிறுற்றடு சூலை மறப்பிணிதான், அங்கின்ற நிலைக்க ணகன்றிடலு மடியேனுயி ரோடரு டந்ததெனுச்,செங்நின்ற பரம்பொரு ளானவர்தந் திருவாரருள் பெற்ற சிறப்புடையோர்,முன்னின்ற தெருட்சி மருட்சியினுன் முதல்வன்கரு ணைக்கடன் மூழ்கினரே.

(இ-ள்.) நிலைபெற்ற அத்திருப்பதிகத்தைப் பாடியபின்பு வயிற்றினிடமாகப்பொருந்திவருத்துகின்ற கொடிய சூலைநோயானது அப்பொழுதே தம்மைவிட்டு நீங்கவும், நேராக வெளிப்பட்டுநின்ற பரம்பொருளாகிய சிவபெருமானது சிறந்த திருவருளைப்பெற்ற பெருமையினையுடைய மருணீக்கியார், அந்நோய்நீக்கமானது அடியேனுடைய உயிரையும் திருவருளையுங் கொடுத்ததென்று தம்மிடத்துண்டாகிய தெளிவின் மயக்கத்தினுல் முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானது கிருபையாகிய கடலில் மூழ்கினர்.—எ-று.

தெருட்சிமருட்சியாவது, ஆனந்தத்தாற் பரவசப்பட்டிருத்தல். (எக)

அங்கங்க ளடங்க வுரோமமெலா மடையப்புள கங்கண் முகிழ்த்த லரப், பொங்கும்புனல் கண்கள் பொழிந்திழியப் புவிமீது விழுந்து புரண டயர்வார், இங்கென்செய லுற்ற பிழைப்பதனு லேறுத பெருந்திட ரேறி டநின், றங்குங்கரு ணைப்பெரு வெள்ளமிடத் தகுமோவென வின்னன தாமொழிவார்.

(இ-ள்.) அவயவங்கள் முழுவதுமுள்ள உரோமங்களெல்லாம் ஒருங்கே புளகாங்கிதங்கொண்டு விளங்கித்தோன்றவும், பொங்குகின்ற ஆனந்தபாஷ்பமானது கண்களினின்றும் ஒழுகவும், பூமியில்விழுந்துபுரண்டு ஆனந்தபரவசராயிருக்கின்ற அம்மருணீக்கியார் இங்கு அடியேன்செய்த குற்றங் காரணமாக ஏறக்கூடாத பெரியமேட்டில் ஏறும்படிக்குத் தேவரீருடைய நிலைபெற்ற கிருபையாகிய வெள்ளத்தைப் பெருக்கத்தகுமோவென்று இப்படிப்பட்ட பல தாழ்ந்தமொழிகளைக் கூறத் தொடங்கினர்.—எ-று. (எஉ)

பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறையில்சம ணீசர் புறத்துறையாம், அவ்வாழ்குழி யின்கண் விழுந்தெழுமா றறியாது மயங்கி யவம்புரிவேன், மைவாச நறுங்குழன் மாமலையாண் மணவாளன் மலர்க்கழல் வந்தடையும், இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக் கெதிர்செய்கு றை யென்கொ லெனத்தொழுதார்.

(இ-ள்.) பொய்யை மெய்யாகப்புனைந்து கூறுகின்ற புன்சமயத்தையுடைய பொறுமையில்லாத சமணர்களாகிய நீசர்கள் அனுஷ்டிக்கும் புறச்சமயமாகிய படுகுழியில்விழுந்து, அதினின்றும் கரையேறும்வழியையறியாமல், மயங்கிப் பாவத்தைச்செய்கின்ற அடியேன், மயிர்ச்சாந்தணிந்து மணம் வீசுகின்ற நல்ல கூந்தலையுடைய உமாதேவியாருக்கு மணவாளராகியசிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளைவந்து அடையும்படியான இந்தப்பெருவாழ்வைப்பெறும்படிச் செய்த சூலைநோய்க்கு என்னகைம்மாறு செய்வேனென்று அச்சூலைநோயைச்சுட்டி வணங்கினர்.—எ-று.

எதிர்செய்குறை=பிரதியுபகாரம். சூலைநோய் சிவபெருமானுடைய மலர்க்கழல்வந் தடைதலாகிய பெருவாழ்வை யடைதற்குக் காரணமாயிருத்தலின் அதனைத் தொழுதனரென்க. (எஙு)

மேவுற்றவிவ் வேலையி னீடியசீர் வீரட்ட மமர்ந்த பிரானருளப், பாவுற்றலர் செந்தமி ழின்சொல்வளம் பதிகத்தொடை பாடிய பான்மையினல், நாவுக்கர சென்றுல கேழினுநின் னுமங்க ணயப்புற நண்ணுகவென், றியாவர்க்கும் வியப்புற மஞ்சுறைவா னிடையேயொரு வாய்மை யெழுந்ததுவே.

(இ-ள்.) இவ்வாறு தோத்திரஞ்செய்த வேளையில் சிறந்தபுகழினையுடைய திருவீரட்டத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவருளினல், செய்யுளுக்கிசைந்து விளங்கிய செந்தமிழ்ச்சொல்லமைந்த திருப்பதிகமாகிய பாமாலையைப் பாடியருளிய முறைமையினல், "திருநாவுக்கரசு" என்று ஏழுலகத்திலும் உன்னுடையபெயர் சிறந்து விளங்கக்கடவதென்று அங்குள்ள யாவர்க்கும் ஓர்

வியப்புண்டாகும்படி மேகங்கள் சஞ்சரிக்கும்ஆகாயத்தில் ஒரு அசரீரிவாக்கியம் தோன்றியது.—எ-று. (எச)

இத்தன்மை நிகழ்ந்துழி நாவின்மொழிக் கிறையாகிய வன்பரு மிந் நெடுநாட், சித்தந்திகழ் தீவினை யேனடையுந் திருவேரவிது வென்று தெருண்டறியா, அத்தன்மைய னாய விராவணனுக் கருளுங்கருணைத்திற மானவதன், மெய்த்தன்மை யறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு வணங்கினர் மெய்யுறவே.

(இ-ள்.) இவ்வாறு அசரீரிவாக்கானது தோன்றியபொழுது, திருநாவுக்கரசுசுவாமிகளும், இவ்வளவு நெடுங்காலமாகத் தீவினை குடிகொண்டிருக்கின்ற மனத்தினையுடைய அடியேன் அடையத்தக்கபாக்கியம் இதுவோவென்றுமகிழ்ந்து, சிவபெருமானுடைய பெருமையை உள்ளவாறு தெளிந்தறியாத அஞ்ஞானத்தையுடைய இராவணனுக்கும் அனுக்கிரகஞ்செய்த காருண்ணியத்தின் கூறுபாடாகிய திருவருளினுண்மையை யறிந்து தமதுதிருப்பதிகத்தில் துதிக்கின்றதையே நியமமாகக்கொண்டு பூமியில் உடலம் பொருந்த விழுந்துவணங்கினர்.—எ-று.

தம்மைச் சிறிதும் மதியாமல் திருக்கயிலையை யெடுத்த இராவணனுக்கும் அவன் வருந்தித்துதிக்கப் பேரருள்புரிந்தனரென்பார் 'அத்தன்மையனாய விராவணனுக் - கருளுங்கருணைத் திறம்' என்றும், அவ்விராவணனைத் தமது திருப்பதிகத்தின் பத்தாவது பாசுரத்தில் வைத்துப் பாடுதலே அவரது கொள்கையாமென்பார் 'மெய்த்தன்மை யறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு' என்றுங் கூறினர். ()

பரசுங்கருணைப்பெரி யோனருளப் பறிபுன்றலை யோர்நெறி பாழ்படவந், தரசிங்கருள் பெற்றுல குய்ந்ததென வடியார்புடை சூழுதி கைப்பதிதான், முரசம்படகந்துடி தண்ணுமையாழ் முழவங்கினை துந்துபி கண்டையுட, னிரைசங்கொலி யெங்கு முழங்குதலா னெடுமாகடலென்ன நிறைந்துளதே.

(இ-ள்.) யாவராலும் துதிக்கப்பட்ட கருணையையுடைய சிவபெருமான் அனுக்கிரகஞ்செய்ய, மயிரைப்பறித்த புல்லியதலையையுடைய சமணர்களின்சமயமானது அழிந்துபோகும்படி திருநாவுக்கரசுசுவாமிகள் சைவசமயத்திற் பிரவேசித்துத் திருவருளைப்பெற்றதனால் உலகம்பிழைத்ததென்று சொல்லி அடியார்கள் சூழ்ந்திருக்கின்ற திருவதிகையென்னும் ஸ்தலமானது முரசம், படகம், உடுக்கை, தண்ணுமை, வீணை, மத்தளம், புள்ளாங்குழல், துந்துபி, கண்டாமணி இவைகளோடு வரிசையாகிய சங்கங்களின் ஒலியும் எவ்விடத்திலும் முழங்குதலால், நீண்ட பெரியசமுத்திரம்போல ஒலியால் நிறைந்திருந்தது.—எ-று. (எசு)

மையற்றுறை யேறி மகிழ்ந்தலர்சீர் வாகீசர் மனத்தொடு வாய்மையுடன், மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவுஞ்சிவ சின்னம் விளங்கிடவே, யெய்துற்ற தியான மறாவுணர்வு மீறின்றி யெழுந்திரு வாசகமுங், கையிற்றிக ழும்முழ வாரமுடன் கைத்தொண்டு கலந்து கசிந்தனரே.

(இ-ள்.) மயக்கமாகிய சமணசமயமென்னும் படுகுழியினின்றும் கரையேறி அதனால் மகிழ்வடைந்திருக்கின்ற சிறந்த திருநாவுக்கரசுசுவாமிகள் மனம் -

வாக்கு காயம் என்னும் திரிகரணங்களாலும் பொருந்திய திருத்தொண்டு செய்யுங் கருத்தினையுடையவராய்த் திருமேனியில் விபூதி, ருத்திராக்ஷமுதலிய சிவசின்னங்கள் சேர்ந்து பிரகாசிக்க,எப்போதும் திருவடித்தியானம் மறவாத உணர்ச்சியும், அவ்வுணர்ச்சியோடு வரம்பின்றி உண்டாகின்ற துதிரூபமாகிய வாசகமும், திருக்கரத்தில் விளங்குகின்ற உழவாரப்படையோடு கைத்தொண்டும் ஒருங்கே நடந்துகொண்டிருக்க மனமுருகினார் —எ-று.

இத் திருவிருத்தத்தில், நம் பரமாசாரியமூர்த்திகளாகிய திருநாவுக்கரசுசுவாமிகள் மானசம், வாசிகம், காயிகம் என்னும் மூவகைத்தொண்டும்புரிந்தனரென்பது விளங்குகின்றது. இவற்றுள், மானசம் - தியானமறா வுணர்வும், வாசிகம் - ஈறின்றி யெழுந் திருவாசகமும், காயிகம் - உழவாரமுடன் கைத்தொண்டும் எனவுணர்க. (எஎ)

மெய்ம்மைப்பணி செய்த விருப்பதனால் விண்ணோர்தனி நாயகனார் கழலிற், றம்மிச்சை நிரம்ப வரம்பெறுமத் தன்மைப்பதி மேவிய தாபதியார், பொய்ம்மைச்சம யப்பிணி விட்டவர்முன் போதும்பிணி விட்டருளிப்பொருளா, எம்மைப்பணி கொள்கரு ணைத்திறமிங் கியார்பெற்றன ரென்ன விறைஞ்சினரே.

(இ-ள்.) உண்மையான திருத்தொண்டுசெய்கின்ற விருப்பத்தால்,தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானுடையதிருவடிகளினிடமாகத் தங்கருத்து நிரம்பும்படி அனுக்கிரகம்பெற்றுக்கொண்ட அந்தத் திருவதிகையென்னுந் தலத்தில் வாசஞ்செய்கின்ற திலகவதியார் உடன் பிறந்தவர் பொய்ச்சமயமாகிய பிணியைவிட்டு முன் தம்மிடத்திற்குவரும்படி சூலைநோயைப் போகவிட்டு எங்களை ஒருபொருளாக ஆட்கொண்டருளுங் கருணைத்திறத்தை இவ்வுலகத்தில் யார்பெற்றார்களென்று (அப்பெருமானுடைய திருவருளைச்சிந்தித்து) வணங்கினார்.—எ-று.

வேறு.

இன்ன தன்மையி லிவர்சிவ நெறியினை யெய்தி
மன்னு பேரருள் பெற்றிடர் நீங்கிய வண்ணம்
பன்னு தொன்மையிற் பாடலி புத்திர நகரிற்
புன்மை யேபுரி யமணர்தாங் கேட்டது பொறாராய்.

(இ-ள்.) இப்படிப்பட்ட தன்மையாகத் திருநாவுக்கரசுசுவாமிகள் சைவசமயத்தை யடைந்து, சிவபெருமானுடைய நிலைபெற்ற திருவருளைப் பெற்றுத் தமக்குண்டாயிருந்த துன்பத்தினின்றும் நீங்கிய சமாசாரத்தைப் பழமையாகிய பாடலிபுத்திர மென்னும் நகரத்தில் அற்பமாகிய தொழிலைச்செய்கின்ற சமணர்கள் கேள்விப்பட்டு அதனைச் சகிக்காதவர்களாய்.—எ - று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எகூ)

தரும சேனர்க்கு வந்தவத் தடுப்பருஞ் சூலை
யொருவ ராலுமிங் கொழிந்திடா மையிலவ ருயப்போய்ப்
பெருகு சைவராய்ப் பெயர்ந்துதம் பிணியொழிந் துய்ந்தார்
மருவு நம்பெருஞ் சமயம்வீழ்ந் ததுவென மருள்வார்.

(இ-ள்.) நமதுசமயத்திலிருந்த தருமசேனர்க்குவந்த எவ்வகையாலும் தடுப்பதற்கரிய சூலைநோயானது இவ்விடத்திலுள்ள ஒருவராலும் நீங்காதபடியால், அவர் பிழைக்கும்பொருட்டுச் சென்று, முன்போலச் சிறந்த சைவராகித் தம்முடைய பிணி நீங்கிப் பிழைத்தார்; ஆகையால், நிலையாகிய நமது பெரிய சமயமானது அழிந்துபோயிற்றென்று மயங்கினார்கள்.—எ-று.

வீழ்ந்தது எனத் துணிவுபற்றி எதிர்காலத்தை இறந்தகாலமாகக் கூறினார்.

மலையும் பல்சம யங்களும் வென்றுமற் றவரால்
நிலையும் பெற்றவிந் நெறியினி யழிந்ததென் றழுங்கிக்
கொலையும் பொய்மையு மிலமென்று கொடுந்தொழில் புரிவோர்
தலையும் பீலியுந் தாழவந் தொருசிறை சார்ந்தார்.

(இ-ள்.) ஒன்றோடொன்று மாறுபட்டிருக்கும் பல சமயங்களையும் வாதித்து வென்று, அச்சமயிகளால் அழியாமையையும் பெற்றிருக்கின்ற இந்தச் சமயமானது இனி அழிந்துபோயிற்றென்று விசனப்பட்டு, கொலை செய்தலும் பொய் சொல்லுதலும் செய்யமாட்டோமென்று கொடிய தொழிலையே செய்கின்ற சமணர்கள் தலையும், பீலியும் தாழும்படி ஓரிடத்தில் வந்து கூடினார்கள்.—எ-று.

'அவரால் நிலையும்பெற்றவிந்நெறி' என்பதற்கு அத்தருமசேனரால் ஸ்தாபிக்கப்பட்ட இச்சமயம், என்று பொருளுரைப்பினும் பொருந்தும். தங்கள் மதம் தாழ்வடைந்ததென்னும் நாணத்தினால் தலையும், அவ்விசனத்தால் கையிலுள்ள மயிற்பீலியும் தாழும்படி வந்தன ரென்க. (அக)

இவ்வ கைப்பல வமணர்க ளெருட னீண்டி
மெய்வ கைத்திற மறிந்திடில் வேந்தனும் வெகுண்டு
சைவ னாகிநம் விருத்தியுந் தவிர்க்குமற் றினிநாஞ்
செய்வ தென்னென வஞ்சனை தெரிந்துசித் திரிப்பார்.

(இ-ள்.) இவ்வாறாகப் பல சமணர்கள் விசனத்தோடு ஒன்றாகச்சேர்ந்து, இதன் உண்மையை அரசன் அறிந்தால் நம்மேற் கோபங்கொண்டு தானும் சைவனாகி நம்முடைய விருத்தியையும் நிறுத்துவான்; ஆதலால் இனி இதற்கு நாம் என்னசெய்யவேண்டியதென்று ஆலோசித்து,வஞ்சனையாகிய ஒரு உபாயத்தைத் தெரிந்து அதனைச்செய்ய முயன்றார்கள்.—எ-று.

மெய்வகைத்திறமாவது:—தருமசேனருக்குவந்த சூலைநோய் நம் சமயத்திலுள்ள மணிமந்திர அவுஷதங்களால் நீங்காமல் சைவசமயப்பிரவேசத்தால் நீங்கிவிட்டதென்னும் உண்மைத்தன்மை. விருத்தியாவது:—மானியமாகவிட்டிருக்கும் நிலங்கள் முதலியனவாம். சித்திரித்தல்=பொய்யை மெய்போலக் கற்பித்தல்.

தவ்வை சைவத்து நிற்றலிற் றருமசே னருந்தாம்
பொய்வ குத்ததோர் சூலைதீர்ந் திலதெனப் போயிங்
கெவ்வ மாகவந் தெய்திநஞ் சமயலங் கனமுந்
தெய்வ நிந்தையுஞ் செய்தன ரெனச்சொலத் தெளிந்தார்.

(இ-ள்.) தம்முடைய தமக்கையாராகிய திலதவதியார் சைவசமயத்தில் நிற்கின்றபடியால், தருமசேனரும் நம்முடைய மதத்திற்குக் கபடமாகவந்திருந்து

(எல்லாவிஷயங்களையுங் கற்றுக்கொண்டு) பின்பு தாம் பொய்யாகவகுத்த ஒரு சூலைநோயானது எம்மிடத்துள்ள மந்திரங்களால் தீரவில்லையென்று நம்முடைய சமயலங்கனத்தையும், தெய்வநிந்தையையும் செய்தனரென்று அரசனுடன் சொல்லத் துணிந்தார்கள்.—எ-று.

லங்கனம்=தாண்டுதல், அதாவது சமணசமயத்தைவிட்டு சைவசமயத்திற் பிரவேசித்தல்; அவ்வாறு சமயலங்கனஞ்செய்ததோடு ஒழியாமல், தெய்வநிந்தனையும் தம்பாசுரங்களாற் செய்தனரென்பார் 'தெய்வநிந்தையும் செய்தனர்' என்று கூறினர். (௮௩)

சொன்ன வண்ணமே செய்வது துணிந்ததுன் மதியோர்
முன்ன நாஞ்சென்று முறைப்படு வோமென முயன்றே
யின்ன தன்மையி லிருட்குழாஞ் செல்வது போல
மன்ன னாகிய பல்லவ னகரில்வந் தணைந்தார்.

(இ-ள்,) சொல்லியபிரகாரமே செய்யும்படி நிச்சயித்த அற்பபுத்தியையுடைய சமணர்கள், அரசன் இதைக் கேள்விப்படுமுன்னமே நாம் அவனிடத்திற் போய் முறையிடுவோமென்று எண்ணங்கொண்டு இருட்கூட்டமானது நடந்து செல்வதுபோலச் சோழவமிசத்தரசனாகிய பல்லவராசனுடைய நகரத்தில்வந்து சேர்ந்தார்கள்.—எ-று.

பல்லவன்=நடுநாட்டையாண்ட சோழவமிசத்தரசன். (௮௪)

உடையொ ழிந்தொரு பேச்சிடை யின்றிநின் றுண்போர்
கடைய ணைந்தவன் வாயில்கா வலருக்கு நாங்கள்
அடைய வந்தமை யரசனுக் கறிவியு மென்ன
இடைய றிந்துபுக் கவருந்த மிறைவனுக் கிசைத்தார்.

(இ-ள்.) வஸ்திரம் உடாமலும் போசனவேளையில் ஒருபேச்சும் இடையில் பேசாமலும்நின்றுகொண்டு உண்கின்ற சமணர்கள் அப்பல்லவராசனுடையஅரண்மனைவாசலில் வந்து வாயில்காப்பவருக்கு நாங்களெல்லாம் ஒரு சேரவந்த சங்கதியை எம்மரசனுக்குத் தெரிவியுங்களென்று சொல்ல, அவர்களும் சமயம் அறிந்து கொண்டுபோய்த் தங்களுடைய அரசனுக்குத் தெரிவித்தார்கள்.—எ-று. (௮௫)

வேறு.

அடிகண்மா ரெல்லாரு மாகுலமாய் மிகவழிந்து
கொடிநுடங்கு திருவாயிற் புறத்தணைந்தா ரெனக்கூற
வடிநெடுவேன் மன்னவனு மற்றவர்சார் பாதலினாற்
கடிதணைவா னவர்க்குற்ற தென்கொலெனக் கவன்றுரைத்தான்.

(இ-ள்.) நம்முடைய ஆசாரியர்க ளெல்லாரும் வியாகுலத்தால் மிகவும் மனம் வருந்திக் கொடியாடைகள் அசைகின்ற அரண்மனை வாசலின் புறத்தே வந்திருக்கிறார்களென்று சொல்ல, கூர்மைபொருந்திய நீண்ட வேலைப்பிடித்த பல்லவராசனும் அச்சமணர்களுடைய மதத்திற் சேர்ந்திருக்கின்றமையால், அவர்கள் இவ்விடத்தில் விரைந்து வருவதற்கு என்னதுன்பம் நேரிட்டதென்று மனம் வருந்தி அழைத்துவரச்சொன்னான்.—எ-று. (௮௬)

கடைக்காவ லுடையார்கள் புகுதவிடக் காவலன்பா
னடையாடுந் தொழிலுடையார் நண்ணித்தா மெண்ணியவா
றுடையாரா கியதரும சேனர்பிணி யுற்றாராய்ச்
சடையானுக் காளாய்நின் சமயமழித் தாரென்றார்.

(இ-ள்.) வாயில் காப்பவர்கள் அரண்மனையினுள்ளே போகும்படிச்செய்த வளவில், நடக்குந்தொழி லொன்றையே உடையவர்களாய் மற்றச் செய்கைகளெல்லாவற்றையு மிழந்த சமணர்கள் பல்லவராசனிடத்திற் சென்று,தாங்கள் முன்பு சொல்லும்படி நினைத்தவிதமாகவே, நமக்கு முதல்வராகிய தருமசேனர் சூலைநோயடைந்தவர்போலக்காட்டி (அது நம்மால் தீர்ந்திலதென்று) உம்முடைய சமயத்தைவிட்டு சிவனுக்கு அடிமையாய்ப் புகுந்தாரென்று சொன்னார்கள்.—எ-று.

நடையாடுந் தொழிலுடையார் -நடைப்பிணங்கள் என்றபடி. (அஎ)

விரையலங்கற் பல்லவனு மதுகேட்டு வெகுண்டெழுந்து
புரையுடைய மனத்தினராய்ப் போவதற்குப் பொய்ப்பிணிகொண்
டுரைசிறந்த சமயத்தை யழித்தொழியப் பெறுவதே
கரையிறவத் தீரதனுக் கென்செய்வ தெனக்கன்றான்.

(இ-ள்.) வாசனை பொருந்திய ஆத்திமாலையைத் தரித்த பல்லவராசனும் அந்த வார்த்தையைக் கேட்டுக் கோபங்கொண் டெழுந்து, குற்றம்பொருந்திய மனமுடையவராகப் போகும்பொருட்டுப் பொய்யாகிய சூலைநோயைக் கற்பித்துக் கொண்டு உண்மைபொருந்திய நம்முடைய சமயத்தை அழித்துவிட்டு நீங்குவது தகுதியாகுமோ? அளவில்லாத தவத்தினையுடைய முனிவர்களே! இதற்கு என்னசெய்யலாமென்று கோபங்கொண்டு சொன்னான்.—எ-று. (அஅ)

தலைநெறியா கியசமயந் தன்னையழித் துன்னுடைய
நிலைநின்ற தொல்வரம்பி னெறியழித்த பொறியிலியை
யலைபுரிவா யெனப்பாவி வாயாலஞ் சாதுரைத்தார்
கொலைபுரியா நிலைகொண்டு பொய்யொழுகு மமண்குண்டர்.

(இ-ள்.) கொல்லாவிரத மொன்றையே மேலான தருமமெனக்கொண்டு அதிலும் பற்றில்லாதவர்களாய்ப் பொய்கொண் டொழுகுகின்ற கொடும்பாவிகளாகிய சமணர்கள், உத்தமமார்க்கமாகிய நம்முடைய சமணசமயத்தின் பெருமையைக் கெடுத்து, நீர் அனுஷ்டித்து வருகின்ற நிலையாகிய பழைய ஒழுக்கத்தின் நெறியை யழித்த அஞ்ஞானத்தையுடைய தருமசேனனைத் துன்பப்படுத்துவாயென்று தங்கள் வாயினால் சிறிதும் அஞ்சாமல் சொன்னார்கள்.—எ-று.

வரம்பினெறி யழித்தலாவது,—அரசன் சமணமதத்தி லிருப்பதனால், தாம் அம்மதத்திலிருந்து சைவசமயத்திற் பிரவேசித்தால் அரசனால் தண்டனை கிடைக்குமென்பதை அலட்சியஞ்செய்தலாம். தங்களுக்குமுன்பு தலைவராயிருந்ததையும் சிறிதும் நினைத்திலரென்பார் 'அஞ்சா துரைத்தார்' என்று கூறினார். (அகூ)

அருள்கொண்ட வுணர்வின்றி நெறிகோடி யறிவென்று
மருள்கொண்ட மன்னவனும் மந்திரிக டமைநோக்கித்
தெருள்கொண்டோ ரிவர்சொன்ன தீயோனைச் செறுவதற்குப்
பொருள்கொண்டு விடாதென்பாற் கொடுவாரு மெனப்புகன்றான்

(இ-ள்.) இரக்கம்பொருந்திய உணர்வில்லாமல், முறைதவறி, மயக்கத்தை அறிவென்று கொண்டிருக்கின்ற பல்லவராசனும் தன்னுடைய மந்திரிகளைப் பார்த்து, தெளிவுடையவர்களாகிய இம்முனிவர்கள் குற்றஞ் சாட்டிச் சொல்லிய, அக்கொடிய தருமசேனனைத் தண்டிப்பதற்கு அவனிடத்துப் பொருள்வாங்கிக்கொண்டு விட்டுவிடாமல் என்னிடத்தில் கொண்டுவாருங்களென்று சொன்னான்.

அறிவென்று மருள்கொண்ட மன்னவன் = விபரீத வுணர்ச்சியை யுடைய மன்னவன். 'பொருள்கொண்டுவிடாது' என்பதற்கு, அவனை ஒருபொருளாக மதித்து விட்டுவிடாமல், என்றுரைப்பினும் பொருந்தும். (௬0)

அரசனது பணிதலைநின் றமைச்சர்களு மந்நிலையே
முரசதிருந் தானையொடு முன்சென்று முகில் சூழ்ந்து
விரைசெறியுஞ் சோலைசூழ் திருவதிகை தனைமேவிப்
பரசமயப் பற்றறுத்த பான்மையினர் பாற்சென்றார்.

(இ-ள்.) மந்திரிகள் அரசனுடைய கட்டளையைத் தலைமேற்கொண்டு, அப்பொழுதே, முரசவாத்தியம் முழங்குகின்ற சேனைகளோடு புறப்பட்டுச் சென்று, மேகங்களால் சூழப்பட்டு மணம் வீசுகின்ற சோலைகள் சூழ்ந்த திருவதிகையை யடைந்து, புறச்சமயமாகிய சைனமதத்தில் வைத்திருந்த பற்றை யொழித்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகளிடத்திற்குச் சென்றார்கள்.—எ-று. (௬௧)

சென்றணைந்த வமைச்சருடன் சேனைவீ ரருஞ்சூழ்ந்து
மின்றயங்கு புரிவேணி வேதியனு ரடியவரை
யின்றுமை யரசனழைக் கெமைவிடுத்தான் போதுமென
நின்றவரை நேர்நோக்கி நிறைதவத்தோ ருரைசெய்தார்.

(இ-ள்.) அவ்வாறு திருவதிகையைச் சேர்ந்த மந்திரிமார்களோடு சேனைத்தலைவர்களும், மின்னைப்போல விளங்குகின்ற முறுக்காகிய சடைமுடியை யுடைய சிவபெருமானது அடியவராகிய திருநாவுக்கரசுசுவாமிகளைச் சூழ்ந்துகொண்டு (தருமசேனரே!) இன்று உம்மை அழைத்துவரும்படி அரசன் எங்களை யனுப்பினான், ஆதலால் வாருமென்று சொல்ல, அதை நிறைந்த தவத்தினையுடைய எமது குருராயர் கேட்டுத் தமக்கு அருகில் நின்ற மந்திரிமுதலானவர்களைப் பார்த்து அருளிச்செய்கின்றார்.—எ-று.

அழைக்க எமை என்பது, அழைக்கெமை எனத் தொகுத்தல்விகாரம் பெற்றது.

நாமார்க்குங் குடியல்லோ மென்றெடுத்து நான்மறையின்
கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைத்
தேமாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண் டகம்பாடி
யாமாறு நீரழைக்கு மடைவிலமென் றருள்செய்தார்.

(இ-ள்.) நான்கு வேதங்களினும் முடிந்த பொருளாயுள்ள தலைவரும், கங்கைநதியோடு குளிர்ச்சிபொருந்திய இளம்பிறையும் வாழ்கின்றசடையினையுடையவருமாகிய சிவபெருமானைக் குறித்து "நாமார்க்குங் குடியல்லோம்" என்பதை முதலில் எடுத்து இனிய செந்தமிழ்ப் பாமாலையாகிய திருத்தாண்டகம்பாடி, நீர் அழைத்தபடியே வருவதற்கு அரசனிடத்தில் எமக்கு ஒரு சம்பந்தமுமில்லையென்று அருளிச்செய்தார்.—எ-று.

யாம் சிவபெருமானுக் கடிமைப்பட்டு அருள்வழி யொழுகுதலே யன்றி மது அரசனுடைய கோலின்கீழ்த் தங்கி வாழுங் குடியன்ருதலின், அவனழைத் தலும் யாமவனை ஒருபொருட்படுத்தி வருதலும் பொருந்தாவென்பார், 'ஆமாறு நீரழைக்கு மடைவிலம்' என்று கூறினர்.

"போந்த வுதாரனுக்குப் பொன்றுரும்பு சூரனுக்குச்
சேர்ந்த மரணஞ் சிறுதுரும்பு—ஆய்ந்த
அறவோர்க்கு நாரி யருந்துரும்பா மில்லத்
துறவிக்கு வேந்தன் றுரும்பு."—என்ருர் ஔவையாரும். (கூ௩)

---

திருமறுமாற்றத் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நாமார்க்குங்குடியல்லோநமனையஞ்சோ
நரகத்திலிடர்ப்படோநடலையில்லோ
மேமாப்போம்பிணியறியோம்பணிவோமல்லோ
மின்பமேயெந்நாளுந்துன்பமில்லை
தாமார்க்குங்குடியல்லாத்தன்மையான
சங்கரனற்சங்கவெண்குழையோர்காதிற்
கோமாற்கேநாமென்றுமீளாவாளாய்க்
கொய்ம்மலர்ச்சேவடியிணையேகுறுகினோமே.

நாவாரநம்பனையேபாடப்பெற்ரு
நாணற்ருர்நள்ளாமேவிள்ளப்பெற்ரு
மாவாவென்றெமையாள்வானமரர்நாத
னயனெடுமாற்கறிவரியவனலாய்நீண்ட
தேவாதிதேவன்சிவனென்சிந்தை
சேர்ந்திருந்தான்றென்றிசைக்கோன்ருனேவந்து
கோவாடிக்குற்றேவல்செய்கென்ருலுங்
குணமாகக்கொள்ளோமெண்குணத்துளோமே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆண்டவர சருள்செய்யக் கேட்டவரு மடிவணங்கி
வேண்டியவர்க் கொண்டேக விடையுகைத்தா ர் திருத்தொண்டர்
ஈண்டுவரும் வினைகளுக்கெம் பிரானுளனென் றிசைந்திருந்தார்
மூண்டசினப் போர்மன்னன் முன்னணைந்தங்கறிவித்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் இவ்வாறு அருளிச்செய்ய, அதைக்கேட்ட மந்திரிமுதலானவர்களும் அவருடைய திருவடிகளைத் தொழுதுபிரார்த்தித்து அவரை அழைத்துக்கொண்டுபோக, ரிஷபத்தை வாகனமாகச் செலுத்திய சிவபெருமானது திருத்தொண்டராகிய அப்பெரியாரும், இங்கேஇவ்வரசனால் எமக்கு நேரிடப்போகின்ற அபாயங்களைநீக்குவதற்கு எமதுஆண்டவராகிய சிவபெருமான் இருக்கின்றார் என்று சம்மதித்திருந்தார். அம் மந்திரிமுதலானவர்கள், (சமணர்களின் வஞ்சகவார்த்தையில் மயங்கி) இவர்மேல் அதிக கோபங்கொண் டிருக்கின்ற போர்த்தொழில் வல்லவனாகிய பல்லவராசனிடத்திற்குப் போய்த் தெரிவித்தார்கள்.—எ-று. (௯௪)

பல்லவனு மதுகேட்டுப் பாங்கிருந்த பாயுடுக்கை
வல்லமணர் தமைநோக்கி மற்றவனைச் செய்வதினிச்
சொல்லுமென வறந்துறந்து தமக்குறுதி யறியாத
புல்லறிவோ ரஞ்சாது நீற்றறையி லிடப்புகன்றார்.

(இ-ள்.) பல்லவராசனும் அவர்கள் சொல்லிய வார்த்தையைக் கேட்டுத் தனக்கு அருகிலிருந்த பாயை ஆடையாகவுடைய கொடிய சமணர்களைப்பார்த்து, அத்தருமசேனனை இனி என்னசெய்யவேண்டியது நீங்கள் சொல்லுங்களென்று கேட்க, தருமநெறியை யொழித்துத் தமக்கு உறுதியைத் தரத்தக்க மார்க்கம் இன்னதென்று அறிந்துகொள்ளாத சிற்றறிவினையுடைய சமணர்கள் கொஞ்சமும் அஞ்சாமல் நீற்றறையில் இடல்வேண்டும் என்று சொன்னார்கள்.—எ-று.

நீற்றறையாவது:—சுண்ணாம்புக்கல்லின் நீறு அடங்கிய அறை. 'நீற்றறையில் விடப்புகன்றார்' என்றும் பாடம். (௯௫)

அருகணைந்தார் தமைநோக்கி யவ்வண்ணஞ் செய்கவெனப்
பெருகுசினக் கொடுங்கோலான் மொழிந்திடலும் பெருந்தகையை
யுருகுபெருந் தழல்வெம்மை நீற்றறையி னுள்ளிருத்தித்
திருகுகருந் தாட்கொளுவிச் சேமங்கள் செய்தமைத்தார்.

(இ-ள்.) மிகுந்த கோபத்தையுடைய கொடுங்கோல் மன்னவனாகிய பல்லவராசன் தன்னருகிலிருக்கின்ற ஏவலாளர்களைப் பார்த்து, இவனை இச்சமண முனிவர்கள் சொல்லியபடியே செய்வீர்களாகவென்று கட்டளையிட்டவுடனே, பெருந்தன்மையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளை, தன்னை யடைந்த பொருள்கள் உருகுவதற்குக் காரணமாயிருக்கின்ற பெருஞ் சூட்டினையுடைய நீற்றறையினுள்ளேவிட்டுக் கதவை யடைத்துச் சுழலுந் தன்மையையுடைய இரும்பினாற் செய்த தாளிட்டார்கள்.—எ-று. (௯௬)

ஆண்டவர சதனகத்து ளணைந்தபொழு தம்பலத்துத்
தாண்டவமுன் புரிந்தருளுந் தாணிழலைத் தலைக்கொண்டே
யீண்டுவருந் துயருளவோ வீசனடி யார்க்கென்று
மூண்டமன நேர்நோக்கி முதல்வனையே தொழுதிருந்தார்.

(இ-ள்.) நம்மை அடிமையாகவுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் அந்த நீற்றறையினுள்ளே போனபொழுது, திருவம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற சிவபெருமானுடைய திருவடிநிழலைச் சிரமேற்கொண்டு, சிவனடியா

ர்களுக்கு இவ்வுலகத்தில் யாதொரு துன்பமும் வருவதுண்டோவென்று அன்பு பொருந்திய மனத்தை ஒருவழியாகத் திருப்பி அவ்வெம்பெருமானையே தியானித்துக்கொண்டிருந்தார்.—எ-று. (கூஎ)

வெய்யநீற் றறைபதுதான் வீங்கிளவே னிற்பருவந்
தைவருதண் டென்றலலைத் தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதா
யையர்திரு வடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே.

(இ-ள்.) அப்பொழுது,வெப்பம்பொருந்திய அந்தநீற்றறையானது மேலும் மேலும் அதிகரிக்கின்ற இளவேனிற்காலமும், மிருதுவாகவருகின்ற குளிர்ந்த தென்றற்காற்றும், அலைகளையுடைய சிறந்த செங்கழுநீர்த்தடாகமும், மிகுந்த ஒளியைவீசுகின்ற வெண்மையாகிய சந்திரனும், இனிமையாக ஒலிக்கின்ற யாழினது ஓசையுமொத்துச் சிவபெருமானுடைய திருவடிநீழலாகிய அருண்மயமாகக் குளிர்ந்திருந்தது.—எ-று.

இளவேனிற்பருவம் பல்வகை மலர்களும் மலர்தற்குக் காரணமாயிருத்தலின் நாசிக்கும், தென்றல் குளிர்ந்தகாற்றை வீசுதலால் தேகத்திற்கும், தடாகம் மதுரமாகிய தண்ணீரைத்தருதலால் நாவிற்கும், நிலவுகாட்சிக்கு இனிமையைத் தருதலால் கண்ணிற்கும்,யாழிசை செவிவழியேபுகுந்து பேரானந்தம் விளைத்தலால் காதிற்கும் இன்பத்தை யுண்டாக்கும்; அவ்வாறே இந்நீற்றறையும், சுண்ணத்தின்நெடி நாசிக்கும், அதன் ஸ்பரிசம் திருமேனிக்கும் அதன் பராகம் நாவிற்கும், அதன்தோற்றம் கண்களுக்கும், அதன் கொதித்தலோசை காதிற்கும் தீமை பயவாமல் இன்பந்தருதலின், இளவேனிற்பருவமுதலிய வைந்திணையும் நீற்றறைக்கு உவமையாக்கிக் கூறினர். (கூஅ)

---

## தனித்திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

மாசில்வீணையுமாலைமதியமும்
வீசுதென்றலும்வீங்கிளவேனிலு
மூசுவண்டறைபொய்கையும்போன்றதே
யீசனெந்தையிணையடிநீழலே. (க)

நமச்சிவாயவேஞானமுங்கல்வியும்
நமச்சிவாயவேநானறிவிச்சையும்
நமச்சிவாயவேநாநவின்றேத்துமே
நமச்சிவாயவேநன்னெறிகாட்டுமே. (உ)

ஆளாகாராளானாரையடைந்துய்யார்
மீளாவாட்செய்துமெய்ம்மையுணிற்கிலார்
தோளாதசுரையோதொழும்பர்செவி
வாளாமாய்ந்துமண்ணாகிக்கழிவரே. (௩)

நடலைவாழ்வுகொண்டென்செய்திர்நாணிலீர்
சுடலைசேர்வதுசொற்பிரமாணமே
கடலினஞ்சமுதுண்டவர்கைவிட்டால்
உடலினார்கிடந்தூர்முனிபண்டமே (௪)

பூக்கைக்கொண்டரன்பொன்னடிபோற்றிலார்
நாக்கைக்கொண்டரனாமநவில்கிலார்
ஆக்கைக்கேயிரைதேடியலமந்து
காக்கைக்கேயிரையாகிக்கழிவரே. (௫)

குறிகளுமடையாளமுங்கோயிலும்
நெறிகளுமவர்நின்றதோர்நேர்மையும்
அறியவாயிரமாரணமோதிலும்
பொறியிலீர்மனமென்கொல்புகாததே. (௬)

வாழ்த்தவாயும்நினைக்கமடநெஞ்சும்
தாழ்த்தச்சென்னியுந்தந்ததலைவனைச்
சூழ்த்தமாமலர் தூவித்துதியாதே
வீழ்த்தவாவினையேனெடுங்காலமே. (௭)

எழுதுபாவைநல்லார்திறம்விட்டுநான்
றொழுதுபோகின்றேனையுஞ்சூழ்ந்துகொண்
டுழுதசால்வழியேயுழுவான்பொருட்
டிழுதைநெஞ்சமிதென்படுகின்றதே. (அ)

நெக்குநெக்குநினைபவர்நெஞ்சுளே
புக்குநிற்கும்பொன்னார்சடைப்புண்ணியன்
பொக்கமிக்கவர்பூவுநீருங்கொண்டு
நக்குநிற்பரவர்தமைநாணியே. (௯)

விறகிற்றீயினன்பாலிற்படுநெய்போன்
மறையநின்றுளன்மாமணிச்சோதியான்
உறவுக்கோனட்டுணர்வுக்கயிற்றினான்
முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

**வேறு.**

மாசின்மதி நீடுபுனல் மன்னிவளர் சென்னியனைப்
பேசவினி யானையுல காளுடைய பிஞ்ஞகனை
யீசனையெம் பெருமானை யெவ்வுயிருந் தருவானை
யாசையிலா ராவமுதை யடிவணங்கி யினிதிருந்தார்.

(இ-ள்.) களங்கமில்லாத சந்திரனும், மிகுந்த கங்கைநதியும் நிலைபெற்று வாழ்கின்ற சடைமுடியையுடையவரும், சொல்லுதற்கு இனிமையாயுள்ளவரும்,

சர்வலோகங்களையும் ஆளுகின்ற தலைவரும், ஜகதீசரும், எமது ஆண்டவரும், எல்லாஉயிர்களையும் படைத்தருளியவரும், அடியார்களது பெருவிருப்பில் தெவிட்டாது நிறைந்த அமிர்தம்போல்பவருமாகிய சிவபெருமானை வணங்கிக்கொண்டு இனிமையாக வீற்றிருந்தருளினர்.—எ-று. (கூகூ)

ஓரெழுநாள் கழிந்ததற்பி னுணர்விலம ணரையழைத்துப்
பாருமினி நீற்றறையை யெனவுரைத்தான் பல்லவனுங்
காரிருண்ட குழாம்போலு முருவுடைய காரமணர்
தேருமிலை யில்லாதார் நீற்றறையைத் திறந்தார்கள்.

(இ-ள்.) ஏழுநாள்சென்றபின்பு பல்லவராசன் அறிவில்லாத சமணர்களை அழைத்து இனி நீங்கள் நீற்றறையைத் திறந்து பாருங்களென்று சொன்னன்; அப்பொழுது,இருண்ட மேகக்கூட்டம்போலும் உருவத்தையுடைய மூடர்களாகிய சமணர்கள் ஆராய்ந்தறியு முணர்ச்சியில்லாதவர்களாய் அந்த நீற்றறையைத் திறந்து பார்த்தார்கள்.—எ-று. (சoo)

ஆனந்த வெள்ளத்தி னிடைமூழ்கி யம்பலவர்
தேனுந்து மலர்ப்பாதத் தமுதுண்டு தெளிவெய்தி
யூனந்தா னிலராகி யுவந்திருந்தார் தம்மைக்கண்
டீனந்தங் கியதிலதா மென்னவதி சயமென்றார்.

(இ-ள்.) சிவானந்தமாகிய வெள்ளத்தில்முழுகி, ஸ்ரீ நடராசப்பெருமானுடையதேன்துளிக்கின்ற தாமரைமலர்போன்ற குஞ்சிதபாதத்தினின்றும் பெருகுகின்ற ஆனந்தாமிர்தத்தையுண்டு தெளிவையடைந்து, யாதொரு குறைவுமில்லாமல் மகிழ்ந்து வீற்றிருந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகளை அச்சமணர்கள்பார்த்து, இவனுக்கு ஒருதுன்பமும் இல்லாமலிருக்கின்றது, இது என்ன ஆச்சரியமென்று சொன்னார்கள்.—எ-று. (சoக)

அதிசயமன் றிதுமுன்னை யமண்சமயச் சாதகத்தால்
இதுசெய்து பிழைத்திருந்தா னெனவேந்தற் குரைசெய்து
மதிசெய்வ தினிக்கொடிய வல்விடமூட் டுவதென்று
முதிரவரும் பாதகத்தோர் முடைவாயான் மொழிந்தார்கள்.

(இ-ள்.) அப்பொழுது, கொடிய பாவரூபிகளாகிய சமணர்கள் இது ஒரு ஆச்சரியமன்று; முன்பு தான்சேர்ந்திருந்த நமது சமணசமயத்தில் கற்றுக்கொண்ட மந்திரசாதகத்தினால் இந்நீற்றறையில் தான் வேகாமல்செய்து பிழைத்திருக்கின்றானென்று பல்லவராசனுக்குச்சொல்லி, இனி நாம் செய்யவேண்டிய ஆலோசனையாவது கொல்லத்தக்க கொடிய விஷத்தை யுண்ணச்செய்வதே தகுதியாகுமென்று தங்களுடைய தீநாற்றம்பொருந்திய வாயினால் சொன்னார்கள்.—எ-று.

ஆங்கதுகேட் டிலுங்கொடிய வமண்சார்பாற் கெடுமன்னன்
ஓங்குபெரு மையலினால் நஞ்சூட்டு மெனவுரைப்பத்
தேங்காதார் திருநாவுக் கரசரையத் தீயவிடப்
பாங்குடைய பாலடிசி லமுதுசெயப் பண்ணினார்.

(இ-ள்.) அவ்வார்த்தையைக் கேட்டவுடனே கொடிய சமணர்களின் சார்பினாலேகெட்ட பல்லவராசன் அதிகரித்திருக்கின்ற மயக்கவுணர்வினால், அவ்வா

றே விஷத்தையூட்டிக் கொல்லுங்களென்று சொல்ல, கொலைசெய்வதற்குச் சிறிதும் அஞ்சாதவர்களாகிய சமணர்கள் திருநாவுக்கரசுசுவாமிகளை விரைவில் கொல்லத்தக்க கொடியவிஷங்கலந்த சோற்றைஉண்ணும்படிச் செய்வித்தார்கள்.—எ-று.

சமணர்களின் துர்ப்போதனையால்மயங்கித் திருநாவுக்கரசுசுவாமிகளுக்குத் தீங்கிழைத்துக் கெடுகின்றவ னென்பார் 'அமண்சார்பாற் கெடுமன்னன்' என்று கூறினர்.

(கoரு)

நஞ்சுமமு தாமெங்க ணுதரடி யார்க்கென்று
வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளங்குந் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமண ரிடுவித்த பாலடிசின் மிசைந்திருந்தார்.

(இ-ள்.) கபடமிருந்த மனத்தினையுடைய சமணர்களின் வஞ்சகத்தையறிந்துகொண்டு சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருள்விளங்கியிருக்கும் அன்பினுறுதியையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் எங்கள் ஆண்டவராகிய பரமசிவனுடைய அடியவர்களுக்குக் கொடியவிஷமும் அமிர்தமாகுமென்று, கொடியசமணர்கள் தீயவிஷத்தோடு கலந்துகொடுத்த அந்தப்பாற்சோற்றையுண்டு ஒருதுன்பமுமின்றி இருந்தார்.—எ-று.

'செஞ்சடையார் சீர்விளக்குந் திறலுடையார்' என்று பாடமாயின், சிவபெருமானுடைய திருவருள்விலாசத்தை ஆசாரியத்திருவுருவங்கொண்டு உலகத்தில் விளக்குதற்குக் காரணராயெழுந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகள், என்று பொருள்கொள்க.

(கoசு)

பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்குப் புவனங்கண்
முடிவாக்குந் துயர்நீங்க முன்னைவிட மமுதானாற்
படியார்க்கு மறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுத மாவதுதா னற்புதமோ.

(இ-ள்.) திருவெண்ணீற்றைத்தரிக்கும் திருமேனியையுடைய சிவபெருமானுக்கு, சர்வலோகங்களையும் அழிக்கத்தக்க துன்பத்தினின்றும் நீங்கும்பொருட்டு முன்னாளில் திருப்பாற்கடலிற்றோன்றிய ஆலாகல விஷமானது அமிர்தமாயிருந்ததென்றால், இவ்வுலகத்தில் யாவராலும் அறிவதற்கரியவராகிய அக்கடவுளின் அடியார்களுக்கு ஓர்விஷம் தன்வேகமடங்கி அமுதமாக உண்ணப்படுவது ஒரு ஆச்சரியமோ? (அன்று.)—எ-று.

திருமால்முதலிய யாவரும் தன்வேகத்தால் நீந்து அஞ்சியோட்டெடுக்கச்செய்த கொடிய ஆலாகலவிடம் சிவபெருமானுக்கு ஓர் சிற்றுணவாகத் தன் வலிமைகுறைந்து நின்றதென்றால், அவ்வெம்பெருமானுடைய அடியவர்களுக்கு மலை-மரம்-முதலியவைகளிற்றோன்றிய சாமானியவிடம் தீமைபயவாதது ஒருவியப்பன் றென்பார். 'அடியார்க்கு நஞ்சமுதமாவதுதானற்புதமோ' என்று கூறினர்.

அவ்விடத்தை யாண்டவர் சமுதுசெய்து முன்னிருப்ப
வெவ்விடமு மமுதாயிற் றெனவமணர் வெருக்கொண்டே
யிவ்விடத்தி லிவன்பிழைக்கி லெமக்கெல்லா மிறுதியெனத்
தெவ்விடத்துச் செயல்புரியுங் காவலற்குச் செப்புவார்.

(இ - ள்.) அச்சமணர்களிட்ட விஷங்கலந்த சோற்றைத் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்து (அதனால் ஒரு தீங்குமின்றி) அவர்களுக்கு முன்னேயிருக்க, அதைக்கண்ட சமணர்கள் இவனுக்குக் கொடியவிஷமும் அமிர்தமாயிற்றென்று பயங்கொண்டு, இத்தேசத்தில் இவன் உயிர்பிழைத்திருப்பானானால் எங்களுக்கெல்லாம் அழிவுநேரிடுமென்று நினைத்து,பகைவர்களிடத்தில் கொடுந்தொழிலைச்செய்கின்ற பல்லவராசனுக்குச் சொல்லுகின்றார்கள்.—எ-று. (கoகூ)

நஞ்சுகலந் தூட்டிடவு நஞ்சமயத் தினில்விடந்தீர்
தஞ்சமுடை மந்திரத்தாற் சாதியா வகைதடுத்தான்
எஞ்சும்வகை யவற்கிலதே லெம்முயிரு நின்முறையுந்
துஞ்சுவது திடமென்றார் சூழ்வினையின் றுறைநின்றார்.

(இ-ள்.) நாங்கள் இத்தருமசேனனுக்கு விஷத்தைச் சோற்றில்கலந்து உண்பித்தும், நம்முடைய சமயநூல்களிலே கற்றுக்கொண்ட விஷந்தீர்க்கும் மந்திரவலியினால் அந்தவிஷம் தன்னைக் கொல்லாதவிதமாகத் தடுத்துப் பிழைத்து விட்டான்; அவன் எந்தவகையிலாயினும் இறவாதிருப்பனானால் எங்களுடையஉயிரும் உமது அரசாட்சியும் அழிந்துவிடுவது நிச்சயமென்று சொன்னார்கள், தீமைசெய்யும் மார்க்கத்தில் முதன்மையாக நின்றவர்களாகிய சமணர்கள்.—எ-று. ()

மற்றவர்த மொழிகேட்டு மதிகெட்ட மன்னவனுஞ்
செற்றவனை யினிக்கடியுந் திறமெவ்வா றெனச்செப்ப
உற்றவரு மந்திரசா தகராங்க ளொழிந்திடநின்
கொற்றவயக் களிற்றெதிரே விடுவதெனக் கூறினார்.

(இ-ள்.) அறிவில்லாத பல்லவராசனும் அவர்கள்சொல்லிய வஞ்சக வார்த்தையைக்கேட்டு,நமது மதத்தையழித்த அத்தருமசேனனை இனிக்கொல்வதற்குச் செய்யவேண்டிய உபாயம் என்னவென்றுகேட்க, அங்குள்ள சமணர்களும் நாங்கள் மந்திரசாதகங்களால் அவனைக்கொல்லாமல் நீங்க, உமது வெற்றிபொருந்திய யானையை அவனுக்கு எதிரில் கொல்லும்படி விடுவதே தகுந்த உபாயமென்று சொன்னார்கள்.—எ-று.

மந்திரசாதகங்களாவன:—அபிசாரவேள்வி முதலியன ;அவற்றைச்செய்யினும் இவனிறக்கக் காலதாமதப்படும் ; அவ்வாறு செய்யாமல் உடனே கண்டிக்க வேண்டுமென்னுங் கருத்தினராய் உரைத்தனரென்பார் 'நின்கொற்றவயக்களிற்றெதிரேவிடுவது' என்று கூறினார். (கoஅ)

மாபாவிக் கடையமணர் வாகீசத் திருவடியாங்
காபாலி யடியவர்பாற் கடக்களிற்றை விடுகென்னப்
பூபாலர் செயன்மேற்கொள் புலைத்தொழிலோ னவர்தம்மேற்
கோபாதி சயமான கொலைக்களிற்றை விடச்சொன்னான்.

(இ-ள்.) மகாபாவிகளாகிய கொடியசமணர்கள் ஸ்ரீ வாகீசமுனிவரென்னும் சிவனடியாரிடத்தில் மதம்பொருந்திய யானையை மிதிக்கவிடுகவென்று சொன்னவளவில், அரசர்களது செய்கையைத் தான்மேற்கொண்டு (அதனைச்செய்யாமல் விடுத்து) நீசத்தொழிலைச் செய்கின்றவனாகிய பல்லவராசன் அத்திருநாவுக்கரசுசுவாமிகளின்மேல் மிகுந்த கோபத்தையுடைய கொலைசெய்யும் யானையை விடும்படிச் சொன்னான்.—எ-று.

வாகீசர் = திருநாவுக்கரசு; பல்லவன் அரசனுய்ச் செங்கோல்செலுத்து முறைமையைப் பெற்றிருந்தும் அவ்வாறு செய்யாமல், சமணர்களின் துர்ப்போதயில் மயங்கி இழிதொழில்புரிகின்றனனென்பார் 'பூபாலர் செயன்மேற்கொள் புலைத்தொழிலோன்' என்றுகூறினர். விடுகென்ன - தொகுத்தல்விகாரம். (கoகூ)

கூடத்தைக் குத்தியொரு குன்றமெனப் புறப்பட்டு
மாடத்தை மறித்திட்டு மண்டபங்க ளெடுத்தெற்றித்
தாடத்திற் பரிக்காரர் தலையிடறிக் கடக்களிற்றின்
வேடத்தால் வருங்கூற்றின் மிக்கதொரு விறல்வேழம்.

(இ-ள்.) வலிமைபொருந்திய ஒருயானையானது தான்வாழுங்கூடத்தைக் கொம்பினால் குத்தி, ஒரு பெரியமலைபோலப் புறப்பட்டு, வீடுகளை அழித்து, மண்டபங்களை எடுத்துவீசி,கால்களினுடைய எற்றுதலினால் முன்னேசெல்கின்ற குத்துக்கோற்காரர்களின் தலைகளைஇடறி, மதம்பாய்கின்ற யானையினுருவங் கொண்டுவருகின்ற கொடிய யமனைப்பார்க்கிலும் மிகுந்த தோற்றமுடையதாயிருந்தது.—எ-று.

பரிக்காரர் என்றது, குத்துக்கோற்காரரை. (கஉo)

வேறு.

பாசத்தொடை நிகளத்தொடர் பறியத்தறி முறியா
மீசுற்றிய பறவைக்குலம் வெருவத்துணி விலகா
ஊசற்கர மெதிர்சுற்றிட வுரறிப்பரி யுழுமு
வாசக்கட மழைமுற்பட மதவெற்பெதிர் வருமால்.

(இ-ள்.) காலில்பூட்டியிருக்கின்ற கயிறுகளும் சங்கிலித்தொடரும் அறுந்துபோகும்படிக் கட்டுத்தறியைமுறித்து, மேலேபறக்கின்ற பறவைக்கூட்டங்கள் அஞ்சும்படித்துணிவுகொண்டு தனக்குமுன்னேயுள்ள தடைகளுக்குச்சிறிதும்விலகாமல் ஊசல்போல அசைகின்ற துதிக்கையானது முன்னே சுற்ற,மிகுந்தகோபங்கொண்டு குதிரைகளை ஒன்றோடொன்றுமோதும்படித்தள்ளி,வாசனைபொருந்திய மதநீரானது பிரவாகம்போல முன்னேபெருக,மதத்தையுடைய யானையாகிய ஒருமலையானது எதிரில்வருகின்றது.—எ-று. (கஉக)

இடியுற்றெழு மொலியிற்றிசை யிபமுட்கிட வடியிற்
படிபுக்கற நெளியப்படர் பவனக்கதி விசையிற்
கடிதுற்றடு செயலிற்கிளர் கடலிற்படு கடையின்
முடிவிற்கன லெனமுற்சின முடுகிக்கடு கியதே.

(இ-ள்.) அந்த யானையானது இடிபோலவீரிட்ட முழக்கத்தினால் அஷ்டதிக்கிலுமிருக்கின்ற யானைகள் அச்சத்தை யடையவும், அடியெடுத்து வைப்பதனால் பூமியானது ஆழ்ந்து நெளியவும், செல்கின்ற வாயுவேகம்போல விரைந்து வந்து, கொல்லுந்தொழிலில் விளங்குகின்ற கடலில் பொருந்திய ஊழித்தீயைப்போல முற்பட்ட கோபத்தோடு கடந்து விரைவாக வந்தது.—எ-று.

அஷ்ட திக்கியானைகளாவன:— கிழக்கில் அயிராவதம். தென்கிழக்கில் புண்டரீகம்,தெற்கில் வாமனம்,தென்மேற்கில் குமுதம், மேற்கில் அஞ்சனம், வடமேற்கில் புட்பதந்தம், வடக்கில் சாருவபூமம், வடகிழக்கில் சுப்பிரதீபம் என்னும் பெயர்களையுடைய யானைகள் பொருந்துமெனவறிக. (கஉஉ)

மாடுற்றணை யிவுளிக்குல மறியச்செறி வயிரக்
கோடுற்றிரு பிளவிட்டறு குறைகைக்கொடு மூறியச்
சாடுற்றிடு மதில்தெற்றிகள் சரியப்புடை யணிசெற்
றூடுற்றகல் வெளியுற்றதவ் வடர்கைக்குல வரையே.

(இ-ள்.) கொலைசெய்கின்ற துதிக்கையினையுடைய மலையையொத்த அத்தச் சிரேஷ்டம்பொருந்திய யானையானது தன்சமீபத்தில்வருகின்ற குதிரைக்கூட்டங்கள் இறக்கும்படி வயிரம்பொருந்திய கொம்பினால் இருதுண்டாகச் செய்து, அதில் ஒருகுறையைத் துதிக்கையில் எடுத்துக்கொண்டு மதில்கள் இடியவும், திண்ணைகள்சரியவும் மோதி, இருபுறத்திலுமிருக்கின்ற அலங்காரமாகிய மற்றப்பொருள்களையழித்து அசைந்துகொண்டு வெளிப்புறத்தில் வந்தது.—எ-று. (கசுங)

பாவக்கொடு வினைமுற்றிய படிறுற்றடு கொடியோர்
நாவுக்கர செதிர்முற்கொடு நணுகிக்கரு வரைபோல்
ஏவிச்செறு பொருகைக்கரி யினையுய்த்திட வெருளார்
சேவிற்றிகழ் பவர்பொற்கழ றெளிவுற்றனர் பெரியோர்.

(இ-ள்.) பாவமாகிய தீவினையில் முதிர்ந்திருக்கின்ற பொய்யையுடைய கொடியவர்களாகிய சமணர்கள் திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு முன்னே, கொல்லுகின்ற துதிக்கையினையுடைய யானையைக் கொண்டுவந்து கரிய மலையைப்போல ஏவ, அதற்கு எமது பெரியோராகிய குருராயர் சிறிதும் பயப்படாமல், ரிஷபவாகனத்தின்மேல் விளங்குகின்றவராகிய சிவபெருமானது அழகிய திருவடிகளைத் தியானஞ்செய்திருந்தார்.—எ-று. (கசுச)

வேறு.

அண்ண லருந்தவ வேந்த ரானைதம் மேல்வரக் கண்டு
விண்ணவர் தம்பெரு மானை விடையுகந் தேறும் பிரானைச்
சுண்ணவெண் சந்தனச் சாந்து தொடுத்த திருப்பதி கத்தை
மண்ணுல குய்ய வெடுத்து மகிழ்ச்சி யுடன்பாடு கின்றார்.

(இ-ள்.) பெருமை பொருந்திய அருமையாகிய தவத்தலைவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் யானையானது தம்மைக் கொலைசெய்ய வருவதைப் பார்த்து, தேவர்களுக்கு நாயகரும், ரிஷபவாகனத்தின்மேல் விருப்பி எழுந்தருளுகின்றவருமாகிய சிவபெருமானைக்குறித்து "சுண்ணவெண்சந்தனச்சாந்து" என்பதை முதலில் தொடுத்துச்செய்யப்பட்ட திருப்பதிகத்தை உலகத்தி லுள்ளவர்கள் பிழைக்கும் பொருட்டு மிகுந்த மகிழ்ச்சியோடு பாடுகின்றார்.—எ-று. (கசுரு)

---

## திருக்கெடிலவடவீரட்டானம்.

பண் காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சுண்ணவெண்சந்தனச்சாந்துஞ்சுடர்த்திங்கட்சூளாமணியும்
வண்ணவுரிவையுடையும்வளரும்பவளநிறமு
மண்ணலரண்முரணேறுமகலம்வளாயவரவுந்
திண்ணன்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (க)

பூண்டதோர்கேழலெயிறும்பொன்றிகழாமைபுரள
நீண்டதிண்டோள்வலஞ்சூழ்ந்துநிலாக்கதிர்போலவெண்ணூலுங்
காண்டகுபுள்ளின்சிறகுங்கலந்தகட்டங்கக்கொடியு
மீண்டுகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (௨)

ஒத்தவடத்திளநாகமுருத்திரபட்டமிரண்டு
முத்துவடங்கண்டிகையுமுளைத்தெழுமூவிலைவேலுஞ்
சித்தவடமுமதிகைச்சேணுயர்வீரட்டஞ்சூழ்ந்து
தத்துகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (௩)

மடமான்மறிபொற்கலையுமழுப்பாம்பொருகையில்வீணை
குடமால்வரையதிண்டோளுங்குனிசிலைக்கூத்தின்பயில்வு
மிடமால்தழுவியபாகமிருநிலனேற்றசுவடும்
தடமார்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (௪)

பலபலகாமத்தராகிப்பதைத்தெழுவார்மனத்துள்ளே
கலமலக்கிட்டுத்திரியுங்கணபதியென்னுங்களிறும்
வலமேந்திரண்டுசுடரும்வான்கயிலாயமலையும்
நலமார்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (௫)

கரந்தனகொள்ளிவிளக்குங்கறங்குதுடியின்முழக்கும்
பரந்தபதினெண்கணமும்பயின்றறியாதனபாட்டும்
அரங்கிடைநூலறிவாளரறியப்படாததோர்கூத்தும்
நிரந்தகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (௬)

கொலைவரிவேங்கையதளுங்குலவோடிலங்குபொற்றோடும்
விலைபெறுசங்கக்குழையும்விலையில்கபாலக்கலனும்
மலைமகள்கைக்கொண்டமார்புமணியார்ந்திலங்குமிடறு
முலவுகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (௭)

ஆடல்புரிந்தநிலையுமரையிலசைத்தவரவும்
பாடல்பயின்றபல்பூதம்பல்லாயிரங்கொள்கருவி
நாடற்கரியதோர்கூத்துநன்குயர்வீரட்டஞ்சூழ்ந்து
ஓடுங்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (௮)

சூழுமரவத்துகிலுந்துகில்கிழிகோவணக்கீளும்
யாழின்மொழியவளஞ்சவஞ்சாதருவரைபோன்ற
வேழமுரித்தநிலையும்விரிபொழில்வீரட்டஞ்சூழ்ந்து
தாழுங்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (௯)

நரம்பெழுகைகள்பிடித்துநங்கைநடுங்கமலையை
யுரங்களெல்லாங்கொண்டெடுத்தானென்பதுமொன்றுமலற
வரங்கள்கொடுத்தருள்செய்வான்வளர்பொழில்வீரட்டஞ்சூழ்ந்து
கிரம்புகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிற்றினை நோக்கிச்
செஞ்சடை நீண்முடிக் கூத்தர் தேவர்க்கும் தேவர் பிரானார்
வெஞ்சுடர் மூவிலைச் சூல வீரட்டர் தம்மடி யோநாம்
அஞ்சுவ தில்லையென் றென்றே யருந்தமிழ் பாடி யறைந்தார்.

(இ-ள்.) வஞ்சகர்களாகிய சமணர்களால் அனுப்பப்பட்ட கோபத்தினை யுடைய வெவ்விய மதயானையைத் திருநாவுக்கரசுசுவாமிகள் பார்த்து, சிவந்து நீண்டசடைமுடியையுடையஆனந்தத்தாண்டவமூர்த்தியும்,தேவர்களுக்கெல்லாம் முதற்றேவரும், வெவ்விய கிரணங்களையுடைய மூன்று அச்சவடிவாகிய சூலாயுதத்தைத் தாங்கியவருமாகிய ஸ்ரீவீரட்டானேசுவரருக்கு அடியோமாக இருக்கின்றோம்;அதனால்,நாம் யாதொன்றுக்கும் அஞ்சுவதில்லை! அஞ்சுவதில்லை! என்று அரிய தமிழ்ப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று. (கககூ)

தண்டமிழ் மாலைகள் பாடித் தம்பெரு மான்சர ணாகக்
கொண்ட கருத்தி லிருந்து குலாவிய வன்புறு கொள்கைத்
தொண்டரை முன்வல மாகச் சூழ்ந்தெதிர் தாழ்ந்து நிலத்தில்
எண்டிசை யோர்களுங் காண விறைஞ்சி யெழுந்தது வேழம்.

(இ-ள்.) அந்த யானையானது இனிமையைத்தரத்தக்க திருப்பதிகத்தைப்பாடித் தமது ஆண்டவராகிய சிவபெருமானே கதியென்று மனதில்எண்ணி, விளங்குகின்ற பேரன்புபொருந்திய கொள்கையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளை முன்னே வலமாகவந்து பூமியில்தாழ்ந்து வணங்கி, எட்டுத்திக்கிலுள்ளவர்களும் காணும்படி எழுந்தது.—எ-று. (ககஎ)

ஆண்ட வரசை வணங்கி யஞ்சியவ் வேழம் பெயரத்
தூண்டிய மேன்மறப் பாகர் தொடக்கி யடர்த்துத் திரித்து
மீண்டு மதனை யவர்மேன் மிறைசெய்து காட்டிட வீசி
ஈண்டவர் தங்களை யேகொன் றமணர்மே லோடிற் றெதிர்ந்தே.

(இ-ள்.) இவ்வாறு அந்தயானையானது திருநாவுக்கரசுசுவாமிகளைத் தொழுது அவரைக் கொல்வதற்குப்பயந்து நீங்கிப்போக, அதன்மேலிருந்து நடத்துகின்ற வலிய பாகர்கள் மறுபடியும் அதனைக்கட்டி அங்குசத்தால்குத்தி அவர்மேல் திருப்பிக் கொல்லவேண்டுமென்னும் குறிப்பைக்காட்ட, அது அவ்வாறுசெய்யாமல் துதிக்கையினால் அவர்களையெடுத்துவீசிக் கொன்றுவிட்டுப் பின் சமணர்கள்மேல் எதிர்ந்தோடியது.—எ-று. (ககஅ)

ஓடி யருகர்க டம்மை யுழறி மிதித்துப் பிளந்து
நாடிப் பலரையுங் கொன்று நகரங் கலங்கி மறுக
நீடிய வேலை கலக்கு நெடுமந் தரகிரி போல
ஆடிய யானையம் மன்னற் காகுல மாக்கிய தன்றே.

(இ-ள்.) அங்குள்ள சமணர்களைத்தேடித்தேடி ஓடி, அவர்களை ஒருவர்மே லொருவராகத்தள்ளிக் காலினால் மிதித்துக்கிழித்தெறிந்து கொன்று, அந்நகரத்தி லுள்ளவர்க ளெல்லாரும் மனங்கலங்கி வருந்தும்படி, முற்காலத்தில் பெரியசமுத் திரத்தைக்கலக்கிய நீண்ட மந்தரகிரியைப்போலத் திரிகின்ற அந்தயானையானது அப்பல்லவராசனுக்கு மிகுந்த துன்பத்தை யுண்டாக்கியது.—எ-று. (கககூ)

யானையின் கையிற் பிழைத்த வவ்வமண் கையர்க ளெல்லா
மான மழிந்து மயங்கி வருந்திய சிந்தைய ராகித்
தானை நிலமன்னன் றாளிற் றனித்தனி வீழ்ந்து புலம்ப [றான்
மேன்மை நெறிவிட்ட வேந்தன் வெகுண்டினிச் செய்வதெ னென்

(இ-ள்.) அந்த யானையின்கையில் அகப்படாமல் தப்பி ஓடிப்பிழைத்த வஞ்சகர்களாகிய அச்சமணர்களெல்லாரும் தங்கள் மானமழிந்து மதிமயங்கி வருந்திய மனமுடையவர்களாய், நால்வகைச்சேனைகளையுடைய பூமியையாளுகின்ற பல்லவராசனதுகாலில் தனித்தனியே வீழ்ந்து புலம்ப, (சமணர்களின் துர்ப் போதனையினால்) நல்லொழுக்கத்தையிழந்த அவ்வரசன் மிகுந்தகோபங்கொண்டு இனிச்செய்யவேண்டியது என்னவென்று கேட்டான்.—எ-று.

'இனையவமண் கையரெல்லாம்' என்று பாடமாயின், இத்தகைய கொடுஞ்செய்கையையுடைய சமணவஞ்சகர்கள் என்று பொருள்கொள்க. (கஉ0)

நங்கள் சமயத்தி னின்றே நாடிய முட்டி நிலையால்
எங்க ளெதிரோ றழிய யானையா லிவ்வண்ண நின்சீர்ப்
பங்கப் படுத்தவன் போகப் பரிபவந் தீரு முனக்குப்
பொங்கழல் போக வதன்பின் புகையகன் றாலென வென்றார்.

(இ-ள்.) நம்முடைய சமயநூல்களிலிருந்து கற்றுக்கொண்ட மந்திரத்தின் பலத்தினால் நாங்கள்விட்ட யானையைக்கொண்டே எங்களுடைய வல்லமையானது கெடும்படி இவ்வண்ணம் கொல்லச்செய்து, உம்முடைய கீர்த்தியையழித்த அத்தருமசேனன் இறந்துபோனால்,மிகுதியாகப் பற்றியெரிகின்ற அக்கினி யவிந்த பின்பு புகையும் அதனுடன் நீங்குவதுபோல உமக்குண்டாகிய துன்பமும் நீங்கிப் போமென்று சொன்னார்கள்.—எ-று.

முட்டிநிலையாவது:— விஷம், விலங்கு, நோய்முதலியவைகள் தம்மை வருத்தாமல் தடுத்தற்குரிய மந்திரம். எதிரோறு=வல்லமை. (கஉக)

அல்லிரு ளன்னவர் கூற வரும்பெரும் பாவத் தவன்றான்
றொல்லைச் சமய மழித்துத் துயரம் விளைத்தவன் றன்னைச்
சொல்லு மினிச்செய்வ தென்னச் சூழ்ச்சி முடிக்குந் தொழிலோர்
கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுக வென்றார்.

(இ-ள்.) இராக்காலத்துண்டாகின்ற இருளையொத்த நிறத்தினையுடைய சமணர்கள் இவ்வாறுசொல்ல, மிகுந்த பெரும்பாவத்தையுடைய பல்லவராசன்

பழமையாகிய நமது சைனசமயத்தை யழித்து நமக்கெல்லாம் துன்பத்தையுண்டாக்கிய தருமசேனனைக் கொல்வதற்கு இனிச்செய்யவேண்டியதைச் சொல்லுங்களென்று கேட்க, தாங்கள் எண்ணிய வஞ்சகதந்திரத்தை நிறைவேற்றக் கருதியிருக்கின்ற கொடுஞ்செய்கையையுடைய சமணர்கள் அவனைக் கல்லோடு சேர்த்துக் கயிற்றினால்கட்டிக் கடலில்தள்ளவேண்டுமென்றுசொன்னார்கள்.—எ-று. (கஉஉ)

ஆங்கது கேட்ட வரச னவ்வினை மாக்களை நோக்கித்
தீங்கு புரிந்தவன் றன்னைச் சேம முறக்கொண்டு போகிப்
பாங்கொரு கல்லி லணைத்துப் பாசம் பிணித்தோர் படகில்
வீங்கொலி வேலையி லேற்றி வீழ்த்துமி னென்று விடுத்தான்.

(இ-ள்.) அச்சமணர்கள் சொல்லிய வார்த்தையைக்கேட்ட பல்லவராசன் அந்தக்கொலைத்தொழிலைச் செய்கின்றவர்களைப் பார்த்து,நம்முடைய மதத்திற்குத் தீங்குவிளைத்தவனாகிய அத்தருமசேனனைக் காவலோடு அழைத்துக்கொண்டுபோய், அங்கு ஒரு கருங்கல்லோடுசேர்த்துக் கயிற்றினால் இறுகக்கட்டி ஒருபடகில் ஏற்றி,மிகுந்த ஓலியையுடைய சமுத்திரத்திலேவிழும்படி தள்ளிவிடுங்களென்று உத்தரவுசெய்து அனுப்பினான்.—எ-று. (கஉங)

அவ்வினை செய்திடப் போகு மவருடன் போயரு கந்த
வெவ்வினை யாளருஞ் சென்று மேவிட நாவுக் கரசர்
செவ்விய தாந்திரு வுள்ளஞ் சிறப்ப வவருடன் சென்றார்
பவ்வத்தின் மன்னவன் சொன்ன படிமுடித் தாரப் பதகர்.

(இ-ள்.) கல்லோடுசேர்த்துக்கட்டிக் கடலில் தள்ளுதலாகிய கொடுந்தொழிலைச்செய்யும்படிப் போகின்ற கொலைக்காரர்களோடு கொடியதீவினையையுடையவர்களாகிய சமணர்களும் போய்க்கொண்டிருக்க, திருநாவுக்கரசுசுவாமிகள் செவ்விய தமது திருவுள்ளமானது பின்னும் பெருமகிழ்ச்சிகொள்ளும்படி அச்சமணர்களோடு எழுந்தருளினார். அப்பொழுது பல்லவராசன் சொன்னபடியே அக்கொலைக்காரராகிய பாவிகள் அவரைக் கடலில்தள்ளினார்கள்.—எ-று. (கஉச)

அப்பரி சவ்வினை முற்றி யவாகன் றேகிய பின்னர்
ஒப்பரு மாக்கடல் புக்க வுறைப்புடை மெய்த்தொண்டர் தாமும்
எப்பரி சாயினு மாக வேத்துவ னெந்தையை யென்று
செப்பிய வண்டமிழ் தன்னாற் சிவனஞ் செழுத்துந் துதிப்பார்.

(இ-ள்.) அவ்விதமாகவே அக்கொலையாளிகள் கடலில்தள்ளிவிட்டு நீங்கிப்போனபின்பு, ஒப்பில்லாத பெரியசமுத்திரத்தில் தள்ளிவிடப்பட்ட உறுதியான மெய்யன்பினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் அடியேனுக்கு என்னகதி வந்தாலும் வரட்டும்; யான் எமது ஆண்டவரைத் துதிப்பேனென்று, புகழ்ந்து சொல்லப்பட்ட வளம்பொருந்திய தமிழ்ப்பதிகத்தினால் சிவபெருமானது திருவைந்தெழுத்தையும் துதிக்கின்றவராயினார்.—எ-று. (கஉரு)

வே று.

சொற்றுணை வேதிய னென்னுந் தூய்மொழி
நற்றமிழ் மாலையா நமச்சி வாயவென்
றற்றமுன் காக்குமைந் தெழுத்தை யன்பொடு
பற்றிய வுணர்வினாற் பதிகம் பாடினார்.

(இ-ள்) "சொற்றுணை வேதியன்" என்னும் பரிசுத்தம்பொருந்திய மொழியைமுதலில் எடுத்து, நல்ல தமிழ்மாலையாக நமச்சிவாயவென்று அந்தத்தில் முடித்து, ஆபத்துநேரிட்டபோது முன்னின்றுகாத்தருளுகின்ற ஸ்ரீபஞ்சாக்ஷர மந்திரத்தை மெய்யன்போடு பற்றியிருக்கின்ற உணர்ச்சியினால் திருப்பதிகத்தைப் பாடி யருளினார்.—எ-று. (௧௨௬)

---

## நமச்சிவாயப்பதிகம்.

பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணைவேதியன்சோதிவானவன்
பொற்றுணைதிருந்தடிபொருந்தக்கைதொழக்
கற்றுணைப்பூட்டியோர்கடலிற்பாய்ச்சினும்
நற்றுணையாவதுநமச்சிவாயவே. (௧)

பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை
யாவினுக்கருங்கலமரனஞ்சாடுதல்
கோவினுக்கருங்கலங்கோட்டமில்லது
நாவினுக்கருங்கலநமச்சிவாயவே. (௨)

விண்ணுறவடுக்கியவிறகின்வெவ்வழ
லுண்ணியபுகிலவையொன்றுமில்லையாம்
பண்ணியவுலகினிற்பயின்றபாவத்தை
நண்ணிநின்றறுப்பதுநமச்சிவாயவே. (௩)

இடுக்கண்பட்டிருக்கினுமிரந்தியாரையும்
விடுக்கிற்பிரானென்றுவினவுவோமல்லோ
மடுக்கற்கீழ்க்கிடக்கினுமருளினாமுற்ற
கடுக்கத்தைக்கெடுப்பதுநமச்சிவாயவே. (௪)

வெந்தநீறருங்கலம்விரதிகட்கெலா
மந்தணர்க்கருங்கலமருமறையாறங்கந்
திங்களுக்கருங்கலந்திகழுநீண்முடி
நங்களுக்கருங்கலநமச்சிவாயவே. (௫)

சலமிலன்சங்கரன்சார்ந்தவர்க்கலால்
நலமிலனாடொறுநல்குவானலன்
குலமிலராகிலுங்குலத்திற்கேற்பதோர்
நலமிகக்கொடுப்பதுநமச்சிவாயவே. (௬)

வீடினாருலகினில்விழுமியதொண்டர்கள்
கூடினாரந்நெறிகூடச்சென்றலு
மோடினேனோடிச்சென்றுருவங்காண்டலு
நாடினேனாடிற்றுநமச்சிவாயவே. (௭)

இல்லகவிளக்கதுவிருள்கெடுப்பது
சொல்லகவிளக்கதுசோதியுள்ளது
பல்லகவிளக்கதுபலருங்காண்பது
நல்லகவிளக்கதுநமச்சிவாயவே. (அ)

முன்னெறியாகியமுதல்வன்முக்கணன்
தன்னெறியேசரணாதறிண்ணமே
யந்நெறியேசென்றங்கடைந்தவர்க்கெலா
நன்னெறியாவதுநமச்சிவாயவே. (௯)

மாப்பிணைதழுவியமாதொர்பாகத்தன்
பூப்பிணைதிருந்தடிபொருந்தக்கைதொழ
நாப்பிணைதழுவியநமச்சிவாயப்பத்
தேத்தவல்லார்தமக்கிடுக்கணில்லையே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

பெருகிய வன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்முத லமரர் வாழ்த்துதற்
கரியவஞ் செழுத்தையு மரசு போற்றிடக்
கருநெடுங் கடலினுட் கன்மி தந்ததே.

(இ-ள்.) சிறந்த பேரன்பினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் உறுதியாகப் பெற்றிருக்கின்ற அன்பின் தன்மையினால், அரிய தாமரைமலரில்வாசஞ்செய்கின்ற பிரமன் முதலாகிய தேவர்கள் வாழ்த்துவதற்கு அருமையாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைத் திருநாவுக்கரசுசுவாமிகள் துதிசெய்ய, அதனால், கருமையாகிய நீண்டகடலினிடத்தில் கருங்கல்லாது மிதந்தது.—எ-று. (௧௨௭)

அப்பெருங் கல்லுமங் கரசு மேற்கொளத்
தெப்பமாய் மிதத்தலிற் செறிந்த பாசமுந்
தப்பிய ததன்மிசை யிருந்த நாவில்சீர்
மெய்ப்பெருந் தொண்டனார் விளங்கித் தோன்றினார்.

(இ-ள்.) அந்தப்பெரிய கல்லும் திருநாவுக்கரசுசுவாமிகள் மேற்பக்கத்தில் வீற்றிருக்கும்படிக்குத் தெப்பமாக மிதந்தபடியினால், அதனிடத்தில் கட்டப்பட்டிருக்கும் கயிறும் அறுந்துபோயிற்று; அந்தக் கல்லின்மேல் இருந்த குற்றமற்ற சிறப்பினையுடைய மெய்த்தொண்டராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் பிரகாசித்துத்தோன்றினார்.—எ-று. (௧௨௮)

இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
அருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல்
ஒருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ.

(இ-ள்.) நல்வினை தீவினையாகிய பாசமும், ஆணவமலமாகிய கல்லும் தம்மைக்கட்டியதனால் இடையறாதுவருகின்ற பிறவியாகிய கடலில்வீழ்ந்து வருந்துகின்ற மனிதர்கள் அக்கடலைக்கடந்து கரையேறும்படித் திருவருள்செய்கின்ற

உண்மைபொருந்திய ஸ்ரீபஞ்சாக்ஷரமானது திருநாவுக்கரசுசுவாமிகளை இந்தக்கடலில் கட்டிவிடப்பட்ட ஒருகல்லின்மேல் கரையேற்றியதைக்குறித்து ஒரு புதுமையாகச் சொல்லவேண்டுமோ! —எ-று. (கஉகூ)

அருணயந் தஞ்செழுத் தேத்தப் பெற்றவக்
கருணைநா வரசினைத் திரைக்க ரங்களாற்
றெருணெறி நீர்மையிற் சிரத்திற் றாங்கிட
வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம்.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருவருளைவிரும்பி ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைத் துதிக்கப்பெற்ற கருணையே திருவுருவமாகக்கொண்ட திருநாவுக்கரசுசுவாமிகளை அலையாகிய கைகளினால் தெளிந்தமுறைமையாகிய குணத்தோடு தன் சிரசினாலே தாங்கும்படி வருணபகவானும் முற்காலத்தில் மகத்தாகிய தவத்தைச்செய்தான் போலும்.—எ-று. (ககூ0)

வாய்ந்தசீர் வருணனே வாக்கின் மன்னனைச்
சேர்ந்தடை கருங்கலே சிவிகை யாயிட
ஏந்தியே கொண்டெழுந் தருளு வித்தனன்
பூந்திருப் பாதிரிப் புலியூர்ப் பாங்கரில்.

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்பினையுடைய வருணபகவான்தானே திருநாவுக்கரசுசுவாமிகளை அவர் சேர்ந்திருந்த கருங்கல்லே ஏறுதற்குரிய சிவிகையாக அலையாகிய கைகளால் தாங்கிக்கொண்டு அழகிய திருப்பாதிரிப்புலியூர் என்னுந்தலத்திற்குச் சமீபத்தில் எழுந்தருளும்படிச் செய்தான்.—எ-று. (ககூக)

அத்திருப் பதியினி லணைந்த வன்பரை
மெய்த்தவக் குழாமெலா மேவி யார்த்தெழ
எத்திசை யினுமர வென்னு மோசைபோற்
றத்துநீர்ப் பெருங்கடற் றானு மார்த்ததே.

(இ-ள்.) அந்தத் திருப்பாதிரிப்புலியூர் என்னும் க்ஷேத்திரத்தில் வந்து கரையேறிய திருநாவுக்கரசுசுவாமிகளை அங்கு வாசஞ்செய்கின்ற மெய்மையாகிய தவத்தினையுடைய சிவனடியார் கூட்டங்களெல்லாம் மகிழ்ச்சியினால் ஆரவாரித்துச் சூழ்ந்துகொள்ள, நான்கு திக்குகளிலும் அவ்வடியார்கள் கூறுகின்ற அரகர வென்னும் ஓசைபோல மடங்குகின்ற அலைநீரையுடைய பெரிய சமுத்திரமும் முழங்கியது.—எ-று. (ககூஉ)

தொழுந்தகை நாவினுக் கரசு தொண்டர்முன்
செழுந்திருப் பாதிரிப் புலியூர்த் திங்கள்வெண்
கொழுந்தணி சடையரைக் கும்பிட் டன்புற
விழுந்தெழுந் தருணெறி விளங்கப் பாடுவார்.

(இ-ள்.) யாவராலும் தொழத்தகுந்த பெருமையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் தம்மைவந்து சூழ்ந்த அடியார் திருக்கூட்டங்களோடு வளப்பம்பொருந்திய திருப்பாதிரிப்புலியூரில் வீற்றிருந்தருளும் வெண்மையாகிய இளம்பிறையைத்தரித்த சடைமுடியினையுடைய சிவபெருமானைக்கும்பிட்டு அன்போடு பூமியில்

சாஷ்டாங்கமாகவணங்கி யெழுந்து, அவ்வெம்பெருமானுடைய அருள்மயமாகப் பிரகாசிக்கின்ற சைவசமயநெறியானது விளங்கும்படிப் பாடுகின்றவராயினர்.

சைவாகமம், சத்திநிபாதத்துத்தமர்பொருட்டுச் சிவபெருமான் றனதரு ளாற் கூறப்பட்டதாதலின், அதன் வழித்தாகிய சைவசமயத்தை அருணெறி என்று கூறினர். (கஙக)

வேறு.

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாகி யெனவெடுத்துத்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்கட்கென்று
வான்றாழ் புனற்கங்கை வாழ்சடை யானைமற் றெவ்வுயிர்க்குஞ்
சான்றா மொருவனைத் தண்டமிழ் மாலைகள் சாத்தினரே.

(இ-ள்.) திருப்பதிகத்தின் முதலில் "ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாய்" என்று எடுத்து, "தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கு" என்று அத்திருவிருத்தத்தின் இறுதியில்வைத்து, ஆகாயத்தினின்றும் இறங்கிய நீர் மய மாகிய கங்கைநதிதங்கிய சடைமுடியையுடைய சிவபெருமானை, அடியவரல்லாத எல்லாவுயிர்களுக்கும் சிவசாட்சியாயெழுந்தருளியிருந்து அவ்வுயிர்கள் செய்கின்ற எல்லாக்காரியங்களையும் பார்த்துக்கொண்டிருக்கும் ஒப்பற்ற எமது ஆண்டவனைக் குறித்து இனிமைபொருந்திய தமிழ்ப்பதிகமாகிய மாலையைச்சாத்தினர்.—எ-று.

---

திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத்துகந்தான்மனத்துள்ளிருக்க
வேன்றாளிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கே.

திருந்தாவமணர்தந்தீநெறிப்பட்டுத்திகைத்துமுத்தி
தருந்தாளிணைக்கேசரணம்புகுந்தேன்வரையெடுத்த
பொருந்தாவரக்கனுடனெரித்தாய்பாதிரிப்புலியூ
ரிருந்தாயடியேனினிப்பிறவாமல்வந்தேன்றுகொள்ளே.

திருச்சிற்றம்பலம்.

இது - நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - தோன்றாத்துணையீசுவரர், தேவியார் - தோகையம்பிகையம்மை.

---

மற்று மினைய வண்டமிழ் மாலைகள் பாடிவைகி
வெற்றி மழவிடை வீரட்டர் பாதம் மிகநினைவில்
உற்றதொர் காதலி னங்குநின் றேகியொன் னார்புரங்கள்
செற்றவர் வாழுந் திருவதி கைப்பதி சென்றடைவார்.

(இ-ள்.) பின்னும் இத்தன்மையனவாகிய வளம்பொருந்திய தமிழ்ப்பதிகங் களைப்பாடிச் சிலநாள் அங்குவாசஞ்செய்து, வெற்றிபொருந்திய இளமையாகிய ரிஷபத்தைவாகனமாகவுடைய வீரட்டானேசுவரரது திருவடிகளை வணங்குவ

தற்கு மிகுதியாகத்தம்மனதில் பொருந்திய ஆசையினால் அத்திருப்பாதிரிப்புலி யூரில் நின்றும் எழுந்தருளிப் பகைவர்களின் திரிபுரங்களை எரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவதிகையென்னும் ஸ்தலத்தை யடைகின்றவராயினார்.-எ-று.

தேவர் பிரான்றிரு மாணி குழியுந் தினைநகரு
மேவினர் சென்று விரும்பிய சொன்மலர் கொண்டிறைஞ்சிப்
பூவலர் சோலை மணமடி புல்லப் பொருண்மொழியின்
காவலர் செல்வத் திருக்கெடி லத்தைக் கடந்தணைந்தார்.

(இ-ள்.) மெய்ப்பொருளமைந்த சொல்லினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருமாணிகுழியையும், திருத்தினைநகரையும் விருப்பங்கொண்டு சென்று, தம்மால் விரும்பப்பட்ட பாமாலையைச்சாத்தி வணங்கி, சோலையில் மலர்கின்ற மலர்களின் மணமானது தமது பாதங்களில் பொருந்தும்படிச் செல்வம்நிறைந்த திருக்கெடிலநதியைக்கடந்து சென்றார்.—எ-று. (கநசு)

வெஞ்சமண் குண்டர்கள் செய்வித்த தீய விறைகளெல்லாம்
எஞ்சவென் றேறிய வின்றமி ழீச ரெழுந்தருள
மஞ்சிவர் மாடத் திருவதி கைப்பதி வாணரெல்லாந்
தஞ்செயல் பொங்கத் தழங்கொலி மங்கலஞ் சாற்றலுற்றார்.

(இ-ள்.) கொடிய சமணர்களாகிய வஞ்சகர்கள் பல்லவராசனைக்கொண்டு செய்வித்த கொரேமாகிய துன்பங்களெல்லாம் தம்மைவருத்தாமல் நீங்கும்படி அவைகளைவென்று சமுத்திரத்தில்மிதந்து கரையேறிய சிறந்த திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்தருளிவருதலைக் கேள்வியுற்று, மேகங்கள் தவழ்கின்ற உப்பரிகைகளையுடைய திருவதிகையென்னும் ஸ்தலத்தில் வாழ்கின்ற சிவனடியார்களெல்லாரும் தங்களுடையமங்களகரமானசெய்கைளெல்லாம் விருத்தியாகும்படி, மிகுதியாகமுழங்குகின்ற மங்களவாத்தியஞ்செய்தார்கள்.—எ-று. (கநஎ)

மணிநெடுந் தோரணம் வண்குலைப் பூக மடற்கதலி
இணையுற நாட்டி யெழுநிலைக் கோபுரந் தெற்றியெங்குந்
தணிவில் பெருகொளித் தாமங்க ளாற்றிச்செஞ் சாந்துநீவி
யணிநகர் முன்னை யணிமே லணிசெய் தலங்கரித்தார்.

(இ-ள்.) நவரத்தினங்கள்பதித்த நீண்ட மகரதோரணங்களையும் வளம்பொருந்திய குலைகளையுடைய கமுகமரங்களையும், மடல்களையுடைய வாழைமரங்களையும் வரிசையாகநாட்டி, எழுநிலையையுடைய கோபுரங்களிலும், திண்ணைகளிலும் நீங்குதலில்லாத மிகுந்த ஒளியினையுடைய பொன்னரிமாலைகளைத் தொங்கவிட்டு, பூமியைச் சிவந்த சந்தனத்தினால் மெழுக்கிட்டு, அழகிய அந்நகரத்தை முன்னுள்ள அழகினும் அதிகமாகச்சிறப்புச்செய்து அலங்கரித்தார்கள்;—எ-று. (கநஅ)

மன்னிய வன்பின் வளநகர் மாந்தர் வயங்கிழையார்
இன்னிய நாதமு மேழிசை யோசையு மெங்கும்விம்மப்
பொன்னியல் சுண்ணமும் பூவும் பொரிகளுந் தூவியெங்குந்
தொன்னக ரின்புறஞ் சூழ்ந்தெதிர் கொண்டனர் தொண்டரையே.

(இ-ள்.) நிலைபெற்ற அன்பினையுடைய வளம்பொருந்திய அந்நகரத்தில் வாழ்கின்ற மனிதர்களும், விளங்குகின்ற ஆபரணத்தையணிந்த மாதர்களும் இனிமையாகிய வாத்தியங்களின் முழக்கமும், சப்தசுரங்களினுடைய இசையும் எவ்விடங்களிலும் மிகுந்து ஒலிக்க, அழகிய பொற்சுண்ணங்களையும், மலர்களையும், பொரிகளையும் எவ்விடங்களிலும் இறைத்துப் பழமையாகிய அந்நகரின்புறத்திலேவந்து சூழ்ந்து திருநாவுக்கரசுசுவாமிகளை எதிர்கொண்டார்கள்.—எ-று. (கரு௯)

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொன்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே.

(இ-ள்.) பரிசுத்தம்பொருந்திய திருவெண்ணீற்றை உத்தூளனஞ்செய்த அழகிய திருமேனியும், தாழ்வடமும், சிவபெருமானுடைய திருவடிகளைத்தியானித்துக்கொண்டிருக்கின்ற சிந்தையும், உள்ளிருக்கும் அன்பானது உருகிப் பாய்வதுபோல ஆனந்தபாஷ்பம் பொழிகின்ற கண்களும், இனிய சொற்களமைந்த திருப்பதிகங்களை அருளிச்செய்கின்ற சிவந்தவாயும் உடையவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அத்திருவதிகைத் திருவீதியினுள்ளே புகுந்தருளினார்.—எ-று.

கண்டார்கள் கைதலை மேற்குவித் திந்தக் கருணைகண்டான்
மிண்டாய செய்கை யமண்கையர் தீங்கு விளைக்கச்செற்றம்
உண்டா யினவண்ண மெவ்வண்ண மென்றுரைப் பார்கள்பின்னுந்
தொண்டாண்டு கொண்ட பிரானைத் தொழுது துதித்தனரே.

(இ-ள்.) எமது திருநாவுக்கரசுசுவாமிகளைக் கண்ட அந்நகரவாசிகள் தங்கள் கைகளைத் தலைமேற்குவித்து, இந்தக்கருணைத் திருவுருவத்தைத் தரிசித்தால், கொடுஞ்செய்கையையுடைய வஞ்சகர்களாகிய சமணர்கள் இவருக்குத் துன்பமுண்டாக்குவதற்கு ஏதுவாக அவர்களுக்குப்பகையுண்டானகாரணம் என்னவென்று வருந்திப் பின்னும் சிவபெருமானால் தொண்டராக அடிமைகொள்ளப்பட்ட அப் பேரருளாளரைவணங்கித் துதித்தார்கள்.—எ-று. (கசக)

இவ்வண்ணம் போல வெனைப்பல மாக்க ளியம்பியேத்த
மெய்வ்வண்ண நீற்றொளி மேவுங் குழாங்கள் விரவிச்செல்ல
அவ்வண்ண நண்ணிய வன்பரும் வந்தெய்தி யம்பவளச்
செவ்வண்ணர் கோயிற் றிருவீரட் டானத்தைச் சேர்ந்தனரே.

(இ-ள்.) இதுபோல மற்றைய எல்லாமனிதர்களும் புகழ்ந்து துதிக்கத் திருமேனியில் அழகிய விபூதியின் பிரகாசமானது விளங்கப்பெற்ற அடியார் திருக்கூட்டங்கள் தம்மோடு திரண்டுவர, அவ்வாறு எழுந்தருளிவருகின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் மகிழ்ந்துசென்று, அழகிய பவளம்போலும் சிவந்த நிறத்தினையுடைய சிவபெருமானது திருவீரட்டானமென்னுந் திருக்கோயிலை அடைந்தார்.—எ-று.

உம்பர்தங் கோனை யுடையபி ரானையுள் புக்கிறைஞ்சி
நம்புறு மன்பி னயப்புறு காதலி னாற்றிளைத்தே
எம்பெரு மானென்றனை யேழையே னன்பண் டிகழ்ந்ததென்று
தம்பரி வாற்றிருத் தாண்டகச் செந்தமிழ் சாற்றிவாழ்ந்தார்.

(இ-ள்.) தேவர்களுக்கு நாயகரும், எம்மை அடிமையாகவுடையவருமாகிய வீரட்டானேசுவரரைத் திருக்கோயிலினுள்ளே புகுந்து வணங்கி மிகவும் விரும்புகின்ற அன்பின் மிகுதியினாலுண்டாகிய ஆசையில் முழுகி "எம்பெருமான்றனை யேழையேனான்பண்டிகழ்ந்தது" என்று இறுதியில்வைத்துத் தமக்கு உண்டாகிய அன்பினால் ஏழைத்திருத்தாண்டகத்தமிழைப்பாடி மகிழ்வடைந்தார்.—எ-று.

---

**திருவதிகைவீரட்டானம். ஏழைத்திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

வெறிவிரவுகூவிளநற்றொங்கலானை
வீரட்டத்தானைவெள்ளேற்றினானைப்
பொறியரவினானைப்புள்ளூர்தியானைப்
பொன்னிறத்தினானைப்புகழ்தக்கானை
யறிதற்கரியசீரம்மான்றன்னை
யதியரையமங்கையமர்ந்தான்றன்னை
யெறிகெடிலத்தானையிறைவன்றன்னை
யேழையேனான்பண்டிகழ்ந்தவாறே.

மூலமறைக்கப்பட்டுநீராடப்பெண்கள்
முறைமுறையானங்கெய்வமென்றுதீண்டித்
தலைபறிக்குந்தன்மையர்களாகின்று
தவமென்றவஞ்செய்துதக்கதோரார்
மலைமறிக்கச்சென்றவிலங்கைக்கோனை
மதனழியச்செற்றசேவடியினானை
யிலைமறித்தகொன்றையந்தாரான்றன்னை
யேழையேனான்பண்டிகழ்ந்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

**வேறு.**

அரியயனுக் கரியானை யடியவருக் கெளியானை
விரிபுனல்சூழ் திருவதிகை வீரட்டா னத்தமுதைத்
தெரிவரிய பெருந்தன்மைத் திருநாவுக் கரசுமனம்
பரிவுறுசெந் தமிழ்ப்பாட்டுப் பலபாடிப் பணிசெயுநாள்.

(இ-ள்.) திருமால் பிரமன் என்னும் இருவர்களாலும் காண்டற்கு அரியவரும், மெய்யடியார்களுக்கு எளியவரும், பரந்த நீரையுடைய கெடிலநதியானது சூழ்ந்த திருவதிகை வீரட்டானத்தில் வீற்றிருந்தருளும் அமிர்தம் போன்றவருமாகிய சிவபெருமானை யாவராலும் அறிந்துரைப்பதற்கரிய மகிமையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் மனதிற்கு அன்பைவிளைக்கின்ற செவ்விய தமிழ்ப்பாடல்களை அநேகமாகப்பாடித் திருப்பணிசெய்து கொண்டிருக்கும்நாளில்.—எ-று.

திருமால் பிரமனென்னு மிருவரும் தற்போதத்தாலகங்கரித்துத் தாங்களே பிரமமென்று கூறி ஒருவரோடொருவர் மாறுகொண்டுதேடியும் காண்டற்கரி

யுளயினுனென்பார் 'அரியயனுக்கரியானை' என்றும், "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்" என்றபடியே பசுகரணங்கெட்ட சிவனடியார்கட்குக் கரதலாமலகம் போல எளிதின் விளங்கிப் பேரருள்புரிபவனென்பார் 'அடியவருக்கெளியானை' என்றும், எமது பேரருளாளராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அடைந்திருந்த சூலைநோயை நீக்குதற்குரிய அருமருந்தா யெழுந்தருளியிருந்தவ னென்பார் "வீரட்டானத்தமுதை' என்றுங் கூறினர்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கசச)

புல்லறிவிற் சமணர்க்காய்ப் பொல்லாங்கு புரிந்தொழுகும்
பல்லவனுந் தன்னுடைய பழவினைப்பா சம்பறிய
அல்லலொழிந் தங்கெய்தி யாண்டவர சிணைப்பணிந்து
வல்லமணர் தமைநீத்து மழவிடையோன் றாளடைந்தான்.

(இ-ள்.) அற்பமாகிய அறிவினையுடைய சமணர்களின் துர்ப்போதனைக்கு இசைந்து பொல்லாங்கான செய்கைகளைச்செய்து கொண்டிருந்த பல்லவராசனும் தன்னையடைந்திருந்த தீவினையாகிய பாசம் ஒழியுங்காலம் சமீபித்தபடியால் பிறவித்துன்பத்தினின்றும்நீங்கிக் கொடியவர்களாகிய சமணர்களையொழித்து அத்திருவதிகையையடைந்து எம்மை அடிமையாகவுடைய திருநாவுக்கரசுசுவாமிகளை வணங்கிச் சிவபெருமானுடைய திருவடிகளைத் துணையாகச்சேர்ந்தான்.—எ-று.

ஈண்டுப் பல்லவராசன் மழவிடையோன்றாளடைந்தானென்றது :— சமணர்களின் துர்ப்போதனையில் மயங்கி எமது திருநாவுக்கரசுசுவாமிகளுக்குப் பலவகைத் தீங்கிழைத்தும் அதனால் ஒரு சலனமுமின்றி விளங்கியிருந்த பெருமைகளைத்திறத்தைக்கண்டு அஞ்சி, தானும் அவரைச்சரணமாகவடைந்து சைவசமயத்திற் பிரவேசித்துச் சிவபெருமானுடைய திருவடியையடைதற்கு வேண்டிய முயற்சிசெய்தான் என்பதாம். (கசரு)

வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனுந் திருவதிகை நகரின்கட் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்திலமண் பள்ளியொடு பாழிகளுங்
கூடவிடித் துக்கொணர்ந்து குணதரவீச் சரமெடுத்தான்.

(இ-ள்.) மோக்ஷநெறியானது இப்படிப்பட்டதென்று அறிந்துகொள்ளாத சமணர்களின் துர்ப்போதனையைப் பொய்யென்று ஒழித்து, சைவசமயமே உண்மையானமார்க்கமென்று அறிந்துகொண்ட பல்லவராசனும் திருவதிகையில் சிவபெருமானுக்குப் பாடலிபுத்திரத்தில் சமணர்களுக்காகக் கட்டப்பட்டிருந்த மடங்களையும்,கோயில்களையும் ஒருங்குசேர இடித்துக்கொண்டுவந்து, குணதரவீச்சரமென்னும் ஆலயத்தைக்கட்டினன்.—எ-று.

பல்லவனுக்குக் காடவனென்றும் ஒருபெயர். (கசசு)

இந்நாளிற் றிருப்பணிகள் செய்கின்ற வின்றமிழ்க்கு
மன்னுன வாகீசத் திருமுனியு மதிச்சடைமேற்
பன்னுக மணிந்தவர்தம் பதிபலவுஞ் சென்றிறைஞ்சிச்
சொன்னமத் தமிழ்புனைந்து தொண்டுசெய்வான் றொடர்ந்தெழுவார்.

(இ-ள்.) அவ்வாறிருக்கும் நாள்களில் உழவாரத்திருத்தொண்டுசெய்கின்ற இனியதமிழ்த்தலைவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் சந்திரனையணிந்தசடைமுடியின்மேல் சர்ப்பங்களைத்தரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் பலஸ்தலங்களுக்கும்போய் வணங்கிப் புகழ்ந்துசொல்லப்பட்ட திருநாமமாகிய தமிழ்ப்பதிகங்களைப்பாடித் திருத்தொண்டுசெய்யும்படித் திருவுள்ளங்கொண்டு புறப்படுவதற்கு யத்தனப்பட்டார்.—எ-று. (கசஎ)

திருவதிகைப் பதிமருங்கு திருவெண்ணெய் நல்லூரும்
அருளுதிரு வாமாத்தூர் திருக்கோவ லூர்முதலா
மருவுதிருப் பதிபிறவும் வணங்கிவளத் தமிழ்பாடிப்
பெருகுவிருப் புடன்விடையார் மகிழ்பெண்ணா கடமணைந்தார்.

(இ-ள்.) திருவதிகைக்குச் சமீபத்திலிருக்கின்ற வெண்ணெய்நல்லூரும், அருளைத்தருகின்ற திருவாமாத்தூரும், திருக்கோவலூரும் முதலாகப் பொருந்திய பல திருப்பதிகளையும் வணங்கி இனிய தமிழ்ப்பதிகம்பாடி, மிகுந்த விருப்பத்தோடும் ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருப்பெண்ணாகடமென்னும் ஸ்தலத்தை யடைந்தருளினார்.—எ-று. (கசஅ)

கார்வளரு மாடங்கள் கலந்தமறை யொலிவளர்க்குஞ்
சீருடையத் தனர்வாழுஞ் செழும்பதியி னகத்தெய்தி
வார்சடையார் மன்னுதிருத் தூங்கானை மாடத்தைப்
பார்பரவுந் திருமுனிவர் பணிந்தேத்திப் பரவினார்.

(இ-ள்.) மேகங்கள்தவழ்கின்ற மாளிகைகளில் இசைபொருந்திய வேதங்களின் ஓசையையுண்டாக்குகின்ற சிறப்பினையுடைய வேதியர்கள் வாழ்கின்ற வளம்பொருந்திய திருப்பெண்ணாகடமென்னும்ஸ்தலத்தையடைந்து,நீண்டசடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருத்தூங்கானைமாடமென்னும் திருக்கோயிலை உலகத்தார்வணங்கத்தக்க சிறப்பினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் சாஷ்டாங்கமாகவணங்கி அஞ்சலிசெய்து துதித்தார்.—எ-று. (கசகூ)

புன்னெறியா மமண்சமயத் தொடக்குண்டு போந்தவுடல்
தன்னுடனே யுயிர்வாழத் தரியேனான் றரிப்பதனுக்
கென்னுடைய நாயகநின் னிலச்சினையிட் டருளென்று
பன்னுசெழுந் தமிழ்மாலை முன்னின்று பாடுவார்.

(இ-ள்.) இழிந்தமார்க்கமாகிய சமணசமயச்சார்பில் கட்டுப்பட்டு வருந்தமுற்றிருந்த இத்தேகத்துடனே உயிர்வாழ்வதற்குச்சிறிதும்பொறுக்கமாட்டேன்; ஆதலால், அடியேன் இவ்வுடலோடுகூடி உயிர்வாழ்ந்திருப்பதற்கு, எனது ஆண்டவரே! தேவரீருடைய இடபமுத்திரையையும், சூலமுத்திரையையும் அடியேன் மேற் பொறித்தருளவேண்டுமென்று, யாவருந் துதிக்கத்தக்க செவ்விய திருப்பதிகத்தைச் சந்நிதிக்குமுன்னே நின்று பாடுவாராயினார்.—எ-று. (கரு0)

பொன்னார்ந்த திருவடிக்கென் விண்ணப்ப மென்றெடுத்து
முன்னாகி யெப்பொருட்கு முடிவாகி நின்றவனைத்
தன்னாகத் துமைபாகங் கொண்டவனைச் சங்கரனைக்
கன்னாமத் திருவிருத்த மலஞ்சிறக்கப் பாடுதலும்.

(இ-ள்.) "பொன்னார்திருவடிக்கொன்றுண்டு விண்ணப்பம்" என்று முதலில் எடுத்து, எல்லாப்பொருள்களுக்கும் முதலாகியும், முடிவாகியும் நிற்கின்ற பெருமானை, தமது திருமேனியில் உமாதேவியாரை ஒருபாகமாகக்கொண்டருளிய கடவுளை, சங்கரனென்னும் திருநாமத்தினையுடைய எமது ஆண்டவனைக் குறித்த நன்மைபொருந்திய திருவிருத்தத்தை உலகத்தார் கடைத்தேறும்படியாகப் பாடவும்.—எ-று.

எவ்வகைப்பொருள்களுந் தோன்றுதற்குத் தான் முன்னிற்பவனென்பார் 'முன்னாகி' என்றும், அவை தோன்றியமுறையே யொடுங்குதற்கும் தான் இடனாய் நிற்கின்றவனென்பார் 'முடிவாகி' என்றும், கருணைத் திருவுருவமுடையவனென்பார் 'உமைபாகங்கொண்டவனை' என்றும், தாமெண்ணியவாறே திருவிலச்சினையைப் பொறிக்கும் அருள்வள்ளலென்பார் 'சங்கரனை' என்றுங் கூறினார்.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கருக)

---

திருத்தூங்கானைமாடம். திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்திருவடிக்கொன்றுண்டுவிண்ணப்பம்போற்றிசெய்யு
மென்னாவிகாப்பதற்கிச்சையுண்டேலிருங்கூற்றகல
மின்னாருமூவிலைச்சூலமென்மேற்பொறிமேவுகொண்டல்
துன்னார்கடந்தையுட்டூங்கானைமாடச்சுடர்க்கொழுந்தே. (க-உ-ங-ச)

ஆவாசிறுதொண்டனென்னினைந்தானென்றரும்பிணிநோய்
காவாதொழியிற்கலக்குமுன்மேற்பழிகாதல்செய்வார்
தேவாதிருவடிநீறென்னைப்பூசுசெந்தாமரையின்
பூவார்கடந்தையுட்டூங்கானைமாடத்தெம்புண்ணியனே. (ரு-சு-எ-அ-கூ)

கடவுந்திகிரிகடவாதொழியக்கயிலையுற்றான்
படவுந்திருவிரலொன்றுவைத்தாய்பனிமால்வரைபோல்
இடபம்பொறித்தென்னையேன்றுகொள்ளாயிருஞ்சோலைதிங்கள்
தடவுங்கடந்தையுட்டூங்கானைமாடத்தெந்தத்துவனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சுடர்க்கொழுந்தீசர். தேவியார் - கடந்தைநாயகியம்மை.

---

நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற
ஆடகமே ருச்சிலையா னருளாலோர் சிவபூத
மாடொருவ ரறியாமே வாகீசர் திருத்தோளிற்
சேடுயர்மூ விலைச்சூலஞ் சினவிடையி னுடன்சாத்த.

(இ-ள்.) உயர்ந்த திருத்தூங்கானைமாடமென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் பொன்மலையை வில்லாகக்கொண்டருளிய சிவபெருமானுடைய திருவருளினால் ஒரு சிவபூதமானது அருகிலுள்ள ஒருவரும் அறியாமல் திருநாவுக்கர

சுவாமிகளது இரண்டு திருத்தோள்களிலும் இரட்சியோடு உயர்ந்த மூவிலைச் சூல முத்திரையையும், ரிஷபமுத்திரையையும் சாத்தியருள.—எ-று.

சினம் = கோபம். (கரு௨)

ஆங்கவர்தந் திருத்தோளி லார்ந்ததிரு விலச்சினையைத்
தாங்கண்டு மனங்களித்துத் தம்பெருமா னருணினைந்து
தூங்கருவி கண்பொழியத் தொழுதுவிழுந் தார்வத்தால்
ஓங்கியசிந் தையராகி யுய்ந்தொழிந்தே னெனவெழுந்தார்.

(இ-ள்.) அத்திருநாவுக்கரசுசுவாமிகள் தம்முடைய திருத்தோள்களில் பொறிக்கப்பட்ட முத்திரைகளைத் தரிசித்து, மனதில் மகிழ்வடைந்து, தம்மை யாட்கொண்டருளிய சிவபெருமானுடைய திருவருளை நினைந்து, மிகுந்த அருவி யாற்றைப்போல ஆனந்தக்கண்ணீர் பொழியச் சாஷ்டாங்கமாகவணங்கி, அன்பி னால் சிறந்த திருவுள்ளமுடையவராய் அடியேன் தீவினையினின்றும் பிழைத்துக் கடைத்தேறினேனென்று எழுந்தார்.—எ-று. (கரு௩)

தூங்கானை மாடத்துச் சுடர்க்கொழுந்தி னடிபரவிப்
பாங்காகத் திருத்தொண்டு செய்துபயின் றமருநாள்
பூங்கானின் மணங்கமழும் பொருவிறிரு வரத்துறையும்
தேங்காவின் முகிலுறங்குந் திருமுதுகுன் றமும்பணிந்து.

(இ-ள்.) திருத்தூங்கானைமாடமென்னுந் திருக்கோயிலில் வீற்றிருந்தரு ளும் சுடர்க்கொழுந்தீசரது திருவடிகளைத்தொழுது நன்றாகத் திருத்தொண்டுசெ ய்து அங்கு வசித்திருக்குமநாள்களில், பூஞ்சோலையின் வாசனைவீசுகின்ற ஒப்பற்ற திருவரத்துறையையும், தேனையுடைய சோலைகளில் மேகங்கள் உறங்குகின்ற வி ருத்தாசலத்தையும் அடைந்து தரிசனஞ்செய்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கரு௪)

வண்டமிழ்மென் மலர்மாலை புனைந்தருளி மருங்குள்ள
தண்டுறைநீர்ப் பதிகளிலுந் தனிவிடையார் மேவியிடங்
கொண்டருளுந் தானங்கள் கும்பிட்டுக் குணதிசைமேற்
புண்டரிகத் தடஞ்சூழ்ந்த நிவாக்கரையே போதுவார்.

(இ-ள்.) வளம்பொருந்திய தமிழ்ச்சொற்களாகிய மெல்லியமலர்களால் தொடுத்த திருப்பதிகமாலையைச் சாத்தி, அதனருகிலுள்ள குளிர்ந்த நீர்த்துறைக ளையுடைய திருப்பதிகளிலுஞ் சென்று, ஒப்பற்ற ரிஷபவாகனத்தையுடைய சிவ பெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயில்களைவணங்கிக்கிழக்குத்திசைநோக்கித் தாமரைத்தடாகங்கள் சூழ்ந்த நிவாநதிக்கரையின்வழியாக வருகின்றவராயினார்.

ஆறாத சீர்த்தில்லை யம்பலத்தே யாடுகின்ற
வாறாறு புடைபரக்கு மலர்ச்சடையா ரடிவணங்கி
ஊனாலு முயிராலு முள்ளபயன் கொளநினைந்து
தேனாரு மலர்ச்சோலைத் திருப்புலியூர் மருங்கணைந்தார்.

(இ-ள்.) கெடாதசிறப்பினையுடைய திருத்தில்லையில் பொன்னம்பலத்தில் திருநடனஞ் செய்தருளுகின்ற ஸ்ரீநடராசப்பெருமானது திருவடியை வணங்கி,

உடலினாலும் உயிரினாலும் தாம்பெறவேண்டிய பிரயோசனத்தை யடையும்படி நினைத்துத் தேன்பொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த ஸ்ரீசிதம்பரத்தின் சமீபத்தில் அடைந்தார்.—எ-று.

வானாறு புடைபரக்கும் மலர்ச்சடையார் = ஆகாயகங்கையானது ஒருபக்கத்தில் பரவியிருக்கின்ற கொன்றைமலர்மாலையைத்தரித்த சடைமுடியையுடைய கடவுள். ஊனாலடையவேண்டிய பயன் காயிகமும், உயிராலடையவேண்டிய பயன் மானச வாசிகங்களுமாம். (கரு௬)

வேறு.

நாவுக் கரசரு மிருவர்க் கரியவர் நடமா டியதிரு வெல்லைப்பான் [டுங்
மேவித் தலமுற மெய்யிற் றொழுதபின் மேன்மே லெழுதரு விழைவோ
காவிற் களிமயின் மகிழ்வுற் றெதிரெதி ராடக் கடிகமழ் கமலஞ்சூழ்
வாவித் தடமலர் வதனம் பொலிவுறு மருதத் தண்பணை வழிவந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகளும்,பிரம விஷ்ணுக்களுக்கு அரியவராகிய ஸ்ரீநடராசப்பெருமான் திருநடனஞ்செய்தருளுகின்ற திருத்தில்லைத்திருவெல்லையை யடைந்து தேகம் பூமியிற்பொருந்தும்படி விழுந்து வணங்கினபின்பு, மேலுமேலும் அதிகரிக்கின்ற பேரன்போடும், சோலைகளில்வாழும் களிப்பினையுடைய மயில்கள் மகிழ்வடைந்து ஒன்றினோடொன்று எதிரெதிராக நின்று நடிக்க, வாசனைவீசுகின்ற தாமரைமலர்கள்பொருந்திய தடாகங்கள் அம்மலராகிய முகத்தினால் மகிழ்ச்சியடைகின்ற மருதநிலத்தின் குளிர்ந்த வயல்களின்வழியாக வந்தார்.—எ-று. (கருஎ)

முருகிற் செறியிதழ் முளரிப் படுகரின் முதுமே திகள்புது மலர்மேயும், அருகிற் செறிவன மெனமிக் குயர்கழை யளவிற் பெருகிட வளரிக்குப், பெருகிப் புடைமுதிர் தரளஞ் சொரிவன பெரியோ ரவர்திரு வடிவைக்கண், டுருகிப் பரிவுறு புனல்கண் பொழிவன வெனமுன் புள்வுள வயலெங்கும்.

(இ-ள்.) முதிர்ந்த எருமைகள் புதியமலர்களை மேய்வதற்கிடமாய்த் தேனையும் நெருங்கிய இதழ்களையுமுடைய தாமரைத்தடாகங்களினருகில், நெருங்கிய காடுபோல மிகவும் உயர்ந்திருக்கின்ற மூங்கில்களினளவாக உயர்ந்து வளர்ந்திருக்கின்ற கரும்புகள் கணுக்களில்தோன்றி முதிர்ந்த முத்துக்களைச் சொரிகின்றன; அவை, எமது பரமாசாரியராகிய திருநாவுக்கரசுசுவாமிகளின் திருவுருவத்தைப் பார்த்து மனமுருகி அன்பாலூறுகின்ற நீரைக் கண்களில்நின்றும் பொழிவனபோல வளம்பொருந்திய வயலிடங்களெங்கும் இருந்தன.—எ-று. (கருஅ)

அறிவிற் பெரியவ ரயனெற் பணைவய லவைபிற் படும்வகை யணைகின்றார், பிறவிப் பவநெறி விடுவீ ரிருவினை பெருகித் தொடர்பிணி யுறுபாசம், பறிவுற் றிடவணை யுமினென் றிருபுடை பயில்கூழ் சினைமிசை குயில்கூவுஞ், செறிவிற் பலதரு நிலையிற் பொலிவுறு திருநந் தனவன மெதிர்கண்டார்.

(இ - ள்.) அறிவிற்சிறந்தவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அயலிலுள்ள நெல்வினையும் வயல்கள் பின்னிடும்படி வருகின்றார்; ஆதலால், தமது பிறவிக்குக்

காரணமாயிருக்கின்ற பாவநெறிகளை யொழிக்கவேண்டுமென்னுங் கருத்தினையு டையவர்களே! நீங்கள் நல்வினை தீவினையென்னும் இருவினைகளும் அதிகப்பட் டுச் சங்கிலிபோலப் பிணிக்கப்பட்ட பாசமானது நீங்கும்படி இத்திருப்பதியை அடையுங்களென்று இரண்டுபக்கங்களிலுஞ் சூழ்ந்த கிளைகளிலிருந்து குயில்கள் கூவுகின்ற நெருக்கமாகிய பல மரங்களின் நிலையினால் விளங்குகின்ற திருநந்தன வனத்தைத் தமக்கு எதிராகக் கண்டார்.—எ-று. (கறுகூ)

அவர்முன் பணிவொடு தொழுதங் கணைவுற வணிகொம் பரின்மிசை யருகெங்குந், தவமுன் புரிதலில் வருதொண் டெனுநிலை தலைநின் றுயர் தமி ழிறையோராம், இவர்தந் திருவடி வதுகண் டதிசய மெனவந் தெ திர ரகரவென்றே, சிவமுன் பயின்மொழி பகர்கின் றனவளர் சிறைமென் கிளியொடு சிறுபூவை.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் சோலையைத் தமக்கு எதிரில் கண்டவு டனே வணக்கத்தோடு தொழுது அங்கு நெருங்கிவர, அழகிய அந்தநந்தனவனத்தி லுள்ள கொம்புகளின்மேலெல்லாம் வளர்ந்த மெல்லிய சிறகினையுடைய கிளிப் பிள்ளைகளோடு சிறிய நாகணவாய்ப் பறவைகளும், முற்பிறப்பில் தவஞ்செய்திருந்த படியால் தமக்குக் கிடைத்திருக்கும் அடிமையென்னும் நிலைமையில் முதன்மை யாக நின்று சிறப்புற்றிருக்கின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் என்னும் இப்பெரியோ ருடைய திருவுருவத்தைக்கண்டு, இஃது ஓர் அற்புதமா யிருக்கிறதென்று எதிராக வந்து அரகரவென்று சொல்லி, மங்களகரமாக முன்னேபழகிய வாழ்த்து மொழி களைக் கூறுகின்றன.—எ-று. (ககூ0)

அஞ்சொற் றிருமறை யவர்முன் பகர்தலு மவருந் தொழுதுமு னருள்கூரு, நெஞ்சிற் பெருகிய மகிழ்வுங் காதலு நெறியன் பொடுமுறை தடுமாறச், செஞ்சொற் றிருமறை மொழியந் தணர்பயி றில்லைத் திருநக ரெல்லைப்பால், மஞ்சிற் பொலிநெடு மதில்சூழ் குடதிசை மணிவா யிற்புறம் வந்துற்றார்.

(இ-ள்.) அச்சோலையிலுள்ள கிளிகளும், நாகணவாய்ப் பறவைகளும் அழகியவார்த்தையினால் தாம் பழகிய வேதவாக்கியங்களைத் திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு முன்னே ஓதினவளவில், அவரும்தொழுது, முன்னமே திருவருள்நிறைந்த மனதினிடமாக மிகுந்த சந்தோஷமும், பெருவிருப்பமுமுள்ளமுறைமையான அன்போடு, சொல்லும் வார்த்தைகள் குழறும்படி செவ்விய சொற்களமைந்த சிறந்தவேதங்களையோதும் தில்லைவாழ்ந்தணர்கள் வாழ்ந்திருக்கின்ற தில்லைமாநகரத்தின் எல்லையினுட்புறத்தில் மேகங்களோடு விளங்குகின்ற நீண்டமதில்சூழ்ந்த மேற்றிசைக்கோபுரத்தின் அழகிய திருவாசலைவந்து சேர்ந்தருளினார்.—எ-று. (ககூக)

அல்லற் பவமற வருளுந் தவமுத லடியா ரெதிர்கொள வவரோடு, மல்லற் புனல்கமழ் மாடே வாயிலின் வழிபுக் கெதிர்தொழு தணைவுற்றார், கல்வித் துறைபல வருமா மறைமுதல் கரைகண் டுடையவர் கழல்பேணுஞ், செல்வக் குடிநிறை நல்லவைப் பிடைவளர் சிவமே நிலவிய திருவீதி.

(இ-ள்) தம்மையடைந்தவர்களின் பிறவித்துன்பம் நீங்கும்படித்திருவருள் செய்யும் தவமுதல்வராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அடியார்கள் தம்மை எதிர்

கொண்டுவந்து காண, அவர்களோடு வளம்பொருந்திய நீர்தங்கிய அகழியை அருகி லுடைய மதில் வாசலின்வழியாகப் புகுந்து, அருமையாகிய சிறந்த வேதமுதலா கிய பலகலையும் நன்றாகவுணர்ந்து எம்மையடிமையாகவுடைய சிவபெருமானது திருவடிகளை விரும்புகின்ற செல்வம்பொருந்திய தில்லைமூவாயிரவர்கள் நிறைந்து வாசஞ்செய்யும், நல்ல தில்லைமாநகரத்தில் சிவமணம்வீசுகின்ற திருவீதியைத் தம க்கு எதிரேகண்டு தொழுது அடைந்தார்.—எ-று. (கசுஉ)

நவமின் சுடர்மணி நெடுமா லையுநறு மலர்மா லையுநிறை திருவீதிப், புவனங் களின்முத லிமையோர் தடமுடி பொருதுந் தியமணி போகட் டிப்,பவனன் பணிசெய வருணன் புனல்கொடு பணிமா றவுமவை பழுதா மென், றெவருந் தொழுதெழு மடியார் திருவல கிடுவார் குளிர்புனல் விடு வார்கள்.

(இ-ள்.) மின்னலைப்போல விளங்குகின்ற நீண்ட நவரத்தினமாலைகளும், நல்ல மணம்வீசுகின்ற மலர்மாலைகளும் நிறையத்தூக்கியிருக்கின்ற திருவீதியில் பல புவனங்களிலுமிருக்கின்ற முதன்மையாகிய தேவர்களுடைய இரத்தினமிழைத்த கிரீடங்கள் ஒன்றோடொன்று தாக்கியதனால் சிதறிக்கிடக்கின்ற இரத்தினங்களை ஒதுக்கி வாயுபகவான் திருவலகிடவும், வருணதேவன் நீரைத்தெளித்துத் திருப் பணிசெய்யவும் அவைகளிரண்டும் தகுதியுள்ளனவாயிருக்கவில்லையென்று, யாவ ராலும் வணங்குதற்குரிய சிவனடியார்கள் திருவலகிட்டுக் குளிர்ந்த நீரைக்கொண் டுவந்து தெளிப்பார்கள்.—எ-று. (கசுந)

மேலம் பரதல நிறையுங் கொடிகளில் விரிவெங் கதிர்நுழை வரிதா குங், கோலம் பெருகிய திருவீ தியைமுறை குலவும் பெருமையர் பணி வுற்றே, ஞாலந் திகழ்திரு மறையின் பெருகொலி நலமார் முனிவர்க டுதி யோடும், ஓலம் பெருகிய நிலையேழ் கோபுர முறையே கொடுதொழு துள் புக்கார்.

(இ-ள்.) ஆகாயத்தின்மேல் நிறைந்து விளங்குகின்ற கொடியாடைகளில் விரிந்த வெப்பமாகிய சூரிய கிரணங்கள் நுழையக்கூடாமலிருக்கின்ற அழகுபொ ருந்திய திருவீதியை விளங்குகின்ற பெருமையினையுடைய திருநாவுக்கரசுசுவாமி கள் முறைமையாகவணங்கி,உலகத்தில் பிரசித்தியாக விளங்குகின்ற வேதங்களின் மிகுந்த ஒலியானது நன்மைபொருந்திய முனிவர்கள்செய்யும் தோத்திரவோசை யோடும் மிகுந்தொலிக்கின்ற ஏழ்நிலைக்கோபுரத்தை முறையாகப்பணிந்து உள் ளே புகுந்தார்.—எ-று. (கசுச)

வளர்பொற் கனமணி திருமா ளிகையினை வலம்வந் தலமரு வனாநி ல்லா, அளவிற் பெருகிய வார்வத் திடையெழு மன்பின் கடனிறை யுட லெங்கும், புளகச் செறிநிரை விரவித் திருமலி பொற்கோ புரமது புகுவா ர்முன், களனிற் பொலிவிட முடையார் நடநவில் கனகப் பொதுவெதிர் கண்ணுற்றார்.

(இ-ள்.) சிறந்த பொன்மயமாகிய அழகிய திருமாளிகையை வலமாகவந்து சூழ்வதற்குள்ளே [illegible] மைவில்லாமல் பெருகிய ஆசையினால் அதிகரித்தெழுந்த அன் பாகிய கட [illegible] நிறைந்த திருமேனிமுழுமையும் நெருங்கிய மயிர்க்குச்செறிந்து

அழகிய பொன்மயமாகிய கோபுரத்தினுள்ளே புகுவதற்கு முன்னே, விஷம்பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமான் திருநடனஞ்செய்கின்ற பொன்னம்பலத்தைத் தமக்கு எதிரில் தரிசனஞ்செய்தருளினார்.—எ-று.

எமது திருநாவுக்கரசுசுவாமிகள் மேற்றிசைக் கோபுரத்தின்வழியாக உள்ளே புகுந்து திருமாளிகையைப் பிரதக்ஷணஞ்செய்தபின்பு, கீழ்த்திசையிலுள்ள இரண்டாங்கோபுரவழியே நுழைந்து கனகசபையைத் தமக்கு முன்னே தரிசித்தனரென அறிக.

(கசுரு)

நீடும் திருவுட னிகழும் பெருகொளி நிறையம் பலநினை வுறநேரே
கூடும் படிவரு மன்பா லின்புறு குணமும் பெறவரு நிலைகூடத்
தேடும் பிரமனு மாலுந் தேவரு முதலாம் யோனிக டெளிவொன்றா
ஆடுங் கழல்புரி யமுதத் திருநட மாரா வகைதொழு தார்கின்றார்.

(இ-ள்.) சிறந்த சிவஞானச்செல்வத்தோடு திவ்யதேஜசும் நிறைந்த திருவம்பலத்தைத் தன்கருத்தில் பொருந்தும்படி நேரேதரிசிக்கத் தம்மிடத்துண்டாகிய பேரன்பினால் ஆனந்தபரவசமாகுங் குணத்தைத் தாம்பெறத்தக்க நிலையானது வந்தடைய, முன்னாளில் தேடியறியாத பிரமன், விஷ்ணு, தேவர்கள் முதலாகிய எல்லாச்சீவராசிகளினுடைய வுணர்விற்கு விஷயமாய்த்தூக்கி யாடுகின்ற குஞ்சிதபாதத்தால் செய்கின்ற அமிர்தம்போன்ற ஆனந்தத்தாண்டவத்தைத் தம்முள்ளத்தில் தெவிட்டாதவண்ணம் வணங்கி நிறைகின்றவரானார்.—எ-று.

'அமுதத்திருநடம்' என்பதற்கு, தரிசித்த ஆன்மாக்கள் மோக்ஷமடைதற்குக் காரணமாகப்பொருந்திய திருநடனம், என்று பொருள் கூறினும் பொருந்தும்.

(கசுசு)

கையுந் தலைமிசை புனையஞ் சலியன கண்ணும் பொழிமழை யொழியா
பெய்யுந் தகையன கரணங் களுமுட னுருகும் பரிவின பேறெய்து [தே
மெய்யுந் தலமிசை விழுமுன் பெழுதரு மின்றாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் றிருநட மெதிர்கும் பிடுமவ ரார்வம் பெருகுத லளவின்றால்.

(இ-ள்.) இரண்டுகைகளும் சிரசின்மேல் அஞ்சலியாகக்குவிக்கப்பட்டிருக்கின்றன; கண்களும் பொழிகின்ற ஆனந்தக்கண்ணீர் நீங்காமல் சொரியுந்தன்மையையுடையன; மனம் - புத்தி - சித்தம் - அகங்காரமென்னும் அந்தக்கரணங்கள் நான்கும் ஒருங்கே உருகத்தக்க அன்பையுடையன; தன்னாலாகிய பயனைப்பெற்ற உடம்பும் பூமியில்விழுவதும் முன்னே எழுவதுமாயிருக்கும்; மின்னலைப்போல விளங்குகின்ற தாழ்ந்த சடையுடனே நின்று திருநடனஞ்செய்கின்ற சிவபெருமானது ஆனந்தத்தாண்டவத்தை எதிரேதரிசிக்கின்ற அந்தத் திருநாவுக்கரசுசுவாமிகளுடைய அன்பின்பெருக்கத்திற்கு ஓரளவில்லை.—எ-று. (கசுஎ)

இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ வென்றெய் தினையென
மன்றாடும், அத்தன் றிருவருள் பொழியுங் கடைவிழி யருள்பெற் றிடவரு மானந்த, மெய்த்தன் மையினில்வி ருத்தத் திருமொழி பாடிப் பின்னையு மேன்மேலுஞ், சித்தம் பெருகிய பரிவா லின்புறு திருநே ரிசைமொழி பகர்கின்றார்.

(இ-ள்.) எமது திருநாவுக்கரசுசுவாமிகள் இத்தன்மையினையுடையவராய்ப் பலதரமும் வணங்கி எழ, நீ இவ்விடத்திற்கு என்று வந்தாய் என்னுந் திருக்

குறிப்போடு கனகசபையில் நிருத்தஞ்செய்தருளுகின்ற ஸ்ரீநடராசப்பெருமானு டைய அருளைப்பொழிகின்ற கடைக்கண்ணின் கருணையைப்பெறுதலால் வருகின் ற உண்மையாகிய ஆனந்தத்தினால் திருவிருத்தத் திருப்பதிகம்பாடி, பின்னும் மேன்மேலும் திருவுள்ளத்தினின்றும் அதிகரித்தெழுந்த பேரன்பினால் இன்பத் தைத்தருகின்ற திருநேரிசையும் பாடுகின்றார்.—எ-று. (கசுஅ)

வேறு.

பத்தனாய்ப் பாட மாட்டே னென்றுமுன் னெடுத்துப் பண்ணால்
அத்தவுன் னுடல்காண்பா னடியனேன் வந்த வாறென்
றித்திறம் போற்றி நின்றே யின்றமிழ் மாலை பாடிக்
கைத்திருத் தொண்டு செய்யுங் காதலிற் பணிந்து போந்தார்.

(இ-ள்.) "பத்தனாய்ப்பாடமாட்டேன்" என்று பண்ணோடு முதலில் எடு த்து "அத்தாவுன்னுடல்காண்பானடியனேன் வந்தவாறே" என்று அச்செய்யுளி னிறுதியில் முடித்து இவ்விதமாகத்தொழுது நின்று, இனிய தமிழ்மாலையாகிய திருநேரிசைத் திருப்பதிகத்தைப் பாடி,உழவாரத் தொண்டுசெய்கின்ற விருப்பத்தி னால் வணங்கி அக்கனகசபையினின்றும் புறத்தில்வந்தார்.—எ-று. (கசுகூ)

---

கோயில் திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பத்தனாய்ப்பாடமாட்டேன்பரமனேபரமயோகி
யெத்தினாற்பத்திசெய்கேனென்னைநீயிகழவேண்டா
முத்தனேமுதல்வாதில்லையம்பலத்தாடுகின்ற
வத்தாவுன்னுடல்காண்பானடியனேன்வந்தவாறே.

எ
ண்மண்ணுண்டமாலவனுமலர்மிசைமன்னினானும்
விண்ணுண்டதிருவுருவம்விரும்பினார்காணமாட்டார்
கண்ணுண்டதிருவேமிக்கதில்லைச்சிற்றம்பலத்தே
பண்ணுண்டபாடலோடும்பரமயாடுமாறே.

திருச்சிற்றம்பலம்.

இது - சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - மூலத்தானநாயகர் - சபாநாதர்.

தேவியார் - உமையம்மை - சிவகாமியம்மை.

---

நீடிய மணியின் சோதி நிறைதிரு முன்றின் மாடும்
ஆடுயர் கொடிசூழ் பொற்றே ரணிதிரு வீதி யுள்ளுங்
கூடிய பணிகள் செய்து கும்பிடுந் தொழில ராகிப்
பாடிய புனித வாக்கின் பணிகளும் பயிலச் செய்வார்.

(இ-ள்.) சிறந்த இரத்தினங்களின் ஒளிநிறைந்த கனகசபையின் திருமுன் றிலின்புறத்திலும், அசைகின்ற உயர்ந்த கொடியாடைகள் கட்டியிருக்கின்ற பொ ன்மயமாகிய தேர்களினால் அழகுபெற்ற திருவீதிகளிலும் தம்மால் செய்யக்கூடிய திருப்பணிகள்செய்து வணங்குந் தொழிலுடையவராய்த் தம்மால்பாடப்பட்ட பரி

சுத்தம்பொருந்திய திருப்பதிகத்தின் பணிகளையும் பொருந்தும்படி செய்து கொண்டுவருவார்.—எ-று. (கஎo)

அருட்பெரு மகிழ்ச்சி பொங்க வன்னம்பா லிக்கு மென்னுந்
திருக்குறுந் தொகைகள் பாடித் திருவுழ வாரங் கொண்டு
பெருத்தெழு காத லோடும் பெருந்திருத் தொண்டு செய்து
விருப்புறு மேனி கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாட.

(இ-ள்.) அன்பினால் பேரானந்தமுண்டாக "அன்னம்பாலிக்கும்" என்னும் முதலையுடைய திருக்குறுந்தொகைத் திருப்பதிகம்பாடி அழகிய உழவாரப்படையைக் கையில்கொண்டு, அதிகரித்தெழுந்த ஆசையோடும் பெரியகைத்தொண்டையும்செய்து, யாவரும் விரும்பத்தக்க திருமேனியில் ஆனந்தக்கண்ணீரானது திருவெண்ணீற்றோடு கலந்து வண்டலாட்டயர.—எ-று.

மாதர்கள் கலவைச்சாந்தோடு பனிநீர்கலந்து ஒருவர்மேலொருவர் தெறித்து வண்டலாட்டயர்தல்போல, இவரது திருமேனியிலொழுகும் ஆனந்தக்கண்ணீர் விபூதியைக் கரைத்தொழுகுதலால் 'வண்டலாட்டயர' என்றார்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

---

## கோயில்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
யென்னன்பாலிக்குமாறுகொண்டின்புற
வின்னம்பாலிக்குமோவிப்பிறவியே.

மதுரவாய்மொழிமங்கையோர்பங்கினன்
சதுரன்சிற்றம்பலவன்றிருமலை
யதிரவார்த்தெடுத்தான்முடிபத்திற
மிதிகொள்சேவடிசென்றணைந்துய்ம்மினே.

திருச்சிற்றம்பலம்.

---

மேவிய பணிகள் செய்து விளங்குநாள் வேட்க ளத்துச்
சேவியல் கொடியார் தம்மைச் சென்றுமுன் வணங்கிப் பாடிக்
காவியங் கண்டர் மன்னுந் திருக்கழிப் பாலை தன்னி
லாவினுக் கரசர் சென்று நண்ணினார் மண்ணோர் வாழ.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் தமக்குரிய திருத்தொண்டுகளைச்செய்துகொண்டிருக்கும் நாள்களில், திருவேட்களத்திற்குப்போய் அங்குவீற்றிருந்தருளும் ரிஷபக்கொடியையுடைய சிவபெருமானைத்தொழுது திருப்பதிகம்பாடி, நீலமலர்போலுங் கரியகண்டத்தையுடைய அவ்வெம்பெருமான் வீற்றிருந்தருளும் திருக்கழிப்பாலையென்னும் ஸ்தலத்திற்கு உலகத்திலுள்ள ஆன்மகோடிகள் கடைத்தேறும்படி போய்ச்சேர்ந்தார்.—எ-று. (கஎஉ)

வேறு.

சினவிடையே றுகைத்தேறு மணவாள நம்பிகழல் சென்று தாழ்ந்து
வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே யென்கின் றாளென்
றனையதிருப் பதிகமுட னன்புறுவண் டமிழ்பாடி யங்கு வைகி
நினைவரியார் தமைப்போற்றி நீடுதிருப் புலியூரை நினைந்து மீள்வார்.

(இ-ள்.) கோபத்தையுடைய ரிஷபத்தை வாகனமாகக் கொண்டருளிய மணவாளநம்பியென்னும் சிவபெருமானுடைய திருவடிகளைச் சென்று வணங்கி, "வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே யென்கின்றாள்" என்று முதலில் எடுத்து அத் திருப்பதிகத்தோடு அன்புபொருந்திய வேறு சில திருப்பதிகங்களையும் பாடி அவ்விடத்தில் சிலநாள் வாசஞ்செய்து நினைப்பதற் கரியவராகிய சிவபெருமானைத் துதித்து உயர்வுபொருந்திய ஸ்ரீசிதம்பரத்தை நினைத்து அவ்விடத்தினின்றும் திரும்பி வருகின்றவராயினார். எ - று.

மணவாளநம்பி என்பது, திருக்கழிப்பாலையில் எழுந்தருளிய சிவலிங்கப்பெருமான் திருநாமம்; அது பிற்காலத்துப் பால்வண்ணநாதர் என்று வழங்குகின்றது. (கஎஉ)

திருக்கழிப்பாலை-பண்-காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

வனபவளவாய்திறந்துவானவர்க்குந்தானவனேயென்கின்றாளாற்
சினபவளத்திரடோண்மேற்சேர்ந்திலங்குவெண்ணீற்றனென்கின்றாளா
லனபவளமேகலையோடப்பாலைக்கப்பாலனென்கின்றாளாற்
கனபவளஞ்சிந்துங்கழிப்பாலைச்சேர்வானைக்கண்டாள்கொல்லோ.

அடர்ப்பரியவிராவணனையருவரைக்கீழடர்த்தவனேயென்கின்றாளாற்
சுடர்ப்பெரியதிருமேனிச்சுண்ணவெண்ணீற்றவனேயென்கின்றாளான்
மடற்பெரியவாலின்கீழறநால்வர்க்கன்றுரைத்தானென்கின்றாளாற்
கடற்கருவிசூழ்ந்தகழிப்பாலைச்சேர்வானைக்கண்டாள்கொல்லோ.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பால்வண்ணநாதர் தேவியார் வேதநாயகியம்மை.

---

மனைப்படப்பிற் கடற்கொழுந்து வளைசொரியுங் கழிப்பாலை மருங்கு நீங்கி
நனைச்சினைமென் குளிர்ஞாழற் பொழிலூடு வழிக்கொண்டு நண்ணும் போ
நினைப்பவர்தம் மனக்கோயில் கொண்டருளு மம்பலத்து நிருத்தனுரைத் [தி
தினைத்தனையாம் பொழுதுமறந்துய்வனோவெனப்பாடித் தில்லைசார்ந்தார்.

(இ-ள்.) வீடுகளின் பின்புறத்திலுள்ள தோட்டத்தில் சமுத்திரத்தினது அலைகள் சங்குகளை வீசுகின்ற திருக்கழிப்பாலையென்னுந் திருப்பதியினின்றும் நீங்கிக் கிளைகளில் அரும்புகளையுடைய மிருதுவான குளிர்ந்தமணம்வீசுகின்ற சுரபுன்னைச் சோலையின்வழியாக நடந்து வரும்போது, தம்மைத் தியானஞ்செய்கின்ற

அடியார்களின் மனதையே திருக்கோயிலாகக்கொண் டெழுந்தருளும் அம்பலக் கூத்தராகிய ஸ்ரீநடராசப்பெருமானை "நினைத்தனைப்பொழுதும் மறந்துய்வனோ" என்னுந் திருப்பதிகம்பாடி ஸ்ரீசிதம்பரத்தையடைந்தார்.—எ-று. (கஎ௪)

கோயில்-திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பனைக்கைமும்மதவேழமுரித்தவ
னினைப்பவர்மனங்கோயிலாக்கொண்டவ
னனைத்தும்வேடமாமம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனோ.

ஓங்குமால்வரையேந்தலுற்றான்சிரம்
வீங்கிவிம்முறவூன்றியதாளினான்
தேங்குநீர்வயல்சூழ்தில்லைக்கூத்தனைப்
பாங்கிலாத்தொண்டனேன்மறந்துய்வனோ.

திருச்சிற்றம்பலம்.

அரியானை யென்றெடுத்தே யடியவருக் கெளியானை யவர்தஞ் சிந்தை
பிரியாத பெரியதிருத் தாண்டகச்செந் தமிழ்பாடிப் பிறங்கு சோதி
விரியாநின் றெவ்வுலகும் விளங்கியபொன் னம்பலத்து மேவி யாடல்
புரியாநின் றவர்தம்மைப் பணிந்துதமி ழாற்பின்னும் போற்றல் செய்தார்.

(இ-ள்.) "அரியானை" என்று முதலில் எடுத்து அடியார்களுக்கு எளிவந்தருளும் பெருங்கருணையை யுடைய சிவபெருமானைக்குறித்து, அவ்வடியார்களுடைய திருவுள்ளத்தி னின்றும் நீங்காத பெரிய திருத்தாண்டகமென்னுஞ் செந்தமிழ்ப்பதிகத்தைப் பாடியருளி, மிகுந்த ஒளியைப்பரப்பி எவ்வுலகங்களிலும் சிறந்துவிளங்குகின்ற பொன்னம்பலத்தில்விரும்பி ஆனந்தத்தாண்டவஞ் செய்தருள்கின்ற ஸ்ரீநடராசப்பெருமானைத்தொழுது தமிழ்ப்பதிகத்தால் பின்னும் துதிசெய்தார்.—எ-று. (கஎரு)

கோயில்-பெரியதிருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

அரியானையந்தணர்தஞ்சிந்தையானை
யருமறையினகத்தானையணுவையார்க்குந்
தெரியாததத்துவனைத்தேனைப்பாலைத்
திகழொளியைத்தேவர்கடங்கோனைமற்றைக்
கரியானைநான்முகனைக்கனலைக்காற்றைக்
கனைகடலைக்குலவரையைக்கலந்துநின்ற
பெரியானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

காரொளியதிருமேனிச்செங்கண்மாலுங்
கடிக்கமலத்திருந்தயனுங்காணுவண்ணஞ்
சீரொளியதழற்பிழம்பாய்நின்றதொல்லைத்
திகழொளியைச்சிந்தைதனைமயக்கந்தீர்க்கும்
ஏரொளியையிருநிலனும்விசும்பும்விண்ணு
மேழுலகுங்கடந்தண்டத்தப்பானின்ற
பேரொளியைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

திருச்சிற்றம்பலம்.

---

செஞ்சடைக்கற் றைமுற்றத் திளநிலா வெறிக்குமென்னுஞ் சிறந்த வாய்
யஞ்சொல்வளத் தமிழ்மாலை யதிசயமாம் படிபாடி யன்பு சூழ்ந்த ✶ [மை
நெஞ்சுருகப் பொழிபுனல்வார் கண்ணிணையும் பரவியசொன் னிறைந்த
தஞ்செயலி னொழியாத திருப்பணியு மாறுது சாரு நாளில். [வாயுந்

(இ-ள்.) "செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலாவெறிக்கும்" என்னும் முதலையுடைய திருப்பதிகமாலையை யாவரும் அதிசயிக்கும்படிப் பாடியருளி, அன்புபொருந்திய திருவுள்ளமானது உருகுதலினால் ஆனந்தக்கண்ணீர் ஒழுகுகின்ற இரண்டுகண்களும், திருப்பதிகங்க ளோதுகின்ற சொற்கள் நிறைந்த திருவாயும், தமது செயலினின்றும் இடைவிடாமல் செய்கின்ற உழவாரத் திருத்தொண்டும் தவறாமல் செய்துகொண்டிருக்கும் நாள்களில்.—எ-று.

"சிறந்தவாய்மை யஞ்சொல்வளத்தமிழ்மாலை = சிறந்தஉண்மை பொருந்திய அழகிய சொற்களாலாகிய வளவிய தமிழ்ப்பதிகப்பாமாலை.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஎசு)

---

## கோயில்-திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

செஞ்சடைக்கற்றைமுற்றத்திளநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சடைகண்டனாரைக்காணலாநறவநாறு
மஞ்சடைசோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
துஞ்சடையிருள்கிழியத்துளங்கெரியாடுமாறே.

மதியிலாவரக்கனோடிமாமலையெடுக்கநோக்கி
நெதியன்றோணெரியவூன்றிநீடிரும்பொழில்கள்சூழ்ந்த
மதியந்தோய்தில்லைதன்னுண்மல்குசிற்றம்பலத்தே
யதிசயம்போலநின்றுவனலெரியாடுமாறே.

திருச்சிற்றம்பலம்.

கடையுகத்தி லாழியின்மேன் மிதந்ததிருக் கழுமலத்தி னிருந்த செங்கண், விடையுகைத்தார் திருவருளால் வெற்பரையன் பாவைதிரு முலைப்பா லோடு, மடையநிறை சிவம்பெருகி வளர்ஞானங் குழைத்தூட்ட வமுது செய்த, வுடையமறைப் பிள்ளையார் திருவார்த்தை யடியார்க ளுரைப்பக் கேட்டார்.

(இ-ள்.) கற்பாந்தத்தில் பெருகும் சமுத்திரவெள்ளத்தின்மேல் தோணியாக மிதந்த சீகாழியென்னும் ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவந்தகண்களையுடையரிஷபத்தை வாகனமாகச்செலுத்தும் சிவபெருமானது திருவருளினால்,பர்வதராசபுத்திரியாகிய உமாதேவியார் தம்முடைய திருமுலைப்பாலுடனே எங்கும் நிறைந்த சிவமயமாக விளங்கிவளர்கின்ற ஞானத்தைக்குழைத்து உண்பிக்க அதனைத்திருவமுதுசெய்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருடைய தெய்வீகமாகிய செய்கைகளை அடியார்கள் சொல்லக் கேள்விப்பட்டார்.—எ-று. (கஎஎ)

ஆழிவிட முண்டவரை யம்மைதிரு முலையமுத முண்ட போதே
ஏழிசைவண் டமிழ்மாலை யிவனெம்மா னெனக்காட்டி யியம்ப வல்ல
காழிவரும் பெருந்தகைசீர் கேட்டலுமே யதிசயமாங் காதல் கூர
வாழியவர் மலர்க்கழல்கள் வணங்குதற்கு மனத்தெழுந்தவிருப்புவாய்ப்ப.

(இ-ள்.) திருப்பாற்கடலிற்றோன்றிய ஆலாகலவிஷத்தைப்பானம்பண்ணியருளிய சிவபெருமானை,உமாதேவியார் ஊட்டிய திருமுலைப்பாலமுதத்தை யுண்டபொழுதே,இவனே எமது பெருமான் என்று சுட்டிக்காட்டி, சப்தசுரங்களோடு கூடிய வளம்பொருந்திய தமிழ்ப்பதிகத்தை அருளிச்செய்யும் வல்லமையைப்பெற்ற சீகாழியில் திருவவதாரஞ்செய்தருளிய பேரருளாளராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுடைய மகிமையைக் கேட்டபொழுதே அதிசயமாகிய பேரன்பானது அதிகரிக்க,[1] அவரது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கும் பொருட்டுத் தம்மனதில் ஆசையானது தூண்டுதலால்.—எ-று.

பெருந்தகை - அன்மொழித்தொகை. வாழி - அசைநிலை.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஎஅ)

அப்பொழுதே யம்பலத்து ளாடுகின்றகழல்வணங்கி யருண்முன் பெற்றுப்
பொய்ப்பிறவிப் பிணியோட்டுந் திருவீதி புரண்டுவலங் கொண்டு போந்தே
யெப்புவனங் களுநிறைந்த திருப்பதியி னெல்லையினை யிறைஞ்சி யேத்திச்
செப்பரிய பெருமையினார் திருநாரை யூர்பணிந்து பாடிச் செல்வார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளைத் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பமுண்டானபொழுதே பொன்னம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற ஸ்ரீநடராசப்பெருமானது திருவடிகளைவணங்கித் திருவருளைப்பெற்று, பொய்யாகிய பிறவிநோயை யோட்டுவதற்குக் கருவியாயிருக்கின்ற திருவீதியில் புரண்டுஅங்கப்பிரதக்ஷிணம்வந்து, சர்வலோகத்தி லுள்ளவர்களும் நிறைந்திருக்கின்ற ஸ்ரீசிதம்பரத்தின் திருவெல்லையை வணங்கித் துதித்து,சொல்லுதற்கரிய பெருமையினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் திருநாரையூர் என்னும் ஸ்தலத்தை வணங்கித் திருப்பதிகம்பாடி எழுந்தருள்வாராயினார்.—எ-று. (கஎகூ)

தொண்டர்குழாம் புடைசூழத் தொழுதகரத் தொடுநீறு துதைந்த கோலங், கண்டவர்த மனங்கசிந்து கரைந்துருகுங் கருணைபுறம் பொழிந்து காட்டத், தெண்டிரைவாய்க் கன்மிதப்பி லுகைத்தேறுந் திருநாவுக்கரசர் தாமும், வண்டமிழா லெழுதுமறை மொழிந்தபிரான் றிருப்புகலி மருங்கு சார்ந்தார்.

(இ-ள்.) அடியார் திருக்கூட்டமானது தம்மைச்சூழ்ந்துவர அஞ்சலிசெய்யும் திருக்கரத்தோடு திருவெண்ணீறுதரித்த திருக்கோலத்தைத்தரிசித்தவர்களுடைய மனம் இளகிக்கரைந்து உருகுதற்கேதுவாகிய திருவுள்ளக்கருணையானது தான் அகத்திலுள்ள நிலையைப் புறத்தில்பொழிந்துயாவர்க்கும் வெளிப்படுத்த,தெளிவாகிய அலைகளையுடைய சமுத்திரத்தில் சமணர்களிட்ட கருங்கல்லாகிய தெப்பத்தில் ஏறிநடத்திய திருநாவுக்கரசுசுவாமிகள் வளம்பொருந்திய தமிழ்மொழியினால் எழுதும் வேதமாகிய தேவாரப்பதிகத்தைப் பாடியருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருவவதாரஞ்செய்த சீகாழியின் சமீபத்தையடைந்தார்.

சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்டதும், வடமொழியிலுள்ளதுமாகிய வேதம் எழுதாக்கிளவியாதலின், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் பாடியருளிய தேவாரத்திருப்பதிகங்களை 'வண்டமிழாலெழுதுமறை' என்று கூறினார். ()

நீண்டவரை வில்லியார் வெஞ்சூலை மடுத்தருளி நேரே முன்னாள்
ஆண்டவர செழுந்தருளக் கேட்டருளி யாளுடைய பிள்ளை யாருங்
காண்டகைய பெருவிருப்புக் கைமிக்க திருவுள்ளக் கருத்தி னோடு
மூண்டவருண் மனத்தன்பர் புடைசூழ வெழுந்தருளி முன்னே வந்தார்.

(இ-ள்.) உயர்ந்த மகாமேருவை வில்லாகவுடைய சிவபெருமான் முன்னாளில் கொடிய சூலைநோயைக்கொடுத்துத் தாமே தடுத்தாட்கொள்ளப் பெற்றவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்தருளிவரக்கேட்டு, திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் அவரைத் தாம் தரிசிக்கவேண்டுமென்னும் பெரிய ஆசையானது அதிகரித்த திருவுள்ளக்குறிப்போடும் அன்புபொருந்திய மனத்தினையுடைய அடியார்கள் பக்கத்திலே சூழ எழுந்தருளி அவருக்கு எதிராகவந்தார்.—எ-று. (கஅக)

தொழுதணைவுற் றாண்டவர சன்புருகத் தொண்டர்குழாத் திடையே சென்று, பழுதில்பெருங் காதலுட னடிபணியப் பணிந்தவர்தங் கரங்கள் பற்றி, யெழுதரிய மலர்க்கையா லெடுத்திறைஞ்சி விடையின்மேல் வருவார் தம்மை, யழுதழைத்துக் கொண்டவர்தா மப்பரோ யெனவவரு மடியே னென்றார்.

(இ - ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் தொழுதுகொண்டே வந்து அன்பானது கசிந்துருகும்படி அடியார் திருக்கூட்டத்தி னடுவே சென்று, குற்றமற்ற பேரன்போடு ஆளுடையபிள்ளையாரது திருவடிகளில் வணங்கவும், ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளிவருகின்றவராகிய சிவபெருமானைத் திருத்தோணிச் சிகரத்தைப் பார்த்து அழுது அழைத்துத் தமக்குக் காட்சிகொடுக்கப்பெற்றுக் கொண்டவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் எழுதுவதற் கரிய தாமரைமலர்போன்ற தமது திருக்கரங்களால் அவ்வாறு வணங்கிய அவருடைய திருக்கரங்களைப்பிடி

த்து எடுத்துத் தாமும் அஞ்சலிசெய்து அப்பரோ! என்று திருவாய்மலர்ந்தருள, அதற்கு அத் திருநாவுக்கரசுசுவாமிகள் அடியேன் என்று அருளிச்செய்தார்.—எ-று.

அம்பிகைசெம் பொற்கிண்ணத் தமுதஞா னங்கொடுப்ப வழுகை தீர்ந்த
செம்பவள வாய்ப்பிள்ளை திருநாவுக் கரசரெனச் சிறந்த சீர்த்தி
யெம்பெருமக் களுமியைந்த கூட்டத்தி லரனடியா ரின்ப மெய்தி[ல்லாம்
யும்பர்களும் போற்றிசைப்பச் சிவம்பெருகு மொலிநிறைத்தா ருலக மெ

(இ-ள்.) உமாதேவியார் சிவந்த பொற்கிண்ணத்தில் திருமுலைப்பாலோடு ஞானத்தையும் கலந்து ஊட்ட, அதனை உண்டு அழுகை நீங்கிய சிவந்த பவளம் போலும் திருவாயினையுடைய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகள் என்று சொல்லப்பட்ட மிகுந்த புகழினையுடைய எமது இரண்டு பெருமக்களும் சேர்ந்த திருக்கூட்டத்திலுள்ள சிவனடியார்கள் ஆனந்தத்தை யடைந்து,தேவர்களும் துதிசெய்யும்படி மங்கலகரமான பேரோசையை உலகமெல்லாம் நிறைத்தார்கள்.—எ-று. (௧அ௫)

பிள்ளையார் கழல்வணங்கப் பெற்றேனென் றரசுவப்பப் பெருகு ஞான
வள்ளலார் வாகீசர் தமைக்காணப் பெற்றதற்கு மகிழ்ச்சி பொங்க
உள்ளநிறை காதலினு லொருவரொரு வரிற்கலந்த வுண்மை யோடும்[கார்
வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந்தார் கழல்வணங்கும் விருப்பின் மிக்

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாருடைய திருவடிகளை யான்வணங்கத்தக்க பேறுபெற்றேனென்று திருநாவுக்கரசுசுவாமிகள் மகிழ்ச்சியடையவும், மிகுந்த சிவஞானத்தை யுடைய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகளைத் தரிசிக்கப்பெற்றதற்கு மகிழ்ச்சியடையவும், மனதில் நிறைந்த ஆசையின் மிகுதியினால் ஒருவரோடொருவர் கலந்த உண்மையோடும் பிரளயவெள்ளத்தின் நீர்மேல் மிதந்த திருத்தோணியில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கும் விருப்பத்தில் சிறந்தவரானார்கள்.—எ-று.

வேறு.

அருட்பெருகு தனிக்கடலு முலகுக் கெல்லா மன்புநிறை கடலுமா மெனவும் பொங்கும், பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவன முய்ய, விருட்கடுவுண் டவரருளும கில மெல்லா மீன்றாடன் றிருவருளு மெனவுங் கூடித், தெருட்கலைஞானக் கன்று மரசுஞ் சென்று செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தா ரன்றே.

(இ-ள்.) எல்லா வுலகங்களுக்கும் திருவருள் பாலிக்கின்ற ஒப்பற்ற கருணைக்கடலும், அன்பு நிறைந்த ஓர்கடலும் போலவும், சிறந்த சிவபரம்பொருளை முதன்மையாகக்கொண்ட சைவசமயநெறியானது தான் பெற்றுக்கொண்ட புண்ணியசொரூபமாகிய இரண்டு கண்கள்போலவும், உலக முய்யும்பொருட்டுக் கரிய விஷத்தையுண்டருளிய சிவபெருமானுடைய திருவருளும் சர்வலோகங்களையும் பெற்றருளிய உமாதேவியாருடைய திருவருளும் போலவும் ஒருங்குசேர்ந்து, தெளிவாகிய எல்லாக்கலைஞானங்களையும் ஓதாதுணர்ந்த திருஞானசம்பந்தமூர்த்தி

சுவாமிகளும் திருநாவுக்கரசுசுவாமிகளும் எழுந்தருளிச் சிவந்தசடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலை யடைந்தார்கள்.—எ-று.

பண்பயில்வண் டறைசோலை சூழுங் காழிப் பரமர்திருக் கோபுரத்தைப் பணிந்துள் புக்கு, விண்பணிய வோங்குபெரு விமானந் தன்னை வலங்கொண்டு தொழுதுவிழுந் தெழுந்த வெல்லை, சண்பைவரு பிள்ளையாரப்ப ருங்க டம்பிரா னைநீர் பாடி சொன்னக், கண்பயிலும் புனல்பொழிந்த வரசும் வாய்மைக் கலைபயிலு மொழிபொழியக் கசிந்து பாடி.

(இ-ள்.) பலவகை இராகங்களையும் பயின்ற வண்டுகள் பாடுகின்ற சோலைகள் சூழ்ந்த சீகாழிப்பதியில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருக்கோபுரத்தைப்பணிந்து உள்ளே புகுந்து, விண்ணுலகமும் தாழும்படி உயர்ந்திருக்கின்ற பெரியவிமானத்தைப் பிரதக்ஷிணம்வந்து சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்தபொழுது,திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகளைப்பார்த்து அப்பரே! உங்கள் ஆண்டவனை நீர் பாடுவீராகவென்று அருளிச்செய்ய,கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சொரிந்த திருநாவுக்கரசுசுவாமிகளும் உண்மையாகிய கலைகளிலுள்ள நல்லசொற்கள் பொருந்தும்படி மனங்கசிந்து பாடி.—எ-று. (கஅசு)

இதுமுதல் மூன்றுபாடலுங்குளகம்.

பெரியபெரு மாட்டியுடன் றோணி மீது பேணிவீற் றிருந்தருளும் பிரான்முன் னின்று,பரிவுறுசெந் தமிழ்மாலை பத்தி யோடும் பார்கொண்டு மூடியெனும் பதிகம் போற்றி, அரியவகை புறம்போந்து பிள்ளை யார்தந் திருமடத்தி லெழுந்தருளி யமுது செய்து, மருவியநண் புறுகேண்மை யற்றை நாள்போல் வளர்ந்தோங்க வுடன்பலநாள் வைகு நாளில்.

(இ-ள்.) பெரிய பிராட்டியாருடனே திருத்தோணியின்மேல் விரும்பி வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருமுன்னே நின்று ஆசைமிகுந்த செந்தமிழ்ப்பாமாலையாகிய "பார்கொண்டுமூடி" என்னும் திருப்பதிகத்தைப் பத்தியோடும் பாடித்துதித்து நீங்குதற்கரிய ஆராமையோடு புறத்தேவந்து திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுடைய திருமடத்தி லெழுந்தருளித் திருவமுதுசெய்து, ஒருவரோடொருவர் கலந்து பெற்ற சினேகமானது இருவருங்கண்ட அந்நாள்போல நாளுக்குநாள் வளர்ந்தேற இருவருங்கலந்து பலநாள் வசிக்கும் நாள்களில்.—எ-று.

---

## திருக்கழுமலம் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

பார்கொண்டுமூடிக்கடல்கொண்டஞான்றுநின்பாதமெல்லாம்
நாலஞ்சுபுள்ளினமேந்தினவென்பர்நளிர்மதியங்
கால்கொண்டவண்கைச்சடைவிரித்தாடுங்கழுமலவர்க்
காளன்றிமற்றுமுண்டோவந்தணுழியகவிடமே.

கரையார்கடல்சூழிலங்கையர்கோன்றன்முடிசிதறத்
தொலையாமலரடியூன்றலுமுள்ளம்விதிர்விதிர்த்துத்

தலையாய்க்கிடந்துயர்ந்தான்றன்கழுமலங்காண்பதற்கே
யலையாப்பரிசிவைநாடோறுநந்தம்மையாள்வனவே.

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் - சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பிரமபுரீசர், தேவியார் - திருநிலைநாயகி.

திருத்தோணியில் வீற்றிருப்பவர் - தோணியப்பர்.

---

அத்தன்மை யினிலரசும் பிள்ளை யாரு மளவளா வியமகிழ்ச்சி யள விலாத, சித்தநெகிழ்ச் சியினோடு செல்லு நாளிற் றிருநாவுக் கரசர்திரு வுள்ளந் தன்னின், மைத்தழையு மணிமிடற்றார் பொன்னி நாட்டு மன்னி யதா னங்களெல்லாம் வணங்கிப் போற்ற,மெய்த்தெழுந்த பெருங்காதல் பிள்ளை யார்க்கு விளம்புதலு மவருமது மேவி நேர்வார்.

(இ-ள்.) அத்தன்மையாகிய திருநாவுக்கரசுசுவாமிகளும்,திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகளும் ஒருவரோடொருவர் கலந்ததனாலுண்டாகிய சந்தோஷமான து அளவில்லாத மனவுருக்கத்தோடு அதிகரிக்கவாழும் நாள்களில் திருநாவுக்கரசு சுவாமிகள், கரியகண்டத்தினையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் சோழ நாட்டில் நிலைபெற்றுள்ள திருப்பதிகளையெல்லாம் வணங்கித் துதிக்கும்படி திருவுள் ளத்தில் உண்மையாய் உதித்தெழுந்த பெருங்காதலைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குச்சொல்லவும், அவரும் அதற்கு உடன்படுவாராயினார்.—எ-று. ()

ஆண்டவர செழுந்தருளக் கோலக் காவை யவரோடுஞ் சென்றிறை ஞ்சி யன்பு கொண்டு, மீண்டருளி னாரவரும் விடைகொண் டிப்பால் வே தநா யகர்விரும்பும் பதிக ளான,நீண்டகருப் பறியலூர் புன்கூர் நீடூர் நீடு திருக் குறுக்கைதிரு நின்றி யூருங், காண்டகைய நனிபள்ளி முதலா நண் ணிக் கண்ணுதலார் கழறொழுது கலந்து செல்வார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் சீகாழியினின்றும் எழுந்தருள, அவ ரோடும் திருக்கோலக்காவிற்குச்சென்று வணங்கி அன்புடனே திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள் சீகாழிக்குத்திரும்பி யருளினார்; அப்பர்சுவாமிகளும் அவரிடத் தில் விடைபெற்றுக்கொண்டு, பின்பு, வேதங்களுக்கு முதல்வராகிய சிவபெரு மான் விரும்பி வீற்றிருந்தருளும் திருப்பதிகளாகிய பெருமைபொருந்திய திருக்கரு ப்பறியலூர் - திருப்புன்கூர் - திருநீடூர் - சிறந்த திருக்குறுக்கை திருநின்றியூர் - கா ணத்தகுந்த திருநனிபள்ளிமுதலாகிய ஸ்தலங்களையடைந்து ஆங்காங்குவீற்றிரு ந்தருளும் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது திருவடிகளைத்தொழுது அன் போடு கலந்து செல்கின்றவராயினார்.—எ-று. (கஅகூ)

மேவுபுனற் பொன்னியிரு கரையுஞ் சார்ந்து விடையுயர்த்தார் திரு ச்செம்பொன் பள்ளி பாடிக், காவுயரு மயிலாடு துறைநீள் பொன்னிக் க ரைத்துருத்தி வேள்விக்குடி யெதிர்கொள் பாடி, பாவுறுசெந் தமிழ்மாலை பாடிப் போற்றிப் பரமர்திருப் பதிபலவும் பணிந்து போந்தே, யாவுறுமஞ் சாடுவார் கோடி காவி லணைந்துபணிந் தாவடுதண் டுறையைச் சார்ந்தார்.

(இ-ள்.) நீர் பெருகிவருகின்ற காவிரிநதியின் இரண்டுபக்கத்திலுஞ் சென்று, ரிஷபக்கொடியையுயர்த்திய சிவபெருமான்வீற்றிருந்தருளும் திருச்செம்பொன்பள்ளியும், சோலைகள் உயர்ந்த திருமயிலாடுதுறையும், திருத்துருத்தியும், திருவேள்விக்குடியும்,திருவெதிர்கொள்பாடியுமாகிய க்ஷேத்திரங்களுக்குப்போய்ச்சிறப்புப்பொருந்திய செந்தமிழ்ப்பதிகப்பாமாலைகளைப் பாடித்துதித்து, அவ்வெம்பெருமான் எழுந்தருளியிருக்கும் மற்றைத் திருப்பதிகளையும் வணங்கிச்சென்று, பஞ்சகவ்வியத்தை அபிஷேகங்கொண்டருளும் அக்கடவுளுடைய திருக்கோடிக்காவிற்குப்போய்ப்பணிந்து திருவாவடுதுறையைச் சேர்ந்தருளினர்.—எ-று.

திருமயிலாடுதுறை என்பது- மாயூரம்.		(கக௦)

ஆவடுதண் டுறையாரை யடைந்துய்ந் தேனென் றளவிறிருத் தாண்டகமுன் னருளிச் செய்து, மேவுதிருக் குறுந்தொகையு நேரிசையுஞ் சந்த விருத்தங்க ளானவையும் வேறு வேறு, பாவலர்செந் தமிழ்த்தொடையாற் பள்ளித் தாமம் பலசாத்தி மிக்கெழுந்த பரிவி னோடும், பூவலயத் தவர்பரவப் பலநாட் டங்கிப் புரிவுறுகைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார்.

(இ-ள்.) திருவாவடுதுறையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை "அடைந்துய்ந்தேன்" என்னும் இறுதியையுடைய ஒப்பற்ற திருத்தாண்டகத்திருப்பதிகம்பாடியருளி, பின் திருக்குறுந்தொகையும், திருநேரிசையும், திருச்சந்தவிருத்தங்களுமாகிய வேறுவேறாகச் செந்தமிழ்ப்பதிகப்பாமாலைகளைச் சாத்தி அதிகரித்தெழுந்த பேரன்போடும் இப்பூவுலகத்திலுள்ளவர்கள் துதிக்கும்படி அநேகநாள் அவ்விடத்திலேயே வசித்திருந்து உழவாரப்படையைக்கொண்டு செய்யும் கைத்தொண்டினைவிரும்பிச் செய்கின்றவராயினர்.—எ-று.		(ககக)

---

**திருவாவடுதுறை-திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

நம்பனைநால்வேதங்கரைகண்டானை
ஞானப்பெருங்கடலைநன்மைதன்னைக்
கம்பனைக்கல்லாலிருந்தான்றன்னைக்
கற்பகமாயடியார்கட்கருள்செய்வானைச்
செம்பொன்னைப்பவளத்தைத்திரளுமுத்தைத்
திங்களைஞாயிற்றைத்தீயைநீரை
யம்பொன்னையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே.

தரித்தானைத்தண்கடனஞ்சுண்டான்றன்னைத்
தக்கன்றன்பெருவேள்விதகர்த்தான்றன்னைப்
பிரித்தானைப்பிறைதவழ்செஞ்சடையினானைப்
பெருவலியால்மலையெடுத்தவரக்கன்றன்னை

நெரித்தானைநேரிழையாள்பாகத்தானை
நீசனேனுடலுறுநோயானதீர
வரித்தானையாவடுதண்டுறையுண்மேய
வானடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே.

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-மாசிலாமணியீசுவரர். தேவியார்-ஒப்பிலாமுலையம்மை.

---

எறிபுனல்பொன் மணிசிதறு கரைநீர்ப் பொன்னி யிடைமருதைச் சென்றெய்தி யன்பி னோடு, மறிவிரவு கரத்தாரை வணங்கி வைகி வண்ட மிழ்ப்பா மாலைபல மகிழச் சாத்திப், பொறியரவம் புனைந்தாரைத் திருநா கேச் சரத்துப் போற்றியருந் தமிழ்மாலை புனைந்து போந்து, செறிவிரைந ன் மலர்ச்சோலைப் பழையா றெய்தித் திருச்சத்தி முற்றத்திற் சென்று சேர்ந்தார்.

(இ-ள்.) வீசுகின்ற அலைநீரானது பொன்னையும், மணிகளையும் சிதறுகின்ற கரையினையுடைய காவிரிநதியின் அருகிலுள்ள திருவிடைமருதூரை அடைந்து அன்புடனே மானைத்தரித்த கையினையுடைய சிவபெருமானைத்தொழுது அங்குச் சிலநாள் வாசஞ்செய்து, வளம்பொருந்திய பல தமிழ்ப்பதிகமாலைகளை மகிழும்படி சாத்தி, படப்பொறியையுடைய பாம்பை ஆபரணமாகத்தரித்த அக்கடவுளைத் திருநாகேச்சரமென்னும் ஸ்தலத்திற்சென்று வணங்கி அரிய தமிழ்ப்பதிகமாலையைச் சாத்தி, அவ்விடத்தினின்றும் புறப்பட்டு வாசனைபொருந்திய நல்லமலர்களையுடைய சோலைசூழ்ந்த திருப்பழையாற்றுக்கு வந்து, திருச்சத்திமுற்றமென்னும் ஸ்தலத்தை யடைந்தார்.—எ-று. (௧௬௨)

வேறு.

சென்று சேர்ந்து திருச்சத்தி முற்றத் திருந்த சிவக்கொழுந்தைக்
குன்ற மகடன் மனக்காதல் குலவும் பூசை கொண்டருளும்
என்று மினிய பெருமானை யிறைஞ்சி யியல்பிற் றிருப்பணிகண்
முன்றி லணைந்து செய்துதமிழ் மொழிமா லைகளுஞ் சாத்துவார்.

(இ-ள்.) (திருநாவுக்கரசுசுவாமிகள்) திருச்சத்திமுற்றமென்னும் ஸ்தலத்தையடைந்து அங்குவீற்றிருந்தருளும் சிவக்கொழுந்தீசரும், பர்வதராசபுத்திரியாகிய உமாதேவியார் தமது திருவுள்ளத்தில் அன்போடுசெய்த பூசையை ஏற்றுக்கொண்டருளியவரும், மெய்யடியார்களுக்கு எக்காலத்தும் இனியராயிருந்து பேரருள்புரிபவருமாகிய சிவபெருமானைத்தொழுது அத்திருக்கோயிலின் திருமுற்றத்திற்சென்று தாம் இயல்பான அன்போடுசெய்கின்ற உழவாரத் திருப்பணிகளைச் செய்து, தமிழ்ச்சொற்களாலாகிய திருப்பதிகமாலைகளையும் பாடிச் சாத்துகின்றவராயினர்.—எ-று.

"குன்றமகடன்மனக்கோயில் குலவும்பூசை கொண்டருளும் பெருமான்" என்றதனால், உமாதேவியார் சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்றது இத்திருச்சத்திமுற்றமென்பது விளங்குகின்றது.

கோவாய் முடுகி யென்றெடுத்துக் கூற்றம் வந்து குமைப்பதன்முன்
பூவா ரடிக ளென்றலைமேற் பொறித்து வைப்பா யெனப்புகன்று
நாவார் பதிகம் பாடுதலு நாதன் றானு நல்லூரில்
வாவா வென்றே யருள்செய்ய வணங்கி மகிழ்ந்து வாகீசர்.

(இ-ள்.) "கோவாய்முடுகி" என்று முதலில் எடுத்து "கூற்றம்வந்து குமைப்பதன்முன் பூவாரடிகளென்றலைமேற் பொறித்துவைப்பாய்" என்று கூறி, நாவானது நிறைந்த திருப்பதிகம்பாடவும், அதற்குச் சிவபெருமானும் நீ திருநல்லூருக்கு வா வா என்று அசரீரிவாக்காக அருளிச்செய்ய அதனைக்கேட்டுத் திருநாவுக்கரசுசுவாமிகள் பூமியில் சாஷ்டாங்கமாகவணங்கி மகிழ்ச்சியடைந்து.—எ-று.

"கூற்றங் குமைப்பதன்முன்—பூவாரடிச்சுவடென்மேற் பொறித்துவை" என்பதனை, ஈண்டுச் சேக்கிழார்பெருமான் செய்யுட்கேற்ப இயைத்துக்கொண்டனர். இவ்வாறே மேல்வருமிடந்தோறுங் கொள்க.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கககூ)

---

### திருச்சத்திமுற்றம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கோவாய்முடுகியடுதிறற்கூற்றங்குமைப்பதன்முன்
பூவாரடிச்சுவடென்மேற்பொறித்துவைபோகவிடின்
மூவாமுழுப்பழிமூடுங்கண்டாய்முழங்குந்தழற்கைத்
தேவாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே.

பொறித்தேரரக்கன்பொருப்பெடுப்புற்றவன்பொன்முடிதோ
ளிறத்தாளொருவிரலூன்றிட்டலறவிரங்கியொள்வாள்
குறித்தேகொடுத்தாய்கொடியேன்செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே.

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சிவக்கொழுந்ீசுவரர். தேவியார்-பெரியநாயகியம்மை.

---

### வேறு.

நன்மைபெரு கருணெறியே வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்போதில்
உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோ மென்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்.

(இ-ள்.) நிலைபெற்ற திருத்தொண்டினையுடைய திருநாவுக்கரசு சுவாமிகள் நன்மை பொருந்திய சிவபெருமானது கட்டளையின்வழியே திருநல்லூருக்கு வந்து சுவாமியை நிலத்தில் சாஷ்டாங்கமாக வணங்கி மகிழ்ந்து எழுந்திருக்கும்

பொழுது, சிவபெருமான் (அவனைப்பார்த்து அன்பனே!) உன் மனதிலுள்ள எண்ணத்தை முடிக்கின்றோமென்று அவருடைய சிரசின்மேல் தமது தாமரைமலர்போன்ற திருவடிகளைச் சூட்டியருளினார்.—எ-று. (௧௬௫)

நனைந்தனைய திருவடியென் றலைமேல்வைத் தாரென்று
புனைந்ததிருத் தாண்டகத்தாற் போற்றிசைத்துப் புனிதனரு
ணினைந்துருகி விழுந்தெழுந்து நிறைந்துமலர்ந் தொழியாத
தனம்பெரிதும் பெற்றுவந்த வறியோன்போன் மனந்தழைத்தார்.

(இ-ள்.) (அப்பொழுது திருநாவுக்கரசுசுவாமிகள்) "நனைந்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார்" என்று மூதற்பாசுரத்தின் ஈற்றடியில் வைத்த திருத்தாண்டகத்திருப்பதிகத்தினால் துதித்து, சிவபெருமானது திருவருளைக்குறித்து நினைந்து மனமுருகிப் பூமியில் விழுந்துவணங்கி யெழுந்து,நிறைந்து விளங்கி ஒழியாத பெருஞ்செல்வத்தைப்பெற்று அதனால் மகிழ்வடைந்த ஒருதரித்திரன் போல மனத்தில் மகிழ்ச்சியையடைந்தார்.—எ-று. (௧௬௬)

---

**திருநல்லூர் - திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

நினைந்துருகுமடியாரைநையவைத்தார்
நில்லாமேதீவினைகணீங்கவைத்தார்
சினந்துருகுகளிற்றுரிவைப்போர்வைவைத்தார்
செழுமதியின்றளிர்வைத்தார்சிறந்துவானோ
ரினந்துருவிமணிமகுடத்தேறத்துற்ற
வினமலர்கள்போதவிழ்ந்துமதுவாய்ப்பில்கி
நனைந்தனையதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௧)

பொன்னலத்தநறுங்கொன்றைசடைமேல்வைத்தார்
புலியுரியினதள்வைத்தார் புனலும்வைத்தார்
மன்னலத்ததிரடோண்மேன் மழுவாள்வைத்தார்
வார்காதிற்குழைவைத்தார் மதியம்வைத்தார்
மின்னலத்தநுண்ணிடையாள் பாகம்வைத்தார்
வேழத்தினுரிவைத்தார் வெண்ணூல்வைத்தார்
நன்னலத்ததிருவடியென் றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார் நல்லவாறே. (௨)

தோடேறு மலர்க்கொன்றை சடைமேல்வைத்தார்
துன்னெருக்கின்வடம்வைத்தார் துவலைசிந்தப்
பாடேறுபடுதிரைகளெறியவைத்தார்
பனிமத்தமலர்வைத்தார்பாம்பும்வைத்தார்
சேடேறுதிருநுதன்மேனாட்டம்வைத்தார்
சிலைவைத்தார்மலைபெற்றமகளைவைத்தார்
நாடேறுதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௩)

வில்லருளிவருபுருவத்தொருத்திபாகம்
பொருத்தாகிவிரிசடைமேலருவிவைத்தார்
கல்லருளிவருசிலையாவைத்தாரூராக்
கயிலாயமலைவைத்தார்கடவூர்வைத்தார்
சொல்லருளியறநால்வர்க்கறியவைத்தார்
சுடுசுடலைப்பொடிவைத்தார்துறவிவைத்தார்
நல்லருளாற்றிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (ச)

விண்ணிரியுந்திரிபுரங்களெரியவைத்தார்
வினைதொழுவார்க்கறவைத்தார்துறவிவைத்தார்
கண்ணெரியாற்காமனையும்பொடியாவைத்தார்
கடிக்கமலமலர்வைத்தார்கயிலைவைத்தார்
திண்ணெரியுந்தண்புனலுமுடனேவைத்தார்
திசைதொழுதுமிசையமரர்திகழ்ந்துவாழ்த்தி
நண்ணரியதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (ரு)

உற்றுலவுபிணியுலகத்தெழுமைவைத்தா
ருயிர்வைத்தாருயிர்செல்லுங்கதிகள்வைத்தார்
மற்றமரர்கணம்வைத்தாரமரர்காணு
மறைவைத்தார்குறைமதியம்வளரவைத்தார்
செற்றமலியார்வமொடுகாமலோபஞ்
சிறவாதநெறிவைத்தார்துறவிவைத்தார்
நற்றவர்சேர்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (சு)

மாறுமலைந்தாரரணமெரியவைத்தார்
மணிமுடிமேலரவைத்தாரணிகொண்மேனி
நீறுமலிந்தெரியாடனிலாவவைத்தார்
நெற்றிமேற்கண்வைத்தார்நிலையம்வைத்தார்
ஆறுமலிந்தறுதிசைகளெறியவைத்தா
ரார்வத்தாலடியமரர்பரவவைத்தார்
நாறுமலர்த்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (எ)

குலங்கண்மிகுமலைகடல்கண்ஞாலம்வைத்தார்
குருமணிசேரரவைத்தார்கோலம்வைத்தார்
உலங்கிளருமரவத்தினுச்சிவைத்தா
ருண்டருளின்விடம்வைத்தாரெண்டோள்வைத்தார்
நிலங்கிளரும்புனல்கனலுளநிலம்வைத்தார்
நிமிர்விசும்பின்மிசைவைத்தார்நினைந்தாரிந்நாள்
நலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (அ)

சென்றருளுங்கதிரிரண்டும்விசும்பில்வைத்தார்
திசைபத்துமிருநிலத்திற்றிருந்தவைத்தார்
நின்றருளியடியமரர்வணங்கவைத்தார்
நிறைதவமுமறைப்பொருளுநிலவவைத்தார்
கொன்றருளிக்கொடுங்கூற்றநடுங்கியோடக்
குரைகழற்சேவடிவைத்தார்விடையும்வைத்தார்
நன்றருளுந்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (கூ)

பாம்புரிஞ்சிமதிகிடந்துதிரைகளேங்கப்
பனிக்கொன்றைசடைவைத்தார்பணிசெய்வானோர்
ஆம்பரிசுதமக்கெல்லாமருளும்வைத்தா
ரடுசுடலைப்பொடிவைத்தாரழகும்வைத்தார்
ஓம்பரியவல்வினைநோய்தீரவைத்தா
ருமையையொருபால்வைத்தாருகந்துவானோர்
நாம்பரவுமடியிணையென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (க0)

குலங்கிளரும்வருதிரைகளேழும்வைத்தார்
குருமணிசேர்மலைவைத்தார்மலையைக்கையா
லுலங்கிளரவெடுத்தவன்றன்முடியுநோவ
வொருவிரலாலுறவைத்தாரிறைவாவென்று
புலம்புதலுமருளொடுபோர்வாளும்வைத்தார்
புகழ்வைத்தார்புரிந்தாளாக்கொள்ளவைத்தார்
நலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்—பெரியாண்டேசுவரர் தேவியார் திரிபுரசுந்தரியம்மை.

---

நாவுக்கு மன்னர்திரு நல்லூரி னம்பர்பால்
மேவுற்ற திருப்பணிகண் மேவுறநா ளுஞ்செய்து
பாவுற்ற தமிழ்மாலை பலபாடிப் பணிந்தேத்தித்
தேவுற்ற திருத்தொண்டு செய்தொழுகிச் செல்லுநாள்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் திருநல்லூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானிடத்தில் அன்போடு செய்யவேண்டிய திருப்பணிகளைத் தமது கருத்துக்கிசைந்தபடி நாள்தோறுஞ் செய்து, பாடலாகப் பொருந்திய பல தமிழ்ப்பதிகங்களைப்பாடி வணங்கித் துதித்துத் தெய்வீகமாகிய திருத்தொண்டுகளைச் செய்து கிரமமாக வருகின்ற நாள்களில்.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (ககள)

கருகாவூர் முதலாகக் கண்ணுதலோ னமர்ந்தருளுந்
திருவாரூர் திருப்பாலைத் துறைபிறவுஞ் சென்றிறைஞ்சிப்
பெருகார்வத் திருத்தொண்டு செய்துபெருந் திருநல்லூர்
ஒருகாலும் பிரியாதே யுள்ளுருகிப் பணிகின்றார்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கருகாவூர் முதலாகத்திருவாரூரையும் திருப்பாலைத்துறையையும் மற்ற ஸ்தலங்களையும் சென்று வணங்கி, நிறைந்த பேரன்போடுகூடிய திருப்பணிகளைச்செய்து, பெருமைபொருந்திய திருநல்லூரைவிட்டு ஒருபொழுதும் பிரியாமல் மனங்கசிந்து வணங்குவாராயினர்.—எ-று. (கசஅ)

ஆளுடைய நாயகன்ற னருள்பெற்றங் ககன்றுபோய்
வாளைபாய் புனற்பழனத் திருப்பழன மருங்கணைந்து
காளவிட முண்டிருண்ட கண்டர்பணிக் கலன்பூண்டு
நீளிரவி லாடுவார் கழல்வணங்க நேர்பெற்றார்.

(இ-ள்.) தம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது திருவருளைப்பெற்று அவ்விடத்தினின்றும் நீங்கி, வாளைமீன்கள் தாவிப்பாய்கின்ற நீர்நிறைந்த வயல்கள்சூழ்ந்த திருப்பழனமென்னும் திருப்பதியையடைந்து, கரிய விஷத்தையுண்டு அதனால் இருண்டகண்டத்தையுடையவராய்ச் சர்ப்பாபரணத்தை யணிந்து நீண்ட அர்த்தயாமத்தில் திருநடனஞ்செய்பவராகிய சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கும்படிப் பெற்றுக்கொண்டார்.—எ-று. (கசகூ)

அப்பதியைச் சூழ்ந்ததிருப் பதியிலரனார்மகிழும்
ஒப்பரிய தானங்க ளுள்ளுருகிப் பணிந்தணைவார்
மெய்ப்பொருளோர் நாவினுக்கு வேந்தர்தா மேவினர்
செப்பருஞ்சீ ரப்பூதி யடிகளூர் திங்களூர்.

(இ-ள்.) அந்தத் திருப்பழனமென்னும் ஸ்தலத்தைச் சூழ்ந்திருக்கின்ற பல ஸ்தலங்களிலும் சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் ஒப்பற்ற ஆலயங்களை மனமுருகித்தொழுது செல்கின்ற உண்மைப்பொருளையுணர்ந்த திருநாவுக்கரசுசுவாமிகள் யாவராலும்புகழ்ந்து சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய அப்பூதியடிகளுயனார் வாழ்ந்திருக்கும் ஊராகிய திங்களூரையடைந்தார்.—எ-று. (உ00)

அந்தணரின் மேம்பட்ட வப்பூதி யடிகளார்
தந்தனய ருடன்சாலை கூவல்குளந் தருதண்ணீர்ப்
பந்தர்பல வாண்டவர செனும்பெயராற் பண்ணினமை
வந்தணைந்த வாகீசர் கேட்டவர்தம் மனைநண்ண.

(இ-ள்.) பிராமணர்களில் மேம்பாடுபெற்ற குலத்தினராகிய அப்பூதியடிகளுயனார் தமது புத்திரர்களோடு அன்னசத்திரம்- கிணறு- தடாகம்- தண்ணீர்ப்பந்தல் முதலாகிய பலபொருள்களையும் திருநாவுக்கரசுஎன்னும் திருப்பெயரால் அமைத்திருக்குந்தன்மையை அவ்விடத்திற்கு எழுந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகள் அங்குள்ளவர்கள்சொல்லக்கேட்டு அவ்வப்பூதியடிகளுயனாருடைய திருமனைக்கு எழுந்தருளிவர.—எ-று.

அப்பூதியடிகளுநயனார் வைத்த தண்ணீர்ப்பந்தல்முதலியவற்றில் திருநாவுக்கரசு என்னும் தமது திருநாமம் வரைந்திருத்தலைப்பார்த்து அங்குள்ளாரைக் கேட்க, அவர்கள் இவையனைத்தும் அப்பூதியடிகள் திருநாவுக்கரசுசுவாமிகளின் மேல் வைத்துள்ள அன்பினால் அவர் திருப்பெயரால் செய்தனவென்று சொல்லக் கேட்டு அவரது திருமனைக்கு எழுந்தருளினரென்க.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உ0க)

மற்றவரு மனமகிழ்ந்து மனைவியார் மைந்தர்பெருஞ்
சுற்றமுடன் களிகூரத் தொழுதெழுந்து சூழ்ந்துமொழிக்
கொற்றவனா யமுதுசெயக் குறைகொள்வா ரிறைகொள்ளப்
பெற்றபெருந் தவத்தொண்டர் திருவுள்ளம் பெறப்பெற்றார்.

(இ-ள்.) அப்பூதியடிகளுநயனாரும் மனமகிழ்ச்சியடைந்து தமது மனைவியாரும், புத்திரர்களும், பெரிய சுற்றத்தாரும் களிப்படைய வணங்கி எழுந்து பிரதக்ஷிணஞ்செய்து, திருநாவுக்கரசுசுவாமிகளைத் திருவமுதுசெய்யும்படிப் பிரார்த்தித்து,சிவபெருமானால் அடிமைகொள்ளப்பெற்ற பெருந்தவத்தினையுடைய அப்பர்சுவாமிகள் அதற்கு அங்கீகரிக்கப் பெற்றுக்கொண்டார்கள்.—எ-று. (உ0உ)

காண்டகைமை யின்றியுமுன் கலந்தபெருங் கேண்மையினார்
பூண்டபெருங் காதலுடன் போனகமுங் கறியமுதும்
வேண்டுவன வெவ்வேறு விதங்கள்பெற விருப்பினால்
ஆண்டவா சமுதுசெயத் திருவமுதாம் படியமைத்து.

(இ-ள்.) முன் திருநாவுக்கரசுசுவாமிகளைக் காணாதிருந்தும் அவருடைய மகிமையைக் கேட்டதனாலுண்டாகிய பெரிய நண்பினையுடையவராகிய அப்பூதியடிகளுநயனார் பொருந்திய பேரன்போடு திருவமுதும் கறியமுதுமாக வேண்டியவைகளை வெவ்வேறு வகையாயிருக்க விருப்பத்தோடு திருநாவுக்கரசுசுவாமிகள் உண்டருளும்படித் திருவமுதாகச்சமைத்து.—எ-று. (உ0௩)

திருநாவுக் கரசமுது செய்தருள மற்றவர்தம்
பெருநாமஞ் சாற்றியவப் பிள்ளைதனை யழைத்தன்பு
தருஞானத் திருமறையோர் தண்டலையின் வண்கதலிக்
குருநாளக் குருத்தரிந்து கொண்டுவரத் தனிவிட்டார்.

(இ-ள்.) அன்பையும் சிவஞானத்தையுமுடைய அப்பூதியடிகளுநயனார் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்யும்படி அவரது திருநாமத்தைத்தரித்திருக்கின்ற தமது புத்திரனாகிய மூத்ததிருநாவுக்கரசை யழைத்துத் தோட்டத்தில் சென்று வளம்பொருந்திய வாழைமரத்தினுடைய நல்ல நிறத்தோடுகூடிய குருத்தை யறிந்துகொண்டு வரும்படி தனியே அனுப்பினார்.—எ-று.

குருநாளக்குருத்தாவது, இலைமுழுதும் பசுமை விரவாமல் சுருளும்மிக விரியாமல் உள்ளே துவாரமுடைய குருத்தாம்; இலைவிரிந்து முதிர்ந்து பச்சையாயிருப்பின் அழுக்கேறி அசுத்தமாயிருக்குமென்பது கருதிக் குருநாளக்குருத்தரிந்து கொண்டுவர அனுப்பினரென்க. குரு=நிறம். (உ0௪)

ஆங்கவனும் விரைந்தெய்தி யம்மருங்கு தாழாதே
பூங்கதலிக் குருத்தரியப் புகுமளவி லொருநாகந்
தீங்கிழைக்க வதுபேணான் றிருவமுது செய்தருள
ஓங்குகத லிக்குருத்துக் கொண்டொல்லை வந்தணைந்தான்.

(இ-ள்.) அந்த மூத்ததிருநாவுக்கரசு என்னும் புத்திரனும் அவ்விடத்தில் காலதாமசஞ்செய்யாமல் விரைவாகச்சென்று அழகிய வாழைக்குருத்தை அரியத் தொடங்கினபொழுது, ஒருபாம்பானது அவனைத் தீண்ட, அதை அவன் ஒருபொருளாக மதியாமல் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்யும்படி நீண்ட வாழைக்குருத்தை அரிந்துகொண்டு விரைவில்வந்து சேர்ந்தான்.—எ-று. (உ0ரு)

தீயவிடந் தலைக்கொள்ளத் தெருமந்து செழுங்குருத்தைத்
தாயர்கரத் தினினீட்டித் தளர்ந்துதனைத் தழனாக
மேயபடி யுரைசெய்யான் விழக்கண்டு கெட்டொழிந்தோந்
தூயவரிங் கமுதுசெயத் தொடங்காரென் றதுவொளித்தார்.

(இ-ள்.) கொடிய பாம்பின் விடமானது தலைக் கேறுதலால் மயக்கமடைந்து தான்கொண்டுவந்த செழுமையாகிய வாழைக்குருத்தைத் தன்னுடைய தாயார் கையில்கொடுத்து வருத்தமுற்றுத் தன்னைக் கொடியவிஷத்தினையுடைய பாம்புதீண்டியதன்மையைச் சொல்லாமல் பூமியில்விழ, அதனைப்பார்த்து, அப்பூதியடிகளையனாரும் அவர்மனைவியாரும் ஆ கெட்டோம், இதனைத் திருநாவுக்கரசுசுவாமிகள் அறிந்தால் இங்குத்திருவமுதுசெய்யாரென்று வருந்தி அச்சவத்தை மறைத்துவைத்தார்கள்.—எ-று. (உ0சு)

தம்புதல்வன் சவமறைத்துத் தடுமாற்ற மிலராகி
யெம்பெருமா னமுதுசெய வேண்டுமென வந்திறைஞ்ச
உம்பர்பிரான் றிருத்தொண்ட ருள்ளத்திற் றடுமாற்ற
நம்பர்திரு வருளாலே யறிந்தருளி நவைதீர்ப்பார்.

(இ-ள்.) உயிர் நீங்கிக்கிடக்கின்ற தம்முடைய பிள்ளையின் பிணத்தை மறைத்துவைத்துச் சிறிதும் மனவருத்தமில்லாதவர்களாய், எமது பெருமானே! தேவரீர் எழுந்தருளித் திருவமுது செய்தருளவேண்டுமென்று வணங்கினவுடனே, சிவபெருமானுடைய திருத்தொண்டராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அவர்களுடைய மனதில் பற்றியிருக்கும் புத்திரசோகத்தைச் சிவபெருமானுடைய திருவருளால்றிந்து அதனைத் தீர்க்கவேண்டுமென்னுங் கருத்துடையவராய்.—எ-று.

தடுமாற்றமிலராகி என்றது - தம்மனத்துன்பத்தைப் புறஞ்செல்லா தடக்கின்மை குறித்து. (உ0எ)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

அன்றவர்கண் மறைத்ததனுக் கௗவிறந்த கருணையராய்க்
கொன்றைநறுஞ் சடையார்தங் கோயிலின்முன் கொணர்வித்தே
யொன்றுகொலா மெனப்பதிக மெடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான்.

(இ-ள்.) அப்பொழுது அப்பூதியடிகளையனாரும் அவரது மனைவியாரும் தம் புத்திரன் இறந்ததைச் சொல்லாமல் மறைத்துவைத்ததற்காக அளவற்ற பெருங்கருணையுடையவராய் வாசனைபொருந்திய கொன்றைமலர்மாலையைத் தரித்த

சடைமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலின் முன்னே அந்தச்சவத்தைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டு "ஒன்றுகொலாம்" என்று திருப்பதிகத்தை முதலில் எடுத்து, நம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது புகழைப் பாடியருள, பின்பு தலைக்கேறிய விஷமானது இறங்கி அந்த மூத்ததிருநாவுக்கரசு என்னும் புதல்வன் உயிர் பெற்றெழுந்திருந்தான்.—எ-று. (உ0அ)

---

## விடந்தீர்த்ததிருப்பதிகம்-பண் இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுகொலாமவர்சிந்தையுயர்வரை
யொன்றுகொலாமுயரும்மதிசூடுவ
ரொன்றுகொலாமிடுவெண்டலைகையது
வொன்றுகொலாமவரூர்வதுதானே. (க)

இரண்டுகொலாமிமையோர்தொழுபாத
மிரண்டுகொலாமிலங்குங்குழைபெண்ணு
ணிரண்டுகொலாமுருவஞ்சிறுமான்மழு
விரண்டுகொலாமவரெய்தினதாமே. (உ)

மூன்றுகொலாமவர்கண்ணுதலாவன
மூன்றுகொலாமவர்சூலத்தின்மொய்யிலை
மூன்றுகொலாங்கணைகையதுவின்னாண்
மூன்றுகொலாம்புரமெய்தனர்தாமே. (ங)

நாலுகொலாமவர்தம்முகமாவன
நாலுகொலாஞ்சனனம்முதற்றோற்றமு
நாலுகொலாமவரூர்தியின்பாதங்கள்
நாலுகொலாமறைபாடினதாமே. (ச)

அஞ்சுகொலாமவராடரவின்பட
மஞ்சுகொலாமவர்வெல்புலனாவன
வஞ்சுகொலாமவர்காயப்பட்டான்கணை
யஞ்சுகொலாமவராடினதாமே. (ரு)

ஆறுகொலாமவரங்கம்படைத்தன
வாறுகொலாமவர்தம்மகனார்முக
மாறுகொலாமவர்தார்மிசைவண்டின்கா
லாறுகொலாஞ்சுவையாக்கினதாமே. (சா)

ஏழுகொலாமவரூழிபடைத்தன
ஏழுகொலாமவர்கண்டவிருங்கடல்
ஏழுகொலாமவராளுமுலகங்கள்
ஏழுகொலாமிசையாக்கினதாமே. (எ)

எட்டுக்கொலாமவரீறில்பெருங்குண
மெட்டுக்கொலாமவர்சூடுமினமலர்

றெட்டுக்கோலாமவர்தோளிணையாவன
வெட்டுக்கோலாந்திசையாக்கின்றாமே. (அ)

ஒன்பதுபோலவர்வாசல்வகுத்தன
ஒன்பதுபோலவர்மார்பினினூலிழை
யொன்பதுபோலவர்கோலக்குழற்சடை
யொன்பதுபோலவர்பாரிடந்தானே. (கூ)

பத்துக்கொலாமவர்பாம்பின்கண்பாம்பின்பல்
பத்துக்கொலாமெயிறுந்நெரிந்துக்கன
பத்துக்கொலாமவர்காயப்பட்டான்றலை
பத்துக்கொலாமடியார்செய்கைதானே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

அருந்தனைய னுயிர்பெற்ற வதுகண்டு மமுதுசெயா
திருந்ததற்குத் தளர்வெய்தி யிடருழந்தார் துயர்நீங்க
வருந்துமவர் மனைபுகுந்து வாகீசத் திருமுனிவர்
விருந்தமுது செய்தருளி விருப்பினுடன் மேவுநாள்.

(இ-ள்.) பாம்பினால் இறந்த தமது அருமையான புத்திரன் மீண்டும் உயிர் பெற்ற தன்மையைக்கண்டும், திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுதுசெய்யாமலிருந்ததற்காக மனத்தளர்ச்சியடைந்து வருந்துகின்ற அப்பூதியடிகளுடையனும் அவரதும்மனைவியாரும் கொண்டிருக்கின்ற துன்பம் நீங்கும்படி அவர்களுடைய திருமனைக்கு எழுந்தருளி அவர்கள் படைத்த விருந்தைத் திருவமுதுசெய்து விருப்பத்தோடு அங்கு எழுந்தருளியிருக்கும் நாளில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உ0கூ)

திங்களூர் தனினின்றுந் திருமறையோர் பின்செல்லப்
பைங்கண்விடைத் தனிப்பாகர் திருப்பழனப் பதிபுகுந்து
தங்குபெருங் காதலொடு தம்பெருமான் கழல்சார்ந்து
பொங்கியவன் பொடுவணங்கி முன்னின்று போற்றிசைப்பார்.

(இ-ள்) திருநாவுக்கரசுசுவாமிகள் திங்களூரிலிருந்து அப்பூதியடிகள் முதலிய சிறந்த வேதியர்கள் தமக்குப்பின்னேவர, அழகிய கண்களையுடைய ரிஷபத்தை வாகனமாகக்கொண்டருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பழனம் என்னும் ஸ்தலத்துக்குப்போய் நிலைபெற்ற பேரன்போடு தமது முதல்வராகிய அவ்வெம்பெருமானது திருவடியை யடைந்து அதிகரித்த அன்போடுவணங்கிச் சந்நிதியின்முன்னே நின்று துதிப்பாராயினர்.—எ-று. (உக0)

புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார் பொற்கழற்கீழ்
அடைமாலைச் சீலமுடை யப்பூதி யடிகடமை
நடைமாணச் சிறப்பித்து நன்மையுரி தீந்தமிழின்
தொடைமாலைத் திருப்பதிகச் சொன்மாலை பாடினார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள், ஒருபக்கத்தில் மாலைக்காலத்தில் தோன்றுகின்ற இளம்பிறையாகிய கொண்டைமாலையைத் தரித்த முறுக்கிய சடை

முடியையுடைய சிவபெருமானது அழகிய திருவடிகளில் அடையத்தக்க ஒழுங்காகிய அன்பினையுடைய அப்பூதியடிகளுய்னாரை அவரது நல்லொழுக்கத்தின் மேன்மையை யெடுத்துச் சிறப்பித்து நன்மைபொருந்திய மதுரமாகிய தமிழ்ச் சொற்களால் தொடுக்கப்பட்ட மாலையாகிய திருப்பதிகமென்னும் பாமாலையைப் பாடியருளினர்.—எ-று. (உகக)

---

**திருப்பழனம்-பண் பழந்தக்கராகம்.**

*திருச்சிற்றம்பலம்.*

சொன்மாலைபயில்கின்றகுயிலினங்காள்சொல்லீரே
பன்மாலைவரிவண்டுபண்மிழற்றும்பழனத்தான்
முன்மாலைநகுதிங்கள்முகிழ்விளங்குமுடிச்சென்னிப்
பொன்மாலைமார்பனென்புதுநலமுண்டிகழ்வானோ.

வஞ்சித்தென்வளைகவர்ந்தான்வாரானேயாயிடினும்
பஞ்சிக்காற்சிறகன்னம்பரந்தார்க்கும்பழனத்தா
னஞ்சிப்போய்க்கலிமெலியவழலோம்புமப்பூதி
குஞ்சிப்பூவாய்நின்றசேவடியாய்கோடியையே.

*திருச்சிற்றம்பலம்.*

---

எழும்பணியு மிளம்பிறையு மணிந்தவரை யெம்மருங்குந்
தொழும்பணிமேற் கொண்டருளுந் திருச்சோற்றுத் துறைமுதலாத்
தழும்புறுகேண் மையினண்ணித் தானங்கள் பலபாடிச்
செழும்பழனத் திறைகோயிற் றிருத்தொண்டு செய்திருந்தார்.

(இ-ள்.) படம்விரித்து எழுகின்ற பாம்பையும், இளம்பிறையையுமணிந்த சிவபெருமானை அவர் வீற்றிருந்தருளும் ஸ்தலங்கள்தோறுஞ் சென்று வணங்குந் திருத்தொண்டையே தலைமையாகக்கொண்டு, அடியார்க் கருள்செய்கின்ற திருச்சோற்றுத்துறைமுதலாகிய ஸ்தலங்களைத் தடித்த பேரன்போடு அடைந்து திருப்பதிகம்பாடிச் செழுமை பொருந்திய திருப்பழனத்தி லிருக்கும் சிவபெருமானுடைய திருக்கோயிலில் திருத்தொண்டுசெய்துகொண் டிருந்தார்.—எ-று.

தழும்புறுகேண்மை=நெடுநாள்பழகி முதிர்ந்த அன்பு. (உகஉ)

சாலநா ளங்கமர்ந்து தந்தலைமேற் றாள்வைத்த
ஆலமார் மணிமிடற்று ரணிமலர்ச்சேவடிநினைந்து
சேலுலாம் புனற்பொன்னித் தென்கரையே றிச்சென்று
கோலநீண் மணிமாடத் திருநல்லூர் குறுகினர்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் நெடுநாள்வரையிலும் அத்திருப்பழனமென்னும் ஸ்தலத்தில் வாசஞ்செய்திருந்து, பின்பு, தம்முடைய தலையின்மேல் ஸ்ரீபாதத்தைவைத்துத் திருவடிதீட்சைசெய்தருளிய காளகண்டராகிய சிவபெருமானது அழகிய தாமரைமலர்போலும் சிவந்த திருவடிகளை நினைத்து, சேற்கெண்டைகளுலாவுகின்ற நீரையுடைய காவிரிநதியின் தென்கரைவழியாக நடந்து சென்று, அழகிய மணிகளழுத்திய மாளிகைகளையுடைய திருநல்லூரையடைந்தருளினர்.—எ-று. (உகங)

அங்கணைந்து தம்பெருமா னடிவணங்கி யாராது
பொங்கியவன் பொடுதிளைத்துப் போற்றிசைத்துப் பணிசெயுநாட்
டங்குபெருங் காதலினற் றாமரைமேல் விரிஞ்சனொடு
செங்கண்மா லறிவரியார் திருவாரூர் தொழநினைந்தார்.

(இ-ள்.) அத்திருநல்லூரையடைந்து தமது ஆண்டவராகிய சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி, அடங்காமல் அதிகரித்த பேரன்பினால் சிவானந்தவெள்ளத்தில் முழுகி ஸ்தோத்திரஞ்செய்து திருப்பணி செய்துகொண்டுவரும் நாள்களில், நிலைபெற்ற பேரன்பினால் தாமரைமலரின்மேல் இருக்கும் பிரமனோடு சிவந்தகண்களையுடைய விஷ்ணுவும் அறிதற்கரியவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவாரூரைவணங்கும்படி திருவுள்ளங்கொண்டார்.—எ-று. (உகச)

நல்லூரி னம்பரருள் பெற்றுப்போய்ப் பழையாறைப்
பல்லூர்வெண் டலைக்கரத்தார் பயிலுமிடம் பலபணிந்து
சொல்லூர்வண் டமிழ்பாடி வலஞ்சுழியைத் தொழுதேத்தி
யல்லூர்வெண் பிறையணிந்தார் திருக்குடமூக் கணைந்திறைஞ்சி.

(இ-ள்.) திருநல்லூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவருளைப்பெற்று அவ்விடத்தினின்றும் நீங்கித் திருப்பழையாறைமுதலிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பல ஸ்தலங்களுக்கும்போய்த்தொழுது, நல்லசொற்களமைந்த வளம்பொருந்திய தமிழ்ப்பதிகங்களைப் பாடி, திருவலஞ்சுழியை வணங்கித் துதித்து,மாலைக்காலத்தில்தோன்றுகின்ற வெள்ளிய மூன்றாம்பிறையைத் தரித்த கடவுள் வீற்றிருந்தருளும் ஸ்ரீ கும்பகோண மென்னும் ஸ்தலத்தை யடைந்து தொழுது.—எ-று.

பல்லூர் வெண்டலைக்கரத்தார்=பற்களோடுகூடிய வெண்மையாகிய பிரமகபாலத்தைக் கையிலுடைய சிவபெருமான். (உகரு)

நாலூர்தென் றிருச்சேறை குடவாயி னறையூர்சேர்
பாலூரு மின்மொழியாள் பாகனார் கழல்பரவி
மேலூர்தி விடைக்கொடியார் மேவுமிடம் பலபாடிச்
சேலூர்தண் பணைசூழ்ந்த தென்றிருவாஞ் சியமணைந்தார்.

(இ-ள்.) திருநாலூர் - அழகிய திருச்சேறை - திருக்குடவாயில்- திருநறையூர் என்னும் ஸ்தலங்களில் வீற்றிருந்தருளும் பால்போலும் இனியவார்த்தையையுடைய உமாதேவியை இடப்பாகத்திற்கொண்ட சிவபெருமானுடைய திருவடிகளைத்தொழுது, வாகனமாகிய ரிஷபத்தைக் கொடியாகவுடைய அவ்வெம்பெருமான் எழுந்தருளியிருக்கும் பல திருப்பதிகளையும் வணங்கித் திருப்பதிகம்பாடிச் சேற்கெண்டைகள் உலாவுகின்ற குளிர்ந்த வயல்கள்சூழ்ந்த அழகிய திருவாஞ்சியமென்னும் ஸ்தலத்தையடைந்தார்.—எ-று. (உகசு)

பெருவாச மலர்ச்சோலைப் பெருவேளூர் பணிந்தேத்தி
முருகாரு மலர்க்கொன்றை முதல்வனார் பதிபிறவுந்
திருவாரும் விளமருடன் சென்றிறைஞ்சி வாகீசர்
மருவாரூ ரெரித்தவர்தந் திருவாரூர் வந்தடைந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் மிகுந்தவாசனைபொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த திருப்பெருவேளூரை வணங்கித்துதித்து, தேன்நிறைந்த

கொன்றைமலர்மாலையைத்தரித்த சிவபெருமான்வீற்றிருந்தருளும்மற்றைத்திருப்பதிகளையும்,செல்வம்நிறைந்த திருவிளமரொன்னும் ஸ்தலத்தையும்சென்று வணங்கிப் பகைவர்களின் முப்புரங்களை எரித்தருளிய அக்கடவுள் வீற்றிருந்தருளும் திருவாரூருக்கு வந்துசேர்ந்தார்.—எ-று. (உகஎ)

ஆண்டவா செழுந்தருள வாரூரி லன்பர்கடா
நீண்டசடை யார்தம்பா னிறைந்தவருள் பெற்றுடையார்
காண்டகுமா ளிகைமாடங் கவின்சிறந்தோங் கிடவெங்குஞ்
சேண்டிகழ்வீ திகள்பொலியத் திருமலிமங் கலஞ்செய்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாரூருக்கு எழுந்தருளவும், நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானிடத்தில் நிறைந்ததிருவருளைப்பெற்ற அந்த ஸ்தலத்தில்வாழும் அடியார்கள், காணத்தகுந்த மாளிகைகளும்,மாடங்களும் அழகினால் சிறப்புற்றோங்க,எவ்விடத்தும் நீண்ட வீதிகளிலெல்லாம் பிரகாசிப்பதற்கேதுவாகஅழகிய மங்கலகரமான அலங்காரஞ் செய்தார்கள்.—எ-று. (உகஅ)

வேறு.

வல்லமண் குண்டர்தம் மாயை கடந்து மறிகடலிற்
கல்லே மிதப்பாகப் போந்தவர் வந்தா ரெனுங்களிப்பால்
எல்லையி றொண்ட ரெயிற்புறஞ் சென்றெதிர் கொண்டபோது
சொல்லி னரசர் வணங்கித் தொழுதுரை செய்தணைவார்.

(இ-ள்.) கொடியதுஷ்டர்களாகிய சமணர்கள்செய்த வஞ்சனையினின்று நீங்கி, அலைகள் மடங்குகின்ற சமுத்திரத்தில் சேர்த்துக்கட்டிய கருங்கல்லே தெப்பமாகக் கரையேறிவந்த திருநாவுக்கரசுசுவாமிகள் இங்கு எழுந்தருளினாரென்னும் சந்தோஷத்தினால் அளவற்ற சிவனடியார்கள் மதிலின்புறத்தேவந்து எதிர்கொண்டுவணங்கினபொழுது திருநாவுக்கரசுசுவாமிகள் அவர்களை வணக்கமாகத் தொழுது இவ்வாறு அருளிச்செய்துகொண்டு வருகின்றவராயினார்.—எ-று. ()

பற்றொன்றி லாவரும் பாதக ராகு மமணர்தம்பால்
உற்ற பிணியொழிந் துய்யப்போந் தேன்பெற லாவதொன்றே
புற்றிடங் கொண்டார்தந் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணிய
மென்
றற்ற வுணர்வொடு மாரூர்த் திருவீதி யுள்ளணைந்தார்.

(இ-ள்.) உயிர்களிடத்தில் சிறிதும் அன்பில்லாத கொடும்பாதகர்களாகிய சமணர்களிடத்தி லகப்பட்டு அடைந்த துன்பத்தினின்றும் நீங்கிக் கடைத்தேறும்பொருட்டுவந்த யான் அடையவேண்டியது ஒன்றுளது ; அது யாதென்றால், "புற்றிடங்கொண்டார்தந் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம்" என்று திருப்பதிகம் பாடிக்கொண்டு, பரவசப்பட்ட வுணர்ச்சியோடு திருவாரூர்த்திருவீதியினுள்ளே எழுந்தருளினார்.—எ-று. (உஉ0)

---

திருவாரூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குலம்பலம்பாவருகுண்டர்முன்னேநமக்குண்டுகொல்லோ
அலம்பலம்பாவருதண்புனலாரூரவிர்சடையான்
சிலம்பலம்பாவருசேவடியான்திருமூலத்தானம்
புலம்பலம்பாவருதொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே

குற்றமுடையவமணர்திறமதுகையகன்றிட்
டுற்றகருமஞ்செய்துய்யப்போந்தேனுக்குமுண்டுகொல்லோ
மற்பொலிதோளானிராவணன்றன்வலிவாட்டுவித்த
பொற்கழலானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே.

திருச்சிற்றம்பலம்.

---

சூழுந் திருத்தொண்டர் தம்முடன் றோரண வாயினண்ணி
வாழி திருநெடுந் தேவா சிரியன்முன் வந்திறைஞ்சி
யாழி வரைத்திரு மாளிகை வாயி லவைபுகுந்து
நீள்சுடர் மாமணிப் புற்றுவந் தாரைநேர் கண்டுகொண்டார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் தம்மைச்சூழ்ந்துவருகின்ற திருத்தொண்டர்களோடு மகரதோரணங்கள் கட்டியிருக்கும் திருவாயிலையடைந்து அருட்செல்வத்துக்கு இடமாயிருக்கின்ற உயர்ந்த தேவாசிரியமண்டபத்திற்கு முன்னே வந்து நமஸ்கரித்து, சக்கிரவாளகிரிபோலச் சூழ்ந்திருக்கும் திருமாளிகையின் திருவாசலினுள்ளேபுகுந்து, மிகுந்த கிரணங்களை வீசுகின்ற நாகமணிகளையுடைய புற்றையிடமாகக்கொண்டருளிய சிவபெருமானை நேரேவந்து தரிசனஞ்செய்தருளினார்.—எ-று.

வாழி - அசைநிலை. (உஉக)

கண்டு தொழுது கரசர ணாதியங் கங்களெல்லாங்
கொண்ட புளகங்க ளாக வெழுந்தன்பு கூரக்கண்க
டண்டுளி மாரி பொழியத் திருமூலத் தானர்தம்மைப்
புண்டரி கக்கழல் போற்றித் திருத்தாண் டகம்புனைந்து.

(இ-ள்.) தரிசித்து வணங்கிக் கைகால்முதலிய அவயவங்களெல்லாம் மயிர்க்குச்செறிய, அன்பின் எழுச்சியினால் இரண்டுகண்களும் குளிர்ந்த ஆனந்தபாஷ்பமாகிய மழையைப்பொழிய திருமூலத்தானருடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதித்துத் திருத்தாண்டகத் திருப்பதிகம்பாடிச்சாத்தி—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உஉஉ)

---

## திருவாரூர்-போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கற்றவர்களுண் ணுங்கனியேபோற்றி
கழலடைந்தார்செல் லுங்கதியேபோற்றி
யற்றவர்கட்காரமுதமானாய்போற்றி
யல்லலறுத்தடியேனையாண்டாய்போற்றி
மற்றொருவரொப்பில்லாமைந்தாபோற்றி
வானவர்கள்போற்றுமருந்தேபோற்றி
செற்றவர்தம்புரமெரித்தசிவனேபோற்றி
திருமூலத்தானனேபோற்றிபோற்றி.

பிரமன்றன்சிரமரிந்தபெரியோய்போற்றி
பெண்ணுருவோடாணுருவாய்நின்றாய்போற்றி
கரநான்குமுக்கண்ணுமுடையாய்போற்றி
காதலிப்பார்க்காற்றவெளியாய்போற்றி
யருமந்ததேவர்க்கரைசேபோற்றி
யன்றரக்கனைந்நான்குதோளுந்தாளுஞ்
சிரநெரித்தசேவடிகள்போற்றிபோற்றி
திருமூலத்தானனேபோற்றிபோற்றி.

திருச்சிற்றம்பலம்.

---

காண்ட லேகருத் தாயின வென்னுங் கலைப்பதிகந்
தூண்டா விளக்கன்ன சோதிமுன் னின்று துதித்துருகி
யீண்டு மணிக்கோயில் சூழவலஞ்செய் திறைஞ்சியன்பு
பூண்ட மனத்தொடு நீடிரு வாயிற் புறத்தணைந்தார்.

(இ-ள்.) "காண்டலே கருத்தாயின" என்னும் முதலையுடைய சிறந்த திருப்பதிகத்தைத் தூண்டாவிளக்கையொத்த சிவபெருமானுடைய சந்நிதிமுன்னே நின்று துதித்து மனமுருகி, பலவகை மணிகளிழைத்திருக்கும் திருக்கோயிலை வலமாகச்சூழ்ந்து வணங்கி அன்புபொருந்திய திருவுள்ளத்தோடு உயர்ந்த திருவாசலினின்றும் நீங்கிப் புறத்தில்வந்து சேர்ந்தார்.—எ-று. (உஉ௩)

---

திருவாரூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

காண்டலேகருத்தாகினைத்திருந்தேன்மனம்புகுந்தாய்கழலடி
பூண்டுகொண்டொழிந்தேன்புறம்போயினாலறையோ
வீண்டுமாடங்கணீண்டமாளிகைமேலெழுகொடிவானிளம்மதி
தீண்டிவந்துலவுந்திருவாரூரம்மானே.

நாடினார்கமலம்மலரயனோடிரணியனாகங்கீண்டவ
னாடிக்காணமாட்டாத்தழலாயநம்பானைப்
பாடுவார்பணிவார்பல்லாண்டிசைகூறுபத்தர்கள்சித்தத்துள்புக்குத்
தேடிக்கண்டுகொண்டேன்திருவாரூரம்மானே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

செய்யமா மணியொளிசூழ் திருமுன்றின் முன்றேவா சிரியன் சார்ந்து
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூ ரரைக்
கையினாற் றொழாதேமுன் கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வ னேனென்
றெய்தரிய கையறவாற் றிருப்பதிக மருள்செய்தங் கிருந்தா ரன்றே.

(இ-ள்.) சிவந்த மாணிக்கங்களின் ஒளிகள் சூழ்ந்த திருவாசலின்முன்னேயுள்ள தேவாசிரியமண்டபத்தை யடைந்து "கொய்யுலாமலர்ச்சோலைக் குயில்கூ

வமயிலாலு மாரூரரைக் - கையினற்றொழாதே முன்கனியிருக்கக் காய்கவர்ந்தகள் வனேன்" என்று அடைதற்கரிய துயரத்தோடு திருப்பதிகம்பாடியருளி அந்த ஸ்தலத்தில் வாசஞ்செய்திருந்தார்.—எ-று. (உஉச)

**திருவாரூர்ப் பழமொழி - பண் காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

மெய்யெலாம்வெண்ணீறுசண்ணித்தமேனியான்றாடொழாதே
யுய்யலாமென்றெண்ணியுறிதூக்கியுழிதந்தென்னுள்ளம்விட்டுக்
கொய்யுலாமலர்ச்சோலைக்குயில்கூவமயிலாலுமாரூரரைக்
கையினற்றொழாதொழிந்துகனியிருக்கக்காய்கவர்ந்தகள்வனேனே.

மறுத்தானோர்வல்லரக்கனீரைந்துமுடியினொடுதோளுந்தாளு
மிறுத்தானை யெழின்முளரித் தவிசின்மிசை யிருந்தான்றன்றலையிலொன்
யறுத்தானையாரூரிலம்மானையாலாலமுண்டுகண்டங் [றை
கறுத்தானைக்கருதாதேகரும்பிருக்கவிரும்புகடித்தெய்த்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவு மதுர வாக்கிற்
சேர்வாகுந் திருவாயிற் றீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற் றாளே
சார்வான திருமனமு முழவாரத் தனிப்படையுந் தாமு மாகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார்.

(இ-ள்.) மார்பில் வழிந்தோடும்படி பொழிகின்ற மழையைப்போலக் கண்ணீரொழுகுகின்ற திருமேனியும், திருவாயினிடத்தில் மதுரமான மொழிகளால் தொடுக்கப்பட்ட இனிய திருப்பதிகப்பாமாலைகளும், சிவபெருமானுடைய சிவந்த பொன்னடிகளையே ஆதரவாகப்பற்றியிருக்கின்ற திருவுள்ளமும், ஒப்பற்ற உழவாரப்படையும் தாமுமாகி, உலகத்தார்வாழும்படி திருவீதிகளில் உழவாரத்திருத்தொண்டுசெய்து வணங்கித் துதித்துச் செல்வாராயினர்.—எ-று.

ஏத்திப்பரவி - என்பது ஒரு சொன்னீர்மைத்து. (உஉரு)

நீடுபுகழ்த் திருவாரூர் நிலவுமணிப் புற்றிடங்கொ ணிருத்தர் தம்மைக்
கூடியவன் போடுகாலங் களிலணைந்து கும்பிட்டுக் கோதில் வாய்மைப்
பாடிளம்பூ தத்தினு னெனும்பதிக முதலான பலவும் பாடி
நாடியவார் வம்பெருக நைந்துமனங் கரைந்துருகி நயந்து செல்வார்.

(இ-ள்.) மிகுந்த புகழோங்கிய திருவாரூரில் விளங்குகின்ற நாகரத்தினங்களையுடைய புற்றையிடமாகக்கொண்ட தியாகராசப்பெருமானை நீங்காத பேரன்போடு பூசாகாலங்களிலதோறும் தவறாமல்போய் வணங்கிக் குற்றமற்ற மெய்மையையுடைய "பாடிளம்பூதத்தினன்" என்னும் பதிகமுதலாகிய பல திருப்பதிகங்களைப்பாடி,பொருந்திய ஆசைஅதிகரிக்க மனமானது நைந்து அதனால்கரைந்துருகி விரும்பிப் போய்க்கொண்டிருப்பார்.—எ-று. (உஉசு)

திருவாரூர் - பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பாடிளம்பூதத்தினானும்பவளச்செவ்வாய்வண்ணத்தானுங்
கூடிளமென்முலையாளைக்கூடியகோலத்தினானு
மோடிளவெண்பிறையானுமொளிதிகழ்சூலத்தினானு
மாடிளம்பாம்பசைத்தானுமாரூரமர்ந்தவம்மானே.

பையஞ்சுடர்விடுநாகப்பள்ளிகொள்வானுள்ளத்தானுங்
கையஞ்சுநான்குடையானைக்கால்விரலாலடர்த்தானும்
பொய்யஞ்சிவாய்மைகள்பேசிப்புகழ்புரிந்தார்க்கருள்செய்யு
மையஞ்சினப்புறத்தானுமாரூரமர்ந்தவம்மானே.

திருச்சிற்றம்பலம்.

நான்மறைநூற் பெருவாய்மை நமிநந்தி யடிகடிருத் தொண்டி னன்மைப்
பான்மைநிலை யாலவரைப் பரமர்திரு விருத்தத்துள் வைத்துப் பாடித்
தேன்மருவுங் கொன்றையார் திருவாரூ ரரனெறியிற் றிகழுந் தன்மை
யானதிற மும்போற்றி யணிவீதிப் பணிசெய்தங் கமரு நாளில்.

(இ-ள்.) நான்குவேதங்களிலும் கூறுகின்ற சிறந்த உண்மைப்பொருளை யுணர்ந்த நமிநந்தியடிகளுயனார் செய்யும் மேன்மைபொருந்திய திருத்தொண்டு காரணமாக அவரைத் தாம் சுவாமியைக்குறித்துப் பாடும் திருவிருத்தத்திருப்பதிகத்துள் வைத்துப் பாடி, தேன்பொருந்திய கொன்றைமலர்மாலையைத் தரித்த சிவபெருமான் திருவாரூரில் அரனெறியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் நிலைமையையும் துதித்து, அழகிய திருவீதியில் உழவாரத்திருத்தொண்டுசெய்து அங்கு வாசஞ்செய்யும் நாளில்.—எ-று.

நமிநந்தியடிக டிருத்தொண்டி னன்மைப் பான்மையாவது:—திருவாரூர் அரனெறியென்னும் ஆலயத்தில் நமிநந்தியடிகளுயனார்க்குச் சிவபெருமான் அசரீரியாய் நின்று கட்டளையிட்டருளியபடியே அவர்குளத்துநீரைவிட்டுத் திருவிளக்கேற்ற ஒளிகுன்றாது சுவாலித்து எரிந்ததன்மையாம். இதனைத் திருநாவுக்கரசுசுவாமிகள் தம்முடையதிருப்பதிகத்துள்வைத்துச் சிறப்பித்துப்பாடியதாவது,

"ஆராய்ந்தடித்தொண்டராணிப்பொனாரூரகத்தடக்கிப்
பாரூர்பரிப்பதம்பங்குனியுத்திரம்பாற்படுத்தா
னாரூர்நறுமலர்நாதனடித்தொண்டனம்பிநந்தி
நீராற்றிருவிளக்கிட்டமைநீணாடறியுமன்றே."—என்பதாம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உஉஎ)

நீராருஞ் சடைமுடியார் நிலவுதிரு வலிவலமு நினைந்து சென்று
வாராரு முலைமங்கை யுமைபங்கர் கழல்பணிந்து மகிழ்ந்து பாடிக்
காராருங் கறைக்கண்டர் கீழ்வேளூர் கன்றாப்பூர் கலந்து பாடி
யாராத காதலினாற் றிருவாரூர் தனின்மீண்டு மணைந்தா ரன்றே.

(இ-ள்.) கங்கைதங்கிய சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவலிவலம்என்னும் ஸ்தலத்தைநினைந்து அவ்விடத்துச்சென்று கச்சணி

ந்த ஸ்தனங்களையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமா னது திருவடிகளைவணங்கி, மகிழ்ந்து திருப்பதிகம்பாடி, காளகண்டத்தையுடைய அவ்வெம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கீழ்வேளூரையும், திருகன் றாப்பூ ரையும் அடைந்து திருப்பதிகம்பாடி, நீங்காத பேரன்போடு திருவாரூருக்கு மறு படியும் வந்து சேர்ந்தார்.—எ-று. (உஉஅ)

மேவுதிரு வாதிரைநாள் வீதிவிடங் கப்பெருமாள் பவனி தன்னிற்
றேவருடன் முனிவர்கண்முன் சேவிக்கு மடியார்க ளுடன்சே வித்து
மூவுலகுங் களிகூர வரும்பெருமை முறைமையெலாங் கண்டுபோற்றி
நாவினுக்குத் தனியரசர் நயக்குநா ணம்பாதிரு வருளினாலே.

(இ-ள்.) திருவாதிரை நட்சத்திரத்தில் வருகின்ற தியாகராசப்பெருமானு டைய பவனியுற்சவத்தில் தேவர்களும் முனிவர்களுமாகிய இவர்களுக்கு முன்னே நின்றுசேவிக்கும் அடியார்களோடு தாமும்வணங்கி, சுவர்க்க மத்திய பாதலமென் னும் மூன்றுலகத்திலுள்ளவர்களும் சந்தோஷிக்கும்படி வருகின்ற பவனிச்சிறப் பையெல்லாந் தரிசித்துத் துதித்து, ஒப்பற்ற திருநாவுக்கரசுசுவாமிகள் மகிழ்ந்திரு க்கும்நாள்களில் சிவபெருமானுடைய திருவருளினால்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உஉகூ)

திருப்புகலூ ரமர்ந்தருளுஞ் சிவபெருமான் சேவடிகள் கும்பிட் டேத்தும்
விருப்புடைய வுள்ளத்து மேவியெழுங் காதல்புரி வேட்கை கூர
ஒருப்படுவார் திருவாரூ ரொருவாறு தொழுதகன்றங் குள்ளம் வைத்துப்
பொருப்பரையன்மடப்பாவையிடப்பாகர் பதிபிறவும் பணிந்துபோந்தார்.

(இ-ள்.) திருப்புகலூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவடி களை வணங்கித் துதிக்கவேண்டுமென்னும் அன்புபொருந்திய மனதில் அதிகரித் தெழுந்த விருப்பமானது தூண்டுதலால் ஒருமைப்பட்ட கருத்தினையுடையவரா ய்த் திருவாரூரைத் தொழுது, ஒருவகையாக அவ்வூரைவிட்டு நீங்கி, அதனை மன தில் நினைத்துக்கொண்டே, பருவதராசபுத்திரியாகிய உமாதேவியாரை இடப்பாக த்திலுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் வணங்கிச் சென்றார்.—எ-று. (உ௩௦)

அந்நாளி லாளுடைய பிள்ளையார் திருப்புகலி யதன்க ணின்றும்
பன்னாகப் பூணணிவார் பயின்றதிருப் பதிபலவும் பணிந்து செல்வார்
புன்னாக மணங்கமழும் பூம்புகலூர் வந்திறைஞ்சிப் பொருவில் சீர்த்தி
மின்னாரும் புரிமுந்நூன் முருகனார் திருமடத்தின் மேவுங் காலை.

(இ-ள்.) அந்நாளில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சீகாழியினி ன்றும் பல சர்ப்பத்தை ஆபரணமாகத்தரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் தொழுதுவருகின்றவராய்ச் சுரபுன்னைமலர்கள் வாசனைவீசு கின்ற திருப்பூம்புகலூருக்கு எழுந்தருளிச் சுவாமியைப்பணிந்து, ஒப்பற்ற புகழை யுடைய மின்னல்போல விளங்குகின்ற முப்புரிநூலையணிந்த முருகநாயனாருடைய திருமடத்தில் எழுந்தருளும்பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உ௩க)

ஆண்டவர செழுந்தருளி யணியாரூர் மணிப்புற்றி லமர்ந்து வாழு
நீண்டசுடர் மாமணியைக் கும்பிட்டு நீடுதிருப் புகலூர் நோக்கி
மீண்டருளி ஞரென்று கேட்டருளி யெதிர்கொள்ளும் விருப்பி ஞேடும்
ஈண்டுபெருந் தொண்டர்குழாம் புடைசூழ வெழுந்தருளி யெதிரே சென்
[ருர்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்தருளி அழகிய திருவாரூரின்கண் நாகரத்தினங்கள்பொருந்திய புற்றினிடத்தில் வீற்றிருந்தருளும் பேரொளியையுடைய மாணிக்கம்போன்ற வன்மீகநாதரை வணங்கி, சிறந்த திருப்புகலூரை நோக்கித் திரும்பிவருகின்ருரென்று கேள்விப்பட்டு, அவரைத் தாம் எதிர்கொண்டு காணவேண்டுமென்னும் ஆசையோடு,தம்மைநெருங்கிய பெரிய அடியார்கூட்டங்கள் அருகில் சூழ்ந்துவர எழுந்தருளி அவரை எதிர்கொண்டார்.—எ-று. (உ௬உ)

கரண்டமலி தடம்பொய்கைக் காழியர்கோ னெதிரணையுங் காதல் கேட்டு
வரன்றிமணிப் புனற்புகலூர் நோக்கிவரும் வாகீசர் மகிழ்ந்து வந்தார்
திரண்டுவருந் திருநீற்றுத் தொண்டர்குழா மிருதிறமுஞ் சேர்ந்த போதில்
இரண்டுநில வின்கடல்க ளொன்ருகி யணைந்தனபோ லிசைந்தவன்றே.

(இ-ள்.) நீர்க்காக்கைகள் கூட்டமாக நெருங்கியிருக்கும் விசாலமாகிய தடாகங்கள்சூழ்ந்த சீகாழியிலுள்ளவர்களுக்குத் தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் எதிர்கொண்டுவருகின்ருரென்னும் அன்பான வார்த்தையைக் கேட்டு, மணிகளைவாரிக்கொண்டு பெருகுகின்ற நீரையுடைய திருப்புகலூரைநோக்கி வருகின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் மகிழ்ந்துவந்தருளினர்; திரளாகவருகின்ற திருவெண்ணீறுதரித்த அடியார்திருக்கூட்டங்கள் இரண்டுபகுதியும் ஒன்ருகச்சேர்ந்தபொழுதில் ஒளிவீசுகின்றஇரண்டுதிருப்பாற்கடல்கள் ஒன்ருகச்சேர்ந்ததன்மைபோலிருந்தன.—எ-று. (உ௬௩)

திருநாவுக் கரசரெதிர் சென்றிறைஞ்சச் சிரபுரத்துத் தெய்வவாய்மை
பெருஞான சம்பந்தப் பிள்ளையா ரெதிர்வணங்கி யப்ப ரேநீர்
வருநாளிற் றிருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீ ரென்று கூற
வருநாமத் தஞ்செழுத்துப் பயில்வாய்மை யவருமெதி ரருளிச் செய்வார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் எதிராகப்போய் வணங்க, சீகாழியில் அவதரித்தருளிய தெய்வத்தன்மைபொருந்திய சிறந்த திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அவருக்கெதிராகத் தாமும்வணங்கி அப்பரே! நீர் திருவாரூருக்கு எழுந்தருளும்நாளில் அங்குநடந்த பவனிச்சிறப்பைவகுத்துச் சொல்லுமென்றுகேட்க, அரிய திருநாமமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரிக்கின்ற மெய்ம்மையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளும் ஆளுடையபிள்ளையாருக்கு எதிரே அருளிச்செய்கின்ருர்.—எ-று. (உ௬௪)

**வேறு.**

சித்த நிலாவுந் தென்றிரு வாரூர் நகராளு
மைத்தழை கண்ட ராதிரை நாளின் மகிழ்செல்வம்
இத்தகை மைத்தென் றென்மொழி கேனென் றுரைசெய்தார்
முத்துவி தான மணிப்பொற் கவரி மொழிமாலை.

(இ-ள்.) அழகிய திருவாரூரை யரசுசெய்கின்ற அடியார்களுள்ளத்தில் வீற்றிருந்தருளும் காளகண்டராகிய சிவபெருமான் திருவாதிரைநட்சத்திரத்தில் பவனிவருகின்ற திருவிழாச்சிறப்பை இப்படிப்பட்டதென்று எவ்வாறு சொல்வேனென்று "முத்துவிதான மணிப்பொற்கவரி" என்னும் முதலையுடைய திருப்பதிகமாலையை அருளிச்செய்தார்.—எ-று. (உகரு)

**திருவாரூர் - திருவாதிரைத்திருப்பதிகம் - பண் - குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

முத்துவிதானமணிப்பொற்கவரிமுறையாலே
பத்தர்களோடுபாவையர்சூழப்பலிப்பின்னே
வித்தகக்கோலவெண்டலைமாலைவிரதிக
ளத்தனாரூராதிரைநாளாலதுவண்ணம்.

பாரூர்பல்லவத்தானைப்பத்தர்பணிந்தேத்தச்
சீரூர்பாடலாட லறாதசெம்மாப்பார்ந்
தோரூரொழியாதுலகமெங்கும்பணிந்தேத்து
மாரூரன்றனாதிரைநாளாலதுவண்ணம்.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **வன்மீகநாதர், தேவியார்-அல்லியங்கோதையம்மை.**

அம்மொழி மாலைச் செந்தமிழ் கேளா வணிசண்பை
மைம்மலர் கண்டத் தண்டர் பிரானர் மகனாருங்
கொய்ம்மலர் வாவித் தென்றிரு வாரூர் கும்பிட்டே
யும்முடன் வந்திங் குடனமர் வேனென் றருள்செய்தார்.

(இ-ள்.) அந்தச் செந்தமிழ்மொழியாற் செய்யப்பட்ட திருப்பதிகமாலையைக்கேட்டு, அழகிய சீகாழிப்பதியில் அவதரித்தருளிய விஷம்பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமான் திருக்குமாரராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் கொய்யத்தகுந்த மலர்களையுடைய தடாகங்கள்சூழ்ந்த அழகியதிருவாரூரைத்தரிசித்து, பின் இத்திருப்புகலூரில் உம்முடன்வந்து இருப்பேனென்று அருளிச்செய்தார்.—எ-று. (உகசு)

மாமதி லாரூர் மன்னனை யங்குவ ணங்கச்செந்
தாமரை யோடைச் சண்பையர் நாதன் றானேக
நாமரு சொல்லி னாதரு மார்வத் தொடுபுக்கார்
பூமலர் வாசத் தண்பணை சூழும் புகலூரில்.

(இ-ள்.) பெரிய மதில்கள்சூழ்ந்த திருவாரூரில் வீற்றிருந்தருளும் தியாகராசப்பெருமானை அவ்விடத்திற்போய் வணங்கும்படி செந்தாமரைமலர்களையுடைய ஓடைகள்சூழ்ந்த சீகாழிக்குத்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் எழுந்தருள, திருநாவுக்கரசுசுவாமிகளும் பூக்கள் மலர்தலால் வாசனைவீசுகின்ற குளிர்ந்த வயல்கள்சூழ்ந்த திருப்புகலூருக்கு எழுந்தருளினார்.—எ-று.

நாமரு - நாமருவு என்பதன் விகாரம். (உகஎ)

அத்திரு மூதூர் மேவிய நாவுக் கரசுந்தஞ்
சித்த நிறைந்தே யன்பு தெவிட்டுந் தெளிவெள்ள
மொய்த்திழி தாரைக் கண்பொழி நீர்மெய் முழுதாரப்
பைத்தலை நாகப் பூணணி வாரைப் பணிவுற்றார்.

(இ-ள்.) அந்தப்பழமையாகிய திருப்புகலூரை யடைந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகளும் அன்பானது தமது திருவுள்ளத்தில் நிறைந்து தெவிட்டுகின்ற தெளிவாகிய வெள்ளம்போலத் திரண்டொழுகுகின்ற ஆனந்தக்கண்ணீரானது திருமேனிமுழுமையும் பரவி நிறைய, படம்பொருந்திய தலையினையுடைய சர்ப்பத்தை ஆபரணமாகத்தரித்த சிவபெருமானைப் பணிந்தார்.—எ-று. (உ௯அ)

தேவர் பிரானைத் தென்புக லூர்மன் னியதேனைப்
பாவியன் மாலைச் செந்தமிழ் பாடிப் பரிவோடு
மேவிய காலந் தோறும் விருப்பிற் கும்பிட்டே
யோவுத லோவு திருப்பணி செய்தங் குறைகின்றார்.

(இ-ள்.) தேவர்களுக்கு நாயகரும், அழகிய திருப்புகலூரில் வீற்றிருந்தருளும் தேன்போன்றவருமாகிய சிவபெருமானைப் பாக்களால் தொடுக்கப்பட்ட செந்தமிழ்ப்பதிகமாலையை அன்போடுஅருளிச்செய்து,பொருந்திய காலங்கள்தோறும் விருப்பத்தோடு வணங்கி, குறைவில்லாத திருப்பணிகளைச்செய்து அங்கு வாசஞ்செய்திருந்தார்.—எ-று. (உ௯௯)

சீர்தரு செங்காட் டங்குடி நீடு திருநள்ளா
றார்தரு சோலை சூழ்தரு சாத்தை யயவந்தி
வார்திகழ் மென்முலை யாளொரு பாகன் றிருமருகல்
ஏர்தரு மன்பாற் சென்று வணங்கி யின்புற்றார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய திருச்செங்காட்டங்குடியும், உயர்ந்த திருநள்ளாறும், பொருந்திய சோலைகள்சூழ்ந்த சாத்தமங்கையிலுள்ள அயவந்தியென்னும் ஆலயமும், கச்சணிந்த மிருதுவான ஸ்தனங்களையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திலுள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருமருகலுமாகிய ஸ்தலங்களைச் சிறந்த பேரன்போடுசென்று பணிந்து இன்புற்றிருந்தார்.—எ-று. (உ௬0)

அப்படி சின்னாள் சென்றபி னாரூர் நகராளுந்
துப்புறழ் வேணிக் கண்ணுத லாரைத் தொழுதிப்பால்
மெய்ப்பொருண் ஞானம் பெற்றவர் வேணு புரத்தெங்கள்
பொற்புரி முந்நூன் மார்பரும் வந்தார் புகலூரில்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் அவ்வாறு க்ஷேத்திரயாத்திரைசெய்து, திருப்புகலூரில் சிலநாள் எழுந்தருளியிருந்த பின்பு, திருவாரூரை அரசுசெய்யும் பவளம்போலுஞ் சிவந்த சடைமுடியையும் நெற்றிக்கண்ணையுமுடைய சிவபெருமானைத்தொழுது, மீண்டு உண்மைஞானத்தைப் பெற்றவரும், சீகாழிப்பதியிலவதரித்தருளிய பொன்போலும் முப்புரிநூலையணிந்த மார்பினை யுடையவருமாகிய எமது திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் திருப்புகலூருக்கு எழுந்தருளினார்.

வேறு.

பிள்ளையா ரெழுந்தருளப் பெருவிருப்பால் வாகீசர்
உள்ளமகிழ்ந் தெதிர்கொண்டங் குடனுறையு நாளின்கண்

வள்ளலார் சிறுத்தொண்டர் மற்றவர்பா லெழுந்தருள
எள்ளருஞ்சீர் நீலநக்கர் தாமுமெழுந் தருளினார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருப்புகலூருக்கு எழுந்தருளவும் அதைக்கேட்டுத் திருநாவுக்கரசுசுவாமிகள் மிகுந்த விருப்பத்தோடு மனமகிழ்ந்து எதிர்கொண்டுவந்தழைத்து அந்தஸ்தலத்தில் வாசஞ்செய்யும்நாள்களில், ஈகையிற் சிறந்தவராகிய சிறுத்தொண்டநாயனார் அங்கு எழுந்தருளியிருக்கும் அவ்விருவரிடத்தும் எழுந்தருள, குறைவில்லாத புகழையுடைய திருநீலநக்கநாயனாரும் அவர்களிடத்தில் வந்தருளினார்.—எ-று. (உசஉ)

ஆங்கணையு மவர்களுட னப்பதியி லந்தணரா
மோங்குபுகழ் முருகனார் திருமடத்தி லுடனாகப்
பாங்கில்வருஞ் சீரடியார் பலருமுடன் பயில்கேண்மை
நீங்கரிய திருத்தொண்டி னிலையுணர்ந்து நிகழ்கின்றார்.

(இ-ள்.) அங்கு எழுந்தருளிய சிறுத்தொண்டநாயனார் திருநீலநக்கநாயனார் என்னும் இருவர்களோடு அத்திருப்புகலூரில்வாழும் வேதியராகிய சிறந்த புகழையுடைய முருகநாயனார் திருமடத்தில் ஒருங்குசேர்ந்து, பாங்காகவருகின்ற சிறப்புப்பொருந்திய அடியார்கள் பலரும் ஒற்றுமைப்பட்டிருக்கின்ற கேண்மையையும், நீங்குதற்கரிய திருத்தொண்டின் நிலைமையையும் விசாரித்துத் திருநாவுக்கரசுசுவாமிகள் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் என்னு மிருவரும் விளங்கியிருந்தார்கள்.—எ-று. (உசங)

திருப்பதிகச் செந்தமிழின் றிறம்போற்றி மகிழ்வுற்றுப்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் பொற்றாளில்
விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தங்
கொருப்படுசிந் தையினார்க ளுடனுறைவின் பயன்பெற்றார்.

(இ-ள்.) அங்கு அவ்விருவரும் செவ்விய தமிழ்ப்பதிகங்களைப்பாடி மகிழ்ச்சியடைந்து, பர்வதராசபுத்திரியாகிய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமானது திருவடிகளில் அன்புசெலுத்துகின்ற மெய்யடியார்களின் பெருமையை விரிவாகப்புகழ்ந்து பேசி, அத்திருமடத்தில் ஒருமைப்பட்ட திருவுள்ளத்தினையுடைய அடியார்கள் தங்களோடு கலந்து மகிழ்ந்திருத்தலாகிய பயனைப் பெற்றார்கள்.—எ-று.

திருத்தொண்டர் பெருமையினைவிரித் துரைத்தலாவது:—சிவனடியார்களேபிறவாநெறியுடையாரென்பதும், அவர்கள்மூலமாகவே சிவபெருமான் வெளிப்பட்டருளுவரென்பதுமாகிய பல சிறப்புக்களையும் விரித்துரைத்தல். உடனுறைவின்பயனாவது:—சிவனடியார்கள் ஒருங்குகூடி முத்திப்பேறெய்தற்குரிய மார்க்கமினைத்தெனவிசாரித்து இன்புற்றிருத்தல். (உசச)

அந்நாளிற் றமக்கேற்ற திருத்தொண்டி னெறியாற்ற
மின்னார்செஞ் சடையண்ணல் மேவுபதி பின்னைப்பலவு
முன்னாகச் சென்றேத்தி முதல்வன்றா டொழுவதற்குப்
பொன்னாரு மணிமாடப் பூம்புகலூர்தொழுகின்றார்.

(இ-ள்.) அவ்விருவரும் அவ்வாறு ஒழுகும்நாள்களில் தங்களுக்கு உரியனவாகிய திருத்தொண்டின் முறைமையைச் செய்யும்பொருட்டு, மின்னல்போலும்

விளங்குகின்ற சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான்வீற்றிருந்தருளும் மற்றத்திருப்பதிகளையும் முன்னேசென்று தொழுது, அவ்வெம்பெருமானுடைய திருவடிகளை வணங்குவதற்குப் பொன்மயமாகிய அழகிய மாளிகைகளையுடைய திருப்பூம்புகலூரைத் தொழுது அவ்விடத்தைவிட்டு நீங்கினார்கள்.—எ-று. (௨௪௫)

திருநீல நக்கடிகள் சிறுத்தொண்டர் முருகனார்
பெருநீர்மை யடியார்கள் பிறரும்விடை கொண்டேக
ஒருநீர்மை மனத்துடைய பிள்ளையா ருடனரசும்
வருநீர்செஞ் சடைக்கரந்தார் திருவம்பர் வணங்கினார்.

(இ-ள்.) திருநீலநக்கநாயனாரும், சிறுத்தொண்டநாயனாரும், முருகநாயனாரும், பெருமை பொருந்திய நல்லகுணத்தையுடைய மற்றச் சிவனடியார்களும் விடைபெற்றுக்கொண்டு தங்கள்தங்களிடத்திற்குப் போக, ஒருமைப்பட்ட மனதினையுடைய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் திருநாவுக்கரசுசுவாமிகளும் பெருகுகின்ற கங்கைநதியைச் சிவந்த சடையில்தரித்தவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவம்பர் என்னும் ஸ்தலத்தை வணங்கினார்கள்.—எ-று. (௨௪௬)

செங்குமுத மலர்வாவித் திருக்கடவூ ரணைந்தருளிப்
பொங்கியவெங் கூற்றடர்த்த பொன்னடிக டொழுதேத்திக்
குங்கிலியக் கலயனார் திருமடத்திற் குறைவறுப்ப
அங்கவர்பாற் சிவனடியா ருடனமுது செய்தார்கள்.

(இ-ள்.) செவ்வல்லி மலர்களையுடைய தடாகங்கள்சூழ்ந்த திருக்கடவூரை யடைந்து (மார்க்கண்டேயரைப் பிடிக்கும்பொருட்டுக்) கோபித்துவந்த கொடிய யமனை உதைத்தருளிய சிவபெருமானுடைய அழகிய திருவடிகளைவணங்கித் துதித்து, குங்கிலியக்கலயநாயனாருடைய திருமடத்தில் அவர் குறைநீங்கும்படி சிவனடியார்களோடு அவ்விருவரும் திருவமுதுசெய்தார்கள்.—எ-று. (௨௪௭)

சீர்மன்னுந் திருக்கடவூர்த் திருமயா னமும்வணங்கி
யேர்மன்னு மின்னிசைப்பா பலபாடி யினிதமர்ந்து
கார்மன்னுங் கறைக்கண்டர் கழலிணைக டொழுதகன்று
தேர்மன்னு மணிவீதித் திருவாக்கூர் சென்றடைந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்பினையுடைய திருக்கடவூர்த் திருமயானத்தையும் வணங்கி, அழகுபொருந்திய இனிய இசையோடுகூடிய பலதிருப்பதிகங்களைப் பாடி இனிமையாக எழுந்தருளியிருந்து, கருமைபொருந்திய விஷத்தைக் கண்டத்திலுடைய சிவபெருமானது திருவடிகளைத்தொழுது அவ்விடத்தினின்றும் நீங்கித் தேர்கள்பொருந்திய அழகிய வீதிகளையுடைய திருவாக்கூர்என்னும் ஸ்தலத்தை யடைந்தார்கள்.—எ-று. (௨௪௮)

சார்ந்தார்தம் புகலிடத்தைத் தான்றோன்றி மாடத்துக்
கூர்ந்தார்வ முறப்பணிந்து கோதிறமிழ்த் தொடைபுனைந்து
வார்ந்தாடுஞ் சடையார்தம் பதிபலவும் வணங்கியுடன்
சேர்ந்தார்க டம்பெருமான் றிருவீழி மிழலையினை.

(இ-ள்.) தான்தோன்றி மாடமென்னும் திருக்கோயிலில் தம்மைச்சார்ந்த அடியார்களுக்குப் புகலிடமாக வீற்றிருந்தருளும் சிவபெருமானை மிகுந்தபேரன்போடும் வணங்கிக் குற்றமற்ற தமிழ்ப்பதிகத்தைப்பாடி, நீண்டு அசைகின்ற சடை

முடியையுடைய சிவபெருமானது பல் திருப்பதிகளையும்சென்று வணங்கி உட னேதமது ஆண்டவர் வீற்றிருந்தருளும் திருவீழிமிழலை என்னும் திருப்பதியை அடைந்தார்கள்.—எ-று. (உசக)

வேறு.

வீழி மிழலை வந்தணையு மேவு நாவுக் கரசினையுங்
காழி ஞானப் பிள்ளையையுங் கலந்த வுள்ளக் காதலினால்
ஆழி வலவ னறியாத வடியா ரடியா ரவர்களுடன்
வாழி மறையோ ரெதிர்கொண்டு வணங்க வணங்கி யுள்புக்கார்.

(இ-ள்.) திருவீழிமிழலைக்கு எழுந்தருளும் திருநாவுக்கரசு சுவாமிகளையும், சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளையும் தம் மனத்தில் பொருந்திய அன்போடு, சக்கரத்தையுடைய விஷ்ணுவினால் அறியப்படாத திருவடியையுடைய சிவபெருமானது அடியார்களும் அவ்வூரிலுள்ள பிராமணர்களும் எதிர்கொண்டுவந்து வணங்க, இவ்விருவரும் அவர்களைவணங்கி ஊரினுள்ளேபுகுந்தார்கள்.—எ-று.

வாழி - அசைநிலை. (உருo)

மாட வீதி யலங்கரித்து மறையோர் வாயின் மணிவிளக்கு
நீடு கதலி தழைப்பூக நிரைத்து நிறைபொற் குடமெடுத்துப்
பீடு பெருகும் வாகீசர் பிள்ளை யாருந் தொண்டர்களுங்
கூட மகிழ்ந்து விண்ணிழிந்த கோயில்வாயில் சென்றணைந்தார்.

(இ-ள்.) திருக்கோயிலின் மாடவீதியை அலங்காரஞ்செய்து, பிராமணர்களுடைய வீட்டு வாயில்கள்தோறும் இரத்தினவிளக்குகள்வைத்து, நீண்ட வாழைமரங்களையும், தழைத்த கமுகமரங்களையும் வரிசையாகநாட்டிப் பொன்னாலாகிய பூரணகலசங்களையெடுத்து வரிசைசெய்ய, பெருமைபொருந்திய திருநாவுக்கரசு சுவாமிகளும், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும், அடியார்களும் சேர்ந்து மகிழ்ந்து, ஆகாயத்தினின்றும் இழிந்த விமானக்கோயிலின் திருவாயிலில்வந்து சேர்ந்தார்கள்.—எ-று. (உருக)

சென்று புகுந்து திருவீழி மிழலை யமர்ந்த செங்கனகக்
குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் வலமா வந்துதிரு
முன்றில் வணங்கி முன்னெய்தி முக்கட் செக்கர்ச் சடைமவுலி
வென்றி விடையார் சேவடிக்கீழ் விழுந்தா ரெழுந்தார் விம்மினார்.

(இ-ள்.) திருவாயிலினுள்ளேபோய்ப் புகுந்து, திருவீழிமிழலையில் எழுந்தருளியிருக்கும் சிவந்த பொன்மலையை வில்லாகவுடைய சிவபெருமானுடைய திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்து திருமுற்றத்தைவணங்கி முன்னேவந்து மூன்றுகண்களையும் செவ்வானம்போலும் சடைமுடியையும் வெற்றிபொருந்திய ரிஷபவாகனத்தையுமுடையஅவ்வெம்பெருமானது திருவடிகளின் கீழேவிழுந்து வணங்கினார்கள்; எழுந்து ஆராமையால் அழுதார்கள்.—எ-று. (உருஉ)

கைகள் குவித்துக் கழல்போற்றிக் கலந்த வன்பு கரைந்துருக
மெய்யில் வழியுங் கண்ணருவி விரவப் பரவுஞ் சொன்மாலை

செய்ய சடையார் தமைச்சேரார் தீங்கு நெறிசேர் கின்றாரென்
றுய்யு நெறித்தாண் டகமொழிந்தங் கொழியாக் காதல் சிறந்தோங்க.

(இ-ள்.) இரண்டுகைகளையும் சிரசின்மேல் குவித்து வைத்துக்கொண்டு திருவடிகளைவணங்கிப் பொருந்திய பேரன்பினால் மனம் நெக்குருகவும், அவ்வன்பு காரணமாகத் திருமேனியில்வழிகின்ற ஆனந்தக்கண்ணீர் அருவிபோலப்பெருகவும், துதிக்கின்ற திருப்பதிகமாலையை "திருவீழிமிழலையானைச் சேராதார் தீநெறிக்கேசேர்கின்றாரே" என்று முத்திநெறியை யடைதற்குரிய திருத்தாண்டகத்தை அருளிச்செய்து, அவ்விடத்தைவிட்டுநீங்காமைக்குக் காரணமாகிய ஆசையானது அதிகரித்து ஓங்கவும்.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலும் குளகம். (உருரு)

---

திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

போரானையீருரிவைப்போர்வையானைப்
புலியதளேயுடையாடைப்போற்றினானைப்
பாரானைமதியானைப்பகலானானைப்
பல்லுயிராய்நெடுவெளியாய்ப்பரந்துநின்ற
நீரானைக்காற்றானைத்தீயானானை
நினையாதார்புரமெரியநினைந்ததெய்வத்
தேரானைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே.

அறுத்தானையயன்றலைகளஞ்சிலொன்றை
யஞ்சாதேவரையெடுத்தவரக்கன்றோள்க
ளிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானை
யிந்துவினைத்தேய்த்தானையிரவிதன்பற்
பறித்தானைப்பகீரதற்காவானோர்வேண்டப்
பரந்திழியும்புனற்கங்கைபனிபோலாகச்
செறுத்தானைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே.

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-வீழியழகர், தேவியார்-சுந்தரகுசாம்பிகையம்மை.

---

முன்னா ளயனுந் திருமாலு முடிவு முதலுங் காணாத
பொன்னார் மேனி மணிவெற்பைப் பூநீர் மிழலை யினிற் போற்றிப்
பன்னாள் பிரியா நிலைமையினாற் பயிலக் கும்பிட் டிருப்பாரா
யந்நாண் மறையோர் திருப்பதியி லிருந்தார் மெய்ம்மை யருந்தவர்கள்

(இ-ள்.) மெய்ம்மையாகிய அரிய தவத்தினையுடைய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும், திருநாவுக்கரசுசுவாமிகளும் முற்காலத்தில் பிரமன் விஷ்ணு

என்னு மிருவரும் முடியையும் அடியையும் தேடிக் காணாத அழகுபொருந்திய திருமேனியையுடைய மாணிக்கமலைபோன்ற சிவபெருமானை மலர்கள் தங்கிய நீரையுடைய திருவீழிமிழலையில் துதிசெய்து, அநேகநாள்கள் நீங்காத நிலைமையோடு பொருந்தும்படி வணங்கிக்கொண்டிருக்கின்றவர்களாய், அந்நாளில் பிராமணர்கள் வாசஞ்செய்யும் அந்த ஸ்தலத்தில் எழுந்தருளியிருந்தார்கள்.—எ-று. ()

சீரின் விளங்குந் திருத்தொண்ட ரிருந்து சிலநாட் சென்றதற்பின்
மாரிசுருங்கி வளம்பொன்னி நதியும் பருவ மாறுதலும்
நீரி னியன்ற வுணவருகி நிலவும் பலமன் னுயிர்களெல்லாம்
பாரின் மலிந்த விலம்பாட்டிற் படர்கூர் வறுமை பரந்ததால்.

(இ-ள்.) சிறப்போடு விளங்குகின்ற திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகள் என்னு மிருவரும் அத்திருவீழிமிழலையில் வாசஞ்செய்து சிலநாள் போனபின்பு, மழைக்காலத்தில் பெருகுவதல்லாமல் கோடைக்காலத்திலும் வெள்ளம்வருகின்ற வளம்பொருந்தியகாவிரியாறும் பருவகாலத்தில் பெய்யாமல் வற்றிப்போகவும், நீரினால்விளைகின்ற தானியங்கள் குறைந்து உலகத்தில் வாசஞ்செய்யும் பல உயிர்களும் அதிகரிக்கின்ற வறுமையினால் துன்பமடைதற்குக் காரணமாகிய பஞ்சகாலம் உண்டாயிற்று.—எ-று. (உ௫௫)

வைய மெங்கும் வற்கடமாய்ச் செல்ல வுலகோர் வருத்தமுற
நைய நாளிற் பிள்ளையார் தமக்கு நாவுக் கரசினுக்குங்
கையின் மானு மழுவுமுடன் காணக் கனவி லெழுந்தருளிச்
செய்ய சடையார் திருவீழி மிழலை யுடையா ரருள்செய்வார்.

(இ-ள்.) உலகமுழுவதும் பஞ்சமுண்டாகிப் பரவ, அதனால் உலகத்திலுள்ளவர்கள் துன்பப்பட்டு வருந்துங்காலத்தில் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கும் திருநாவுக்கரசுசுவாமிகளுக்கும், திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளும் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் திருக்கரத்தில் மானும் மழுவும் தோன்றும்படி சொப்பனத்தில் வெளிப்பட்டு அருளிச்செய்வார்.—எ-று. (உ௫௬)

கால நிலைமை யாலுங்கள் கருத்தில் வாட்ட முறீரெனினும்
ஏல வும்மை வழிபடுவார்க் களிக்க வளிக்கின் றோமென்று
கோலங் காண வெழுந்தருளிக் குலவும் பெருமை யிருவர்க்கு
ஞாலமறியப் படிக்காசு வைத்தார் மிழலை நாயகனார்.

(இ-ள்.) காலவித்தியாசத்தினால் உங்கள் மனதில் சிறிதும் வாட்டத்தை யடையீர்களானாலும் அன்பு பொருந்த உங்களை வழிபடுகின்ற அடியார்களுக்குக் கொடுத்து உதவும்படியாக நாம் உங்களுக்குக் கொடுக்கின்றோமென்று, யாவரும் தமது திருக்கோலத்தைக் காணும்படி ஆசாரியமூர்த்திகளாய் எழுந்தருளிவிளங்குகின்ற மேன்மையையுடைய அவ்விருவர்களுக்கும் திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் உலகத்தாரறியும்படி படிக்காசுவைத்தருளி[illegible]—எ-று.

படிக்காசு என்பது படிச்செலவுக்காகக் கொடுக்கப்பட[illegible] காசு; அன்றி, திருப்படியின்மேல் வைத்த காசு எனினுமாம். [illegible]௫எ)

விண்ணின் றிழிந்த விமானத்தின் கிழக்கு மேற்கும் பீடத்தில்
அண்ணல் புகலி யாண்டகையார் தமக்கு மாண்ட வாசினுக்கு
நண்ணு நாள்க டொறுங்காசு படிவைத் தருள நானிலத்தில்
எண்ணி லடியா ருடனமுது செய்தங் கிருந்தா ரிருவர்களும்.

(இ-ள்.) ஆகாயத்தினின்றும் இறங்கிய விமானக்கோயிலினது கிழக்குப் பீடத்திலும் மேற்குப்பீடத்திலும் முறையே பெருமைபொருந்திய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்கும், திருநாவுக்கரசுசுவாமிகளுக்கும் வருகின்ற நாள்கள்தோறும் படிக்காசுவைத்தருள, அதனால் விசாலமாகிய உலகத்திலுள்ள அளவில்லாத சிவனடியார்களோடு திருவமுதுசெய்து அவ்விருவர்களும் அவ்விடத்திலேயே இருந்தார்கள்.—எ-று. (உருஅ)

அல்லார் கண்டத் தண்டர்பிரா னருளார் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப் பரம னடியா ரானோர்கள்
எல்லா மெய்தி யுண்கவென விரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லாற்சாற்றிச்சோறிட்டார் துயர்கூர்வறுமைதொலைத்திட்டார்

(இ-ள்.) இருள்போலுங் கரியகண்டத்தையுடைய சிவபெருமானது திருவருளினால் தாங்கள்பெற்ற படிக்காசானது பலவகையாலும் இயைந்தபொருள்களைவாங்கத் தகுதியாயிருக்க, சிவனடியார்களா யுள்ளவர்களெல்லாரும் இங்கே வந்து போசனம்பண்ணக்கடவர்களென்று இரண்டுகாலங்களிலும் பறைசாற்றித் தெரிவித்தும், சொல்லித் தெரிவித்தும் திருவமுது செய்வித்து அடியார்களுடைய துன்பமிகுந்த வறுமையை நீக்கினார்கள்.—எ-று. (உருகூ)

ஈசர் மிழலை யிறையவர்பா லிமயப் பாவை திருமுலைப்பா
றேச முய்ய வுண்டவர்தாந் திருமா மகனா ராதலினாற்
காசு வாசி யுடன்பெற்றார் கைத்தொண் டாகு மடிமையினால்
வாசி யில்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர்.

(இ-ள்.) திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளும் முதல்வராகிய சிவபெருமானது இடப்பாகத்திலமர்ந்த உமாதேவியாருடைய திருமுலைப்பாலை உலகத்தார் பிழைக்கும்பொருட்டுஉண்டருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் சிவபெருமானுக்குத் திருக்குமாரரானபடியால் படிக்காசுக்கு வட்டங்கொடுத்துமாற்றப்பெற்றார்; திருநாவுக்கரசுசுவாமிகள் திருமேனி வருந்தக் கைத்தொண்டு செய்கின்ற அடிமைத்தன்மை யுடையவராயிருப்பதினால் வட்டமில்லாமல் மாறுகின்ற படிக்காசைப் பெற்றுவந்தார்.—எ-று.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் சிவபெருமானுக்குத் திருக்குமாரராயிருத்தலாலும் வருத்தமுற்றுக் கைத்தொண்டுசெய்யாமையாலும் அவர் வட்டங்கொடுத்து மாற்றவும், திருநாவுக்கரசுசுவாமிகள் வருந்தி உழவாரத்தொண்டுசெய்வதோடு அடியவராயு மிருக்குந்தன்மைபற்றி வட்டமில்லாமல்மாற்றவும் பெற்றனரென்க. இதனால், அடியவர்பெருமையை விளக்கியவாறு காண்க. (உகூ0)

ஆறு சடைமே லணிந்தருளு மண்ணல் வைத்த படிகாசால்
ஈறி லாத பொருளுடைய விருவ ருடைய திருமடங்கள்

சோறு நாளுந் தொண்டர்மகிழ்ந் துண்ண வுண்ணத் தொலையாதே
யேறு பெருமை புவிபோற்ற வின்புற் றிருக்கு மந்நாளில்.

(இ-ள்.) கங்கைநதியைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமான் வைத்தருளியபடிக்காசினால் குறையாத செல்வத்தையுடைய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகள் என்னும் இவ்விருவர்களது திருமடங்களில் போசனத்தை நாள்தோறும் அடியார்கள் விரும்பிப் புசிக்கப் புசிக்கக் குறையாமல் அதிகரிக்கின்ற பெருமையை உலகத்தார்புகழும்படி இன்பமடைந்திருக்கும் நாளில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உசுக)

காலந் தவறு தீர்ந்தெங்குங் கலிவான் பொழிந்த புனல்கலந்து
ஞால மெல்லாங் குளிர்தூங்கி யுணவு பெருகி நலஞ்சிறப்ப
மூல வன்ப ரிருவர்களு மொழிமா லைகளும் பலசாத்தி
நீல கண்ட ருறைபதிகள் பிறவும் வணங்க நினைவுற்றார்.

(இ-ள்.) பஞ்சகாலம்ஒழிந்து எவ்விடத்திலும் ஒலியையுடைய மேகங்கள் பொழிந்தநீரானது பரவிப்பூமியெங்குங்குளிர்ந்து, உணவுக்குவேண்டிய தானியங்கள்விளைந்து வளமுண்டாக, உலகத்தார் கடைத்தேறுதற்குக் காரணராயிருக்கின்ற அவ்விருவர்களும் பல திருப்பதிகங்களைப்பாடித் துதித்து, காளகண்டராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றத்திருப்பதிகளையும் சென்று வணங்கும்படி நினைத்தார்கள்.—எ-று. (உசுஉ)

வாய்ந்த மிழலை மாமணியை வணங்கிப் பிரியா விடைகொண்டு
பூந்தண் புனல்சூழ் வாஞ்சியத்திற் றங்கிப் புனிதர் வாழ்பதிகள்
ஏய்ந்த வன்பி னுலிறைஞ்சி யிசைவண் டமிழ்கள் புனைந்துபோய்ச்
சேர்ந்தார் செல்வத் திருமறைக்கா டெல்லை யில்லாச்சீர்த்தியினார்.

(இ-ள்.) திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை வணங்கி நீங்காத விடைபெற்றுக்கொண்டு,மலர்களையுடைய குளிர்ந்த நீர்சூழ்ந்த திருவாஞ்சியமென்னும் ஸ்தலத்தில் எழுந்தருளியிருந்து, சிவபெருமான் வீற்றிருந்தருளும் பலதிருப்பதிகளையும் உள்ளத்திற்பொருந்திய பேரன்போடு வணங்கி, இசை பொருந்திய வளவிய பல திருப்பதிகங்களைப்பாடிச்சென்று, அளவில்லாதகீர்த்தியையுடைய அவ்விருவர்களும் செல்வம்நிறைந்த திருமறைக்காடு என்னும் ஸ்தலத்தை யடைந்தார்கள்.—எ-று.

திருமறைக்காடு என்பது வேதாரணியம். 'பூந்தண்புனல்சூழ் வாஞ்சியத்தைப்போற்றி' என்றும் பாடபேதம். (உசுங)

மன்றல் விரவு மலர்ப்புன்னை மணஞ்சூழ் சோலை யுப்பளத்தின்
முன்றி றோறுஞ் சிறுமடவார் முத்தங் கொழிக்கு மறைகாட்டுக்
குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் புகுந்து வலங்கொண்டு
சென்று சேர்ந்தார் தென்புகலிக் கோவு மரசுந் திருமுன்பு.

(இ-ள்.) அழகிய சீகாழிக்குத்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் திருநாவுக்கரசுசுவாமிகளும் வாசனைவீசுகின்ற மலர்களையுடைய புன்னை

மரங்களையும் மணம்பொருந்திய மற்றைச்சோலைகளையுமுடைய கழிநிலத்தின்முற்றங்களிலெல்லாம் பரதவருடைய சிறுபெண்கள் முத்துக்களைக்கொழித்து விளையாடுகின்ற திருமறைக்காட்டில் மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருக்கோயிலிற்புகுந்து பிரதக்ஷிணஞ்செய்து சந்நிதியில் வந்துசேர்ந்தார்கள்.—எ-று. (உசுச)

பரவை யோதக் கழிக்கானற் பாங்கு நெருங்கு மப்பதியில்
அரவச் சடையந் தணனாரை யகில மறைக ளர்ச்சனைசெய்
துரவக் கதவந் திருக்காப்புச் செய்த வந்நாண் முதலிந்நாள்
வரையு மடைத்தே நிற்கின்ற மணிநீள் வாயில் வணங்குவார்.

(இ-ள்.) கடலின்பெருக்கையுடைய கழிநிலத்தினருகில் நெருங்கிய அந்தத் திருப்பதியில் பாம்பையணிந்தசடைமுடியையுடைய சிவபெருமானை நான்கு வேதங்களும் பூசித்து வலிமைபொருந்திய கதவைத் திருக்காப்புச்செய்த அந்த நாள்தொடங்கி இந்நாள்வரையிலும் அடைத்திருக்கின்ற அழகிய திருவாயிலை வணங்கும்படி முயன்றார்கள்.—எ-று.

திருக்காப்புச்செய்தல்—கதவைஅடைத்துப் பூட்டுதல். (உசுரு)

தொல்லை வேதந் திருக்காப்புச் செய்த வாயிற் றொடர்வகற்ற
வல்ல வன்ப ரணையாமை மருங்கோர் வாயில் வழியெய்தி
யல்ல றீர்ப்பார் தமையருச்சிப் பார்க டொழுவா ராம்படிகண்
டெல்லை யில்லாப் பெரும்புகழா ரிதனை யங்குக் கேட்டறிந்தார்.

(இ-ள்.) பழமையாகிய வேதங்கள் திருக்காப்புச்செய்துவைத்த திருவாயிலின் கதவைத்திறக்க வல்லமையுடைய அடியார்கள் வராமையால், அதன் சமீபத்திலுள்ள வேறொரு வாயிலின்வழியாக வந்து, பிறவித்துன்பத்தை நீக்குகின்ற சிவபெருமானைப் பூசைசெய்கின்றவர்களும் தொழுகின்றவர்களுமாயிருக்கின்ற முறைமையைப்பார்த்து, அளவில்லாத பெரும்புகழையுடையவர்களாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் அப்பர்சுவாமிகளும் இந்தச் செய்தியை அங்குள்ளவர்களைக் கேட்டறிந்துகொண்டார்கள்.—எ-று. (உசுசு)

ஆங்கப் படியை யறிந்தருளி யாழித் தோணி புரத்தரசர்
ஓங்கும் வேத மருச்சனைசெ யும்பர் பிரானை யுள்புக்குத்
தேங்கா திருவோ நேரிறைஞ்சத் திருமுன் கதவந் திருக்காப்பு
நீங்கப் பாடு மப்பரென நீடுந் திருநா வுக்கரசர்.

(இ-ள்.) அவ்விடத்தில் வேதங்கள் திருக்காப்புச் செய்த செய்கையைக் கேட்டறிந்து, பிரளயகாலத்தில் பொங்கிய சமுத்திரத்தில் தோணிபோல் மிதந்த சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் உயர்ந்த வேதங்கள் பூசைசெய்த சிவபெருமானைத் திருவாயிலினுள்ளே புகுந்து தடையில்லாமல் நாமிருவோரும் நேரே தரிசித்து வணங்கும்படி சந்நிதிக்குமுன்னே யிருக்கின்ற திருக்கதவுக்கு இட்டிருக்கும் திருக்காப்பு நீக்கும்படி, அப்பரே! நீர் பாடுவீராகவென்று அருளிச்செய்ய சிறந்த திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (உசுஎ)

உண்ணீர் மையினுற் பிள்ளையா ருரைசெய் தருள வதனாலே
பண்ணி னேரு மொழியாளென் றெடுத்துப் பாடப் பயன்றுய்ப்பான்
றெண்ணீ ரணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்கத் திருக்கடைக்கா
பெண்ணீ ரிரக்க மில்லீரே யென்று பாடி யிறைஞ்சுதலும். [ப்

(இ-ள்.) திருவுள்ளத்திற்பொருந்திய பேரன்பினால் திருஞானசம்பந்தப் பிள்ளையார் அருளிச்செய்தபடியால் "பண்ணினேர்மொழியாள்" என்று முதலில் எடுத்துத் தாம் எண்ணியபயனை அடையும்படியாகத்திருப்பதிகம்பாட, தெளிந்த கங்கைநதியைத் தரித்த சிவபெருமான் திருக்கதவந்திருக்காப்பு நீக்குவதற்குச் சற்றுத் தாமதஞ்செய்ய, அதனால் யாம் பாடுதலைக் கருதீர் " இரக்கமொன்றிலீர் " என்று திருக்கடைக்காப்பில் வைத்துப் பாடி வணங்கினவுடனே.—எ-று.(உசுஅ)

---

### திருமறைக்காடு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ்செய்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள் செய்ம்மினே. (க)

ஈண்டுசெஞ்சடையாகத்துளீசரோ
மூண்டகார்முகிலின்முறிக்கண்டரோ
வாண்டுகொண்டநீரேயருள்செய்திடும்
நீண்டமாக்கதவின்வலிநீக்குமே. (உ)

அட்டமூர்த்தியதாகியவப்பரோ
துட்டர்வான்புரஞ்சுட்டசுவண்டரோ
பட்டங்கட்டியசென்னிப்பரமரோ
சட்டவிக்கதவந்திறப்பிம்மினே. (ஙு)

அரியநான்மறையோதியநாவரோ
பெரியவான்புரஞ்சுட்டசுவண்டரோ
விரிகொள்கோவணவாடைவிருத்தரோ
பெரியவான்கதவம்பிரிவிக்கவே. (ச)

மலையில்நீடிருக்கும்மறைக்காடரோ
கலைகள்வந்திறைஞ்சுங்கழலேத்தரோ
விலையில்மாமணிவண்ணவுருவரோ
தொலைவிலாக்கதவந்துணைநீக்குமே. (ரு)

பூக்குந்தாழைபுறணியருகெலா
மாக்குந்தண்பொழில்சூழ்மறைக்காடரோ
ஆர்க்குங்காண்பரியீரடிகேளுமை
நோக்கிக்காணக்கதவைத்திறவுமே. (சு)

வெந்தவெண்பொடிப்பூசும்விகிர்தரோ
வந்தமில்லியணிமறைக்காடரோ
எந்தைநீயடியார்வந்திறைஞ்சிட
விந்தமாக்கதவம்பிணிநீக்குமே. (எ)

ஆறுசூடுமணிமறைக்காடரோ
கூறுமாதுமைக்கீந்தகுழகரோ
ஏறதேறியவெம்பெருமானிந்த
மாறிலாக்கதவம்வலிநீக்குமே. (அ)

சுண்ணவெண்பொடிப்பூசுஞ்சுவண்டரோ
பண்ணியேறுகந்தேறும்பரமரோ
வண்ணலாதியணிமறைக்காடரோ
திண்ணமாக்கதவந்திறப்பிம்மினே. (கூ)

அரக்கனைவிரலாலடர்த்திட்டநீ
ரிரக்கமொன்றிலீரெம்பெருமானிரோ
சுரக்கும்புன்னைகள்சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கதவந்திறப்பிம்மினே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-மறைக்காட்டீசர், தேவியார் - யாழைப்பழித்தநாயகி.

---

வேத வனத்தின் மெய்ப்பொருளி னருளால் விளங்கு மணிக்கதவங்
காத லன்பர் முன்புதிருக் காப்பு நீங்கக் கலைமொழிக்கு
நாதர் ஞான முனிவருடன் றொழுது விழுந்தார் ஞாலத்துள்
ஓத வொலியின் மிக்கெழுந்த தும்ப ரார்ப்பு மறையொலியும்.

(இ-ள்.) திருமறைக்காட்டில் வீற்றிருந்தருளும் மெய்ப்பொருளாகிய சிவபெருமானது திருவருளினால், விளங்குகின்ற மணிகளழுத்திய திருக்கதவானது பேரன்பினையுடைய அவ்விருவர்களுக்கு முன்பாகத் திருக்காப்புநீங்கினவுடனே, திருநாவுக்கரசுசுவாமிகளும் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் பூமியில் விழுந்து வணங்கினார்கள்; உலகத்தில் தேவர்கள் வாழ்த்துதலாலுண்டாகின்ற ஆரவாரமும், வேதங்களின் முழக்கமும் சமுத்திரத்தின் ஓசையைப்பார்க்கிலும் மிகுதியாக முழங்கின.—எ-று.

அன்ப ரீட்டங் களிசிறப்ப வாண்ட வரசுஞ் சிவக்கன்றும்
இன்ப வெள்ளத் திடைமூழ்கி யெழுந்துள் புகுந்து தம்பெருமான்
முன்பு பணிந்து போற்றிசைத்துப் பரவி மொழிமா லைகள்பாடி
யென்பு கரைய வுள்ளுருகி யிறைஞ்சி யரிதிற் புறத்தணைந்தார்.

(இ-ள்.) அடியார் திருக்கூட்டங்கள் மகிழ்ச்சியடையத் திருநாவுக்கரசுசுவாமிகளும் திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் பேரின்பமாகிய வெள்ளத்தில்

முழுகியெழுந்து ஆலயத்தினுள்ளே புகுந்து, தமது ஆண்டவராகிய சிவபெருமானது திருமுன்னே வணங்கித்துதித்துத் திருப்பதிகமாலைகளைப் புகழ்ந்துபாடி, எலும்புங்களையும்படி உள்ளமானது உருகி வணங்கிக்கொண்டு பிரிவாற்றுமையோடுவெளியில் வந்தார்கள்.—எ-று. (உஎ0)

புறம்பு நின்ற வாகீசர் புனித ருருளா லிக்கதவந்
திறந்து மடைத்துஞ் செல்லுநெறி திருந்த மலையா டிருமுலையிற்
கறந்த ஞானங் குழைத்தமுது செய்த புகலிக் கவுணியனை
நிறைந்த கதவ மடைக்கும்வகை நீரும் பாடி யருளுமென.

(இ-ள்.) புறத்தில் வந்து நின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் சிவபெருமானுடைய திருவருளினால் இந்தத்திருக்கதவை நாள்தோறும் திறந்தும் அடைத்தும் வரும் முறைமை வழக்கமாகும்படி பார்வதியாருடைய ஸ்தனங்களி னின்றும் கறந்தபாலோடு சிவஞானத்தையும் குழைத்துத்திருவமுதுசெய்தருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளைப் பார்த்து, நிறைந்த திருக்கதவை அடைக்கும்படி தேவரீரும் திருப்பதிகம் பாடியருளவேண்டுமென்று சொல்ல.—எ-று. (உஎக)

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம்.

சண்பை யாளுந் தமிழ்விரகர் தாமுந் திருநா வுக்கரசர்
பண்பின் மொழிந்த வுரைகொண்டு பதிகம் பாடு மவ்வளவிற்
கண்பொற் பமைந்த நுதற்காள கண்ட ரருளாற் கடிதுடனே
திண்பொற் கதவந் திருக்காப்புச் செய்த தெடுத்த திருப்பாட்டில்.

(இ-ள்.) சீகாழிக்குத் தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும், திருநாவுக்கரசுசுவாமிகள் அன்போடு கதவைமூடும்படிசொல்லிய வார்த்தையைக் கேட்டுத் திருப்பதிகம் பாடும்பொழுது, கண்ணினால் அழகுவிளங்குகின்ற நெற்றியையுடைய காளகண்டராகிய சிவபெருமானது திருவருளினால் வலியபொன்மயமாகிய திருக்கதவானது முதலில் அருளிச்செய்த திருப்பாட்டிலேயே விரைந்து உடனேஅடைபட்டது.—எ-று. (உஎஉ)

அதுகண் டுடைய பிள்ளையார் தாமு மாண்ட வரசுமகிழ்ந்
திதுநம் பெருமா னருள்செய்யப் பெற்றே மென்றங் கிறைஞ்சியபின்
பதிக நிரம்பப் பிள்ளையார் பாடித் தொழுது பணிவுற்றார்
எதிர்பொற் றிருவா யிலின்வழக்க மென்று நிகழ்ச்சி யெய்தியதால்.

(இ-ள்.) அப்படி அடைபட்டதைக்கண்டு ஆளுடையபிள்ளையாரும், ஆளுடையஅரசும் மகிழ்ச்சியடைந்து, இப்படி திறக்கவும் அடைக்கவுமாகிய பாக்கியத்தை நமது சிவபெருமான் திருவருள்செய்யப் பெற்றுக்கொண்டோமென்று வணங்கினபின்பு, திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பதிகமுழுவதும் பாடியருளித்தொழுது வணங்கினர். அதுமுதலாகத் திருக்கோயிலின் எதிரிலுள்ள திருவாயிலின் திருக்கதவம் திறத்தலும்மூடுதலுமாகிய வழக்கம்எந்நாளும்நடந்துகொண்டுவந்தது.—எ-று. (உஎங)

அங்கு நிகழ்ந்த வச்செயல்கண் டடியா ரெல்லா மதிசயித்துப்
பொங்கு புளக மெய்திடமெய் பொழியுங் கண்ணீர் பரந்திழிய
எங்கு நிகரொன் றில்லாத விருவர் பாத மிறைஞ்சினர்
நங்கள் புகலிப் பெருந்தகையு மரசு மடத்தி னண்ணியபின்.

(இ-ள்.) அவ்விடத்தில் நடந்த அந்தச்செய்கையைப்பார்த்து அடியவர்களெல்லாம் ஆச்சரியப்பட்டுத் தங்கள்திருமேனியில் மிகுந்த மயிர்க்குச்சுண்டாகவும்,பொழிகின்ற ஆனந்தக்கண்ணீரானது பரவிக் கீழேசிந்தவும், எவ்விடத்திலும் தமக்கு ஒருவரும் நிகரில்லாத அவ்விருவர்களுடைய திருவடிகளையும் வணங்கினார்கள். அப்பால், நமதுசீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும், திருநாவுக்கரசுசுவாமிகளும் திருமடத்துக்கு வந்தபின்பு.—எ-று. (உ௭௪)

அரிதிற் றிறக்கத் தாம்பாட வடைக்க வவர்பா டியவெளிமை
கருதி நம்பர் திருவுள்ள மறியா தயர்ந்தே னெனக்கவன்று
பெரிது மஞ்சித் திருமடத்தி லொருபா லடைந்து பேழ்கணித்து
மருவு முணர்விற் றுயில்கொண்டார் வாய்மை திறம்பா வாகீசர்.

(இ-ள்.) உண்மைநிலையில் சிறிதும் தவறுதலில்லாத திருநாவுக்கரசுசுவாமிகள் தாம் திருப்பதிகம் முழுதும்பாடியபின்னே திருக்கதவு அருமையாகத்திறந்த தன்மையையும், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் முதற்பாட்டைப் பாடினவுடனே திருக்கதவு அடைந்த எளிமையையும் நினைந்து, சிவபெருமானுடைய திருவுள்ளம் இதுவென்று அறிந்துகொள்ளாமல் கலங்கினேனென்றுவருந்தி, மிகவும் பயந்து,திருமடத்தில் ஒருபக்கத்தில்போய்த் தம்பிழையைக்குறித்துச் சிந்தித்துக் கொண்டு பொருந்திய உணர்வோடுகூடிய நித்திரை கொண்டார்.—எ-று.

பேழ்கணித்தல்=தம்பிழையைக் குறித்துச் சிந்தித்தல். உணர்விற்றுயில் என்பது-அறிதுயில்; யோகநித்திரை எனினுமாம். (உ௭௫)

மன்னுஞ் செல்வ மறைக்காட்டு மணியின் பாத மனத்தின்கண்
உன்னித் துயிலும் பொழுதின்க ணுமையோர் பாக முடையவர்தாம்
பொன்னின் மேனி வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவினொடுந்
துன்னி யவர்க்கு வாய்மூரி லிருப்போந் தொடர வாவென்றார்.

(இ-ள்.) நிலைபெற்ற பெருஞ்செல்வத்தையுடைய திருமறைக்காட்டில் வீற்றிருந்தருளும் மாணிக்கம்போன்ற சிவபெருமானுடைய திருவடிகளை மனதில் தியானித்துக்கொண்டு அறிதுயில் செய்யும்பொழுது உமாதேவியை ஓர்பாகத்திலுடைய கடவுள் பொன்போல் விளங்கும் திருமேனியில் திருவெண்ணீறுதரித்த திருக்கோலப்பொலிவோடும் அத்திருநாவுக்கரசுசுவாமிகளிடத்திற்கு எழுந்தருளி, நாம் திருவாய்மூரில் வீற்றிருந்தருளுவோம்; நீ அவ்விடத்திற்கு நம்மைப் பின்தொடர்ந்து வா, என்று அருளிச்செய்தார்.—எ-று. (உ௭௬)

போத நிகழ வாவென்று போனா ரென்கொ லெனப்பாடி
யீதெம் பெருமா னருளாகில் யானும் போவே னென்றெழுந்து
வேத வனத்தைப் புறப்பட்டு விரைந்து போக வவர்முன்னே
யாதி மூர்த்தி முன்காட்டு மவ்வே டத்தா லெழுந்தருள,

(இ-ள்.) "போதநிகழவாவென்றுபோனாரென்கொல்" என்று திருப்பதிகம்பாடி, இது எமது சிவபெருமானுடைய கட்டளையானால், அடியேனும் அவ்வாறே போவேனென்று எழுந்துவேதாரணியத்தில் நின்றும் புறப்பட்டுச் சீக்கிரமாகத்தொடர்ந்துபோக, அந்தத் திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு முன்பாக முதற்பெருந்

கடவுளாகிய சிவபெருமான் அவர்க்கு முன் சொப்பனத்திற்காட்டிய அத்திருக் கோலத்தோடு எழுந்தருள.—எ-று.

'போதநிகழவாவென்றுபோனுரென்கொல்' என்றது "வாவென்றுபோனாரதென்கொலோ" என்று கூறியபடியாம். செய்யுட் சந்தநோக்கி இவ்வாறமைத்துக் கூறினர்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உஎஎ)

---

திருவாய்மூர்-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

எங்கேயென்னையிருந்திடந்தேடிக்கொண
டங்கேவந்தடையாளமருளினார்
தெங்கேதோன்றுந்திருவாய்மூர்ச்செல்வனா
ரங்கேவாவென்றுபோனாரதென்கொலோ.

தீண்டற்கரியதிருவடியொன்றினால்
மீண்டற்கும்மிதித்தாரரக்கன்றனை
வேண்டிக்கொண்டேன்றிருவாய்மூர்விளக்கினைத்
தூண்டிக்கொள்வனுனென்றலுந்தோன்றுமே.

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வாய்மூரீசுவரர், தேவியார் - பாலினுநன்மொழியம்மை.

---

சீரார் பதியி னின்றெழுந்து செல்லுந் திருநா வுக்கரசர்
ஆரா வன்பி லாரமுத முண்ண வெய்தா வாறேபோல்
நீரார் சடையா ரெழுந்தருள நெடிது பின்பு செல்லுமவர்
பேரா ளரைமுன் றொடர்ந்தணையப் பெறுவா ரெய்தப் பெற்றிலரால்.

(இ-ள்.) சிறப்புப் பொருந்திய வேதாரணியத்தி னின்றும் புறப்பட்டுப் போகின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் குறைவில்லாத அன்போடு அருமையாகிய அமுதம் கிடைத்தும் அதனைத் தாம் உண்ணப்பெறாதவாறுபோல, கங்கைநீர்தங்கிய சடைமுடியையுடைய சிவபெருமான்முன்னே எழுந்தருளவும் நெடுந்தூரம் பின்தொடர்ந்துபோகின்ற அத்திருநாவுக்கரசுசுவாமிகள் எமது ஆண்டவரை முன்னேதொடர்ந்து அடைய விருப்பங்கொண்டு விரைந்து சென்றும் சமீபிக்கப்பெறவில்லை.—எ-று. (உஎஅ)

அன்ன வண்ண மெழுந்தருளி யணித்தே காட்சி கொடுப்பார்போற்
பொன்னின் கோயி லொன்றெதிரே காட்டி யதனுட் புக்கருளத்
துன்னுந் தொண்ட ரம்மருங்கு விரைந்து தொடரப் போந்தபடி
மன்னும் புகலி வள்ளலார் தாமுங் கேட்டு வந்தணைந்தார்.

(இ-ள்.) அவ்வாறு தம்மைப் பின்தொடர்ந்து அடையாதவண்ணம் எழுந்தருளி, சமீபத்திலேயே காட்சிகொடுக்கின்றவர்போலப் பொன்மயமாகிய ஒரு திருக்கோயிலை அவருக்கு எதிரேதோற்றுவித்து அதனுள்ளேபுகுந்துமறைந்தருள,

யிருந்த அன்பராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அவ்விடத்தில் விரைவாகத் தொடர்ந்துசென்ற சங்கதியைநிலைபெற்ற சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் கேள்விப்பட்டுத் தாமும் அங்கு வந்துசேர்ந்தார்.—எ-று. (உஎகூ)

அழைத்துக் கொடுபோந் தணியார்போற் காட்டி மறைந்தா ரெனவயர்ந்து
பிழைத்துச் செவ்வி யறியாதே திறப்பித் தேனுக் கேயல்லால்
உழைத்தா மொளித்தாற் கதவந்தொண் டுறைக்கப் பாடி யடைப்பித்த
தழைத்த மொழியா ருப்பாலார் தாமிங் கெப்பான் மறைவதென.

(இ-ள்.) என்னை அழைத்துக்கொண்டுவந்து நெருங்கினவர்போலக் காட்டிமறைந்தருளினாரென்று வருத்தப்பட்டு, எம்பெருமானே! தேவரீர் இங்கு ஒளித்தருளினால், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளே திறக்கவேண்டுமென்னுந் திருவுள்ளக்கருத்தை யறியாமல் பிழைபட்டுத் திறப்பித்த அடியேனுக்கே யல்லாமல், திருக்கதவைத் தமது திருத்தொண்டானது விளங்கும்படி பாடி, ஒரு திருப்பாட்டிலேயே அடைப்பித்த செழித்த அருள்வாக்கையுடைய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் இங்கே எழுந்தருளியிருக்கின்றார். ஆதலால் தேவரீர் இனி எங்கே மறைவதென்று சொல்ல.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (உஅ0)

மாட நீடு திருப்புகலி மன்ன ரவர்க்கு மாலயனு
நேடி யின்னங் காணுதார் நேரே காட்சி கொடுத்தருள
ஆடல் கண்டு பணிந்தேத்தி யரசுங் காணக் காட்டுதலும்
பாட வடியா ரென்றெடுத்துப் பரமர் தம்மைப் பாடினார்.

(இ-ள்.) மாடங்கள் உயர்ந்துவிளங்குகின்ற சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்கு,விஷ்ணுவும் பிரமனும் (அடியையும் முடியையும்) தேடி இன்னமுங் காணப்படாதவராகிய சிவபெருமான் நேராக வெளிப்பட்டுக் காட்சிகொடுத்தருள, அவரது திருக்கூத்தைத் தரிசனஞ் செய்து வணங்கித் துதித்து, திருநாவுக்கரசுசுவாமிகளும் தரிசிக்கும்படி காட்டினவுடனே, அவர் "பாடவடியார்" என்று முதலில் எடுத்துச் சிவபெருமானைத் திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று. (உஅக)

---

திருவாய்மூர்-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

பாடவடியார்பரவக்கண்டேன்பத்தர்கணங்கண்டேன்மொய்த்தபூத
மாடன்முழவமதிரக்கண்டேனங்கையனல்கண்டேன்கங்கையாளைக்
கோடலரவார்சடையிற்கண்டேன்கொக்கினிதழ்கண்டேன்கொன்றைகண்டேன்
வாடற்றலையொன்றுகையிற்கண்டேன்வாய்மூரடிகளைநான்கண்டவாறே.

கலங்கவிருவர்க்கழலாய்நீண்டகாரணமுங்கண்டேன்கருவாய்நின்று
பலங்கடாித்துகந்தபண்புங்கண்டேன்பாடலொலியெலாங்கூடக்கண்டே
னிலங்கைத்தலைவன்சிரங்கள்பத்துமிறுத்தவனுக்கீந்தபெருமைகண்டேன்
வலங்கைத்தலத்துளனலுங்கண்டேன்வாய்மூரடிகளைநான்கண்டவாறே.

திருச்சிற்றம்பலம்.

பாடுந் தமிழ்மா லைகள்கொண்டு பரமர் தாமு மெழுந்தருள
நீடுந் திருவாய் மூரடைந்து நிலவுங் கோயில் வலஞ்செய்து
சூடும் பிறையார் பெருந்தொண்டர் தொழுது போற்றித் துதிசெய்து
நாடுங் காதல் வளர்ந்தோங்க நயந்தந் நகரி லுடனுறைந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் பாடிய தமிழ்ப்பதிகமாலைகளை ஏற்றுக்கொண்டு சிவபெருமானும் மறைந்தருள, மூன்றாம்பிறையைத்தரித்த ஆண்டவருடைய பெருந்தொண்டராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் பின் சிறந்த திருவாய்மூரையடைந்து விளங்குகின்ற திருக்கோயிலை வலமாகவந்து, வணங்கி ஸ்தோத்திரஞ்செய்து, நிலைபெற்ற பேரன்பானது மேன்மேலும் விருத்தியாக விருப்பங்கொண்டு, அந்தக்ஷேத்திரத்தில் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளோடு வாசஞ் செய்துகொண்டிருந்தார்.—எ-று. (உஅஉ)

ஆண்ட வரசும் பிள்ளையா ருடனே யங்க ணினிதமர்ந்து
பூண்ட காதல் பொங்கியெழ வாய்மூ ரடிக ளடிபோற்றி
மூண்ட வன்பின் மொழிமாலை சாத்தி ஞான முனிவரொடு
மீண்டு வந்து திருமறைக்காட் டெய்தி விமலர் தாள்பணிந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகளும் திருஞானசம்பந்தப்பிள்ளையாரோடு அவ்விடத்தில் இனிதாக எழுந்தருளியிருந்து, தாங்கள் கொண்டிருக்கின்றபேரன்பானது மேன்மேலும்வளர, திருவாய்மூரில்வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவடிகளைத் துதித்து, பொருந்திய அன்பினால் திருப்பதிகமாலையைச்சாத்தித் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளோடு மறுபடியும் வேதாரணியத்தை வந்து சேர்ந்து அவ்வெம்பெருமானுடைய திருவடிகளை வணங்கினார்.—எ-று. (உஅ௩)

ஆதி முதல்வர் தமைப்பணிந்தங் கான பணிசெய் தமருநாள்
சீத மதிவெண் குடைவளவர் மகளார் தென்னன் றேவியாங்
கோதில் குணத்துப் பாண்டிமா தேவியார்முன் குலச்சிறையார்
போத விட்டார் சிலர்வந்தார் புகலி வேந்தர் தமைக்காண.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானைத்தொழுது தகுந்ததிருப்பணிகளைச்செய்து அவ்விடத்தில் வாசஞ்செய்திருக்கும் நாளில், குளிர்ந்த சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையையுடைய சோழராசன்புத்திரியும், பாண்டியராசனது மனைவியுமாகிய குற்றமற்ற பெருங்குணத்தினையுடைய மங்கையர்க்கரசியாருத்தரவின்படி மந்திரியாகிய குலச்சிறைநாயனார் அனுப்பிய சிலவேவுகாரர்கள் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளைக் காணும்படி வந்தார்கள்.—எ-று. ()

வந்து சிவனார் திருமறைக்காட் டெய்தி மன்னு வேணுபுரி
அந்த ணாளர் தமக்கறிவித் தவர்பா லெய்தி யடிவணங்கச்
சிந்தை மகிழ்ந்து தீதின்மை வினவத் தீங்கு முளவாமோ
இந்த வுலக முயவருவீ ரிருதா ணினைவார்க் கென்றுரைப்பார்.

(இ-ள்.) அவ்வேவுகாரர்கள் சிவபெருமானது திருமறைக்காட்டுக்குவந்து சேர்ந்து, நிலைபெற்ற சீகாழியில் திருவவதாரஞ்செய்தருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்குத் தாங்கள்வந்தசெய்தியைத் தெரிவித்து, பின் அவரது திருமுன்னே சென்று திருவடிகளில்வணங்கத் திருவுள்ளமகிழ்ந்து க்ஷேமத்தை விசாரிக்க,அவர்கள் இவ்வுலகத்திலுள்ளவர்கள் கடைத்தேறும்படி திருவவதாரஞ்செய்

தருளிய தேவரீருடைய இரண்டு திருவடிகளையும் தியானித்துக்கொண்டிருக்கும் எங்களுக்கு ஒருகுறையும் உண்டாகுமோ என்று சொல்வார்கள்.—எ—று. (உ௮௫)

சைவ நெறிவை திகநிற்கச் சழக்கு நெறியைத் தவமென்னும் [டே
பொய்வல் லமணர் செயறன்னைப் பொறுக்க கில்லோ மெனக்கேட்
அவ்வன் றொழிலோர் செயன்மாற்றி யாதி சைவ நெறிவிளங்கத்
தெய்வ நீறு நினைந்தெழுந்தார் சீர்கொள் சண்பைத் திருமறையோர்.

(இ-ள்.) வேதசம்பந்தமாகிய சைவசமயமானது உலகத்தில் நிலைபெற்று விளங்கவும் (அதனையடையாமல்,) குற்றம்பொருந்திய மார்க்கத்தைத் தவநெறியென்று மேற்கொண்டொழுகும் பொய்சொல்வதில் வல்லவர்களாகிய சமணர்கள் செய்யுங் கொடுஞ்செய்கைகளைப் பொறுக்கமாட்டோமென்று சொல்ல, அதைக் கேட்டு, சிறந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அந்தக் கொடுந்தொழிலையுடைய சமணர்கள்செய்யும் தீமைகளைவிலக்கி, முதன்மையாகிய சைவசமயமானது விளங்கும்பொருட்டுத் தெய்வத்தன்மைபொருந்திய திருவெண்ணீற்றைத் திருவுள்ளத்திற்சிந்தித்துக்கொண்டெழுந்தருளினார்.—எ-று.(உ௮௬)

'தெய்வநீறு புனைந்தெழுந்தார்' என்றும்பாடம்.

ஆய பொழுது திருநாவுக் கரசும் புகலி யாண்டகைக்குக்
காய மாசு பெருக்கியுழல் கலதி யமணர் கடுவினைசெய்
மாயை சால மிகவல்லா ரவர்மற் றென்னை முன்செய்த
தீய தொழிலும் பலகெட்டேன் செல்ல விசையேன் யானென்றார்.

(இ-ள்.) அப்பொழுது திருநாவுக்கரசுசுவாமிகளும் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளைப்பார்த்து, உடம்பில் அழுக்கைக்கழுவாமல் விருத்தியாக்கித்திரிகின்ற துஷ்டர்களாகிய சமணர்கள் கடுந்தொழிலைச்செய்கின்ற வஞ்சனையில் மிகவும் வல்லவர்கள்; அவர்கள் எனக்குமுன்னாளில்செய்த கொடுந்தொழில்களும் பலவாகும்; ஐயோ! தேவரீர் அங்குச்செல்ல அடியேன் சம்மதிக்கமாட்டேன் என்று அருளிச்செய்தார்.—எ-று. (உ௮௭)

என்று கூற வெல்லையிலா நீறு போற்று மிருவரையுஞ்
சென்று காணுங் கருத்துடையே னங்குத் தீங்கு புரியமணர்
நின்ற நிலைமை யழிவித்துச் சைவ நெறிபா ரித்தன்றி
ஒன்றுஞ் செய்யே னுணையும தென்றா ருடைய பிள்ளையார்.

(இ-ள்.) இப்படி திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்ய,அதற்குத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அளவில்லாத மகிமையையுடைய திருவெண்ணீற்றில் அன்புபூண்டொழுகும் மங்கையர்க்கரசியாரையும்,குலச்சிறைநாயனாரையும் போய்க்காணவேண்டுமென்னுங் கருத்தைக்கொண்டிருக்கின்றேன்; அந்தப் பாண்டிநாட்டில் தீங்குசெய்கின்ற சமணர்களுடைய பொருந்தியநிலைமையை, அரசனால் அழியும்படிசெய்து, சைவசமயத்தை விருத்திசெய்யுந்தொழிலைச் செய்வதேயல்லாமல், உமது ஆணையின்படியே வேறொன்றையுஞ் செய்யமாட்டேன் என்று அருளிச்செய்தார்.—எ-று. (உ௮௮)

போமா துணிந்து நீரங்குப் போதப் போதா வவ்வமணர்
தீமா யையினை யானேபோய்ச் சிதைத்து வருகின் றேனென்ன

ஆமா றெல்லா மூனைத்தவனை மறுக்க மாட்டா தாசிருப்பத்
தாமா தரவாற் றமிழ்நாட்டிற் போனார் ஞானத் தலைவனார்.

(இ-ள்.) போகும்படியாகத் துணிவுகொண்டு தேவரீர் அவ்விடத்துக்குச் செல்லுதல் தகாது; அந்தச் சமணர்கள்செய்யும் கொடியவஞ்சனையை யானே போய் அழித்துவருகிறேன் என்று, அவர்போகாமலிருப்பதற்கு வேண்டிய யுத்திகளைச் சொல்லியும், அவர்போவதை மறுக்கமாட்டாமல் திருநாவுக்கரசுசுவாமிகள் இருந்துவிட, திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் மிகுந்தஅன்போடு பாண்டிநாட்டிற்குப் போயருளினார்.—எ-று.

தாம் - அசைநிலை. (உ௬௧)

வேணு புரக்கோ னெழுந்தருள விடைகொண் டிருந்த வாகீசர்
பூணு மன்பான் மறைக்காட்டிற் புனிதர் தம்மைப் போற்றிசைத்துப்
பேணி யிருந்தங் குறையுநாட் பெயர்வார் வீழி மிழலையமர்
தாணு வின்றன் செய்யகழன் மீண்டுஞ் சார நினைக்கின்றார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் பாண்டிநாட்டிற்கு எழுந்தருள, அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டிருந்த திருநாவுக்கரசுசுவாமிகள் நிலைபெற்ற அன்போடு வேதாரணியத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைத்துதிசெய்து விருப்பமுற்று அந்தஸ்தலத்தில் வசித்திருக்குநாளில், அவ்விடத்தினின்றும் நீங்குகின்றவராய்த் திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய சிவந்ததிருவடிகளைமீளவும் அடைய நினைக்கின்றார்.—எ-று.

சோலை மறைக்காட் டமர்ந்தருளுஞ் சோதி யருள்பெற் றகன்றுபோய்
வேலை விடமுண் டவர்வீழி மிழலை மீண்டுஞ் செல்வனென
ஞால நிகழ்ந்த நாகைக்கா ரோணம் பிறவும் பணிந்தணைவார்
சாலு மொழிவண் டமிழ்பாடித் தலைவர் மிழலை வந்தடைந்தார்.

(இ-ள்.) சோலைகள்சூழ்ந்த வேதாரணியத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவருளைப்பெற்று, அவ்விடத்தில் நின்றும் நீங்கி, சமுத்திரத்தில் தோன்றிய ஆலாகலவிஷத்தையுண்ட அவ்வெம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவீழிமிழலைக்கு மீண்டும்போவேனென்று, உலகத்தில் பெருமையோடு விளங்குகின்ற திருநாகைக்காரோணம் முதலிய ஸ்தலங்களையும் வணங்கிச் செல்கின்றவராய்ப் பெருமைபொருந்திய சொற்களாலாகிய வளவிய தமிழ்ப்பதிகத்தைப்பாடி ஆண்டவருடைய திருவீழிமிழலைக்கு வந்துசேர்ந்தார்.—எ-று.

திருநாகைக்காரோணம் என்பது நாகபட்டணம். (உ௬௧)

வீழி மிழலை தனைப்பணிந்து வேத முதல்வர் தாமிருப்ப
ஆழி வலமேந் தியவரியா லாகா சத்தி னின்றிழிந்த
வாழி மலர்ந்த கோயிறனின் மன்னும் பொருளைப் போற்றிசைத்துத்
தாழு நாளிற் பிறபதியும் பணியுங் காத றலைநிற்பார்.

(இ-ள்.) திருவீழிமிழலையைப்பணிந்து, வேதமுதல்வராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும்பொருட்டு, சக்கரத்தை வலக்கரத்திலேந்திய விஷ்ணுவினால் ஆகாயத்தினின்றும் இறங்கிய பெருமைபொருந்திய விமானக்கோயிலில் வீற்றிருந்தருளும் சுவாமியைத்துதிசெய்து வணங்கிவரும்நாளில் மற்றஸ்தலங்களையும் தரிசனஞ்செய்யவேண்டுமென்னும் அன்பில் சிறந்தவராயினார்.—எ-று. (உ௬உ)

பூவிற் பொலியும் புனற்பொன்னிக் கரைபோய்ப் பணிவார் பொற்பமைந்த
ஆவுக் கருளு மாவடுதண் டுறையார் பாத மணைந்திறைஞ்சி
நாவுக் கரசர் ஞானபோ னகர்க்குச் செம்பொ னாயிரமும்
பாவுக் களித்த திறம்போற்றிப் போந்து பிறவும் பணிகின்றார்.

(இ-ள்.) உலகத்தில் புண்ணியதீர்த்தமாகச் சிறப்புற்று விளங்குகின்ற நீரையுடைய காவிரிநதியின் கரைவழியாகப்போய்ப் பணிகின்றவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அழகுபொருந்திய பசுவுக்கு முத்திகொடுத்தருளிய திருவாவடுதுறையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவடிகளையணைந்து வணங்கித் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்கு அவர்பாடிய திருப்பதிகத்திற்காக ஆயிரம்பொன்னைக் கொடுத்தருளிய திறத்தைத் தமது திருப்பதிகத்தில்வைத்துத் துதித்து,அவ்விடத்தினின்றும் புறப்பட்டு மற்றையஸ்தலங்களையும் வணங்குகின்றவராயினார்.—எ-று.

பூவிற்பொலியும் புனற்பொன்னி-என்பதற்கு, மலர்களால் விளக்கமுற்றிருக்கும் நீரையுடைய காவிரிநதி எனினும்பொருந்தும். ஞானபோனகர்=ஞானத்தை உணவாகக்கொண்டருளினவர். (௨கூ௩)

---

திருவாவடுதுறை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

மாயிருஞாலமெல்லாமலரடிவணங்கும்போலும்
பாயிருங்கங்கையாளைப்படர்சடைவைப்பர்போலுங்
காயிரும்பொழில்கள்சூழ்ந்தகழுமலவூரர்க்கம்பொன்
ஆயிரங்கொடுப்பர்போலுமாவடுதுறையனாரே.

பார்த்தனுக்கருள்வர்போலும்படர்சடைமுடியர்போலு
மேத்துவாரிடர்கடீரவின்பங்கள்கொடுப்பர்போலும்
கூத்தராய்ப்பாடியாடிக்கொடுவலியரக்கன்றன்னை
யார்த்தவாயலறுவிப்பாராவடுதுறையனாரே.

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - மாசிலாமணியீசுவரர், தேவியார் - ஒப்பிலாமுலையம்மை.

---

செய்யசடையார் பழையாறை யெய்த வதனிற் செல்பொழுதின்
மைய லமணர் மறைக்கவட தளியின் மன்னுஞ் சிவனாரைக்
கைகள் கூப்பித் தொழுதருளக் கண்ட வாற்றா லமணர்கடம்
பொய்கொள் விமான மெனக்கேட்டுப் பொறாத வுள்ள மிகப்புழுங்கி

(இ-ள்.) சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பழையாறை யென்னும் ஸ்தலத்தை யடையும்படி அதன் சமீபத்தில் போனபொழுது, மயக்கத்தையுடைய சமணர்கள் மறைத்தலால் வடதளியென்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைத் தமது இரண்டு கைகளையுங் கூப்பித்தொழ, அதனைக் கண்டதனால், இது சமணர்கள் கொண்டாடும் பொய்த்

தெய்வத்தின் விமானமென்று அங்குள்ளார் சொல்லக்கேட்டு மனஞ்சகிக்காமல் மிகவும் வருத்தமுற்று.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உகூச)

அந்த விமானந் தனக்கருகா வாங்கோ ரிடத்தின் பாங்கெய்திக்
கந்த மலருங் கடிக்கொன்றை முடியார் செய்ய கழலுன்னி
மந்த வமணர் வஞ்சனையான் மறைத்த வஞ்ச மொழித்தருளிப்
பந்தங் கொண்ட குண்டர்திறம் பாற்று மென்று பணிந்திருந்தார்.

(இ-ள்.) அந்த விமானத்தின் சமீபமாக அங்குள்ள ஓரிடத்தில் வந்து, வாசனைவீசுகின்ற புதியகொன்றைமாலையைத்தரித்த திருமுடியையுடைய சிவபெருமானது சிவந்த திருவடிகளைச் சிந்தித்து, மூடர்களாகிய சமணர்கள் வஞ்சனையினால் மறைத்த மறைப்பையொழித்துத் தீவினையையுடைய அவ்வஞ்சகர்கள் செய்கையை அழித்தருளுமென்று வணங்கியிருந்தார்.—எ-று. (உகூரு)

வண்ணங் கண்டு நானும்மை வணங்கி யன்றிப் போகேனென்
றெண்ண முடிக்கும் வாகீச ரிருந்தா ரமுது செய்யாதே
அண்ண லாரு மதுவுணர்ந்தங் கரசு தம்மைப் பணிவதற்குத்
திண்ண மாக மன்னனுக்குக் கனவி லருளிச் செய்கின்றார்.

(இ-ள்.) அடியேன் தேவரீரது திருவுருவத்தைக் கண்டு வணங்கியல்லாமல் போகமாட்டேனென்று, தமது எண்ணத்தை நிறைவேற்ற வேண்டுமென்னுங் கருத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்யாமல் இருந்தார்; அதனைச் சிவபெருமான் அறிந்தருளி, அவ்விடத்தில் அப்பர்சுவாமிகள் தம்மை வணங்கும்பொருட்டு, சோழராஜனுக்கு உறுதியாகக் கனவில் தோன்றி அருளிச் செய்கின்றார்.—எ-று. (உகூசு)

அறிவி லமணர் நமைமறைப்ப விருந்தோ மென்றங் கடையாளக்
குறிக ளருளிச் செய்தருளி நம்மை யரசு கும்பிடுவான்
நெறியி லமணர் தமையழித்து நீக்கிப் போக்கென் றருள்புரியச்
செறிவி லறிவுற் றெழுந்தவனுஞ்செங்கை தலைமேற் குவித்திறைஞ்சி

(இ-ள்.) நல்லறிவில்லாத சமணர்கள் நம்மை மறைக்கும்படியாக இருந்தோமென்று, அக்கோயிலில்தாமிருக்குமிடத்தில்சிலஅடையாளங்களைச்சொல்லி, நம்மைத் திருநாவுக்கரசு வெளிப்படக்கண்டு, வணங்கும்பொருட்டு நல்லொழுக்கமில்லாத சமணர்களை யழித்து, ஒழிந்தவர்களை அவ்விடத்தினின்றும் துரத்திவிடுமென்று அருளிச்செய்ய, கனவினின்றும் விழித்த அந்தச் சோழராசனும் சிவந்த கைகளைத் தலையின்மேல் குவித்து வணங்கி.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (உகூஎ)

கண்ட வியப்பு மந்திரிகட் கியம்பிக் கூடக் கடிதெய்தி
அண்டர் பெருமா னருள்செய்த வடையா ளத்தின் வழிகண்டு
குண்டர் செய்த வஞ்சனையைக் குறித்து வேந்தன் குலவுபெருந்
தொண்டர் தம்மை யடிவணங்கித் தொக்க வமணர் தூரறுத்தான்.

(இ-ள்.) சோழராசன் தான் இராத்திரி சொப்பனத்திற்கண்ட அதிசயத்தை மந்திரிகளுக்குச்சொல்லி அவர்களோடுகூட விரைவில் கோயிலுக்குவந்து,

தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமான் சொப்பனத்தில்அருளிச்செய்த அடையாளத்தின் வழியே சுவாமியைக்கண்டு, சமணர்கள் மறைத்துவைத்திருக்கும் வஞ்சகத்தைக்கருதி, விளங்குகின்ற சிறந்த திருத்தொண்டராகிய திருநாவுக்கரசு சுவாமிகளை வணங்கிக் கூட்டமாயிருக்கின்ற சமணர்களை வேரோடும் அழித்துவிட்டான்.—எ-று. (உகஅ)

ஆனை யினத்திற் றுகைப்புண்ட வமணு யிரமு மாய்ந்ததற்பின்
மேன்மை யரச னீசர்க்கு விமான மாக்கி விளக்கியபி
ஞன வழிபாட் டர்ச்சனைக்கு நிரம்ப வெல்லா மமைத்திறைஞ்ச
ஞான வரசும் புக்கிறைஞ்சி நாதர் முன்பு போற்றுவார்.

(இ-ள்.) அரசன் ஏவிய யானைகளால் துவைக்கப்பட்ட அநேகமாயிரம் சமணர்களும் இறந்தபிற்பாடு, மேன்மைபொருந்திய சோழராசன் சிவபெருமானுக்கு விமானமமைத்து ஆலயத்திருப்பணி செய்தபின்பு, செய்யவேண்டிய நித்தியபூசை முதலிய ஆராதனங்களுக்கு வேண்டியவைகளையெல்லாம் அமைத்து வணங்க, சிவஞானத்தையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளும் ஆலயத்துக்குள் புகுந்து வணங்கிச் சிவபெருமான்முன்னே துதிசெய்வாராயினர்.—எ-று. (உகக)

தலையின் மயிரைப் பறித்துண்ணுஞ் சாதி யமணர் மறைத்தாலும்
நிலையி லாதார் நிலைமையினுன் மறைக்க வொண்ணு மோவென்னும்
விலையில் வாய்மைக் குறுந்தொகைகள் விளம்பிப் புறம்போந் தங்கமர்ந்தே
யிலைகொள் சூலப் படையார்சே ரிடங்கள் பிறவுந் தொழவணைவார்.

(இ-ள்.) "தலையின்மயிரைப்பறித்துண்ணுஞ் சாதியமணர்மறைத்தாலும்- நிலையிலாதார்நிலைமையினால் மறைக்கவொண்ணுமோ" என்னும் ஒப்பற்ற மெய்மையையுடைய திருக்குறுந்தொகைத்திருப்பதிகம்பாடி வெளியில்வந்து, அங்குச் சிலநாள் வாசஞ்செய்து, அச்சவடிவாகிய சூலாயுதத்தை யேந்திய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்ற ஸ்தலங்களையும் வணங்கும்படி செல்வாராயினர்.—எ-று.

'தலையின்மயிரைப்பறித்துண்ணுஞ்சாதியமணர்மறைத்தாலும் - நிலையிலாதார்நிலைமையினால் மறைக்கவொண்ணுமோ' என்பது, "தலையெலாம்பறிக்குஞ் சமண்கையரு - ணிலையினுன்மறைத்தான் மறைக்கொண்ணுமே" என்னுந் திருக்குறுந்தொகையை யமைத்துப் பாடியபடியாம். (௩00)

---

**திருப்பழையாறை வடதளி - திருக்குறுந்தொகை.**

திருச்சிற்றம்பலம்.

தலையெலாம்பறிக்குஞ்சமண்கையரு
ணிலையினுன்மறைத்தான்மறைக்கொண்ணுமே
யலையினுர்பொழிலாறைவடதளி
நிலையினுனடியேநினைந்துய்ம்மினே.

செருத்தனைச்செயுஞ்சேணரக்கன்னுட
லெருத்திறவிரலாலிறையூன்றிய

வருத்தனைப்பழையாறைவடதளித்
திருத்தனைத்தொழுவார்வினைதேயுமே.

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - **சோமேசுவரர்,** தேவியார் - **சோமகலாநாயகியம்மை.**

---

பொங்கு புனலார் பொன்னியினி லிரண்டு கரையும் பொருவிடையார்
தங்கு மிடங்கள் புக்கிறைஞ்சித் தமிழ்மா லைகளுஞ் சாத்திப்போ
யெங்கு நிறைந்த புகழாள ரீறி லன்ப ரெதிர்கொள்ளச்
செங்கண் விடையார் திருவானைக் காவின் மருங்கு சென்றணைந்தார்.

(இ-ள்.) வெள்ளமாகப் பெருகுகின்ற நீரையுடைய காவிரிநதியின் இரண்டு கரையிலும், போர்செய்யத்தக்க ரிஷபத்தை வாகனமாகக்கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல ஸ்தலங்களுக்கும்போய் வணங்கித் திருப்பதிகமாலைகளையுஞ் சாத்திச் சென்று, உலகமெங்கும் நிறைந்த புகழினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் தம்மை அழிவில்லாத சிவனடியார்கள் எதிர்கொள்ளும்படி அக்கடவுள் வீற்றிருந்தருளும் திருவானைக்காவிற்குப் போய்ச்சேர்ந்தார்.—எ-று. ()

சிலந்திக் கருளுங் கழல்வணங்கிச் செஞ்சொன் மாலை பலபாடி
யிலங்கு சடையா ரெறும்பியூர் மலையு மிறைஞ்சிப் பாடிப்பின்
மலர்ந்த சோதித் திருச்சிராப் பள்ளி மலையுங் கற்குடியு
நலங்கொள் செல்வத் திருப்பராய்த் துறையுந் தொழுவா னண்ணினார்.

(இ-ள்.) சிலந்திப்பூச்சிக்குக் கோச்செங்கட்சோழனாக விருந்து அரசாளும்படி திருவருள்செய்த திருவடியை வணங்கி, செவ்விய சொற்களமைந்த பல திருப்பதிகமாலைகளைப் பாடி, விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவெறும்பியூர் மலையையும் வணங்கித் திருப்பதிகம்பாடி, அதன்பின்பு, சோதிசொரூபமாக விளங்குகின்ற திருச்சிராப்பள்ளி மலையையும், கற்குடியையும், நன்மைபொருந்திய செல்வத்தையுடைய திருப்பராய்த்துறையையும் வணங்கும்படி சென்றார்.—எ-று. (௩0உ)

மற்றப் பதிகண் முதலான மருங்குள் ளனவுங் கைதொழுது
பொற்புற் றமைந்த திருப்பணிகள் செய்து பதிகங் கொடுபோற்றி
யுற்ற வருளாற் காவிரியை யேறி யொன்னார் புரமெரியச்
செற்ற சிலையார் திருப்பைஞ்ஞீ லியினைச் சென்று சேர்கின்றார்.

(இ-ள்.) அத்திருப்பதிகள் முதலாகிய சமீபத்திலுள்ள மற்ற ஸ்தலங்களையும் வணங்கி அழகுபொருந்திய திருப்பணிகள்செய்து திருப்பதிகம்பாடித் துதித்து, மிகுந்த அன்போடு காவிரிநதியைக் கடந்து, பகைவர்களுடைய முப்புரங்களையெரித்த (மேருமலையாகிய) வில்லையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பைஞ்ஞீலியென்னும் ஸ்தலத்தைச் சென்று சேர்கின்றவராயினார்—எ-று.

வழிபோம் பொழுது மிகவிளைத்து வருத்த முறநீர் வேட்கையொடு
மழிவாம் பசிவந் தணைந்திடவு மதற்குச் சித்த மலையாதே
மொழிவேந் தருமுன் னெழுந்தருள முருகார் சோலைப் பைஞ்ஞீலி
விழியேந் தியநெற் றியினார்தந் தொண்டர் வருத்த மீட்பாராய்.

(இ-ள்.) வழியில் போகும்பொழுது மிகவும் இளைப்படைந்து வருத்தமுண்டாகத் தாகமும், எல்லாக் குணங்களையுங் கெடுக்கின்ற பசியும் உண்டாகவும், அதற்கு மனம் சிறிதும் சலிக்காமல் திருநாவுக்கரசுசுவாமிகள்முன்னே செல்லும் பொழுது, மணம்பொருந்திய சோலைகள்சூழ்ந்த திருப்பைஞ்ஞீலியில் வீற்றிருந்தருளும் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் தமது அடியவராகியஅப்பர்சுவாமிகளது வருத்தத்தை நீக்கத் திருவுள்ளங்கொண்டு.—எ-று.

இதமுத லிரண்டுபாடலுங் குளகம். (௲௦௪)

காவுங் குளமு முன்சமைத்துக் காட்டி வழிபோங் கருத்தினான்
மேவுந் திருநீற் றந்தணராய் விரும்பு பொதிசோ றுங்கொண்டு
நாவின் றனிமன் னவர்க்கெதிரே நண்ணி யிருந்தார் விண்ணின்மேற்
றாவும் புள்ளு மண்கிழிக்குந் தனியே னமுங்காண் பரியவர்தாம்.

(இ-ள்.) இளைப்பாறத்தக்க ஒரு சோலையையும் குளத்தையும் அவ்வழியில் முன்னே யுண்டாக்கிக்காட்டி,வழிநடந்துபோகுங் கருத்தோடு அங்குவந்திருக்கும் விபூதியைத் தரித்த ஒருபிராமணராய், விரும்பத்தக்க கட்டுச்சோறு எடுத்துக் கொண்டு ஒப்பற்ற திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு எதிரே எழுந்தருளியிருந்தார்; ஆகாயத்தில் பறந்து சென்ற அன்னவுருவங்கொண்ட பிரமனும், பூமியைப் பிளந்துசென்ற பன்றியுருவங்கொண்ட விஷ்ணுவும் காணுதற்கரியவராகிய சிவபெருமான்.—எ-று. (௲௦௫)

அங்க ணிருந்த மறையவர்பா லாண்ட வரசு மெழுந்தருள
வெங்கண் விடைவே தியர்நோக்கி மிகவும் வழிவந் திளைத்திருந்தீ
ரிங்கென் பாலே பொதிசோறுண் டிதனை யுண்டு தண்ணீரிப்
பொங்கு குளத்திற் குடித்திளைப்புப் போக்கிப் போவீ ரெனப்புகன்றார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் அவ்விடத்தில் தமக்கு எதிராக இருந்த பிராமணருக்குச் சமீபத்தில்போக, கோபக்கண்ணையுடைய ரிஷபத்தை வாகனமாகக்கொண்ட சிவபெருமானாகிய வேதியர் அவரைப்பார்த்து, நீர்வெகுதூரம் வழிநடந்து இளைப்படைந்திருக்கின்றீர்; இங்கே என்னிடத்தில் கட்டுச்சோறிருக்கின்றது; இதனைப் புசித்து, இந்தக் குளத்தில் தண்ணீர்குடித்து வழிவந்த இளைப்பையொழித்துக்கொண்டு போமென்று சொல்லியருளினார்.—எ-று. (௲௦௬)

நண்ணுந் திருநா வுக்கரசர் நம்ப ரருளென் றறிந்தார்போ
லுண்ணு மென்று திருமறையோ ருரைத்துப் பொதிசோ றளித்தலுமே
யெண்ணி நினையா தெதிர்வாங்கி யினிதா வமுது செய்தினிய
தண்ணீ ரமுதுஞ் செய்தருளித் தூய்மை செய்து தளர்வொழிந்தார்.

(இ-ள்.) சிவபெருமானாகிய பிராமணர் நீர் சாப்பிடுமென்றுசொல்லிக் கட்டுச்சோற்றையெடுத்துகொடுக்கவும்,அங்குவந்த திருநாவுக்கரசுசுவாமிகள் இது சிவபெருமானுடைய திருவருளென்று அறிந்தவர்போல்,(தம்முள்ளத்தில் சிவபெருமா

னே இவ்வாறெழுந்தருளினுரென்பதைச்) சிறிதும் ஆலோசியாமல், அவரோதிரோ அதனை வாங்கி இனிமையாகத் திருவமுதுசெய்து, மதுரமாகிய தண்ணீரைக் குடித்து வாய் கை கால்களைச் சுத்திசெய்து இளைப்பு நீங்கினர்.—எ-று.

திருநாவுக்கரசுசுவாமிகள் இப்பொதிசோறு சிவபெருமான் திருவருள் கூட்டுவிக்கக் கிடைத்ததென்று பொதுவகையா லுணர்ந்தாரேயன்றி, அப்பெருமானே பிராமணத்திருவுருவங்கொண் டெழுந்தருளித் திருவருள் புரிந்தாரென்று சிறப்புவகையா லுணராமையின் 'எண்ணிநினையாது' என்று கூறினர். (௩0எ)

எய்ப்பு நீங்கி நின்றவரை நோக்கி யிருந்த மறையவனு
ரப்பா லெங்கு நீர்போவ தென்ன ரரசு மவர்க்கெதிரோ
செப்ப வரியான் றிருப்பைஞ்ஞீ லிக்குப்போவ தென்றுரைத்தா
ரொப்பி லாரும் யானங்குப் போகின் றேனென் றுடன்போந்தார்.

(இ-ள்.) வழிநடந்துவந்த இளைப்பு நீங்கியிருந்த திருநாவுக்கரசுசுவாமிகளைப் பாட்டைசாரிபோல அங்கிருந்த பிராமணர்பார்த்து, இனி நீர் எங்கே போகின்றவர் என்று கேட்டார்; திருநாவுக்கரசுசுவாமிகளும் அவருக்கு எதிராகநின்று நான் திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேனென்று சொன்னர்; ஒப்பற்ற சிவபெருமானுகிய பிராமணரும், யானும்அவ்விடத்துக்குத்தான் போகவேண்டியதென்று சொல்லி அவருடனே கூடப்போயினர்.—எ-று. (௩0அ)

கூட வந்து மறையவனுர் திருப்பைஞ் ஞீலி குறுகியிட
வேட மவர்முன் மறைத்தலுமே மெய்ம்மைத் தவத்து மேலவர்தா
மாடல் புரிந்தா ரடியேனைப் பொருளா வளித்த கருணையெனப்
பாடல் புரிந்து விழுந்தெழுந்து கண்ணீர் மாரி பயில்வித்தார்.

(இ-ள்.) அந்த பிராமணர் அப்பர்சுவாமிகளோடு கூடவந்து திருப்பைஞ்ஞீலி யென்னும் ஸ்தலத்தை நெருங்கித் தாம் கொண்ட திருவேடத்தை அவருக்குமுன்னே மறைக்கவும், மெய்ம்மையாகிய தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் தாண்டவமூர்த்தியாகிய சிவபெருமான் அடியேனை ஒருபொருளாகக் கருதியபெருங்கருணையிதென்று திருப்பதிகம்பாடிப் பூமியில் விழுந்து வணங்கி யெழுந்து, ஆனந்தக்கண்ணீரை மழைபோலச் சொரிந்தார்.—எ-று. (௩0௯)

பைஞ்ஞீ லியினி லமர்ந்தருளும் பரமர் கோயில் சென்றெய்தி
மைஞ்ஞீ லத்து மணிகண்டர் தம்மை வணங்கி மகிழ்சிறந்து
மெய்ஞ்ஞீர் மையினி லன்புருக விரும்புந் தமிழ்மா லைகள்பாடிக்
கைஞ்ஞீ டியதந் திருத்தொண்டு செய்து காத லுடனிருந்தார்.

(இ-ள்.) திருப்பைஞ்ஞீலி யென்னும் ஸ்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருக்கோயிலை யடைந்து, கரிய நீலமணிபோன்ற கண்டத்தையுடைய கடவுளை வணங்கிக் களிகூர்ந்து, உண்மைத் தன்மையோடு அன்பானது உருக, யாவரும் விரும்பத்தக்க திருப்பதிகமாலைகளைப் பாடிக் கையினுல் செய்யவேண்டிய திருத்தொண்டையுஞ் செய்து ஆசையோடு அவ்விடத்தில் எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௩௧0)

நாதர் மருவு திருமலைக ளும்பதிகள் பலமிகவும்
காதல் கூரச் சென்றிறைஞ்சிக் கலந்த விசைவண் டமிழ்பாடி

மாதொர் பாக ரருளாலே வடபா ேேனாக்கி வாகீச
ராதி தேவ ரமர்ந்ததிரு வண்ணு மலையை நண்ணினர்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருந்தருளும் அநேக மலைகளையும், விரும்பத்தக்க பலதிருப்பதிகளையும் மிகுந்த அன்போடு சென்று வணங்கி, இசையோடு கூடிய வளம்பொருந்திய தமிழ்ப்பதிகங்களைப் பாடி, உமாதேவியை வாமபாகத்திலுடைய சுவாமியினது திருவருளினலே வடதிசையை நோக்கி முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவண்ணுமலையை யடைந்தார்; திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (ருகக)

செங்கண் விடையார் திருவண்ணு மலையைத் தொழுது வலங்கொண்டு
துங்க வரையின் மிசையேறித் தொண்டர் தொழும்புக் கெதிர்நிற்கு
மங்க ணரசைத் தொழுதெழுந்து திளைத்துத் திருநா வுக்கரசர்
தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார்.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய ரிஷபத்தை வாகனமாகக்கொண்டஆண்டவருடைய திருவண்ணுமலையை வணங்கிப் பிரதக்ஷிணஞ்செய்து, உயர்ந்த மலையின் மீதேறி அடியார்கள் செய்யும் அடிமைத் திறத்துக்கு எதிரே நின்று கிருபை செய்கின்ற அழகிய கண்ணுளராகிய சிவபெருமானை வணங்கி எழுந்திருந்து, ஆனந்த வெள்ளத்தில் முழுகி, ஒருவனுக்குக் கிடைத்த மானுடப்பிறவியே மோட்சமடைதற்குக் காரணமாகிய சிறந்த பெருமையையுடைய தென்பதை விளக்கிக் காட்டினர் திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (ருகஉ)

அண்ணு மலைமேன் மணிமலையை யாரா வன்பி னடியவர்தங்
கண்ணு ரமுதை விண்ணோரைக் காக்கக் கடலில் வந்தெழுந்த
உண்ணு நஞ்ச முண்டானைக் கும்பிட் டுருகுஞ் சிந்தையுடன்
பண்ணுர் பதிகத் தமிழ்பாடிப் பணிந்து பரவிப் பணிசெய்தார்.

(இ-ள்.) திருவண்ணுமலையில் வீற்றிருந்தருளும் மாணிக்கமலைபோன்றவரும், அடங்காத பேரன்பினையுடைய அடியார்களது கண்களுக்கு நிறைந்த அமிர்தம்போன்றவரும், தேவர்களைக் காப்பாற்றும் பொருட்டுத் திருப்பாற் கடலில் தோன்றிய உண்ணுதற்கரிய ஆலாகல விஷத்தை யுண்டருளியவருமாகிய சிவபெருமானைத் தொழுது, கசிந்துருகுகின்ற மனதோடு இசைபொருந்திய தமிழ்ப்பதிகம்பாடி வணங்கித் துதித்து, அவ்விடத்திலேயே திருத்தொண்டுசெய்துகொண்டிருந்தார்.—எ-று. (ருகங)

---

## திருவண்ணுமலை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஓதிமாமலர்கடூவியுமையவள்பங்காமிக்க
சோதியேதுளங்குமெண்டோட்சுடர்மழுப்படையினனே
யாதியேயமரர்கோவேயணியணுமலையுளானே
நீதியானின்னையல்லானினையுமாநினைவிலேனே.

இரக்கமொன்றியாதுமில்லாக்காலனைக்கடந்தவெம்மா
னுரத்தினல்வரையையூக்கவொருவிரனுதியினலே

யரக்கனை நெரித்தவண்ணாமலையுளாயமரரேறே
சிரத்தினல்வணங்கியேத்தித்திருவடிமறப்பிலேனே.

திருச்சிற்றம்பலம்.

இது நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அருணசலேசுவரர்-தேவியார்-உண்ணாமுலையம்மை.

---

பணியார் வேணிச் சிவபெருமான் பாதம் போற்றிப் பணிசெயுநாண்
மணியார் கண்டத் தெம்பெருமான் மண்மேன் மகிழு மிடமெங்குந்
தணியாக் காத லுடன்சென்று வணங்கித் தக்க பணிசெய்வா
ரணியார் தொண்டைத் திருநாட்டி லருளா லணைவா ராயினர்.

(இ ள்.) பாம்புகள் தங்கிய சடைமுடியை யுடைய சிவபெருமானது திருவடிகளைத் துதித்துத் திருத்தொண்டு செய்துகொண்டுவரும் நாளில், காளகண்டத்தை யுடைய எமது சிவபெருமான் பூமியில் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் ஸ்தலங்கள் தோறும் நீங்காத ஆசையோடு போய்த்தொழுது, தகுந்த திருப்பணிசெய்கின்றவராய் அழகிய தொண்டைநாட்டிற்கு அவ் வெம்பெருமானது திருவருளினால் செல்கின்றவராயினர்.—எ-று. (௩கச)

காதல் செய்யுங் கருத்தினுடன் காடு மலையுங் கான்யாறுஞ்
சூத மலிதண் பணைப்பதிகள் பலவுங் கடந்து சொல்லினுக்கு
நாதர் போந்து பெருந்தொண்டை நன்னா டெய்தி முன்னாகச்
சீத மலர்மென் சோலைசூழ் திருவோத் தூரிற் சென்றடைந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் தொண்டைநாட்டி லுள்ள ஸ்தலங்களைத் தெரிசிக்க வேண்டுமென்னும் ஆசைபொருந்திய மனதோடு காடுகள், மலைகள், காட்டாறுகள், மாமரங்கள் நெருங்கிய குளிர்ந்த வயல்சூழ்ந்த கிராமங்கள் முதலிய பலவற்றையுங் கடந்து, பெருமை பொருந்திய நல்லதொண்டை நாட்டையடைந்து, முன்னாக, குளிர்ந்த மிருதுவாகிய மலர்களையுடைய சோலை சூழ்ந்த திருவோத்தூர் என்னும் ஸ்தலத்துக்கு வந்துசேர்ந்தார்.—எ-று. (௩கரு)

செக்கர்ச் சடையார் திருவோத்தூர்த் தேவர் பிரானார் தங்கோயில்
புக்கு வலங்கொண் டெதிரிறைஞ்சிப் போற்றிக் கண்கள் புனல்பொழிய
முக்கட் பிரானை விரும்புமொழித் திருத்தாண் டகங்கள் முதலாகத்
தக்க மொழிமா லைகள்சாத்திச் சார்ந்து பணிசெய் தொழுகுவார்.

(இ ள்.) செவ்வானம் போலும் சிவந்த சடைமுடியையுடைய தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவோத்தூர்த் திருக்கோயிலினுள்ளே புகுந்து பிரதக்ஷிணஞ் செய்து, எதிராக நின்று வணங்கித் துதித்து இரண்டு கண்களும் ஆனந்த பாஷ்பஞ் சொரிய, விரிந்தத்திரங்களையுடைய சுவாமியை விரும்பிப் பாடும் மொழிகளையுடைய திருத்தாண்டகங்கள் முதலாகத் தகுந்த திருப்பதிக மாலைகளைச் சாத்தி, அவ்விடத்திலேயே யிருந்து திருப்பணி செய்கின்றவராயினர்.—எ-று. (௩கசு)

செய்ய வையர் திருவோத்தூ ரேத்திப் போந்து செழும்புவன
முய்ய நஞ்சுண் டருளுமவ ருறையும் பதிகள் பலவணங்கித்
தைய றழுவக் குழைந்தபிரான் றங்குந் தெய்வப் பதியென்று
வைய முழுதுந் தொழுதேத்து மதில்சூழ் காஞ்சி மருங்கணைந்தார்.

(இ-ள்.) சிவந்த திருமேனியையுடைய சிவபெருமானது திருவோத்தூரை வணங்கி, அவ்விடத்தினின்றும் நீங்கிச் செழுமை பொருந்திய உலகத்திலுள்ளவர்கள் பிழைக்கும்பொருட்டு ஆலாகலவிஷத்தையுண்ட ஆண்டவர் வீற்றிருந்தருளும் பலஸ்தலங்களையும் வணங்கி, காமாட்சியம்மையார் தழுவுதலால் திருமேனி குழைந்த திருவேகம்பநாதர் வீற்றிருந்தருளும் தெய்வத்தன்மை பொருந்திய ஸ்தலமென்று உலகமுழுமையும் வணங்கித் துதிக்கின்ற மதில்சூழ்ந்த காஞ்சிபுரத்தின் சமீபத்தில்வந்து சேர்ந்தார்.—எ-று. (௩௧௭)

ஞால முய்யத் திருவதிகை நம்பர் தம்பே ரருளினாற்
சூலை மடுத்து முன்னாண்ட தொண்டர் வரப்பெற் றோமென்று
காலை மலருங் கமலம்போற் காஞ்சி வாணர் முகமெல்லாஞ்
சால மலர்ந்து களிசிறப்பத் தழைத்த மனங்க டாங்குவார்.

(இ-ள்.) உலகத்தார் பிழைக்கும் பொருட்டுத் திருவதிகையில் வீற்றிருந்தருளும் சிவபெருமான்தமது திருவருளினால் சூலைநோயைக் கொடுத்து முன்னே அடிமை கொண்ட திருநாவுக்கரசுசுவாமிகள் இவ்விடத்திற்கு எழுந்தருளப் பெற்றோமென்று, காலைப்பொழுதில் சூரியனைக்கண்டு மலர்கின்ற தாமரை மலரைப் போல் காஞ்சிபுரத்தில் வாழ்கின்றவர்களுடைய முகங்களெல்லாம் மிகவும் மலர்ச்சியையடைந்து களிப்புண்டாகித் தழைத்த மனமுடையவர்களாயினார்கள்.—எ-று.

மாட வீதி மறுகெல்லா மணிவா யில்களிற் றோரணங்க
ணீடு கதலி யுடன்கமுகு நெருங்கு நிறைபொற் குடந்தீபந்
தோடு குலவு மலர்மாலை சூழ்ந்த வாசப் பந்தர்களு
மாடு கொடியு முடனெடுத்தங் கணிநீள் காஞ்சி யலங்கரித்தார்.

(இ-ள்.) மாடவீதியிலும், மற்றை யெல்லா வீதிகளிலுமுள்ள அழகிய திருவாயில்களில் மகர தோரணங்களையும், நெருங்கிய பொன்மயமாகிய பூரணகும்பங்களையும், தீபங்களையும், இதழ்கள் பொருந்திய மலர்மாலைகளையும் வாசனைபொருந்திய தண்ணீர்ப்பந்தல்களையும், ஆடுகின்ற கொடிகளையும் அங்கங்குத் தகுதியாக அமைத்து, அழகு பொருந்திய பெரிய காஞ்சிபுரத்தை அலங்காரஞ்செய்தார்கள்.

தொண்ட ரீண்டி யெதிர்கொள்ள வெழுந்து சொல்லுக் கரசர்பாற்
கொண்ட வேடப் பொலிவினொடுங் குலவும் வீதி பணிசெய்யு
மண்ட ரறிதற் கரியதிரு வலகு முதலா மவையேந்தி
யிண்டை புனைந்த சடைமுடியார்க் கன்பர் தம்மை யெதிர்கொண்டார்.

(இ-ள்.) அடியார்கள் கூட்டமாகக்கூடி எதிர்கொள்ளும்படி வந்து திருநாவுக்கரசுசுவாமிகளிடத்தில் தாம் கொண்டிருக்கின்ற திருவேடப்பொலிவோடும் விளங்கிய திருவீதிகளில் திருப்பணிசெய்கின்ற தேவர்களாலும் அறிதற்கரிய பெருமையையுடைய திருவலகு முதலிய கருவிகளை எடுத்துக்கொண்டு, கொண்டைமாலையைத் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு அடியவராகிய அப்பர்சுவாமிகளை எதிர்கொண்டார்கள்.—எ-று. (௩௨௦)

குலவும் வீதி பணிசெய்யும் திருவலகு, எனக்கூட்டுக. 'கொண்டவேட்கைப் பொலிவினொடும்' என்றும்பாடம். (௧௨௦)

எதிர்கொண் டிறைஞ்சுஞ் சீரடியார் தம்மை யிறைஞ்சி யெழுந்தருளி
மதில்கொண் டணிந்த காஞ்சிநகர் மறுகுட் போந்து வானநதி
குதிகொண் டிழிந்த சடைக்கம்பர் செம்பொற் கோயில் குறுகினார்
அதிர்கொண் டலைநேர் மணிமிடற்றா ராண்ட திருநா வுக்கரசர்.

(இ-ள்.) சப்திக்கின்ற மேகம்போன்ற கரியகண்டத்தையுடைய சிவபெருமானால் சூலைநோயைக் கொடுத்துத் தடுத்தாட்கொள்ளப்பட்ட திருநாவுக்கரசுசுவாமிகள் தம்மை எதிர்கொண்டுவந்து வணங்கும் சிறப்புப்பொருந்திய அடியார்களைத் தாமும் வணங்கி யெழுந்து,மதிலால் சிறந்திருக்கின்ற காஞ்சிபுரத்தின் திருவீதியிற் புகுந்து, ஆகாயகங்கையானது குதித்துப் பாய்கின்ற சடைமுடியையுடைய திருவேகம்பநாதரது சிவந்த பொன்மயமாகிய திருக்கோயிலை யடைந்தார்.—எ-று. ()

திருவா சலினைப் பணிந்தெழுந்து செல்வத் திருமுன் றிலையணைந்து
கருவார் கச்சி யேகம்பர் கனக மணிமா ளிகைசூழ்ந்து
வருவார் செம்பொன் மலைவல்லி தழுவக் குழைந்த மணிமேனிப்
பெருவாழ் வினைமுன் கண்டிறைஞ்சிப் பேரா வன்பு பெருகினார்.

(இ-ள்.) கோபுரத்தின் திருவாசலைப்பணிந்து எழுந்து, செல்வம்பொருந்திய திருமுற்றத்தையடைந்து, எல்லாப்பொருள்களுக்குங் காரணராகிய திருவேகம்பநாதரது மணிகளிழைத்துப் பொன்னாற்செய்யப்பட்ட விமானத்தை வலமாகவருகின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் பர்வதராசபுத்திரியாகிய காமாட்சியம்மையார் தழுவுதலால் குழைந்த அழகிய திருமேனியையுடைய பெருவாழ்வாகிய கடவுளை முன்னே தெரிசித்து வணங்கி, நீங்காத அன்பை வளரச்செய்தார்.—எ-று. ()

வார்ந்து சொரிந்த கண்ணருவி மயிர்க்கா றோறும் வரும்புளகம்
ஆர்ந்த மேனிப் புறம்பலைப்ப வன்பு கரைந்தென் புள்ளலைப்பச்
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத் திளைப்பத் திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தி லுறவைத்து நீடும் பதிகம் பாடுவார்.

(இ-ள்.) பெருகிச்சொரிகின்ற கண்ணீராகிய அருவியும், மயிர்க்கால்கள்தோறும் உண்டாகிய புளகாங்கிதமும் பூரித்ததிருமேனியின் புறத்தில் காண, அன்பானது கரைந்து உள்ளே எலும்பையுருக்க, தமக்குப்பொருந்திய கண்ணாலடையவேண்டிய பயனைப்பெற்று ஆனந்தத்தையடைய, திருவேகம்பநாதனை உருகிய மனதில்பொருந்தும்படி தியானித்து, உயர்ந்த திருப்பதிகம்பாடுகின்றவராயினார்.—எ-று. (௧௨௩)

வேறு.

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை யென்றெடுத்துப்
பரவாய சொன்மாலைத் திருப்பதிகம் பாடியபின்
விரவார்தம் புரமெரித்த விடையவனார் வெள்ளையெயிற்
றரவாரம் புனைந்தவர்தந் திருமுன்றிற் புறத்தணைந்தார்.

(இ-ள்.) "கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானை" என்று முதலில் எடுத்துத் துதிசெய்தற்குரிய சொல்லாலாகிய திருப்பதிகமாலையைப்பாடியபின்பு,அசுரர்களுடைய முப்புரத்தையெரித்த ரிஷபவாகனத்தையுடையவரும், வெண்மையாகிய பற்களையுடைய பாம்பை மாலையாகத்தரித்தவருமாகிய சிவபெருமானது கோயில் திருவாசலின்புறத்தில் வந்தார்.—எ-று. (௩௨௪)

---

**திருவேகம்பம் - பண்- காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானைவிடையேறும்வித்தகனை
யரவாடச்சடைதாழவங்கையிலனலேந்தி
யிரவாடும்பெருமானையென்மனத்தேவைத்தேனே.

அடுத்தானையுரித்தானையருச்சுனற்குப்பாசுபதங்
கொடுத்தானைக்குலவரையேசிலையாகக்கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சுனைமல்கு கயிலாய
மெடுத்தானைத் தடுத்தானை யென்மனத்தே வைத்தேனே.

திருச்சிற்றம்பலம்.

இது தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - **ஏகாம்பரநாதர்,** தேவியார் - **காமாட்சியம்மை.**

---

கையார்ந்த திருத்தொண்டு கழியமிகுங் காதலொடுஞ்
செய்யாநின் றேயெல்லாச் செந்தமிழ்மா லையும்பாடி
மையார்ந்த மிடற்றார்திரு மயானத்தை வலங்கொண்டு
மெய்யார்வ முறத்தொழுது விருப்பினுடன் மேவுவார்.

(இ-ள்.) கையால்செய்கின்ற உழவாரத்திருத்தொண்டை மிகுந்தபேரன்போடுஞ்செய்து, எல்லாச் செவ்விய தமிழ்ப்பதிகமாலைகளையும் பாடி, காளகண்டத்தையுடைய சிவபெருமானது கச்சிமயானமென்னும் ஸ்தலத்தைவலமாகவந்து, உண்மையாகிய அன்புடன்வணங்கி விருப்பத்தோடு எழுந்தருளியிருந்தார்.—எ-று.

சீர்வளரு மதிற்கச்சி நகர்த்திருமேற் றளிமுதலா
நீர்வளருஞ் சடையவர்தா நிலவியுறை யாலயங்க
ளார்வமுறப் பணிந்தேத்தி யாய்ந்ததமிழ்ச் சொன்மலராற்
சார்வுறுமா லைகள்சாத்தித் தகுந்தொண்டு செய்திருந்தார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய மதில்சூழ்ந்த காஞ்சிபுரத்திலுள்ள திருமேற்றளி முதலாகிய கங்கைநதி பொருந்திய சடைமுடியையுடைய சிவபெருமான் விளங்கி வீற்றிருந்தருளும் திருக்கோயில்களை அன்போடு வணங்கித் துதித்து,ஆராய்ந் தெடுக்கப்பட்ட தமிழ்ச்சொல்லாகிய மலர்களால் சமைத்த திருப்பதிகமாலைகளைச்சாத்தித் தகுந்த திருப்பணிகளைச்செய்துகொண்டிருந்தார்.—எ-று. (௩௨௫)

அந்நகரி லவ்வண்ண மமர்ந்துறையு நாளின்கண்
மன்னுதிரு மாற்பேறு வந்தணைந்து தமிழ்பாடிச்
சென்னிமிசை மதிபுனைவார் பதிபலவுஞ் சென்றிறைஞ்சித்
துன்னினார் காஞ்சியினைத் தொடர்ந்தபெருங் காதலினால்.

(இ-ள்.) அந்தநகரத்தில் அவ்விதமாக விரும்பி வாசஞ்செய்யுநாளில், நிலைபெற்ற திருமாற்பேறு என்னும் ஸ்தலத்தையடைந்து (சுவாமியைத்தொழுது) திருப்பதிகம்பாடி, திருமுடியில் இளம்பிறையைத் தரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல ஸ்தலங்களுக்கும் போய் வணங்கித் தம்மைத் தொடர்ந்து பற்றிய பேரன்போடு காஞ்சிபுரத்தை யடைந்தார்.—எ-று. (ருஉஎ)

ஏகம்பன் காணவனென் னெண்ணத்தா னெனப்போற்றிப்
பாகம்பெண் ணுருவானைப் பைங்கண்விடை யுயர்த்தானை
நாகம்பூ ணுவந்தானை நலம்பெருகுந் திருநீற்றி
னாகந்தோ யணியானை யணைந்துபணிந் தின்புற்றார்.

(இ-ள்.) "ஏகம்பன்காணவனென்னெண்ணத்தான்" என்று இறுதியில் வைத்துத்திருப்பதிகம்பாடி, ஒருபாகத்தில் பெண்ணுருவாயிருக்கின்றவரும், பசிய கண்களையுடைய ரிஷபக்கொடியை யுயர்த்தவரும், பாம்பை ஆபரணமாக விரும்பி யணிந்தவரும், நன்மைமிகுந்த விபூதியைத் திருமேனியில்தரித்த பேரழகருமாகிய சிவபெருமானை யடைந்து வணங்கி இன்பத்தையடைந்தார்.—எ-று. (ருஉஅ)

---

## திருவேகம்பம்—திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கூற்றுவன்காண் கூற்றுவனைக்குமைத்தகோன்காண்
குவலயன்காண்குவலயத்தினீராணன்காண்
காற்றவன்காண்கனலவன்காண்கலிக்குமின்காண்
கனபவளச்செம்மேனிகலந்தவெள்ளை
நீற்றவன்காணிலாவூருஞ்சென்னியான்கா
ணிறையார்ந்தபுனற்கங்கைநிமிர்சடைமே
லேற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே.

அறுத்தான்காணயன்சிரத்தையமரர்வேண்ட
வாழ்கடலினஞ்சுண்டங்கணிநீர்க்கங்கை
செறுத்தான்காண்டேவர்க்குந்தேவன்றான்காண்
டிசையனைத்துந்தொழுதேத்தக்கலைமான்கையிற்
பொறுத்தான்காண்புகலிடத்தைநலியவந்து
பொருகயிலையெடுத்தவன்றன்முடிதோளலஞ்
சிறுத்தான்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே.

திருச்சிற்றம்பலம்.

திருக்கச்சி யேகம்பம் பணிந்தேத்தித் திங்களார்
நெருக்கச்செஞ் சடைக்கணிந்தார் நீடுபதி தொழுதினைவார்
வருக்கைச்செஞ் சுளைபொழிதேன் வயல்விளக்கு நாட்டிடைப்போ
[ய்ப்
பருக்கைத்திண் களிற்றுரியார் கழுக்குன்றின் பாங்கணைந்தார்.

(இ-ள்.) ஸ்ரீகாஞ்சிபுரத்தில் திருவேகம்பத்தை வணங்கித் துதித்து, சந்திரனையும், ஆத்திமாலையையும் நெருக்கமாகிய சிவந்த சடைமுடியில் அணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றஸ்தலங்களையும் வணங்கும்படி திருவுள்ளங்கொண்டு, பலாப்பழங்கள் சிவந்த சுளைகளிலிருந்து பொழிகின்ற தேனானது வயல்களை விளையச்செய்கின்ற நாட்டில்போய், பருத்த துதிக்கையையுடைய வலிய யானையின் தோலைப் போர்த்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கழுக்குன்றத்தின் பக்கத்தில் வந்தார்.—எ-று. (௩௨௯)

நீடுதிருக் கழுக்குன்றி னிருத்தனார் கழல்வணங்கிப்
பாடுதமிழ்த் தொடைபுனைந்து பாங்குபல பதிகளிலுஞ்
சூடுமிளம் பிறைமுடியார் தமைத்தொழுது போற்றிப்போய்
மாடுபெருங் கடலுடுத்த வான்மியூர் மருங்கணைந்தார்.

(இ-ள்.) உயர்ந்த திருக்கழுக்குன்றத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவடிகளைவணங்கிப் பாடுகின்ற திருப்பதிகமாலைகளைச் சாத்தி, அதன் சமீபத்திலுள்ள பல ஸ்தலங்களுக்கும்போய், இளம்பிறையைத் தரித்த திருமுடியையுடைய சிவபெருமானை வணங்கித் துதித்துச் சென்று,அருகில் பெரிய கடல் சூழ்ந்த திருவான்மியூரை யடைந்தார்.—எ-று. (௩௩0)

திருவான்மி யூர்மருந்தைச் சேர்ந்துபணிந் தன்பினொடும்
பெருவாய்மைத் தமிழ்பாடி யம்மருங்கு பிறப்பறுத்துத்
தருவார்தங் கோயில்பல சார்ந்திறைஞ்சித் தமிழ்வேந்தர்
மருவாரு மலர்ச்சோலை மயிலாப்பூர் வந்தடைந்தார்.

(இ-ள்.) தமிழ்த்தலைவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் திருவான்மியூரில் வீற்றிருந்தருளும் மருந்தீசனை யடைந்து அன்போடு வணங்கிப் பெருமைபொருந்திய உண்மையாகிய தமிழ்ப்பதிகங்களைப்பாடி, அத்திருவான்மியூருக்கருகில் பிறப்பையொழித்து மோட்சத்தைத் தந்தருளும் சிவபெருமானுடைய பல திருக்கோயில்களை யடைந்து வணங்கி, வாசனைபொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த திருமயிலாப்பூரை வந்து சேர்ந்தார்.—எ-று. (௩௩௧)

வரைவளர்மா மயிலென்ன மாடமிசை மஞ்சாடுந்
தரைவளர்சீர்த் திருமயிலைச் சங்கரனார் தாள்வணங்கி
யுரைவளர்மா லைகளணிவித் துழவாரப் படையாளி
திரைவளர்வே லைக்கரைபோய்த் திருவொற்றி யூர்சேர்ந்தார்.

(இ-ள்.) மலையில் வாசஞ்செய்கின்ற சிறந்த மயில்போல, உப்பரிகைகளின்மேல் மேகங்கள் தவழ்கின்ற உலகத்தில் கீர்த்திபொருந்திய திருமயிலாப்பூர் என்னும்ஸ்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி,

நல்லசொற்களமைந்த திருப்பதிகமாலைகளைச்சாத்தி, அலைகள்மோதுகின்றசமுத்திரக்கரையின்வழியேபோய்த் திருவொற்றியூரை யடைந்தார்; உழவாரப்படையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (கஙஉ)

ஒற்றியூர் வளநகரத் தொளிமணிவீ திகள்விளக்கி
நற்கொடிமா லைகள்பூக நறுங்கதலி நிரைநாட்டிப்
பொற்குடங்க டீபங்க டூபங்கள் பொலிவித்து
மற்றவரை யெதிர்கொண்டு கொடுபுக்கார் வழித்தொண்டர்.

(இ-ள்.) திருவொற்றியூரென்னும் வளம்பொருந்திய நகரத்திலுள்ள பிரகாசிக்கின்ற அழகிய திருவீதிகளைவிளக்கி, நல்லகொடிகளையும்,பூமாலைகளையும்,கமுகமரங்களையும், நல்லவாழைமரங்களையும் வரிசையாகநாட்டி, பொன்மயமாகிய பூரணகும்பங்களையும், தூபங்களையும், தீபங்களையும் விளங்கும்படிவைத்துப் பரம்பரையாகத் தொண்டுசெய்கின்ற அடியார்கள் அத்திருநாவுக்கரசுசுவாமிகளை எதிர்கொண்டு அழைத்துப்போனார்கள்.—எ-று. (கஙங)

திருநாவுக் கரசருமத் திருவொற்றி யூரமர்ந்த
பொருநாகத் திண்சிலையார் கோபுரத்தை யிறைஞ்சிப்புக்
கொருஞானத் தொண்டருட னுருகிவலங் கொண்டடியார்
கருநாமந் தவிர்ப்பாரைக் கைதொழுது முன்வீழ்ந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகளும் அந்தத்திருவொற்றியூரில் வீற்றிருந்தருளும் மேருமலையாகிய போர்செய்யும் வலிய வில்லையுடைய சுவாமியினது திருக்கோபுரத்தைவணங்கி யுள்ளேபுகுந்து, ஒப்பற்ற சிவஞானத்தையுடைய அடியார்களோடு மனமுருகிப் பிரதக்ஷிணஞ்செய்து,அடியார்களது பிறவியாகிய அச்சத்தை நீக்கியருளும் சிவபெருமானைக்கைகுவித்துச் சந்நிதியின்முன்னே விழுந்துவணங்கினார்.—எ-று. (கஙச)

எழுதாத மறையளித்த வெழுத்தறியும் பெருமானைத்
தொழுதார்வ முறநிலத்திற் றோய்ந்தெழுந்தே யங்கமெலா
முழுதாய பரவசத்தின் முகிழ்த்தமயிர்க் கான்மூழ்க
விழுதாரை கண்பொழிய விதிர்ப்புற்று விம்மினார்.

(இ-ள்.) எழுதப்படாத வேதங்களை யருளிச்செய்த எழுத்தறியும் பெருமானென்னும் ஆண்டவரை வணங்கி, அன்புபொருந்தப் பூமியில்விழுந்து நமஸ்கரித்து எழுந்து, திருமேனிமுழுவது முண்டாகிய ஆனந்தபரவசத்தால் அரும்பிய மயிர்க்கால்கள் மறையும்படி விழுகின்ற நீர்த்தாரைகள் கண்களினின்றும் பெருக, தேகம்நடுங்கி விம்மியழுதார்.—எ-று. (கஙரு)

வண்டோங்குஞ் செங்கமல மெனவெடுத்து மனமுருகப்
பண்டோய்ந்த சொற்றிருத்தாண் டகம்பாடிப் பரவுவார்
விண்டோய்ந்த புனற்கங்கை வேணியார் திருவுருவங்
கண்டோங்கு களிசிறப்பக் கைதொழுது புறத்தணைந்தார்.

(இ-ள்.) "வண்டோங்குசெங்கமலம்" என்று முதலில் எடுத்து மனமுருகும்படி பண்ணமைந்தசொற்களால் திருத்தாண்டகத் திருப்பதிகம்பாடி வணங்கு

கின்றவராய், ஆகாயகங்கையைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவுருவத்தைத் தரிசனஞ்செய்து மிகுந்த சந்தோஷமுண்டாகத் தமது கைக ளைக்குவித்து வணங்கிப் புறத்தில்வந்தார்.—எ-று. (௩௩௬)

---

**திருவொற்றியூர் - திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

வண்டோங்குசெங்கமலக்கழுநீர்மல்கு
மதமத்தஞ்செஞ்சடைமேன்மதியஞ்சூடித்
திண்டோள்களாயிரமும்வீசிநின்று
திசைசேரநடமாடிச்சிவலோகனு
ருண்டார்நஞ்சுலகுக்கோருறுதிவேண்டி
யொற்றியூர்மேயவொளிவண்ணனார்
கண்டேனுன்கனவகத்திற்கண்டேற்கென்றன்
கடும்பிணியுஞ்சுடுந்தொழிலுங்கைவிட்டவே.

மருவுற்றமலர்க்குழலிமடவாளஞ்ச
மலைதுளங்கத்திசைநடுங்கச்செறுத்துநோக்கிச்
செருவுற்றவாளரக்கன்வலிதான்மாளத்
திருவடியின்விரலொன்றாலலறவூன்றி
யுருவொற்றியங்கிருவரோடிக்காண
வோங்கினவவ்வொள்ளழலாரிங்கேவந்து
திருவொற்றியூர்நம்மூரென்றுபோனார்
செறிவளைகளொன்றொன்றாச்சென்றவாறே.

திருச்சிற்றம்பலம்.

இது தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-**படம்பக்கநாதர், மாணிக்கத்தியாகர்.**

தேவியார் - **வடிவுடையம்மை.**

விளங்குபெருந் திருமுன்றின் மேவுதிருப் பணிசெய்தே
யுளங்கொடிரு விருத்தங்க ளோங்குதிருக் குறுந்தொகைகள்
களங்கொடிரு நேரிசைகள் பலபாடிக் கைதொழுது
வளங்கொடிருப் பதியதனிற் பலநாள்கள் வைகினார்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற பெரிய கோயிலின்திருவாசலில் செய்யவேண்டிய திருப்பணிகளைச்செய்து, திருவுள்ளத்திலமைந்த திருவிருத்தங்களும், உயர்ந்ததி ருக்குறுந்தொகைகளும்,திருநேரிசைகளுமாகிய பல திருப்பதிகங்களைப்பாடிக் கை குவித்து வணங்கி,வளம்பொருந்திய திருவொற்றியூர் என்னும் ஸ்தலத்தில் அநேக நாள்கள்வரையிலும் வாசஞ்செய்திருந்தார்.—எ-று. (௩௩௭)

அங்குறையு நாளின்க ணருகுளவாஞ் சிவாலயங்க
ளெங்குஞ்சென் றினிதிறைஞ்சி யேத்துமவ ரிறையருளாற்
பொங்குபுனற் றிருவொற்றி யூர்தொழுது போந்துமையாள்
பங்குடையா ரமர்ந்ததிருப் பாசூராம் பதியணைந்தார்.

(இ-ள்.) அத்திருவொற்றியூரில் எழுந்தருளியிருக்கும் நாளில், பக்கத்திலுள்ள சிவாலயங்களுக்கெல்லாம்போய் இனிதாக வணங்கித் துதிக்கின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் சிவபெருமானது திருவருளினால், மிகுந்த நீர்வளம்பொருந்திய திருவொற்றியூரைத் தொழுது, அவ்விடத்தினின்றும் புறப்பட்டு, உமாதேவியை வாமபாகத்திலுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பாசூர்என்னும் ஸ்தலத்தை யடைந்தார்.—எ-று.

பாசு என்பது மூங்கில், அதனையே ஸ்தலவிருட்சமாக வுடைமையால், திருப்பாசூர் என்று பெயராயிற்று. (ருருஅ)

திருப்பாசூர் நகரெய்திச் சிந்தையினில் வந்தூறும்
விருப்பார்வ மேற்கொள்ள வேயிடங்கொண் டுலகுய்ய
விருப்பாரைப் புரமூன்று மெரித்தருள வெடுத்தனிப்
பொருப்பார்வெஞ் சிலையாரைத் தொழுதெழுந்து போற்றுவார்.

(இ-ள்.) திருப்பாசூர் என்னும் ஸ்தலத்தையடைந்து,மனதில் எழுந்துதோன்றிய ஆசையானது அதிகரிக்க, மூங்கிலை இடமாகக்கொண்டு உலகத்தார் பிழைக்கும்பொருட்டு எழுந்தருளியிருக்கின்றவரும், முப்புரங்களையும் அழிக்கும்படி யெடுத்த ஒப்பற்ற மேருமலையாகிய கொடிய வில்லையுடையவருமாகிய சிவபெருமானை வணங்கி யெழுந்து துதிப்பாராயினர்.—எ-று. (ருருகூ)

முந்திமூ வெயிலெய்த முதல்வனா ரெனவெடுத்துச்
சிந்தைகரைந் துருகுதிருக் குறுந்தொகையுந் தாண்டகமுஞ்
சந்தநிறை நேரிசையு முதலான தமிழ்பாடி
யெந்தையார் திருவருள்பெற் றேகுவார் வாகீசர்.

(இ-ள்.) "முந்திமூவெயிலெய்த முதல்வனார்" என்று முதலில் எடுத்து மனங்கரைந்துருகுதற்குக் காரணமாகிய திருக்குறுந்தொகை - திருத்தாண்டகம்- சந்தமமைந்த திருநேரிசைமுதலாகிய தமிழ்ப்பதிகங்களைப்பாடி, எமது சிவபெருமானுடைய திருவருளைப்பெற்றுக்கொண்டு போகின்றவராயினர்; திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (ருசு0)

---

**திருப்பாசூர் - திருக்குறுந்தொகை.**

திருச்சிற்றம்பலம்.

முந்திமூவெயிலெய்தமுதல்வனார்
சிந்திப்பார்வினைதீர்த்திடுஞ்செல்வனா
ரந்திக்கோன்றனக்கேயருள்செய்தவர்
பந்திச்செஞ்சடைப்பாசூரடிகளே.

திரியுமூவெயில்செங்கணையொன்றினா
லெரியவெய்தனரேனுமிலங்கைக்கோ
னெரியவூன்றியிட்டார்விரலொன்றினாற்
பரியர்நுண்ணியர்பாசூரடிகளே.

திருச்சிற்றம்பலம்.

இது தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - **பாசூர்நாதர்**, தேவியார் - **பசுபதிநாயகி.**

---

அம்மலர்ச்சீர்ப் பதியையகன் றயலுளவாம் பதியனைத்தின்
மைம்மருவுங் களத்தாரை வணங்கிமகிழ் வொடும்போற்றி
மெய்ம்மைநிலை வழுவாத மேன்மைநெறி யொழுக்குடிமைச்
செம்மையினார் பழையனூர்த் திருவால வனம்பணிந்தார்.

(இ-ள்.) விளங்குகின்ற சிறப்பினையுடைய அந்தத் திருப்பாசூர் என்னும் ஸ்தலத்தினின்றும் நீங்கி அயலிலுள்ள எல்லாஸ்தலங்களிலும் எழுந்தருளியிருக்கும் கருநிறம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானைவணங்கி மகிழ்ச்சியோடு துதிசெய்து, உண்மை நெறியினின்றும் தவறாதமேன்மையான ஒழுக்கத்தையுடைய உயர்ந்தகுடியிற்சிறந்தோராகிய வேளாளர்கள் வாழ்ந்திருக்கும் பழையனூரையடுத்த திருவாலங்காட்டைவணங்கினார்.—எ-று. (௧௪௪)

திருவாலங் காடுறையுஞ் செல்வர்தா மெனச்சிறப்பி
னொருவாத பெருந்திருத்தாண் டகமுதலா வோங்குதமிழ்ப்
பெருவாய்மைத் தொடைமாலை பலபாடிப் பிறபதியு
மருவார்வம் பெறவணங்கி வடதிசைமேல் வழிக்கொள்வார்.

(இ-ள்.) "திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாம்" என்று இறுதியில்வைத்துச் சிறப்பினின்றும் நீங்காத பெரிய திருத்தாண்டகமுதலாகிய உயர்ந்த தமிழால் செய்யப்பட்ட உண்மைமிகுந்த பலதிருப்பதிகமாலைகளைப்பாடி, மற்றைஸ்தலங்களையும் மிகுந்த அன்போடுவணங்கி வடதிசைநோக்கிச் செல்கின்றவராயினார்.—எ-று.

---

திருவாலங்காடு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றாவுலகனைத்துமானார்தாமேயூழிதோறூழியுயர்ந்தார்தாமே
நின்றாகியெங்குநிமிர்ந்தார்தாமேநீர்வளிதீயாகாசமானார்தாமே
கொன்றாடுங்கூற்றையுதைத்தார்தாமேகோலப்பழனையுடையார்தாமே
சென்றாடுதீர்த்தங்களானார்தாமேதிருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே.

மாலைப்பிறைசென்னிவைத்தார்தாமேவண்கயிலைமாமலைவைந்தியாத
நீலக்கடல்சூழிலங்கைக்கோனைநெரியவிரலாலடர்த்தார்தாமே

பாலொத்தமேனிநிறத்தார்தாமேபழனைப்பதியையுடையார்தாமே
சீலத்தாரொந்துந்திறத்தார்தாமே திருவாலங்காட்டுறையுஞ்செல்வர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஊர்த்ததாண்டவர் தேவியார்- வண்டார்குழலியம்மை.

பல்பதியு நெடுங்கிரியும் படர்வனமுஞ் சென்றடைவார்
செல்கதிமுன் னளிப்பார்தந் திருக்காரிக் கரைபணிந்து
தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்கள்பின் னும்பர்குழா
மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினார்.

(இ-ள்.) அநேகம் ஊர்களையும், நீண்டமலைகளையும், பரவிய வனங்களையுங் கடந்து அடைகின்றவராய், அடியார்களுக்கு மோட்சத்தைவிரைவில்கொடுக்கின்ற சிவபெருமானுடைய திருக்காரிக்கரையென்னும் ஸ்தலத்தை வணங்கி, அடியார்களும், அவர்களுக்குப் பின்னே தேவர்கூட்டங்களும் நெருங்கியிருக்கின்ற திருக்காளத்தியென்னும் பெருமைபொருந்திய திருமலைக்குவந்து சேர்ந்தார்; திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (௩௪௩)

பொன்முகலித் திருநதியின் புனிதநெடுந் தீர்த்தத்தின்
முன்மூழ்கிக் காளத்தி மொய்வரையின் றாழ்வரையிற்
சென்னியுறப் பணிந்தெழுந்து செங்கண்விடைத் தனிப்பாகர்
மன்னுமலை மிசையேறி வலங்கொண்டு வணங்குவார்.

(இ-ள்.) பொன்முகலியென்னும் திருநதியினது பரிசுத்தமாகிய தீர்த்தத்தில் முதலில் ஸ்நானஞ்செய்து, மரங்கள்நெருங்கிய திருக்காளத்திமலையினது அடிவாரத்தில் சிரசுபொருந்தும்படி வணங்கியெழுந்து, சிவந்தகண்களையுடைய ரிஷபத்தை வாகனமாகக்கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலையின் மேல் ஏறி வலமாகவந்து வணங்குகின்றவராயினார்.—எ-று. (௩௪௪)

காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி யெழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
நாதனையென் கண்ணுள்ளா னெனுந்திருத்தாண் டகநவின்றார்.

(இ-ள்.) காதில் அணிந்த வெண்மையாகிய சங்கக்குழையையுடையவரும், திருக்காளத்திமலையின்மேல் வீற்றிருந்தருளும் கொழுந்து போன்றவரும், வேதங்களால் புகழ்ந்து சொல்லப்பட்ட காரணப்பொருளாயுள்ளவருமாகிய சிவபெருமானைப் பூமியில்விழுந்து வணங்கியெழுந்து, பேரன்புபொருந்திய மனமானது களிப்படையவும், தரிசித்தகண்கள் குளிரவும் ஆனந்தபரவசமடைந்து, சிவபெருமானைக்குறித்து "என்கண்ணுள்ளான்" என்று இறுதியிலுடைய திருத்தாண்டகத்தைப்பாடியருளினார்.—எ-று. (௩௪௫)

## திருக்காளத்தி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

விற்றூணொன்றில்லாதநல்கூர்ந்தான்காண்
வியன்கச்சிக்கம்பன்காண்பிச்சையல்லா.
மற்றூணொன்றில்லாதமாசதுரன்காண்
மயானத்துமைந்தன்காண்மாசொன்றில்லாப்
பொற்றூண்காண்மாமணிநற்குன்றொப்பான்காண்
பொய்யாதபொழிலேழுந்தாங்கிநின்ற
கற்றூண்காண்காளத்திகாணப்பட்ட
கணநாதன்காணவனென்கண்ணுளானே.

உண்ணவருநஞ்சமுண்டான்றான்கா
ணூழித்தீயன்னான்காணுகப்பார்காணப்
பண்ணாரப்பல்லியம்பாடினான்காண்
பயின்றநால்வேதத்தின்பண்பினான்கா
ணண்ணாமலையான்காணடியாரீட்ட
மடியிணைகடொழுதேத்தவருளுவான்காண்
கண்ணாரக்காண்பார்க்கோர்காட்சியான்காண்
காளத்தியானவனென்கண்ணுளானே.

திருச்சிற்றம்பலம்.

இது தொண்டைநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் காளத்தீசுவரர்-தேவியார்-ஞானப்பூங்கோதையம்மை.

---

மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதஞ் சேர்ந்திறைஞ்சி
யலைத்துவிழுங் கண்ணருவி யாகத்துப் பாய்ந்திழியத்
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம் போந்தணைந்தார்.

(இ-ள்.) திருக்காளத்திமலையின் சிகரத்தில் வீற்றிருந்தருளும் தெய்வசிகாமணியாகிய சிவபெருமானுடைய வலப்பாகத்திருமுன்னேநிற்கும் வில்லைப்பிடித்த நீண்டகையையுடைய கண்ணப்பநாயனாரது திருவடிகளை யடைந்து வணங்கி, ததும்பிவிழுகின்ற ஆனந்தக்கண்ணீரருவியானது திருமேனியில்பெருகியொழுகச் சிரசின்மேல்குவித்த கையையுடையவராய் வணங்கிப் புறத்தில்வந்தார்.—எ-று.

சேணிலவு திருமலையிற் றிருப்பணியா யினசெய்து
தாணுவினை யம்மலைமேற் றாள்பணிந்த குறிப்பினாற்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலங்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார்.

(இ-ள்.) ஆகாயம்வரையிலு முயர்ந்த திருக்காளத்திமலையில் செய்யவேண்டிய திருப்பணிகளைச்செய்து, சிவபெருமானை அந்தமலையின்மேல் பிராட்டியாரோடு திருக்கயிலையில் வீற்றிருக்குங் கோலமாக வணங்கிய திருவுள்ளக்குறிப்பால், யாவ

ராலும் துதிசெய்யத்தக்க ஸ்ரீகயிலாசகிரியில் வீற்றிருந்தருளும் பெரிய திருக்கோலத்தைத் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பங்கொண்டார்; சாஸ்திரங்களின்உண்மையையுணர்ந்த திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (௩௪எ)

வே று.

அங்கண் மாமலை மேன்ம ருந்தைவ ணங்கி யாரரு ளான்மிகப்
பொங்கு காதலி னுத்த ரத்திசை மேல்வி ருப்பொடு போதுவார்
துங்க மால்வரை கானி யாறுதொ டர்ந்த நாடுக டந்தபின்
செங்கண் மால்விடை யண்ணன் மேவு திருப்ப ருப்பத மெய்தினார்.

(இ-ள்.) அழகிய இடமகன்ற பெரிய திருக்காளத்திமலையின்மேல் வீற்றிருந்தருளும் அமிர்தம்போன்ற சிவபெருமானை வணங்கி, நிறைந்த திருவருளினால் வடதிசைக்குப் போகவேண்டுமென்னும் ஆசையால் மகிழ்ந்துபோகின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் உயர்ந்த பெரியமலைகளும், காட்டாறுகளும் தொடர்ந்திருக்கின்ற நாடுகளைக்கடந்தபின்பு, சிவந்தகண்களையுடைய விஷ்ணுவாகிய ரிஷபத்தை வாகனமாகக்கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்ரீசைலத்தை யடைந்தார்.

திருப்பருப்பதம்=ஸ்ரீசைலம்; மல்லிகார்ச்சுனம் என்பதுமிதுவே. (௩௪அ)

மான விஞ்சையர் வான நாடர்கள் வானி யக்கர்கள் சித்தர்கள்
கான கின்னரர் பன்ன காதிபர் காம சாரிக ளேமுதல்
ஞான மோனிக ளுளும் நம்பரை வந்தி றைஞ்சி நலம்பெறுந்
தான மானதி ருச்சி லம்பைவ ணங்கி வண்டமிழ் சாற்றினார்.

(இ-ள்.) வலிமைபொருந்திய வித்தியாதரர்களும், விண்ணுலகத்திலுள்ள தேவர்களும், சிறந்த இயக்கர்களும், சித்தர்களும்,இசைபாடுகின்ற கின்னரர்களும், நாகலோகத்தாரும், தம் இச்சையின்வழியே சஞ்சரிக்கின்றவர்களும், சிவஞானத்தையுடைய மௌனிகளும், நாள்தோறும் சிவபெருமானை வந்து வணங்கி வேண்டியவரங்களைப் பெறுதற்குரிய இடமாகிய ஸ்ரீசைலத்தைத் தொழுது, வளம்பொருந்திய தமிழ்ப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று. (௩௪௯)

அம்ம ருங்குக டந்து போமவ ரார்கொள் சூலவ யிற்படைச்
செம்மல் வெண்கயி லைப்பொ ருப்பைநி னைந்தெ ழுந்ததோர் சிந்தையால்
எம்ம ருங்குமோர் காத லின்றி யிரண்டு பாலும் வியந்துளோர்
கைம்ம ருங்கணை யுந்தெ லுங்கு கடந்து கன்னட மெய்தினார்.

(இ-ள்.) அந்தஸ்தலத்தில் நின்றும் நீங்கிச்செல்கின்றவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் கூர்மைபொருந்திய சூலாயுதத்தையேந்திய சிவபெருமான் வீற்றிருந்தருளும் வெள்ளிய திருக்கயிலாயமலையை நினைந்து, அதனைத் தரிசிக்கவேண்டுமென்று அதிகரித்தெழுந்த மனதோடு, அதுதவிர, மற்றை எந்தஸ்தலங்களிலும் விருப்பமில்லாமல், இரண்டுபக்கத்திலும் வியப்படைந்துவருகின்ற அடியார்கள் சமீபத்தில்வரும்படி தெலுங்கதேசத்தைக்கடந்து கன்னட தேசத்தை யடைந்தார்.—எ-று. (௩௫௰)

கருந டங்கழி வாக வெய்திய பின்க லந்தவ னங்களுந்
திருந தித்துறை யாவை யும்பயில் சேணெ டுங்கிரி வட்டையும்

பெருந லங்கிளர் நாடு மெண்ணில பிற்ப டச்செறி பொற்பினல்
வருநெ டுங்கதிர் கோலு சோலைய மாளவத்தினை நண்ணினர்.

(இ-ள்.) கன்னடதேசம் நீங்கும்படி போனபின்பு, மரங்கள் நெருங்கியிரு க்கின்ற பலவனங்களும், அழகிய துறைகளையுடைய அநேகநதிகளும், நெடுந்தூர த்திலுயர்ந்த மலைவழிகளும், மிகுந்த செழிப்பினையுடைய தேசங்களுமாகிய அள வில்லாதவழிகள் பிற்படும்படி, மரங்களுயர்ந்து நெருங்கியிருக்கும் அழகினல், ஆ காயத்தில்வருகின்ற சூரியன் தவழ்கின்ற சோலைகள்சூழ்ந்த மாளவதேசத்தை யடைந்தார்.—எ-று. (நடுக)

அங்கு முற்றிய கன்று போகி யருஞ்சு ரங்கள் கடந்துசென்
றெங்கு மிக்கவ றங்க ணீடு மிலாட பூமி யிகந்துபோய்
மங்குல் சுற்றிய வெற்பி னோடு வனங்க ளாறு கடந்தயற்
பங்க யப்பழ னத்து மத்திம பைதி ரத்தினை யெய்தினர்.

(இ-ள்.) அந்த மாளவதேசத்தைக்கடந்து சென்று, அரிய காடுகளையுந் தாண்டிப்போய், எவ்விடத்திலும் சிறந்த தருமங்கள் மிகுந்து நடக்கின்ற இலா டதேசத்தைக்கடந்து சென்று, மேகங்கள்சூழ்ந்து தவழும் மலைகளையும், வனங்க ளையும், நதிகளையும்தாண்டி, பக்கத்தில் தாமரைமலர்களையுடைய வயல்கள்சூழ்ந்த மத்தியதேசத்தை யடைந்தார்.—எ-று. (நடுஉ)

அன்ன நாடுக டந்து கங்கை யணைந்து சென்று வலங்கொளு
மின்னு வேணியர் வார ணாசி விருப்பி னோடு பணிந்துடன்
பின்ன ணைந்தவர் தம்மை யங்கொ ழிந்து கங்கை கடந்து போய்
மன்னு காதல்செய் நாவின் மன்னவர் வந்து கற்சுர முந்தினர்.

(இ-ள்.) அந்த மத்தியதேசத்தைக் கடந்து, கங்காநதிபெருகி வலமாகவரு கின்ற பிரகாசிக்கும் சடை முடியை யுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் வாரணாசியை அன்பொடுவணங்கி,உடனே தமக்குப்பின்னாக வந்தவர்களை அவ்வி டத்திலேயே விட்டுக் கங்கைநதியைக்கடந்து சென்று, கல்வழியை யடைந்தார். நிலைபெற்ற அன்பினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று.

வாரணாசி என்பது காசி; இது வரணை அசி என்னும் இரண்டு நதிகளும் அந்தக்ஷேத்திரத்தைத் தெற்கும் வடக்குமாகச் சூழ்ந்து அந்தர்வேதியாக இருப்ப தனல் இப்பெயர்பெற்றது. இதனை,

"சார்ந்தவர் பாவ நீங்கத் தகைதலான வரணையென்று
மார்ந்தநீர் படிந்தோர் பாவ மறுத்தலா லசியென் றுந்தான்
சேர்ந்தன நாமந் தெற்கு வடக்கதா யுண்மை தேர்ந்தோ
ரோர்ந்திடு முத்தி வைப்பின் காவலா யொழுகு மன்றே."—எனவும்,

"ஆதலிற் றீமை யோர்கட் கடையொணா வசியி னோடு
மேதகு வரணை யாறும் விழைதக வொழுகு மாற்றால்
மாதவக் கிழமை பூண்ட முனிவர வளங்கொள் காசிக்
கேதமில் நாமம் வார ணசியென விசைந்த தாமால்." — எனவும் வரும் காசிகண்டத்தா னுணர்க. (நடுங)

மாக மீது வ ளர்ந்த கானக மாகி யெங்கு மனித்தராற்
போக லாநெறி யன்றி யும்புரி கின்ற காதல்பொ லிந்தெழச்
சாக மூலப லங்க டெய்ப்பன வுந்த விர்ந்துத னித்துநேர்
ஏகி னாரிர வும்பெ ருங்கயி லைக்கு லக்கிரி யெய்துவார்.

(இ-ள்.) ஆகாயம்வரையிலும் வளர்ந்திருக்கின்ற மரங்களையுடையகாடுகள் நிறைந்துள்ளதாய், எவ்விடத்திலும் மனிதர்களால் போகக்கூடாத வழியாயிருந்தும், தாம்கொண்ட ஆசையானது அதிகரிக்க, இலை-கிழங்கு-பழங்களாகிய இவைகளைப் புசித்தலையும் ஒழிந்து, ஒன்றியாய் நேராகவே பகலில் நடப்பதேயல்லாமல் இரவிலும் நடந்துசென்றார்; பெருமைபொருந்திய ஸ்ரீகயிலாசகிரியை அடைய வேண்டுமென்னும் விருப்பங்கொண்ட திருநாவுக்கரசுசுவாமிகள்—எ-று. (௩௫௪)

ஆய வாரிரு ளின்க ணேகுமவ் வன்பர் தம்மைய ணைந்துமுன்
தீய வாயவி லங்கு வன்றொழில் செய்ய வஞ்சின நஞ்சுகால்
வாய நாகம ணிப்ப ணங்கொள்வி ளக்கெ டுத்தன வந்துகால்
தோய வானவ ராயி னுந்தனி துன்ன ருஞ்சுர முன்னினார்.

(இ-ள்.) அவ்வாறு மிகுந்த இராக்காலத்திலும் போகின்ற அந்தத் திருநாவுக்கரசுசுவாமிகளைக் கொடிய புலிமுதலாகிய மிருகங்கள் சமீபத்தில்வந்து ஒரு இடையூறும் செய்யாமல் அஞ்சிப்போயின; விஷத்தைக்கக்குகின்ற வாயினையுடைய பாம்புகள் படத்திலுள்ள மாணிக்கங்களாகிய விளக்கைக்காட்டின; தேவர்களாயிருந்தாலும் கால் பூமியில்படும்படி தனியேபோவதற்குக் கூடாததாகிய பாலைநிலத்தை யடைந்தார்.—எ-று. (௩௫௫)

வெங்க திர்ப்பக லக்க டத்திடை வெய்ய வன்கதிர் கைபரந்
தெங்கு மிக்கழி ளப்பி ளக்கத மெல்லை புக்கெரி கின்றன
பொங்க ழற்றெறு பாலை வெங்கிழல் புக்க சூழல் புகும்பகற் [னார்.
செங்க திர்க்கனல் போலு மத்திசை திண்மை மெய்த்தவர் நண்ணி

(இ-ள்.) அந்தப் பாலைநிலத்தில் கொடிய உஷ்ணத்தைத் தருகின்ற பகற்காலத்தில் சூரியனுடைய கிரணங்கள் மிகுதியாகப் பரவி எவ்விடத்திலும் அதிகரித்திருக்கும் வெடிப்பின் வழியாக நாகலோகத்தின் எல்லையை யடைந்து விளங்குகின்ற தோற்றம் எவ்வாறிருந்ததென்றால், சுவாலித்து எரிகின்ற அக்கினியையும் வருத்தத்தக்க அப்பாலையினது கொடிய நிழல் இருந்துள்ள இடத்தை (அப்பாலை தன்னை வருத்தாமல்) சரணமாகவடையும் சூரியனுடைய சிவந்த கிரணங்களின் காந்தியை யொத்திருக்கும்; அத்தன்மையாகிய திசையில் உறுதியாகிய மெய்த்தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் போயினார்.—எ-று.

இதனால், பாலையின் வெப்பத்தோடு சூரியகிரணத்தின் வெப்பமும் மிகுந்துள்ள அருஞ்சுரமென்று கூறியதாயிற்று. (௩௫௬)

இங்ங னம்மிர வும்ப கற்பொழு தும்ம ருஞ்சுர மெய்துவார்
பங்க யம்புரை தாள்ப ரட்டள வும்ப சைத்தசை தேயவு
மங்கை பாகர்தம் வெள்ளி மால்வரை வைத்த சிந்தை மறப்பரோ
தங்க ரங்களி ரண்டு மேகொடு தாவி யேகுதன் மேவினார்.

(இ-ள்.) இவ்வாறு இராக்காலமும் பகற்காலமும் அடைதற்கரிய பாலைநிலத்தில் செல்கின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் தாமரைமலரையொத்த திருவடிகள்

பரவேவையிலும் பசையையுடைய மாமிசந் தேய்ந்துபோயும், பார்வதிதேவியை இடப்பாகத்திலுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பெருமைபொருந்திய திருக்கயிலாயமலையில் சென்று தரிசிக்கவேண்டுமென்று தாம்கொண்ட எண்ணத்தை மறக்காதவராய்த் தம்முடைய இரண்டு கைகளையுமே ஆதரவாகக்கொண்டு தாவிப்போகும்படி விருப்பமுற்றார்.—எ-று. (௩௫௭)

கைக ளும்மணி பந்த சைந்தற வேக ரைந்துசி தைந்தபின்
மெய்க லந்தெழு சிந்தை யன்பின் விருப்பு மீமிசை பொங்கிட
மொய்க டுங்கனல் வெம்ப ரற்புகை மூளு மத்த முயங்கியே
மைகொள் கண்டர்த மன்பர் செல்ல வருந்தி யுந்தினர் மார்பினால்.

(இ-ள்.) இரண்டுகைகளும் மணிக்கட்டு அசைந்து கரைந்து தேய்ந்தபின்பு, உண்மையோடு கலந்தெழுந்த மனதில் தோன்றிய அன்பின் உறுதியானது மேலு மேலும் அதிகரிக்க, நெருங்கிய கொடியநெருப்பை யொத்த வெவ்விய பருக்கைக் கற்களினின்றுண்டாகிய புகைகள் எழும்புகின்ற வழியையடைந்து, காளகண்டத்தையுடைய சிவபெருமானது அடியவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் போவதற்கு வருத்தப்பட்டு மார்பினால் நகர்ந்து சென்றார்.—எ-று. (௩௫௮)

மார்ப முந்தசை நைந்து சிந்தி வரிந்த வென்பு முரிந்திட
நேர்வ ருங்குறை நின்ற சிந்தையி னேச மீசனை நேருநீ
டார்வ மங்குயிர் கொண்டு கைக்குமு டம்ப டங்கவு முன்கொடச்
சேர்வ ரும்பழு வம்பு ரண்டுபு ரண்டு சென்றனர் செம்மையோர்.

(இ-ள்.) மார்பும் சதைகள் நைந்துபோய் இற்றுவிழ, கட்டப்பட்ட எலும்புகளும் முறிய, தாம் திருக்கயிலாயத்தை அடையாமையாகிய குறையானது பொருந்தியிருக்கின்ற மனதில், தம்மால் நேசிக்கப்படும் சிவபெருமானை யடைய வேண்டுமென்னும் மிகுந்த ஆசையானது அங்கு உயிரால் நடத்தும் தம்முடம்பு முழுவதையும் முன்னே கொண்டு, யாவராலும் அடைதற் கருமையாகிய அந்தக் காட்டில் புரண்டு புரண்டு போயினார், திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (௩௫௯)

அப்பு றம்புரள் கின்ற நீளிடை யங்க மெங்கு மரைந்திடச்
செப்ப ருங்கயி லைச்சி லம்படி சிந்தை சென்றுறு மாதலால்
மெய்ப் புறத்திலு றுப்ப ழிந்தபின் மெல்ல வந்து முயற்றியுந்
தப்பு றச்செய லின்றி யந்நெறி தங்கி னார்தமி ழாளியார்.

(இ-ள்.) அப்புறம் புரண்டுகொண்டுபோகின்ற மார்க்கத்தில், தேகமுழுவதும் தேய, சொல்லுதற்கரிய திருக்கயிலாயமலையினிடத்தில் தரிசிக்கவேண்டுமென்று மனம் செல்லுதலினால், தேகத்திலுள்ள அவயவங்களெல்லாம் சிதைந்தபின்பு, மிருதுவாக நகர்ந்து செல்லும் உயிர்முயற்சியும் நீங்க, ஒருசெயலுமில்லாமல் அந்த வழியிலேயே கிடந்தார்; தமிழ்த்தலைவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (௩௬௦)

வேறு.

அன்ன தன்மையார் கயிலையை யணைவதற கருளார
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த

நன்னெ டும்புனற் றடமுமொன் றுடன்கொடு நடந்தார்
பன்ன கம்புனை பரமரோர் முனிவராம் படியால்.

(இ-ள்.) அப்படிப்பட்ட தன்மையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் திருக்கயிலாயமலையை யடைவதற்குக் கிருபைசெய்யாதவராய், நிலைபெற்ற மதுரமாகிய தமிழ்ப்பதிகத்தினால் பூமியின்மேல் பின்பும் தம்மைத் துதிக்கும்பொருட்டு, பாம்பை ஆபரணமாக அணிந்த சிவபெருமான் ஒரு தவமுனிவரொன்று சொல்லத்தக்க திருவுருவமெடுத்து, நல்ல நீரையுடைய ஒரு தடாகத்தையும் அவ்விடத்தில் உண்டாக்கிக்கொண்டு நடந்தருளினார்.—எ-று. (நகூக)

வந்து மற்றவர் மருங்குற வணைந்துநேர் நின்று
நொந்து நோக்கிமற் றவரெதிர் நோக்கிட நுவல்வார்
சிந்தி யிவ்வுறுப் பழிந்திட வருந்திய திறத்தா
லிந்த வெங்கடத் தெய்திய தென்னென விசைத்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகளுக்குச் சமீபத்தில் வந்து எதிரே நின்றுகொண்டு இரக்கத்தோடு பார்த்து, அவர் தம்மை எதிராகப் பார்த்தபொழுது அம்முனிவர் சொல்கின்றார்; எவ்வாறெனில், உம்முடைய அவயவங்களெல்லாம் சிதைந்து அழிந்துபோக மனவருத்தத்தோடு இந்தக் கொடிய காட்டில் என்ன காரியத்திற்காக வந்தீர் என்று கேட்டார்.—எ-று. (நகூஉ)

மாசில் வற்கலை யாடையு மார்பின்முந் நூலுந்
தேசு டைச்சடை மௌலியு நீறுமெய் திகழ
ஆசின் மெய்த்தவ ராகிநின் றவர்தமை நோக்கிப்
பேச வுற்றதோ ருணர்வுற விளம்புவார் பெரியோர்.

(இ-ள்.) குற்றமற்ற மரவுரியாகிய ஆடையும், மார்பினிடத்தில் பூணூலும், பிரகாசம்பொருந்திய சடைமுடியும், திருவெண்ணீறும் திருமேனியில் விளங்க, குற்றமற்ற மெய்ம்மையாகிய தவவேடங் கொண்டவராய் நின்ற சிவபெருமானாகிய முனிவரைப் பார்த்துப் பேசும்படியான ஒரு அற்பவுணர்ச்சி யுண்டாகத் திருநாவுக்கரசுசுவாமிகள் சொல்கின்றார்.—எ-று. (நகூங)

வண்டு லாங்குழன் மலைமக ளுடன்வட கயிலை
யண்டர் நாயக ரிருக்குமப் பரிசவ ரடியேன்
கண்டு கும்பிட விருப்பொடுங் காதலி னடைந்தேன்
கொண்ட வென்குறிப் பிதுமுனி யேயெனக் கூற.

(இ-ள்.) உத்தரகயிலாசத்திலே தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமான் வண்டுகள் தேனுண்ணும்படி உலாவுகின்ற கூந்தலையுடைய உமாதேவிசமேதராய் வீற்றிருந்தருளும் திருக்கோலத்தை அவரது அடியேனாகிய யான் தரிசித்து வணங்கும்பொருட்டு விருப்பத்தோடு வந்தேன்; முனிவரே! அடியேன் கருத்திற் கொண்டிருக்கின்ற எண்ணம் இதுதான் என்று சொல்ல.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (நகூச)

கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலு மானிடப் பான்மையோ ரடைவதற் கெளிதோ

யயில்கொள் வேற்படை யமரரு மணுகுதற் கரிதால்
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர் வந்தென விளம்பி.

(இ-ள்.) பெருமைபொருந்திய ஸ்ரீகயிலாசகிரியானது பூமியில்வாசஞ்செய்கின்ற மானிடத்தன்மை யுடையவர்கள் அடைவதற்கு எளிதாகுமோ? கூர்மை பொருந்திய வேலாயுதத்தையுடைய தேவர்களும் அடைகிறதற்கு அரிதாயிருக்கின்றது; அங்ஙனமாக, நீர் உஷ்ணத்தையுடைய இந்தப் பாலைநிலத்தில்வந்து என்னகாரியஞ்செய்தீர் என்று சொல்லி.—எ-று. (௩௬௫)

மீளு மத்தனை யுமக்கினிக் கடனென விளங்குந்
தோளு மாகமுந் துவளுநூன் முனி சொல்ல
ஆளு நாயகன் கயிலையி லிருக்கைகண் டல்லால்
மாளு மிவ்வுடல் கொண்டுமீ ளேனென மறுத்தார்.

(இ-ள்.) இனி திரும்பிப்போவதே உமக்கு உத்தமமாகும் என்று விளங்குகின்ற தோளிலும் மார்பிலும் அசைகின்ற பூணூலைத் தரித்த சிவபெருமானாகிய முனிவர் சொல்ல, (அதற்குத் திருநாவுக்கரசுசுவாமிகள்) எம்மை அடிமையாக வுடைய சிவபெருமான் உத்தரகயிலாசத்தில் வீற்றிருந்தருளும் திருக்கோலத்தைத் தரிசித்தலல்லாமல், அநித்தியமாகிய இந்த உடம்பைக்கொண்டு திரும்பேன் என்று மறுத்துவிட்டார்.—எ-று. (௩௬௬)

ஆங்கு மற்றவர் துணிவறிந் தவர்தமை யறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக் கரந்துநீண் மொழியால்
ஓங்கு நாவினுக் கரசனே யெழுந்திரென் றுரைப்பத்
தீங்கு நீங்கிய யாக்கைகொண் டெழுந்தொளி திகழ்வார்.

(இ-ள்.) அவ்விடத்தில் திருநாவுக்கரசுசுவாமிகள் கொண்ட துணிவைத் திருவுள்ளத்திற் கொண்டு, அவர் தம்மைக் கயிலாசபதியென்று அறிந்துகொள்ளும்பொருட்டு, அவ்விடத்தினின்றும் நீங்கிய முனிவர் ஆகாயத்தில் மறைந்து, சிறந்த அசரீரியினால், உயர்ந்த திருநாவுக்கரசனே! எழுந்திரு என்று சொல்ல, அப்போது அழிந்தஉறுப்புக்களெல்லாம் முன்போல நிரம்பப்பெற்றுச் சிறந்த திருமேனியோடும் எழுந்து விளங்கினார்.—எ-று. (௩௬௭)

அண்ண லேயெனை யாண்டுகொண் டருளிய வமுதே
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே
கண்ணி னாற்றிருக் கயிலையி லிருந்தநின் கோலம்
நண்ணி நான்றொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார்.

(இ-ள்.) பெருமையிற் சிறந்தவரே! என்னை அடிமைகொண் டருளிய அமிர்தமானவரே! ஆகாயத்தில் மறைந்துநின்று அசரீரியாகத் திருவருள் புரிந்த வேதமுதல்வரே! எனது இரண்டு கண்களினாலும் திருக்கயிலாயத்தில் வீற்றிருந்தருளும் தேவரீருடைய திருக்கோலத்தை அடியேன் அடைந்து தரிசித்துத் தொழும்படி இரங்கி அருள்செய்யவேண்டுமென்று வணங்கினார்.—எ-று. (௩௬௮)

தொழுதெ ழுந்தநற் றொண்டரை நோக்கிவிண் டவத்தி
லெழுபெ ருந்திரு வாக்கினா லிறைவரிப் பொய்கை

முழுகி நம்மைநீ கயிலையி லிருந்தவம் முறைமை
பழுதில் சீர்த்திரு வையாற்றிற் காணெனப் பணித்தார்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் வணங்கி எழுந்த நல்ல திருநாவுக்கரசுசுவாமிகளைச் சிவபெருமான் பார்த்து, ஆகாயத்தினின்றும் எழுந்த பெருமைபொருந்திய அசரீரிவாக்கினால், நீ இந்தத்தடாகத்தில் முழுகி, நம்மைத் திருக்கயிலாசத்தில் வீற்றிருக்கும் முறைமைப்படியே குற்றமற்ற சிறப்பினையுடைய திருவையாற்றில் தரிசிப்பாயாகவென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (ருசுகூ)

ஏற்றி னாரரு டலைமிசைக் கொண்டெழுந் திறைஞ்சி
வேற்று மாகிவிண் ணாகிநின் றார்மொழி விரும்பி
யாற்றல் பெற்றவ ரண்ணலா ரஞ்செழுத் தோதிப்
பாற்ற டம்புனற் பொய்கையின் மூழ்கினார் பணியால்.

(இ-ள்.) அன்பினுறுதியைப் பெற்றவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமானது திருவருளைச் சிரசின்மேல்கொண்டு, எழுந்து வணங்கி, "வேற்றாகிவிண்ணாகி நின்றாய்" என்னும் முதலையுடைய போற்றித்திருத்தாண்டகத்தை அருளிச்செய்து, சிவபெருமானுக்குரிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரித்து ஆண்டவருடைய கட்டளைப்படியே பால்போலும்நீரையுடைய விசாலமாகிய தடாகத்தில் மூழ்கினார்.—எ-று. (ருஎ0)

---

### போற்றித் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வேற்றாகிவிண்ணாகிநின்றாய்போற்றி
    மீளாமேயாளென்னைக்கொண்டாய்போற்றி
யூற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றி
    யோவாதசத்தத்தொலியேபோற்றி
யாற்றாகியங்கேயமர்ந்தாய்போற்றி
    யாறங்கநால்வேதமானாய்போற்றி
காற்றாகியெங்குங்கலந்தாய்போற்றி
    கயிலைமலையானேபோற்றிபோற்றி.

உண்ணாதுறங்காதிருந்தாய்போற்றி
    யோதாதேவேதமுணர்ந்தாய்போற்றி
யெண்ணாவிலங்கைக்கோன்றன்னைப்போற்றி
    யிறைவிரலால்வைத்துகந்தவீசாபோற்றி
பண்ணாரிசையின்சொற்கேட்டாய்போற்றி
    பண்டேயென்சிந்தைபுகுந்தாய்போற்றி
கண்ணாயுலகுக்குநின்றாய்போற்றி
    கயிலைமலையானேபோற்றிபோற்றி.

திருச்சிற்றம்பலம்.

ஆதி தேவர்தந் திருவருட் பெருமையா ரறிந்தார்
போத மாதவர் பனிமலர்ப் பொய்கையின் மூழ்கி
மாதொர் பாகனூர் மகிழுமை யாற்றிலோர் வாவி
மீது தோன்றிவந் தெழுந்தன ருலகெலாம் வியப்ப.

(இ-ள்.) எல்லாத்தேவர்களுக்கும் முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானது திருவருளின்பெருமையை யாவர் தாம் அறிந்தவர்கள்; சிவஞானம்நிறைந்த தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் குளிர்ந்த மலர்களையுடைய தடாகத்தில் முழுகி,உமாதேவியை இடப்பாகத்திலுடைய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருவையாற்றிலுள்ள ஒருதடாகத்திலிருந்து எழுந்து உலகத்தாரெல்லாம் ஆச்சரியப்படும்படி மேலேவந்தார்.—எ-று. (௩௭௧)

வம்பு லாமலர் வாவியின் கரையின்வந் தேறி
யும்பர் நாயகர் திருவருட் பெருமையை யுணர்ந்தார்
எம்பி ரான்றருங் கருணைபோ லிதுவென விருகண்
பம்பு தாரைநீர் வாவியிற் படிந்தெழும் படியார்.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற மலர்களையுடைய தடாகத்திலிருந்து கரையில் ஏறிவந்து, தேவர்களுக்குநாயகராகிய சிவபெருமானது திருவருளின் பெருமையையுணர்ந்தவராகி, இவ்வாறு எனக்கு நேரிட்டது எமது ஆண்டவர் தந்தருளிய திருவருள்போலுமென்று இரண்டுகண்களிலுமிருந்து ததும்புகின்ற தாரையாகிய ஆனந்தக்கண்ணீர் என்னும் தடாகத்தில் மறுபடியும் முழுகி யெழுந்தன்மையையுடையவராயினார்.—எ-று. (௩௭௨)

மிடையு நீள்கொடி வீதிகள் விளங்கிய வையா
றுடைய நாயகர் சேவடி பணியவந் துறுவார்
அடைய வப்பதி நிற்பவுஞ் சரிப்பவு மான
புடைய மர்ந்ததந் துணையொடும் பொலிவன கண்டார்.

(இ-ள்.) நீண்டகொடிகளை நெருங்கக்கட்டியிருக்கின்ற வீதிகளால் பிரகாசிக்கின்ற திருவையாற்றில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானது சிவந்ததிருவடிகளை வணங்கும்படிவருகின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் அந்தத்திருப்பதியிலுள்ள சரம் அசரமாகிய எல்லாப்பொருள்களும் பக்கத்தில் தங்கிய தங்கள்தங்கள் துணையோடும் கூடியிருக்கும் தோற்றத்தைப்பார்த்தார்.—எ-று.

அத்தலத்திலுள்ள எல்லாப்பொருள்களும் சிவசத்தி சொரூபமா யிருக்கக் கண்டன ரென்பார் "புடைய மர்ந்ததந் துணையொடும் பொலிவன கண்டார்" என்று கூறினார். சரங்கள் ஆண்பெண்ணாகவும், அசரங்கள் ஆண்மரம் பெண்மரமாகவும் பொலிதல். (௩௭௩)

பொன்ம லைக்கொடி யுடனமர் வெள்ளியம் பொருப்பிற்
றன்மை யாம்படி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயின்முன் வந்தார்.

(இ-ள்.) பர்வதராசபுத்திரியாகிய உமாதேவியாரோடு வீற்றிருந்தருளும் ஸ்ரீகயிலாசதரிசனம்போலிருக்கும்படி சத்தியும் சிவமுமாகவிருக்கின்ற நிலைமை

யோடு பலவகைப்பட்ட சிவராசிகளெல்லாம் இருக்கும் முறைமையைக் கண்டு வணங்கி,நிலைபெற்ற பெருந்தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் சிவபெருமான்வீற்றிருந்தருளும் திருக்கோயிலுக்கு முன்பாக வந்தார்.—எ-று. (நூஎச)

காணு மப்பெருங் கோயிலுங் கயிலைமால் வரையாய்ப்
பேணு மாலய னிந்திரன் முதற்பெருந் தேவர்
பூணு மன்பொடு போற்றிசைத் தெழுமொலி பொங்கத்
தாணு மாமறை யாவையுந் தனித்தனி முழங்க.

(இ-ள்.) திருவையாற்றில் காணப்பட்ட அந்தப் பெரியதிருக்கோயிலும் பெருமைபொருந்திய ஸ்ரீகயிலாசகிரியாய், யாவரும் விரும்புகின்ற திருமால் - பிரமன்- இந்திரன்முதலாகிய பெரியதேவர்கள் நிறைந்த பேரன்புடனே தோத்திரஞ் செய்தலாலெழுகின்ற பேரொலியானது எவ்விடத்திலும் நிறையவும், மகிமைபொருந்திய வேதங்களெல்லாம் தனித்தனியாக முழங்கவும்.—எ-று.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (நூஎரு)

தேவர் தானவர் சித்தர்விச் சாதர ரியக்கர்
மேவு மாதவர் முனிவர்கள் புடையெலா மிடையக்
காவி வாள்விழி யரம்பையர் கானமு முழவுந்
தாவி லேழ்கடன் முழக்கினும் பெருகொலி தழைப்ப.

(இ-ள்.) தேவர்களும், அசுரர்களும், சித்தர்களும், வித்தியாதரர்களும், இயக்கர்களும்,நிலைபெற்ற தவத்தர்களும், முனிவர்களும் பக்கங்களிலெல்லாம் நெருங்கியிருக்கவும், நீலோற்பல மலரையும் வாளையுமொத்த கண்களை யுடைய தேவரம்பையர்கள் பாடுகின்ற சங்கீதமும், மத்தளவோசையும் கெடுதலில்லாத சப்தசமுத்திரங்களின் முழக்கத்தைப்பார்க்கிலும் அதிகமாக முழங்கவும்.—எ-று.

கங்கை யேமுதற் றீர்த்தமாங் கடவுண்மா நதிகண்
மங்க லம்பொலி புனற்பெருந் தடங்கொடு வணங்க
எங்கு நீடிய பெருங்கண நாதர்க ளிறைஞ்சப்
பொங்கி யங்களாற் பூதவே தாளங்கள் போற்ற.

(இ-ள்.) தீர்த்தங்களென்று சொல்லப்பட்ட கங்கைமுதலாகிய தெய்வத்தன்மைபொருந்தியஅநேக நதிகள் மங்களம்பொருந்திய நீர்நிறைந்த பெரியதடாகங்களி னுருவங்கொண்டு வணங்கவும், எவ்விடத்திலும் நிறைந்த பெருமைதங்கிய கணநாதர்கள் தொழவும், பலவாத்தியங்களினால் பூதவேதாளங்கள் தோத்திரஞ் செய்யவும்.—எ-று. (நூஎஎ)

அந்தண் வெள்ளிமால் வரையிரண் டாமெனவணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால் விடையெதிர் நிற்ப
முந்தை மாதவப் பயன்பெறு முதன்மையான் மகிழ்ந்தே
நந்தி யெம்பிரா னடுவிடை யாடிமுன் னணுக.

(இ-ள்.) அழகும் குளிர்ச்சியும்பொருந்திய இரண்டு பெரிய வெள்ளிமலைகள் நிற்கின்றனவென்று அடைந்தவர்கள் நினைக்கும்படி, சிவந்தகண்களையுடைய விஷ்ணுவாகிய ரிஷபம் எதிரேநிற்கப் பூர்வத்தில்செய்த மகத்தாகிய தவத்தின்பயனைத் தான் அத்தலத்தில்பெற்ற முதன்மையினால் மகிழ்ச்சியடைந்து எமது ஆண்டவராகிய திருநந்திதேவர் நடுவில் வெள்ளச் சண்டையானனே நிற்கவும்.—எ-று.

மால்விடை திருக்கோயிலின் புறத்தும், திருநந்திதேவர் ஆலயத்தின் நடுவிலுள்ளகண்ணடிக்குமுன்னும்நிற்க எனக்கொள்க. 'நடுவிடையாடிமுன்னனுக' என்பதபற்கு, சிவபெருமான் திருமுன்னே நிற்க என்று கூறினும் பொருந்தும். "மூர்த்தைமாதவப்பயன்பெறுமுதன்மையான்மகிழ்ந்து" என்பதன் வரலாறு:— பூர்வத்தில், சிலாத னென்னும் முனிவரர் சகல வேதாகமங்களை யுணர்ந்த சிவஞானச்செல்வராயிருந்தும், 'புத்திரப்பேறில்லார்க்குமுத்தியின்று' என்பதை யுணர்ந்தவராய், அதனை விரும்பித் திருவையாற்றை யடைந்து அயனரிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிவபூசை முடித்துத் திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்து, சிவபெருமானுடைய திருமுன்னே நின்று வணங்கி, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் செபித்துப்பஞ்சாக்கினிமத்தியில் ஒருகாலினின்று அநேகநாள்கள் தவஞ்செய்துகொண்டிருந்தார். சிவபெருமான் அத்தவத்திற் கிரங்கி ரிஷபவாகனத்தின்மேல் பார்வதி சமேதராய் எழுந்தருளி வந்து முனிவனே! நீ விரும்பியவரத்தைக் கேளென்ன, அவர் எம்பெருமானே! அடியேனுக்கு ஒருசற்புத்திரனைத் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார். அதற்குப் பெருமான்மகிழ்ந்து, சகல சற்குணங்களும் நிரம்பிய ஒருபுத்திரன் பதினாறு வயதுடையவனாய் நீ செய்யும் யாகபூமியில் உழுபடையின் மூலமாக வெளிப்படுவானென்று கூறி மறைந்தனர். பின்னர் சிலாதமுனிவர் யாகஞ்செய்யப் பொன்னேர் பூட்டி யாகசாலையை யுழுதபோது, அக் கொழுவின் மூலமாக ஒரு மாணிக்கப்பெட்டி தோன்ற அதனை முனிவர் திறந்துபார்த்தனர்; அதனுள்ளே நெற்றிக்கண்ணும், இளம்பிறை தவழும் சடையும், நான்கு தோள்களுமாக விளங்கும் சிவமூர்த்தத்தைக்கண்டு மயங்கித் தோத்திரஞ்செய்து நின்றார். அப்போது சிவபெருமான் அசரீரியாக முனிவனே! 'அப்பெட்டியை மூடித் திற' என்று கூறியருள, அவ்வாறே மூடித்திறந்தபொழுது, அவ் வெம்பெருமான் ஒரு இளங்குழவியாகி அழுதனர். முனிவர் அக்குழந்தையையெடுத்துத் தமது மனைவியாரிடத்துக் கொடுத்துப் பாலூட்டி வளர்த்துச் செப்பேசுவரரென்று திருப்பெயர் தரித்து வளர்த்து வருங்கால், அவருக்குப்பதினாறு வயதுவர, அவரது தாய்தந்தையர் தம் புத்திரரது அற்ப ஆயுளைக் குறித்து வருந்துதலையுணர்ந்து, அஞ்சாதீர்கள்; யான் அழியாவரம் பெறுகின்றேனென்று தேறுதல் கூறித் திருக்கோயிலை யடைந்து அயனரி தீர்த்த மத்தியி னின்று அருந்தவஞ் செய்ய, பெருமான் ரிஷபவாகனத்தின்மேல் உமாதேவியாரோடு எழுந்தருளி நித்தியகாயந் தந்து, அவரது திருமுடியின்மேல் திருக்கரம்வைத்து தீக்ஷை புரிந்து சாரூப்பிய மளித்து, தமது திருநாமமாகிய திருநந்திதேவர் என்று அபிஷேகத் திருநாமஞ்சாத்தி,குருசந்தானம்விளங்க வேதசிவாகமங்களைச் சனற்குமாரர் முதலிய முனிவர்களுக்கு உபதேசிக்கக் கட்டளையிட்டருளி, சுயசை யென்னுங் கன்னிகையைத் திருமணம்புணர்த்திச் சிவகணங்களுக்குத் தலைவராயிருந்து சகல சிவாலயங்களினும் அதிகாரஞ்செலுத்தும்படி சுரிகையும் பிரம்புங் கொடுத்துத் திருமுடிசூட்டியருளினர். அவர் அவ்வதிகாரத்தைப்பெற்று ஸ்ரீகயிலாச முதலிய சிவசந்நிதிகளில் எழுந்தருளியிருந்து அங்குத் தரிசனார்த்தமாகவரும் பிரமன் விஷ்ணுமுதலிய தேவர்களைச் சந்தடிவிலகும்பொருட்டுத் தமது திருக்கரத்து ஏந்திய வேத்திரப்படைகொண் டோச்சி அதிகாரஞ்செலுத்தி யெழுந்தருளி யிருந்தனர் என்பதாம். இதனை,

திருவையாற்றுப்புராணம்.

"மற்றிணையில் லாக்கயிலை மலைநாத னந்திக்கு
நெற்றியிற்கண் ணுலுபுய நெருப்புருவம் பிறைமவுலி
சற்றுமொரு குறைவில்லாச் சாரூப மளித்தருளிப்
பெற்றியினு லருட்சரிகை பிரம்புமருள் செய்தனரே.

யோசனைகள் பன்னிரண்டா யிரமுள்ள திருமலையிற்
பேசரிய சாரூபம் பெற்றகண நாதருக்கும்
பாசமிலாச் சித்தருக்கும் பாரிடங்க ளானவர்க்கும்
ஆசிலா வதிகார மையர்கொடுத் தருள்செய்தார்.

ஏழுமதிள் புடைசூழ்ந்த விருநான்கு வாயிலுக்கும்
வாழிசிவன் றனைப்பணிய வருமடியார் யாவரையும்
சூழவரு காலங்க ளறிந்துவிடுந் தொல்பணிக்கும்
ஆழிசூழ் சிவன்கோயி லடங்கலுங்கா வல்கொடுத்தார்.

தலைவனருள் பணிவிடைகள் தனித்தனிதன் னிடைத்தாங்கி
மலையரையன் மடப்பாவை யுடன்கூட வலஞ்செய்து
நிலையுடைமை யால்வணங்கி நின்றுவிடை கொண்டேகித்
தொலைவிலாக் கணங்கடமைத் துறைதுறைகா வல்பணித்தான்."—என்
னும் பிரமாணத்தா னறிக. (ங.எஅ)

வெள்ளி வெற்பின்மேன் மரகதக் கொடியுடன் விளங்குந்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனவிடப் பாகங்
கொள்ளு மாமலை யாளுடன் கூடிவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார்.

(இ-ள்.) வெள்ளிமலையின்மேல் ஒரு மரகதக்கொடியோடு பிரகாசிக்கின்ற தெளிவாகிய பேரொளியினையுடைய பவளமலைபோல, இடதுபாகத்தில் தமக்குத் திருமேனியாகக்கொண்ட பார்வதியாரோடு கூடி வீற்றிருந்தருள்கின்ற அருள்வள்ளலாகிய சிவபெருமானைத் தமக்குமுன்னே தரிசித்தருளினார்; திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (ங.எகூ)

கண்டவா னந்தக் கடலினைக் கண்களான் முகந்து
கொண்டு கைகுவித் தெதிர்விழுந் தெழுந்துமெய் குலைய
அண்டர் முன்புநின் றாடினார் பாடினா ரழுதார்
தொண்ட னார்க்கங்கு நிகழ்ந்தன யார்சொல வல்லார்.

(இ-ள்.) தாம் தரிசித்த பேரானந்தக்கடலாகிய சிவபெருமானைக் கண்களாகிய பாத்திரத்தால் முகந்து உட்கொண்டு, இரண்டுகைகளையுங் குவித்து எதிரேவிழுந்து வணங்கி யெழுந்து, தேகம்நடுங்கச் சிவபெருமான் திருமுன்னேநின்று ஆனந்தக்கூத்தாடினார்; பாடினார்; ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார்; அடியவராகிய திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு அவ்விடத்தில் உண்டாகிய பேரானந்தத்தை யாவர்தாம் சொல்லவல்லவர்கள்.—எ-று. (ங.அ௦)

முன்பு கண்டுகொண் டருளினா ரமுதுண்ண மூவா
அன்பு பெற்றவ ரளவிலா வார்வமுன் பொங்கப்

பொன்பிறங்கிய சடையானைப் போற்றுதாண் டகங்கள்
இன்ப மோங்கிட வேத்தினு ரெல்லேயி றவத்தோர்.

(இ-ள்.) சுவாமியை எதிராகத் தரிசித்துக்கொண்டு திருவருளினால் விளை ந்த சிவானந்தத் தெள்ளமுதத்தை யுண்ணும்படி, கெடாத அன்பைப்பெற்றவ ரும் அளவில்லாத பெருந்தவத்தினையுடையவருமாகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அளவுபடாத ஆசையானது முற்பட்டு அதிகரிக்க, பொன்னைப்போல் விளங்குகி ன்ற சடைமுடியையுடைய சிவபெருமானைத் துதிக்கின்ற திருத்தாண்டகங்களால் பேரின்பமுண்டாகும்படி ஸ்தோத்திரஞ்செய்தார்.—எ-று. (௩௮௧)

---

**திருவையாறு - திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

ஆரார்திரிபுரங்களீறுநோக்கு
மனலாடியாரமுதேயென்றேனனே
கூரார்மழுவாட்படையொன்றேந்திக்
குறட்பூதப்பல்படையாயென்றேனனே
பேராயிரமுடையாயென்றேனனே
பிறைசூடும்பிஞ்ஞகனேயென்றேனனே
யாராவமுதேயென்னையாறனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே.

வில்லாடிவேடனேயென்றேனனே
வெண்ணீறுமெய்க்கணிந்தாயென்றேனனே
சொல்லாயசூழலாயென்றேனனே
சுலாவாயதொன்னெறியேயென்றேனனே
யெல்லாமாமென்னுயிரேயென்றேனனே
யிலங்கையர்கோன்றோளிறுத்தாயென்றேனனே
யல்லாவினைதீர்க்குமையாறனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே.

திருச்சிற்றம்பலம்.

**திருவையாறு - திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

ஓசையொலியெலாமானாய்நீயேயுலகுக்கொருவனாய்நின்றாய்நீயே
வாசமலரெலாமானாய்நீயேமலையான்மருகனாய்நின்றாய்நீயே
பேசப்பெரிதுமினியாய்நீயேபிரானாயடியென்மேல்வைத்தாய்நீயே
தேசவிளக்கெலாமானாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ.

ஆருமறியாவிடத்தாய்நீயே [illegible]ாகாயந்தேரூரவல்லாய்நீயே
பேரும்பெரியவிலங்கைே[illegible] தன்பெரியமுடிபத்திறுத்தாய்நீயே
யூரும்புரமூன்றுமட்டா[illegible] பயொண்டாமரையானுமாலுங்கூடித்
தேருமடியென்மேல்[illegible] ாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ

திருச்சிற்றம்பலம்.

ஆய வாறுமற் றவர்மனங் களிப்புறக் கயிலை
மேய நாத தந் துணையொடும் வீற்றிருந் தருளித்
தூய தொண்டருந் தொழுதெதிர் நிற்கவக் கோலஞ்
சேய தாக்கினர் திருவையா றமர்ந்தமை திகழ.

(இ-ள்.) அவ்விதமாகத் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவுள்ளங் களிப்படையும்படி ஸ்ரீகயிலாசத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் பார்வதியாரோடு காட்சி கொடுத்தருளி, பரிசுத்தராகிய அப்பர்சுவாமிகளும் தொழுதுகொண்டு எதிரே நிற்க அந்தத் திருக்கோலத்தை மறைத்தருளினர்; திருவையாற்றில் அத்திருக்கோலத்தோடு வீற்றிருந்தருளுந் தன்மை உலகத்தில் விளங்கும்படி.—எ-று.

அமர்ந்தமைதிகழ் சேயதாக்கினர் எனக் கூட்டுக. (௩௮௨)

அய்யர் கோலமங் களித்தகன் றிடவடித் தொண்டர்
மையல் கொண்டுள மகிழ்ந்திட வருந்திமற் றிங்குச்
செய்ய வேணிய ரருளிது வோவெனத் தெளிந்து
வைய முய்ந்திடக் கண்டமை பாடுவார் மகிழ்ந்து.

(இ-ள்.) சிவபெருமான் தமது திருக்கோலத்தைக் காண்பித்து அவ்விடத்தினின்றும் நீங்க, திருத்தொண்டராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் மனமகிழ்வடைதலால் பரவசப்பட்டு வருந்தி, இவ்வாறுதற்கு இங்குச் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருளிதுவோவென்று தெளிவடைந்து, உலகத்தார் பிழைக்கும்படி தாம் தரிசனஞ் செய்த தோற்றத்தைச் சந்தோஷமுற்றுப் பாடுவோராயினர்.—எ-று. (௩௮௩)

வேறு.

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடு மென்னுங்
கோதறு தண்டமிழ்ச் சொல்லாற் குலவு திருப்பதி கங்கள்
வேத முதல்வனை யாற்றில் விரவுஞ் சராசர மெல்லாங்
காதற் றுணையொடுங் கூடக் கண்டே னெனப் பாடிநின்றார்.

(இ-ள்.) "மாதர்ப்பிறைக்கண்ணியானைமலையான்மகளொடும்" என்னும் முதலையுடைய குற்றமற்ற இனிய தமிழ்ச்சொற்களால் விளங்குகின்ற திருப்பதிகங்களை வேதமுதல்வராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவையாற்றில் நெருங்கியிருக்கும் சராசரங்களெல்லாம் விருப்பம்பொருந்திய தம் துணையோடு கூடியிருக்கும்படி கண்டேனென்று பாடியருளினர்.—எ-று. (௩௮௪)

---

திருவையாறு - பண்- காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மாதர்ப்பிறைக்கண்ணியானைமலையான்மகளொடும்பாடிப்
போதொடுநீர்சுமந்தேத்திப்புகுவாரவர்பின்புகுவேன்
யாதுஞ்சுவடுபடாமலையாறடைகின்றபோது
காதன்மடப்பிடியோடுங்களிறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (க)

போழிளங்கண்ணியினானைப்பூந்துகிலாளொடும்பாடி
வாழியம்போற்றியென்றேத்திவட்டமிட்டாடாவருவே
னாழிவலவனின்றேத்துமையாறடைகின்றபோது
கோழிபெடையொடுங்கூடிக்குளிர்ந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (உ)

எரிப்பிறைக்கண்ணியினானையேந்திழையாளொடும்பாடி
முரித்தவிலயங்களிட்டுமுகமலர்ந்தாடாவருவேன்
அரித்தொழுகுவெள்ளருவியையாறடைகின்றபோது
வரிக்குயில்பேடையொடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (ங)

பிறையிளங்கண்ணியினானைப்பெய்வளையாளொடும்பாடித்
துறையிளம்பன்மலர்தூவித்தோளைக்குளிரத்தொழுவேன்
அறையிளம்பூங்குயிலாலுமையாறடைகின்றபோது
சிறையிளம்பேடையொடாடிச்சேவல்வருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (ச)

ஏடுமதிக்கண்ணியானையேந்திழையாளொடும்பாடிக்
காடொடுநாடுமலையுங்கைதொழுதாடாவருவே
னாடலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
பேடைமயிலொடுங்கூடிப்பிணைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (ரு)

தண்மதிக்கண்ணியினானைத்தையனல்லாளொடும்பாடி
யுண்மெலிசிந்தையனாகியுணராவுருகாவருவே
னண்ணலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
வண்ணப்பகன்றிலொடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (சு)

கடிமதிக்கண்ணியினானைக்காரிகையாளொடும்பாடி
வடிவொடுவண்ணமிரண்டும்வாய்வேண்டுவசொல்லிவாழ்வே
னடியிணையார்க்குங்கழலானையாறடைகின்றபோது
இடிகுறலன்னதோரேனமிசைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (எ)

விரும்புமதிக்கண்ணியானைமெல்லியலாளொடும்பாடிப்
பெரும்புலர்காலையெழுந்துபெறுமலர்கொய்யாவருவே
னருங்கலம்பொன்மணியுந்துமையாறடைகின்றபோது
கருங்கலைபேடையொடாடிக்கலந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (அ)

முற்பிறைக்கண்ணியினானைமொய்குழலாளொடும்பாடிப்
பற்றிக்கயிறறுக்கில்லேன்பாடியுமாடாவருவேன்
அற்றருள்பெற்றுநின்றாரோடையாறடைகின்றபோது
நற்றுணைப்பேடையொடாடிநாரைவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (கூ)

திங்கள்மதிக்கண்ணியானைத்தேமொழியாளொடும்பாடி
யெங்கருணல்குங்கொலென்தையெனக்கினியென்னுவருவேன்
அங்கிளமங்கையராடுமையாறடைகின்றபோது
பைங்கிளிபேடையொடாடிப்பறந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (க0)

வளர்மதிக்கண்ணியினானைவார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததோர்காலங்காண்பான்கடைக்கணிக்கின்றே
னளவுபடாததொரன்போடையாறடைகின்றபோது
விளமணநாகுதழுவியேறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-செம்பொற்சோதீசுவரர் -தேவியார்-அறம்வளர்த்தநாயகி.

கண்டு தொழுது வணங்கிக் கண்ணுத லார்தமைப் போற்றிக்
கொண்ட திருத்தாண் டகங்கள் குறுந்தொகை நேரிசை யன்பின்
மண்டு விருத்தங்கள் பாடி வணங்கித் திருத்தொண்டு செய்தே
யண்டர் பிரான்றிரு வையா றமர்ந்தனர் நாவுக் கரசர்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் அவ்வாறு சிவபெருமானை உமாதேவியாரோடு தரிசித்து அஞ்சலிசெய்து சாஷ்டாங்கமாக வணங்கித் துதித்து,எடுத்துக்கொண்ட திருத்தாண்டகங்கள், திருக்குறுந்தொகை,திருநேரிசை, அன்புநிறைந்த திருவிருத்தங்கள் இவைகளைப்பாடி வணங்கி,உழவாரத்திருத்தொண்டுசெய்து, தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமான்வீற்றிருந்தருளும் திருவையாற்றில் எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௩அரு)

நீடிய வப்பதி நின்று நெய்த்தான மேமுத லாக
மாடுயர் தானம் பணிந்து மழபாடி யாரை வணங்கிப்
பாடிய செந்தமிழ் மாலை பகர்ந்து பணிசெய்து போற்றித்
தேடிய மாலுக் கரியார் திருப்பூந் துருத்தியைச் சேர்ந்தார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய அந்தத்திருவையாற்றினின்றும் திருநெய்த்தானம் முதலாகிய பக்கங்களிலிருக்கும் உயர்ந்த ஸ்தலங்களைப் பணிந்து, திருமழபாடியில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை வணங்கித் தாம் பாடுகின்றதாகிய செந்தமிழ்த் திருப்பதிகத்தைப்பாடி யருளித் திருப்பணிசெய்து துதித்து, முன்னுளில் பன்றியுருவங்கொண்டு திருவடியைத்தேடிய விஷ்ணுவுக்கு அரியவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பூந்துருத்தியென்னும் ஸ்தலத்தையடைந்தார்.—எ-று. (௩அசு)

சேர்ந்து விருப்பொடும் புக்குத் திருநட மாளிகை முன்னர்
சார்ந்து வலங்கொண் டிறைஞ்சித் தம்பெரு மான்றிரு முன்பு
நேர்ந்த பரிவொடு தாழ்ந்து நிறைந்தொழி யாவன்பு பொங்க
வார்ந்தகண் ணீர்மழை தூங்க வயர்வுறுந் தன்மைய ரானார்.

(இ-ள்.) திருப்பூந்துருத்தியை யடைந்து விருப்பத்தோடு உள்ளேபுகுந்து திருக்கோயிலின் முன்னடைந்து பிரதக்ஷிணஞ்செய்து தொழுது, தமது ஆண்ட

வருடைய சந்நிதியில் பொருந்திய ஆசையோடும் வணங்கி, நிறைந்து நீங்காதபே ரன்பானது அதிகரித்தலால் ஒழுகுகின்ற ஆனந்தக்கண்ணீர் மழைபோலச் சொரியப் பரவசமடைகின்ற தன்மையை யுடையவராயினர்.—எ-று. (௩அஎ)

திருப்பூந் துருத்தி யமர்ந்த செஞ்சடை யானையா னேற்றுப்
பொருப்பூர்ந் தருளும் பிரானைப் பொய்யிலி யைக்கண்டே னென்று
விருப்புறு தாண்டகத் தோடு மேவிய காதல் விளைப்ப
இருப்போந் திருவடிக் கீழ்நா மென்னுங் குறுந்தொகை பாடி.

(இ-ள்.) திருப்பூந்துருத்தியென்னும் ஸ்தலத்தில்வீற்றிருந்தருளும் சிவந்த சடைமுடியையுடையவரும், மலைபோன்ற ரிஷபத்தை வாகனமாக நடத்துகின்றவருமாகிய சிவபெருமானைக்குறித்து "பொய்யிலியைப் பூந்துருத்திக்கண்டேன்" என்று அன்புபொருந்திய திருத்தாண்டகத்தோடு மிகுந்த ஆசையானது அதிகரிக்க "சேவடிக்கீழ் நாமிருப்பதே" என்னும் இறுதியையுடைய திருக்குறுந்தொகையையும் அருளிச்செய்து.—எ-று.

இதுமுத விரண்டுபாடலுங் குளகம். (௩அஅ)

### திருப்பூந்துருத்தி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நில்லாதநீர்சடைமேனிற்பித்தானை
நினையாவென்னெஞ்சைநினைவித்தானைக்
கல்லாதனவெல்லாங்கற்பித்தானைக்
காணாதனவெல்லாங்காட்டினானைச்
சொல்லாதனவெல்லாஞ்சொல்லியென்னைத்
தொடர்ந்திங்கடியேனையாளாக்கொண்டு
பொல்லாவென்னோய்தீர்த்தபுனிதன்றன்னைப்
புண்ணியனைப்பூந்துருத்திக்கண்டேனானே.

மறுத்தானைமலைகோத்தங்கெடுத்தான்றன்னை
மணிமுடியோடிருபதுதோணெரியக்காலா
லிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானை
யெண்டிசைக்குங்கண்ணானன்சிரமேலொன்றை
யறுத்தானையமரர்களுக்கமுதீந்தானை
யாவர்க்குந்தாங்கொணாநஞ்சமுண்டு
பொறுத்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே.

திருச்சிற்றம்பலம்.

### திருப்பூந்துருத்தி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொடிகொள்செல்வவிழாக்குணலையருக்
கடிகொள்பூம்பொழிற்கச்சியேகம்பனார்

பொடிகள்பூசியபூந்துருத்திந்நக
ரடிகள்சேவடிக்கீழ்நாமிருப்பதே.

துடித்ததோள்வலிவாளரக்கன்றனைப்
பிடித்தகைந்நெரிந்துற்றனகண்ணெலாம்
பொடிக்கவூன்றியபூந்துருத்திந்நகர்ப்
படிக்கொள்சேவடிக்கீழ்நாமிருப்பதே.

திருச்சிற்றம்பலம்.

அங்குறை யுந்தன்மை வேண்டி நாமடி போற்றுவ தென்று
பொங்குந் தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னாருள் பெற்றுத்
திங்களு ஞாயிறுந் தோயுந் திருமட மங்கொன்று செய்தார்.

(இ-ள்.) அத்திருப்பூந்துருத்தியில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோலத்தை விரும்பி "நாமடிபோற்றுவதே" என்று இறுதியிலுள்ள சிறந்த தமிழ்ச்சொற்களாலமைந்த திருவிருத்தமாகத்துதித்த திருப்பாடலை அருளிச்செய்து, சிவபெருமானது திருவருளைப்பெற்று அங்கு வாசஞ்செய்து திருத்தொண்டு செய்யவேண்டியவராய், சந்திரனும் சூரியனும் தவழும்படியான உயர்ந்த ஒரு திருமடத்தை அவ்வூரில் கட்டுவித்தார்.—எ-று. (கூஅக)

**திருப்பூந்துருத்தி - திருவிருத்தம்.**

திருச்சிற்றம்பலம்.

மாவினை மாலுறநின்றுன்மலைமகடன்னுடைய
பாலனைப்பான்மதிசூடியைப்பண்புணரார்மதின்மேற்
போலனைப்போர்விடையேறியைப்பூந்துருத்திமகிழு
மாலனையாதிபுராணனைநாமடிபோற்றுவதே.

பைக்கையும்பாந்திவிழிக்கையும்பாம்புசடையிடையே
வைக்கையும்வானிழிகங்கையும்மங்கைநடுக்குறவே
மொய்க்கையரக்கனையூன்றினன்பூந்துருத்தியுறையு
மிக்கநல்வேதவிகிர்தனைநாமடிபோற்றுவதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **புட்பவனநாதர்**, தேவியார் - **அழகாலமர்ந்தநாயகி.**

• பல்வகைத் தாண்டகத் தோடும் பரவுந் தனித்தாண் டகமு
மல்ல லறுப்பவர் தானத் தடைவு திருத்தாண் டகமுஞ்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருவங்க மாலையு முள்ளிட்
டெல்லையில் பன்மைத் தொகையு மியம்பின ரேத்தி யிருந்தார்.

(இ-ள்.) பலவகைத் திருத்தாண்டகமும், புகழ்கின்ற தனித்திருத்தாண்டகமும், பிறவித்துன்பத்தை யொழித்தருளும் சிவபெருமானது திருப்பதிகளை யெடுத்துச்சொல்லுகின்ற அடைவுதிருத்தாண்டகமும், முத்திநெறியைக் காட்டு

ம்படி துதிக்கத்தகுந்த திருவங்கமாலையும் இவைமுதலாக அளவில்லாத பல திருப்பதிகங்களையும் பாடித் துதித்து, அங்கு எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௩௯௦)

வேறு.

பொன்னிவலங் கொண்டதிருப் பூந்துருத்தி யவரிருப்பக்
கன்மனத்து வல்லமணர் தமைவாதிற் கட்டழித்து
தென்னவன்கூ னிமிர்த்தருளித் திருநீற்றி னொளிகண்டு
மன்னியசீர்ச் சண்பைநகர் மறையவனார் வருகின்றார்.

(இ-ள்.) காவிரிநதியானது வலமாகவருகின்ற திருப்பூந்துருத்தி யென்னும் ஸ்தலத்தில் திருநாவுக்கரசுசுவாமிகள் வாசஞ்செய்துகொண்டிருக்க, கல் மனதை யுடைய கொடிய சமணர்களை வாதஞ்செய்து அழித்து, நின்றசீர்நெடுமாறநாயனாரென்னும் பாண்டியராசனுடைய முதுகின் கூனை நிமிர்த்து, திருநீற்றின் ஒளியை விளங்கச் செய்து, நிலைபெற்ற சிறப்பினையுடைய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் வருகின்றவராயினார்—எ-று. (௩௯௧)

தீந்தமிழ்நாட் டிடைநின்று மெழுந்தருளிச் செம்பொன்னி
வாய்ந்தவளந் தருநாட்டு வந்தணைந்தார் வாக்கினுக்கு
வேந்தரிருந் தமைகேட்டு விரைந்தவர்பாற் செல்வனெனப்
பூந்துருத்தி வளம்பதியின் புறம்பணையில் வந்தணைந்தார்.

(இ-ள்.) இனிய தமிழையுடைய பாண்டிநாட்டி னின்றும் எழுந்தருளிச் செழுமை பொருந்திய காவிரிநதியானது சிறந்த வளத்தைத் தருகின்ற சோழநாட்டில் எழுந்தருளிவந்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருப்பூந்துருத்தியில் திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்தருளியிருந்தமையைக் கேள்வியுற்று, அவரிடத்துக்கு விரைவாகப் போவேனென்று, வளம்பொருந்திய திருப்பூந்துருத்தியென்னும் ஸ்தலத்தின் புறத்திலுள்ள வயல்களின் சமீபத்தில்வந்தருளினார்.—எ-று. ()

சண்பைவருந் தமிழ்விரக ரெழுந்தருளத் தாங்கேட்டு
மண்பரவும் பெருங்கீர்த்தி வாகீசர் மனமகிழ்ந்து
கண்பெருகுங் களிகொள்ளக் கண்டிறைஞ்சுங் காதலினா
லெண்பெருகும் விருப்பெய்த வெழுந்தருளி யெதிர்சென்றார்.

(இ-ள்.) சீகாழியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் எழுந்தருளி வந்தாரென்பதைக் கேள்வியுற்று, உலகத்தார் துதிக்கின்ற சிறந்த கீர்த்தியையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் மனமகிழ்வடைந்து, கண்கள் நிறைந்த ஆனந்தமடையும்படி அவரைத்தரிசித்து வணங்கவேண்டுமென்னும் பேரன்பினால் எண்ணத்தக்க மிகுந்த ஆசையுண்டாக எழுந்து எதிர்கொண்டார்.—எ-று.

காழியர்கோன் வருமெல்லை கலந்தெய்திக் காதலித்தார்
சூழுமிடைந் திடுநெருக்கிற் காணாமே தொழுதருளி
வாழியவர் தமைத்தாங்கு மணிமுத்தின் சிவிகையினைத்
தாழுமுட னிதுகொண்டு தாங்குவன்யா னெனத்தரித்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள் எழுந்தருளிவரும் இடத்தை யடைந்து, அடியார்கள் நாற்புறமும் சூழ்ந்திருக்கும் நெருக்கத்தில் தம்மை ஒருவரும் இன்னாரென்று அறியாதபடி உட்புகுந்து தொழுது, அவரைத்தாங்குகின்ற

அழகிய முத்துச்சிவிகையை இழிவாகிய இந்த உடம்பைக்கொண்டு அடியேனும் தாங்குவேனென்று அதனைச் சுமந்தார்.—எ-று.

வாழி—அசைநிலை. (௩௱௬௪)

வந்தொருவ ரறியாமே மறைந்தவடி வொடும்புகலி
யந்தணனு ரேறியெழுந் தருளிவரு மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடன்றாங்கிச்
சிந்தைகளிப் புறவருவார் தமையாருந் தெளிந்திலரால்.

(இ-ள்.) ஒருவரும் அறியாமல் வந்துமறைந்த திருவுருவோடு சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் ஏறி யெழுந்தருளி வருகின்ற அழகிய முத்துக்களாலாகிய சிறந்த சிவிகையைச் சுமக்கின்ற அடியார்களோடு கூடத் தாமும் சுமந்துகொண்டு மனமகிழும்படி வருகின்ற திருநாவுக்கரசு சுவாமிகளை யாவரும் இன்னாரென்று அறியாதிருந்தார்கள்.—எ-று. (௩௱௬௫)

திருஞான மாமுனிவ ரரசிருந்த பூந்துருத்திக்
கருகாக வெழுந்தருளி யெங்குற்றா ரப்பரென
வுருகாநின் றும்மடியே னும்மடிக டாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற் றேனென்றார்.

(இ-ள்.) திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகள் வாசஞ்செய்து கொண்டிருக்கும் திருப்பூந் துருத்திக்குச் சமீபமாக எழுந்தருளி, அப்பர் எங்கே இருக்கின்றாரென்று கேட்க,உமது அடியேனாகிய யான் அன்பினால் மனமுருகி,தேவரீருடைய திருவடிகளைச் சுமந்து வருகின்ற பேரானந்தவாழ்வு கிடைக்கப் பெற்று இங்கு இருக்கின்றேனென்று சொன்னார்.—எ-று. (௩௱௬௬)

பிள்ளையா ரதுகேளாப் பெருகுவிரை வுடனிழிந்தே
யுள்ளமிகு பதைப்பெய்தி யுடையவர சினைவணங்க
வள்ளலார் வாகீச ரவர்வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாந் தொழுதார்த்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் அந்தவார்த்தையைக்கேட்டு அதிகவிரைவோடு முத்துப்பல்லக்கினின்றும் இறங்கித் திருவுள்ளத்தில் மிகுந்த பதைபதைப்படைந்து திருநாவுக்கரசுசுவாமிகளை வணங்க, அருள்வள்ளலாகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அத்திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் வணங்குவதற்கு முன்னே தாமும்விரைந்து வணங்க, துள்ளுகின்ற மானேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமானது அடியார்களெல்லாரும் வணங்கி ஆரவாரஞ் செய்தார்கள்.—எ-று.

கழுமலக்கோன் றிருநாவுக் கரசருடன் கலந்தருளிச்
செழுமதியந் தவழ்சோலைப் பூந்துருத்தித் திருப்பதியின்
மழுவினொடு மானேந்து திருக்கரத்தார் மலர்த்தாள்கள்
தொழுதுருகி யின்புற்றுத் துதிசெய்தங் குடனிருந்தார்.

(இ-ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகளோடு சேர்ந்து, அழகிய சந்திரன் தவழ்கின்ற சோலை சூழ்ந்த திருப்பூந் துருத்தியென்னும் ஸ்தலத்தில் மழுவையும் மானையுமேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி, அன்

பினால் மனமிரங்கிப் பேரானந்தமடைந்து திருப்பதிகங்கள்பாடி அவ்விடத்தில் இருவரும் வசித்திருந்தார்கள்.—எ-று. (௲௯௮)

வல்லமணர் தமைவாதில் வென்றதுவும் வழுதிபாற்
புல்லியகூ னிமிர்த்ததுவுந் தண்பொருந்தம் புனனாட்டி
லெல்லையிலாத் திருநீறு வளர்த்ததுவு மிருந்தவத்தோர்
சொல்லவது கேட்டுவந்தார் தூயபுகழ் வாகீசர்.

(இ-ள்.) கொடிய சமணர்களைவாதில் ஜயித்ததும், பாண்டியராசனிடத்தில் சேர்ந்திருந்த கூனை நிமிரும்படி செய்ததும், குளிர்ந்த தாம்பிரபர்ணி நீரையுடைய பாண்டிவளநாட்டில் அளவில்லாத மகிமைபொருந்திய விபூதியை யாவரும் தரித்துக்கொள்ளும்படி பரவச்செய்ததுமாகிய செய்கைகளைச் சிறந்ததவச்செல்வராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் சொல்லியருள,அதைப்பரிசுத்தமாகிய புகழையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் கேட்டு மகிழ்ச்சியடைந்தார்.—எ-று. ()

பண்புடைய பாண்டிமா தேவியார் தம்பரிவு
நண்புடைய குலச்சிறையார் பெருமையுஞா னத்தலைவ
ரெண்பெருக வுரைத்தருள வெல்லையில்சீர் வாகீசர்
மண்குலவு தமிழ்நாடு காண்பதற்கு மனங்கொண்டார்.

(இ-ள்.) நல்லகுணத்தினையுடைய பாண்டியராச பத்தினியாகிய மங்கையர்க்கரசியாரது சிவநேசமும், சிவனடியார்களிடத்து அன்பினையுடைய குலச்சிறை நாயனாரது பெருமையும் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் விரித்துச்சொல்ல, அளவில்லாத சிறப்பினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் உலகத்தில் சிறந்து விளங்குகின்ற செந்தமிழ்ப் பாண்டிநாட்டைத் தரிசிப்பதற்குத் திருவுள்ளங் கொண்டருளினார்.—எ-று. (௪00)

பிரமபுரத் திருமுனிவர் பெருந்தொண்டை நன்னாட்டி
லரன்மகிழுந் தானங்க ளணைந்திறைஞ்சிப் பாடுவதற்
குரனுடைய திருநாவுக் கரசருரை செய்தருளப்
புரமெரித்தார் திருமகனார் பூந்துருத்தி தொழுதகன்றார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் பெருமைபொருந்திய தொண்டை நாட்டில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்தலங்களை யடைந்து வணங்கித் திருப்பதிகங்கள் பாடும்படி தேவரீர் எழுந்தருள வேண்டுமென்று சிவஞானம் பொருந்திய திருநாவுக்கரசுசுவாமிகள் சொல்லியருள, திரிபுரத்தை எரித்தருளிய சிவபெருமானது திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பூந் துருத்தியை வணங்கி அவ்விடத்தினின்றும் நீங்கினார்.—எ-று. (௪0௧)

ஆண்டவர சங்கணர்சீ ரருள்பெற்றப் பதிநின்றும்
பாண்டிநாட் டெழுந்தருளும் பான்மையராய்த்தென்றிசைபோய்க்
காண்டகைய திருப்புத்தூர் பணிந்தேத்திக் கதிர்மதியந்
தீண்டுகொடி மதின்மதுரைத் திருவால வாய்சேர்ந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் சிவபெருமானது சிறந்த திருவருளைப் பெற்று, அத்திருப்பூந்துருத்தியினின்றும் பாண்டிநாட்டுக்கு எழுந்தருளுங் கருத்துடையவராய்த் தென்றிசையிலே போய்க் காணத்தகுந்த சிறப்பினை யுடைய

திருப்புத்தூரை வணங்கித் துதித்து, சூரியனும் சந்திரனும்தீண்டுகின்ற கொடிகள் நாட்டிய மதில்சூழ்ந்த மதுரையை யடைந்தார்.—எ-று. (சoஉ)

சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்து
ளன்றிருந்து தமிழாராய்ந் தருளியவங் கணர்கோயின்
முன்றிலினை வலங்கொண்டு முன்னிறைஞ்சி யுள்புக்கு
வன்றனிமால் விடையாரை வணங்கிமகிழ் வொடுந்திளைத்தார்.

(இ - ள்.) மதுரைக்குப் போய்ச்சேர்ந்து திருத்தமாகிய நூல்களையாராயும் முதற்சங்கத்தில் அந்நாளில் சவுந்தரபாண்டியராய் வீற்றிருந்து,தமிழை ஆராய்ச்சி செய்தருளிய சொக்கநாதருடைய திருக்கோயிலை வலமாகவந்து திருமுற்றத்தில் முன்னே வணங்கி உள்ளேபுகுந்து, வலிமைபொருந்திய ஒப்பற்ற விஷ்ணுவாகிய ரிஷபத்தையுடைய ஆண்டவரைத் தொழுது பேரானந்தத்தை யடைந்தார். ()

எய்தியபே ரானந்த வின்பத்தி னிடையழுந்தி
மொய்திகழுஞ் சடையானை முளைத்தானை யென்றெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந் தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித் திருவுள்ளங் களிசிறந்தார்.

(இ ள்.) செய்கின்ற தவத்தை யுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் தாம் அடைந்த பேரானந்தவெள்ளத்தில் முழுகி, நெருங்கி விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானை "முளைத்தானை" என்று முதலில் எடுத்துத் திருத்தாண்டகமென்னும் செவ்விய தமிழ்ப்பதிகம்பாடிப் புறத்தில் வருகின்றவராய்க் கைகுவித்து வணங்கித் துதித்து மனதில் களிப்படைந்தவராயினார்.—எ—று. (சoச)

---

## திருவாலவாய் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

முளைத்தானையெல்லார்க்குமுன்னேதோன்றி
முதிருஞ்சடைமுடிமேன்முகிழ்வெண்டிங்கள்
வளைத்தானைவல்லசுரர்புரங்கள்மூன்றும்
வரைசிலையாவாசுகிமாநாணுக்கோத்துத்
துளைத்தானைச்சுடுசரத்தாற்றுவளநீறுத்
தூமுத்தவெண்முறுவலுமையோடாடித்
திளைத்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே.

தூர்த்தனைத்தோள்முடிபத்திறுத்தான்றன்னைத்
தொன்னரம்பினின்னிசைகேட்டருள்செய்தானைப்
பார்த்தனைப்பணிகண்டுபரிந்தான்றன்னைப்
பரிந்தவற்குப்பாசுபதமீந்தான்றன்னை
யாத்தனையடியேனுக்கன்பன்றன்னை
யளவிலாப்பல்லூழிகண்டுநின்ற
தீர்த்தனைத்தென்கூடற்றிருவாலவாய்ச்
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சொக்கநாதர். தேவியார்-மீனாக்ஷியம்மை.

சீர்திகழும் பாண்டிமா தேவியார் திருமேனி
சேரவரு ளுடையதனுற் கூனிமிர்ந்த தென்னவனுர்
பார்பரவுங் குலச்சிறையார் வாகீசர் தமைப்பணிவுற்
ருரகிலாக் காதல்மிக வடிபோற்ற வங்கிருந்தார்.

(இ-ள்.) சிறப்புப் பொருந்திய மங்கையர்க் கரசியாருடைய திருமேனியைச் சேரும்படி திருவருளைப் பெற்றிருந்தபடியால், தன் முதுகிலுள்ள கூன்நிமிரப்பெற்ற நின்றசீர் நெடுமாற நாயனுரென்னும் பாண்டியராசனும், உலகத்தார் துதிக்கின்ற குலச்சிறைநாயனுரும் திருநாவுக்கரசுசுவாமிகளைப் பணிந்து, அடங்காத பேரன்பு பெருகி அவர் திருவடிகளைத் துதிக்க, அவ்விடத்திலேயே எழுந்தருளி யிருந்தார்.—எ-று. (௬௦௫)

திருவால வாயமர்ந்த செஞ்சுடரைச் செழும்பொருளு
றருவானை நேரிசையுந் தாண்டகமு முதலான
பெருவாய்மைத் தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம் புரமெரித்தார் பூவணத்தை வந்தடைந்தார்.

(இ-ள்.) திருவாலவாய்என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் சிவந்த சோதி சொரூபமாகிய ஆண்டவரை, செவ்விய அகப்பொருளுலை அருளிச்செய்த சுவாமியைக்குறித்துத் திருநேரிசையும் திருத்தாண்டகமும் முதலாகிய சிறந்த மெய்ம்மைபொருந்திய தமிழ்ப்பதிகங்களைப் பாடி விருப்பம்பொருந்திய உழவாரத் திருத்தொண்டு செய்து, பகைவர்களுடைய திரிபுரத்தை யெரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பூவண மென்னும் ஸ்தலத்தில் வந்து சேர்ந்தார். ()

கொடிமாட நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக் கறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
வடிவேறு திரிசூலத் தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்
பொடிநீடு திருமேனிப் புனிதர்பதி பிறபணிவார்.

(இ-ள்.) கொடிகள் கட்டிய மாடங்கள் பிரகாசிக்கின்ற திருப்பூவணமென்னுந் திருப்பதியிலுள்ள திருக்கோயிலில் விஷ்ணுவுக்கு அறிதற்கரியவராகிய சிவபெருமான் தமக்கு எதிரே காட்சி கொடுத்தருளத் தரிசித்து வணங்கி "வடிவேறு திரிசூலம்" என்னும் முதலையுடைய திருத்தாண்டகத் திருப்பதிகத்தால் ஸ்தோத்திரஞ்செய்து சென்று, விபூதியினுல் விளங்குகின்ற திருமேனியையுடைய சிவபெருமானது மற்றைத் திருப்பதிகளையும் தொழுவாராயினுர்.—எ-று. (௬௦௭)

---

### திருப்பூவணம்—திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வடிவேறுதிரிசூலந்தோன்றுந்தோன்றும்
வளர்சடைமேலிளமதியந்தோன்றுந்தோன்றுங்
கடியேறுகமழ்கொன்றைக்கண்ணிதோன்றுங்
காதில்வெண்குழைதோடுகலந்துதோன்று
மிடியேறுகளிற்றுரிவைப்போர்வைதோன்று
மெழிறிகழுந்திருமுடியுமிலங்கித்தோன்றும்
பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனுர்க்கே. (க)

ஆணாகிப்பெண்ணாயவடிவுதோன்று
மடியவர்கட்காரமுதமாகித்தோன்றும்
ஊணாகியூர்திரிவானாகித்தோன்று
மொற்றைவெண்பிறைதோன்றும்பற்றார்தம்மேற்
சேணாகவரைவில்லாலெரித்தாரன்றுஞ்
செற்றவர்தம்மெலும்பிணாற்செறியச்செய்த
பூணாணுமணாணும்பொலிந்துதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (உ)

கல்லாலினீழலிற்கலந்துதோன்றுங்
கவின்மறையோர்நால்வர்க்குநெறிகளன்று
சொல்லாகச்சொல்லியவாதோன்றுந்தோன்றுஞ்
சூழரவுமான்மறியுந்தோன்றுந்தோன்றும்
அல்லாதகாலனைமுன்னடர்த்தாரன்று
மைவகையானினைவார்பாலமர்ந்துதோன்றும்
பொல்லாதபுலாலெலும்புபூணாய்த்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (ங)

படைமலிந்தமழுவாளுமானுந்தோன்றும்
பன்னிரண்டுகண்ணுடையபிள்ளைதோன்றும்
நடைமலிந்தவிடையோடுகொடியுந்தோன்றும்
நான்மறையினொலிதோன்றுநயனந்தோன்றும்
உடைமலிந்தகோவணமுங்கீளுந்தோன்று
மூரல்வெண்சிரமாலையுலாவித்தோன்றும்
புடைமலிந்தபூதத்தின்பொலிவுதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (சு)

மயலாகுந்தன்னடியார்க்கருளுந்தோன்று
மாசிலாப்புன்சடைமேன்மதியந்தோன்று
மியல்பாகவிடுபிச்சையேற்றாரன்று
மிருங்கடனஞ்சுண்டிருண்டகண்டந்தோன்றுங்
கயல்பாயக்கடுங்கலுழிக்கங்கைநங்கை
யாயிரமாமுகத்தினொடுவானிற்றோன்றும்
புயல்பாயச்சடைவிரித்தபொற்புத்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (ரு)

பாராழிவட்டத்தார்பரவியிட்ட
பன்மலருநறும்புகையும்பரந்துதோன்றுஞ்
சீராழித்தாமரையின்மலர்களன்ன
திருந்தியமாநிறத்தசேவடிகடோன்றும்
ஓராழித்தேருடையவிலங்கைவேந்த
னுடல்துணித்தவிடர்பாவங்கெடுப்பித்தன்று
போராழிமுன்னீந்தபொற்புத்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (சு)

தன்னடியார்க்கருள்புரிந்தநகவுதோன்றுஞ்
சதுமுகனைத்தலையரிந்ததன்மைதோன்று
மின்னனையநுண்ணிடையாள்பாகந்தோன்றும்
வேழத்தினுரிவிரும்பிப்போர்த்தறோன்றும்
துன்னியசெஞ்சடைமேலோர்புனலும்பாம்புந்
தூயமாமதியுடனேவைத்தறோன்றும்
பொன்னனையதிருமேனிபொலிந்துதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (எ)

செறிகழலுந்திருவடியுந்தோன்றுந்தோன்றுந்
திரிபுரத்தையெரிசெய்தசிலையுந்தோன்றும்
நெறியதனைவிரித்துரைத்தநீர்மைதோன்றும்
நெற்றிமேற்கண்தோன்றும்பெற்றந்தோன்று
மறுபிறவியறுத்தருளும்வகையுந்தோன்று
மலைமகளுஞ்சலமகளுமலிந்துதோன்றும்
பொறியரவுமிளமதியும்பொலிந்துதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (அ)

அருப்போட்டுமுலைமடவாள்பாகந்தோன்று
மணிகிளருமுருமென்னவடர்க்குங்கேழன்
மருப்போட்டுமணிவயிரக்கோவைதோன்று
மணமலிந்தநடந்தோன்றுமணியார்வையைத்
திருக்கோட்டினின்றதோர்திறமுந்தோன்றுஞ்
செக்கர்வானொளிமிக்குத்திகழ்ந்தசோதிப்
பொருப்போட்டிநின்றதிண்புயமுந்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (கூ)

ஆங்கணைந்தசண்டிக்குமருளியன்று
தன்முடிமேலலர்மாலையளித்தறோன்றும்
பாங்கணைந்துபணிசெய்வார்க்கருளியன்று
பல்பிறவியறுத்தருளும்பரிசுதோன்றுங்
கோங்கணைந்தகூவிளமுமதமத்தமுங்
குழற்கணிந்தகொள்கையொடுகோலந்தோன்றும்
பூங்கணைவேளுருவழித்தபொற்புத்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (கO)

ஆரொருவருள்குவாருள்ளத்துள்ளே
யவ்வுருவாய்நிற்கின்றவருளுந்தோன்றும்
வாருருவப்பூண்முலைநன்மங்கைதன்னை
மகிழ்ந்தொருபால்வைத்துகந்தவடிவுந்தோன்றும

நீருருவக்கடலிலங்கையரக்கர்கோனை
நெறுநெறெனவடர்த்திட்டநிலையுந்தோன்றும்
போருருவக்கூற்றுதைத்தபொற்புத்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனுர்க்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **பூவணநாதர்**, தேவியார் - **மின்னும்பிகையம்மை.**

---

தென்னிலங்கை யிராவணன்றன் சிரமீரைந் துந்துணித்த
மன்னவனு மிராமனுக்கு வரும்பெரும்பா தகந்தீர்க்கும்
பின்னுகரைத் தொழுவதற்கு நினைந்துபோய்ப் பெருமகிழ்ச்சி
துன்னிமனங் கரைந்துருகத் தொழுதெழுந்தார் சொல்லரசர்.

(இ-ள்.) தெற்கின்கண்ணுள்ள இலங்காபுரியில் வாழ்ந்திருந்த இராவணனுடைய பத்துத்தலைகளையும் வெட்டிய க்ஷத்திரியவமிசத்தாளுகிய இராமனுக்கு நேரிட்ட பெரியபாதகத்தைத் தீர்த்தருளிய இராமநாதனை வணங்குவதற்கு நினைவுகொண்டு போய் அதனுல் பெரியமகிழ்ச்சியை யடைந்து மனங்கரைந்துருகும்படி வணங்கியெழுந்தார்; திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (௬0அ)

தேவர்தொழுந் தனிமுதலைத் திருவிரா மேச்சரத்து
மேவியசங் கரனையெதிர் நின்றுவிருப் புறுமொழியாற்
பாவுதிரு நேரிசைகண் முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு நலம்பெருகச் செய்தமர்ந்தார்.

(இ-ள்.) தேவர்களால் வணங்கப்பட்ட ஒப்பற்றமுதற்பெருங் கடவுளாயுள்ளவரும், திருவிராமேச்சரமென்னுந்தலத்தில் வீற்றிருந்தருளும் சங்கரருமாகிய சிவபெருமானை எதிராகநின்று விருப்பந்தருகின்ற இனியசொற்களால் அமைந்த திருநேரிசைகள்முதலிய தமிழ்ப்பதிகங்களைப் பாடியருளி, நன்மையுண்டாகும்பொருட்டு உழவாரத்திருப்பணி செய்து அவ்விடத்திலேயே சிலநாள் வாசஞ்செய்து கொண்டிருந்தார் திருநாவுக்கரசுசுவாமிகள் —எ-று. (௬0௯)

---

திருவிராமேச்சரம்-திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பாசமுங்கழிக்ககில்லாவரக்கரைப்படுத்தேதக்க
வாசமிக்கலர்கள்கொண்டுமேதினிநன்மால்செய்கோயி
னேசமிக்கன்பினுலேநினைமினீர்நின்றுநாளுந்
தேசமிக்கானிருந்ததிருவிராமேச்சரமே.

வரைகளொத்தேயுயர்ந்தமணிமுடியரக்கர்கோனை
விரையமுற்றறவொடுக்கிமீண்டுமால்செய்தகோயில்

திரைகண்முத்தால்வணங்குந்திருவிராமேச்சரத்தை
யுரைகள்பத்தாலுரைப்பாருள்குவாரன்பினாலே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **இராமநாதர்.** தேவியார் - **பர்வதவர்த்தனியம்மை.**
தமிழ்ப்பெயர் - **மலைவளர்காதலி.**

---

அங்குறைந்து கண்ணுதலா ரருள்சூடி யகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த் திருநாட்டிப் புறம்பணைசூழ் நெல்வேலி
செங்கண்விடை யார்மன்னுந் திருக்கானப் பேர்முதலா
வெங்குமிகழ் தானங்க ளெல்லாம்புக் கிறைஞ்சுவார்.

(இ-ள்.) அங்கே சிலநாள் வாசஞ்செய்து சிவபெருமானுடைய திருவருளைப்பெற்று அவ்விடத்தி னின்றும் நீங்கிச் சிறந்த தமிழையுடைய பாண்டிநாட்டில் வயல்கள் சூழ்ந்த திருநெல்வேலியும், சிவந்தகண்களையுடைய ரிஷபத்தை வாகனமாகக் கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கானப்பேரும் முதலாக அந்தநாடெங்குமுள்ள ஸ்தலங்களை யெல்லாம் சென்று வணங்குவாராயினார்.—எ-று. (சுக0)

திருக்கானபேர் என்பது காளையார்கோயில்.

தொழுதுபல வகையாலுஞ் சொற்றொடைவண் டமிழ்பாடி
வழுவிறிருப் பணிசெய்து மனங்கசிவுற் றெப்பொழுது
மொழுகியகண் பொழிபுனலு மோவாது சிவன்றாள்கள்
தழுவியசிந் தையிலுணர்வுந் தங்கியசீர் மையிற்சரித்தார்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்தலங்கள்தோறும் சென்று வணங்கி, திருநேரிசை - திருத்தாண்டகமுதலிய பல வேறுபாட்டாலும் நல்ல சொற்களால் தொடுக்கப்பட்ட வளவிய தமிழ்ப்பதிகங்களைப் பாடி யருளி, குற்றமற்ற உழவாரத் திருப்பணிசெய்து மனங்கசிவுகொண்டு இடைவிடாது பொழிகின்ற ஆனந்தக்கண்ணீரும், எப்பொழுதும் சிவபெருமானுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண் டிருக்கின்ற மனதிலுண்டாகிய மெய்யுணர்ச்சியும் பொருந்திய குணத்தோடு இருந்தார்.—எ-று. (சுகக)

தேம்பொழியுஞ் செந்தமிழ்நாட் டினிலெங்குஞ் சென்றிறைஞ்சிப்
பாம்பணிவார் தமைப்பணிவார் பொன்னிநா டதுவணைந்து
வாம்புனல்சூழ் வளநகர்கள் பின்னும்போய் வணங்கியே
பூம்புகலூர் வந்தடைந்தார் பொய்ப்பாசம் போக்குவார்.

(இ-ள்.) மதுரம் பொருந்திய செவ்விய தமிழையுடைய பாண்டிநாட்டிலுள்ள ஸ்தலங்கள்தோறும்போய் வணங்கிப் பாம்பை ஆபரணமாக அணிந்த சிவபெருமானைப் பணியவேண்டியவராய்ச் சோழநாட்டையடைந்து, தாவிச்செல்கின்ற நீர்வளம்பொருந்திய மற்றைத்திருப்பதிகளையும் பின்னும்போய்த் தொழுது திருப்புகலூருக்குவந்து சேர்ந்தார்; பொய்யாகிய பாசங்களைப் போக்குகின்றவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (சுகஉ)

பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
மையுமனப் பரிவோடு நாடோறுந் திருமுன்றிற்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலுடன்
வைகுநா ளெண்ணிறந்த வண்டமிழ்மா லைகள்மொழிவார்.

(இ-ள்.) பொய்கைகள்சூழ்ந்த திருப்புகலூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கிக் கசிந்துருகுகின்ற மனதில் பதிந்த அன்புடனே தினந்தோறுந் திருக்கோயில் திருவாசலில் கையினால் செய்தற்குரிய திருத்தொண்டுகளைச்செய்து, மிகுந்த ஆசையோடும் வாசம்பண்ணிக்கொண்டிருக்கும் நாளில் அளவில்லாத வளம்பொருந்திய திருப்பதிகங்களைப் பாடுவாராயினர்.—எ-று. (சகந)

நின்றதிருத் தாண்டகமு நீடுதனித் தாண்டகமு
மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்துதிருத் தாண்டகமுங்
கொன்றைமலர்ச் சடையார்பாற் குறைந்தடைந்த நேரிசையும்
துன்றுதனி நேரிசையு முதலான தொடுத்தமைத்தார்.

(இ-ள்.) நின்ற திருத்தாண்டகமும், உயர்ந்த தனித்திருத்தாண்டகமும், பொன்னம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளும்சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்தலங்களைக்கோவையாக எடுத்துத் தோத்திரஞ்செய்கின்ற க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகமும், கொன்றைமலர்மாலையைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானிடத்தில் தமது குறையைச்சொல்லி யடைந்ததைக் குறிக்கும் திருநேரிசையும், மேன்மைபொருந்திய தனித்திருநேரிசையும் முதலாகிய பல திருப்பதிகங்களைப் பாடியருளினர்.—எ-று. (சகச)

ஆருயிரின் திருவிருத்தந் தசபுரா ணத்தடைவும்
பாரபரவும் பாவநா சப்பதிகம் பன்முறையும்
நேர்படநின் றறைகூவுந் திருப்பதிக முதற்பிறவும்
பேரருளின் கடலளிக்கும் பெருமானைப்பாடினார்.

(இ-ள்.) ஆருயிர்த்திருவிருத்தமும், தசபுராணத்தடைவு என்னுந் திருப்பதிகமும் உலகத்திலுள்ளவர்களால் துதிசெய்யத்தக்க பாவநாசத்திருப்பதிகமும், பலதரமும் நேராகநின்று அழைக்கும்பொருளையுடைய சரக்கறைத் திருவிருத்தமும் முதலாகிய மற்றைத்திருப்பதிகங்களும் பெருமைபொருந்திய திருவருட்கடலத் தமக்குத்தந்தருளும் சிவபெருமானைப் பாடினர்.—எ-று (சகரு)

அந்நிலைமை தனிலாண்ட வரசுபணி செய்யவவர்
நன்னிலைமை காட்டுவார் நம்பர்திரு மணிமுன்றில்
தன்னில்வரு முழவார நுழைந்தவிடந் தானெங்கும்
பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்க வருள்செய்தார்.

(இ-ள்.) அப்படிப்பட்ட நிலைமையோடு திருநாவுக்கரசுசுவாமிகள் திருத்தொண்டுசெய்துகொண்டிருக்க, சிவபெருமான் அவருக்குப் பொருளில் சிறிதும் விருப்பமில்லாமையாகிய நல்ல நிலைமையை உலகத்தாருக்குக் காட்டுங் கருத்துடையவராய் அழகிய திருமுற்றத்தில் அவர் திருக்கரத்தில்தாங்கிய உழவாரப்படை புல்லைச்செதுக்கும்போது நுழைந்த விடங்களெங்கும் பொன்னும் நவரத்தினங்களும் பொலிந்து விளங்கியிருக்கும்படி செய்தருளினர்.—எ-று. (சகசு)

செம்பொன்னு நவமணியுஞ் சேணவிளங்க வாங்கெவையு
மும்பர்பிரான் றிருமுன்றி லுருள்பருக்கை யுடனொக்க
வெம்பெருமான் வாகீச ருழவாரத் தினிலேந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினிற் புகவெறிந்தார்.

(இ-ள்.) மாற்றுயர்ந்த பொன்னும், நவரத்தினங்களும் வெகுதூரம்வரை யில் விளங்கித்தோன்ற, அவைகளையெல்லாம் தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானதுகோயில் திருமுற்றத்தில் உருண்டுகிடக்கின்ற பருக்கைக்கற்களோடு ஒப்பாக எமது முதல்வராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் உழவாரப்படையால் எடுத்து, (திருக்கோயிலின்புறத்திலுள்ள) வாசனைவீசுகின்றமிருதுவாகிய தாமரைமலர்களையுடைய தடாகத்தில் விழும்படி எறிந்துவிட்டார்.—எ-று. (௬௧௭)

புல்லோடுங் கல்லோடும் பொன்னோடு மணியோடுஞ்
சொல்லோடும் வேறுபா டிலாநிலைமை துணிந்திருந்த
நல்லோர்முன் றிருப்புகலூர் நாயகனார் திருவருளால்
வில்லோடு நுதன்மடவார் விசும்பூடு வந்திழிந்தார்.

(இ-ள்.) புல்லையும், கல்லையும், பொன்னையும், மணியையும் அவைகளுக்கு அமைந்திருக்கும் சொற்களால் வேறுபாடுணர்ந்தாரேயன்றி, அவைகளின்பொருளில் தமக்கோர்சிறிதும் வேறுபாடில்லாத நிலைமையை நிச்சயித்தறிந்த நல்லவராகிய திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு முன்னே திருப்புகலூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது திருவருளினால் வில்லையொத்த நெற்றியையுடைய தேவரம்பையர்கள் தெய்வலோகத்திலிருந்து வந்து இறங்கினார்கள்.—எ-று. (௬௧௮)

வானகமின் னுக்கொடிகள் வந்திழிந்தா லெனவந்து
தானநிறை சுருதிகளிற் றகுமலங்கா ரத்தன்மை
கானவமு தம்பரக்குங் கனிவாயி லொளிபரப்பப்
பானனெடுங் கண்கள்வெளி பரப்பியிசை பாடுவார்.

(இ-ள்.) ஆகாயத்தில் தோன்றுகின்ற மின்னற்கொடிகள் பூமியில்வந்திறங்கினாற்போலவந்து, உரம் - கண்டமுதலிய தானங்களிலே நிறைந்த சுருதிகளினாலுண்டாகின்ற அழகோடுகூடிய கானமாகிய இசையமுதமானது வெளிப்பட்டு வருகின்ற கொவ்வைக்கனிபோன்ற தந்தங்களின் காந்திவிளங்க, நீலோற்பல மலர்போன்ற நெடியகண்களின் பார்வையை வெளியிற்பரப்பி இசையைப்பாடுவாராயினார்.—எ-று. (௬௧௯)

கற்பகப்பூந் தளிரடிபோங் காமருசா ரிகைசெய்ய
உற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடுங் கைபெயரப்
பொற்புறுமக் கையின்வழிப் பொருகயற்கண் புடைபெயர
வற்புதப்பொற் கொடிநுடங்கி யாடுவபோ லாடினார்.

(இ-ள்.) கற்பகவிருட்சத்தின் பொலிவாகிய தளிர்போன்ற கால்கள் தாம் கற்றுத்தேர்ந்த அழகிய சாரிகைகளைச்செய்ய, செங்கழுநீரின் மெல்லிய அரும்புபோன்ற விரல்கள் சுழலுதலோடு கைகள் அசைய, அழகுபொருந்திய அக்கைகளின்வழியே போர்செய்கின்ற கெண்டைமீன்போன்ற கண்கள் புடைபெயர்ந்து செல்ல, அற்புதமாகிய பொற்கொடியானது துவண்டு ஆடுதல்போல் ஆடினார்கள்.

சாரிகை=வட்டமாகச்சூழ்ந்து ஆடிவருதல். (௬௨௦)

ஆடுவார் பாடுவா ரலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போன்றணைவார் குழலவிழ விடைநுடங்க
வோடுவார் மாரவே ளுடன்மீள்வ ரொளிபெருக
நீடுவார் துகிலசைய நிற்பாரு மாயினார்.

(இ-ள்.) அத்தேவரம்பையர்கள் பரதநாட்டியஞ்செய்பவர்களும், சங்கீதங்களைப் பாடுபவர்களும்,மலர்மழைகளை அவர்மேல் சொரிபவர்களும், கூந்தலவிழ இடைதுவள ஓடுபவர்களும், காமவிகாரத்தோடு திரும்புபவர்களும்,தேககாந்தியுண்டாகப் பின்செல்பர்களும், இடையில் உடுத்த வஸ்திரங்களசைய நிற்பவர்களுமாயினார்கள்.—எ-று. (சுஉக)

இத்தன்மை யரம்பையர்க ளெவ்விதமுஞ் செயல்புரிய
வத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா வன்புருகு
மெய்த்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தஞ்
சித்தநிலை திரியாது செய்பணியின் றலைநின்றார்.

(இ-ள்.) இவ்விதமாகத் தேவரம்பையர்கள் பலவகையாலும் ஆசையைவிளைவிக்கும் நாட்டியமுதலிய தொழில்களைச்செய்ய, சிவபெருமானுடைய திருவடிகளில் தங்கருத்து நீங்காமல் அன்பினால் உருகும் மெய்யுணர்ச்சியையுடைய சிறந்தவச்செல்வராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் தம்முடைய மனவுறுதியானது (அம்மயக்கினால்) சிறிதும் வேறுபடாமல் தாம்செய்யும்திருத்தொண்டின்வழியே நின்றருளினார்.—எ-று. (சுஉஉ)

இம்மாயப் பவத்தொடக்கா மிருவினைக டமைநோக்கி
யும்மாலிங் கென்னகுறை யுடையேன்யான் றிருவாரூ
ரம்மானுக் காளானே னலையேன்மி னீரென்று
பொய்ம்மாயப் பெருங்கடலு ளெனுந்திருத்தாண் டகம்புகன்றார்.

(இ-ள்.) மயக்கத்தையுண்டாக்கும் இந்தப்பிறப்பின் சம்பந்தமாக விருக்கின்ற நல்வினை தீவினைகளை முன்னிலையாகநோக்கி உங்களால் அடையவேண்டிய உபகாரம் எனக்கு என்னவிருக்கின்றது; யான் திருவாரூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்கு அடிமையாயிருக்கின்றேன் ; ஆதலால், நீங்கள் என்னை வருத்தவேண்டாமென்று "பொய்ம்மாயப் பெருங்கடலுள்" என்னும் முதலையுடைய திருத்தாண்டகத்தைப் பாடியருளினார்.—எ-று.

முற்சனனத்திற்செய்த நன்மைதீமைகள் காரணமாக இருவினைகள் விளைதலின் 'இம்மாயப்பவத்தொடக்கா மிருவினைகள்' என்றும், தீவினையேயன்றி நல்வினையும் பிறவிக்கேதுவாகவின் 'இருவினைகடமைநோக்கி' என்றும், சுகதுக்கமிரண்டும் மயக்கேயென்னுந் துணிவால் 'உம்மாலிங்கென்னகுறையுடையேன்' என்றும், நீர் அலைத்தல், அஞ்ஞானிகளிடத்தன்றிச் சிவபெருமானுக் கடிமைபூண்டொழுகும் எம்மைச் சாராவென்னுந் துணிபால் 'திருவாரூர் அம்மானுக்காளானேன்' என்றும், நீர் எம்மை யலைத்தலால் ஒருபயனுமின்றென்பார் 'அலையேன்மின்' என்றுங் கூறினார். குறை - ஈண்டு உபகாரம். (சுஉ௩)

## திருவாரூர்-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்ம்மாயப்பெருங்கடலிற்புலம்பாநின்ற
புண்ணியங்காடீவினைகாடிருவேநீங்க
ளிம்மாயப்பெருங்கடலையரித்துத்தின்பீர்க்
கில்லையேகிடந்துதான்யானேல்வானோர்
தம்மானைத்தலைமகனைத்தண்ணலாரூர்த்
தடங்கடலைத்தொடர்ந்தோரையடங்கச்செய்யு
மெம்மான்றனடித்தொடர்வானுழிதர்கின்றே
னிடையிலேன்கெடுவீர்காளிடறேன்மின்னே. (௧)

ஐம்பெருமாபூதங்காளொருவிர்வேண்டிற்
றொருவிர்வேண்டீரீண்டிவ்வவனியெல்லா
மும்பரமேயும்வசமேயாக்கவல்லீர்க்
கில்லையேனுகர்போகம்யானேல்வானோ
ரும்பருமாயூழியுமாயுலகேழாகி
யொள்ளாரூர்நள்ளமிர்தாம்வள்ளல்வானோர்
தம்பெருமானாய்நின்றவரனைக்காண்பேன்
றடைப்படுவேனோக்கருதித்தருக்கேன்மின்னே. (௨)

சில்லுருவிற்குறியிருத்திநித்தல்பற்றிச்
செழுங்கணாணோக்குமிதுவூக்கமன்று
பல்லுருவிற்றொழில்பூண்டபஞ்சபூதப்
பளகீரும்வசமன்றேபாரோவெல்லாஞ்
சொல்லுருவிற்சுடர்மூன்றாயுருவமூன்றாய்த்
தூநயனமூன்றாகியாண்டவாரூர்
நல்லுருவிற்சிவனடியேயடைவேனும்மா
ணமைப்புண்ணேன்கமைத்துநீர்நடமின்களே. (௩)

உன்னுருவிற்சுவையொளியூறோசைநாற்றத்
துறுப்பினதுகுறிப்பாகுமைவீர்நுங்கண்
மன்னுருவத்தியற்கைகளால்வைப்பீர்க்கையோ
வையகமேபோதாதேயானேல்வானோர்
பொன்னுருவைத்தென்னாரூர்மன்னுகுன்றைப்
புவிக்கெழிலாஞ்சிவக்கொழுந்தைப்புகுந்தென்சிந்தை
தன்னுருவைத்தந்தவனையெந்தைதன்னைத்
தலைப்படுவேன்றுலைப்படுப்பான்றருக்கேன்மின்னே. (௪)

துப்பினைமுன்பற்றறாவிறலேமிக்க
சோர்வுபடுசூட்சியமேசுகமேநீங்க
ளொப்பினையைப்பாவித்திவ்வுலகமெல்லா
முழறுமிதுகுறைமுடிப்பீர்க்கரிதேயென்றன்

வைப்பினைப்பொன்மதிலாரூர்மணியைவைகன்
மணாளனையெம்பெருமானைவானோர் தங்க
ளப்பனைச்செப்படவடைவேனும்மானுனு
மாட்டுணேனோட்டந்தீங்கலேயென்மின்னே. (ரு)

பொங்குமதமானமேயார்வச்செற்றக்
குரோதமேயுலோபமேபொறையேநீங்க
ளுங்கள்பெருமாநிலத்தினெல்லேயெல்லா
முழறுமதுகுறைமுடிப்பீர்க்கரிதேயானே
லங்கமலத்தயனொடுமாலாகிமற்று
மதற்கப்பாலொன்றாகியறியவொண்ணாச்
செங்கனகத்தனிக்குன்றைச்சிவனையாரூர்ச்
செல்வனைச்சேர்வேனும்மாற்செலுத்துணேனே. (சு)

இடர்பாவமெனமிக்கதுக்கவேட்கை
வெறுப்பேயென்றனைவீருமுலகையோடிக்
குடைகின்றீரக்குலங்கள்குலுங்கிநுங்கள்
குறிநின்றதமையாதேயானேல்வானோ
ரடையார்தம்புரமூன்றுமெரிசெய்தானை
யமரர்கடம்பெருமானையரனையாரூ
ருடையானைக்கடுகச்சென்றடைவேனும்மா
லாட்டுணேனோட்டந்தீங்கலேயென்மின்னே. (எ)

விரைந்தாளுநல்குரவேசெல்வேபொல்லா
வெகுட்சியேமகிழ்ச்சியேவெறுப்பேநீங்க
ணிரைந்தோடிமாநிலத்தையரித்துத்தின்பீர்க்
கில்லேயேநுகர்போகம்யானேல்வானோர்
கரைந்தோடவருநஞ்சையமுதுசெய்த
கற்பகத்தைத்தற்பரத்தைத்திருவாரூரிற்
பரஞ்சோதிதனைக்காண்பேன்படேனும்பண்பிற்
பரிந்தோடியோட்டந்துபகட்டேன்மின்னே. (அ)

மூள்வாயதொழிற்பஞ்சேந்திரியவஞ்ச
முகரிகாண்முழுதுமிவ்வுலகையோடி
நாள்வாயுநும்முடையமம்மராணை
நடாத்துகின்றீர்க்கமையாதேயானேல்வானோர்
நீள்வானமுகடதனைத்தாங்கிநின்ற
நெடுந்தூணைப்பாதாளக்கருவையாரூ
ராள்வானைக்கடுகச்சென்றடைவேனும்மா
லாட்டுணேனோட்டந்தீங்கலேயென்மின்னே.

சுருக்கமொடுபெருக்கநிலைநீத்தல்பற்றித்
துப்பறையென்றனைவீரிவ்வுலகையோடிச்
செருக்கிமிகைசெலுத்தியுமசெய்கைவைகல்
செய்கின்றீர்க்கமையாதேயானேன்மிக்க
தருக்கிமிகவரையெடுத்தவரக்கனாகந்
தளரவடியெடுத்தவன்றன்பாடல்கேட்டு
இரக்கமெழுந்தருளியவெம்பெருமான்பாதத்
திடையிலேன்கெடுவீர்காளிடறேன்மின்னே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

மாதரவர் மருங்கணைய வந்தெய்தி மதனவசக்
காதலவர் புரிந்தொழுகுங் கைதவங்கள் செய்திடவும்
பேதமிலா வோருணர்விற் பெரியவரைப் பெயர்விக்க
யாதுமொரு செயலில்லா மையிலிறைஞ்சி யெதிரகன்றார்.

(இ-ள்.) தேவரம்பையர்கள் திருநாவுக்கரசுசுவாமிகளுக்குச் சமீபத்தில் வந்து, மன்மதன்வசத்தில் அகப்படத்தக்க ஆசையை அவர்விரும்பி யொழுகுதற் கேதுவாகிய அநேகவஞ்சனையாகிய செய்கைகளைச் செய்யவும், அவர்களால் சிறிதும் மாறுபடாத ஒப்பற்ற மெய்யுணர்ச்சியையுடைய திருநாவுக்கரசு சுவாமிகளைத் தங்கள் வசப்படுத்தத் தமக்கு யாதொரு செய்கையும் இல்லாமையினால் அவர் எதிரில் நின்று வணங்கி அவ்விடத்தினின்றும் நீங்கினார்கள்.—எ-று.

'பேதமிலாவோருணர்விற் பெரியவர்' என்பதற்கு - சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்தலிற் சிறிதும் பேதித்தலில்லாத பேரறிவினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் என்று கூறினும் பொருந்தும்.

அரமகளிர் திருநாவுக்கரசு சுவாமிகளை மயக்குதற்குரிய செயல்கள் முழுவதும் செய்தும் அதனால் ஒருபயனுமடையாமையின் "யாதுமொரு செயலில்லாமையில்" என்று கூறினார். (௬௨௪)

இந்நிலைமை யுலகேழு மெய்தவறிந் தியல்பேத்த
மன்னியவன் புறுபத்தி வடிவான வாகீசர்
மின்னிலவுஞ் சடையார்த மெய்ப்பொருடா னெய்தவரு
மந்நிலைமை யணித்தாகச் சிலநாளங் கமர்ந்திருந்தார்.

(இ-ள்.) இப்படிப்பட்ட நிலைமையை ஏழுலகத்திலுள்ளவர்களும் நன்றாக அறிந்து அவரது சிறப்பை ஸ்தோத்திரஞ்செய்ய, நிலைபெற்ற அன்பினையே ஒருவடிவமாகவுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் மின்னல்போல விளங்குகின்ற சடைமுடியை யுடைய சிவபெருமானது மெய்ம்மையாகிய திருவருளையடைதற்குரிய காலம் சமீபமாயிருக்கச் சிலநாள் அந்தத் திருப்புகலூரிலேயே வாசஞ்செய்து கொண்டிருந்தார்.—எ-று. (௬௨௫)

மன்னியவந் தக்கரண மருவுதலைப் பாட்டினாற்
றன்னுடைய சரணான தமியேனைப் புகலூர
னென்னையினிச் சேவடிக்கீ ழிருத்திடுமென் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினாற் றிருவிருத்தம் பலமொழிந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற மனம்முதலிய அந்தக்காணங்கள் நான்கும் ஒருமைப் பட்டுத் தியானிக்கும் உறுதிப்பாட்டினால் திருப்புகலூரில் வீற்றிருந்தருளும் சிவ பெருமான் தமக்குப்புகலாக விருக்கின்ற அடியேனாகிய என்னை இனி தமது சிவ ந்த திருவடி நிழலில் சேர்த்தருளுவரென்று தோன்றிய பூர்வஞானத்தின் முயற்சி யினால் பலதிருப்பதிகங்களைப் பாடியருளினார்.—எ-று. (சுஉசு)

மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே னெனப்புகன்று
நண்ணரிய சிவாநந்த ஞானவடி வேயாகி
யண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர சமர்ந்திருந்தார்.

(இ-ள்.) பூலோகமுதலாகிய மூன்றுலகத்திலுள்ளவர்களும் துதிக்கும்பொ ருட்டு நிலைபெற்ற திருத்தாண்டகத்திருப்பதிகத்தை "புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்" என்று இறுதியில்வைத்துப்பாடி, அடைதற்கரிய சிவஞானான ந்தத் திருவுருவமடைந்து, சிவபெருமானுடைய திருவடியின்கீழே வீற்றிருந்தருளி னார் திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று.

சுவர்க்கமத்திய பாதலமென்னு மூவுலகத்திலுள்ளவர்களும் தமது பசுஞா னநீங்கிச்சிவஞானமடைதற்கு இத்தேவாரத்திருப்பதிகங்களே காரணமாயிருத்த லின் 'மண்முதலாமுலகேத்த மன்னுதிருத்தாண்டகம்' என்றும், சிவஞானத்தா னன்றிப் பசுஞானத்தா லடையக்கூடாமையின், 'நண்ணரிய' என்றும், அவ்வா றடைந்தவிடத் துண்டாகு மின்பம் அழியாத பேரின்பமாமென்பார் 'சிவானந்தம்' என்றும், ஆண் டடையும் அப்பேரின்பத்தை மலதேகத்தோடு அனுபவித்தல் கூடாமையின் 'ஞானவுருவேயாகி' என்றும், திருவடிப்பேறே மீளாமுத்தியாத லின் 'சேவடிக்கீழமர்ந்திருந்தார்' என்றுங் கூறினார். (சுஉஎ)

திருப்புகலூர்-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

எண்ணுகேனென்சொல்லியெண்ணுகேனோ
வெம்பெருமான் றிருவடியேயெண்ணினல்லாற்
கண்ணிலேன்மற்றோர்களைகணில்லேன்
கழலடியேகைதொழுதுகாணினல்லா
லொண்ணுளேயொன்பதுவாசல்வைத்தா
யொக்கவடைக்கும்போதுணரமாட்டேன்
புண்ணியாவுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

அங்கமேபூண்டாயனலாடினா
யாதிரையாயானிழலாயானேறூர்ந்தாய்
பங்கமொன்றில்லாதபடர்சடையினாய்
பாம்பொடுதிங்கள்பகைதீர்த்தாண்டாய்

சங்கையொன்றின்றியேதேவர்வேண்டச்
சமுத்திரத்தினஞ்சுண்டுசாவாமூவாச்
சிங்கமேயுன்னடிக்கேபோதுகின்றேன்
திருப்புகலூர்மேவியதேவதேவே. (உ)

பையரவக்கச்சையாய்பால்வெண்ணீற்றாய்
பளிக்குக்குழையினாய்பண்ணாரின்சொன்
மைவிரவுகண்ணாளைப்பாகங்கொண்டாய்
மான்மறிக்கையேந்தினாய்வஞ்சக்கள்வ
ரைவரையுமென்மேற்றரவறுத்தா
யவர்வேண்டுங்காரியமிங்காவதில்லை
பொய்யுரையாதுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (ஙு)

தெருளாதார்மூவெயிலுந்தீயில்வேவச்
சிலைவளைத்துச்செங்கணையாற்செற்றதேவே
மருளாதார்தம்மனத்தில்வாட்டந்தீர்ப்பாய்
மருந்தாய்ப்பிணிதீர்ப்பாய்வானோர்க்கென்றும்
அருளாகியாதியாய்வேதமாகி
யலர்மேலானீர்மேலானாய்ந்துங்காணாப்
பொருளாவாயுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (ச)

நீரேறுசெஞ்சடைமேனிலாவெண்டிங்க
ணீங்காமைவைத்துகந்தநீதியானே
பாரேறுபடுதலையிற்பலிகொள்வானே
பண்டனங்கைப்பார்த்தானேபாவநாசா
காரேறுமுகிலனையகண்டத்தானே
கருங்கைக்களிற்றுரிவைகதறப்போர்த்த
போரேறேயுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே (ரு)

விரிசடையாய்வேதியனேவேதகீதா
விரிபொழில்சூழ்வெண்காட்டாய்மீயச்சூராய்
திரிபுரங்களெரிசெய்ததேவதேவே
திருவாரூர்த்திருமூலத்தானமேயாய்
மருவினியார்மனத்துள்ளாய்மாகாளத்தாய்
வலஞ்சுழியாய்மாமறைக்காட்டெந்தாயென்றும்
புரிசடையாயுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (சா)

தேவார்ந்ததேவனைத்தேவரெல்லாந்
திருவடிமேலலரிட்டுத்தேடிநின்று
நாவார்ந்தமறைபாடிநட்டமாடி
நான்முகனுமிந்திரனுமாலும்போற்றக்
காவார்ந்தபொழிற்சோலைக்கானப்பேற்றாய்
கழுக்குன்றத்துச்சியாய்கடவுளேநின்
பூவார்ந்தபொன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (எ)

நெய்யாடிநின்மலனேநீலகண்டா
நிறைவுடையாய்மறைவல்லாய்நீதியானே
மையாடுகண்மடவாள்பாகத்தானே
மான்றோலுடையாய்மகிழ்ந்துநின்றாய்
கொய்யாடுகூவிளங்கொன்றைமாலை
கொண்டடியேனுனிட்டுக்கூறிநின்று
பொய்யாதசேவடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (அ)

துன்னஞ்சேர்கோவணத்தாய் தூயநீற்றாய்
துதைந்திலங்குவெண்மழுவாள்கையிலேந்தித்
தன்னனையுந்தண்மதியும்பாம்புநீருஞ்
சடைமுடிமேல்வைத்துகந்ததன்மையானே
அன்னநடைமடவாள்பாகத்தானே
யக்காரம்பூண்டானேயாதியானே
பொன்னங்கழலடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (கூ)

ஒருவனையுமல்லாதுணராதுள்ள
முணர்ச்சித்தடுமாற்றத்துள்ளேநின்ற
விருவனையுமூவனையுமென்மேலவி
யில்லாததரவறுத்தாய்க்கில்லேனேலக்
கருவரைசூழ்கானவிலங்கைவேந்தன்
கடுந்தேர்மீதோடாமைக்காலாற்செற்ற
பொருவரையாயுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - அக்கினீசுவரர், தேவியார் - கருந்தார்குழலியம்மை.

வானவர்கண் மலர்மாரி மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த வைந்துபே ரியவொலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினவெல்லா முண்ணிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையிற் சதயமாந் திருநாளில்.

(இ-ள்.) தேவர்கள் பொழியும் புஷ்பவருஷமானது பூமியெங்கும் நிறைந்திருக்க, விண்ணுலகத்தில் ஐவகைப்பட்ட பெருமைபொருந்திய வாத்திய ஒலிகளும் நிறைந்தன; பிரமன்முதல் ஸ்தாவரமீறான ஜீவராசிகளெல்லாம் தம்முள்ளே கொண்ட பெருமகிழ்ச்சியானது நிறைதற்கேதுவாகிய சித்திரைமாதத்தில் வருகின்ற சதயநட்சத்திரத்தில்.—எ-று. (சஉஎ)

சித்திரையிற் சதயமாந்திருநாளில், புண்ணியாவுன்னடிக்கேபோதுகின்றேனெனப்புகன்று, சிவானந்த ஞானவடிவேயாகிச், சேவடிக்கீழமர்ந்திருந்தார், என முன்திருவிருத்தத்தோடு கூட்டிமுடிக்க.

அடியனே னுதரவா லாண்டவர சின்சரிதப்
படியையா னறிந்தபடி பகர்ந்தேனப் பரமுனிவன்
கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது குலச்சிறையார்
முடிவில்புகழ்த் திருத்தொண்டின் முயற்சியினை மொழிகின்றேன்.

(இ-ள்.) அடியேன் மனதில்கொண்ட ஆசையினால் திருநாவுக்கரசுசுவாமிகளுடைதிவ்யசரித்திரத்தின் தன்மையை யான்அறிந்தவளவில் சொல்லினேன்; இனி, அந்தச் சிவஞானச்செல்வராகிய ஸ்ரீவாகீசமுனிவரது வாசனைபொருந்திய தாமரைமலர்போன்ற மிருதுவான சிவந்ததிருவடிகளைக் கைகுவித்து வணங்கிக் குலச்சிறைநாயனாரது அளவில்லாத புகழையுடைய திருத்தொண்டின் முயற்சி தொடங்குவேன்.—எ-று. (சஉக)

'அப்பான்முனிவன்' என்றும் பாடம்.

திருநாவுக்கரசுசுவாமிகள்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம் கசாகக.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குலச்சிறைநாயனார்புராணம்.

பன்னு தொல்புகழ்ப் பாண்டிநன் னாட்டிடைச்
செந்நெ லார்வயற் றீங்கரும் பின்னயற்
றுன்னு பூகப் புறம்பணை சூழ்ந்தது
மன்னு வண்மையி னார்மண மேற்குடி.

(இ-ள்.) புலவர்களால் சிறப்பித்துச்சொல்லப்பட்ட பழமையாகிய புகழை யுடைய நல்லபாண்டிநாட்டில் செந்நெற்பயிர்கள் நிறைந்தவயல்களிலுள்ள மதுரம்பொருந்திய கருப்பம்வேலியினருகில் நெருங்கிய கமுகமரங்களையுடைய மருத நிலத்தால் சூழப்பட்டுள்ளது; நிலைபெற்றகொடையாளர்கள் வாழ்ந்திருக்கும் மணமேற்குடி என்னும் நகரம்.—எ-று. (க)

அப்ப திக்குமு தல்வர்வன் றொண்டர்தா
மொப்ப ரும்பெரு நம்பியென் றோதிய
செப்ப ருஞ்சீர்க் குலச்சிறை யார்திண்மை
வைப்பி னாற்றிருத் தொண்டின் வழாதவர்.

(இ-ள்.) அந்த மணமேற்குடி என்னும் நகரத்திற்குத் தலைவராயுள்ளவர் (யாரென்றால்) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் ஒப்பற்ற "பெருநம்பி" என்று திருத்தொண்டத்தொகையில் அருளிச்செய்த சொல்லுதற்கரிய பெருஞ்சிறப்பினையுடைய குலச்சிறை நாயனாரென்னுந் திருநாமமுடையவர்; உறுதியான அன்பினால் திருத்தொண்டினின்றும் சிறிதும் தவறாதவர்.—எ-று.

வன்றொண்டர் இவரைத் திருத்தொண்டத்தொகையில் பெருநம்பி என்று ஓதிய தாவது "பெருநம்பி குலச்சிறைதன் னடியார்க்கு மடியேன்" என்றருளிச் செய்ததாம். (உ)

கார ணங்கண் ணுதற்கன்ப ரென்னவே
வார மாகி மகிழ்ந்தவர் தாண்மிசை
யாரு மன்பொடு வீழ்ந்தஞ் சலிமுகிழ்த்
தீர நன்மொழி யெய்த விசைத்துளார்.

(இ-ள்.) சிவபெருமானுக்குரிய அடியவர்களே நாம் முத்தியடைதற்குக் காரணமா யுள்ளவர்களென்று, அன்புடையவராய் மனமகிழ்ந்து அவ்வடியார்களுடைய திருவடிகளில் நிறைந்த பேரன்போடு வீழ்ந்துவணங்கி இரண்டுகைகளையுங் கூப்பிநின்று, அன்புபொருந்திய நல்வார்த்தைகளை அவரவர்களுக்கு ஏற்றபடியே சொல்கின்றவர்.—எ-று.

முத்தியடைதற்குக் காரணமாயுள்ளவர்கள் அடியவர்களே யாதலின் அவர்களை யன்போடு வணங்கி இன்மொழி கூறினா ரென்க. அன்றி 'கண்ணுதற்குக் காரணம்அன்பர்' என அனுவயித்து, சிவபெருமானை யடைதற்கு காரணமா யுள்ளவர்கள்அடியார்களே என்று பொருள்கூறினும் பொருந்தும். (ரு)

குறியி னான்கு குலத்தின ராயினு
நெறியி னக்குல நீங்கின ராயினும்
அறிவு சங்கரற் கன்ப ரெனப்பெறிற்
செறிவு றப்பணிந் தேத்திய செய்கையார்.

(இ-ள்.) அந்தணர்-அரசர்-வைசியர்-சூத்திரர் என்னும் குறியினையுடைய நான்கு குலத்தினராயிருந்தாலும்,ஒழுக்கத்தினையுடைய அக்குலவரம்பினின்றும் தவறியவர்களாயிருந்தாலும்,நாம்சிவபெருமானுக்கு அடியவர்களென்னும் நல்லறிவைப் பெறுவாராயின் அவர்களை வணங்கித்துதிக்கின்ற செய்கையையுடையவர்.

உலகர் கொள்ளு நலத்தின ராயினு
மலகி றீமைய ராயினு மம்புலி
யிலகு செஞ்சடை யாரடி யாரெனிற்
றலமு றப்பணிந் தேத்துந் தகைமையார்.

(இ-ள்.) உலகினுள்ளவர்கள் ஒப்புக்கொள்ளும் நல்லொழுக்கமுடையவர்களாயிருந்தாலும், அளவில்லாத கொடுந்தொழிலைச் செய்கின்றவர்களாயிருந்தாலும்,சந்திரன் விளங்குகின்ற சிவந்தசடைமுடியையுடைய சிவபெருமானது அடியவர்களாயிருப்பின், அவர்களைத் தமதுதேகம் பூமியில் பொருந்தும்படி விழுந்து வணங்கித் துதிக்குந் தகுதியையுடையவர்.—எ-று.

முன் 'குறியினான்கு குலத்தினராயினும்' என்ற திருவிருத்தத்தும், இத் திருவிருத்தத்தும் கூறியுள்ள கருத்துக்களை "நலமிலராகநலமதுண்டாக நாடவர் நாடறிகின்ற-குலமிலராகக் குலமதுண்டாகத் தவம்புரிகுலச்சிறை" என்னும் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருப்பதிகத்தானுணர்க. (ல)

பண்பின் மிக்கார் பலரா யணையினும்
உண்ப வேண்டி யொருவ ரணையினும்
எண்பெ ருக்கிய வன்பா லெதிர்கொண்டு
நண்பு கூர்ந்தமு தூட்டு நலத்தினர்.

(இ-ள்.) நற்குணங்களில் சிறந்த அடியார்கள் பலர் கூடிவந்தாலும், போசனபலகாரமுதலியவைகளை உண்ணுதற்கு விரும்பித்தனித்து ஒருவராகவந்தாலும் அளவற்ற பேரன்போடு எதிர்கொண்டழைத்துவந்து,அவர்களிடத்தில் நண்புபாராட்டித் திருவமுது செய்விக்கும் நன்மையையுடையவர்.—எ-று.

இதனை "கணங்களாய் வரினுந் தமியராய் வரினு மடியவர்தங்களைக் கண்டாற் - குணங்கொடுபணியுங் குலச்சிறை" என்னும் மேற்படி சுவாமிகள் திருப்பதிகத்தானுணர்க. (கு)

பூதி கோவணஞ் சாதனத் தாற்பொலிந்
தாதி தேவர்த மஞ்செழுத் தாமவை
யோது நாவணக் கத்தா லுரைப்பவர்
பாத நாளும் பரவிய பண்பினார்.

(இ-ள்.) திருவெண்ணீறு-கோவணம் முதலிய சிவசாதனங்களால் பொலிவடைந்து, முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானுடைய ஸ்ரீபஞ்சாக்ஷர மந்திரத்தைத் தன்னியல்பால் ஓதும் நாவானது வணங்கும் இயல்பானுச்சரிக்கின்ற சிவனடியார்களுடைய திருவடிகளை நாள்தோறும் ஸ்தோத்திரஞ்செய்கின்ற நற்குணத்தையுடையவர்.—எ-று.

இதனை. "நாவணங்கியல்பா மஞ்செழுத்தோதி நல்லராய் நல்லியல் பாகும்-கோவணம் பூதி சாதனங்கண்டாற் றொழுதெழுகுலச்சிறை" என்னும் ஷை சுவாமிகள் திருப்பதிகத்தானுணர்க. (எ)

இன்ன நல்லொழுக் கத்தினா ரீறில்சீர்த்
தென்ன வன்னெடு மாறற்குச் சீர்திகழ்
மன்னு மந்திரி கட்குமே லாகியார்
ஒன்ன லர்ச்செற் றுறுதிக்க ணின்றுளார்.

(இ-ள்.) இத்தன்மையனவாகிய நல்லொழுக்கங்களை யுடையவர்; கெடாத கீர்த்திபொருந்திய நின்றசீர்நெடுமாறநாயனாரென்னும் பாண்டியராசனது நிலைபெற்ற சிறப்பினையுடைய மந்திரிகளுக்கு மேலாகிய முதன்மந்திரியாக வுள்ளவர்; சத்துருக்களை யழித்து இராஜகாரியங்களைக் குறைவறச் செலுத்தும் உறுதியில் நிற்கின்றவர்.—எ-று. (அ)

ஆய செய்கைய ராயவ ராறணி
நாய னார்திருப் பாத நவின்றுளார்
பாய சீர்புனை பாண்டிமா தேவியார்
மேய தொண்டுக்கு மெய்த்தொண்ட ராயினார்.

(இ-ள்.) அத்தன்மையாகிய முதன்மந்திரிப்பட்டம்பெற்று அரசசெலுத்துகின்றவராயிருப்பினும் கங்கைநதியைத் தரித்த சிவபெருமானுடைய திருவடிகளைத் துதித்துக்கொண்டிருக்கு மியல்பினையுடையவர்; உலகமுழுமையும் பரவிய புகழையுடைய மங்கையர்க்கரசியாரது நிலைபெற்ற திருத்தொண்டைக் குறைவற நடத்தும் மெய்த்தொண்டராயுள்ளவர்.—எ-று. (கூ)

புன்ன யத்தரு கந்தர்பொய் நீக்கவுந்
தென்னர் நாடு திருநீறு போற்றவு
மன்னு காழியர் வள்ளலார் பொன்னடி
சென்னி சேர்த்தி மகிழ்ந்த சிறப்பினார்.

(இ-ள்.) பயனற்ற இழிவாகிய ஞாயத்தையுடைய சமணர்கள்மேற்கொண் டொழுகும் பொய்ச்சமயத்தை யழிக்கவும், பாண்டிநாட்டி லுள்ளவர்கள் திருநீற்

றைத்தரித்துக்கொள்ளவும்,நிலைபெற்ற சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுடைய அழகிய திருவடிகளைச் சிரசின்மேல்சேர்த்து,அதனால் மகிழ்வடைந்திருக்கும் சிறப்பினையுடையவர்.—எ-று. (௧0)

வாதிற் றோற்ற வமணரை வன்கழுத்
தீது நீங்கிட வேற்றுவித் தார்திறம்
யாது போற்றினேன் மேலினி யேத்துகேன்
வேத நீதி மிழலைக் குறும்பர்தாள்

(இ-ள்.) திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளோடு தாங்கள்செய்யும் வாதத்தில் தோல்வியடைந்த சமணர்களை வலிமைபொருந்திய கழுமுனையில் உலகத்தார் தீமையினின்றும்நீங்கும்படி ஏற்றுவித்த குலச்சிறைநாயனருடைய அன்பின் பெருமையைக்குறித்து எனக்குத்துதிக்குந்திறமில்லாமையால் சிறிது துதித்தேன். இனி, வேதத்திற்கூறும் விதிப்படிநடந்த பெருமிழலைக் குறும்பநாயனருடைய திருவடிகளைத் துதிக்கத் தொடங்குகின்றேன்.—எ-று.

ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளையே உபாசனமூர்த்தியாகக்கொண்டு திருவைந்தெழுத்தை யோதிச் சிவயோகம்புரிந்து அட்டமாசித்திகளும் கைவரப்பெற்றுள்ளவ ரென்பதுதோன்ற 'வேதநீதி மிழலைக்குறும்பர்' என்று கூறினர். (௧௧)

குலச்சிறைநாயனர்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம் ௧௭௪0.



பெருமிழலைக்குறும்பநாயனார்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பெருமிழலைக்குறும்பநாயனார் புராணம்.

சூத நெருங்கு குலைத்தெங்கு பலவு பூகஞ் சூழ்புடைத்தாய்
வீதி தோறு நீற்றினொளி விரிய மேவி விளங்குபதி
நீதி வழுவா நெறியினராய் நிலவுங் குடியா னெடுநிலத்து
மீது விளங்குந் தொன்மையது மிழலை நாட்டுப் பெருமிழலை.

(இ-ள்.) மாமரங்களும், நெருங்கிய குலைகளையுடைய தென்னமரங்களும், பலாமரங்களும், கமுகமரங்களும் சூழ்ந்திருக்கும் பக்கங்களையுடையதாய், வீதிகள் தோறும் திருவெண்ணீற்றின் பிரகாசமானது விரியும்படிபெற்று விளங்குகின்ற நகரமானது, தங்கள் தங்களுக்குரிய குலதருமத்தில் சிறிதும் தவறாத முறைமையினையுடையவர்களாய் விளங்குகின்ற குடிகளால் நீண்ட உலகத்தில் விளங்கியிருக்கும் பழமையுடையது; (அது யாதென்றால்) மிழலைநாட்டிலுள்ள பெருமிழலையென்னு மூராகும்.—எ-று. (க)

அன்ன தொன்மைத் திருப்பதிக்க ணதிபர் மிழலைக் குறும்பனார்
சென்னி மதியம் வைத்தவர்த மடியார்க் கான செய்பணிகள்
இன்ன வண்ண மென்றவர்தா மூரையா முன்ன மெதிரேற்று
முன்ன முவந்து செய்வாராய் முதிரு மறிவின் பயன்கொள்வார்.

(இ-ள்.) அப்படிப்பட்ட பழமையாகிய க்ஷேத்திரத்தில் தலைவராயுள்ள பெருமிழலைக்குறும்பநாயனா ரென்பவர் முடியில் சந்திரனைத்தரித்த சிவபெருமானுடைய அடியார்களுக்குச் செய்யவேண்டிய திருத்தொண்டுகளை இவ்வாறு செய்யவேண்டுமென்று அவர்கள் சொல்வதற்குமுன்னமே எதிர்கொண்டு முன்னேமனமகிழ்ந்து செய்கின்றவராய், முதிர்ந்த பேரறிவின் பயனாகிய சிவபத்தியைக் கைக்கொள்கின்றவர்.—எ-று. (உ)

தொண்டர் பலரும் வந்தீண்டி யுண்ணத் தொலையா வமுதூட்டிக்
கொண்டு செல்ல நிதிய முகந்து கொடுத்துக் குறைந்தடைவார்
வண்டு மருவுங் குழலுமையாள் கேள்வன் செய்ய தாளென்னும்
புண்ட ரீக மகமலரில் வைத்துப் போற்றும் பொற்பினார்.

(இ-ள்.) சிவனடியார்கள் பலரும் கூட்டமாகக் கூடிவந்து போசனஞ் செய்யக் குறைவில்லாத திருவமுதையுண்பித்து, அவர்கள் எடுத்துக்கொண்டு போகும்படி மிகுந்த திரவியங்களை வாரிக்கொடுத்து, அவர்களுக்குத் தாழ்ந்து நடக்கின்றவர்; தேனுண்ணும்படி வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமா

தேவியாருக்கு நாயகராகிய சிவபெருமானது சிவந்த திருவடிகளாகிய தாமரை மலர்களைத் தமது இதயாரவிந்தத்தில் வைத்துத் தியானிக்கின்ற பெருங்குணத்தை யுடையவர்.—எ-று.

பொற்பு=அழகு. (௩)

இத்தன் மையராய் நிகழுநா ளெல்லையில்லாத் திருத்தொண் டின்
மெய்த்தன் மையினை யுலகறிய விதியால் வணங்கி மெய்யடியார்
சித்த நிலவுந் திருத்தொண்டத் தொகைபா டியநம் பியைப்பணிந்து
நித்த னருள்பெற் றவர்பாத நினைக்கு நியமத் தலைநின்றார்.

(இ-ள்.) பெருமிழலைக்குறும்பநாயனார் இத்தன்மையினை யுடையவராய் ஒழுகும் நாள்களில், அளவில்லாத திருத்தொண்டினது உண்மைத்தன்மையை உலகத்தாரறியும்படி விதிப்படியே வணங்கி மெய்யடியார்களுடைய திருவுள்ளத்தில் விளங்குகின்ற திருத்தொண்டத்தொகையென்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை வணங்கி, சிவபெருமானது திருவருளைப்பெற்று, அச் சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருவடிகளைத் தியானிக்கின்ற நியமத்தில் முதன்மையாக நிற்கின்றவர்.—எ-று. (௪)

மையார் தடங்கட் பரவையார் மணவா ளன்றன் மலர்க்கழல்கள்
கையாற் றொழுது வாய்வாழ்த்தி மனத்தா னினைக்குங் கடப்பாட்டிற்
செய்யாள் கோனு நான்முகனு மறியாச் செம்பொற் றாளிணைக்கீ
ழுய்வான் சேர வுற்றநெறி யிதுவே யென்றன் பினிலுய்த்தார்.

(இ-ள்.) மைதீட்டிய விசாலமாகிய கண்களையுடைய பரவைநாச்சியாருக்கு நாயகராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது தாமரைமலர்போன்ற திருவடிகளைக் கைகளால் கூப்பித்தொழுது, வாயினால் துதித்து, மனதினால் தியானிக்கின்ற முறைமையில், இலட்சுமிநாயகனாகிய விஷ்ணுவும், பிரமனும் தேடியறியாத சிவபெருமானது சிவந்த பொன்போன்ற இரண்டு திருவடிகளின்கீழ் நாம்பிழைக்கும் பொருட்டுச் சேர்தற்கு உறுதியானமார்க்கம் இதுவேயென்று அன்போடு மனதைச்செலுத்திவந்தார்.—எ-று. (௫)

நாளு நம்பி யாரூரர் நாம நவின்ற நலத்தாலே
யாளும் படியா லணிமாதி சித்தி யான வணைந்ததற்பின்
மூளுங் காத லுடன்பெருக முதல்வர் நாமத் தஞ்செழுத்துங்
கேளும் பொருளு முணர்வுமாம் பரிசு வாய்பக் கெழுமினார்.

(இ-ள்.) நாள்தோறும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருநாமத்தை உச்சரித்துவந்த நன்மையினால் தாம் ஆளும்படி அணிமாமுதலிய அஷ்டமாசித்திகளும் தமக்குப் பலிதமானபின்பு, மிகுந்தபேரன்புண்டாகச் சிவபெருமானது ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையும், உறவும் - பொருளும் - விவேகமும் இவைகளேயென்னும் தன்மைவாய்க்கும்படி உச்சரித்துக்கொண்டுவந்தார்.—எ-று.

அணிமாமுதலிய எண்சித்திகளும் தங்கட்டளைவழியே நடக்கப்பெற்ற பேரருளாளராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருநாமத்தை யுச்சரித்தவிசேடத்தால், அவை எளிதாய்த் தம்மை யடையப்பெற்றனரென்பதுதோன்ற "நாளு

நம்பியாரூரர் நாமநவின்றநலத்தாலே - யாளும்படியாலணிமாதி சித்தியானவணைந்ததற்பின் " என்று கூறினர். அணிமாமுதலிய எண்சித்திகளாவன :—அணிமா - மகிமா- இலகிமா - கரிமா - பிராப்தி - பிராகாமியம் - ஈத்துவம் - வசித்துவம் என்பனவாம். அவற்றுள், அணிமா - ஆன்மாப்போலாதல்; மகிமா- மகத்தாதல் ; இலகிமா - இலகுத்துவமாதல் ; பிராப்தி - வேண்டுவனவடைதல்; பிராகாமியம் - நிறையுளனுதல்; ஈசத்துவம்- ஆட்சியுளனுதல்; வசித்துவம் - எல்லாம் தன்வசமாக் கவல்லனுதல். இதனை,

திருவிளையாடற்புராணம்.

" அறவுஞ்சிறியவுயிர்தொறுந்தான்பரமகாட்டையணுவாய்ச்சென்
றுறையுஞ்சிறுமையணிமாவாமுவரிஞாலமுதன்மேலென்
றறையுஞ்சிவாந்தமாறாறுமுள்ளும்புறனுமகலாதே
நிறையும்பெருமைதனையன்றோமகிமாவென்னுநிரம்பியநூல்.

இலகுமேருபாரம்போலிருக்கும்யோகிதனையெடுத்தா
லிலகுவானதூலமெனவிருப்பதிலகிமாவாகும்
இலகுவானபரவணுப்போலிருக்கும்யோகிதனையெடுத்தா
லிலகுமேருபாரமெனவிருப்பதன்றோகரிமாவாம்.

பிலத்திலிருந்தோனயனுலகிற்புகுதன்மீண்டும்பிலமடைதல்
பலத்தின்மிகுந்தபிராத்தியதாம்பரகாயத்தினண்ணுதல்வான்
புலத்தினியங்கலிச்சித்தபோகமனைத்துந்தானிருக்குந்
தலத்தினிருந்தபடிவருதல்பிராகாமியமாந்தவக்கொடியீர்.

விண்ணிலிரவிதன்னுடம்பின்வெயிலாலனைத்தும்விளங்குதல்போல்
மண்ணிலுளவாம்பொருள்பலவுங்காலமூன்றும்வானத்தின்
கண்ணிலுளவாம்பொருளுந்தன்காயத்தொளியாலிருந்தறித
லெண்ணிலிதுவுமறையொருசார்பிராகாமியமென்றியம்புமால்.

ஈசனெனமுத்தொழிலுந்தன்னிச்சைவழிசெய்தெழுபுரவித்
தேசன்முதற்கோள்பணிகேட்பத்திகழ்வதீசத்துவமாகும்
பூசலவுணர்புள்விலங்குபூதமனிதர்முதலுலகும்
வாசவாதியெண்மருந்தன்வசமாக்கொள்கைவசித்துவமாம்."—என வருதலா லுணர்க. (சு)

இன்ன வாறே யிவரொழுக வேறு கொடிமே லுயர்த்தவர்தம்
பொன்னின் கழல்கண் மண்ணின்மேற் பொருந்த வந்து வழக்குனை
மன்னு மோலை யவைமுன்பு காட்டி யாண்ட வன்றொண்டர் [த்து
சென்னி மதிதோய் மாடமலி கொடுங்கோ ளூரைச் சேர்வுற்றார்.

(இ-ள்.) இவ்வாறு இப் பெருமிழலைக்குறும்பநாயனார் நடந்துகொண்டுவர, ரிஷபக்கொடியை யுயர்த்திய சிவபெருமான் (பிராமணத் திருவுருவங்கொண்டு) தமது பொன்போன்றதிருவடிகள் பூமியின்மேல் பொருந்தும்படிவந்து (திருமணத்தைத்தடுத்து) வல்வழக்குப்பேசி,நிலைபெற்ற மூறியோலையைச் சபையாருக்கு முன்னேகாட்டித் தடுத்தாட்கொண்ட ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சிகரங்களில் சந்திரன் தவழ்கின்ற மாடங்கள் நிறைந்த கொடுங்கோளூரை யடைந்தார்.—எ-று. (எ)

அஞ்சைக் களத்து நஞ்சுண்ட வமுதைப் பரவி யணைவுறுவார்
செஞ்சொற் றமிழ்மா லைகண்மொழியத் தேவர் பெருமா னருளாலே
மஞ்சிற் றிகழும் வடகயிலைப் பொருப்பி லெய்த வரும்வாழ்வு
நெஞ்சிற் றெளிய விங்குணர்ந்தார் நீடு மிழலைக் குறும்பனார்.

(இ-ள்.) திருவஞ்சைக்களமென்னும் ஸ்தலத்தில் வீற்றிருந்தருளும் விஷத்தையுண்டருளிய சிவபெருமானைத் துதித்து அடைகின்றவராய்ச் செவ்வியசொற்களமைந்த திருப்பதிகங்களை அருளிச்செய்ய, தேவர்களுக்குநாயகராகிய சிவபெருமானுடைய திருவருளினால், மேகங்கள்தவழ்கின்ற உத்தரகயிலாசகிரியை அடையும்படி அச்சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குக் கிடைத்த பெருவாழ்வானது தமது திருவுள்ளத்தில் நன்றாகவிளங்கும்படி தாமிருக்கும் இடத்திலேயே யோகப்பிரத்தியட்சத்தா லறிந்தவரானார்; உயர்ந்த பெருமிழலைக்குறும்பநாயனார்.—எ-று. (அ)

மண்ணிற் றிகழுந் திருநாவ லூரில் வந்த வன்றொண்டர்
நண்ணற் கரிய திருக்கயிலை நாளை யெய்த நான்பிரிந்து
கண்ணிற் கரிய மணிகழிய வாழ்வார் போல வாழேனென்
றெண்ணிச் சிவன்றா ளின்றேசென் றடைவன் யோகத்தாலென்பார்

(இ-ள்.) உலகத்தில் சிறந்து விளங்குகின்ற திருநாவலூரில் அவதரித்தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், யாவரும் அடைதற்கருமையாகிய திருக்கயிலாசகிரியை நாளைக்கு அடைவாராயிருக்க, நான் அவரைவிட்டுப்பிரிந்து, கண்ணினுள்ளிருக்கின்ற கருமணியாகிய பார்வையானது நீங்க, உயிர்வாழ்கின்ற குருடரைப்போல இங்கு அடியேன் வாழ்ந்திருக்கமாட்டேனென்று நினைத்து, இன்றைக்கே யோகத்தினால் சிவபெருமானுடைய திருவடிகளை அடைவேனென்னுங் கருத்துடையவராய்.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (கூ)

நாலு கரணங் களுமொன்றா நல்ல வறிவு மேற்கொண்டு
காலும் பிரம நாடிவழிக் கருத்துச் செலுத்தக் கபாலநடு
ஏல வேமுன் பயின்றநெறி யெடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாத மடைவார் கயிலை முன்னடைந்தார்.

(இ-ள்.) மனம் - புத்தி - சித்தம் - அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கும் இந்திரியங்களின் வழியே செல்லாமல் ஒன்றுபட்டுச் சிறந்த அறிவை மேற்படுத்தி, ஒளிவீசுகின்ற பிரமநாடியின்வழியே சித்தம் செல்லும்படி செய்ய, கபாலத்தின் நடுவில் பொருந்தும்படிமுன் தாம்பழகிய மார்க்கத்தில் உச்சரிப்பாக எடுத்த பிரணவமானது பிரமரந்திரவாயிலைத்திறக்க, அப்பிரணவமந்திரத்திற்குத் தலைவராகியசிவபெருமானதுதிருவடிகளை அடையுங்கருத்துடையவராய்த் திருக்கயிலாயத்தை அச்சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு முன்னே அடைந்தார். பெருமிழலைக் குறும்பநாயனார்.—எ-று.

ஒன்றா - செய்யா என்னும் வாய்பாட்டுவினையெச்சம். (௧௦)

பயிலைச் செறிந்த யோகத்தாற் பரவை கேள்வன் பாதமுறக்
கயிலைப் பொருப்ப ரடியடைந்த மிழலைக் குறும்பர் கழல்வணங்கி
மயிலைப் புறங்கொண் மென்சாயன் மகளிர் கிளவி யாழினொடுங்
குயிலைப் பொருவுங் காரைக்கா லம்மை பெருமை கூறுவாம்.

(இ-ள்.) தாம் நாள்தோறும் அப்பியாசம்பண்ணுதலால் தம்மையடைந்த யோகத்தினால், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுடையதிருவடிகளைப்பொருந்தும்படி திருக்கயிலாயகிரிக்கு நாதராகிய சிவபெருமானது திருவடிகளையடைந்த பெருமிழலைக்குறும்பநாயனாருடைய திருவடிகளை வணங்கி, மயிலையும்வெல்லுகின்ற மிருதுவாகிய சாயலையுடைய மாதர்களது சொற்கள் யாழோசையையும் குயிலோசையையும் ஒத்திருக்கும் காரைக்கால்என்னுமூரில் அவதரித்தருளிய அம்மையாருடைய பெருமையைச் சொல்லத்தொடங்குவோம்.—எ-று. (கக)

பெருமிழலைக்குறும்பநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ_ திருவிருத்தம் கஎஉக.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காரைக்காலம்மையார் புராணம்.

மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில்
ஊனமில்சீர்ப் பெருவணிகர் குடிதுவன்றி யோங்குபதி
கூனல்வளை திரைசுமந்து கொண்டேக மண்டுகழிக்
கானன்மிசை யுலவுவளம் பெருகுதிருக் காரைக்கால்.

(இ-ள்.) பெருமைபொருந்திய தருமமார்க்கத்தில் நின்று, சத்தியவார்த்தையில் சிறிதும் தவறுதலில்லாத சிறப்பினையுடைய பெரிய வணிகர்களது குடிகள் நிறைந்துவிளங்குகின்ற நகரமானது, அலைகள் வளைந்தசங்குகளை வாரிக்கொண்டுகரையில் செல்ல, அதனால், அச்சங்குகள் நீர்நிறைந்த கழிக்கரையின்மேல் உலாவுகின்ற வளப்பமிகுந்த அழகிய காரைக்காலாகும்.—எ-று. (க)

வங்கமலி கடற்காரைக் காலின்கண் வாழ்வணிகர்
தங்கள்குலத் தலைவனார் தனதத்த னார்தவத்தால்
அங்கவர்பாற் றிருமடந்தை யவதரித்தா ளெனவந்து
பொங்கியபே ரழகுமிகப் புனிதவதி யார்பிறந்தார்.

(இ-ள்.) கப்பல்கள் மிகுதியாக நிறைந்த கடற்கரையிலுள்ள காரைக்காலென்னும் நகரத்தில்வாழ்கின்ற வணிகர்கள் குலத்துக்குத்தலைவராகிய தனதத்தனொன்பவர்செய்த தபோபலத்தினால், அவரிடத்தில் இலட்சுமிதேவியே புத்திரியாகவந்து அவதரித்தாளென்று சொல்லும்படி, ஒப்பற்ற பேரழகோடும் புனிதவதியாரென்னும் அம்மையார் திருவவதாரஞ்செய்தருளினார்.—எ-று. (உ)

வணிகர்பெருங் குலம்விளங்க வந்துபிறந் தருளியபின்
அணிகிளர்மெல் லடிதளர்வுற் றசையுநடைப் பருவத்தே
பணியணிவார் கழற்கடிமை பழகிவரும் பாங்குபெறத்
தணிவில்பெரு மனக்காதல் ததும்பவரு மொழிபயின்றார்.

(இ-ள்.) வணிகர்களுடைய பெருமைதங்கிய குலமானது உலகத்தில் சிறந்தோங்கும்படி வந்து திருவவதாரஞ்செய்தபின்பு, அழகுவிளங்குகின்ற மிருதுவாகிய பாதங்கள்தள்ளாடி அசைந்துவைக்கும் தளர்நடைப்பருவத்தில், பாம்பை ஆபரணமாகஅணிந்த சிவபெருமானுடைய திருவடிகளுக்குத்திருத்தொண்டுசெய்யும் பழக்கம் மிகுதியும் உண்டாகக் குறைவில்லாத மனதில் மிகுந்த விருப்பமானது ததும்பும்படி வருகின்ற மழலைவார்த்தையைப் பழகினார்.—எ-று. (ங)

பல்பெருநற் கிளையுவப்பப் பயில்பருவச் சிறப்பெல்லாஞ்
செல்வமிகுந் தாதையார் திருப்பெருகுஞ் செயல்புரிய



காரைக்காலம்மையார்-

மல்குபெரும் பாராட்டின் வளர்கின்றார் விடையவர்பால்
அல்கியவன் புடனழகின் கொழுந்தெழுவ தெனவளர்வார்.

(இ-ள்.) பலவாகிய பெருமைபொருந்திய நல்ல சுற்றத்தார்கள் களிப்படையும்வண்ணம் வருகின்றஅவ்வப்பருவங்கள்தோறும் செய்யவேண்டிய சிறப்புக்களையெல்லாம் செல்வத்தால்மிகுந்த தந்தையாராகிய தனதத்தனென்பவர் அதிகசிறப்போடு செய்ய, (தாய்மார்கள்) மிகுந்த அருமைபாராட்டி வளர்ப்பதனால் வளர்கின்ற அவ்வம்மையார் ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமானிடத்தில் நிலைபெற்ற பேரன்போடு அழகின்கொழுந்தானது வளர்வதுபோல வளர்கின்றவராயினார்.—எ-று. (௪)

வண்டல்பயில் வனவெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை
யண்டர்பிரான் றிருவார்த்தை யணையவரு வனபயின்று
தொண்டர்வரிற் றொழுதுதா தியர்போற்றத் துணைமுலைகள்
கொண்டுநுசுப் பொதுங்குபதக் கொள்கையினிற் குறுகினார்.

(இ-ள்.) விளையாடும்பொழுது பயிலும்வார்த்தைகளெல்லாம் வளர்கின்ற இளம்பிறையைத்தரித்த சடைமுடியையுடைய தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருநாமங்களாகவே பொருந்த உச்சரித்து,அடியார்கள்வந்தால் அவர்களை எதிர்கொண்டு வணங்கிச்செவிலித்தாய்மார்கள் பாதுகாத்துவளர்க்க இரண்டுஸ்தனங்களைத் தாங்கி அதனால் இடைதுவளும் பருவத்தையடைந்தார்.—எ-று.

'வண்டல்பயில் வனமெல்லாம்' என்று பாடமாயின், விளையாடல் புரியும் சோலைகளிலெல்லாம் என்று பொருள்கொள்க. (ரு)

நல்லவென வுறுப்புநூ லவருரைக்கு நலநிரம்பி
மல்குபெரு வனப்புமீக் கூரவரு மாட்சியினால்
இல்லிகவாப் பருவத்தி லிவர்கண்மர பினுக்கேற்குந்
தொல்குலத்து வணிகர்மகட் பேசுதற்குத் தொடங்குவார்.

(இ-ள்.) தேகங்களின் உறுப்புக்கள் இவ்வாறிருப்பின் நன்மையென்றுசொல்லும் சாமுத்திரிக விலக்கணமுணர்ந்த புலவர்கள்கூறும் நலமெல்லாம் நிறைந்து, மிகுந்த பேரழகானது அதிகரிக்க மாட்சிமையோடு வீட்டினின்றும் வெளியே புறப்படாத மங்கைப்பருவத்தில்,இந்த வணிகர்களுடைய குலத்துக்கு ஒத்த பழைமையாகிய குடிப்பிறப்பினையுடைய வணிகர்கள் அந்தப்புதல்வியை விவாகம்பேசுவதற்கு முயற்சிசெய்தார்கள்.—எ-று.

நல்லவென வுறுப்புநூலவ ருரைக்கு நலமாவன:— நீண்டு நுனி பிளவுபடாமல் தழைத்து மேகம்போலக் கறுத்து நுனியில் வளைந்து இயற்கைமணம்வீசி இடைவெளியின்றி நெருங்கி மெத்தென்றிருக்கும்கூந்தலும், யானைமத்தகம்போலத் திரண்டு உயர்ந்த தலையும், பூர்வபக்ஷத்து எட்டாநாள் சந்திரன்போன்று இடையில் மயிரும் நரம்புமின்றிச் செழித்து மூன்றுவிரலளவு அகன்ற நெற்றியும், கடை சிவந்து புறத்தில் பால்போல் வெளுத்து நடுவிலுள்ள கருமணி மிகக் கறுத்து அழகமைந்து இமையில் கருமயிரமைந்தகண்களும், வளைந்த வில்லையொத்த புருவமும், இரண்டு தொளையும் தம்மிலொத்து உருட்சியடைந்து எள்ளின் பூப்போன்ற நாசியும், வள்ளைத்தண்டுபோலத் தாழ்ந்து மடற்சுழிகள் நன்கமைந்த காதுகளும், கண்ணாடிமண்டிலம்போலச் செழித்துவிளங்கும் கன்னமும், திரண்டு

இருபக்கமுங் குவிந்து சிவந்து இரேகை யொழுங்காகிய இதழும், மேலுங் கீழுமாகிய இரண்டுவரிசையும் இடைவெளியின்றிப் பால்போல்வெளுத்த முப்பத்திரண்டு பற்களும், தடிப்பின்றிச் சிவந்த நாவும்,வட்டமாய் இரண்டங்குல வளவினையுடையமோவாயும், தாமரைமலர்போல மணமுடையதாகிப் பூரணச்சந்திரன்போன்ற முகமும், நான்கு விரலளவாகத் திரண்டு மூன்று இரேகை பொருந்திய கழுத்தும், பதினெட்டு விரலளவகன்று மயிரும் நரம்பு மொழிந்து உயர்ந்த மார்பும், மயிரில்லாமல் எலும்பு தோன்றாமல் தசைந்த தோள்களும், நீண்டு உருண்டு கணுக்கள்பெற்று முறையே சிறுத்தகைகளும், சிவந்து உருண்டு சரசரப்பற்ற நகமும், மிருதுவாகிச் சிவந்து இடைவெளியகன்று நடுவிலுயர்ந்து நல்லஇரேகைகள் பொருந்திய உள்ளங்கையும், கடினமாய்த் தசைந்து வட்டவடிவாய் அரும்புபோன்று இரண்டு மொத்து உயர்ந்துநெருங்கிய ஸ்தனங்களும், சிறுரோமவரிசைபெற்றுப் பக்கத்தில் மயிர்நரம்பற்ற வயிறும், வலஞ்சுழித்து ஆழ்ந்த நாபியும், மிகவும் சிறுத்த இடையும், இடையே மயிர்நரம்பற்று இருபத்துநான்கு விரலளவாகி வட்டமாய்ச் சிறுத்து யானைமத்தகமும் ஆமைமுதுகும்போன்ற நிதம்பமும்,மயிரொழும் பகன்று யானைத்துதிக்கைபோன்ற துடையும், எலும்பு தோன்றாமல் வட்டமாகிய முழந்தாளும், மயிர்நரம்பு தோன்றாமல் இணையொத்து உருண்டு சிறுத்த கணைக்காலும், மயிரொழும்பு தோன்றாமல் ஆமைமுதுகுபோலத் திரண்டபுறவடியும், ஒழுங்காகத் திரண்டு வெண்ணகம்பொருந்திய கால்விரலும், மிருதுவும் சமமுமான உள்ளங்காலும், மாந்தளிர்போலச் சிவந்து எந்நாளும் வெயர்வுதோன்றாமல் மெத்தென்றிருக்குந்திருமேனியும், பாதிரி - குவளை - தாமரை - மல்லிகை - சண்பகம் இவற்றின் மணம்போன்ற தேகமணமும், குயில் - கிளி - யாழ்போன்ற சொல்லும் ஆம். இத்தகைய அவயவவிலக்கணங்களைக் கேசாதிபாதாந்தமாக அமையப்பெற்று விளங்கியிருந்தனர்; எமது அன்னையாராகிய புனிதவதியாரெனவறிக. (சு)

நீடியசீர்க் கடனாகை நிதிபதியென் றுலகின்கட்
பாடுபெறு புகழ்வணிகன் பயந்தகுல மைந்தனுக்குத்
தேடவருந் திருமரபிற் சேயிழையை மகட்பேச
மாடமலி காரைக்கால் வளநகரின் வரவிட்டார்.

(இ-ள்.) மிகுந்த சிறப்பினையுடைய கடற்கரையிலுள்ள நாகபட்டணத்தில் நிதிபதியென்னும் பெயரோடு உலகத்தில் பெருமைபெற்ற கீர்த்தியையுடைய ஒரு வணிகன்பெற்ற குலத்திற்பிறந்த பரமதத்தனென்னும் புதல்வனுக்குத் தேடுதற்கரிய நல்லமரபில் அவதரித்த புனிதவதியாரைக் கலியாணஞ்செய்விக்கக் கேட்கும்படி மாடங்கள்நிறைந்த காரைக்காலென்னும் வளம்பொருந்திய நகரத்தில் மனிதர்களை அனுப்புவித்தார்கள்.—எ-று. (எ)

வந்தமூ தறிவோர்கண் மணங்குறித்த மனைபுகுந்து
தந்தையாந் தனதத்தன் றனைநோக்கி நீபயந்த
பைந்தொடியை நிதிபதிமைந் தன்பரம தத்தனுக்கு
முந்தைமர பினுக்கேற்கு முறைமைமணம் புரிகென்றார்.

(இ-ள்.) பெண்கேட்கவந்த பேரறிவினையுடைய வணிகர்கள், தாம் மணம் பேசக்குறித்து வந்த அவர்வீட்டிற்குப்போய்ப் பெண்ணைப்பெற்ற தந்தையாகிய

தனதத்தனைப்பார்த்து, நீர்பெற்ற புத்திரியை நிதிபதியினுடைய புத்திரனாகிய பரமதத்தனுக்குப் பழைமையாகிய நமது மரபினுக்கு ஏற்ற முறைமைப்படியே கலியாணஞ்செய்து கொடுமென்று கேட்டார்கள்.—எ-று. (அ)

மற்றவனு முறைமையினான் மணமிசைந்து செலவிடச்சென்
றுற்றவர்க ளுரைகேட்ட நிதிபதியு முயர்சிறப்புப்
பெற்றனன்போ லுவந்துதனிப் பெருமகற்குத் திருமலியுஞ்
சுற்றமுடன் களிகூர்ந்து வதுவைவினைத் தொழில்பூண்டான்

(இ-ள்.) அந்தத் தனதத்தனும் முறைமைப்படியே தன் மகளைக் கலியாணஞ்செய்துகொடுக்கச் சம்மதித்து வந்தவர்களை யனுப்ப,அவர்கள்போய்ப் பெண்பேசிவந்த சங்கதியைச் சொல்லக்கேட்ட நிதிபதியென்பவனும் உயர்ந்த சிறப்பைப்பெற்றவனைப்போல மனமகிழ்ந்து,ஒப்பற்ற தன்பெரிய புதல்வனுக்குச் செல்வவந்தர்களாகிய தன்பந்துக்களோடு ஆனந்தமடைந்து கலியாணஞ்செய்தற்குரிய தொழிலைச் செய்யத்தொடங்கினான்.—எ-று. (௯)

மணமிசைந்த நாளோலை செலவிட்டு மங்கலநா
ளிணையவது வைத்தொழில்க ளானவெலா மமைவித்தே
யிணரலங்கன் மைந்தனையு மணவணியி னெழில்விளக்கிப்
பணைமுரச மெழுந்தார்ப்பக் காரைக்காற் பதிபுகுந்தார்.

(இ-ள்.) கலியாணஞ் செய்வதற்குரியநாள் இதுவென் றுநிச்சயித்துத்திருமணப்பத்திரிகையை எவ்விடத்து மனுப்பி, பின் முகூர்த்தநாள்வரக் கலியாணத்துக்கு வேண்டியவைகளையெல்லாம் சித்தப்படுத்தி, பூங்கொத்துக்களால் தொடுத்த மாலையையணிந்த பிள்ளையையும் மணக்கோலத்தினால் அழகடையும்படி செய்து, பருத்த மணமுரசானது அதிகரித்து முழங்கக் காரைக்காலென்னும் நகரத்தையடைந்தார்கள்.—எ-று. (௧௦)

அளிமிடைதார்த் தனதத்த னணிமாடத் துட்புகுந்து
தெளிதருநூல் விதிவழியே செயன்முறைமை செய்தமைத்துத்
தளிரடிமென் னகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கலியாணஞ் செய்தார்கள்.

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கின்ற மாலையைத்தரித்த தனதத்தனுடைய அழகிய மாளிகையினுள்ளே புகுந்து, தெளிவாகிய வேதவிதிப்படியே செய்யவேண்டிய சடங்குகளையெல்லாம் செய்துமுடித்து, தளிர்போன்ற பாதங்களையும், மிருதுவான பற்களையுமுடைய புனிதவதியாரை மகரந்தங்கள் சிந்தும் மாலையையணிந்த பரமதத்தனென்னும் மணமகனுக்குக் களிகூர்ந்திருக்கும் சுற்றத்தார்கள் வாழ்த்தக் கலியாணஞ்செய்வித்தார்கள்.—எ-று. (௧௧)

மங்கலமா மணவினைகண் முடித்தியல்பின் வைகுநாட்
டங்கள்குடிக் கொருபுதல்வி யாதலினாற் றனதத்தன்
பொங்கொலிநீர் நாகையினிற் போகாமே கணவனுடன்
அங்கணமர்ந் தினிதிருப்ப வணிமாட மருங்கமைத்தான்.

(இ-ள்.) மங்களகரமாகிய கலியாணச்சடங்குகளை முடித்து இயல்பாக அவ்விடத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்குநாளில், தனதத்தன் தன்னுடைய குடிக்கு ஒரேபுத்திரியாக விருப்பதனால், மிகுந்த ஒலிபொருந்திய நீரையுடைய

நாகபட்டணத்திற்குப் போகாமல் தன் புத்திரியார் கணவனாகிய பரமதத்தனோடு காரைக்காலிலேயே சுகமாக வாழ்ந்திருக்கும்படி அழகிய ஒருமாளிகையைத் தன் வீட்டிற்குச் சமீபத்தில் கட்டுவித்தான்.—எ-று.

'தங்கள்குடிக்கரும்புதல்வி' என்றும் பாடம். (கஉ)

மகட்கொடையின் மகிழ்சிறக்கும் வரம்பிறனங் கொடுத்ததற்பி
னிகர்ப்பரிய பெருஞ்சிறப்பி னிதிபதிதன் குலமகனுந்
தகைப்பில்பெருங் காதலினுற் றங்குமனை வளம்பெருக்கி
மிகப்புரியுங் கொள்கையினின் மேம்படுதன் மேவினுன்

(இ-ள்.) தன்புத்திரியாரைக்கலியாணஞ்செய்துகொடுத்த காரணமாக மகிழ்ச்சியை யுண்டாக்கும் அளவில்லாத திரவியத்தைச் சீதனமாகக்கொடுத்தபின்பு, ஒப்பற்ற பெருஞ்சிறப்பினையுடைய நிதிபதியென்பவனுடைய புத்திரனாகிய பரமதத்தனும் அடங்காத பெரிய ஆசையோடு பொருந்திய இல்வாழ்க்கைக்கு வேண்டிய வளங்களை வாணிகத்தால்பெருக்கி, விருத்திசெய்யுந் தன்மையில் மேம்பாடுடையவனாயினன்.—எ-று. (கந)

ஆங்கவன்ற னில்வாழ்க்கை யருந்துணையா யமர்கின்ற
பூங்குழலா ரவர்தாமும் பொருவிடையார் திருவடிக்கீழ்
ஓங்கியவன் புறுகாத லொழிவின்றி மிகப்பெருகப்
பாங்கில்வரு மனையறத்தின் பண்புவழா மைப்பயில்வார்.

(இ-ள்.) அந்தப் பரமதத்தனுடைய இல்வாழ்க்கைக்குச் சிறந்த உதவியாயிருக்கின்ற மலர்களைமுடித்த கூந்தலையுடைய புனிதவதியாரும், போர்செய்யும் ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமானது திருவடிகளில் வைத்த அன்பினுலுண்டாகும் பெருவிருப்பானது ஒழியாமல் மேலுமேலும் பெருக, சிறப்போடு நடந்துவருகின்ற இல்வாழ்க்கைக்குச் செய்யவேண்டிய செயல்கள் சிறிதும்தவருமல்நடத்திக்கொண்டுவந்தார்.—எ-று. (கச)

நம்பரடி யாரணைந்தா னல்லதிரு வமுதளித்துஞ்
செம்பொன்னு நவமணியுஞ் செழுந்துகிலு முதலான
தம்பரிவி னுலவர்க்குத் தகுதியின்வேண் டுவகொடுத்தும்
உம்பர்பிரான் றிருவடிக்கீ ழுணர்வுமிக வொழுகுநாள்.

(இ-ள்.) சிவபெருமானுடைய அடியார்கள்வந்தால் நல்ல திருவமுதுபடைத்தும், சிவந்தபொன்னும் நவரத்தினங்களும், நல்லவஸ்திரங்களும் முதலான பொருள்களைத் தம்முடைய வேண்டுதலோடு அவ்வடியார்களுக்குச் சிறப்போடு வேண்டியவைகளைக்கொடுத்தும் தேவர்கள் நாயகராகிய அவ்வெம்பெருமானுடைய திருவடிகளில் அன்புமிகும்படி வாழ்ந்திருக்கும்நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கரு)

பாங்குடைய நெறியின்கட் பயில்பரம தத்தனுக்கு
மாங்கனிக ளோரிரண்டு வந்தணைந்தா ரிலர்கொடுப்ப
ஆங்கவைதான் முன்வாங்கி யவர்வேண்டுங் குறையளித்தே
ஈங்கிவற்றை யில்லத்துக் கொடுக்கவென வியம்பினுன்.

(இ-ள்.) நன்மைபொருந்திய இல்லறமார்க்கத்தில் செல்லுகின்ற பரமதத்தனுக்குக் காரியமூலமாக அவனிடத்தில் வந்தவர்கள் சிலர் இரண்டு மாம்பழங்களைக்கொடுக்க,தான் அப்பழங்களை முன்னேவாங்கிக்கொண்டு அவர்கள்விரும்பி வந்த குறையை முடித்து, இப்பழங்களைத் தன்மாளிகையில் கொடுங்களென்று சொல்லியனுப்பினான்.—எ-று. (கசு)

கணவன்றான் வரவிடுத்த கனியிரண்டுங் கைக்கொண்டு
மணமலியு மலர்க்கூந்தன் மாதரார் வைத்ததற்பின்
பணவரவம் புனைந்தருளும் பரமனார் திருத்தொண்டர்
உணவின்மிகு வேட்கையினா லொருவர்மனை யுட்புகுந்தார்.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற மலர்களைமுடித்த கூந்தலையுடைய புனிதவதியார் தமது கணவன்கொடுத்தனுப்பிய இரண்டுமாம்பழங்களையும் கையில்பெற்றுக்கொண்டு வீட்டில்வைத்தபின்பு,படத்தையுடைய பாம்பை ஆபரணமாக அணிந்த சிவபெருமானுடைய அடியவர் ஒருவர் திருவமுதில் மிகுந்த விருப்பத்தால் அவ்வீட்டில்வந்தார்.—எ-று. (கஎ)

வேதங்கண் மொழிந்தபிரான் மெய்த்தொண்டர் நிலைகண்டு
நாதன்ற னடியாரைப் பசிதீர்ப்பே னெனநண்ணிப்
பாதங்கள் விளக்கநீர் முன்னளித்துப் பரிகலம்வைத்
தேதந்தீர் நல்விருந்தா வின்னடிசி லூட்டுவார்.

(இ-ள்.) வேதங்களை அருளிச்செய்த சிவபெருமானுடைய மெய்யடியார் திருவமுதுவேண்டிவந்த நிலைமையைக்கண்டு, அவ்வெம்பெருமானுடைய அடியாரைவருத்துகின்ற பசியைநீக்குவேனென்று அவரையடைந்து, திருவடிகளை அலம்பும்படி நீரை முன்னேகொடுத்துப் பரிகலம்வைத்துக் குற்றமற்ற நல்ல விருந்தினராக எண்ணி இனியதிருவமுதை உண்பிப்பாராயினார்.—எ-று.

பரிகலம்=போசனபாத்திரம். (கஅ)

கறியமுதங் குதவாதே திருவமுது கைகூட
வெறிமலர்மேற் றிருவனையார் விடையவன்ற னடியாரே
பெறலரிய விருந்தானாற் பேறிதன்மே லில்லையெனும்
அறிவினரா யவரமுது செய்வதனுக் காதரிப்பார்.

(இ-ள்.) அந்தவேளையில் கறியமுது பாகம்பண்ணப்படாமையால் அன்னமாத்திரம் பாகமாயிருக்க, வாசனைபொருந்திய தாமரைமலரிலிருக்கும் இலட்சுமியையொத்த அழகினையுடைய புனிதவதியார் சிவபெருமானுடைய அடியவரே பெறுதற்கரிய விருந்தினராகக் கிடைத்தால் இதைப்பார்க்கிலும் பெறவேண்டிய பேறு நமக்கு ஒன்றுமில்லையென்னும் அறிவையுடையவராய், அவ்வடியவர் (பசியினால் வருந்தாமல்) திருவமுதுசெய்வதற்காக உபசாரஞ்செய்வாராயினார்.—எ-று.

இல்லாளன் வைக்கவெனத் தம்பக்கன் முன்னிருந்த
நல்லநறு மாங்கனிக ளிரண்டினிலொன் றைக்கொண்டு
வல்விரைந்து வந்தணைந்து படைத்துமன மகிழ்ச்சியினால்
அல்லறீர்ப் பவரடியார் தமையமுது செய்வித்தார்.

(இ-ள்.) தம்முடைய கணவன் பத்திரமாகவைத்திருக்கும்படி சொல்லிக் கொடுக்கத் தம்மிடத்து முன்னதாகவேயிருந்த நல்ல மதுரமாகிய இரண்டு மாம்

பழங்களில் ஒன்றையெடுத்துக்கொண்டு அதிக விரைவில்வந்து, அவர்பரிகலத்தில் படைத்து, மனமகிழ்ச்சியோடு பிறவித்துன்பத்தை நீக்கியருளும் சிவபெருமானுடைய அடியவரைத் திருவமுதுசெய்வித்தார்.—எ-று. (உ0)

மூப்புறுமத் தளர்வாலு முதிர்ந்துமூடு கியவேட்கைத்
தீப்பசியி னிலையாலு யமர்ந்தணைந்த திருத்தொண்டர்
வாய்ப்புறுமென் சுவையடிசின் மாங்கனியோ டினிதருந்திப்
பூப்பயின்மென் குழன்மடவார் செயலுவந்து போயினார்.

(இ-ள்.) மூப்பினாலுண்டாகிய தளர்ச்சியினாலும், அதிகரித்துக் கிட்டிய விருப்பத்தோடுகூடிய கொடியபசியின் நிலைமையினாலும் இளைப்படைந்துவந்த அச்சிவனடியவர் மிருதுவான சுவையோடுகூடிய அன்னத்தை மாம்பழத்தோடு இனிதாகவுண்டு, மலர்களைமுடித்த மிருதுவாகிய கூந்தலையுடைய புனிதவதியாரது அன்பின்செய்கையைக்குறித்துச் சந்தோஷமடைந்துபோயினார்.—எ-று. ()

மற்றவர்தாம் போயினபின் மனைப்பதியா கியவணிகன்
உற்றபெரும் பகலின்க ணோங்கியபே ரில்லெய்திப்
பொற்புறமுன் னீராடிப் புகுந்தடிசில் புரிந்தயிலக்
கற்புடைய மடவாருங் கடப்பாட்டி னூட்டுவார்.

(இ-ள்.) அந்த அடியார்போயினபின்பு அவ்வீட்டிற்குத் தலைவனாகிய பரமதத்தன் நடுப்பகலில் உயர்வாகிய பெரிய தன்மாளிகைக்குவந்து, முன்னே அழகாக நீரில் ஸ்நானஞ்செய்து, போசனஅறையிற்சென்று விரும்பிப் போசனஞ்செய்ய,கற்பினையுடைய புனிதவதியாரும் உபசாரத்தோடு தங்கணவனை உண்பிப்பாராயினார்.—எ-று. (உஉ)

இன்னடிசில் கறிகளுட னெய்துமுறை யிட்டதற்பின்
மன்னியசீர்க் கணவன்றான் மனையிடைமுன் வைப்பித்த
நன்மதுர மாங்கனியி லிருந்ததனை நறுங்கூந்தல்
அன்னமனை யார்தாமுன் கொடுவந்து கலத்தளித்தார்.

(இ-ள்.) இனிமையாகியஅன்னத்தைக் கறிவர்க்கங்களோடுமுறைமைப்படிபடைத்தபின்பு,நிலைபெற்ற சிறப்பினையுடைய பரமதத்தன் ,தான்முன்னே வீட்டில்வைக்கும்படி கொடுத்தனுப்பிய நல்ல மதுரமான மாங்கனிகளில் மிகையாயிருந்த ஒருபழத்தை வாசனைவீசுங் கூந்தலையுடைய அன்னம்போன்ற புனிதவதியார் கொண்டுவந்து கலத்தில் படைத்தார்.—எ-று. (உ௩)

மனைவியார் தாம்படைத்த மதுரமிக வாய்த்தகனி
தனைநுகர்ந்த வினியசுவை யாராமைத் தார்வணிகன்
இனையதொரு பழமின்னு முளததனை யிடுகவென
அனையதுதாங் கொண்டுவர வணைவார்போ லங்ககன்றார்.

(இ-ள்.) மனைவியாராகிய புனிதவதியார் கொண்டுவந்துபடைத்த அதிக மதுரம்பொருந்திய மாங்கனியைப் புசித்ததனாலுண்டாகிய இனிய சுவையானது தனக்குத்தெவிட்டாமையால்,மாலையைத்தரித்த அப்பரமதத்தன் இப்படிப்பட்ட மதுரம்பொருந்திய பழம் இன்னுமொன்றிருப்பதனால், அதனையும் இடுகவென்று சொல்ல, தாம் அப்பழத்தைக் கொண்டுவந்து கொடுப்பவர்போல அவ்விடத்தினின்றும் நீங்கினார்.—எ-று. (உ௪)

அம்மருங்கு நின்றயவர்வா ரருங்கனிக்கங் கென்செய்வார்
மெய்ம்மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்தாள்
தம்மனங்கொண் டுணர்தலுமே யவரருளாற் றாழ்குழலார்
கைம்மருங்கு வந்திருந்த ததிமதுரக் கனியொன்று.

(இ-ள்.) தாம்போன அவ்விடத்திலே நின்றுகொண்டு வருத்தப்படுகின்ற அவ்வம்மையார்அருமையான மற்றொருபழத்துக்குஎன்னசெய்வார்; பரவசப்பட்டு நினைந்து, ஆபத்துநேரிட்டவிடத்து(த் தம்மைநினைத்தால் அப்போதே) அனுக்கிரகஞ்செய்யும் சிவபெருமானுடைய திருவடிகளைத்தமதுமனதிலிருத்தித் தியானிக்கவும், அவ்வெம்பெருமானுடைய திருவருளினால், தாழ்ந்தகூந்தலையுடைய புனிதவதியாரது திருக்கரத்தில் அதிக மதுரமாகிய ஒரு மாம்பழம் வந்திருந்தது.—எ-று.

மற்றதனைக் கொடுவந்து மகிழ்ந்திடலு மயின்றகனி
யுற்றசுவை யமுதினுமேற் படவுளதா யிடவிதுதான்
முற்றருமாங் கனியன்று மூவுலகிற் பெறற்கரிதாற்
பெற்றதுவே றெங்கென்று பெய்வளையார் தமைக்கேட்டான்.

(இ-ள்.) சிவபெருமான் கிருபையினால் தமதுகையில்வந்திருந்த மாங்கனியைக்கொண்டுவந்து சந்தோஷத்தோடு படைக்கவும், அவன் உண்ட அக்கனியின் சுவையானது தேவாமுதத்தைப்பார்க்கிலும் அதிக மதுரமுள்ளதாக இருக்க,இது முன்னே நான்கொடுத்த மாம்பழமன்று; இது மூன்றுலகங்களிலும் பெறுதற்கு அருமையானது ; ஆதலால், இதனை நீ வேறு எங்கேபெற்றாயென்று வளையலையணிந்த புனிதவதியாரைக் கேட்டான்.—எ-று. (உசு)

அவ்வுரைகேட் டலுமடவா ரருளுடையா ரளித்தருளுஞ்
செவ்வியபே ரருள்விளம்புந் திறமன்றென் றுரைசெய்யார்
கைவருகற் புடைநெறியார் கணவனுரை காவாமை
மெய்வழியன் றெனவிளம்பல் விடமாட்டார் விதிர்ப்புறுவார்.

(இ-ள்.) அந்தவார்த்தையைக் கேட்டவுடனே புனிதவதியார் அருள்வள்ளலாகிய சிவபெருமான் தம் அடியார்களுக்குப் பிரசாதிக்கும் செவ்விய திருவருளின்பெருமை பிறர்க்குச்சொல்லுந் தகுதியன்றென்று நினைந்தமையால் நிகழ்ந்ததைச் சொல்லமாட்டாதவரும், கற்புவழியில் நிற்பவர்கள் புருஷன்சொல்லைக் காவாதிருத்தல் கற்புடைமையன்றென்று நினைந்தமையால் உண்மைகூறுதலை விடமாட்டாதவருமாய் வருந்துவாராயினர்.—எ-று. (உஎ)

செய்தபடி சொல்லுவதே கடனென்னுஞ் சீலத்தார்
மைதழையுங் கண்டர்சே வடிகண்மனத் துறவணங்கி
யெய்தவருங் கனியளித்தா ரியாரென்னுங் கணவனுக்கு
மொய்தருபூங் குழன்மடவார் புகுந்தபடி தனைமொழிந்தார்.

(இ-ள்.) பழத்தின்பொருட்டுத் தாம்செய்தவண்ணம் சொல்லுகிறதே முறைமையென்று நினைக்கும் ஒழுக்கத்தையுடையவராய், விஷம்பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமானது திருவடிகளை மனதில்பொருந்தும்படி வணங்கி, கிடைத்தற்கரிய இம்மாங்கனியைக் கொடுத்தவர் யாரென்று கேட்கும் தன்நாயகனுக்கு மலர்கள்நெருங்கிய கூந்தலையுடைய புனிதவதியார் சிவபெருமான் திருவருளால் நடந்தவண்ணம் தவறாமல் சொன்னார்.—எ-று.

புகுந்தபடி மொழிந்ததாவது:—சிவனடியார்க்குத் திருவமுது செய்வித்த பொழுது கறியமுது பாகம் பண்ணப்படாமையின் ஒருகனியை அவருக்குப் படைத்ததும், பின் தமதுநாயகன் கேட்டபொழுது சிவபெருமானைவேண்டிப் பெற்றுக்கொடுத்ததுமாம். (உஅ)

ஈசனரு ளெனக்கேட்ட வில்லிறைவ னதுதெளியான்
வாசமலர்த் திருவனையார் தமைநோக்கி மற்றிதுதான்
தேசுடைய சடைப்பெருமான் றிருவருளே லின்னமுமோர்
ஆசில்கனி யவனருளா லழைத்தளிப்பா யெனமொழிந்தான்.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருவருளால் கிடைத்ததென்று சொல்லக் கேட்ட பரமதத்தன் அவ்வார்த்தை உண்மையானதென்று தெளியாதவனாய், வாசனைபொருந்திய தாமரைமலரிலிருக்கும் சீதேவியையொத்த புனிதவதியாரைப் பார்த்து, நீ இப்போதுகொடுத்த மாம்பழம் விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானது அனுக்கிரகத்தால் கிடைத்ததாயின் இன்னமும் குற்றமற்ற ஒரு பழத்தை அக்கடவுள் கிருபையினால் அழைத்துக் கொடுவென்று சொன்னான்.

பாங்ககன்று மனைவியார் பணியணிவார் தமைப்பரவி
யீங்கிதளித் தருளீரே லென்னுரைபொய் யாமென்ன
மாங்கனியொன் றருளால்வந் தெய்துதலு மற்றதனை
யாங்கவன்கைக் கொடுத்தலுமே யதிசயித்து வாங்கினான்.

(இ-ள்.) புனிதவதியார் அவ்விடத்தினின்றும் நீங்கிப் பாம்பையணிந்த சிவபெருமானைவணங்கி, (எம்பெருமானே!) தேவரீர் இவ்விடத்தில் மாங்கனியொன்று கொடுக்காவிட்டால் அடியேன் சொன்னவார்த்தை பொய்யாய்விடுமென்று வேண்ட, அப்பொழுது ஆண்டவருடைய திருவருளினால் ஒரு மாம்பழம் புனிதவதியார்கையில் வருதலும் அந்தப்பழத்தை அப்பரமதத்தனுடைய கையில்கொடுக்க, அவன் உடனே ஆச்சரியப்பட்டுக் கையில்வாங்கினான்.—எ-று. (கூ0)

வேறு.

வணிகனுந் தன்கைப் புக்க மாங்கனி பின்னைக் காணான்
தணிவரும் பயமேற் கொள்ள வுள்ளமுந் தடுமா றெய்தி
யணிகுழ லவரை வேறோ ரணங்கெனக் கருதி நீங்குந்
துணிவுகொண் டெவர்க்குஞ் சொல்லான் றொடர்வின்றியொழுகுநாளில்.

(இ-ள்.) பரமதத்தனும் தன்கையில்வந்த மாம்பழத்தைப்பின்பு காணாதவனாய் அடங்காத அச்சமுண்டாக அதனால் மனமுங்கலங்கி, அழகிய கூந்தலையுடைய புனிதவதியாரை வேறொரு தெய்வப்பெண்ணென்று நினைத்து, அவரைவிட்டு நீங்கவேண்டுமென்னும் நிச்சயத்தை மனதிற்கொண்டு, இச்செய்தியை ஒருவர்க்குஞ் சொல்லாதவனாய் அவரோடு சம்பந்தமில்லாமல் வாழும்நாளில்.—எ-று.

தொடர்வின்றி யொழுகலாவது:—சயனகாலத்தில் அவரைத் தம்மனைவியாகக்கருதி ஸ்பரிசித்தலின்றித் தெய்வமாகப்பாவித்து ஒழுகுதலாம்.

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (கூக)

விடுவதே யெண்ண மாக மேவிய முயற்சி செய்வான்
படுதிரைப் பரவை மீது படர்கலங் கொண்டு போகி
நெடுநிதி கொணர்வே னென்ன நிரந்தபல் கிளைஞ ராகும்
வடுவில்சீர் வணிக மாக்கண் மரக்கலஞ் சமைப்பித் தார்கள்.

(இ-ள்.) தான் அப்புனிதவதியாரைவிட்டு நீங்குவதே எண்ணமாகக்கொண்டு, அதற்குவேண்டிய முயற்சிசெய்கின்றவனாகிய பரமதத்தன் சப்திக்கின்ற அலைகளையுடைய சமுத்திரத்தில் செல்லுங் கப்பலேறிப்போய் அதிகதிரவியத்தைச் சம்பாதித்துவருவேனென்று சொல்ல, அவனைச் சூழ்ந்திருக்கும் பல உறவினர்களாகிய குற்றமற்ற சிறப்பினையுடைய வணிகர்கள் ஒருகப்பலைச் செய்வித்தார்கள்.—எ-று. (௩௨)

கலஞ்சமைத் ததற்கு வேண்டுங் கம்மிய ருடனே செல்லும்
புலங்களில் விரும்பு பண்டம் பொருந்துவ நிரம்ப வேற்றிச்
சலந்தரு கடவுட் போற்றித் தலைமையா நாய்கன் றானு
நலந்தரு நாளி லேறி நளிர்திரைக் கடன்மேற் போனான்.

(இ-ள்.) ஒரு மரக்கலத்தைச் செய்து அதனை ஓட்டுதற்கு வேண்டிய மாலுமி முதலானவர்களுடனே தான் போகின்ற தேசங்களில் விரும்பிக் கொள்ளத்தக்க அரும்பண்டங்களாயுள்ளவைகளை அக்கப்பலில்நிறையஏற்றி(க்ஷேமமாகப்போய்ச் சேரவேண்டுமென்று) சமுத்திரராஜனாகிய வருணபகவானைத் துதித்துத் தலைவனாகிய பரமதத்தனும் ஒரு சுபதினத்தில் கப்பலேறிக் குளிர்ந்த அலைகளையுடைய கடலின்மேற்போயினான்.—எ-று. (௩௩)

கடன்மிசை வங்க மோட்டிக் கருதிய தேயந் தன்னில்
அடைவுறச் சென்று சேர்ந்தங் களவில்பல் வளங்கண் முற்றி
யிடைசில நாட்க ணீங்க மீண்டுமக் கலத்தி லேறிப்
படர்புனற் கன்னி நாட்டோர் பட்டின மருங்கு சார்ந்தான்.

(இ-ள்.) கடலின்மேல் கப்பலைச் செலுத்தித் தான்போகவேண்டுமென்று எண்ணிய தேசத்தில் முறைமையாகப்போய்ச் சேர்ந்து, அவ்விடத்தில் (தான் கொண்டுபோன சரக்குகளை விற்று) அளவில்லாத பலவளமுள்ள பண்டங்களைப் பெற்று, அதற்கு நடுவில் சிலநாட்கள் கழிய மறுபடியும் அந்த மரக்கலத்தில் ஏறி, பரவிய நீரையுடைய பாண்டிநாட்டிலுள்ள ஒருபட்டணத்தை யடைந்தான், பரமதத்தன்.—எ-று. (௩௪)

அப்பதி தன்னி லேறி யலகில்பல் பொருள்க ளாக்கும்
ஒப்பின்மா நிதிய மெல்லா மொருவழி பெருக வுய்த்து
மெய்ப்புகழ் விளங்கு மவ்வூர் விரும்பவோர் வணிகன்பெற்ற
செப்பருங் கன்னி தன்னைத் திருமலி வதுவை செய்தான்.

(இ-ள்.) அந்த நகரத்தில் வந்து தான் மறுதேசத்திலிருந்து கொண்டுவந்த அளவில்லாத பல பொருள்களை விற்று, அதனால் சம்பாதித்த ஒப்பற்ற மிகுந்த திரவியங்களையெல்லாம் வட்டிமுதலிய ஒவ்வோர்வழிகளில் பெருகும்படிசெய்து, மெய்மையான புகழால் விளங்குகின்ற அவ்வூரிலுள்ளவர்கள் விரும்பும்படி ஒரு வைசியன் பெற்றெடுத்த சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய ஒருகன்னிகையை மிகுந்த சிறப்போடு கலியாணஞ்செய்துகொண்டான்.—எ-று. (௩௫)

பெறலருந் திருவி னளைப் பெருமணம் புணர்ந்து முன்னை
யறலிய னறுமென் கூந்த லணங்கனு டிறத்தி லற்றம்
புறமொரு வெளியு ருமற் பொதிந்தசிந் தனையி னேடு
முறைமையின் வழாமை வைகி முகமலர்ந் தொழுகு நாளில்.

(இ-ள்.) பெறுதற்கரிய திருமகளை யொத்த அந்தக் கன்னிகையைப் பெருமையோடு கலியாணஞ்செய்துகொண்டு, முன்பு தான் விவாகஞ்செய்துகொண்ட கருமணல்போலும் நல்லமிருதுவாகிய கூந்தலையுடைய தெய்வப்பெண்போன்ற புனிதவதியார் விஷயத்தில் தான்செய்த வஞ்சகத்தைப் புறத்தில் ஒருவருக்கும் வெளிப்படுத்தாமல் மனதில் அடக்கிக்கொண்டு, இல்லறமுறைமையில் சிறிதும் தவருமலிருந்து மிகுந்த சந்தோஷத்தோடு வாழும் நாளில்.—எ-று. (கூசு)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

முருகலர்ச் சோலை மூதூ ரதின்முதல் வணிக ரோடும்
இருநிதிக் கிழவ னென்ன வெய்திய திருவின் மிக்குப்
பொருகடற் கலன்கள் போக்கும் புகழினன் மனைவி தன்பாற்
பெருகொளி விளக்குப் போலோர் பெண்கொடி யரிதிற் பெற்றான்.

(இ-ள்.) வாசனைபொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த பழைமையாகிய அவ்வூரிலிருக்கின்ற முதன்மையாகிய வணிகர்களோடு குபேரனைப்போல வியாபாரத்தால்கிடைத்த செல்வத்தினுல் பெருமைபெற்று, அலைகள் மோதுகின்ற கடலில் மரக்கலங்களைச்செலுத்தி வர்த்தகஞ்செய்யும் கீர்த்திமானுகிய பரமதத்தன் தன் மனைவியினிடமாகப் பேரொளியை வீசுகின்ற விளக்குப்போல ஒரு பெண்குழந்தையை அருமையாகப்பெற்றான்.—எ-று. (கூஎ)

மடமக டன்னைப் பெற்று மங்கலம் பேணித் தான்முன்
புடனுறை வஞ்சி நீத்த வொருபெரு மனைவி யாரைத்
தொடர்வற நினைந்து தெய்வத் தொழுகுல மென்றே கொண்டு
கடனமைத் தவர்தந் நாமங் காதல்செய் மகவை யிட்டான்.

(இ-ள்.) இளமையையுடைய அப்பெண்குழந்தையைப் பெற்று, அதற்குச் செய்யவேண்டிய மங்களகரமான காரியங்களைச் செய்து, தான் முன்பு கூடிவாழ்வதற்குப் பயந்து நீங்கிவந்த ஒப்பற்ற மூத்த மனைவியாராகிய புனிதவதியாரைத் தன் மனையாளென்னும் தொடர்ச்சிநீங்கும்படி நினைந்து, எல்லாராலும் தொழப்படுகின்ற தெய்வகுலத்தில் சேர்ந்தவரென்று எண்ணி, நாமகரணத்துக்குச் செய்யவேண்டிய சடங்குகளைச்செய்து, அவ்வம்மையாருடைய புனிதவதியாரென்னுந் திருநாமத்தைத் தான் விருப்பமுற்றெழுகும் புத்திரிக்குத் தரித்தான்.—எ-று. ()

இங்கிவ யிவனிங் கெய்தி யிருந்தன னிப்பா லீடுங்
கன்னிமா மதில்சூழ் மாடக் காரைக்கால் வணிக னனை
தன்னிகர் கடந்த செல்வத் தனதத்தன் மகளார் தாமு
மன்னிய கற்பி னேடு மனையறம் புரிந்து வைக.

(இ-ள்.) இவ்வாருகப் பரமதத்தன் பாண்டிநாட்டிலுள்ள ஒருபட்டணத்தில் வாழ்ந்துகொண்டிருக்கும் நாளில், அழிவில்லாத பெரிய மதில்கள்சூழ்ந்த மாளிகைகளையுடைய காரைக்காலில்வாழும் வணிகனுகிய ஒப்பற்ற பெருஞ்செல்வத்

தையுடைய தனதத்தனதுபுத்திரியாராகிய புனிதவதியாரும் நிலைபெற்ற கற்போடு இல்லறத்தை வழுவாமல் நடத்திக்கொண்டுவர.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (ருக)

விளைவளம் பெருக்க வங்க மீதுபோம் பரம தத்தன்
வளர்புகழ்ப் பாண்டி நாட்டோர் மாநகர் தன்னின் மன்னி
யளவின்மா நிதிய மாக்கி யமர்ந்தினி திருந்தா னென்று
கிளரொளி மணிக்கொம் பன்னார் கிளைஞர்தாங் கேட்டா ரன்றே.

(இ-ள்.) அதிக இலாபத்தை விருத்திசெய்யும்படி கப்பலேறிச்சென்ற பரமதத்தனென்பவன் மிகுந்த புகழையுடைய பாண்டிநாட்டிலுள்ள ஒருபெரியபட்டணத்தையடைந்து, அளவில்லாத பெரும்பொருளைச்சம்பாதித்து, அவ்விடத்திலேயே இனிதாகவாழ்ந்திருக்கின்றானென்று, விளங்குகின்ற ஒளியையுடைய மாணிக்கக்கொம்புபோன்ற புனிதவதியாருடைய சுற்றத்தார் கேள்விப்பட்டார்கள். ()

அம்மொழி கேட்ட போதே யணங்கனார் சுற்றத் தாருந்
தம்முறு கிளைஞர்ப் போக்கி யவனிலை தாமுங் கேட்டு
மம்மர்கொண் மனத்த ராகி மற்றவ னிருந்த பாங்கர்க்
கொம்மைவெம் முலையி னாரைக் கொண்டுபோய் விடுவ தென்பார்.

(இ-ள்.) பரமதத்தன் பாண்டிநாட்டை யடைந்து கலியாணஞ் செய்துகொண்டு ஒருகுழந்தையைப்பெற்று வாழ்ந்திருக்கின்றானென்னும் வார்த்தையைக்கேள்விப்பட்டபொழுதே புனிதவதியாருடைய சுற்றத்தார்கள்தம்முடைய உறவினர்களை யனுப்பி, அவனுடைய நிலைமையைத்தாங்களும் அறிந்துகொண்டு, மனங்கலங்கினவர்களாய் அப்பரமதத்தன் இருக்குமிடத்துக்குப் புனிதவதியாரைத் தாமே அழைத்துக்கொண்டுபோய் விடவேண்டுமென்று நிச்சயித்தார்கள்.—எ-று.

மாமணிச் சிவிகை தன்னின் மடநடை மயிலன் னாரைத்
தாமரைத் தவிசில் வைகுந் தனித்திரு வென்ன வேற்றிக்
காமரு கழனி வீழ்த்துக் காதல்செய் சுற்றத் தாருந்
தேமொழி யவருஞ் சூழச் சேணிடைக் கழிந்து சென்றார்.

(இ-ள்.) உயர்ந்த இரத்தினங்கள் பதித்த பல்லக்கில் மிருதுவாகிய நடையையுடைய மயில்போன்ற புனிதவதியாரைத் தாமரைமலராகிய ஆசனத்தில் வீற்றிருக்கும் ஒப்பற்ற சிறீதேவியைப்போல ஏற்றிக்கொண்டு, அழகிய இடுதிரையை விடுத்து, ஆசைபொருந்திய சுற்றத்தார்களும் இனியசொற்களையுடைய சிலமாதர்களும் சூழ்ந்துவரப் பிரயாணத்தில் வெகுதூரம் நீங்கிப்போனார்கள்.—எ-று.

'காமருசிவிகைவீழ்த்து' என்றும் பாடம். (சஉ)

சிலபகல் கடந்து சென்று செந்தமிழ்த் திருநா டெய்தி
மலர்புகழ்ப் பரம தத்தன் மாநகர் மருங்கு வந்து
குலமுதன் மனைவி யாரைக் கொண்டுவந் தணைந்த தன்மை
தொலைவில்சீர்க் கணவ னார்க்குச் சொல்லிமுன் செல்ல விட்டார்.

(இ-ள்.) இடையில் சிலநாள்கள் கழியப்போய்ச் செந்தமிழ்வழங்கும் பாண்டிநாட்டையடைந்து, பரவிய கீர்த்தியையுடைய பரமதத்தன் வாசஞ்செய்யும் பெரியபட்டணத்துக்குச் சமீபத்தில்வந்து, குலத்துக்கு முதல்மனைவியாகிய புனி

தவதியாரை அழைத்துக்கொண்டுவந்த தன்மையைக் கெடாத சிறப்பினையுடைய கணவனாகிய பரமதத்தனுக்கு முன்னேபோய்த் தெரிவிக்கும்படி சொல்லியனுப்பினார்கள்.—எ-று. (௬௩)

வந்தவ ரணைந்த மாற்றங் கேட்டலும் வணிகன் றானுஞ்
சிந்தையி லச்ச மெய்திச் செழுமணம் பின்பு செய்த
பைந்தொடி தனையுங் கொண்டு பயந்தபெண் மகவி னோடு
முந்துறச் செல்வே னென்று மொய்குழ லவர்பால் வந்தான்.

(இ-ள்.) தனது மனைவியார்வந்து சேர்ந்தாரென்னும் செய்தியைக்கேட்டவுடனே பரமதத்தனும் மனதில் அச்சமடைந்து, இரண்டாவது செழுமையாகக் கலியாணஞ்செய்துகொண்ட மனைவியையும் தான் அவளிடமாகப்பெற்ற பெண் குழந்தையையும் அழைத்துக்கொண்டு சீக்கிரம்போவேனென்று நெருங்கிய கூந்தலையுடைய புனிதவதியாரிடத்தில்வந்தான்.—எ-று. (௬௪)

தானுமம் மனைவி யோடுந் தளர்நடை மகவி னோடு
மானிளம் பிணைபோ னின்ற மனைவியா ரடியிற் றாழ்ந்தே
யானும தருளால் வாழ்வே னிவ்விளங் குழவி தானும்
பான்மையா லுமது நாம மென்றுமுன் பணிந்து வீழ்ந்தான்.

(இ-ள்.) அப்பரமதத்தனும் தன்னுடைய இரண்டாவது மனைவியோடும் தளர்ந்தநடையையுடைய பெண்குழந்தையோடும் இளமைபொருந்திய பெண் மான்போல் நின்ற முதல்மனைவியாராகிய புனிதவதியாருடைய திருவடிகளில் வணங்கி, அடியேன் உம்முடைய கருணையினாலே வாழ்கின்றேன். இந்த இளங் குழந்தைக்கும் முறைமைப்படி உம்முடைய திருநாமத்தையே தரித்திருக்கின்றேனென்று முன்னே சாஷ்டாங்கமாகவணங்கினான்.—எ-று.

பான்மையாவது:—உலகினர் தாம் வழிபடும் தெய்வங்களுடைய திருநாமங்களை ஞாபகக்குறியாகத் தம்மக்களுக்கு இட்டு அழைப்பதாம். (௬௫)

கணவர்தாம் வணங்கக் கண்ட காமர்பூங் கொடிய னாரும்
அணைவுறுஞ் சுற்றத் தார்பா லச்சமோ டொதுங்கி நிற்ப
உணர்வுறு கிளைஞர் வெள்கி யுன்திரு மனைவி தன்னை
மணமலி தாரி னாய்நீ வணங்குவ தென்கொ லென்றார்.

(இ-ள்.) நாயகனாகிய பரமதத்தன் தம்மை வணங்கப்பார்த்த அழகிய பூங்கொடிபோன்ற புனிதவதியாரும் தம்மோடுகூடவந்த சுற்றத்தார்களிடமாகப் பயத்தோடு ஒதுங்கிநிற்க, விவேகத்தையுடைய சுற்றத்தார்கள் இவன்செய்கைக்கு வெட்கப்பட்டு (அப்பரமதத்தனைப்பார்த்து) வாசனைபொருந்திய மலர்மாலையைத் தரித்த பரமதத்தனே! நீ உன்னுடைய அழகியமனைவியை வணங்குகிறது என்ன காரணமென்று கேட்டார்கள்.—எ-று. (௬௬)

மற்றவர் தம்மை நோக்கி மானுட மிவர்தா மல்லர்
நற்பெருந் தெய்வ மாத லறிந் தகன்ற பின்பு
பெற்றவிம் மகவு தன்னைப் பேரிட்டே னாத லாலே
பொற்பதம் பணிந்தே னீரும் போற்றுதல் செய்மி னென்றான்.

(இ-ள்.) அவ்வாறு கேட்ட சுற்றத்தார்களைப் பரமதத்தன் பார்த்து, இவர் மானுடப்பெண்ணல்லர்; நல்ல பெரிய தெய்வப்பெண்ணாயிருத்தலை நான் தெரி

ந்து இவரைவிட்டு நீங்கினபின்பு, இரண்டாவது கலியாணஞ்செய்து பெற்ற இப் பெண்குழந்தைக்கு இவர் திருநாமத்தையிட்டு அழைத்தேன்; ஆகையால் இவருடைய அழகிய திருவடிகளை வணங்கினேன்; நீங்களும் இவரைத் தெய்வமாக நினைத்து வணங்குங்களென்று சொன்னான்.—எ-று. (சஎ)

என்றபின் சுற்றத் தாரு மிதுவென்கொ லென்று நின்றார்
மன்றலங் குழலி னாரும் வணிகன்வாய் மாற்றங் கேளாக்
கொன்றைவார் சடையி னார்தங் குரைகழல் போற்றிச் சிந்தை
யொன்றிய நோக்கின் மிக்க வுணர்வுகொண் டுரைசெய் கின்றார்.

(இ-ள்.) இவ்வாறு பரமதத்தன் சொன்னபின்பு உறவினர்களும் இது என்னஆச்சரியமென்று திகைத்துநின்றார்கள்; வாசனை வீசுகின்ற அழகிய கூந்தலையுடைய புனிதவதியாரும் பரமதத்தனுடைய வாயிற்பிறந்த சொல்லைக்கேட்டு, கொன்றைமலர்மாலையைத் தரித்த நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானது சப்திக்கின்ற சிலம்பையணிந்த திருவடிகளை வணங்கி, மனதில் பொருந்திய அன்போடு பேருணர்ச்சிகொண்டு சொல்லத்தொடங்கினார்.—எ-று. (சஅ)

ஈங்கிவன் குறித்த கொள்கை யிதுவினி யிவனுக் காகத்
தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங் குன்பால்
ஆங்குநின் றார்கள் போற்றும் பேய்வடி வடியே னுக்குப்
பாங்குற வேண்டு மென்று பரமர்தாள் பரவி நின்றார்.

(இ-ள்.) இப்பரமதத்தன் மனதிற்குறித்த எண்ணம் இவ்வாறிருக்கின்றது; அதனால், இனிமேல் இவன்பொருட்டுச் சுமந்திருந்த அழகமைந்த மாமிசப் பொதியை இங்கு ஒழித்து, ஸ்ரீ கயிலாசகிரியில் உம்மிடத்தில் சூழ்ந்துநிற்கின்ற சிவகணங்கள் போற்றுதற்குரிய பேய்க்கணங்களின் வடிவத்தை அடியேனுக்கு முறைமையாகத் தந்தருளவேண்டுமென்று சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிநின்றார்.—எ-று. (சகூ)

ஆனவப் பொழுது மன்று ளாடுவா ரருளி னாலே
மேனெறி யுணர்வு கூர வேண்டிற்றே பெறுவார் மெய்யில்
ஊனடை வனப்பை யெல்லா முதறியெற் புடம்பே யாக
வானமு மண்ணு மெல்லாம் வணங்குபேய் வடிவ மானார்.

(இ-ள்.) புனிதவதியார் அவ்வாறு வேண்டி வணங்கிநின்றபொழுது, கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளும் சிவபெருமானுடைய திருவருளினால் மேலான முத்திநெறியையடைதற் கேதுவாகிய உணர்ச்சி அதிகரிக்கத் தாம் வேண்டியவாறே பெறுகின்றவராகிய புனிதவதியார் தமது திருமேனியில் மாமிசத்தைப் பற்றியிருந்த அழகையெல்லாம் உதறிவிட்டு எலும்புடம்பாக விண்ணுலகமும் மண்ணுலகமுமாகிய எல்லாவுலகங்களும் வணங்குதற்குரிய பேய்வடிவத்தையடைந்தார்.—எ-று.

எற்புடம்பு=வலித்தல்விகாரம். (ரு0)

மலர்மழை பொழிந்த தெங்கும் வானதுந் துபியி னாதம்
உலகெலா நிறைந்து விம்ம வும்பரு முனிவர் தாமுங்
குலவினர் கணங்க ளெல்லாங் குணலையிட் டனமுன் னின்ற
தொலைவில்பல் சுற்றத் தாருந் தொழுதஞ்சி யகன்று போனார்.

(இ-ள்.) எவ்விடத்திலும் கற்பகமலர்மாரி பொழிந்தது; தேவதுந்துபியின் ஒலியானது எவ்விடத்திலும் நிறைந்து சப்திக்கத் தேவர்களும், முனிவர்களும் கொண்டாடினார்கள்; பூதகணங்களெல்லாம் வீராவேசத்தால்கொக்கரித்தன; புனிதவதியாருக்கு முன்னேநின்ற அளவில்லாத பல உறவினர்களும் அவரை வணங்கிப் பயந்து நீங்கிப்போயினார்கள்.—எ-று. (௫௪)

உற்பவித் தெழுந்த ஞானத் தொருமையி னுமைகோன் றன்னை
யற்புதத் திருவந் தாதி யப்பொழு தருளிச் செய்வார்
பொற்புடைச் செய்ய பாதப் புண்டரீ கங்கள் போற்று
நற்கணத் தினிலொன் றானே னென்று நயந்து பாடி.

(இ-ள்.) தம் உள்ளத்தில் தோன்றியெழுந்த சிவஞானத்தின் ஒருமையினால் உமாதேவிநாயகராகிய சிவபெருமானைக்குறித்து "அற்புதத்திருவந்தாதி" என்னும் பிரபந்தத்தை அப்பொழுதே அருளிச்செய்கின்றவராய், அழகுபொருந்திய சிவந்த திருவடித் தாமரைகளைத் துதிக்கின்ற நல்ல அடியார் திருக்கூட்டத்தில் நானும் ஒன்றாய்விட்டேனென்று விரும்பிப்பாடியருளி.—எ-று.

எமது அருளன்னையாராகிய புனிதவதியார், தாம் அருளிச்செய்த அற்புதத்திருவந்தாதியில் 'நற்கணத்தினி லொன்றானேனான்' என்று பாடி யருளியதாவது:—

"பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கீ
தறினு முறுதொழியு மேனுஞ்—சிறிதுணர்த்தி
மற்றொருக ணெற்றிமேல் வைத்தான்றன் பேயாய
நற்கணத்தி லொன்றாய நாம்."—என்னுந் திருவெண்பாவேயாம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫௫)

## அற்புதத்திருவந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

### வெண்பா.

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தே—னிறந்திகழு
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
யெஞ்ஞான்று தீர்ப்ப திடர்.

உரையினு லிம்மாலை யந்தாதி வெண்பா
கரைவினுற் காரைக்காற் பேய்ச்சொற்—பரவுவார்
ஆராத வன்பினோ டண்ணலைச்சென் றேத்துவார்
பேராத காதல் பிறந்து.

திருச்சிற்றம்பலம்.

ஆய்ந்தசீ ரிரட்டை மாலை யந்தாதி யெடுத்துப் பாடி
யேய்ந்தபே ருணர்வு பொங்க வெயிலொரு மூன்று முன்னாட்
காய்ந்தவ ரிருந்த வெள்ளிக் கயிலைமால் வரையை நண்ண
வாய்ந்தபே ருணர்முன் கூர வழிப்படும் வழியால் வந்தார்.

(இ-ள்.) ஆராய்ந்த சிறப்பினையுடைய "திருவிரட்டைமணிமாலையை" அந்தாதித்தொடையாக எடுத்துப்பாடி, தம்மிடத்துப்பொருந்திய பேருணர்வானது அதிகரிக்க, முற்காலத்தில் பொன் - வெள்ளி-இரும்பு என்னும் மூன்று மதில்களையும் எரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்ரீகைலாசகிரியை அடையும்படியாகப் பொருந்திய திருவருளானது முற்பட்டு நடத்த அத்திருவருள்வழித்தாயிருக்கும் முறைமையினால் ஒழுகிவந்தார்.—எ-று. (௫௩)

### திரு இரட்டை மணிமாலை.

திருச்சிற்றம்பலம்.

கட்டளைக்கலித்துறை.

கிளர்ந்துந்து வெந்துயர் வந்தடும் போதஞ்சி நெஞ்சமென்பாய்
தளர்ந்திங் கிருத்த றவிர்திகண் டாய்தள ராதுவந்தி
வளர்ந்துந்து கங்கையும் வானத் திடைவளர் கோட்டுவெள்ளை
யிளந்திங் களுமெருக் கும்மிருக் குஞ்சென்னி யீசனையே.

வெண்பா.

உத்தமராய் வாழ்வா ருலந்தக்கா லுற்றார்கள்
செத்த மரமடுக்கித் தீயாமுன்—உத்தமனாய்
நீளாழி நஞ்சுண்ட நெய்யாடி தன்றிறமே
கேளாழி நெஞ்சே கிளர்ந்து.

திருச்சிற்றம்பலம்.

கண்டவர் வியப்புற் றஞ்சிக் கையகன் றோடு வார்கள்
கொண்டதோர் வேடத் தன்மை யுள்ளவா கூறக் கேட்டே
யண்டர்நா யகனா ரென்னை யறிவரோ லறியா வாய்மை
யெண்டிசை மாக்க ளுக்கியா னெவ்வுரு வாயே னென்பார்.

(இ-ள்.) பார்த்தவர்கள் அதிசயப்பட்டு அச்சமடைந்து அவரைவிட்டு ஓடுகின்றவர்களாய்த் தாமடைந்த பேய்வேடத்தின் தன்மையை அவர்கள் உள்ளபடிசொல்ல, அதனைப் புனிதவதியார்கேட்டு, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் என்னைத் தமது அடிமையென்று அறிவாராகில், இவ்வடிமைத்தன்மையின் நிலைமையை யறியாத எட்டுத்திக்கிலுள்ள மனிதர்களுக்கு யான் இப்பேயுருவன்றி வேறு எவ்வுருவடைந்தும் என்னபிரயோசனமென்று சொல்லுவார்.—எ-று.

எனது அடிமைத்தன்மையினுண்மையையுணர்ந்த சிவஞானிகளுக்கு எவ்வுருவாயிருப்பினும் சிறப்பேயாம்; அஃதுணராத இவ்வுலகினர்க்கு யான் தேவவுருவாயினும் பேயுருவாயினும் அதனால் ஒருபயனு மின்றென்பார் 'அறியாவாய்மை-யெண்டிசை மாக்களுக்கியா னெவ்வுரு வாயே னென்பார்' என்று கூறினார். விலங்கி னுணர்ச்சியையொத்த மூடவறிவினரென்பார் மக்கள் என்னாது மாக்கள் என்றுகூறினார். (௫௪)

வடதிசைத் தேச மெல்லா மனத்தினுங் கடிது சென்று
தொடையவி ழிதழி மாலைச் சூலபா ணியனார் மேவும்

படரொளிக் கயிலை வெற்பின் பாங்கணைந் தாங்குக் காலி
னடையினைத் தவிர்ந்து பார்மேற் றலையினா னடந்து சென்றார்.

(இ-ள்.) வடதிசையிலுள்ள கன்னடமுதலிய எல்லாத் தேசங்களையும் மனவேகத்திலும் அதிகவேகமாகநடந்து சென்று, கொத்தாகவிரிந்த கொன்றை மாலையைத்தரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் பரவிய ஒளியையுடைய ஸ்ரீ கைலாசகிரியின் சமீபமாகப்போய், அவ்விடத்தில் காலால் நடந்து செல்லுதலை யொழிந்து பூமியின்மேல் தலையினால் நடந்துபோயினார், புனிதவதியார்.—எ-று.

சூலபாணிநாயனார்=சூலத்தைக் கையி லுடையவர். (ருரு)

தலையினா னடந்து சென்று சங்கர னிருந்த வெள்ளி
மலையின்மே லேறும் போது மகிழ்ச்சியா லன்பு பொங்கக்
கலையிளந் திங்கட் கண்ணிக் கண்ணுத லொருபா கத்துச்
சிலைநுத லிமய வல்லி திருக்கணோக் குற்ற தன்றே.

(இ-ள்.) தலையினால் நடந்துபோய்ச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கயிலாயமலையின்மேல் ஏறும்போது, மனமகிழ்ச்சியினாலே அன்பானது பொங்கும்படியாகக் கலைபொருந்திய இளம்பிறையை மாலையாகத்தரித்த சிவபெருமானுடைய வாமபாகத்தில் வீற்றிருந்தருளும் வில்லையொத்த புருவத்தையுடைய உமாதேவியாரது திருக்கண்ணோக்கத்திற்குப் புனிதவதியார் தலையினால் நடந்துவந்தது காணப்பட்டது.—எ-று. (ருசு)

அம்பிகை திருவுள் ளத்தி னதிசயித் தருளித் தாழ்ந்து
தம்பெரு மானை நோக்கித் தலையினா னடந்திங் கேறும்
எம்பெரு மானோ ரெற்பின் யாக்கையன் பென்னே யென்ன
நம்பெரு மாட்டிக் கங்கு நாயக னருளிச் செய்வான்

(இ-ள்.) உமாதேவியார் திருவுள்ளத்தில் அதிசயமடைந்து, தமது நாயகராகிய சிவபெருமானைப்பார்த்து வணங்கி,எமது பெருமானே! தலையினால் நடந்து இக்கயிலாசகிரியில் ஏறிவருகின்ற ஒரு எலும்புடம்பையுடைய பைசாசத்தினது அன்பின்பெருமை என்னவென்று கேட்க, நமது பெருமாட்டியாராகிய உமாதேவியாருக்கு அவ்விடத்தில் சிவபெருமான் அருளிச்செய்வாராயினார்.—எ-று. ()

வருமிவ ணம்மைப் பேணு மம்மைகா ணுமையே மற்றிப்
பெருமைசேர் வடிவும் வேண்டிப் பெற்றன ளென்று பின்னை
யருகுவந் தடைய நோக்கி யம்மையே யென்னுஞ் செம்மை
யொருமொழி யுலக மெல்லா முய்யவே யருளிச் செய்தார்.

(இ-ள்.) உமையவளே! இங்குத் தலையால்நடந்து வருகின்ற இவள் நம்மை விரும்பித் துதிக்கும் புனிதவதியம்மையார்; இந்தப் பெருமைபொருந்திய பேய்வடிவத்தையும் தான்வேண்டியே பெற்றுக்கொண்டாள் என்று அருளிச்செய்து, பின்பு அப்புனிதவதியார் தமக்குச் சமீபமாகவந்து நிற்க, அவளைப்பார்த்து, "அம்மையே" என்று அழைக்கும் செம்மையாகிய ஒரு திருவாக்கை உலகமெல்லாம் கடைத்தேறும்படி அருளிச்செய்தார்.—எ-று. (ருஅ)

அங்கண னம்மை யேயென் றருள்செய வப்பா வென்று
பங்கயச் செம்பொற் பாதம் பணிந்து வீழ்ந் தெழுந்தார் தம்மைச்

சங்கவெண் குழையி னுருந் தாமெதிர் நோக்கி நம்பால்
இங்குவேண் டுவதெ னென்ன விறைஞ்சிநின் றியம்பு கின்றார்.

(இ-ள்.) சிவபெருமான் அவரைப்பார்த்து "அம்மையே" என்று அழைத்தருள, அதற்குப் பதிலுத்தரமாக "அப்பா" என்று சொல்லிக்கொண்டே செந்தாமரைமலர்போன்ற அழகிய திருவடிகளில் விழுந்து வணங்கி யெழுந்த அவ்வம்மையாரை வெண்மையாகிய சங்கக்குழையையணிந்த சிவபெருமானும் நேராகப்பார்த்து, நம்மிடத்தில் இங்கு உனக்கு வேண்டிய வரம் என்னவென்று கேட்க, புனிதவதியார் வணங்கி நின்றுகொண்டு சொல்லத்தொடங்கினார்.—எ-று. (ருக)

இறவாத வின்ப வன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
பிறவாமை வேண்டு மீண்டும் பிறப்புண்டே லும்மை யென்று
மறவாமை வேண்டு மின்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி
யறவாநீ யாடும் போதுன் னடியின்கீ ழிருக்க வென்றார்.

(இ-ள்.) அழிவில்லாத பேரின்பமயமாகிய அன்பை வேண்டிப் பின்னும் வேண்டுகின்றார்; இவ்வுலகத்தில் பிறவாதிருத்தல்வேண்டும்; இருவினைவசத்தால் மறுபடியும் பிறப்புண்டாயிருப்பினும், தேவரீரை ஒருகாலமும் மறவாதிருத்தல் வேண்டும்; இன்னும் ஒருவரம், தருமசொரூபியாகிய எம்பெருமானே! தேவரீர் ஆனந்தத்தாண்டவஞ் செய்யும்பொழுது அடியேன் மனமகிழ்ந்து பாடிக்கொண்டு உமது திருவடியின்கீழிருக்கவேண்டுமென்றார்; புனிதவதியார்.—எ-று. (சுo)

கூடுமா றருள்கொ டுத்துக் குலவுதென் றிசையி னின்று
நீடுவாழ் பழன மூதூர் நிலவிய வாலங் காட்டில்
ஆடுமா நடமு நீகண் டானந்தஞ் சேர்ந்தெப் போதும்
பாடுவாய் நம்மை யென்றான் பரவுவார் பற்றாய் நின்றான்.

(இ-ள்.) தம்மைத் துதிக்கும் அடியார்களுக்குத்துணையாயிருந்து அருள்புரியும் சிவபெருமான் புனிதவதியார்கேட்டவரங்கள் பொருந்தும்படி கிருபைசெய்து,விளங்குகின்ற தென்றிசையில் நிலைபெற்று நீடூழிவாழ்கின்ற வயல்கள் சூழ்ந்த பழையவூரர் திருவாலங்காட்டில் நாம் ஆடியருளும் ஊர்த்ததாண்டவத்தையும் நீ தரிசித்துப் பேரானந்த மடைந்து,எப்பொழுதும் நம்மைப்பாடுவாயாக வென்று அருளிச்செய்தார்.—எ-று. (சுக)

அப்பரி சருளப் பெற்ற வம்மையுஞ் செம்மை வேத
மெய்ப்பொரு ளானார் தம்மை விடைகொண்டு வணங்கிப் போந்து
செப்பரும் பெருமை யன்பாற் றிகழ்திரு வாலங் காடா
நற்பதி தலையி னாலே நடந்துபுக் கடைந்தா ரன்றே.

(இ-ள்.) அவ்வாறு சிவபெருமான் அருளியவரத்தைப்பெற்ற காரைக்காலம்மையாரும், செம்மையாகிய வேதத்திற்கூறும் உண்மைப்பொருளாகிய ஆண்டவரை நமஸ்கரித்து அநுமதிபெற்றுக்கொண்டு திரும்பி, சொல்லுதற்கரியபெருமையோடு கூடிய அன்பினால் விளங்குகின்ற திருவாலங்காடென்னும் நல்ல திருப்பதியைத் தமது தலையினாலே நடந்துபோய்ச் சேர்ந்தார்.—எ-று. (சுஉ)

ஆலங்கா டதனி னண்ட முறநிமிர்ந் தாடு கின்ற
கோலங்காண் பொழுது கொங்கை திரங்கியென் றெடுத்துத் தங்கு
மூலங்காண் பரியார் தம்மை மூத்தநற் பதிகம் பாடி
ஞாலங்கா தலித்துப் போற்று நடம்போற்றி நண்ணு நாளில்

(இ-ள்.) திருவாலங்காட்டில் அண்டத்தை அளாவும்படி திருவடியைத் தூக்கி ஊர்த்ததாண்டவஞ்செய்தருளுகின்றதிருக்கோலத்தைத்தரிசித்தபொழுது, "கொங்கைதிரங்கி" என்று முதலில் எடுத்து, அநாதிநித்தியராகிய சிவபெருமானைக்குறித்து, "மூத்ததிருப்பதிகம்" பாடியருளி, உலகத்திலுள்ளவர்கள் விரும்பித் துதிக்கின்ற திருநடனத்தைப் போற்றிசெய்திருக்குநாளில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (அ௩)

**மூத்ததிருப்பதிகம் – பண் – நட்டபாஷை.**

திருச்சிற்றம்பலம்.

கொங்கைதிரங்கிநரம்பெழுந்துகுண்டுகண்வெண்பற்குழிவயிற்றுப்
பங்கிசிவந்திருபற்கணீண்டுபரடுயர்நீள்கணைக்காலோர்பெண்பேய்
தங்கியலறியுலறுகாட்டிற்றாழ்சடையெட்டுத்திசையும்வீசி
யங்கங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே.

ஒப்பிணையில்லவன்பேய்கள்கூடியொன்றினையொன்றடித்தொக்கலித்துப்
பப்பிணையிட்டுப்பகண்டைபாடப்பாடிருந்தந்நரியாழமைப்ப
வப்பனையணிதிருவாலங்காட்டெடிகளைச்செடிதலைக்காரைக்காற்பேய்
செப்பியசெந்தமிழ்பத்தும்வல்லார்சிவகதிசேர்ந்தின்பமெய்துவாரே.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

மட்டவிழ்கொன் றையினார்தந் திருக்கூத்து முன்வணங்கும்
இட்டமிகு பெருங்காத லெழுந்தோங்க வியப்பெய்தி
யெட்டியில வம்மீகை யெனவெடுத்துத் திருப்பதிகங்
கொட்டமுழ வங்குழக னாடுமெனப் பாடினார்.

(இ-ள்.) தேன்சிந்துகின்ற கொன்றைப்பூமாலையைத்தரித்த சிவபெருமானுடைய திருநடனத்தை முன்னேநின்று தரிசிக்கும் ஆசைமிகுந்த பேரன்பானது மனதில் எழுந்து வளர்ந்தோங்க, அதிசயமடைந்து "எட்டியிலவமீகை" என்று முதலில் எடுத்துத் திருப்பதிகத்தைக் "கொட்டமுழவங் கூளிபாடக் குழகனாடுமே" என்று பாடியருளினார்.—எ-று. (அ௪)

## மூத்ததிருப்பதிகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டியிலவமீகைசூரைகாரைபடர்ந்தெங்குஞ்
சுட்டசுடலைசூழ்ந்தகள்ளிசோர்ந்தகுடர்கவ்வப்
பட்டபிணங்கள்பரந்தகாட்டிற்பறைபோல்விழிகட்பேய்
கொட்டமுழவங்கூளிபாடக்குழகனாடுமே.

சூடுமதியஞ்சடைமேலுடையர்சுழல்வர்திருநட்டம்
ஆடுமரவமரையிலார்த்தவடிகளருளாலே
காடுமலிந்தகனல்வாயெயிற்றுக்காரைக்காற்பேய்தன்
பாடல்பத்தும்பாடியாடப்பாவநாசமே.

திருச்சிற்றம்பலம்.

மடுத்தபுனல் வேணியினா ரம்மையென மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவியதாண் டவத்தினவர்
எடுத்தருளுஞ் சேவடிக்கீ ழென்றுமிருக் கின்றாரை
யடுத்தபெருஞ் சீர்பரவ லாரளவா யினதம்மா.

(இ-ள்.) கங்கைநீர் பெருகுகின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் "அம்மையே" என்று மதுரம்பொருந்திய திருவாக்குக்கொடுத்து அழைக்கப் பெற்றவரும், விளங்குகின்ற ஊர்த்ததாண்டவத்தில் அவ்வெம்பெருமான் தூக்கிய திருவடி நிழற்கீழ் எக்காலத்து மிருக்கப்பெற்றவருமாகிய காரைக்காலம்மையாரை அடுத்த பெரும்புகழைத் துதித்தல் யார்புத்திக்கு அளவுபடும்; (ஒருவர்க்கும் அளவுபடாது).—எ-று.

அம்மா என்பது வியப்பிடைச்சொல். (௬௫)

### வே று.

ஆதியோ டந்த மில்லா னருணட மாடும் போது
கீதமுன் பாடு மம்மை கிளரொளி மலர்த்தாள் போற்றிச்
சீதநீர் வயல்சூழ் திங்க ளூரினப் பூதி யாராம்
போதமா முனிவர் செய்த திருத்தொண்டு புகல லுற்றேன்.

(இ-ள்.) ஆதியு மந்தமுமில்லாத சிவபெருமான் அருண்மயமாகிய ஊர்த்த தாண்டவஞ் செய்யும்பொழுது அவர்திருமுன்னே நின்று கீதத்தைப்பாடி யருளுகின்ற காரைக்காலம்மையாருடைய விளங்குகின்ற ஒளிபொருந்திய தாமரைமலர் போன்ற திருவடிகளைத் துதித்து, குளிர்ந்த நீர்வளம்பொருந்திய வயல்கள்சூழ்ந்த திங்களூரில் வாழும் அப்பூதியடிகளாயனார் என்னும் சிவஞானம் நிறைந்த முனிவர்செய்த திருத்தொண்டின் சிறப்பைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

காரைக்காலம்மையார்புராணம்-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் ௯௭௭.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அப்பூதியடிகணாயனார்புராணம்.

தாண்டவம் புரிய வல்ல தம்பிரா னாருக் கன்பர்
ஈண்டிய புகழின் பாலா ரெல்லையில் குணத்தின் மிக்கார்
ஆண்டசீ ரரசின் பாத மடைந்தவ ரறியா முன்னே
காண்டகு காதல் கூரக் கலந்தவன் பினரா யுள்ளார்.

(இ-ள்.) ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் சிவபெருமானுக்கு அன்பராயுள்ளவர்; மிகுந்த பெரும்புகழையுடையவர்; அளவில்லாத நற்குணத்திற் சிறந்தவர்; நம்மை அடிமையாகவுடைய சிறப்புப்பொருந்திய திருநாவுக்கரசுசுவாமிகளது திருவடிகளையடைந்து, அவர்தம்மை யறிவதற்கு முன்னமே யாவரும் காணத்தகுந்த பேரன்பானது அதிகரிக்கத் தம்மிடத்துப் பொருந்திய அன்பினராயுள்ளவர்.—எ-று.

ஆண்டசீரரசு என்பதற்கு, சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்பட்ட சிறந்த திருநாவுக்கரசு எனினும் பொருந்தும்.

களவுபொய் காமங் கோப முதலிய குற்றங் காய்ந்தார்
வளமிகு மனையின் வாழ்க்கை நிலையினர் மனைப்பா லுள்ள
அளவைக ணிறைகோல் மக்க ளாவொடு மேதி மற்றும்
உளவெலா மரசி னாமஞ் சாற்றுமவ் வொழுக்க லாற்றார்.

(இ-ள்.) பிறர்பொருளைத்திருடுதல்-பொய்வார்த்தைசொல்லுதல்-பிறர்மனைவியை விரும்புதல் - கோபங்கொள்ளுதல் முதலாகிய மனக்குற்றங்களை யொழித்தவர்; வளம்பொருந்திய இல்லறவாழ்க்கையில் ஒழுகும் நிலைமையை யுடையவர்; தமது வீட்டிலிருக்கின்ற நாழி-மரக்கால் முதலிய முகத்தலளவைக் கருவிகளும், எடுத்தளக்கும் நிறைகோலும், புத்திரர்களும், பசுக்களும், எருமைகளும், மற்றுமுள்ள பொருள்களுமாகிய எல்லாவற்றிற்கும் திருநாவுக்கரசுசுவாமிகளது திருநாமத்தை இட்டுவழங்கும் நல்லொழுக்கநெறியில் நிற்கின்றவர்.—எ-று.

முதலிய வென்றதனால், அழுக்காறு அவா முதலியனவுங்கொள்க.

வடிவுதான் காணா ராயு மன்னுசீர் வாக்கின் வேந்தர்
அடிமையுந் தம்பி ரானா ரருளுங்கேட் டவர்நா மத்தாற்
படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தர்கண் முதலா யுள்ள
முடிவிலா வறங்கள் செய்து முறைமையால் வாழு நாளில்.

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்பினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருவுருவத்தைக் காணாதவராயிருந்தும், அவர்செய்யும் அடிமைத்திறத்தையும், அவர்க்கு எமது சிவபெருமான்செய்யும் திருவருளின் பிரபாவத்தையும் கேள்விப்

பட்டு, (அவரிடத்துவைத்த அன்பினால்) அவருடைய திருநாமத்தினால் உலகத்தில் சிறப்புற்றுவிளங்கும் திருமடங்கள் - தண்ணீர்ப்பந்தல்கள் முதலிய கெடாத தருமங்களைச்செய்து முறைமையோடு வாழ்ந்துகொண்டிருக்குநாளில்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௩)

### வேறு.

பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிற்றின்
திருப்பழனம் பணிந்துபணி செய்திருநா வுக்கரசர்
ஒருப்படுகா தலிற்பிறவு முடையவர்தம் பதிவணங்கும்
விருப்பினுடன் றிங்களூர் மருங்குவழி மேவுவார்.

(இ-ள்.) பர்வதராஜபுத்திரியாகிய பார்வதிதேவியாரோடு வீற்றிருந்தருளும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பழனமென்னுந் திருப்பதியை வணங்கித் திருத்தொண்டுசெய்கின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் ஒருமைப்பட்ட பேரன்பினால் நம்மை அடிமையாகவுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றைத் திருப்பதிகளையும் வணங்கவேண்டுமென்னும் விருப்பத்தோடு திங்களூரின் சமீபத்திலுள்ள வழியில் போகின்றவராய்.—எ-று.

மடப்பிடி = இளமைபொருந்திய பெண்யானை ; சிவக்களிறு = சிவமாகிய ஆண்யானை. (௪)

அளவில்சனஞ் செலவொழியா வழிக்கரையி லருளுடையார்
உளமனைய தண்ணளித்தா யுறுவேனிற் பரிவகற்றிக்
குளநிறைந்த நீர்த்தடம்போற் குளிர்தூங்கும் பரப்பினதாய்
வளமருவு நிழற்றருதண் ணீர்ப்பந்தர் வந்தணைந்தார்.

(இ-ள்.) அளவில்லாத சனங்கள் இடைவிடாமல் போய்க்கொண்டிருக்கும் வழியருகில் காருண்ய புருஷராகிய அப்பூதியடிகளுயனாரது திருவுள்ளம் போன்ற மிகுந்த குளிர்ச்சியுடையதாய்க் கொடுமைபொருந்திய கோடையால் வரும் வெம்மையையொழித்து, நீர்நிறைந்த தாமரைத்தடாகம்போலக் குளிர்ச்சி மிகுந்திருக்கும் அதிக பரப்பினையுடையதாய் வளம்பொருந்திய நிழலைத்தருகின்ற தண்ணீர்ப்பந்தலில் வந்து சேர்ந்தருளினார் ; திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று.

வந்தணைந்த வாகீசர் மந்தமா ருதசீதப்
பந்தருட னமுதமாந் தண்ணீரும் பார்த்தருளிச்
சிந்தைவியப் புறவருவார் திருநாவுக் கரசெனும்பேர்
சந்தமுற வரைந்ததனை யெம்மருங்குந் தாங்கண்டார்.

(இ-ள்.) அங்கு எழுந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகள் சிறுதென்றல் வீசுகின்ற குளிர்ந்த தண்ணீர்ப்பந்தரோடு அமுதமயமாக விளங்குந் தண்ணீரையும் பார்த்தருளி, மனம் சந்தோஷிக்கும்படி வருகின்றவர் "திருநாவுக்கரசு" என்னும் தமது திருநாமத்தை அழகுபொருந்த எழுதியிருத்தலைத் தாம் எவ்விடத்திலும் பார்த்தருளினார்.—எ-று. (௫)

இப்பந்த ரிப்பெயரிட் டிங்கமைத்தா ரியாரென்றார்க்
கப்பந்த ரறிவார்க ளாண்டவர செனும்பெயரால்
செப்பருஞ்சீ ரப்பூதி யடிகளார் செய்தமைத்தார்
தப்பின்றி யெங்குமுள சாலேகுளங் காவென்றார்.

(இ-ள்.) (அங்குள்ளவர்களைப் பார்த்து) இந்தத் தண்ணீர்ப்பந்தருக்கு இத் "திருநாவுக்கரசு" என்னும் பெயரிட்டு அமைத்தவர்கள் யாவரென்று கேட்க, அத்தண்ணீர்ப்பந்தரின் வரலாற்றை யறிந்தவர்களாகிய அவ் வூரிலுள்ளவர்கள் திருநாவுக்கரசு என்னும் திருப்பெயரினால் சொல்லுதற் கரிய சிறப்பினையுடைய அப்பூதியடிகளாயனாரென்பவர் நன்றாக எவ்விடத்துமிருக்கின்ற தண்ணீர்ப் பந்தரும், தடாகங்களும் திருநந்தனவனங்களுமாகிய இவைகளைச் செய்து வைத்தாரென்று சொன்னார்கள்.—எ-று. (எ)

என்றுரைக்க வரசுகேட் டிதற்கென்னோ கருத்தென்று
நின்றவரை நோக்கியவ ரெவ்விடத்தா ரெனவினவத்
துன்றியநூன் மார்பருமித் தொல்பதியார் மனையின்கட்
சென்றனரிப் பொழுததுவுஞ் சேய்த்தன்று நணித்தென்றார்.

(இ-ள்.) அவர்கள் இவ்வாறு சொல்ல, அதனைத் திருநாவுக்கரசுசுவாமிகள் கேட்டு, இங்ஙனம் அமைத்திருப்பதற்கு அவர்கருத்து என்னவென்று நினைத்து, அங்கு நின்ற அவ்வூராரைப் பார்த்து, அவர் எவ்விடத்திலிருக்கின்றவர் என்று கேட்க, அவர்கள் நெருங்கிய பூணூலையணிந்த மார்பினையுடைய அவ்வப்பூதியடிகளாயனாரும் இந்தப் பழைமையாகிய ஊரிலுள்ளவரே; இப்பொழுதுதான் அவர் தம்வீட்டிற்குச் சென்றார்; அவ்வீடும் தூரமன்று; சமீபத்திலேயே யுள்ளதென்று சொன்னார்கள்.—எ-று. (அ)

அங்ககன்று முனிவரும்போ யப்பூதி யடிகளார்
தங்குமனைக் கடைத்தலைமுன் சார்வாக வுள்ளிருந்த
திங்களூர் மறைத்தலைவர் செழுங்கடையில் வந்தடைந்தார்
நங்கள்பிரான் றமரொருவ ரெனக்கேட்டு நண்ணினார்.

(இ-ள்.) உடனே திருநாவுக்கரசுசுவாமிகளும் அவ்விடத்தினின்றும் நீங்கிச்சென்று, அப்பூதியடிகளாயனார் வாசஞ்செய்கின்ற திருமாளிகையின் தலைக்கடைவாசலின் முன்னேசேர, திருமாளிகையினுள்ளே யிருந்த பிராமணகுலசிரேஷ்டராகிய அப்பூதியடிகள் நமது சிவபெருமானுடைய அடியவரொருவர் அழகிய தலைவாயிலில் வந்துநிற்கின்றார் என்று அங்குள்ளவர்கள் சொல்லக்கேட்டு அவ்விடத்து வந்தார்.—எ-று. (கூ)

கடிதணைந்து வாகீசர் கழல்பணிய மற்றவர்த
மடிபணியா முன்பணியு மரசினெதி ரந்தணனார்
முடிவிறவஞ் செய்தேன்கொன் முன்பொழியுங் கருணைபுரி
வடிவுடையீ ரென்மனையில் வந்தருளிற் றென்னென்றார்.

(இ-ள்.) விரைவாகவந்து திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருவடிகளிலே நமஸ்கரிக்க, அவ்வப்பூதியடிகள் தமது திருவடிகளை வணங்குவதற்குமுன்னமே தாம் வணங்காநின்ற திருநாவுக்கரசுசுவாமிகளது திருமுன்னே அப்பூதியடிகளாயனார் நின்று, அடியேன் பூர்வத்தில் அளவற்ற பெருந்தவத்தைச்செய்தேனோ அறி

யேன் ; உயிர்களின்மேல் பொழிகின்ற கருணையே ஒன்ருகத்திரண்ட திருவுருவத்தையுடைய சுவாமீ! தேவரீர் அடியேனுடைய சிறுகுடிசையில் எழுந்தருளியது யாதுகாரணமென்று கேட்டார்.—எ-று. (௧௦)

ஒருகுன்ற வில்லாரைத் திருப்பழனத் துள்ளிறைஞ்சி
வருகின்ருேம் வழிக்கரையி னீர்வைத்த வாய்ந்தவளந்
தருகின்ற நிழற்றண்ணீர்ப் பந்தருங்கண் டத்தகைமை
புரிகின்ற வறம்பிறவுங் கேட்டணைந்தோ மெனப்புகல்வார்.

(இ-ள்.) (அதற்குத் திருநாவுக்கரசுசுவாமிகள்) ஒப்பற்ற மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானைத் திருப்பழனமென்னும் ஸ்தலத்தில் தரிசித்து வணங்கிக்கொண்டு இப்பொழுது வருகின்ருேம் ; வழியோரத்தில் நீர் வைத்திருக்கின்ற சிறந்தவளம்பொருந்திய நிழலைத்தருகின்ற தண்ணீர்ப்பந்தரையும்பார்த்து, அப்படியே நீர் செய்துவருகின்ற மற்றைத்தருமங்களையுங் கேள்வியுற்று உம்மைக் காணவிரும்பிவந்தோமென்று சொல்கின்றவராய்.—எ-று. (௧௧)

இதுமுத லிரண்டு பாடலுங் குளகம்.

ஆறணியுஞ் சடைமுடியா ரடியார்க்கு நீர்வைத்த
ஈறில்பெருந் தண்ணீர்ப்பந் தரினும்பே ரெழுதாதே
வேறொருபேர் முன்னெழுத வேண்டியகா ரணமென்கொல்
கூறுமென வெதிர்மொழிந்தார் கோதின்மொழிக் கொற்றவஞர்.

(இ-ள்.) கங்கைநதியைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானது அடியார்கள் இளைப்பாறும் பொருட்டு நீர்வைத்திருக்கின்ற முடிவில்லாதபெருமை பொருந்திய தண்ணீர்ப்பந்தரில் உம்முடையபெயரை எழுதாமல், வேறொருபெயரை முன்னேஎழுதவேண்டிய காரணம்யாதோ? அதனைச்சொல்லுமென்று எதிரில் சொன்னுர், குற்றமற்ற திருநாவுக்கரசுசுவாமிகள்.—எ-று. (௧௨)

நின்றமறை யோர்கேளா நிலையழிந்த சிந்தையராய்
நன்றருளிச் செய்திலீர் நாணிலமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூட்சி திருத்தொண்டி னுறைப்பாலே
வென்றவர்தந் திருப்பேரோ வேறொருபே ரெனவெகுள்வார்.

(இ-ள்.) (அவர் அவ்வாறு கூறிய வார்த்தையை) அங்குநின்ற அப்பூதியடிகள் கேட்டுத்தமது நிலைமை கலங்கிய மனமுடையவராய், நீர் நல்லவார்த்தையை அருளிச்செய்திலீர் ; சிறிதும் வெட்கமில்லாத பாதகர்களாகிய சமணர்களோடு சேர்ந்திருந்தபல்லவராஜன் செய்த விக்கினங்களைத் தாம் செய்யும் திருத்தொண்டின் வலிமையினலே ஜயித்த எமது திருநாவுக்கரசுசுவாமிகளது திருப்பெயரோ? வேறொருபெயரென்று கோபிப்பாராயினுர்.—எ-று. (௧௩)

நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
யிம்மையிலும் பிழைப்பதென வென்போல்வா ருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக் கரசர்திருப் பேரெழுத
வெம்மைமொழி யான்கேட்க விளம்பினீ ரெனவிளம்பி.

(இ-ள்.) நம்மை அடிமையாகவுடையசிவபெருமானது திருவடிகளில் விரும்பிய திருத்தொண்டு செய்யுங்காரணத்தினல் (மறுமையிலேயன்றி) இம்மையி

லும் பிழைக்கலாம் என்று என்போன்ற அறிவிலிகளும் தெளியும்பொருட்டு, நன்மைகளையே செய்கின்ற திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருப்பெயரைத் தண்ணீர்ப்பந்தர் - தடாகம் - திருநந்தனவனம் முதலியவைகளில் நான்எழுதிவைக்க, நீர் அதைச்சிறிதும்கவனியாமல் இந்தக்கொடுஞ்சொல்லை நான்கேட்கும்படி பேசினீர் என்று சொல்லி.—எ-று.

வெம்மைமொழியாவது - 'நம்பேரெழுதாதே - வேறொருபேர்முன்னெழுதவேண்டியகாரணமென்கொல்' என்று கேட்டதாம்.

இதுமுத லிரண்டு பாட்டுங் குளகம். (கச)

பொங்குகடற் கன்மிதப்பிற் போந்தேறு மவர்பெருமை
யங்கணர்தம் புவனத்தி லறியாதா ரியாருளரோ
மங்கலமாந் திருவேடத் துடனின்றிவ் வகைமொழிந்தீர்
எங்குறைவீர் நீர்தாமா ரியம்புமென வியம்பினார்.

(இ-ள்.) அலைகள்பொங்குகின்ற கடலில் சமணர்கள் கட்டிப்போட்ட கற்றூணுகிய தெப்பத்தைக்கொண்டு அக் கடலைக் கடந்து கரையேறிய திருநாவுக்கரசுசுவாமிகளது மகிமையை இந்தவுலகத்தில் அறியாதவர்கள் யாரிருக்கின்றார்கள் (ஒருவருமில்லை;) இங்ஙனமாக, மங்களகரமாகிய சிவனடியார் திருவேடத்தோடு எம்முன்னே நின்று இத்தகைய தகாதவார்த்தையைச் சொன்னீர்; நீர் எங்கே இருக்கின்றவர்; உம்முடைய பெயரென்ன எமக்குச்சொல்லுமென்று கேட்டார்.—எ-று.

அங்கணர்தம் புவனம் = சிவபெருமானது பரிக்கிரகசத்தியாகிய மாயையினின்றுங் காரியப்பட்ட புவனம். (கரு)

திருமறையோ ரதுமொழியத் திருநாவுக் கரசரவர்
பெருமையறிந் துரைசெய்வார் பிறதுறையி னின்றேற்ற
அருள்பெருக சூலையினு லாட்கொள்ள வடைந்துய்ந்த
தெருளுமுணர் வில்லாத சிறுமையேன் யானென்றார்.

(இ-ள்.) சிறந்த பிராமணசிரேஷ்டராகிய அப்பூதியடிகளுனார் அவ்வாறனவார்த்தைகளைச் சொல்லியருள, திருநாவுக்கரசுசுவாமிகள் அவ்வப்பூதியடிகளுனாருடைய அன்பின்பெருமையை யறிந்து சொல்லுவார், (அஃது என்னையெனின்) சமணசமயப் படுகுழியினின்றும் கரையேற்றும் பொருட்டுச் சிவபெருமான் தமது கருணைமிகுந்த சூலைநோயினால் தடுத்தாட்கொள்ள அதுகாரணமாக இச்சைவநெறியையடைந்து கடைத்தேறிய தெளிந்த உணர்ச்சியில்லாத சிறியேன் யானென்று என்று அருளிச்செய்தார்.—எ-று. (கசு)

அரசறிய வுரைசெய்ய வப்பூதி யடிகடாங்
கரகமல மிசைக்குவியக் கண்ணருவி பொழிந்திழிய
உரைகுழறி யுடம்பெல்லா முரோமபுள கம்பொலியத்
தரையின்மிசை விழுந்தவர்தஞ் சரணகம லம்பூண்டார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் தம்மைத் தெரிந்துகொள்ளும்படி தமது சரித்திரத்தைச் சொல்லியருள, அதனைக்கேட்ட அப்பூதியடிகளுனார் தாமரைமலர்போன்ற இரண்டு கைகளும் சிரசின்மேலே குவிய, கண்களினின்றும் அருவிபோலஆனந்தபாஷ்பம் சொரிய,உரைதடுமாறித் தேகமுழுவதும் உரோமஞ்

லிர்க்கப் பூமியில் விழுந்து அத்திருநாவுக்கரசுசுவாமிகளுடையஸ்ரீபாதாரவிந்தங் களைச் சிரசில் சூடிக்கொண்டார்.—எ-று. (கஎ)

மற்றவரை யெதிர்வணங்கி வாகீச ரெடுத்தருள
அற்றவர்க ளருநிதியம் பெற்றார்போ லருமறையோர்
முற்றவுளங் களிகூர முன்னின்று கூத்தாடி
யுற்றவிருப் புடன்சூழ வோடினார் பாடினார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் அப்பூதியடிகணாயனாரை எதிரேவணங்கித் தமது திருக்கரங்களால் எடுத்தருளவும், அரிய செல்வத்தைப்பெற்ற தரித்திரர்களைப்போல அப்பூதியடிகள் மிகுந்தமனக்களிப்படைந்து அவர்திருமுன்னே நின்று ஆனந்தக்கூத்தாடி மனதிற்பொருந்திய விருப்பத்தோடு வலமாக ஓடினார்; தோத்திரங்களைப் பாடினார்.—எ-று. (கஅ)

ஈண்டபெரு மகிழ்ச்சியினான் முன்செய்வ தறியாதே
மீண்டமனை யகத்தெய்தி யில்லவர்க்கு மக்களுக்கும்
ஆண்டவர செழுந்தருளு மோகையுரைத் தார்வமுறப்
பூண்டபெருஞ் சுற்றமெலாங் கொடுமீளப் புறப்பட்டார்.

(இ-ள்.) மனதிலுண்டாகிய சந்தோஷமேலீட்டினால் முன்னேசெய்யவேண்டியது இன்னது என்று அறியாமல், விரைவாகத் தமது திருமாளிகையிற்சென்று மனைவியாருக்கும் பிள்ளைகளுக்கும் திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்தருளி வந்த சந்தோஷசமாசாரத்தைச்சொல்லிப் பெருங்களிப்புண்டாகத் தம்மைச்சேர்ந்த பெரிய சுற்றத்தார்களையெல்லாம் அழைத்துக்கொண்டு மீண்டுவந்தார்.—எ-று.

மனைவியா ருடன்மக்கண் மற்றுள்ள சுற்றத்தோர்
அனைவரையுங் கொண்டிறைஞ்சி யாராத காதலுடன்
முனைவரையுள் ளெழுந்தருளு வித்தவர்தாண் முன்விளக்கும்
புனைமலர்நீர் தங்கண்மேற் றெளித்துள்ளும் பூரித்தார்.

(இ-ள்.) மனைவியாரும், பிள்ளைகளும், மற்றுமுள்ள சுற்றத்தார்களுமாகிய அனைவரையும் அழைத்துவந்து அவரை வணங்கச்செய்து, நீங்காத பெருமகிழ்ச்சியோடு திருநாவுக்கரசுசுவாமிகளைத்தமது திருமாளிகையினுள்ளே எழுந்தருளும்படிசெய்து, அவர் திருவடிகளை முன்னே விளக்கிய மலரமைந்த *பாத்திய நீரைத் தங்கள்மேல் தெளித்துக்கொண்டு உள்ளும்கொண்டார்கள்.—எ-று.

சிவஞானச் செல்வர்களுடைய பாதோதகத்தைத் தமது சிரமேற்றெளித்து உட்கொள்ளின் தாம் ஜன்மாந்தரங்களிற் செய்த தீவினையனைத்தும் ஒருங்கே கெடுமென்பதுகருதி "புனைமலர்நீர்தங்கண்மேற்றெளித்துள்ளும்பூரித்தார்" என்று கூறினார். இதனை,

"சித்து மசித்துஞ் சித்தசித்துந் தெளிந்த யோக வகம்பரம
முத்தி யளிக்குந் தேசிகன்றன் முளரிச் சரணக் கிரத்துதித்த
சுத்த தோயந் தனைவாங்கித் தொழுது சிரமேற் றெளித்தவர்தம்
புத்தி யுறுபா வாதிவினை போமக் கணத்திற் றிண்ணமதால்."—என்பதனானுணர்க. (உ0)

பாத்தியநீர்=காலலம்பக்கொடுக்கும் நீர்.

ஆசனத்திற் பூசனைக ளமர்வித்து விருப்பினுடன்
வாசநிறை திருநீற்றுக் காப்பேந்தி மனந்தழைப்பத்
தேசமுய்ய வந்தவரைத் திருவமுது செய்விக்கு
நேசமுற விண்ணப்பஞ் செயவவரு மதுநேர்ந்தார்.

(இ-ள்.) அவரை ஆசனத்தி லெழுந்தருளப்பண்ணி, விதிப்படி செய்யவேண்டிய அருச்சனைகளைச்செய்து, விருப்பத்தோடு வாசனைநிறைந்த விபூதிமடலை அவர் திருமுன்னே காட்டி, மனமகிழும்படி உலகத்திலுள்ளவர்கள் தீவினையினின்றும் கடைத்தேறும்பொருட்டு அவதரித்தருளிய திருநாவுக்கரசசுவாமிகளைத் திருவமுது செய்விக்கும்படியான அன்பு அதிகரித்தலால் அவரைப் பிரார்த்திக்க, அவரும் அதற்கு உடன்பட்டருளினர்.—எ-று. (உக)

வேறு.

செய்தவ ரிசைந்த போது திருமனை யாரை நோக்கி
யெய்திய பேறு நம்பா லிருந்தவா றென்னே யென்று
மைதிகழ் மிடற்றி னான்ற னருளினால் வந்த தென்றே
யுய்துமென் றுவந்து கொண்டு திருவமு தாக்க லுற்றார்.

(இ-ள்.) அருமையாகச் செய்த தவத்தினையுடைய திருநாவுக்கரசசுவாமிகள் திருவமுதுசெய்ய உடன்பட்டபொழுது, அப்பூதியடிகள் தமது மனைவியாரைப்பார்த்து, இவர் இவ்விடத்தில் எழுந்தருளுவதற் கேதுவான தவப்பயன் நம்மிடத்தி லிருந்தவண்ணம் என்ன ஆச்சரியமென்று சொல்லி, இது காளகண்டத்தையுடைய சிவபெருமானது திருவருளினாலேயே கிடைத்ததென்று நினைத்து, இனி இதனால் நாம் கடைத்தேறுவோமென்று மகிழ்ச்சி யடைந்து, திருவமுது சமைக்கத்தொடங்கினர்.—எ-று.

அப்பூதியடிகளும் தம் மனைவியாரோடு திருவமுது சமைத்தற் குதவியாயிருந்தனரென்பார் 'திருவமுதாக்கலுற்றார்' என்று கூறினர். (உஉ)

தூயநற் கறிக ளான வறுவகைச் சுவையா லாக்கி
யாயவின் னமுது மாக்கி யமுதுசெய் தருளத் தங்கள்
சேயவர் தம்மின் மூத்த திருநாவுக் கரசை வாழை
மேயபொற் குருத்துக் கொண்டு வாவென விரைந்து விட்டார்.

(இ-ள்.) பரிசுத்தமாகிய நல்ல கறியமுதுகளை அறுவகைச் சுவையோடு அமைத்து இனிமைபொருந்திய அன்னத்தையும் சமைத்து, பின் திருநாவுக்கரசசுவாமிகள் திருவமுதுசெய்தருளும்பொருட்டுத் தம்முடையபுத்திரர்களில் மூத்த திருநாவுக்கரசு என்னும் புதல்வனை வாழைமரத்திற் பொருந்திய அழகிய குருத்தை அரிந்துகொண்டு வாவென்று விரைவாக அனுப்பினர்.—எ-று. (உங)

நல்லதாய் தந்தை யேவ நானிது செயப்பெற் றேனென்
றொல்லையி லணைந்து தோட்டத் துட்புக்குப் பெரிய வாழை
மல்லலங் குருத்தை யீரும் பொழுதினில் வாள ராவொன்
றல்லலுற் றழுங்கி வீழ வங்கையிற் றீண்டிற் றன்றே.

(இ-ள்.) நற்குணமுடைய தாய் தந்தைகள் அனுப்ப,நான் இப்பணி செய்யப்பெற்றேனென்று, அம்மூத்ததிருநாவுக்கரசு விரைந்துபோய்த் தோட்டத்தினு

ள்ளே புகுந்து, பெரிய வாழைமரத்தினது வளம்பொருந்திய அழகிய குருத்தை அரியும்பொழுது ஒளியினையுடைய ஒரு பாம்பானது அப்புதல்வன் துயரமுற்று மயங்கிவிழும்படி அவனது அழகிய கையில் கடித்தது.—எ-று. (உச)

கையினிற் கவர்ந்து சுற்றிக் கண்ணெரி கார்ந்து கின்ற
பையரா வுதறி வீழ்த்துப் பதைப்புடன் பாந்தள் பற்றும்
வெய்யவே கத்தால் வீழா முன்னம்வே கத்தா லெய்திக்
கொய்தவிக் குருத்தைச் சென்று கொடுப்பனென் றோடி வந்தான்.

(இ-ள்.) கையில் கடித்துச் சுற்றிக்கொண்டு கண்ணினின்றும் கோபத்தீயைச்சொரிகின்ற படத்தையுடைய பாம்பை யுதறிக் கீழே தள்ளி, பதைப்பைப்புடனே பாம்பு கடித்த கொடிய வேகத்தினாலே நிலத்தில் வீழுமுன்னே வேகத்தோடு ஓடி அரிந்த இந்த வாழைக்குருத்தைக் கொண்டுபோய்க் கொடுப்பேனென்று ஓடிவந்தான்.—எ-று. (உரு)

பொருந்திய விடவே கத்திற் போதுவான் வேக மூந்த
வருந்தியே யணையும் போழ்து மாசுணங் கவர்ந்த தார்க்கும்
அருந்தவ ரமுது செய்யத் தாழ்க்கயா னுறையே னென்று
திருந்திய கருத்தி னோடுஞ் செழுமனை சென்று புக்கான்.

(இ-ள்.) தன்னைக்கடித்த பாம்பின் விஷவேகத்தோடு ஓடுகின்ற அம்மூத்த திருநாவுக்கரசு, விஷவேகமானது அதிகரித்தலால் வருந்தி வீட்டையடையும்பொழுது, என்னைப் பாம்புகடித்ததை, அரிய தவத்தையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்யத் தடைபடும்வண்ணம் ஒருவருக்குஞ் சொல்லமாட்டேனென்று நிச்சயித்த எண்ணத்தோடு வளந்தங்கிய திருமாளிகையில் போய்ப்புகுந்தான்.—எ-று. (உசா)

எரிவிட முறையே யேறித் தலைக்கொண்ட வேழாம் வேகந்
தெரிவுற வெயிறுங் கண்ணு மேனியுங் கருகித் தீந்து
விரியுளை குழறி யாவி விடக்கொண்டு மயங்கி வீழ்வான்
பரிகலக் குருத்தைத் தாயார் பால்வைத்துப் படிமேல் வீழ்ந்தான்.

(இ-ள்.) தீப்போல் எரிகின்ற விஷமானது வரிசையாக ஏறித் தலைக்கொண்ட ஏழாம்வேகமானது தெரியும்படிக்குப் பற்களும், கண்களும், சரீரமும் கருகித் தீந்து, விரிந்த சொற்கள் தடுமாறிப் பிராணன் நீங்கும்படி மயங்கி விழுகின்றவன் தான் அரிந்துகொண்டுவந்த அந்தவாழைக்குருத்தைத் தாயார் கையில் கொடுத்துப் பூமியில் விழுந்தான்.—எ-று.

பாம்பின் விடவேகமானது, வாதபித்தசிலேத்தும பேதங்களால் மூன்று வகைப்படும்; அவை அவஸ்தாபேதத்தால், வாதத்தில் எட்டும்,பித்தத்தில் பத்தும், சிலேத்துமத்தில் பத்துமாகிய வகையினைப்பெறும் ; அவ்வாதவேகம் எட்டனுள் ஒன்றில் மூர்ச்சித்து வெயர்வரும்புதலும், இரண்டில் வெதும்புதலும், மூன்றில் கண் எறிச்செருகுதலும், நான்கில் வாந்தி செய்தலும்,ஐந்தில் கோழை கட்டுதலும், ஆறில் புத்தி மயங்குதலும்,எழில் தேகம் மரத்தலும், எட்டில் உயிர் நீங்குதலுமாம். ஆகவே, ஈண்டு அப்பூதியடிகணாயனாருடைய புத்திரன் 'ஏழாம் வேகந் - தெரிவுற வெயிறுங் கண்ணு மேனியுங் கருகித்தீந்து - விரியுளைகுழறியாவி விடக்கொண்டு மயங்கிவீழ்வான்' என்றதனால், வாதவேகத்தா லிறந்தானென்பது பெறப்பட்

டது. இப்புத்திரனுக்கு அவ்விடவேகம் முறையே ஏறினும், எமது திருநாவுக்கரசு சுவாமிகள் திருவமுது செய்யவேண்டுமென்று தனதுள்ளத்தமர்ந்த அன்பின் மிகுதியால் முன்னுள்ள ஆறுவேகங்களின் அவஸ்தைகள் சிறிதுந் தோன்றாது தனது தாயாரிடத்தில் பரிகலக்குருத்தைக் கொடுத்தமாத்திரத்தில் கடந்த ஆறுவேகத்தினவஸ்தைகளோடு ஏழாம் வேகத்தினவஸ்தையும் தலைக்கேறி மயங்கிவிழுந்து, எட்டாம் வேகத்தாலிறந்தனனென வறிக. (உஎ)

தளர்ந்துவீழ் மகனைக் கண்டு தாயருந் தந்தை யாரும்
உளம்பதைத் துற்று நோக்கி யுதிரஞ்சோர் வடிவு மேனி
விளங்கிய குறியுங் கண்டு விடத்தினால் வீந்தா னென்று
துளங்குத லின்றித் தொண்ட ரமுதுசெய் வதற்குச் சூழ்வார்.

(இ-ள்.) மயங்கி விழுந்த புதல்வனைக் கண்டு அப்பூதியடிகளும் அவர் மனைவியாரும் மனம்பதைத்து நன்றாகப் பார்த்து, உதிரம் சிந்துகின்ற உடம்பையும், அவ்வுடம்பில் விளங்கித் தோன்றுகின்ற (கருகித் தீந்த) குறியையுங் கண்டு, இவன் பாம்பின் விஷவேகத்தால் இறந்தானென்று அதனால் மனம் வருந்தாமல் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுதுசெய்வதற்கு நினைக்கின்றவர்களாய்.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (உஅ)

பெறலரும் புதல்வன் றன்னைப் பாயினுட் பெய்து மூடிப்
புறமனை முன்றிற் பாங்கோர் புடையினின் மறைத்து வைத்தே
யறவிது தெரியா வண்ண மமுதுசெய் விப்போ மென்று
விறலுடைத் தொண்ட ரூர்பால் விருப்பொடு விரைந்து வந்தார்.

(இ-ள்.) பெறுதற்கரிய மூத்ததிருநாவுக்கரசு என்னும் புதல்வனைப் பாயில்வைத்து மூடி, வீட்டின்புறத்திலுள்ள முற்றத்தின் ஓர் பக்கத்திலே ஒருவருமறியாமல் மறைத்துவைத்துவிட்டு, இச் செயல் முழுவதும் திருநாவுக்கரசுசுவாமிகள் அறியாதபடி, அவருக்குத் திருவமுது செய்விப்போமென்று, அன்பின் வலிமையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளிடத்தில் ஆசையோடு விரைவாகவந்தார். ()

கடிதுவந் தமுது செய்யக் காலந்தாழ்க் கின்ற தென்றே
யடிசிலுங் கறியுமெல்லா மழகுற வமைய வைத்துப்
படியில்சீர்த் தொண்டர் முன்பு பணிந்தெழுந் தமுது செய்தெங்
குடிமுழு துய்யக் கொள்வீ ரென்றவர் கூறக் கேட்டு.

(இ-ள்.) எமது திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுதுசெய்வதற்குக் காலதாமசமாகின்றதென்று விரைவாக வந்து, அன்னமும் பதார்த்தங்களுமாகிய எல்லாவற்றையும் அழகாக ஓரிடத்தில் சூழவைத்து, ஒப்பற்ற சிறப்பினை யுடைய திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு முன்னே வணங்கி யெழுந்து,தேவரீர் திருவமுதுசெய்து எமது குடியிலுள்ள மூவேழ்சுற்றத்தினரும் கடைத்தேறும்படி திருவுள்ளங்கொண்டருள்வீரென்று அப்பூதியடிகள் பிரார்த்திக்க, அதனைத் திருநாவுக்கரசுசுவாமிகள்கேட்டு.—எ-று.

மூவேழ் சுற்றமாவன,—தந்தைமரபு ஏழும், தாய்மரபு ஏழும்,மனைவிமரபு ஏழும் ஆம். புருஷனாகப்பிறந்தவன் தனது மூவேழ்சுற்றத்தினரும் புனிதராய் வீடடையச்செய்தலே நல்லறமென்பார் 'எங்குடிமுழு துய்யக் கொள்வீர்' என்று கூறினார். இதனை,

"மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
யாழா மேயரு ளரசே போற்றி."—என்னுந் திருவாசகத் திருமுறையா
னுணர்க.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கூ0)

அருந்தவ ரெழுந்து செய்ய வடியிணை விளக்கி வேறோர்
திருந்துமா சனத்தி லேறிப் பரிகலந் திருத்து முன்னர்
இருந்துவெண் ணீறு சாத்தி யில்லுடை யிருவ ருக்கும்
பொருந்திய நீறு நல்கிப் புதல்வர்க்கு மளிக்கும் போழ்தில்.

(இ-ள்.) அரிய தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்து தமது சிவந்த திருவடிகளைச்சுத்திசெய்துகொண்டு திருத்தமாகிய வேறொரு ஆசனத்தில் எழுந்தருளி, அப்பூதியடிகள் பரிகலத்தைத் திருத்துவதற்கு முன்னே அங்கிருந்து விபூதிதரித்து, அவ்வீட்டில்வாழ்கின்ற அப்பூதியடிகளுயனாருக்கும் அவர் மனைவியாருக்கும் மகிமைதங்கிய விபூதியைக் கொடுத்துப் புதல்வர்களுக்கும் கொடுக்கும் சமையத்தில்.—எ-று. (கூக)

ஆதிநான் மறைநூல் வாய்மை யப்பூதி யாரை நோக்கிக்
காதலா லிவர்க்கு மூத்த சேயையுங் காட்டு கென்ன
மேதகு பூதி சாத்த வென்றலும் விளைந்த தன்மை
யாதுமொன் றுரையா ரிப்போ திங்கவ னுதவா னென்றார்.

(இ-ள்.) முதன்மையாகிய நான்குவேதங்களிலும் கூறுகின்ற மெய்ம்மையையுணர்ந்த அப்பூதியடிகளுயனாரைப்பார்த்து விருப்பத்தோடு இவர்களுக்கு மூத்தபுதல்வனையும் மேன்மைபொருந்திய விபூதிசாத்துதற்குக்காட்டுவீராகவென்று அருளிச்செய்யவும், அவர் நடந்தசெய்திகள் ஒன்றையும் சொல்லாதவராய் இப்பொழுது அப்புதல்வன் இங்கே உதவான்என்று கூறினர்.—எ-று. (கூ௨.)

அவ்வுரை கேட்ட போதே யங்கண ரருளா லன்பர்
செவ்விய திருவுள் ளத்தோர் தடுமாற்றஞ் சேர நோக்கி
யிவ்வுரை பொறாதென் னுள்ள மென்செய்தா னிதற்கொன் றுண்டால்
மெய்விரித் துரையு மென்ன விளம்புவார் விதிர்ப்புற் றஞ்சி.

(இ-ள்.) அப்புதல்வன் உதவான்என்று அப்பூதியடிகள் கூறியவார்த்தையைத் திருநாவுக்கரசுசுவாமிகள் கேட்டவுடனே சிவபெருமானுடைய திருவருளினால் தம்முடைய நல்ல திருவுள்ளத்திலே ஒருதடுமாற்றந்தோன்ற, அப்பூதியடிகளுயனாரைப்பார்த்து நீர்சொல்லுகின்ற இந்தவார்த்தையை என்னுடைய மனமானது பொறுக்கலாற்றாது; அப்புதல்வன் என்னசெய்தான்; இதற்குச்செய்யத்தக்க தீர்வு ஒன்றிருக்கின்றது; நீர் உண்மையைவிரித்துச் சொல்லுமென்றுகேட்க, அப்பூதியடிகள் தேகம்நடுங்கி அச்சமுற்றுச் சொல்வாராயினர்.—எ-று.

புதல்வன் உயிர்பெறுதற்கும், அவன் விபூதிதரிக்கவேண்டுமென்னுந் தங் கருத்து முற்றுப்பெறுதற்கும் சிவபெருமானது தமது திருவருளால் திருவுள்ளத்தில் ஓர்தடுமாற்றஞ்சேர்ந்ததெனவறிக. 'அன்பர்செவ்விய திருவுள்ளத்தோர் தடுமாற்றஞ்சேரநோக்கி' என்பதற்கு-அப்பூதியடிகளுடைய திருவுள்ளத்தில் ஒரு துயரமிருத்தலைத் திருநாவுக்கரசுசுவாமிகள் பார்த்து, என்றுரைப்பினும் பொருந்தும்.

பெரியவ ரமுது செய்யும் பேறிது பிழைக்க வென்றே
வருவதென் றுரையா ரேனு மாதவர் வினவ வாய்மை
தெரிவுற வுரைக்க வேண்டுஞ் சீலத்தாற் சிந்தை நொந்து
பரிவொடு வணங்கி மைந்தற் குற்றது பகர்ந்தா ரன்றே.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுதுசெய்யத்தக்கதாகிய இப்பேற்றை இழக்கும்படி யாதுவருவதோவென்று சொல்லாதொழிந்தாரேனும், சிறந்த தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் கேட்க உண்மையையவர்அறியும்படி சொல்லவேண்டுமென்னும் ஒழுக்கத்தால் மனம்நொந்து துயரத்தோடு வணங்கி, தமதுபுதல்வனுக்கு நேர்ந்த கெடுதியை எடுத்துச்சொன்னார்.—எ-று.

ஜகதாசாரியமூர்த்திகளாயெழுந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகள் வினவுங்கால் உண்மை கூறாதொழியின் நிரயத் துன்பமெய்துறுமென்னுங் கருத்தால், வணங்கிமைந்தற் குற்றது கூறினரென்க. (௩௪)

நாவினுக் கரசர் கேளா நன்றுநீர் மொழிந்த வண்ணம்
யாவரித் தன்மை செய்தா ரென்றுமுன் னெழுந்து சென்றே
யாவிதீர் சவத்தை நோக்கி யண்ணலா ரருளும் வண்ணம்
பாவிசைப் பதிகம் பாடிப் பணிவிடம் பாற்று வித்தார்.

(இ-ள்.) (அப்புதல்வன் விஷந்தீண்டியிறந்தானென்று அப்பூதியடிகள்கூறிய செய்தியைத்) திருநாவுக்கரசுசுவாமிகள்கேட்டு,அவன் இங்கு உதவானென்று நீர்சொல்லியவார்த்தை நன்றாயிருக்கின்றது; இத்தன்மையானசெய்கையைவேறே யார்செய்தார்களென்று சொல்லிக்கொண்டு முன்னே விரைவாகஎழுந்துபோய் உயிர் நீங்கிக்கிடக்கின்ற அந்தச்சவத்தைப்பார்த்து, சிவபெருமான் அச்சவத்திற்கு உயிர்கொடுத்தருளும்வண்ணம் பரவிய இசையினையுடைய "ஒன்றுகொலாம்" என்னும் முதலையுடையதிருப்பதிகம்பாடியருளிப் பாம்பின்விஷத்தைப் போக்குவித்தார். எ-று.

தம்புத்திரன் சவத்தைமறைத்துச் சிறிதும் தடுமாற்றமின்றித் திருவமுது படைத்தல் அருமையுடைத்தென்பதுதோன்ற 'யாவரித்தன்மைசெய்தார்' என்று கூறினார். (௩௫)

தீவிடம் நீங்க வுய்ந்த திருமறை யவர்தஞ் சேயு
மேவிய வுறக்க நீங்கி விரைந்தெழு வானைப் போன்று
சேவுகைத் தவராட் கொண்ட திருநாவுக் கரசர் செய்ய
பூவடி வணங்கக் கண்டு புனிதநீ றளித்தா ரன்றே.

(இ-ள்.) கொடிய பாம்பின்விஷமானது தன்னைவிட்டுநீங்க,அதனால் உயிர்பெற்றெழுந்த அப்பூதியடிகளுடைய மூத்தகுமாரனும் தான்கொண்ட நித்திரையினின்று நீங்கி விரைவாக எழுகின்றவனைப்போன்று, ரிஷபத்தைவாகனமாகக்கொண்ட சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்பெற்ற திருநாவுக்கரசுசுவாமிகளுடைய சிவந்ததாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ்கரிக்க, அவரதைப்பார்த்துப் பரிசுத்தம்பொருந்திய விபூதியைக்கொடுத்தருளினார்.—எ-று. (௩௬)

பிரிவுறு மாவி பெற்ற பிள்ளையைக் காண்பார் தொண்டி
னெறியினைப் போற்றி வாழ்ந்தார் நின்றவப் பயந்தார் தாங்கள்

அறிவரும் பெருமை யன்ப ரமுதுசெய் தருளு தற்குச்
சிறிதிடை யூறு செய்தா னிவனென்று சிந்தை நொந்தார்.

(இ-ள்.) பாம்பினால் உடலைவிட்டுநீங்கிய உயிரைப் பின்வரப்பெற்ற அம் மூத்தபுதல்வனைப்பார்த்த அவ்வூரிலுள்ளவர்கள் அப்பூதியடிக ளாயனாருடைய திருத்தொண்டின்முறைமையைத் துதித்து வாழ்ந்தார்கள்; அங்குநின்ற அத்தாய் தந்தையர் தங்களால் அறிதற்கரிய பெருமையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்தருளுதற்கு இவன் சிறிது தடைசெய்தானென்று அவன் உயிர் பெற்றதற்குச் சந்தோஷியாமல் மனம்வருந்தினார்கள்.—எ-று. (சுஎ)

ஆங்கவர் வாட்டந் தன்னை யறிந்துசொல் லரசர் கூட
ஓங்கிய மனையி லெய்தி யமுதுசெய் தருள வுற்ற
பாங்கினி லிருப்ப முந்நூல் பயின்மணி மார்பர் தாமுந்
தாங்கிய மகிழ்ச்சி யோடுந் தருவன சமைத்துச் சார்வார்.

(இ-ள்.) அப்பூதியடிகளும், அவர்மனைவியாரும் அடைந்திருக்கும் மனவ ருத்தத்தையறிந்து திருநாவுக்கரசுசுவாமிகள் அவர்களோடு உயர்ந்த திருமாளி கைக்கு எழுந்தருளித் திருவமுதுசெய்தருளுதற்குத் தகுந்தஇடத்தில் வீற்றிருப்ப, பூணூலையணிந்த மார்பினையுடைய அப்பூதியடிகளும் மனதிற்பொருந்திய பெரு மகிழ்ச்சியோடு தகுந்தபொருள்களை எடுத்துக்கொண்டுவந்து.—எ-று.

தருவனவாவன:—நீர்-மலர்-தூபம்-தீபமுதலியன; இவைகள் அடியார்களை அருச்சித்து நிவேதித்தற்கெனவறிக. சார்வார் - முற்றெச்சம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (சுஅ)

புகழ்ந்தகோ மயத்தி னீராற் பூமியைப் பொலிய நீவித்
திகழ்ந்தவான் சுதையும் போக்கிச் சிறப்புடைத் தீப மேற்றி
நிகழ்ந்தவக் கதலி நீண்ட குருத்தினை விரித்து நீரான்
மகிழ்ந்துடன் விளக்கி யீர்வாய் வலம்பெற மரபின் வைத்தார்.

(இ-ள்.) நூல்களில் சிறப்பித்துச்சொல்லப்பட்ட கோமயத்தின் நீரினால் திருவமுதுசெய்யும் இடத்தை நன்றாகமெழுகி, விளங்குகின்ற வெள்ளியசுண்ணச் சாந்தையும் சதுரமாகஇட்டு,மங்களகரமான திருவிளக்கை ஏற்றி, அப்புதல்வன் கொண்டுவந்த வாழையின் நீண்ட பரிகலக்குருத்தைவிரித்து, நல்லநீரினால் மகிழ்ச் சியோடு உடனே அதைச்சுத்திசெய்து, அரிந்த பக்கம் வலத்தில் இருக்கும்படி முறைமையாக இட்டார்.—எ-று.

சுதைபோக்கலாவது:—கோலமிடுதலாம். நிகழ்ந்தவக்கதலி என்றது பாம்பு கடித்திறந்த புதல்வன்மீண்டும் உயிர்பெற்று அதனால் அப்பூதியடிகளுடைய அன் பின்பெருமையும், திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருவருள்மகிமையும் உலகில் விளங்குதற்குக் காரணமாயிருந்த கதலியென்க. (சுகூ)

திருந்திய வாச நன்னீ ரளித்திடத் திருக்கை நீவும்
பெருந்தவர் மறையோர் தம்மைப் பிள்ளைக ளுடனே நோக்கி
யரும்புதல் வர்களு நீரு மமுதுசெய் வீரிங் கென்ன
விரும்பிய வுள்ளத் தோடு மேலவ ரேவல் செய்வார்.

(இ-ள்.) திருத்தமாகிய மணம்பொருந்திய நல்லநீரைக்கொடுக்க, திருவமுது செய்யும்பொருட்டுத் திருக்கரத்தைச் சுத்திசெய்யும் திருநாவுக்கரசுசுவாமிகள் அப்பூதியடிகளை அவர்புத்திரர்களுடனே பார்த்து, அருமையாகிய புதல்வர்களும், நீரும் இவ்விடத்தே திருவமுதுசெய்வீர்களென்று கட்டளையிட, விருப்பம்பொருந்திய திருவுள்ளத்தோடும் திருநாவுக்கரசுசுவாமிகளுடைய கட்டளையை மறாது செய்கின்றவர்களாய்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௱)

மைந்தரு மறையோர் தாமு மருங்கிருந் தமுது செய்யச்
சிந்தைமிக் கில்ல மாதர் திருவமு தெடுத்து நல்கக்
கொந்தவிழ் கொன்றை வேணிக் கூத்தனா ரடியா ரோடும்
அந்தமி ழாளி யாரங் கமுதுசெய் தருளி னாரே.

(இ-ள்.) புதல்வர்களும், அப்பூதியடிகளுயனாரும் அவருக்குச் சமீபத்திலிருந்து திருவமுதுசெய்ய, மனைவியார் மனதில் மகிழ்ச்சிமிகுந்து திருவமுது கொண்டுவந்து படைக்க, கொத்தாக மலர்ந்த கொன்றைமாலையையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது அடியார்களோடு அழகிய தமிழ்த்தலைவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அங்குத் திருவமுதுசெய்தருளினார்.—எ-று. (௬௧)

மாதவ மறையோர் செல்வ மனையிடை யமுது செய்து
காதனண் பளித்துப் பன்னாள் கலந்துட னிருந்த பின்னை
மேதகு நாவின் மன்னர் விளங்கிய பழன மூதூர்
நாதர்தம் பாதஞ் சேர்ந்து நற்றமிழ்ப் பதிகஞ் செய்வார்.

(இ-ள்.) மகத்தாகிய தவத்தையுடைய அப்பூதியடிகளுயனாரது செல்வமிகுந்த திருமாளிகையில் திருவமுதுசெய்து, அன்போடு கூடிய நேசத்தை அவரிடத்தில் வைத்துப் பலநாள் அவரோடுகூடியிருந்தபின்பு, மேன்மையாகிய பெருங்குணத்தையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் புகழ்விளங்கிய திருப்பழனமென்னும் பழைய திருப்பதியில் சிவபெருமான் திருவடிகளையடைந்து நல்ல தமிழ்ப்பதிகத்தையருளிச்செய்கின்றவராய்.—எ-று. (௬௨)

அப்பூதி யடிக ளார்த மடிமையைச் சிறப்பித் தான்ற
மெய்ப்பூதி யணிந்தார் தம்மை விரும்புசொன் மாலை வேய்ந்த
இப்பூதி பெற்ற நல்லோ ரெல்லையி லன்பா லென்றுஞ்
செப்பூதி யங்கைக் கொண்டார் திருநாவுக் கரசர் பாதம்.

(இ-ள்.) அருள்நிறைந்த மெய்ம்மையாகிய விபூதியைத் தரித்த சிவபெருமானைப் பாடிய திருப்பதிகத்தில் தமது அடிமைத்தன்மையைச் சிறப்பித்துப்பாடப்பெற்றதாகிய இப்பெருஞ்செல்வத்தை யடைந்த நல்லோராகிய அப்பூதியடிகளுயனார் அளவில்லாத பேரன்பினால் எக்காலத்தும் அத்திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருவடிகளைத் துதிக்கின்ற பயனையடைந்தார்.—எ-று.

திருநாவுக்கரசுசுவாமிகள் தமது திருப்பதிகத்தில் அப்பூதியடிகள் அடிமையைச் சிறப்பித்துப்பாடியதாவது, "அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி - குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே" என்று அருளிச்செய்ததாம். பூதி = செல்வம். ஊதியம் = இலாபம். (௬௩)

இவ்வகை யரசி னாம மேத்தியெப் பொருளு நாளும்
அவ்வருந் தவர்பொற் றாளே யெனவுணர்ந் தடைவார் செல்லுஞ்
செவ்விய நெறிய தாகத் திருத்தில்லை மன்று ளாடு
நவ்வியங் கண்ணாள் பங்கர் நற்கழ லணைந்தா ரன்றே.

(இ-ள்.) இவ்விதமாகத் திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருநாமத்தைத் துதித்து, எல்லாப் பொருள்களும் எந்நாளும் அந்தத் தவமுனிவராகிய திருநாவுக்கரசுசுவாமிகளது அழகிய திருவடிகளே யென்று உணர்ந்தொழுகுகின்ற அப்பூதியடிகணாயனார் தாம் ஒழுகிவரும் நன்மார்க்கப்படியே நடந்து, திருத்தில்லையில் கனகசபையிலே ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளும் சிவகாமவல்லிபாகராகிய சிவபெருமானுடைய ஸ்ரீகுஞ்சிதபாதத்தை யடைந்தார்.—எ-று.

நவ்வியங்கண்ணாள் = மான்போலும் அழகிய கண்களையுடைய உமாதேவியார். நெறியது என்பதில், அது - பகுதிப்பொருள் விகுதி. (சச)

மான்மறிக் கையர் பொற்றாள் வாகீச ரடைவாற் பெற்ற
மேன்மையப் பூதி யாராம் வேதியர் பாதம் போற்றிக்
கான்மலர்க் கமல வாவிக் கழனிசூழ் சாத்த மங்கை
நான்மறை நீல நக்கர் திருத்தொழி லறைய லுற்றேன்.

(இ-ள்.) மான் கன்றை ஏந்திய திருக்கரத்தையுடைய சிவபெருமானது அழகிய திருவடிகளைத் திருநாவுக்கரசுசுவாமிகளுடைய சார்பினால் பெற்ற மேன்மைபொருந்திய அப்பூதியடிகணாயனாரென்னும் வேதியரது திருவடிகளைத் துதித்து, வாசனைவீசுகின்ற தாமரைமலர்கள் பொருந்திய தடாகங்களும் கழனிகளும் சூழ்ந்த திருச்சாத்தமங்கை யென்னும் ஊரில் அவதரித்த நான்குவேதங்களையுணர்ந்த திருநீலநக்கநாயனாருடைய திருத்தொண்டைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

திருநாவுக்கரசுசுவாமிகளைக் குருமூர்த்தியாகக்கொண்டு செய்த வழிபாடு சிவபெருமானுக்குச் செய்யும் வழிபாட்டோடு வேறின்மையின் அவ்வெம்பெருமானது திருவடியை யடைந்தனரெனவறிக. (சரு)

**அப்பூதியடிகணாயனார்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - கஅ௲உ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநீலநக்கநாயனார் புராணம்.

பூத்த பங்கயப் பொகுட்டின்மேற் பொருகய லுகளுங்
காய்த்த செங்நெலின் காடுசூழ் காவிரி நாட்டுச்
சாத்த மங்கையென் றுலகெலா நிகழ்வுறுந் தகைத்தால்
வாய்த்த மங்கல மறையவர் முதற்பதி வனப்பு.

(இ-ள்.) மலர்ந்த தாமரைப்பொகுட்டின்மேல் மோதுகின்ற கெண்டைமீன்கள் புரள்கின்ற (வயல்களில்) காய்க்கப்பட்ட செந்நெற்றொகுதிகள் மிகுதியாகச்சூழ்ந்த சோழவளநாட்டிலே சிறந்த மங்களகரம்பொருந்திய வேதியர்கள்வாழ்கின்ற முதன்மையாகிய அவ்வூரின் சிறப்பானது திருச்சாத்தமங்கையென்று உலகமுழுமையும் வழங்குகின்ற பெருமையையுடையது.—எ-று.

பொகுட்டு=தாமரைப்பூங்கொட்டை. காடு என்பது ஈண்டு மிகுதியையுணர்த்திநின்றது. (க)

நன்மை சாலுமப் பதியிடை நறுநுதன் மடவார்
மென்ம லர்த்தடம் படியமற் றவருடன் விரவி
யன்ன முன்றுறை யாடுவ பாடுவ சாமம்
பன்ம றைக்கிடை யுடன்பயிற் றுவபல பூவை.

(இ-ள்.) நன்மை மிகுந்த அந்தச் சாத்தமங்கையென்னுமூரில் நல்ல நெற்றியையுடைய மாதர்கள் மிருதுவாகிய மலர்களையுடைய தடாகத்தில் ஸ்நானஞ்செய்ய அம்மாதர்களோடுகலந்து அன்னங்களும் முன்னே அத்துறைகளில் நீராடுவன; பலவேதங்களை அத்தியயனஞ்செய்யும் பிராமணச்சிறுவர்களோடு தாம் கற்ற சாமவேதத்தைப் பல நாகணவாய்ப்பறவைகள் தம் குஞ்சுகளுக்குக் கற்பிக்கின்றன.—எ-று. (உ)

ஆய்ந்த மெய்ப்பொரு ணீறென வளர்க்குமக் காப்பில்
ஏய்ந்த மூன்றுதீ வளர்த்துளா ரிருபிறப் பாளர்
நீந்து நல்லற நீர்மையின் வளர்க்குமத் தீயை
வாய்ந்த கற்புட னென்கென வளர்ப்பர்கண் மடவார்.

(இ-ள்.) வேதத்தில் ஆராய்ந்து தேர்ந்த உண்மைப்பொருள் திருவெண்ணீறேயென்று அதனை விருத்திசெய்கின்ற அந்தச் சாத்தமங்கையில் வேதியர்கள் வேதத்தில் சொல்லுகின்ற ஆவகனீயம் - காருகபத்தியம்-தக்கணாக்கினி என்னும் முத்தீயையும் வளர்ப்பார்கள்; நல்ல தருமத்தின் முறைமைப்படியே மிகுதியாக



திருநீலநக்கநாயனர்.

வளர்க்கின்ற அம்முத்தீயைச் சிறந்தகற்புடனே நான்கென்று அவ்வேதியர் மாதர்கள் வளர்ப்பார்கள்.—எ-று.

வேதியர் மாதர்கள் தங்கள்நாயகர்செய்யும் முத்தீவளர்தற்கு உதவியாயிருந்து, வேதிகைமெழுகல் சுதையிடல்முதலிய தொழில்களைப்புரிந்து விருத்திசெய்வதோடு கற்புநெறிகெடாமல் ஒழுகுதலின், 'அத்தீயை-வாய்ந்த கற்புட னான்கென வளர்ப்பர்கண் மடவார்' என்று கூறினார். இருபிறப்பாளர்-ஜன்மத்தால் ஒன்றும், உபநயனாதி கன்மத்தாலொன்றுமாகிய இருபிறப்பினையுடையவர்கள். (௩)

சீல முய்த்தவத் திருமறை யோர்செழு மூதூர்
ஞால மிக்கான் மறைக்குலம் விளக்கிய நலத்தார்
ஆலம் வைத்தகண் டத்தவர் தொண்டரா மன்பர்
நீல நக்கனா ரென்பவர் நிகழ்ந்துளா ரானார்.

(இ-ள்.) நல்லொழுக்க நெறியில் தம்மைச்செலுத்திய அவ்வேதியர்கள் வாழும் வளர்ந்தங்கிய சாத்தமங்கையில், உலகத்தில் சிறந்தோங்கும் வேதியர்குலத்தை விளக்கும் நன்மையையுடையவரும், விஷத்தையணிந்தகண்டத்தையுடைய சிவபெருமானுக்குத்தொண்டு பூண்டொழுகும் மெய்யன்பரும், திருநீலநக்கநாயனாரென்னுந் திருநாமமுடையவருமாகிய ஒருவர் வாழ்ந்து கொண்டிருந்தார்.—எ-று.

வேத வுள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையு மவரடி யாரையு நயந்து
பாத வர்ச்சனை புரிவதும் பணிவது மென்றே
காத லாலவை யிரண்டுமே செய்கருத் துடையார்.

(இ-ள்.) வேதங்களிற்கூறும் உட்பொருளாவன, பரவிய கங்கைநதியைத் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானையும்,அவரது அடியார்களையும் விரும்பிப் பாதபூசைசெய்வதும் வணங்குவதுமேயாகுமென்று நினைத்து,மிகுந்த விருப்பத்தோடு அவ்விரண்டையுமே செய்கின்ற கருத்தையுடையவர், அந்தத் திருநீலநக்கநாயனார்.—எ-று. (௫)

மெய்த்த வாகம விதிவழி வேதகா ரணரை
நித்தல் பூசனை புரிந்தெழு நியமமுஞ் செய்தே
யத்த ரன்பருக் கமுதுசெய் விப்பது முதலா
வெத்தி றத்தன பணிகளு மேற்றெதிர் செய்வார்.

(இ-ள்.) உண்மையாகிய சிவாகமவிதியின்படியே, வேதகாரணராகிய சிவபெருமானைத்தினந்தோறும் இடைவிடாது பூசித்து வருகின்ற நியமத்தையுஞ் செய்துவருவதுமல்லாமல், அச்சிவபெருமானுடைய அடியார்களுக்குத் திருவமுது செய்விப்பது முதலாகிய எவ்வகைப்பட்ட திருத்தொண்டுகளையும் மேற்கொண்டுசெய்கின்றவர்.—எ-று.

தாம் வேதவிதிப்படிசெய்யும் வைதிகபூசையோடு ஆகமத்திற்கூறும் விசேடபூசைகளையுங் கலந்து விடாதுசெய்து வந்தனரென்பதுதோன்ற 'மெய்த்தவாகம விதிவழி' என்றும். சிவனடியார்களுக்குத் திருவமுது செய்விப்பதேயன்றி, வஸ்திரம் வசிக்குந் திருமடமுதலியவைகளையுஞ் சித்தஞ்செய்துதவுகின்றவ ரென்பது தோன்ற 'எத்திறத்தன பணிகளுமேற்றெதிர்செய்வார்' என்றுங்கூறினார். (சு)

ஆய செய்கையி லமருநா ளாதிரை நாளின்
மேய பூசனை நியதியை விதியினுன் முடித்துத்
தூய தொண்டனுர் தொல்லைநீ டயவந்தி யமர்ந்த
நாய னுரையு மர்ச்சனை புரிந்திட நயந்தார்.

(இ-ள்.) நல்ல குணத்தையுடைய திருநீலநக்கநாயனுர் அவ்வாறு சிவபூசை அடியார்பூசைகளைச் செய்தொழுகும் நாளிலே, ஒருநாள் திருவாதிரைநட்சத்திரத்திலே, தாம் செய்தற்குரிய ஆன்மார்த்தபூசாவிதிகளை முறைமைப்படி செய்துமுடித்து, பழைமையாகிய உயர்ந்த அயவந்தி என்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானையும் அருச்சிக்கும்படி விருப்பங்கொண்டார்.—எ-று. (எ)

உறையு ளாகிய மனைநின்று மொருமையன் புற்ற
முறைமை யால்வரு பூசைக்கு முற்றவேண் டுவன
குறைவ றக்கொண்டு மனைவியார் தம்மொடுங் கூட
இறைவர் கோயில்வந் தெய்தின ரெல்லையி றவத்தோர்.

(இ-ள்.) அளவற்றபெருந்தவத்தையுடைய திருநீலநக்கநாயனுர், தமது வாசஸ்தானமாகிய திருமாளிகையினின்றும் ஒருமைப்பட்ட அன்புகாரணமாகச்செய்கின்ற பூசைக்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் குறைவில்லாமல் எடுத்துக்கொண்டு தமது பத்தினியாரோடுகூடச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் அயவந்தியென்னும் ஆலயத்தை வந்தடைந்தார்.—எ-று. (அ)

அணைய வந்துபுக் கயவந்தி மேவிய வமுதின்
றுணைம லர்க்கழ றொழுதுபூ சனைசெயத் தொடங்கி
யிணைய நின்றங்கு வேண்டுவ மனைவியா ரேந்த
உணர்வு மிக்கவ ருயர்ந்தவர்ச் சனைமுறை யுய்த்தார்.

(இ-ள்.) அத்திருக்கோயிலின் சமீபமாகவந்து உள்ளேநுழைந்து, அயவந்தி என்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் அமுதத்தையொத்த சிவபெருமானது தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளைவணங்கிப் பூசைசெய்யத்தொடங்கி, அருகில் நின்றுகொண்டு அங்குவேண்டிய உபகரணங்களைத்தமது பத்தினியார் எடுத்துக்கொடுக்க, அறிவிற்சிறந்த திருநீலநக்கநாயனுர் சிறந்த பூசையை விதிப்படியே செய்தார்.—எ-று. (௯)

நீடு பூசனை நிரம்பியு மன்பினு னிரம்பார்
மாடு சூழ்புடை வலங்கொண்டு வணங்கிமுன் வழுத்தித்
தேடு மாமறைப் பொருளினைத் தெளிவுற நோக்கி
நாடு மஞ்செழுத் துணர்வுற விருந்துமுன் னவின்றார்.

(இ-ள்.) மிகுந்த சிவபூசையை விதிப்படிசெய்தும் அன்புகுறையாதவராய் அருகில் சூழ்ந்துள்ள பிரகாரத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து திருமுன்னேநின்று வணங்கித்துதித்து, அறிஞர்களால் தேடப்பட்ட சிறந்த வேதப்பொருளாகிய சிவபெருமானை நன்றாகத்தரிசித்து, விரும்புகின்ற திருவைந்தெழுத்தும் உணர்விலே பொருந்தத் திருமுன்னின்று ஜபித்தார்.—எ-று. (௧௦)

தொலைவில் செய்தவத் தொண்டனுர் சுருதியே முதலாங்
கலையி னுண்மையா மெழுத்தஞ்சுங் கணிக்கின்ற காலை

நிலையி னின்றுமுன் வழுவிட நீண்டபொன் மேருச்
சிலையி னார்திரு மேனிமேல் விழுந்ததோர் சிலம்பி.

(இ-ள்.) அழிவில்லாத தவத்தைச்செய்த திருநீலநக்கநாயனார் வேதமுதலாகிய சகல சாஸ்திரங்களிலும் கூறும் மெய்ப்பொருளாகிய திருவைந்தெழுத்தையும் ஜபிக்கும்பொழுது, ஒரு சிலம்பிப்பூச்சியானது தானிருக்குமிடத்தினின்றும் முன்னேவழுவுதலால் நீண்டபொன்மயமாகிய மேருவைவில்லாக்வுடைய சிவபெருமானது திருமேனிமேல் விழுந்தது.—எ-று. (கக)

விழுந்த போதிலங் கப்னின்ற மனைவியார் விரைவுற்
றெழுந்த வச்சமோ டிளங்குழ வியில்விழுஞ் சிலம்பி
யொழிந்து நீங்கிட வூதிமுன் றுமிப்பவர் போலப்
பொழிந்த வன்பினா லூதிமேற் றுமிந்தனா போக.

(இ-ள்.) அவ்வாறு சிலம்பிப்பூச்சி விழுந்தபொழுது, அங்குச்சமீபத்தில் நின்ற அவரது மனைவியார் விரைந்து மனதிலுண்டாகிய அச்சத்தோடு சிறுகுழந்தைமேல் விழுகின்ற சிலம்பிப்பூச்சியின் விஷமானது நீங்கும்படி ஊதி முன்னே வாய்நீரை உமிழ்பவர்போல அன்பின் மிகுதியினால் அது நீங்கும்படி வாயினால் ஊதித் திருமேனியில் வாய் நீர் உமிழ்ந்தார்.—எ-று. (கஉ)

பதைத்த செய்கையான் மனைவியார் முற்செயப் பந்தஞ்
சிதைக்கு மாதவத் திருமறை யவர்கண்டு தங்கண்
புதைத்து மற்றிது செய்ததென் பொறியிலா யென்னச்
சுதைச்சி லம்பிமேல் விழவூதித் துமிந்தன னென்றார்.

(இ-ள்.) (சிவபெருமானது திருமேனியின்மேல் சிலம்பிவிழுந்தமைபற்றித்) தமது திருவுள்ளம்பதைத்த காரணத்தினால், மனைவியார் முன்னே இவ்வாறு ஊதித்துமிய, அதனைப்பாசபந்தங்களையொழிக்கும் மகத்தாகிய தவத்தையுடைய திருநீலநக்கநாயனார் பார்த்துத்தம்முடைய கண்களைமூடிக்கொண்டு, அறிவில்லாதவளே! நீ இப்படிச்செய்ததென்னை? என்றுகேட்க, மனைவியார், வெண்சிலம்பியானது சிவபெருமானுடைய திருமேனியில் விழுந்ததனால் ஊதித்துமிந்தேனென்று சொன்னார்.—எ-று. (கங)

மனைவி யார்செய்த வன்பினை மனத்தினிற் கொள்ளார்
புனையு நூன்மணி மார்பர்தம் பூசனைத் திறத்தில்
இனைய செய்கையிங் கநுசித மாமென வெண்ணும்
நினைவி னாலவர் தம்மைவிட் டகன்றிட நீப்பார்.

(இ-ள்.) பூணூலையணிந்த அழகிய மார்பினையுடைய திருநீலநக்கநாயனார் தமது மனைவியார் சிவபெருமான்விஷயத்தில் செய்த அன்பின் திறத்தைச்சிறிதும் மனதிற்கொள்ளாமல், தாம் செய்யும் சிவபூசையில் இவ்வாறு செய்தது இங்கே அநுசிதமானகாரியமாம் என்று நினைக்கும்,நினைவினால் அம் மனைவியாரை விட்டு நீங்கும்படி விலக்குவாராயினார் —எ-று. (கச)

மின்னெ டுஞ்சடை விமலர்மேல் விழுந்தநூற் சிலம்பி
தன்னை வேறொரு பரிசினாற் றவிர்ப்பது தவிர

முன்ன ணைந்துவந் தூதிவாய் நீர்பட முயன்ற
யுன்னை யானினித் துறந்தன னிங்கென வுரைத்தார்.

(இ-ள்.) மின்னலைப்போல விளங்குகின்ற நீண்டசடைமுடியையுடைய சிவபெருமானது திருமேனியின்மேல் தவறிவிழுந்த நூற்சிலம்பியை வேறொரு வகையால் விலக்குவதல்லாமல் முன்னே விரைந்துவந்து ஊதி வாய்நீரைத்துமிந் தாய்; இங்கே இவ்வநுசிதஞ்செய்த உன்னை யான் இனிமேல் துறந்தேனென்று சொன்னார்.—எ-று. (கரு)

மற்ற வேலையிற் கதிரவன் மலைமிசை மறைந்தான்
உற்ற வேவலின் மனைவியா ரொருவழி நீங்க
முற்ற வேண்டுவ பழுதுதீர் பூசனை முடித்துக்
கற்றை வேணியர் தொண்டருங் கடிமனை புகுந்தார்.

(இ-ள்.) அச்சமயத்தில் சூரியன் அஸ்தமனகிரியில் மறைந்தான்; மனைவியார் கணவருடைய ஏவலின்படி ஒருவழிமறைவாக ஒதுங்கிநிற்க, செய்யவேண்டிய பிராயச்சித்த பூசையைச்செய்துமுடித்துக் கூட்டமாகிய சடைமுடியையுடைய சிவபெருமானடியவராகிய திருநீலநக்கநாயனாரும் காவலையுடைய தமது திருமாளிகைக்குச் சென்றார்.—எ-று. (கசா)

அஞ்சு முள்ளமோ டவர்மருங் கணைவுற மாட்டார்
நஞ்ச முண்டவர் கோயிலி னங்கையா ரிருந்தார்
செஞ்சொ லுன்மறைத் திருநீல நக்கர்தா மிரவு
பஞ்சின் மெல்லணைப் பள்ளியிற் பள்ளிகொள் கின்றார்.

(இ-ள்.) மனைவியார் அஞ்சுகின்ற உள்ளத்தோடும் தங்கணவரிருக்குமிடத்திற் செல்லமாட்டாதவராய், விஷத்தை யுண்டருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலில் இருந்தார்; செவ்விய சொற்களையுடைய நான்குவேதங்களையுமுணர்ந்த திருநீலநக்கநாயனார் அன்றிரவில், பஞ்சாலமைத்த மிருதுவாகிய மெத்தையையுடைய சயனத்தில் நித்திரைசெய்கின்றார்.—எ-று. (கஎ)

பள்ளி கொள்பொழு தயவந்திப் பரமர்தாங் கனவில்
வெள்ள நீர்ச்சடை யொடுநின்று மேனியைக் காட்டி
யுள்ளம் வைத்தெம்மை யூதிமுன் றுமிந்தபா லொழியக்
கொள்ளு மிப்புறஞ் சிலம்பியின் கொப்புளென் றருள.

(இ-ள்.) திருநீலநக்கநாயனார் நித்திரைசெய்யும்பொழுது அயவந்தியில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் அவருக்குச் சொப்பனத்தில் கங்கைநீர்தங்கிய சடைமுடியோடும் எழுந்தருளித் தமது திருமேனியைக்காட்டி, உன்மனைவி எம்மிடத்து அன்புவைத்து ஊதி முன்னேதுமிந்த இடமொழிய, இப்புறம் சிலம்பியின் கொப்புளமுண்டாயிருக்கிறதென்று சொல்லியருள.—எ-று. (கஅ)

கண்ட வப்பெருங் கனவினை நனவெனக் கருதிக்
கொண்ட வச்சமோ டஞ்சலி குவித்துடன் விழித்துத்
தொண்ட னார்தொழு தாடினர் பாடினர் துதித்தார்
அண்ட நாயகர் கருணையே போற்றிநின் றழுதார்.

(இ-ள்.) திருநீலநக்கநாயனார் தாம்கண்ட அப்பெரிய சொப்பனத்தை நனவென்று நினைத்து, மனதிற்கொண்ட அச்சத்துடனே கைகளை அஞ்சலியாகக்குவித்து உடனேவிழித்துத் தொழுதுகொண்டு ஆனந்தக்கூத்தாடினார்; பாடினார்; ஸ்தோத்திரஞ்செய்தார்; தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானது கருணைத்திறத்தையே போற்றி நின்று அழுதார்.—எ-று. (௧௯)

போது போயிருள் புலர்ந்திடக் கோயிலுட் புகுந்தார்
ஆதி நாயக ரயவந்தி யமர்ந்தவங் கணர்தம்
பாத மூலங்கள் பணிந்துவீழ்ந் தெழுந்துமுன் பரவி
மாத ராரையுங் கொண்டுதம் மனையின்மீண் டணைந்தார்.

(இ-ள்.) இரவு நீங்கிப்பொழுதுவிடிந்தவுடனே திருக்கோயிலினுள்புகுந்து அயவந்தியில் வீற்றிருந்தருளும் முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானுடைய திருவடிகளை விழுந்து வணங்கி எழுந்து முன்னின்று துதித்து,தம் பத்தினியாரையும் அழைத்துக்கொண்டு தமது திருமாளிகைக்குத் திரும்பிவந்தார்; திருநீலநக்கநாயனார்.—எ-று. (௨௦)

பின்பு முன்னையிற் பெருகிய மகிழ்ச்சிவந் தெய்த
இன்பு றுந்திறத் தெல்லையில் பூசனை யியற்றி
யன்பு மேம்படு மடியவர் மிகவணை வார்க்கு
முன்பு போலவர் வேண்டுவ விருப்புடன் முடிப்பார்.

(இ-ள்.) அதற்குப்பின்பு,முன்னையிலும் அதிகமகிழ்ச்சியையடைந்து மிகுந்த இன்பமுண்டாகும்படி சிவபெருமானுக்கு அளவில்லாத விசேடபூசைகளைச் செய்து, அன்பினால் மேம்பட்டவர்களாய்க் கூட்டமாக வருகின்ற அடியார்களுக்கு வேண்டிய திருவமுது முதலியவைகளை மிகுந்த விருப்பத்தோடுசெய்துகொண்டிருந்தார்.—எ-று. (௨௧)

அன்ன தன்மையி லமர்ந்தினி தொழுகுமந் நாளின்
மன்னு பூந்தராய் வருமறைப் பிள்ளையார் பெருமை
பன்னி வையகம் போற்றிட மற்றவர் பாதம்
சென்னி வைத்துடன் சேர்வுறும் விருப்பினிற் சிறந்தார்.

(இ-ள்.) அவ்வாறாகிய திருவமுதுபடைத்தல் முதலிய திருத்தொண்டினிலைமையில் விரும்பி இனிதாக வாழ்ந்துகொண்டிருக்கும் நாளில், நிலைபெற்றசீகாழியில் திருவவதாரஞ்செய்தருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுடைய மகிமையை உலகத்தார் சொல்லித்துதிக்க,(அதனைக்கேள்வியுற்று) அவரது திருவடிகளைச்சிரசில் சூடிக்கொண்டு உடனே அவரைத்தரிசிக்கவேண்டுமென்னும் அதிக ஆசையையுடையவராயிருந்தார்.—எ-று. (௨௨)

பண்பு மேம்படு நிலைமையார் பயிலுமப் பருவ
மண்பெ ருந்தவப் பயன்பெற மருவுமப் பதிகள்
விண்பி றங்குநீர் வேணியார் தமைத்தொழ வணைவார்
சண்பை மன்னருஞ் சாத்தமங் கையில்வந்து சார்ந்தார்.

(இ-ள்.) அன்பானது அதிகரித்துள்ள நிலைமையினையுடைய திருநீலநக்கநாயனார் அவ்வாறு ஒழுகிவரும்நாளில், உலகத்திலுள்ளவர்கள் பெரிய தவப்பயனை

யடையும்பொருட்டு நிலைபெற்ற திருப்பதிகள்தோறும் வீற்றிருந்தருளும் ஆகாய கங்கையைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானை வணங்கும்படி வருகின்றவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் (அயவந்திநாதரை வணங்கும் பொருட்டுச்) சாத்தமங்கையில் எழுந்தருளினார்.—எ—று. (உங)

நீடு சீர்த்திரு நீலகண் டப்பெரும் பாணர்
தோடு லாங்குழல் விறலியா ருடன்வரத் தொண்டர்
கூடு மப்பெருங் குழாத்தொடும் புகலியர் பெருமான்
மாடு வந்தமை கேட்டுள மகிழ்நீல நக்கர்.

(இ-ள்.) மிகுந்த புகழையுடைய திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் மலர் களை முடித்த கூந்தலையுடைய விறலியாரோடு வர, அடியார்கள் கூடியிருக்கின்ற பெரிய திருக்கூட்டத்தோடும் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் சாத்தமங்கை யென்னும் ஸ்தலத்திற்குச் சமீபமாக எழுந்தருளியதைக் கேள்வியுற்று மனமகிழ்ச்சி யடைந்த திருநீலநக்கநாயனார்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உச)

கேட்ட வப்பொழு தேபெரு மகிழ்ச்சியிற் கிளர்ந்து
தோட்ட லங்கலுங் கொடிகளும் புனைந்துதோ ரணங்க
ணாட்டி நீணடைக் காவண மிட்டுநற் சுற்றந்
தீட்ட முங்கொடு தாமுமுன் பெதிர்கொள வெழுந்தார்.

(இ-ள்.) (திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் சாத்தமங்கைக்கு எழுந்தருளினாரென்று) கேட்டவுடனே மிகுந்த மகிழ்ச்சியடைந்து, இதழ்கள் பொருந்திய மலர்மாலைகளையும் கொடிகளையுங்கட்டித் தோரணங்கள்நாட்டி நீண்டநடைப்பந்த ரிட்டு, தம்முடைய நல்ல உறவினரது கூட்டத்தையும் அழைத்துக்கொண்டு தாமும் முன்னே எதிர்கொள்ளும்படி எழுந்துசென்றார்.—எ-று. (உரு)

சென்று பிள்ளையா ரெழுந்தரு ளுந்திருக் கூட்டம்
ஒன்றி யங்கெதிர் கொண்டுதங் களிப்பினு லொருவா
றன்றி யாடியும் பாடியுந் தொழுதெழுந் தணைவார்
பொன்ற யங்குநீண் மனையிடை யுடன்கொண்டு புக்கார்.

(இ-ள்.) எதிர்கொண்டுசென்று திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளிவருந் திருக்கூட்டத்தையடைந்து, அவரை அங்கு எதிர்கொண்டு, தம்முடைய மனமகிழ்ச்சியினால் பலதரமும் ஆடியும் பாடியும் வணங்கியெழுந்துசெல்கின்ற திருநீலநக்கநாயனார் இலட்சுமிகரம்பொருந்திய நீண்டதமது திருமாளிகையில் அவரை அழைத்துக்கொண்டுவந்தார்.—எ—று. (உகா)

பிள்ளை யாரெழுந் தருளிய பெருமைக்குத் தக்க
வெள்ள மாகிய வடியவர் கூட்டமும் விரும்ப
உள்ள மாதர வோங்கிட வோங்குசீ காழி
வள்ள லாரைத்தம் மனையிடை யமுதுசெய் வித்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருமாளிகைக்கு எழுந்தருளிய சிறப்பிற்குத் தகுந்த மிகுதியாகிய அடியார் திருக்கூட்டங்களும் விரும்பும்படி தமது திருவுள்ளத்தில் அன்பானது அதிகரிக்க,உயர்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளைத் தமது திருமாளிகையில் திருவமுது செய்வித்தார்.—எ-று. (உ௭)

அமுது செய்தபின் பகலவன் கருங்கட லணையக்
குமுத வாவியிற் குளிர்மதிக் கதிரணை போழ்தில்
இமய மங்கைதன் றிருமுலை யமுதுண்டா ரிரவு
தமது சீர்மனைத் தங்கிட வேண்டுவ ’சமைத்தார்.

(இ-ள்.) திருவமுதுசெய்தபின்பு, சூரியன் மேற்றிசைக்கருங்கடலில் அஸ்தமிக்க, அல்லிமலர்களையுடைய தடாகங்களில் குளிர்ந்த சந்திரகிரணங்கள் வீசும் இராப்பொழுதில், பார்வதிதேவியாருடைய திருமுலைப்பாலமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அன்றிரவு தமது திருமாளிகையில் தங்கும்படி வேண்டிய உபகரணங்களையமைத்தார்; திருநீலநக்கநாயனார்.—எ-று.

வேண்டுவ என்றது, திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும், திருக்கூட்டத்தினரும் திருவமுது செய்தற்கும், திருக்கண்வளர்தற்கும் வேண்டுவனவற்றை. ()

சீல மெய்த்திருத் தொண்டரோ டமுதுசெய் தருளி
ஞால மிக்கிட நாயகி யுடனம்பர் நண்ணுங்
கால முற்பெற வழுதவ ரழைத்திடக் கடிது
நீல நக்கனார் வந்தடி பணிந்துமுன் னின்றார்.

(இ-ள்.) நல்லொழுக்கத்தையுடைய மெய்ம்மையாகிய திருத்தொண்டர்களோடு திருவமுது செய்தருளி, உலகத்தார் கடைத்தேறும்பொருட்டு உமாதேவியாரோடு தோணியப்பர் வெளிப்பட்டருளும் பரிபாககாலம் முன்னுண்டாக, (அதனால் அத்திருத்தோணிச்சிகரத்தைப்பார்த்து ‘அம்மே அப்பா’ வென்று கூறி) அழுதருளிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநீலநக்கநாயனாரை அழைக்கவும், அந்நாயனார் விரைந்துவந்து அவருடைய திருவடிகளில் வணங்கித் திருமுன்னேநின்றார்.—எ-று. (உ௯)

நின்ற வன்பரை நீலகண் டப்பெரும் பாணர்
இன்று தங்கவோ ரிடங்கொடுத் தருளுமென் றோன்ன
நன்று மின்புற்று நடுமனை வேதியின் பாங்கர்ச்
சென்று மற்றவர்க் கிடங்கொடுத் தார்திரு மறையோர்.

(இ-ள்.) திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தமது திருமுன்னேநின்ற திருநீலநக்கநாயனாரைப்பார்த்து, திருநீலகண்டயாழ்ப்பாணர் இன்றுதங்குவதற்கு ஓரிடங்கொடுத்தருளுமென்று சொல்லியருள, அதற்கு மிகவும் மகிழ்ந்து தமது மனையின் நடுவிலிருக்கின்ற வேதிகையின்பக்கத்தில் அழைத்துக்கொண்டுபோய், அத்திருநீலகண்டயாழ்ப்பாணருக்கு இடங்கொடுத்தார்; திருநீலநக்கநாயனார். ()

ஆங்கு வேதியி லுறுதசெந் தீவலஞ் சுழிவுற்
றோங்கி முன்னையி லொருபடித் தன்றியே யொளிரத்

தாங்கு நூலவர் மகிழ்வுறச் சகோடயாழ்த் தலைவர்
பாங்கு பாணியா ருடனரு ளாற்பள்ளி கொண்டார்.

(இ-ள்.) அவ்விடத்து ஔபாசன வேதிகையிலுள்ள நித்தியாக்கினிவலஞ் சுழித்து ஓங்கி முன்னையினும் அதிகமதிகமாக விளங்கவும், அதனால் பூணூலையணிந்த திருநீலநக்கநாயனார் மகிழ்ச்சியடையவும், சகோடயாழ்த்தலைவராகிய திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் அவ்வேதிகையின் சமீபத்தில் விறலியாரோடு பள்ளி கொண்டருளினார்.—எ-று.

சகோடயாழ் என்பது, நால்வகையாழில் ஒன்று; அவை பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பன; இவை பெரும்பான்மை; சிறுபான்மை வருவனவுமுள; என்னை? "பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன், சீர் பொலியுஞ் செங்கோடு செப்பினார் — தார்பொலிந்து, மன்னுந் திருமார்ப வண் கூடற் கோமானே, பின்னுமுளவே பிற" என்றாராகலின்; இவற்றிற்கு நரம்புகள், பேரியாழிற்கு இருபத்தொன்றும், மகரயாழிற்குப் பத்தொன்பதும், சகோடயாழிற்குப் பதினாறும், செங்கோட்டியாழிற்கு ஏழுங் கொள்ளப்படும். என்னை? "ஒன்று மிருபது மோரேழ்மேற் பத்துடனே, நின்றபதி னாறேழு நேடுங்காற் — குன்றாத, நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே, மேல்வகைய நூலோர் விதி." என்பதனாற் கொள்க. ["ஒன்றே டிருபது மொன்பதும் பத்துடனே, நின்ற பதினாலும் பின்னேழும்" என்றும்பாடம்.] இவ்வியாழ் செய்தற்குரிய மரங்கள் முதலியன;— "சொல்லிய கொன்றை கருங்காலி மென்குருக்கு, நல்ல குமிழுந் தணக்குடனே—மெல்லியலா, யுத்தமமான மரங்க ளிவையென்றார், வித்தகயாழோர் விதி." "தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கு,முளதா யொருங்கூன மின்றி—யளவு,முதிரா திளகாது மூன்றாங்கூ றாய, வதுவாகில் வீணைதண்டாம்." "கோடே பத்த ராணி நரம்பே, மாடக மெனவரும் வகையின தாகும்." "பதுமங் கழல்குடந் தாடியொ டொள்ளிபண் பூண்டுநின்ற, விதியமர் தண்டு குடையே குடுமி மெய்க் கோட்டுறுப்பு. மதியமர் போதிகை புட்டின் முகஞ்சுவர் மன்னெருத்தம், விதியமர் பத்தர்க் குறுப்பென் றுரைத்தனர் மின்னிடையே." என்பனவற்றா னுணர்க. இவ்வியாழ் வாசிக்குமுறையை, 'நல்லிசை மடந்தை நல்லெழில் காட்டி, யல்லியம் பங்கயத் தயனினிது படைத்த, தெய்வஞ் சான்ற தீஞ்சுவை நல்யாழ், மெய்பெற வணங்கி மேலொடு கீழ்புணர்த்த், திருகையின் வாங்கி யிடவயினிரீஇ, மருவிய விநய மாட்டுதல் கடனே" — என்பதனானறிக. இவற்றின் வகையனைத்தும் பரக்கக்கூறின் விரியுமாதலின் இசைநூலிற்காண்க. (௯௧)

கங்கு லிற்பள்ளி கொண்டபின் கவுணியர்க் கிறைவர்
அங்கு நின்றெழுந் தருளுவா ரயவந்தி யமர்ந்த
திங்கள் சூடியை நீலநக் கரைச்சிறப் பித்தே
பொங்கு செந்தமிழ்த் திருப்பதி கத்தொடை புனைந்தார்.

(இ-ள்.) கவுணியர் குலத்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அன்றிரவில் பள்ளிகொண்டு, விடிந்த பின்பு அவ்விடத்தினின்றும் எழுந்தருளி அயவந்தி என்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சந்திரசூடாதரராகிய சிவபெருமான்மேலே திருநீலநக்கநாயனாரைச்சிறப்பித்து அழகிய செந்தமிழ்த்திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தமது திருப்பதிகத்தில் திருநீலநக்க நாயனாரைச் சிறப்பித்துப்பாடியதாவது "நிறையினார் நீலநக்கன்னெடுமாநகரென்று தொண்டர் - அறையுமூர் சாத்தமங்கை யயவந்திமேல்" என்று அருளிச்செய்த தாம். (௩௨)

பதிகநாண்மலர் கொண்டுதம் பிரான்கழல் பரவி
யதிக நண்பினை நீலநக் கருக்களித் தருளி
யெதிர்தொ ழும்பதி களிலெழுந் தருளினா ரென்றும்
புதிய செந்தமிழ்ப் பழமறை மொழிந்தபூ சுரனார்.

(இ-ள்.) திருப்பதிகமாகிய புதியமலர்களைக்கொண்டு சிவபெருமானுடைய திருவடிகளைத் துதித்து, அதிகமான நேசத்தைத் திருநீலநக்கநாயனாரிடத்துச் செலுத்தி, அவ்விடத்தினின்றும் தமக்கு எதிரிலுள்ள தொழுதற்குரிய திருப்பதிகளில் எழுந்தருளினார்; எந்நாளும் புதிதாகிய சிறந்த தமிழ்மொழியினாலே பழைமையாகிய வேதங்களை அருளிச்செய்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.—எ-று. ()

பிள்ளை யாரெழுந் தருளவத் தொண்டர்தாம் பின்பு
தள்ளு மன்புடன் கேண்மையுந் தப்பில வெனினும்
வள்ள லார்திரு வருளினை வலியமாட் டாமை
யுள்ள மங்குடன் போக்கிமீண் டொருவகை யிருந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் சாத்தமங்கையினின்றும் எழுந்தருளும்பொழுது, அந்தத்திருநீலநக்கநாயனார் தாம் அவர்பின்னே செல்லவேண்டுமென்னும் அன்பும் நேசமும் தம்மனதைவிட்டு நீங்காதிருந்தும், அருள்வள்ளலாகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் இட்டகட்டளையைத் தடுக்கக்கூடாமையால், தமது திருவுள்ளத்தை அவர் பின்னேசெலுத்தித் திரும்பித்தமது திருமாளிகைக்கு வந்து, ஒருவாறு மனந்தேறியிருந்தார்.—எ-று. (௩௪)

மேவு நாளிலவ் வேதியர் முன்புபோல் விரும்புந்
தாவில் பூசனை முதற்செய்கை தலைத்தலை சிறப்பச்
சேவின் மேலவர் மைந்தராந் திருமறைச் சிறுவர்
பூவ டித்தலம் பொருந்திய வுணர்வொடும் பயின்றார்.

(இ-ள்.) திருநீலநக்கநாயனார் அங்குவசித்திருக்கும் நாளில், முன்பு செய்து வந்ததுபோலப் பலரும் விரும்புகின்ற, கெடாத மாகேசுவரபூசைமுதலிய செய்கைகள் மேன்மேலும்வளர, ரிஷபத்தின் மேலெழுந்தருளிவரும் சிவபெருமானது திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது ஸ்ரீபாதாரவிந்தங்களைத் தம் மனதிற் பொருந்திய உணர்ச்சியோடும் இடைவிடாது சிந்தித்துவந்தார். (௨௫)

சண்பை யாளியார் தாமெழுந் தருளும்அப் பதியு
[illegible] மெழும்பு நாளினுஞ் செலவிட்டு நண்ணி
வண்பெ ருமபுகழ்வருட்ன் பயின்றுவந் தணைந்தார்
திண்பெ ருந்தொண்ட ராகிய திருநீல நக்கர்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் எழுந்தருளியிருக்கும் எந்தத்திருப்பதிகளிலும், அவரிடத்துண்டாகிய நேசமானது அதி

கரிக்க இடையே சிலநாட்கள் செல்லவிட்டுச் சென்று, சிறந்த பெரும்புகழை யுடைய அத்திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளோடு கலந்திருந்து பின் தம்மூருக்குத் திரும்பிவந்தார் ; வலிய பெருந்தொண்டராகிய திருநீலநக்கநாயனார்.—எ-று.

பெருகு காதலிற் பன்னெடு நாண்முறை பிறங்க
வருபெ ருந்தவ மறையவர் வாழிசீ காழி
யொருவர் தந்திருக் கல்லியா ணத்தினி லுடனே
திரும ணத்திறஞ் சேவித்து நம்பர்தாள் சேர்ந்தார்.

(இ-ள்.) மிகுந்த ஆசையோடும் அனேகநாள் இவ்வாறு நீங்காமல் வந்து தரிசித்துப்போகின்ற பெருந்தவத்தையுடைய திருநீலநக்கநாயனார் சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுடைய திருக்கலியாணத்தில் அடியார்களோடு அத்திருமணச்சிறப்பைச் சேவைசெய்து சிவபெருமானுடைய திருவடிகளை யடைந்தார்.—எ-று. (கஎ)

தருதொ ழிற்றிரு மறையவர் சாத்தமங் கையினில்
வருமு தற்பெருந் திருநீல நக்கர்தாள் வணங்கி
யிருபி றப்புடை யந்தண ரேறுயர்த் தவர்பால்
ஒருமை யுய்த்துணர் நமிநந்தி யார்தொழி லுரைப்பாம்.

(இ-ள்.) ஓதல்முதலிய அறுவகைத்தொழில்களையும் செய்கின்ற வேதியர்கள் வாழும் சாத்தமங்கை என்னும் க்ஷேத்திரத்தில் அவதரித்த முதன்மையாகிய பெரிய திருநீலநக்கநாயனாரது திருவடிகளை வணங்கி, ரிஷபக்கொடியையுடைய சிவபெருமானிடத்தில் அன்புசெலுத்திச் சிவஞானத்தையுணர்ந்த இருபிறப்பை யுடைய அந்தணராகிய நமிநந்தியடிகணாயனாரது திருத்தொண்டைச் சொல்லத் தொடங்குவோம்.—எ-று. (கஅ)

**திருநீலநக்கநாயனார்புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆகு திருவிருத்தம் கஅஎ.

---

இத்து
இராயபுரம் விவேகி
[illegible]
24th June 1897.



நமிநந்தியடிகணாயனார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நமிநந்தியடிகணாயனார் புராணம்.

வையம் புரக்குந் தனிச்செங்கோல் வளவர் பொன்னித் திருநாட்டுச்
செய்ய கமலத் தடம்பணையுஞ் செழுநீர்த் தடமும் புடையுடைத்தாய்ப்
பொய்தீர் வாய்மை யருமறைநூல் புரிந்த சீலப் புகழதனால்
எய்தும் பெருமை யெண்டிசையு மேறா ரேமப் பேறூரால்.

(இ-ள்.) உலகத்தை நீதியோடு அரசாட்சிசெய்கின்ற ஒப்பற்ற செங்கோலையுடைய சோழராஜாக்களுக்குரிய அழகிய காவிரிநாட்டிலே செந்தாமரை மலர்கள் பொருந்திய விசாலமாகிய வயல்களையும், செழுமையாகியநீர்நிறைந்த தடாகங்களையும் தன்னிடத்தி லுடையதாய்ச் சிறந்த மெய்ம்மையாகிய அரிய வேதத்திற் கூறும் ஒழுக்கத்தையுடைய புகழினாலடைந்தபெருமையானது எட்டுத்திக்குகளிலும்பரவிய ஊர் (யாதெனில்) ஏமப்பேறூராகும்.—எ-று.

பொய்தீர்வாய்மை என்றது - சிறந்தவாய்மையென்னும் பொருள்படநின்றது. (க)

மாலை பயிலுந் தோரணங்கண் மருங்கு பயிலு மணிமறுகு
வேலை பயிலும் புனல்பருகு மேகம் பயிலு மாடங்கள்
சோலை பயிலுங் குளிர்ந்தவிருள் சுரும்பு பயிலு மரும்பூகங்
காலை பயிலும் வேதவொலி கழுநீர் பயிலுஞ் செழுநீர்ச்செய்.

(இ-ள்.) (அவ்வூரில்) மாலைகளோடுசேர்ந்த தோரணங்கள் அழகிய வீதிகளில் கட்டியிருக்கும்; சமுத்திரத்திற்பொருந்திய நீரை யுண்ணுகின்ற மேகங்கள் மேல்வீடுகளில் சஞ்சரிக்கும்; இருள் குளிர்ந்தசோலைகளில் தங்கியிருக்கும்; வண்டுகள் அரிய கமுகமரங்களில் சூழ்ந்திருக்கும்; வேதியர்கள் அத்தியயனஞ்செய்யும் வேதவொலி விடியற்காலையில் முழங்கும்; செங்கழுநீர்மலர்கள் குளிர்ந்த நீரையுடைய வயல்களில் மலர்ந்திருக்கும்.—எ-று. (உ)

பணையில் விளைந்த வெண்ணெல்லின் பரப்பின் மீது படச்செய்ய
துணர்மென் கமல மிடையிடையே சுடர்விட் டெழுந்து தோன்றுவன
புணர்மென் புரிநூ லவர்வேள்விக் களத்திற் புனைந்த வேதிகைமேன்
மணல்வெண் பரப்பி னிடையிடையே வளர்த்த செந்தீ மானுமால்.

(இ-ள்.) வயல்களில் விளைந்த வெண்மையாகிய நெல்லினது பரப்பின்மேல் பொருந்தக் கொத்துக்களையுடைய மெல்லிய செந்தாமரைமலர்கள் இடையிடையே ஒளிவிட்டெழுந்து தோன்றுகின்றதோற்றம்,(எவ்வாறிருக்குமென்றால்,) முறுக்காகிய மெல்லியபூணூலையணிந்த வேதியர்கள் தாங்கள்செய்யும் யாகசாலை

யில் அலங்கரித்த வேதிகையின்மேலிட்ட வெண்மணற் பரப்பி னிடையிடையே வளர்த்த ஓமத்தீயை யொத்திருக்கும்.—எ-று. (ங)

பெருமை விளங்கு மப்பதியிற் பேணு நீற்றுச் சைவநெறி
யொருமை நெறிவா ழந்தணர்த மோங்கு குலத்தி னுள்வந்தார்
இருமை யுலகு மீசர்கழ லிறைஞ்சி யேத்தப் பெற்றதவத்
தருமை புரிவர் நமிநந்தி யடிக ளென்பா ராயினர்.

(இ-ள்.) பெருமைபொருந்திய அந்த ஏமப்பேறூரென்னும் ஸ்தலத்தில் விபூதியைத்தரித்தொழுகும் சைவநெறியாகிய ஒப்பற்ற நன்மார்க்கத்தில்வாழ்கின்ற வேதியர்களுடைய சிறந்தகுலத்தில் அவதரித்தவர்; இம்மையிலும், மறுமையிலும் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கித் துதிக்கப்பெற்ற அருமையாகிய தவத்தைச் செய்பவர்; நமிநந்தியடிகளென்று ஒருவர் இருந்தார்.—எ-று. (ச)

வாய்மை மறைநூற் சீலத்தால் வளர்க்குஞ் செந்தீ யெனத்தகுவார்
தூய்மைத் திருநீற் றடைவேமெய்ப் பொருளென் றறியுந் துணிவினர்
சாம கண்டர் செய்யகழல் வழிபட் டொழுகுந் தன்மையிலே
யாம விரவும் பகலுமுணர் வொழியா வின்ப மெய்தினர்.

(இ-ள்.) மெய்ம்மையாகிய வேதத்திற் கூறும் ஒழுக்கத்தினால் வளர்கின்ற சிவந்த யாகாக்கினி யென்று சொல்லத்தக்கவர்; பரிசுத்தமாகிய திருவெண்ணீற்றைத் தரித்தலே உண்மைப்பொருளென்றுணரும் மனோநிச்சயமுடையவர்; சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளில் வழிபாடுசெய்தொழுகுகின்ற தன்மையில் இரவிலும் பகலிலும் தமது உணர்ச்சியினின்றும் நீங்காத இன்பத்தையடைந்தவர்.—எ-று.

செந்தீயைப்போலத் தமது அகத்தும் புறத்துஞ் சிறிதும் மறுவற்று விளங்குதலின் 'செந்தீயெனத்தகுவார்' என்று கூறினர். சாமகண்டர்=சாமவேதமுழங்குங்கண்டத்தினையுடையவர்; காளகண்டர் எனினுமாம். (ரு)

அவ்வூர் நின்றுந் திருவாரூ ரதனை யடைவா ரடியார்மேல்
வெவ்வூ றகற்றும் பெருமான்றன் விரைசூழ் மலர்த்தாள் பணிவுறுவ
தெவ்வூ தியமு மெனக்கொள்ளு மெண்ண முடையார் பலநாளுந்
தெவ்வூ ரெரித்த வரிச்சிலையார் திருப்பா தங்கள் வணங்கினர்.

(இ-ள்.) அந்த ஏமப்பேறூரினின்றுந் திருவாரூரையடைகின்ற நமிநந்தியடிகளாயனார் அடியார்களுடைய கொடிய துன்பத்தை நீக்கியருளும் சிவபெருமானது வாசனைவீசுகின்ற தாமரைமலர்போன்றதிருவடிகளை வணங்குவதே எமக்கு எவ்வகைப்பட்ட பயனுமென்று நினைதது, அவ்வாறு செய்தலை மேற்கொண்டொழுகும் எண்ணமுடையவராய்ப் பகைவர்களுடைய முப்புரங்களை எரித்த வரிந்த மேருவில்லையுடைய வன்மீகநாதரது திருவடிகளைப் பலநாள்களிலும் வணங்கிவருவாராயினர்.—எ-று. (சு)

செம்பொற் புற்றின் மாணிக்கச் செழுஞ்சோ தியைநேர் தொழுஞ்சீலந்
தம்பற் றாக நினைந்தணைந்து தாழ்ந்து பணிந்து வாழ்ந்துபோந்
தம்பொற் புரிசைத் திருமுன்றி லணைவார் பாங்கோ ரரனெறியி
னம்பர்க் கிடமாங் கோயிலினுட் புக்கு வணங்க நண்ணினர்.

(இ-ள்.) சிவந்த பொன்மயமாகிய புற்றினிடத்து வீற்றிருந்தருளும் மாணிக்கத்தின் செழுமையாகிய சோதிபோன்ற வன்மீகநாதனை நேரே தரிசிக்கின்ற நல்லொழுக்கமானது தமக்குரிய சார்பாக நினைந்து சென்று விழுந்து வணங்கிச் சிவாநந்தப்பெருவாழ்வடைந்து போய், அழகிய பொன்மயமாகிய மதில்சூழ்ந்த திருமுற்றத்தில் அணைகின்றவர் ஒருபக்கத்திலுள்ள அரனெறியென்னும் ஆலயத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுதற்கிடமாகிய திருக்கோயிலினுள்ளே புகுந்து சுவாமியை வணங்கும்படி சென்றார்; நமிநந்தியடிகணாயனார்.—எ-று. (எ)

நண்ணி யிறைஞ்சி யன்பிஞ லயப்புற் றெழுந்த காதலுடன்
அண்ண லாரைப் பணிந்தெழுவா ரடுத்த நிலைமைக் குறிப்பினாற்
பண்ணுந் தொண்டின் பாங்குபல பயின்று பரவி விரவுவார்
எண்ணி தீப மேற்றுவதற் கெடுத்த கருத்தி னிசைந்தெழுவார்.

(இ-ள்.) அரனெறியப்பனையடைந்து கைகூப்பித் தொழுது, அன்புகாரணமாக மனங் கசிந்தெழுந்த ஆசையோடு வணங்கி யெழுகின்றவராய்த் தமது திருவுள்ளத்துத் தோன்றிய மனக்குறிப்பினால், அங்குத் தாம் செய்தற்குரிய பல திருத்தொண்டுகளைச் செய்து, துதிசெய்துகொண்டிருக்கும் நமிநந்தியடிகணாயனார் (அவ்வெம்பெருமானுடைய திருக்கோயிலில் தீபங் குறைவாயிருந்தமையால்) அளவற்றதீபங்களை இங்கு ஏற்றவேண்டுமென்று தோன்றிய எண்ணத்தினால் அவ்வாறே செய்வதற்குடன்பட்டு அவ்விடத்தினின்றும் புறப்படுவாராயினார்.—எ-று.

தொண்டின் பாங்குபல என்றது, திருநந்தனவனமமைத்தல், திருப்பள்ளித்தாமங்கட்டல், திருவலகிடல், திருமெழுகிடல் முதலியவற்றை. (அ)

எழுந்த பொழுது பகற்பொழுதிங் கிறங்கு மாலை செய்துதலும்
செழுந்தண் பதியி னிடையப்பாற் செல்லிற் செல்லும் பொழுதென்ன
ஒழிந்தங் கணைந்தோர் மனையில்விளக் குறுநெய் வேண்டி யுள்புகலும்
அழிந்த நிலைமை யமணர்மனை யாயிற் றங்க ணவருனைப்பார்.

(இ-ள்.) அவர் தீபத்திற்கு நெய் வேண்டிப் புறப்பட்டபொழுது, அங்குப் பகற்காலம் பொழுதிறங்கி மாலைக்காலமாதலையறிந்து, செழுமையாகிய இத்திருப்பதியிலே அப்பால் யான் நெய்வேண்டிச்சென்றால், பொழுதுபோய்விடுமென்று செல்லாமல், சமீபத்திலுள்ள ஒருவீட்டில்சென்று திருவிளக்கு ஏற்றுதற்கு நெய்யைவிரும்பி உள்ளேபோகவும், அது தீயவொழுக்கத்தையுடைய சமணர்வீடாயிருந்தது. அவ்விடத்து அச்சமணர்கள் அவரைப்பார்த்துச் சொல்வார்கள்.—எ-று.

கையில் விளங்கு கனலுடையார் தமக்கு விளக்கு மிகைகாணு
நெய்யிங் கில்லை விளக்கெரிப்பீ ராகி னீரை முகந்தெரித்தல்
செய்யு மென்று திருத்தொண்டர்க் குரைத்தார்தெளியா தொருபொருளே
பொய்யு மெய்யு மாமென்னும் பொருண்மேற் கொள்ளும் புரைநெறியார்.

(இ-ள்.) ஒருபொருளையே அதனுண்மையையுணராமல், இஃது இல்லதும் உள்ளது மாகுமென்னும் பொருளை மேற்கொண் டுரைக்கும் தீய வொழுக்கத்தையுடையசமணர்கள் 'கையில் சுவாலிக்கின்ற அக்கினியையுடைய உமது பரமசிவனுக்கு விளக்கு மிகையன்றோ? இவ்விடத்தே நெய்யில்லை; விளக்கெரிக்கவேண்டுமானால் நீரை முகந்து விட்டு எரியும்' என்று நமிநந்தியடிகணாயனாருக்குச் சொன்னார்கள்.—எ-று.

பொய்யுமெய்யுமாமென்னும்பொருண்மேற்கொள்ளுதல் ஒருபொருளையே அஸ்தியென்றும், நாஸ்தியென்றுங் கூறுதல்.

அருகர் மதியா துரைத்தவுரை யாற்றா ராகி யப்பொழுதே
பெருக மனத்தில் வருத்தமுடன் பெயர்ந்து போந்து பிறையணிந்த
முருகு விரியு மலர்க்கொன்றை முடியார் கோயின் முன்னெய்தி
யுருகு மன்பர் பணிந்துவிழ வொருவாக் கெழுந்த துயர்விசும்பில். (௩0)

(இ-ள்.) சமணர்கள் சிவபெருமானைச் சிறிதுமதியாமல் சொல்லிய பரிகாச வார்த்தையை நமிநந்தியடிகளுயனுர்கேட்டு மனம்பொறாதவராகி, அப்பொழுதே மிகுந்தமனவருத்தத்தோடு அவ்விடத்தினின்றுந் திரும்பிப்போய், இளம்பிறையையும்வாசனைவீசுகின்ற கொன்றைமலர்மாலையையும் தரித்த திருமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலின்முன்னே சென்று,மனமுருகுகின்ற அந்நமிநந்தியடிகள் விழுந்து வணங்க,அப்பொழுது உயர்ந்த ஆகாயத்தில் ஒரு அசரீரிவாக்குத் தோன்றியது.—எ-று.

வந்த கவலை மாற்றுமினி மாறா விளக்குப் பணிமாற
இந்த மருங்கிற் குளத்துநீர் முகந்து கொடுவந் தேற்றுமென
அந்தி மதிய மணிந்தபிரா னருளா லெழுந்த மொழிகேளாச்
சிந்தை மகிழ்ந்து நமிநந்தி யடிகள் செய்வ தறிந்திலரால். (௩௧)

(இ-ள்.) நீர் உம்முடைய மனக்கவலையை யொழியும்; இனி, நீங்காத திருவிளக்குப்பணி செய்ய இதற்குச் சமீபத்திலிருக்கின்ற குளத்து நீரை முகந்துகொண்டுவந்து விளக்கேற்றுமென்று இளம்பிறை யணிந்த சிவபெருமானது திருவருளாலெழுந்த அசரீரிவார்த்தையைக்கேட்டு, நமிநந்தியடிகளுயனுர் திருவுள்ள மகிழ்ந்து தாம் செய்வதொன்று மறியாதவராயினுர்.—எ-று.

நமிநந்தியடிகளுயனுர் சிவபெருமான் அசரீரியாகவருளிய திருவாக்கைக் கேட்டுப் பேரானந்த பரவசராய்த் திருவருளைச் சிந்தித்து நின்றனரென்பது தோன்ற, 'செய்வதறிந்திலரால்'என்று கூறினுர். 'அருளென்றெழுந்த மொழிகேளா' என்றும் பாடம்.

சென்னி மிசைநீர் தரித்தபிரா னருளே சிந்தை செய்தெழுவார்
நன்னீர்ப் பொய்கை நடுப்புக்கு நாதர் நாம நவின்றேத்தி
யந்நீர் முகந்து கொண்டேறி யப்பர் கோயி லடைந்தகலுண்
முந்நீ ருலக மதிசயிப்ப முறுக்குந் திரிமே னீர்வார்த்தார். (௩௨)

(இ-ள்.) திருமுடியில் கங்காநதியைத் தரித்த சிவபெருமானுடைய திருவருளையே சிந்தித்துக்கொண்டு போகின்ற நமிநந்தியடிகளுயனுர் நல்லநீரையுடைய குளத்தின் நடுவில் இறங்கிச் சிவபெருமானது திருநாமத்தை உச்சரித்துத்துதித்து அந்தக்குளத்துநீரை முகந்துகொண்டு கரையேறி, அரனெறியப்பரது திருக்கோயிலிலே வந்து, சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தாரதிசயிக்கும்படி அகலிலே முறுக்கிய திரியின்மேலே அந்நீரை வார்த்தார்.—எ-று.

சோதி விளக்கொன் றேற்றுதலுஞ் சுடர்விட் டெழுந்த ததுநோக்கி
யாதி முதல்வ ரரனெறியார் கோயி லடைய விளக்கேற்றி
யேத மினைந்த வருகந்த ரெதிரே முதிருங் களிப்பினுட
னாத ரருளாற் றிருவிளக்கு நீரா லெரித்தார் நாடறிய. (௩௩)

(இ-ள்.) ஒளிபொருந்திய ஒரு விளக்கை நீர்விட்ட அகலில் ஏற்றவும்,அது சுடர்விட்டெரிந்தது ; அதைப்பார்த்து, முதற்பெருங்கடவுளாகிய அரனெறியப்பரது திருக்கோயில் முழுதிலும் அந்நீரால் திருவிளக்கு ஏற்றி, தமது திருப்பணியைக் குற்றமாக நினைந்த சமணர்களுக் கெதிரோ மிகுந்த மனக்களிப்புடனே சிவபெருமானது திருவருளினாலுலகத்தாரறியும்படி நீரினாலே திருவிளக்கெரித்தார்; நமிநந்தியடிகணாயனார்.—எ—று. (கச)

நிறையும் பரிசு திருவிளக்கு விடியு மளவு நின்றெரியக்
குறையுந் தகளி களுக்கெல்லாங் கொள்ள வேண்டு நீர்வார்த்து
மறையின் பொருளை யருச்சித்து மனையி னியதி வழுவாமல்
உறையும் பதியி னவ்விரவே யணைவார் பணிவுற் றெழுப்பட்டார்.

(இ-ள்.) ஆலய முழுதும் நிறையும் முறைமையால் திருவிளக்குகளை விடியற்காலமளவும் நின்று எரியும்படி, நீர் குறைந்த அகல்களுக்கெல்லாம் அவை கொள்ளத்தக்க நீரைவார்த்து, வேதப்பொருளாகிய சிவபெருமானை அருச்சித்து, தமது மனையிற் செய்துவரும் நியதிவழுவாமல் தாம் வாசஞ்செய்யும் ஏமப்பேறூருக்கு அவ் விரவிலேயே போகுங் கருத்துடையவராய் அரனெறியப்பரை வணங்கிச்சென்றார் ; நமிநந்தியடிகணாயனார்.—எ-று. (கரு)

இரவு சென்று தம்பதியி லெய்தி மனைப்புக் கென்றும்போல்
விரவி நியமத் தொழின்முறையே விமலர் தம்மை யருச்சித்துப்
பரவி யமுது செய்தருளிப் பள்ளி கொண்டு புலர்காலை
யரவ மணிவார் பூசையமைத் தாரூர் நகரின் மீண்டணைந்தார்.

(இ-ள்.) அவ்விரவில் தம்முடைய ஊரைப்போய்ச் சேர்ந்து திருமாளிகையிற் சென்று, தாம் செய்துவருகின்ற நித்தியகன்மவிதிப்படி சிவபெருமானை அருச்சித்துத் துதித்துத் திருவமுதுசெய்து நித்திரைகொண்டு, விடியற்காலத்தில் சர்ப்பாபரணராகிய சிவபெருமானுடைய நித்தியபூசையைச் செய்து,திருவாரூருக்குத் திரும்பவந்தார்.—எ-று. (கசு)

வந்து வணங்கி யரனெறியார் மகிழுங் கோயில் வலங்கொண்டு
சிந்தை மகிழப் பணிந்தெழுந்து புறம்பு முள்ளுந் திருப்பணிகள்
முந்தி முயன்று பகலெல்லா முறையே செய்து மறையவனார்
அந்தி யமையத் தரியவிளக் கெங்கு மேற்றி யடிபணிந்தார்.

(இ-ள்.) திருவாரூரை யடைந்து வன்மீகநாதரை வணங்கி, அரனெறியப்பர் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்து, மனமகிழும்படி சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து, ஆலயத்தின் புறத்தும் உள்ளும் தாம் செய்யும் திருத்தொண்டுகளை முற்பட்டு முயற்சித்துப் பகற்காலமுழுதும் முறைமையாகச் செய்து, மாலைப்பொழுதில் அரிய திருவிளக்குகளை ஆலயமெங்கும் ஏற்றிச் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கினார் ; நமிநந்தியடிகணாயனார்.

பண்டு போலப் பலநாளும் பயிலும் பணிசெய் தவரொழுகத்
தண்டி யடிக ளாலமணர் கலக்கம் விளைக்கச் சார்விலமண்
குண்ட ரழிய வேழுலகுங் குலவும் பெருமை நிலவியதால்
அண்டர் பெருமான் றொண்டர்கழ லமரர் பணியு மணியாரூர்.

(இ-ள்.) முன்போலவே பலநாள்களும் அந்நமிநந்தியடிகளுயனார் தாம் செய்யும் திருத்தொண்டுகளைச் செய்துகொண்டு வரும் நாளிலே, தண்டியடிகளு யனார் காரணமாகச் சமணர்கள் அவர்செய்யும் திருப்பணிக்கு இடையூறுவிளை க்க, (அதனால்) நற்சார்பில்லாத சமணர்கள் (கண்கெட்டு) அழிய, தேவர்கள் நாய கராகிய சிவபெருமானடியார்களது திருவடிகளைத் தேவர்கள் வணங்குகின்ற திரு வாரூரில் ஏழுலகத்திலும் பரவுகின்ற மகிமையானது விளங்கியது.—எ-று.

பிறவியந்தகராயிருந்த தண்டியடிகளுயனார் சிவபெருமானது திருவரு ளால் கண்பெற்றமையும், அவரையும் அவர் செய்யுந் திருத்தொண்டையும் நிந்தை கூறிய சமணர்கள் தத்தங் கண்களிழந்து துன்புற்று அழிந்தமையுமாகிய மான்மி யம் எங்கும்பரவி விளங்கினவென்பார் 'தண்டியடிகளாலமணர்கலக்கம்விளைக்கச் சார்விலமண் - குண்ட ரழிய வேழுலகுங் குலவும் பெருமை நிலவியதால்' என்று கூறினார். (௧௮)

நாத மறைதேர் நமிநந்தி யடிக ளார்நற் றொண்டாகப்
பூத நாதர் புற்றிடங்கொள் புனிதர்க் கமுது படிமுதலா
நீதி வளவன் றன்வேண்டு நிபந்தம் பலவு மரியணையின்
மீது திகழ விருந்தமைத்தான் வேதா கமநூல் விதிவிளங்க.

(இ-ள்.) அக்காலத்திருந்த நீதியையுடைய சோழமகாராஜன் சிங்காதனத் தில் வீற்றிருந்து, இசைவடிவாகிய வேதங்களையுணர்ந்த நமிநந்தியடிகளுயனார் செ ய்யும் நல்ல திருத்தொண்டாகப், பூதகணநாதராகிய வன்மீகநாதருக்கு வேதாகம விதிவிளங்க அமுதுபடிமுதலாகவேண்டிய நிபந்தங்கள் பலவற்றையும் ஏற்படுத் தினன்.—எ-று.

'நமிநந்தியடிகளார் நற்றொண்டாக' என்றதனால், சோழமகாராஜன் நமி நந்தியடிகளுயனாரே அத்தியக்ஷராக விருக்கப் பலநிபந்தங்களையும் அமைத்து வை த்தானெனவறிக. (௧௯)

வென்றி விடையார் மதிச்சடையார் வீதி விடங்கப் பெருமாள்தாம்
என்றுந் திருவா ரூராளு மியல்பின் முறைமைத் திருவிளையாட்
டொன்றுஞ் செயலும் பங்குனியுத் திரமாந் திருநா ளுயர்சிறப்பு
நின்று விண்ணப் பஞ்செய்த படிசெய் தருளு நேர்பெற்றார்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய ரிஷபத்தை வாகனமாகவுடையவரும், சந்தி ரனையணிந்த சடைமுடியையுடையவருமாகிய தியாகராஜப்பெருமான் எந்நாளும் திருவாரூரை அரசாட்சிசெய்யுமியல்பினால், முறைமையான லீலைகளைச்செய்தரு ளும் தன்மையும், பங்குனியுத்திரத் திருநாளின் உயர்ந்த சிறப்பும், தாம் சந்நிதி

முன்னே நின்று விண்ணப்பஞ்செய்தபடியே அவ்வெம்பெருமான் செய்தருளும் முறைமையைப் பெற்றுக்கொண்டார் ; நமிநந்தியடிகளுயனார்.—எ-று.

திருவிளையாட்டொன்றுஞ்செயலும், என்றது, தியாகராஜப்பெருமான் அத்தலத்தில் செய்தருளிய லீலாசம்பந்தமாக நடக்கும் மகோற்சவங்களை. பங்குனியுத்திரமாந்திருநா ளுயர்சிறப்பும் என்றது, பங்குனியுத்திரத் திருவிழாக்காரணமாகச்செய்யும் பிரமோற்சவத்தை. இவை யனைத்தையும் தமதுவேண்டுகோட்படியே சிவபெருமான் கொண்டருளக்கண்டு தொழப்பெற்றனரென்பார், 'நின்றுவிண்ணப்பஞ்செய்தபடி செய்தருளுநேர்பெற்றார்' என்று கூறினர். (உ0)

இன்ன பரிசு திருப்பணிகள் பலவுஞ் செய்தே யேழுலகு
மன்னும் பெருமைத் திருவாரூர் மன்ன ரடியார் வழிநிற்பார்
அன்ன வண்ணந் திருவிளையாட் டாடி யருள வெந்நாளு
நன்மை பெருக நமிநந்தி யடிக டொழுதார் நாமுய்ய.

(இ-ள்.) உலகத்திற்கு எந்நாளும் நன்மை யுண்டாகும்படி இத்தன்மையாகப் பலதிருப்பணிகளையுஞ்செய்து,ஏழுலகத்திலும் நிலைபெற்ற பெருமையையுடைய திருவாரூரில் வீற்றிருந்தருளும் தலைவரும், அடியார்களுடைய பத்திவழியிலே பொருந்தி நிற்பவருமாகிய தியாகராஜப்பெருமான் அவ்வாறு திருவிளையாட்டைச் செய்தருள, நமிநந்தியடிகளுயனார் நாம் அனைவருங் கடைத்தேறும் பொருட்டு வணங்கினார்.—எ-று.

சிவபெருமான் தமது அடியார்க்கெளியராய் நின்று அவரவர்களும் வேண்டிய வேண்டியாங்கெய்தப்பேரருள் புரிந்து, அவரவர் அன்பினின்றும் நீங்காதெழுந்தருளியிருத்தலின் 'அடியார்வழிநிற்பார்' என்று கூறினர். "பத்திவலையிற்படுவோன்காண்க" என்றார் ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகளும். தாம் செய்யுந் திருத்தொண்டைக்கண்டு நாமும் அவ்வாறே தொண்டுசெய்து வழிபட்டுய்யும்பொருட்டுச் செய்தருளினரென்பார் 'நாமுய்ய' என்று கூறினர். (உக)

தேவர் பெருமா னெழுச்சிதிரு மண லூர்க் கொருநா ளெழுந்தருள
யாவ ரென்ன துடன்சேவித் தெல்லாக் குலத்தி னுள்ளோரு
மேவ வன்பர் தாமுமுடன் சேவித் தணைந்து விண்ணவர்தங்
காவ லாள ரோலக்க மங்கே கண்டு களிப்புற்றார்.

(இ-ள்.) தியாகராஜப்பெருமான் திருவிழாக்கொண்டு ஒரு நாள் திருமணலூருக்கு எழுந்தருள, சகலசாதியார்களும், இவர் இன்னார் இன்னாரென்னும் சாதிபேதமில்லாமல் ஒருங்கேசேவித்துக்கொண்டுவர, நமிநந்தியடிகளுயனாரும் அவர்களோடுகலந்து திருவிழாவைச் சேவித்துப்போய்த், தேவர்கள் நாயகராகிய அவ்வெம்பெருமானுடைய திருவோலக்கத்தை அங்கே தரிசித்து மனமகிழ்ச்சியையடைந்தார்.—எ-று.

ஓலக்கம் என்றது, தியாகராஜப்பெருமான் திருவிழாக் கொண்டருளுங் காட்சியை. (உஉ)

பொழுது வைகச் சேவித்துப் புனிதர் மீண்டுங் கோயில்புகத்
தொழுது தம்மூர் மருங்கணைந்து தூய மனையுட் புகுதாதே
யிழுது மிருள்சே ரிரவுபுறங் கடையிற் றுயில வில்லத்து
முழுதுந் தருமம் புரிமனையார் வந்துட் புகுத மொழிகின்றார்.

(இ-ள்.) நமிநந்தியடிகணாயனார் நெடுநேரம் வரையிலும் உற்சவதரிசனஞ் செய்து, தியாகராஜப்பெருமான் திருமணலூரினின்றுந் திருக்கோயிலுக்கெழுந்தருள வணங்கிக்கொண்டு, தம்முடைய ஊரையடைந்து, பரிசுத்தம்பொருந்திய திருமாளிகையினுள்ளே புகாமல், மிகுந்த இருள் பொருந்திய அன்றிரவில் தலைவாசலில் பள்ளிகொள்ளவும், அத்திருமாளிகையில் இல்லறநெறியைக் குறைவற நடத்துகின்ற அவரது மனைவியார்வந்து உள்ளேவரும்படி சொல்லுகின்றார் —எ-று.

பொழுது வைக என்பதற்கு, மாலைப்பொழுது நீங்க எனினுமாம், இழுது மிருள்=மைக்குழம்புபோன்ற இருள்; அதாவது பேரிருள் என்பதாம். (உக)

திங்கண் முடியார் பூசனைகண் முடித்துச் செய்யுங் கடன்முறையால்
அங்கி தனைவேட் டமுதுசெய்து பள்ளி கொள்வீ ரெனவவர்க்குத்
தங்கள் பெருமான் றிருமணலூர்க் கெழுச்சி சேவித் துடனண்ண
எங்கு மெல்லா ரும்போத விழிவு தொடக்கிற் றெனையென்று.

(இ-ள்.) சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்குச் செய்யும் பூசனைகளைச்செய்து, நித்தியப்படிசெய்கின்ற அக்கினி காரியத்தையும் செய்துமுடித்துத் திருவமுதுசெய்து பள்ளிகொள்ளுமென்றுசொல்ல, அவ்வாறு கேட்ட மனைவியார்க்குப் (பதிலுத்தரவாகத்) தமது தியாகராஜப்பெருமான் திருமணலூர்க்கெழுந்தருளும் உற்சவகோலத்தைத் தரிசித்து அவருடன் வர, அங்குச் சகல சாதியாரும் கலந்துவந்தபடியால், எனக்குத் தீட்டுண்டாயிற்றென்று சொல்லி.—எ-று.

இது முதல் இரண்டு பாடலுங்குளகம். (உச)

ஆத லாலே குளித்தடுத்த தூய்மை செய்தே யகம்புகுந்து
வேத நாதர் பூசனைக டொடங்க வேண்டு மதற்குநீ
சீத நன்னீர் முதலான கொண்டிங் கணைவா யெனச்செப்பக்
காதன் மனையார் தாமுமவை கொணரு மதற்குக் கடிதணைந்தார்.

(இ-ள்.) ஆகையால் ஸ்நானம்பண்ணி அத்தீட்டு நீங்கும்படிப் பிராயச்சித்தஞ்செய்துகொண்டே வீட்டினுள்ளே புகுந்து வேதகாரணராகிய சிவபெருமான் பூசனைகளைத் தொடங்கல்வேண்டும்; அதற்கு நீ நல்ல தண்ணீர் முதலியவைகளை எடுத்துக்கொண்டு இங்குவரக்கடவாயென்றுசொல்ல, அன்புபொருந்திய அவரது மனைவியாரும் அந்நீர்முதலியவைகளைக் கொண்டுவரும்பொருட்டு,விரைந்து சென்றார்.—எ-று. (உரு)

ஆய பொழுது தம்பெருமா னருளா லேயோ மேலரியின் மேல்
ஏயு மசைவி னயர்வாலோ வறியோ மிறையுந் தாழாதே

மேய வுறக்கம் வந்தணைய விண்ணோர் பெருமான் கழனினைந்து
தூய வன்பர் துயில்கொண்டார் துயிலும் பொழுது கனவின்கண்.

(இ-ள்.) அப்பொழுது நமது சிவபெருமானுடைய திருவருளினுலேயோ! வழிநடந்ததனுலுண்டாகிய அவரது திருமேனியிற்பொருந்திய சோர்வினுலேயோ! யாம் அறியோம். கொஞ்சநேரமுந் தரியாமல் பொருந்திய உறக்கம்வர, பரிசுத்தம் பொருந்திய மெய்யன்பராகிய நமிநந்தியடிகணுயனுர் சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டு நித்திரைசெய்தார்; அவ்வாறு நித்திரைசெய்யும்பொழுது அவரது சொப்பனத்தில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௬)

மேன்மை விளங்குந் திருவாரூர் வீதி விடங்கப் பெருமாள்தா
மான வன்பர் பூசனைக்கு வருவார் போல வந்தருளி
ஞான மறையோ ராரூரிற் பிறந்தா ரெல்லா நங்கணங்க
ளான பரிசு காண்பாயென் றருளிச் செய்தங் கெதிரகன்றார்.

(இ-ள்.) மகிமை விளங்குகின்ற திருவாரூரில் வீற்றிருந்தருளும் தியாகராஜப்பெருமான் பெருமைபொருந்திய நமிநந்தியடிகணுயனுர் செய்யும் பூசையை ஏற்றுக்கொள்ளும்படி வருகின்றவர்போல (ஒரு திருவுருவங்கொண்டு) எழுந்தருளி, சிவஞானத்தையுடைய வேதியர்கள் வாழும் திருவாரூரில் பிறந்தவர்களெல்லாரும் நம்முடைய சிவகணங்களாயிருக்குந் தன்மையை நீ தரிசிப்பாயாகவென்று அருளிச்செய்து, அங்கு அவரெதிரே மறைந்தருளினுர்.—எ-று. (௨௭)

ஆதி தேவ ரெழுந்தருள வுணர்ந்தா ரிரவர்ச் சனைசெய்யா
தேத நினைந்தே னெனவஞ்சி யெழுந்த படியே வழிபட்டு
மாத ரார்க்கும் புகுந்தபடி மொழிந்து விடியல் விரைவோடு
நாத னுர்தந் திருவாரூர் புகுத வெதிரந் நகர்காண்பார்.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய தியாகராஜப்பெருமான் அவ்வாறு சொப்பனஞ் சாதித்து மறைந்தருளவும், உடனே துயில் நீங்கிய நமிநந்தியடிகணுயனுர் இன்றிரவு சிவார்ச்சனைசெய்யாமல் (தீட்டுண்டாயிற்றென்று) குற்றமாக நினைந்தேனென்று அச்சமுற்று, நித்திரையினின்றும் எழுந்தபடியே சிவார்ச்சனையைச்செய்து, தமது மனைவியாருக்கும் சொப்பனத்தில் நிகழ்ந்த தன்மையைச் சொல்லி, விடியற்காலத்தில் விரைந்து தியாகராஜப்பெருமான் வீற்றிருந்தருளும் திருவாரூரெல்லையை யடைய, தமக்கு எதிரே தோன்றுகின்ற அத்திருவாரூரைக் காண்கின்ற நமிநந்தியடிகணுயனுர்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங்குளகம். (௨௮)

தெய்வப் பெருமாள் திருவாரூர்ப் பிறந்து வாழ்வா ரெல்லாரு
மைவைத் தனைய கண்டரவர் வடிவே யாகிப் பெருகொளியால்
மொய்வைத் தமர்ந்த மேனியராம் பரிசு கண்டு முடிகுவித்த
கைவைத் தஞ்சி யவனிமிசை விழுந்து பணிந்து களிசிறந்தார்.

(இ-ள்.) தெய்வங்கள் நாயகராகிய தியாகராஜப்பெருமான் வீற்றிருந்தருளும் திருவாரூரிலேபிறந்து வாழ்கின்றவர்கள்யாவரும், காளகண்டத்தையுடைய சிவபெருமானது சாரூப்பியமுடையவர்களாய், மிகுந்த ஒளிப்பிழம்பால் திரண்டு விளங்குந் திருமேனியை யுடையவர்களாயிருக்கும் முறைமையைத்தரிசித்து, அஞ்சலியாகக்குவித்த கையை முடியின்மேல் வைத்து, அச்சமுற்று, பூமியில் சாஷ்டாங்கமாகவணங்கி மகிழ்ச்சியடைந்தார்.—எ-று. (உகூ)

படிவ மாற்றிப் பழம்படியே நிகழ்வுங் கண்டு பரமர்பால்
அடியேன் பிழையைப் பொறுத்தருள வேண்டு மென்று பணிந்தருளாற்
குடியுந் திருவா ரூரகத்துப் புகுந்து வாழ்வார் குவலயத்து
நெடிது பெருகுந் திருத்தொண்டு நிகழச் செய்து நிலவுவார்.

(இ-ள்.) அத்திருவாரூரிற் பிறந்தவர்கள் சிவகணங்களாயிருக்கும் முறைமையை மறைத்து முன்போலாயினதன்மையையும் பார்த்துத் தியாகராசப்பெருமானை யடைந்து (எமது ஆண்டவரே!) அடியேன் (திருவாரூரிற் பிறந்தவர்களைச் சாமானியராக நினைத்த) இப்பெரும்பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று வணங்கி, அவ் வெம்பெருமானுடைய திருவருளினாலே தம்மூரைவிட்டு அத்திருவாரூரிலேதானே குடிபுகுந்து வாழ்கின்றவர், உலகத்தில் நீடித்துவிளங்குகின்ற பல திருத்தொண்டுகளைக் குறைவின்றிச் செய்து விளங்குவாராயினர். ()

நீறு புனைந்த வடியார்க்கு நெடுநா ணியதி யாகவே
வேறு வேறு வேண்டுவன வெல்லாஞ் செய்து மேவுதலால்
ஏறு சிறப்பு மணிப்புற்றி லிருந்தார் தொண்டர்க் காணியெனும்
பேறு திருநா வுக்கரசர் விளம்பப் பெற்ற பெருமையினார்.

(இ-ள்.) திருவெண்ணீறு தரித்த சிவனடியார்களுக்கு நெடுங்காலம்வரையிலும் நியதியாகத் தனித்தனி அவரவர்கள் வேண்டிய எல்லாவற்றையும் செய்து கொண்டிருந்தமையால், உயர்ந்த சிறப்பினையுடைய மாணிக்கங்கள் பொருந்திய புற்றினிடத்தில் வீற்றிருந்தருளும் வன்மீகநாதருடைய அடியார்களுக்கு "ஆணிப்பொன்" என்னும் பேற்றைத் திருநாவுக்கரசுசுவாமிகள் தமது திருப்பதிகத்தில் அருளிச்செய்யப்பெற்ற பெருமையையுடையவராயினர்; நமிநந்தியடிகளுயனர்.

திருநாவுக்கரசுசுவாமிகள் தமது திருப்பதிகத்தில் நமிநந்தியடிகளுயனுருடைய திருத்தொண்டைச் சிறப்பித்து, "ஆணிப்பொன்" என்று அமைத்துப் பாடியருளியதாவது,

"ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தா
னாரூர் நறுமலர் நாத னடித்தொண்ட னம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே."—என்று அருளிச்செய்ததாம். (நக)

இன்ன வகையாற் திருப்பணிக ளெல்லா வுலகுந் தொழச்செய்து
நன்மை பெருகு நமிநந்தி யடிக ணயமார் திருவீதி

சென்னி மதியுந் திருநதியு மலைய வருவார் திருவாரூர்
மன்னர் பாத நீழல்மிகும் வளர்பொற் சோதி மன்னினார்.

(இ-ள்.) நன்மைமிகுந்த நமிநந்தியடிகணாயனார் இந்தப்பிரகாரம் எல்லாவுலகத்திலுள்ளவர்களும் வணங்கும்படி பல திருத்தொண்டுகளைச் செய்து, திருமுடியில்தரித்த சந்திரனும், கங்கைநதியும் அசையும்படி சிறப்புப்பொருந்திய திருவீதியில், பவனிவருகின்ற தியாகராஜப்பெருமானுடைய திருவடிநீழலில் மிகுந்து வளர்கின்ற அழகிய சோதியிற் கலந்தருளினார்.—எ-று. (௩௨)

நாட்டா ரறிய முன்னாளி னன்னா ளிறந்த வைம்படையின்
பூட்டார் மார்பிற் சிறியமறைப் புதல்வன் றன்னைப் புக்கொளியூர்த்
தாட்டா மரைநீர் மடுவின்கட் டனிமா முதலை வாய்நின்று
மீட்டார் கழலே நினைவாரை மீளா வழியின் மீட்பனவே.

(இ-ள்.) முன்னாளில் முதலையின் வாய்ப்பட்டிறந்த ஐம்படை என்னும் ஆபரணமணிந்த மார்பினையுடைய சிறிய பிராமணப்பிள்ளையைத் திருப்புக்கொளியூரிலுள்ள தாளையுடைய தாமரைமலர்கள் பொருந்திய நீர்தங்கிய மடுவிலே ஒப்பற்ற பெரிய முதலைவாயினின்றும், உலகத்தா ரறியும்படி உபநயனஞ் செய்யும் நல்ல பருவத்தில், திருப்பதிகம்பாடி வரவழைத்தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருவடிகளையே தியானிக்கின்ற அடியார்களை (அத்திருவடிகள்) தொலையாத பிறவிவழியினின்றும் நீக்கி உய்விப்பனவாகும்.—எ-று. (௩௩)

**நமிநந்தியடிகணாயனார் புராணம் முற்றிற்று.**

நான்காவது,

## திருநின்றசருக்கம் முற்றிற்று.

**முதற்காண்டம் முற்றுப்பெற்றது.**

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் ௧௩௦௩.

அருண்மொழித்தேவ ரடியிணை வாழ்க.